# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## ஆறாம் மடலம் - முதல் பாகம்

## ப, பா

## Vol. VI-Part - I

முனைவர் [illegible], இ.ஆ.ப.
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறை
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு
2005

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

ஆறாம் மடலம் - முதல் பாகம்

## ப, பா

## Vol. VI- Part - I


முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2005

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 16

முதற் பதிப்பு : 2005

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. VI, Part - I

பதிப்புரிமை : தமிழ்நாட்டரசு
Government of Tamilnadu

விலை : உருபா 400/–

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை 600 113.

நூல் கிடைக்குமிடம் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை – 600 113.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOL. VI- PART I

ஆறாம் மடலம் - முதல் பாகம்

(ப - பா)


பதிப்புக் குழு

முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

*அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும்*

*அறநிலையத் துறை*

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கூர்ந்தாய்வாளர்

புலவர் இறைக்குருவனார்

தொகுப்பாளர்கள்

திரு.முத்து.பிச்சை

முனைவர் மு.கண்ணன்

முனைவர் பா.வெற்றிச்செல்வன்

முனைவர் ச.செந்திலாண்டவன் (பகுதிப் பொறுப்பாளர்)

முனைவர் இரா.கு.ஆல்துரை

திரு.கா.இளமுருகு

திரு.ச.கி.கணேசன் (ஓவியர்)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்
டாக்டர் செல்வி ஜெ ஜெயலலிதா

# தமிழ்நாடு அரசு

சி.வி.சண்முகம்
கல்வி மற்றும் வணிகவரித் துறை அமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.

## அணிந்துரை

"தமிழுண்டு தமிழ் மக்களுண்டு – இன்பத்
தமிழுக்கு நாளும் செய்வோம் நல்ல தொண்டு"
– (பாவேந்தர்)

மிகப் பழங் காலந்தொட்டு மொழி பற்றிய ஆய்வு இருந்து வந்துள்ளது என்பதற்குச் சான்றுகள் உள்ளன என்பர் மொழியாராய்ச்சியாளர்கள். தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்கள் பண்டைக் காலத்தில் கொண்டிருந்த மொழி பற்றிய தெளிவான அறிவினைத் தெற்றெனத் தெரிவிப்பனவாக இருப்பதைக் காணலாம். மொழியானது மாறும் தன்மை கொண்டது; பழமையான மொழிக் கூறுகளில் சில அழிவதும் புதியதாக சில தோன்றுவதும் மொழி வழக்கில் இயல்பு என்பர் அறிஞர் பெருமக்கள்.

தமிழ் மொழியைப் பொறுத்தவரை, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலான இடைவெளியில் சிற்சில மாற்றங்கள் ஏற்பட்டுள்ளதை மறுக்கவியலாது. பழைய சொற்கள் சில வழக்கொழிந்துள்ளன. புதிய சொற்கள் பல உருவாகியுள்ளன. புதிய கண்டுபிடிப்புகளையும், புதுப்புனைவுகளையும் வெளிப்படுத்த புதுச் சொற்கள் தேவை. இது மொழி வளர்ச்சிக்கு உறுதுணையாய் அமையும் என்பதில் ஐயமில்லை.

ஞாலத் தொன்மொழிகளுள் தாய்மையும், தலைமையும், தகைமையும் கொண்டது நம் தமிழ்மொழியாகும். தமிழின் தூய்மையையும், மாண்பையும், தனித்தியங்கும் ஆற்றலையும், இயற்கைச் சிறப்பையும் இனிமையையும், எளிமையையும் விரிவாக எடுத்துக்காட்டி நிலைநாட்டிய பெருமை 'மொழிஞாயிறு' தேவநேயப் பாவாணர் அவர்களுக்கு உண்டு. சொற்களை அகழ்வாய்வு செய்வதன்வழி மொழிக்கு அகழ்வாய்வு என்ற துறையைத் தமிழுக்கு அறிமுகப்படுத்திய பெருமை அவரைச் சாரும்.

அத்தகைய மாபெரும் அறிஞர் காட்டியுள்ள நெறிமுறைகளை அடியொற்றி செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி பகுதிகள் வெளிவந்த வண்ணம் உள்ளன. அண்மையில் 'ச'கரம் மற்றும் 'த'கரம் வரிசையில் 6 பகுதிகள் மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின்

திருக்கரங்களினால் வெளியிடப்பெற்றுள்ளன. அதனைத் தொடர்ந்து தற்போது 'ந'கரம் மற்றும் 'ப'கரம் வரிசையில் 6 பகுதிகள் வெளியிடப் பெறுகின்றன என்பதையறிந்து மகிழ்கிறேன். இந்த சீரியத் திட்டத்திற்கு அனைத்து வகையிலும் பேராக்கமும், பேராதரவும் நல்கி வரும் நம் தமிழக முதலமைச்சர் மாண்புமிகு புரட்சித் தலைவி 'அம்மா' அவர்களுக்கு மனமார்ந்த நன்றியினை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தியாவிலேயே, ஏன் ஆசியக் கண்டத்திலேயே தலைசிறந்து விளங்கும், தன்னிகரில்லாத் தங்கத் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின் ஆட்சிக் காலம் பொற்காலம் என்று மேனாட்டரும் புகழ்பாடுகின்றனர். சோதனைகளை முறியடித்து, சாதனைக்கு மேல் சாதனைப் படைத்து, வெற்றிக் கொடி நாட்டி வரும் மாண்புமிகு முதலமைச்சர் 'அம்மா' அவர்களின் சாதனைகள் நீண்டு தொடரும் என்பதில் அணுவளவும் ஐயமில்லை.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி வெளியீடுகள் வருவதில் அரும்பங்காற்றிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் பொறுப்பு இயக்குநராகப் பதவி வகிக்கும் தமிழ் வளர்ச்சிப் பண்பாடு மற்றும் அறநிலையத் துறை அரசு செயலாளர் முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப., அவர்களுக்கும், நூல்களை உருவாக்குவதற்கு அயராதுழைத்த அகரமுதலித் திட்ட இயக்ககப் பணியாளர்களுக்கும் என் மனமுவந்த பாராட்டுக்கள்.

8.1.05

சி.வி.சண்முகம்

சென்னை.

*முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.,*
அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி–பண்பாடு (ம)
அறநிலையத் துறை மற்றும்
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்.

# பதிப்புரை

தமிழ் எங்கள் உயிர் என்பதாலே – வெல்லுந்
தாமுண்டு தமிழருக்கிப்புவிமேலே!

– பாவேந்தர்.

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் ஓர் ஒப்பற்ற அறிஞர் பெருந்தகை; தனித்தமிழின் கனிச்சுவைக் குன்றம்! செந்தமிழின் அந்தண் நிலா! இலக்கணத்தைப் பழுதறக் கற்ற நுண்மாண் நுழைபுலம் மிக்கவர்! இலக்கியப் பூங்காக்களில் புகுந்தெழுந்து புறப்பட்ட தேனீ! தமிழ் வரலாற்றில் காலத்தால் அழிக்க முடியாத தண்புகழ் அரிமா! தமிழ், தமிழ் என உயிரையுங் கொடுக்கும் ஆற்றலர்! தமிழ் நலம் – தமிழர் நலம் இவ்விரண்டையும் உயிராகக் கொண்டொளிர்ந்த வண்டமிழ்க் கொண்டல் நம் பாவாணர்!

பாவாணருடைய ஆய்வுகளை உலகின் முதன்மொழித் தோற்றம், சொற்பிறப்புக் காணும் வழிமுறை, தனித்தமிழ் என்னும் முப்பெரும் தலைப்புகளில் சுருக்கமாக அடக்கிக் கூறலாம். உலகில் முதன்மொழி தோன்றியதற்கான அடிப்படைகளை மேனாட்டு அறிஞர்கள் பலவகையிலும் ஆய்ந்திருப்பினும், ஆ, இ, உ என்னும் முச்சுட்டுகளே ஞால முதன்மொழி தோன்ற வழி வகுத்தன என்னும் சுட்டடிக் கொள்கையைப் (diectic theory) பாவாணரே கண்டார் என்று கூறுவர். உகரச் சுட்டிலிருந்தே பெரும்பான்மையான சொற்கள் பிறந்திருப்பதை அவருடைய ஆய்வு காட்டுகின்றது. ஞால முதன்மொழி தமிழ் என்பதும், அது தோன்றிய இடம் குமரிக் கண்டம் என்பதும் அவர் கொள்கை!

"தமிழ்ப் பெருநூல்கள் தமிழரால் நன்கு கற்று உணரப் பெற்று, தமிழ் நெறியில் தமிழர் நின்று வென்றிட வேண்டுமென்பதில் தளராத விருப்பங் கொண்டோர்க்கெல்லாம் பாவாணரின் புலமை நம்பிக்கை தந்து வருகின்றது'' என்று பேரறிஞர் அண்ணா அவர்கள் தெரிவித்த கருத்து இன்றளவும் பெரிதும் உவகை தருவதாக உள்ளது என்பதை மறுப்பார் இல்லை.

அத்தகைய பெரும்புகழ் இலக்கண இலக்கியக் குரிசில், மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் காட்டிய நெறிமுறைகளின் வழியே, காலத்தால் அழியாது உலகம் முழுவதும் பரந்திருக்கின்ற செம்மொழியாம் செந்தமிழின் சொல்லாட்சி மாண்புகள் மேலும் மேலும் உயர்வடைவதற்கு வழி வகுக்கும் வண்ணம் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் உயிர்மெய் முதல் எழுத்து வரிசையில் 'ப'கரம் 'பா'காரம் வரிசை ஆறாம் மடலத்தில் முதற்பகுதியாகத் தற்பொழுது வெளிவருகின்றது. இந்நூல், பேரகரமுதலி வெளியீடுகள் வரிசையில் பதினாறாவது வெளியீடாகும்.

இந்நூலில் காட்டப்பெற்றுள்ள சொற்கள் பலவற்றின் வரலாறுகளையும் சொல்மூலங்களையும் காணும் போது பெருவியப்பு மேலோங்குகின்றது. அவ்வகையில், பஃறுளி, பஃறொடை வெண்பா, பகவன், பகல், பகு, பகுதி, பச்சைகுத்துதல், பச்சைவேலிப் பயிர்கள், பசி, பட்டினத்தடிகள், படை வகுப்பு, பண்டிதன், பண்ணாங்குழி, பண்பாடு, பதிகம், பதினோராம் திருமுறை, பன்னிருதிருமுறை, பள்ளி, பள்ளு, பழமொழி, பன்னாடை, பாக்கியம், பாக்குவெட்டியைக் காணோமே, பாகி, பாகியமைப்பு, பாசம், பாசறை நிலை, பாசாங்கு, பாசி வகைகள், பாசிநிலை, பாண்டரங்கம், பாண்டிக்கோவை, பாண்டித்துரைத் தேவர், பாணர், பாதம், பாய்ச்சை, பாம்பு, பாயிரம், பார்ப்பார் பாவினம் முதலிய பல சொற்களின் விளக்கங்கள் பாவாணர் நெறிநின்று விளக்கப்பட்டுள்ளன. எ–டு. பக்கம்[1] என்ற சொல்லிற்கு 27 பொருள்கள் கொடுக்கப்பட்டிருப்பதுடன் பாவாணர் 'வடமொழி வரலாறு' நூலில் கூறிய கருத்தும் சேர்க்கப்பட்டுள்ளது.

தேவநேயப் பாவாணரின் சொற்பிறப்பு ஆராய்ச்சி, ஞாலமுதன்மொழிக் கொள்கை என்னும் ஆய்வின் தடத்திற்கு வழி தேடித்தந்து, அவ்வழியில் பாவாணர்க்குப் பிந்தைய அறிஞர்களும் செல்ல முடியும் என்பதை இந்நூல் வழி அறியலாகின்ற பொழுது வேர்ச்சொல் ஆய்வின் வழி தனித்தமிழ் இன்பம் கோலோச்சுகிறது எனில் மிகையன்று.

இச்சொற்பிறப்பியல் பேரகரமுதலியில் எஞ்சிய எல்லாப் பாகங்களையும் திட்டமிட்டவாறு விரைவில் கொண்டு வந்துவிட வேண்டும் என்ற முனைப்புடன், துடிப்புடன் செயலாற்றி வரும் நிலையில், இத்திட்டத்திற்குப் பேரூக்கமும் பெருநிதியும் அளித்து வரும் மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களுக்கும், அகரமுதலித் திட்டத்திற்குத் தேவையான அனைத்து உதவிகளையும் செய்துவரும் மாண்புமிகு கல்வியமைச்சர் அவர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றியறிதலை இங்கே கூறிக்கொள்வதில் பெருமையடைகிறேன்.

இந்நூல் வெளிவருவதற்கு அரும்பாடுபட்டு உழைத்த தொகுப்பாளர் (பகுதிப் பொறுப்பாளர்), பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர்கள் மற்றும் திட்டப் பணியாளர்கள் ஆகியோருக்கு என் வாழ்த்துகளையும் நன்முறையில் அச்சிட்டுத் தந்துள்ள உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கு நன்றிகளையும் உரித்தாக்குகிறேன்.

16/8/2005

(பு.ஏ.இராமையா)

சென்னை
.07.2005

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## ப்

**ப்** *p,* பெ. (n.). மெய்யெழுத்துகளில் ஒன்பதாவதும் இதழியைந்து பிறப்பதுமான வல்லெழுத்து; the 9th consonant, being the labial voiceless stop.

இரு உதடுகளையும் அழுத்திப் பின் மெல்லத் திறந்து ஒலியை வெளிப்படுத்தினால் 'ப்' என்னும் மெய்யொலியும், நன்றாகத் திறந்து ஒலித்தால் 'ப' என்னும் ஒலியும் வெளிப்படும்.

பொருள் : ஓரெழுத்தாக இஃது இசைமரபில் பஞ்சமம் எனப்படும் இளி என்ற சுர நிலையினைக் குறிக்கப் பயன்படும். வட்டெழுத்திலும் இதே நிலை; அடி தட்டையாக இல்லாமல் வளைவாகவே நின்றது. ஒரு சிறுகொக்கி கி.பி.11 ஆம் நூற்றாண்டில் முதலில் சேர்க்கப்பட்டது. அதுவே நிலைத்தது.

உருவம் : ஒரு நேர்க்கோட்டில் (மேலிருந்து கீழ்நோக்கி) ஒரு வளைவான மேல்நோக்கிய கோடு இணைக்கப்படும் அமைப்பு கி.மு. 3ஆம் நூற்றாண்டிலிருந்து காணப்படும் மிகப் பழைய உருவமாக உள்ளது. அவ்வுருவமே இந்தியா முழுவதும் தமிழ்நாட்டுக் குகைகளில் உள்ளதமிழ்க் கல்வெட்டுகள் உட்பட எல்லாக் கல்வெட்டுகளிலும் காணப் படுகின்றது. இவ்வுருவம் கி.பி. 3 ஆம் நூற்றாண்டின் இடைவரை மாறவில்லை.

முதன் முதலில் ஏறக்குறைய கி.பி. 3ஆம் நூற்றாண்டின் இடையில் எழுதப்பட்டதாகக் கருதக் கூடிய அரச்சலூர்க் கல்வெட்டில் இப் 'ப்'கரத்தின் கீழ் வளைவு மேல் நோக்கிச் சென்று இருகோடுகளும் குறுகிச் சமநிலை அடைந்தன.

பிற்காலத்தில் அடிப்பாகம் வளைவில்லாமல் தட்டையாகவும் ஒருகால் வளைவுடனும் எழுதப்பட்டு இன்றைய நிலையை அடைந்து விட்டது.)

(வாழ்வியற் களஞ்சியம். தொகுதி பக்.868)

### 'ப'

**ப**[1] *pa,* பெ. (n.), பகரமெய்யும் அகரவுயிரும் சேர்ந்து இதழியைந்து ஒலிக்கும் வல்லெழுத்து; the compound of ப் and அ, being the labial voice less stop.

**ப**[2] *pa,* பெ. (n.), 1. பஞ்சமமெனப்படும் இளியிசை யினெழுத்து (திவா.); symbol representing the fifth note of the grant. 2. வினைச்சொல்லினகத்து எதிர்காலப் பொருளில் வருமோரிடைநிலை. (நன்.144.) இது, 'நடப்பான்' கிடப்பான் முதலியவற்றிற் போலச் சந்தியாயும் வரும்; medial particle in tamil verbs showing, future tense.

**பஃதி** *pakdi,* பெ. (n.). பகுப்பு; portion, part. "இனைப்பஃதியாற் பெயர் பெறுமெனவும்" (தொல்.பொ.645, உரை)

*[பகுதி → பஃதி]*

**பஃது** *pakdu,* பெ. (n.). பத்து; ten. "பஃதென் கிளவி யாய்தபக ரங்கெட" (தொல். எழுத்.445)

*[பத்து → பஃது]*

*[பல் + து > பஃது]*

**பஃபத்து** *pak-pattu,* பெ. (n.), நூறு (தொல்.எழுத். 482, உரை); hundred, as ten times ten.

*[பப்பத்து (பத்துப்பத்து) → பஃபத்து]*

**பஃறி** *pakri,* பெ. (n.), **1.** படகு; boat. "நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி" (பட்டினப். 30) **2.** மரக்கலம் (சூடா.); ship, vessel **3.** இரேவதி (தொழுபஃறி) பார்க்க (திவா.); the 27th naksatra.

மரத்தில் உட்குடைவாகச் செய்யப்படுவது பஃறி.

ஓடத்தின் வடிவையொத்திருத்தல் நோக்கி (இரேவதி) விண்மீன் தொழுபஃறி எனப் பெயர் பெற்றது.

**பஃறியர்** *pakriyar,* பெ. (n.), நெய்தனில மாக்கள் (சூடா.); people of the maritime tract.

*[பஃறி → பஃறியர்]*

[பஃறி = ஓடம் அல்லது திமில். மரக் கலத்தில் கடலில் செல்வோர் பஃறியர்.]

**பஃறுளி** *pakruli,* பெ. (n.), குமரியாற்றின் தெற்கேயிருந்து கடலாற் கொள்ளப் பட்டதாகக் கருதப்படும் ஓர் யாறு; an ancient river south of the river kumari, said to have been swallowed by sea. "எங்கோ வாழிய... நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே" (புறம்–9.)

*[நிலத்தை உட்குடைந்து செல்லும் பேராறு*

*பஃறு → பஃறுளி]*

(பஃறுளி என்னும் ஆறு ஆழி வடிம்பலம்ப நின்ற பாண்டியன் என்பவனால் உண்டாக்கப் பட்டதென்று (புறநா.9) கூறும். இது தமிழ்நாட்டில் குமரியாற்றிற்குத் தெற்கில் ஓடிய ஆறு. இது கடலாற் கொள்ளப்பட்டது, என்று சிலப்பதிகாரம் கூறும். (11:18–20)

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்றும் பாண்டியனைப் பாடிய நெட்டிமையார் என்றும் புலவர்.

"நன்னீர்ப் பஃறுளி மணலிலும் பலகாலம் வாழிய" (புறம்.9) என வாழ்த்துவதால் இதன் சிறப்பு விளங்கும்.)

*[பல் + துளி]*

**பஃறொடை** *pakrodai,* பெ. (n.). பஃறொடை வெண்பா; a stanza in venbā metre of more than four lines.

*"அடிபலவாய்ச் சென்று நிகழ்வ பஃறொ டையாம்"* (யாப். காரிகை. 5.)

*[பல் + தொடை]*

**பஃறொடைவெண்பா** *pakrodai-venbā,* பெ. (n.). நான்கடியின் மிக்கு ஏழடிக்குள் வரும் வெண்பா. (காரிகை, செய்.5, உரை); a stanza in venbā metre of more than four lines.

*[பல் + தொடை + வெண்பா]*

"*பாதம் பலவரின் பஃறொடை வெண்பா*" (யாப்.வி.62.)

"*ஏழடி இறுதி ஈரடி முதலா ஏறிய வெள்ளைக்கு இயைந்தன அடியே மிக்கடி வருவது செய்யுட்கு உரித்தே*" (யாப்.வி.32.மேற்.)

எனவரும் நூற்பாக்களால் மேற்கூறிய கருத்து வலுப்பெறும்.

வெண்பாவின் பொதுவிலக்கணம் பொருந்தி நேரிசை வெண்பாவைப் போலவே அமைந்து நான்கடியின் மிக்க பலவடிகளான் வருவது பஃறொடை வெண்பா எனப்படும். a stanza in venbā metre of more than four lines.

இது ஒரு வேறுபாட்டாலும் பல வேறுபாட்டாலும் வரப்பெறும்;

எ–டு.

"பன்மாடக் கூடல் மதுரை நெடுந்தெருவில்
என்னோடு நின்றா ரிருவர்; அவருள்ளும்
பொன்னோடை நன்றென்றாள் நல்லளே;

பொன்னோடைக்
கியானைநன் றென்றாளும் அந்நிலையள்; யானை
எருத்தத் திருந்த இலங்கிலைவேல் தென்னன்
திருத்தார் நன்றென்றேன் தியேன்"
(முத்தொள்.)

இஃது ஆறடியான் வந்த வேறுபாட்டு பலவிகற்பப் பஃறொடை வெண்பா.

பஃறொடை வெண்பா பன்னீரடியை, மேலெல்லையாகக் கொண்டது என்பதூஉமாம்.

மேலும் இது ஒத்த விகற்ப பஃறொடை வெண்பா, ஒவ்வா விகற்பப் பஃறொடை வெண்பா என்ற வகையிலும் வரும்.

*"இதனுள்ளும் ஒரூஉத்தொடை பெற்று வருவனவற்றை நேரிசைப் பஃறொடை எனவும், ஒரூஉத்தொடையின்றி வருவனவற்றை இன்னிசைப் பஃறொடை எனவும் வழங்கப்படும்"* (இளம்.தொல்.செய்.114.)

மேலும் புறப்பொருட்கண் வரும் வெண்பாக் களைப் பஃறொடை வெண்பா எனவும் பரிபாடற்கு உறுப்பாய் வரும் வெண்பாக்களைப் பரிபாடல் எனவும் கொச்சகக் கலிப்பாவிற்கு உறுப்பாய் வரும் பஃறொடை வெண்பாவைக் கொச்சகக் கலிப்பா எனவும் கூறுவர். (இளம்.தொல்.செய்.147.)

**பக்கக்கால்** *pakka-k-kāl,* பெ. (n.). 1. **பக்கக்குத்துக்கால்** பார்க்க. see *pakka-k-kuttukāl.* 2. **பக்கத்துணை** பார்க்க. see *pakka-t-tuṇai.*

*[பக்கம்[1] + கால்]*

**பக்கக்குடுமி** *pakka-k-kuḍumi,* பெ. (n.). சிலுப்பா; side-locks of hair on the temples of men. (வின்.)

*[பக்கம் + குடுமி]*

**பக்கக்குத்துக்கால்** *pakka-k-kuttu-k-kāl,* பெ. (n.). உத்தரத்தின் மேலுள்ள குற்றிவகை; queen post.

*[பக்கம் + குத்து + கால்]*

**பக்கக்கை** *pakka-k-kai,* பெ. (n.). கைமரம்; rafter.

*[பக்கம் + கை]*

(கை என்பது இடம் நோக்கிக் கைம்மரம் எனப் பொருள் தந்தது.)

**பக்ககம்** *pakkagam,* பெ. (n.). (யாழ்.அக) 1. பக்கம்; side. 2. பின்வாசற்கதவு; back door.

*[பக்கம் + அகம்]*

(அகம் : சொல்லாக்க ஈறு)

**பக்கச்சித்திரை** *pakka-c-cittirai,* பெ. (n.). வளர்பிறையிலும், தேய்பிறையிலும் வரும் நாண்மி, அறுமி, எண்மி, தொன்மி, பிறை பன்னிரண்டாம், பதினான்காம் நாள்கள்; the fourth, sixth, eighth, ninth, twelfth and fourteenth, fifty in cukkila-patcam and KiruSṇa-patcam. "அளவறு நான் கொன்பதாறெட்டீராறீ ரேரான பக்கம்—விழைவுறு தீப்பக்கச் சித்திரை" (விதான. பஞ்சாங்.1.).

*[பக்கம் + சித்திரை]*

**பக்கச்சுருள்** *pakka-c-curuḷ,* பெ. (n.) 1.மணமகள்வீட்டாரால் மணமகனுக்கு அதிகப்படியாகக் கொடுக்கப் படும் அன்புப் பரிசு; (நெல்லை) additional presents made to a bridegroom by the bride's party; 2. திருமணத்தில் மணமகனின் உற்றார்க்குச் செய்யும் அன்புப் பரிசு; presents made to bride groom's relatives at a marriage.

*[பக்கம் + சுருள்]*

**பக்கச்சுவர்** *pakka-c-cuvar,* பெ. (n.). கட்டடத்தின் இரண்டு பக்கங்களிலும் எழுப்பப்படும் சுவர்(இ.வ.); side-wall of a building.

*[பக்கம் + சுவர்]*

**பக்கச் செடில்** *pakka-c-cedil,* பெ. (n.). விலாவில் இரும்புக் கொக்கிகளைக் குத்தியாடுஞ் செடிலாட்ட வகை (வின்); swinging of a person, under a vow, by running strips of iron through the sides.

*[பக்கம் + செடில்]*



**பக்கச்சொல்** *pakka-c-col,* பெ. (n.). 1. பக்கத்திலிருப்போர் சொல்லும் சொல்; words of neighbours. "பக்கச் சொல் பதினாயிரம்" (கொ.வ.) 2. பரிந்துரை நுதலிய துணைச் சொல்(வின்); recommendation, word in one's favour. 3. தகுதி பற்றியும் வழக்குப் பற்றியும் வழங்கும் சொற்கள் (தொல். சொல். 17, உரை); expressions used euphemistically or sanctioned by usage. 4. குறியாகக் கருதப்படுவதும் எதிர்பாராது பக்கத்திலிருந்து கேட்கப்படுவதுமான சொல் (இ.வ.); words heard chance - wise and believed to forebode good or evil.

*[பக்கம் + சொல்]*

**பக்கச் சொல்லாளி** *pakka-c-col-l-āḷi,* பெ. (n.). (வின்.) 1. துணைநின்று பேசுவோன்; spokesman, advocate. 2. சரக்கை வாங்கும் பொருட்டு அதன் நலத்தை உயர்த்திச் சொல்லி இனிமையாய்ப் பேசுபவன்; puffer.

*[பக்கம் + சொல் + ஆளி]*

**பக்கசூலை** *pakka-šūlai,* பெ. (n.). 1. சூலை வகை (கொ.வ.); pain in the sides, inflammation of the liver. 2. கதிர்மறை, நிலாமறை பிடிக்கும் விண்மீனிற்கு இருபுறமுமுள்ள விண்மீனொன்றிற் பிறந் தவர்க்கு நேரிடுவதாகக் கருதப்படும் துன்பம்; distress believed to afflict those whose natal stars are adjacent to the lunar asterism at the time of the solar or the lunar eclipse.

*[பக்கம் + சூலை]*

skt. sūla - pain, disease.

**பக்கஞ்செய்-தல் 4.** *pakkañ-šey-,* செ.கு.வி (v.i.) ஒளிவிடுதல்; to emit lustre, as a gem. "*முத்தாமணி ரத்னங்கள்... பக்கஞ் செய்து தோன்றுகையாலே*" (திவ். திருநெடுந். 21, பக். 175.)

*[பகல் → பக்கல் → பக்கல் செய்தல் → பக்கஞ்செய்தல்]*

**பக்கடு-த்தல் 3.** *pakkaḍu-,* செ.கு.வி. (v.i) நொறுங்குதல்; to be crushed. "*பக்கடுத்தபின் பாடியுய்ந்தா னன்றே*" (தேவா. 785, 11.).

*[பகு → பக்கு + அடு-,]*

**பக்கணம்[1]** *pakkaṇam,* (n.). 1. வேடர் குடியிருப்பு (திவா.); quarters of vēḍar caste. 2. ஊர் (சூடா.); town, village; 3. அயல்நாட்டுப் பண்டம் விற்குமிடம் (யாழ். அக.); place where foreign goods are sold.

[பாக்கம் → பாக்கணம் → பக்கணம்]

(கடற்றுறை யடுத்த பேரூர் பாக்கம் எனப்பட்டது; கடல் வழியாகவும், நிலவழியாகவும் வரும் பொருள்களை விற்கும் பெருவாணிகர்கள் தம் பொருள்களை அங்கு விற்றலின் அப்பகுதி,

பாக்கணம் → பக்கணம் எனப்பட்டது.)

**பக்கணம்²** *pakkaṇam,* பெ. (n.) சிற்றுண்டி; comestibles, eatables. "விமலேச பக்கணந்தரவேண்டு மென்றிரந்தனன்" (விநாயகபு.80, 572)

*[பகு → பக்கு + ஆணம் பக்காணம் → பக்கணம்]*

**பக்கத்தம்** *pakkattam,* பெ.(n.) 1. குட்டுதல்; dealing a blow with the fist or knukle cuffing on the head 2. மார்பில் குட்டுதலாகிய காமச்செய்கை; a gentletas on the breast - a sexual play act for increasing the passion. (சா.அக)

**பக்கத்தார்** *pakkattār,* பெ. (n.). 1. அடுத்தவர்; neighbours. '*பக்கத்தார் யாரையு மையுறுதல்*' (நீதிநெறி. 35.) "*பலநாளும் பக்கத்தாராயினும் நெஞ்சில் சிலநாளும் ஒட்டாரோடு ஒட்டார்.*" (நாலடி. 214) 2. நாட்டுப்புறத்தார்(கொ.வ.); countrymen. 3. கட்சியார்; partisans. 4. அயலார்; strangers. '*பக்கத்தாரைக் கூப்பிடாதே*'.

*[பக்கம் → பக்கத்தார்]*

**பக்கத்துக்கால்** *pakkattu-k-kāl,* பெ. (n.). *பக்கத்துணை* பார்க்க; see *pakka-t-tuṇai.* 'அவனுக்குப் பக்கத்துக்கால் அதிகம் உண்டு.

*[பக்கம் + அத்து + கால்]*

அத்து = சாரியை

**பக்கத்துக்கிளி** *pakkattu-k-kiḷi,* பெ. (n.). கிளித்தட்டு விளையாட்டில் தட்டுக்குள்ளே புகுபவன்(வின்.); the player who passes through the squares in the game of kiḷi-t-taṭṭu.

*[பக்கம் + அத்து + கிளி]*



**பக்கத்துக் குத்துக் கால்** *pakkattu-k-kuttu-k-kāl,* பெ. (n.). முகட்டுக் கையைத் தாங்குவதற்குஉத்தரத்தின்மேல் நிறுத்துங்கால் (சென்னை.வழ.); queen-post.

*[பக்கம் + அத்து + குத்து + கால்]*
அத்து = சாரியை.

**பக்கத்துணை** *pakka-t-tuṇai,* பெ. (n.). பக்கவுதவி(கொ.வ.); help, support.

*[பக்கம் + துணை]*

**பக்கத்துமீட்சி** *pakkattu-mīṭci,* பெ. (n.). யாண்டுத் தீயில்லை ஆண்டுப் புகையு மில்லை என்பது போல் துணிபொருளோதுவின் மறுதலையுரை (மணிமே. 29, 67.); negative concomitance between the major and the minor terms.

*[பக்கம் + அத்து + மீட்சி]*

அத்து = சாரியை.

**பக்கத்துவாட்டம்** *pakkattu-vāṭṭam,* பெ. (n.). மழை நீர் போகும்படி தளத்தில் ஏற்படுஞ் சரிவு side-slope. (இ.வ.)

*[பக்கத்து + வாட்டம்]*

**பக்கத்துணைவி** *pakka-tt-tuṇaivi,* பெ. (n.) நோயாளிக்கு அணுக்கத் தொண்டராய் இருக்கும் பெண்மகள்; nurse a female attendant in a hospital. (சா.அக)

*[பக்கம் + துணைவி]*

**பக்கத்தெலும்பு** *pakkattelumbu,* பெ. (n.). விலாவெலும்பு(வின்); rib.

*[பக்கம் + அத்து + எலும்பு]*

**பக்கதன்மம்** *pakka-taṉmam,* பெ. (n.) துணிபொருட்கு இடனாயுள்ள பக்கத்தின் தன்மை; (மணிமே. 29,71.) (Log) characteristic or quality of the minor term.

*[பக்கம் + தன்மம்]*

**பக்கதி** *pakkadi,* பெ. (n.) 1.சிறகினடி; the root of a bird's wing 2. முழுநிலாநாளின் அடுத்த நாள்; the first tidi of a lunar fortnight.

ஒருகா. *[பக்கல் → பக்கதி]*

**பக்கநாள்** *pakka-nāḷ,* பெ. (n.) *எதிர்நோக்கு நாண்மீன்* பார்க்க; see *edirnōkku-nāṉmiṉa* nakṢatra

*[பக்கம் + நாள்]*

**பக்கநேத்திரம்** *pakka-nēttiram,* பெ.(n.) இசிவு நோய் வகை (தஞ்.சர. iii. 194); a kind of delirium.

*[பக்கம் + நேத்திரம்]*

**பக்கப்பகந்திரம்** *pakka-p-pagandiram,* பெ. (n.) ஆண்குறியில் இலிங்கப்பக்கத்தில் வரும் புண் கட்டி; fistula on either side of the privities.

*[பக்கம் + பகந்திரம்]*

**பக்கப்படுவன்** *pakka-p-paḍuvaṉ,* பெ. (n.) கண்கடுத்து சிவந்து வலித்து, வெள்விழியில், அழிந்தபுண்போல் குத்தலுண்டாகி, உடனே முளையைப் போல படுவன் வெளியில் தள்ளிச், சீழ்பிடித்து உடைந்து, நீரொழுகித் துன்புறுத்தும் கண்ணோய் வகை; an eye disease marked by irritation, inflammation with pin prick pain on the white of the eye, due to ulcerous growth of flesh followed by supuration and Purulant discharge. (சா.அக)

*[பக்கம் + படுவன்]*

**பக்கப்பத்தி** *pakka-p-patti,* பெ. (n.) முதன்மைக்கட்டடத்தைச் சாரவைத்துக் கட்டப்படும் தாழ்வாரம்; pent - house

*[பக்கம் + பத்தி]*

**பக்கப்பலகை** *pakka-p-palagai,* பெ.(n.) பக்கங்களிற் சேர்க்கும் பலகை(இ.வ); side-plank.

*[பக்கம் + பலகை]*

**பக்கப்பவுந்திரம்** *pakka-p-pavuṇḍiram,* பெ.(n.) இலிங்கப்பக்கத்து வரும் புண்கட்டி; fistula on either side of the privities. (வின்)

**மறுவ:** பக்கப் பகந்திரம்

*[பக்கம் + பவுந்திரம்]*

**பக்கப்பழு—த்தல்** *pakka-p-paḻu,* 4. செ.கு.வி(v.i.) மிக முதிர்தல்; to become very ripe. "*பக்கப் பழுத்த கிழவன் முன்னே வெட்க மென்னடி*" (வள்ளி, கதை.Ms )

*[பாங்கு—பாக்கு—பாக்கம்—பக்கம் (செம்மையுறல், நிறைவுறுதல், முதிர்தல்)]*

*[பக்கம் + பழு—,]*

**பக்கப்பாட்டு** *pakka-p-pāṭṭu,* பெ.(n.) துணைப்பாட்டு (இக்.வ.); supporting chorus or song sung by accompanists:

*[பக்கம் + பாட்டு]*

**பக்கப்பாளை** *pakka-p-pāḷai,* பெ. (n.) பெரியபாளையைச்சேர்ந்திருக்குஞ் **சிறுபாளை** (இ.வ); tuberculus sinus axilla;

*[பக்கம் + பாளை]*



**பக்கப்பிடிப்பு** *pakka-p-piḍippu,* பெ. (n.) உடம்பின் ஒரு பகுதியிற் **காணும் நரம்புப்** பிடிப்பு; a spasam occuring on one side of the body.

*[பக்கம் + பிடிப்பு]*

**பக்கப்பிளவை** *pakka-p-piḷavai* பெ. (n.) நீரிழிவு நோயினால் அரத்தம் கெட்டுப் பிடரி, முதுகு, பிட்டம் இவற்றின் ஒரு பக்கத்திற் காணும் கட்டி; corbuncle, generally occurs on one side of nape of the neck, the back and buttocks.

*[பக்கம் + பிளவை]*

**பக்கப்பிறந்தநாள்** *pakka-p-piṟanda-nāḷ,* பெ. (n.) பிறந்த மாதமல்லாத மாதங்களில் வரும் பிறந்த நாள்; the day of ones natal star occuring in a month other than the month in which one was born.

*[பக்கம் + பிறந்தநாள்]*

**பக்கப்பூ** *pakka-p-pū* பெ. (n.) ஒப்பனைப்பூ, (**குறள்.1316** மணக்); decorating flower.

*[பக்கம் + பூ]*

**பக்கப்போலி** *pakka-p-pōli* பெ. (n.) துணி பொருட்கிடனாதலாகிய பக்கலக்கணத்திற் குறைபாடுடைத்தாயும் ஒருபுடையொத்துப் பக்கம் போலத்தோன்றுவது; அது துணி பொருட்கு இடனாகாததும், துணியும் பொருட்கு ஒருமருங்கிடனாகாததும், துணி பொருட் கிடனாவதும், துணிந்த பொருட்கு ஒருமருங்கிடனாவதும் என நான்கு வகைப்படும்; fallacious minor term.

*[பக்கம் + போலி]*

**பக்கபலம்**[1] *pakka-palam,* பெ. (n.) வலுவான ஆதரவு; tower of strength; support ma in stay of something "*அப்பா இறந்தபிறகு குடும்பத்திற்கு உன் மாமாதான் பக்கபலமாக இருந்தார்*" (உ.வ) '*பாட்டரங்கில் கின்னரமும் மதங்கமும் (மிருதங்கம்) பாட்டுக்கு நல்ல பக்கபலமாக அமைந்தன*'. (உ.வ.)

*[பக்கம் + பலம்]*

**பக்கபலம்[2]** *pakka-palam,* பெ. (n.) உதவி(கொ.வ); help.

*[பக்கம் + பலம்]*

**பக்கபாதம்** *pakka-pādam,* பெ. (n.) ஒருதலைப் பக்கம் (இலக்.அக); partiality.

*[பக்கம் + பாதம்]*

**பக்கம்[1]** *pakkam,* பெ. (n.) **(1)** சாரி, மருங்கு; side, *"பக்கநோக்கி நிற்கும்"* (திவ், திருவாய்.5,5,5) **2.** விலாப்புறம்; side of the body extending from the shoulder to the hip **3.** அருகு (சூடா)neighbourhood, nearness. **4.** இடம்; place *"ஊழையு முப்பக்கங் காண்பர்"* (குறள்,620.) **5.** நாடு; country, region. **6.** வீடு (யாழ்.அக.); house **7.** சிறகு; wing, feather *"இசைபடு பக்க மி ருபாலுங் கோலி"* (பரிபா. 21,31.) *"நின் பக்கமாதியொப்பில் சீரங்கமெல்லாம்"* (சேதுபு, காலோடை,29), **8.** அம்பிறகு (யாழ்.அக); wing of the arrow. **9.** வால் (யாழ்.அக); tail. **10.** நட்பு; (சூடா) affection, friendship. **11.** அன்பு (யாழ்.அக); love,kindness. **12.** சுற்றம்; relation *"பக்கஞ்சூழ வடமீன் காட்டி"* (கல்லா.18) **13.** தலைமுறை (யாழ்.அக); family **14.** சேனை; army; *"தாவரும் பக்கமெண்ணிரு கோடியின் தலைவன்"* (கம்பரா.இலங்கைக்கேள்வி.40.) **15.** அரசயானை (யாழ்.அக); royal elephant **16.** பிறை நாள் (திவா.); lunar day பக்கம் **17.** பதினைந்து நாள் கொண்ட காலம்; lunar fortnight. *"பகலிராப்பக்க மேதிங்கள்"* (காஞ்சிப்பு. காயாரோகண.உ.) *"முன்பக்கமி சையிற்பாலும் பின்பக்கமாவினறுங் கோமயரசமுமாகாரங் கொண்டிடலுமாம்"* (சூத.வான. 8) **18.** கூறு; portion, section *"அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்"* (தொல்.பொ.75): **19.** பொத்தகத்தின் பக்கம்; page **20.** நூல்; treatise *"வாயினுங் கையினும் வகுத்த பக்கமொடு"* (தொல். பொ.41.) **21.** கோட்பாடு; theory,opinion. **22.** துணி பொருளுள்ள இடம்; (log)minor term in a syllogism *"பக்கந் துணிபொருளுக் கிடமாம்"* (சி.சி.அளவை.9.) **23.** அனுமானத்தின் உறுப்பினுள் மலை நெருப்புடைத்து என்றது போன்ற உறுதியுரை (மணிமே.29,59.); (Log.) proposition to be proved. **24.** மறுதலைப்பொருள் பார்க்க (யாழ்.அக); see maruthalai-p-poruḷ necessary assumption. **25.** தன்மை; state, quality *"வாலிதாம் பக்கமி ருந்தைக்கிருந் தன்று"* (நாலடி285.) **26.** கையணி (யாழ்.அக); ornament for the hand. **27.** நரை (யாழ்.அக); greyness of the hair.

மறுவ: **மாடு**, **சிறை**, உழி, மருங்கு, ஞாங்கர், முன், **பால்**, **புடை**, பாங்கர், பாரிசம் புறம், அயல்.

*[பக்கு → பக்கம்]*

வ.மொ.வ **பக்.25.**

அக்கம்பக்கம், **பக்கக்கன்று**, பக்ககுடுமி, பக்கச்சுவர், **பக்கச்சொல்**, பக்கச்சூலை, பக்கத்துணை, **பக்கத்து வீடு**, பக்கப்பலகை, பக்கப்பாட்டு, **பக்கப்பாளை**, பக்கமேளம், பக்கவடம், **பக்கவழி**, **பக்கவளை**, பக்கவாட்டு, பக்க வெட்டு, **பக்கவேர்** முதலிய கூட்டுச் சொற்கள் **தொன்றுதொட்டு** உலக வழக்கில் வழங்கிவருகின்றன. பக்கம்–செல்வி 75–527;79–80

**பக்கம் என்பதன் விளக்கம்**

**பக்கம், பாகம் என்னும்** இரண்டும் பகு என்னும் **ஒரே முதனிலையினின்று** தோன்றி யிருக்கவும் **வடவர் அவற்றுள்** முன்னதை ஆரிய இயல்பு **வல்லொலிப்** பகரத்திலும், (p), பின்னதைக் **கனைப்பொலிப்**பகரத்திலும் (bh), **தொடங்கியிருக்கின்றனர்.** அதற்கேற்ப பக்கம்

என்பதற்குப் பக்ஷ என்பதையும், பகவன், பங்கு, பாகம் என்பவற்றிற்குப் பஜ் (bhaj) என்பதையும், மூலமாகக் கொண்டிருக்கின்றனர். இங்ஙனம் ஒரு மூலச் சொல்லையே வெவ்வேறு மூலத்தினவாகக் காட்டுவது வடவர் வழக்கம்.

பக்ஷ என்பது பக்கு என்பதன் திரிபு. தாதுபாட என்னும் நூல் அதற்குப் பற்று, கொள், எடு என்றே பொருள் கூறும். ஆயின், வில்சன் அகரமுதலி பக்கம் (பக்ஷ) என்னும் சொற்கேற்பப் பக்கஞ் சார்தல் என்று பொருளுரைக்கும்.

பக்கம் என்னும் சொற்குத் தமிழிலும் பகுதி, கூறு, நூற்பகுதி, நூல், புறம் (side), ஏட்டுப்புறம் (page), அருகு, அண்மை, இடம், வீடு, நாடு, விலாப்புறம், சிறகு, இறகு, அம்பிறகு, கை, கையணி, நட்பு, அன்பு, சுற்றம், மரபு (வமிசம்), சேனைப் பகுதி, சேனை, பதினைந்து பிறைநாட்காலம், பிறைநாள், மேற்கோள், (Proposition) துணிபொருட் கூற்று, தன்மை எனப் பல பொருள்களுண்டு.

கை, சிறகு என்னும் சொற்கள் பக்கத்தைக் குறிப்பது போன்றே பக்கம் என்னும் சொல்லும் கையையும் சிறகையும் குறிக்கும். வடவர் சிறகுப் பொருளினின்று பறவைப் பொருளை விரித்திருக்கின்றனர் எனக் கருதலாம். (வ.மொ.வ.பக்.30)

**பக்கம்²** *pakkam,* பெ. (n.) ஒளி; lustre, brilliance, as of gems. "*பக்கஞ்செய்து*" (திவ்.திருநெடுந், 21. பக் 175)

*[பகல் → பக்கல் → பக்கம்]*

**பக்கம்³** *pakkam,* பெ. (n.) ஒன்றிற்கு வடிவமைப்பைத் தருகிற பகுதி அல்லது பரப்பு; side (which gives dimension) "*சதுரத்துக்கு நான்கு பக்கங்களும் சமம்*" "*வீட்டின் பக்கச் சுவர்களுக்கு மட்டும் இன்னும் வெள்ளையடிக்க வேண்டும்.*" 2. சுட்டப்படும் திசையில் அமைந்திருக்கும் பகுதி; side (with reference to a centre) "*வீட்டின் பின்பக்கம் மழையில் இடிந்துவிட்டது*" "*ஊர்திகள் சாலையில் இடது பக்கமாகச் செல்ல வேண்டும்*" "*ஆறு ஊரின் கிழக்குப் பக்கம்தான் ஓடுகிறது*" "*பகலில் பக்கம் பார்த்து பேசு, இரவில் அதுவும் பேசாதே*" (பழ.) 3. குறிப்பிட்ட இடத்தைச் சார்ந்திருக்கும் பகுதி; location by the side of the sth. "*மலைப்பக்கம் அமைந்திருக்கும் வீடு*" "*ஆற்றுப் பக்கம் காலார நடந்து விட்டு வருவோமா?*" 4. (ஒருவரை அல்லது ஒன்றை) நெருங்கி இருக்கும் இடம்; nearness. "*அம்மாவின் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டான்*" "*கதவுப் பக்கமாக நின்று கொண்டிருந்தான்*" 5. தரப்பு; சார்பு a party or group to a quarrel etc. "*நான் யார் பக்கமும் பேச இல்லை*" "*வல்லரசு நாடுகள் மற்ற நாடுகளைத் தம் பக்கம் இழுக்க முயல்கின்றன.*" 6. ஒரு தாள்; தாளின் ஒருபுறம்; page; one side of a sheet. "*செய்தித் தாளின் நடுப்பக்கத்தை மட்டும் காணவில்லையே*" "*அந்தப் பாட்டு முப்பதாவது பக்கத்தில் உள்ளது*".

**பக்கம்⁴** *pakkam,* பெ. (n.) உணவு (யாழ். அக); food.

*[பாகம் → பகம் → பக்கம்]*

**பக்கம்படு-தல்** *pakkam-padu-,* செ.கு.வி. (v.i.) ஒருதலையாயிருத்தல்; *to be partial* "*பக்கம் படாமை*" (சிறுபஞ். 77.)

*[பக்கம் + படு-தல்]*

**பக்கம்வை-த்தல்** *pakkamvai-,* 4. செ.கு.வி. (v.i.) பக்கத்தில் மூடுவெடித்துக் கிளைவிடுதல் (நாஞ்.); to put forth shoots from the stem

*[பக்கம் + வை]*

**பக்கமிடு–தல்** *pakkam-iḍu-,* 20. செ.கு.வி. (v.i.) மலங்கழித்தல்; to ease. (இ.வ.)

*[ பக்கம் + இடு–,]*

**பக்கமூலம்** *pakka-mūlam,* பெ. (n.) 1. கமுக் கட்டு; armpit. 2. சிறகினடி; root of a bird's wing.

*[ பக்கம் + மூலம்]*

**பக்கர்** *pakkar,* பெ. (n.) இனத்தார்; relation, kindred.

*[பக்கம்–பக்கர்.செல்வி. திச. 79. ப. 189]*

*[ பக்கல் → பக்கர்]*

**பக்கரசம்** *pakka rašam,* பெ. (n.) 1. தேன்; honey. 2. தூய்மையான சாறு; pure fresh juice. 3.தூய்மையாக்கப்பட்ட இதளியம்; purified mercury (சா.அக.).

*[பக்கம் + ரசம்]*

**பக்கரை** *pakkarai,* பெ. (n.) 1. அங்கவடி; அடிக்கொளுவி; stirrup. "*கலணை விசித்துப் பக்கரையிட்டுப் புரவி செலுத்தி*" (திருப்பு.405.) 2. சேணம்; saddle. "*பக்கரை பதைப்ப யாத்து*" (சூளா.கல்யா.14.) 3. பை; bag, pocket, 4. பக்கறை[2], 1, பார்க்க. see pakkaṟai,[2] 1.

தெ. பக்கர. க. பக்கரெ.

**பக்கல்** *pakkal,* பெ. (n.) 1. நாள்; the day 2. மாதநாள்; particular day of a month 3. பக்கம்; side. "*என்பக்கலுண்டாகில்*" (பெரியபு.இயற்பகை.7.) 4. இனம்; class

*[பக்கு → பக்கம் → பக்கல் வே.க.]*

**பக்கவடம்** *pakkavaḍam,* பெ. (n.) நிலையின் நெடுக்குமரம்(இ.வ.); longitudinal posts of the frame of a door or window

*[பக்கம் + வடம்]*

**பக்கவலி** *pakka-vali,* பெ. (n.) விலாப்பக்கத்தில் வலியை உண்டாக்கும் ஒரு வகை நரம்பு நோய்; intercostal neuralgia.

*[பக்கம் + வலி]*

**பக்கவழி** *pakka-vaḻi,* பெ. (n.) 1. சுற்றுவழி; indirect way,round about way. 2. குறுக்குவழி(இ.வ.); short cut

*[பக்கம் + வழி]*

**பக்கவளை** *pakka-vaḷai,* பெ. (n.) 1. முகட்டு வளைக்குக்கீழே இடப்படும் சிறுமரம்; purlin 2. பொண்டான் (எலிவளை) (வின்); a rat hole.

*[பக்கம் + வளை]*

**பக்கவாட்டு** *pakka-vāṭṭu,* பெ. (n.) 1. பக்கங்களிற் சார்ந்துள்ளது; that which is side long 2. நேர்த்தொடர்பற்றது; that which is subsidiary or beside the main point at issue. '*பெட்டியின் பக்கவாட்டுப்பகுதியில் கீறல் விழுந்துள்ளது*' '*தொடர்வண்டி, தடம்புரண்டு பக்கவாட்டில் சரிந்துள்ளது*'. (உ.வ.)

*[பக்கம் + பக்கவாட்டு ]*

**பக்கவாட்டுத்தோற்றம்** *pakka-vāṭṭu-t-tōṟṟam,* பெ. (n.) ஒன்றின் அல்லது ஒருவரின் இடது அல்லது வலது பக்கத்தோற்றம்; profile.
'*பக்கவாட்டுத் தோற்றத்தில் பார்த்தால் நீ என் தம்பியைப் போல இருக்கிறாய்*'

*'பெட்டியின் பக்கவாட்டுப் பகுதியில் கீறல் விழுந்துள்ளது' 'தொடர்வண்டி, தடம்புரண்டு பக்கவாட்டில் சரிந்துள்ளது'* (உ.வ.)

மறுவ: பக்கவெட்டுத்தோற்றம்

*[பக்கவாட்டு + தோற்றம்]*

*[பக்கம் → பக்கவாட்டு + தோற்றம்]*

**பக்கவாத்தியம்** *pakka-vāttiyam,* பெ. (n.) வாய்ப்பாட்டுக்குத் துணையான இசைக் கருவிகள் (கொ.வ.); instrumental accompaniments, as in a musical consert. *'பாடகருக்கு இன்று சரியான பக்க வாத்தியம் அமையவில்லை'* (உ.வ.) *'வீணை இசையரங்கில் பக்கவாத்தியமாக மிருதங்கம் மட்டும்போதுமா?'* (உ.வ.)

*[பக்கம் + வாச்சியம் → வாத்தியம்]*

**பக்கவாத்தியர்** *pakka-vāttiyar,* பெ(n.) வாய்ப்பாட்டுக்குத் துணையாக நிற்கும் இசைக்கருவியாளர்( S.I.I.ii, 275.); those who play upon musical instrument in accompaniment to music.

*[பக்கம் + வாச்சியம் → வாத்தியம் → வாத்தியர்]*

**பக்கவாதம்¹** *pakka-vādam,* பெ. (n.) உடலின் மூளையில் அரத்தக் கசிவு அல்லது உறைவுகாரணமாக ஒருபக்கத்தை உணர்ச்சியறச்செய்யும் நோய்வகை(பைஷஜ – 302); partiality ; a attack on one side of the body. *'பக்கவாத நோய் உள்ளவர்கள் உடனடியாக முறையான மருத்துவம் மேற்கொள்ளவேண்டும்.'* (உ.வ.)

*[பக்கம் + வாதம்]*

**பக்கவாதம்²** *pakka-vadam,* பெ. (n.) ஒருதலைக் கண்ணோட்டம்; adopting or favouring one side. *"யான் பக்கவாதம் சொல்கிலேன்"* (அருட்பா,vi, உய்வகை கூறல்.4).

*[பக்கம் + வாதம்]*

**பக்கவாயு** *pakka-vāyu,* பெ. (n.) 1. கல்லீரலின் நோய் வகை; cirrhosis of liver. 2. அண்டவாயு(வின்.); sarcoce with swelling in the side. 3. *பக்கவாதம்¹* பார்க்க. (இ.வ.) see *pakka-vāḍam.*

*[பக்கம் + வாயு]*

**பக்கவாரி¹** *pakka-vāri,* பெ. (n.) வெந்நீர்; hot water.

*[வெக்கை + வரி → பக்கவாரி]*

**பக்கவாரி²** *pakka-vāri,* பெ. (n.) ஒருவகைக் கொள்ளை நோய்; a kind of epidemic extending to the neighbouring parts. (சா.அக.)

பக்கம் = ஒருபகுதி. ஒருபகுதியில் வாழும் மக்கள் பெரும்பான்மையரை அழிவுறுத்தும் நோய்.

*[பக்கம் + வாரி]*

**பக்கவிசிவு** *pakka-v-išivu,* பெ. (n.) 1. பக்கத்து விலா புடைத்துக் காணும்படி யுண்டாகும் ஒருவகை இசிவு; any convulsion or spasm marked by alternating contraction and relaxation extending to the intercoastal region. 2. இசிவு நோயால் உடம்பு ஒரு பக்கமாக வளைத்துக் கொள்ளுதல்; atonic bending of the body to one side-pleurotonous.

*[பக்கம் + இசிவு]*

**பக்கவிலா** *pakkavilā*, பெ. (n.) விலாவெலும்பின் கீழாகவுள்ள, வயிற்றின் இருபக்கத்துப் புடைப்பு; the upper leteral region of the abdomen next below the lowest rib (சா.அக.)

*[பக்கம் + விலா]*

**பக்கவிளைவு** *pakkaviḷaivu*, பெ. (n.) மருத்துவமும் மருந்தும் நோய் தீர்க்கும்போது ஏற்படுத்தும் பிற எதிர்மறை விளைவு; side effect (of a treatment, medicine.)

*[பக்கம் + விளைவு]*

**பக்கவீக்கம்** *pakkavīkkam*, பெ. (n.) வயிற்றுப்பிசம், பெருவயிறு முதலிய நோய்களில் காணப்படும் விலாப்பக்கத்து வீக்கம்; swelling of the hypochondric region observed in case of tympanitis abdominal dropsy. (சா.அக.)

மறுவ: பக்கவீச்சு

*[பக்கம் + வீக்கம்]*

**பக்கவெட்டி** *pakka-veṭṭi*, பெ(n.) *பக்கவெட்டு*. பார்க்க, (இ.வ.) see *pakka-veṭṭu*.

*[பக்கம் + வெட்டி]*

**பக்கவெட்டு** *pakka-veṭṭu*, பெ. (n.) **1.** அறுத்த மரத்தின் பக்கவாட்டுத் துண்டு(இ.வ.); the outside rough pieces left in sawing a log into planks. **2.** *பக்கவாட்டு*(இ.வ.) பார்க்க. see *pakka-vāṭṭu*. **3.** சாடையாய்க் குத்திப் பேசுகை(கொ.வ.); indirect hit.

*[பக்கம் + வெட்டு]*

**பக்கவெட்டுத்தோற்றம்** *pakka-veṭṭu-t-tōṟṟam*, பெ. (n.) ஒரு பொருளின் உட்பகுதியைக் காட்டக் கூடிய பக்கவாட்டில் வெட்டியது போன்ற காட்சி; side view. "*நெஞ்சாங்குலையின் பக்கவெட்டுத் தோற்றத்தை வரைக*"

*[பக்கவெட்டு + தோற்றம்]*



**பக்கவெட்டுப் போடு—தல்** *pakka-veṭṭu-p-pōḍu-*, **19.** செ. குன்றாவி.(v.t) கூச்சங் காட்டுதல்; to tickle one in the side.

*[பக்க வெட்டு+போடு—,]*

**பக்கவேர்** *pakka-vēr*, பெ. (n.) பக்கவாட்டிற் செல்லும் வேர்; secondary root of a tree.(ஈடு,2,6,6) 2. பொருள் வேறுபடுத்தும் சொல்லின் வேர்ப்பகுதி; root of the word that which is raid another meaning. வேர் ஆணிவேர், பக்கவேர், கிளைவேர், சிறுகிளைவேர் எனப்பலதிறப்படும்.

குல் என்பது ஓர் ஆணிவேர். அதனின்று குலம், குலவு, குலாவு, குலை முதலிய சொற்கள் பிறக்கும்; இவை ஒருவகைப் பொருட்கூட்டம் பற்றியன.

கல் என்பது குல் என்பதினின்று திரிந்த பக்கவேர்.

வேர் என்னும் உவமையாகு பெயர் பற்றி வேர்ச் சொல்லை வேறாக முத்திறப்படுத்திக் கூறினும் மூலமும் திரிவும் என்னும் முறையில், வேர், அடி,

முதனிலை என்னும் வகையீடும் ஆணிவேர் பக்கவேர், கிளைவேர் என்னும் வகையீடும் ஒன்றேயெனக் கொள்க, (வே.க.முகவுரை)

**பக்கறை[1]** *pakkaṟai,* பெ. (n.) பல்லில் கறுப்புக் கறை ஏற்றுகை(வின்); artificial blackening of the teeth.

*[பல் + கறை=பற்கறை–பக்கறை]*

ஒ.நோ நல் + கீரன் = நக்கீரன்

**பக்கறை[2]** *pakkaṟai,* பெ. (n.) **1.** துணியுறை; canvas covering; *"ஏந்து வெள்ளைப் பக்கறை யிடாலினான்"* (விறலிவிடு) **2.** பக்கரை பார்க்க; see pakkarai. **3.** குழப்பம் (யாழ்.அக); confusion

*[பகு–பக்கல்–பக்கர்–பக்கறை பிளவுபடல், குழப்பமடைதல்]*

**பக்காசயம்** *pakkāšayam,* பெ. (n.) இரைக்குடர்; a receptade for receiving food - stomach, belly (சா.அக.).

*[பக்கம் + ஆசயம்]*

**பக்காயம்** *pakkāyam,* பெ. (n.) தொட்டி(இ.வ.); tub.

*[ஒருகா. பற்றாயம் > பத்தாயம் → பக்காயம்]*

**பக்காளி** *pakkāḷi,* பெ. (n) எருத்தின் மேல் நீரேற்றிக்கொணர்பவன் (வின்.); one who carries water in a leather sack on a bullock. **2.** பக்கறை[2] **1** பார்க்க see pakkaṟai[2]. *'சோற்றுப்பக்காளி'*

*[பங்காளி > பக்காளி.]*

**பக்காளிமாடு** *pakkāḷi-māḍu,* பெ. (n) *படுக்காளிமாடு (வின்)* பார்க்க; see *paḍukkāḷimāḍu.*

*[படுக்காளி → பக்காளி + மாடு]*

**பக்கான்** *pakkāṉ,* பெ. (n) வானம்பாடிப் பறவை (யாழ். அக); sherphed koel.

பக்கு → பக்கான். பக்கு = இறகு, இறகுடைய பறவை.

பக்கம் → பக்கு என்பது பக்கச்சிறகு. பக்கச் சிறகையுடைய பறவைகள் பொது வாகப் *'பக்கி'* என்றும் அழைக்கப்பட்டன.

**பக்கான்னம்** *pakkāṉṉam,* பெ. (n.) சமைக்கப் பட்ட சோறு (யாழ்.அக); cooked food.

*[பக்குவம் + அன்னம் → பக்கான்னம். பக்குவம் செய்யப்பட்ட உணவு பக்கான்னம் எனப் பட்டது. பாங்குபடச் செய்தலும் பாகம்படச் செய்தலும் இப்பொருளையும் சுட்டும். ஒ.நோ நளபாகம்]*

**பக்கி** *pakki,* பெ. (n.) **1.** சதுரக்கள்ளியில் தங்கும் ஒருவகைப் பறவை; bird. *"நிணம்பருக பக்கி யுவணங்கழுகு"* (திருப்பு. 319.) *"பாலுணும்பு புள்ளிப்பிமீன்பக்கி"* (ஒழிவி. சத்திநி.14.) **2.** இவறன் (இ.வ); miser.

*[பக்கு–பக்கி]*

பக்கு சிறகு. பக்கி–சிறகுடைய பறவை. பக்கான் பார்க்க. இச்சொல் வடமொழியில்'பட்சி' எனத் திரிந்தது.

பக்கி வகைகள் : 1. காட்டுப்பக்கி, 2. நீண்டவால் பக்கி, 3. சிறுபக்கி, 4. புள்ளிப்பக்கி.

**பக்கி[2]த்தல்** *pakki* –, **11.**செ.குன்றாவி (v.t.) உண்ணுதல்(திவா.); to eat.

*[புகு–புக்கித்தல்–பக்கித்தல்]*

**பக்கி³த்தல்** *pakki* –, 11.செ.குன்றாவி (v.t.) உண்ணுதல்(திவா.); to eat.

*[புகு–புக்கித்தல்–பக்கி–,]*

**பக்கி⁴** *pakki,* பெ. (n.) ஒருவர் அல்லது இருவர் இவர்ந்து செல்லக்கூடிய பளு வில்லாத குதிரை வண்டி; buggy. "*ஒயிலான பக்கி கோச்சு*" (பிரதாப.விலா 9)

**பக்கிசை¹–த்தல்** *pakkišai-,* செ.கு.வி (v.i) ஒலி விட்டிசைத்தல்; to sound, break in, as in a hiatus.

*[பகு → பக்கு + இசை–,]*

**பக்கிசை²–த்தல்** *pakkišai-,* செ.குன்றாவி (v.t) வேறுபடுத்திக்கூறுதல்; to differentiate. "*அதுவும் இதுவு மெனப் பக்கிசைத் தோதப்பட்ட*" (சி.போ சிற்.12,4,பக்.24).

*[பகு → பக்கு + இசை–,]*

**பக்கிடு¹–தல்** *pakkiḍu-,* செ.கு.வி (v.i) **1.** வெடித்தல்; to part, crack, give way, split,.**2.** வடுப்படுதல்; to form a scab **3.** திடுக்கிடுதல்; to throb, as the heart through fear.

*[பகு → பக்கு + இடு–,]*

*(செல்வி. 75, ஆடி, பக்.527)*

**பக்கிடு²–தல்** *pakkiḍu-,* செ.கு.வி (v.i) ஆறிவரும் புண்களின் மேல் வடுவுண்டாதல்; to part, crack, giveway, split,.

*[பக்கு → பக்கிடு –,]*

**பக்கிணி** *pakkiṇi,* பெ. (n.) ஓர் இரவும் அதற்கு முன் பின்னுள்ள இரு பகலும்; a night with the two days enclosing it. "*ஞாதியர்க்கும் பக்கிணிமேல்*" (ஆசௌச.15.)

*[பகல் → பக்கல் → பக்கணி →பக்கிணி]*

**பக்கித்தட்டான்** *pakki – t-taṭṭāṉ,* பெ. (n.) தட்டாரப்பூச்சி; dragon fly.

*[பக்கி + தட்டான்]*

**பக்கிராசன்** *pakki–rāšaṉ,* பெ. (n.) பறவைகட்கு அரசனான கருடன்; garuda, as the lord of birds.

*[பக்கி + அரசன் → ராசன்]*

**பக்கிள்** *pakkiḷ* பெ. (n.) கோட்டான்(இலங்.); rock horned owl. '*பக்கிள் அலறுவது தீநிமித்தம்*' (உ.வ.) (இப்பறவையின் குரலொலிக்கு ஏற்ப இப்பெயர் வந்தது.)

**பக்கு¹–தல்** *pakku,* **5.** செ.கு.வி.(v.i.) பகுத்தல்,to break, to divide.

*பகு–பகுத்தல்*

*[பகு → பக்கு, வ.மொ.வ. பக்.25.]*

**பக்கு²–தல்** *pakku,* **2.** செ.குன்றாவி. (v.t.) **1.** பக்குவம் செய்தல், பாகம்படச்செய்தல் (பாங்கு படசெய்தல்); to do perfeetly **2.** சமைத்தல்; to cook,

*[பகு → பக்கு]*

**பக்கு³** *pakku,* பெ.(n) **1.** பிளப்பு; fracture, break, crack, **2.** கவர்படுகை; double-dealing, duplicity, "*தங் கள்ளத்தாற்பக்கான பரிசொழிந்து*" (தேவா 17,3,) **3.** பை; bag "*பக்கழித்துக்; கொண்டீயெனத்தரலும்*" (கலித்; 65,14) "*அவரை அருந்த மந்தி பகர்வர் பக்கிற் றோன்றும்*" (ஐங்குறு,271) **4.** மரப்பட்டை(வின்.); outer bark of a tree **5.** புண்ணின் அசறு (வின்.); scab of a sore. **6.** பல்லின் பற்று(வின்.); tartar on the teeth. **7.** காய்ந்து போன மூக்குச்சளி(வின்); dried mucus of the nose. **8.** சோறு முதலியவற்றிலுண்டாகும் பொருக்கு(வின்.); scum formed on a prepared dish

**தெ.** பக்கு.

*[பகு → பக்கு]*

**பக்குக்கட்டு—தல்** *pakku-k-kaṭṭu,* **20.** செ.கு.வி. (v.i) *பக்கிடு² (வின்.)* பார்க்க; see *pakkiḍu.*

*[பக்கு + கட்டு —,]*

**பக்குடுக்கை நன்கணியார்** *pakkuḍukkai-naṉ-kaṇiyār,* பெ. (n.) கடைக் கழகக் காலத்துப் புலவர்; புறநானூற்று 194 ஆம் பாடலின் ஆசிரியர்; a poet in sangam age and author of puram 194. (நன்கணியார் என்பது இவரது இயற்பெயர் '*பக்குடுக்கை*' என்ற அடைமொழி இவரது ஊர்ப் பெயரைக் குறிப்பது என்று கொள்வர் சிலர். '*பக்கு*' என்பது பை எனப் பொருள்படும். புலவர் பையையே உடையாகக் கொண்டிருந்ததனால் பக்குடுக்கை என்னும் அடைபெற்றார் என்பர். '*ஒருவருக்கு உடுப்பவை இரண்டாக வேண்டியிருப்பவும், ஒன்றையே இரண்டாகப் பகுத்துடுக்கும் காரணத்தினால் பக்குடுக்கை நன்கணியார் எனப்பட்டார் என்றற்கும், ஒருவரது வறுமை நிலையைப் பக்குடுக்கை எனச் சிறப்பித்துரைத்த நலங்கண்டு சான்றோர் இவ்வாறு சிறப்பித்துப் பாராட்டினரென்றற்கும் இடனுண்டு*' என்று எழுதுவாரும் உளர் — ஔவை சு.து.பிள்ளை புறம் 194, உரை.)

**பக்குப்பக்கெனல்** *pakku-p-pakkeṉal,* பெ. (n.) **1.** அச்சக்குறிப்பு; onom expr.of throbbing rapidly, as the heart through fear. '*பக்குப்பக்கென்று மனம் துடிக்கின்றது*'. **2.** திடீரென்று எழும் ஒலிக்குறிப்பு; abrupt sensation or gesture, **3.** வெடிக்கச் சிரித்தற் குறிப்பு; bursting laughter. **4.** அடுத்தடுத் துண்டாம் ஒலிக்குறிப்பு; repeated thuds. '*பக்குப்பக்கென்று இடித்தான்*'

*[படக்கு → பக்கு. + பக்கு + எனல் ]*

**பக்குவகாலம்** *pakkuva-kālam,* பெ. (n) **1.** தகுதியான காலம்; proper time **2.** பெண் பூப்பெய்தும் காலம்(கொ.வ); age of puberty.

*[பக்குவம் + காலம்]*

**பக்குவசாலி** *pakkuva-šāli,* பெ. (n) **1.** தகுதி யுள்ளவன்; competant person **2.** ஆதன் பக்குவமானவன்; one ripe for salvation

*[பக்குவம் + சாலி]*

**பக்குவஞ்சொல்(லு)—தல்** *pakkuvañcol-,* **8.** செ.கு.வி. (v.i) **1.** மன்னிப்புக்கேட்டல்; to tender apology **2.** செய்வகை சொல்லுதல்; to give instructions concerning any work or business.

*[பக்குவம் + சொல்]*

**பக்குவப்படு—தல்** *pakkuva-p-paḍu,* **2.** செ.கு.வி (v.i.) *பக்குவமாதல்(வின்)*, பார்க்க, see *pakkuvam-ā.*

*[பக்குவம் + படு]*

**பக்குவப்படுத்து–தல்** *pakkuva-p-paḍuttu-*, 20. செ.கு.வி (v.i.) பதப்படுத்துதல்; preserve. *"துன்பங்களால் துவண்டு போகாமல் மனத்தைப் பக்குவப்படுத்த வேண்டும்"; "மீனைப் பக்குவப்படுத்தி வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள்".*

*[பக்குவம் + படுத்து–,]*

**பக்குவம்** *pakkuvam*, பெ. (n.) **1.** குறிப்பிட்ட உணவுக்கே உரிய திண்ம அல்லது நீர்ம நிலையோ சுவையோ மாறிவிடாமல் இருக்கவேண்டிய அளவானதன்மை; (the right) proportion; consistency. *"சரியான பக்குவத்தில் இறக்காவிட்டால் பாகு இறுகிவிடும்"; "திங்கூழில் எல்லாம் பக்குவாக இருக்கிறது".* **2.** நிலைத் திணைகளில் காய்த்தல், பூத்தல் முதலியவற்றுக்கான பருவம்; stage or season (for an event in the growth of a plant) *"மாமரங்கள் காய்க்கும் பக்குவத்தில் இருக்கின்றன"; "பயிர் பூக்கும் பக்குவத்துக்கு வந்து விட்டது".* **3.** ஒருவரின் நிலை அறிந்து செயல்படும் தன்மை; சிக்கல் முதலியவற்றை சமாளிக்கத் தேவையான முதிர்ச்சிப் பாங்கு; proper manner; maturity. *"அவர் சினமுடையவர்தான்; இருந்தாலும் பக்குவமாக எடுத்துச் சொன்னால் புரிந்து கொள்வார்".*

*[பகு → பக்கு → பக்குவம்]*

சமையலுக்குரிய பொருள்களைக் சரியான பகுப்பில் சேர்த்தும் கூட்டியும் சரியான வேக்காட்டில் அல்லது கொதிநிலையில், இறக்கிச் சுவைக்கத் தக்கதாய்ச் செய்தல் பக்குவம் எனப்பட்டது. பகு → பாகம் – பாகஞ்செய்தல் என்பதும் அப்பொருளதே. நுகர்ச்சிக்கு அல்லது பயன்பாட்டுக்கு உரிய சரியான நிலை பக்குவமாயிற்று.

**பக்குவமா–தல்** *pakkuvam-ā-*; 7. செ.கு.வி. (v.i.) **1.** தகுதியாதல்; to become fit, competant, suitable. **2.** பூப்படைதல்(கொ.வ.); to attain pudberty, as a girl. **3.** ஆதன் பக்குவமடைதல். to become mature or perfected, as the soul.

*[பக்குவம் + ஆ–தல்]*

**பக்குவர்** *pakkuvar*, பெ. (n) **1.** கரும காண்டிகர், பத்திகாண்டிகர், ஞான காண்டிகர், என்று மூவகைப்படும் வேதமத வொழுக்கத் தவர்; persons devoted to vṭēdic practice, of three classes, viz., karuma-kāṉṭikar, patti-kaṉṭikar, rīaṉa kāṉṭi kar (வின்.) **2.** மருத்துவர் (யாழ்.அக.); physicians.

*[பக்கு → பக்குவம் → பக்குவர்]*

**பக்குவவாளி** *pakku-vavāḷi* பெ. (n) **1.** *பக்குவி¹* பார்க்க; see *pakkuvi.* **2.** மருத்துவன்; physician.

*[பக்குவம் + ஆளி]*

**பக்குவன்** *pakkuvaṉ*, பெ. (n.), *பக்குவி¹*, பார்க்க. see *pakkuvi*

*[பக்குவம் → பக்குவன்]*

**பக்குவாசயம்** *pakkuvāšayam*, பெ. (n.). இரைப்பை; stomach; *"பக்குவாசயத்தி னன்ன பானத்தை"* (சிவதரு. சனன.7.)

*[பக்குவம் + ஆசயம்]*

*ஆசயம் > skt as Raya*

**பக்குவாத்துமா** *pakkuvāttumā*, பெ.(n.). வீடுபேறயடைதற்கு உரியவ–ன்–ள்; person fit for salvation.

மறுவ: பக்குவசாலி

*[பக்குவம் + skt ātman > ஆத்துமா]*

**பக்குவி** *pakkuvi*, பெ. (n.), **1.** தகுதியுடையவள்; competent woman. **2.** பூப்படைந்த பெண் (இ.வ.); girl who has attained puberty.

*[பக்குவம் → பக்குவி]*

**பக்குவிடு–தல்** *pakku-viḍu;* 7. செ.கு.வி. (v.i.) 1. பிளத்தல்; to be split, cracked as the ground. "*தோணி கரவென்னும் பார்தாக்கப் பக்கு விடும்*" (குறள், 1068.); 2. தோலறுதல் (வின்.); to break, as the skin from a blow of a rattan.

*[பக்கு + விடு.]*

**பக்கெனல்** *pakkenal,* பெ. (n.). 1. சிரிப்பின் ஒலிக்குறிப்பு; bursting, as with sudden laughter; 2. அச்சம், வியப்பு, முதலியவற்றின் குறிப்பு; throbbing through fear or surprise; 3. வெடித்தற்குறிப்பு; splitting, cracking 4. விரைவுக் குறிப்பு; being sudden.

*[பக்கு + எனல்]*

**பகட்டன்** *pagaṭṭan,* பெ.(n.), பொய்ப் பெருமையன் (ஆடம்பரக்காரன்) (கொ.வ.); fop, pompous, stylish person.

*[பகடு → பகட்டு + யானை]*

**பகட்டியானை** *pagaṭṭyāṉai,* பெ.(n.) விரைந்த செலவையுடைய களிற்றியானை; a male elephant which is moving fast. "*விரிதார்க் கடும்ப கட்டியானை வேந்தர்*" (புறநா.265.9.).

*[பகடு → பகட்டு + யானை]*

**பகட்டு[1]–தல்** *pagaṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. போலி வெளிச்சம் காட்டுதல். (கொ.வ.); to shine with a false glitter, as plated articles. 2. தற்புகழ்ச்சி செய்தல்; to brag. 3. பொலிவு பெறுதல்; to be beautiful; to be attractive "*பாசிழை மடந்தையர் பகட்டு வெம்முலை*" (கம்பரா.கார். 110.) 4. போலிப் பெருமை காட்டுதல்; to make a vain show; to be foppish. 5. வெறுப்படைதல்; to loathe.

*[பகட்டு → பகட்டு–,]*

**பகட்டு[2]–தல்** *pagaṭṭu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. மயக்குதல்; to charm, fascinate, allure, wheedle. "*படர்சடைக ளவைகாட்டி வெருட்டிப் பகட்ட*" (தேவா. 676, 2.) 2. கண்மயங்கப் பண்ணுதல்; to make drowsy. "*தூக்கம் பகட்டுகிறது*" 3. வஞ்சித்தல்; to deceive, circumvent,misrepresent, as in selling goods. "*பிறரைப் பகட்டுகையன்றிக்கே*" (ஈடு, 5, 1, 1). 4. அதட்டுதல் (வின்.); to menace,bully, hector, threaten in order to effect an object.

*[புல் → பல் → பல்கு → பகு → பகம் → பகடு]*

**பகட்டு[3]** *pagaṭṭu-,* பெ.(n.) 1. வெளிச்சம்; lustre, brightness, splendour. 2. தற்பெருமை; bragging. 3. போலிப் பெருமை; foppery, affectation, ostentation. "*எல்லாம் பகட்டுக் காண்*" (திவ். திருநெடுந். 28, 236.) 4. கவர்ச்சி; attraction, fascination, allurement. 5. ஏமாற்று; pretence, deception, plausibility. 6. அதட்டு; bluff, bluster.

தெ. பகடு

*[பகல் → பகல்*
*சீ+ து → பகற்று → பகட்டு]*

**பகட்டு[4]** *pagaṭṭu-,* பெ. (n.) கவர்ச்சித் தன்மை மிகுந்த போலிப் பெருமை; show; glamour. "*அவன் பகட்டாக வேளைக்கொரு சேலை உடுத்துவாள்*" "*சாதாரணப் பொருள்களுக்குக் கூடப் பகட்டான விளம்பரங்கள்*" "*பகட்டு இல்லாத எளிய வாழ்க்கையே சிறந்தது*".

*[பகல் → பகற்று → பகட்டு]*

**பகட்டுக்கல்** *pagaṭṭu-k-kal,* பெ. (n.) தவளைக்கல் என்னும் துணை மருந்துச் சரக்குகளுள் ஒன்று; iron stone; this is one of the 120 kinds of natural substances described in Tamil medicine.

*[பகடு → பகட்டு + கல்]*

**பகட்டுமுல்லை** *pagaṭṭu-mullai,* பெ. (n.) (purap.) முயற்சியான் வந்த இளைப்பாலும் பாரம் பொறுத்தலாலும் மனைக்கிழவனை ஏருழுகின்ற எருத்துடன் உவமிக்கும் புறத்துறை (பு.வெ. 10, பொதுப். முல்லைப். 6.); theme of comparing a house holder to a plough - ox, as bearing heavy burdens and getting wearied with intense labour.

*[பகடு → பகட்டு. பகட்டு + முல்லை]*

“*வயல்மிகு சிறப்பின் வருத்தமும் நோன்மையும் வியன்மனைக் கிழவனைப் பகட்டொடு பொரீஇயன்று*” பு.வெ.பொது.41.

வேளாண் தலைவனை உழைப்பாலும் சுமை பொறுத்தலானும் அவனுடைய எருதோடு உவமித்தது பகட்டுமுல்லை என்னும் துறையாம்.

பகடுபோன்று உலகிற்குப் பயன்படும் வேளாளனுடைய இயல்பு மிகுதி என்க.

“*உய்த்தல் பொறுத்தல் ஒழிவின் றொலிவயலுள் எய்த்தல் அறியா திடையின்றி—வைத்த படுநுகம் பூண்ட பகட்டொடு மானும் நெடுமொழி எங்கணவன் நேர்*”. (பு.வெ.41.)

**பகடக்காரன்** *pagaḍa-k-kāraṉ* பெ. (n.) சூழ்ச்சிக்காரன் (யாழ்.அக.); artful person.

*[பகட்டு – பகடம் + காரன்]*

**பகடம்¹** *pagaḍam,* பெ.(n.) 1. *பகட்டு 2, 6. (யாழ்ப்.)* பார்க்க; see *pagattu.* 2. நிறங்கொடுக்கை; colouring.

*[ஒருகா. பகட்டு → பகடம்]*

**பகடம்²** *pagaḍam,* பெ. (n.) சிலம்பம் (யாழ்.அக.); fencing.

*[பகடு → பகடம்] [பகடுபோல் சளைக்காமல் மோதி வெல்ல முயலும் சிலம்பாட்டம்.]*

**பகடி¹–த்தல்** *pagaḍi-,* 5. செ.கு.வி. (v.i.) 1. அருவருத்தல்; nauseating. 2. கண் மயங்கப்பண்ணல்; to cause drowsiness, dizziness. (சா.அக.)

**பகடி²** *pagaḍi,* பெ. (n.) 1. எள்ளல்; mockery, ridicule, ‘*அவன் அவளைப் பகடிசெய்து பாட்டுப் பாடினான்*’. (வின்) 2. நகையாட்டு; jest, witty repartee. 3. நகைச்சுவையாளன்; jester, buffoon. 4. புறப்புனைவாளன்; pretender, imposter “*குருவேலைப் பகடிகளை மேவாதே*” (ஒழிவி. பொது. 3) 5. கூத்தாடி; pole-dancer, dancer “*பகடிக்கோ பணம்பத்து*” (தண்டலை. 71) 6. வரிக்கூத்து வகை; (சிலப். 3, 15, உரை) a masquerade dance.

*[பகட்டு¹ → பகட்டி → பகடி]*

**பகடி³** *pagaḍi,* பெ. (n.) 1. மூலப்பொருள் மெய்ம்மை; primordial matter, material cause of the word. “*முத்திபொரு பகடிப்பகை துரந்த புனிதர்*” (திருக்கலம். 13.) 2. வினை. (jaina); Karma. “*பற்பதமே பகடிப்பகைவர்*” (திருநூற்.3)

*[பகல் – பகலி – பகடி பகல் – பகுத்தல், வகுத்தல், வகுக்கப்பட்ட வினைப்பயன், மாறாத மெய்ம்மை.]*

**பகடி⁴** *pagaḍi,* பெ. (n.) கடையை வாடகைக்கு எடுத்தவரை வெளியேற்ற அவருக்குத் தரப்படும் கூடுதற்பணம்; an amount paid to the present occupant (of business premises) to vocate. (குத்தகைக்கு வைத்திருந்தவர் தம் குத்தகையுரிமையை விட்டுக் கொடுக்கத் தரும் தொகை பகுதிப் பணம் எனப்படும்.)

*[பகுதி → பகுடி → பகடி]*

**பகடிகம்** *pagaḍigam,* பெ. (n.) எருமை; buffalo.

*[பகடு → பகடிகம்]*

**பகடு** *pagaḍu,* **பெ.** (n.) **1.** பெருமை; greatness, hugeness, largeness. *"பகட்டா வீன்ற கொடுநடைக் குழவி"* (பெரும்பாண். 243) **2.** பரப்பு; expansiveness *"பகட்டெழின் மாா்பின்"* (புறநா. 13.) **3.** வலிமை; strength. *"நுண்பூ ணம்பகட்டு மார்பின்"* (புறநா.88.) **4.** எருது; bull, ploughing ox. *"பகட்டினானும் மாவினானும்"* (தொல். பொ. 76) *"பகடு நடந்த கூழ்பல்லாரோடுண்க"* (நாலடி.2) **5.** எருமைக் கடா (தொல்.பொ. 76); buffalo bull. *"பெருமிதப் பகட்டுக்குத் துறையுமுண்டோ"* (புறநா.90) **6.** ஏர்; a team of oxen harnessed to a plough. *"பகடு புரந்தருநர் பாரமோம்பி"* (புறநா. 35) **7.** ஆண் யானை; male elephant *"பைங்கட் பணைத்தாள் பகட்டுழவன்"* (பு.வெ. 8,5.) *"பகடுதேர் புரவிகாலான் பலவகைப்பட்ட சேனை"* (பாரத. பதினோரா. 6) **8.** தோணி. (திவா.); boat. **9.** தெப்பம் (திவா.); raft **10.** மூட்டுப் பொருத்துகள்; joints. *"பகட்டி னொடித்து"* (தக்கயாகப். 483.)

*[புல் → பல் → பா் → பருடு → பகடு]*

**பகடை[1]** *pagaḍai,* **பெ.**(n.) **1.** சூதின் தாயத்திலொன்று; ace upon dice. *'பகடை பன்னிரண்டெட்டு'* **2.** எதிர்பாராத ஆகூழ்; sudden smiles of fortune.

**தெ.** பகட **ம.** பகட **க.** பகடெ **து.** பகட

*[பகடம் → பகடை]*

**பகடை[2]** *pagaḍai,* **பெ.** (n.) **1.** போர்வீரன்; warriors **2.** செருமான் குடியைச் சார்ந்தோர் (வின்); title of the cakliya caste. **3.** போர் வீரா்களாயிருந்து, போரற்றக்காலத்தில் செருமான் தொழிலை மேற்கொண்ட ஒரு சாரார்.; warriors as well as cobblers.

**பகடை[3]** *pagaḍai,* **பெ.** (n.) **1.** போர்; battle **2.** போரினால் ஏற்படும் துன்பம்; sufferings from the war. **3.** துன்பம், மனக்கலக்கம், வருத்தம்; grief, perturbation, agitation of mind.

**பகடை[4]** *pagaḍai,* **பெ.** (n.) சிவதை; indian shubarb.

**பகடைக்காய்** *pagaḍai-k-kāy* **பெ.**(n.) ஒருவகையான சூதாட்டத்தில் விளையாடுபவர் இருவரும் ஒருவர் மாற்றி ஒருவராக உருட்டும், புள்ளிகள் கொண்ட, ஆறு பக்கங்களையுடைய மரத்தாலோ மாழையி னாலோ ஆகிய கருவி; a dice. *"உங்களுடைய சண்டையில் என்னைப் பகடைக்காய் ஆக்காதீர்கள்".* (உ.வ.)

*[பகடை + காய்]*

**பகடைதப்பு-தல்** *pagaḍai-tappu-,* **4. செ.கு.வி.** (v.i.) நேர்ச்சி நெருக்கடியில் தப்பித்துக் கொள்ளுதல்(சென்னை); to have a narrow escape, to miss narrowly.

**தெ.** பகடதப்பு.

*[பகடை + தப்பு-,]*

**பகடையடி-த்தல்** *pagaḍai-y-aḍi-,* **4. செ.கு.வி.** (v.t.) ஆரவாரமாகப் பேசுதல்; செருக்கோடு பேசுதல்; to use bombastic language.

*[பகட்டு → பகட்டை → பகடை]*

*பகட்டுதல் = தற்பெருமை கொள்ளுதல்.*

*[பகடை + அடி -,]*

**பகண்டம்** *pagaṇḍam,* **பெ.** (n.) கடலை; ground nut.

**பகண்டை[1]** *pagaṇḍai* **பெ.** (n.) (திவா.) சிவல் வகை; kind of partridge.

*[பகன்றை → பகண்டை]*

மறுவ. கதுவாலி (கவுதாரி) பகன்றை. சில்லை. (சூடா) ஒ.நோ. கன்றுக்குட்டி> கண்ணுக்குட்டி, ஈழவழக்கு.

**பகண்டை²** *pagaṇḍai* பெ. (n.) *பகன்றை, 3* (இ.வ) பார்க்க see *pagaṉṟai,3.*

*[பகன்றை → பகண்டை]*

**பகண்டை³** *pagaṇḍai* பெ. (n.) நகையாட்டுப் பாட்டு; song of ridicule. "*பப்பினையிட்டுப் பகண்டை பாட*" (பதினொ. திருவாலங். 1, 11)

*[பகட்டு¹ → பகட்டை → பகண்டை]*

**பகந்தரவிரணம்** *pagandara-v-iraṇam* பெ. (n.) எருவாய்ப் புண்; (பைஷஜ. 277); fistula in anus.

*[பகந்தரம் + skt vrṇa > த. இரணம்]*

**பகந்திரம்** *pagandiram,* பெ. (n.) எருவாய்ப் புண்; fistula in anus.

*[பகந்தரம் → பகந்திரம்]*

**பகப்பாதி** *paga-p-pādi,* பெ. (n.) சித்திரமூலம் என்னும் மூலிகை; ceylon leadwort.

மறுவ: கொடுவேலி.

**பகபகவெனல்** *paga-paga-v-eṉal,* பெ. (n.) 1. தீ எரியும்போது உண்டாகும் ஒலிக்குறிப்பு; onom. expr. of crackling of fire, 2. வயிறு பசியால் எரிதற் குறிப்பு; expr. signifying burning or smarting sensation of hunger. 3. ஈரடுக்கொலிக் குறிப்பு; reduplication of onom. expr. 4. வேகக் குறிப்பு; expr. of fast.

*[பட + பட + எனல் → பகபகவெனல்]*

**பகம்** *pagam,* பெ. (n.) 1. மிகு செல்வம், மறம், புகழ், திரு, அறிவு, நெஞ்சுறுதி என்ற அறுகுணங்கள் (பாரதவசனம், அநுசா. பக். 935.); the six attributes wealth, maṟam, pugaḻ, tiru, ṅāṉam, vairākkiyam. 2. பெண்குறி (திவா.); pudendum muliebre.

*[பல் + பல்கு + பகு → பகம்]*

**பகமலர்** *pagamalar,* பெ. (n.) கருப்பை; the womb, uterus.

*[பகம் + மலர்]*

**பகர்¹–தல்** *pagar-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. சொல்லுதல்; to tell, utter, declare, say, announce, pronounce, publish. "*மற்றைய ராவார் பகர்வர்*" (நாலடி,256) 2. விற்றல்; to hawk, sell. "*பூவும், புகையும் மேவிய விரையும் பகர்வனர்*" (சிலப்.5,14.) "*பண் அமை சிலம்பு பகர்தல் வேண்டி*" (சிலப்.18.). "*என்காற் சிலம்பு பகர்தல் வேண்டி நின்பாற் கொலைக் களப்பட்ட கோவலன் மனைவி*" (சிலப்.20–61.) 3. கொடுத்தல்; to give "*வேழம் வெண்பூப் பகரும் தண்டுறை யூரன்*" (ஐங்குறு.13) 4. உணர்த்துதல்; indicate "*பகர்குழல் பாண்டி வியம்பி*" (பரிபா.14,42).

*[பகு → பகர் → பகர்–பொருள்களைப் பகுத்து விலை கூறுதல். மு.தா.292. வே.க.]*

**பகர்²–தல்** *pagar-,* 4. செ.குன்றாவி. (v.t.) ஒளிவிடுதல்; to emit lustre "*பக்கங் கருஞ்சிறுப் பாறை மீதே யருவிகள் பகர்ந்தனைய*" (திவ்.பெரியாழ் (1,7,8,)

*[பகல் → பகர்]* வ.மொ.வ.25

**பகர்[3]–தல்** *pagar*, **4.** செ.கு.வி. (v.i) பெயர்தல் (நாஞ்.); to shift, move.

ம. பகருக.

*[பகர் → பகர்தல்]*

**பகர்[4]** *pagar*, பெ. (n.) **1.** ஒளி; radiance, splendour. "*சிந்தாமணிகள் பகரல்லைப் பகல் செய்திருவேங் கடத்தானே*" (திவ். திருவாய். 6,10,9.) **2.** பங்கம்பாளை (மலை.); killer worm.

மறுவ: ஆடுதீண்டாப்பாளை.

*[பகல் → பகர்]* (வ.மொ.வ.25.)

**பகர்ச்சி** *pagarcci*, பெ. (n.) **1.** சொல் (நன்.458); speech, utterance, word. **2.** விலை; price "*பகர்ச்சி மடவார்*" (சிவப்.பிர. நன்னெறி, 23.).

*[பகர் → பகர்ச்சி]*

**பகர்ச்சை** *pagarccai*, பெ. (n.) கோயில், அரண்மனை முதலிய இடங்களின்றும் மதிப்புரவாக அனுப்பும் எடுப்புச் சோறு; Cooked food sent from the temple or palace to the houses of certain dignitaries, as a perquisite. "*கோயிலிலிருந்து மூத்த பிள்ளை வீட்டுக்குப் பகர்ச்சை போகிறது*"; (நாஞ்.).

*[புகா → புகவு → புகர்ச்சை → பகர்ச்சை]*

**பகர்த்து–தல்** *pagarttu-*, **5.** செ.குன்றாவி (v.t.) பெயர்த்து எழுதுதல் (நாஞ்.); to transcribe, copy.

ம. பகர்த்துக.

*[பகர்[2] → பகர்த்து–,]*

**பகர்நர்** *pagarnar*, பெ. (n.) விற்போர்; selling persons "*கூலம் பகர்நர் குடிபுரந்தராஅக் குடிபுரந்தருநர்*" (பதிற்.13–23).

*[பகர் → பகர்நர் ]*

**பகர்ப்பு** *pagarppu*. பெ. (n.) படி(நாஞ்.); copy, as of an original document.

*[பகு → பகிர் → பகிர்ப்பு]*

**பகர்பவர்** *pagarbavar*, பெ. (n.) விற்பவர்; salesman. "*வீங்குநீர் அவிழ்நீலம் பகர்பவர் வயிற்கொண்ட*" (கலித்–66,1.)

*[பகர்தல் → பகர்பவர்]*

**பகர்பு** *pagarbu*, கு.வி.எ (adj.) விளைந்து; to yield. "*பல்வளம் பகர்பூட்டும் பயனிலம் பைதற*" (கலித்.20.)

**பகர்வனர்** *pagarvaṉar*, பெ. (n.) பொருள்களை விலைக்கு விற்பவர்; sales person "*நகர நம்பியர் திரிதரு மருகில் பகர்வனர் போல்வதோர் பான்மையின் நிறுத்த*" (சிலப்.3,அரங்.)

*[பகர் → பகர்வனர்]*

**பகர்விலி** *pagar-v-ili*, பெ. (n.) நெய்தல்; white indian water lily. (சா.அக.)

மறுவ: அல்லி, பகர்விலிகொடி.

*[பகல் → பகர் + இலி]*

**பகரம்[1]** *pagaram*, பெ. (n.) **1.** ஒளி (யாழ்.அக.); lustre, splendour, brilliance. **2.** அழகு; beauty. "*பகரமாமயில் மிசைவர நினைவது மொருநாளே*" (திருப்பு.258)

மறுவ: கொக்குமந்தாரை.

*[பகர் → பகரம்]*

**பகரம்**[2] *pagaram,* பெ. (n.) மாற்று(நாஞ்.); instdead, in exchange. *'வீட்டுக்குப் பகரமாக நிலம் கிடைத்தது'*

*[பகர் → பகரம்]*

**பகரம்**[3] *pagaram,* பெ. (n.) *'ப்'* என்னுமெழுத்து; the letter 'p'.

*'ப்'–பகர அகரம்*

**பகரவளைவு** *pagara vaḷaivu,* பெ. (n.) *'ப்'* என்னும் எழுத்தை ஒருபக்கமாகத் திருப்பியது போல் இருக்கும் அடைப்புக்குறி; square bracket.

*[பகரம் + வளைவு]*

**பகராசிகம்** *pagarāśigam,* பெ. (n.) சூலி என்னும் மரம்; indian mahogony.

*[பகரம் + ஆசிகம்]*

**பகரி** *pagari,* பெ. (n.) ஆவிரை (பிங்.); tanner's senna;tanners cassia

*[பகரம் → பகரி]*

**பகரிப்பு** *pagarippu,* பெ. (n.) *பகரம்1,* பார்க்க (வின்.); see *pagaram*

*[பகரி → பகரிப்பு]*

**பகல்**[1] *pagal,* பெ. (n.) **1.** பகுக்கை (பிங்.); dividing, separating *"நெருநைப் பகலிடங் கண்ணி"* (புறநா.249.) **2.** நடு (திவா.); middle. **3.** நடுவுநிலைமை; middle position, impartiality *"அகல்வையத்துப் பகலாற்றி"* (பதிற்றுப்.90,9) **4.** நுகத்தாணி; middle or main peg in a yoke. *"நெடுநுகத்துப் பகல்போல"* (பட்டினப்.206). **5.** முழுத்தம் (பிங்.); period of two nāḻigai. *"ஒரு பகல் காறு நின்றான்"* (சீவக.2200) **6.** அரையாமம்; half of a yāmam, *"அரையிருள் யாமத்தும் பகலுந் துஞ்சார்"* (சிலப்.4,81.) **7.** நண்பகல் (கொ.வ.); midday, noon. **8.** காலைமுதல் மாலை வரையுள்ள காலம்; day, day time,as divided from the night. *"பகல் விளங்குதியாற் பல்கதிர் விரித்தே"* (புறநா.8.) *"கலைகாட்டையாயு முகூர்த்தம் பகல் கங்குல்"* (கூர்மபு. பல்வகை16.) **9.** இளவெயில்; the morning sun. *"பாய்குழை நீலம் பகலாகத் தையினாள்"* (பரிபா.11,96.) **10.** அறுபது நாழிகை கொண்ட நாள் (திவா.); day of 24 hours. *"ஒல்வ கொடாஅ தொழிந்த பகலும்"* (நாலடி.169) **11.** ஊழிக்காலம்; the day of destruction of the universe *"துஞ்சலுறூஉம் பகலுறுமாலை"* (பதிற்றுப்.7,8.) **12.** கதிரவன்; sun. *"பன்மலர்ப் பூம்பொழிற் பகன்முளைத் ததுபோல்"* (மணிமே. 4,92.) *"வெயில் காலும் பகன்மதி வெருவுற"* (திருவிளை. நாக.10.) **13.** பேரொளி (திவா.); light, radiance, splendour. **14.** வெளி; open place; openness,(சீவக.1596.உரை.) **15.** நாள்; day. *"ஓர்பகலே யிவனிறந்தனன்"* (சீவரக. கத்தரிப்பூ–1.)

*"என் பெழுந்தியங்கும் யாக்கையர் நண்பகற் பலவுடன் கழிந்த உண்டியர்;* (திருமுரு.130–31)
*"பகலிற் றோன்றும் இகலில் காட்சி"* (திருமுரு.166)
*"நன்பக லந்தி நடையிடை விலங்கலிற்"* (பொருந.46.)
*"அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப் பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி"* (பெரும்.2.)
*"பகற்பெயல்... மழைவீழ்ந் தன்ன மாத்தாட் கமுகின்"* (பெரும்.362)
*"மடவரல் மகளிரொடு பகல்விளை யாடி"* (பெரும்.387)
*"பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு"* (பெரும்.442)
*"___பருவவானத்துப் பகற்பெயற் றுளியின் மின்னுநிமிர்ந்தாங்கு"* (பெரும்.484)
*"இரவுபகற் செய்யுந் திண்பிடி யொள்வாள்"* (முல்லைப்.46.)
*"பகற்செய்யும் செஞ்ஞாயிறும்"* (மதுரைக்.2.)
*"சென்ற ஞாயிறு நன்பகற் கொண்டு குடமுதற் குன்றஞ் சேர"* (மதுரைக்.546.)

*"பகலுரு வுற்ற விரவுவர நயந்தோர்"*
மதுரைக். 549.)

*"மற்றை யாமம் பகலுறக் கழிப்பி"*
((மதுரைக்.653)

*"பகலிறந் திருகோட் டறுவையர் வேண்டுவயிற் றிரிதர"* (நெடுல்.33.)

*"இரவும் பகலும் மயங்கிக் கையற்று மதலைப் பள்ளி மாறுவன விருப்ப"*
(நெடுல்.47.)

*"பூமலி சோலை அப்பகல் கழிப்பி"*
(குறிஞ்சிப்.214.)

*"அகலாக் காதலொடு பகல்விளையாடி"*
(பட்டினப்.104)

*"வளைவாய்க் கூகை நன்பகற் குழறவும்"*
(பட்டினப்.268.)

*"பாயிருள் நீங்கப் பகல்செய்யா எழுதரு ஞாயி றன்னவவன் வசையில் சிறப்பும்"*
(மலைபடு.84)

*"பகனிலை தளர்க்குங் கவனுமிழ் கடுங்கல்"*
(மலைபடு206)

*"அரையிருள் யாமத்தும் பகலுந் துஞ்சான்"*
(சிலப்.4–81)

*"நிகர்மலர் நெல்லொடு தூஉய்ப் பகல்மாய்ந்த மாலை"* (சிலப்.9–2)

"பன்மலர்ப் பூம்பொழிற் பகல்முளைத் ததுபோல்" (மணிமே.92)

"இரவும் பகலும் இளிவுடன் தரியாது" (மணிமே. 6–67)

*"நுண்பல சிதலை யரிதுமுயன் றெடுத்த செம்புற் றீயல் போல ஒருபகல் வாழ்க்கைக் குலமரு வோரே"*
(புறநா.51–11)

**நடுநிலைக்கு**

*"**பகலாற்றி** இனிதுருண்ட சுடர்நேமி"* (புறநா.17–7)

16. **பிரிதல்**; to separare. "பகச்சொல்லிக் கேளிர்ப் **பிரிப்பர்**" (குறள். 187) 17. கூடாமை; that which is not attached. "இகலென்ப எல்லா உயிர்க்கும் **பகலென்னும்** பண்பின்மை பாரிக்கும் நோய்" (குறள்.851.)

*'பகலிற் பக்கம் பார்த்துப் பேசு; இரவில் அதுதானும் பேசாதே'* (பழ.)

*"பகலிற் **பசுவும்** தெரியவில்லை; இரவில் எருமை தெரியுமா?"* (பழ.)

*[பகு → பகல், (வ.மொ.வ.25.)]*

**ம.** பகல்; **க.** பகல்; **தெ.** பகளு

**பகல்**[2] *pagal*, பெ. (n.) அக்குள்; armpit.

**மறுவ.** கமுக்கட்டு.

**பகல்**[3] *pagal*, பெ. (n.) 1. பிறரோடு கூடாமை; unsociability *"இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும் பண்பின்மை பாரிக்கும் நோய்"* (குறள் 851.) 2. கட்சி (தொல்.சொல். 165,சேனா.); party.

*[பகு → பகல்]*

**பகல்கனவு** *pagalkaṉavu*, பெ. (n.) மனத்தில் வளர்க்கும் நிறைவேறக் கூடிய வாய்ப்புச் சிறிதும் இல்லாத எண்ணம்; day dream. *'அரசியல் சிக்கல்களுக்கு படையின் மூலம் தீர்வு என்பதெல்லாம் வெறும் பகல்கனவு' 'என்னை வழிக்குக் கொண்டு வந்து விடலாம் என்று நினைத்தால் அது பகல் கனவுதான்". 'பகல் கனவுலகில் பயணம் செய்யாதே'* (பழ.)

*[பகல் + கனவு]*

**பகல்செய்வான்** *pagal-šeyvāṉ* பெ. (n.) கதிரவன் (பகற்பொழுதைச் செய்பவன்); sun. *"பையுணோய் கூரப் பகல் செய்வான் போய்விழ"* (சிலப்.7,50.)

*[பகல் + செய்வான்]*

**பகல்செல்வாயில்** *pagalšelvāyil*, பெ. (n.) **சிலப்பதிகாரத்தில்** குறிக்கப் பெறும் **குணவாயிற்கோட்டம்** என்ற இடம்; a place referred in the epic šilappa digāram. *"பகல் செல் வாயிற்படியோர் தம்முன் அகல் இடப்பாரம் அகலநீங்கி"* (சிலப்.30–179.).

*[பகல் + செல் + வாயில்.]*

**பகல்தீவட்டி** *pagal-tivaṭṭi*, பெ. (n.) பெரியோர்கள் செல்லும்போது, அவர்கட்கு முன் பகற் பொழுதிலுங்கூட, மதிப்புரவாகப் பிடித்துக் கொண்டு போகப்படும் தீப்பந்தம்; torch carried by day before distinguished persons as an honour.

*[பகல் + தீவட்டி]*

**பகல்தீவட்டிக்கொள்ளைக்காரன்** *pagaltivaṭṭi-k-koḷḷai-k-kāraṉ,* பெ. (n.) 1. பகற் கொள்ளையடிப்போன். (இ.வ.); one who commits dacoity by daylight. 2. அறமல்லாத வழியில் வரும்படி தேடுபவன் (இ.வ.); person who seeks large, unreasonable gain.

*[பகல்தீவட்டி + கொள்ளைக்காரன்]*

**பகல்மாறு** *pagal-māṟu,* பெ. (n.) 1. பகற் பொழுதில்; *day-time, opp. to irā-māṟu.* "*சமணர்கள் பகல்மாறு சாப்பிடுவார்கள்*" (இ.வ.) 2. பகற்பொழுது மாறும்வேளை; evening time, dusk.

*[பகல் + மாறு]*

**பகல்மானம்** *pagal-māṉam* பெ. (n.) பகற் பொழுது (யாழ்.அக.); day time.

*[பகல் + மானம்]*

**பகல்வத்தி** *pagal-vatti,* பெ. (n.) *பகல்வர்த்தி* பார்க்க; see *pagal-vartti.*

*[பகல் + வத்தி ]*

*வத்தி* = skt.

**பகவதி** *pagavadi,* பெ. (n.) கொற்றவை; durga. "*அகில தலம் விதிர்விதிர்ப்பவரு மடற்கேசரி மேல் பகவதியை யடிவணங்கி*" (சேதுபு. தேவிபுர.25.)

**பகவந்தன்** *pagavandaṉ,* பெ. (n.) இறைவன் (பகவன்); lord, "*மூவருள் முதலான பகவந்த னீயென்று கண்டும்*" (நூற்றெட்டுத்.திருப்பு.97).

*[பகவன் → பகவந்தன்]*

**பகல்வர்த்தி** *pagal-vartti,* பெ. (n.) வாணவகை; a kind of firework "*பகல்வர்த்தி யதிலதிகமாம்*". (அறப்.சத.43.)

*[பகல் + வர்த்தி ]*

*வர்த்தி* = skt.

**பகல்வாயில்** *pagal-vāyil,* பெ. (n.) கீழ்த்திசை (பகலின் வாயில்); east, as the gate of the day. "*பகல்வாயி லுச்சிக் கிழான்கோட்டம்*" (சிலப்.9,10.) "*புகர் வெள்ளை நாகர்தங் கோட்டம் பகல்வாயில்*" (சிலப்.கனாத்திறம்.10.)

*[பகல் + வாயில். பகல் ஆகுபெயராகப் பகலவனைக் குறிக்கிறது.]*

**பகல்விடுதி** *pagal-viḍudi,* பெ. (n.) பகலில் தங்குமிடம் (வின்.); day lodging

*[பகல் + விடுதி ]*

**பகல்விண்மீன்தோன்றி** *pagalviṇmīṉtōṉṟi,* பெ. (n.) கண்பார்வையை மிகக் கூர்மையாக்கும் பொன்னாங்காணி என்னும் மூலிகை; sessile plant; it is so called because it lends keenness to vision so as to enable one to see the stars in the day time.

**பகல்விளக்கு** *pagal-viḷakku,* பெ. (n.) பகலில் மதிப்புரவாக இடும் விளக்கு; burnt at daytime as an honour.

*[பகல் + விளக்கு]*

**பகல்வினையாளன்** *pagal-viṉai-y-āḷaṉ,* பெ. (n.) முடிதிருத்துவோன் (நிகண்டு); barber.

*[பகல் + வினையாளன்]*

முடியைத் தலையினின்றும் வெட்டிப் பிரித்தலால் முடி திருத்துவோன் பகல்வினை யாளன் எனப்பட்டான். பகல்–பகுத்தல்; பிரித்தல்.

**பகல்வெய்யோன்** *pagal-veyyōn*, பெ. (n.) நடுவுநிலை விரும்புவோன்; lover of justice. *"பாடியிருக்கைப் பகல் வெய்யோன்"* (சிலப். 26,88.) 2. நடுவுநிலை தவறாத சேரன் செங்குட்டுவன்; the cēra king šeṅguṭṭuvaṉ.

*[பகல் + வெய்யோன்]*

**பகல் வெள்ளி காட்டு–தல்** *pagal-veḷḷi-kāṭṭu-* 5. செ.கு.வி. (v.i.) காணமுடியாத தொன்றனைக் காட்ட முயலுதல் (யாழ்.அக.); to attempt an impossibility.

*[பகல் + வெள்ளி + காட்டு –,]*

**பகல்வெளிச்சம்** *pagal-veḷiccam*, பெ. (n.) 1. பகலொளி (வின்.); daylight. 2. போலி நடிப்பு; false action.

*[பகல் + வெளிச்சம்]*

**பகல்வெளிச்சம் போடு–தல்** *pagal-veḷiccam-pōḍu-*, 5. செ.கு.வி. (v.i.) பகலில் ஏமாற்ற முயலுதல்(கொ.வ.); to attempt to deceive in broad day light.

*[பகல் + வெளிச்சம் + போடு–,]*

**பகல்வேடக்காரன்** *pagal-vēḍa-k-kāraṉ*, பெ. (n.) 1. பகற் காலத்தில் பலவேடம் பூண்டு பிழைப்போன்; a person who lives by amusing people with his disguises during daytime. 2. வெளிவேடக்காரன்; hypocrite.

*[பகல்+skṭ. vēṣa> த. வேடம் + காரன்]*

**பகல்வேடம்**[1] *pagal-vēḍam* பெ. (n.) + (கொ.வ.) 1. பகலில் உருமாற்றிக் கொள்கை; disguisement in broad daylight. 2. ஆடம்பர நடிப்பு; false outward show, pretence.

*[பகல் + வேடம் ]*

**பகல்வேடம்**[2] *pagalvēḍam*, பெ. (n.) நல்லவர் போன்ற நடிப்பு; வெளிவேடம்; mask of innocence; dissambling *'உன் பகல் வேடத்தை நம்பி ஏமாறுவதற்கு நான் ஒன்றும் முட்டாள் இல்லை'*. (உ.வ.)

*[பகல் + வேடம் ]*

**பகலங்காடி** *pagal-aṅgāḍi*, பெ. (n.) நாளங்காடி பார்க்க; day bāzaar. *"படியணி நெடுங் கடைப் பகலங் காடியும்"* (பெருங். உஞ்சைக். 54,77.).

*[பகல் + அங்காடி]*

**பகலசனம்** *pagalasaṉam*, பெ. (n.) பகலுணவு; midday meals; dinner.

*[பகல் + skt asṉa > த.அசனம்]*

**பகலடி** *pagal-aḍi*, பெ. (n.) சிங்கியடிக்கை; flapping the arms against the sides.

*[பகல்[2] + அடி] (சிங்கியடிக்கை = இருகை களையும் மடித்துக் கொண்டு விலாப்புறத்தில் அடித்துக் கொண்டு ஆடுகை.)*

**பகலம்** *pagalam* பெ. (n.) ஆவணம் எழுதினவன் இன்னான் என்பதைக் குறிக்க, அவன் இடும் கையொப்பத்துக்கு முன் சேர்க்கும் மொழி(c.g.)(c.g.); term prefixed to the signature of the writer of a document indicating that he is the writer thereof.

*[ஒருகா, பகர் → பகல் → பகலம்]*

**பகலரசு** *pagalarašu,* பெ. (n.) கதிரவன்; sun, as a day king. "*அகல்வாய் ஞாலம் ஆரிருளுண்ணப் பகலரசோட்டில் பணை யெழுந்தாா்ப்ப*" (மணிமே.9–17.)

*[பகல் + அரசு]*

**பகலவன்** *pagalavaṉ* பெ. (n.) 1. பகல் செய்வோன்(திவா.), பாா்க்க ; see pagalŞeyvōṉ. "*பகல வனையானும்*" (கம்பரா.கங்கை.61.) "*பகலவன் பைம்பொற்றேரரோ*" (இராமா. கரன் 52.). 2. பரணிநாள் (பிங்.); the 2nd nakṣatra.

*[(பகல் + அவன்.) – அவன்.தன்மை ஒருமையீறு.]* பகல் → பகலவன் (செல்வி.திச.79.பக்.179.)

**பகலாணி** *pagal-āṉi,* பெ. (n.) *பகல் 4,* பாா்க்க, see *pagal 1,4* "*நுகத்துப் பகலாணி போன்று*" (பழ.339.)

*[பகல் + ஆணி.]*

**பகலாந்தை** *pagal-āndai,* பெ. (n.) ஆந்தை வகை (பாண்டிச்); a kind of owl.

*[பகல் + ஆந்தை]*

**பகலி** *pagali* பெ. (n.) குதிரை நோய் வகை (அசுவசா.111.); a disease of horses.

*[பகல் → பகலி]*

**பகலிருக்கை** *pagal-irukkai,* பெ. (n.) 1. நாளோலக்க மண்டபம்; council hall, durbar, '*திருக்கூடித் தானத்தைப் பகலிருக்கை மாத்ரமாகக் கொண்டு*' (ஈ.டு.8,6,4.) "*புரிகை நாட்டுச் சிவபுரத்துப் பகலிருக்கையில் திருவமுது செய்தருளாவிருந்து*" (s.i.i.iii,135.) 2. தனிமையான இடம்; lonely, retiring place solitary place. "*அவருந் தாமுமாகப் பகலிருக்கையிலே போயிருந்து*" (திருவிருத். 99, 467.)

*[பகல் + இருக்கை]*

**பகலுறக்கம்** *pagaluṟakkam,* பெ. (n.) பகல்தூக்கம்; (சா.அக.). day sleep as opposed to night sleep.

*[பகல் + உறக்கம்]*

**பகலை**[1] *pagalai,* பெ. (n.) உருமம்(நண்பகல்); midday. (சா.அக.).

*[பகல் → பகலை]*

**பகலை**[2] *pagalai,* பெ. (n.) பலகை (கோவை) lattice;

*[பகல் → பகலை]* (பகலை > பலகை ஒ.நோ. விசிறி > சிவிறி.)

**பகலைக்கு** *pagalaikku,* து.வி. *(adv.)* பகலில்; during day. '*பகலைக்குப் பத்துமணிக்குக் கதிரறுப்பு*';

*[பகல் + ஐ + கு]*

**பகலோன்** *pagalōṉ* பெ. (n.) கதிரவன் (பிங்.); sun. "*நீள்விசும்பு நிலாப்பகலோன்.*" (திருவாச.15,5.) "*பகலோன் மறைந்த அந்தி ஆரிடை உருகெழு பெருங்கடல் உவவுக் கிளா்ந்தாங்கு*" (அகநா.201–2.)

*[(பகல் + ஒன்)ஒ –ஆண்பால் ஒருமையீறு.]*

**பகவதி** *pagavadi* பெ. (n.) 1. தருமதேவதை (பிங்.); the goddess of virtue; 2. கொற்றவை (துா்க்கை) (திவா.); durgā. 3. மலைமகள் (பாா்வதி) (நாமதீப.22); pārvati. 4. தாம்பிரபரணி ஆறு (நாமதீப.526); the river tāmpiraparaṉi.

*[பகவன் > பகவு + அதி.]*

**பகவன்** *pagavaṉ.* பெ. (n.) **1.** பகவான் பார்க்க; see pagavāṉ. **2.** தேவன்; divine being, god, "*ஆதி பகவன் முதற்றே யுலகு*" (குறள்,1.) **3.** அருகன் (திவா.); arhat **4.** புத்தன் (திவா.); buddha. **5.** நான்முகன் (பிங்.); brahmā. **6.** திருமால் (பிங்.); Thirumāḷ. **7.** சிவன் (திவா.); sivaṉ. **8.** கதிரவன் (பிங்.); sun. **9.** குரு. (பிங்.); priest. **10.** திருமாலடியாரான முனிவர்; ascetic devotees of Tirumāl. "*பக்தர்களும் பகவர்களும்*" (திவ்.பெரியாழ். **4,9,6.**).

*[பகவன் பகு → பகம் → பகவன்]*

(வ.மொ.வ.25)

பகுத்தளித்துக் காப்பவன்; பலர்க்கும் படியளப்பவன், **ஆண்டவன்.** பக(bhaga) என்னும் இருக்குவேதச் சொற்கு 'dispenser', gracious lord patron (applied to gods, esp-to savitri.) RV. என்று மா.வி.அ. பொருள் வகுக்கின்றது. வேளாளன் அறு சாரார்க்கும், அரசன் அடிமையர்க்கும், படியளப்பது போல ஆண்டவனும் பலர்க்கும் உணவைப் பகுத்தளித்துக் காப்பவன் என்னும் கருத்தில் அவனைப் பகவன் என்றனர். இன்றும் ஆண்டவனைப் படியளக்கிறவள் என்று பொதுமக்கள் கூறுவது காண்க. Lord என்னும் ஆங்கிலச் சொல்லும் இதே கருத்துப் பற்றியெழுந்திருப்பது கவனிக்கத்தக்கது.

E. Lord. OE hlaford (Loaf ward) = bread, keeper.இனி, அவரவர்க்குரிய நன்மை தீமைகளை **வகுப்பவன்** என்றுமாம்.

"*பால்வரை தெய்வம்*" (சொல்.58) என்று தொல்காப்பியர் கூறுவதை நோக்குக. இனி, பகு–பகவு–பகவன் என்றுமாம். எங்ஙனமாயினும் பொருள் ஒன்றே, "*நமக்கும் படியளப்பார் நாரியோர் பாகர்*" (தனிப்பாடல்), பகவன் என்று பல தெய்வங்களுக்கும் பொதுப்பெயரால் வழங்கியதாலேயே முழுமுதலாகிய கடவுளைக் குறிக்க ஆதிபகவன் என்று அடை கொடுத்துக் கூறினார் வள்ளுவர். (மு.தா.264.)

*[பகவு → பகவன்]*

**பகவனாதி** *pagavaṉādi,* பெ. (n.) வெள்ளெருக்கு; white flowered madar plant.

*[பகவன் + ஆதி]*

**பகவான்¹** *pagavāṉ,* பெ. (n.) **1.** பகம் என்பதனாற் குறிக்கப்படும் அறுகுணங்களும் உடைய பெரியார்; great person possessing the six attributes of pagam, the epithet being used after names of certain gods and Rsis, as **akkiṉipagavān**, viyāšapāgavāṉ (வின்.) **2.** பன்னிரு பகலவருள் ஒருவன்; (திவா); a sun-god, one of tuvāta-ātittar q.v. **3.** சிவன் (சூடா.); sivaṉ.

**பகவான்²** *pagavāṉ,* பெ. (n.) கடவுள்; தெய்வம்; god. ***"இனி மருத்துவரால் முடியாது, பகவான்தான் காப்பாற்ற வேண்டும்."***

*[பகவன் → பகவான்]*

**பகவிருக்கம்** *pagavirukkam,* பெ. (n.) நிலக்கடம்பு; cadamba tree.

*[பக + இருக்கம்]*

**பகவு¹** *pagavu,* பெ. (n.) **1.** துண்டு; slice, bit. "*எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும்*" **(குறள்.889.) 2.** பங்கு(யாழ்.அக.); share, portion. **3.** வெடிப்பு (யாழ்.அக.); crack.

*[பகு → பகவு]* வ. மொ.வ.26.

**பகவு²** *pagavu* பெ. (n.) வெடியுப்பு; nitre. (சா.அக.).

*[பகு → பகவு]*

**பகவூகம்** *pagavūgam,* பெ. (n.) பகற்குரட்டை என்னும் புடலங்காய்; round snake gourd. (சா.அக.).

*[பக + ஊகம்]*

**பகழி** *pagaḻi,* பெ. (n.) 1. அம்பு; arrow, "*விழுத்தொடைப் பகழி.*" (புறநா 152.). 2. அம்புக் குதை (பிங்.); foot of an arrow.

ம. பகழி

பாய்ந்த விடத்தைக் குத்திக் கிழித்துச் செல்லுதலின் அம்பு பகழி எனப்பட்டது.

*[பகல் – பிளத்தல். பகலி → பகழி]*

"*வைந்நுனைப் பகழி மூழ்கலிற் செவிசாய்த்து*" (முல்லைப்.73.)

"*உடுவுறும் பகழி வாங்கிக் கடுவிசை*" (குறிஞ்சிப்.170.)

"*புலவு நுனைப் பகழியுஞ் சிலையுமான*" (பெரும்.29.)

"*சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக் கொலைவல் எயினர்*" (ஐங்.361–1)

"*வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி*" (புறநா.152–1.)

"*பகழிபோல் உண்கண்ணாய்*" (கார்.5–2)

"*களிற்றுமுகந் திறந்த கவளுடைப் பகழி*" (அகநா.132–4.)

"*வடியுறு பகழிக் கொடுவி லாடவர்*" (அகநா.159–5.)

"*அடியமை பகழி யார வாங்கி*" (அகநா,161–3.)

"*அதர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழி*" (அகநா.167–8)

"*நோன்சிலைத் தொடையமை பகழித் துவன்று நிலை வடுகர்*" (அகநா. 295–15)

"*கடுங்கண் மறவர் பகழி மாய்த்தென*" (அகநா.297–6.)

"*நோன்சிலைச் செவ்வாய்ப் பகழிச் செயிர்நோக் காடவர்*" (அகநா.371–2.)

"*நொவ்வியற் பகழி பாய்த்தெனப் புண்கூர்ந்து*" (அகநா.388–11)

**பகழிக்கூத்தர்** *pakaḻi-k-kūttar,* பெ. (n.) திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ், சீவகசிந்தா மணிச் சுருக்கம் ஆகிய நூல்களை இயற்றிய வரும் 16 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவருமான புலவர்; a poet who is authered Tirucheudier pillai-t-tamil, and sivaka-sintamani-c-curukkam, 16th

திருப்புல்லாணி மாலடியான் தர்ப்பாதனன். இவர் மாலியக் குடும்பத்தில் பிறந்து சிவநெறியைத் தழுவியவர் ஆவர். சேதுபதிகளின் பழைய தலைநகரான புகலூரில் உள்ள மூத்த பிள்ளையாரின் பெயர் பகழிக் கூத்தர் என்பதாகும். இப்பெயராலேயே இப்புலவரும் அழைக்கப்பெற்றுள்ளார். சீவக சிந்தாமணிச் சுருக்கம் என்ற பெயர் கொண்ட நூலின் முகப்பில் '*செம்பி நாட்டுச் சன்னாசிக் கிராமத்துத் திருப்புல்லாணிமாலடியான் தர்ப்பாதனன் மகன் பகழிக் கூத்தன் வாக்கு*' என்ற தொடர் காணப்படுகின்றது. எனவே சன்னாசி என்பது சேதுநாட்டைச் சேர்ந்த ஊராகும்.

நூல்: '*திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ்*', சீவக சிந்தாமணிச் சுருக்கம்.

திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ்: 10 பருவங்களில் 100 செய்யுட்கள் உள்ள இந்நூல் செந்தில் முருகனைப் பிள்ளையாகப் பாடப்பெற்றது. மிகவும் சொல்லழகும்; இனிய நடையும் உடையதாகப் புலவர்களால் பாராட்டப்பெறுவது, திண்டிமம் என்னும் இசைக் கருவியைத் தம் பாப்புலமைக்கு அறிகுறியாக முழங்கிக் கொண்டு புலவர் சிலர் திருச்செந்தூர் முருகன் திருமுன்பு மங்கலப் பாப் பாடிவந்ததாகக் குறிப்பிடப் பட்டுள்ளது.

***சீவக சிந்தாமணிச் சுருக்கம்:*** இந்நூல் 300 ஆசிரிய மண்டிலப்பாக்களால் இயன்றது.)

**பகழித்திரள்** *pagaḻi-t-tiraḷ,* பெ. (n.) *பற்றாக்கை (பிங்.)* பார்க்க; see *paṟṟākkai.* binder for a sheaf of arrows.

*[பகழி + திரள்]*

**பகளமல்லிகை** *pagaḷamalligai,* பெ. (n.) பவளமல்லிகை என்பதன் கொச்சைவழக்கு; coral jasmine. (சா.அக.).

*[பவளம் → பகளம் + மல்லிகை]*

ஓ.நோ. சிவப்பு–சிகப்பு

**பகளி** *pagaḷi,* பெ. (n.) ஐம்பது வெற்றிலை கொண்ட ஒரு கட்டு; pack of betel leaves. (நூறு வெற்றிலை கொண்ட கட்டு ஒரு கவளி என்பது போல ஐம்பது வெற்றிலை கொண்ட கட்டு பகளி ஆயிற்று) இது இலங்கை வழக்கு.

*[பகல் → பகலி + பசளி = பாதி]*

**பகற்கண்** *pagaṟkaṇ,* பெ. (n.) பகலில் கண் தெரியாதிருத்தல்; day blindness as opposed to night blindness. (சா.அக.).

மாலையிற் கண் தெரியாமையாகிய நோயை மாலைக்கண் என்றாற் போல் பகலிற் கண் தெரியாமை பகற்கண் எனப்பட்டது.

**பகற்கதிர்** *pagaṟkadir,* பெ. (n.) கதிரவனின் ஒளிக்கதிர்கள்; rays of the sun. "*பவ்வம் மீ மிசைப் பகற்கதிர் பரப்பி*" (பொருந.135.)

*[பகல் + கதிர்]*

**பகற்கள்ளன்** *pagaṟ-kaḷḷaṉ.* பெ. (n.) 1. பகலிற் கொள்ளையிடுவோன்; day light thief. 2. பிறர் பொருளை ஏமாற்றிக் களவு செய்வோன்; one who takes another's property by asserting a false claim, used in reproach.

*[பகல் + கள்ளன்]*

**பகற்கறி** *pagaṟkaṟi,* பெ. (n.) பகற்காலத்தில் உண்ணக்கூடிய கறிவகை; vegetables that can be eaten during the day time as opposed to இராக்கறி, those that can be, taken during the night time. (சா.அக.).

*[பகல் + கறி]*

**பகற்காலம்.** *pagaṟ-kālam,* பெ. (n.) பகற்பொழுது (வின்.); day time. 2. வாழ்நாள்; life time. '*மனிதர்க்கு வயது நூறல்லதில்லை*'

*[பகல் + காலம்]*

**பகற்குரட்டை** *pagaṟ kuraṭṭai,* பெ. (n.) பகலில் விழித்திருக்கும்போதே குறட்டைவிடுதல்; a spasmodic snoring in the day during waking hours. (சா.அக.).

*[பகல் + குறட்டை → குரட்டை]*

**பகற்குருடு**[1] *pagaṟ-kuruḍu,* பெ. (n.) பகலிற் குருட்டுத்தன்மையுடைய கூகை (சங்.அக.); owl, as blind by day.

*[பகல் + குருடு]*

'*பட்டமரத்தில் பகற்குருடு போகிறது*' என்னுந் தொடர் பகற்பொழுதிலும் முன்னே ஒருவர் தீப்பந்தம் பிடித்துச் செல்ல, பின்னே பல்லக்கிற் செல்பவரைக் குத்தலாகக் கூறியது.

**பகற்குருடு**[2] *pagaṟ-kuruḍu,* பெ. (n.) காகம்; crow, so called from its dim vision during the day. (சா.அக.).

*(பகல் = பாதி, காக்கை ஒரு பக்கம் பார்க்கும் போது அதன் மறுபக்கக் கண் தெரியாது என்பதால் இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம்.)*

**பகற்குறி** *pagaṟ-kuṟi,* பெ. (n.) களவொழுக்கத்திற் பகற்காலத்தே தலைவனுந் தலைவியும் சந்திக்கக் குறிப்பிட்ட இடம். (நம்பியகப். 37.); place assigned by lovers for clandestine meetings during day-time. "*பல்பூங் கானல் பகற்குறி வந்துநம் மெய்கவின் சிதைய*" (நற்.235–4.). "*பல்பூங் கானல் பகற்குறி மரீஇச் செல்வல் கொண்க செறித்தனள் யாயே*" (அகநா.258–1.).

*[பகல் + குறி]*

**பகற்கொள்ளை¹** *pagaṟ-kōḷḷai,* **பெ.** (n.) பட்டப் பகலிற் கொள்ளையடிக்கை; daylight dacoity.

*[பகல் + கொள்ளை]*

**பகற்கொள்ளை²** *pagaṟkoḷḷai,* **பெ.** (n.) **1.** பகற் கொள்ளையடிப்போன்; one who commits decoity by daylight **2.** விலை, வாடகை முதலியவற்றில் மீயளவு என்று கூறும் வகையில் பெறுதல்; daylight robbery. "*இப்பாடப்பொத்தகத்தின் விலை இருநூறு உருவாய் என்றால், இது பகற்கொள்ளை யன்றோ?*"

*[பகல் + கொள்ளை]*

**பகற்கொள்ளைக்காரன்** *pagaṟ-koḷḷai-k-kāraṉ,* **பெ.** (n.), *பகல் தீவட்டிக் கொள்ளைக் காரன்* பார்க்க; see *pagal tivaṭṭi-k-koḷḷai-k-kāraṉ*

*[பகல் + கொள்ளை + காரன்]*
*'காரன்' ஆ.பா.பெயரீறு.*

**பகற்கோயில்** *pagaṟ-kōyil,* **பெ.** (n.) நீராவி மண்டபம்(சீவக.2860,உரை.); hall in the middle of a tank.

மறுவ: நீராழி 'மண்டபம்'

*[பகல் + கோயில்]*

**பகற்பசும்பால்** *pagaṟpašumbāl,* **பெ.** (n.) பகலில் சுரந்து இரவில் கறக்கும் பத்தியத்திற் குதவுகின்ற பால்; cow's milk secreted during the day time and drawn in the night; this milk is said to be useful in diet. **(சா.அக.).**

*[பகல் + பசும்பால்]*

**பகற்பண்** *pagaṟ-paṇ.* **பெ.** (n.) பகற்காலத்திற் பாடப்படும் பண்கள். **(சங்.அக.)**; melodies to be sung during day-time.

*[பகல் + பண்]*

பகலிற் பாடப்படும் **தேவாரப்பண்**கள்; அவை புறநீர்மை, காந்தாரம், **கவுசிகம்**, இந்தளம், தக்கேசி, நட்டபாடை **நட்டராகம்**; காந்தார பஞ்சமம், பஞ்சமம் **ஆகிய பத்துமாம்;** "*புறநீர்மை காந்தாரம் கௌசிகம் **இந்தளமே** புகழ்பெறு தக்கேசி நட்டராகம் **நட்டபாடை**, நறிய பழம்பஞ்சுரம், காந்தார **பஞ்சமம், சீர்** நன்மைதரு பஞ்சமத் தோடீரைந்**தும் பகற்பண்***" (இச்செய்யுள் திருவாவடுதுறை **யாதீனத்தில்** தெரிந்ததாக ஆசிரியர் குறிப்புள்ள**து.) (கு.சொ.அக.)**

**பகற்பலி** *pagaṟpali,* **பெ. (n.)** பனைமரம்; palmyra tree. **(சா.அக.).**

*[பகல் + பலி]*

பனைமரத்**தின் கருக்கு கிழிக்**கும் பல் போல் இருத்தலால் **அது பகற்பலி** எனப்பட்டது. பல் + இ = பலி. **'இ' உடைமைப் பொ**ருள் பெயரீறு.

**பகற்பாடு** *pagaṟ-pāḍu.* **பெ.** (n.) **1.** பகற்காலம் **(யாழ்.அக.)**; day time. **2.** பகலிற் **செய்யும் வேலை** (வின்.); work done in **day-time for** one's livelihood.

***[பகல் + பாடு]***

**பகற்போசனம்** ***pagaṟpōšaṉam,*** **பெ.** (n.) பக**லுணவு; midday** meals.

***[பகல் + skt Basjana]***

**பகற்போது** *pagaṟ-pōdu,* **பெ.** (n.) **1.** பகற் **காலம்; day-time; 2. பகற்**காலத்து மலரும் **பூ (சிலப்.2,14,உரை.); flowers that bloom during day-time.**

***[பகல் + போது]***

**பகற்றீவேள்—தல்** *pagaṟṟī-vēḷ-*, 11. செ.குன்றாவி. (v.t.) 1. பகலிற்பகைவரூர்களை எரித்தல்.; to burn down one's enemy's town in broad daylight *"அகப்பா வெறிந்து பகற்றீ வேட்டு"* (பதிற்றுப்.3.பதி.)

*[பகல் + தீ வேள்—,]*

**பகன்** *pagaṉ*, பெ. (n.) கதிர்க்கடவுளருள் ஒருவன்; a sun-god, one of tuvātadāšātittar, q.v., *"பகன்றாமரைக் கண் கெடக் கடந்தோன்"* (திருக்கோ.184.).

**பகன்றை** *pagaṉṟai*, பெ. (n.) 1. சீந்தில் (மலை.) பார்க்க; gulancha see šindil 2. சிவதை பார்க்க; indian jalap see šivadai. *"பகன்றை பலாசம் பல்பூம் பிண்டி"* ((குறிஞ்சிப்.88.) (பிங்.) 3. நறையால் என்னும் பூடுவகை; a plant. 4. கிலுகிலுப்பை; rattle wort. *"பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்"* (பதிற்றுப்.76,12.) 5. பெருங்கையால் என்னுங்கொடி (சி.அரும்பத); a kind of herbal creeper.

**பகன்றைக் கண்ணி** *pagaṉṟai-k-kaṇṇi*, பெ. (n.) பகன்றைப் பூ மாலை; a garland made up of the flower pagaṉṟai. *"பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்"* (மலைபடு. 459.) *"பகன்றைக் கண்ணிப் பல்லான் கோவையர்"* (ஐங்குறு.87.)

*[பகன்றை + கண்ணி]*

**பகனம்** *pagaṉam*, பெ. (n.) 1. மூட்டு நழுவல்; dislocation of joint. 2. எலும்பு முறிவு; fracture. (சா.அக.).

**பகாவின்பம்** *pagā-v-iṉbam*, பெ. (n.) வீடுபேறு; the bliss of salvation.

*[பகு + ஆ (எ.மஇ) + இன்பம்]*

**பகா** *pagā*, பெ. (n.) தூதுவளை (சங்.அக.); climbing brinjal.

*[பகு → பகா]*

**பகாரம்** *pagāram*, பெ. (n.) அழகு; beauty, splendour. *"விகாரமுறு சூரன் பகாரமுயிர் வாழ்வும் விநாசமுற"* (திருப்பு.186).

*[பகரம் → பகாரம்]*

**பகாலி** *pagāli*, பெ. (n.) சிவதுளசி; siva's basil. (சா.அக.).

**பகாப்பதம்** *pagā-p-padam*, பெ. (n.) பகுக்கத்தகாத சொல்; word, base or suffix which cannot be analysed into parts, opp.to pagu-padam. *"பகாப்பத மேழும் பகுபதமொன்பதும் எழுத்தீறாகத் தொடரு மென்ப"* (நன்.130.).

*[அணி, அறம், அகலம், தருப்பணம், உத்திரட்டாதி (பகாப்பதம்) ஈரெழுத்து முதல் ஏழெழுத்து ஈறாக வருவது.]*

*[பகா + பதம்(வட).]* pada-word.

*"பகுப்பாற் பயனற்று இடுகுறியாகி முன்னே யொன்றாய் முடிந்தியல்கின்ற பெயர்வினை யிடையுரி நான்கும் பகாப்பதம்"* (நன்.131.)

**பகாப்பொருள்** *pagā-p-poruḷ*, பெ. (n.) கடவுள். (யாழ்.அக.); god, as indivisible.

*[பகா + பொருள்]*

**பகார்** *pakār*, பெ. (n.) புள்ளிக் காரனால் ஏற்படுத்தப்படும் விளைச்சல் மதிப்பு (R.F.); value of a crop. fixed by an appraiser

*[பகர் → பகார்]*

**பகாரம்** *pagāram,* பெ. (n.) 1. அழகு; beauty, splendour "*விகாரமுறு சூரன் பகாரமுயிர் வாழ்வும் விநாசமுற*" (திருப்பு.186.) 2. பகரம் என்னும் எழுத்தைக் குறிக்கும் ஒலிவடிவம்; the pronounciation of letter 'ப' (P) "இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்" (தொல்.1–97.)

*[பகரம் → பகாரம்]*

**பகாலம்.** *pakālam,* பெ. (n.) மண்டையோடு (யாழ்.அக.); skull, especially human skll.

*[கபாலம் → பகாலம்]*

**பகாலி** *pagāli,* பெ. (n.) 1. சிவன் (யாழ்.அக.); šiva as holding a skull. 2. சிவதுளசி; siva's basil.

**பகாவின்பம்** *pagā-v-inbam,* பெ. (n.) வீடுபேற்றின்பம் (சங்.அக.); the bliss of salvation.

*[(பகு+ஆ+இன்பம்)
ஆ.எதிர்மறை இடைநிலை.]*

**பகி** *pagi,* பெ. (n.) பகலிற் பதினைந்தாம் முழுத்தம் (சங்.அக.); the 15th muluttam of the day time.

*[பகல் → பகி]*

**பகிகண்டம்** *pagikandam,* பெ. (n.) பிடரி; nape of the neck. (சா.அக.)

*[பகி + கண்டம்]*

**பகிடி** *pagiḍi* பெ. (n.) *பகடி* பார்க்க (வின்.); see *pagaḍi.*

தெ. பகிடி.

*[பகடி → பகிடி]*

'*பகிடிக்குப் பத்துக்காசு; திருப்பாட்டுக்கு ஒரு காசு*'. (பழ.)

'*பகிடியைப் பாம்பு கடித்தது போல*' (பழ.)

**பகிர்[1]–தல்** *pagir-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. பங்கிடுதல்; to divide into shares, distribute, parcel out, apportion, "*பொற்புமிக்க மாயன் பகிரு மமிர்தந்தனை*" (கந்தபு. மகாசாத்.20.) '*இந்த வேலையை நாம் மூவரும் பகிர்ந்து கொண்டால் விரைவாய் முடித்துவிடலாம்*'. '*இருப்பது ஒரு காணி, அதை எத்தனை பேருக்குப்பகிர்வது?*' 2. பிளத்தல். to break, split,

**பகிர்[2]–தல்** *pagir-,* 2. செ.கு.வி (v.i.) பிரிதல்; to separate. "*பரதனு மிளவலு மொருநொடி பகிராது*" (கம்பரா. திருவவ. 131.)

*[பகு → பகிர் –,]*

**பகிர்[3]** *pagir,* பெ. (n.) 1. பங்கு; share, section, portion. "கோசலை கரத்தினோர் பகிர் தாமுற வளித்தனன்" (கம்பரா. திருவவ.89.) 2. துண்டம்; piece. '*திங்களின் பகிர்புரை... ...எயிறு*' (திருவிளை.நாகமெய்த.15.) 3. வெடியுப்பு (யாழ்.அக.); saltpetre. 3. வெடிப்பு; crevice

*[பகு → பகிர்]* (செல்வி.75. ஆனி.பக்.531.)

**பகிர்கமி–த்தல்** *pagir-kami,* 11. செ.கு.வி. (v.i.) வெளிக்குப் போதல்; to ease oneself '*பகிர் கமிக்குங் காலத்து நாய்க்குக் கொடுக் கின்றோமென நினைந்துவிட நல்லதர்மமாமோ*' (நீலகேசி,223,உரை.)

*[பகிர் + கமி–,]*

**பகிர்ச்சி** *pagircci,* பெ. (n.) 1. பகுதி; division. 2. பகுப்பு; classififcation.

*[பகிர் → பகிர்ச்சி]*

**பகிர்த்தேசம்** *pagir-t-tēšam,* பெ. (n.) 1. ஊர்ப்புறம்; outskirts, vicinity, as of a town. 2. மலங்கழித்தற்குரிய இடம்; கழிப்பிடம்; privy.

*[பகிர்³ + தேசம்]*

**பகிர்ந்துகொள்–ளுதல்** *pagirndukoḷ-,* 15. செ.கு.வி. (v.i.) மகிழ்ச்சி துன்பம் முதலியவற்றைப் பிறருடன் பரிமாறிக் கொள்ளுதல்; share one's experience, happiness, sorrow, etc, with another. *"எழுத்தாளன் தன் நுகர்ச்சியைப் பகிர்ந்து கொள்ள எழுதுகிறான்" "உறுப்பினர்களின் வருத்தத்தைத் தானும் பகிர்ந்து கொள்வதாக அமைச்சர் கூறினார்."*

*[பகிர் → பகிர்ந்துகொள்–,]*

**பகிர்யாகம்** *pagir-yāgam* பெ. (n.) வெளிப்படப் புரியும் வழிபாடு; external worship opp to andar-yāgam.

*[பகிர் + யாகம்]*

**பகிர்விடு–தல்** *pagir-viḍu-* செ.கு.வி. (v.i.) பிளத்தல் (சங்.அக.); to break in to pieces

*[பகிர் + விடு–,]*

**பகிர்வு** *pagirvu,* பெ. (n.) பங்கீடு; sharing, distribution, as of power etc; *'அதிகாரப் பகிர்வு' 'வருவாய் சீரற்ற முறையில் பகிர்வு செய்யப்படுகிறது.'*

*[பகிர் → பகிர்வு]* (வே.க.)

**பகிரதிப்பூடு** *pagiradippūḍu,* பெ. (n.) கற்பூர வள்ளி; camphor creeper thick leaved lavender. (சா.அக.).

*[பகிரதி + பூடு] [பூண்டு → பூடு]*

**பகிறு** *pagiṟu,* பெ. (n.) செருக்கு; pride.

ஒருகா. *[பகிர் → பகிறு]*

**பகீரெனல்¹** *pagireṉal,* பெ. (n.) அச்சக்குறிப்பு; expr. signifying the state of being greatly terrifed *"இறப்பொடு பிறப்பையுள்ளே யெண்ணினனெஞ்சது பகீரெனும்"* (தாயு. சின்மயா.5.); 2. திடீரென மனக்கலக்கமுறுதற் குறிப்பு(வின்.); the state of being perturbed suddenly

*[பகீர் + எனல்]*

**பகீரெனல்²** *pagireṉal,* பெ. (n.) அச்சம், நேர்ச்சி முதலியவற்றால் மனத்தில் அச்சம் பரவுதல் அல்லது தாக்குதல்; get a fright; have a frightening feeling. "இரவில் வீட்டின் கொல்லைக் கதவு மூடப்படவில்லை என்பது நினைவுக்கு வந்ததும் பகீரென்றது."

*[பகீர் + எனல்]*

**பகீலெனல்** *pagil-eṉal,* பெ. (n.) பகீரெனல் பார்க்க; see pakireṉal. *"ஏந்துகொம்பைக்கண்டு பகீலென்று மனஞ்சோர்ந்து"* (விறலிவிடு.)

*[பகீல் + எனல்]*

**பகு¹–தல்** *pagu-,* 6. செ.கு.வி. (v.i.) பிளவு படுதல்; to be spilit, divided, *"சக்கரவாளச் சிலை பக"* (திருப்பு.841.) 2. பிரிவு படுதல்; to be at variance disunited; to separate *"பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர்"* (குறள்.187.)

*[பொகு > பகு > பகு–,]*

**பகு$^2$–தல்** *pagu-*,**4.** செ.குன்றாவி. (v.t.) பாகமாய்ப் பிரித்தல்; to divide "*பகுந்துனக்கு வைத்தகோலறைக்கு*" (திருவாலவா. 30,30.)

ம. பகுக., தெ. பகுலு

**பகு$^3$– த்தல்** *pagu-*, **11.** செ.குன்றாவி. (v.t.) **1.** பங்கிடுதல்; to distribute, apportion, allot "*பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல்*" (குறள், 322.) **2.** வகைப்படுத்துதல் (வின்); to classify **3.** வகுத்துத்தெளிவாய்க்கூறுதல்(வின்); to explain analytically 'இந்த எண்ணை மேலும் பகுக்க முடியாது' **4.** கொடுத்தல் (பிங்); to give **5.** வெட்டுதல் (பிங்); to divide, cut into piees **6.** பிடுங்குதல்; to root out, tear off "*பாதவ மொன்று பகுத்தான்*" (கம்பரா, இலங்கையெரி.55.) **7.** கோது நீக்குதல்; to remove impurities. "*பண்ணுறு சுளைகள் கையாற் பகுத்துணக் கொடுத்ததன்றே*" (சீவக. 2724.)

*[பொகு → பகு → பகுத்தல்]*

ம. பகுக்க,

தெ. பகுலுட்சு,

**பகு$^4$–தல்** *pagu-*, **4.** செ.கு.வி. (v.i.) வணிகர் எண்குணத் தொன்றாகிய பங்கிடல்; to divide. "*செழுங்கோள் வாழை யகவிலைப் பகுப்பும்*" (புறநா.168.)

**பகு$^5$** *pagu* பெ.அ (adj.) அதிகமான; many, much. "*பகுவொளிப் பவழஞ் செவ்வாய்*" (சீவக.2801.)

ஒருகா: மிகு → பகு

பகு என்னும் சொல் தென்சொல் என்பதற்குக் காரணங்கள்

**1.** வடமொழியில் பகு என்னுஞ் சொற்கு மூலமாகக் காட்டப்படும் bhaj என்பதற்கு ஆணிவேரேனும், வரலாறேனும் இல்லை.

அதோடு bhaj (to divide) என்னும் மூலத்தினின்று வேறுபட்டதாக bhanj (to break) என்றொரு மூலம் காட்டப்படுகின்றது. உண்மையில் இரண்டும் ஒன்றே. தமிழ்ப் பகுதியின் திரிந்த வடிவுகளே வடமொழியில் மூலமாகக் காட்டப்பெறுகின்றன. பகுதிக்கும் முந்தியது மூலம் அல்லது வேர்.

2. bhaj என்னும் மூலத்தின் திரிவுகளாக; bhakti, bhagavan, bhaga, bhagya முதலிய சில சொற்களே வடமொழியிற் காட்டப் பெறுகின்றன. தமிழிலோ, நாற்பதிற்கு மேற்பட்ட சொற்கள் பகு என்னும் பகுதியினின்று திரிந்துள்ளன.

3. பகுதி, பக்கம், பாகம் முதலிய பல சொற்களும் பகு என்னும் ஒரே பகுதியினின்று திரிந்திருக்கவும், அவற்றின் திரிபுகளான ப்ரக்ருதி பஷம் bhaga முதலிய வடசொற்கள் வெவ்வேறெழுத்துக்களைக் கொண்டனவாய் வெவ்வேறு மூலத்தனவாகக் காட்டப்படுகின்றன. (மு.தா.266.)

**பகுசாரம்** *paguśāram*, பெ. (n.) **1.** நறுவிலி; sebesten. **2.** அதிசாரம்; diarrhoea. (சா.அக.)

**பகுசொல்** *paguśol*, பெ. (n.) முதனிலை, ஈறு முதலிய உறுப்புக்களாகப் பகுக்கப்படும் சொல்; word divisible with root and suffix.

*[பகு + சொல்]* செல்வி.திச.79.பக்.180.

*[பகுத்து + அறிவு]*

**பகுத்தறி–தல்** *paguttaṟi-*, **2.** செ.குன்றாவி. (v.t.) கரணிய, காரியங்களை மனத்தில் கொண்டு செய்திகளை வகைப்படுத்தி உணர்தல்; to distinguish, discriminate,

reason analytically. '*உயிரினங்களில் மனிதனுக்கு மட்டுமே பகுத்தறியும் ஆற்றல் உண்டு*'

*[பகுத்து + அறி–,]*

'*பகுத்து அறியாமல் துணியாதே; படபடப்பாகச் செய்யாதே*' (பழ.)

**பகுத்தறிவு** *paguttaṟivu,* பெ. (n.) 1. பகுத் தறியும் திறன்; reasoning; power of discrimination. '*மனிதனின் பகுத்தறிவு, இயற்கையை அவன் வெற்றி கொள்ள உதவியது*' 2. நம்பிக்கையின் அடிப்படையில் அல்லாமல் எதையும் சிந்தித்து ஏற்றுக் கொள்வதை அடிப்படையாகக் கொண்ட முறை; rationality. "*பகுத்தறிவு இயக்கம் தந்தை பெரியாரால் தோற்றுவிக்கப்பெற்றது*" (உ.வ.)

**பகுத்தன்** *paguttaṉ* பெ. (n.) செம்படவச் சாதியாரின் பட்டப்பெயர் (E.T.Vi, 352.); caste title of cembaḍavar.

**பகுத்துண்(ணு)–தல்** *paguttuṇ-* 13. செ.குன்றாவி. (v.t.) 1. ஏழைகள் முதலியோர்க்குப் பங்கிட்டுக் கொடுத்து எஞ்சியதை உண்ணுதல்; to eat food after feeding the poor, etc. "*பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல்*" (குறள், 322.)

*[பகு → பகுத்து + உண்(ணு)–,]*

**பகுத்துப்பார்–த்தல்** *paguttu-p-pār-,* 11. செ.குன்றாவி. (v.t.) ஒரு பொருளைச் செவ்வை யாகச் சோதித்துப் பார்த்தல் (வின்.); to survey in detail; to scrutinise

*[பகு → பகுத்து + பார்–,]*

**பகுத்துவம்** *paguttuvam,* பெ. (n.) (இ.வ.) 1. மிகுதி; abundance, multitude; 2. இசையில் மிக்குவரும் சுரம்; the note that occurs most in a musical piece.

*[பகு → பகுத்துவம்]*

**பகுதம்** *pagudam,* பெ. (n.) நிகழ்ந்து கொண்டிருப்பது; that which is under consideration; subject on hand. "*பகுத மன்றியே மற்றுள தொழில்களிற் பற்றார்*" (ஞானவா. திதி.2.)

பிரா. பகுதம்

*[பகு → பகுதம்]*

**பகுதானிய** *pagutāṉiya* பெ. (n.) ஆண்டு வட்டம் அறுபதனுள் பன்னிரண்டாவது; the 12th year of the jupiter cycle of sixty years.

**பகுதி[1]** *pagudi,* பெ. (n.) 1. பகுப்பு; portion, part, allotment, division. "*அண்டப் பகுதியி னுண்டைப் பிறக்கம்*" (திருவாச.3,1.). 2. வேறுபாடு; difference. "*மயங்கிய தகுதியல்லது பகுதி யின்றெனின்*" (ஞானா. 35,5.). 3. திறை; tribute. "*இது பகுதி கொள்கெனா*" (அரிச்.பு. நகர்நீ.111.). 4. வருவாய் (சூடா.); income. 5. வரி; revenue. 6. இதழின் வரிசை எண்; number, as of a periodical.

**தெ.பகிதி க.பகதி. ம.பகுதி.**

*[பகு → பகுதி.]*

பகுதி (திறை).

பகு → பகுதி = பிரிவு, கூறு, கண்டுமுதலில் ஆறிலொரு கூறான அரசிறை, பகுசொல்லுறுப்பாறனுள் ஒன்றான முதனிலை.

பகுதி விகுதி என்னும் தென்சொற்களின்

பொருளும், ப்ரக்ருதி, விக்ருதி என்னும் வடசொற்களின் பொருளும் வெவ்வேறாம்.

பகுதி = கூறு

விகுதி = ஈறு

விகுதல் = முடிதல்

ப்ரகதி = இயற்கை (முன்செய்யப்பட்டது) (இயல்பு)

விக்ருதி = விகாரம்.

பகுதியும் (திரிபை) (விகாரத்தை) அடையக் கூடுமாதலானும், சந்திசாரியை, இடைநிலை என்பவும் திரிபை உண்டு பண்ணுதலாலும் விகுதி என்னும் உறுப்பிற்குத் திரிபு என்னும் பொருள் முதனிலை, இறுதிநிலை யென்று பெயர் பெறுதலானும், அவற்றிற்கு கூறு ஈறு என்பனவே சொற்பொருள் என்பது துணியப்படும்.

களத்தில் முதலாவது அரசனுக்குச் செலுத்தப்படும் பகுதி சிறப்பாகப் பகுதி என்றே பெயர் பெற்றதுபோல், பகு சொல்லுறுப்புக்களுள் முதன்மையானதும் பகுதியென்றே பெயர் பெற்றதென்க. ஆகவே பகுதி, விகுதியென்பன ப்ரக்ருதி, விக்ருதி என்பனவற்றின் திரிபல்லனவென்று தெளிந்து கொள்க. (மு.தா.பக்.263)

பகுதி விகுதியென்னும் தென்சொற்களின்றே ப்ரக்ருதி, விக்குதி என்னும் வடசொற்களைத் திரித்துக் கொண்டு அவற்றிற்குப் பொருந்தப் புளுகலாக வேறுபொருள் கூறுகின்றனர் வடவர் என்க.

பகம் பகு → பகம் = பகுதி, ஆறு என்னும் தொகை.

வேளாளன் விளைவு, அரசன் தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்ற அறுவர்க்குப் பகிர்ந்தளிக்கப்பட்டதாலும், பகுசொல் பகுதி விகுதி சந்தி சாரியை இடைநிலை வேறுபடு (விகாரம்) என்னும் ஆறுறுப்புக்களாய்ப் பகுக்கப்பட்டதனாலுமே, பகம் என்னும் சொற்கு ஆறு என்னும் தொகைப் பொருள் தோன்றிற்று.

**பகுதி**[2] *pagudi,* பெ. (n.) 1. முதன்மைப் பொருள்; primordial matter. "*பகுதியென்றுள தியாதினும் பழையது*" (கம்பரா. மீட்சி.100.) 2. சொல்லின் முதனிலை; base of a word. "தத்தம் பகாப்பதங்களே பகுதியாகும்" (நன்.134.) "*பகுதி விகுதியிடைநிலை சாரியை*" (நன்.133.). 3. தன்மை; nature,character. "*மடியா துயர்ந்த நெடியோர் பகுதியும்*" (ஞானா.39,3.). 4. படை(திவா.); forces, army. "*பின் செலும் பகுதி*" (இரகு.திக்குவி.55.). 5. அமைச்சர்; minister. 6. கூட்டம் (அக.நி.); crowd, gathering. 7. அடியொன்றுக்கு ஒன்பதெழுத்து வருஞ்சந்தம் (வீரசோ.யாப். 33.உரை.); (pros.) a rhythmic metre of nine letters to a line. 8. பகை, நொதுமல், நண்பு எனும் மக்கட் பிரிவு; section in the human being. "தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற் பாற்பட் டொழுகப் பெறின்" (குறள்.111.)

"கருவிகளாறும் முறையே தன்னியல்பில் நிற்றலின் பகுதியாம்" (சிவஞா. நன்.133.) என்ற சிவஞான முனிவர் விளக்கமும் நோக்கத்தக்கது.

*[பகு → பகுதி]*

**பகுதி**[3] *pagudi,* பெ. (n.) 1. வருவாய் வட்டத்தின் உட்பிரிவு (நாஞ்.); administrative sub-division of a taluq. 2. உரிமைப்பட்டது; that which belongs to a person. "*தம்முடைய பகுதியல்லாதனவற்றை*" (குறள்,376,மணக்.)

*[பகு → பகுதி]*

**பகுதி**[4] *pagudi,* பெ. (n.) 1. ஒரு முழுமை, பரப்பு, தொகுப்பு முதலியவற்றின் உறுப்பாக உள்ளது, பிரிவு; part; portion. "தமிழ்நாட்டின் பல பகுதிகளில் நேற்று நல்ல மழை பெய்தது."

"கட்டுரையின் முதல் பகுதியை எழுதி முடித்துவிட்டேன்" "வீட்டின் ஒரு பகுதியைக்கட்டி முடித்துவிட்டேன்" **2.** ஒன்றை ஒட்டிய பக்கம்; இடம்; adjacent, area. "வீட்டின் பின்பகுதியில் தோட்டம்" "இந்த ஊரைச் சுற்றியுள்ள பகுதிகளில் பழுப்பு நிலக்கரி இருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டது" **3.** கீழ்வாய் இலக்க எண்ணில் கோட்டுக்குக் கீழ் உள்ள எண்; deno minator, "2/3 என்பதில் 3என்பது பகுதி, 2 என்பது தொகுதி".

*[பகு → பகுதி]*

**பகுதிக்கால்** *pagudi-k-kāl,* பெ.(n.) நு,சு,பு,யு,வு, என்ற வடிவெழுத்துக்களில் உகரவொலியின் குறியாக வரையப்படும் கீழ்க்கோடு (வின்.); the vertical downward stroke in the vowel consonants நு,சு,பு,யு,வு, being the symbol of the vowel element 'உ' in them.

*[பகுதி + கால்]*

**பகுதிக்காற்பிறை** *pagudi-k-kāṟ-piṟai,* பெ. (n.). நூ,சூ,பூ,யூ,வூ, என்ற வடிவெழுத் துக்களில் ஊகாரவொலியைக் குறிக்க வரையப்படும் கீழ்க்கோடும் பிறைபோன்ற குறியும்; the vertical downward stroke with its loop at the end in the vowel-consonants நூ,சூ,பூ,யூ,வூ, being the symbol of the vowel element '*ஊ*' in them.

*[பகுதிக் கால் + பிறை]*

**பகுதிக்கிளவி** *pagudi-k-kiḷavi,* பெ. (n.) தகுதி பற்றியும் வழக்கு பற்றியும் வழங்கும் சொற்கள்; expressions used euphe- mistically-or sanctioned by usage. "*தகுதியும் வழக்கும் தழீஇயினவொழுகும் பகுதிக் கிளவி வரைநிலையிலவே*" (தொல்.சொல்.17. சேனா.)

*[பகுதி + கிளவி]*

**பகுதிகட்டு-தல்** *pagudikaṭṭu-,* **5.** செ.கு.வி (v.i.) **1.** அரசர்க்கு இறைகொடுத்தல்; to pay the taxes. to pay tribute, as a petty king to his suzerin. **2.** பங்கிடுதல்; to share. (த.சொ.அக.)

*[பகுதி + கட்டு–,]*

**பகுதிப்பொருள்விகுதி** *pagudi-p-poruḷ-vigudi,* பெ.(n.) தனக்கு ஒரு பொருளின்றிப் பகுதியின் பொருளிலேயே வரும் விகுதி (சீவக. 247, உரை); (gram) expletive suffix; suffix added on to a word without changing its sense as *kal* in *avaigaḷ.*

*[பகுதி + பொருள் + விகுதி.] விகுதி = Skt.*

**பகுதியெண்** *pagudi-y-eṇ,* பெ. (n.) கீழ்வாய் இலக்க வெண்ணிற் கீழிருக்கும் எண் (இக்.வ.); denominator of a fraction.

*[பகுதி + எண்]*

**பகுப்பு** *paguppu,* பெ. (n.) பிரிவு; division, classification "*பகுப்பாற் பயனற்று*" (நன்.131.)

*[பகு → பகுப்பு]* (வ.மொ.வ.25.)

பகுப்பு = பிரிப்பு.

**பகுபதம்** *pagu-padam,* பெ. (n.) முதனிலை, ஈறு முதலியனவாகப் பிரிக்கக்கூடிய மொழி (நன்.128); (gram.) divisible word; word which can be analysed into root, suffix, etc.etc. "*பகாப்பத மேழும் பகுபத மொன்பதும் எழுத்தீ றாகத் தொடரு மென்ப*" (நன்.130) "பொருளிடங் காலஞ் சினைகுணந் தொழிலின் வருபெயர் பொழுதுகொள் வினைபகுபதமே" (நன்.132.)

*[பகு + பதம்]*

*[வட.* pada-*சொல்.]*

**பகுபதவுறுப்பு** *pagu-pada-v-uṟuppu,* பெ. (n.) முதனிலை, ஈறு, இடைநிலை, சாரியை, சந்தி, திரிபு (வேறுபாடு) என்ற சொல்லுறுப்புக்கள் (நன்.133. உரை.); (gram.) constituent parts of a divisible word, viz., pagudi, vigudi,iḍainilai, šāriyai, šandi, vigāram.

*[பகு பதம் + உறுப்பு]*

*பதம்* = Skt.

**பகுபுத்தி பாதி** *pagu-putti-pādi,* பெ. (n.) கல்லுருவி; blistering plant. (கல்லையுங் கரைக்குங்குணமுள்ள ஒருவகைப்பூடு என்று பதார்த்தகுண சிந்தாமணி இதனைக் குறிப்பிடும்.)

**பகும்புல்** *pakum-pul,* பெ. (n.) அக்கமணி; rudrākṣa bead.

**பகுவாதா** *paguvādā,* பெ. (n.) ஆலமரம்; banyan tree.

**பகுவாய்** *pagu-vāy,* பெ. (n.) 1. அகன்றவாய்; wide open mouth. "*பகுவாய் வன்பேய் கொங்கை சுவைத்து*" (திவ்.பெரியதி. 6,5,6.). 2. தாழி (சங்.அக.); large-mouthed vessel; 3. பிழா (திவா.); a vessel for baling water. 4. பிளந்தவாய்; spilited mouth, "*பல்பொறிப் பகுவாய்ப்படம் புடைபரப்பி*" (திவிளை.நாக.15.) (த.சொ.அக.)

*[பகு + வாய்]*

**பகுவாய்** *paguvāy,* பெ. (n.) பெரியவாய்; wide openmouth.

"பகுவாய் ஞமலியொடு பைம்புதலெருக்கி" (பெரும்பாண்.112.)

"வாளைப் பகுவாய் கடுப்ப" (நெடுநல்.143.)

"கிம்புரிப் பகுவாய் அம்பணம் நிறைய" (நெடுநல்.96.)

"பகுவாய்த் தடவிற் செந்நெருப்பார" (நெடுநல்.66.)

"பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையும்" (ஐங்குறு.299–2)

"பைங்காற் கொக்கின் பகுவாய்ப் பிள்ளை" (புறநா.342–7.)

"கிம்புரிப் பகுவாய் கிளர்முத் தொழுக்கத்து" (சிலப்.5–150)

"பல்லுயிர் பருகும் பகுவாய்க் கூற்றம்" (சிலப்.5–219)

"வாளைப் பகுவாய் வணக்குறு மோதிரம்" (சிலப்.6–95)

"பலர்புகத் திறந்த பகுவாய் வாயில்" (மணிமே.7–92.)

**பகுவாய்ப்பறை** *paguvāy-p-paṟai,* பெ. (n.) பறைவகை (பிங்.); a kind of drum.

*[பகுவாய் + பறை]*

**பகுவாரகம்** *paguvāragam,* பெ. (n.) நறுவிலி; sebestin plum. (சா.அக.).

**பகுவாரம்** *paguvāram,* பெ. (n.) நறுவிலி; sebestin fruit. (சா.அக.).

மறுவ: பகுவாரகம்.

**பகுவொளி** *pagu-v-oḷi,* பெ. (n.) பேரொளி; dazzling brightness, splendour. "*பகுவொளிப் பவழுஞ் செவ்வாய்*" (சீவக.2801.)

*[பகு + ஒளி]*

**பகுளம்** *paguḷam,* பெ. (n.) மிகுதி; excessiveness, abundance. (சா.அக.).

**பகுளாங்கிசம்** *pagulāṅgišam,* பெ. (n.) ஒதியமரம்; indian ash tree. (சா.அக.).

**பகேசிகை** *pagēšigai,* பெ. (n.) காயாமரம். (நாமதீப. 372.); barren tree. (tree not baring any fruit.)

**பகை**[1] *pagai,* பெ. (n.) **1.** உடன்பாடின்மை; hatred, enmity. "*பகையென்னும் பண்பில தனை*" (குறள்.871.) "*எக்காலம் பகைமுடித்துத் திரௌபதியும் குழல் முடிக்கவிருக்கின்றாளே*" (பாரத.கிருட்டிண. 22.) 2. பகைஞன்; enemy,opponent. "*உறுபகை யூக்க மழிப்ப தரண்*" (குறள்,744.). "*பகை முன்னர் வாழ்க்கை செயலும்*" (திரிகடு.4.) 3. மாறு; disagreement, counteraction contrast, contrariety. "*நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையார்*" (ஐங்குறு.187.) 4. பகைத்தானம் பார்க்க; (astrol.) see pakai-t-tāṉam. 5. மானக்கேடு; injury; discourtesy. "*எவன்கொல்யான் மாலைக்குச் செய்த பகை*" (குறள்.1225.) 6. பகைநரம்பு (சிலப்.8,33.) பார்க்க; see pagai narumbu. 7. தன்னுயர்ச்சிக்குக் கேடுவிளைக்கும் காமம், காழ்ப்புணர்வு முதலிய உட்பகை; mental defects, as internal enemies preventing the advancement of the soul. 8. பகையாக்கல் (பு.வெ.9,37, உரை.) பார்க்க; pagai-y-ākkal.

*[பகு → பகை]* (வே.க.) (செல்வி.75. ஆனி.பக்.532.)

**பகை**[2]**—த்தல்** *pagai-,* **11.** செ.குன்றாவி. (v.t.) **1.** மாறுபாடுகொள்ளுதல்; to hate, oppose "*பகைத்திட்டார் புரங்கண் மூன்றும்*" (தேவா. 642,1.) **2.** அடித்தல் (அக.நி.); to beat, strole. **3.** சார்தல். (அக.நி.); to depend.

**க.** பகெ.

*[பகு → பகை → பகைத்தல். ]*

'பகைக்கச் செய்யேல்' (பழ.)

**பகை**[3] *pagai,* பெ. (n.) உடல்; body. (சா.அக.)

*[பகு → பகை ]*

**பகைக்கட்டி** *pagai-k-katti,* பெ. (n.) **1.** உடலிலுண்டாகும் கழலை முதலிய புண்; malignant growth. **2.** படரும் புண்; spreading ulcer.

*[பகை + கட்டி ]*

**பகைச்சரக்கு** *pagai-c-carakku,* பெ. (n.) மாற்றுச் சரக்கு(இ.வ.); antidote

*[பகை + சரக்கு ]*

**பகைசாதி—த்தல்** *pagai-šādi-,* **18.** செ.கு.வி. (v.i.) வன்மங் கொள்ளுதல்; to cherish hatred.

*[பகை + சாதி—, ] சாதி* =Skt

*[சாதி—சாதனை என்னும் வட சொல்லின் திரிபு வினையாக வந்தது. ]*

**பகைஞன்** *pagaiñaṉ,* பெ. (n.) பகைவன்; enemy "*தங்குலப் பகைஞர் தம்பால்*" (கம்பரா.சடாயுவுயிர்,86.)

*[பகை → பகைஞன் ]*

**பகைத்தானம்** *pagai-t-tāṉam,* பெ. (n.) கோள்நிலையின் பகை வீடு; (astro.) house belonging to a planet inimical to another.

*[பகை+தானம். ]*

*தானம் ஸ்தானம் என்ற வடசொல்லின் திரிபு.*

Skt. *ஸ்தானம் → தானம்*

**பகைத்தி** *pagaitti,* பெ. (n.) பகைப்பெண்; a woman who is one's enemy. "*பகைத்தியா லொருந்தி வண்ணமே*" (சீவக.1488.)

*[பகைவன் → பகைத்தி.*
*ஒநோ. புலையன் → புலைத்தி]*

**பகைத்தொடை** *pagai-t-todai* பெ. (n.) 1. முரண்டொடை பார்க்க; see murantodai.(gram.) antithesis 2. மாறுபட்டவற்றின் சேர்க்கை (ஈடு); a string of articles of different kinds, as of beads.

*[பகை+தொடை ]*

**பகைதணிவினை** *pagai-tani-vinai* பெ. (n.) தூதுசெல்வினை. (நம்பியகப்.75, உரை); the act of going on a peace mission between enemy-kings, embassy.

*[பகை+தணிவினை ]*

("தூதுவர் போலச் சந்து செய்வித்தற்குப் பிரியும் பிரிவு" (இறை.35.) என்ற குறிப்பும் அறிக.)

**பகைநரம்பு** *pagai-narambu,* பெ. (n.) யாழில் நின்ற நரம்புக்கு மூன்று ஆறாவதாயுள்ள பகை நரம்புகள்; the third and the sixth strings from the leading string of a lute in a tune, as discordant. "*வெம்பகை நரம்பி னென்கைச் செலுத்தியது*" (மணிமே. 4,70.) ("*நரம்பிசையாற் பிறந்த பொல்லமை; அவை அதிர்வு, ஆர்ப்பு, கூடம், செம்பகையென நான்கு*" (சிலப். வேனிற்.27,29.)

*[பகை + நரம்பு ]*

*[*'ஆறும் மூன்றும், கூடமெனினும் பகையெனினும் ஒக்கும்' (அடி.சிலம்பு.8:33)*]* என்ற குறிப்பும் நோக்குக.

**பகைநாள்** *pagai-nal,* பெ. (n.) 1. ஒருவர் பிறந்த விண்மீனுக்கு முந்திய விண்மீன் (யாழ்.அக.); the day preceding one's birthday; 2. செய்யுட் பொருத்தத்தில் பொருத்தமற்ற நாள் (சங்.அக.); (poet.) inauspicious day according to ceyyut-poruttam. "*சொல்லியநாண் மூவொன்பதாகத் துணிந்தொன்று–புல்லிய மூன்றைந் தேழ் பொருந்தாவாம்*" (வெண்பாப்)

*[பகை + நாள்]*

*இவ்வாறன்றி, "ஆதிரை, பரணிஆரலாயிலிய மும்பூரங் கேட்டைதீதுறு விசாகஞ் சோதி சித்திரைமகமீராறும் நற்காரியத்திற்காகா"* எனத் தமிழ் மொழி அகராதிகூறுகிறது.

**பகைப்படல்** *pagaippadal,* பெ. (n.) பகையாதல்; to become inimical.

*[பகை + படல் ]*

**பகைப்படை** *pagai-p-padai* பெ. (n.) அறுவகைப் படையுள் பகைவர் படையிலிருந்து விலக்குண்டு அடைந்தோராலேனும் அப்படையினின்றும் வேறுபடுத்து வசமாக்கிக் கொள்ளப்பட்டோராலேனும் அமைந்த படை (குறள்,762,உரை) (சுக்கிர நீதி,303.); army comprising of men who have been dismissed or enticed away from the forces of one's enemy, one of aruvagai-p-padai, q.v.

*[பகை + படை]*

**பகைப்புலம்** *pagai-p-pulam,* பெ. (n.) 1. எதிரியின் இடம்; enemy's country or position. "*பகைப்புலம் புக்குப் பாசறை யிருந்த*" (சிலப்.26,180.) 2. போர்க்களம்; battle-field '*இரண்டு பக்கத்தானும் படைவந்த பகைப்புலத்தை யொக்க*' (மதுரைக்.402,உரை.)

*[பகை + புலம் ]*

**பகைமுன்னெதிரூன்றல்** *pagaimuṉṉedhirūṉṟal.* 16. செ.கு.வி. (v.i.). எண்வகை வெற்றியின் ஒன்றாகிய பகைவர்க்கு முன்னெதிர்த்தல்; to fight facing each other.

*[பகைமுன் + எதிரூன்றல் ]*

*[இஃது எண்வகை வெற்றியினொன்று; இதற்குக் காஞ்சிவேய்தலுண்டு. (சூடா.12:92)]* வேய்தல் = சூடுதல்.

**பகைமுனை** *pagai-muṉai,* பெ. (n.) போர்க்களம்; battle field "*இருதலை வந்த பகைமுனை கடுப்ப*" (மதுரைக்.402.)

*[பகை + முனை]*

**பகைமேற்செல்லல்** *pagai-mēr-cellal,* பெ. (n.) எண்வகை வெற்றியின் ஒன்றாகியமாற்றாரைப் பொரப்போதல்; to go for war with enemies.

**பகைமை** *pagaimai,* பெ. (n.) எதிர்ப்பு; hatred, enmity antagonism "*பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்*" (குறள்,709.) 'கருத்து வேறுபாடு பகைமையை ஏற்படுத்தி விடுகிறது' (உ.வ.)

*[பகை + மை. (மை—பண்புப் பெயரீறு)]*

**பகையகம்** *pagai-y-agam,* பெ. (n.) 1. ***பகைப்புலம்*** *(புறநா.13, உரை)*; பார்க்க see *pagai-p-pulam.*

*[பகை + அகம்]*

**பகையாக்கல்** *pagai-y-ākkal,* பெ. (n.) வேற்றரசருடன் பகை கொள்ளுகை (குறள்,485,உரை.); making enemies of neighbouring kings.

*[பகை + ஆக்கல்]*

**பகையாளி,** *pagai-y-āḷi,* பெ. (n), *பகைவன்* பார்க்க. "*மறுநாளெதிர்வரிற் பகையாளியாகும்*" (திருவேங். சத. 69.)

*பகை + ஆள் + இ— உடைமைப் பொருள் ஈறு*

*'பகையாளி குடியை உறவாடிக் கெடு' (பழ.)*

**பகைவயிற்பிரிவு** *pagaivayiṟ-p-pirivu,* பெ. (n). மாற்று வேந்தரொடு போர் கருதிப் பிரிதல் (இளம். தொல். பொருள். 27); the act of going on a war between enemy-kings. (போரைக் குறித்துப் பிரிதலும் அரசர்க்கு உரித்தென்று கொள்க.)

இதனுள் அரசன் தலைமகனாயுழிப் பகைதணிவினைப் பிரிவு எனவும் அவனொடு சிவணிய ஏனோர் தலைவராயுழி வேந்தற்குற்றுழிப் பிரிவு எனவும் இதனை இருவகையாகக் கொள்க" (இளம். தொல். பொருள். 30.)

*[ பகை + வயின் + பிரிவு ]*

**பகைவருக்கம்** *pagai-varukkam,* பெ. (n) மனக்குற்றங்கள் காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என புலம்பனின் உட்பகை களாயுள்ள ஆறு குற்றங்கள் (குறள், அதி.44,); mental defects, internal foes, numbering six, viz, kāmam, veguḷi, kadumpaṟṟuḷḷam, māṉam uvagai, madam.

*[பகை + வருக்கம் ]*

*வருக்கம்* = Skt

**பகைவன்** *pagaivaṉ,* பெ. (n) 1. எதிரி; foe, enemy. "*பகைவர் பணிவிடநோக்கி*" (நாலடி, 241,) "பகைவனுக்கு அருள்வாய் நன்னெஞ்சே" (பாரதி.) 2. போரில் எதிர்ப்படையில் உள்ளவன்; enemy in a war. 'பகைவர் நாட்டு ஒற்றன்'. (உ.வ.) 'பகைவர் உறவு புகை எழு நெருப்பு' (பழ.)

**பங்கணி** *pangani* பெ. (n) *பங்கம்பாளை, 1. (மலை)* பார்க்க; see *pangampāḷai.*

**மறுவ.** ஆடுதின்னாப்பாளை.

*[பங்கு + அணி]*

**பங்கதாசி** *pangadāśi,* பெ. (n). கவிழ்தும்பை; stooping leucas. *(சா.அக.)*

**மறுவ.** பங்கதாவிகம்

**பங்கப்படு-தல்** *panga-p-padu-,* **20.** செ.கு.வி. (v.i.) சிறுமையடைதல்; to fall into disgrace; to be degraded. '*பங்கப்படா துய்யப்போமின்*' (திவ்பெரியாழ். 5, 2, 4);

*[பங்கம் + படு-,]*

**பங்கப்பாடு** *panga-p-pādu-,* பெ. (n) **1.** குறையுறல்; deformity. **2.** இழிவுறல்; multilation. **3.** பழுதுறல்; becoming defective.

*[பங்கம் + பாடு]*

**பங்கம்**[1] *pangam,* பெ. (n.) **1.** தோல்வி; defeat, discomfiture "*செய்ய களத்து நங்குலத்துக் கொவ்வாப் பங்கம் வந்துற்றதன்றி*" (கம்பரா. கும்பக.15) **2.** குற்றம்; defect. "*பங்கமில்லார் பயில்புகாரிற் பல்லவனீச் சரமே*" (தேவா. 46,9) **3.** அழகன்மை; distortion, contortion of the limbs, deformity "*பிலவகபங்க வாண்முகம்*" (திருப்பு. 18) **4.** மானக்கேடு; disgrace, detriment to one's reputation "*பங்கக் கவிதை பரமன் சொல*" (திருவாலவா. 16, 22). **5.** வெட்கம் (நாஞ்.); indecency, shame. **6.** கேடு; vialation, desecration, profanation; injury, ruin "*அற்பங்க முறவரு மருணன் செம்மலை*" (கம்பரா. சடாயு.8) **7.** இடர் (பிங்.) trouble, obstacle. **8.** துண்டு (வின்.); piece **9.** பங்கு; portion "*பங்கஞ் செய்த மடவாளொடு*" (தேவா. 855, 5.) **10.** பிரிவு; division "*பங்கம்படவிரண்டு கால் பரப்பி*" (திருவாலவா. 16,22.) கீழ்க் குறிப்பு). **11.** நல்லாடை (சிலப். 14, 108, உரை.) (திவா.); superior garment of ancient times. **12.** சிறுதுகில் (பிங்.); a small piece of cloth. **13.** பங்கதாளம் பார்க்க; see pangatāḷam. "*அங்க முபாங்க மாகிடுநேர் பங்கமுடன்*". (பரத. தாள. 4.) **14.** குளம் (சூடா.); *tank.* **15.** அலை (வின்.); wave.

*[பங்கு → பங்கம்]*

பங்கு → பங்கம் என்பது கூறுபடுதல், மூளியாதல் எனப்பொருள்பட்டு, வழிப்பொருள்களும் இணைந்துள்ளன. 'பங்கம்' வடமொழியில் வழங்கினும் மானியர் வில்லியம்சு அகரமுதலி அதற்கு வேர் காட்டவில்லை. கிழி, கிழிவு, கூறை, துண்டு, துணி என்பன போலப்பங்கு என்பதும் ஆடையைக் குறித்தது; பங்கம் நல்லாடையுமாயிற்று.

**பங்கம்**[2] *pangam,* பெ. (n.), முடம் (அக. நி.); lameness.

*[பங்கு → பங்கம்]*

**பங்கம்**[3] *pangam,* பெ.(n.), பந்தயம் (யாழ்ப்.); wager.

*[பங்கு → பங்கம்]*

போட்டி விளையாட்டில் ஈடுபடுவோர் தமது பங்காக நடுவரிடம் கொடுத்து வைக்கும் பணயத்தொகை பங்கம் எனப்பட்டுப் பந்தயத்தைக் குறித்தது.

**பங்கம்பாலை** *pangam-pālai,* பெ.(n.), *பங்கம்பாளை, 1* பார்க்க; see *pangam-paḷai.1.*

*[பங்கம் + பாலை]*

**பங்கம்பாளை** *pangam-pāḷai*, பெ. (n.), 1. ஆடுதின்னாப்பாளை (மலை.); worm-killer. 2. அரிவாள்மணைப் பூண்டு; sickle-leaf. 3. வட்டத் திருப்பி; wound plant. 4. பொன் முசுட்டை; a kind of medicinal herb.

*[பங்கம் + பாளை]*

**பங்கமழி-தல்.** *pangam-aḷi-* 1. செ.கு.வி. (v.i). மானமிழத்தல்; to fall into disgrace; to lose honour or credit. *'ஆயிரங் குதிரையை அறவெட்டின போராளி இப்போது பறைச்சேரி நாயோடே பங்கமழிகிறான்'* (பழ.)

*[பங்கம் + அழி-தல்]*

பங்கமழிதல் ஆடை குலைதல் என்னும் பொருளில் மானமிழத்தலைக் குறித்தது.

**பங்கரம்** *pangaram*, பெ. (n.), அதிவிடையம்; Indian atees. (சா.அக.)

**பங்களப்படை** *pangaḷa-p-paḍai*, பெ.(n.), பதர் போன்ற கூட்டுப்படை; a newly enlisted army, useless as chaff. "பங்களப் படை கொண்டு தனிவீரஞ் செய்வாரை" (ஈடு, 6, 6, 1).

பங்கு → பங்களம் = குறைபாடுடையது; பயனற்றது.

*[பங்களம் + படை]*

**பங்களிப்பு** *pangaḷippu*, பெ. (n.), ஒன்றிற்குத் தன் பங்காகத் தரப்படுவது; contribution. "தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குத் தன் பங்களிப்பு என்ன என்பதை ஒவ்வொரு எழுத்தாளனும் எண்ணிப் பார்க்க வேண்டும்."

*[பங்கு + அளிப்பு]*

**பங்கறை** *pangaṟai*, பெ.(n.), 1. அழகின்மை; ugliness, deformity. 2. அழகில்லாதவ-ன்-ள் (கொ.வ.); an ugly person.

*[பங்கு + அறு + ஐ]* உறுப்புக் குறையை உறுப்பறை என்பது போல் மூளிபட்ட நிலை பங்கறை எனப்பட்டது.

**பங்கன்**[1] *pangaṉ*, பெ. (n.), பாகங் கொண்டவன்; shares; one who has another by his side. "மலைமங்கை தன் பங்கனை" (திவ். பெரியதி. 7, 10, 3.) "வேயுறுதோளி பங்கன் விடமுண்டகண்டன்" – தேவா.

*[பங்கு → பங்கன்]* வே.க.

**பங்கன்**[2] *pangaṉ*, பெ. (n.), இவறன் (இ.வ.); miser.

*[பங்கு → பங்கன் = சிறுமையுடையோன்; கஞ்சன்.]*

**பங்கனி** *pangaṉi*, பெ. (n.), பங்கம்பாளை; worm - killer. (சா.அக.)

மறுவ. ஆடுதின்னாப்பாளை.

**பங்காதாயம்** *pangādāyam*, பெ. (n.), கூட்டு வணிகத்தில் ஒருவர் செய்துள்ள முதலீட்டிற்கு உரிய ஊதியம்; dividend.

*[பங்கு + ஆதாயம்]*

**பங்காரம்**[2] *pangāram*, பெ. (n.) வரம்பு (யாழ். அக); limit, boundry.

*[பங்கு + ஆர் → ஆரம்]*

**பங்காலி** *pangāli*, பெ. (n) வௌவால்; bat.

**பங்காளன்** *pangāḷaṉ*, பெ. (n) பங்காளி பார்க்க; see pangāḷi.

*[பங்கு + ஆளன்]*

**பங்காளி[1]** *paṅgāḷi,* பெ. (n) 1. உடன் கூட்டாயிருப்பவன்; shareholder, partner, co-parcener. 2. தாய் வழி உறவின் முறையர்; agnate, kinsman.

*[பங்கு + ஆளி] [பங்கு → பங்காளி]*

'பங்காளியையும் பனங்காயையும் பதம்பார்த்து வெட்ட வேண்டும்' (பழ.)

'பங்காளி குடிகெடுக்க, வெங்காயம் குழிபோடச் சொன்னது போல' (பழ)

'பங்காளி வீடு வேகிறது; சுங்கான் கொண்டு தண்ணீர்விடு' (பழ.)

**பங்காளி[2]** *paṅgāḷi,* பெ. (n) ஊரார் நில உரிமை களை வகுத்தெழுதும் பணியாளன் (கடம்பர் உலா, 50); an officer whose duty was to prepare a record of all the holdings in a village.

*[பங்கு + ஆளி]*

**பங்காளிக்காய்ச்சல்** *paṅgāḷi-k-kāyccal,* பெ.(n) பங்காளிகளுக்கு இடையே ஏற்படும் போட்டியும் பொறாமையும்; jealousy among those who are agnates.

*[பங்காளி + காய்ச்சல்]*

**பங்காளிச்சி** *paṅgāḷicci,* பெ. (n) பங்காளியின் மனைவி (இ.வ.); wife of an agnate.

*[பங்கு + ஆளி + சி]*

*சி – பெண்பால் ஒருமையீறு*

**பங்கி[1]** *paṅgi,* பெ. (n.) 1. ஆண்மக்களின் மயிர்; man's hair. "பங்கியை வம்பிற்கட்டி (சீவக. 2277.) 2. விலங்குகளின் மயிர்(பிங்); hair of animals. 3. கஞ்சா; a narcotic and intaxicating plant. *"பங்கிச்சாற்றாட்டி"* (தைல.தைலவ.105) 4. சாதிலிங்கம்; vermilion red sulphurate of mercury oxide. 5. தெரிநிலைவினைப்பகுதி; base of a word that which is the state of clear indication. 6. பிறமயிர் (சூடா. 2; 101.); other hairs.

*[பங்கு → பங்கி]*

**பங்கி[2]–த்தல்,** *paṅgi-,* 11. செ.குன்றாவி. (v.t.) 1. வெட்டுதல்; to mutilate; to cut off; *"அங்கத் தெவையுமழியச் சிலரைப்பங்கித்தடைவார்"* (சிவதரு. சுவர்க்க நரக.78.) 2. பகுத்தல்; to partition, divide. 3. பங்கிடுதல்; to opportion.

*[பங்கு → பங்கி → பங்கி–,]*

**பங்கி[3]** *paṅgi,* பெ. (n) வகை; variations, kinds. *"பாணியின் பங்கி யம்பர மெங்கும் விம்மின"* (கம்பரா.கைகேயி.60)

*[ஒருகா: வங்கி → பங்கி]*

**பங்கி[4]** *paṅgi,* பெ. (n) 1. தன்னுடைய பாகமாகப் பெற்றுக்கொள்பவன்; one who appropriates, one who receives his share. *"நஞ்சினைப்பங்கியுண்டதோர் தெய்வ முண்டோ"* (தேவா.392,6) 2. ஆறாண்டிற்கொரு முறை சீட்டுப் போட்டுச் சிற்றூர் நிலத்தைச் சிற்றூர் மக்களுக்குக் கொடுக்கும் பற்றடைப்பு முறை (W.G.); an obsolete system of village tenure in Tinnevelly by which the fields we divided by lot once in every six years among the villages.

*[பங்கு → பங்கி]* (வ.மொ.வ. 193)

முப்பங்கி (திரிபங்கி) பதின்பங்கி (தசபங்கி) நூற்றுப்பங்கி அல்லது பதிற்றுப் பதின்பங்கி (சதபங்கி) என்பன, ஒரே பா அல்லது பாவினம் முறையே மூவேறு பான்வேறு, பதிற்றுப்பான் வேறு, பா அல்லது பாவினமாகப் பிரிந்து வெவ்வேறு பொருள்படுமாறு பாடப்படும் சொல்லணிச் செய்யுள் வகைகள். திரிபங்கி (முப்பங்கி) என்பது மூவகையாக உடம்பை வளைத்து நிற்கும் நிலையையும் குறிக்கும். "வெள்கிய திரிபங்கியுடன்" (அழகர்கலம். 1)

**பங்கி[5]** *pangi,* பெ. (n) *சடைக்கஞ்சா.(தைலவ.தைல 105)* பார்க்க; bhang, a variety of indian hemp.

**பங்கிப்** *pangi,* பெ. (n) சாதிலிங்கம் (சங்.அக); vermilion.

**பங்கிகவாசம்** *pangiga-vāšam,* பெ. (n) *பங்கவாசம் (சங்.அக)*; பார்க்க see *pangavāšam.*

*[ பங்கவாசம் → பங்கிகவாசம் ]*

**பங்கிட்டநாள்** *pangitta-nāḷ,* பெ. (n) இரண்டிராசி கலந்த உடு (வின்); nakšatra forming part of two zodiacal signs.

*[ பங்கு + இட்ட + நாள்]*

**பங்கிடு – தல்** *pangiḍu-,* 4. செ. குன்றாவி 1. பகுத்துக் கொடுத்தல் (கொ.வ); to divide, parcel out, distribute, apportion, allot. 2. ஏற்படுத்துதல் (வின்); to destine.

*[ பகு → பங்கு + இடு – தல்]*

**பங்கித்தபால்** *pangittapāl,* பெ. (n) பங்கியிலனுப்பும் அஞ்சல்; parcel -post.

*[ பங்கி + தபால் ]*

**பங்கியடி–த்தல்** *pangi-y-aḍi,* 4. செ.கு.வி.(v.i.) 1. கஞ்சாப்புகை குடித்தல்; to smoke ganja. 2. கஞ்சா; to eat bhang.

*[ பங்கி + அடி –,]*

**பங்கிலம்** *pangilam,* பெ. (n) தெப்பம், (யாழ்.அக); raft.

*[ பங்கி → பங்கிலம்]*

**பங்கீடு** *pangiḍu,* பெ. (n) 1.பங்கிடுகை (திவா); dividing, sharing, allotting, distributing; 2. வகுத்தற் கணக்கு; (arith) division 3. திட்டம் (வின்); adjustment; settlement of a dispute; disposal of affairs. 4. வழி; measures, means.

*[ பகு → பங்கு+இடு > (முதல்நீண்டது)]*

**பங்கீடு[2]** *pangiḍu,* பெ. (n) கணக்கு விளத்தம்; account. "*குடிகளுக்குப் பங்கீடு சொல்லப் பயங் கொண்டு*'' (சரவண. பணவிடு.133)

*[ பங்கு → பங்கீடு]* (வே.க.)

**பங்கு[1]** *pangu,* பெ. (n) 1. பாகம்; share portion, part. ''*பட்குலவு கோதையுந்தானும்*" (திருவாச. 16.9) 2. பாதி (சூடா); moiety half. 3. பக்கம்; side, party. 'என்பங்கில் தெய்வம் இருக்கிறது'; 4. இரண்டு அல்லது இரண்டரை ஏக்கர் நன்செயும் பதினாறு ஏக்கர் புன்செயுங் கொண்ட நிலம் (C.G.288); sixteen acres of dry land and two or two and a half of wet land.

ம. பங்கு.

*[ பகு → பக்கு > பங்கு]* (வே.க.)

**பங்கு²** *pangu,* பெ. (n) 1. முடம் (பிங்); lameness; "ஒருத்தலைப்பங்குவி னூர்தி" (கம்பரா. மந்திரப். 66) 2. முடவன்; lame person; cripple. "*பங்கொரு வனொப்பரியவையத்திலோடி வந்து*" (தேவையுலா, 25), 3. சனி; saturn, as a lame planet. "*அந்தணன்பங்குவினில்லத் துணைக் குப்பா லெய்த*" (பரிபா.11.7)

**பங்கு³** *pangiku,* பெ. (n) 1. மாவட்டப்பகுதி (புதுவை.வ); district. 2. தலைப்பாகை; turban. "*சிவகாங்கை யொர்பங்காக*" (விரிஞ்சை முருகன்பிள்ளைத். தாலப்.1.) 3. பாதி; half. 4. கூறுபாடு; division. (சா.அக)

**பங்குக்காணி** *pangu-k-kāṇi,* பெ. (n) கூட்டுப்பங்கான நிலம் (வின்); land owned in common.

*[ பங்கு + காணி ]*

**பங்குக்காரன்** *pangu-k-kāran,* பெ. (n) 1. பங்குக்குடையவன் (c.g.); co-sharer, share holder. 2. சிற்றூர்களில் மிகுதியான நிலமுள்ளவன் (இ.வ.); the biggest share holder in the lands of a village.

*[ பங்கு + காரன் ]*

**பங்குகொள்(ளு)—தல்** *pangu-kol-(lu)-,* 16. செ.கு.வி(v.i.) 1. பணி,போராட்டம் நிகழ்ச்சி போன்றவற்றில் இடம் பெற்றுச் செயல்படுதல்; கலந்து கொள்ளுதல்; take part; participate. '*விழாவில் அனைவரும் பங்கு கொண்டு சிறப்பிக்கவேண்டும்*' 2. மற்றொருவருடைய இன்பதுன்பங்களைத் தனதாகக் கொள்ளுதல்; share someone's joy,sorrow, etc. "*பிறருடைய இன்பதுன்பங்களில் பங்கு கொள்ளாமல் இருப்பது நாகரிகமா?*"(உ.வ.);

**பங்குசம்** *panguśam,* பெ. (n) தலைக்கோலம் (பிங்); head-dress.

**பங்குடிப்பறையன்**, *pangudi-p-paṟaiyaṉ,* பெ.(n) சிற்றூர் ஊழியமில்லாப்பறையன் (இ.வ.); a paṟiah who is not a village-servant.

*[ பைங்குடி + பறையன் → பங்குடிப்பறையன் ]*

**பங்குதாரன்** *pangu-tāraṉ,* பெ. (n) பங்குக்காரன், பார்க்க, see *pangukkāraṉ.*

*[ (பங்கு +தாரன்) தாரன் என்ற வடசொல் உடைமைப்பொருளது]*

**பங்குதை** *pangudai,* பெ. (n) *பங்கறை* (யாழ். அக) பார்க்க; see *pangaṟai*

*[ பங்கறை → பங்குதை ]*

**பங்குநெல்** *pangu-nel,* பெ. (n) நெல்வகை (இ.வ.); a kind of paddy.

*[ பங்கு + நெல் ]*

**பங்குபகிர்ச்சி** *pangu-pagircci,* பெ. (n) பாகம் (வின்.); share portion.

*[ பங்கு + பகிர் + சி–தொழிற்பெயரீறு ]*

**பங்குபட்டநாள்** *pangu-paṭṭa-nāḷ,* பெ.(n) இரண்டு நாட்களில் தொடுத்துவரும் உடு (வின்.); naksatra with which the moon is in conjunction through parts of two days.

*[ பங்கு + பட்ட + நாள் ]*

**பங்குபாகம்** *pangu-pāgam,* பெ.(n) 1. பங்கு; share portion. 2. பாகப்பிரிவினை; partition. "*அண்ணனும் தம்பியும் பங்குபாகம் செய்து கொண்டார்கள்*" (வின்.).

*[ பங்கு + பாகம் ]*

**பங்குபிரிந்தவர்** *pangu-pirindavar,* பெ.(n) தாயபாகம் பிரித்துக்கொண்டவர்; those who are divided in estate, as heirs. (வின்.).

*[ பங்கு + பிரிந்தவர் ]*

**பங்குமால்** *pangu-māl,* பெ. (n) பங்குக்குறிப்பு (C.G.); list of shares.

*[ பங்கு + மால்–உருது. "குறிப்பு" என்ற பொருளது]*

**பங்குரை** *pangurai,* பெ. (n) அதிவிடையம் என்னும் மருந்துச்சரக்கு (தைலவ. தைல); a bazaar drug called indian atees.

**பங்குவழி** *pangu-vali,* பெ. (n) ஊர்நிலத்தை ஓரளவுள்ள பலபங்குகளாகப் பிரித்துப் பங்குநிலத்தின் தகுதிப்படி ஒவ்வொரு வருக்குங் கொடுக்கும் முறை; a system of land tenure in which the lands of a village are for purposes of convenient enjoyment divided into many shares each consisting of a fixed number of acres and assigned to each holder with refernce to quality of the soil, situation,etc;

*[ பங்கு + வழி ]*

**பங்குவழிநிலம்** *pangu-vali-nilam,* பெ. (n) பங்குவழிப்படி நுகர்தற்குரிய நிலம் (C.G.); land enjoyed under pangu-vali systems

*[ பங்கு + வழி + நிலம் ]*

**பங்குவழியினாம்** *pangu-vali-ināma,* பெ. (n) வேளாண்மை வளர்ச்சிக்காக ஒரு கூட்டத் தாருக்கு அன்பளிப்பாகக் கொடுக்கும் நிலம் (R.T.); land granted to a body of persons in common, for the encouragement of cultivation

*[ பங்கு + வழி + இனாம் ]*

**பங்குவாளி** *pangu-v-āli,* பெ. (n) சிறுநிலக்கிழார்(G.Tn.D.I.311); mirasdars.

*[ பங்கு + ஆள் + இ ]*

*[ பங்குஆளி → பங்குவாளி ]*

**பங்குவீதம்[1]** *pangu-vidam,* பெ. (n) சமமாயுள்ள பங்கு (வின்); equal shares.

*[ பங்கு + வீதம் ]*

**பங்குவீதம்[2]** *pangu-vidam,* வி.எ.(adv.) விழுக்காட்டின்படி (இ.வ.); pro rate.

*[ பங்கு + வீதம் ]*

**பங்குனி** *panguni,* பெ. (n) 1. பன்னிரண்டாம் மாதம் ; the 12th month of the solar year, march- April. "*வெய்யோன்.... பங்குனிப்பருவஞ் செய்தான்*" (சீவக. 851.) 2. உத்தரம் பார்க்க (பிங்); see the 12th naksatra.

'பங்குனி என்று பருப்பதும் இல்லை;

சித்திரை என்று சிறுப்பதும் இல்லை;' (பழ.)

'பங்குனிமாதம் பகல்வழி நடந்தவன் பெரும்பாவி' (பழ.)

*[பல்குனி → பங்குனி]*

மீனமாதத்தைக் குறிக்கும் வடசொல்.

**பங்கூரம்** *pangūram,* பெ. (n) 1. அதிவிடையம்; atis shrub. 2. மரமஞ்சள்; tree turmeric.

**பங்கூறம்** *pangūram,* பெ. (n) மரமஞ்சள் பார்க்க (மலை); tree turmeric.

**பங்கோற்பயிண்டு** *pangōrapayindu,* பெ. (n) சிறையில் அடைக்கை; imprisonment in a jail. "*பங்கோற் பயிண்டு பருவிலங்கு மாட்டி*" (பஞ்ச.திருமுக.1732.)

**பச்சடம்** *paccadam,* பெ. (n) பச்சவடம் பார்க்க : see paccavaḍam. "*கற்பனை யலங்கார மாக்கோவை பாடினுங் கன வரிசையொரு பச்சடம்*" (திருவேங்.சத.29)

*[ பச்சவடம் → பச்சடம் ]*

**பச்சடி**[1] *paccaḍi,* பெ. (n) பச்சையாகவே பாகம் பண்ணிய துவையற்கறி; a culinary preparation from row vegetables, seasmed vegetablese curry. (சா.அக.).

*[ பச்சு → பச்சடி ]*

(மு.தா.46)

**பச்சடி**[2] *paccaḍi,* பெ. (n) 1. பச்சையாகவே அணியப் படுத்திய தொடுகறி; a kind of relish generally made of minced vegetables. '*புளிப்பான பச்சடியால்*' (பதார்த்த.1370.) 2. நற்பேறு; prosperity, command of money, '*பச்சடி கண்டால் ஒட்டடி மகளே*' (பழ.)

தெ. பட்சடி க.பச்சடி, ம.பச்சடி.

*[ பசுமை → பச்சை + அடிசில் = பச்சடி ]*

*[ பச்சு → பச்சடி ]*

(மு.தா.46)

**பச்சடியன்** *paccaḏiyaṉ,* பெ. (n) வெண்மையிற் கறுப்புப் புள்ளியுள்ள மாடு (யாழ்.அக.); white bull or cow with black spots.

*[ பச்சடி → பச்சடியன் ]*

**பச்சமஞ்சள்** *paccamañjal,* பெ. (n) மரமஞ்சள்; tree tumeric. (சா.அக.).

*[ பச்சை + மஞ்சள் ]*

**பச்சநாவி,** *pacca-nāvi,* பெ. (n) வச்சநாவி(இ.வ.) பார்க்க; nepal aconite.

ம. பச்சநாபி.

*[ பச்சை + நாவி ]*

**பச்சரிசி**[1] *paccariši,* பெ. (n) 1. நெல்லைப் புழுக்காமற் காயவைத்துக் குத்தியெடுத்த அரிசி; rice hulled without boiling, opp. to pulungal. 2. மாமரவகை (இ.வ.); a kind of mango.

*[ பச்சை + அரிசி. ]*

**பச்சரிசி**[2] *paccariši,* பெ. (n) அம்மான் பச்சரிசி; an annual with procumbent brances. "பிரமி விளா பச்சரிசி பீளை சங்கு வேளை" (தைலவ.தைல. 135) 2. மாமரவகை(இ.வ.); a kind of mango.

*[ பச்சை + அரிசி. ]*

**பச்சவடம்** *paccavaḏam,* பெ. (n) மேற்போர்வை விரிப்பு, திரை முதலியவற்றுக்குப் பயன்படும் நீண்டசீலை (கோயிலொ. 94.); a long piece of cloth, used as a blanket, bed sheet or screen.

தெ.பட்சடமு. க. பச்சபட. ம. பச்சவடம்.

**பச்சன்னியம்,** *paccaṉṉiyam,* பெ. (n) மரமஞ்சள் (மலை.); tree turmeric.

**பச்சாகிலியம்** *paccāgilāam,* பெ. (n) சண்பகம்; champak tree. (சா.அக.).

**பச்சாளை**[1] *paccāḷai,* பெ. (n) கொச்சி; mercuric chloride. (சா.அக.).

மறுவ. சவ்வீர வைப்பு கொச்சி வீரம்.

*[ பச்சை → பச்சாளை ]*

**பச்சாளை²** *paccāḷai,* பெ. (n) பயிர்கட்குவரும் நோய்வகை (நெல்லை); a disease of crops.

*[ பச்சை → பச்சாளை ]*

**பச்சான் கள்ளி** *paccāṉ kaḷḷi,* பெ. (n) கண்டக்கள்ளி; round milk hedge.

*[ பச்சான் + கள்ளி ]*

**பச்சிமப் பிறை** *paccima-p-piṟai,* பெ. (n) இளம்பிறை (யாழ்.அக.); crescent.

*[ பச்சிமம் + பிறை ]*

**பச்சிமம்** *paccimam,* பெ. (n) 1. மேற்கு; west. "*மற்றையர்க்குப் பச்சிமமே மாண்பு*" (சைவச. பொது.270.) 2. பின்புறம்; back. "*பச்சிமத்தினு முகத்தினு மருங்கினும் பகழி.....உமிழ.*" (கம்பரா.பிரமாத்.71.) 3. பின்பட்டது; that which is late or after-time. "*விப்பிரர் பச்சிம புத்தியர்*" (வின்.)

**பச்சியம்** *pacciyam,* பெ. (n) வியப்புக் குறிப்பு. (யாழ்.அக.); an expression signifying wonder.

**பச்சிரும்பு** *paccirumbu,* பெ. (n) உருகின இரும்பு; molten iron. "*பச்சிரும்பெஃகிட்டாங்கு*" (சீவக.2303.)

*[ பசுமை → பச்சு + இரும்பு ]*

(கருவிகள், கலங்கள் முதலியன செய்யப்படாமல் வெறும் இரும்பு பச்சையிரும்பு → பச்சிரும்பு என்னப்பட்டது.)

**பச்சிலை** *paccilai,* பெ. (n) 1. பச்சையிலை (பிங்.); green, fresh leaf. 2. மரவகை (திவா.); Mysore gamboge l.tr., 3. பச்சிலைகளால் ஆகிய மருந்து (வின்.); medicament consisting of leaves. 4. பன்றிவாகை (L.); tube-in-tube. wood. 5. நறைக்கொடி (புறநா.168,உரை.); a fragrant creeper. 6. ஒருவகைப்புகைச்சரக்கு (சிலப்.5, 14, உரை.); a fumigating substance. 7. ஒருவகைத் துகில் (சிலப்.14,108,உரை.); a kind of ancient garment.

க. பச்செல ம. பச்சில
க. பச்சாரி (மரவகை.)

*[ பச்சை + இலை ]*

**பச்சிலைப்பட்டு** *paccilai-p-paṭṭu,* பெ. (n) பசிய இலைத் தொழிலையுடைய பட்டு; silk cloth with leaf-like figures. "*பச்சிலைப் பட்டு முத்தும் பவளமு மிமைக்கு மல்குல்*" (சீவக.2090.)

*[ பசுமையிலை → பச்சிலை+ பட்டு ]*

**பச்சிலைப்பாம்பு** *paccilai-p-pāmbu,* பெ. (n) மருந்தாகப் பயன்படும் இலை; leaves used medicinally. (வின்.)

*[ பச்சிலை + பாம்பு ]*

**பச்சிலையோணான்** *paccilai-y-ōṇāṉ,* பெ. (n) *பச்சோணான் (யாழ்.அக.)* பார்க்க; see *paccōṇāṉ.*

*[ பச்சிலை + ஓணான் ]*

**பச்சிறைச்சி** *pacciṟaicci,* பெ. (n) 1. பச்சூன் (யாழ்.அக.); raw meat, flesh. 2. ஆறாப்புண்; green wound.

*[ பச்சை → பச்சு + இறைச்சி ]*

**பச்சுடம்பு** *paccuḍambu,* பெ. (n) 1. பிள்ளைப் பேற்றால் மெலிந்த உடல்; tender body of a

woman after childbirth. **2.** குழந்தையின் தளிருடல்; tender body an infant. **3.** அம்மைப்புண் காயாத உடம்பு (வின்.); body still having sore from small-pox.

*[ பச்சை → பச்சு + உடம்பு ]*

*[ பசு → பச்சு → பச்சுடம்பு ]*

(மு.தா. 46.)

**பச்சுதி** *paccudi,* பெ.(n.) நழுவுகை; slip. "*பச்சுதியின்றி நின்று*" (மேருமந்.876.).

**பச்சுளி** *pacculi,* பெ. (n.) செடிவகை; wolly patchouli.

**பச்சூன்** *paccūṉ,* பெ. (n.) *பச்சிறைச்சி*[1] பார்க்க see *pacciṟaicci* "*முதுநரி பச்சூன் கொள்ளை மாந்தி*" (நற்.352.)

*[பசுமை + ஊன்]*

**பச்செனல்** *pacceṉal,* பெ. (n.) பசுமையாதற் குறிப்பு; expr.of being green or verdant '*பச்சென்று பசத்தது*' (தொல்,சொல்.261,உரை.)

*[பசுமை → பச்சு + எனல்]*

**பச்செனவு** *pacceṉavu,* பெ. (n.) **1.** பச்சை.; greenness, verdure. **2.** ஈரம்; moistness, dampness, sap,juice. **3.** பொலிவு; plumpness; fulness.

*[பசுமை → பச்சு + எனவு]*

**பச்சேரி** *paccēri,* பெ. (n.) பள்ளர்சேரி (நெல்லை); the quarters of the pallar caste.

*[பள்+சேரி=பட்சேரி என்பதன் கொச்சை வடிவமே பச்சேரி என்பது]*

**பச்சை**[1] *paccai,* பெ. (n.) **1.** பசுமைநிறம்; green colour; greenness, "*பச்சைமா மலைபோல் மேனி*" (திவ்.திருமாலை 2.) 'பச்சைப் பசேல் என்ற புல்வெளிகள்'. **2.** ஒன்பான் மணிகளுள் ஒன்றான பச்சைக்கல்; emerald. **3.** பயறு; pulse or careals. '*இறந்த வீட்டிலிருந்து ஊரார்க்குப் பச்சை போடுவார்கள்*' (நெல்லை.) **4.** வெற்றிலை; betel leaf '*பச்சை கொடுத்தால் பாவந்தீரும்; வெள்ளை கொடுத்தால் வினைதீரும்*' (பழ.) **5.** நீருமரி பார்க்க; see nīrumari; seaside indian saltwort. **6.** நறுமணப் புல்வகை (பிங்.); a fragrant grass. **7.** பச்சைகுத்திய அடையாளம் (நெல்லை.); tattoo. **8.** பசப்பு நிறம்; paleness, as of a maid separated from her lover. "*பச்சை தீருமென் பைங்கொடி*" (தேவா.497,2.) **9.** திருமால் (பிங்.); Tirumāl. **10.** திருமாலின் தோற்றரவுள் ஒருவன் பிரத்தியும்நன்; a vyūha manifestation of visnu. "*பொன்கட் பச்சை பைங்கண் மாஅல்*" (பரிபா.3,82.) **11.** புதன் (பிங்.); the planet mercury. **12.** நன்கொடை (சீவக.823, உரை.); present, as to a newly married pair. **13.** காணிக்கை (ஈடு,5,1,3.); offering to a superior or a deity. **14.** கப்பம்; tribute, "*ராஜாக்கள் கொண்டு வந்த பச்சை*" (ஈடு.4,1,1.). **15.** கைம்மாறு; compensation, return. "*நல்லுதவியாவது பச்சைகொள்ளாதே உபகரிக்கை*" (ஈடு,2,3,4.). **16.** சமைத்தற்குரிய உணவுப் பொருள்; provisions. "*நெடுநாள் பச்சைதேடி விருந்திட்டாய்*" (ஈடு,1,6,1.). **17.** பச்சைக் கலியாணம் பார்க்க; see paccai-k kaliyāṇam. **18.** வேகாதது; rawness, as food uncooked. பச்சைப்புலால். **19.** முற்றாதது; tenderness, unripeness, greenness, as of fruit. '**பச்சைக்காய்**'. **20.** உலராதது; that which is not seasoned, dried or tanned. பச்சைமரம். **21.** ஆறாதது; that which is fresh or not healed. '**பச்சைப்புண்**'. **22.** தூய்மை செய்யப் படாதது; that which is impure, crude, as ore. '*பச்சைக் கந்தகம்*' **23.** தோல் (திவா.); skin, hide. "*புதுவது போர்த்த பொன்போற் பச்சை*" (மலைபடு.29.) **24.**

போர்வை; covering, as of the body of a yāḷ. "*புகழ்வினைப் பொலிந்த பச்சையொடு*" (சிறுபாண்.226.) 25. குளிர்ச்சி; freshness, as water not boiled; coolness. 'பச்சைத்தண்ணீர்'. 26. இழிவழக்கு; vulgarity. 'பச்சையாய்ப் பேசுகிறான்'. 27. வெளிப்படை யானது; that which is frank, open. 'நடந்ததைப் பச்சையாய்ச் சொன்னான்' 28. மிகுதி; intensity, excess, '*பச்சைக்கைப்பு*' (யாழ்ப்.) 29. பயன் (அரும்பொருள் நிகண்டு); profit. 30. அநாகரிகம்; rudeness, crudeness, wildness '*பச்சைப்பேச்சு*'

*[பசு → பச்சு → பச்சை]*(மு.தா. 46)

'பச்சைச் சிரிப்புப் பல்லுக்குக் கேடு; தூவு பருக்கை வயிற்றுக்குக் கேடு' (பழ.)

மறுவ: பச்சிலை, இஞ்சி

**பச்சை²** *paccai*, பெ. (n.) ஒருவகை நறுமணச் செடி; acheen leaf, indian marjoram. இதன் வகைகள்:

1. திருநீற்றுப் பச்சை– holy ashes leaf.
2. கடற்(சமுத்திராப்)பச்சை– sea green
3. மலைப்பச்சை– hill green
4. தேன்பச்சை– honey green
5. வேனிற்பச்சை– summer green
6. நஞ்சறப்பச்சை– poison cutting green
7. அவுரிப்பச்சை– (crude camphor)
8. கதிர்ப்பச்சை– a fragrant plant.
9. வங்காளப்பச்சை– sub acetate of copper.
10. மாரிப்பச்சை– māri-p-paccai.

'பச்சை மரம் படப் பார்ப்பான்' (பழ.)

**பச்சை³** *paccai*, பெ. (n.) 1. பச்சாளை (யாழ்.அக.); பார்க்க see paccāḷai 2. பூடுவகை (புட்ப.5.); a shrub.

தெ. பச்ச க.ம. பச்ச

*[பசுமை → பச்சை]*

**பச்சைஅலரி** *paccai-alari*, பெ. (n.) திருவாச்சிப்பூ; foreign oleander. (சா.அக.)

*[பசுமை + அலரி]*

**பச்சைஆமை** *paccai-āmai*, பெ. (n.) கடலாமையின் ஒருவகை இனம்; a kind of sea turtle.

*[பச்சை + ஆமை]*

**பச்சை இராப்பாடி** *paccai-irāppāḍi*, பெ. (n.) பச்சை நிறமான இராப்பாடிக் குருவி; green bool bool (சா.அக.)

*[பச்சை + இராப்பாடி]*

**பச்சை எருவை** *paccai-eṟuvai*, பெ. (n.) பச்சையாகவே துரிசி முதலிய மருந்துகளை நல்லெண்ணெயில் அரைத்து புண்களுக்கு இடும் ஒருவகைப் பூசுமருந்து; an external ointment prepared by grinding copper sulphate and other drugs and mixing and grinding them in gingelly oil.

*[பச்சை + எருவை]*

**பச்சைக்கச்சோலம்** *paccai-k-kaccōlam*, பெ. (n.) 1. பச்சைப்பூலாங்கிழங்கு; green poola root. 2. பச்சை ஏலக்காய்த்தோல்; undried capsules of cardamom. (சா.அக.).

*[பச்சை + கச்சோலம்]*

**பச்சைக்கட்டி** *paccai-k-kaṭṭi*, பெ. (n.) பழுக்காத கட்டி; unriped or unmatured abscess unfit for opening or incision. (சா.அக.).

*[பச்சை + கட்டி]*

**பச்சைக்கட்டு** *paccai-k-kaṭṭu*, பெ.(n.) அமைதி செய்யும் மருந்து; any green drug which allays the disease.(சா.அக.).

*[பச்சை + கட்டு]*

**பச்சைக்கடலை** *paccai-k-kaḍalai,* பெ. (n.) வேகவைக்காத, வறுக்கப்படாத கொண்டைக் கடலை; raw bengal gram that is not roasted or boiled.

*[பச்சை + கடலை]*

**பச்சைக்கடுக்காய்** *paccai-k-kaḍukkāy,* பெ. (n.) 1. உலராத கடுக்காய்; undried gall nut. 2. அரிதகிக் கடுக்காய்; green gall nut.

*[பச்சை + கடுக்காய்]*

**பச்சைக்கடுகு** *paccai-k-kaḍugu,* பெ. (n.) செங்கடுகு; raw mustard. (சா.அக.).

*[பச்சை + கடுகு]*

**பச்சைக்கடுகுரோகணி** *paccai-k-kaḍugu rogaṇi,* பெ.(n.) 1. உலராத கடுகுரோகணி; undried black hellibore. 2. பச்சை நிறமுள்ள கடுகுரோகணி; green coloured hellibore. (சா.அக.).

*[பச்சை + கடுகு+ரோகணி]*

**பச்சைக்கந்தகம்** *paccai-k-kandagam,* பெ.(n.) தூய்மை செய்யாத கந்தகம் (கொ.வ.); raw sulphur, as impure.

மறுவ. பிறவிக்கந்தகம்.

*[பச்சை + கந்தகம்]*

**பச்சைக்கயர்** *paccai-k-kayar,* பெ.(n.) கடுங்கசப்பு (யாழ்ப்.); extreme astringency; intense bitterness.

*[பச்சை + கயர்]*

[கசப்பு → கயப்பு → கயர்]

**பச்சைக்கரி** *paccai-k-kari,* பெ. (n.) ஈரமான கரி; wet or moist charcoal.

*[பச்சை + கரி]*

**பச்சைக்கருப்பூரம்** *paccai-k-karuppūram* பெ.(n.) கருப்பூரவகை (பதார்த்த.1075.); medicated camphor, menthol, crude camphor.

க. பச்சக்கர்பூர

*[பச்சை + கருப்பூரம்]*

(இக்கருப்பூரம் நீர்வேட்கை, வயிற்றெரிச்சல், ஈரல் அழற்சி, நுரையீரல் அழற்சி ஆகியவற்றைப் போக்கி, மூளைக்கு வலுவைத் தருவதாகச் சா.அக. சிறப்பாகக் குறிக்கின்றது.)

**பச்சைக்கல்** *paccai-k-kal,* பெ.(n.) 1. சுடாத செங்கல்; unburnt brick. 2. பச்சைமணி; emerald. 3. பசுங்கல் வகை (வின்); jade, a hard dark greenstone, 4. கல்வகை (வின்); greenstone, principally of felspar and horn blende. 5. காதணி வகை (கொ.வ.); pendant emerald, used as an ear ornament.

*[பச்சை + கல்]*

**பச்சைக்கல்யாணி** *paccai-k-kalyāṇi,* பெ. (n.) கதிரவனின் தேர்க்குதிரைகளுளொன்று; one of the seven mythical horses of the sun's chariot.

*[பச்சை + Skt. கல்யாணி]*

**பச்சைக்கலியாணம்** *paccai-k-kaliyāṇam,* பெ.(n.) திருமணத்தின் நாலாம் நாளில் மணமக்களை வாழ்த்திப் பரிசு வழங்கும் சடங்கு (இ.வ.); ceremoney on the fourth day in a marriage festival, as the time of presenting gifts.

*[பச்சை + கலியாணம்]*

**பச்சைக்கள்ளன்** *paccai-k-kaḻḻaṉ* பெ. (n.) பெருந்திருடன் (வின்.); desperate thief; downright villain.

*[பச்சை + கள்ளன்]*

**பச்சைக்காடை** *paccai-k-kāḍai,* பெ. (n.) காடை வகையுள் ஒன்று; a kind of kāḍai. (இதன் சிறகுப் போர்வையில் பல பளிச்சென்ற வண்ணங்களைக் காணலாம். நாகணவாய்ப் புள்ளின் அளவில் குட்டை வாலுடன் இருக்கும் இப்பறவையின் தலை கோடு போட்ட கரும்புகர் நிறமாகவும் முதுகு அடர்ந்த பசுமையாகவும் வாலின் மேல்பக்கத்திலும் இறக்கையின் தோலிலும் தூய்மையான நீலமாகவும், மார்பு மஞ்சளாகவும், அடிவயிறு அரத்தச் சிவப்பாகவும் இருக்கும்.
குளிர்காலத்தில் தெற்கே வலசை போகும் இயல்பினது.)

மறுவ. பொன்னாந்தட்டான்



**பச்சைக்காய்ச்சி** *paccai-k-kāycci,* பெ. (n.) 1. காய்த்துள்ள மரம் (யாழ்ப்.); tree with green fruit. 2. ஒருவகைத் தென்னை (இ.வ.); a kind of coconut tree.

*[பச்சை + காய்ச்சி]*

**பச்சைக்காளான்** *paccai-k-kāḷāṉ,* பெ. (n.) ஊதையை நீக்குவதற்கு உதவும் ஒருவகைக் காளான்; green mushroom used in rheumatic affections. (சா.அக.).

*[பச்சை + காளான்]*

**பச்சைக்கிளி** *paccai-k-kiḷi,* பெ. (n.) 1. கிளிவகை.; a variety of parrot. 2. வெட்டுக் கிளி; green locust, grass hoper. 3. சிறுவர் விளையாட்டு வகை; a boy's game. 4. துருசு, blue-vitriol (சா.அக.).

*[பச்சை + கிளி]*

**பச்சைக்கிளிமீன்** *paccai-k-kiḷimīṉ,* பெ. (n.) பச்சை வண்ணக் கிளிமூக்குமீன்; parrot fish. (சா.அக.)

*[பச்சை + கிளிமீன்]*

(கடலில் பவளக் கொடிகளில் வாழும் இவ்வழகான மீன் உண்ணத் தகுந்ததல்லவெனச் சா.அக. கூறும்.)

**பச்சைக்கிளுவை** *paccai-k-kiḷuvai,* பெ. (n.) 1. பச்சை வண்ணப்பட்டையுள்ள கிளுவைமரம்; green barked hill balsam tree. 2. பச்சைநிற சிறவிப்புள்; common teal. 3. பஞ்சித் தணக்கு; katearah gum tree. 4. கிளுவை மீன்; a kind of small cell fish.

*[பச்சை + கிளுவை]*

**பச்சைக்குங்கிலியம்** *paccai-k-kuṅgiliyam,* பெ. (n.) குங்கிலியவகை (வின்.); a kind of resin of the indian bdellium.

*[பச்சை + குங்கிலியம்]*

மறுவ. வெள்ளைக்குங்கிலியம்.

குங்கிலியம் = Skt.

**பச்சைக்குங்குமப்பூ** *paccai-k-kuṅgumappū*, பெ. (n.) உலர வைத்துப் பதப்படுத்தாத குங்குமப்பூ; an undried European saffron. (சா.அக.)

*[பச்சை + குங்குமம் + பூ]*

த. குங்குமம் Skt. kumkum.

**பச்சைக்குதிரை**[1] *paccai-k-kudirai*, பெ. (n.) விளையாட்டு வகை(G.Tn. D.1,105); leap-frog, a game

*[பாய்ச்சல் → பாச்ச → பச்சை + குதிரை]*



**பச்சைக்குதிரை**[2] *paccai-k-kudirai*, பெ. (n.) கதிரவனுடைய பசுங்குதிரை (தொன்.); sun's green coloured horse (myth.) "ஞாலங் காவலுடைய வனொரு நாட் பச்சைக் கோடகங் கரப்ப" (சேதுபு. வேதாள. 45.) (த.சொ.அக.)

*[பச்சை + குதிரை]*

**பச்சைக்குப்பி** *paccai-k-kuppi*, பெ. (n.) மதுவடைக்குங் குப்பிவகை (பெரும்பாண்.382, உரை); a green flask, used in ancient times for keeping liquor.

*[பச்சை + குப்பி]*

**பச்சைக்குருவி** *paccai-k-kuruvi*, பெ. (n.) குருவி வகையுள் ஒன்று; a kind of sparrow.

*[பச்சை + குருவி]*

இதன் இறகுப் போர்வையில் பல நிறங்களிருந்த போதும் பச்சையே மேலிட்டு நிற்பதால் இப்பெயர் பெற்றது. வீட்டுத் தோட்டங்களிலும் பழத் தோட்டங்களிலும் தோப்புகளிலும் இணையாக வாழும்.

**பச்சைக் குவடு** *paccai-k-kuvaḍu*, பெ. (n.) பச்சைக்கல் (மரகதம்); green gem, emerald.

*[பச்சை + குவடு]*

**பச்சைக்குழந்தை** *paccai-k-kuḻandai*, பெ. (n.) 1. இளங்குழவி; tender, new-born infant. 2. வளரிளங் குழந்தை; baby, young child.

*[பச்சை + குழந்தை]*

**பச்சைக்குறவன்**[1] *paccai-k-kuṟavaṉ*, பெ. (n.) பெரும்பாசாங்குக்காரன் (கொ.வ.); a downright knave,veatable villain or hypocrite.

*[பச்சை + குறவன்]*

**பச்சைக்குறவான்**[2] *paccai-k-kuṟavāṉ*, பெ. (n.) ஒரு நீல நிற கடல்மீன்; a kind of blue trigger sea fish. (சா.அக.).

*[பச்சை + குறவான்]*

**பச்சைக்கூடு** *paccai-k-kūḍu*, பெ. (n.) 1. பருவுடல்; gross, physical body. 2. பருத்த உடம்பு; stout body.

*[பச்சை + கூடு]*

**பச்சைக்கெந்தி** *paccai-k-kendi,* பெ. (n.) தூய்மைசெய்யப்படாத கந்தகம்; impure sulphur. (சா.அக.).

*[பச்சை + கெந்தி]*

**பச்சைக்கொட்டை** *paccai-k-koṭṭai* பெ. (n.) 1. பூவந்தி (M.M.843.); soap nut. 2. வானத்தாமரை; sky lotus.

*[பச்சை + கொட்டை]*

**பச்சைக்கொத்தமல்லி** *paccai-k-kottamalli* பெ. (n.) கறிக்குதவும் கொத்தமல்லிக்கீரை; green leaves of coriander used in the preparations of curries. (சா.அக.).

*[பச்சை + கொத்துமல்லி → கொத்தமல்லி]*

**பச்சைக்கொம்பு** *paccai-k-kombu,* பெ. (n.) இஞ்சி (மலை.); green ginger.

*[பச்சை + கொம்பு]*

**பச்சைக்கொல்லன்** *paccai-k-kollaṉ,* பெ. (n.) வேலைத் திறமையற்ற கொல்லன் (யாழ்ப்.); clumsy blacksmith.

*[பச்சை + கொல்லன்]*

**பச்சைக்கோடு** *paccai-k-kōḍu,* பெ. (n.) ஒன்பான் மணிகளுள் ஒன்றான பச்சைக்கல் (மரகதம்) (யாழ்.அக.); emerald.

*[பச்சை + கோடு]*

**பச்சைக்கோரான்** *paccai-k-kōrāṉ,* பெ. (n.) சிறுமரவகை (L.); long-leathery elliptic-oblong obtuse-leaved jungle geranium.

மறுவ. இரும்பரிப்பி

*[பச்சை + கோரான்]*

**பச்சைகட்டு** *paccai-kaṭṭu,* பெ. (n.)(j.) 1. சிற்றூரில் பெருஞ்செல்வனைக் கண்டு கொள்ளக் கொடுக்கும் சிறு நன்கொடை; trifling presents, commonly to the headman of a village. 2. அமைதிசெய்யும் மருந்து; mitigative medicine, lenitive. 3. குறுங்கால அமைதி; mitigation, temporary relief.

*[பச்சை + கட்டு]*

**பச்சைகுத்தி** *paccai-kutti,* பெ. (n.) 1. குறவர்சாதிவகை (G.Sm.D.I.i.152.); a sect of kuṟava caste 2. வேளாளர்வகை (G.Sm.D.I.i.152.); a sect of velala caste.

*[பச்சை + குத்தி]*

**பச்சைகுத்து—தல்** *paccai-kuttu-,* 9. செ.கு.வி. (v.i.) உடலிற்பச்சைக்கோலம் பதித்தல் (இ.வ.); to tattoo.

*[பச்சை + குத்து—,]*

மஞ்சள் பொடியையும் அகத்திக் கீரையையும் அம்மியில் வைத்தரைத்து, ஒரு மெல்லிய துணியின்மேல் இவ்வரைத்த விழுதைப் பரப்பித் திரியாகத்திரிப்பர். பின்னர் அதனை விளக்கெண்ணெய் விளக்கில் கொளுத்துவார்கள். கொளுத்திய இத்திரியையும் விளக்கையும் ஒரு புதிய மண்கலத்தினால் மூடுவர். அப்போது திரியெரிந்து சட்டியின் உள்பாகத்தில் கரி படியும். படிந்த கரியைச் சுரண்டியெடுத்துத் தண்ணீரிலோ முலைப்பாலிலோ கரைத்துக் கொள்வர். அகத்திக் கீரைக்குப் பகரமாகத் திரி செய்வதில் அறுகம்புல்லையோ கரிசலாங்கண்ணியையோ பயன்படுத்தலாம்.

இரண்டு மூன்று தையல்ஊசிகளைச் சேர்த்துக் கட்டிக் கொண்டு, பச்சைகுத்த விரும்புமிடத்தில், மையில் தோய்த்த குச்சியொன்றினால் விருப்பமான ஓவியத்தை வரைந்து அதன்மேல் மேற்கூறிய ஊசியால்

கரைசலில் தோய்த்துக் குத்துவர். குத்திய இடத்தைக் குளிர்ந்த நீரினால் தூய்மை செய்வர் நோவையும் வீக்கத்தையும் தடுக்க எண்ணெயும் மஞ்சளும் தேய்ப்பர். (ethnographic notes in south india. Edgar thurston.)

**பச்சைச்சடையன்** *paccai-c-caḍaiyaṉ,* பெ. (n.) பச்சைநிறமான சடையுடை காவற்றெய்வம் (பைரவன்) (யாழ்.அக.); bairava, as having green locks of hair.

*[பச்சை + சடையன்]*

**பச்சைச்சார்த்து-தல்** *paccai-šārttu-,* 5. செ.குன்றாவி. (v.i.) தெய்வத் திருமேனிகளுக்கு அணிகலன் முதல் ஆடை வரை அனைத்தும் பச்சை வண்ணமாகக் குறிப்பிட்ட நாளில் அணிவித்தல்; adorn to idols having green ornaments and clothes in a particular day. *'வினைதீர்த்தான் கோயிலில் இன்று பச்சை சார்த்துதல் நடக்கிறது; போகலாமா?'* (உ.வ.)

**பச்சைத்தண்ணீர்** *paccai-t-taṉṉīr,* பெ. (n.) காய்ச்சாத குளிர்ந்த நீர் (வின்); cold, unboiled water.

*[பச்சை + தண்ணீர்]*

உனக்கு அன்றாடம் வெந்நீர் வேண்டுமா? பச்சைத்தண்ணீரில் குளித்தால் ஆகாதா? (உ.வ.)

**பச்சைச்சேர்வை** *paccai-c-cērvai,* பெ. (n.) நெருப்புக்காட்டாதபடி, பச்சையாகவே மருந்துகளை அரைத்துக் கலத்தல்; a paste made by mixing several green or fresh herbs or other raw drugs reduced to a pulp without subjecting it to heat.

*[பச்சை + சேர்வை]*

**பச்சைத்தவளை** *paccai-t-tavaḷai,* பெ. (n.) தவளை வகை(M.M 80.); tinkling frog.

*[பச்சை + தவளை]*

**பச்சைத்தாள்** *paccai-t-tāḷ,* பெ. (n.) தவசமணி முற்றாத தாள் (வின்); green stalks, showing immaturity in the grain.

*[பச்சை + தாள்]*

**பச்சைத்தான்றி** *paccai-t-tāṉṟi,* பெ. (n.) உலராத தான்றிக்காய்; undried fruit or nut of the tree called devils abode, one of the three myrobalans. (சா.அக.).

*[பச்சை + தான்றி]*

**பச்சைத்திப்பிலி** *paccai-t-tippili,* பெ. (n.) 1. சிவந்த நீர்ப்பசையுள்ள திப்பிலி; raw, long pepper containing red juice. (சா.அக.).

*[பச்சை + திப்பிலி]*

**பச்சைத்துருசு** *paccai-t-turušu,* பெ. (n.) பிறவித் துருசு; blue vitriol found in nature as opposed to வைப்புத் துருசு, prepared blue vitriol. (சா.அக.).

*[பச்சை + துருசு]*

**பச்சைத்தேயிலை** *paccai-t-tēyilai,* பெ. (n.) பதப்படுத்தாத தேயிலை(M.M.883); raw leaf of tea. (Hybrid)

*[பச்சை + தேயிலை]*

**பச்சைத்தேரை** *paccai-t-tērai,* பெ. (n.) தேரை வகை (கம்பரா.நாட்டுப்.13.); a species of toad.

*[பச்சை + தேரை]*

**பச்சைத்தைலம்** *paccai-t-tailam,* **பெ.** (n.) புண்புரைகளை ஆற்ற பசுமருந்து மூலிகை களைக்கொண்டு அணியமாக்கும் எண்ணெய்; medicated oil prepared from the leaves of the herbeceous plants for curing raw sores with sinuses. (சா.அக.).

*[பச்சை + Skt. தைலம்]*

**பச்சைத்தோல்** *paccai-t-tōl,* **பெ.** (n.) **1.** பதனிடாத்தோல்; raw, untanned skin, pelt. **2.** புண் ஆறினபின்பு தோன்றும் புதுத்தோல்; new skin formed on a healing sore.

*[பச்சை + தோல்]*

**பச்சைநஞ்சு** *paccai-nañju,* **பெ.** (n.) **1.** கொடிய நஞ்சு; strong poison. **2.** தீயோன் (யாழ்.அக.); atrocious villain. **3.** செய்ந்நஞ்சு; chemical poison. **4.** பாம்பின் நஞ்சு; snake poison **5.** பிறந்த குழந்தையின்நஞ்சுக்கொடி; navel cord of the new-born baby.

*[பச்சை + நஞ்சு]*

**பச்சைநரம்பு** *paccai-narambu,* **பெ.** (n.) உடலில் அழுக்கு அரத்தம் ஒடும்நாளம் (இ.வ.) vein

*[பச்சை + நரம்பு]*

**பச்சைநன்னாரி** *paccai nannāri,* **பெ.** (n.) உலரவைத்துப்பதப்படுத்தாத நன்னாரி; underied unseasoned sarsaparilla fresh roots of sarsaparilla. (சா.அக.).

*[பச்சை + நன்னாரி]*

**பச்சை நாகேசுரம்** *paccai nāgēšuram,* **பெ.** (n.) பழுத்தும் பச்சை நிறம் மாறாத ஒருவகை வாழைப்பழம்; green plantain fruit which is green even when fully riped. (சா.அக.).

ஒருகா. நவரைவாழை

*[பச்சை + நாகேசுரம்]*

**பச்சைநாடம்** *paccai-nādam,* **பெ.** (n.) *பச்சைநாடன்*(G.Sm.D.I.i.215.) பார்க்க; see *paccai-nadan*

*[பச்சை + நாடம்]*

**பச்சைநாடன்** *paccai-nādan,* **பெ.** (n.) நமரை வாழை. (கொ.வ.); green banana.

*[பச்சை + நாடன்.]*

பழம் பழுத்தாலும் மேலே பச்சை நிறம் மாறாதிருப்பதால் இப்பெயர் ஏற்பட்டது.

**பச்சைநாபி** *paccai-nābi,* **பெ.** (n.) ஒருவகை மருந்து; a kind of siddha medicine.

*[பச்சை + நாவி → நாபி]*

த. நாவி > Skt. Nābi.

**பச்சைநாமத் தவளை** *paccai-nāmattavaḷai,* **பெ.** (n.) பச்சை நிறமான தவளைவகை; green coloured frog.

*[பச்சை + நாமம் + தவளை]*

**பச்சைநாவி[1]** *pacaināvi,* **பெ.** (n.) ஒருவகை மருந்து; a kind of medicine; nepal aconite. **"*பச்சை நாவி யபினி*"** (விறலிவிடு.623.)

**மறுவ.** வச்சநாவி, பச்சை நாவிக்கிழங்கு

*[பச்சை + நாவி]*

**பச்சைநாவி²** *paccaināvi,* பெ. (n.) 1. நச்சுநாவிக்கிழங்கு; aconite root, 2. கலப்பைக் கிழங்கு; country aconite 3. பூனைமணத்தி; civet 4. நறும்பூதி (சவ்வாது); zibet 5. மான்மணத்தி; musk 6. குழந்தையின் கொப்பூழ்க் கொடி; the navel cord. (சா.அக.).

*[பச்சை + நாவி]*

**மறுவ.** காந்தட் கிழங்கு

**பச்சைநாறாக் கரந்தை** *paccai-nārā-k-karandai,* பெ. (n.) பச்சைநிறச்சிவகரந்தை; undried i.e. fresh and green shiva's basil. (சா.அக.).

*[பச்சை + நாறா + கரந்தை]*

**பச்சைநிலைக்கொடி** *paccai-nilaikkodi,* பெ. (n.) முசுமுசுக்கை; bristly bryony. (சா.அக.).

*[பச்சை + நிலைக்கொடி]*

**மறுவ.** பச்சை நிறக்கொடி.

**பச்சைநிறத்தாள்** *paccai-nirattāl,* பெ. (n.) துரிசு. (யாழ்.அக.); blue vitriol-copper sulphate.

*[பச்சை + நிறத்தாள்]*

**பச்சைநிற நிற்களன்** *paccai-nira-nirkalan,* பெ. (n.) துரிசு (யாழ்.அக.); blue vitriol.

**மறுவ.** பச்சை நிறத்தான்

*[பச்சை + நிறம் + நிற்களன்]*

**பச்சைநீர்** *paccai-nir,* பெ. (n.) 1. குளிர்ந்த நீர்; cold water. 2. புண்களை ஆற்றும் துரிசு சேர்ந்த மருந்து நீர்; a lotion preparatioon with blue vitriol.

**மறுவ.** பச்சைத் தண்ணீர்

*[பச்சை + நீர்]*

**பச்சைநீருள்ளி** *paccai-nir-ulli,* பெ. (n.) ***வெள்ளைப்பூண்டு***(M.M. 733.) பார்க்க; see *vellaippūndu* garlic.

*[பச்சை + நீர் + உள்ளி]*

**பச்சைநெல்** *paccai-nel,* பெ. (n.) 1. ஈரநெல்; undried paddy. 2. அவிக்காத நெல்; unboiled paddy: raw paddy. 3. பசுமை நிறமான நெல்; green or yellow paddy. 4. முதிராத நெல்; not fully matured paddy.

*[பச்சை + நெல்]*

**பச்சைப்பசும்பொய்** *paccai-p-pasum-poy,* பெ. (n.) முழுப்பொய்; gross, barefaced lie. "***யான்கிலேன்......பச்சைப் பசும்பொய்கள் பேசவே***" (திவ்.திருவாய். 3,9,7.)

*[பச்சை + பசு(ம்) + பொய்]*

**பச்சைப்பசேரெனல்** *paccai-p-pasēr-enal,* பெ. (n.) மிகுபசுமையாயிருத்தற் குறிப்பு; expr. signifying deep green colour. (வின்.)

*[பச்சை + பசேர் + எனல்]*

ஒருகா. பச்சைப் பசேலெனல் → பச்சைப் பசேரெனல்

**பச்சைப்பட்டி** *paccai-p-paṭṭi,* பெ. (n.) விதைப்பதற்கு முன் வயலில் இடப்படும் சாணம் முதலிய எரு (வின்.); raw or undried manure applied to land shortly before sowing.

*[பச்சை + பட்டி]*

**பச்சைப்படாம்** *paccaippaḍām,* பெ. (n.) பச்சவடம். பார்க்க, see paccavaḍam. "*கால் வீழ்ந்த பச்சைப் படாமும்*" (தொல்.பொ. 461, உரை, பக்.433.)

*[பச்சை + படாம்]*

**பச்சைப்படி** *paccai-p-paḍi,* பெ. (n.) அவியாமற் கொடுப்பது; paddy given as wages without boiling it. (சா.அக.)

*[பச்சை + படி]*

**பச்சைப்படிகொடு–த்தல்** *paccai-p-paḍikoḍu-,* 4. செ.கு.வி. (v.i.) தக்கார்க்குப் பழ வகைகளைக் கொடுத்து உதவுதல்(இ.வ.); to give fresh fruits as presents to worthy persons etc.

*[பச்சை + படி + கொடு–,]*

'பச்சை கொடுத்தால் பாவந்தீரும்; வெள்ளை கொடுத்தால் வினை தீரும்' (பழ.)

**பச்சைப்பணம்** *paccai-p-paṇam,* பெ. (n.) வரிவகை(pudu.insc); a tax.

*[பச்சை + பணம்]*

**பச்சைப்பதம்** *paccai-p-padam,* பெ. (n.) 1. தவசத்தின் முற்றாப்பருவம்; immaturity of grain; 2. நன்றாய் வேகாத நிலைமை; the state of being under-boiled.

*[பச்சை + பதம்]*

**பச்சைப்பயறு** *paccai-p-payaṟu,* பெ. (n.) 1. பாசிப்பயறு (பதார்த்த.840.); green gram. 2. உழுந்து வகை; blackgram.

*[பச்சை + பயறு]*

**பச்சைப்பயறுகட்டு** *paccai-p-payaṟukaṭṭu,* பெ. (n.) பச்சைப் பயறு கலந்த பொங்கல்; preparation with rice and green gram.

*[பச்சைப் பயறு + கட்டு]*

**பச்சைப்பருப்பு** *paccai-p-paruppu,* பெ. (n.) சிறுபயற்றம் பருப்பு(இ.வ.); split greengram.

*[பச்சை + பருப்பு]*

**பச்சைப்பல்லக்கு** *paccai-p-pallakku,* பெ. (n.) பாடை(கொ.வ.); bier, hearse.

மறுவ. கால்கழிகட்டில்

*[பச்சை + பல்லக்கு]*

**பச்சைப்பலா** *paccai-p-palā,* பெ. (n.) 1. ஈரப்பலா; young jack fruit 2. சீமைப்பலா; foreign jack 3. குரங்குப் பலா; monkey jack. (சா.அக.)

மறுவ. ஆசினி

*[பச்சை + பலா]*

**பச்சைப்பாக்கு** *paccai-p-pākku,* பெ. (n.) 1. உலரவைக்காத பாக்கு; unripe or undried areca-nut (வின்.); 2. அவிக்காத பாக்கு; arecanut not boiled.

*[பச்சை + பாக்கு]*

**பச்சைப் பாண்டம்** *paccai-p-pāṇḍam,* பெ. (n.) சூளையில் வைத்துச் சுட்டெடுக்காத மண்பாண்டம்; unburnt earthen vessel. 'பச்சைப் பாண்டத்தில் பாலை வைத்தால் பாலும் உதவாது; பாண்டமும் உதவாது.' (பழ.)

**பச்சைப்பாதிகம்** *paccai-p-pādigam,* பெ. (n.) வெள்ளை வாடா மல்லிகை; white variety of everlasting jasmine.

*[பச்சை + பாதிகம்]*

**பச்சைப்பாம்பு** *paccai-p-pāmbu,* பெ. (n.) நீண்டகோடுகளையும் மெல்லிய உடலையும் உடைய பச்சை நிறப் பாம்புவகை; (கொ.வ.) whip-snake,

*[பச்சை + பாம்பு]*

**பச்சைப்பால்** *paccai-p-pāl,* பெ. (n.) காய்ச்சாத பால்; fresh, unboiled milk. *''உதயமதிற் பச்சைப்பாலுண்''* (பதார்த்த.1361.) *'அவனைக் கறக்கவிட்டால் பச்சைப் பாலாக் குடித்திடு வான்'* (உ.வ.)

*[பச்சை + பால்]*

**பச்சைப்பாட்டம்** *paccai-p-pāṭṭam,* பெ. (n.) ஒவ்வொரு பருவகாலத்திற்கும் தவசங்களாகவும், தவசங்களுக்குஈடாகப் பணமாகவும் செலுத்தும் வரி; tax either in money or in king.

*[பச்சை + பாட்டம்]*

**பச்சைப்பாடம்** *paccai-p-pāṭṭam,* பெ. (n.) இரு கூறாய்ப் பிளந்த மீனில் உப்பிட்டுக் காற்றுப் புகாமல் வைத்துப் பாடஞ் செய்தல் (தஞ்சை.மீ னவ.); fish preservation with salt.

**பச்சைப்பாலகன்** *paccai-p-pālagaṉ,* பெ. (n.) இளங்குழந்தை பச்சைப்பிள்ளை; newborn baby .

மறுவ. பச்சைக் குழந்தை

*[பச்சை + பாலகன்]*

**பச்சைப்பானை** *paccai-p-pāṉai,* பெ. (n.) சுடாத பானை; unburnt earthen pot. (வின்.) 'பச்சைப்பானை காயுமுன்னே பாவிமகன் போனானே' (நாட்டுப்)

*[பச்சை + பானை]*

**பச்சைப்பிடி—த்தல்** *paccaippiḍi-,* செ.கு.வி. (v.i.) ஊன்றிய பயிர் ஊட்டமாக வளர்வதற்கு அறிகுறியாகப் பச்சை நிறம் தோன்றுதல்; of crops, turn rich green. 'தழைச் சத்துப் போட்ட பிறகு நெற்பயிர் பச்சை பிடித்து வளர்கிறது' (உ.வ.)

*[பச்சை + பிடி —,]*

**பச்சைப்பிடிசுற்று—தல்** *paccai-p-piḍi-cuṟṟu-,* 4. செ.கு.வி. (v.i.) மணமக்கள் ஊஞ்சலில் வீற்றிருக்கும்போது பலநிறமுள்ள சோற்றுத் திரளைக் கொண்டு அவர்களைச் சுற்றுதல்; to wave balls of coloured rice round a bride and bridegroom when seated on a swing. 'பொண்ணு மாப்பிள்ளைக்குப் பச்சைப் பிடி சுத்திப் போடுங்க. (உ.வ.)

*[பச்சை + பிடி + சுற்று—,]*

**பச்சைப்பிள்ளை** *paccai-p-piḷḷai,* பெ. (n.)
1. பிறந்தகுழந்தை; new-born infant.
2. அறியாப்பிள்ளை; innocent, little child.

*[பச்சை + பிள்ளை]*

**பச்சைப்பிள்ளைத் தாய்ச்சி** *paccai-p-piḷḷai-t-tāycci,* பெ. (n.) கைக்குழந்தையை யுடைய இளந்தாய்(வின்.)(வின்.); a woman having a babe-in-arms.

மறுவ. பச்சைப்பிள்ளைக்காரி
*[பச்சைப்பிள்ளை + தாய் + சி]*

**பச்சைப்பிறா** *paccai-p-pirā,* பெ. (n.) கல்லிரும்பிலை என்னும் மூலிகை; a kind of medicinal herb.

*[பச்சை + பிறா]*

**பச்சைப்புண்** *paccai-p-puṇ,* பெ. (n.) 1. ஆறாப்புண்(கொ.வ.); green wound. 2. உலராதபுண்; undried wound. 3. புதுப்புண்; fresh wound. 4. மருந்திடப்படாத புண்; untreated wound, raw wound.

*[பச்சை + புண்]*

'பச்சைப் புண்ணில் ஊசியெடுத்துக் குத்தியது போல' (பழ.)

**பச்சைப்புல்** *paccai-p-pul,* பெ. (n.) பசும்புல்; green grass as opposed to காய்ந்த புல். dry grass.

*[பச்சை + புல்]*

**பச்சைப்புழு** *paccai-p-puḻu,* பெ. (n.) மொச்சை, அவரை முதலியவற்றில் காணப்படும் பச்சை நிறமான புழுவகை (யாழ்.அக.); palmer worm, hairy caterpillar.

*[பச்சை + புழு]*

**பச்சைப்புளி** *paccai-p-puḷi,* பெ. (n.) 1. புளியங்காய்; unriped tamarind fruit. 2. பொங்கவிடாத குழம்புவகை(இ.வ.)(இ.வ.); a kind of unboiled sauce or relish mainly consisting of seasoned tamarind.

மறுவ. பச்சைப் புளிச்சாறு.

*[பச்சை + புளி]*

**பச்சைப்புளிப்பு** *paccai-p-puḷippu,* பெ. (n.) கடும்புளிப்பு; excessive sourness. 'குழம்பு பச்சைப் புளிப்பாய் புளிக்கிறது' (உ.வ.)

*[பச்சை + புளிப்பு]*

**பச்சைப்புளுகன்** *paccai-p-puḷu-gaṉ,* பெ. (n.) 1. வீணாக வீண்பெருமை பேசுவோன்; great boaster 2. பெரும்பொய்யன்; veritable, dowunright liar.

*[பச்சை + புளுகன்]*

**பச்சைப்புறா** *paccai-p-puṟā,* பெ. (n.) புறாவகை(வின்.); green pigeon,

*[பச்சை + புறா]*

(இப்பச்சைப் புறா மழைக்கு முன்னால் கூச்சலிடும் எனச் சா.அக. கூறும்.)

பச்சைப்புறா

"இப்பச்சைப்புறா பழந்தின்று வாழ்கின்ற இனம்; மர உச்சிகளிலிருந்து தரைக்கு இறங்குவதில்லை; கூட்டமாகவும் இலை மறைவாகவும் வாழும். அத்தி, ஆல் முதலிய பழமரங்களில் விருப்பத்துடன் வாழும். இவை நன்றாகத் தொலைதூரம் பறக்கும் ஆற்றலுள்ளவை. இவற்றின் குரல் தாழ்ந்த ஓசையுடன் குழல் வாசிப்பது போல் காதுக்கு இனிமையாக இருக்கும்." எனக் கலைக் களஞ்சியம் தெரிவிக்கின்றது. (கலைக். 6–634)



**பச்சைப்புனுகு** *paccai-p-puṉugu,* பெ. (n.) பதப்படுத்தாத பூனைமணத்தி; civet drawn in a raw state, crude civet.

*[பச்சை + Skt. புனுகு]*

**பச்சைப்பூ** *paccai-p-pū,* பெ. (n.) 1. பால்குடிக்கிற குழந்தை (இ.வ.); suckling. 2. பசும்பூ, பைம்பூ; green flower. 3. காயாதபூ; undried flower 4. அப்பொழுது கொய்த பூ; newly plucked flower; fresh flower.

*[பச்சை + பூ]*

**பச்சைப்பூநாகம்** *paccai-p-pūnāgam,* பெ. (n.). அப்போது தோண்டியெடுத்த பூநாகம்; fresh earthworm.

**மறுவ.** நாக்குப்பூச்சி, நாவாய்ப்புழு, நாங்கூழ்ப் புழு.

*[பச்சை + பூ + நாகம்]*

(இதைச் சட்டியிலிட்டுக் கருக்கித் தண்ணீர் விட்டெரித்துச் சுண்டியதும் கொஞ்சம் கொஞ்சமாக இறுத்துக் கொடுக்க, இசிவு நோய், காலராவினால் உண்டாகும் தாகம், சீதளம், வயிற்றுப்போக்கு ஆகியன குணமாகும் எனச் சா.அக. கூறுகிறது.)

**பச்சைப்பூரம்** *paccai-p-pūram,* பெ. (n.) 1. ஒருவகைக் கருப்பூரம் (பதார்த்த.1073); medicated comphor. 2. தூய்மை செய்யாத பூரம்; un purified subchloride of mercury.

**மறுவ.** பச்சைக் கருப்பூரம்

*[பச்சை + பூரம்]*

**பச்சைப்பெருமாள்** *paccai-p-perumāḷ,* பெ. (n.) 1. திருமால்; Tirumāl as green in colour, "*பச்சைமா மலைபோல் மேனி*" (திவ்.) 2. மூன்று மாதத்தில் விளையும்நெல்வகை; a kind of paddy that matures in three months. (சா.அக.)

*[பச்சை + பெருமாள்]*

**பச்சைப்பை** *paccai-pai,* பெ. (n.) ஒருவகைக் கொடி; an unknown creeper.

*[பச்சை + பை]*

**பச்சைப்பொட்டு¹** *paccai-p-poṭṭu,* பெ. (n.) நெற்றியிற் பச்சைகுத்தியமைத்த பொட்டு (வின்.); a round mark tatooed on the forehead.

*[பச்சை + பொட்டு.]*

**பச்சைப்பொட்டு²** *paccai-p-poṭṭu,* பெ. (n.) போலி நடிப்பு(யாழ்ப்.); falso show, pretension to wealth, learning or piety.

*[பச்சை + பொட்டு]*

(பகட்டு என்ற சொல் திரிந்து பொட்டு என்று பேச்சுவழக்கில் வந்ததாகலாம்.)

**பச்சைப்பொய்** *paccai-p-poy,* பெ. (n.) முழுப்பொய்(கொ.வ.); gross, downright lie.

*[பச்சை + பொய்]*

**பச்சைபச்சையாய்ப்பேசு¹–தல்** *paccai-paccai-y-āy-p-pēšu-,* 9. செ.கு.வி. (v.i.) இடக்கர்ச் சொற்களை வெளிப்படையாகச் சொல்லுதல்; to speak grossly vulgar and indecent language.

*[பச்சை + பச்சை + ஆக + பேசு–,]*

**பச்சைபச்சையாய்ப்பேசு²–தல்** *paccai-paccai-y-āy-p-pēšu-,* 9. செ.கு.வி. (v.t.) இடக்கர்ச் சொற்களைச் சொல்லித் திட்டுதல்; to insult by uttering abusive or obscene words.

*[பச்சை + பச்சை + ஆக + பேசு–,]*

**பச்சைபரப்பு—தல்** *paccai-parappu-,* 4. செ.கு.வி. (v.i.) பள்ளையம் போடுதல்; to offer cooked rice, etc., to a deity in fulfilment of a vow. tj.

*[பச்சை + பரப்பு]*

**பச்சைபாடி** *paccai-pāḍi,* பெ. (n.) காய் கறியுதவுகை (வின்.); present of vegetables.

*[பச்சை + படி > பச்சை + பாடி]*

**பச்சைபிடி—த்தல்** *paccai-piḍi-,* 4. செ.கு.வி. (v.i.) 1. செழிக்கத் தொடங்குதல் to begin to flourish '*பயிர் இப்போதுதான் பச்சை பிடித்திருக்கிறது*' 2. திருமண வீட்டிற்கு வந்த காய்கறிகளை ஊழியர்கள் முதலியோர் கைப்பற்றுதல்(வின்.); to seize on some of the fruits brought to a wedding house.

*[பச்சை + பிடி—,]*

**பச்சைபூசுதல்** *paccai-pūšudal,* பெ. (n.) திருமணத்தின் நாலாம்நாள் மணமக்களின் நெற்றியிலும் கைகளிலும் கலவை (குங்குமப் பூவைக் குழைத்துப்) பூசும் பார்ப்பனச் சடங்கு வகை; a ceremony of marking the foreheads and the arms of a bride and bridegroom with vermilion on the fourth day of the wedding (brāh.)

*[பச்சை + பூசுதல்]*

**பச்சைபோய் வெள்ளையாவான்** *paccai-pōy veḷḷai-y-āvāṉ,* பெ. (n.) தாளிப்பனை; talipot tree. (சா.அக.)

*[பச்சைபோய் + வெள்ளையாவான்]*

**பச்சைமஞ்சள்** *paccai mañjaḷ,* பெ. (n.) உலர வைத்துப் பதப்படுத்தாத மஞ்சள்; undried and unseasoned turmeric.

*[பச்சை + மஞ்சள்]*

**பச்சைமண்** *paccai-maṇ,* பெ. (n.) 1. ஈரமுள்ள மண் (வின்); moist earth 2. மட்பாண்டங் களுக்காகப் பிசைந்த மண்; tempered clay, as for pots, opp. to cuṭṭa-maṉ. 3. இளங்குழந்தை; young infant; tender child. பச்சை மண்ணுக்கு என்ன தெரியும்? "அவள் ஒண்ணுந் தெரியாத பச்சை மண்ணு" (உ.வ.) (கொ.வ.) 4. வேகாத மண், unburnt mud.

*[பச்சை + மண்]*

'பச்சை மண்ணும் சுட்ட மண்ணும் ஒட்டுமா? (பழ.)

**பச்சைமணி** *paccaimaṇi,* பெ. (n.) 1. பசுமை நிறமுடைய ஒளிக்கல் (மரகதம்); emerald. 2. நிலநீறு (பூநீறு); efflorescence on the soil of fullers' earth. (சா.அக.)

*[பச்சை + பிடி]*

**பச்சைமதலை** *paccai-madalai,* பெ. (n.) *பச்சைப்பிள்ளை*(வின்) பார்க்க; see *paccai-p-piḷḷai*

*[பச்சை + மதலை]*

**பச்சைமரம்** *paccai-maram,* பெ. (n.) 1. உயிருள்ள(வின்) மரம்; living tree 2. வேலைக்குத் தகுதியாக்கப்படாத மரம்; unseasoned.

*[பச்சை + மரம்]*

'பச்சை மரத்துக்கு இத்தனையென்றால் படாத மரத்துக்கு எத்தனை? (பழ.)

**பச்சையப்பர்** *paccaiyappar,* பெ. (n.) 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மிகப்பெரும் செல்வரும் வள்ளலும் ஆனவர்; an eminent rich person and a philonthac plust.

(இவர் சென்னைக்கு வடமேற்கில் பதினைந்து கல் தொலைவில் உள்ள பெரிய பாளையம் என்னும் ஊரில் 1754ஆம் ஆண்டில் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் விசுவநாத முதலியார்; தாயார் பெயர் பூச்சியம்மாள். பச்சையப்பர் தாய் வயிற்றில் இருக்கும் போதே தந்தையாராகிய விசுவநாத முதலியார் இறந்து விட்டார். தாயாராகிய பூச்சியம்மாள் குடும்ப நண்பர்களின் உதவியில் வாழ்ந்தார். பிறகு சென்னையில் குடியேறி, பௌனி நாராயண பிள்ளை என்பவருடைய உதவியால் மகனை வளர்த்து ஆளாக்கினார். பச்சையப்பர் ஆங்கிலம், தமிழ் முதலியவற்றைக் கற்றார். இளம் பருவத்திலேயே வாழ்க்கைக்கு வழி தேடும் முயற்சியில் ஈடுபட்டார். வணிகர்கட்கு உதவி செய்தல், ஆங்கிலேயர்கட்கு மொழி பெயர்ப்பாளராக உதவி புரிதல் முதலியவற்றால் பெரும்பொருள் தேடினார். மற்றும் செங்கற்பட்டு மாவட்டத்தில் வரித் தண்டல் செய்தல், நவாபின் அலுவலாளர்கட்குச் சம்பளப் பகிர்வு செய்தல் முதலிய ஒப்பந்தத் தொழில், ஆங்கிலக் குழுமத்தாருக்கு வர வேண்டிய மேல்வாரங்கள் எனும் தரச வரியைப் பணமாக்கித் தரும் குத்தகைத் தொழில், ஆங்கில வணிகர்கட்கும் கருநாடக நவாபு அதிகாரிகளுக்குமிடையே முகவராகக் கொடுக்கல் வாங்கல் செய்தல் முதலிய தொழில் ஆகியவற்றையும் மேற்கொண்டார். இவற்றால் இவருக்குப் பெரும் பொருள் குவிந்தது. குறுகிய காலத்தில் மாகாணத்தின் (துவிபாஷி) இருமொழி வல்லவர்களில் தலை சிறந்தவராக விளங்கலானார்.

இவர் தம்முடைய இருபத்தெட்டாம் அகவையில் கம்பெனி ஆங்கிலக்குழும ஆட்சியில் முதன்மையான பொறுப்புகளை மேற் கொண்டிருந்த இராபர்த்து சோசப்புசலிவன் என்பவரின் தலைமை மொழி பெயர்ப்பாளர் ஆனார். புகழும் பெருஞ் செல்வமும் பச்சையப்பருக்கு நாள்தோறுங் குவிந்து கொண்டே இருந்தன. சலிவனுடைய அரசியல் அலுவல்களில் இவர் பேருதவி புரிந்தார். தஞ்சாவூர் மன்னருக்கு மொழி பெயர்ப்பாளராகவும் வைப்பகத் தொடர் பாளராகவும் இருந்து சென்னை அரசுக்கு மன்னர் செலுத்த வேண்டிய கப்பங்கள் ஒழுங்காகச் செலுத்தப்படுவதற்கு உதவி புரிந்தார். 1784ஆம் ஆண்டில் தஞ்சாவூரில் குடியேறினார். தஞ்சை மன்னருக்குச் சென்னை அரசினரால் தொல்லை நேராமல் பாதுகாத்தார். மன்னர் இவரைப் பெரிதும் பாராட்டிப் போற்றிக் காத்து வந்தார்.

இவருடைய முதல் மனைவிக்குப் பிள்ளையில்லாதபடியால் திருமறைக் காட்டைச் சேர்ந்த பழநியாயி என்பவரை இரண்டாவது மனைவியாகத் திருமணஞ் செய்து கொண்டார். இவரிடம் ஒரு பெண் குழந்தை பிறந்தது. 1791இல் இவருக்குப் பக்கவலிப்பு நோய் கண்டது. 1794இல் உடல் நிலை கவலைக்கிடமாயிற்று. அதே ஆண்டில் காலமானார். இவர் தேடிய பொருள் பல இலட்சக்கணக்கில் இருந்தது. இவர் தம்முடைய காலத்திலேயே அறங்கள் பலவற்றைச் செய்தார். கடவுளிடத்தில் மிகுந்த பற்றுடைய இவர் கோயில் திருப்பணி முதலியவற்றையுஞ் செய்தார். இவர் மறைந்த பிறகு இவருடைய பொருள்களைப் பொருட் பாதுகாப்புக் குழுவினர் பாதுகாத்து இவருடைய அறங்களையெல்லாம் நடத்தி வருகின்றனர் சென்னையிலும், காஞ்சிபுரத்திலும் இவர் பெயர் தாங்கிய கலைக்கல்லூரிகளும், மேல்நிலைப்பள்ளிகளும் சிறப்புற நடந்து வருகின்றன.)

**பச்சைமா** *paccai-mā,* பெ. (n.) (வின்) 1. *பச்சைமாப்பொடி*. பார்க்க, see paccai *māppoḍi.* 2. பணிகாரமா; raw, unbaked dough paste. 3. வறுக்காத மாவு; flour not heated or fried.

*[பச்சை + மா]*

**பச்சைமாப்பொடி** *paccai-mā-p-poḍi,* பெ. (n.) 1. குழம்பு செய்ததற்கு உதவும் அரிசிமாப்பொடி; rice flour used in preparing sauce. 2. தெய்வத் திருமேனிகளுக்கு திருமுழுக்காட்டுச் செய்யப்பயன்படும் பொடி; rice flour used for the divine both of idols.

*[பச்சை + மா + பொடி]*

**பச்சைமிளகாய்** *paccai-miḷagāy,* பெ. (n.) பழுக்காத மிளகாய், பச்சை நிறமுள்ள மிளகாய் (கொ.வ.); green Chilli.

*[பச்சை + மிளகாய்]*

**பச்சைமிளகு** *paccai miḷagu,* பெ. (n.) ஈர மிளகு; fresh pepper which is green as opposed dried pepper. which is black (சா.அக.);

*[பச்சை + மிளகு]*

**பச்சைமீன்** *paccai mīṉ,* பெ. (n.) 1.உலராத மீன்; unseasoned fish as opposed to கருவாடு; (உலர்ந்த மீன்) dried fish. 2. அப்போது பிடித்த மீன்; fresh fish. 3. அவிக்காத மீன்; fish not cooked.

*[பச்சை + மிளகு]*

**பச்சைமூங்கில்** *paccai-mūṅgil,* பெ. (n.) ஈரமூங்கில்; wet bamboo which is green in colour as opposed to உலர்ந்த மூங்கில். dried bamboo. (சா.அக.)

*[பச்சை + மூங்கில்]*

**பச்சைமேனி** *paccai-mēṉi,* பெ. (n.) துரிசு; blue vitriol. (சா.அக.)

*[பச்சை + மூங்கில்]*

**பச்சைமோர்** *paccaimōre,* பெ. (n.) காய்ச்சாத மோர்; butter milk that is not heated. (heated milk is administered for patients) (சா.அக.)

*[பச்சை + மோர்]*

**பச்சையட்டை** *paccai-y-aṭṭai,* பெ. (n.) பச்சை நிற அட்டை; green leech.

*[பச்சை + அட்டை]*

**பச்சையம்** *paccaiyam,* பெ. (n.) (தாவர.) இலைகளுக்குப் பச்சை நிறம் தரும் இயற்கைப் பொருள்; chlorophyll.

மறுவ: பாசியம்

*[பச்சை → பச்சையம்]*

**பச்சையம்மன்** *paccai-y-amman,* பெ. (n.) பார்க்க பச்சையம்மாள் (இ.வ.); rice flour used in preparing sauce.

*[பச்சை + அம்மன்]*

**பச்சையம்மாள்** *paccai-y-ammāḷ,* பெ. (n.) ஒரு சிற்றூர்ப்புறப் பெண் தெய்வம்; a village goddess

*[பச்சை + அம்மாள்]*

**பச்சையரிசி** *paccai-y-ariśi,* பெ. (n.) நெல்லை வேகவைக்காது குத்தியெடுத்த அரிசி; raw rice.

*[பச்சை + அரிசி]*

**பச்சையலரி** *paccai-y-alari,* பெ.(n.) சீமையலரி, yellow oleander.

மறுவ. திருவாச்சிப்பூ.

*[பச்சை + அலரி]*

**பச்சையன்** *paccaiyaṉ,* பெ.(n.) திருமால். (யாழ். அக.); tirumāl.

*[பச்சை + அன்]*

**பச்சையாய்த் தின்றல்** *paccaiyāy-t-tiṉṟal,* செ.கு.வி.(v.i.) காய்கறிகளையோ, ஊனையோ பச்சையாய்த் தின்னுதல்; eating green vegetables and raw meat without boiling or cooking them.

*[பச்சையாய் + தின்றல்]*

**பச்சையாய்ப் பேசு—தல்** *paccai-y-āy-p-pēšu,* 19. செ.கு.வி (v.i.) செ.குன்றா.வி (v.t.) 1. வெளிப்படையாய்ப் பேசுதல்; to be out spoken. 2. *பச்சைபச்சையாய்ப்பேசு—,* பார்க்க; see *paccai paccai-y-ay-p-pēšu-,*

*[பச்சையாய் + பேசு—,]*

**பச்சையிரும்பு** *paccai-y-irumbu,* பெ. (n.) 1. காய்ச்சாத இரும்பு; untampered iron. 2. தேனிரும்பு; pure iron. 3. இரும்பு வகை (வின்.); cold iron.

*[ம. பச்சிரும்பு]*

*[பச்சை + இரும்பு]*

**பச்சையிளநாவி** *paccai-y-iḷanāvi,* பெ. (n.) மூன்று மாதத்திய பிண்டம்; foetus three months old. (சா.அக.)

*[ பச்சை + இளநாவி]*

**பச்சையிளநீர்** *paccai-y-iḷanīr,* பெ. (n.) பச்சைநிற இளநீர்; water of green tender coconut.

*[ பச்சை + இளநீர்]*

(இப்பச்சையிளநீரால் 'மேகம்', பழைய காய்ச்சல் 'கபாதிக்கம்', 'எரிகிருமி', யானைச்சொறி, கண்ணோய் ஆகியன தீருமென்று சா.அக. கூறுகிறது.)

**பச்சையிறைச்சி** *paccai-y-iṟaicci,* பெ. (n.) சமைக்காத புலால்; uncooked meat. (சா.அக.)

*[ பச்சை + இறைச்சி]*

**பச்சையீரம்** *paccai-y-īram,* பெ. (n.) அதிக ஈரம் (வின்.); excessive dampness.

*[பச்சை + ஈரம்]*

'பானை பச்சையீரமாக இருக்கிறது' (குய.வழ.)

**பச்சையுடம்பு** *paccai-y-uḍambu,* பெ. (n.) 1. பிள்ளை பெற்றவளின் மெல்லியவுடம்பு; the delicate body of a woman after parturition. 2. பச்சைநிறவுடம்பு; green pallor of the skin. 3. நோயாளியின் மெலிந்தவுடம்பு; emaciated body of a convalescent. (சா.அக.)

*[பச்சை + உடம்பு]*

**பச்சையுடல்** *paccaiyuḍal,* பெ. (n.) புண்பட்டவுடம்பு; body subjected to operation or inflincted by wound. (சா.அக.)

*[பச்சை + உடல்]*

**பச்சையுப்பு** *paccai-y-uppu,* பெ. (n.) 1. தனியுப்பு. (வின்.) unmixed salt. 2. கட்டாதவுப்பு; salt not consolidated or fixed. 3. சோற்றுப்பு; common salt. (சா.அக.)

*[பச்சை + உப்பு]*

**பச்சையெண்ணெய்** *paccai-y-eṇṇey,* பெ. (n.) வேகவைக்காத ஆமணக்கு முத்திலிருந்து எடுக்கும் எண்ணெய்; cold-drawn castor oil.

*[பச்சை + எண்ணெய்]*

**பச்சையெழுது–தல்** *paccai-y-eḻudu-,* **5.** செ.குன்றா.வி.(v.t.) திருமணம் முதலிய சிறப்புகளில் கொடுத்த நன்கொடைகளுக்குக் கணக்கிடுதல் (சீவக.829, உரை); to make a list of presents given on a marriage occasion, etc.

*[பச்சை + எழுது–,]*

**பச்சைரதி** *paccai-rati,* பெ. (n.) வயிரங்களை எடைபோடும் ஒருவகை நிறையளவு; standard weight = 5/16 gr. troy, used in weighing diamonds.

*[பச்சை + ரதி]*

**பச்சைவசம்பு** *paccai-vasambu,* பெ. (n.) உலர்ந்து பசுமையாகவுள்ள வசம்பு; fresh sweet flag (undried).

*[பச்சை + வசம்பு]*

**பச்சைவஞ்சி** *paccai-vañji,* பெ. (n.) பசுமையாகவுள்ள சீந்தில்; fresh moon creeper.

*[பச்சை + வஞ்சி]*

**பச்சைவடம்** *paccai-vaḍam,* பெ. (n.) *பச்சவரம்* பார்க்க; (ஈடு 4, 8, 2.) see *paccavaram.*

*[பச்சை + வடம்]*

**பச்சைவடிவாள்** *paccai-vaḍivāḷ,* பெ. (n.) பச்சைப் பாம்பு; greenish snake. (சா.அக.)

*[பச்சை + வடிவாள்]*

**பச்சை வயிறு** *paccai-vayiṟu,* பெ. (n.) **1.** பிள்ளை பெற்ற வயிறு; painful abdomen after parturition. **2.** வெந்த வயிறு; inflamed abdomen. **3.** வெறும் வயிறு; empty stomach. (சா.அக.)

*[பச்சை + வயிறு]*

**பச்சைவழித்தல்** *paccai-vaḻittal,* பெ. (n.) *பச்சை பூசுதல்* பார்க்க; see *paccai pūšu-,*

*[பச்சை + வழித்தல்]*

**பச்சைவளை** *paccai-vaḷai,* பெ. (n.) பொன் இடையிட்டதும் பச்சைக் கண்ணாடியாலானதுமான கையணிவகை; glass bracelet ornamented with gold.

*[பச்சை + வளை]*

'பச்சைவளை பவளவளையம்மே' (நாட்.)

**பச்சைவாழை** *paccai-vāḻai,* பெ. (n.) **1.** *பச்சை நாடான்* பார்க்க; see *paccai naḍāṉ.* **2.** வாழை வகை; dwarf banana. **3.** சமைக்காத வாழைக்காய்; raw plantain which is not cooked. **4.** சீனத்து வாழை; musa chiniasis

*[பச்சை + வாழை]*

**பச்சை விச்சை** *paccai-viccu,* பெ. (n.) குருவிச்சை; ovate-leaved ivory wood.

*[பச்சை + வில்]*

**பச்சைவில்** *paccai-vil,* பெ. (n.) **1.** வானவில், (நாமதீப. 114.); rainbow **2.** காமன் வில் (சங்.அக.); bow of indian cupid.

*[பச்சை + வில்]*

**பச்சைவீடு** *paccai-vīḍu,* பெ. (n.) பருவ மெய்திய பெண்ணை மறைவாய் இருத்தி வைத்தற்குரிய பசுந்தழையாலான குடில்; (செங்கை. மீன.) green olā hut which is used for age attend.

*[பச்சை + வீடு]*

**பச்சைவெட்டான்** *paccai-veṭṭāṉ,* பெ. (n.) வாழை வகை; a kind of plantain.

*[பச்சை + வெட்டான்]*

**பச்சைவெட்டு** *paccai-veṭṭu,* பெ. (n.) **1.** தூய்மை செய்யப்படாத நச்சு மருந்து; medicinal mineral used in its crude condition. **(வின்.). 2.** வெளிப்படை. (கொ.வ.); openness, bluntness **3.** பழுக்காத காய்; unripe fruit, **4.** வாய் வேகச் செய்யும் மருந்து; medicine causing inflammation of the mouth.

*[பச்சை + வெட்டு]*

**பச்சைவெட்டுக்கல்** *paccai-veṭṭu-k-kal,* பெ. (n.) ***பச்சைக்கல்*** பார்க்க; see ***paccai-k-kal.***

*[பச்சை + வெட்டு + கல்]*

**பச்சைவெட்டுச்சந்தனம்** *paccai-veṭṭusantanam,* பெ. (n.) **அரைத்த சந்தனம்;** paste of sandal wood.

*[பச்சை + வெட்டு + சந்தனம்]*

**பச்சைவெட்டுவேதை** *paccaiveṭṭuvētai,* பெ. (n.) கட்டுவகையில்லாமலே நெருப்புக் கோரும் சரக்குகளைக் கொண்டு செய்யும் வேதை முறை; in alchemy the process of transmutation without consolidation.

*[பச்சை + வெட்டு + வேதை]*

**பச்சைவெட்டை** *paccai-veṭṭai,* பெ. (n.) சந்தன வகை **(சிலப். 14, 108, உரை);** a kind of sandal.

*[பச்சை + வெட்டை]*

**பச்சைவெண்ணெய்** *paccai-veṇṇey,* பெ. (n.) காய்ச்சாத பாலிலிருந்து எடுக்கும் வெண்ணெய் **(கொ.வ.);** butter churned from unboiled milk.

*[பச்சை + வெண்ணெய்]*

**பச்சைவெயில்** *paccai-veyil,* பெ. (n.) மாலைக் காலத்து வெயில்; evening sun. ***"பசந்து என்றார் மாலைக் காலத்துப் பரந்த பச்சை வெயிலை"*** **(சிலப். 4, 5, உரை.)**

*[பச்சை + வெயில்]*

மாலைவெயில் வெப்பங்குன்றியமையால் பச்சை வெயிலாயிற்று.

**பச்சைவெள்ளம்** *paccai-veḷḷam,* பெ. (n.) ***பச்சைத்தண்ணீர்*** பார்க்க; see *paccai-t-taṇṇir*

*[ம. பச்சவெள்ளம்]*

*[பச்சை + வெள்ளம்]*

**பச்சைவேல்** *paccai-vēl,* பெ. (n.) ***சீமைவேல்.*** (l.) jerusalem-thorn, green babool.

*[பச்சை + வேல்]*

**பச்சைவேலி** *paccai-vēli,* பெ. (n.) **உயிர்வேலிகள்;** fence as living shrubs.

*[பச்சை + வேலி]*

**பச்சைவேலிப்பயிர்கள்** *paccai-vēli-payirgaḷ,* **பெ.** (n.) **வேலிக்கென்றே ஏற்பட்ட நிலைத்திணைகளைப் பயிர்செய்து அவற்றை வேலியாக்குதல்;** green fencing plants. **இவ்வகை வேலிகளில் சில தட்பவெப்ப நிலைக்கு ஏற்றனவும் மற்றும் சில எவ்விடத்திற்கும் ஏற்றனவுமாகப் பல வகைப்படும். இவற்றில் சில வயல்களுக்கும் சில தோட்டங்களுக்கும் சில**

பூந்தோட்டங்களுக்கும், அவற்றில் சில வளி மறையாகக் (wind-screens) காற்றின் வேகத்தைத் தடுப்பதற்கும் சில அரிப்பினை தடுப்பதற்கும் பயன்படுகின்றன. மறுவ: உயிர்வேலி. உயிர்வேலி நிலைத்திணைகளின் பெயர்கள் 1. கற்றாழை வகைகள் 2. கள்ளி வகைகள் 3. இளுவை வகைகள் 4. சீமைவகைகள் 5. மைசூர் முள்வேலி 6. கொடுக்காய்ப்புளி 7. சீமை ஆவிரை 8. மூங்கில். வேறுவகை 1. யானைக் கற்றாழை 2. கோல்கன்னி 3. சப்பாத்தி 4. கிளுவை 5. கொடுக்காப்புளி 6. சீமை ஆவிரை 7. தங்க அலரி 8. ஆதொண்டை 9. திவிதிவிசெடி 10. கழற்செடி 11. ஆடாதோடை 12. ஆமணக்கு இனங்கள் 13. கம்பளிப்பூச்சிச் செடி 14. பிஞ்சில் சங்கம் 15. பூவரசு 16. சவுக்கு 17. பொன்னலரி 18. களாக்காய் 19. மருதோன்றி 20. நாகதாளி 21. விராளி 22. கண்ணாடிக்கள்ளி

*[பச்சைவேலி + பயிர்கள்]*

**பச்சோணான்** *paccōṇāṉ,* பெ. (n.) ஓணான் வகை; chameleon.

*[பச்சை + ஓணான்]*

**பச்சோந்தி** *paccōndi,* பெ. (n.) 1. தான் இருக்கும் இடத்தின் சூழலுக்கு ஏற்பத் தன் தோலின் நிறத்தை மாற்றிக்கொள்ளும் தன்மையை இயற்கையாகப் பெற்ற ஒருவகை ஓணான்; chameleon. 2. நிலையான தன்மை இல்லாதவன்; சூழ்நிலைக்குத் தகுந்தபடி மாறுபவன்; opportunist. "நம் கட்சியில் பச்சோந்திகளுக்கு இடம் தரக்கூடாது"

*[பச்சை + ஓந்தி]*

மறுவ: பச்சை ஓணான்

ஓதி
சரடம்
ஓமான்
தண்டு
ஒந்தி

(முதுகெலும்பித் தொகுதியில் (vertebrata) ஊர்வன வகுப்பில் (reptile) ஒந்தி வரிசையில் (lacertilia) தம்முடைய நிறத்தை எளிதாக, விரைவில் பெரிதும் மாற்றிக் கொள்ளக் கூடிய ஆற்றலுள்ளதும் வடிவில் ஓணான் போன்றதுமான விலங்கு (கலைக்.6.638)).



**பச்சோலை** *paccōlai,* பெ. (n.) காயாத ஓலை; greenola. *"பச்சோலைக் கில்லை யொலி"* (நாலடி. 256).

க. பச்சோலெ, ம பச்சோல

*[பச்(சை) + ஓலை]*

**பச-த்தல்** *pasa-,* 1 செ.கு.வி. (v.i.) 1. பசுமையாதல்; to be green. *"மாலுமோர் பாலோங்கிய வண்ணம் போன்று மொளிநிறம் பசந்து தோன்ற"* (திருவிளை. யானையெய்.27) 2. காமத்தால் மேனி பசலை நிறமாதல்; to turn sallow or pale, as the skin through love-sickness. *"உங்களங்கம் பித்தியைப்போற் பசப்பதுரை செய்யுமே"* (புகலூரந்தாதி, நங்களங்கம் என்ற முதற்குறிப்புப் பாடலிறிக.) 3. காமநோய் முதலியவற்றால் ஒளிமங்குதல்; to lose lustre, complexion or colour through love sickness. *"பூப்போலுண்கண் பசந்து"* (புறநா. 96.) 4. மங்கிப்போதல். (வின்.); to become dim, as twilight 5. பொன்னிறங் கொள்ளுதல்; to become goldent, as the sky in the evening. *"திசைமுகம் பசந்து"* (சிலப். 4, 5.)

6. காமமேலீட்டினால் உடம்பின் நிறம் வேறுபட்டுப் பொன்னிறப் புள்ளியுண்டாதல்; change of complextion by appearance of yellow dots or patches in the body said to due to excess of sexual passion or lonely sickness. "நறுநுதல் பசத்தல் அஞ்சிச்சிறுமை உறுவோ செய்பறியலரே" (நற்.1–8.) "பல்லிதழ் உண்கண் பசத்தல் மற்றெவனோ" (ஐங்.170–4.) "ஏர்திகழ் ஒண்ணுதல் பசத்தல் ஓரார் கொல் நம் காதலரே'' (ஐங்.225–4) ''நன்னுதல் பசத்தலாவது துண்ணி" (ஐங்.234–2) "முயங்கி கைகளை ஊக்கப் பசந்தது பைந்தொடிப் பேதை நுதல்" (குறள்–1238) "நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமும் எழுநாளேம் மேனி பசந்து" (குறள்.1278)

*[பசப்பு → பச–,]*

**பசக்கு** *pasakku,* **1.** பொருள்; substance. **2.** திறன்; ability.

*[பச → பசக்கு]*

**பசக்கெனல்** *pasakkenal,* பெ. (n.) திடீரெனற்குறிப்பு; onom. expr. signifying suddenness.

*[பசக்கு + எனல்]*

**பசகன்** *pasakan,* பெ. (n.) சமையற்காரன். (யாழ்.அக.) cook.

**பசங்கம்** *pasangam,* பெ. (n.) வேலை; affair business, matter. cook. *'என் பசங்கத்துக்கு வாராதே'* (இ.வ.)

**பசங்கள்** *pasangaḷ,* பெ. (n.) பயல்கள் என்பதன் கொச்சை வழக்கு; corr.of.பயல்கள்.

*[பயல்கள் → பசங்கள்]*

**பசடன்** *pasaḍaṉ,* பெ. (n.) அறிவிலான்; ignorant person; *''புன்பசடர் செய்த குற்றம் பொறுத்திடவும் வேண்டாமோ"* (வள்ளி. கதை. ms.)

*[ஒருகா: அசடன் → பசடன்]* ஒ.நோ. கசடன்.

**பசண்டை** *pasaṇḍai,* பெ. (n.) **1.** பசுமை; verdure **2.** ஈரம்; moisture **3.** நன்னிலை; easy ciscumstances.

*[பசுமை + பசண்டை]*

**பசந்ததுவரை** *pasanta tuvarai,* பெ. (n.) **1.** பேய்த்துவரை; a better lomnd pf dholl. **2.** காட்டுத்துவரை; wild red gram.

*[பசந்த + துவரை]*

**பசந்தம்** *pasandam,* பெ. (n.) நேரம்; time, opportunity

**பசந்து** *pasandu,* பெ. (n.) **1.** மிகு நேர்த்தி; elegance; beauty; attractiveness; fireness. *'பசந்தெனவே சென்று'* (கவிகுஞ்.2.) **2.** உயர்ந்த மாம்பழம்; a superior kind of mango fruit.

*[பசந்தம் → பசந்து]*

**பசந்தெழுபரவரல்** *pasandeḻuparuvaral,* பெ. (n.) பசலை பாய்தலால் வருந்துன்பம்; affliction due to the love affair. *"பசந்தெழுபருவரல்தீர நயந்தோர்க்குதவா நாரின் மார்பே"* (நற்.205.8.).

*[பசந்து + எழு + பருவரல்]*

**பசப்பு[1]–தல்** *pasappu-,* 5. செ.குன்றா.வி (v.t.) இன்முகங்காட்டி ஏய்த்தல்; to deceive, allure, fascinate, gain the affection. *"தந்திரமாய் மாதைப் பசப்பவென்று"* (விறலிவிடு.)

*[பச → பசப்பு]*

**பசப்பு²—தல்** *pasappu-,* 5. செ.குன்றா .வி (v.i.) அலப்புதல்;(வின்.) to chatter, talk too much மறுவ: ஓயாமற்பேசுதல், மயக்குதல்.

**பசப்பு³** *pasappu,* பெ. (n.) 1. பச்சைநிறம்; green colour. "*பால் பொன் பசப்புக்கார் வண்ணம்*" (திவ். இயற். நான்மு. 24.) 2. மகளிர்க்குப் பிரிவாற்றாமையால் உண்டாம் நிறவேறுபாடு. (தொல். சொல். 308). (குறள், 1182.); sallow complexion of women due to love-sickness. 3. ஈரப்பற்று (யாழ்.அக.); moisture. 4. நலமான நிலை; healthy condition (இ.வ.) 5. வளம்; wealth, prosperity. 6. பொன்மை; gold colour.

*[பசுமை → பசப்பு]*

**பசபச—த்தல்** *pasapasa-,* 11. செ. கு. வி. (v.i.), 1. தினவெடுத்தல் (வின்.); to itch. 2. முறுமுறுத்தல்; to chatter; to grumble in a suppressed tone.

*[பசத்தல் → பசபச—,]*

**பசபசத்தான்** *pasa-pasattāṉ,* பெ. (n.) அலப்புவோன்; chatterer.

*[பசபச + அத்து + ஆன்]*

**பசபசப்பு¹** *pasapasappu,* பெ. (n.), 1. தினவு; itching. 2. அலப்புகை; chattering.

*[பசபச → பசபசப்பு]*

**பசபசப்பு²** *pasapasappu,* பெ. (n.), கோள் சொல்லுதல் (பாண்டிச்); tale-bearing

**பசபசப்பு³** *pasapasappu,* பெ. (n.) redupl. of. பசப்பு–, tale-bearing.
**மறுவ:** பசபசத்தல்.

*[பசபச → பசபசப்பு]*

*[பசப்பு + பசப்பு → பசபசப்பு]*

**பசபசெனல்** *pasapaseṉal,* பெ. (n.), (1) தினவெடுத்தற்குறிப்பு; onom expr. signifying itching sensation. (2). அலப்புதற்குறிப்பு; onom. expr. signifying chattering. (3) மழைத்தூறற் குறிப்பு; onom. expr. signifying drizzling. (4) மருண்டு பார்த்தற் குறிப்பு; expr. signifying staring blankly. '*பசபசென்று விழிக்கிறான்*'.

*[பசபச + எனல்]*

**பசம்பை¹** *paśambai,* பெ. (n.), கழுத்து; neck. (சா. அக.)

**பசம்பை²** *pasambai,* பெ. (n.), மரமிணைக்கை; dove-tailing in cabinet work. (வின்.)

**பசமந்ததிரம்** *pasamandadiram,* பெ. (n.), பசமருத்திரம். (யாழ். அக.) பார்க்க; see pasamaruttiram.

**பசமநத்திரம்** *pasamanattiram,* பெ. (n.). *பசமருத்திரம் (வின்.)* பார்க்க; see ***pasaruttiram***

**பசமருத்திரம்** *pasamaruttiram,* பெ. (n.). மரமஞ்சள் (சங். அக.); **tree turmeric**.

*[ஒருகா. பசுமை + மருத்திரம்]*

**பசமூலி** *pasa mūli,* பெ. (n.). பச்சிலை மூலிகை; **medicinal herb**. 'எல்லாப் பசமூலிகைகளையும் கடையில் வாங்க முடியாது; நாமே முயன்று கண்டு பிடிக்க வேண்டும்'.

மறுவ: பச்சை மூலி.

*[பச்சைமூலி → பசமூலி]*

**பசரிகம்** *paśarigam,* பெ. (n.), பூனைக்காஞ் சொறி; small climbing nettle. (சா. அக.)

மறுவ: கருங்காஞ் சொறி

**பசல்**[1] *pasal,* பெ. (n.), சிறுவன். (நன். 122, மயிலை.) (ஈடு, 9, 5, 6); boy.

*[பயல் → பசல்]*

க. பசுலெ

**பசலத்தி** *pasal-atti,* பெ. (n.), 1. *உதி*[1] பார்க்க; see *uti*[1]. 2; trumpet flower. 2. பார்க்க, இராப்பாலை; wooly crispate trumpet flower. 3. கடலாத்தி; a sea plant.

*[பசுமை → பசல் + அத்தி]*

**பசலையள்** *pasalaiyaḷ,* பெ. (n.), பசலைகொண்டவள்; beauty spots on the skin of a woman. "மேனி மறைத்த பசலையள் ஆனாது" (கலி. 143–6.) "நன்னிறம் பரந்த பசலையள்" (அகம் 234 – 17.)

*[பசலை → பசலையள்]*

**பசலை**[1] *pasalai,* பெ. (n.), 1. அழகுத்தேமல். beauty spots on the skin of a woman. "*பசலை சேர்முலை மங்கையர்*" (கந்தபு. இரணியன்த். 56) 2. பொன்னிறம்; gold colour. "*பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ*" (புறநா. 155) 3. காம நோயால் உண்டாம் நிறவேறுபாடு; sallowness, paleness of complexion from love-sickness. "*பசலை பாயப் பிரிவு தெய்யோ*" (ஐங்குறு. 231) 4. இளமை; infancy, tenderness. *பசலை நிலவின்* (புறநா. 392.) 5. கவலையின்மை; carelessness, indifference. '*அவன் மிகவும் பசலையாயிருக் கிறான்*' இ.வ. 6. *பசளை* பார்க்க; (பதார்த்த. 598.) see *pasaḷai.*

க. பசலெ

*[பசுமை → பசலை]*

**பசலை**[2] *pasalai,* பெ. (n.), 1. மனக்கவலை; restlessness of mind; "நித்தை நீள் பசலைப் பேரோர் விரகெனும் வேலின் வீழ" (சீவக. 3080) 2. வருத்தம்; affliction. "*சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்*" (முல்லைப். 12.)

*[பசல் → பசலை]*

**பசலைக் கதை** *pasalai-k-katai,* பெ. (n.), வீண்கதை; purposeless stories.

*[பசலை + கதை]*

**பசலைக் கீரை** *pasalai-k-kirai,* பெ. (n.), ஒருவகை உண்ணக்கூடிய கீரை; an edible green.

மறுவ: பசலைக்கீரை, கோழிக்கீரை

*[பசலை + கீரை]*

**பசலைபாய்தல்** *pasalai pāytal,* பெ. (n.), காமநோயால் மகளிர்க்கு உண்டாகும் நிறவேறுபாடு; sallowness, paleness of complexion from love sickness. "பசலை **பாயப்பிரிவு தெய்யோ**" (ஐங்குறு. 231.) (தொல். III 266–3.)

**பசலை மண்** *pasalai maṇ,* பெ. (n.) மணலும் களிமண்ணும் சேர்ந்தது; sand mixed with clay, back mould. (சா. அக.)

*[பசலை + மண்]*

**பசலை மரம்** *pasalai-maram,* பெ. (n.) பயன்றருமரம்; fruit tree. (S. I. I. iv, 105.)

*[பசலை + மரம்]*

**பசவ்வியம்** *pasavviyam,* பெ. (n.), புல். (சங். அக.); grass.

**பசள்** *pasaḷ,* பெ. (n.), பலா, (சங். அக.); jack fruit tree.

**பசளி** *pasaḷi,* பெ. (n.) (j), **1.** மடைமுகம்; margin or head of a channel. **2.** *பசளை* பார்க்க; see *pasaḷai.*

*[பசளை → பசளி]*

**பசளை** *pasaḷai,* பெ. (n.), **1.** கீரைவகை; spinach, (l.) **2.** ஒருவகைக் கீரை; purslane. **3.** கீரைவகை; malabar nightshade. **4.** கோழிக்கீரை; common Indian purslane (வின்.) **5.** *காட்டுமஞ்சரி* பார்க்க; see *kāṭṭu manjari* **6.** குழந்தை; infant, tender child. **7.** உரம், (யாழ். அக.) manure, compost.

*[வயலை → வசலை →பசலை → பசளை]*

மறுவ: கொடிப்பசலை; கொத்துப்பசளை

**பசளைக்கதை** *pasaḷai-k-katai,* பெ. (n.) *பசலைக்கதை (யாழ். அக.)* பார்க்க; see *pasalikkatai.*

***[பசளை + கதை]***

**பசளைக்கல்** *pasalai-k-kal.* **பெ.** (n.), சுண்ணாம்பு கலந்த **களிமண்; clay, marl.** (pond.)

*[பசளை + கல்]*

**பசளைக்கலம்** *pasaḷai-k-kalam,* பெ. (n.), பச்சைப் பானை; unburnt pot. *'பசளைக் கலம் நெரித்தாற் போலே'* (ஈடு. 7, 4, 5)

*[பசளை + கலம்]*

**பசளைமண்** *pasaḷai-maṉ,* பெ. (n.), உரமுள்ள மண்; good loam.

*[பசளை + மண்]*

**பசற்றனம்** *pasarranam,* பெ. (n.), இளமைப் பண்பு; boyishness *"உன் பசற்றனமிறே நலிகைக்கடி"* (ஈடு. 9, 5, 6)

க. பகுரளதன,

*[பசல் + தனம்]*

**பசறு** *pasaṟu,* பெ. (n.), பச்சிலைச் சாறு; (வின்.) expressed juice of green herbs.

**தெ.** பசறு

*[பசள் → பசளு → பசறு]*

**பசறை** *pasaṟai,* பெ. (n.), கோழிக்கீரை; Indian purane. small variety of spinach. (சா. அக.)
மறுவ: சிறுபசலைக்கீரை.

*[பசளை – பசறை]*

**பசனம்** *pasaṉam,* பெ. (n.) **1.** சமைத்தல்; cooking. **2.** சிற்றின்பம்; sexual pleasure **3.** செரிமானஆற்றல்; a digestive secretion

**பசனமா–தல்** *pasanmal-,* **6.** செ.கு.வி. (v.i.) **செரிமானமாதல்;** being digested.

***[பசனம் + ஆ –, ]***

**பசாசம்**[1] *pasāsam,* பெ. (n.), **1.** பெருவிரலுஞ் சுட்டுவிரலும் நீங்க ஒழிந்த மூன்று விரலுந் தம்மிற் பொலிந்து நிற்கும் இணையா விணைக்கை (சிலப். 3, 18, உரை); a gesture with one hand in which the fingors other than the thumb and the yorefinger are joined together and held up right.

**பசாசம்**[2] *pasāsam,* பெ. (n.), இரும்பு; iron. "காந்தங் கண்ட பசாசத்தவையே" (சி. போ.5)

**பசாடு** *paśāḍu,* பெ. (n.) மாசு; film,as in the eye; speck, as in a gem; scum, as on the surface of water.

'மாசாட்டியம்' என்பது கண்ணொளி மங்குதலைக் குறிக்கும் சிற்றூர்ப்புற வழக்கு.

*[மாசாடு → மாசாட்டியம். மாசாடு → பாசாடு → பசாடு]*

**பசாடுரி–த்தல்** *paśāḍuri-,* 4. செ.கு.வி. (v.i.) விழியின்தோட்டைவுரித்தல்; to remove film from the eye.

*[மாசாடு → பாசாடு → பசாடு + உரி–.]*

**பசாடை** *paśāḍai,* பெ. (n.) *பசாடு.* (யாழ்ப்.) பார்க்க; see *paśāḍu.*

*[பசாடு → பசாடை]*

**பசாந்திரியம்** *paśāndiriyam.* பெ. (n.) ஒதியமரம்; Indian ash tree.

**பசாமி** *paśāmi,* பெ. (n.) ஞாழல்; a species of fragrant tree, different shrubs such as cassia jasmine etc. (சா.அக.)

**பசான்** *paśāṉ,* பெ. (n.) 1. மேழ (சித்திரை) மாதத்தில் அறுவடையாகும் ஒருவகை நெல்; a kind of paddy harvested in the month of cittirai. 2. பசான் நெல்லின் அறுவடைக் காலம்; harvest time of pasāṉ paddy. *'இராஜராஜ தேவர்க்கு யாண்டு இருபத்தெட்டாவது பசான் முதல்'* (s.i.i.ii,132.)

மறுவ. கோடைச்சம்பா.

**பசானம்** *paśāṉam,* பெ. (n.) *பசான்.* (I.M.P.Tn.383.) பார்க்க; see *paśāṉ.*

*[பசான் → பசானம்]*

1. அறுதிங்களில் விளையும் சம்பா நெற்பயிர்; a particular type of a paddy of five or six months duration (harvester sometime in January) "இந்நெல் அளக்குமிடத்து கார்பாதி பசானம் பாதி அளப்பதாகவும்" (தென்.க.தொ. 3:2 பக்–168)

**பசி–த்தல்** *paśi-,* 11.செ.கு.வி. (v.i.) பசிகொள்ளுதல்; to be hungry. "*பசிப்புயி ரறியாப் பான்மைத்து*" (மணிமே.14,58.) "பழித்தக்க செய்யான் பசித்தல் தவறோ" (நாலடி. 320–2) "பண்ணழிந்து ஆர்தலின் நன்று பசித்தல்" (நான்மணி.15–3) "நாணில் வாழ்க்கை பசித்தலில் துவ்வாது" (முதுமொழி. 33–1)

க. பசி, ம. பயிக்க

*[பசி → பசி–,]*

'பசிவந்தால் பத்தும் பறக்கும்' (பழ.) 'பசித்தவன் தின்னாததும் இல்லை பகைத்தவன் சொல்லாததும் இல்லை'. (பழ.)

**பசி²** *paśi,* பெ. (n.) 1. உயிர்த்துன்பம் பன்னிரண்டனுள் ஒன்றாகிய உணவு வேட்கை; hunger, appetite, craving for food, one of uyir-t-tuṉbam.v. "*பசிப்பிணி யென்னும் பாவி*" (மணிமே.11,80) 2. வறுமை; poverty "*தொல்பசியறியா*" (பெரும்பாண்.253.) 3. தீ (யாழ்.அக.); fire.

பசிக்கொடுமையின் அடைமொழிகள்

"ஆடுபசி யுழந்தநின் னிரும்பே ரொக்கலொடு நீடுபசி யொராஅல்வேண்டி" (பொருந.61–62) "ஒல்குபசி யுழந்த வொடுங்குநுண் மருங்குல்" (சிறுபாண்.135)

"அழிபசி வருத்தம் வீட" (சிறுபாண்.140)

"பழம்பசி கூர்ந்தவெம் மிரும்பே ரொக்கலொடு" சிறுபாண்.25)

"ஆறுசெல் வம்பலர் காய்பசி தீரச் சோறடு குழிசி" (சிறுபாண்.365)

"ஈன்றுகாண் மடிந்த பிணவுப்பசி கூர்ந்தென" (நற்.29–3)

"ஓய்பசிச் செந்நாய் உயங்குமரை தொலைச்சி" (நற்.43–3)

"பசிஅட முடங்கிய பைங்கண் செந்நாய்" (நற்.103–6)

"கயந்தலை மடப்பிடி உயங்கு பசி களைஇயர்"(நற்.137–6)

"உறுபசிக் குறுநரி குறுகல் செல்லாது" (நற்.164.9)

"ஊன்தின் பிணவின் உட்குபசி களைஇயர்" (நற்.322–5)

"களரிப் புளியிற் காய்பசி பெயர்ப்ப" (நற்.374–3)

"வாழி ஆதன்! வாழி அவினி பசியில் ஆகுக! பிணிசேண் நீங்குக" (ஐங்குறு.5–2)

"சுரும்பசி களையும் பெரும்புனல் ஊர" (ஐங்குறு.65–2)

"பசிதின வருத்தும் பைதறு குன்றத்து" (ஐங்குறு.305–2)

"மாபசி மறுப்பக் கார்தொடங் கின்றே" (ஐங்குறு.497–3)

க. பசி. ம. பயி.

'பசிக்குக் கறி வேண்டாம்; தூக்கத்திற்குப் பாய்வேண்டாம்' (பழ.)
'பசிருசி அறியாது, தூக்கம் சுகம் அறியாது' (பழ.)

**பசிக்குறைவு** *paši-k-kuṟaivu,* பெ. (n.) பசியில்லாதிருத்தல்; loss of appetite or poor appetite.

*[பசி + குறைவு]*

**பசிக்கொட்டாவி** *paši-k-koṭṭāvi,* பெ. (n.) பசியால் உண்டாகும் கொட்டாவி; yawning from hunger.

*[பசி + கொட்டாவி]*

**பசிக்கொடுமை** *paši-k-koḍumai,* பெ. (n.) பசியால் ஏற்படும் கொடுமை; severity, of hunger. (சா.அக.)

*[பசி + கொடுமை]*

**பசிகரி.** *pašikari,* பெ. (n.) எள்; sesame.

**பசிகொள்ளல்** *paši-k-koḷḷal,* பெ. (n.) பசியெடுத்தல்; getting hunger or appetite.

*[பசி + கொள்ளல்]*

**பசிச்சோர்வு** *paši-c-cōrvu,* பெ. (n.) பசியால் ஏற்படும் சோர்வு; withering through hunger.

*[பசி + சோர்வு]*

**பசித்தாக்கம்** *paši-t-tākkam,* பெ. (n.) பசிக் கொடுமை; suffering from hunger.

*[பசி + தாக்கம்]*

'பசிக்குப் பனம்பழம் தின்றால் பித்தம்பட்டபாடு படட்டும்'. (பழ.)

**பசித்தீபனம்** *paši-t-tīpaṉam,* பெ. (n.) உணவு வேட்கை; (வின்.) appetite.

*[பசி + தீபனம்]*

**பசித்துவாழ்–தல்** *pašittuvāḻ-,* 16. செ.கு.வி. (v.i.) எளியவாழ்வு வாழ்தல் (s.i.i.vi.149); to live in indigent circumstances

*[பசித்து + வாழ்–,]*

**பசிதகனி** *paši-tagaṉi* பெ. (n.) சோறு. (சங்.அக.); cooked rice.

*[பசி + தகனி]*

**பசிதம்** *pasitaṉam,* பெ. (n.) உணவு வேட்கை; appetite. (வின்.)

*[பசி → பசிதம்]*

**பசிதம—த்தல்** *pašitama-,* 3. செ.கு.வி. (v.i.) பசியாறுதல்; a appearing hunger.

*[பசி + தம–,]*

**பசிதாகம்** *pašitāgam,* பெ. (n.) சோறும் தண்ணீரும் வேண்டல்; hunger and thirst; a craving for food and water.

*[பசி + தாகம்]*

**பசிதாளல்** *pašitaḷal,* பெ. (n.) பசிபொறுத்தல்; to endure or put up with hunger, to tolerate hunger, keeping wolf from the door.

*[பசி + தாளல்]*

**பசிதின்னுதல்** *pašitiṉṉudal,* பெ. (n.) பசிவருத்துகை; suffering caused by hunger.

*[பசி + தின்னுதல்]*

'பசியாமல் இருக்க மருந்து கொடுக்கிறேன் பழையது இருந்தால் போடு' என்றானாம். (பழ.)

**பசிது** *pašidu,* பெ. (n.) பசியது; that which is green. "*பசிது கரிதென்று*" (திவ்.இயற்.3,56.);

க. பசிது

*[பசுமை–பசிது]*

**பசிதூண்டி** *pašitūṇḍi,* பெ. (n.) பசியை விரைவாக்குவது; drug that stimulater hunger.

*[பசி + தூண்டி]*

**பசிந்தி** *pašindi,* பெ. (n.) வெண்ணிற முள்ளதும் 15 அங்குலம் வரை வளர்வதுமான கடல்மீன் வகை; a seafish, silvery, attaining 15 in. in length, drepame punctata. முள் மிகுதியாகக் காணப்படுவதும் வாவல் போலும் உருவமைப்புடையதும் இம்மீன் என அறியலாகிறது.

**பசிநாள்** *pašināḷ,* பெ. (n.) பசியையுடைய காலம்; the time of hungry. "*பாடிநின்ற பசிநாட்கண்ணே*" (புறநா.237–2)

மறுவ: பசிநேரம்.

*[பசி + நாள்]*

'பசியுற்ற நேரத்தில் கிடைக்காத பாலும் பழமும் பசியற்ற நேரத்தில் ஏன்?'. (பழ.)

**பசிநோய்** *pašinōy,* பெ. (n.) பசியாகிய நோய்; the hungry as a sick. "மாந்தர் பசிநோய் மாற்றக் கண்டாங்கு" (மணிமே.20–32) "பேணா மாக்கள் பேசார் பிணித்தோர், படிவநோன்பியர் பசிநோயுற்றோர்" (மணிமே. 28, 224.)

*[பசி + நோய்]*

**பசிப்பகை** *paši-p-pagai,* பெ. (n.) 1. பசியை நீக்கும் உணவு; the food to avoid the hungry. 2. பசியை நீக்கும் வள்ளல்; philanthropist. "பைதற் சுற்றத்துப் பசிப்பகை யாகி" (புறநா.212, 7) "தன்பகை கடிதலன்றியும் சேர்ந்தோர் பசிப்பகை வல்லவன் மாதோ" (புறநா.400–17). "நின்பசிப்பகைப் பரிசில் காட்டினை கொளற்கே" (புறநா.181, 10)

*[பசி + பகை]*

**பசிப்பகைஞன்** *paši-p-pagañaṉ,* பெ. (n.) இரப்போர் பசிதீர்க்கும் வள்ளல்; philanthropist. "கொடையெதிர்ந்து ஈர்ந்தையோனே பாண்பசிப் பகைஞன்"(புறநா.180, 7)

*[பசி + பகைஞன்]*

**பசிப்பாழி** *paši-p-pāḻi,* பெ. (n.) உடம்பு; body which is the seat of hunger *"பசிப்பாழி மூலமறுப்பார்"* (சைவச.பொது.429.) (த.சொ.அக.) (சா.அக.)

*[பசி + பாழி]*

**பசிப்பிணி** *paši-p-piṇi,* பெ. (n.) 1. பசியாகிய நோய்; hungry as disease. 2. பசியென்னும் துன்பநோய்; hungry. "குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும் பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம் நாணணி களையும் மாணெழில் சிதைக்கும் பூண்முலை மாதரொரு புறங்கடை நிறுத்தும் பசிப்பிணி யென்னும் பாவி" (மணிமே.11.76, 80)

"மக்கள் தேவர் எனஇரு சார்க்கும்
ஒத்தமுடிவின் ஓரறம் உரைக்கேன்
பசிப்பிணி தீர்த்தல் (மணிமே.12, 118)
"பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுகென
ஆதிரையிட்டனள் ஆருயிர் மருந்தென"
(மணிமே.16, 134)
"பசிப்பிணி தீர்த்த பாவையை யேத்தி"
(மணிமே.28, 234)

*[பசி + பிணி]*

**பசிப்பிணிமருத்துவன்** *paši-p-piṇimaruttuvaṉ,* பெ. (n.) பசியைத் தீர்க்கும் வள்ளல்; philanthropist. "பசிப்பிணி மருத்துவன் இல்லம் அணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே" (புறநா.173, 11)

*[பசி + பிணி + மருத்துவன்]*

**பசிப்பிணிமருந்து** *paši-p-piṇimarundu,* பெ. (n.) பசியாகிய நோயைத் தீர்க்கும் உணவு; food, that cure the disease of hunger. "பசிப்பிணி மருந்தெனும் அங்கையி னேந்திய அமுத சுரபியை" (மணிமே.28, 217)

*[பசி + பிணி + மருந்து]*

**பசிப்பு** *pašippu,* பெ. (n.) 1. பசி; hunger 2. பசித்தல்; being hungry. (சா.அக.)

*[பசி → பசிப்பு]*

**பசிபட்டினி** *paši-paṭṭiṉi,* பெ. (n.) உண்ணாது வருந்துகை; hunger and starvation.

*[பசி + பட்டினி]*

**பசிபட்டினியாயிரு–த்தல்** *pašipaṭṭiṉiyāyiru-,* 1. செ.கு.வி. (v.i.) உண்ணாது வருந்தியிருத்தல்; starving being famished.

*[பசி + பட்டினியாய் + இரு–,]*

**பசிபடுமருங்கலை** *pasi-patu-maruṇkulai,* பெ. (n.) பசித்த வயிறு; hungry stomoch. "பசிபடுமருங்கலை கசிபு, கைதொழாஅ" (புறநா.260–6)

**பசிபொறாதவன்** *pasiporātavaṉ,* பெ. (n.) பசியைப்பொறுக்கமாட்டாதவன்; one who cannot endure hunger.

*[பசி + பொறாதவன்]*

**பசிமந்தி–த்தல்** *pašimandi,* 10. செ.கு.வி (v.i.) 1.பசிகுறைவுபடல்; dullness of appetite 2. பசியெடாதிருத்தல்; loss of appetite.

*[பசி + மந்தி–,]*

**பசிமான்** *pašimāṉ,* பெ. (n.) அரிமா; lion. (சா.அக.).

*[பசி + மான்]*



**பசிமூட்டல்** *pašimūṭṭal,* பெ. (n.) பசியெழுப்பல்; kindling of appetite. (சா.அக.).

*[பசி + மூட்டல்]*

**பசியம்** *pašiyam,* பெ. (n.) கயிறு. (யாழ்.அக.) rope

**பசியன்** *pašiyaṉ,* பெ. (n.) பசியுடையவன்; hungry man *"பசியராயிருக்குமவர்கள் சோறு சமையப் பற்றாமல் வெந்தது கொத்தையாக வாயிலிடுமா போலே"* (ஈடு,1,3,1.)

*[பசி → பசியன்]*

'பசித்தவன் பழங்கணக்குப் பார்த்ததுபோல' (பழ.)

'பசித்தவனுக்குப் பால் அன்னம் இட்டாற்போல' (பழ.)

'பசித்தவன் மேல் நம்பிக்கை வைக்கலாமா?' (பழ.)

**பசியாட்டி** *paši-y-āṭṭi,* பெ. (n.) பசித்திருப்பவள் hungry woman. starving woman. *"காய்பசி யாட்டி காயசண்டிகை"* (மணிமே.19,33.) (சா.அக.).

*[பசி + ஆட்டி]*

ஒ.நோ. மூதாட்டி

**பசியாமை** *pašiyāmai,* பெ. (n.) பசியெழாமை; absensce of appetite, non rising of gastric fire.

*[பசி + ஆ(எ.ம.) + மை]*

**பசியாற்று¹-தல்** *paši-y-āṟṟu-,* 7. செ.கு.வி. (v.i.) உண்டு பசியைத் தணித்தல்; to appease hunger, eat, take food.

*[பசி + ஆற்று-,]*

**பசியாற்று²-தல்** *paši-y-āṟṟu-,* 5. செ.குன்றாவி. (v.t.) உண்பித்தல்; to feed. *'வந்தவர்களைப் பசியாற்றி அனுப்பி வைத்தேன்'.* (யாழ்ப்.)

*[பசி + ஆற்று-,]*

**பசியாறு-தல்** *paši-y-āṟu-,* 1. செ.கு.வி. (v.i.) பசிதணிய உணவு உண்ணுதல்; to appease, hunger. 'நீங்கள் பசியாறி விட்டீர்களா?'. (உ.வ.)

*[பசி + ஆறு-,]*

**பசியான்** *pašiyāṉ,* பெ. (n.) பசுமை நிறத்தவன்; dark coloured person. *"செய்யாய் பசியாய் பெருங்கருணைத்தெய்வமே"* (காஞ்சிப்பு. வலம்புரி. 39.)

*[பசியன் → பசியான்]*

**பசியிலைக்கறி** *paši-y-ilaikkaṟi,* பெ. (n.), பச்சிலைக்கறி; dish of greens. (சா. அக.)

*[பச்சிலைக்கறி → பாசிலைக்கறி → பசியிலைக்கறி]*

**பசியெடாமை** *paši-y-eḍāmai,* பெ. (n.), பசியெடுக்காதிருத்தல்; non rising of gastric fire.

*[பசி + எடாமை]*

**பசியெடுத்தல்** *paši-y-eḍuttal,* பெ. (n.), பசியுண்டாகை; feeling hungry.

*[பசி + எடுத்தல்]*

**பசியெழுப்பல்** *paši-y-eḻuppal,* **செ.** கு. வி. (v.i.) பசியேற்படல்; feeling of hungry, apperence of hunger. (சா. அக.)

*[பசி + எழும்பல்]*

**பசியெழுப்பி** *paši-y-eḻuppi,* **பெ.** (n.), பசியைத்தூண்டும் மருந்து; drug that kindles the gastric fire. (சா. அக.)

*[பசி + எழுப்பி]*

**பசியெழுப்பி** *paši-y-eḻuppi,* **பெ.** (n.), பசியைத்தூண்டும் மருந்து; drug that kindles the gastric fire. (சா. அக.)

*[பசி + எழுப்பி]*

**பசியெழும்பல்** *paši-y-eḻumbal,* பெ. (n.) பசியேற்படல்; feeling hungry.

*[பசி + எழும்பல்]*

**பசியேப்பம்** *paši-y-ēppam,* பெ. (n.), பசி மிகுதியில் உண்டாம் தேக்கெறிவு; belching due to excessive hunger.

*[பசி + ஏப்பம்]*

'பசியேப்பக் காரனும் புளியேப்பக் காரனும் கூட்டுப்பயிர் இட்டது போல' (பழ.)

**பசிரி** *paširi,* பெ. (n.), பசளைக் கொடி; creeping purslane. *"பசிரிகைக் கொண்டு செல்வான்"* (உபதேசகா. சிவத்துரோக. 501.)

**பசிரிவகை:** குதிரைப் பசிரி, பெரும் பசிரி வரட் பசிரி எனத் த. சொ. அக. கூறும்.

**மறுவ.** பாவிரி. (சூடா. நி.)
*[வயலை → வயிலி → பயிரி → பசிரி]*

**பசிளசாதி** *pašiḷašādi,* பெ. (n.), ஆண்சாதி, நான்குவகையுள் ஒன்று (சாமசாதி); one of the four classes of men divided according to their lust. (சா. அக.)

*[பசிளம் + சாதி]*

**பசு—த்தல்** *pašu-,* 11 செ.கு.வி. (v.i.), பசுமையாதல்; to be green. *"பசுத்து மரகதம் போலே யிருக்கிற மடக்கிளியே"* (திவ்.பெருமாள்.தனியன்,3.)

*[பசு—மை → பசு—,]*

**பசுக்கல்** *pašukkal,* பெ. (n.), பலகை யிணைக்கை; battening.

**பசுக்கல்லாணி** *pašukkal-l-āṇi,* பெ. (n.) பலகைகளை இணைக்க உதவும் ஆணிவகை; (இ. வ.) batten nails.

*[பசுக்கல் + ஆணி]*

**பசுக்கற்கதவு** *pašukkaṟ-kadavu,* பெ. (n.) பலகைகளால் இணைக்கப்பட்ட கதவு; (இ.வ.) (கட்டட. நாமா. 22.) batten door.

*[பசுக்கல் + கதவு]*

**பசுக்கற்சன்னல்** *pašukkaṟ-cannal,* பெ. (n.) மரத்தாற் செய்த கதவுகளையுடைய காலதர் (கட்டட. நாமா. 23.) batten window.

*[பசுக்கல் + கதவு]*

**பசுக்காணி** *pašukkāṇi,* பெ. (n.), ஒருவகை உயர்ந்த சேலம் வேட்டி; a kind of superior salem-cloth.

*[பசு + காணி]*

**பசுக்கோசுரம்** *pašukkōšuram,* பெ. (n.) சிறுநாகப்பூ (சங். அக.); iron wood of ceylon;

*[பசு + கோசுரம்]*

**பசுக்கோல்** *pacukkōl,* பெ. (n.), பலகை யிணைக்கை; battening.

*[பசு + கோல்]*

**பசுகுபசுகெனல்** *pašugu-pašukeṉal,* பெ. (n.) பசுமை நிறமாதற்குறிப்பு. expr. signigying green appearance; **'மலைபேரமாட்டாதே பலகால் வர்ஷிக்கையாலே.....பசுகுபசுகு என்றிருக்குமே'** (ஈடு, 4, 4,4.)

*[பசுகு + பசுகு + எனல்]*

**பசுகை** *pašugai,* பெ. (n.) சிறிய விலங்கு (யாழ்.அக.); little animal.

**பசுங்கண்கடவுள்** *pasu-ñ-kaṇ-kaḍavul,* பெ. (n.) உருத்திரன் (சிவன்); rudra (sivan). "படரணி அந்திப் பசுங்கண்கடவுள்" (கலித்.101–24.)

*[பசுங்கண் + கடவுள்]*

**பசுங்கதிர்** *pašu-ṅ-kadir,* பெ. (n.) *பசுங்கதிர்க்கடவுள் (பிங்.)* பார்க்க see *pašu-ṅ-kadir-k-kaḍavul*

*[பசுமை + கதிர்]*

**பசுங்கதிர்க் கடவுள்** *pašu-ṅ-kadir-k-kaḍavul,* பெ. (n.) திங்கள்; moon, as cool-rayed. (பசிய கதிர்களையுடையோன்) **"பசுங்கதிர்க் கடவுள் யோகம் பழிப்பற நுனித்து"** (சீவக.62.)

*[பசுமை + பசும் + கதிர் + கடவுள்]*

**பசுங்கதிர்த்தே** *pašu-ṅ-kadir-t-tē,* பெ.(n.) *பசுங்கதிர்க் கடவுள் (சூடா.)* பார்க்க see *pasuṅ kadir-k-kaḍavul*

*[பசு + கதிர் + தே]*

**பசுங்கம்பளம்** *pašuṅkambaḷam,* பெ.(n.) பசுமையான கம்பளம்; wollen as in the colour of green. "பொன்னி ஞாசி பசுங்கம் பளத்து" (மணிமே.29, 17)

*[பசுமை + கம்பளம்]*

**பசுங்கரந்தை** *pašu-ṅ-karandai,* பெ.(n.) 1. கரந்தை வகை. a kind of basil. 2. ஒரு வகை இனிப்புக் கரந்தை; a kind of sweet basil.

*[பசுமை + கரந்தை]*

**பசுங்கருப்பூரம்** *pašu-ñ-karuppūram,* பெ. (n.) *பச்சைக் கருப்பூரம்* பார்க்க. see *paccai-k-karuppūram* **"தூநறும் பசுங்கர்ப்பூரச் சுண்ணத்தால்"** (பெரியபு. தடுத்தாட்.17.).

*[பசுமை + கருப்பூரம்]*

**பசுங்கரை** *pašu-ñ-karai,* பெ. (n.) சிற்றூர் நிலங்களைப் பொதுவில் வைத்து நுகரும் நிலவுரிமைமுறை; a kind of tenure in which lands are enjoyed in common by co-parceners of a village, who may either cultivate them in common or parcel them out from time to time amongst themselves for their several cultivation, the right of each lving to a definite proportion of the whole but not to anyone field or piece of land in particular. opp. to aṟudi-k-karai.

*[பசுமை → பசு + கரை]*

**பசுங்கல்** *pašu-ṅ-kal,* பெ. (n.) சந்தனம் அரைக்கும் கல்; stone for grinding sandal. **"பேருலகம் பசுங்கல்லாக"** (கம்பரா.கடல் காண். 10.).

*[பசுமை + கல்]*

**பசுங்கலம்** *pašuṅgalam,* பெ. (n.) பசுமையான மட்கலம்; raw earthen vessel.

"ஈர்மண் செய்கை நீர்படு பசுங்கலம்" (நற்.308, 9)
"பெயல்நீர்க் கேற்ற பசுங்கலம் போல" (குறுந்.29,

**பசுங்கழை** *pašuṅkaḻai,* பெ. (n.) பசுமையான மூங்கில்; greenish, enriched bamboo.

"கான யானை கைவிடு பசுங்கழை" (குறுந்.54, 3)
"விசும்புதோய் பசுங்கழைக் குன்ற நாடன்" (குறுந்.74, 2).
"குவையுடையப் பசுங்கழை தின்ற கயவாய்ப் பேதையானை" (குறுந்.179, 5)

*[பசுமை + கழை]*

**பசுங்களை** *pašu-ṅ-kaḷai,* பெ. (n.) பச்சைக்கல். (யாழ்.அக.); emerald.

*[பசுமைகல் → கள் → களை]*

**பசுங்கறி** *pasuṅ-kaṟi,* பெ. (n.) பசிய மிளகு சேர்த்த உணவு; food prepared with tender pepper.

"கருங்கொடி மிளகின் காய்த்துணர்ப் பசுங்கறி" (மலைபடு,521)

*[பசுமை + கறி]*

**பசுங்காடு** *pašu-ṅ-kaḍu,* பெ. (n.) பசுமையான அடர்த்தியான காடு; greenish; thickest forest. "முதைபடு பசுங்காட் டரிற்பவர் மயக்கி" (அகநா.262-1)

*[பசும்-மை + காடு]*

**பசுங்காஞ்சொறி** *pašuṅkāñcoṟi,* பெ. (n.) சிறுகாஞ்சொறி; climbing nettle. (சா.அக.)

*[பசுமை → பசு + காஞ்சொறி]*

**பசுங்காய்** *pašu-ṅ-kāy,* பெ. (n.) 1. முற்றாத தவசம்; immature paddy or other grain in the ear. 2. இளங்காய்; unripe fruit. 3. பாக்குவகை; a kind of arecanut **"இன்னீரி ளம்பசுங் காயும்"** (சீவக. 2473.). "கோடை யுதிர்த்த குவிகட் பசுங்காய்" (அகநா.315, 11) "பூவொடு வளர்த்த மூவாப் பசுங்காய்" (அகநா.335, 23) "புல்லிலை நெல்லிப் புகரில் பசுங்காய்." (அகநா.363, 6)

*[பசுமை + காய்]*

**பசுங்கிளி** *pašuṅ-kiḷi,* பெ. (n.) பச்சைக்கிளி; green parrot **"பசுங்கிளிச் சிறையென"** (பெருங். இலாவாண. 3.62.)

*[பசுமை + கிளி]*

**பசுங்கிளிமாது** *pašuṅkiḷi mādu,* பெ. (n.) சங்கினிச் சாதியாகிய பெண்; நான்கு சாதியாருள் ஒருவகை; one of the four classes of women dirvided accorting to their lust i.e saṅgini- the second of the four. (சா.அக.)

*[பசு-மை + கிளி + மாது]*

**பசுங்கிளை** *pašuṅkiḷai,* பெ. (n.) பச்சைக்கிளை; green young branch (சா.அக.)

*[பசு-மை + கிளை]*

**பசுங்கீரை** *pašuṅkīrai,* பெ. (n.) 1. பச்சையிலைக்கறி; vegetable greens, 2. ஒரு வகை பச்சைப்புல்; a kind of green grass. (சா.அக.)

*[பசு–மை + கீரை]*

**பசுங்குடி** *pašu-ṅ-kuḍi,* பெ. (n.) 1. தகுதியான குடி; respectable family. 2. உழவன்; husbandman.

*[பசுமை + குடி]*

**பசுங்குடை** *pašu-ṅ-kuḍai,* பெ. (n.) 1. பனங்குருத்தாற் செய்த பூங்குடலை; flower basket as it made form tender palm leaves. "இரும்பனை பசுங்குடை பலவுடன் பொதிந்து" (புறநா.168.2) "அவல் வகுத்த பசுங்குடையான்" (புறநா.352.3) 2. பனையோலையால் செய்யப்பட்ட கிண்ணம் போன்ற உண்கலம், தொன்னை; a kind of cup made of palmleaves. "பயிலிதழ்ப் பசுங்குடை" (அகநா.30, 10)

*[பசுமை + குடை]*

**பசுங்குழவி** *pašu-ṅ-kuḻavi,* பெ. (n.) இளங் குழந்தை; tender child. "ஒருவாத பசுங்குழவியுடனிருத்தி" (திருவிளை. பழியஞ் .7.)

*[பசுமை + குழவி]*

**பசுங்குளவி** *pašu-ṅ-kuḷavi,* பெ. (n.) மலைப்பச்சை என்னும் நறுமணச் செடியின் இலைகள்; fragranced leaves of malai-p-paccai shrub. "பெருந்தண் கெல்லினச் சிறுபசுங்குளவி கடிபதங் கமழும் கூந்தல்" (நற்.346, 9.)

*[பசுமை + குளவி]*

**பசுங்கூட்டு**[1] *pašu-ñ-kūṭṭu,* பெ. (n.) நறுமணக் கலவை; perfume of sandal and other fragrant ingredients. 'நறிய சாத்தம்மி யிலே கத்தூரி முதலிய பசுங்கூட்டரைக்க' (நெடுநல். 50, உரை.)

*[பசுமை + கூட்டு]*

**பசுங்கூட்டு**[2] *pašuṅ-kūṭṭu,* பெ. (n.) சுண்ணாம்புச் சாந்து; ground lime. "ஆட்டாண்டு தோறும் பசுங்கூட்டாலே ஜீர்ணோத்தாரம் பண்ண வேண்டுகையாலும்" (s.i.i.v.ii,501.)

*[பசுமை + கூட்டு]*

**பசுங்கூறு** *pašu-ṅ-kūṟu,* பெ. (n.) *பசுங்கரை* பார்க்க; see *pašuṅkarai.*

*[பசுமை + கூறு]*

**பசுங்கொடி** *pašu-ṅ-koḍi,* பெ. (n.) அறுகு (மலை); bermuda grass.

*[பசுமை + கொடி]*

**பசுங்கொண்டி** *pašuṅ-koṇḍi,* பெ. (n.) வெள்வேல்; foreign white sundra. (சா.அக.)

*[பசுமை + கொண்டி]*

**பசுங்கொத்தான்** *pašuṅ-kottāṉ,* பெ. (n.) கொற்றான்; baloon wine.

மறுவ. முடக்கத்தான், முடக்கொத்தான், முடக்கற்றான், இந்திரவல்லி.

*[பசுமை + கொற்றான் → கொத்தான்]*

**பசுங்கொற்றான்** *pašu-ṅ-koṟṟāṉ,* பெ. (n.) கொடிவகை; a parasitic leafless plant.

மறுவ. முடக்கத்தான்

*[பசுமை + கொற்றான்]*

**பசுங்கோரை** *paśu-ṅ-kōrai,* பெ. (n.) புல் வகை; a kind of sedge.

*[பசுமை + கோரை]*

**பசுங்கோலா** *paśu-ṅ-kōlā,* பெ. (n.) பச்சைநிறமானதும் கரும்புள்ளி கலந்ததும் இரண்டடிவரை வளரக்கூடியதுமான மீன் வகை; garfish, green dotted with black, attaining 2ft in length, belong annulata.

*[பசுமை + கோலா]*

**பசுண்டி** *paśuṇḍi,* பெ. (n.) சீரகம் (மலை.); cumin.

**பசுத்தக்காளி** *paśu-t-takkāḷi,* பெ. (n.) தக்காளி வகை (வின்.); a shrub of the physalisgenus.

*[பசு + தக்காளி]*

**பசுந்தடி** *paśuntaḍi,* பெ. (n.) பச்சை ஊன்தசை; piece of raw meat. "விசும்பா டெருவை பசுந்தடி தடுப்ப" (புறநா.64-4)

*[பசுமை + தடி → பசுந்தடி]*

**பசுந்தண்டு** *paśuṅtaṇḍu,* பெ. (n.) குவளைப் பூவின் தண்டு; greenish stem of kuvaḷai flower. "பச்சைக் குவளைப் பசுந்தண்டு கொண்டு" (பரிபா.11-102)

**பசுந்தமிழ்** *paśu-n-tamiḻ,* பெ. (n.) செந்தமிழ்; refined tamil. *'இதனைப் பசுந்தமிழாற் சொல்லின்'*

*[பசுமை + தமிழ்]*

**பசுந்தரை** *paśu-n-darai,* பெ. (n.) புற்றரை; grassy ground, verdant field.

*[பசு–மை + தரை]*

**பசுந்தழைப்பால்** *paśuntaḻai-p-pāl,* பெ. (n.) பச்சைத் தழையின் சாறு; juice of green leaves, herbs etc. (சா.அக.)

*[பசும் + தழை + பால்]*

**பசுந்தாள்உரம்** *paśuntāḷ uram,* பெ. (n.) 1. தழைக்காக வளர்க்கப்பட்ட பயிரை அந்த நிலத்திலேயே உழுது சேர்க்கும் உரம்; green manure. 2. நாற்று நடுவதற்கு முன்னால் சேற்று நிலத்தில் பல்வேறு இலைதழைகளைப் போட்டு உரமாக்குதல்; to make green manure before the transplantation in the field.

*[பசுந்தாள் + உரம்]*

**பசுந்தாளெரு** *paśundāḷ-eru,* பெ. (n.) தழையுரம் (இ.வ.); green leaves, used as manure.

*[பசுந்தாள் + எரு]*

**பசுந்துணி** *paśuṅtuṇi,* பெ. (n.) பசிய தசைத்துண்டம்; piece of raw meat. "அடர்த்தெழு குருதி அடங்காப் பசுந்துணி" (சிலப்.20-34)

*[பசுமை + துணி]*

**பசுந்துளவினவை** *pasuṅtuḷavinavai,* பெ. (n.) பசிய துளவமாலை; green coloured holibasil garland. "கள்ளணி பசுந்துள வினவை" (பரிபா.15-54)

**பசுநரம்பு** *paśu-narambu,* பெ. (n.) பெரும்பாலும் அழுக்கு அரத்தத்தைக் கொண்டு செல்லும் அரத்தக்குழாய்; vein.

*[பசுமை + நரம்பு]*

**பசுநாகம்** *paśunāgam,* பெ. (n.) வில்வமரம்; bilva tree. (சா.அக.).

*[பசுமை + நாகம்]*

**பசுநாக்கி** *pašunākki,* பெ. (n.) ஒரு வெண்ணிறமான நாக்குமீன்; white indian sole fish. (சா.அக.)

*[மறுவ: பசுநா, பசுநாக்கிலை.]*

*[பசுமை + நாக்கு.]*

**பசுநா** *pašu-nā,* பெ. (n.) perh. ***பிராய். (சூடா.)*** பார்க்க. see *piray* paper tree.

*[பசுமை + நா]*

**பசுநிலா** *pašunilā,* பெ. (n.) தண்ணிய நிலவொளி; moon light. "பசுநிலா விரிந்த பல் கதிர் மதியில்" (அகநா.57–11)

*[பசுமை + நிலா]*

**பசுநுணலை** *pašununalai,* பெ. (n.) பச்சைத் தவளை; green frog. (சா.அக.)

*[பசுமை + நுணலை]*

**பசுநெய்** *pašunēy,* பெ. (n.) குளிர்ந்த நறுநெய்; perfumed oil used by women, for smoothing the body, in ancient times. "பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கைச் சீர்கெழு மடந்தை". (நற்.40, 8.)

*[பசும் + நெய்]*

**பசுப்பு** *pašuppu,* பெ. (n.) 1. பசுமை; greenness; "*ஆற்றங்கரைப் பசுத்தானக்கரையோ டிக்கரையாய்த் தோற்றும் பசுப்பைத் தொடர்வுறுமே*" (பாடு.29, நெஞ்சிற்.) 2. பசுமை கலந்த மஞ்சள் நிறம் (நாநார்த்த.674.); greenish yellow.

தெ. பசுபு

*[பசு → பசுப்பு]*

**பசுபதிநாயனார்** *pašu-pati-nāyanār,* பெ. (n.) நாயன்மார் அறுபத்துமூவருள் ஒருவர்; a canonized šaiva saint, one of **63.** nāyanmār.

*[பசுபதி + நாயனார்]*

மறுவ: உருத்திர பசுபதியார்.

"நீடுமன்பினி லுரபத்திர மோதிய நிலையால் ஆடுசேவடி யருகுற அணைந்தன ரவர்க்குப் பாடு பெற்றசீ ருருத்திர பசுபதி யாராங் கூடு நாமமு நிகழ்ந்தது குவலயம் போற்ற" என்பது பெரியபுராணம்.

**பசும்பட்டு** *pašu-m-pattu,* பெ.(n.) நேர்த்தியான பட்டு; fine silk. "*உரித்தவுரி பசும்பட்டா*" (கோயிற்பு. பதஞ்சலி. 32.)

*[பசுமை → பசும் + பட்டு]*

**பசும்படி** *pašumpadi,* பெ.(n.) 1. பச்சிலை களைக் கொண்டு செய்யும் மருந்து; a coarse medicine prepared from greens. 2. மஞ்சள் மங்குத்தான்; yellow magoostan . (சா.அக)

*[பசுமை → பசும் + படி]*

**பசும்பதம்** *pašu-m-padam,* பெ. (n.) 1. உணவுக்குரிய பொருள்கள்; raw meterial for food. '*பண்ணிய மட்டியும் பசும்பதங் கொடுத்தும்*' (பட்டினப். 203, உரை.) 2. இளம்பருவம்; infancy childhood '*பாளைப் பசும்பதத்தும்*'

மறுவ. அரிசியும் கறியும்.

விளைந்த நெல்லும் பறிக்கும் காய்களும் அரியும் கறியுமென்று பெயர் பெறும் எனத் (த.சொ.அக.) கூறும்.

*[பசுமை → பசும் + பதம்]*

**பசும்பயறு** *pašu-m-payaru,* பெ.(n.) சிறுபயறு (பிங்.); green gram.

மறுவ. பாசிப்பயறு

*[பசுமை → பசும் → பயறு]*

**பசும்பழப்பாகல்** *pasum-paḷa-p-pākal,* பெ.(n.) அன்று பழுத்த பழத்தையுடைய பாகற்கொடி; balsam creeper having. "பலவுக்காய்ப் புறத்த பசும்பழப்பாகல்" (அகநா.255-13)

*[பசுமை + பழம் + பாகல்]*

**பசும்பாண்டில்** *pasumpāṇḍil,* பெ. (n.) மணிகள் அழுத்திய பொன்னால் இயன்ற பாண்டில் என்னும் அணிகலன்; an ornament made by gold and gems. "தபாலம் பசும் பாண்டில் காசுநிரை அல்குல்" (ஐங்.310.)

*[பசுமை → பசும் + பாண்டில்]*

**பசும்பாம்பு** *pašumpāmbu,* பெ.(n.) பச்சைப்பாம்பு; greenish snake. "சினைப்பசும்பாம்பின் சூன் முதிர்ப்பன்ன" (குறுந். 35-2)

*[பசு-மை + பாம்பு]*

**பசும்பாவை** *pašum-pāvai,* பெ. (n.) சிறியபசிய விளையாட்டுப்பாவை; play-thing, like a doll prepared by green leaves. "சிறுபசும் பாவையும் எம்மும் உள்ளார்" (குறுந்.278, 3)

*[பசுமை + பாவை]*

**பசும்பிடி** *pašum-piḍi,* பெ. (n.) பச்சிலைமரம்; mysore gamboge. "*பெருவாய் மலரொடு பசும்பிடி மகிழ்ந்து*" (பதிற்றுப். 81, 25.)

"பசும்பிடி வகுளம்" (குறிஞ்சிப்.70.) "பெருவாய் மலரொடு பசும்பிடி மகிழ்ந்து" (பதிற்றுப்.81-25) "பசும்பிடி இளமுகிழ் நெகிழ்ந்த வாயாம்பல்" (பரிபா.19-75)

**மறுவ.** அறுகி

*[பசுமை + பிடி]*

**பசும்பிறப்பு** *pašu-m-piṟppu,* பெ.(n.) சமணமதங் கூறும் அறுவகைப் பிறப்புக்களுள் மூன்றாவது; (jaina.) the third of six kinds of birth. '*பசும்ம் பிறப்புஞ் செம்ம் பிறப்பும்*' (மணிமே. 27, 151.)

*[பசுமை + பிறப்பு]*

**பசும்புண்** *pašu-m-puṉ,* பெ. (n.) புதுப்புண்; green wound. "*மெய்யது வியரே மிடற்றது பசும்புண்*" (புறநா. 100.)

*[பசுமை + புண்]*

**பசும்புல்** *pašu-m-pul,* பெ. (n.) **1.** பச்சைப்புல்; green grass. "பசும்புற் றலைகாண் பரிது" (குறள்.16) **2.** விளைபயிர் (பிங்.); growing crop.

*[பசு-மை + புல்]*

**பசும்புற்றரை** *pasumporṟarai,* பெ.(n.) பசுமையான புற்கள் நிரம்பிய தரை (சூடா); beautiful lawn.

**மறுவ.** சாட்டுவலம்.

*[பசும்புல் + தரை]*

**பசும்பூ** *pašu-m-pū,* பெ.(n.) பச்சைப்பூ; green flower. (சா.அக.)

*[பசு-மை + பூ]*

**பசும்பூண்பாண்டியன்** *pašumpūṉ-pāṇḍiyaṉ,* பெ. (n.) ஒரு பாண்டிய அரசன்; a king of pāṇḍiya kingdom. "கோழி வாகைப்பறந்தலைப் பசும்பூண் பாண்டியன் வினைவலதிகன்" (குறுந்.393-4) "பலர்புகழ் திருவிற் பசும்பூண் பாண்டியன்" (அகநா.338, 5) "வாடாப் பூவிற் கொங்கரோட்டி நாடுபல தந்த பசும்பூண் பாண்டியன்" (அகநா.253, 5) "செல்லா நல்லிசை விசும்பிவர் வெண்குடைப் பசும்பூண் பாண்டியன்" (அகநா. 162-21)

*[பசும்பூண் + பாண்டியன்]*

**பசும்பூண்பொறையன்** *pašumpūṇ-poṟaiyaṉ,* பெ.(n.) அகநானூற்றில் குறிப்பிடப்படும் ஒரு சேர அரசன்; a cēra king mentimed in the Aganāṉūṟu. "மறமிகு தானைப் பசும்பூட் பொறையன்" (அகநா. 303–4)

*[பசும்பூண் + பொறையன்]*

**பசும்பூண்வழுதி** *pašumpūṇvaḻudi,* பெ.(n.) நற்றிணையில் குறிப்பிடப்பெறும் ஒரு பாண்டிய அரசன்; a Pāṇḍya king mentioned in the Naṟṟiṇai.

*[பசும்பூண் + வழுதி]*

**பசும்பூணவை** *pašumpūṇavai,* பெ.(n.) பொன்னிறமுடைய திருமால்; Thirumāl have a fine gold colour. "பாம்பு படிமஞ் சாய்த்தோய் பசும்பூணவை" (பரிபா.4–47)

**பசும்பை** *pašu-m-pai,* பெ.(n.) வணிகர்கள் தோளில் மாட்டிக்கொள்ளும் நீண்டபை வகை; a pedlar's pack carried over the shoulder. "*பசும்பை தோளேற்றி*" (திருவாலவா. 23,6.)

க. பசும்பெ.

*[பசுமை + பை]*

**பசும்பொன்** *pašu-m-poṉ,* பெ.(n.) 1. மாற்றுயர்ந்த பொன்; fine gold. "*பாணன் சூடிய பசும்பொற்றாமரை*" (புறநா. 141.). 2. கிளிச்சிறை பார்க்க; a kind of gold "*பசும்பொன் புனைந்த பாவை*" (மதுரைக். 410.) "நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளான்" (பெரும்பாண்.164.) "செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை" (மதுரைக்.410.) "பசும்பொன் அவிரிழை பையநிழற்ற" (ஐங்குறு.74–2) "திருமணி பொருத திகழ்விடு பசும்பொன்" (பதிற்றுப்.16–15) "இலங்குமணி மிடைந்த பசும்பொற் படலத்து" (பதிற்றுப்.39–14) "மணிபொரு பசும்பொன்கொல்" (கலித்.143–4) "செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த முந்நீர் விழவின் நெடியோன்" (புறநா.9–9) "முடி புனைந்த பசும்பொன்னின்" (புறநா–40/3) "மைதீர் பசும்பொன்மேல் மாண்ட மணியழுத்தி" (நாலடி.347–1) "வீறுயர் பசும்பொன் பெறுவதிம்மாலை" (சிலப்.8–165) "தோமறு பசும்பொன் பூரணகும்பத்து" (சிலப்.5, 152) "பாவை விளக்குப் பசும்பொற் படாகை" (சிலப்.5, 154)

மறுவ: ஒட்டற்ற பொன்.

*[பசு–மை + பொன்]*

**பசும்பொன்** *pašumpoṉ,* பெ. (n.) சிவகங்கை மாவட்டத்திலுள்ள புகழ்மிகு சிற்றூர்; a familier and popular village in Sivagangai Dt.

**பசும்பொன்உலகம்** *pašum-poṉ-n-ulagam,* பெ. (n.) துறக்கவுலகம்; paradise, elysium. "*பசும்பொன் உலகமும் மண்ணும் பாழ்பட*" (பரிபா.2, 3.)

*[பசும்பொன் + உலகம்]*

**பசுமஞ்சள்** *pašu-mañjal,* பெ. (n.) மஞ்சள் வகை; a kind of turmeric "*சிறுபசுமஞ்ச ளொடு நறுவிரை தெளித்து*" (திருமுருகு. 235.)

*[பசுமை + மஞ்சள்]*

**பசுமண்** *pašumaṉ,* பெ. (n.) கிளியின் எச்சம்; parrots excreta. (சா.அக.)

**பசுமண்கலம்** *pašumaṇkalam,* பெ.(n.) பச்சைமண் பாத்திரம்; an burnt clay vessel. "பசுமண் கலத்துள்நீர் பெய்துஇரீஇ யற்று" (குறள்.660)

*[பசுமை + மண் + கலம்]*

**பசுமந்தம்** *pašumandam,* பெ. (n.) வேம்புமரம் (வேப்பமரம்); neem tree (சா.அக.)

**பசுமயில்** *pašumayil,* பெ. (n.) பசுமை கலந்த பொன்னிறமான மயில்; greenish golden coloured peacock. "பழனக் காவிற் பசுமயிலாலும்"(பதிற்றுப்.27, 8)

*[பசுமை → பசும் + மயில்]*

**பசுமரல்** *pašumaral,* பெ.(n.) பசியநிறமுடைய மரல் என்னும் ஒருவகைக் களைக் கொடி; a shrub weed. *"பருவிலைக் குளவியொடு பசுமரல் கட்கும்"* (குறுந்.100, 2.)

**பசுமருந்து** *pašu-marundu,* பெ.(n.) பச்சிலைகளாலான மருந்து (வின்); medicine prepared from herbs.

*[பசுமை + மருந்து]*

ஒருகா. பச்சிலைமருந்து

**பசுமலர்** *pašumalar,* பெ. (n.) அப்போது பறித்தமலர்; undried, fresh flower. (சா.அக.)

*[பசும் + மலர்]*

**பசுமலைக் குழலூற்று** *pašu malai-k-kulalūrru,* பெ.(n.) தமிழ் மருந்துகளில் துணைச் சரக்காகப் பயன்படும் பேரோசனை; an unknown drug forming one 120 kinds of natural substances in tamil medicines. (சா.அக.)

*[பசும் + மலை + குழலூற்று]*

**பசுமலையடிமண்** *pašumalai-y-adiman,* பெ.(n.) மஞ்சட்கல்; a kind of yellow stone forming mountains of hills. (சா.அக.)

*[பசுமலை + அடிமண்]*

**பசுமிளை** *pašumiḷai,* பெ.(n.) பசிய காவற்காடு; thickest forest as fenced enclosure.

*[பசு—மை → பசு + மிளை]*

**பசுமுல்லை** *pašumullai,* பெ. (n.) ஒரு வகை முல்லைக் கொடி; a kind of jasmine (சா.அக.)

*[பசு—மை → பசு + முல்லை]*

**பசுமுன்னை** *pašu-munnai,* பெ.(n.) முன்னைவகை (பதார்த்த. 388.); dusky firebrand tree.

*[பசு—மை → பசு + முன்னை]*

**பசுமுன்னைக்கீரை** *pašumunnai-k-kīrai,* பெ.(n.) நறுமுன்னை; dusky fire brand tree. (சா.அக.)

*[பசுமுன்னை + கீரை]*

**பசுமுன்னைவேர்** *pašumunnaivēr,* பெ. (n.) உணவில் விருப்பத்தை உண்டாக்கும் பசுமுன்னையின் வேர்; the root of pašumunnai inducimg appetite of craving for food.

*[பசுமுன்னை + வேர்]*

**பசுமூலி** *pasumūli,* பெ.(n.) 1. பச்சைமூலாகை; any green herbacious plant. 2. பச்சைப்புல்; green grass.

*[பசு—மை + மூலி]*

**பசுமெழுக்கு** *pašumeḻukku,* பெ.(n.) புதுமெழுக்கு; new polishing for mud floor. *"பாகு குத்த பசுமெழுக்கில்"* (பட்டினப். 166.).

*[பசு—மை + மெழுக்கு]*

**பசுமை** *pašumai,* பெ. (n.) **1.** பச்சைநிறம் (திவா.); greenness, verdure **2.** குளிர்ச்சி (அகநா. 57.) coolness moistness. **3.** இளமை; (தெ.க.பசி.) youth, tenderness *"பசுந்தாட்பாம்பினாற்புரி நூல்"* (திருவிளை.திருவால. 20) *'பசுங்காய்'* **4.** அழகு (திருநூற்.1.); elegance, beauty, pleasantness **5.** புதுமை. (பட்டினப். 166.). க.பசிமெ.ம.பசீம. newness, freshness, rawness **6.** சாரம் (யாழ்.அக.); essence, essential part of a thing. **7.** நன்மை (காஞ்சிப்பு. நாட்டுப். 70.); good, advantage. **8.** செவ்வி (யாழ்.அக.); season, righttime *"பசுந்தாமரைத்தாள்"* (திருநூற், 23.) **9.** உண்மை; truth reality *"உள்ள பசுமை சொல்லு"* (வின்.) **10.** பசுமைகலந்த பொன்னிறம்; greenish yellow **தெ.** பசிமி. **11.** செல்வம் (யாழ்.அக.); easy circumstances, prosperity. **12.** சால்வை வகை; cashmere shawl; (வின்.) **13.** மயிர் (அக.நி); hair

*[பசு → பசுமை]*

**பசுமைப்புரட்சி** *pašumai-p-puratci,* பெ.(n.) புதுமை முறைகளால் குறுகிய காலத்தில் அதிக விளைச்சல் ஏற்படும் வகையில் வேளாண்மையில் நடக்கின்ற பெரும்மாற்றம்; great change that took place with in a short period in agriculture resulting in large yields; green revolution.

*[பசுமை + புரட்சி]*

**பசுமைவெளியுப்பு** *pasumai vēliyuppu,* பெ.(n.) வளையலுப்பு; a kind of medicinal salt, glass gall (சா.அக.)

**மறுவ.** வளையலுப்பு.

*[பசுமை + வளை (வெளி) யல் + உப்பு]*

**பசுவா** *pacuvā,* பெ.(n.) செம்பழுப்புவண்ணக் கடல்மீன் (**செங்கை. மீன.**); a kind of red coloured sea fish.

**மறுவ.** பசுவாமீன்

**பசுவாட்டம்** *pašu-v-āṭṭam,* பெ.(n.) பல்லாங்குழியாட்டவகை (யாழ்.அக.); a game of pallānkuḻi.

*[பசு + ஆட்டம்]*

**பசுவாமீன்** *pašu-v-ā-mīṉ,* பெ.(n.) சிவப்பு நிறமுள்ள கடல்மீன் வகை; a sea-fish rose - coloured.

**மறுவ:** பசுவா.

*[பசுவா + மீன்]*

**பசுவிழுதல்** *pašu-viḻudal,* பெ. (n.) பல்லாங் குழியாட்டத்தில் ஒரு குழியில் ஆறு அல்லது நாலுகாய்கள் ஒருங்கே தங்குகை; collection of six or four seeds in a hole at a time in the games of pallāñkuḻi.

*[பசு + விழுதல்]*

**பசுவின் தக்காளி** *pašuviṉ-takkāḷi,* பெ. (n.) தக்காளி வகை; a shrub of the physalis genus.

*[பசுமை → பசுவின் + தக்காளி]*

**பசுவெயில்** *pašu-veyil,* பெ. (n.) மாலைவெயில்; evening sun. *"செல்சுடர்ப் பசுவெயிறோன்றி யன்ன"* (மதுரைக். 411.)

*[பசுமை → பசு + வெயில்]*



செம்பழுப்பு வயிற்றுப்
பசையெடுப்பான்



மஞ்சள் கன்னப்
பட்டாணிக்குருவி



பட்டாணிக்குருவி



நெற்றி பசையெடுப்பான்

**பசுவை** *pašuvai,* பெ. (n.) ஓர் மீன்; red soldier fish.

*[பசு → பசுவை]*

**பசேரெனல்** *pašēr-eṉal,* பெ. (n.) பசுமையாயிருத்தற் குறிப்பு; expr. signifing greenness.

*[பசுமை → பசேர் + எனல்]*

**பசை**[1] *pašai,* பெ (n.) **1.** ஒட்டுநிலை; stickiness, tenacity, adhesiveness. **2.** பிசின்; glue, paste, cement *"பத்தல் பசையொடு சேர்த்தி"* (மலைபடு. 26.) **3.** சாரம்; glutinous substance in fruits, roots, etc; sap; juice. *"பசை நறவின்"* (கம்பரா. கங்கைப். 5.) **4.** ஈரம்; moisture. *"வேரோடும் பசையற"* (கம்பரா. தாடகை.3.) **5.** பத்தி; devotion. *"பரமனை நினை பசையொடு"* (தேவா. 833,11.) **6.** அன்பு; love, affection *"வீறிலேன் பசையினாற் றுஞ்சி"* (சீவக. 1814.) **7.** பற்று (யாழ்.அக.); desire, attachment. **8.** இரக்கம்; compassion mercy. *"பசையற்றாள்"* (கம்பரா.கைகேசி. 42.) **9.** பயன்; gain, profit *'வணிகத்தில் சிறிதும் பசையில்லை'* **10.** செல்வம்; property, possession *'அவனிடத்திற் பசையுண்டா?* **11.** கொழுப்பு; strength, vigour *'அவன் உடலிலே பசையில்லை'* **12.** முழுவின் ஒரு பக்கத்தில் ஒட்டும் பசைப் பண்டம்; paste applied to a drum head to improve the sound.

ம. பச. தெ. பச. க. பச.

*[பசுமை → பசை]*

**பசை**[2]**-தல்** *pašai-,* 4. செ.கு.வி. (v.i.) **1.** அன்பு கொள்ளுதல்; to be kind, affectionate. *"பசைந்த சிந்தை"* (கம்பரா. கிளைகண்டு. 114.) *"பசைதல் பரியாதார் மேல்"* (நாலடி.) **2.** நட்புக் கொள்ளுதல்; to become acquainted. *"இயல்பிலாதார்கட் பசைந்த துணையும்"* (நாலடி. 187.) **3.** செறிதல்; to be dense. *"பசை நிழலாலினை"* (காஞ்சிப்பு. பன்னிரு. 275.) **4.** இளகுதல் (வின்.); to become glutinous, viscows or tempered, as clay (வின்.) **5.** பசை[3]–(நெல்லை.) பார்க்க; see pašai[3] **6.** தாராளமாதல் (வின்.); to be liberal, benevolent (வின்.)

**பசை**[3]**-தல்** *pasai-,* செ.குன்றாவி. (v.t.) **1.** ஒட்ட வைத்தல்; to stick together, unite, fill cracks in iron, by beating **2.** ஒன்று சேர்த்தல்; to gather, get ready, as necessary materials. *"அரவமும் வெற்புங் கடலும் பசைந்தங்கமுது படுப்ப"* (திவ். இயற். 3,64.) **3.** பதமாக்குதல்; to temper, as hot iron. *'இரும்பைப் பசையும் மட்டை'* (வின்.)

*[பசை → பசை–,]*

**பசை**[4]**த்தல்** *pašai-,* **11.** செ.கு.வி. (v.i.) மை முதலியன நன்றாய்ப் பதிதல்; to make a deep impression as ink or paint.

*[பசை → பசை–,]*

**பசை**[5]**-தல்** *pašai-,* 4. செ.குன்றாவி. (v.t.) பிசைதல் என்பதன் மறுவடிவம்; corr. of pisai-

*[பிசை → பசை–,]*

**பசை**[6] *pašai,* பெ. (n.) உயவெண்ணெய் (குஞ்.); a kind of lubricant for carts.

**பசைகாரம்** *pašaikāram,* பெ. (n.) காரங்கூட்டிய பசை; gum with pungency.

*[பசை + காரம்]*

(இது ஒரு தட்டார் குழூஉக்குறி.)

**பசைந்தார்** pašaindār, பெ. (n.) நண்பர்; friends. *"பசைந் தாரிற் றீர்தலிற் றீப்புகுத னன்று"* (நான்மணி. 15.)

*[பசை³ → பசைந்தார்]*

**பசைப்படம்** pašai-p-paḍam, பெ. (n.) கஞ்சி பூசிப் படமெழுத அணியம் செய்த துணி (பஞ்சதசப்பிர.பக்.2.); cloth smeared with paste and prepared for painting.

*[பசை + படம்]*

**பசைபிடி** *pašai-piḍi,* பெ. (n.) வழவழப்பு; slimness, slipperiness.

*[பசை + பிடி]*

**பசைமட்டை** *pašai-maṭṭai,* பெ. (n.) காய்ச்சின இரும்பை நீரால் பதமாக்கும் மட்டை (யாழ்.அக.); piece of palmyra stalk used by blacksmiths in tampering iron.

*[பசை + மட்டை]*

**பசைமண்** *pašai-maṇ,* பெ. (n.) களிமண் (பாண்டிச்.); clay.

*[பசை + மண்]*

**பசையடி** *pašai-y-aḍi,* பெ. (n.) கஞ்சியிடாமல் முதலில் ஆடையை வெளுக்கை (யாழ்ப்.); first washing of a new cloth without starching.

*[பசை + அடி]*

**பசையாப்பு** *pašai-yāppu,* பெ. (n.) உலகப் பற்றாகிய தொடர்ச்சி; bond of worldly attachment. *"உண்பாத கமலந்தொழுவேங்கள் பசையாப்பவிழப் பணியாயே"* (சீவக. 1242.)

*[பசை + யாப்பு]*

(யாப்பு = கட்டு. உலகப்பற்றில் மீளாமல் கட்டுண்டு நிற்றல், பசையாப்பு எனப்பட்டது)

**பசையெடுப்பான்** *pašai-yeḍuppāṉ,* பெ. (n.) கருஞ்சாம்பல், கருப்பு, வெண்மை, செம்பருப்பு ஆகிய வண்ணங்களை உடைய ஒருவகைத் தென்னிந்தியப் பறவை; a multicoloured bird, which is found in South Indian.

இதன் வகைகள்

1. செம்பழுப்பு வயிற்றுப் பசையெடுப்பான்
2. கருநீல நெற்றிப் பசையெடுப்பான்.



**பசைவு** pašaivu, பெ. (n.) அன்பு; compassion, kindness, affection, attachment.

*[பசை¹ → பசைவு]*

**பஞ்சங்கூறு-தல்** *pañjaṅ-kūṟu-,* 1. செகுன்றா. வி. (v.t.) ஏழைபோல நடித்தல் (வின்.); to pretend to be poor, profess poverty

*[பஞ்சம் + கூறு-,]*

**பஞ்சட்டை** *pañcaṭṭai,* பெ. (n.) நொய்ம்மை (நெல்லை); weak condition. *'பஞ்சட்டைக்கால்'.*

**பஞ்சட்டைக்கம்பு** *pañjaṭṭai-k-kambu,* பெ. (n.) நூல் நூற்பதற்கேனும் பஞ்சுவெட்டுவதற்கேனும் பயன்படுத்தும் ஒரு கருவி (நாஞ்.); an instrument used in spinning.

*[பஞ்சு + அட்டை + கம்பு]*

**பஞ்சடை–தல்** *pañjaḍai-,* **1.** செ.கு.வி. (v.i.) பசி முதலியவற்றால் பார்வை மங்குதல்; to grow dim, as the eyes of one who is famished with hunger or dying. "*காலன் வருமுன்னே கண் பஞ்சடை முன்னே*" (பட்டினத். திருப்பா.பக்.166.)

*[பஞ்சு + அடை –,]*

திணிவின்மையால் வலுவற்றிருக்கும் பஞ்சுபோல் பசியினால் உடல்வலிமை குன்றிப் பார்வை மங்கிய நிலை பஞ்சடைதல்' எனப்பட்டது.

**பஞ்சணை** *pañjaṇai,* பெ. (n.) பஞ்சுமெத்தை; cushion stuffed with cottion; cotton mattress "*கனகதண்டி மேலுக்குப் பஞ்சணையில்லை யென்பார்க்கும்*" (தனிப்பா.)

*[பஞ்சு + அணை]*

**பஞ்சதிராவிடம்** *pañja-tirāviḍam,* பெ. (n) விந்தியத்திற்குத் தெற்கேயுள்ள திராவிடம், ஆந்திரம், கன்னடம், மகாராட்டிரம், கூர்ச்சரம் என்ற ஐந்து திராவிடமாநிலங்கள்; the five provinces south of the vindhyās, viz., tirāviḍam, āndiram, kaṉṉaḍam, makārāṭṭiram, kūrccaram.

*[பஞ்சம் Skt.+ திராவிடம் ]*

பஞ்சம் = Skt.

**பஞ்சது** *pañcadu,* பெ. (n.) **1.** குயில்; koel. **2.** நேரம்; time.

**பஞ்சந்தாங்கி**[1] *pañjan-tāṅgi,* பெ. (n) வற்கடக்காலத்தில் உதவுவது; a means of support in times of famine as a field.

*[பஞ்சம் + தாங்கி ]*

**பஞ்சந்தாங்கி**[2] *pañjan-tāṅgi,* பெ. (n.) கேழ்வரகு; ragi.

*[பஞ்சம் + தாங்கி]*

வற்கடக் காலத்தில் ஏழைஎளியவர்களும் வாங்கத்தக்க மலிவுவிலை உணவுப் பண்டம் ஆதலின் கேழ்வரகு பஞ்சந்தாங்கி எனப்பட்டது.

**பஞ்சந்தாளி**[1] *pañjantāḷi,* பெ. (n) கருவேப்பிலை பார்க்க, **3.** see *karuvēppilai.*

*[பஞ்சம் + தாளி ]*

**பஞ்சநிவாரணம்** *panjanivāranam,* பெ. (n.) பஞ்சத்தால் நலிவுற்றோர்க்கு தக்க உதவியை அரசும் தனியாரும் செய்து காப்பாற்றுதல்; relief measures by the government and private to face the famine people.

*[பஞ்சம் + நிவாரணம்]*

நிவாரணம் – Skt.

**பஞ்சப்படி** *panjappaḍi,* பெ. (n.) அகவிலைப் படி; dearness allowance.

*[பஞ்சம் + படி]*

**பஞ்சப்பாட்டு** *pañja-p-pāṭṭu,* பெ. (n.) ஓயாது தனது ஏழைமையைக் கூறுங் கூற்று; (கொ.வ.) poverty, as the burden of one's song.

*[பஞ்சம் + பாட்டு]*

**பஞ்சபாண்டவர் முல்லை** *pañja-pāṇḍa-var-mullai,* பெ. (n.) செடிவகை (பராரச ii, 116); a shrub.

*[பஞ்சபாண்டவர் + முல்லை]*

**பஞ்சபாலை** *pañjapālai,* பெ. (n.) ஒருவகை நெல்; a kind of paddy. "*அருச்சனம் பஞ்சபாலை*" (பறாளை.பள்ளு.23.)

*[பஞ்சம் + பாலை]*

**பஞ்சம்** *pañjam,* பெ. (n.) சிறுவிலைக்காலம்; scarcity, favuine, dearth. "*பஞ்சப் பொழுது பகுத்துண்பான்*" (சிறுபஞ்.79.)

ம. பஞ்சம்

"பஞ்சம் இல்லாக்காலத்தில் பசி பறக்கும்." (பழ.)
"பஞ்சத்திலே பிள்ளையை விற்றது போல." (பழ.)
திணிவின்மையால் வலிவுற்றிருக்கும் பஞ்சு போல் பொருள் வளங்குன்றியிருக்கும் நிலை பஞ்சம் எனப்பட்டது.

**பஞ்சம்பசி** *pañjam-paši,* பெ. (n.) வற்கமும் பசியும்; scarcity and hunger.

*[பஞ்சம் + பசி]*

**பஞ்சம்பிழை-த்தல்** *pañjam piḻai-,* 4. செ.கு.வி. (v.i.) வற்கடக் காலத்தில் வேலை வாய்ப்புத் தேடி வேற்றூர்க்குச் சென்று உழைத்து உயிர் வாழ்தல்; due to the famine to search the job in other places to live.

*[பஞ்சம் + பழை-,]*

**பஞ்சமதி** *pañjamadi,* பெ. (n.) நிலத்தைக் கெடுத்ததன் பொருட்டுக் குடிகளிடத்து வாங்கப்படும் இழப்பீட்டுப் பொருள்; penalty imposed on tenants for damage to the land in their occupation.

*[பஞ்சம் + மதி]*

**பஞ்சமரபு** *pañja-marabu,* பெ. (n.) அறிவனார் இயற்றிய ஓர் இசைத்தமிழ் நூல் (சிலப்.உரைப்பா.); a Tamil musical treatise by Arivaṉār.

*[பஞ்சம் + மரபு]*

**பஞ்சமாசத்தம்** *pañja-mā-cattam,* பெ. (n.) செண்டை, திமிலை, சேகண்டி, கைத்தாளம், காளம் என்றும், தத்தளி, மத்தளி, கரடிகை, தாளம், காகளம் என்றும் இருவேறு வகையாய்ச் சொல்லும் ஐவகைப்பறை (T.A.S.V,172); the fivedrums, viz, cenṭai, timilai, cēgaṇḍi, kai-t-tālam, kāḷam or tattaḷi, mattḷi, karaḍigai, tāḷam, kākaḷam.

*[பஞ்சம்* Skt. *+ மா + சத்தம்* Skt.*]*

**பஞ்சமுகமுத்திரை** *pañja-muga-muttirai,* பெ. (n.) இருகையினுமுள்ள ஆட்காட்டிவிரல், பெருவிரல், நடுவிரல், சிறு விரல்களைத் தம்முட்கோத்துப் பிடித்தபின் மோதிர விரல்களை நடுவே நிமிர்த்திக் காட்டும் முத்திரை வகை; a hand-pose in which the intertwined with those of the other, the ring-fingers being held erect

*[பஞ்சம் + முகம் + முத்திரை]*



**பஞ்சமுகவாத்தியம்** *pañja-muga-vāttiyam,* பெ. (n.) ஐந்துமுகங்களையுடைய முரசு *(திருவாரூ.351,அரும்.)* பார்க்க; see *pañjāṉaṉa-murašu.*

*[பஞ்சமுகம் + வாத்தியம்]*

வாத்தியம் = இசைக்கருவி

பஞ்சம் = Skt.



**பஞ்சமூர்த்தி** *parica-mūrtti* பெ. (n.) 1. சிவபிரானுக்குரிய சதாசிவன் மகேசுவன், உருத்திரன், விட்டுணு, பிரமன்,என்ற **ஐந்து** மூர்த்தங்கள் (இ.வ.); (saivan) the **five** forms of siva viz., catāavaṉ, **visṉu**, piraman (saiva) the five **deities**, vināyakaṉ, murukan civaṉ **umai**, cantēarvanan

*[ பஞ்சம் Skt. +மூர்த்தி]*

**பஞ்சமூலம்** *puñija-mūlam,* பெ (n.) பெரும்பஞ்சமூலம், சிறுபஞ்ச **மூலம்** என்ற இருதிறமான ஐவகை **வேர்கள்** (யாழ்.அக); the five medicinal roots, of two kinds viz, perum-pañijamūlam, ciṟu-paricamūlam

*[ பஞ்சம் Skt. + மூலம்]*

**பஞ்சமூலவேர்** *puñjamūlavēr* பெ. (n.) ஐவகை மூலிகைவேர்;

1. குமிழ் ; cashmeretree
2. பூதப்பூ ; indian trumpet flower
3. முன்னை ; indian headache tree
4. பாதிரி ; trumpet flower
5. வில்வம் ; bael tree (சா.அக)

*[பஞ்சம் Skt + மூலம் + வேர்]*

**பஞ்சமூலி** *pañja-mūli,* பெ. (n.) வெள்ளெருக்கு, மாவிலிங்கம், சித்திர மூலம், வாலுளுவை, முருங்கை என்ற ஐவகை மருந்துச் சரக்கு; the five medicinal herbs viz., vellerukku, māvilingam cittiramūlam, vāluḷuvai,muruṅgai

*[பஞ்சம் Skt. + மூலி]*

**பஞ்சமூலிகற்பம்** *pañja mūlikaṟpam,* பெ. (n.) கட்கத்திற்குதவும் ஐந்துவகை மூலிகைகள் ஏலம், பத்திரி,தக்கோலம், சாதிக்காய், கோலவித்து (திருமூ–600); the five drugs useful in rejuvenation viz-cardamom, mace,culeb pepper, nutreg and root of long pepper(சா.அக)

*[ பஞ்சம் Skt. + மூலி + கற்பம்]*

**பஞ்சமூலித்தைலம்** *pañja mūlittailam* பெ. (n.) 1. பொடுதலை,தக்காளி, முசுமுசுக்கை, மயிற்பீலி ஆகிய இவ்வைந்து மூலிகைகளையும் சேர்த்து இறக்கிய முழுக்காட்டும் எண்ணெய்; a medicated bathing oil prepard from the five drugs viz - wild long pepper tomato ( country) bristly rough bryony, peacocks tail. Ref. dhanvanthri thailam. 500. 2. பொன்னா வரை,தசபலம், முதியோர் கூந்தல், நெய்ச்சிட்டி, வல்லாரை ஆக விவ்வைந்தும் சேர்த்து வடித்தெடுத்த எண்ணெய்;

a herbacious oil prepared from the following five herbs viz- tanner's casia, thasapalam,virginian silria. ash coloured fleabane and indian pennywort.

*[பஞ்சமூலி + தைலம்]*

**பஞ்சரட்டை** *pañjaraṭṭai,* பெ. (n.) பறவை வகை (தஞ்.சர.iii,160.); a kind of bird.

*[ஒருகா. பஞ்சரம் → பஞ்சரட்டை]*

பஞ்சரம் = பறவைக்கூடு

**பஞ்சரம்**[1] *pañjaram,* பெ. (n.) 1. பறவையடைக்குங் கூடு (திவா.); bird-cage, nest. 2. உடம்பு (யாழ்.அக.); human body. 3. மட்கலம் வனையுங்கூடம்; pottery. 4. இடம்; place, location, place of abode. '*வெஃகாவும் பாடகமு ரகமும் பஞ்சரமா நீடியமால்*' (யாப்.வி.95,உரை பக்.363.) 5. கோயிற் கருவறையின் ஒருபகுதி (வின்.); a portion of the inner sanctuary in a temple. 6. பார்க்க, செருந்தி. (சூடா.) panicled golden-blossomed pear tree 7. கழுகு (வின்.); eagle.



**பஞ்சரம்**[2] *pañjaram,* பெ. (n.) கோயில் விமானத்தில், நான்கு பக்கமுனைப் பகுதிகளில் கிளிக்கூண்டு போன்ற அமைப்பில் அமைக்கப்பெறும் சிற்ப வேலைப்பாடு மிகுந்த பகுதி; architectural work in the temple vimana's.

**பஞ்சரம்**[3] *pañjaram,* பெ. (n.) மட்கலம் வனையும் கூடம்; pottery. (w.)

**பஞ்சரி**[1]**-த்தல்** *pañjari-,* 11. செ.குன்றாவி. (v.t.) தொந்தரவு படுத்துதல்; to press, importune "பஞ்சரித்து நின்னைப் பலகாலிரந்த தெலாம்" (தாயு.பராபர.83.).

**பஞ்சரி**[2]**-த்தல்** *pañjari-,* செ.கு.வி. (v.i.) 1. கொஞ்சிப்பேசுதல் (யாழ்.அக.); to lisp; to indulge in amorous talk. "*பஞ்சரித்துத்தா பணமேயென*" (திருப்பு.574.) 2. விரிவாய்ப் பேசுதல் (யாழ்.அக.); to talk at length.

*[பஞ்சலி → பஞ்சரி-,]*

*[ஒருகா.பஞ்சரித்தல் = மனந்தடுமாறுதல்]*

**பஞ்சரி**[3] *pañjari* பெ (n) 1. அவரை; bean, country bean 2. ஒரு வீசையளவு; a viss measure.

**பஞ்சரை-த்தல்** *pañcarai-,* 1. செ.கு.வி.(v.i.) பஞ்சின் கொட்டையெடுத்தல்; to gin cotton.

*[பஞ்சு + அரை-,]*

**பஞ்சலி-த்தல்** 11. செ.கு.வி. (v.i.) மனந்தடு மாறுதல்; to be upset mentally. "*மதுமயக் கத்தாற் பஞ்சலித்து*" (சிலப்.10,13,உரை.).

*[பதம்சலி → பஞ்சலி-,]*

**பஞ்சலிப்பு** *pañjalippu,* பெ. (n.) 1. வற்கடத்தின் வருத்தம்; adverse

circumstances; hardships of famine. 2. எளிமை கூறுகை (யாழ்ப்.); complaint of indigence.

*[பஞ்சம் + அலைப்பு = பஞ்சலைப்பு]*

**பஞ்சலை** *pañjali*, பெ. (n.) 1. குறைந்தது ஓரடி வளர்வதும், வெண்ணிறமுள்ளதுமான ஆற்றுமீன் வகை; a river fish, silvery, attaining at least a foot in length. 2. கருவெண்மை நிறமுள்ள நன்னீர் மீன்; a fresh water fish, dark silvery barbus chrysopoma.

**பஞ்சவட்டந்தடி** *pañjavattan-tadi*, பெ. (n.) பஞ்சுகொட்டும் வில் (யாழ்.அக.); bow for ginning cotton.

மறுவ: பஞ்சுகொட்டுதடி.

*[பஞ்சுவட்டுந்தடி → பஞ்சவட்டந்தடி]*

**பஞ்சவடி** *pañjavadi*, பெ. (n.) கோதாவரிக் கரையிலுள்ளதும், ஐந்து ஆலமரங்கள் சேர்ந்திருக்கப்பெற்றதும் சீதையை இராவணன் கவர்ந்து சென்றதாகக் கருதப்படுவதுமான இடம்; the sacred grove of five banyans on the banks of the Godāvari where sita was abducted by Rāvaṉa, "*பாங்கருளதாலுறையுள் பஞ்சவடி மஞ்ச*" (கம்பரா.அகத்.57.)

*[பஞ்சம் + வடம் → வடி]*

**பஞ்சவன்** *pañjavaṉ*, பெ. (n.) பாண்டியன்; the king pandiya. "*பழியொடு படராப் பஞ்சவ வாழி*" (சிலப்.20,33.) (பிங்.)

பஞ்சம் Skt. + பஞ்சவன்

பஞ்சம் Skt.

ஐஞ்சிற்றரசர்களை அடக்கி ஆண்டமையின் பாண்டியன் பஞ்சவன் எனப் பட்டான்.

**பஞ்சவாரம்** *pañjavāram*, பெ. (n.) கண்டுமுதலில் குடியானவன் பங்கில் ஐந்திலொருபாகமாகிய அரசிறை (S.I.I.iii.380); land revenue due to government and payable in kind, being one-fifth of the tenant's share of the produce.

**பஞ்சவாரவூரிடுவரி** *pañja-vāra-v-ūr-iḍu-vari*, பெ. (n.) பழையவரிவகை (i.m.p.tj.94); an ancient tax.

*[பஞ்சவாரம் + ஊர் + இடு + வரி]*

**பஞ்சவாரியம்** *pañja-vāriyam*, பெ. (n.) சிற்றூர் வரிகளைத் தண்டல்செய்யும் அதிகாரக் கூட்டத்தார் (I.M.P.Tj.94); a village committee entrusted with collection of village dues.

*[பஞ்சம் + வாரியம்]*

**பஞ்சளை** *pañjaḷai*, பெ. (n.) *சாணிக்கெண்டை (தென்.இந்.மீன்கள்.)* பார்க்க; see *šāṇi-k-keṇḍai*.

**பஞ்சறை** *pañjaṟai*, பெ. (n.) தளர்நிலை (இ.வ.); weak condition.

*[பஞ்சட்டை → பஞ்சறை]*

**பஞ்சறைக்கிழவன்** *pañjaṟai-k-kiḻavaṉ*, பெ. (n.) தளர்ந்த கிழவன் (யாழ்.அக.); a decrepit, old man.

*[பஞ்சறை + கிழவன்]*

**பஞ்சனம்** *pañjaṉam*, பெ. (n.) 1. வன்னிமரம்; vanny tree. 2. அழித்தல்; to destroy. (சா.அக.)

**பஞ்சனி** *pañjaṉi,* பெ. (n.) சொக்கட்டான் மனை (யாழ்.அக.); a chequered cloth for playing at draughts.



**பஞ்சாங்குலம்** *pañjāṅgulam,* பெ. (n.) *ஆமணக்கு (மலை)* பார்க்க; see *āmaṇakku* castor plant.

**பஞ்சாடி[2]** *pañjāḍi,* பெ. (n.) 1. மயிர்க் கொன்றை; falsepeacock flower 2. பெரு மயிர்க் கொன்றை; ever green royal peacock flower tree. (சா.அக.)



**பஞ்சாடித்திருக்கை** *pañjāḍi-t-tirukkai,* பெ. (n.) முதுகுப்புறத்தில் முட்களுடைய திருக்கை மீன் (செங்கை.மீன); a kind of sea fish, with thorns in the back.

*[பஞ்சாடி + திருக்கை]*

மறுவ. பஞ்சாடுதிருக்கை.



**பஞ்சாடு–தல்** *pañjāḍu-,* செ.கு.வி. v.intr. 1. *பஞ்சடை* பார்க்க; see *pañjadai.* 2. *பஞ்சரை* பார்க்க.. see *pañjarai*

*[பஞ்சு + ஆடு–.]*

**பஞ்சாடு தங்கை** *pañjāḍutaṅgai,* பெ. (n.) இலந்தை; jujube (சா.அக.).

*[பஞ்சாடு + தங்கை]*

**பஞ்சாடுதிருக்கை** *pañcaḍu-tirukkai,* பெ. (n.) *பஞ்சாடித் திருக்கை* பார்க்க; see *pañjāḍi-t-tirukkai.*

*[பஞ்சாடு + திருக்கை]*

**பஞ்சாணிகம்** *pañjāṇigam,* பெ. (n.) கோரைக்கிழங்கு; corray roor. (சா.அக.).

**பஞ்சாணியம்** *pañjāṇiyam,* பெ. (n.) மரமஞ்சள் (சங்.அக.); tree turmeric.

**பஞ்சாய்[1]** *pañjāy,* பெ. (n.) கோரை வகை a grass-cyperus rotundus tuberosus. "*பஞ்சாய்க் கோறை பல்லிற் கூட்டி*" (பெரும் பாண்.217.)

**பஞ்சாய்க்கோதை** *pañjāy-k-kōdai*, பெ. (n.) *பஞ்சாய்ப் பாவை* பார்க்க; see *pañjāy-pāvai*. "*பஞ்சாய்க் கோதை மகளிர்க்கஞ்சுவல்*" (ஐங்குறு.54.)

*[பஞ்சாய் + கோதை]*

**பஞ்சாய்க் கோன்** *pañjāyak-kōṉ*, பெ. (n.) திரள்கோரை; a kind of sedge grass (சா.அக.)

*[பஞ்சாயம் + கோன்]*

**பஞ்சாய்ப்பற–த்தல்** *pañjāy-p-paṟa-*, 3. செ.கு.வி (v.i.) 1. வேகமாய் நடத்தல்; to walk fast. 2. நிலைகுலைந்திருத்தல்; to struggle with great difficulties.

*[பஞ்சாய் + பற–,]*

**பஞ்சாய்ப்பறத்து–தல்** *pañjāy-p-paṟatu-*, 5. செ.குன்றா.வி (v.t.) முற்றுந் தோல்வியுறச் செய்தல் (கொ.வ.); to deduce to nothing; to rout completely.

*[பஞ்சாய் + பற–,]*

**பஞ்சாய்ப்பாவை** *pañjāyap-pāvai*, பெ. (n.) பஞ்சாய்க் கோரையாற் செய்த பாவை; a toy made of pañjāy grass. "*கடலென் பஞ்சாய்ப் பாவை கொண்டு*" (இலக்.வி.521,உதா.)

*[பஞ்சாய் + பாவை ]*

**பஞ்சாயம்²** *pañjayam*, பெ. (n.) பார்க்க, *பஞ்சாய்*¹ பார்க்க (சங்.அக.); see *pañjāyam*.

**பஞ்சார்–த்தல்** *pañjār-*, 10. செ.கு.வி. (v.i.) *பஞ்சடை, (யாழ்.அக). 1.* பார்க்க; see *pañjaḍai*.

*[பஞ்சு + ஆர்–, ]*

**பஞ்சாரம்²** *pañjārsam,*, பெ. (n.) ஆடையிற் பஞ்செழும்பியுள்ள நிலை (வின்.); condition of being frayed, as cloth.

*[பஞ்சு + ஆர்த்தல் → ஆரம் ]*

**பஞ்சாரம்³** *pañjāram*, பெ. (n.) 1. குதிரை, எருது இவற்றின் அகவை; age, as of a horse or bullock as. புதுப்பஞ்சாரம், the first age, நடுப்பஞ்சாரம், the middle age, பழம் பஞ்சாரம், the old age. (வின்).

**பஞ்சாலை¹** *panjālai*, பெ. (n.) பஞ்சரைக்கும் தொழிற்சாலை (கற்.); ginning factory.

*[பஞ்சு + ஆலை ]*

**பஞ்சாலை²** *panjālai*, பெ. (n.) பூவரசு; portia tree (சா.அக.).

*[பஞ்சு + ஆலை ]*

**பஞ்சான்¹** *pañjāṉ*, பெ. (n.) கைக்குழந்தை (வின்); Infant in arms 2. அப்பொழுது பிறந்த குழந்தை; new born baby (சா.அக.)

*[பையல் → பைஞ்சு → பஞ்சான் ]*

மஞ்சன் → பஞ்சான்

**பஞ்சான்²** *pañjāa*, பெ. (n.) செடிவகை (நாஞ்.); a kind of plant '*பஞ்சான் பிசின்*'.

**பஞ்சான்³** *pañjāṉ*, பெ. (n.) மீன்வகை; a kind of fish. "கோளையாள லொஞ்சான் பஞ்சான்" (குருகூர்ப். 7).

**பஞ்சானன்** *pañjāṉaṉ,* பெ. (n.) வெளுச்சிப் பிசின்; gum of wood apple tree (சா.அக.)

**பஞ்சானுங்குஞ்சும்** *pañjāṉuṅ-kuñjum,* பெ. (n.) குழந்தை குட்டிகள்; infants and children.

*[பஞ்சானும் + குஞ்சும் ]*

மறுவ. பஞ்சானுங்குஞ்சானும்

ஒ.நோ. 'நஞ்சானுங்குஞ்சும்'

'பஞ்சானும் குஞ்சும் பறக்கத் தவிக்கிறது'. (பழ.

**பஞ்சி**[1] *pañji,* பெ. (n.) 1. பஞ்சு; cotton "*பஞ்சிவெண்டிரிச்செஞ்சுடர்*" (குறுந். 353) 2. பஞ்சணை; cotton cushion. "புகழெனும் பஞ்சி சேர்த்திப் பொலிவுறு பேரத்தாணி" (சூடா. சிறப்புப். 6). 3. வெண்டுகில்; white cloth. "*பஞ்சியுங் களையாப்புண்ணர்*" (புறநா. 353) 4. இலவு; red silk-cotton tree "*செருக்கற்ற பஞ்சிமலர்ச் சீறடி*' (சீவக. 2339.) 5. செவ்வரக்குச் சாயமிட்ட பஞ்சு; cotton cloured with lac-dye 'பஞ்சி மெல்லடி' (தக்கயாகப் 33, உரை) 6. சடைந்தது (வின்.); anything loose or bushy, as cotton, down, etc. 7. *பருத்தி* பார்க்க; see *cotton-plant* 8. பெருந்தூறு; (சூடா.) dense thicket.

க. பஞ்சிகே

ம. பஞ்ஞி.

**பஞ்சி**[2] *pañji,* பெ. (n.) 1. வருத்தம்; difficulty, irksomeness. 2. சோம்பல் ; repugnance to activity due to lassitude, laziness.

**பஞ்சி**[3] *pañci,* பெ. (n.) பஞ்சாங்கம் (யாழ்.அக.); almanac.

*[பஞ்சிகை → பஞ்சி ]*

**பஞ்சிகம்** *pañcikam,* பெ. (n.) தாளி (திவா.) ; hedge bindweed.

**பஞ்சிகரன்** *pañcikaran,* பெ. (n.) பஞ்சாங்கங்கணிப்போன்; one who prepares almanacs. (pond)

**பஞ்சிகை** *pañcikai,* பெ. (n.) 1. கணக்கன்; accountant 2. இயமன் ; yama 3. உரைநூல்; commentary.

**பஞ்சிட்டம்** *pañjiṭṭam,* பெ (n.) கொள் என்னும் தவசம்; horsegram.

**பஞ்சிடு–தல்** *pañjiḍu-,* 11. செ.கு.வி (v.i.) *பஞ்சடை (மதுரைப்பதிற்.57)* பார்க்க; see *pañjaḍai.*

*[ பஞ்சு + இடு–,]*

**பஞ்சித் தணக்கு** *pañjit-taṇakku,* பெ (n) மலைப்பருத்தி; hill cotton; white silk-cotton tree.(சா.அக)

*[ பஞ்சி + தணக்கு]*

**பஞ்சிதம்** *pañcitam,* பெ. (n.) விண்மீன் (சது.); star 2. மாட்டுச்சாணம்; cow dung.

**பஞ்சிநாண்** *pañji-nāṇ,* பெ (n) பூணூல்; sacred thread, as of brahmins "*பஞ்சி நாண்கலைத்தோள் மார்பும்*" (திருவிளை. நகர.83)

*[ பஞ்சி + நாண்]*

**பஞ்சிப்படு–தல்** *pañji-p-paḍu-,* 20. செ.கு.வி (v.i) 1. பெருமுயற்சியெடுத்தல்; to try hard, exert oneself greatly 2. சோர்வு முதலியவற்றால் வேலைசெய்ய மனமெழாதிருத்தல்; to feel reluctant to work through weakness or idleness

*[ பஞ்சி + படு–,]*

**பஞ்சியடர்** *pañji-y-aḍar,* பெ. (n.) கொட்டிய பஞ்சு; cleaned cotton *"பஞ்சியடரனிச்சம் நெருஞ்சியீன்ற பழமாலென்று"* (சீவக,341.)

*[ பஞ்சி → பஞ்சி + அடர் ]*

**பஞ்சியூட்டு–தல்** *pañji-y-ūṭṭu-,* 12. செ.கு.வி (v.i.) மகளிர் பாதங்களில் செம்பஞ்சிக் குழம்பு அணிதல்; to paints women's feet with cotton dyed with lac

*[ பஞ்சி + ஊட்டு–, ]*

**பஞ்சிரி** *pañjiri,* பெ. (n.) *பஞ்சரி* பார்க்க (இ.வ.) see *pañjari.*

*[ பஞ்சரி → பஞ்சிரி ]*

**பஞ்சிற்றுகள்** *pañjiṟṟugaḷ,* பெ. (n.) ஒரு சிற்றளவு; a small lineal measure

*[ பஞ்சில் + துகள் ]*

**பஞ்சிற்றொடர்** *pañjiṟṟoḍar,* பெ. (n.) நூற்கும் பஞ்சின் துய்(வின்) ; the soft fibre of cotton drawn out in spinning

*[ பஞ்சி → தொடர் + தொடர் ]*

**பஞ்சிற்றொடர்நுதி** *pañciṟṟoṭar-nuti,* பெ. (n.) *பஞ்சிற்றொடர்(வின்.)* பார்க்க see *pañjiṟṟoḍar.*

*[ பஞ்சில் + தொடர் + நுதி ]*

**பஞ்சு**[1] *pañcu,* பெ. (v.i.) 1. பருத்தி ; cotton *"பஞ்சொக்குமடிகள்"* (கம்பரா. மாரீச.70) 2. சீலை; cloth "பஞ்சா ரகலல்குற் பாவையார்" (சூளா.மந்திர.54.) 3. செவ்வரக்குச் சாயமிட்ட பஞ்சு; cotton coloured with lac-dye. 4. விளக்குத்திரி; wick *"பஞ்சின்றி யமுதநெய் மாட்டிய விளக்கே"* (கம்பரா சித்திர.15) 5. பருத்திச் செடி; indian cotton-plant 6. பூளைப் பஞ்சு; down of pūḷai 7. கவறாட்டத்து வழங்கும் குழூஉக்குறி ; a technical term,used in dice - play *"பஞ்சென வுரை செய்வர்"* (கந்தபு.கயமுகனுற் .167)

**பஞ்சின் வகைகள்**

1. நாட்டுப் பஞ்சு – country cotton
2. சீமைப்பஞ்சு – (சீமைப் பருத்தி)
3. கோங்கிலவம் பஞ்சு – golden silk cotton
4. முள்ளிலவம் பஞ்சு – thory silk cotton tree
5. செம்பஞ்சு – red cotton
6. இலவம் பஞ்சு – cotton silk tree
7. பூளைப்பஞ்சு – true silk cotton
8. காட்டுப் பஞ்சு (அல்) காட்டிலவம் பஞ்சு – large flowered and capsuled silk cotton
9. பாறையிலவம் பஞ்சு – (காட்டுப் பஞ்சு)
10. மலைப் பஞ்சு – மலைப்பருத்தி

'பஞ்சுபடிந்த ஓவியம்போல' (பழ.)

'பஞ்சு படிந்தாலும் படியும் ஒருதேசம் நெஞ்சு பறப்பதற்கு நிலைகாணோம் லவலேசம்' (பழ.)
'பஞ்சுப்பொதியில் நெருப்புப்பட்டாற்போல'
'பஞ்சுப்பொதியில் அம்புதைக்குமா?' (பழ.)
'பஞ்சையும் நெருப்பையும் பக்கத்தில் வைக்கலாமா?' (பழ.)

**பஞ்சு**[2]**–தல்** *pañju* 15. செ.கு.வி (v.i.) பஞ்சைத் தனத்தைக்காட்டுதல்; to exhibit one's poverty *"பஞ்சிப் பாழ்த்த நம்மிடி சொலி"* (உத்தரரா.அசுவமே.124)

*[ பஞ்சை → பஞ்சு–, ]*

**பஞ்சுக்கலவாய்** *pañju-k-kalavāy,* பெ.(n.) செம்புநிறமுள்ள கடல்மீன்வகை; a sea perch,reddish-brown,

*[ பஞ்சு + கலவாய் ]*

**பஞ்சுக்காரச்செட்டி** *pañju-k-kāra-c-cetti* பெ.(n.) பஞ்சுக்காரன் பார்க்க; (E.T-Vi,17) *'பஞ்சுக்காரச் செட்டித்தெரு'* (இ.வ)

*[பஞ்சுக்காரன் + செட்டி]*

**பஞ்சுக்காரன்** *pañju-k-kāraṉ* பெ. (n.) வேளாளர் வகையான்; a sub - division of vēḷāḷas (E.T.Vi,17)

*[பஞ்சு + காரன்]*

**பஞ்சுக்கொட்டை¹** *pañju-k- koṭṭai* பெ. (n.) நூற்றற்கு அமைந்த பஞ்சுத்திரள்; handful of cotton prepared for removing seeds

*[பஞ்சு + கொட்டை]*

**பஞ்சுக்கொட்டை²** *pañju-k-koṭṭai-,* பெ. (n.) பருத்திக்கொட்டை; cotton seed. (சா.அக)

*[பஞ்சு + கொட்டை]*

**பஞ்சுகடை—தல்** *pañju-kaḍai,* 3. செ.கு.வி (v.i.) 1. கொட்டையெடுக்கப் பஞ்சைப்பானை யிலிட்டுக் கோலாற் கடைதல் (வின்.); to tousle cotton with a turning stick in a pot. 2.வில்லாற் பஞ்சைத் தெறித்துக் கொட்டை கோதுகளின்றித் தூய்மை செய்தல்; to beat cotton with a rod or a machine like a bowstring, for removing seeds.

*[பஞ்சு + கடை—,]*

**பஞ்சு கொட்டி** *pañju-koṭṭi,* பெ.(n.) பஞ்சினைத் தூய்மை செய்வோன்; cotton - cleaner

*[பஞ்சு + கொட்டி]*

**பஞ்சு கொட்டுதல்** *pañju-koṭṭu-,* 5. செ.கு.வி (v.i.) *பஞ்சு கடை—,* பார்க்க; see *pañju kaḍai.*

*[பஞ்சு + கொட்டு—,]*

**பஞ்சு கொண்டான்** *pañju-koṇḍāṉ,* பெ. (n.) முகமதியர்கள் திருவரங்கத்தைக் கொள்ளையிட்ட போது அம்முகமதியர்கட் கஞ்சாது எதிர்த்து நின்று கொள்ளையிடா தவாறு தடை செய்தவர்; a Hindu warrior.

**பஞ்சுசூர்—தல்** *pañju-cūr-* 1. செ.கு.வி (v.i.) பருத்தியைக் கையாற் பன்னுதல் (வின்.); to tousle cotton with the fingers for separating the seeds

*[பஞ்சு + சுகிர்—,]*

**பஞ்சுசெடி** *pañjuśeḍi,* பெ. (n) பஞ்சு விளையும் பருத்திச்செடி; common cotton plant (சா,அக)

*[பஞ்சு + செடி]*



**பஞ்சுத்துணி** *pañju-t-tuṇi,* பெ. (n.) புண்களுக்கு இடும் பஞ்சாலாகிய துணி ; linen scraped into a soft substance and used for dressing and cleaning wounds and sores (சா.அக)

*[பஞ்சு + துணி]*

**பஞ்சுத்துய்** *pañju-t-tuy* பெ. (n.) பன்னிய பஞ்சுநுனி; ends of cleaned cotton *'காட்டுத் தீ முன்னர்ப் பஞ்சுத்துய் போலு மாகலின்'* (குறள்,360. உரை.)

*[ பஞ்சு + துய் ]*

**பஞ்சுநாளகக்கொடி** *pañjunālaka-k-kodi,* பெ. (n.) அடம்பு என்னும் மூலிகை; a kind of herb (சா.அக.)

*[ பஞ்சு + நாளகம் + கொடி ]*

**பஞ்சுநாளகம்** *pañjunāḷagam,* பெ. (n.) அடப்பங்கொடி என்னும் மூலிகை; a kind of herb (சா.அக.)

*[ பஞ்சு + நாளகம் ]*

**பஞ்சுநீலப்பாணி** *pañju nīlappāṇi,* பெ.(n.) துருசு (யாழ்.அக.); blue vitriol copper sulphate (சா.அக.)

*[ பஞ்சு + நீலம் + பாணி ]*

**பஞ்சுப்பாசி** *pañju-p-pāci,* பெ.(n.) பஞ்சுபோலும் மென்மையானதொரு பாசி (தஞ்சை.மீன); a kind of moss.

**பஞ்சுப்பீலி** *pañju-ppīli,* பெ. (v.i.) பஞ்சு தொடர்பான ஒரு பழைய வரி (கல்); an ancient tax on cotton

*[ பஞ்சு + பீலி ]*

**பஞ்சுப்பொதி** *pañju-p-podi* பெ. (n.) பஞ்சடைத்த மூட்டை; cotton bale 'பஞ்சுப்பொதியில் நெருப்புப்பட்டதுபோல' (பழ.) 'பஞ்சுப்பொதியில் பட்ட அம்பு போல' (பழ.) 'பஞ்சையும் நெருப்பையும் ஒன்றாய் வைக்கலாமா?' (பழ.) 'பஞ்சும் நெருப்பும் போல' (பழ.)

*[ பஞ்சு + பொதி ]*

**பஞ்சுபடு–தல்** *pañju-padu,* 20. செ.கு.வி. (v.i.) எளிமையாதல்; to become light or useless; to bevalueless *"பஞ்சுபடுசொல்லனிவன்"* (தாயு.தேசோ.5.)

*[ பஞ்சு + படு–, ]*

**பஞ்சுபற–த்தல்** *pañju-paṟa* 3. செ.கு.வி. (v.i.) மென்மையாதல்; to be soft and tender as cotton, said of green fruits *'பஞ்சு பறக்கிறதாய்க் காய்கறி வாங்கி வா"* (இ.வ.)

*[ பஞ்சு + பற–, ]*

**பஞ்சுபிலி** *pañcu-pili* பெ. (n.) பார்க்க, **பஞ்சுப்பிலி** see *pañju-p-pili* (s.i.i.v,168)

*[ பஞ்சு + பிலி ]*

**பஞ்சுபோல் தட்டல்** *pañju pōl taṭṭal* செ.கு.வி (v.i.) பஞ்சுபோல நையும்படி இடித்தல்; pounding into a soft pulp (சா.அக)

*[ பஞ்சு + போல்+ தட்டல் ]*

**பஞ்சுபோல் பற–த்தல்** *pañju pōl paṟa-,* 3. செ.கு.வி (v.i.) முழுவதும் அறவே நீங்குதல்; getting rid off entirely (சா.அக)

*[ பஞ்சு + போல் + பறத்தல் ]*

**பஞ்சு போலோடு–தல்** *pañju pōl-ōḍu-,* 5. செ.கு.வி (v.i.) *பஞ்சுபோல் பறத்தல்* பார்க்க see *pañjupōl paṟa.*

*[ பஞ்சு + போல் + ஓடு–, ]*

**பஞ்சுபோல்வெளு—த்தல்** *pañju pōlveḷu,* 2. செ.கு.வி (v.i.) பஞ்சுபோல் தூய வெண்மையாதல்; to become as white as cotton

*[ பஞ்சு + போல் + வெளு—,]*

**பஞ்சுமயிர்** *pañjumayir,* பெ. (n.) பறவையின் மெல்லிய இறகு; soft feather of birds constituting a bed. (சா.அக.)

*[ பஞ்சு + மயிர் ]*

**பஞ்சுமிட்டாய்** *pañjumiṭṭāy,* பெ. (n.) குச்சியில் பந்துபோல் சுற்றியிருக்கும், வண்ணப்பஞ்சு போன்ற சீனிப்பாகினால் செய்யப்பட்ட தின்பண்டம்; candy-floss; cotton candy.

*[ பஞ்சு + மிட்டாய் ]*

மிட்டாய் = அரபிச்சொல்

**பஞ்சுமூலி** *pañjumūli,* பெ. (n.) பருத்திச்செடி; cotton plant. (சா.அக.)

*[ பஞ்சு + மூலி ]*

**பஞ்சுரம்** *pañjuram,* பெ. (n.) குறிஞ்சி அல்லது பாலை யாழ்த் திறத்தொன்று (பிங்.); (mus.) a secondary melody type of the kuriñji or pālai class. "வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினும்" (ஐங்குறு. 311.)

ஒருகா. *[ பைஞ்சுரம் → பஞ்சுரம் ]*

(இது பகற்பண்களிலொன்றாகத் தேவாரத்திற் கூறப்பெறும்.)

**பஞ்சுருட்டான்** *pañjuruṭṭāṉ,* பெ. (n.) மிகச் சிறியதும் பச்சை நிறத்தில் உள்ளதுமான ஒரு பறவை; a small and green coloured bird-bee eater. (சா.அக.)

*[ பைஞ்சுருட்டான் → பஞ்சுருட்டான் ]*

(ஊர்க்குருவியின் அளவுள்ளதாய், அழகிய பச்சைமணி நிறமுடைய பறவை, தலை இளஞ்சிவலையாக இருக்கும்; இரண்டு வாற்சிறகுகள் மற்றவையினும் நீண்டு பின்னிற்கும்; புதர்களில் வாழும் இயல்பினது.) (கலைக்.654.)



**பஞ்சுருட்டான்வேர்** *pañjuruṭṭāṉ vēr,* பெ. (n.) பஞ்சுருட்டான் குருவியின் கூட்டில் கிடைக்கும் மருத்துவப் பண்புடைய செடியின் வேர்; a kind of root herb which is obtained in pañjuruṭṭāṉ kuruvi's nest.

*[ பஞ்சுருட்டான் + வேர் ]*

**பஞ்சுருத்தான்** *pañjuruttāṉ,* பெ. (n.) *பஞ்சுருட்டான்* பார்க்க; see *pañjuruṭṭāṉ.*

*[ பஞ்சுருட்டான் → பஞ்சுருத்தான் ]*

**பஞ்சுவணம்** *pañjuvaṇam,* பெ. (n.) வேள்விவகை; a sacrifice. "பங்கப்படாத பஞ்சுவணம் வாசபேயம்" (உத்தரரா. திக்குவி. 117)

*[ பஞ்சு + உவணம் ]*

**பஞ்சுவாய்க் கொள்ளு¹—தல்** *pañjuvāy-k-koḷ-,* 16. செ.கு.வி. (v.i.) நெல் விதைத்த நான்கு அல்லது ஐந்தாம்நாள் நென்முனையிற் பஞ்சுபோன்ற பொருள் தோன்றுதல் (வின்.);

## பஞ்சுருட்டான் வகைகள்



காட்டுப் பஞ்சுருட்டான்



பச்சைப் பஞ்சுருட்டான்



நீலவால் பஞ்சுருட்டான்



செந்தலைப் பஞ்சுருட்டான்

to form a cotton lire substance on the eye of spronting paddy on the fourth or fifth day after sowing.

*[ பஞ்சுவாய் + கொள்ளு–,]*

**பஞ்சுவாய்க் கொள்ளு²–தல்** *pañjuvāy-k-kollu-*, **16. செ.கு.வி.** (v.i.) பிறந்த குழந்தை, தாய்முலை பற்றிப் பால் குடித்தல்; being nursed by the mother's milk. **(சா.அக.)**

*[ பஞ்சு + வாய் + கொள்ளு–,]*

**பஞ்சூகம்** *pañjūgam* **பெ.** (n.) பெருமை (அக.நி.); greatness.

**பஞ்சை** *pañjai,* **பெ.** (n.) வற்கடம்; famine. 'காலம் நிரம்ப பஞ்சையாயிருக்கிறது' **2.** நல்குரவு (யாழ். அக.); indigence, poverty. **3.** ஏழை; indigent person. "இந்தப் பஞ்சைகள் முகம்பாரும்" (சர்வசமய **188.**) **4.** வலிமை யற்றவன்; emaciated, weak person. **5.** இவறற்றன்மையுள்ளவன்; mean minded person. "அப்பஞ்சைகள் வங்கணம் போதும்" (தனிப்பா. **1, 412, 49.**) **6.** பாண்டிய வேளாளரின் வகையான் (இ.வ.); a sub division of pāṇdya vēḷāḷas.

**தெ.** பஞ்ச. **க.** பஞ்செ.

'பஞ்சை நாரி பணியாரம் சுட்டாள்; வீங்கிநாரி விசாரப்பட்டாள்' (பழ.)

*[ பஞ்சம் → பஞ்சை]*

**பஞ்சைக்கோலம்** *pañjai-k-kōlam,* **பெ.** (n.) ஏழ்மைக்கோலம்; mean attire, beggarly dress.

*[ பஞ்சை + கோலம்]*

**பஞ்சைத்தனம்** *pañjai-t-tanam,* **பெ.** (n.) (கொ.வ.) **1.** ஏழைமை; poverty. **2.** இவறற்றன்மை; niggardliness.

**க.** பஞ்செதெந

*[ பஞ்சை + தனம்]*

**பஞ்சைப்பனாதி** *pañjai-p-panādi,* **பெ.** (n.) ஏதிலி (மதி. க. **11, 61**); useless person; vagabond.

*[ பஞ்சை + பனாதி]*

**பஞ்சைப்பாட்டு** *pañjai-p-pāṭṭu,* **பெ.** (n.) *பஞ்சப்பாட்டு* பார்க்க; see *panjappāṭṭu.*

*[ பஞ்சம் + பாட்டு → பஞ்சைப்பாட்டு]*

**பஞ்சைமயிர்** *pañjaimayir,* **பெ.** (n.) பூனைமயிர் ; thin soft hair like that of a cat. **(சா.அக.)**

**மறுவ.** மென்மயிர், புன்மயிர்

*[பஞ்சை + மயிர்]*

**பஞ்சைமொழிபகரல்** *pañjai moli pakaral,* **பெ.** (n.) பணமில்லை யென ஏழைமை கொண்டாடல் ; pleading poverty **(சா.அக.)**

*[பஞ்சைமொழி + பகரல்]*

**பஞ்சையன்¹** *pañjaiyan,* **பெ.** (n.) வறிஞன் **(வின்)**; person beggarly in dress and manners.

*[பஞ்சம் → பஞ்சையன்]*

**பஞ்சையன்²** *pañjaiyan,* **பெ.** (n.) **1.** வலு வற்றவன்; man of weak constitution **(சா.அக.)**

*[பஞ்சு → பஞ்சை → பஞ்சையன்]*

**பஞ்சோட்டி** *pañjotti,* பெ. (n.) ஒருவகை மூலிகை; a kind of herb. (சா.அக.)

*[ஒருகா. பஞ்சம் + ஒட்டி]*

**பஞ்ஞிலம்** *paññilam,,* பெ. (n.) 1. மக்கட் டொகுதி; people, populace "*நனந்தலைப் பஞ்ஞிலம் வருகவிந் நிலமென*" (பதிற்றுப். 17,9)

*[பசுமைநிலம் → பஞ்ஞிலம்]*

**பஞ்ஞீல்** *paññil,* பெ. (n.) பஞ்ஞிலம் (திவா.) பார்க்க; see paññilam.

*[பஞ்ஞிலம் → பஞ்ஞீல்]*

**பஞ்ஞீலி** *paññili,* பெ. (n.) 1. மக்கட்பரப்பு (சூடா.); population; 2. திருப்பைஞ்ஞீலி என்னும் சிவத்தலம் (த.சொ.அக.); a place name of sivan temple

**பஞிலம்** *pañilam,* பெ. (n.) பஞ்ஞிலம். பார்க்க, see paññilam. "*பன்னூறடுக்கிய வேறுபடு பஞிலம்*" (புறநா. 62, 10, கீழ்க்குறிப்பு)

*[பஞ்ஞிலம் → பஞிலம்]*

**பட்கை** *paṭkai,* பெ. (n.) பாம்பின் மேல்வாய் நச்சுப்பல் (வின்.); upper fang of a snake, opp. to apaṭkai

**பட்டகாரி** *paṭṭakāri,* பெ. (n.) 1. சிறுநீலி; small leaved indigo plant. (சா.அக.)

மறுவ: அவுரி.

**பட்சேரி** *paṭ-cēri,* பெ. (n.) 1. பள்ளரூர் (நெல்லை); village of pallas.

*[பள் → பள்ளர் + சேரி]*

**பட்டக்கடம்பு** *paṭṭa-k-kaḍampu,* பெ. (n.) *நீர்க்கடம்பு* பார்க்க; water cadamba (l). see *nirkkaḍambu.*

*[பட்டம் + கடம்பு]*

மறுவ. பெண்கடம்பு.

**பட்டக்காரன்[1]** *paṭṭa-k-kāraṉ,* பெ. (n.) 1. பட்டம் பெற்றவன்; title-holder. 2. தொட்டியர், கொங்குவேளாளர் போன்ற சாதித்தலைவர்களின் சிறப்புப்பெயர்; title of the headman of the toṭṭiyar and koṅguvēḷāḷa castes.

*[பட்டம் + காரன்]*

**பட்டக்காரன்[2]** *paṭṭa-k-kāraṉ,* பெ. (n.) வில்லைப் பணியாள்; a peon in livery. (இ.வ.)

*[பட்டை + காரன்]*

**பட்டகசாலை** *paṭṭaga-šālai,* பெ. (n.) 1. கூடம் central or principal hall in a house. 2. மனையில் உண்ணுமிடம்; dining hall adjoining a house (Nāt cheṭṭi).

தெ. பட்டசாலா க. பட்டசாலெ

*[பட்டகம் + சாலை]*

*[பள் → படு → பட்டகம் ]*

பட்டகம் – தாழ்வான இடம், தாழ்வாரம் உணவுக்கூடம்.

**பட்டகம்[1]** *paṭṭagam,* பெ. (n.) 1. ஆடுதின்னாப் பாளை (மலை.) worm killer. 2. புழுக்கொல்லி (சங். அக.) ringworm root.

**பட்டகம்[2]** *paṭṭagam,* பெ. (n.) துணி; a piece of cloth. "*பட்டகசாலையுள் பட்டகத்தை விரித்துக் கொண்டிருந்தனள்*" (ஸ்ரீபுராணம்).

**பட்டகாரி** *paṭṭakāri,* பெ. (n.) சிறுநீலி என்னும் மூலிகை; small leaved indigo plant. (சா.அக.)

மறுவ: அவுரி. பட்டகி,

பட்டகேசரி, பட்டங்கம்

**பட்டகி** *paṭṭagi,* பெ. (n.) 1. நாடாப்புழு; tape worm *(சா.அக.)*

*[பட்டகம் → பட்டகி]*

**பட்டகேசரி** *paṭṭakēšari,* பெ. (n.) பட்டக்கடம்பு; female cadamba. (சா.அக.)

மறுவ : பெண்கடம்பு

*[பட்ட + கேசரி]*

**பட்டங்கட்டி** *paṭṭaṅ-kaṭṭi,* பெ. (n.) 1. பட்டஞ்சூடிய அதிகாரி; one who is crowned, anointed or invested with authority. 2. கைக்கோளர், பரவர் முதலிய சாதியாரின் தலைவருக்குரிய பட்டம்; title of the headman of certain castes, as kaikkōḷar, paravar, etc. 3. கடைசன் என்னும் சாதிப் பெயர்; name of a caste of lime-bones and basket-makers.

*[பட்டம் + கட்டி]*

**பட்டங்கட்டு—தல்** *paṭṭaṇ-kaṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. பட்டப்பெயர் சூட்டுதல்; to confer a title "*நன்னெறிப் பட்டங்கட்டி நல்கினான் பரி வட்டங்கள்*" (திருவாலவா. 39, 27) 2. அரசு முதலிய பதவியளித்தல்; to invest with office, dignity, authority; to install, crown. "*இராவணனை வென்று ... அவன்றம்பிக்குப் பட்டங்கட்டிய ராமா*" (தனிப்பா. 1, 391, 48) 3. திருமணத்தில் மணமக்கள் நெற்றியிற் பொற்பட்டம் கட்டுதல்; to fasten a gold band on the foreheads of the bridal pair in a marriage. 4. மறவர் சாதியில் இறந்தோனது பிணத்தை எடுப்பதற்கு முன் அவனுடைய முதன்மைப் பிறங்கடையும், அப்பிறங்கடையின் மனைவியும் தவசங் களோடு கலந்த இரண்டு சாண வுண்டையை வீட்டின் சுவரில் ஒட்டியும், பிறகு எட்டாநாள் அதனை நீரிற்கரைத்துந் தாமே இறந்தோன் சொத்துக்கு உரிமையுடையவரென்று தெரிவிக்குஞ் சடங்கு செய்தல்; *to* perform the ceremony of indicating the succession to the estate of a deceased person among Maravas, wherein, before the corpse is removed, the chief heir and his wife take two balls of cowdung mixed with various kinds of grain and stick them on to the wall of their house and throw them in water on the eighth day after death. 5. எரியூட்டுமுன் பிணத்தைச் சுற்றி வருதல்; to perform the ceremony of going round the deceased during cremation.

*[பட்டம் + கட்டு-,]*

**பட்டங்கம்** *paṭṭaṅgam,* பெ. (n.) சப்பாங்கு; (சா.அக.) a kind of herb.

**பட்டங்கிச்சார்** *paṭṭaṇgi-c-cār,* பெ. (n.) நடுப்பாய்மரத்தின் துணியையும் உச்சிப் பாய்மரத்தின் துணியையும் சேர்க்கும் சீலை; futtock rigging, iron shrouds connecting the rigging of the main mast with that of the topmast.

**பட்டங்கொடுத்—தல்** *paṭṭaṅ-koḍu-,* 3. செ.கு.வி. (v.i.) 1. பட்டப்பெயர் சூட்டுதல்; to confer a title. 2. கிறித்தவருள் சமயத் தந்தையாக்குதல்; to ordain one as a minister.

*[பட்டம் + கொடு-,]*

**பட்டச்சீட்டு** *patta-c-cittu,* பெ. (n.) பட்டமளித்தற்குக் கொடுக்கும் ஆவணம் (யாழ். அக.); sanad conferring titles

*[பட்டம் + சீட்டு]*

**பட்டச்சீலை** *patta-c-cilai,* பெ. (n.) மெருகிடும் தாள்; sand-paper. ***'வண்ணம் கொடுப்பதற்கு முன் பட்டச்சீலை கொண்டு தேய்'*** (உ.வ.)

*[பட்டை + சீலை]*

**பட்டசாலியன்** *pattasāliyan,* பெ. (n.) நெசவுத் தொழிலாளருள் ஒருவகையினர் (S.I.I.III, 265.); a class of weavers.

*[பட்டாலியன் → பட்டசாலியன்]*

பட்டாலியன் = பட்டுநெசவு செய்வோர்.

**பட்டசாலை** *pattašālai,* பெ. (n.) தட்டிவேலை செய்யும் கூடம்; workshop; (தென். ஏப்.76.)

*[பட்டு + பட்டசாலை]*

**பட்டஞ்சூட்டு-தல்** *pattañcūttu-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. அரசரைக் குரவரைப் பட்டமுழுக்குப் பண்ணி முடிசூட்டல்; coronation. 2. பட்டப்பெயர் கொடுத்தல்; to fix the nickname.

*[பட்டம் + சூட்டு–,]*

**பட்டஞ்சூடு-தல்** *pattañcūdu-,* 5. செ.கு.வி (v.i.) 1. முழுக்கடைதல்; to perform onesown as a king. 2. பட்டமடைதல்; acceptation of dignity.

*[பட்டம் + சூடு–,]*

**பட்டடை[1]** *pattadai,* பெ. (n.) 1. அடைகல் (பிங்.) anvil. ***"சீரிடங்காணின் எறிதற்குப் பட்டடை நேரா நிரந்தவர் நட்பு"*** (குறள். 821.) 2. கொல்லன் களரி; smithy, forge. 3. குவியல்; stock, heap, pile, as of straw, fire wood or timber. 4. தவசவுறை; corn-rich, enclosure of straw for grain, wattle and daub, granary. 5. தவசங்கள் இடுவதற்கு ஓலைகளாலமைந்த படுக்கை; layer or bed of olas for grain. 6. ஆணி முதலியன செல்லுதற்கு அடியிலிருந்து தாங்கும் கருவி; anything held against another, as a support in driving a nail; prop to keep a thing from falling or moving. 7. கரையிலிருக்கும் போது நிலத்தில் பதியாதபடி அடியில் வைக்கும் தோணி தாங்கி; frame of timbers to place under a dhoney when ashore, to keep it from the ground. 8. தலையணையாக உதவும் மணை; support for the head in place of a pillow. 9. உட்காரும் பலகை; piece of board temporarily used as a seat. 10. கால்வாய் கடத்தற்கு உதவும் பலகை; plank used for crossin a channel. 11. தேர்த்தட்டு; the platform of the car that carries the idol. 12. அதிர்வேட்டுக் குழாய்கள் பதிக்கப்பட்ட கட்டை; block of wood provided with iron-tubes for explosion of gun-powder. 13. தொடர்ந்து வெடிக்கும் அதிர்வேட்டு; repeated explosin of gunpowder stuffed in iron-tubes. 14. சுவரிலிடும் மண்படை; a layer or course of earthwork, as in raising mud-wall. 15. குடிவாரம்; portion allowed to plough men from the proceeds of a harvest. 16. பயிர்த்தொழில் செய்கை; cultivation, irrigation; *'பட்டடைக்குத் தண்ணீர் இறைக்க'* 17. இறைப்புப் பாசனமுள்ள நன்செய்த்தாக்கு; plot of wet land cultivated mainly by lift irrigation. 18. ஐந்தாம் சுரமாகிய இளியிசை ; the fifth note of the gamut.

*"வண்ணப்பட்டடை யாழ்மேல் வைத்து"* (சிலப். 3,63.) *"ஏருடைப் பட்டடை யென இசையோர் வகுத்த"* (சிலப். 7–1.14.). 19. ஒரு வகை இசைக்கணம் (குறள். 573. அடிக்குறிப்பு), one of the movements in playing a title.

தெ. பட்டிக.

க. பட்டடெ

*[பட்டு → பட்டடை]*

(மேன்மேலும் தட்டுவதால் ஒரு பொருள் தட்டையாகும். பட்டுவதாற்பட்டையாகும் என்பதும் அதுவே. பட்டும் அடை பட்டடை பட்டும் அறை பட்டறை பட்டும் சாலை பட்டசாலை)
(வ.மொ.வ.26.)

(பழுக்கக் காய்ச்சிய மாழைத் துண்டை வைத்துச் சம்மட்டியால் அடித்து உருவாக்கப் பயன்படும் மாழை மேடை. பட்டடையைத் தேனிரும்பினால் (wrought iron) செய்கிறார்கள். கொல்லன் பட்டடையில் பொதுவகையான பட்டடையைக் காணலாம். பெரிய இயந்திரச் சம்மட்டிகளிலுள்ள பட்டடை 200 ஆயிரம் அயிரெடை வரையில் நிறையுள்ளது, பட்டடையில் கருவியை நுழைக்க வேண்டிய சிறிய துளையும் தட்டையான பரப்பும் மாழையை வளைக்கப் பயனாகும் கூரிய பகுதியும் உண்டு.)



**பட்டடை²** *paṭṭaḍai,* பெ. (n.) கழுத்தணி (உ.வ.); neck-ornament.

தெ. பட்டெட

**பட்டடை** *paṭṭaḍai,* பெ. (n.) நரம்புகளின் இளி; the sound of a nerve. (சா.அக.)

**பட்டடைக்கழனி** *paṭṭaḍai-k-kaḻaṉi,* பெ. (n.) இறைப்புப் பாசனத்தால் பயிரிடப்படும் நிலம்; a cultivated field artificially irrigated.

*[பட்டடை + கழனி]*

**பட்டடைகட்டி** *paṭṭaḍaikaṭṭi,* பெ. (n.) பேராசையுள்ளவன்; an avaricious person.

*[பட்டடை + கட்டி]*

**பட்டடைகட்டு¹–தல்** *paṭṭaḍai-kaṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. தவசங்களுக்கு உறை கட்டுதல்; to store up grain in an enclosure of straw. 2. முட்டுக் கொடுத்தல்; to set a prop or support. 3. தொழிற்சாலை ஏற்படுத்துதல்; to erect a workshop. 4. பேராசைப்படுதல்; to be avaricious.

*[பட்டடை + கட்டு–,]*

**பட்டடைகட்டு²–தல்** *paṭṭaḍai-kaṭṭu-,* 5. செ.குன்றாவி. (v.t) களவுசெய்தல்; to steal.

*[பட்டடை + கட்டு–,]*

**பட்டடைச்சட்டம்** *paṭṭaḍai-c-caṭṭam,* பெ. (n.) தண்டவாளம் முதலியவற்றிற்கு அடியிலிடுங் கனத்த மரத்துண்டு; sleeper.

*[பட்டடை + சட்டம்]*

**பட்டடைப்பல்** *paṭṭaḍai-p-pal,* பெ. (n.) கடைவாய்ப்பல்; molar tooth (சா.அக.)

*[பட்டடை + பல்]*

**பட்டடைப்பலகை** *paṭṭaḍai-p-palagai,* பெ. (n.) கடையில் வணிகர்கள் உட்காரும் பலகை; wooden seat in a shop, for the shop-keeper.

*[பட்டடை + பலகை]*

**பட்டடைப்பாடு** *paṭṭaḍai-p-pāḍu-,* பெ. (n.) பட்டடையிற் காணும் நெற்குறைவு; shortage in stored paddy, due o shrinkage, waste, etc; *"சம்பாவிற் பட்டடைப்பாடென் றெழுதி"* (சரவண. பணவிடு.137.).

**பட்டடைமரம்** *paṭṭaḍai-maram,* பெ. (n.) இறைச்சி வைத்துக் கொத்தும் மரம் (சீவக. 2281. உரை); butcher's block.

**மறுவ.** கொத்துமுட்டி

*[பட்டடை + மரம்]*



**பட்டடையார்** *paṭṭaḍaiyār,* பெ. (n.)
1. கடையின் முதலாளி; master of a shop.
2. மேற்பார்ப்போர்; overseer.

*[பட்டடை → பட்டடையார்]*

**பட்டடைவரி** *paṭṭaḍai vari,* பெ. (n.) பலவகைச் சில்லறை வணிகர்களிடம் பெறும் வரி; a tax received from the retail merchants. *"பலபட்டடை பயிங்குடி ஒன்றுக்குப் பணம் மூன்றாகவும்"* (தெ.கல்.தொ.8.கல்.180)

*[பட்டடை + வரி]*

**பட்டடைவாய்ச்சீட்டு** *paṭṭaḍai-vāy-c-ciṭṭu,* பெ. (n.) வாயோலை; ola memorandum stuck in heap of harvested paddy, showing the quantity stored. *"பட்டடை வாய்ச் சீட்டெடுத்துப் பார்"* (சரவண.பணவிடு.113.)

*[பட்டடை + வாய்ச்சீட்டு]*

**பட்டணக்கரை** *paṭṭaṇa-k-karai,* பெ. (n.) நகரப்பகுதி; town, city.

*[பட்டணம் + கரை]*

**பட்டணங்காப்பு** *paṭṭaṇaṅ-kāppu,* பெ. (n.) அணிகலனாகிய காப்பு வகை; a kind of bracelet.

*[பட்டணம் + காப்பு]*



**பட்டணச்சாமி** *paṭṭaṇa-c-cāmi,* பெ. (n.) இனவழக்கு மற்றும் சிற்றூர் வழக்குகளில் அமைதி காக்கச் செய்யும் தலைவன்; a head men among some of the castes. who acts as arbitrator in disputes.

*[பட்டணம் + சாமி]*

சாமி = skt.

**பட்டணத்தாடு** *paṭṭaṇattāḍu,* பெ. (n.) செம்மறியாடு; large, white sheep.

*[பட்டணம் → பட்டணத்து + ஆடு ]*

பெரும்பாலும் வீடுகளில் வளர்க்கப் படுவது வெள்ளாடே யாதெலின் வெளியூர் களினின்று மந்தையாக ஓட்டி வரப்படும் செம்மறியாடு பட்டணத்து ஆடு எனப்பட்டது.



**பட்டணத்தார்** *paṭṭaṇattār,* பெ. (n.) 1. பட்டணத்திலுள்ளோர்; inhabitants of a town or city. 2. *பட்டினத்தடிகள்* பார்க்க; see *paṭṭiṇattaḍigaḷ.*

*[பட்டணம் → பட்டணத்தார்]*

**பட்டணத்துக்கள்ளி** *paṭṭaṇattu-k-kaḷḷi,* பெ. (n.) கள்ளி வகை; a kind of prickly pear.

*[பட்டணத்து + கள்ளி ]*



**பட்டணத்துச் சுவாமிகள்** *paṭṭaṇattu-c-cuvāmigaḷ,* பெ. (n.) *பட்டினத்தடிகள்* பார்க்க; see *paṭṭiṇaṭṭaḍigaḷ.*

*[பட்டணத்து + சுவாமிகள் ]*

**பட்டணத்துப் பிள்ளையார்** *paṭṭaṇattu-p-piḷḷaiyār,* பெ. (n.) *பட்டினத்தடிகள்* பார்க்க. see *paṭṭiṇataḍigaḷ.*

*[பட்டணத்து + பிள்ளையார் ]*

**பட்டணப்பாக்கு** *paṭṭaṇa-p-pākku,* பெ. (n.) சிறப்பாகப் பக்குவஞ் செய்யப்பட்டுச் சென்னையில் விற்கும் பாக்கு வகை; a kind of refined arecanut available in chennai.

*[பட்டணம் + பாக்கு]*

**பட்டணப் பிரவேசம்** *paṭṭaṇa-p-piravesam,* பெ. (n.) ஊர்வலம்; procession through a town.

மறுவ. நகர்வலம்.

*[பட்டணம் + பிரவேசம்]*

பிரவேசம் = skt.

**பட்டணம்** *paṭṭaṇam,* பெ. (n.) 1. படகுள்ள நெய்தல் நிலத்தூர்; coastal town with boats. 2. நகரம்; town, city, large-town. காவிரிப்பூம்பட்டினம்; an ancient chola town. 3. சென்னைப் பட்டினம் (சென்னைப் பட்டணம்) chennai.

*[பட்டம் → பட்டணம்]*

பட்டம் = படகு வகை (பிங்).

வ. பட்டண, (வ.மொ.வ.1 95.)

**பட்டணம்படி** *paṭṭaṇam paḍi,* பெ. (n.) அளவு வகை; a dry standard measure. உருவாய்க்கு இரண்டு பட்டணம்படி அரிசி அந்தக் காலத்தில் விற்றது. (உ.வ.)

*[பட்டணம் + படி]*



**பட்டணவன்** *paṭṭaṇavaṉ,* பெ. (n.) 1. நெசவுச் சாதிவகை (நன். 289. மயிலை.); a class of weavers. 2. பட்டணவனால் நெய்யப்பட்ட ஆடை (நன். 289. மயிலை); cloth woven by paṭṭaṇavaṉ. 3. தமிழ்நாட்டின் கீழைக் கடற் கரையில் வாழும் மீன்வலைஞர் குலம்; a fisherman caste on the east coast of Tamilnadu.

*[பட்டணம் → பட்டணவன்]*

**பட்டணவாசி** *paṭṭaṇavāši,* பெ. (n.) நகரத்தில் வாழ்பவன்; resident of a town.

*[பட்டணம் + வாசி]* வசி → வாசி

**பட்டணை** *paṭṭaṇai,* பெ. (n.) பட்டுப்படுக்கை; silk cushion. ***"கட்டளைச் சிவிகையுட் பட்டணைப் பொலிந்த"*** (பெருங். மகத. 13, 46)

*[பட்டு² → பட்டணை]*

**பட்டத்தரசி** *paṭṭattaraši,* பெ. (n.) தலைமையரசி; chief or senior queen. க. பட்டதரசி.

*[பட்டம்² + அத்து + அரசி]*

அத்து = சாரியை

**பட்டத்தானை** *paṭṭattāṉai,* பெ. (n.) *பட்டத்தியானை,* பார்க்க. see *paṭṭattiyāṉai.*

*[பட்டம் +அத்து + யானை]*

அத்து = சாரியை

**பட்டத்தியானை** *paṭṭattiyāṉai,* பெ. (n.) 1. அரசச் சின்னங்களுடையதும் அரசன் ஏறு வதற்கு உதவுவதுமான யானை; state-elephant. 2. அரசப் பிறங்கடையைத் தேர்ந்தெடுக்கப் பயன்படுத்தப்படும் யானை; the chief elephant of a king, necessary to his royal state and which, if there be no heir to throne, is said to select one to be king by divine guidance when blind-folded.

*[பட்டத்து + யானை]*



**பட்டத்திரி** *paṭṭa-t-tiri,* பெ. (n.) நெருப்புத்திரி. (யாழ்.அக.) broad wick of a lamp.

*[பட்டை + திரி]*

**பட்டத்திளவரசி** *paṭṭattiḷavaraši,* பெ. (n.) அரசனுடைய மூத்த மகள்; the eldest daughter of a king.

*[பட்டத்து + இளவரசி]*

**பட்டத்துக்குப்படி—த்தல்** *paṭṭattukku-p-paḍi,* **செ.கு.வி.** (v.i.) கிறித்துவச் சமயகுரவர் வேலைக்குப் பயிற்சி பெறுதல்; to undergo training for ordination.

*[பட்டத்துக்கு + படி—,]*

**பட்டத்துக்குமாரத்தி** *paṭṭattu-k-kumā-ratti,* **பெ.** (n.) அரசனுடைய மூத்த மகள் (யாழ்.அக.); the eldest daughter of a king.

*[பட்டம் + அத்து + குமாரத்தி—Skt.]*

அத்து = சாரியை

**பட்டத்துக் குமாரன்** *paṭṭattu-k-kumāraṉ,* **பெ.** (n.) பட்டத்திற்குரிய மகன்; heir-apparent, male heir to a throne.

*[பட்டம் + அத்து + குமாரன்]*

குமாரன் = skt.

**பட்டத்துத்துரை** *paṭṭattu-t-turai,* **பெ.** (n.) *பட்டத்துக் குமாரன்* பார்க்க; see *paṭṭattu-k-kumāraṉ.*

*[பட்டம் + அத்து + துரை]*

**பட்டத்துத்தேவி** *paṭṭattu-t-tēvi,* **பெ.** (n.) *பட்டத்தரசி* பார்க்க; see *paṭṭattarasi.*

*[பட்டம் + அத்து + தேவி]*

**பட்டத்து நிலையங்கி** *paṭṭattu-nilai-y-aṅgi,* **பெ.** (n.) அரசரால் பணியமர்த்தம் செய்யப் படும் அரசு அலுவலர்க்கு, அப்பணியின் அடையாளமாகக் (குறியாக) கொடுக்கப்படும் உடை; robe pertaining to an office, given by a king.

*[பட்டம் + அத்து + நிலை + அங்கி]*

**அங்கி** = skt.

**பட்டத்துப் பிள்ளை** *paṭṭattu-p-piḷḷai,* **பெ.** (n.) **1.** *பட்டத்துக் குமாரன்* பார்க்க, see *paṭṭattu-k-kumāraṉ.* **2.** நங்குடி வேளாளத் தலைவர் கொள்ளும் சிறப்புப் பெயர்; title of the hereditary headmaan of the naṅguḍivēḷāḷar.

*[பட்டத்து + பிள்ளை]*

**பட்டதாரி** *paṭṭa-tāri,* **பெ.** (n.) **1.** சிறப்புப் பட்டம் பெற்றவன்; a title-holder, degree-holder. **2.** பகட்டுக்காரன்; fop.

*[பட்டம் + தாரி—Skt]*

**பட்டதாளி** *paṭṭan-tāḷi,* **பெ.** (n.) ஒருவகைச் செடி; ray lawrel. (சா.அக.)

*[பட்டம் + தாளி]*

**பட்டந்தரி—த்தல்** *paṭṭa-tāri-,* **4. செ.கு.வி.** (v.t.) **1.** முடிசூடுதல்; to be crowned, as a prince. **2.** சிறப்புப்பெயர் சூடுதல்; to assume a title or dignity.

*[பட்டம் + தரி—,]*

தரி = skt.

**பட்டந்தீர்—தல்** *paṭṭan-tīr-,* **2. செ.கு.வி.** (v.i.) *பட்டைதீர்—தல்* பார்க்க; see *paṭṭai-tīr-,*

*[பட்டம் + தீர்—,]*

**பட்டந்தைத்—தல்** *paṭṭan-tai-,* **4. செ.கு.வி.** (v.i.) *பட்டம்பிடி—,* பார்க்க; see *paṭṭampiḍi-,*

*[பட்டம் + தை—,]*

**பட்டப்பகல்** *patta-p-pakal,* பெ. (n.) நடுப்பகல்; broad day light. *"பட்டப்பகல்.....இரவாக"* (திருப்பு. 1.)

ம. பட்டப்பகல்

*[பட்டம் + பகல்]*

*'பட்டப் பகலிலே விண்மீனைக் கண்டது போல'* (பழ.)

*"பட்டப்பகல் போல் நிலவு எரிக்கக் குட்டிச் சுவரிலே முட்டிக்கொள்ள என்ன வெள்ளெழுத்தா?"* (பழ.)

*'பட்டப் பகல் விளக்கு பழுதடைந்தாற் போல'* (பழ.)

*"பட்டப் பகலிலே பண்புகெட்டவளுக்குத் தட்டுக் கூடை மறைப்பு ஏன்?"* (பழ.)

**பட்டப்பாழ்** *patta-p-pal,* பெ. (n.) வேளாண்மை யற்ற நிலம் (S.I.I.iv.289.); waste land.

*[பட்டம் + பாழ்]*

**பட்டப்பிரபு** *patta-p-pirabu,* பெ. (n.) 1. சிறப்புப் பட்டம் பெற்றவர்; a noble man of title or dignity.

*[பட்டம் + பிரபு]*

பிரபு = skt

**பட்டப்பெயர்** *patta-p-peyar,* பெ. (n.) 1. சிறப்புப் பெயர்; title, honorific name. 2. புனைந்து வழங்கும் பெயர்; title nickname.

*[பட்டம் + பெயர்]*

**பட்டபாடு** *patta-pādu,* பெ. (n.) நுகர்ந்த துன்பம்; suffering, trials endured. *"உண்டிருப்ப தற்கே துணிகின்றான் பட்டபாடே"* (பாரத. கிருட்டிண, 16.)

*[பட்ட + பாடு]*

**பட்டபானு** *pattabānu,* பெ. (n.) ஒரு வகைச் சாதிக்காய்; a kind of nut meg. (சா.அக.)

மறுவ: பட்டைபானு. காட்டுச்சாதிக்காய்

ஒருகா: *[பட்டைபானு → பட்டபானு]*

**பட்டபோது** *patta-pōdu,* பெ. (n.) எற்பாடு (கதிரவன் மறையும் நேரம்); sunset. *"பட்டபோ தெழுபோதறியாள்"* (திவ். திருவாய். 2, 4, 9.)

*[பட்ட + போது]*

**பட்டம்**¹ *pattam,* பெ. (n.) 1. பருவம்; fitting season. *'ஆடிப் பட்டந் தேடி விதை'* 2. வாள் (சூடா); sword. 3. படைக்கருவிவகை (அக.நி); a weapon. 4. நீர்நிலை (பிங்.) tank, pond. *"நீர்ப்புனற் பட்டமும்"* (சீவக. 868.) 5. வழி (பிங்.); way 6. சதுக்கம் (யாழ்.அக.); junction of four roads. 7. நாற்றங்காற் பகுதி; a portion of seed-bed 8. விலங்குகளின் துயிலிடம் (பிங்.); sleeping place for animals. 9. படகுவகை (பிங்.); boat, coracle. 10. கவரிமா, பார்க்க. yak. 11. விளையாட்டு வகை (பரவ.); a game.

**பட்டம்**² *pattam,* பெ. (n.) 1. சிறப்பிற்கு அறிகுறியாக நெற்றியிலணியும் பொற்றகடு; plate of gold worn on the forehead, as an ornament or badge of distinction. *"பட்டமும் குழையு மின்ன"* (சீவக. 472.) 2. பெண்களின் நுதலணி; an ornament worn on the forehead by women. *"பட்டங் கட்டிப் பொற்றோடு பெய்து"* (திவ். பெரியாழ். 3, 7, 6.) 3. பட்டப் பெயர்; title, appellation of dignity, tille of office *"பட்டமும் பசும்பொற் பூணும் பரந்து"* (சீவக. 112) 4. ஆட்சி; regency; reign. 5. சட்டங்களை இணைக்க உதவும் தகடு; fasteners, metal clasp. *"ஆணிகளும் பட்டங்களுமாகிய பரிய இரும்பாலே கட்டி"* (நெடுநல். 80, உரை) 6. பட்டை வடிவு; flat or level surface of anything. 7. பட்டையான துண்டு; flat piece, as of bamboo. 8. மணிகளில் தீற்றும் பட்டை; cut of a gem.

9. காற்றாடி; paper-kite. 10. சீலை (அக.நி.); cloth. 11. பெருங்கொடி (பிங்.) large banner. 12. உயர்பதவி (பிங்.) high position 13. பொன் (சங்.அக.) gold. 14. பறைவகை (அக.நி.); a kind of drum. 15. உரோமானியக் குருமார் தலையினுச்சியில் வட்டமாக மழித்துக் கொள்ளும் இடம்; tonsure, bare part of a catholic monk's or priest's head.

**பட்டம்²** *pattam,* பெ. (n.) பலபண்டம் (பிங்.); diverse things.

**பட்டம்⁴** *pattam,* பெ. (n.) மாந்தர் படுக்கை; human bed. (சா.அக.)

**பட்டம் பிடி–த்தல்** *pattam-pidi-,* 4. செ.கு.வி. பெட்டி முதலியவற்றின் மூலையை இணைக்கத் தகடு தைத்தல்; to fasten metal clasps on the corners of a box, etc.

*[ பட்டம் + பிடி –, ]*

**பட்டமங்கை** *patta-mangai,* பெ. (n.) திருவாசகத் தாலறியப் படும் ஒரு சிவத்தலம்; a place name with sivan shrine which as known from thiruvāšagam. *"பட்ட மங்கையிற் பாங்காயிருந்து அட்டமா சித்திஅருளிய அதுவும்"* – திருவா. கீர்த். 62, 63.

**பட்டமணி** *pattamani,* பெ. (n.) பட்டைதீர்ந்த பொன்மணி (யாழ்.அக.) gold beads with cut sides.

*[ பட்டை + மணி ]*

**பட்டமரம்** *pattamaram,* பெ. (n.) உலர்ந்து போன மரம்; dead tree.

*[ படு → பட்ட + மரம் ]*

**பட்டமாலை** *pattamālai,* பெ. (n.) உலர்ந்த பூவாலான மாலை; garland made of dried flowers.

*[ பட்ட + மாலை ]*

**பட்டயம்¹** *pattayam,* பெ. (n.) 1. வாள்; sword. *"பட்டயங்கள் வீசுவதும் வெட்டுவதும் மின்னலென"* (விறலிவிடு.) 2. செப்புப் பட்டயம்; royal grant inscribed on a copper plate 3. பட்டா; deed conferring a title; document given to a ryot showing on what terms he is to cultivate for the year. *"பட்டயமும் பாலித்தோமே"* (குற்றா. ஊடல். 20) *'உனக்கென்ன இந்த இடம் பட்டயம் போட்டா கொடுக்கப்பட்டுள்ளது?'*

*[ பட்டை → பட்டையம் → பட்டயம் ]*

**பட்டயம்²** *pattayam,* பெ. (n.) உயர்ந்த (குறிப்பிட்ட) படிப்புக்காகக் கல்வி நிறுவனம் வழங்கும் சான்றிதழ்; diploma.

*[ பட்டையம் + பட்டயம் ]*

**பட்டர்** *pattar,* பெ. (n.) 12 ஆம் நூற்றாண்டில், இராமானுசர்க்குப் பின்னர் மாலியத்திற்கு ஆசிரியத் தலைமை ஏற்றவரும் பராசரர் என்ற பெயருடையவருமான பெரியார்; a vaishnava ācārya named parāsarā, successor of Rāmānuja, 12th century. *"பட்டர் பொற்றாள் கதி நந்தமக்கே"* (திருவரங்கக். காப்பு)

**பட்டர்²** *pattar,* பெ. (n.) அம்பளங்காய்; a kind of china fruit. (சா.அக.)

**பட்டர்பிரான்** *pattarpirān,* பெ. (n.) பெரியாழ்வார்; periyālvār, a vaishnava saint as the lord of the learned. *"பட்டர்பிரான் விட்டு சித்தன் பாடல்"* (திவ. பெரியாழ். 2, 9, 11)

*[ பட்டர் + பிரான் ]*

**பட்டரை[1]** *pattarai,* பெ. (n.) *பட்டறை[1]* பார்க்க; see *pattarai.*

*[பட்டறை → பட்டரை ]*

**பட்டரை[2]** *pattarai,* பெ. (n.) *பட்டறை[2]* பார்க்க; see *pattarai.*

*[பட்டறை → பட்டரை ]*

**பட்டரைச்சுழி** *pattarai-c-culi,* பெ. (n.) மாட்டுச்சுழி வகை; (மாட்டுவா. 14, 15) a hair-curl in cattle.

*[பட்டரை + சுழி ]*

**பட்டவத்திரம்** *pattavattiram,* பெ. (n.) அரசர்க்குரிய உடை; royal robe.

*[பட்டம் + வத்திரம் ]*

வத்திரம் > skt. வஸ்த்ர

**பட்டவருத்தனம்** *patta-varuttanam,* பெ. (n.) 1. அரசயானை; royal elephant. "*பட்ட வர்த்தனமாம் பண்பு பெற்ற வெங்களிறு*" (பெரியபு. எறிபத்.11.) "*பூணையும் பட்டத்தினையுமுடைய பட்ட வருத்தனத்தின் கையிலே*" (சிலப். 3,124,உரை.) 2. குதிரையினம்; a kind of horse. "*மரீசிகோரம் பட்டவர்த் தனங்கள் பாரே*" (திருவாலவா. 28, 29) 3. பார்ப்பனருள் ஒரு சாரார் இடும் நெற்றிக்குறி; a large mark worn on the forehead by certain classes of brahmins. 4. வஞ்சனையின்றிப் பேசும் பேச்சு; plain-spoken words. 5. மறைவின்றி வெளிப் படையாய்ப் பேசுபவன்-ள்; plain spoken or out-spoken person. '*அவன் பட்டவருத்தனம்*'.

*[பட்டம் + வர்த்தனம் + வருத்தனம் ]*

வர்த்தனம் = skt.

**பட்டவருத்தனர்** *pattavaruttanar,* பெ. (n.) பட்டஞ்சூடிய சிற்றரசர்; vassal kings who wear a plate on their fore heads, dist fr. makuda varuttanar. "*பட்டவருத்தனர்கள் பொற்சிரத்தின் மலர்........ சரண பற்பனும்*" (பாரத. வேத். 59).

*[பட்ட + வர்த்தனர் வருத்தனர்]*

வர்த்தனர் = skt.

**பட்டவன்** *pattavan,* பெ. (n.) 1. காலமல்லாக் காலத்தில் இறந்தவனது பேயுருவம்; spirit of a person, who has died a violent death. 2. வாழ்க்கையில் துன்பமடைந்தவன்; one who has experienced the turmoil of life.

*[படு → பட்டவன் ]*

**பட்டவன் காணி** *pattavan kani,* பெ. (n.) (போரில்) களத்திறந்தவனுக்கு விடப்பட்ட இறையிலி நிலம்; land granted to warriors one who died in the war.

*[பட்டவன் + காணி]*

**பட்டவன்குறி** *pattavan-kuri,* பெ. (n.) போரில் இறந்தவர்க்கு அடையாளமாக நட்ட கல்; menhir, megalithic sepulchral stone. (G. Tp. D. i, 90)

*[பட்டவன் + குறி ]*

**பட்டவாளிமரம்** *pattavalimaram,* பெ. (n.) பட்டமரம்; dead tree.

*[படு → பட்ட + வாள → வாளி + மரம்]*

வாளம் – நெடியது.

**பட்டவியாமகிழம்** *pattaviya-magilam,* பெ. (n.) சீமை மகிழ்; iron wood of the cape.

**பட்டவியாமரம்** *paṭṭaviyāmaram,* பெ. (n.) கிச்சிலி மரவகை (L); spanish orange.

**பட்டவிருத்தி** *paṭṭa-virutti,* பெ. (n.) *பட்டவிருத்தியினாம்* பார்க்க; see *paṭṭavirutiyiṇām.* காணியாட்சியாகப் பெற்ற நிலத்தினைத் தானும் தன் சுற்றத்தாரும் வழிவழியாக நுகரும் நில உரிமை; hereditary right to land obtained free. "*பள்ளிச் சத்தம் பட்டவிருத்தி உள்ளிட்ட நிலங்கள்*". (தெ.கல்.தொ.7.கல். 936)

*[பட்டம் + விருத்தி]*

விருத்தி = skt.

**பட்டவிருத்தியினாம்** *paṭṭa virutti y iṇām,* பெ. (n.) கல்விவல்ல பார்ப்பனார்க்கு விடப்பட்ட இறையிலி நிலம்; lands granted to learned brāhmins rent-free or at a low rent.

*[பட்ட + விருத்தி + இனாம்]*

விருத்தி = skt.

**பட்டவிளக்கு** *paṭṭa-viḷakku,* பெ. (n.) பட்டை தீர்ந்த விளக்கு; lamp with flat sides.

*[பட்டை² + விளக்கு]*

**பட்டறை** *paṭṭaṟai,* பெ. (n.) 1. *பட்டடை,* பார்க்க. (1, 3, 5, 7, 8, 12, 14). see *paṭṭaḍai.* 2. இயந்திரம்; machine. 3. நெல்லுக்குத்தும் இயந்திரம்; rice-hulling machine. 4. தொழிற்சாலை; factory. 5. வீட்டின் உத்தரம்; beam of a house. 6. வீட்டின் தளத்திலிருந்து எழுப்ப வேண்டும் அளவில் எழுப்பிய சுவர்; wall of the required height from the flooring of a house. "*வீடுகளுக்குப் பட்டறை மட்டம் ஒன்பதடி உயரத்துக்குக் குறையாமல்*" (சர்வா. சிற். 48)

*[பட்டடை¹ → பட்டறை]*

பட்டுதல் = தட்டுதல்

(பட்டும் அறை பட்டறை. பட்டும் சாலை பட்டசாலை பட்டும் அடை பட்டடை (anvil) வ.மொ.வ.26.)

**பட்டறை²** *paṭṭaṟai,* பெ. (n.) 1. இனக்கூட்டம்; community. 2. தொழிலாளர் குமுகாயம்; guild, as of workmen.

க. பட்டலெ

**பட்டறை²** *paṭṭaṟai,* பெ. (n.) 1. இனக்கூட்டம்; community. 2. தொழிலாளர் குமுகாயம்; guild, as of workmen.

க. பட்டலெ

**பட்டறைக்கழனி** *paṭṭaṟai-k-kaḻaṇi,* பெ. (n.) கேணிப் பாசனமுள்ள நன்செய்நிலம்; wet land cultivated mainly by well irrigation.

மறுவ. பட்டறைக்கால்.

*[பட்டறை + கழனி]*

**பட்டறைக்கேணி** *paṭṭaṟai-k-kēṇi,* பெ. (n.) பாசனத்திற்குப் பயன்படும் இறைகேணி; a well whose water can be used fodr irrigating the lands close by.

*[பட்டறை + கேணி]*

**பட்டறைச்சீலை** *paṭṭaṟai-c-cīlai,* பெ. (n.) உப்புத்தாள்; sand-paper.

மறுவ. பட்டைச்சீலை.

*[பட்டறை + சீலை]*

**பட்டறைநிலம்** *paṭṭaṟai nilam,* பெ. (n.) கேணிப்பாசனமுள்ள நன்செய் நிலம்; wet land cultivated mainly by well irrigation.

*[பட்டறை + நிலம்]*

**பட்டறைபோடு-தல்** *paṭṭaṟai-pōḍu-*, 19. செ.குன்றா.வி. (v.t.) தவசங்களைக் (தானியம்) குவித்து வைத்தல்; to heap up grain. *'நிலத்தில் கேழ்வரகைப் பட்டறை போட்டிருந் தார்கள்'.*

*[பட்டறை + போடு-, ]*

**பட்டன்** *paṭṭaṉ,* பெ. (n.) 1. புலவன்; learned man, scholar. *"மறை நான்கு முன்னோதிய பட்டனை"* (திவ். பெரியதி. 7, 3, 6). 2. கோயிற் பூசகன்; priest of a temple. 3. தெய்வம்; spiritual master, god. *'ஆலநிழலமர் பட்டனை'* (தேவா. 926, 1). 4. பட்டர் பிரான் என்னும் பெரியாழ்வார்; periyāḻvār, a vaishnava saint as the lord of the learned. *"தண்புதுவைப் பட்டன் சொன்ன"* (திவ். பெரியாழ். 3, 8, 10).

**பட்டன்** *paṭṭaṉ,* பெ. (n.) உண்மையாளன்; (திவ். பெரியாழ். 1,8,11.வ்யா. பக்.182.) truthful man.

**பட்டணம்** *paṭṭaṇam,* பெ. (n.) கடற்கரையில் பலதீவுப் பண்டங்கள் விற்கும் ஊர். (சூடா.) sea-port town. பார்க்க பட்டினம்.

**பட்டனவர்** *paṭṭaṉavar,* பெ. (n.) நெய்தல் நில மக்கள்; people of coastal or littoral region.

*[பட்டினம் + பட்டனவர் ]*

**பட்டா¹** *paṭṭā,* பெ. (n.) வாள்; sword.

*'பட்டாக்கத்தி'* – உ.வ.

*[பட்டை → பட்டா ]*



**பட்டா²** *paṭṭā,* பெ. (n.) 1. நிலத்தின் உரிமை யாளர்க்கு உழுது இவ்வளவு கொடுப்பதென்ற கட்டுப்பாட்டின் மேல், மேல்வாரக்காரர் குடிவாரக்காரருக்குக் கொடுக்கும் உடன் படிக்கை ஆவணம்; deed of lease. 2. உரிமையாவணம்; title-deed; document given by a sovereign power recognising the title of a ryot to his holding.

*'பட்டா உன்பேரில்; பயிர்ச்செலவு என்பேரில்'* (பழ.)

*[பட்டயம் + பட்டா ]*

**பட்டா³** *paṭṭā,* பெ. (n.) வண்டிச் சக்கரத்தின் மேலிட்ட இரும்புப் பட்டம்; outer rim of a wheel.

மறுவ. கட்டு

*[பட்டு + பட்டா ]* (மு.தா.123)



**பட்டாக்கத்தி** *paṭṭā-k-katti,* பெ. (n.) **1.** வாள்; sword. **2.** புற்செதுக்கும் கருவி; flat blade for cutting grass.

*[ பட்டா + கத்தி ]*



**பட்டாக்காரன்** *paṭṭā-k-kāraṉ,* பெ. (n.) **1.** குத்தகை உரிமையாளன்; leaseholder. **2.** வில்லைப் பணியாள்; a peon in livery.

*[ பட்டா + காரன் ]*

**பட்டாங்கு** *paṭṭāṅgu,* பெ. (n.) **1.** இயல்பாக உள்ள நிலைமை; changeless, *"மெய்ம்மை பட்டாங்காதலின் இயல்பாம்"* (தொல். எழுத். 156. உரை) **2.** உண்மை; truth. *"பட்டாங்கி யானுமோர் பத்தினியே யாமாகில்"* (சிலப். 21, 36) **3.** மெய்ந்நூல்; scriptural text. *'பட்டாங்கி லுள்ளபடி'* (மூதுரை.) **4.** மெய்போற் பேசும் பகடிப்பேச்சு முதலியன; jest, farce, waggery, specious falsehood, sophistry. *"பட்டாங் கடிப்பதற்கும்'* (ஆதியூரவதானி. 5) **5.** ஓவிய வேலைப்பாடு அமைந்த சீலை; printed cloth worn by women.

**மறுவ.** சித்திரச்சேலை.

*[ படு → பட்டாங்கு ]*

**பட்டாங்குக்காரன்** *paṭṭāṅgu-k-kāraṉ,* பெ. (n.) தீம்பன்; mischievous person.

*[ பட்டாங்கு + காரன் ]*

**பட்டாங்குக்காரி** *paṭṭāṅgu-k-kāri,* பெ. (n.) குறும்பு செய்பவள்; a mischievous woman.

*[ பட்டாங்கு[4] + காரி ]*

**பட்டாங்குநூல்** *paṭṭāṅgu-nūl,* பெ. (n.) மெய்ப்பொருளியல் நூல்; philosophy.

*[ பட்டாங்கு + நூல் ]*

**பட்டாங்குபேசு-தல்** *paṭṭāṅgupēsu-,* செ.கு.வி. (v.i.) பொய்பேசுதல்; chattering vainey, told falsehoods (வின்.)

*[ பட்டாங்கு + பேசு–, ]*

**பட்டாசாலை** *paṭṭā-cālai,* பெ. (n.) **1.** முதன்மைக் கூடம்; central or principal hall in a house. **2.** மனையில் உண்ணுமிடம்; dining hall adjoining a house.

*[ பட்டா + சாலை ]*

**பட்டாசு[1]** *paṭṭāsu,* பெ. (n.) சீனவெடி; chinese crackers. **2.** நெருப்பு வைத்ததும் பூப்பூவாகத் தெறிக்கும் அல்லது பேரொலியுடன் வெடிக்கும் வகையில் வேதிப் பொருள் துகள்கள் அடைக்கப்பட்டு அணியமாக்கப்படும் பொருள்; sparklers and crackers.

'பட்' என்னும் ஒலிக்குறிப்பின் நீட்சி

**தெ.** தபாசு

**பட்டாசு[2]** *paṭṭāsu,* பெ. (n.) ஒருவகைக் காய்ச் செடி; a kind of herb. (சா.அக.)

**மறுவ.** சிலந்திநாயகம்

பட்டாசுக் காய்ச்செடி.

*[ பட் → பட்டாசு ]*

**பட்டாடை** *paṭṭāḍai,* பெ. (n.) பட்டுடை (திவா.); silk cloth, woven silk.

*[ பட்டு + ஆடை ]*

*'பட்டும் பட்டாடையும் பெட்டியில் இருக்கும்; காற்காசுக் கந்தை ஓடி உலாவும்'* (பழ.)

**பட்டாடை நூலாயம்** *paṭṭāḍai-nūlāyam,* பெ. (n.) பட்டாடை நெய்வதற்குரிய பட்டு நூலின் மீது போடப்படும் வரி; tax imposed on silk yarn for wearing silk cloth.

**பட்டாணி** *paṭṭāṇi,* பெ. (n.) கொண்டி யாணிவகை; clasp, clamp, clamp-iron, clincher.

*[ பட்டை + ஆணி ]*



**பட்டாணித்திரிகம்** *paṭṭāṇi-t-tirigam,* பெ. (n.) சிறுபூலா; water poolah.

மறுவ. நீர்ப்பூலா

காட்டுக் கீழா நெல்லி.

*[ பட்டாணி + திரிகம் ]*

**பட்டாத்திரிகச்செடி** *paṭṭā-t-tiriga-c-cēḍi,* பெ. (n.) காட்டுக் கீழா நெல்லி; a kind of herb.

**பட்டாதார்** *paṭṭātār,* பெ. (n.) பட்டாக்காரன்; (பட்டா உடன்படிக்கை பெற்றவன்); paṭṭā-holder; lease-holder.

*[ பட்டா + தார் ]*

தார் = skt.

**பட்டாம்பூச்சி** *paṭṭām-pūcci,* பெ. (n.) 1. வண்ணத்துப்பூச்சி; butterfly. 2. தட்டாரப் பூச்சி; dragon-fly.

*[ பட்டு + ஆம் + பூச்சி ]*



**பட்டாமணியகாரன்** *paṭṭāmaṇiya-kāraṉ,* பெ. (n.) சிற்றூர்த் தலைவர்; village munsif.

*[ பட்டாமணியம் + காரன் ]*

**பட்டாமணியம்** *paṭṭā maṇiyam,* பெ. (n.) சிற்றூர் வருவாய் அலுவலகம்; office of village munsif.

*[ பட்டா + மணியம் ]*

**பட்டாரகன்¹** *paṭṭāragaṉ,* பெ. (n.) 1. கடவுள் (பிங்.); deity. *'திருநந்திக்கரை பட்டாரகர்'* (T.A.S.iii, 206) 2. அருக பதவி பெற்றோர்; one who attained the stage of arhat. *"நமி பட்டாரகர்"* (தக்கயாகப். 375, உரை.) 3. அறிவாசிரியன் (பிங்.); spiritual preceptor. *"முகுந்தோத்தம பட்டாரகர்"* (T.A.S.iii, 44.)

*[ பட்டம் → பட்டாரகர் ]*

**பட்டாரகன்[2]** *pattāragan,* பெ. (n.) கதிரவன்; sun. (சா.அக.)

**பட்டாரியன்** *pattāriyan,* பெ. (n.) *பட்டாலியன்,* பார்க்க; see *pattāliyan.*

*[ பட்டு + சாலியன் → பட்டாரியன் ]*

**பட்டாலியன்** *pattāliyan,* பெ. (n.) பட்டாடை நெய்யும் தமிழச் சாலியன்; a tamil silk-weaver caste.

*[ பட்டு + சாலியன் ]*

**பட்டாவளப்பட்டு** *pattavalapattu,* பெ. (n.) பட்டுவகை; a kind of silk. (S.I.I.v,103)

**பட்டாவளி[1]** *pattāvali,* பெ. (n.) 1. பட்டம் பெற்ற குருமாரின் தலைமுறை வரிசை; list of successive spiritual heads, as among jains. 2. போக்கிரி; rogue.

*[ பட்டம் + ஆவளி ]*

ஆவளி = skt

**பட்டாவளி[2]** *pattāvali,* பெ. (n.) பட்டு வகை; various sorts of silk.

*[ பட்டம் + ஆவளி ]*

ஆவளி = skt

ஆவளி = வரிசை, வகை.

**பட்டி[1]** *patti,* பெ. (n.) 1. ஆன்கொட்டில் (பிங்); cow- stall. 2. ஆட்டுக்கிடை; sheep-fold 3. நிலவளவு வகை; a measure of land, as sufficient for a sheep-fold. 4. கொண்டித் தொழு; cattle-pound. 5. சிற்றூர் (நாமதீப.486); hamlet, village. 6. இடம் (பிங்); place. 7. காவலில்லாதவ—ன்—ள்; lawless, unbridled person. *"நோதக்கச் செய்யுஞ் சிறுபட்டி"* (கலித்.51) 8. களவு.(திவா.); theft. 9. பட்டிமாடு; straying bull. *"புலப்பட்டியும்...... அணுகாமல்"* (தாயு.பெரியநாயகி.1.) 10. பரத்தை; harlot, prostitute. *"பட்டி மகன் மோகினி மந்திர முழுதுமறிவான்"* (விறலிவிடு) 11. நாய் (பிங்); dog. 12. பலகறை (பிங்); small sea-shells. 13. மகன் (அக.நி.); son. 14. தெப்பம்; float,raft.

**க.ம.** பட்டி. **து.** படிகெ. **தெ.** படுசு

**பட்டி[2]** *patti,* பெ. (n.) 1. *சீலை* (பிங்); cloth. 2. கணைக்காலிலிருந்து முழங்கால் வரையில் சுற்றிக் கட்டிக் கொள்ளும் கிழிப்பட்டை; puttee, cloth wound round the legs is place of high boots. 3. புண்ணைக் கட்டும் சீலை; bandage, ligature. *'பட்டி கட்டுதல்'* 4. மடிப்புத் தையல்; hemming. 5. வெற்றிலைப் பாக்குச்சுருள்; folding of betel with arecanut, *'இரண்டுபட்டி எடுத்துவா'.* (உ.வ.)

*[பட்டு → பட்டி]* மு.தா.123

**பட்டி[3]** *patti,* பெ. (n) விக்கிரமாதித்தன் மந்திரி; the prime minister of vikramāditya of ujjayini. (அவந்தி நாட்டில் உச்சையினி நகரில் இருந்தவன். சந்திரசன்மா என்பவனுடைய மகன். பர்த்துருகரி, விக்கிரமார்க்கன் என்னும் இருவருக்கும் இவன் தம்பியாவான். இவன் அறிவு நலஞ் சிறந்து திகழ்ந்தான். விக்கிரமார்க்கன் அரசனான போது இவன் அமைச்சனாகி அரசாட்சியை நன்முறையில் நடத்தினான்.)

**பட்டி[4]** *patti,* பெ. (n.) பூச்செடி வகை; a flowering shrub. *"பட்டி வெண்பூவை ஈசன் பனிமலர்த் தாளிற் சாத்தில்"* (புட்பபலன்,65.)

**பட்டிக்கடா** *patti-k-kadā-*, பெ. (n.) 1. பொலியெருது (யாழ்.அக.); covering bull. 2. எருமைக்கடா; he-buffelo. *"பட்டிக்கடாவில் வரும் அந்தகா"* (கந்தரலங்)

*[பட்டி + கடா]*

**பட்டிக்காசு** *patti-k-kāšu*, பெ. (n.) பயிர்ப்பாதுகாப்பிற்காக உரிய காலங்களில் கால்நடைகளைக் காவல் செய்யப் பெறும் காசுவரி; tax collected for having protected the crops for the damage cattle. *"தறிஇறை, வெட்டி, முட்டையாள் பட்டிக்காசு காணிக்கை"* (தெ.கல்.தொ.8.கல்.379)

**பட்டிக்காட்டான்** *patti-k-kāttān*, பெ. (n.) நாட்டுப் புறத்தான்; rustic,boor.

*[பட்டிக்காடு → பட்டிக்காட்டான்]*

**பட்டிக்காடி** *patti-k-kādi*, பெ. (n.) வரிவகை; a tax. (S.I.I.vii, 67.)

**பட்டிக்காடு** *patti-k-kādu-*, பெ. (n.) மிகவும் சிற்றூர்; hamlet, petty village.

*[பட்டி + காடு]*

**பட்டிக்காரன்** *patti-k- kāran*, பெ. (n.) சிற்றூர்ப் பொதுவேலையாள்; a village servant.

*[பட்டி + காரன்]*

**பட்டிக்கால்** *patti-k-kāl*, பெ. (n.) பழைய வரிவகை; an ancient tax. (S.I.I.vii, 67.)

**பட்டிக்குறி** *patti-k-kuri*, பெ. (n.) இன்ன குடும்பத்து ஆடுமாடு என்பதைக் குறிக்குஞ் சூட்டுக்குறி ; mark of the owner's family- sign branded on his cattle, opp. to pēr-k-kuri.

*[பட்டி + குறி]*

**பட்டிகட்டியிறக்கு-தல்** *patti-katti-irakku*, 6. செ.குன்றாவி (v.t.) மருந்தெண்ணெய் இறக்கும் பாண்டத்தின் வாயைத் துணி கொண்டு கட்டிப் பிறகு மருந்தெண்ணெயை வடித்தல் ; filtering medicated oil by tying the mouth of the vessel containing if with a piece of cloth and turning it down.

*[பட்டி + கட்டி + இறக்கு-.]*

**பட்டிகட்டு-தல்** *patti kattu-*, 12. செ.குன்றாவி (v.t.) மெல்லிய துணித்துண்டை மருந்து நீரில் நனைத்துப் புண், வீக்கம், வலியுள்ள இடங்களில் கட்டுதல்; bandaging wounds sores, swellings or steeped in medicinal oil or other solutions. 2. சீலை மண் செய்தல்; luting. (சா.அக.)

*[பட்டி + கட்டு-.]*

மறுவ: பட்டிகட்டல்.

**பட்டிகம்[1]** *pattigam*, பெ. (n.) பறவைகளின் பறத்தற்சிறப்பு; a bird's flight. *"பட்டிகங் கரண்டை"* (காசிக. திரிலோ.சிறப்.6.)

*[பட்டி → பட்டிகம்]*

**பட்டிகம்[2]** *pattigam*, பெ. (v.i.) நந்தியாவட்டை என்னும் மூலிகை; rosefay. (சா.அக.)

*[பட்டி → பட்டிகம்]*



**பட்டிகன்** *pattigan,* பெ. (n.) திருடன்; thief, defrauder. *"அயனிற்பது காணிலர் பட்டிகர்"* (சேதுபு.தேவிபு.63)

*[பட்டி → பட்டிகன்]*

**பட்டிகை**[1] *pattigai* பெ. (n.) 1. தெப்பம் (திவா.); raft,float. 2. தோணி (யாழ்.அக); boat, dhoney.

*[பட்டி → பட்டிகை]*

வ. பட்டிகா.

(வ.மொ.வ.195)

பட்டி = தெப்பம்.

**பட்டிகை**[2] *pattigai,* பெ. (n.) 1. ஏடு; ola leaf *"அப்பொருண்மேற் கொண்ட பட்டிகை"* (பெரியபு.திருஞான.815.) 2. அரச ஆவணம்; royal grant or deed. *"பத்தூரர் கொள்கெனப் பட்டிகை கொடுத்து"* (பெருங். வத்தவ 1,1,3).

*[பட்டி → பட்டிகை]*

**பட்டிகை**[3] *pattigai,* பெ. (n.) 1. மேகலை (சூடா); women's girdle, belt of gold or silver. 2. அரைக்கச்சை; a belt. *"தொகை விரி பட்டிகைச் சுடருஞ் சுற்றிட"* (கம்பரா. கடிமண.65). 3. முலைக்கச்சு (சூடா); stays for the breast. 4. சீலை (பிங்); cloth; புண்கட்டும் சீலை; bandage, ligature. *"பட்டி கட்டுதல்"* (தைலவ.தைல.128) 5. தோளிலிடும் ஒகப்பட்டி; a shoulder-strap, used in yogic postures. *"தோளிலிடும் பட்டிகையும்"* (பெரியபு. மானக்கஞ்.23.) 6. கருவறை முதலியவற்றின் மதிலடியைச்சுற்றி அமைக்கப் படும் ஒவிய வேலைப்பாடுள்ள பகுதி; an ornamental structure around the wall, as in the inner sanctuary of a temple. 8. சீந்தில்; gulancha. 9. செவ்வந்தி (பிங்); garden chrysanthemum. 10. தாழை (நாமதீப.313); fragrant screw-pine. 11. பாதிரி (நாநார்த்த.244); trumpet-flower tree. 12. தேற்றா என்னும் மர வகை (அரும்.நி.138); clearing - nut tree.

*[பட்டி → பட்டிகை]*

(வ.மொ.வ.196.)

**பட்டிகை**[4] *pattigai,* பெ. (n.) இடையிலுடுத்தும் ஆடை; a kind of loin cloth. " *இதில் திறம்பில் உண்டிகையும் பட்டிகையும் காட்டாதே*". (தெ.கல்.தொ.12.கல்.42.)

**பட்டிகைக்கல்** *pattikai-k-kal,* பெ. (n.) *பட்டியற்கல்* பார்க்க; see *pattiyarkal.*

*[பட்டிகை + கல்]*

**பட்டிகைக்காணம்** *pattikai-k-kānam,* பெ. (n.) பழைய வரிவகை; an ancient tax. (S.I.I.ii, 352.)

*[பட்டிகை + காணம்]*

**பட்டிகைச்சூட்டு** *pattigai-c-cūttu,* பெ. (n.) பட்டிகை என்னும் மேகலை; women's girdle, belt of gold or silver. *"பையொன்றும் பரவையல்குற் பட்டிகைச் சூட்டுப் போல"* (மேருமந்.921).

*[பட்டிகை + சூட்டு]*

**பட்டிசம்** *paṭṭišam,* பெ. (n.) படைக்கல வகை; (சங்.அக); a weapon.

*[பட்டி → பட்டிசம்]*

**பட்டிடுவான்** *paṭṭiḍuvāṉ,* பெ. (n.) ஒரு வசைமொழி; a term of abuse, meaning 'damned fellow'. "*இத்தனையும் வேண்டும் பட்டிடுவானுக்கு*" (ஈடு, 1,2,ப்ர.)

**பட்டிடை** *paṭṭiḍai,* பெ. (n.) நந்தியாவட்டை; (சங்.அக); east indian rosebay.

*[பட்டி → பட்டிடை]*

**பட்டித்தண்டம்** *paṭṭi-t-tanḍam,* பெ. (n.) வரிவகை (M.E.R. 139 of 1912.); a tax.

**பட்டித்தொழுவம்** *paṭṭi-t-toḻuvam,* பெ. (n.) கொண்டித் தொழு; pound for cattle.

*[பட்டி + தொழுவம்]*

**பட்டித்தோழம்** *paṭṭi-t-tōḻam,* பெ. (n.) பட்டித்தொழுவம் என்பதன் மறுவடிவம்; pound for cattle.

*[பட்டி + தோழம்]*

**பட்டிதவியம்** *paṭṭitaviyam,* பெ. (n.) பூனைக்காலி என்னும் மூலிகை ; a common herb named cowitch. (சா,அக)

*[பட்டி + தின்–,]*

**பட்டிதின்(னு)–தல்** *paṭṭi-tiṉ-,* 15. செ.கு.வி. (v.i.) *பட்டி புகு–,* பார்க்க; see *pattipuku-,* "*பட்டிதின்று திரியும் கன்றுபோலே*" (திவ்.பெரியாழ்.1,6,6,வ்யா.பக்.123.)

*[பட்டி + தவியம்]*

**பட்டிநியமம்** *paṭṭi-niyamam,* பெ. (n.) *பட்டிமண்டபம்* பார்க்க ; see, *paṭṭi-manḍapam* பெ.(n.) "*பட்டிநியமம் பதிமுறை யிரீஇ*" (பெருங்.வத்தவ2,73)

*[பட்டி + skt niyama > த. நியமம்]*

**பட்டிநிலம்** *patti-nilam,* பெ. (n.) பதினாறு சாண் கோலால் (12 அடிகோலால்) ஐம்பது குழிகொண்டது ஒரு மாவாக ஆயிரங்குழி கொண்டது ஒரு பட்டி நிலம்; a kind of land measure. "***இரண்டு பட்டியிலும் பொந்த போகம் நெல்லு நானூற்று எழுபத்து ஏழுகாடி னானாழி***" (தெ.கல். தொ.8.கல்.521)

*[பட்டி + நிலம்]*

**பட்டிநோன்பு** *paṭṭi-nōṉbu,* பெ. (n.) மாட்டுப்பொங்கல் ; (எங்களூர்,89.) the festival of cermonial boiling of rice on the māṭṭu-p-pongal day.

*[பட்டி + நோன்பு]*

**பட்டிப்படி** *paṭṭi-p-paḍi,* பெ. (n.) கால்நடை காக்கும் கூலி. (யாழ்.அக) ; allowance for herding cattle.

*[பட்டி + படி]*

**பட்டிப்புகு–தல்** *paṭṭi-pugu-,* 21. செ.கு.வி. (v.i.) வேற்றுப் புலத்தில் மேய்தல் ; to graze tealthily; to go astray. "*அயோக்ய விஷயாந்தரங்களில் பட்டிபுக்க வாசனைகளை மாற்றுவிக்கவும்*" (ரஹஸ்ய, 507.)

*[பட்டி + புகு–,]*

**பட்டிப்புன்னை** *paṭṭi-p-puṉṉai,* பெ. (n.) நாய்த்தேக்கு ; dog teak; fish bone tree (சா.அக.)

*[பட்டி + புன்னை]*

**பட்டிப்பொங்கல்** *paṭṭi-p-poṅkal,* பெ. (n.) மாட்டு மந்தையிலிடும் பொங்கல் ; pongal ceremony performed in the pen for cattle.

*[பட்டி + பொங்கல்]*

**பட்டிப்பொன்** *paṭṭi-p-poṉ,* பெ. (n.) பழைய வரிவகை (S.I.I.iv, 195.) ; a money tax.

*[பட்டி + பொன்]*

**பட்டிபார்த்த கொம்பு** *paṭṭi-pārtta kombu,* பெ. (n.) நிமிர்ந்து முன்வளைந்த கொம்பு (யாழ்.அக); a horn bent in front

*[பட்டி + பார்த்த + கொம்பு]*



**பட்டி பார்—த்தல்** *paṭṭipār-,* 4. செ.கு.வி. (v.i.) 1. தச்சுவேலையில் மரப்பலகை மற்றும் நிலைப்பேழை, வாசற்கால் முதலியவற்றில் வண்ணம் பூசுமுன் துளைகளோ ஒழுங்கற்ற பகுதிகளோ இருப்பின் அவற்றைச் சமப்படுத்துவதற்கு 'மக்கு' என்னும் மெழுகுப் பொருள் கொண்டு சரி செய்தல்; in carpentary fill the holes crevices in a surface with wax before painting. 2. அனைத்து இயந்திர ஊர்திகளிலும் அவற்றின் புற அமைப்பில் நசுங்கல், புடைப்பு கீறல் முதலியன ஏற்படின் அவற்றை இரும்புத்தகடு கொண்டு பற்றவைத்துச் சரிசெய்தல்; tinkering.

*[பட்டி + பார்—,]*

**பட்டி புத்திரன்** *paṭṭiputtiraṉ,* பெ. (n.) பண்டைக்காலத்தில் இளைஞர் விளையாட்டில் இட்டு வழங்கிய பெயர் (தொல். சொல்.167. உரை); a term, in a child's game of ancient times.

*[பட்டி + புத்திரன்]*

**பட்டிபெயர்—த்தல்** *paṭṭi-peyar-,* 10. செ.கு.வி. (v.i.) கால்நடையைப் புறம்பே செலுத்துதல் ; to remove cattle.

*[பட்டி + பெயர்—,]*

**பட்டிபோ—தல்** *paṭṭi-pō,* 10. செ.கு.வி. (v.i.) 1. *பட்டிமேய்—.* பார்க்க; see *paṭṭi-mēy.* *"சுரோத்தி ராதிகள் விஷயங்களிலே பட்டிபோகாதபடி"* (ஈடு,4,7,9.). 2. *பட்டியடி—.* பார்க்க. see *paṭṭiyaḍi-.*

*[பட்டி + போ—,]*

**பட்டிமண்டபம்** *paṭṭi-mandabam,* பெ. (n.) 1. கலைபயிற்கூடம்; hall for the meeting of scholars. *"பட்டிமண்டபத்துப் பாங்கறிந் தேறுமின்"* (மணிமே.1.61.) 2. ஓலக்க மண்டபம்; hall of royal audience. *"பகைப்புறத்துக் கொடுத்தபட்டி மண்டபமும்"* (சிலப்.5–102.அரும்.)

*[பட்டி + மண்டபம்]*

**பட்டிமம்** *paṭṭimam,* பெ. (n.) கலைபயில்களம் (பிங்); school house.

*[பட்டி → பட்டிமம்]*

**பட்டிமரம்** *paṭṭi-maram,* பெ. (n.) கொண்டி மாட்டின் கழுத்திலிடுங் கட்டை; club tied to the neck of uncontrollable cattle to prevent their going astray.

*[பட்டி + மரம்]*

**பட்டிமன்றம்** *patti-manram,* பெ. (n.) அணியினராகப் பிரிந்து, கொடுக்கப்பட்ட தலைப்புப் பொருளை ஏற்றும் எதிர்த்தும் பேசும் மேடைச் சொற்போர் நிகழ்ச்சி; a forum of opposing teams debating a given subject.

*[பட்டி + மன்றம்]*

**பட்டிமாடு** *patti-mādu,* பெ. (n.) கொண்டிமாடு; straying cattle. "*பட்டி மாடெனத் திருதரு மடவார்*" (அருட்பா, 5, ஏத்தாப்பிறவி. 7.)

*[பட்டி + மாடு]*

**பட்டிமாறித்திரி—தல்** *patti-māri-t-tiri-,* 3. செ.கு.வி. (v.i.) ஊரூராய்த் திரிதல்; to go from place to place. "*பாரமிறுகச் சுமந்து பட்டிமாறித் திரிந்த சீரும்*" (பஞ்ச.திருமுக. 1331.)

*[பட்டி → மாறு → மாறி + திரி—,]*

**பட்டிமுறித்—தல்** *patti-muri-,* 1. கட்டுக் கடந்து போதல்; to break out of the fold. 2. கூட்டத்தை நீக்குதல்; to forsake or leave one's company.

*[பட்டி + முறி—,]*

**பட்டிமேய்—தல்** *patti-mēy-,* 8. செ.கு.வி. (v.i.) 1. கால்நடை முதலியன பயிரை அழித்தல்; to stray into a field and damage crops, as cattle or wild beasts. 2. கண்டபடிதிரிதல்; to loiter about. "*பட்டி மேய்ந்தோர் காரேறு*" (திவ். நாய்ச்.—.14,1) 3. *பட்டியடி—,* பார்க்க; see *pattiyadi-,*

*[பட்டி + மேய்—,]*

**பட்டிமை** *pattimai,* பெ. (n.) 1. ஏமாற்று; deceit, dishonesty, fraud. "*ஏந்தறோழன் பட்டிமை யுரைத்த தோராள்*" (சீவக. 2058.) 2. களவிற் போந்தன்மை (சது); going astray. "*பட்டிமையும் காண்குறுவாய்*". (சிலப். 21, 38)

*[பட்டி → பட்டிமை]*

**பட்டியடி[1]—த்தல்** *pattiy-adi-,* 4. செ.கு.வி. (v.i.) பரத்தையாதல்; to commit adultery.

*[பட்டி + அடி—,]*

**பட்டியடி[2]—த்தல்** *pattiy-adi-,* 4. செ.கு.வி. (v.i.) நாவடக்கமின்றிப் பேசுதல்; thoughtless or indiscreet word.

*[பட்டி + அடி—,]*

**பட்டியல்[1]** *pattyal,* பெ. (n.) 1. வரிச்சல்; lath, reaper. 2. தூணின் கீழ்வைக்குங் கல்; pedestal, as of a stone pillar. 3. திண்ணை விளிம்புக் கல்; the edge stone of the raised platform at the entrance of a house. (த.சொ.அக.)

*[பட்டி → பட்டியல்]*

(வ.மொ.வ.196.)

**பட்டியல்[2]** *pattyal,* பெ. (n.) விளத்தங்களை (விவரங்களை) ஏதேனும் ஓர் அடிப்படையில் ஒன்றன் கீழ் ஒன்றாகத் தரும் வரிசை முறை; list; inventory. 'வாக்காளர் பட்டியல், விலைப் பட்டியல், மதிப்பெண் பட்டியல்.

*[பட்டி → பட்டியல்]*

**பட்டியற்கல்** *pattiyar-kal,* பெ. (n.) 1. தூணின் கீழ் வைக்கும் கல்; pedestal as of a stone pillar. 2. திண்ணையிலுள்ள விளிம்புக்கல்; stone on the border of pial.

*[பட்டியல்+கல்]*



**பட்டியாரம்** *patti-y-āram,* பெ. (n.) கொண்டி மாடுகளை அடைக்கும் இடம்; cattle-pound.

*[பட்டி+ஆரம்]*

**பட்டியுரை** *patti-y-urai,* பெ. (n.) **1.** வாய்காவாது உரைக்குஞ் சொல்; thoughtless or indiscreet word. *"படிறும் பயனிலவும் பட்டி யுரையும் வசையும் புறனும் உரையாரே என்றும் அசையாத உள்ளத் தவர்"* (ஆசாரக்.53) **2.** பாலியல் சார்ந்த, தரக்குறைவான சொல்; obscene, abusive language.

*[பட்டி+உரை]*

**பட்டியூண்** *patti-y-ūṇ,* பெ. (n.) எருவிற்காக ஆடுமாடுகளை மறித்து வைத்ததற்குக் கொடுக்குங் கூலி; (யாழ்ப்) hire for folding a flock in a field to manure it.

*[பட்டி + ஊண்]*

**பட்டியெடு–த்தல்** *patti-yēdu-,* **4. செ.குன்றாவி.** (v.i.) கொண்டித்தண்டம் வாங்குதல்; to collect poundage.

*[பட்டி + எடு–,]*

**பட்டில்** *pattil,* பெ. (n.) வணிகச் சரக்குகளின் விலைப்பட்டியல்; invoice.

*[பட்டி → பட்டியல் பட்டில்]*

**பட்டிலுப்பை** *pattiluppai,* பெ. (n.) பேரீச்சை மரவகை; date plum.

ஒருகா. *[பட்டு + இலுப்பை]*



**பட்டிவழி** *pattivaḻi,* பெ. (n.) சிற்றூரில் தர வாரியாகப் பங்கிட்ட நிலம்; lands of a village divided into lots with reference to the quality of the soil and assigned to holders.

*[பட்டி + வழி]*

**பட்டிவாய்** *patti-vāy,* பெ. (n.) வாய்க்கு வந்தவாறு பேசுபவன்–ள்; person of loose tongue.

*[பட்டி + வாய்]*

**பட்டிவிழு–தல்** *patti-viḻu-,* **2.** செ.கு.வி. (v.i.) கருப்பையின் மேற்புறம் முன் அல்லது பின்னாக வளைதல்; flexion of the uterus. (சா.அக.).

*[பட்டி + விழு–,]*

**பட்டிவைரி** *patti-vairi,* பெ. (n.) வயல்களில், பட்டி மேயாதபடி காப்பவன்; watchman to keep off beasts and thieves from fields.

*[பட்டி + வைரி]*

**பட்டிறைப்படு-தல்** *paṭṭirai-p-paḍu-,* 20. செ.கு.வி. (v.i.) அரசிறை செலுத்தப்படாது போதல்; to be in arrears of tax. "*எங்களூர் பட்டிறைப் பட்டமையால்*" (S.I.I.vii, 40.)

*[படு → பட்டு + இறை + படு-,]*

**பட்டினக்கரையார்** *paṭṭina-k-karaiyār,* பெ. (n.) பள்ளருள் ஒருவகையினர்; a sub-division of the paḷḷar caste.

*[பட்டினம் + கரையார்]*

**பட்டினச்சேரி** *paṭṭiṉa-c-cēri,* பெ. (n.) நுளையர் வாழிடம்; hamlet of fishermen.

*[பட்டினம் + சேரி]*

**பட்டினசுட்டான்** *paṭṭiṉa-šuṭṭāṉ,* பெ. (n.) கடல்மீன் வகை; a kind of sea fish.

வகைகள்:

1. தோல் பட்டின சுட்டான்
2. புள்ளி பட்டின சுட்டான்

**பட்டினசுட்டான் நாக்கு** *paṭṭiṉa-šuṭṭāṉ nākku,* பெ. (n.) எட்டு விரல்நீளம் வளர்வதும் செம்பழுப்பு நிறமுள்ளதுமான கடல்மீன்வகை; a sea-fish rich brown, attaining 8in. in length.

*[பட்டினம் + சுட்டான் + நாக்கு]*

**பட்டினத்தடிகள்** (10-நூ) *paṭṭiṉa-t-taḍikaḷ,* பெ. (n.) காவிரிப்பூம்பட்டினத்தவரும் பதினோராந்திருமுறை ஆசிரியருள் ஒருவரும் முற்றத்துறந்தவருமாகிய ஒரு பெரியார்; a famous poet of kāviri-p-pūmpaṭṭinam who renounced the world and became a saint; one of the authors of patinōraṉ tirumurai. **வேறுபெயர்கள்:** திருவெண்காடர், பட்டினத்துப் பிள்ளையார். **ஊர்:** காவிரிப்பூம்பட்டினம். **தந்தை:** சிவநேசர், **தாய்:** ஞானகலை அம்மையார்.

இவர் காவிரிப்பூம்பட்டினத்தில் கப்பல் வாணிகம் செய்த பெருஞ்செல்வக் குடும்பத்தில் பிறந்தவர். திருவெண்காடர் என்பது இவரது பிள்ளைப் பெயர்; காவிரிப் பூம்பட்டினத்தில் பிறந்தமையால் பட்டினத்துப் பிள்ளையார் என்று அழைக்கப்பெற்றார். துறவு நிலை ஏற்றபிறகு பட்டினத்தடிகள் என்று வழங்கப் பெற்றார். இன்று இப்பெயரே வழக்கில் உள்ளது.

அடிகளாரின் திருப்பாடல்களில் '*தோடுடைய செவியன்*' என்னும் தேவாரப்பதிகம் எழுந்த வரலாறும், சுந்தர மூர்த்திகளின் வரலாறும், வரகுண பாண்டியரின் அருஞ்செயல்களும் குறிப்பிடப் பட்டுள்ளமையால் இவர் தேவார ஆசிரியர்க்கும் வரகுண பாண்டியர்க்கும் காலத்தால் பிற்பட்டவர் என்பது தெளிவு. நம்பியாண்டார் நம்பி அடிகளாரின் திருப்பாடல்களைத் தொகுத்திருத்தலால் அடிகளார் அவருக்கு முற்பட்டவராதல் வேண்டும். வரகுண பாண்டியரின் காலம் கி.பி.9 ஆம் நூற்றாண்டென்று துணிவதாலும், கல்வெட்டுக் குறிப்புகளாலும், பிற சான்றுகளாலும் நம்பியாண்டார் நம்பியின் காலம் கி.பி. 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று துணியப் பெறுவதாலும் அடிகளாரின் காலம் இடைப்பட்ட கி.பி. 10ஆம் நூற்றாண்டாகுமென்று ஆராய்ச்சியாளர் துணிகின்றனர்.

பட்டினத்தடிகளின் வரலாறாகக் கூறப்பெறுவன வருமாறு:-

இவர் சிவகலை என்ற அம்மையாரை வாழ்க்கைத் துணைவியாக ஏற்று இல்லற வாழ்வில் ஈடுபட்டார். மணவாழ்வில் பல ஆண்டுகளாகியும் மகப்பேறு வாய்க்கப் பெறவில்லை. இவருடைய குடும்பத்தினர் திருவிடைமருதூர் இறைவனையே தங்கள் வழிபடு கடவுளாக வணங்குபவர்கள். அவ்விறைவனின் திருவுளப்படி சிவசருமர் என்ற திருவிடைமருதூர் மறையவரின் பிள்ளையாகிய மருதவாணரை வளர்ப்புப் பிள்ளையாக ஏற்று மகப்பேற்றுக் குறையை

நீக்கிக் கொண்டார். மருதவாணர் பிள்ளைப் பருவம் கடந்து தந்தையின் செல்வத்தைப் பெருக்கக் கடல் வாணிபத்தில் ஈடுபட்டார். ஒரு நாள் திடீரென்று *"காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே"* என்று எழுதி வைத்துவிட்டு மறைந்து விட்டார். இதனைக் கண்ட திருவெண்காடர் நிலையாமை உணர்வு தோன்றப் பெருஞ் செல்வத்தையும் மனை வாழ்வையும் துறந்து இரந்துண்ணும் துறவியாகித் தலயாத்திரை மேற்கொண்டார்.

இந்திய நாடு முழுவதும் மேற் கொண்ட திருத்தல யாத்திரையில் ஆங்காங்கே பல அருஞ்செயல்களை நிகழ்த்தி, இறுதியில் திருவொற்றியூரில் கடற்கரை விளையாட்டுச் சிறுவர்களுடன் கூடி விளையாடி சிவலிங்க நிலையில் திருவுருக் கரந்து முத்தி நிலையில் கலந்தார். இவரது திருக்கோயில் இன்றும் திருவொற்றியூரில் உள்ளது.

சிவநெறித் திருமுறையில் திருவிசைப்பா. திருப்பல்லாண்டு பாடிய சேந்தனாரடிகளும், வடநாட்டில் உச்சயினி மன்னராய் விளங்கிய பத்திரகிரியாரும் அடிகளாரின் அருளுரையால் மெய்யறிவு பெற்று அடியாராயினர் என்று கூறப்படுகின்றது.

**நூல்:** கோயினான்மணி மாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக் கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது.

இந்நூல்களேயன்றி, *'பட்டினத்துப் பிள்ளையார் பிரபந்தத் திரட்டு'* என்ற பெயரில் ஒரு நூல் இவரியற்றியதாகக் கூறப்படுகிறது. இந்நூலுள் கோயில் திருவகவல், கச்சித் திருவகவல், திருவேகம்ப மாலை, திருவேகம்ப விருத்தம், பல தனிப் பாடல்கள், முதல்வன் முறையீடு, அருட்புலம்பல், இறந்த காலத்திரங்கல், நெஞ்சோடு புலம்பல், பூரணமாலை, நெஞ்சொடு மகிழ்தல், உடற்கூற்று வண்ணம், ஆகிய நூல்களும், பாடல்களும் உள்ளன. 'சித்தர் ஞானக் கோவை, என்ற நூலிலும் இவர்தம் பாடல்கள் தொகுக்கப் பெற்றுள்ளன.

பதினோராம் திருமுறையிலுள்ள அடிகளாரின் பாடல்களுக்கும் இப்பிரபந்தத் திரட்டிலுள்ள பாடல்களுக்கும் வேறுபாடுகள் காணப் படுகின்றன. இவை பேச்சு மொழிச் சொற்கள் பயின்றனவாய் பாமரரும் பயிலும் பிற்காலப் பாவகைகளைத் தழுவி எளிய நடையில் அமைந்துள்ளன. எனவே இவை பிற்காலத்தில் வாழ்ந்த வேறொரு பட்டினத்தாரால் பாடப்பட்டிருக்கலாம் என்று ஒரு கருத்து உள்ளது.

**கோயில் நான் மணிமாலை:** இது பதினோராந் திருமுறையில் இருபத்தாறாம் நூல். தில்லைப் பெருமானைப் பற்றிய சிற்றிலக்கியம் செய்யுட்களால் ஆகியது.

**திருக்கழுமல மும்மணிக் கோவை:** இது பதினோராந் திருமுறையில் இருபத்தேழாம் நூல். சீகாழிப் பெருமானைப் பற்றிய சிற்றிலக்கியம்; 30 செய்யுட்கள் உள்ளன.

**திருவிடை மருதூர் மும்மணிக் கோவை:** இது பதினோராந் திருமுறையில் இருபத் தெட்டாம் நூல் திருவிடைமருதூர்ப் பெருமானைப் பற்றிய சிற்றிலக்கியம்; 30 செய்யுட்கள் கொண்டது.

**திருவேகம்பமுடையார் திருவந்தாதி:** இது பதினோராந்திருமுறையில் இருபத்தொன்பதாம் நூல்; 100 செய்யுட்கள்கொண்ட சிற்றிலக்கியம்.

**திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது:** இது பதினோராந்திரு முறையில் முப்பதாவது நூல்; 10 செய்யுட்களால் அமைந்த சிற்றிலக்கியம்.

**பட்டினத்துப் பிள்ளையார்** *paṭṭiṉattu-p-piḷḷaiyār,* பெ. (n.) காவிரிப் பூம்பட்டினத்தவரும் பதினோராந் திருமுறை ஆசிரியருள் ஒருவரும் முற்றத்துறந்தவருமாகிய ஒரு பெரியார்; a famous poet of kāviri-p-pūmpaṭṭiṉam who renounced the world and became a saint, one of the authors of patinōrāṉ-tirumuṟai.
***பட்டினத்தடிகள்*** பார்க்க; see *paṭṭiṉattaḍigaḷ.*

*[பட்டினத்து + பிள்ளையார்]*

**மறுவ.** பட்டினத்தார்.

**பட்டினத்துப் பிள்ளையார் பாடல்** *paṭṭiṉattu-p-piḷḷaiyār-pāḍal,* பெ. (n.) பட்டினத்துப் பிள்ளையார் இயற்றிய பாடற்றொகுதி; poetic works of paṭṭiṉattu-p-piḷḷaiyār.

*[பட்டினத்து + பிள்ளையார் + பாடல்]*

**பட்டினப்பாக்கம்** *paṭṭiṉa-p-pākkam,* பெ. (n.) 1. அரசரும் மேன்மக்களும் வாழ்ந்து வந்த புகார் நகரின் ஒரு பகுதி; the part of kāviri-p-pūmpaṭṭiṉam away from the sea occupied by its being and nobles. *"பாடல்சால் சிறப்பிற்பட்டினப் பாக்கமும்"* (சிலப்.5,58.) *"வானவர் உறையும் பூநாறு ஒருசிறைப் பட்டினப் பாக்கம் விட்டனர்"* (சிலப்.10, 159.) 2. சென்னை நகரின் ஒரு பகுதி; the part of chennai city.

*[பட்டினம் + பாக்கம்]*

**பட்டினப்பாலை** *paṭṭiṉa-p-pālai,* பெ. (n.) பத்துப்பாட்டுள் கரிகாற் பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பாட்டு; a poem on the cōlā king karikāṟ peruvaḷattāṉ by kaḍiyalūr-uruttiraṅ-kaṇṇaṉār, one of pattu-p-pāṭṭu.

(இது பத்துப்பாட்டில் ஒன்பதாவது பாடல். இது பெரும்பாலும் வஞ்சியடிகளால் அமைந்து ஆசிரிய அடிகளால் முடிகிறது. இது முந்நூற்றோரடிகளையுடையது. வேற்று நாட்டிற்குப் போய்வர எண்ணிய தலைவன் தன் நெஞ்சை நோக்கித் தலைவியைப் பிரிந்து செல்ல முடியாதென்று செலவழுங்கிக் கூறுங் கூற்றாகச் சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு கடியலூர் உரத்திரங்கண்ணனார் பாடியது. இது பெரும்பாலும் வஞ்சியடிகளால் அமைந்த படியினால் வஞ்சிநெடும் பாட்டெனவும் வழங்கும். இதனைப் பாடியதற்காக உருத்திரங் கண்ணனார்க்குப் பதினாறாயிரம் பொன் கரிகாற் பெருவளத்தான் பரிசு வழங்கினான் என்று அந்நூலின் இறுதியில் கூறியிருப்பதோடு பிற்கால நூல்களிலும் கூறப்படுகிறது. இப்பாட்டில் சோழநாட்டின் பெருமை, காவிரிபூம்பட்டினத்தின் சிறப்பு, கரிகாற் பெருவளத்தானுடைய வீரச் செயல்கள், உறையூரை அவன் ஆட்சி செய்தமை முதலியன கூறப்பெறுகின்றன.)

*[பட்டினம் + பாலை]*

**பட்டினம்** *paṭṭiṉam,* பெ. (n.) 1. நெய்தல் நிலத்து ஊர்; maritime town. *"பட்டினம் படரின்"* (சிறுபாண்.153.) 2. காவிரிப் பூம்பட்டினம்; kāviri-p-pūmpaṭṭiṉam. *"முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்"* (பட்டினப்,218.) 3. ஊர். (சது.); small town. 4. யாக்கை; body. *"பண்டன்று பட்டினங் காப்பே"* (திவ். பெரியாழ். 5, 2, 1.)

*"பட்டின மருங்கி னசையின் முட்டில் பைங்கொடி நுடங்கும் பலர்புகு வாயிற்"* (பெரும்.336)

*"பல்வேறு பண்ட மிழிதரும் பட்டினத் தொல்லெ னிமிழிசை"* (மது. 537)

*"காவிரிப் படப்பைப் பட்டினத்தன்ன"* (அகம். 205–12)

*"பட்டினம் பெற்ற காலம்"* (நாலடி. 250–4)

*"பண்டத்தால் பாடெய்தும் பட்டினம்"* (நான்மணி. 86–2)

*[பட்டணம் → பட்டனம் → பட்டினம்]*

(வ.மொ.வ.195.)

**பட்டினவச்சேரி** *paṭṭiṉava-c-cēri,* பெ. (n.) நுளையர் வாழிடம்; hamlet of fishermen.

*[பட்டினவன் + சேரி]*

**பட்டினவன்** *paṭṭiṉavaṉ,* பெ. (n.) பரவகுலத்தான். (சிலப்.5,25,உரை); fisher man, as dwelling in a maritime town.

*[பட்டினம் → பட்டினவன்]*

**பட்டினி¹** *pattiṉi*, பெ. (n.) உணவு கொள்ளாமை; fasting, abstinence, starvation, *"பட்டினி வைகி"* (புறநா.371.) வேலை இல்லாமல் பலர் பலநாள் பட்டினிகிடப்பது உண்டு (உ.வ.)

ம. பட்டினி.

*[படி(மை) → பட்டினி]*

படிமை – தவம் – நோன்பு – உண்ணாமை.

**பட்டினிக் குரத்தி** *pattiṉi-k-kuratti*, பெ. (n.) உண்ணா நோன்பியாக உள்ள சமணப் பெண் துறவி; jain woman monk observing fast. *"அரிட்ட நேமி படாரர் மாணாக்கியார் பட்டினிக் குரத்திகள்"* (தெ.கல்.தொ.7.கல்.56.)

**பட்டினிகா–த்தல்** *pattiṉi-kā-*, செ.குன்றாவி. (v.i.) 1. உணவின்றியிருத்தல்; to starve, fast. 2. சாவீட்டில் உண்ணாதிருத்தல்; to go without food at a house of mourning. (வின்.)

*[பட்டினி + கா–,]*

**பட்டினிகிட–த்தல்** *pattiṉi-kida-*, 3. செ.கு.வி. (v.i.) *பட்டினிகா–,* பார்க்க; see *pattiṉi kā-,*

*[பட்டினி + கிட–,]*

**பட்டினிச்சாவு** *pattiṉi-c-cāvu*, பெ. (n.) உணவு கிடைக்காததால் ஏற்படும் இறப்பு; death caused by starvation.

*'பஞ்சத்தின் காரணமாகப் பட்டினிச் சாவுகள் அதிகரித்தன'.*

*[பட்டினி + சாவு]*

**பட்டினிதவிர்–த்தல்** *pattiṉi-tavir-*, 3. செ.கு.வி. (v.i.) சாவீட்டில் பட்டினி நீங்கி யுண்ணுதல்; to break fasting at a funeral house. (இ.வ.)

*[பட்டினி + தவிர்–,]*

**பட்டினிநோன்பிகள்** *pattiṉi-nōṉbigaḷ*, பெ. (n.) இரண்டு உவாவும், எண்மியும் முட்டுப்பாடும் உண்ணாத நோன்பியரான சமணத்துறவிகள்; jaina ascetics who fast on new and full moon days, the eighth day of the lunar fortnight and whenever they meet with obstacles *"பட்டினி நோன்பிகள் பலர்புகு மனையில்"* (சிலப்.15.164.)

*[பட்டினி + நோன்பிகள்]*

**பட்டினிப்பண்டம்** *pattiṉi-p-pandam*, பெ. (n.) 1. சாவீட்டில் உண்ணும் உணவு (யாழ்ப்.); simple food taken during the mourning period. 2. சாவீட்டிற்கு அனுப்பும் உணவுப் பண்டம் (யாழ்.அக.); articles of food sent to a house in mourning

*[பட்டினி + பண்டம்]*

**பட்டினிபொறு–த்தல்** *pattiṉi-poṟu-*, 4. செ.கு.வி. (v.i.) பசியால் வருந்துதல்; to suffer from hunger.

*[பட்டினி + பொறு–,]*

**பட்டினிபோடு¹–தல்** *pattiṉi-pōḍu-*, 19. செ.குன்றாவி. (v.t.) பிறரைப்பட்டினியா யிருக்கச் செய்தல்; to starve a person.

*[பட்டினி + போடு–,]*

**பட்டினிபோடு²–தல்** *pattiṉi-poḍu-*, 19. செ.கு.வி. (v.i.) உணவு உண்ணாதிருத்தல்; to abstain from food. *'இன்று பட்டினி போடு; நாளை வயிறு சரியாகி விடும்.'* (உ.வ.)

*[பட்டினி + போடு–,]*

**பட்டினிமருத்துவம்** *pattini-maruttuvam,* பெ. (n.) சிலவகை வயிற்று நோய்களுக்கு உணவு உண்ணாதிருத்தல்; treatment of starvation. *'கிழமைக்கு ஒரு நாள் பட்டினி மருத்துவம் எடுத்துக் கொள்வது நல்லது'.*

*[பட்டினி + மருத்துவம்]*

**பட்டினிவிடு-தல்** *pattini-vidu-,* 21. செ.கு.வி. (v.i.) உண்ணாதிருத்தல்; to fast *"இரண்டுவவு மட்டமியும் பட்டினிவிட்டு"* (சீவக.1547.)

*[பட்டினி + விடு-,]*

**பட்டீச்சுரம்** *patti-c-curam,* பெ. (n.) பாடல் பெற்ற சிவத்தலம்; a place name sivan shrine near kumbakonam. /சோழ வள நாட்டில் திருக்குடந்தைக்குத் தெற்கே நான்கு கல் தொலைவில் உள்ள தேவாரம் பெற்ற சிவப்பதி. காம தேனுவின் பெண்கள் நால்வரில் பட்டி என்பவள் வழிபட்டபடியால் பட்டீச்சுரம் என்று பெயருண்டாகியது என்பது தொன்ம வழக்கு. சிவபிரான் திருஞான சம்பந்தருக்கு வெயில் கொடுமையைத் தணிப்பதற்காக ஒரு பூதத்தைக் கொண்டு முத்துப்பந்தரைக் கொடுத்த இடம் என்ப.

**பட்டீசம்** *pattišam,* பெ. (n.) ஒருமுழ அளவுள்ள அடிப்பாகத்தையும் இருபக்கத்தும் கூரிய முகங்களையும் உடைய ஒரு படைக்கலம் (சுக்கிர நீதி,331.); a kind of weapon with flat edges on either side and base of a cubit long.

*[பட்டை → பட்டி → பட்டீசம்]*

**பட்டு-தல்** *pattu-,* 10. செ.கு.வி. (v.i.) அடித்தல், தட்டுதல், to beat.

*[பள் → பட்டு → பட்டு-தல்]*

(தென். மார்-ஏப் 76, பக்2.)

**பட்டு**[1] *pattu,* பெ. (n.) சிற்றூர். (பிங்.); hamlet, small town or village. வரகால்பட்டு, இருப்பைப்பட்டு, செங்கழுநீர்ப்பட்டு.

**பட்டு**[2] *pattu,* பெ. (n.) 1. பட்டாடை (பிங்.); silk cloth, wovensilk. *"பட்டிசைந்த வல்குலாள்"* (தேவா.863,2) 2. பட்டுப்பூச்சியால் உண்டாம் நூல்; silk yarn. 3. கோணிப்பட்டை (வின்.); sack cloth of indian hemp.

தெ. ம. பட்டு

க. பட்டை

*[பள் → பட்டு]*

(திருக். தமி. மர. 748)

**பட்டு**[3] *pattu,* பெ. (n.) 1. இருந்தேத்தும் மாகதர் (சிலப். 5, 48, அரும்.); a class of panegyrists. 2. கட்டியம்; panegyric chanted before kings or other great persons.

தெ. பட்டு

**பட்டு**[4] *pattu,* பெ. (n.) கள்ளிவகை; poinsettia

**பட்டுக்கத்தரி-த்தல்** *pattu-k-kattari-,* 4. செ.கு.வி. (v.i.) பிசிரின்றி வெட்டுதல்; cutting without fray as in silk cloth. *"அவர் பட்டுக் கத்தரித்தாற் போல் வெட்டொன்று துண்டிரண்டாய் பேசுபவர்"*

**பட்டுக்கயிலி** *pattu-k-kayili,* பெ. (n.) முகம்மதியர் அணியும் பட்டாடை; silk cloth worn by Muhammadans.

*[பட்டு + கயிலி]*

கயிலி → கயிலி?

கயிலி = உருது.

**பட்டுக்கருப்பட்டி** *paṭṭu-k-karuppaṭṭi,* பெ. (n.) ஒருவகைக் கருப்புக் கருப்பட்டி: a kind of black palmyra jaggery. (சா.அக.)

[ வட்டுக்கருப்புக்கட்டி → வட்டுக்கருப்பட்டி → பட்டுக்கருப்பட்டி ]

**பட்டுக்கருப்பு** *paṭṭu-k-karuppu,* பெ.(n.) ஒருவகை மருந்தாகப் பயன்படும் பட்டெரித்த சாம்பல்; a medicinal preparation of ashes from burnt silk. (சா.அக.)

[ பட்டு + கரி → கரிப்பு → கருப்பு ]

**பட்டுக்கரை** *paṭṭu-k-karai,* பெ.(n.) ஆடையில் பட்டாலியன்ற கரை; silk stripe or border in a cloth, opp. to paluk ka-k-karai.

[ பட்டு + கரை]



**பட்டுக்கிடப்பான்** *paṭṭu-k-kiḍappāṉ,* பெ. (n.) செத்துக்கிடப்பவன் என்று பொருள்படும் ஒரு வசைச்சொல்; a term of reproach, meaning one who lies dead. brāh.

[ படு → பட்டு + கிடப்பான்]

**பட்டுக்குஞ்சம்** *paṭṭu-k-kuñjam,* பெ. (n.) பட்டின் கற்றைத் தொங்கல்; silk tassel.

'*விளக்குமாற்றுக்குப் பட்டுக்குஞ்சம் கட்டினாற் போல*'. (பழ.)

[பட்டு + குஞ்சம்]



**பட்டுக்குட்டை** *paṭṭu-k-kuṭṭai,* பெ. (n.) பட்டாலான தோளிலிடும் சிறுதுணி (அங்கவத்திரம்); silk cloth, worn over the shoulder.

[பட்டு + குட்டு → குட்டை]

**பட்டுக்கூறு—தல்** *paṭṭu-k-kūṟu-,* 7. செ.குன்றாவி. (v.i.) கட்டியங்கூறுதல்; to recite a panegyric.

[பட்டு + கூறு—,]

**பட்டுச்சோளாங்குறிச்சி** *paṭṭu-c-cōḷāṅ kuṟicci,* பெ. (n.) பட்டுப்புடைவை வகை; a kind of silk saree.

**பட்டுடை** *paṭṭuḍai,* பெ. (n.) பட்டாடை; silk cloth. "*கொட்டைக் கரைய பட்டுடைநல்கி*" (பொருந. 155.)

[பட்டு + உடை]

**பட்டுடையாதி** *paṭṭuḍaiyāti,* பெ. (n.) இந்திரகோபப் பூச்சி; lady's fly; it is an insect with red velvetty appearance. (சா.அக.)

[ பட்டு + உடையாதி ]

**பட்டுடையார்** *paṭṭuḍaiyār,* பெ. (n.) பட்டுடையணிந்து, பூசனை புரியும் பார்ப்பனர்; brahmins wearing silk clothes performing whome to ritual rites in temples. "*பட்டுடை மூலப் பஞ்சாசார்ய தேவகன்மிகள்*" (தெ.கல்.தொ.2:3. கல்.68)

**பட்டுத்தரித்–தல்** *pattu-t-tari-,* 4. செ.குன்றா.வி. துன்பத்தைப் பொறுத்தல்; to suffer. (வின்.)

*[ பட்டு + தரி–,* skt *]*

**பட்டுத்துத்து** *pattu-t-tuttu,* பெ. (n.) பட்டுப்பூச்சியின் கூட்டிலிருந்து பட்டு நூலையெடுத்தபின் எஞ்சியிருக்கும் கழிவுப் பட்டு; cappadine, a sort of silk flock or waste.

*[ பட்டு + துத்து]*

**பட்டுத்தெளி–தல்** *pattu-t-teli-,* 3. செ.குன்றா.வி. (v.t.) நுகர்ச்சியாலறிதல்; to learn by experience. *பட்டுத்தேறு–,* பார்க்க; see *pattu-t-tēru-,*

*[ பட்டு + தெளி–,]*

**பட்டுத்தேறு–தல்** *pattu-t-tēru,* 10. செ.கு.வி. (v.i.) 1. நோய்நீங்கி உடம்பு வலிபெறுதல்; to recover strength after severe illness. 2. நேர்ச்சியால் மனவலி பெறுதல்; to be fortified byexperience.

*[ பட்டு + தேறு–, ]*

**பட்டுநூல்** *pattu-nūl,* பெ. (n.) பட்டாலாகிய மெல்லிய நூல்; silk thread. *"பருத்திநூல் பட்டு நூலமைத் தாடை யாக்கலும்"* (சிலப். 5,16, உரை.)

*[ பட்டு + நூல் ]*

*'பட்டு நூலுக்குள்ள சிக்கெல்லாமி ருந்தது'* (பழ.)

**பட்டுநூலி** *pattu-nūli,* பெ. (n.) சௌராட்டிரர் பேசும் மொழி; dialect of the saurāṣṭras.

*[ பட்டுநூல் → பட்டுநூலி ]*

**பட்டுநூற்காரர்** *pattu-nūr-kārar,* பெ. (n.) 1. பட்டு நெய்வோர் (வின்.); silk-weavers. 2. *சௌராட்டிரர்* பார்க்க; *the saurāṣtra caste.*

*[ பட்டுநூல் + காரர் ]*

**பட்டுநூற்பூச்சி** *pattu-nūr-pūcci,* பெ. (n.) பட்டுப் பூச்சி; silkworm. (சா.அக.)

*[ பட்டுநூல் + பூச்சி ]*

**பட்டுப்பட்டாவளி** *pattu-p-pattāvali,* பெ. (n.) பட்டு முதலிய விலையுயர்ந்த ஆடை வகைகள் (வின்.); silk and other kinds of valuable stuff.

*[ பட்டு + பட்டாவளி ]*

**பட்டுப்படி–தல்** *pattu-p-padi-,* 2. செ.கு.வி. (v.i.) கட்டளைக்கு உட்படுதல் (இ.வ.); to submit to an order.

*[ பட்டு + படி–, ]*

**பட்டுப்பணி–தல்** *pattu-p-pani-,* 2. செ.கு.வி. (v.i.) நுகர்ச்சியின் மேல் அடக்கமுண்டாதல்; to become humble after suffering.

*[ பட்டு + பணி–, ]*

**பட்டுப்பருத்தி** *pattu-p-parutti,* பெ. (n.) இலவம் *(சங்.அக.)* பார்க்க; see *ilavam,* red silk-cotton.

*[ பட்டு + பருத்தி ]*

**மறுவ.** செம்பருத்தி

**பட்டுப்பழம்** *paṭṭu-p-paḻam,* பெ. (n.) காட்டத்தி; wild mangostean. (சா.அக.)

**பட்டுப்பாய்** *paṭṭu-p-pāy,* பெ. (n.) திருமணங்களில் பயன்கொள்ளப்பெறும் சாய மேற்றிய கோரைப்பாய்வகை; coloured mat, generally used on marriage occasions.

ம. பட்டுபாயி

*[ பட்டு + பாய் ]*

**பட்டுப்புடைவை** *paṭṭu-p-puḍaivai,* பெ. (n.) பட்டுச்சீலை; silk saree.

*[பட்டு + புடைவை ]*

*'பட்டுப் புடைவையை இரவல் கொடுத்தது மின்றி, பாயைத் தூக்கிக் கொண்டு திரிந்ததுபோல'* (பழ.)

**பட்டுப்புழு** *paṭṭu-p-puḻu,* பெ. (n.) *பட்டுப்பூச்சி* பார்க்க; see *paṭṭu-p-pūcci.*

*[பட்டு + புழு ]*

**பட்டுப்பூச்சி** *paṭṭu-p-pūcci,* பெ. (n.) பட்டுநூலை உண்டாக்கும் பூச்சிவகை; silk-worm.

தெ. பட்டுப்புருகந்

*[ பட்டு + பூச்சி ]*

**பட்டுப்பூச்சிமரம்** *paṭṭu-p-pūcci-maram,* பெ. (n.) பட்டுப்பூச்சிகளுக்கு உணவாக உதவும் இலைகொண்ட மரவகை; white mulberry.

*[பட்டு + பூச்சி + மரம் ]*



**பட்டுப்போ—தல்** *paṭṭu-p-pō-,* 6. செ.கு.வி. (v.i.) 1. உலர்ந்து போதல்; to wither, fade *'மரம் பட்டுப் போயிற்று'.* 2. சாதல்; to die; *'போரிற் பலர் பட்டுப் போயினர்'.*

*[ பட்டு + போ—, ]*

**பட்டுபடி** *paṭṭu-paṭi,* பெ. (n.) செலவின் தொகையளவு; amount of cost, charges, expenses or out lay.

தெ. பட்டுபடி

*[ பட்டு + படி ]*

**பட்டுமந்தாரை** *paṭṭumandārai,* பெ. (n.) இளஞ்சிவப்பும் மஞ்சளும் கலந்த மந்தாரை; pink and yellow mountain bony. (சா.அக.)

*[ பட்டு + மந்தாரை ]*

**பட்டுமாய்—தல்** *paṭṭu-māy-,* 16. செ.கு.வி. (v.i.) செய்கைப்பயன் நுகர்தல்; to suffer the consequences.

*[ பட்டு + மாய்—, ]*

**பட்டுராமக்குறிச்சி** *paṭṭu-rāma-k-kuṟicci,* பெ. (n.) *பட்டுச்சோளாங் குறிச்சி* பார்க்க; see *paṭṭu-c-cōḷāṅ-kuricci.*

*[ பட்டு + ராமம் + குறிச்சி ]*

**பட்டுருவு—தல்** *paṭṭuruvu-,* **10.** செ.கு.வி. (v.i.) ஊடுருவுதல்; to pass through, as a bullet *"வில்லம்பு பட்டுருவிற் றென்னை"* (தமிழ்நா. 100.)

*[ படு → பட்டு + உருவு ]*

**பட்டுவலை** *paṭṭu-valai,* பெ. (n.) வலைவகை (புதுவை.); a kind of net.

*[ பட்டு + வலை]*

**பட்டுவாழை** *paṭṭuvāḻai,* பெ. (n.) வாழை வகை; a species of big red plantin.

*[ பட்டு + வாழை]*

**பட்டுறுமாலை** *paṭṭuṟumālai,* **பெ. (n.)** *பட்டுக்குட்டை* **(புதுவை.) பார்க்க; see** *pattukkuttai.*

*[ பட்டு + உறுமாலை ]*

**பட்டை**[1] *paṭṭai,* பெ. (n.) **1.** மரத்தோல்; bark of a tree. **2.** வாழைப்பட்டை; outer rind of the plantain tree. **3.** சொயினாமரப்பட்டை; chinchona bark. **4.** பொடிப்பட்டை; dried plantain rind folded for keeping snuff. **5.** மரவுரி; bark tree. **6.** இறைகூடை (நெல்லை.); well-basket.

தெ. பட்ட, பட்டமு.

க. பட்டெ. ம. பட்ட

*[ பட்டு → பட்டை ]* (வ.மொ.வ. 196.)

**பட்டை**[2] *paṭṭai,* பெ. (n.) **1.** தகடு; plate, slab, tablet. **2.** தட்டையான தன்மை; flatness. **3.** பொன்னிழைப்பட்டை; lace-border. **4.** பட்டைக் கோடு; painted stripe, as on a temple wall. **5.** விலங்குகளின் கலப்பு நிறக்கோடு; dapple, piebald colour. *'பட்டைமாடு'* **6.** தோள் முதலிய உறுப்பின் தட்டையான பகுதி; flat part of the body, as the shoulder blade. **7.** கழுத்துப் பட்டை (வின்.); collar. **8.** மணியிற்றீரும் பட்டை; facet of a gem. *'பட்டை தீர்த்த செம்பு'* **9.** அணிகலனில் ஓர் உறுப்பு (யாழ்.அக.) a particular section in ornaments. **10.** *பட்டைத் தையல்* பார்க்க; see *paṭṭai-t-taiyal.* **11.** பனங்கை (வின்.); palmyra timber. **12.** வரிச்சல்; reapers of a roof. **13.** சலாகை; (யாழ்.அக.) flat rod. **14.** பட்டுநாடா (யாழ்.அக.); ribbon. **15.** போதிகை (வின்.); frieze. **16.** செப்புப்பட்டயம்; copper plate for inscribing royal grants or orders. **17.** *பட்டைச்சோறு* பார்க்க; see *paṭṭai-c-cōṟu.* **18.** பொன்னிழைக் கற்றை; thick fillet of gold thread. (வின்.)

தெ. பட்ட, பட்டெ. க. பட்டெ

ம. பட்டம் து. பட்டி. கொலா. பட்டெ நாய்க். பட்டி. பாலி. பெட்டி. குய். பட்டி. குர். பட்டா

*[ பட்டு → பட்டை ]*

**பட்டைக்கடம்பு** *paṭṭai-k-kaḍambu,* பெ. (n.) *நீர்க்கடம்பு* பார்க்க; see *nir-k-kaḍambu.* water kadamba.

*[ பட்டை + கடம்பு ]*

**பட்டைக்கம்பி** *paṭṭai-k-kambi,* பெ. (n.) ஆடையின் விளிம்பிலமைந்த அகன்ற வண்ணக்கோடு (வின்.); broad stripe in cloth.

*[ பட்டை*[2] *+ கம்பி ]*

**பட்டைக்கம்பு** *paṭṭai-k-kambu,* பெ. (n.) சிலம்பம் பழகுவோர் கைத்தடி; quarter - staffs, used by fencers. *"வீசுகின்ற பட்டைக் கம்புக்குப் பயந்து"* (விறலிவிடு. 1034.)

*[ பட்டை + கம்பு ]*

**பட்டைக்கருப்பட்டி** *paṭṭai-k-karuppaṭṭi,* பெ. (n.) கருப்புக்கட்டி வகை; a kind of jaggery.

*[ பட்டை + கருப்பட்டி ]*

**பட்டைக்கால்** *paṭṭai-k-kāl,* பெ. (n.) கீழிருந்து நீரிறைக்கப்பட்டுப் பயிராகும் மேட்டுப்பாங்கு நிலம்; high land irrigated by water from a lower level.

*[ பட்டடை → பட்டை + கால் ]*

**பட்டைக்காலிகம்** *paṭṭai-k-kāligam,* பெ. (n.) சன்னலவங்கப்பட்டை; ceylon cinnamon. (சா.அக.)

**பட்டைக்காறு** *paṭṭai-k-kāṟu,* பெ. (n.) கொல்லன் பற்றுக்குறடு (இ.வ.); tongs, large pincers.

*[ பட்டை + காறு ]*

**தெ.** படகாரு



**பட்டைக்காறை** *paṭṭai-k-kāṟai,* பெ. (n.) பட்டையாகப் பொன்னால் செய்யப்பட்டு ஒன்பான் மணிகள் பொருத்தப்பட்ட கழுத்தணி; a thick gold necklace embedded nine gems. "*நம்பிராட்டியார்க்குக் குடுத்தன பொன்னின் பட்டைக்காறை மேற்கோத்த திருவில் கட்டின வயிரம்*" (தெ.கல்.தொ.2:2.கல்.48)

*[ பட்டை + காறை ]*

**பட்டைக்கிடங்கு** *paṭṭai-k-kiḍaṅgu,* பெ. (n.) கிணற்றில் நீர்வற்றிய காலத்தே பட்டையிட்டு நீர்முகக்குங் குழி cavity at the bottom of a well from which water is baled with a basket during dry season.

*[ பட்டை + கிடங்கு ]*

**பட்டைக்கிண்ணம்** *paṭṭai-k-kiṇṇam,* பெ. (n.) ஏனவகை; a kind of vessel.

*[ பட்டை + கிண்ணம் ]*

**பட்டைக்குலிகம்** *paṭṭai-k-kuligam,* பெ. (n.) பரங்கிப்பட்டை; chinaroot. (சா.அக.)

*[பட்டை + குலிகம்]*

**பட்டைக்குழி** *paṭṭai-k-kuḻi,* பெ. (n.) பட்டைக்கிடங்கு பார்க்க; see *paṭṭai-k-kiḍaṅgu.*

*[ பட்டை + குழி ]*

**பட்டைக்கெம்பு** *paṭṭai-k-kembu,* பெ. (n.) பட்டை தீர்ந்த கெம்பு; a cut gem.

*[பட்டை + கெம்பு]*

**பட்டைக்கொடி** *paṭṭai-k-koḍi,* பெ. (n.) துலாவிற்கட்டியுள்ள கயிறு அல்லது கழி; rope or pole attached to wellsweep.

*[பட்டை + கொடி]*

**பட்டைக்கொலுசு** *paṭṭai-k-koluśu,* பெ. (n.) மகளிர் சிறுவர் இவர்கள் காலில் அணிவதும் வெள்ளியாற் செய்யப்பட்டதும், பட்டையானதுமாகிய அணிவகை; a flat anklet of silver worn by children and women.

*[பட்டை + கொலுசு]*



**பட்டைகேசரி** *paṭṭai-kēšari,* பெ. (n.) சூடனுண்டாகும் மரம்; camphor tree,

மறுவ. கருப்பூரமரம்

**பட்டைகோலு–தல்** *paṭṭai-kōlu-,* 10. செ.குன்றாவி (v.i.) கேணித்தண்ணீர் முகத்தற்குப் பனையோலையால் இறைகூடை செய்தல் (யாழ்ப்.) to make a well-basket of palmyra leaf

*[பட்டை + கோலு–,]*

**பட்டைச்சட்டம்** *paṭṭai-c-caṭṭam,* பெ. (n.) கூரையைத் தாங்குதற்குக் கைமரத்தின்மேல் நீட்டுப் போக்கில் வைக்கும் மரச்சட்டம்; reeper.

*[பட்டை + சட்டம்]*

**பட்டைச்சாதம்** *paṭṭai-c-cātam,* பெ. (n.) *பட்டைச்சோறு* பார்க்க; see *pattai-c-choru.*

*[பட்டை + சாதம்]*

**பட்டைச்சாராயம்** *paṭṭai-c-cārāyam,* பெ. (n.) 1. வெள்வேல் முதலிய மரங்களின் பட்டையிலிருந்து இறக்குஞ் சாராயம்; arrack from the astringent bark of certa in trees, especially veḷvēl.

*[பட்டை + சாராயம்]*

**பட்டைச்சீலை** *paṭṭai-c-cīlai,* பெ. (n.) உப்புத்தாள்; sand-paper.

*[பட்டை + சீலை]*



**பட்டைச்சோறு** *paṭṭai-c-cōṟu,* பெ. (n.) 1. இறைவனுக்குப் படைக்கப்படும் சோற்றுக் கட்டி; offering of rice boiled and set in a cup-like form. 2. கிண்ணத்தில் நிரப்பிக் கவிழ்க்கப் பட்ட சோற்றுக்கட்டி; rice boiled and set in a cup-like form.

**பட்டைத்தாறு** *paṭṭai-t-tāṟu,* பெ. (n.) ஆடவர் உடையின் அகன்ற பின்கச்சம்; broad pleat of a man's cloth tucked in behind, dist. fr.mūlai-t-tāṟu.

*[பட்டை + தாறு]*

**பட்டைத்தையல்** *paṭṭai-t-taiyal,* பெ. (n.) ஆடைமுதலியவற்றை மடித்துப் பட்டையாய்த் தைக்குந் தையல்; flat seam.

*[பட்டை + தையல்]*

**பட்டைதட்டு–தல்** *apaṭṭai-taṭṭu-,* 5. செ.குன்றாவி. (v.t.) சோற்றைக் கிண்ணத்தில் அடக்கிக் கவிழ்த்து வட்டவடிவக் கட்டிகளாகச் செய்தல்; to set boiled rice in a cup-like form.

*[பட்டை + தட்டு–,]*

**பட்டைதாளி** *paṭṭai-tāḷi,* பெ. (n.) மரவகை (L.); a kind of ray laurel.

*[பட்டை + தாளி]*

**பட்டைதீர்-தல்** *paṭṭai-tīr-,* 2. செ.கு.வி. (v.i.) 1. சுண்ணம் முதலியவற்றால் பட்டையடிக்கப் படுதல்; to be coated with stripes of red and white colour, as a temple-wall. 2. கெம்பு முதலியவற்றை வெட்டிப் பட்டையாக்குதல்; to give sides in cutting or-polishing a gem, timber, etc.; *'இந்த மணிகள் பட்டை தீர்ந்தன'*

*[பட்டை + தீர்-,]*

**பட்டைதீர்-த்தல்** *paṭṭai-tīr-,* 19. செ.குன்றாவி (v.t.) வயிரம் முதலியவற்றைச் செதுக்கி வேலைசெய்தல்; to cut the facets, as of diamonds.

*[பட்டை + தீர்-,]*

**பட்டைநாமம்** *paṭṭai-nāmam,* பெ. (n.) பெரிய அளவிலான திருமண்குறி; big-sized vaiṣṇavaite mark.

*[பட்டை + ராமம் → நாமம்]*

**பட்டைநூல்** *paṭṭai-nūl,* பெ. (n.) தாள் அட்டையிற் சுற்றப்பட்ட தையல் நூல்; sewing thread wound on cards.

*[பட்டை + நூல்]*

**பட்டைப்பறி** *paṭṭai-p-paṟi,* பெ. (n.) மீன் பிடிக்க இடும் பொறி; fish-pass, fish-trap used at anicuts and kalingulas.

*[பட்டை + பறி]*

**பட்டைப்பிதுக்கம்** *paṭṭai-p-pidukkam,* பெ. (n.) தூணின் தலைமேற்பகுதி; entablature.

*[பட்டை + பிதுக்கம்]*

**பட்டைப்புழு** *paṭṭai-p-puḻu,* பெ. (n.) புழுவகை. tape worm (M.L.)

*[பட்டை + புழு]*

**பட்டைப்பேன்** *paṭṭai-p-pēṉ,* பெ. (n.) பூச்சி வகை; (அபு. சிந்.) a insect.

*[பட்டை + பேன்]*

**பட்டைமரம்** *paṭṭai-maram,* பெ. (n.) நெட்டாவில் பார்க்க; see *neṭṭāvil* bark tree.

*[பட்டை + மரம்]*

**பட்டைபானு** *paṭṭai-pāṉu,* பெ. (n.) காட்டுச்சாதிக்காய் மரம்; wild nutmeg.

**பட்டைமுட்டு** *paṭṭai-muṭṭu,* பெ. (n.) ஆழமின்மையால் கேணி நீர் இறைக்குங் கூடை தரையிற் படுகை; striking of the ola-basket against the bottom of a well due to shallowness of water.

*[பட்டை + முட்டு]*

**பட்டையடி-த்தல்** *paṭṭai-y-aṭi-,* 18. செ.குன்றா.வி. (v.t.) 1. கோயிற்சுவர், வீட்டுச் சுவர்களிலும் மரம் முதலியவற்றிலும் சுண்ணாம்பு செம்மண் ஆகியவற்றால் பட்டையான நீண்டகோடுகள் வரைதல்; to mark the walls of houses, temples, etc., with stripes of red and white. 2. அகலமாக்குதல்; to widen, flatten. 3. *பட்டைதட்டு-,* பார்க்க; see *paṭṭai taṭṭu-,*

*[பட்டை + அடி-,]*

**பட்டையம்[1]** *paṭṭaiyam,* பெ. (n.) வாள்; sword.

*[பட்டை → பட்டையம்]*

(வ.மொ.வ.196.)

**பட்டையம்[2]** *paṭṭaiyam,* பெ. (n.) அரசன் கொடுக்கும் செப்பு ஆவணம்; title deed.

*[பட்டயம் → பட்டையம்]*

**பட்டையரக்கு** *paṭṭai-y-arakku,* பெ. (n.) கொம்பரக்கு; shell lac, stick lac. (சா.அக.)

*[பட்டை + அரக்கு]*

**பட்டையரைஞாண்** *paṭṭai-y-araiñāṇ,* பெ. (n.) இடுப்பில் அணியும் பட்டையான அரைஞாண்; flat ornamental bank worn round the waist.

*[பட்டை + அரைஞாண்]*

**பட்டையுரித்-தல்** *paṭṭai-y-uri-,* 4. செ.குன்றா.வி. (v.t.) மரமுதலியவற்றிலிருந்து மேற்பட்டையை நீக்குதல்; to strip off bark.

*[பட்டை + உரி-,]*

**பட்டைவிட்டுப்போ-தல்** *paṭṭai-viṭṭu-p-pō-,* 8. செ.கு.வி. (v.t.) 1. வெயில் கடுமையாயிருத்தல்; to be severe, as the sun. 2. விறகிலிருந்து பட்டை நெகிழ்தல்; to become loose, as the bark of a fire-log.

*[பட்டை + விட்டுபோ-,]*

**பட்டைவிரசு** *paṭṭai-virašu,* பெ. (n.) *குருவிச்சை* பார்க்க; see *kuruviccai.* ovate-leaved ivory wood.

*[பட்டை + விரசு]*

**பட்டைவீச்சு** *paṭṭai-viccu,* பெ. (n.) குருவிரசு என்னும் மூலிகை; a kind of herb. (சா.அக.).

மறுவ. குருவிச்சை. பட்டைவிரசு.

**பட்டோலிகை** *paṭṭoligai,* பெ. (n.) *பட்டோலை (யாழ்.அக.)* பார்க்க; see *paṭṭōlai.*

*[பட்டோலை → பட்டோலிகை]*

**பட்டோலை[1]** *paṭṭōlai,* பெ. (n.) 1. எழுதுதற்கு அமைக்கப்பட்ட ஓலை; ola, with the rib removed, folded and prepared for writing. *"பண்ணிய பாவமெங்கள் பட்டோலைக் குட்படுமோ"* (சிவரக. கத்தரிப்பூ.31) 2. ஒருவர் சொல்ல எழுதிய ஓலை; first draft of a petition, etc., especially what is writtan to dictation. 3. அரசன் ஆணையை அறிவிக்கும் ஆவணம்; document, edict, royal proclamation. 4. பேரேட்டின் மொத்த வரவு செலவுக் குறிப்பு; consolidated statement of ledger accounts. 5. அட்டவணை (சீவக.829,உரை.); list, catalogue of articles, inventory. 6. மருத்துவரின் மருந்துக்குறிப்பு. doctor's prescription.

ம. பட்டோல

*[படு[1] + ஒலை → பட்டோலை]*

**பட்டோலை[2]** *paṭṭolai,* பெ. (n.) 1. ஊர் நிலக்கணக்கில் பதிந்தபடி, ஆணையாகவும், ஆவணமாகவும் எழுதப்பெறுவது; documentation of village lands as per village land account. 2. அவ்வோலை எழுதும் பதவி; document units. *"வரிப் பொத்தகம் கட்டி குறிச்சி உடையானும்; பட்டோலை எழுதினான் பட்டோலை குமுதக் குடையானும் இருந்து வரியிலிட்டது"* (தெ.கல்.தொ.14.கல்.161.)

**பட்டோலைக்காசு** *paṭṭōlai-k-kāšu,* பெ. (n.) வரிவகை (s.i.i.i,89.); an ancient tax, incash.

*[பட்டோலை + காசு]*

**பட்டோலைகொள்(ளு)—தல்** *pattōlai-koḷ-,* 16. செ.குன்றாவி. (v.t.) 1. பெரியோர் கூறியதை எழுதுதல்; to reduce to writing the utterances of the great "*ஒரு வியாக்யானம் அருளிச் செய்து முற்றப்பட்டோலை கொண்டு*" (குருபரம்.538.)

*[பட்டோலை + கொள்ளு—,]*

**பட்டோலைச்சரக்கு** *paṭṭōlai-c-carakku,* பெ. (n.) மருந்துச் சரக்கு (வின்.); drugs, as distinguished from curry stuffs.

*[பட்டோலை + சரக்கு]*

**பட்டோலை போடு—தல்** *paṭṭōlai-pōḍu,* 19. செ.கு.வி. (v.i.) 1. ஆவணத்திற்கு மூலப்படி எழுதுதல்; to make the draft of a writ. 2. சித்தஞ் செய்தல்; to make a list of articles. 3. மருந்துப்பட்டியெழுதுதல்; to write a prescription.

*[ பட்டோலை + எழுது—, ]*

**பட்பு** *paṭpu,* பெ. (n.) குணம்; quality. "*மயக்கிய பட்படாவைகும் பயன் ஞாலம்*" (பு.வெ, 8, 34)

*[ பண்பு → பட்பு ]*

**பட** *paḍa,* (இடைச்.) (part) ஓர் உவமஉருபு; a particle of comparison "*மலைபட வரிந்து*" (சீவக. 56)

*[ படு → பட ]*

**படக்கிருகம்** *paḍa-k-kirugam,* பெ. (n.) கூடாரம்; tent.

*[ படம் + skt. gruha › த. கிருகம் ]*

**படக்கு** *paḍakku,* பெ. (n.) பட்டாசு; fire works. crackers.

*[ பட → படக்கு ]*

**படக்குப்படக்கெனல்** *paḍakku-p-paḍak-keṉal,* பெ. (n.) அச்சக்குறிப்பு; onom, expr, signifying 1. throbbing as the heart through fear or guilt: 2. நாடி முதலியன விரைந்து அடித்தற் குறிப்பு; quick beating, as the pulse from fever. "*தாது படக்குப் படக்கென்று அடித்துக் கொள்ளுகின்றது*"

*[ படக்(கு) + படக்(கு) + எனல் ]*

**படக்கெனல்** *paḍakkeṉal,* பெ. (n.) onom, expr. signifying suddeness. '*அவனுக்குப் படக்கென்று உயிர் சென்றது*'

*[ படக் + எனல் ]*

**படகம்¹** *paḍagam,* பெ. (n.) 1. திரைச்சீலை; (வின்.) curtain 2. *படக்கிருகம் (யாழ்.அக)* பார்க்க; see *paḍak-kirugam.*

*[ படம் + படகம் ]* (மு.தா.122.)

**படகம்²** *paḍagam,* பெ. (n.) நிலவளவு; a measure of land. (I.M.P. cg. 193, ft.)

*[ படி + அகம் ]*

**படகம்²** *paḍagam,* பெ. (n.) நிலவளவு; a measure of land. (I.M.P. cg. 193, ft.)

*[ படி + அகம் ]*

**படகம்³** *paḍagam,* பெ. (n.) 1. அகமுழவுகளுள் ஒன்று (சிலப். 3, 27, உரை); drum of the a gamuḻavu class. 2. சிறுபறைவகை; small drum, tabor. "*பெருவா யொருமுகப் படகம் பெருக்க*" (கல்லா. 8) 3. போர்ப்பறை; kettle-

durm, war-drum. *"வட்ட வானமெனும் வான்படகத்தைக் கொட்டுமெண் மகள்"* (கந்தபு. உயுத்தகா. முதனாட். 53) 4. கலகம் (யாழ்.அக); rebellion.

**படகம்⁴** *padagam*, பெ. (n.) *பற்பாடகம்* (மூ.அ) பார்க்க; see *parpādagam*, fever plant.

**படகம்⁵** *padagam*, பெ. (n.) 1. பரண் (அக.நி.); watch- tower. 2. *விட்டுணுக் கரந்தை (யாழ்.அக)* பார்க்க; see *vishnrukarantai*, a plant that grows in hot and dry places. 3. கோல் (யாழ்.அக); stick. 4. கவரிமா (சூடா.); yak.

*[படி + அகம்]*

**படகாரன்** *pada-kāraṉ*, பெ. (n.) 1. நெய் வோன்; weaver. 2. ஓவியன்; painter.

*[படம் + காரன்]*

**படகிராசன்** *padagirāšaṉ*, பெ. (n.) 1. கட்டியலுப்பைக் கொண்டு செய்யும் உப்புமணி; salt beads prepared from consolidated salt. 2. கட்டிய உப்பு; consolidated salt. (சா.அக.)

**படகு** *padagu*, பெ. (n.) 1. சிற்றோடம்; small boat. 2. பாய்கட்டிய தோணி (வின்.); dhoney, large boat.

தெ. படவ. ம. படகு.

Low.L. bargia, Gr. baris.

O.Fr. barge, a boat.

Low L. barca, Fr. bargue,

E.bark, bargue, a ship of small size. barge-bark.

ட–ர போலி.ஒநோ. முகடி → முகரி. குடகு → coorg

*[படம் → படகு]* (வ.மொ.வ195)

**படகுக்காரன்** *padaku-k-kāraṉ*, பெ. (n.) படகுக்கு உரியவன்; boat owner.

*[படகு + காரன்]*

**படகுடி** *pada-kudi*, பெ. (n.) கூடாரம் (சங்.அக) tent.

*[படம் + குடில் → குடி]*



**படகுவலித்–தல்** *padagu-vali-*, செ.கு.வி. (v.i.) படகைச் செலுத்துதல் (வின்.); to row a boat.

*[படகு + வலி–,]*

**படகோட்டி** *padakōtti*, பெ. (n.) படகைச் செலுத்துபவன்; boat-man. (வின்.)

*[படகு + ஒட்டி]*

**படங்கடி–த்தல்** *padaṅgadi-*, 18. செ.குன்றாவி. (v.t.) பொய்யை மெய்போற் பேசுதல் (வின்.); to represent a false case as if it were true.

*[படங்கு + அடி–,]*

**படங்கம்**¹ *padangam,* பெ. (n.) ***சப்பங்கி***³ பார்க்க; see *sambangi* sappan- wood.

*[ படங்கு + படங்கம் ]*

**படங்கம்**² *padankam,* பெ. (n.) கூடாரம்; tent ***"படங்கத்துளேற்றிய..... விளக்கு"*** (அரிச். பு. விவாக. 83.)

*[ படங்கு → படங்கம் ]* (மு.தா.123.)



**படங்கன்** *padangan,* பெ. (n.) ***படங்கான் (வின்.)*** பார்க்க; see *padangān.*

*[ படங்கு → படங்கன் ]*

**படங்கான்**¹ *padangān,* பெ. (n.) **1.** அறுவிரல நீளம் வளர்வதும் சாம்பல் நிறமுள்ளதுமான கடல்மீன்வகை; a sea-fish, dull grey, atttaining **6** in. inlength, rhynchobatus djeddensis. **2.** எழுவிரல நீளம் வளர்வதும் செம்மை கலந்த சாம்பல் நிறமுள்ளதுமான கடல்மீன்வகை; ray, reddish grey, attaining 7 in. in length, rhinobatus granulatus. **3.** அறுவிரல நீளம் வளர்வதும் செம்மை கலந்த சாம்பல் நிறமுள்ளதுமான கடல்மீன் வகை; ray, reddish grey, attaining **6** in. in length, rhinobatus halavi.

*[ படங்கு → படங்கான் ]*

வகைகள்: **1.** படங்கான் **2.** கொம்பன் படங்கான் **3.** மெத்தைப் படங்கான் **4.** கோணப் படங்கான்.

**படங்கான்**² *padangān,* பெ. (n.) அகன்ற பூரான்; broad kind of centipade.

*[ படங்கு → படங்கான் ]* **(மு.தா.124.)**

**படங்கு**¹ *padangu,* பெ. (n.) **1. ஆடை;** cloth for wear ***"படங்கினார் கன்னியர்"*** **(திருமந். 2916) 2.** கூடாரம் (சூடா); tent. **3. மேற்கட்டி** (சூடா); awning, canopy. **5. பெருவரிச்சல்** (வின்.); broad lath at the ridge or eves of a roof.

*[ படம் → படங்கு ]* (மு.தா.123.)

**படங்கு**² *padangu,* பெ. (n.) **மெய்போற்** பேசுகை (வின்.); sophistry.

*[ ஒருகா. பட்டாங்கு → படங்கு ]*

**படங்கு**³ *padangu,* பெ. (n.) பெருங்**கொடி(பிங்.)**; standard; large banner.

**படங்கு**⁴ *padangu,* பெ. (n.) **சுராலை** (சாம்பிராணி)ப் பதங்கம் (தைலவ. **தைல.**); ex- tracted essence of frankincense.

**படங்கு**⁵ *padangu,* பெ. (n.) **1.** படம்⁴ **(இ.வ.)** பார்க்க; see padam⁴ **2.** அடிப்பாகம்; foot, lower end, as of a gunstock. ***'துமுக்கி (துப்பாக்கி)ப் படங்கு'***

**படங்குந்தி நில்—தல்** (படங்குந்தி நிற்றல்) *padangunti-nil-,* **14. செ.கு.வி.** (v.i.) முன்காலை ஊன்றி நிற்றல் **(சூடா. 9, 53);** to stand on tip-toe.

*[ படம் ⁴ + குந்தி + நிற்றல் ]*

**படங்குவீடு** *paḍaṅgu-viḍu,* பெ. (n.) கூடார வீடு; tent. "*படங்குவீடுகள் விரித்தனர்*" (பாரத. சூது. 109)

*[படங்கு + வீடு]*

**படச்சரம்** *paḍaccaram,* பெ. (n.) பழம்புடைவை (யாழ்.அக.); worn-out garment.

**படதீபம்** *paḍa-tipam,* பெ. (n.) நாகதீபம் பார்க்க; see nagadeepam. "*படதீப முதலாய பரிந்தியற்றி*" (உபதேசகா. உருத்திராக். 161); a kind of lamp.

*[படம் + தீபம்]*

**படந்தெரி—தல்** *paḍanteri-* 3. செ.குன்றாவி. *intr.* விளக்கில் எண்ணெயற்றபோது திரி பரந்து எரிதல்; to burn with a broad flame, as a wick without oil.

*[படர்ந்து → படந்து + எரி—,]*

**படநெடுமதில்** *paḍanēdu-madil,* பெ.(n.) பெருங் கொடிகளையுடைய நீண்டமதில்; fortification. "*கொடும் பட நெடுமதில் கொடித்தேர் வீதியுள்*" (சிலப்.27–152.)

*[படம் + நெடு + மதில்]*

**படப்பம்** *paṭappam,* பெ. (n.) மருங்கி லூர் சூழ்ந்த நகரம்; town surrounded by villages (வின்.)

*[ஒ.நோ. மடப்பம் → படப்பம்]*

**படப்பயம்** *paṭa-p-payam,* பெ. (n.) காரணமற்ற அச்சம்; baseless panic

*[படம் + பயம்]*

பயம் = skt

**படப்பாதி** *paḍa-p-pāti,* பெ. (n.) மரப் பலகைகளைப் பொருத்துந் தச்சு வேலை வகை; joining in carpentry. (வின்.)

*[படு + பாதி → படப்பாதி]*

**படப்பு** *paḍappu,* பெ. (n.) **1.** வைக்கோற்போர்; hay-rick. "*மன்றத் தார்ப்பிற் படப்பொடுங் கும்மே*" (புறநா. 334) **2.** கொல்லை; enclosed garden. "*மனைப்படப்பிற் கடற் கொழுந்து வளை சொரியும்*" (பெரியபு. திருநாவுக். 174) **3.** *படப்பை,8 (யாழ்ப்.)* பார்க்க; see *paḍappai.*

*[பள் → படு → படப்பு]*



**படப்பை** *paḍappai,* பெ. (n.) **1.** தோட்டக் கூறு; garden; enclosed garden. "*பூவிரி படப்பைப் புகார் மருங் கெய்தி*" (சிலப். 6, 32)

"*கிளைமலர்ப் படப்பைக் கிடங்கிற்*" (சிறு–160.).

"*நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை*" (பெரும்–321.).

"*அடையா வாயின் மிளைசூழ் படப்பை*" (பெரும்–401.).

"*கழிசூழ்படப்பை*" (பட்–32.).

"*உடைகடற் படப்பையெம் உறைவின் ஊர்க்கே*" (நற்.67–12.).

"பூக்கெழு படப்பைச் சாய்க்காட்டு அன்ன" "கானலம் படப்பை"

"கழனியம் படப்பைக் காஞ்சி யூர்" (குறுந்.127–3.).

"நெடுவரைப் படப்பை" (ஐங்.251–3.).

"தண்கடற் படப்பை மென்பா லனவும்" (பதிற்று.30–8.).

"பண்ணன் சிறுகுடிப் படப்பை" (அகம்.54–14.).

"பாசவற் படப்பை யாரெயில்" (புறம்.6–14.).

"பெரும்புனற் படப்பையவ ரகன்றலை நாடே" (புறம்.98–20.).

"பெண்ணையம் படப்பை நாடுகிழ வோயே" (புறம்.126–23.).

"சூரல் புறவின் அணில்பிளிற்றும் சூழ்படப்பை" (ஐந்.எழு.35–1.).

"முள்ளுடை மூங்கில் பிணங்கிய சூழ்படப்பை" (ஐந்.எழு.36–1.).

"நெய்தற் படப்பை நிறைகழித் தண் சேர்ப்பன்" (தி.மொ.41–1.).

"இளைசூழ் படப்பை இழுக்கிய ஏனத்து" (சிலப்.12–24.).

"காவிரிப் படப்பைப் பட்டினம் தன்னுள்" (சிலப்.15–151.).

2. புழைக்கடை; backyard. *"எம்படைப்பைக் காஞ்சிக் கீழ்"* (கலித். 108) 3. பக்கத்துள்ள இடம்; adfoining region or locality. *"வாழ்முர் வேலிச் சூழ்மிளைப் படப்பை"* (பெரும்பாண். 126) 4. ஊர்ப்புறம்; vicinity or outskirt of a town. *"அன்னமுங் குயிலும் பயிலுநீள் படப்பை யத்தினாபுரியை மீண்டடைந்தான்"* (பாரத. குருகுல. 95) 5. நாடு. (வின்.); rural parts, country. 6. மருத நிலத்தூர் (சது); agricultural town or village. 7. ஆன்கொட்டில்; cow stall. 8. பனங்கொட்டையைத் திரட்டி உலர்த்துங் கொல்லை; enclosure for collecting and drying palmyra fruits.

*[ படப்பு → படப்பை ]*

**படப்பொறி** *pada-p-pori,* பெ. (n.) 1. நாகத்தின் படத்திலுள்ள புள்ளிகள் (சூடா.); spots on the hood of a cobra. 2. துத்தி[1], 1 பார்க்க, (மலை.); see tutti[1]; evening mallow.

*[ படம் → படப்பொறி ]*

**படபட–த்தல்** *pada-pada-,* 11. செ.கு.வி. (v.i.) 1. பேச்சு முதலியவற்றில் விரைதல்; to be over hasty, as in speech; 2. குளிர் முதலியவற்றால் நடுங்குதல்; to tremble through fear; to shiver, as from cold fever or ague. *"படபடத்துடல் சோருவன்"* (குற்றா. தல, வேடன்வலம் 47.). 3. சினத்தால் மனங்கலங்குதல்; to be agitated through rage. *'அவன் பட–படக்கிறான்'* 4. பண்டம் விழுதல் முதலியவற்றால் ஒலியுண்டாதல்; to rattle, as things falling, rolling or breaking.

*[ படபட → படபடத்தல் ]*

**படபடப்பு** *padapadappu,* பெ. (n.) 1. துடிப்பு; precipitancy, agitation, as through fear or anger; 2. பேச்சு முதலியவற்றில் விரைவு; over hastiness, as in speech. 3. நடுக்கம்; shivering, quivering, as from cold or ague.

*[ படபட → படப்படப்பு ]*

**படபடெனல்** *pada-padenal,* பெ. (n.) 1. துடித்தற் குறிப்பு; onom, expr, signifying throbbing, quivering. *"படபடென நெஞ்சம் பதைத்து"* (தாயு. கருணா. 9) 2. விரைந்து பேசுதற் குறிப்பு; speaking in haste, as through fear, anger. 3. அசைதற் குறிப்பு; shaking, quaking, tottering. 4. வெடித்தற் குறிப்பு; bursting, break-

ing, falling with a rattling noise. 5. கடுமைக்குறிப்பு; hurry, as in preparation for a journey. 6. களைப்புக் குறிப்பு; exhaustion *'எனக்குப் படபடென்று வருகிறது'*

*[படபட + எனல்]*

**படம்¹** *padam,* பெ. (n.) 1. சீலை (பிங்.); cloth for wear *"மாப்பட நூலின் றொகுதிக் காண்டலின்"* (ஞான. 14, 21.) 2. சித்திரச் சீலை (பிங்.); painted or printed cloth. *"இப்படத் தெழுது ஞானவாவி"* (காசிக. கலாவ. 2) 3. சட்டை; coat, jacket. *"படம்புக்கு"* (பெரும்பாண். 69) 4. போர்வை; upper garment cloak. *"வனப் பகட்டைப் படமாக வுரித்தாய்"* (தேவா. 32, 7) 5. உடல்; body, *"படங்கொடு நின்றவிப் பல்லுயிர்"* (திருமந். 2768) 6. சித்தரமெழுதிய படம்; picture, map. 7. திரைச்சீலை(பிங்.); curtain, screen of cloth, especially around a tent. 8. பெருங்கொடி (பிங்); large banner. 9. விருதுக் கொடி (பிங்.); distinguishing flag, ensign.

*[பட்டம் → படம்]* வ.மொ.வ.196

**படம்²** *padam,* பெ. (n.) 1. யானைமுகபடாம்; ornamental covering for an elephant's face. *"வெங்கதக் களிற்றின் படத்தினால்"* (கலிங். 89) (பிங்.)

மறுவ: ஆதொண்டை.

*[பட்டம் → படம்]* வ.மொ.வ196

**படம்³** *padam,* பெ. (n.) 1. பாம்பின் விரிந்த தலையிடம்; cobra's hood. *"பைந்நாப் படவரவேரல்குலுமை"* (திருவாச. 34, 1) 2. காற்றாடி; kite made of cloth or paper. *"மணிப் பொலம் பூட்சிறார் விடுக்கும் வான் படம்"* (காஞ்சிப்பு. நகர. 98)

*[பட்டம் → படம்]* வ.மொ.வ.196

**படம்⁴** *padam,* பெ. (n.) கதையின் அடிப்படையில் அமைந்த காட்சிகளைக் கலைநுணுக்கங்களோடு ஒளிப்படச் சுருளில் பதிவுசெய்து திரையில் காட்டும் திரைப்படம். a film, a movie, cinema.

**படம்⁴** *padam,* பெ. (n.) பாதத்தின் முற்பகுதி; instep. *"படங்குந்தி நிற்றல்"* (சூடா. 9, 53)

**படம்பிடி–த்தல்** *padam-pidi-,* 4. செ.குன்றாவி (v.t.) ஒளியின் உதவியால் கருவிகொண்டு ஒளிப்படம் பிடித்தல்; to photograph.

*[படம் + பிடி –,]*

**படம் புகு–தல்** *padam-puku-,* செ.கு.வி (v.i.) சட்டை விடுதல்; to put on a coat or jacket. *"அடிபுதை யரணமெய்திப் படம்புக்கு"* (பெரும்பாண். 69.).

*[படம் + புகு –,]*

**படம் விரி–த்தல்** *padam-viri-,* செ.கு.வி. (v.i.) படமெடு²–, பார்க்க (வின்.) see *padamedu.*

*[படம்³ + விரி–,]*

**படமக்கி** *pada-makki,* பெ (n.) படமடக்கி பார்க்க (சங்.அக); see *padamaddakki.*

*[படமடக்கி → படமக்கி]*

**படமகி** *pada-maki,* பெ (n.) கசப்பு வெட்பாலை; படமகிப்பாலைமரம்; a kind of vetpālai herb. (சா.அக.)

**படமஞ்சரி** *pada-mañjari,* பெ. (n.) ஒருவகைப் பண் (பரத. இராக. 56); a specific melody type.

*[படம் + மஞ்சரி]*

**படமடக்கி** *padam-adakki,* பெ (n.) தாழை பார்க்க (மலை); see talai, fragrant screw-pine.

*[படம் + அடக்கி]*

**படமடை** *pada-madai,* பெ. (n.) *"படமடைக் கொண்ட குறுந்தா ணுடும்பின்"* புறம் (பா.பே.326-9.).

**படமண்டபம்** *pada-mandapam,* பெ. (n.) படமாடம் பார்க்க; see padamādam.

*[படம் + மண்டபம்]*

**படமரம்** *pata-maram,* பெ. (n.) நெசவுக் கருவி வகை; fore-roll of a loom, weaver's beam.

*[படம் + மரம்]*

ஒ.நோ. படைமரம்.

**படமாடம்** *pada-mādam,* பெ. (n.) கூடாரம்; tent. *"கழிப்பட மாடங் காலொடு துளங்க"* (பெருங். உஞ்சைக். 44, 42.)

*[படம் + மாடம்]*

**படமாளிகை** *pada-māligai,* பெ. (n.) படமாடம் பார்க்க; see padamādam. *"ஏகுநெறிக் கிடையே படமாளிகை"* (சிவரக. தேவியிமைய. 12.)

*[படம் + மாளிகை]*

**படமெடு-த்தல்** *padam-edu-,* 18. செ.குன்றா.வி. (v.t.) படம்பிடி-, பார்க்க; see padampidi-,

*[படம் + எடு-,]*

**படமெடு-த்தல்** *padam-edu-,* 3. **செ.கு.வி.** (v.i.) 1. பாம்பு தன் படத்தை **விரித்து** நிற்றல்; to spread hood **as a cobra.** (வின்) 2. புகைப்படக் **கருவியால் படம்** எடுத்தல்; to shoot a photo **with a still** camara. 3. திரைப்படம் எடுத்தல்; to produce a film.

*[படம் + எடு-,]*

**படமொடுக்கு-தல்** *padam-odukku-,* 9. செ.கு.வி. (v.i.) பாம்பு தன் படத்தைச் சுருக்கிக் கொள்ளுதல்; to contract hood, as a cobra.

*[படம் + ஒடுக்கு-,]*

**படர்** *padar-,* 4 பெ. (n.) பரவும் தோல்நோய்; a kind of itches.

*[படல் → படர்]* (மு.தா.125)

**படர்-தல்** *patar-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஓடுதல்; to run. *"அன்னை யலறிப் படர்தர"* (கலித். 51) 2. கிளைத்தோடுதல்; to spread, as a creeper; to ramify, branch out in different directions. *'கொடி படருகிறது'* 3. பரவுதல்; to overspread, as spots or eruptions on the skin; to spread as light, fire, rumour epidemic. *"ஊழித்தீப் படர்ந்து"* (கல்லா.கண) 4. பெருகுதல்; to be diffused as air, know ledge; to pervade, as perfume. *"படரொளிப் பரப்பே"* (திருவாச. 22, 8) 5. அகலுதல்; to expand; to be wide, as chest, face. *'படர்ந்த மார்பு'* 6. வருந்துதல்; to suffer; to be distressed. *"துணை படர்ந் துள்ளி"* (அகநா. 38)

"எடுத்தல் திரீஇ யிடத்தொறும் படர்தலிற்" (அகம்.171-11)

"பகைப்புலம் படர்தலு முரியன்" (புறம்.69-14)

*[படல் → படர் → படர்-,]*

**படர்–தல்**[1] *paḍar-,* **2.** செ.குன்றா.வி. (v.t.) **1.** விட்டுநீங்குதல்; to leave, abandon. *"தூயார் படர்பின்னா"* (சிறுபஞ். 14) **2.** அடைதல்; to reach, arrive at. *"சேவடி படருஞ் செம்ம லுள்ள மொடு"* (திருமுரு. 62) **3.** நினைத்தல்; to think of, consider. *"திரையயற் படர்குவிராயின்"* (பெரும்பாண். 35) **4.** பாடுதல்; to sing, dwell on. *"நீத்தான்றிறங்கள் படர்ந்து"* (கலித். 131)

*[ படல் → படர்–, ]*

**படர்**[2] *paḍar,* பெ. (n.) **1.** செல்லுகை; passing, proceeding. *"படர்கூர் ஞாயிற்றுச் செக்கர்"* (மதுரைக். 431.). **2.** ஒழுக்கம் (சூடா); upright conduct or behaviour. **3.** வருத்தம்; sorrow, affliction, distress, anxiety, trouble. *"பானாள்யாம் படர்கூர"* (கலித். 30.). **4.** தேமல்; spreading spots on the skin. **5.** நோய்; pain, disease. **6.** தூறு; thick bush, especially of creepers. *"பவள நன்படர்க்கீழ்"* (திவ். திருவாய் 9, 2, 5.). **7.** நினைவு; thought, reflection. *"அரிவைக்கின்ன வரும்படர் தீர"* (நெடுநல், 166.). **8.** பகை (அக.நி); hostility, enmity. **9.** மேடு; rise, elevation mount, hillock. (வின்) **10.** வழி (யாழ்.அக); path. **11.** துகிற்கொடி (அக.நி); flag.

*[ படல் → படர் ]*

**படர்**[3] *paḍar-,* பெ. (n.) **1.** படைவீரர்; warriors, soldiers. *"படர் கிடந்தனர்"* (கம்பரா. நாகபாச. 137) **2.** காலதூதர்; yama's messengers. *"புலப்பட நிலைப்பட ருரைப்பார்"* (திருவாலவா. 33, 11) **3.** ஏவல் செய்வோர் (யாழ்.அக); servants, attendants. **4.** இழிமக்கள் (யாழ்.அக); people of low caste.

*[ படல் → படர் ]*

**படர்**[4] *paḍar-,* பெ. (n.) தறுகண்மை; cruelty. *"படரெருமைப் பகட்டின் மிசை"* (தக்க யாகப். 463)

*[ படல் → படர் ]*

**படர்அவலம்** *paḍaravalam,* பெ. (n.) படர்கின்ற துன்பம்; continuous suffering. *"அரும்படர் அவலம்"* (ஐங்.485–1)

*[ படர் + அவலம் ]*

**படர்க்காரை** *paḍar-k-kārai,* பெ. (n.) காரைச் செடி; thorny webera. (சா.அக.)

*[ படர் + காரை ]*

**படர்க்கை** *paḍarkkai,* பெ. (n.) இடம் மூன்றனுள் தன்மை, முன்னிலைகள் அல்லாத இடம்; third person, one of three itam q.v. *"எல்லாருமென்னும் படர்க்கை யிறுதியும்"* (தொல். எழுத் 191.).

**படர்காய்** *paḍaarkāy,* 4 பெ. (n.) **1.** பீர்க்கு; luffa creeper. **2.** கொடியின்காய்; fruit of any creeper as அவரை been. **3.** பூசனி; pumpkin. (சா.அக)

*[ படர் + காய் ]*

**படர்காய்** *padarkāḷi,* பெ. (n.) தக்காளி; indian tomato. (சா.அக.)

*[ படர் + காய் ]*

**படர்கின்ற பற்று** *padarginra-parru,* பெ. (n.) கொப்புளமாகாது படர்ந்து புண்ணாகும் நோய்வகை; infective gramuloma.

*[ படர்கின்ற + பற்று ]*

**படர்கூர் ஞாயிறு** *padar-kūr-ñāyiru,* பெ. (n.) வெயில் மிகுதியாகித் துன்பப்படுத்தும் ஞாயிறு; stroking sun. "*வெயிற் கதிர் மழுங்கிய படர்கூர் ஞாயிற்றும் செக்க ரன்ன*" (மது.431).

*[படர் → கூர் + ஞாயிறு]*

**படர்கொடி** *padar-kodi,* பெ. (n.) 1. நின்று வளராது படரும் கொடி; any kind of running plant. 2. பீர்க்கு, பார்க்க, (மலை.) see pirkku sponge gourd.

*[படர் + கொடி]*

**படர்கொள் மாலை** *padar-kol-mālai,* பெ. (n.) துன்பம்தரும் மாலைப்பொழுது; evening love sick "*படர்கொண் மாலைப் படர்தந்தாங்கு*" (அகம்.303–14)

**படர்ச்சி** *paṭarcci-,* பெ. (n.) 1. செலவு; passing, proceeding, going. "*பாயிருட் கணவனைப் படர்ச்சி நோக்கி*" (பு.வெ. 13, பெண்பாற், 19, கொளு) 2. நல்லொழுக்கம்; moral conduct. "*அறத்திற்றிரியாப் படர்ச்சி*" (நன். பொது. 46) 3. கொடியோடுகை; running, extending, creeping, as a vine. 4. ஊழ்வினை; fate. "*படர்ச்சியின் வயத்தாலோர்நாள்*" (சேதுபு. சீதைகு. 31) 5. பரந்த வடிவு (சூடா); expanse, open space. 6. பரவுகை; spreading, as darkness light, fire, spots, eruptions.

**படர் சுணங்கு** *padar suṇangu,* பெ. (n.) உடலில் படரும் தேமல்; yellow patches spreading on the skin especially in females on the breast which is considered as adding to beauty. (சா.அக.)

*[படர் + சுணங்கு]*

**படர்செண்பகக்கொடி** *padar-senbaga-k-kodi,* பெ. (n.) கொடிச்சம்பங்கி; a variety of champak. (creeper).

*[படர் + செண்பகக்கொடி]*

**படர்செண்பகம்** *padarsenbagam,* பெ. (n.) கொடிச் செண்பகம்; champak creeper. (சா.அக.)

*[படர் + செண்பகம்]*

**படர்த்தி** *padartti-,* பெ. (n.) படர்ச்சி,3, 6, பார்க்க; see padarcci சதைப்படர்த்தி.

*[படர் → படர்த்தி]*

**படர்தடிப்பு** *padartadippu,* பெ. (n.) 1. வண்டுக்கடி; beetle bite. 2. சில நஞ்சுக்கடியினால் உடம்பில் பல இடங்களில் சதை தடித்துக் காணுதல்; thick spots or raised parches spreading on the skin due to poisonous bites of insects. (சா.அக.)

*[படர் + தடிப்பு]*

**படர்தவசி** *padartavasi,* பெ. (n.) சன்னிநாயகம்; any plant capable of or having the critue of carring apopley of any kind probable refering here to some spreading creeper. (சா.அக.)

*[படர் + தவசி]*

**படர்தாமரை** *padar-tāmarai,* பெ. (n.) 1. தோல் மேற்படரும் நோய் வகை (வின்.); ringworm, tinea. 2. தேமல்வகை; tetter, herpes. 3. மனவமைதியில்லாதவ–ன்–ள்; a person of restless temperament. (நெல்லை.)

மறுவ; படுதாமரை

*[படர் + தாமரை]*

**படர்தேமல்** *padar-tēmal,* பெ. (n.) 1. **படர்தாமரை, பார்க்க;** see padartāmarai, 2. **தேமல்;** spreading spots on the skin.

*[படர் + தேமல்]*

**படர்நெல்லி** *padarnelli,* பெ. (n.) கொடிநெல்லி; goose berry creeper of the phyllanthus genus. (சா.அக.)

*[படர் + நெல்லி]*

**படர்நோய்** *paṭar-nōy,* பெ. (n.) நினைவினால் உண்டாம் வருத்தம்; anxiety, anxious thought. *"அயர்வொடு நின்றே னரும்படர் நோய் தீர"* (பு.வெ. 11, பெண்பாற் 9) 2. குட்டம்; skin disease rafridly sprecdiy. 3. தொற்று நோய்; infectous disease such as cholere, small pox ete. spreading to the surrounding places.

*[படர் + நோய்]*

**படர்பயிர்** *paṭar-payir,* பெ. (n.) படர்கின்ற கொடி; climber, creeper, as a spreading plant. *"படர்பயிர்க்குக் கொளு கொம்பால் கொள்கையாலே"* (குற்றா. தல. மந்தமா 34.)

*[படர் + பயிர்]*

**படர்புண்** *padar-puṇ,* பெ. (n.) உடம்பில் பரவிக் கொண்டே வரும் புண்வகை (இங். வை. 302); spreading ulcer.

*[படர் + புண்]*

**படர்மல்லிகை**[1] *paṭar-mallikai,* பெ. (n.) சாதிமல்லிகை பார்க்க, (வின்.); see sāthimalligai. large flowered jasmine.

*[படர் + மல்லிகை]*

**படர்மல்லிகை**[2] *padarmalligai,* பெ. (n.) கொடிமல்லிகை; creeper jasmine. (சா.அக.)

*[படர் + மல்லிகை]*

**படர்மலி அருநோய்** *padarmalia-ru-nōy,* பெ. (n.) காதல்நோயால் வந்த பசலைநோய்; anxious thought with love affair. *"நன்னுதல் பாய படர்மலி அருநோய்"* (நற்.282–3.). *"நன்னுதற் பசந்த படர்மலி அருநோய்"* (நற்.322–9.).

**படர்மலி வருத்தம்** *padar-mali-varu-ttam,* பெ. (n.) காதல்நோயால் வந்த மிகுதுன்பம்; excess distress in love affair. *"படர்மலி வருத்தமொடு பலபுலத் தசைஇ"* (அகம்.398–2.).

**படர்முன்னை** *padarmuṉṉai,* பெ. (n.) கொடிமுன்னை; pointed leaved hogwood. (சா.அக.)

*[படர் + முன்னை]*

**படரடி** *pdṭar-adi,* பெ. (n.) சிதறவடிக்கை; scattering beating. (வின்.)

*[படர் + அடி]*

**படரப்பன்** *padarappaṉ,* பெ. (n.) கக்கல் செய்ய வைக்கும் ஒருவகை மூலிகை; a kind of emetic nut. (சா.அக.)

மறுவ: படராப் பாண்.

*[படர் + அப்பன்]*

**படராமூக்கி** *padarāmūkki,* பெ. (n.) வெண்ணா யுருவி; white flowered indian bur. (சா.அக.)

*[படரா + மூக்கி]*

**படரி** *padari,* பெ. (n.) 1. படர்கொடி; a creeping plant. 2. இலந்தை; jujube.

*[படர் → படரி]*

**படரிலந்தை** *padar-ilandai,* பெ. (n.) படரக்கூடிய இலந்தை வகை (இ.வ); a kind of jujube.

*[படர் + இலந்தை]*



**படருப்பு** *padaruppu,* பெ. (n.) 1. நிலத்தில் படரும் உப்பு; ioncrustoction of salt. 2. உழமண்தரையில் படரும் உப்பு ; mealy power.3. முடியண்டப்படருப்பு; a whitish crust or light crystallization found deposited on the human skull. (சா.அக)

*[படர் + உப்பு]*

**படரை** *padarai,* பெ. (n.) *ஆவிரை* (சங்.அக); *பார்க்க;* see *padārai.* tanner's senna.

*[படர் → படரை]*



**படரைக்கீரை** *padarai-k-kirai,* பெ. (n.) ஆரை; a kind of editle green.

*[படரை + கீரை]*

**படல்** *padal,* பெ. (n.) 1. பனையோலை யாலேனும் முள்ளாலேனும் செய்யப்பட்ட அடைப்பு ; small shutter of braided palm leaves or thorns. *"படலடைத்த சிறுகுரம்பை நுழைந்து புக்கு"* (திவ்.பெரியதி.4,4,3.) 2. மறைப்புத்தட்டி; (வின்) a kind of hurdle or wattled frame for sheltering cattle; sun- shade; a kind of tatty against sun. rain or wind, used in a shed, bazaar or hovel. or before a shop. 3. தேர் முதலியவற்றில் இடும் பூந்தடுக்கு; frames of various designs adorned with flowers and fastened on to a temple-car, etc. 4. ஓலைக்குடைவகை (நாஞ்.); a kind of ola umbrella. 5. பாய்மரத்தில் இணைக்கப்பட்ட குறுக்குக் கட்டையிலுள்ள குழி (வின்); hole of a yard-arm or sailyard. 6. உறக்கம்; sleep. *"படலின் பாயல்"* (ஐங்குறு. 195) *"மடல் ஊர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற படல்ஒல்லா பேதைக்குஎன் கண்"* (குறள்,1136)

*"படல் ஆற்றா பைதல் உழக்கும் கடல் ஆற்றாக் காமநோய் செய்தஎன் கண்"* (குறள்.1175)

ம. படல். க. படி. குட. படி. து. படி.

*[படம் → படல்]* (வ.மொ.வ.197)

**படலம்** *padalam,* பெ. (n.) 1. கூட்டம்; mass. as of clouds; heap, drift, as of dust: stellar group. *"உதிர்ந்த துடுபடலம்"* (கந்தரலங்.12) *"கருமுகிற் படலத்துக் ககனத் தியங்குவோர்"* (மணிமே.28-110) 2. நூலின் பகுதி; (தொல்.பொ.481,484.) chapter or section in a poem or treatise. 3. மேற்கூரை; canopy *"உள்ளொளிப் படலத்து.... கட்டிலும்"* (பெருங். உஞ்சைக். 57,52.) 4. கூடு;the hollow. as of a crown. *"இலங்கு மணிமிடைந்த பசும்பொற் படலத்து"* (பதிற்றுப்.39,14.) 5. கண்படலம்; film

or cataract in the eye. *"படலமுரித்த விழி"* (திருப்போ.சந்.மாலை.20.) 6.அடுக்கு; lamina, layer,scale, cuticle. 7. நிலவுலகம், region; world *"ஏணிபோகிய கீழ்நிலைப் படலம்"* (ஞான.54.) 8. மணிக் குற்றம் (வின்); flaw, obscurity, dimnes or opaque spot in a gem. 9. பரிவாரம் (யாழ்.அக); train, retinue. 10. பொட்டு (யாழ்.அக); tilka. 11. படல், 1,2, (யாழ்.அக); see padal 1, 2 பார்க்க, 12. மூடி; cover, 13. மாசு; stain, 14. சவ்வு; membrance.

*[படல் → படலம்]* (மு.தா.123,124.)

**படலி** *paḍali,* பெ. (n.) துளசி; holy basil (சா.அக.)

*[படர்→ படல்→ படலி]*

*[துளசிச் செடி படர்ந்து, செழித்து வளர்வது எண்ணத்தக்கது]*

**படலிகை**[1] *paḍaligai,* பெ. (n.) வட்டவடிவு (பிங்); circle, circular surface. 2. கைம்மணி (பிங்) hand-bell. 3. பெரும்பீர்க்கு (பிங்); a large species of luffa. 4. இளைப்பு (வின்); weariness, fatigue. 5. ஒரு கொடி; creepeer

*[படல்→ படலிகை]*

**படலிகை**[2] *paḍaligai,* பெ. (n.) 1. கண்ணோய் வகை; cataract of the eye. *"படலிகை வயங்கிய நோக்கத்தார்"* (குந்தபு. மார்க். 68) 2. பூவிடு பெட்டி; basket or tray for flowers. *"படலிகை கொண்டுவாழ்த்தி"* (சீவக. 2707. உரை)

*[படர்→ படல்→ படலிகை]* (மு.தா.123.)

**படலிகை**[3] *paḍaligai,* பெ. (n.) ஓர்அளவு; a measure of quantity. *"வெற்றிலை படலிகையால் ஒரு பற்று"* (S.I.I. iii, 10)

*[படர்→ படல்→ படலிகை]* (மு.தா.123.)

**படலிடம்** *paḍal-iḍam,* பெ. (n.) குடிசை (கல்லா. 96); hut, as made of leaves.

*[படல் + இடம்]*



**படலியம்** *paḍaliyam,* பெ. (n.) குதிரைப் பண்ணமைக்கும் கருவிகளுள் ஒன்று; one of the equipments of a horse. *"படலியம் பழுக்கமொடு"* (பெருங். இலாவாண. 18, 14)

*[படல்→ படலியம்]*

**படலெலைவஞ்சி** *paḍalelaivañji,* பெ. (n.) கீழ்க்காய் நெல்லி; feather foil. (சா.அக)

*[படல் + இலை + வஞ்சி → படலெலைவஞ்சி]*

**படலை**[1] *paṭalai,* பெ. (n.) 1. படர்கை (பிங்.); spreading, expanding. 2. பரந்த இடம்; expanses. *"படலை மார்பினிற் கொன்றை மாலிகை"* (குற்றா. குற. 13) 3. வாயகன்ற பறை (சூடா.); broad-headed drum. 4. தழை (புறநா. 319, கீழ்க்குறிப்பு); leaves. 5. *படலை மாலை* பார்க்க; see paḍalai-mālai *"வண்சினைக் கோங்கின்றண்கமழ் படலை"* (ஐங்குறு. 370)*"பல்லான் கோவலர் படலைக் கூட்டும்"* (ஐங்.476–3)

*"பல்லான் கோவலர் படலை துட்ட"* (புறம்.265–4)

*"குருந்தலை வான்படலை சூடிச் சுரும் பார்ப்ப"* (ஐந்.எழு.28–1)

மறுவ: குதிரைக்கிங்கிணி மாலை.

*[படர்→ படல்→ படலை]*

**படலை²** *paḍalai,* பெ. (n.) 1. கூட்டம்; mass, heap, file, drift. *"மூடின திருட்படலை மூவுலகும்"* (கம்பரா. மாரீச. 46) 2. குதிரைக் கிண்கிணி மாலை; string of small tinkling bells for a horse. 3. குலையிலுள்ள சீப்பு (நாஞ்); a bunch of fruits. *"உடும்பிடு தறுத்த வொடுங்காழ்ப் படலை"* (புறம்.325–7) *'வாழைக்குலை யிலிருந்து ஒரு படலை இணுங்கு'* (நாஞ்) 4. பார்க்க, படல், 1. பார்க்க see paḍal 1. *"படலை முன்றில்"* (புறநா. 319)

*ம. படல.*

*[படல்→ படலை]* (மு.தா.124.)

**படலைக் கண்ணி** *paḍalai-k-kaṇṇi,* பெ. (n.) படலை மாலை; பார்க்க, see paḍalai-mālai. *"பல்பூ மிடைந்த படலைக் கண்ணி"* (பெரும் பாண். 174.) *"படலைக் கண்ணிப் பரேரெறுழ்த் திணிதோள்"* (பெரும்.60) *"படலைக் கண்ணிப் பரேரெறுழ்த் திணிதோள்"* (நெடு.31)

*[படலை + கண்ணி]*

**படலைப்பந்தர்** *paḍalai-p-pandar,* பெ. (n.) தழை யாலாகிய பந்தர்; arbour with grean leaves. *"படலைப் பந்தர்ப் புல்வேய் குரம்பை"* (அகம். 87–3)

**படலைமாலை** *paḍalai-mālai,* பெ. (n.) பச்சிலையோடு மலர்கள் விரவித் தொடுத்த மாலை; garland of green leaves and flowers. *"முறிமிடை படலைமாலைப் பொன்னிழை மகளிர்"* (சீவக. 483)

*[படலை + மாலை]*



**படவம்** *paḍavam,* பெ. (n.) படகம்² பார்க்க, see paḍagam³ *"இடியுறழ் முரசுஞ் சங்க படவமும்"* (பெருங். உஞ்சைக். 57. 58)

*[படகம்→ படவம்]*

**படவன்** *paḍavaṉ,* பெ. (n.) படகோட்டி; boat man *"படவர் மடமகளிர்"* (திருப்போ. சந். பிள்ளைத். முத். 4)

*[படகு→ படவு→ படவன்]* (குமி.வ.93.)

**படவாள்** *paḍavāḷ,* பெ. (n.) படைவாள் (வின்.) sword.

*[படைவாள்→ படவாள்]*



**படவிகம்** *paḍavigam,* பெ. (n.) நுணாமரம்; noona tree. (சா.அக.)

**படவீடு** *paḍa-vīḍu,* பெ. (n.) படமாடம் பார்க்க; see paḍa-māḏam.

*[படம் + வீடு]*

**படவு** *paḍavu,* பெ. (n.) சிற்றோடம்; small boat. *"படவேறி"* (திருவாச. 43, 3)

தெ. படவ க, படஹு
ம. படவு. து. படவு
*[படம் → படவு]* (தமி.வ.93.)

**படவுத்தொழில்** *paḍavu-toḻil,* பெ. (n.) படகு கட்டுந் தொழில்; occupation of boat making.

*[படவு + தொழில்]* (ஒ.மொ.224)

**படவை** *paḍavai,* பெ. (n.) 1. செருப்படை[2] (மலை.) பார்க்க, 2. செடிவகை (L.); asarabacca, acrid herbaceous plant.

*[படவு → படவை]*

**படற்கள்ளி** *paḍaṟ-kaḷḷi,* பெ. (n.) சப்பாத்துக் கள்ளி, 1. (வின்) பார்க்க, see šappāttukkaḷḷi common prickly-pear.

*[படல் + கள்ளி]*



**படற்றி** *paḍaṟṟi,* பெ. (n.) வாழைவகை (நாஞ்.); a kind of plantain.

*[ஒருகா. படர் → படர்த்தி → படற்றி]*

**படறுபறச்சி** *paḍaṟu paṟacci,* பெ. (n.) நிலவாகை; east indian senna. (சா.அக)

*[படரும் + பறச்சி]*

**படன்** *paḍaṉ,* பெ. (n.) 1. படைவீரன் (யாழ்.அக); warrior. 2. காலதூதன் (இ.வ.); yama's messenger. 3. இழிந்தோன் (யாழ்.அக); degraded person. 4. பேய்; (வின்.) goblin.

*[படு → படன்]*

**படனம்** *paḍaṉam,* பெ. (n.) 1. படிக்கை; act of reading, reciting. 2. மனப்பாடம் (வின்); lesson learned by heart.

*[ஒருகா படி → படனம்]*

**படா** *paḍā,* பெ. (n.) மிடா பார்க்க, see miḍā bedaly emetic nut. *"கார்க்கொள் படாக்கள் நின்று"* (திவ். நாய்ச், 9, 2).

**படாக் கொட்டில்** *paḍa-k-koṭṭil,* பெ. (n.) படமாடம் பார்க்க; see paḍa-māḍam. *"படாக் கொட்டிலும் பண்டி பண்டாரமும்"* (பெருங். மகத். 23, 36).

*[படாம் + கொட்டில்]*

**படாகா** *paḍākā,* பெ. (n.) பட்டாசு; fire cracker, squib, gun-cap. (இ.வ.)

*[பட் → படா → படாகா]* ஒலிக்குறிப்பு

**படாகி** *paṭāki,* பெ. (n.) 1. இறுமாப்பு, செருக்கு; pride, boasting (வின்.) 2. பொய் சொல்வோன் (சங்.அக); liar.

மறுவ. பெரும் பொய்யன்;

*[ஒருகா. படா → படாகி]*

**படாகை** *padāgai*, பெ. (n.) 1. கொடி; flag. *"பாவை விளக்குப் பசும்பொற் படாகை"* (சிலப், 5, 154); *"தடாக மேற்ற தண்சுனைப் பாங்காப் படாகை நின்றன்று"* (பரி.9–78) *"பசுங்கொடிப் படாகைப் பந்தர் நீழல்"* (சிலப்.14–216) banner. 2. நாட்டின் உட்பிரிவு; division of a country; district. *"படாகை வலஞ்செய்து"* (s.i.i.ii. 352) 3. நிலச் சாகுபடிக்கு வசதியாயிருக்கும்படி குடிகள் நிலத்திற் கருகாக ஊர்ப்புறத்தில் அமைத்துக் கொள்ளும் குடிசைகள்; (w.G.) a cluster of cottages at some distance from a village, erected for the convenience of carrying on agriculture operations. 4. கூட்டம்; multitude, collection. *"கவரிப் படாகை"* (பெருங். உஞ்சைக். 38, 128)

*[படம் → படாம் → படாகை]*

**படாங்கழி** *paḍāṅ-gaḷi*, பெ. (n.) வரிவகை; (S.I.I. ii, 532) a kind of tax.

*[படாம் → கழி]*

**படாங்கு**[1] *paḍāṅgu*, பெ. (n.) பாசாங்கு; jest. (வின்.)

*[பட்டாங்கு → படாங்கு]*

**படாங்கு**[2] *paḍāṅgu*, பெ. (n.) சிவப்பு நிறமுள்ள ஆடை (இ.வ.); red cloth.

*[படாம் → படாங்கு]*

**படாச் சாரம்** *paḍāccāram*, பெ. (n.) சத்திச் சாரம் (சங். அக); an acid salt.

**படாசு** *paḍāšu*, பெ. (n.) தாட்சுருட்டு வெடி; fire- cracker.

*[பட் → படா → படாசு]*

**படாதுபடு–தல்** *paḍādu-paḍu-* 20. செ.கு.வி. (v.i) மிகத் துன்புறுதல்; to suffer extreme misery *"அடாதது செய்தவன் படாது படுவான்"*

*[படாது + படு–,]*

படாது என்பது படாதது என்பதன் சிதைவு. 'படாதது' வினையாலணையும் பெயர்.

**படாந்தரக்காரன்** *paḍāndara-k-kāraṉ*, பெ. (n.) முழுப்பொய்யன்; a gross liar. (w.)

மறுவ. புளுகன்

*[படாந்தரம் + காரன்]*

**படாந்தரம்** *paḍāndaram*, பெ. (n.) 1. முழுப் பொய் (சங்.அக); gross lie; false story; fabrication. 2. கற்பனையால் மிகுத்துக் கூறுகை (வின்.); colouring exaggeration 3. காரணமின்மை; absence of cause or reason. *'படாந்தரமாய் வந்து சேர்ந்தது'* (வின்.)

*[படு + skt.antara த. அந்தரம் → படாந்தரம்]*

**படாந்தரம் போடு–தல்** *paḍāndaram pōḍu-* 20. செ.கு.வி. (v.i.) முழுப்பொய் கூறுதல் (வின்.); to speak gross lies.

*[படு + skt.antara > த. அந்தரம் + போடு–,]*

**படாந்தரமடி–த்தல்** *paḍāndaramaḍi-*, 4. செ.கு.வி. (v.i.) படாந்தரம்போடு–, (வின்.) பார்க்க see pāḍāndaram pōḍu-,

*[படு + அந்தரம் + அடி]*

**படாநிந்தை** *padā-nindai,* பெ. (n.) அடாப்பழி; baseless or unjust accusaion.

*[படு + ஆ (எதிர்மறை) + skt நிந்தை ]*

படா. ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

skt = *நிந்தை*

**படாப் பஞ்சம்** *padā-p-panjam,* பெ. (n.) கிடைத்தற் அருமையானது; that which is scarce or rare. *'அந்தப் பண்டம் படாப்பஞ்சமா யிருக்கிறது'* (கொ.வ.)

*[படு + ஆ. (எதிர்மறை) → படா + பஞ்சம் ]*

**படாப்பழி** *padā-p-pāli,* பெ. (n.) இல்லாதபழி: baseless or unjust accusation.

ஒ.நோ: படு + ஆ (எதிர்மனற) + பழி

**படாபஞ்சனம்** *padāpanjanam.* பெ. (n.) முழுஅழிவு (வின்); destruction, extirpation

*[படு → பட + பஞ்சனம் ]*

*பஞ்சனம்* = skt.

**படாம்**[1] *padām,* பெ. (n.) 1. சீலை; cloth. *"படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ"* (புறநா.141) *"மடத்தகை மாமயில் பனிக்குமென்றருளிப் படாஅம் ஈத்த கெடாஅ நாலிசைக் கடாஅ யானைக் கலிமான் பேக"* (புறநா.145.) 2. திரைச்சீலை (பிங்.); curtain, screen. 3. பெருங்கொடி (சூடா); large flag. 4. படமாடம் பார்க்க,; see padamādam. *"சித்திரப் படாத்துப் புக்கான்"* (அரிச். பு. வேட்டஞ். 87) 5. முகபடாம்; cloth adorning the face of an elephant. *"படாமுக முகிலிற் றோன்றும்"* (கம்பரா. எதிர்கோள். 1.)

*[படம் → படாம் ]*

**படாம்**[2] *padām,* பெ. (n.) பரிவட்டம்; a piece of cloth, used as headdress. *"படாம் பீடம் படுத்தே"* (ஞான தீட்சை. 3.)

*[படம் → படாம் மு.தா.122 ]*

**படாம் வீடு** *padām vidu,* பெ. (n.) படவீடு (வின்.) பார்க்க, see padavidu

*[படாம் + வீடு ]*

**படாமுரசு** *padā-murasu,* பெ. (n.) ஓயாது ஒலிக்கும் பேரிகை; drum beaten incessantly. *"படாமுர சார்ப்ப"* (சீவக. 1687)

*[படு + ஆ = படா + முரசு ]*

'ஆ' எதிர்மறை இடைநிலை

**படாமை** *padamai,* பெ. (n.) எதிர் மறையைக்குறிக்கும் மையீற்றுப் பண்புப்பெயர்; a negative word. *"இருநிழல் படாமை மூவே முலகமும்'* (பரி.3–75) *"ஆக்கலும் அடக்கலும் மீத்திறம் படாமை"* (சிலப்–3–53) *"மீத்திறம் படாமை வக்காணம் வகுத்து"*(சிலப்–3–148)

*[படு + ஆ + மை ]*

**படாய்** *padāy,* பெ. (n.) தடபுடல் (இ.வ.); vain pomp; bragging.

க. படாய்

**படாயி** *padāyi,* பெ. (n.) 1. மேல்வாரக்காரர் குடி வாரக்காரரிடமிருந்து விளைச்சலில் ஆறி லொன்று முதல் பாதிவரை பங்கு பெறுகை; sharing of crops between a landlord and his tenant, the landlord's share varying from 1/6 to 1/2 3. தவசமாகச் செலுத்தும் வரிவகை; (R.F.) revenue paid in kind.

**படார்** *paḍār,* பெ. (n.) சிறுதூறு; low bush, low thicket of creepers *"அதிரல் பூத்த வாடு கொடிப் படாஅர்"* (முல்லைப். 51.)

*[ படர் → படார் ]*

**படார் படாரெனல்** *paḍār, - paḍar-eṉal,* பெ. (n.) வெடித்தலொலிக் குறிப்பு; onom. expr. signifying cracking, bursting with a sudden noise, report or explosion.

*[ படார் + படார் + எனல் ]*

**படார மூக்கி** *paḍāra mūkki,* பெ. (n.) 1. நாயுருவி; indian burr. 2. வெண்ணாயுருவி; white species of indian burr.

மறுவ: பிடார முக்கி. (சா.அக.)

**படாரர்**[1] *paḍārar,* பெ. (n.) 1. கடவுள்; god, deity. 2. பூச்சியர்; *venerable persons, as priests.*

**படாரர்**[2] *paḍārar,* பெ. (n.) சமண முனிவர்; jain saint. *"ஸ்ரீ புட்பணந்தி படாரர் மாணாக்கர் பேருணந்தி படாரர்"* (தெ.கல்.தொ.5.கல்.391)

**படாரன்** *paḍāraṉ,* பெ. (n.) பாம்பாட்டி (வின்.); snake- charmer

*[ பிடாரன் → படாரன் ]*



**படாரி** *paḍari-,* பெ. (n.) சிற்றூர்க் காவல் தெய்வம்; a goddess to protect the welfare of the village. *"ஒக்கொண்ட நாதன் ஒக்கதித்தன் பட்டைபொத்தன் மேதவம் புரிந்ததென்று படாரிக்கு நவகண்டம் கடுத்து, குன்றகத் தலையறுத்துப் பிடலினாக மேல்வைத்தானுக்கு"* (தெ.கல்.தொ.12.கல்.106.)

*[பிடாரி → படாரி.]*

**படாரிடு—தல்** *paḍār-iḍu-,* 1. செ.கு.வி. (v.i) படாரென வெடித்தல் (வின்.); to burst, crack with a sudden noise, report or explosion.

*[ படார் + இடு–, ]*

**படாரூபம்** *paḍā-rūpam,* பெ. (n.) படாப்பழி (வின்.) பார்க்க, see paḍā-p-aḻi.

*[ படு + ஆ (எதிர்மறை) + ரூபம் ]*

த. உருவம் skt.> ரூபம்

**படாரெனல்** *paḍār-eṉal,* பெ. (n.) படார் படாரெனல் (வின்.) பார்க்க. see paḍār paḍāreṉal

படாரெனல் – ஒலிக்குறிப்பு

*[ படார் + எனல் ]*

**படாவஞ்சனம்** *paḍā-vañjaṉam,* பெ. (n.) படாவஞ்சனை பார்க்க, see paḍāvañjaṉai

*[ படா வஞ்சனை → படாவஞ்சனம் ]*

**படாவஞ்சனை** *paḍā-vañjaṉai,* பெ. (n.) 1. முழுக்கற்பனை; gross fabrication. 2. கொடுஞ்சூழ்ச்சி; deep-laid plot, 3. முற்றும் அழிக்கை; complete destruction.

*[ படு → படா + வஞ்சனை ]*

**படாவஞ்சனை** *padā-vañjanai,* பெ. (n.) 1. முழுக்கற்பனை; gross fabrication. 2. கொடுஞ்சூழ்ச்சி; deep-laid plot, 3. முற்றும் அழிக்கை; complete destruction.

*[படு → படா + வஞ்சனை]*

**படி¹-தல்** *padi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. அடியிற்றங்குதல்; to settle, as dust or sediment. *'தூசி படிந்திருக்கிறது'* 2. பாலேடு முதலியன உண்டாய்ப் பரவுதல்; to gather, as cream *'பாலில் ஏடு படிந்திருக்கிறது.'* 3. தங்குதல்; to rest, as clouds upon a mountain; to alight; to roost, as birds. *"பறவை படிவன வீழ்"* (நெடுநல்.10) 4. வயமாதல்; to be subjugated; to be trained, disciplined or tamed. *'அடியாத மாடு படியாது'* (பழ.) 5. கையெழுத்துத் திருந்தி யமைதல்; to become orderly, settled, as handwriting. 6. கீழ்ப்படிதல்; to obey. *'பெரியோருக்குப் படிந்து நட'* 7. குளித்தல்; to bathe, to sink in water; to be immersed. 8. கண்மூடுதல்; to close, as eyes. *"படிகிலாவிழி"* (அரிச்.பு.விவா.88) *"தடங்கடலிற் படிவாம்"* (திருவாசக.38,9.) 9. அமுங்குதல்; to become compressed, flattened, as olas, leaves, leather. *'பாரம் வைத்தால் தைத்த இலை படியும்'* 10. தணிதல்; to subside, as water. *'வெள்ளம் படிந்தது'* 11. கலத்தல் (வின்); to be joined, united. 12. வணக்கக் குறியாகக் கீழேவிழுதல்; to fall prostrate. *"சிரந்தலத்துறப் படிந்து"* (உபதேசகா. சிவத்து. 344.)

ம.படியுக து. படிபுனி

*[படு → படி → படி -,]*

**படி²-தல்** *padi-,* 3. செ.குன்றாவி. (v.t.) நுகர்தல்; to enjoy, experience. *"பலர்படி செல்வம் படியேம்"* (பு.வெ. 9, 47.)

*[படு → படி → படி -,]*

**படி³-தல்** *padi-,* 2. செ.கு.வி.(v.i.) 1. அமைதல்; be agreeable or suitable. 2. இறங்குதல்; came down. 3. கலத்தல் (பிங்.); get united. 4. குழித்தல்; make a hollow. 5. திருந்துதல்; be reformed. *"இசை படியும்படி பாடிலர்"* (கோயிற்பு. பதஞ்சலி. 46) 6. பழகுதல்; get accuinted with. *"பாழியங்குடுமிப் பொலங்கிரி குழைத்துப் படிந்த பின்"* (கூர்மபு. கடவுள் வாழ். 9) (த.சொ.அக.)

*[படு → படி → படி -]*

**படி⁴-தல்** *padi-,* 4 செ.கு.வி.(v.i.) பொருந்துதல்; to be fit or suited. *'வளை கைக்குப் படிந்திருக்கிறது'*

*[படு → படி → படி -]*

**படி-த்தல்** *padi-.* 11. செ.குன்றாவி. (v.t.) 1. எழுதப்பட்டிருப்பதைச் சொற்களாக்கிப் பலுக்குதல்; chant. 2. கற்றல்; to learn, study, repeat in order, commit to memory. 3. சொல்லுதல்; to say, tell. *"படித்தனன் வாலி மைந்தன்"* (கம்பரா. திருவடி. 25) 4. வணங்கிப் போற்றுதல்; to praise. *"நின் பாதம் படித் தோர்க்கும்"* (தனிப்பா. 1. 47, 91.) 5. பழகுதல் (வின்); to practice, habituate oneself to.

ம. படிக்க

து. படிபுனி

*[படு → படி -,]*

**படி²** *padi,* பெ. (n.) 1. ஏணிப்படி; மாடிப்படி (பிங்.); step, stair; rung of a ladder. 2. நிலை; grade, rank, class, order, sphere. 3. தன்மை; nature *"கருமணியம் பாலகத்துப் பதித்தன்ன படியவே"* (சீவக. 167) 4. குதிரைக் கலனை (பிங்.); stirrup. 5. துலையின் படிக்கல் (பிங்.); weight for scales. 6. நூறுபலங் கொண்ட நிறையளவு; a weight = 100 palam. 7. நாழி (பிங்.); the ordinary measure of capacity =

8 ollocks, kottu of jaffna. 8. அன்றாடு கட்டளை; fixed daily allowance for food. *"படியுண்பார் நுகர்ச்சிபோல்"* (கலித் 35.) 9. அன்றாடச் செலவுக்காகக் கொடுக்கும் பொருள்; (R.F.) batta, subsistence money 10. வழி; device, means. *"பவக்கடல் கடக்கும் படியறியாது"* (உத்தரரா. தோத்திர. 23.) 11. நிலைமை; state, condition. *'ஒருபடியாக இருக்கிறான்.'* 12. தன்மை; manner, mode. *"பாசத்தாலன கன்றம்பி பிணிப்புண்ட படியே"* (கம்பரா. நாகபாச, 209) 13. வாயில் நிலையின் கீழ்க் குறுக்குக் கட்டை அல்லது மேற்குறுக்குக் கட்டை; sill or lintel. 14. உடம்பு; body. *"நினையார வன்மைப் படியே"* (திவ். இயற். திருவிருத் 93.) 15. வழிமரபு; family, lineage. *"படிமன்னு பல்கலன்"* (திவ். திருவாய் 4, 1, 9.) 16. தகுதி (சூடா.); fitness. *"சரணமாம் படியார் பிறர் யாவரோ"* (தேவா. 1214, 17) 17. முறைமை; order *"அழுந்தை மறையோர் படியாற்றொழ"* (தேவா. 493, 10) 18. வேதிகை; low platform for conducting ceremonies. 19. தாழ்வாரம். (யாழ்.அக.); verandah. 20. நீர்நிலை (யாழ்.அக.); reservoir of water.

தெ. க. து. படி ம. படி (t) *கோட.பரிகட்*

*[புள் → பள் → படு → படி]*

மு.தா.221.

**படி[4]** *padi,* பெ. (n.) 1. பகை; hatred *"படிமதநுஞ் சாம்ப வொதுக்கி"* (பரிபா. 4, 18) 2. ஒத்த படி; true copy, as of a manuscript *"கிழித்த ஓலை படியோலை"* (பெரியபு. தடுத்தாட். 56) 3. உவமை; resemblance, comparison. *"படியொருவ ரில்லாப் படியார் போலும்"* (தேவா. 44, 7)

க. படி

*[புள் → பள் → படு → படி]*

மு.தா.221.

**படி[5]** *padi,* பெ. (n.) ஓர் உவம உருபு. (சங்.அக.); a particle of comparison.

*[புள் → பள் → படு → படி]*

**படி[5]** *padi,* பெ. (n.) இருதிணைப் பொருள்களும் படியும் அல்லது தங்கும் இடமாகிய நிலவுலகம்; earth. *"வருடையைப் படிமகன் வாய்ப்ப"* (பரிபா. 11, 5)

*[பள் → பண் → பணி → படி]*

செல்வி.75. சித்.பக்.433.

(ஞாலத்தைக் குறிக்கும் படி என்னும் சொல் 'ப்ருத்வி' என்னும் வடசொல்லின் திரிபாகச் சென்னை அகரமுதலியிற் காட்டப்பட்டுள்ளது. *'படவி'* என்னும் தென் சொல்லே *'ப்ருத்வீ'* என வடமொழியில் திரிக்கப்பட்டுள்ளது – பாவாணர்.)

**படி** *padi,* பெ. (n.) 34 பலங்கொண்ட ஒரு நிறை (G.Tn.D.i. 238.) a measure of 34 palam

தெ.படி.

**படிக்கட்டளை** *padi-k-kattalai,* பெ. (n.) அன்றாடு கட்டளை (வின்.); daily allowance to a temple for conducting worship.
மறுவ. நித்தியக்கட்டளை, நித்தியபடி.

*[படி + கட்டளை]*

**படிக்கட்டி** *padi-k-katti,* பெ. (n.) தடைகட்டுங் கல்(R.); counterpoise, equipoise.

*[படி + கட்டி]*

**படிக்கட்டு** *padi-k-kattu,* பெ. (n.) 1. மாடிப் படிக்கட்டு (கொ.வ.); steps, stairs, flight of steps, stairs of masonry. 2. நிறைகல்; weights, weighing stones or stamped weights.

மறுவ. படிக்கூடு

தெ. படிகட்டு க.படி. கோடா.பரிகட்

*[படி + கட்டு]*

**படிக்கணக்கு** *padi-k-kaṇakku,* பெ. (n.) 1. உணவின் வேளை, அளவு இவற்றைக் கொண்ட குறிப்பு (வின்) ; quantity and time of meal. statement containing 2. படிச்செலவுக் கணக்கு (இ.வ.); batta bill. 3. பொத்தகங்கள் தாளிகைகள் முதலிய வற்றின் உருவாக்கம், இருப்பு ஆகியவற்றைப் பற்றிய எண்ணிக் கைக் கணக்கு; account of books and journal

*[படி + கணக்கு]*

**படிக்கம்** *padikkam,* பெ. (n.) 1. எச்சிலுமிழுங் கலம்; spittoon *"எண் சதுரமாகச் செய்வித்துக் கொடுத்த படிக்கம் ஒன்று"*; (s.i.i. ii. 149) 2. திருமுழுக்காட்டு நீர் முதலியவற்றைச் சேர்க்கும் ஏனம் (I.M.P. ii. 1404, 1332); pot for receiving water used for an idol.

தெ. க. படிக. ம. படிக்கம்

*[படி → படிக்கம்]*

**படிக்கல்** *padi-k-kal,* பெ. (n.) நிறைகல்; weighing stone, stamped weight.

க. படிக்கல்லு.

*[படி + கல்]*

**படிக்கன்** *padikkan,* பெ. (n.) படிக்கம்,1 பார்க்க, see padikkam.

*[படிக்கம் → படிக்கன்]*

**படிக்காசு** *padi-k-kāšu,* பெ. (n.) 1. நாட்செலவுக்குக் கொடுக்கும் பணம்; subsistence allowance for a day. *"படிக்காசொன்று நீ வள்ளைக் குழையுமை பங்காளர் கையிலென் வாங்கினையே"* (சிவப். பிரபந். நால்வர் 10) 2. படிக்காசுப் புலவர் பார்க்க, see padi-k-kāšu-p-pulavar. *"சந்தம் படிக்காசலா தொருவர் பகரொணாதே"* (தனிப்பா.)

*[படி + காசு]*

**படிக்காசுப் புலவர்** *padikkāšu-p-pulavar,* பெ. (n.) தொண்டை மண்டல சதகம் இயற்றியவரும் 1686 - 1723 இல் வாழ்ந்தவருமான ஒரு புலவர்; a poet, author of Toṇ-ḍai maṇḍalašadagam, 1686 - 1723.

*[படிக்காசு + புலவர்]*

**படிக்காரம்** *padikkāram,* பெ. (n.) சீனக்காரம் (கொ.வ.); alum, alumen.

தெ. படிகாரமு க. படிகார

து. படிகார

*[படு → படி + காரம்]*

**படிக்காரன்** *padi-k-kāran,* பெ. (n.) 1. நாளுணவுக்காக வேலை செய்வோன் (வின்.); one who works for his daily food. 2. படிகொடுப்போன் (யாழ்.அக.); one who grants batta.

*[படி + காரன்]*

**படிக்கால்** *padi-k-kāl,* பெ. (n.) ஏணி; ladder. *"குறுந் தொடை நெடும்படிக்கால்"* (பட்டினப். 142.)

*[படி + கால்]*

**படிக்குப்படி** *padi-k-kuppadi,* பெ. (n.) ஒவ்வொரு படியாக முன்னேறுதல்; step by step; in an ascending series. 'படிக்குப்படித் தாவியேறினான்' (உ.வ) 'அவன் வாழ்வில் படிக்குப்படி முன்னேறியவன்' (உ.வ)

*[படிக்கு + படி]*

**படிக்குப்பாதி** *padikku-p-pādi,* பெ. (n.) சரிபாதி; exactly half.

மறுவ சரிபாதி, செம்பாதி, படுபாதி, படிபாதி.

*[படிக்கு + பாதி]*

**படிக்கூண்டு** *padi-k-kūṇḍu,* பெ. (n.) மெத்தைப் படிக்கட்டுக்கு மேன்முகடாகக் கட்டப்படும் கட்டடம்; stairhead, masonry hood covering the top of a flight of stairs leading to a flat roof.

*[படி + கூண்டு]*

**படிகட்டு—தல்** *padi-kaṭṭu-,* 4. செ.கு.வி. (v.i.) 1. உணவுக்கு வேண்டிய பணத்தைச் செலுத்துதல்; to pay batta or daily allowance. 2. நிறைத் தடை கட்டுதல்; to put allowance weight in the scale of a balance. 3. மாடிப்படி கட்டுதல்; to construct steps or stairs.

*[படி + கட்டு—,]*

**படிகப்பச்சை** *padiga-p-paccai,* பெ. (n.) கடல் நிறம் போன்ற பச்சைக்கல்; beryl.

*[படிகம் + பச்சை]*

**படிகம்**[1] *padigam,* பெ. (n.) 1. கூத்து (அக.நி.); dance. 2. இரப்பு (பிங்.); alms. 3. விளாம் பட்டை (சூடா); bark of the wood-apple tree.

*[ஒருகா. படிதம் → படிகம்]*

படிதம் = கூத்து.

**படிகம்**[2] *padigam,* பெ. (n.) பளிங்கு; crystal, prism. *"படிகத் தின்றலமென் றெண்ணி"* (கம்பரா. வரைக்காட்சி. 49.)

**படிகமணி** *padiga-maṇi,* பெ. (n.) கடைந்த படிகக் கற்களால் அமைந்த கழுத்தணி (சங்.அக.); a necklace made of crystals.

*[படிகம் + மணி]*

**படிகமிடு—தல்** *padigam-iḍu-,* 17. செ.குன்றாவி. (v.t.) பழுக்கச் சுடுதல்; (வின்.) to brighten gold ornaments.

*[படிகம் + இடு—,]*

**படிகர்** *padigar,* பெ. (n.) வாயிற்காவலர்; (யாழ்.அக.); gate keepers.

*[படி → படிகர்]*

**படிகலிங்கம்** *padigaliṅgam,* பெ. (n.) வல்லத்தில் கிடைக்கும் கண்ணாடிப் பளிங்கு; crystal glass found in vallam near Tanjore, South India. (சா.அக.)

*[படிகம் + இலங்கம் → இலங்கம் → லிங்கம்]*

**படிகளை—தல்** *padi-kaḷai-,* 2. செ.குன்றாவி. செ.குன்றாவி. (v.t.) தெய்வச் சிலைகளின் ஒப்பனையை நீக்குதல்; to undress, as an idol.

*[படி + களை—,]*

*படி — பழமை*

**படிகாரநீர்** *padigāranir,* பெ. (n.) 1. படிகாரத் தண்ணீர்; solution of alum. 2. படிக்காரக் கலப்பு நீர்; a compound of alum liquor. (சா.அக.)

*[படிகாரம் + நீர்]*

**படிகாரம்** *padigāram,* பெ. (n.) படிக்காரம் (சங்.அக.) பார்க்க. see padikkāram.

*[படு → படி + காரம்]*

**படிகாரன்** *padigāraṉ,* பெ. (n.) வாயில் காப்பாளன்; gate-keeper. *"படிகாரிரெம் வரவு சொல்லுதிர்"* (கம்பரா. பள்ளி. 1)

*[படி + காரன்]*

**படிகால்** *padi- kāl,* பெ. (n.) தலைமுறை; generation. *"ஏழேழ் படிகா லெமையாண்ட பெம்மான்"* (தேவா. 1086, 9)

*[படி +கால்]*

**படிகாலி** *padi-kāli,* பெ. (n.) தட்டையாய்ப் படிந்திருக்கும் பாதமுடைய–வன்–வள் (நாஞ்.); a flat footed person.

*[படி + காலி]*

(செல்வி,75,ஆடி.பக்.599.)

ஒ.நோ. நட்டுவாய்க்காலி

**படிகை** *padigai,* பெ. (n.) 1. யானை மேலிடும் தவிசு; howdah and trappings of an elephant. *"பருமமுதுகிடு படிகையும்"* (கம்பரா. அதிகா. 132) 2. நந்தியா வட்டம் (சங்.அக.); பார்க்க, see nandiya vattam east indian rosebay.

*[படி → படிகை]*

**படிகொடு–த்தல்** *padi-kodu-,* 4. செ.குன்றாவி. (v.i.) படியளித்தல்; giving stated allowances.

*[படி+ கொடு–,]*

**படிச்சந்தம்** *padiccandam,* பெ. (n.) ஒன்றைப் போன்ற வடிவு; image, figure. *"படிச்சந்த மாக்கும் படமுன வோநும் பரிசகத்தே"* (திருக்கோ. 78)

*[படி + சந்தம்]*

**படிச்சட்டம்** *padi-c-cattam,* பெ. (n.) கோயிற் றிருமேனிகளை எடுத்துச் செல்லுங் கோயிற் சிவிகை வகை (சிவக். பிரபந்த. பக். 237); palanquin of an idol.

*[படி + சட்டம்]*

**படிச்சுருக்கு** *padi-c-curukku,* பெ. (n.) தட்டார் படிக்கற்களை யிட்டுவைக்குஞ் சுருக்குப்பை (நாஞ்.); a stringed bag containing weights, used by gold - smiths.

*[படி + சுருக்கு]*

**படிச்செலவு** *padi-c--celavu,* பெ. (n.) நாட் செலவு (கொ.வ.); daily expense. 'படிச்செலவுக்கு முதலாளி பணந்தந்தாரா?'

*[படி + செலவு]*

**படிசம்** *padišam,* பெ. (n.) 1. தூண்டில் (வின்.); fish-hook, angling instrument. 2. தொண்டைப் புண்களை அறுக்குங் கத்தி; a surgical knife used for throat operations.

*[படி → படி → படிசம்]*

**படிசியேற்றம்** *padiši-y-ērram,* பெ. (n.) சிற்றேற்றம் (C.G.); small picotta which can be worked by a single person treading on it.

*[படி + ஏற்றம்]*

**படிசு** *padišu,* பெ. (n.) 1. நிலைமை; state, condition. *'ஒருபடிசாயிருக்கிறது'* 2. ஒத்த அமைப்பு; due proportion.

*[படி³ → படிசு]*

**படிசொல்** *padišol,* பெ. (n.) கற்புநெறி; chastity. *"படிசொல் தவறாத பாவாய்"* (குனிப்.)

**படித்தரம்** *padi-t-taram,* பெ. (n.) 1. கோயில் முதலியவற்றுக்கு உதவும் நாட்கட்டளை; daily allowance, as to a temple. 2. நடுத்தரம்; middling quality. *'அவர்கள் படித்தரமானவர்கள்'* 3. ஒழுங்கு; rule, regulation.

க. படிதர. ம. படித்தரம்.

படி + தரம்

**படித்தளம்** *padi-t-talam,* பெ. (n.) படிக்கட்டு; step of a staircase *"ஓராம்படித்தளமாம்"* (கட்டபொம்மு . பக் 58)

*[படி + தளம்]*

**படித்தனம்** *padi-t-tanam,* பெ. (n.) படித்தரம் பார்க்க; see padi-t-taram *"ஒரு நாளையிலே படித்தனத்துக்கு அமுதுபடி"* (கோயிலொ. 62)

*[படி + தனம்]*

**படித்திரம்** *padittiram* பெ. (n.) சூட்டிறைச்சி (பிங்); roast meat

*[படி → படித்திரம்]*

**படித்துறை** *padi-t-turai,* பெ. (n.) படிக்கட்டுக் களமைந்த நீர்த்துறை; bathing ghat provided with steps. *"அச்சிவாலய மாறுபடித்துறை"* (குற்ற.தல.கவுற்சன 63).

*[படி + துறை]*

மறுவ: தண்ணீர்த்துறை.



**படிதம்**[1] *padidam,* பெ. (n.) கூத்து (பிங்); dancing. *"கடுவ னிருங்கழைப் படிதம் பயிற்றுமென்ப"* (யாப்.வி.பக். 190) 2. போற்றிப்பாடல்; eulogy, songs of praise, hymns. *"படிதம் பலபாட"* (தேவா.559,4.)

*[படி → படிதம்]*

**படிதம்**[2] *padidam,* பெ. (n.) உயரிய மாணிக்க வகை; a kind of ruby. *"விந்தமும் படிதமும் விதிமுறை பிழையா விளங்கிய சாதியும்"* (சிலப்.14,186)

**படிப்படி** *padi-p-padi,* (வி.எ) adv. படிப்படியாய் பார்க்க; see padi-p.padi-y-āy *"நான்மறை முற்றும் படிப்படி சொன்னதாம்"* (உபதேச கா, சிவபுண்ணி 19)

*[படி + படி]*

**படிப்படியாய்** *padi-p-padi-y-āy,* (வி.எ) adv. சிறுகச்சிறுக (கொ.வ); step by step,gradually. *'படிப்படியாயேறுதல்'*

*[படி + படி + ஆய்]*

**படிப்படை** *padi-p-padai,* பெ. (n.) கூலிப்படை; mercenary force. *"கொடிப்படை போக்கிப் படிப்படை திரிந்து"* (பெருங் மகத.24.39)

மறுவ. கூலிப்படை

*[படி + படை]*

**படிப்பணம்** *padi-p-panam,* பெ. (n.) நாள் செலவுக்குக் கொடுக்கும் பணம்; batta

*[படி + பணம்]*

**படிப்பனவு** *padippanavu,* பெ. (n.) 1. படிப்பு (யாழ்ப்); learning study 2. கற்பித்தல் (யாழ்.அக); teaching.

*[படி → படிப்பனவு]*

**படிப்பனை** *padippanai* பெ. (n.) 1. படிப்பு, 1, 2, 4 பார்க்க; 1,2,4 see padippu. 2. திறமை; proficiency competency

*[படி → படிப்பனை]*

**படிப்பாளி** *paḍippāḷi,* பெ. (n.) கற்றோன்; கல்வி வல்லவன் (கொ.வ); a man of learning

*[படிப்பு+ஆள் + இ + படிப்பாளி]*

ஒ.நோ செலவாளி. 'இ' வினைமுதல் ஈறு.

**படிப்பி—த்தல்** *paḍippi-* 11. செ.குன்றாவி. (v.t.) 1. கற்பித்தல்; to teach. 2. பழக்குதல்; to train.

*[படிப்பு → படிப்பி–,]*

**படிப்பினை**[1] *paḍippiṉai,* பெ. (n.) வங்கமணல்; lead ore.

**படிப்பினை**[2] *paḍippiṉai,* பெ. (n.) 1. வரலாறு, நிகழ்ச்சி, நுகர்ச்சி போன்றவை கற்றுக் கொடுக்கும் பாடம்; உண்மை; lesson (that one learns) truth. ***"தேர்தல் தோல்வி அந்தக் கன்னை(கட்சி)க்கு ஒரு நல்ல படிப்பினையைத் தந்திருக்கும்" 'வல்லாட்சி அதிகாரம் நிலைத்ததே இல்லை என்பது வரலாறு காட்டும் படிப்பினை'***

*[படிப்பு → படிப்பினை]*

**படிப்பினை**[3] *paḍippiṉai,* பெ. (n.) 1. பாடம் (அறிவுரை); lesson 2. நீதி; moral.

*[படிப்பு → படிப்பினை]*

**படிப்பு** *paḍippu,* பெ. (n.) 1. கல்வி; learning, study. ***'இளம்பருவத்தில் படிப்பில் கவனம் செல்லவில்லை என்றால் என்ன செய்வது?'*** 2. படித்தல்; reading, recitation. செய்திகள் படிப்பவர் நல்லினி. 3. பாடுகை (வின்); chanting, singing. 4. கற்பித்தல் (வின்); instruction, teaching. 5. தந்திரம்; scheme, subtlety contrivance. 6. ஒரு துறைத்தேர்ச்சி; a course of study, discipline. ***'பொறியியல் படிப்பு, மருத்துவப்படிப்பு'***

*[படி + பு (பு – தொழிற் பெயர் ஈறு–,]*

**படிப்புக்காரன்** *paḍippu-k-kāraṉ,* 1. ஒரு துறையில் நிறையப் படித்துத் தேர்ச்சி பெற்றவர்; well read person, scholar 2. கோயிலில் தொன்மம் (புராணம்) கேட்போன்; person who attends a temple to hear the purāna chanted. 3. தந்திரசாலி; cunning, scheming, subtle person.

*[படிப்பு → காரன்]*

**படிப்புரை** *paḍi-p-purai,* பெ. (n.) ஒட்டுத் திண்ணை (நாஞ்); pial.

*[படி → படிப்புரை]*

**படிப்புறம்** *paḍi-p-puṟam,* பெ. (n.) கோயிற் குருக்களுக்கு வழங்கப்படும் இறையிலி நிலம்; land on free tenure, bestowed on temple priests. ***"பத்தினிக் கோட்டப் படிப்புறம் வகுத்து"*** (சிலப்.30.151)

*[படி+ புறம்]*

**படிபாதி** *paḍi-pādi,* பெ. (n.) படிக்குப் பாதி (வின்) பார்க்க; see paḍikku-p-pādi.

*[படி + பாதி]*

**படிபோடுதல்** *paḍi-poḍu-,* 20. செ.கு.வி. (v.i.) 1. நாட்படி கொடுத்தல்; giving a daily allowance, or batta. 2. படியமைத்தல்; placing a step or block for a step.

*[படி + போடு–,]*

**படிமக்கலம்** *paḍima-k-kalam,* பெ. (n.) 1. முகம் பார்க்கும் கண்ணாடி(திவா); mirror. ***"தாய் சிறுகாலை படிமக்கலத்தொடும் புக்காள்".*** (இறை. 14,95) 2. பெரியோரிடம் காணிக்கை யாக்கும் கருவி; articles of offering to the elders. ***"படிமக்கலம் காண்டற்கேற்பனவாயின கொண்டு"*** (திவ்.திருப்பள்ளி.8.)

*[படிமம் + கலம்]*

**படிமகன்** *padi-magan,* பெ. (n.) 1. செவ்வாய்; mars,as the son of earth. *"வருடையைப் படிமகன் வாய்ப்ப".* (பரிபா.11,5)

*[படி+ மகன்]*

**படிமடங்கு—தல்** *padi-madangu,* 10. செ. கு. வி. (v.i.) வேலைமுடிகை; closing of the work.

*[பணி → படி + மடங்கு]*

**படிமத்தாள்** *padimattāl,* பெ. (n.) தேவராட்டி (பிங்); temple priestess divinely inspired and possessed of oracular powers, *"குறக்கோலப் படிமத்தாளை நேர்நோக்கி".* (பெரியபு. கண்ணப்ப. 49)

*[படிமம் → படிமத்தாள்]*

**படிமத்தோன்** *padimattōn,* பெ. (n.) தேவராளன் (திவா.); temple - priest divinely inspired and possessed of oracular powers.

*[படிமத்தான் → படிமத்தோன்]*

**படிமதாளம்** *padima-tālam,* பெ. (n.) ஒன்பான் தாளத்தொன்று (திவா.); (mus.) a variety of time-measure, one of onbān-tālam.

*[படிமம் + தாளம்]*

**படிமம்** *padimam,* பெ. (n.) 1. சிலை; image. *"படிமம் போன்றிருப்ப நோக்கி"* (சீவக. 2642) 2. சான்று; example, model. *"நன்றிய லுலகுக் கெல்லாம் படிமமா"* (திருவாலவா. 47, 3.) 3. வடிவம்; form, shape. *"பவளத்தின் பருவரைபோற் படிமத்தான் காண்"* (தேவா. 886, 6) 4. தவக்கோலம்; guise of an ascetic. 5. நோன்பு; penance, austerities. *"பல்படிம மாதவர்கள் கூடி"* (தேவா. 1060, 6) 6. ஆவியாற் பற்ற படுதல்; temporary possession by a spirit. படிமத்தாள், படிமத்தான். 7. படிமக்கலம் பார்க்க; see padimakkalam. *"தனது நிழல் பற்ற வுருகும் படிமத்தாள்"* (திருவாரூ. 342) 8. தூய்மை; purity. *"படிமப் பாதம் வைத்துப் பரிசும்"* (திருவாச. 2, 76)

*[படி → படிமை → படிமம்]*

*(வ. மொ. வ. பக். 29.)*



**படிமரவை** *padi-maravai,* பெ. (n.) வணிகர்கள் படிக்கற்களையிட்டு வைக்கும் மரவை; a wooden vessel in which weights are kept by merchants.

*[படி + மரவை]*

மரவை = மரத்தாலான ஏனம்

**படிமவிரதம்** *padima-viradam,* பெ. (n.) மாணி நோன்பு; the vow of a brahmacārin. *"படிம விரதமொடு பயிற்றிய நல்லியாழ்"* (பெருங். வத்தவ. 3, 82.)

*[படிமம் + விரதம்]*

**படிமவுண்டி** *padima-v-undi,* பெ. (n.) நோற்றுப் பட்டினிவிட்டுண்ணும் உணவு; food taken after fasting. *"பார்ப்பன முதுமகன் படிமவுண்டியன்"* (மணிமே. 5, 33.)

*[படிமம் + உண்டி]*

**படிமா**[1] *paḍimā,* பெ. (n.) ஒப்பு; similarity, likeness. *"அது படிமாவா மலிவித்தார்"* (கோயிற்பு. நட. 43.)

*[படிமம் → படிமா]*

**படிமா**[2] *paḍimā,* பெ. (n.) எடுத்துக்காட்டு; example; illustration. *'நம்மோடு ஸஜாதீயர் பக்கல் பரிமாறினதன்றோ நமக்குப் படிமா'* (ஈடு. 10, 4, 5)

*[படிமம் → படிமா]*

**படிமாத்தாள்** *paḍimāttāḷ,* பெ. (n.) *படிமத்தாள் பார்க்க* (யாழ்.அக.); see paḍimattāḷ.

*[படிமத்தாள் → படிமாத்தாள்]*

**படிமானம்** *paḍimāṉam,* பெ. (n.) 1. அமைவு; tractableness docility. 2. தணிவு; alleviation. *நோயின் படிமானம்* 3. சட்டப் பலகைகளின் இணைப்புப் பொருத்தம்; close fitting of planks, in carpentry. *பலகைகள் படிமானமாயின*

*[படி → மானம்]*

**படிமுடிச்சு** *paḍimuḍiccu,* பெ. (n.) மிகவும் இறுக்கமான முடிச்சு; a hard knot.

*[படு → படி + முடிச்சு]*

**படிமுழுதிடந்தோன்** *paḍi-muḻudiḍāndōṉ,* பெ. (n.) திருமால் (பிங்.); Thirumāl, as having lifted the whole earth. (நிலமுழுதும் பெயரத் தூக்கினோன்.)

*[படி + முழுதும் + இடந்தோன்]*

**படிமுறை** *paḍi-muṟai,* பெ. (n.) 1. படிமுறையால் வருவது; regular course. *"படிமுறையானன்றி இவ்வொரு பிறவியிற் செய்த தவந்தானே யமையாது"* (சி.சி. 8, 1.) 2. மிகைப்படித்தொகை கிடைக்கக் கூடிய நாள்; the fixed day or term for which extra allowance is granted.

*[படி + முறை]*

**படிமேடை** *paḍi-mēḍai,* பெ. (n.) படிப்படியா யுயர்ந்தமைந்த இருக்கை வரிசை; gallery.

*[படி + மேடை]*



**படிமை** *paḍimai,* பெ. (n.) 1. **படிமம்** 3 பார்க்க, see paḍimam *3. "கட்டளைப் படிமையிற் படியாது"* (சீவக. 2752.) 2. **படிவம்**, 1. (தொல். பொ. 50, இளம்பூ) **பார்க்க;** see paḍimam 3. படிமம், 5. பார்க்க; see **paḍimam** 5. *"பல்புகழ் நிறுத்த படிமை யோனே"* (தொல். பாயி) 4. படிமம், 1 பார்க்க;see **paḍimam** *"ஏனோரா் படிமைய"* (தொல். பொ. 30, இளம்பூ)

*[படி → படிமை]*

paḍima pkt.

**படியகம்** *paḍiyagam,* பெ. (n.) படிக்கம், 1. பார்க்க, see paḍikkam. *1. "படியக மிரண்டு பக்கமும்"* (சீவக. 2472.)

*[படி + அகம்]*

**படியச்சு** *paḍi-y-accu,* பெ. (n.) நேரொப்புடையது; model, prototype. *"படியச்சனைய வுதாரண நோக்கினா்"* (பி.வி. 50.)

*[படி + அச்சு]*

**படியப்பாய்–தல்** *padiya-p-pāy-,* செ. கு. வி. (v.i.) கப்பல் மூழ்குதல் (வின்); to sink, as a ship.

*[படிய + பாய்–,]*

படிதல் → படித்தல் = மூழ்குதல்

**படியப்பார்¹–த்தல்** *padiya-p-pār-,* 4. செ. குன்றா. வி. (v. t.) 1. விலை குறைத்தல்; to bid too low a price; to undervalue. 2. பலகைகளை இணைத்தல்; to join boards, in Carpentry.

*[படிய + பார்–,]*

**படியப்பார்²–த்தல்** *padiya-p-pār-,* 4. செ. கு. வி. (v. i.) அமிழும் நிலையிலிருத்தல்; to be ready to sink.

*[படிய + பார்–,]*

**படியரம்** *padi-y-aram,* பெ. (n.) மரங்களை அராவப் பயன்படும் ஒருவகை அரம்; coarse rasp for filing wood.

*[படி + அரம்]*

**படியரிசி** *padi-y-ariśi,* பெ. (n.) உணவுக்காகக் கொடுக்கும் அரிசி; rice given as subsistance allowance.

*[படி + அரிசி]*

**படியரிசிகண்டன்** *padi-y-ariśi-kandan,* பெ. (n.) பயனற்றவன்; worthless fellow.

*[படியரிசி + கண்டன்]*

**படியவை–த்தல்** *padiya-vai-,* 4. செ. குன்றாவி. (v.t.) 1. படியும்படி வைத்தல்; to flatten or straighten olas or warped boards by placing weights over them. 2. ஊன்றுதல்; to plant firmly, as one's feet in walking. *'காலைப் படிய வைத்து நட'* 3. அடங்கச் செய்தல்; to subdue, as a country.

*[படிய + வை–,]*

**படியள¹–த்தல்** *padi-y-aḷa,* 3. செ. கு. வி. (v.i.) உயிர்வாழ்வதற்குரியனவற்றை அளித்தல்; to supply articles of food for maintenance. *"பல்லுயிருக்கெல்லாம் படியளக்கும் வேலவரே"* (கதிரைமலைப் பேரின்பக் காதல், 13.)

*[படி + அள –,]*

**படியள²–த்தல்** *padi-y-aḷa-,* 3. செ. கு. வி. (v.i.) 1. உயிர்வாழ்வதற்குப் படி கொடுத்தல்; to measure out grain on account of wages: to make or pay allowances for one's maintenance. *"நமக்குப் படியளப்போர் நாரியோர் பாகர்"* (தனிப்பா.i.121,5)

*[படி + அள–,]*

**படியளந்தோன்** *padi-y-aḷandōn,* பெ. (n.) திருமால் (பிங்.): Thirumāl, as one who measured the universe. (உலகை அளவிட்டவன்) *'படியளந்த பெருமாள்'*.

*[படி + அளந்தோன்]*

**படியாள்** *padi-y-āḷ,* பெ. (n.) 1. படி வாங்கிப் பயிரிடும் குடித்தனக்காரன் (C.G.); hired servant, one whose wages are paid in grain; farm labourer who receives his wages in kind. 2. மேல்வாரத்துக்குரியவரால் கொடிவழியாக வாழ்விக்கப்படும் பறைக்குடி; a division among paraiyas hereditarily attached as servents to some land holding family which must support them in times of drought and famine.

மருவ. படிக்காரன்

*[படி → படியாள்]*

**படியிடந்தோன்** *padi-y-iḍandōṉ,* பெ. (n.) படிமுழுதிடந்தோன் பார்க்க. (சூடா.); see paḍimuḻutidandōṉ.

*[படி + இடந்தோன்]*

**படியெடு¹-த்தல்** *padi-y-eḍu-,* 4. செ.குன்றாவி. (v.i.) ஒன்றைப் போல மற்றொன்று செய்தல்; to copy or duplicate. ***"விக்கிரகத்துக்குப் படியெடுத்தது போலே"*** (குருபரம். 389.)

*[படி + எடு-,]*

**படியெடு²-த்தல்** *paḍi-y-eḍu-,* 18. செ.குன்றாவி (v.t.) ஒப்புமையாகக் கொள்ளுதல்; to cite an instance for comparison. ***"படியெடுத் துரைத்துக் காட்டும் படித்தன்று படிவம்"*** (கம்பரா. உருக்காட். 38.)

*[படி + எடு-,]*

**படியெடுப்பு** *paḍi-y-eḍuppu,* பெ. (n.) ஒத்தபடி; duplicate, counterpart. ***"கடவுள் செங்கைக்குப் படியெடுப்பேய்க்கும்"*** (குமர. பிர. மதுரைக். 47.)

*[படி + எடுப்பு-,]*

**படியேற்றம்** *paḍi-y-ēṟṟam,* பெ. (n.) 1. திருவிதாங்கூர் மன்னர் முதன்முதற் கோயிலுக்குச் செல்லும்பொழுது செய்யுஞ் சடங்கு; (நாஞ்.); a important ceremony performed by the Travancore Maharajahs in connection with their first formal entry in to the temple at their capital. 2. படிகளின் மேல் தெய்வத்திருமேனியை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு செல்லுகை; the act of gently carrying a deity in a temple over a flight of steps, as at srirangam.

*[படி + ஏற்றம்]*

**படியேறிச்சேவிக்கிறவள்** *paḍi-y-ēṟi-c-cēvikkiṟavaḷ,* பெ. (n.) இறைத்திருமேனியின் முன்புள்ள படியிலேறி வழிபடும் உரிமை பெற்ற கோயிற் பணிவிடைக்காரி; (வின்.) female servant in a temple who has the previlege of ascending the steps before a shrine and worshipping.

*[படியேறி + சேவி → **சேவிக்கிறவள்**]*

சேவி = Skt.

**படியோர்** *paḍiyōr,* பெ. (n.) பகைவர்; enemies, as those who do not bow down. (வணங்காதோர்) ***"படியோர்த் தேய்த்த பணிவிலாண்மைக் கொடியோள் கணவன்"*** (மலைபடு. 423.)

*[படி → படியோர்]*

ஓர் வினையாலணையும் பெயரீறு.

**படியோலை** *paḍi-y-ōlai,* பெ. (n.) மூலவோலையைப் பார்த்து எழுதிய ஓலை; duplicate of an ola document. ***"மூட்சியிற் கிழித்த வோலை படியோலை"*** (பெரியபு. தடுத்தாட். 56.)

*[படி + ஓலை]*

**படிரம்¹** *padiram,* பெ. (n.) 1. சந்தனம்; sandal, sandalwood. 2. சிவப்பு; redness. 3. வயிறு; abdomen; 4. ஊதை (வாதம்); wind humour. (சா.அக.)

**படிலன்** *paḍilaṉ,* பெ. (n.) 1. வீரன் (சங்.அக.); warrior. 2. பணியாள்; servant.

**படிவம்** *padivam,* பெ. (n.) **1.** வழிபடுதெய்வம்; the tutelary deity. *"பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்"* (பெரும்பாண். 298.) **2.** உடம்பு; body. *"இருவகைப் படிவம்"* (ஞான. 8, 3) **3.** உருவம்; form, shape. *"பண்ணவர் படிவங் கொண்டான்"* (சீவக. 395.) **4.** வடிவழகு (அக.நி.); symmetry of form or figure; beauty. **5.** தவக்கோலம்; guise of an ascetic. *"படிவ நோன்பியர்"* (மணிமே. 28, 224.) **6.** தோற்றம்; appearance. *"திங்கள் பகல் வந்த படிவம் போலும்"* (கம்பரா. கிட்கிந்தை. 51) **7.** நோன்பு; penance, austerities. *"கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்"* (முல்லைப். 37.)

*[படி → படிவு → படிவம்]*

*(வ. மொ. வ. பக். 29.)*

**படிவர்** *padivar,* பெ. (n.) முனிவர் (பிங்.); recluses sages; ascetics.

*[படிவம் → படிவர்]*

**படிவவுண்டி** *padiva-v-undi,* பெ. (n.) படிமவுண்டி பார்க்க; see padima-v-undi. *"படிவ வுண்டிப் பார்ப்பன மகனே"* (தொல்.பொ. 626, உரை.)

*[படிவம் + உண்டி]*

**படிவிஞ்சனம்** *padi-vinjanam,* பெ. (n.) அன்றாடு படித்தரமான சமையல் பொருள்; articles other than rice for the preparation of food, as in temple. *"தேங்காய் பழம் உள்ளிட்ட படி விஞ்சனங்களுக்கும்"* (s.i.i.iv.129.)

*[படி + வியஞ்சனம் → விஞ்சனம்]*

**படிவிடை** *padi-v-idai,* பெ. (n.) கண்ணி (புதுவை.); snare.

*[படி + விடை]*

**படிவு** *padivu,* பெ. (n.) படிவிடை பார்க்க; see padi-v-idai.

*[படி → படிவு]*

**படிற்றுரை** *padirrurai,* பெ. (n.) பொய்யுரை; false word. *"பல்வேறு சமயப் படிற்றுரை யெல்லாம்"* (மணிமே. 21, 101.)

*[படிறு → படிற்று + உரை]*

**படிற்றொழுக்கம்** *padirrolukkam,* பெ. (n.) பொய்யொழுக்கம்; hypocritical conduct. *"வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம்"* (குறள். 221.)

*[படிறு + ஒழுக்கம் → படிற்றொழுக்கம்]*

**படிற்றொழுக்கர்** *padirrolukkar,* பெ. (n.) காமுகர், தீயர், வஞ்சர்; rakes, lascivious persons.

*[படிறு + ஒழுக்கம் = படிற்றொழுக்கம் → படிற்றொழுக்கர்]*

**படிறன்** *padiran,* பெ. (n.) **1.** பொய்யன்; liar. **2.** வஞ்சகன் deceiver, cheat. *"கள்ளப்படிறர்க் கருளாவான்"* (திருக்கோ. 87.) **3.** திருடன்; thief **4.** வஞ்சகன், காமுகன் (யாழ்.அக.); rake, lascivious person. **5.** கொடுமையானவன்; cruel, terrific person. *"பகலவன்றன் பல்லுகுத்த படிறன்றன்னை"* (தேவா. 751, 10) **6.** தீம்பன்; mischievous person. *"பந்து பறித்துத் துகில் பற்றிக் கீறிப் படிறன் படிறுசெய்யும்"* (திவ். பெரியதி. 10, 7, 5.)

*[படிறு + அன்]*

'அன்' ஆண்பாலீறு.

**படிறி** *padiri,* பெ. (n.) வஞ்சகமுள்ளவள்; deceitful woman. *"பொக்கங்களே பேசும்... படிறீஇ" (திருவாச. 7, 5.)"*

*[படிறு + இ]* 'இ' பெண்பால் ஒருமையீறு

படிறன் = ஆண்பால்

படிறி = பெண்பால்

**படிறு** *padiru,* பெ. (n.) 1. பொய் (பிங்.); lying, falsehood. 2. வஞ்சனை (திவா.); deceit, fraud. *"படிறிலவாஞ் செம்பொருள்"* (குறள். 91) 3. அடங்காத்தனம்; unruliness, lawlessness. 4. குறும்பு; mischief. *"படிறு பல செய்து"* (திவ்.பெரியாழ். 3, 2, 6) 5. திருட்டு (பிங்.); stealth 6. களவுப் புணர்ச்சி; clandestine union *"மேவும் படிறுவவேம்"* (திருக்கோ. 390.) 7. கொடுமை; Guelty, Wickedness *"ஊராண்மைக் கொத்த படிறுடைத்து"* (கலித். 89.)

**படினம்¹** *padinam,* பெ. (n.) 1. மேன்மை; excellence, pre-eminence. 2. பக்குவம்; fitness, propriety. 3. வெற்றி; victory, achievement.

*[படி¹ → படினம்]*

**படினம்²** *padinam,* பெ. (n.) கல்வி (நாஞ்.); learning.

*[படி → படினம்]*

**படீர்படீர்** *padir padir,* பெ. (n.) ஓர் ஒலிக்குறிப்புச் சொல்; an onomatopoetic term. *"நேரெதிர்க்க வேலை படீர்படீரென"* (திருப். 449.)

**படீரம்** *padiram,* பெ. (n.) 1. சந்தனம் (சூடா.); sandalwood. 2. சிவப்பு (பிங்.); red or ruddy colour. 3. வயிறு; (யாழ்.அக.) belly. 4. உயரம் (யாழ்.அக.); 5. வயல்; (யாழ்.அக.) field 6. ஊதைக்கூறான நோய் (யாழ்.அக.); disease due to windy humour. 7. கருங்காலி; blackwood.

*[படு → படீரம்]*

**படீரெனல்** *padir-enal,* பெ. (n.) ஒலிக்குறிப்பு; onom. expr. signifying a sudden crash or explosion. *"மூதண்டகூட முகடும் படீரென வெடிக்க"* (தனிப்பா. 1, 344, 61.)

*[படீர் + எனல்]*

**படீனம்** *padinam,* பெ. (n.) பறவைகள் பறக்கும் முறைகளிலொன்று; a birds flight. *"படீனமண்டிலம்"* (காசிக. திரிலோ. சிறப்பு. 6)

**படு¹–தல்** *padu-,* 6. செ.கு.வி. (v.i.) 1. உண்டாதல்; to come into existence. *"ஈதலிசைபட வாழ்தல்"* (குறள். 231.) 2. தோன்றுதல்; to appear. *"படுசுடரெஃகம் பறித்து"* (பு.வெ. 7, 16.) 3. தோன்றுதல்; to rise, as a heavenly body. *"படுபறியலனே பல்கதிர்ச் செல்வன்"* (புறநா. 34.) 4. நிகழ்தல்; to occur, happen. 5. மனத்திற்றோற்றுதல்; to strike one, occur to mind. *'அப்பொருள் எனக்குப்பட்டது.'* 6. பூத்தல் (யாழ்.அக.); to blossom. 7. ஒன்றன் மீது ஒன்று உறுதல்; to hit or strike against; to touch. *"சுடுகணை படுதலோடும்"* (கம்பரா. இந்திரசித்துவதை. 44) 8. மொய்த்தல்; to swarm, as bees. *"வண்டுபட மலர்ந்த"* (புறநா. 24) 9. அகப்படுதல்; to be caught, as fishes, birds or other game to be entrapped, as rats. *"பத்தி வலையிற் படுவோன் காண்க"* (திருவா. 3, 42.) 10. புகுதல்; to enter. *"நாடுபடுசெலவினர்"* (புறநா. 240.) 11. பெய்தல்; to rain. *"படுமழை யாடும் வரையகம்"* (கலித். 103, 20.) 12. பெரிதாதல்;

(அகநா. 11 உரை.) to be big. 13. மேன்மை யடைதல்; to become great, distinguished. *"ஆசார மெய்பெற்றியானும் படும்"* (ஆசாரக். 97) 14. அழிதல்; to perish. *"படாஅச்செலீயர் நின்பகைவர் மீனே"* (புறநா. 24.) 15. மறைதல்; to set, as a heavenly body; *"சுடர்நோக்கி மலர்ந்தாங்கே படிற் சாம்பு மலர்"* (கலித். 78.) 16. சாதல்; to die. *"காதலிநீபட்டதூஉம்"* (சிலப்.29, அடித்தோழியரற்று.) 17. புண் காய்தல்; to be healed or cured as an eruption or boil. *'புண் பட்டுப்போய்விட்டது'*. 18. வாடுதல்; to fade, wither, as trees. 19. சாய்தல்; to incline, leanover. *"படாஅ முலைமேற்றுகில்"* (குறள். 1087.) 20. துன்பமடைதல்; to suffer. *"படுவேன் படுவதெல்லாம்"* (திருவாச. 50, 4) 21. தொங்குதல்; to hang. *"படுமணி"* (திருமுரு. 80.); 22. ஒலித்தல்; to sound. *"படுகண் முரசம்"* (பதிற்றுப். 49, 14.) 23. பாய்தல்; to exude, as must from an elephant. *"தேம்படு கவுள யானை"* (முல்லைப். 31) 24. புதைக்கப் படுதல்; to be buried, as treasure. *"படுபொருள் வவ்விய பார்ப்பான்"* (சிலப். 23, 102.)

தெ.க.படு.ம.படு. தோட. போர். குட. பாட் து. படெயுனி. கொலா. பாட்ட். பார்ஜி. பாட்.

*[பள் → படு → படு–,]*

**படு²—தல்** *paḍu-,* 18. செ.குன்றாவி. (v.t.) 1. உடன்படுதல்; to agree to; to be connected with. *"பலரறி மணமவர் படுகுவரெனவே"* (சிலப். 24, பாட்டுமடை. 3.) 2. ஒத்தல்; to resemble *"மலைபட வரிந்து"* (சீவக. 56); 3. பொறுத்தல் (யாழ்.அக.); to put up with, endure. 4. முட்டுதல் (யாழ்.அக.); to dash against. 5. பெரிதாதல்; becoming large.

*[படு + –,]*

**படு³—த்தல்** *paḍu-,* 18. செ.குன்றாவி. (v.t.) 1. செய்தல்; to do, make, effect. *"நகர்வளம் படுத்தான்"* (திருவிளை. (திருநகரங். 45) 2. அகப்படுத்தல்; to catch, ensnare, entrap. *"என்னிதிற் படுத்த வேந்தல்"* (சீவக. 713.) 3. மட்டமாக்குதல்; to level. 4. நிலைபெறச் செய்தல்; to make stable, permanent, establish. *"பகைவரைப் பாத்திப் படுப்பதோ ராறு"* (குறள். 465.) 5. சேர்ப்பித்தல்; to entrust to one's care. *"பார்ப்பார்ப் படுக்க"* (புறநா. 113.) 6. வளர்த்தல்; to cause to growe to raise up. *"வாரி பெருக்கி வளம்படுத்து"* (குறள். 572.) 7. உடம்பிற் பூசுதல்; to smear, daub. *"சாந்தம் படுப்பவர்க் கல்லதை"* (கலித். 9) 8. பரப்புதல்; to spread out, as bedding. *"கல்லிடைப் படுத்த புல்லின்"* (கம்பரா. குகப். 39.) 9. தளவரிசை செய்தல்; to pave, as floor; to lay horizontally. *"எண்டிசையு மேற்பப் படுத்து"* (சீவக. 592.) 10. துன்புறுத்துதல்; to tease, worry. *'புக்ககத்தில் அந்தப் பெண்ணை மிகவும் படுத்துகிறார்கள்.'* 11. அழித்தல்; to kill, destroy. *"எதிர்ந்தோர் தம்மைப் படுத்தலும்"* (கம்பரா. மூலபல. 56) 12. ஒழித்தல்; to forsake, leave, put an end to. *"காப்படுப்பின்"* (சிறுபஞ். 40.) 13. வீழச் செய்தல்; to cast down, fell. *"எறிந்து களம்படுத்த வேந்துவாள் வலத்தர்"* (புறநா. 19.) 14. போரடித்தல் (வின்.); to thresh, as grain. 15. எழுத்துக்களின் பலுக்கத்தைத் தாழ்த்துக் கூறுதல்; (gram.) to pronounce in a low pitch. *"படுத்துக்கூற"* (தொல். எழுத். 76. உரை) 16. பறையறைதல்; to beat, as a drum. *"துடிபடுத்து"* (பு.வெ. 1, 3.)

**படு⁴** *paḍu-,* செ.கு.வி. (v.i) கிடத்தல்; to lie down to sleep or otherwise; to roost, as birds. *"அரியுந் தன்னாழிபடான்"* (குலோத். கோ. 165.)

**படு⁵** *padu-,* பெ. (n.) 1. கள் (திவா.); toddy. *"படுவை வாயா லுண்ணாமல்"* (சேதுபு. துரா. 40) 2. மரத்தின் குலை (பிங்.); cluster, bunch of flowers or fruits. 3. குளம்; tank, pond. *"பனிநீர்ப் படுவிற் பட்டினம் படரின்"* (சிறுபாண். 153.) 4. மடு (சிறுபாண். 153, உரை.); deep pool. 5. மருதயாழ்த் திறத்தொன்று (சூடா.); (mus.) a secondary melody-type of the marudam class. 6. உப்பு (தைலவ. தைல.); salt.

**படு⁶** *padu-,* பெ. அ. (adj.) 1. பெரிய; big, great. *"படுசினை"* (அகநா. 11.) 2. கொடிய; cruel. *'படுகொலை'* 3. இழிவான; base, low. *'படுமட்டம்'*

**படு⁷** *padu-,* பெ. அ. (adj.) 1. மிகுதியைக் காட்டும் ஓர் அடைசொல்; intense, excessive, rank, virulent, heinous. *'படுங்கசப்பு'.*

**படு⁸** *padu,* பெ. (n.) 1. கெட்டிக்காரன்; clever, skilful person. *'அவன் வெகு படு'* 2. பேரறிவு (பிங்.); sound intellect. *'அவன் படுசுட்டி'* 3. நன்மை (சூடா.); goodness, excellence.

**படுக்கவை-த்தல்** *padukka-vai-,* 1. செ. குன்றா வி. (v.t.) 1. கிடக்கும்படி செய்தல்; to lay down, as a child to sleep. 2. தோற்கடித்தல்; to overthrow, defeat. 3. அழித்தல்; to ruin.

*[படுக்க + வை-,]*

**படுக்களம்** *padu-k-kaḷam,* பெ. (n.) படுக்கும் இடம்; sleeping place, bed.

*[படு + களம் = படுகளம் → படுக்களம்.]*

**படுக்காங்கொள்ளி** *padukkāṅ-koḷḷi,* பெ. (n.) படுக்காளிமாடு (அபி. சிந்.788.) பார்க்க; see paḍukkāḷi-māḍu.

*[படு → படுக்காம் + கொள்ளி. ஒ.நோ. பயந்தாங்கொள்ளி.]*

**படுக்காளி** *padukkāḷi,* பெ. (n.) படுக்காளிப் பயல் பார்க்க; see paḍukkāḷi-p-payal.

*[படு → படுக்காளி]*

**படுக்காளிப்பயல்** *padukkāḷi-p-payal,* பெ. (n.) 1. போக்கிலி; rascal. (அருட்பா, vi, திருமு. தான்பெற்ற. 5,707) 2. பொய்யன்; (சங்.அக.) liar.

*[படுக்காளி + பயல்]*

*பயல் = இழிஞன்*

**படுக்காளிமாடு** *padukkāḷi-māḍu,* பெ. (n.) வேலைசெய்யாத மாடு (கொ.வ.); a recalcitrant bull.

மருவ. கோவில்மாடு

*[படுக்காளி+ மாடு]*

**படுக்காளி விசேடம்** *padukkāḷi-visēḍam,* பெ. (n.) கட்டுக்கதை; fable, story invented for a purpose.

*[படுக்காளி + விசேடம்]*

விசேடம் = Skt

**படுக்கெனல்** *padukkeṉal,* பெ. (n.) பொடுக்கெனல் பார்க்க; an onam expression. see poḍukkeṉal.

*[படுக் + எனல்]*

**படுக்கை** *paḍukkai,* பெ. (n.) 1. படுத்தல்; lying down. 2. பாயல்; bed, bedding, couch, sleeping place, litter, lair. 3. சரக்கு மூட்டை மேல் நீர்படாதிருக்கத் தோணியினடியிற் பரப்பும் புல் அல்லது ஓலை (வின்.); straw or olas or boards placed in a boat to protect goods from the bilge water. 4. தவசம் முதலியன வைத்தற்கு உதவுமாறு அடியிற் பரப்பிய பொருள்; olas or straw laid down as a bed on which to place grain, tobcco, palmyra fruit, earthern ware, etc; 5. பட்டடை; anvil. 6. சிற்றூர்த் தெய்வத்தின் பொருட்டு ஒரு நாளில் கொண்டாடப்படுந் திருவிழா; (G.Tn.D. 1.117.); one day festival opp. to koḍai 7. சிறுதெய்வங்களுக்கு முன் இடும் படைப்பு (நாஞ்.); offerings laid before a deity.

*[படு² → படுக்கை]*

**படுக்கைப்பத்தியம்** *paḍukkai-p-pattiyam,* பெ. (n.) மருந்துண்ணும் காலத்தில் புணராதிருத்தல்; not having sexual inter course, (in certain period for the patients.)

*[படுக்கை + பத்தியம்]*

**படுக்கைப்பற்று** *paḍukkai-p-paṟṟu,* பெ. (n.) 1. மணக்கொடை; dowry; *'தன் ராஜ்யத்தை அவர்களுக்குப் படுக்கைப்பற்றாக்கி* (ஈடு,4,1,5.) 2. அந்தப்புரம்; women's apartment in a palace, zenana. *"நாங்கள் படுக்கைப் பற்றில் உள்ளோம்."* (ஈடு, 4,8,1.)

*[படுக்கை+ பற்று]*

**படுக்கைப்புண்** *paḍukkai-p-puṇ,* பெ. (n.) பெருங்கிடையால் நோயாளிக்கு உண்டாம் புண் (M.L.); bed-sore.

*[படுக்கை + புண்]*

**படுக்கைமரம்** *paḍukkai-maram,* பெ. (n.) தோணியிற் பண்டங்களை வைக்குமாறு அமைக்கும் பலகை; boards laid loosely under the cargo of a boat.

*[படுக்கை+ மரம்]*

**படுக்கையறை** *paḍukkai-y-aṟai,* பெ. (n.) பள்ளியறை; bedroom.

*[படுக்கை + அறை]*

**படுக்கைவிலக்கல்** *paḍukkaivilakkal,* பெ. (n.) புணர்ச்சியிலிருந்து விலகுதல்; not having copulation.

*[படுக்கை + விலக்கல்]*

**படுக்கைவீடு** *paḍukkai-vīḍu,* பெ. (n.) படுக்கையறை (வின்.) பார்க்க, see paḍukkai-y-aṟai.

*[படுக்கை + வீடு]*

**படுகட்டை** *paḍu-kaṭṭai,* பெ. (n.) 1. உலர்ந்த மரத்துண்டு (வின்.); dead stump of tree, dry log. 2. பயனில்லாத கிழவன் அல்லது கிழவி (யாழ்ப்); old person, fit for nothing.

*[படு + கட்டை]*

**படுகண்** *paḍu-kaṇ,* பெ. (n.) படு கண்ணி பார்க்க; see, paḍu-kaṇṇi. *"படுகண்ணும் கொக்குவாயும் உட்பட நிறை"* (S.I.I.ii. 157.)

*[படு + கண்]*

**படுகண்ணி** *paḍu-kaṇṇi,* பெ. (n.) அணி கலனிற் கொக்குவாய் மாட்டப்படும் உறுப்பு; the eye in which the hook of an ornament is fastened. *"கொக்கு வாயும் படுகண்ணியும் போலே"* (திவ்.பெரியதி. 5,4,7. வ்யா.)

*[படு + கண்ணி]*



**படுகர்¹** *paḍugar,* பெ. (n.) 1. இழிந்தேறும் வழி (பிங்.); path of ascent and descent "*ஆரிப்படுகர்ச் சிலம்பு*" (மலைபடு. 161) 2. பள்ளம் (திவா.); pit, hole, hollow. "*தான் விழும் படுகர் வீழ்த்தான்*" (குற்றா. தல. புட்பகந்த. 16.) 3. நீர்நிலை (பிங்.); "*தத்து நீர்ப்படுகர்*" (திருவிசைப். கருவூர்.8,9) tank. 4. வயல் (வின்); rice field. 5. மருதநிலம்; agricultural tract. "*பூம்படுகர்ப் பகட்டினங்கள்*" (காஞ்சிப்பு. திருநாட்டு. 131.)

*[படு + படுகர்]*

**படுகர்²** *paḍugar,* பெ. (n.) ஒரு சாதி; a caste.

க. படக

**படுகல்** *paḍukal,* பெ. (n.) படுகர்¹, பார்க்க, see padugar¹, "*பூம்படுகல் விளவாளை பாயும்*" (தேவா.82,2.)

*[படுகர் → படுகல்]*

**படுகலம்** *paḍu-kalam,* பெ. (n.) அடைமான ஆவணம் (நாஞ்.); hypothecation bond.

*[படு + கலம்]*

**படுகலம்பலிசை** *paḍukalam-pališai,* பெ. (n.) தீர்வை நிலுவையின் வட்டிக்காகக் குறிக்கப்படும் அதிகத் தீர்வை (நாஞ்.); extra cess on land levied in lieu of interest on arrears of revenue.

*[படுகலம் + பலிசை]*

**படுகள்ளம்** *paḍu-kaḷḷam,* பெ. (n.) பெருமோசம்; gross fraud.

*[படு + கள்ளம்]*

**படுகள்ளன்** *paḍu-kaḷḷan,* பெ. (n.) போக்கிலி; clever, rogue, ruffian, a villian.

*[படு + கள்ளன்]*

**படுகளம்** *paḍu-kaḷam,* பெ. (n.) 1. போர்க்களம்; battle-field "*உலக மேத்தும் படுகளங் கண்டு*" (சீவக.17.) 2. தொந்தரவு; trouble, mischief. '*உன் படுகளம் என்னாற் பொறுக்க முடியாது*'

*[படு² + களம்]*

**படுகளவு** *paḍu-kaḷavu,* பெ. (n.) மிகு திருட்டு பெருமோசம்; theft, circumvention, gross fraud.

**படுகளி** *paḍu-kaḷi,* பெ. (n.) 1. மிகுமகிழ்ச்சி; excessive joy. "*படுகளி வண்டார்ப்ப*" (பு.வெ.ஒழிபு. 17.) 2. பெருஞ்சேறு; deep mire or slough.

*[படு+ களி]*

**படுகாடு** *paḍu-kāḍu,* பெ. (n.) 1. மரங்கள் ஒருசேர விழுந்த காடு, (திவ். திருப்பா. 6,95; all fallen forest with trees. 2. சுடுகாடு (சூடா.); burning ground. "*படுகாட்டகத் தென்று மோர் பற்றொழியீர்*" (தேவா. 879,6.)

*[படு + காடு]*

**படுகாடுகிட—த்தல்** *paḍu-kāḍu-kiḍa-,* 3. செ.கு.வி. (v.i.) ஒருசேர விழுந்த மரங்கள் போலச் செயலற்றுக் கிடத்தல்; to lie down on the ground motionless, as fallen trees. "*பறவையின் கணங்கள்.... படுகாடு கிடப்ப*" (திவ். பெரியாழ். 3,6,8.)

*[படுகாடு+ கிட –,]*

**படுகாடுநில்—தல் (படுகாடு நிற்றல்)** *paḍukāḍu-nil-,* 14. செ.கு.வி. (v.i.) படுகாடு கிட–, பார்க்க; see paḍukāḍu-kiḍa-,. '*பரிந்து படுகாடு நிற்ப*" (திவ். இயற். 4, 45.)

*[படுகாடு + நில்]*

**படுகாய்ச்சி** *paḍu-kāycci,* பெ. (n.)(J.) 1. மறுகாம்புப் புகையிலை; tobacco growing as an after-crop on the old stamps. 2. மதிப்புரவு தெரியாதவன்; uncivil person, as one of low extraction.

*[படு+ காய்ச்சி]*

**படுகாயம்** *paḍu-kāyam,* பெ. (n.) 1. இறப்பை விளைக்கும் காயம்; fatal wound.

*[படு + காயம்]*

**படுகாரம்** *paḍukaram,* பெ. (n.) வெண்காரம். (சங்.அக.); borax.

ஒநோ. படிகாரம்

க. படிகார

*[படிகாரம் → படுகாரம்]*

**படுகால்[1]** *paḍu-kāl,* பெ. (n.) 1. படி? '*செஞ்சுட்டிட்டிகைச் சுதைச்சுவர்ப் படுகால்*' (பெருங். உஞ்சைக் 40, 316.) 2. மேகலை; mēgalai, a girdle. "*ஏணிப்படுகால்*" (பரிபா. 10, 11.)

*[படு+ கால்]*

**படுகால்[2]** *paḍukāl,* பெ. (n.) ஏணி; ladder. '*ஏறுதற்கு— படுகால்*' (சீவக. 2872.)

*[படு + கால்]*

**படுகி** *paḍugi,* பெ. (n.) படிக்காரம் (யாழ்.அக.); alum.

க. பலிகு

*[படிக்காரம் → படுகி]*

**படுகிடங்கு** *paḍu-kiḍangu,* பெ. (n.) படுகுழி பார்க்க; see paḍu-kuḻi.

*[படு + கிடங்கு]*

**படுகிடை** *paḍu-kiḍai,* பெ. (n.) 1. நோய் மிகுதியால் எழுந்திருக்க முடியாத நிலை; being bed-riddun. 2. தன்னெண்ணம் நிறைவேறப் ஒட்டாரமாகப் படுத்துக் கிடக்கை; sitting protest. '*பணங் கொடுத்தால் தான் போவேன் என்று அவன் படுகிடையாய்க் கிடக்கிறான்*'.

*[படு + கிடை]*

**படுகிழவன்** *paḍu-kiḻavaṉ,* பெ. (n.) தொண்டு கிழவன்; very old man.

*[படு + கிழவன்]*

**படுகுடி** *paḍu-kuḍi,* பெ. (n.) கெடுகுடி (யாழ்.அக.); ruined.

*[படு + குடி]*

**படுகுலைப்படு–தல்** *paḍu-kulai-p-paḍu-,* 20. செ.கு.வி. (v.i.) நெஞ்சிலடியுண்டு விழுதல்; to fall from a blow on the chest. "*அந்த ஸ்வாதந்தர்யம் பொறுக்கமாட்டாமே படுகுலைப் பட்டாற்போலே*" (ஈடு. 3,3,1, பக். 74.)

*[படுகுலை + படு–,]â*

**படுகுலையடி–த்தல்** *paḍu-kulai-y-aḍi,* 4. செ.குன்றாவி. (v.t.) செயலறப் பண்ணுதல்; to make one helpless. "*பெண்களைப் படுகுலையடிக்குங் கிருஷ்ணனைப் போலே*" (திவ். திருப்பா. 12, 134, வ்யா.)

*[படுகுலை + அடி –,]*

**படுகுழி** *paḍu-kuḻi,* பெ. (n.) பெருங்குழி; pit fall, kheda, as for catchilng elephants. "*படுகுழிகள் கல்லுதல்பார்த் தஞ்சி*" (பதினொ. திருவீங். 36.)

ம. படுகுழி

*[படு² + குழி]*

**படுகுறவன்** *paḍu-kuṟavaṉ,* பெ. (n.) பெரும்பாசாங்குக்காரன்; knavish, tricky fellow.

*[படு³ + குறவன்]*

**படுகை** *paḍugai,* பெ. (n.) 1. ஆற்றோரத்து நிலம்; land on the banks of a river fit for cultivation. 2. நீர்நிலை; reservoir of water. "*பழைய பாகீரதிப்படுகைமேல்*" (திருப்பு. 493.)

*[படுகர்¹ → படுகை]*

**படுகையாமணக்கு** *paḍugai-y-āmaṇakku,* பெ. (n.) ஆற்றங்கரைகளிலும் மற்ற நீர் நிலைகளின் ஓரங்களிலும் விளையும் ஆமணக்கு (சா.அக.); castor plant growing in river side or in places stagenant water.

*[படுகை + ஆமணக்கு]*

**படுகொலை** *paḍu-kolai,* பெ. (n.) கொடுங் கொலை; cruel murder. "*அகிலமும் படுகொலை படுவதே*" (தக்கயாகப். 82.)

*[படு³ + கொலை]*

**படுகொலைக்காரன்** *paḍukolai-k-kāraṉ,* பெ. (n.) கொடுங்கொலை செய்வோன்; cold-blooded murderer; assassin. '*நீர்மை கேடனான அப்படுகொலைக்காரனால்*' (ஈடு, 10, 3, 1.)

*[படுகொலை + காரன்]*

**படுசுட்டி** *paḍu-šuṭṭi,* பெ. (n.) 1. மிகுந்த அறிவுக் கூர்மையுள்ளவ–ன்–ள்; a very smart or highly intelligent fellow. 2. மிகுந்த குறும்புத் தனமுள்ள–வ–ன்–ள். a very mischievous youth.

*[படு³ + சுட்டி²]*

**படுசூரணம்** *paḍu-šūraṇam,* பெ. (n.) 1. மருந்துத்தூள்; compound medicinal powder made by calcining some, and pulverising the ingredients; 2. முழுநாசம்; total destruction.

*[ படு + சூரணம் ]*

*சூரணம் = Skt.*

**படுசூல்** *paḍu-šūl,* பெ. (n.) முதிர்ந்த கருப்பம்; advanced pregnancy. "*படுசூலாலயர்வுற்றாள்*" (கொக்கோ. 4, 46.)

*[ படு¹ + சூல் ]*

**படுசூளை** *paḍu-šūḷai,* பெ. (n.) வட்டமாய் அமைக்கப்படும் காளவாய்; circular kiln.

*[ படு[1] + சூளை ]*

**படுஞாயிறு[1]** *paḍu-ñāyiṟu,* பெ. (n.) 1. மறையும் கதிரவன்; setting sun. 2. மாலையில் உண்டாகி நள்ளிரவில் நீங்குந் தலைநோவு (சீவரட்.); headache which begins at sunset and ceases only after midnight.

க. படுநேசறு ம. படிஞாயிறு

*[ படு + ஞாயிறு ]*

**படுஞாயிறு[2]** *paḍuñāyiṟu,* பெ. (n.) மண்டையில் ஊதையால், மாலையில் ஏற்படும் ஒருவகைத் தலைவலி; a kind of head ache severity in the evening. (சா.அக.)

*[ படு + ஞாயிறு ]*

(இந்நோய் 'எழுஞாயிறு' என்றகாலைத் தலைவலி நோய்க்கு எதிர் என்பர்)

**படுத்தடி** *paḍu-t-taḍi,* பெ. (n.) முருட்டுத் தனம் (வின்); rudeness, sauciness, impertinence.

*[ படு + தடி]*

**படுத்தடிநியாயம்** *paḍu-t-taḍi-niyāyam,* பெ. (n.) நேர்மையற்ற ஞாயம் (வின்.); unfair reasoning.

*[ படுத்தடி + நியாயம் ]*

**படுத்தநிலம்** *paḍutta-nilam,* பெ. (n.) தளப்படுத்திய நிலப்பகுதி (சீவக. 113, உரை.); paved floor.

*[ படு → படுத்த + நிலம் ]*

**படுத்தல்** *paḍuttal,* பெ. (n.) படுத்தலோசை பார்க்க; see paḍuttal-ōšai. ***"எடுத்தல் படுத்தனலிதல்"*** (வீரசோ. சந்திப். 4.)

*[ படு[2] → படுத்தல் ]*

**படுத்தலோசை** *paḍuttal-ōšai,* பெ. (n.) தாழப் பலுக்கப்படும் ஒலி; (gram.) grave accent.

*[ படுத்தல் + ஓசை ]*

**படுத்து–தல்** *paḍuttu-,* 5. செ.குன்றாவி (v.t.) 1. துன்பஞ்செய்தல்; to cause to suffer; to put to trouble; to put under pressure. ***"தாம் என்னை இத்தனைபோது படுத்தின சிறுமையாலே"*** (திவ். திருநெடுந். 21, பக், 188.) 2. அடையச் செய்தல்; to cause to get. 3. உண்டாகுதல்; to effect, bring into existence.

*[ படு[1] → படுத்து–, ]*

**படுத்துவம்** *paḍuttuvam,* பெ. (n.) 1. வலிமை; strength. 2. திறமை; skill, ability.

*[ படு → படுத்துவம் ]*

**படுதடி** *paḍu-taḍi,* பெ. (n.) பட்டுப்போன கொம்பு; dead stick or branch. ***இந்தப் படுதடியை நம்பிக் கடலிலே போகிறோம்.*** (யாழ்ப்)

*[ படு + தடி ]*

**படுதண்டம்** *paḍu-taṇḍam,* பெ. (n.) மிகுவணக்கம் (வின்.); profound reverence.

*[ படு + தண்டம் ]*

**படுதண்டு** *padu-tandu,* பெ. (n.) திருவாடு தண்டு (இ.வ.); poles for carrying temple vehicles.

*[ படு + தண்டு ]*

**படுதம்** *paḍudam,* பெ. (n.) கூத்துவகை; a kind of dance. *"பாடலிசைகொள் கருவி படுதம் பலவும் பயில்வார்"* (தேவா. 528, 3.)

*[ படிதம் → படுதம் ]*

**படுதா** *paḍudā,* பெ. (n.) **1.** திரைச்சீலை; curtain, screen, veil. **2.** மூடுசீலை; covering as for a vehicle. **3.** ஒதுக்கிடம் (வின்.); shelter.

*[ படம் → (படுதம்) → படுதா ]*

**படுதாமரை** *paḍu-ṭāmarai,* பெ. (n.) படர்தாமரை (சங்.அக.) பார்க்க; see padar-tāmarai.

**படுதாறல்** *paḍu-tāṟal,* பெ. (n.) நின்ற நிலையிலே பட்டுப்போன பயிர் (இ.வ.); crop decayed while standing.

*[ படு + தாறு → தாறல் ]*

**படுதுருமம்** *paḍuturumam,* பெ. (n.) வெள்வேல் (மலை.) பார்க்க. : see veḷvēl panicled babul.

**படுதேவடியாள்** *paḍu-tēvaḍiyāḷ,* பெ. (n.) விளங்கு பெயர் விலை மகள்; notorious strumpet.

*[ படு + தேவர்அடியாள் ]*

**படுநஞ்சன்** *paḍu-nañjaṉ,* பெ. (n.) கொடிய பகைவன்; a deadly foe.

*[ படு + நஞ்சன் ]*

**படுநஞ்சு** *paḍu-nañju,* பெ. (n.) கொடிய நஞ்சு (வின்.); deadly poison.

*[ படு + நஞ்சு ]*

**படுநாயகி** *paḍunāyagi,* பெ. (n.) பாற்சோற்றி என்னும் மூலிகை; guttla parcha, rubber plant. (சங்.அக)

*[ படு + நாயகி ]*

**படுநாயிறு** *paḍu-nāyiṟu,* பெ. (n.) படுஞாயிறு. பார்க்க, see paḍuñāyiṟu.

*[ படு + நாயிறு ]*

**படுநிந்தனை** *paḍu-nindaṉai,* பெ. (n.) பெரும் பழி (இ.வ.); wicked calumny.

*[ படு³ + நிந்தனை ]*

நிந்தனை = Skt.

**படுநிலம்¹** *paḍu-nilam,* பெ. (n.) **1.** பாலை நிலம்; desert, water less tract. **2.** சுடுகாடு; crematorium; burning-ghat. **3.** போர்க்களம்; battle-field.

*[ படு + நிலம் ]*

**படுநிலம்²** *paḍu-nilam,* விளையா நிலம்(R.T.); barren tract of land.

மறுவ: கறண்டைநிலம், பாழ்நிலம்

*[ படு + நிலம் ]*

**படுநீலம்பற்றவை—த்தல்** *padu-nilam parra-vai,* 3. செ.குன்றாவி. (v.t.) குற்றத்தை இட்டுக்கட்டிச் சொல்லுதல் (நாஞ்.); to blacken by false accusations.

*[படுநீளம் → படுநீலம் + பற்றவை—,]*

சரடுவிடுதல் என்றாற்போல் பொய்களை ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்து சொல்லுதல்.

**படுநீலி** *padu-nili,* பெ. (n.) பெருஞ்செயல் வெற்றிக்காரி; (வின்.) a hard hearted woman a very impudent woman.

*[படு + நீலி]*

**படுநுகம்** *padu-nugam,* பெ. (n.) அரசாட்சிப் பாரம்; the yoke of sovereignty. *"படிறுநீக்கும் படுநுகம்பூண்ட"* (பெருங். வத்தவ. 2, 9.)

*[படு + நுகம்]*

**படுநெருப்பு** *padu-neruppu,* பெ. (n.) 1. கொடுந்தீ; fierce or destructive fire. 2. கொடியவன்; wicked person.

*[படு + நெருப்பு]*

**படுநெறி** *padu-neri,* பெ. (n.) மேடுபள்ளமான வழி; rough or rugged way.

*[படு + நெறி]*

**படுபட்சி** *padu-patcci,* பெ. (n.) ஐம்புள் நூல் கூறுமாறு உரிய காலத்தில் வலியிழந்த பறவை (சோதிட. சிந். 104.); bird in pañcapatci-cāstiram believed to lose its influence on particular days.

*[படு + பட்சி]*

**படுபயல்** *padu-payal,* பெ. (n.) 1. திறமையான சிறுவன்; clever boy. 2. துட்டன்; scamp.

*[படு + பயல்]*

**படுபழம்** *padu-palam,* பெ. (n.) 1. பழுத்த பழம் (யாழ்.அக.); ripe fruit. 2. போக்கிரி (வின்.) thorough rogue.

*[படு + பழம்]*

**படுபழி** *padu-pali,* பெ. (n.) கொடிய தீச்செயல்; heinous crime, great offence, flagrant wrong.

*[படு + பழி]*

**படுபள்ளி** *padu-palli,* பெ. (n.) வரிக்கூத்து வகை (சிலப். 3, 13, உரை); a masquerade dance.

*[படு + பள்ளி]*

**படுபனை** *padu-panai,* பெ. (n.) காய்க்கும் பனை; fruit bearing palm. *"படுபனை யன்னர் பலர்நச்ச வாழ்வார்"* (நாலடி. 96.)

*[படு[2] + பனை]*

**படுபாடர்** *padu-pādar,* பெ. (n.) விடாப்பிடியுடையவர்; importunate or obstinate persons. *'படுபாடரான உங்களுக்கு நான் எத்தைச் சொல்லுவது'* (ஈடு, 5, 6, 4.)

*[படு[2] + பாடர்]*

**படுபாதகன்** *padu-pādagan,* பெ. (n.) படுபாவி பார்க்க; see padu-pāvi. *"படுபாதகனவன் கொடுங் கோலினது வெம்மை"* (பிரபோத. சந். 3, 28.)

*[படு[2] + பாதகன்]*

பாதகன் = Skt.

**படுபாதி** *padu-pādi,* பெ. (n.) சரிபாதி; just half. *"அறுப்பம் புல்லாய் படுபாதி போக"* (சரவண. பணவிடு. 144.)

*[படு + பாதி]*

**படுபாலை** *paḍu-pālai,* பெ. (n.) நரிப்பாலை (சா.அக); ape flower.

*[படு + பாலை]*

**படுபாவி**[1] *paḍu-pāvi,* பெ. (n.) மிகக் கொடியவன்; heinous sinner *"படுபாவிகட்கற மென்னிலெந் நாளு மதிகவிடமாம்"* (அறப். சத. 44.)

*[படு + பாவி]*

பாவி = Skt.

**படுபாவி**[2] *paḍupāvi,* பெ. (n.) **1.** வழலையுப்பு; alchemical salt. **2.** கொலைக்குமஞ்சாத கொடியன்; murderer who never hesitates to kill. (சா.அக.)

*[படு + பாவி]*

**படுபுரளி** *paḍu-purali,* பெ. (n.) பச்சைப்பொய்; a flagrant lie, a malicious accusatim.

*[படு + புரளி]*

**படுபொய்** *paḍu-poy,* பெ. (n.) முழுவதுமான பொய்; an audacious lie.

*[படு + பொய்]*

**படுபொருள்** *paḍu-poruḷ,* பெ. (n.) **1.** புதையல்; buried treasure. *"படுபொருள் வெளவிய பார்ப்பான்"* (சிலப். 23, 102.) **2.** மிகுதியாய்த் தேடிய பொருள்; amassed wealth. *"இடுபொருளாயினும் படுபொருளாயினும்"* (சிலப். 23, 128.) **3.** நிகழ்வது; that which happens. *"படுபொரு ளுணார்ந்தவப் பரமன்"* (கம்பரா. திருவவ. 7.)

*[ படு' + பொருள் ]*

**படுபொழுது** *paḍu-poḻudu,* பெ. (n.) மாலை நேரம் (கொ.வ.); sunset.

**மறுவ.** சாயுங்காலம்

*[படு + பொழுது]*

**படுபோர்** *paḍu-pōr,* பெ. (n.) **1.** முதலில் அறுவடையாகி மற்றக்கதிர்களும் அறுக்கப் படும்வரை களத்திலடிக்கப் பெறாத தவசக் கற்றைகள் (W.G.); sheaves of corn cut and kept unthreshed till the whole field is reaped. **2.** வீரர் மிகுதியாய்ப் பட்டு வீழ்தற்கும் காரணமான கொடும்போர்; a war involving heavy loss of lives.

*[படு + போர்]*

**படுமரம்** *paḍu-maram,* பெ. (n.) பட்டமரம்; dead tree.

*[படு + மரம்]*

**படுமலை** *paḍumalai,* பெ. (n.) படுமலைப் பாலை பார்க்க; see paḍumalai-p-pālai. *"படுமலை நின்ற பயங்கெழு சீறியாழ்"* (புறநா. 135.) *"படுமலை நின்ற நல்யாழ் வடிநரம்பு"* (நற். 139.)

*[படு + மலை]*

**படுமலைப்பாலை** *paḍumalai-p-pālai,* பெ. (n.) **1.** பாலையாழ்த்திற வகை; (mus.) a secondary melody type of the pālai class. *'படுமலைப் பாலை நிலைபெற்ற..... சிறிய யாழை'* (புறநா. 135, உரை.) **2.** குறிஞ்சியாழ்த் திறவகை (பிங்.); (mus.) a secondary melody type of the kuṟiñji class.

*[படுமலை + பாலை]*

(*"துத்தமே குரலாகிற் படுமலைப் பாலை; இது எழுவகைப் பாலையுளொன்று"* (பிங். 1404))

**படுமுடிச்சு** *padu-mudiccu,* பெ. (n.) 1. கெட்டி முடிச்சு; இறுக்கமான முடிச்சு; hard knot. 2. மிகுதந்திரம்; intricate plot or scheme.

*[படு³ + முடிச்சு]*

ஒருகா: படி+முடிச்சு

**படுமுடை** *padu-mudai,* பெ. (n.) தானே இறந்துபட்ட விலங்குகளின் ஊன்; flesh of animals which died a natural death. *'தகவுடையோ ருண்ணாப் படுமுடை தின்பார்க்கு'* (நீலகேசி, 332, உரை.)

*[படு + முடை]*

**படுமுதலாக** *padu-mudal-āga,* பெ. (n.) தானாக முளைக்கும் வித்து; spourting seed without one's effort. *'குப்பையின் கண் படுமுதலாக எழுந்த கீரையினது'* (புறநா. 159, உரை.)

*[ படு¹ + முதல் ]*

(படுமுதல் என்றது, பிறர் விதைக்க முளையாது, காற்றாலும் நீராலும் பிறவுயிர்களாலும் விதை சிதறடிக்கப் பட்டுத் தானே முளைத்தது என்றவாறு. – ஔவை சு.துபிள்ளை விளக்கம்)

மறுவ. தப்புமுதல்

**படுமுறை** *padu-murai,* பெ. (n.) ஒறுப்புக் கட்டணம்; fine, penalty. *"ஆடகப் பொன்னினும் மளவினியன்ற பாவையாகும் படுமுறை"* (பெருங். உஞ்சைக். 40, 373.)

*[படு + முறை]*

**படுமோசம்** *padu-mōšam,* பெ. (n.) 1. முழுமோசம்; grass fraud. 2. பெருங்கேடு; extreme danger. 3. பெருந்தவறு; grievous mistake.

*[படு + மோசம்]*

**படுவக்கால்** *paduva-k-kāl,* பெ. (n.) படுவம் (நாஞ்.); பார்க்க, see paduvam.

*[படுவம் + கால்]*

**படுவங்கீரை** *paduvaṅ-kīrai,* பெ. (n.) கீரை வகை (யாழ்.அக.); a kind of greens.

*[படுவன் + கீரை]*

**படுவசை** *padu-vašai,* பெ. (n.) பெரும் பழிச்சொல்; unbearable reproach, scandal, disgrace.

*[படு + வசை]*

**படுவஞ்சனை¹** *padu-vañjaṉai,* பெ. (n.) பெருமோசம்; gross fraud.

*[படு + வஞ்சனை]*

**படுவஞ்சனை²** *padu-vañjaṉai,* பெ. (n.) முழுதும் அழிகை (வின்); destruction, complete disappearance, as of a disease.

*[படு + வஞ்சனை]*

**படுவதுபட்டவன்** *paduvadu paṭṭavaṉ,* பெ. (n.) மிகுதுன்பம் அடைந்தவன்; miserable person, one who has suffered much.

*[படு¹ → படுவது + பட்டவன்]*

**படுவநாயகி** *paḍuvanāyagi,* பெ. (n.) பாற்சொற்றி (மலை.) பார்க்க, see pārcoṟṟi.

*[ஒருகா. படுவன் + நாயகி → படுவநாயகி]*

**படுவம்** *paḍuvam,* பெ. (n.) சேற்று நிலம்; slushy field.

*[படு[1] + படுவம்]*

**படுவன்** *paḍuvaṉ,* பெ. (n.) 1. கள்விற்போன் (திவா.); toddy seller. 2. ஒருவகைப் புண்கட்டி; boil, abscess. *"வயிற்றுவலி படுவன் வர"* (திருப்பு. 790.) 3. படுவங்கீரை பார்க்க, (யாழ்.அக.) see paḍuvaṅ-kīrai.

ம. படுவந்

**படுவனெய்** *paḍuvaṉey,* பெ. (n.) தொண்டைப் புண்ணுக்கிடும் மருந்துநெய்; a preparation of ghee for sore throot.

*[படுவன் + நெய்]*

**படுவா** *paḍuvā,* பெ. (n.) படவா பார்க்க; see paḍavā.

**படுவாரி** *paḍu-vāri,* பெ. (n.) அறுவடையான பின் உதிர்ந்த நெல்லினின்றும் தானே உண்டாகும் பயிர் (R.T.); spontaneous growth springing up from stray grains in the field harvest.

*[படுவாய்வாரி → படுவாவாரி→ படுவாரி]*

**படுவான்[1]** *paḍu-vāṉ,* பெ. (n.) மேற்கு; west, as the place of sunset, opp. to eḻuvāṉ. *"எழுவான் தொடங்கிப் படுவான் மட்டும்"* (வின்.)

*[படு[1] + வான்]*

**படுவான்[2]** *paḍuvāṉ,* பெ. (n.) அழிந்து போவான்; one who will go to ruin.

*[படு + வ் எதிர்கால இடைநிலை + ஆன் (விகுதி)]*

**படுவி** *paḍuvi,* பெ. (n.) 1. கள் விற்பவள் (சூடா.); woman who sells toddy. 2. குறள் வடிவுள்ள தொழுத்தை; dwarfish maid-servant. *"தீஞ் சொல்லாளோர் படுவி"* (சீவக. 1653) 3. கற்பில்லாதவள் (சூடா.); unchaste woman.

*[படுவன் → படுவி]* ஒநோ: பிறவன் → பிறவி

**படுவினையன்** *paḍu-viṉaiyaṉ,* பெ. (n.) பெருந்தீம்பன்; an extremely wicked man; a man full of malice.

*[படு + வினையன்]*

**படுவுப்பு** *paḍu-v-uppu,* பெ. (n.) தானே உண்டாம் உப்பு; natural salt.

*[படு + உப்பு]*

**படுவை** *paḍuvai,* பெ. (n.) தெப்பம் (திவா.); taft, float. *"பவத்தனிப் பரவை....தானப் படுவையைக் கொடுகடப் பரிதாம்"* (வைராக். தீப. 18.)

தெ. படவ. க. படகு. ம. படவு து. படாவு

*[படவை → படுவை]*

**படை—த்தல்** *paḍai-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. உண்டாக்குதல்; to create, form, produce. *"காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி"* (திருவாச. 7, 12) 2. பரிமாறுதல்; to serve or distribute, as food to guests.

3. தெய்வங்களுக்குப் படைத்தல்; to offer, as boiled rice, to gods or manes. *'கடவுட்கு அமுது படைக்க வேண்டும்'* 4. பொருளீட்டுதல்; to acquire, secure. *"பொருள் படைப்பான் கற்ற திண்ணனவே"* (திவ். இயற். திருவிருத். 8.) 5. பெற்றிருத்தல்; to get, obtain. *"உடம்பு முயிரும் படைத்திசி னோரே"* (புறநா. 18.) 6. கலத்தல்; to mix. *"அமுதில் படைக்கச் சர்க்கரை"* (s.i.i.iii, 188.) 7. அடித்தல்; to thrash.

க. படெ

*[படை → படை-,]*

**படை²** *padai,* பெ. (n.) 1. தானை; army. *"படையியங் கரவம்"* (தொல்.பொ. 58.) 2. மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என்ற அறுவகைப்படை (குறள். 762, உரை.); forces for the defence of a kingdom, of six kinds, viz., mūla-p-paḍai, kūli-p-padai, nāṯṯu-p-paḍai, kāttu-p-paḍai, tuṇai-p-paḍai, pagai-p-paḍai. 3. திரள் (கொ.வ.); mob, rabble, croud. 4. பரிவாரம்; relations and attendants. *'அவன் படைகளுக்கு யார் போட்டு முடியும்'* 5. படைக்கலம்; weapons, arms of any kind. *"தொழுதகை யுள்ளும் படையொடுங்கும்"* (குறள். 828.) 6. கருவி; instrument, implement, tool. *"செல்வத்தைத் தேய்க்கும் படை"* (குறள். 555.) 8. நல்லறிவு, நற்காட்சி, நல்லொழுக்கம் என்னும் முப்பொருள்; (jaina.) triad of excellent things. *"படைமூன்றும்"* (சீவக. 2813.) 9. முசுண்டி (பிங்.); a sledge-like weapon, used in war. 10. கலப்பை (பிங்.); ploughshare. *"படையுழ வெழுந்த பொன்னும்"* (கம்பரா. நாட்டு. 7.) 11. குதிரைக் கலனை; saddle. *"பசும்படை தரீஇ"* (பெரும்பாண். 492.) *"விசும்பு கடப்பன்ன பொலம்படைக்கலிமா"* (நற். 361.) 12. யானைச்சூல்; covering and trappings of an elephant. *"படைநவின்ற பல்களிறும்"* (பு.வெ. 9, 26.) 13. போர் (சது.); battle, contest, war engagement. *"தேசிவன் படைக்கு மேலவை"* (சேதுபு. வேதள. 41.) 14. கல் முதலியவற்றின் அடுக்கு; layer, stratum, as in building a wall; flake. *"படையமை யிட்டிகை"* (பெருங். இலாவாண 5, 41.) *"பொற்படை பொலிந்த"* (சிந்தா. இலக். 56.) 15. செதிள் (வின்.); scale; 16. சமமாய்ப் பரப்புகை; spreading evenly. *"படையமைத் தியற்றிய மடையணிப் பள்ளியுள்"* (பெருங். உஞ்சைக். 43, 186-7.) 17. படுக்கை (பிங்.); bed. *"படையகத் தோங்கிய பல்பூஞ் சேக்கை"* (பெருங். உஞ்சைக். 33, 107.) *"படையமை சேக்கையுட் பாயலினறியாய்நீ"* (கலி. 10.) 18. உறக்கம் (சூடா.); sleep. 19. மேகப்பற்று; ring worm. 20. தெரிநிலை வினைப்பகுதி;

க. படெ

ம. பட து. ப டெ

தெ. படவ, படவலமு தொட. பார்

*[படு² → படை]*

**படை³** *padai,* பெ. (n.) 1. அடிமை; slaves. *"மன்னுயிர்ப் படை பின் தொடர்ந்து"* (கோயிற்பு. இரணிய. வன்ம. 90.) 2. மதிலினடுக்கு; stratum of fort. 3. எய்வன, எறிவன, குத்துவன, வெட்டுவன என்னுந் தொடக்கத்தனவற்றிகுப் பொதுப் பெயர் (தொல். சொல். 46. சேனா.); common name for the weapon.

**படைக்கப்பல்** *paḍai-k-kappal,* பெ. (n.) போர்க்கப்பல்; man-of-war, frigate.

*[படை + கப்பல்]*

**படைக்கம்** *paḍaikkam,* பெ. (n.) சீனவெடி; (இ.வ.); crackers.

உருது. படாகி. ம. படக்கு

*[படை → படைக்கம்]*

**படைக்கருத்தர்** *paḍai-k-karuttar,* பெ. (n.) படைத்தலைவர்; commander of an army. ***"அரிய தன் படைக்கர்த்த ரென்று"*** (திருப்பு. 2.)

*[படை + கருத்தர் ]*

**படைக்கலத்தொழில்** *paḍaikkala-t-toḻil,* பெ. (n.) போரிற் படைக்கலத்தை நன்கு பயன்படுத்துந்தொழில்; the art of handling weapons of war. ***'படைக்கலத் தொழிலமைந்த வீரரையும்'*** (புறநா. 72, உரை.)

*[படைக்கலம் + தொழில்]*

**படைக்கலம்**² *paḍai-k-kalam,* பெ. (n.) 1. போர்க்கருவி (சூடா.); weapons, arms. ***"படைக்கலக் குரவன் மீண்டு போதருமளவில்"*** (திருவிளை. அங்கம். 12.) 2. எறிபடை (வின்.); missile. 3. எஃகு (வின்.); steel.

***[படை + கலம்]***



**படைக்கால்** *paḍai-k-kāl,* பெ. (n.) படைக்காற் பலகை பார்க்க (வின்.); see paḍai-k-kāṟ-palagai.

*[படை + கால்]*

**படைக்காற்பலகை** *paḍai-k-kāṟ-palagai,* பெ. (n.) கலப்பையிற் கொழுவைச் சேர்க்கும் மரப்பகுதி (வின்.); the wooden part of the ploughshare to which the iron coulter is attached.

*[படைக்கால் + பலகை]*

**படைக்கிழவன் சிறுக்கன்** *paḍai-k-kiḻavaṉ-ṡiṟukkaṉ,* பெ. (n.) படையுள்படுவோன் (சிலப். 8, 13, அரும்.) பார்க்க, see paḍai-y-uḷpaḍuvōṉ.

*[படைக்கிழவன் + சிறுக்கன்]*

**படைக்குருவி** *paḍai-k-kuruvi,* பெ. (n.) பெருங்கூட்டமாகச் சேர்ந்து திரியுங் குருவிவகை; a species of bird living in flocks.

*[படை + குருவி]*



**படைக்குழப்பம்** *paḍai-k-kuḻappam,* பெ. (n.) 1. போர்க் குழப்பம் (வின்.); commotion of war. 2. போர்வீரர் தலைவர்க்கடங்காது புரியும் கலகம்; mutiny.

*[படை + குழப்பம்]*

**படைக்கோலம்** *padai-k-kōlam,* பெ. (n.) போர்க்கோலம் (வின்.); warlike costume or accoutrements.

*[படை + கோலம்]*

**படைகல்** *padai-kal,* பெ. (n.) அமுதுபாறை; a large stone slab on which boiled rice is mixed with various ingredients.

*[படை + கல்]*

**படைகூட்டு–தல்** *padai-kūṭṭu-,* 9. செ.கு.வி. (v.i.) படைக்கு ஆள் திரட்டுதல்; to raise an army.

*[படை + கூட்டு]*

**படைச்சனம்** *padai-c-caṉam,* பெ. (n.) போர்வீரர் (வின்.); soldiers; troops.

*[படை + சனம்]*
சனம் = Skt.

**படைச்சாத்து** *padai-c-cāttu,* பெ. (n.) போர்ப்படையின் கூட்டம்; collection of armies. *"நடந்தது பெரும் படைச்சாத்து"* (திருவாலவா. 39, 20.)

*[படை + சாத்து]*

சாத்து = கூட்டம்.

**படைச்சால்** *padai-c-cāl,* பெ. (n.) உழவுசால் (சூடா.); furrow in ploughing.

*[படை + சால்]*

படை = கலப்பை.

**படைச்சி** *padaicci,* பெ. (n.) நீர்க்குறிஞ்சா; swallow root. (சா.அக.)

**படைச்சிறுக்கன்** *padai-c-ciṟukkaṉ,* பெ. (n.) படையுள்படுவோன் பார்க்க (சிலப். 8, 13, அரும்.பக்.224); see paḍaiyaḷ paḍuvōṉ.

*[படை + சிறுக்கன்]*

**படைச்சிறுபிள்ளை** *padai-c-ciṟu-piḷḷai,* பெ. (n.) படையுள்படுவோன் (சிலப். 8, 13, அரும்) பார்க்க, see paḍai-y-uḷ paḍuvōṉ.

*[படை + சிறுப்பிள்ளை]*

**படைச்செருக்கு** *padai-c-cerukku,* பெ. (n.) தானையின் வீரம் (குறள். அதி, 78.); high spirits of soldiers, military ardour.

*[படை + செருக்கு]*

**படைசாற்று–தல்** *padai-šāṟṟu-,* 5. செ.குன்றாவி. (v.t.) போருக்கழைத்தல்; to challenge to battle. *"வாசநீலங் கழுநீர் குவளை படைசாற்றிவந்து"* (சீவக. 1675.)

*[படை + சாற்று]*

**படைசெய்–தல்** *padai-šey-,* 2. செ.கு.வி. (v.i.) போர்புரிதல்; to carry on war. *"சுறவ வேந்து நெடும்படை செய்ய"* (கல்லா. 23, 26.)

*[படை + செய்–,]*

**படைஞர்** *padaiñar,* பெ. (n.) படைவீரர்; soldiers. *"எயிற்படைஞ ரிகன்மிகுத்தன்று"* (பு. வெ. 5, 6, கொளு.)

*[படை → படைஞர்]*

**படைத்தம்பூர்** *padai-t-tambūr,* பெ. (n.) போர்ப்பறை வகை; kettle-drum.

*[படை + தம்பூர்]*

**படைத்தலைத்தெய்வம்** *paḍai-t-talai-t-teyvam,* பெ. (n.) பட்டணவர் மீன் பிடிக்கச் செல்வதற்குமுன் கும்பிடுந் தெய்வம் (தஞ்சை); a sea-god paṭṭaṉavar caste before setting out on a fishing expedition.

*[படை + தலைத் தெய்வம்]*

**படைத்தலைவன்** *paḍai-t-talaivaṉ,* பெ. (n.) அரசர்க்குத் துணையாகிய ஐம்பேராயத் தொருவனாகிய தானைத்தலைவர் (சேனாபதி) (திவா.) (சூடா.) captain, commandes, leader of troops. *"பெரும்படைத்தலைவர்க்குப் பெருஞ்சோறு வகுத்து"* (சிலப்.26,49)

*[படை + தலைவன்]*

**படைத்தவன்** *paḍaittavaṉ,* பெ. (n.) **1.** நான்முகன்; brahma. **2.** கருத்தா; (யாழ்.அக.) agent. **3.** தந்தை (யாழ்.அக.); father.

க. படெதவனு;

**படைத்துக் கோட்பெயர்** *paḍaittu-k-kōṭ-peyer,* பெ. (n.) கூத்தில் நடனுக்கு இட்டுவழங்கும் பெயர்; name assumed by an actor in a drama. ***"இவர்க்குப் படைத்துக் கோட்பெயரிடுவான்"*** **(சிலப். 17, பக். 443.)**

***[படை + கொள் + பெயர்]***

**படைத்துணை** *paḍai-t-tuṇai,* பெ. (n.) **1.** போருதவி; aid in battle **2.** போரில் உதவுவோன்; ally in war. ***"பாண்டவர் தங்கட் கல்லாற் படைத்துணையாக மாட்டான்"*** (பாரத. வாசுதேவன். 6.)

*[படை + துணை]*

**படைத்துமொழி-தல்** *paḍaittu-moḻi-,* **2.** செ.குன்றாவி. v.t. ஒன்றனை ஏறிட்டுச் சொல்லுதல்; (akap.) to concoat, make flase statements. *'அவற்றைச் செய்யப்பட்டனவாக* C¥XÒ% TÛP†% ÙUÖ³ <RÛ UVÖ¥ ' (இறை. 12, 86.)

*[படைத்து + மொழி]*

**படைத்தோன்** *paḍaittōṉ,* பெ. (n.) படைத்தவன் (சூடா.) பார்க்க, see paḍaittavaṉ. ***"படைத்தோன் மன்றவப் பண்பிலாளன்"*** (புறநா. 194,5)

*[படைத்தவன் → படைத்தோன்]*

**படைதுரத்தும்ராசன்** *paḍaiturattum rāšaṉ,* பெ. (n.) வெடியுப்பு; nitre. (சா.அக.)

*[படை + துரத்தும் + ராசன்]*

**படைநர்** *paḍainar,* பெ. (n.) தானைவீரர்; soldiers. ***"படைநரைப் பயிர்ந்து"*** (பெருங். இலாவாண. 8, 100.)

*[படை → படைநர்]*

**படைநாயகம்** *paḍai-nāyagam,* பெ. (n.) **தானைத்தலைமை** (s.i.i. vii, 49.); command of the army.

*[படை + நாயகம்]*

**படைநாள்** *paḍai-nāḷ,* பெ. (n.) படையெழுச்சி நாள்; the day expedition of an army. ***"திருநாள் படைநாள் கடிநாளென்று"*** (பெருங். இலாவாண. 2, 32.)

*[படை + நாள்]*

**படைநிலை** *paḍai-nilai,* பெ. (n.) படையாளர் மகளிருடன் தங்குமிடம் (பதிற்றுப். 13, 21, உரை.); barracks.

*[படை + நிலை]*

**படைப்பணம்** *padai-p-paṇam,* பெ. (n.) வரிவகை; (I.M.P.Tv. 40, A.B.) an ancient tax.

*[படை + பணம்]*

**படைப்பவுஞ்சு** *padai-p-pavuñju,* பெ. (n.) படையொழுங்கு (வின்.); battle array.

*[படை + பவுஞ்சு]*

பவுஞ்சு = Skt.

பவிஷு → பவுஞ்சு

**படைப்பற்று** *padai-p-paṟṟu,* பெ. (n.) 1. பாளையம்; military station. 2. **மேகப்படை** (இ.வ.) ringworm.

*[படை + பற்று]*

**படைப்பறியன்** *padaippaṟiyaṉ,* பெ. (n.) பேராமுட்டி; fragrant sticky mallow. (சா.அக.)

*[படை + பறியன்]*

**படைப்பியம்** *padaippiyam,* பெ. (n.) கடவுளுக்குப் படைக்கப்படும் பொருள்கள் (பிரசாதம்); offerings.

*[படைப்பு → படைப்பியம்]*

இயம் = சொல்லாக்க ஈறு.

**படைப்பு** *padaippu,* பெ. (n.) 1. படைப்புத் தொழில்; creation. *"படைப்பொடு கெடுப்புக் காப்பவன் பிரம பரம்பரன்"* (திவ். திருவாய். 8, 4, 9) 2. படைக்கப்பட்டது (சங்.அக.); that which is created. 3. பெறுகை; acquiring, possessing. *"படைப்பருங் கற்பினாள்"* (சீவக. 555.) 4. செல்வம்; wealth. *"வாழிய பெருமநின் வரம்பில் படைப்பே"* (புறநா. 22.) 5. காணிக்கையாகப் படைத்தல்; (கொ.வ.) offering of food as to a god. 6. உணவு பரிமாறுகை (இ.வ.); serving of food. 7. காடு; forest. *"கற்பகக் கோடு கொண்டதனையும் படைப்பையும்"* (துக்கயாகப். 655.)

*[படை → படைப்பு]*

**படைப்புவரி** *padaippu-vari,* பெ. (n.) இசைப் பாட்டுவகை (சிலப். 7,4—ஆம் பாட்டு, உரை.); a kind of musical composition in which all the various elements are represented.

*[படைப்பு + வரி]*

**படைப்பேயன்** *padai-p-pēyaṉ,* பெ. (n.) துவரை; red gram. (சா.அக.)

**படைப்போன்** *padaippōṉ,* பெ. (n.) நான்முகன் (திவா.); Nāṉmugaṉ. *"முழுவதும் படைப்போற் படைக்கும் பழையோன்"* (திருவாச. 3, 13.)

*[படைப்பு → படைப்போன்]*

**படை பண்டாரம்** *padai-paṇḍāram,* பெ. (n.) 1. சேனையும் அதன் தளவாடமும் (வின்.); army and its appendages. 2. அரசியற்சுற்றம்; dependants and servants.

*[படை + பண்டாரம்]*

**படைபண்ணு-தல்** *padai-paṇṇu-,* 11. செ.கு.வி. (v.i.) படைசெய் - பார்க்க; see padai-šey. *"பஞ்சு கொண்டான் என்கிறவரிருந்து படைபண்ணி அவர்களை நிறுத்த"* (கோயிலொ. 22.)

*[படை + பண்ணு-,]*

**படைபோ–தல்** *padai-pō-,* 9. செ.கு.வி. (v.i.) போர்க்குப் போதல்; to go on an expedition. *"படைபோன பேய்"* (தக்கயாகப் 241.)

*[படை + போ–,]*

**படைமடம்** *padai-madam,* பெ. (n.) அறப்போர் நெறியினின்றும் மாறுபடுகை; violation of the laws of war, such as attacking those who flee, slaying the wounded, etc. *"படைமடம் படான் பிறர் படைமயக் குறினே"* (புறநா. 142.)

*[படை + மடம்]*

[படைமடம் என்றது, வீரரல்லாதார் மேலும், முதுகிட்டார் மேலும் புண்பட்டார் மேலும் மூத்தார், இளையார் மேலும் செல்லுதல் (உரைவி.)]

**படைமயிர்** *padai-mayir,* பெ. (n.) பாவாற்றி; brush or fibrous stick, used to clean and separate the threads of woof. *"நாடா துரீ அல்லது நூற்பாத் திருத்தும் படைமயிர்"* (விசாரசா. 72.)

*[படை + மயிர்]*

**படைமரம்** *padai-maram,* பெ. (n.) நெசவுக் கருவிவகை (சங்.அக.); weaver's beam, weaver's rod for arranging the warp.

*[படை + மரம்]*

**படைமறுத்தல்** *padai-maruttal,* பெ. (n.) கீழறுக்கை (பிங்.); disloyalty or treachery of an army.

*[படை + மறுத்தல்]*

**படைமுகம்** *padai-mugam,* பெ. (n.) 1. படையின் முன்பகுதி; front or van of an army. 2. போர்த் தொடக்கம்; onset or meeting of armies in battle. *'படைமுகத்தில் ஒப்பாரியா?'* (வின்.)

*[படை + முகம்]*

**படைமுறிவாள்** *padaimurivāl,* பெ. (n.) கொசு; mosquito (சா.அக).

*[படை + முறிவாள்]*

**படைமூர்க்கன்** *padaimūrkkan,* பெ. (n.) வாணகெந்து; (கந்தகம்) gunpowder. (சா.அக.)

மறுவ: படைக்கரசன்

**படையணி** *padai-y-ani,* பெ. (n.) தீப்பந்தம் வைத்துக்கொண்டு ஆடும் ஆட்டவகை (நாஞ்); a kind of dance with torch-light in hand.

*[படை + அணி]*

**படையர்** *padaiyar,* பெ. (n.) போர்ப்படைகளை யுடையவர்; those who maintain armies. *"மண்மேற் படையராய் வாழ்வார் பயின்று"* (ஏலா. 53.)

க. படையர்.

*[படை → படையர்]*

**படையல்** *padaiyal,* பெ. (n.) 1. காணிக்கை யாக்கும் உணவு; offering. 2. அடிக்கும் அடி; beating, used in burlesque. *படையல் போட்டான்*

*[படை → படையல்]*

**படையழிவு** *padai-y-alivu,* பெ. (n.) பயிர்களுக்குப் போர் வீரரால் உண்டாகுஞ் சேதம்; (Pudu. insc. **323.**) crops destroyed by the march of troops.

*[படை + அழிவு]*

**படையறு[1]–தல்** *padai-y-aru-,* **4.** செ.கு.வி. (v.i.) கீழ்ப்பட்டு அடங்குதல் (ஈடு, **1, 9, 9,** ஜீ.); to become subordinate or submissive.

*[படை + அறு–,]*

**படையறு[2]–தல்** *padai-y-aru-,* **4.** செ.கு.வி. (v.i.) வலிமையிழத்தல்; to become powerless. ***"விரோதித்த இந்திரியங்களும் உன் பக்கலிலே படையற்றன"*** (ஈடு, **2, 7, 9.**)

*[படை + அறு–,]*

**படையறு[3]–த்தல்** *padai-y-aru-,* **4.** செ. குன்றா வி. (v.t.) **1.** கீழறுத்தல் (பிங்.); to behave treacherously, as an army. ***'வினைத் தலையில் படையறுக்குமா போலே'*** (ஈடு, **7, 3, 4.**) **2.** கவர்தல்; to captivate; ***'அவனைப்படையறுத்துக் கொள்ளுகிறேன் என்றாயிற்று'*** (ஈடு, **9, 1, 5**)

*[படை + அறு–,]*

**படையன்** *padaiyan,* பெ. (n.) **1.** படையல்; offering. **2.** அடிமை (சங்.அக.); slave.

*[படை → படையன்]*

**படையாச்சி** *padaiyacci,* பெ. (n.) படையாட்சி, **3.** பார்க்க, see padai-y-ātci, **3.**

*[படை → படையாட்சி → படையாச்சி]*

**படையாட்சி** *padai-y-ātci,* பெ. (n.) **1.** படை வீரர்; soldiers, warrior. **2.** வீரச்செயல்; acts of bravery, as of a soldier. ***"பாண்டி நன்னாடுடையான் படையாட்சிகள்"*** (திருவாச. **49, 1.**) **3.** வன்னியர், சவளைக்காரர் இவர்க்குள் வழங்கும் பட்டப்பெயர்; title of the vanniyar cavaḷaikkārar etc.

*[படை + ஆள் + சி]*

**படையாள்** *padai-y-āl,* பெ. (n.) படையாளன் பார்க்க; see padāi-y-āḷan. ***"படை யாளென்று புல்லி யருளொடுந் திருக்கைச் சிறப்பு மிட்டுப் போவென்று விடை கொடுப்ப"*** (திருவாலவா. **39, 4.**)

க. படெய்ல

*[படை → ஆள் → படையாள்]*

**படையாளன்** *padai-y-āḷan,* பெ. (n.) போர் வீரன் (பிங்.); soldier. ***'நின் படையாளர்கள் மகளிரொடு உறையும் படைநிலைகளாயின'*** (பதிற்றுப். **13, 21,** உரை.)

க. படெவல

*[படை + ஆளன்]*

**படையிராசன்** *padai-y-irāšan,* பெ. (n.) வெடியுப்பு (மூ.அ.); saltpetre.

*[படை + இராசன்]*

**மறுவ:** படையுப்பு, படையோன், படைதுரத்தும்ராசன்.

**படையிலார் முறைமை** *padaiyilār muraimai,* பெ. (n.) ஒரு பழைய வரி (s.i.i.ii, **115.**); a kind of tax.

*[படை + இலார் + முறைமை]*

**படையிறங்கு–தல்** *padai-y-irangu-,* செ.கு.வி. (v.i.) பாளையந்தங்குதல் (வின்.); to encamp with one's army, as a king.

*[படை + இறங்கு]*

**படையுடன்படாமை** *padai-y-udanpadāmai,* பெ. (n.) போர்க்கருவியெடேன் என்று வரைந்து கொள்ளுகை; determination not to take up arms in future. *"கொடை மடம்படுதல் படையுடன் படாமை"* (ஞானா. 17, 25.)

*[படை + உடன்படாமை]*

**படையுள்படுவோன்** *padai-y-ul paduvōn,* பெ. (n.) சின்னமூதி; royal herald who proclaims the kings commands to his army with trumpets. *"படையுள் படுவோன் பணிமொழி கூற"* (சிலப். 8, 13.)

*[படை + உள்படுவோன்]*

**படையுறை** *padai-y-urai,* பெ. (n.) படைக்கருவி உறை; sheath, as of a sword.

*[படை + உறை]*

**படையெடு-த்தல்** *padai-y-edu-,* 4. செ.கு.வி. (v.i.) தன்படையுடன் பகைப்புலத்தின் மேற் செல்லுதல்; to invade, lead a military expedition. *"பஞ்சவன்மேற் படையெடுத்துச் செல்வேன்"* (திருவிளை. மெய்க்காட். 4.)

*[படை + எடு-,]*

**படையெழுச்சி** *padai-y-elucci,* பெ. (n.) படையெழுகை; military expedition.

*[படை + எழுச்சி]*

**படையோலை** *padai-y-ōlai,* பெ. (n.) தோலுரிக்காத பனம்பழங்களை வைக்க உதவும் பனையோலை (வின்.); palmyra leaf or leaves on which the fruits of the palmyra are kept when they are unhusked.

*[படை + ஓலை]*

**படைலோகம்** *padailōgam,* பெ. (n.) 1. சிப்பி; oyster shell. 2. பேய்ப்புடோல்; wild snake gourd. (சா.அக.)

**படைவகுப்பு[1]** *padai-vaguppu,* பெ. (n.) படையின் அணி வகுப்பு; military array.

*[படை + வகுப்பு]*

படைவகுப்பு இடத்திற்கேற்பத் தண்டம், மண்டலம், சக்கரம் சகடம் (தேர்) தாமரை முதலிய பல்வேறு வடிவில் அமைக்கப் பெறுவதாகும். படையுறுப்புகள் நெற்றி, தார் (தூசி) கை, பேரணி, கூழை என ஐந்தாம்.

> *"தூசியுங் கூழையும் நெற்றியும் கையும் அணியுமென்ப தப்படைக் குறுப்பே"* (பிங்.403)

> *"கூழையென்பது பேரணியாகும்"* (பிங்.404)

> *"தாரே முன்செல் கொடிப்படையாகும்"* (பிங்.405)

நெற்றியென்பது தாரின் முற்பகுதியும், கை என்பது படைவகுப்பின் இருபக்கமும், கூழையென்பது பேரணியின் பிற்பகுதியும் போலும்!

*"படைவகுப்பாவது வியூகம் அஃது எழுவகை யுறுப்பிற்றாய் வகையால் நான்காய், விரியால் முப்பதாம்; உறுப்பேழாவன உரமுதற்கோடி யீறாயின; வகை நான்காவன தண்டம், மண்டலம், அசங்கதம், போகமென இவை. விரிமுப்பதாவன தண்டவிரி பதினேழும், மண்டலவிரி இரண்டும் அசங்கதவிரி ஆறும், போகவிரி ஐந்துமென இவை. இவற்றின் பெயர்களும் இலக்கணமும் ஈண்டுரைப்பின் பெருகும். அவையெல்லாம் வடநூல்களுள் கண்டு கொள்க."* என்று பரிமேலழகர் பண்டைத்தமிழ் மறநூல்கள் இறந்துபட்டபின், அவற்றின் விரிவும் திரிபுமான வடநூல் முறையைத் தென்னாட்டிற்குரியதாகக் கூறியிருப்பது பெருந்தவறாம் (-பாவாணர். திருக்.மரபு.767,உரை.)

**படைவகுப்பு**[2] *paḍai-vaguppu,* பெ. (n.) 1. தூசி; dust. 2. நெற்றி; fore head. (சா.அக.)

*[படை + வகுப்பு]*

**படைவட்டம்** *paḍai-vaṭṭam,* பெ. (n.) வளைதடி (நாமதீப. 418); curved club, a weapon.

*[படை + வட்டம்]*

**படைவரம்** *paḍai-varam,* பெ. (n.) குதிரைச் சேணம் (வின்.); saddle for a horse.

**படைவழக்கு** *paḍai-vaḻakku,* பெ. (n.) தம்மில் இனமொத்த படைவீரர்க்கு அரசன் படை வழங்குதலைக் கூறும் புறத்துறை (புறப். வெ. 4, 4.); a minor theme which describes a king as presenting weapons to soldiers of equal rank.

*[படை + வழக்கு]*

**படைவாணம்** *paḍai-vāṇam,* பெ. (n.) மேலெழுந்து சீறிப் பாயும் வெடி வகை (வின்.); rocket.

*[படை + வாணம்]*

**படைவாத்தியம்** *paḍai-vāttiyam,* பெ. (n.) < போருக்குப் போம்போது வழங்கும் இசைப்பாட்டு (வின்.); martial music.

*[படை + வாத்தியம்]*

**படைவாள்** *paḍai-vāḷ,* பெ. (n.) 1. கலப்பைக் கொழு; ploughshare, *"நந்தினக் குழுவும்.... கணத்தர் படைவாள் நிறுத்தும்"* (கல்லா. 59, 20.) 2. கலப்பை (சூடா.); plough.

*[படை + வாள்]*

**படைவீடு** *paḍai-vīḍu,* பெ. (n.) 1. பாசறை; encampment, soldier quarters in an encampment. 2. தலைநகரம்; capital. *"வித்தக வீரன் விறற்படைவீடு"* (பெருங். உஞ்சைக். 57, 117.) (ஈடு.) 3. படைக்கொட்டில்; armoury, arsenal, magazine, 4. திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், பழமுதிர்சோலை, குன்றுகள் என்ற அறுவகைப்பட்ட குமரக்கடவுளிருப்பிடம் (திருமுரு.); the six shrines of Muruga, viz., Tirupparaṅguṉṟam, Tiruccīralaivāy, Tiruvaviṉaṉgudi, Tiruvēraga, Paḻamudiršolai Kuṉrugaḷ.

*[படை + வீடு]*

**படைவீரன்** *paḍai-vīran,* பெ. (n.) போர்வீரன்; warrior, soldier. *"வெஞ்சினப்படை வீரரை யுடன் கொண்டு மீண்டான்"* (கம்பரா. தானைகாண். 29.)

*[படை + வீரன்]*

**படைவெட்டு** *paḍai-veṭṭu,* பெ. (n.) போர்க் காயம் (வின்.); wound received in battle.

*[படை + வெட்டு]*

**படோல்** *paḍōl,* பெ. (n.) படோல்ராசி (தைலவ. தைல.) பார்க்க.; see paḍōl-rāši.

**படோல்ராசி** *paḍōl-rāši,* பெ. (n.) பேய்ப்புடல் (மலை.); wild snake gourd.

**படோலகம்** *paḍōlagam,* பெ. (n.) சிப்பி (சங்.அக.); shell.

**படோலம்** *paḍōlam,* பெ. (n.) முள்ளுவெள்ளரி (சா.அக.); foreign cucumber.

**படோலி** *padōli,* பெ. (n.) சொக்காக்கீரை (சா.அக.); a kind of edible green.

**படோலிகை**[1] *padōligai,* பெ. (n.) 1. ***புடல்*** பார்க்க; see *pudal.* 2. ***வெள்ளரி*** (மலை.); பார்க்க, see *vellari.* cucumber.

*[படோல் → படோலிகை]*

**படோலிகை**[2] *padōligai,* பெ. (n.) நிலவு (சா.அக.); moon.

**படோலுகை** *padōlugai.* பெ. (n.) புடல் (சா.அக.); snakegourd.

**பண்**[1] *pan,* பெ. (n.) 1. இசை; melody type. ***"பண்ணென்னாம் பாடற் கியைபின்றேல்"*** (குறள். 573.) 2. ஏழுசுரமுள்ள இசை; (mus.) primary melody type, hepta tonic. "பண்ணுந் திறனும்" பெருங். வத்தவ 3, 50 3. இசைப்பாட்டு (பிங்.); music; 4. யாழ் முதலிய நரம்புக் கருவிகள்; a stringed musical instrument. ***"பண்கெழுமெல் விரலால்"*** (சீவக. 220.) 5. கூத்துவகை (சங்.அக.); a masquerade dance. 6. ஓசை; sound. ***"பண்ணமை சிலம்பு"*** (சிலப். பதிகம். 18.) 7. குதிரைக் கலனை (பிங்.); saddle for a horse. ***"பண்ணியல் வயப்பரி"*** (கம்பரா. வரைக்காட்சி. 13.) 8. ஒப்பனை; decoration. ***"பெரிய திருவடியைப் பண்செய்து"*** (ஈடு. 6, 2, ப்ர.) 9. யானை குதிரைகட்குச் செய்யும் ஒப்பனை; trappings of an elephant or horse. ***"கொய்யுளைமா கொல்களிறு பண்விடுக"*** (பு. வெ. 6, 2.) 10. குதிரை முதலியவற்றின் நடை(கதி); gait, as of a horse. ***"பண்ணமர மாச்செலுத்தும் பாகரினும்"*** (சி. போ. 10, 2, 4.) 11. தேர்க்குச் செய்யும் அணியழகு; fittings and decoration of a car. ***"பண்ணமைந்த தேரும்"*** (பு. வெ. 9, 26.) 12. தகுதி (வின்.) ; fitness, adaptation, good quality, suitableness. 13. அமைவு (வின்.); docility, training. (naut.) 14. மரக்கலத்தின் இடப்பக்கம் (வின்); larboard side of a dhoney. 15. ***பண்கயிறு*** பார்க்க; see *pankayiru.* 16. பருவம்; time, season. 17. தொண்டு; service, work, business, employment. 18. நீர்நிலை; tank. ***"பண்குலவத் தாலமிசை நடித்து"*** (குற்றா. தல: திருநதிச். 12.) (அக.நி.)

*[பள் → பண்]*

(செல்வி, '75, சித். பக் 431,36)

**பண்**[2] *pan,* பெ. (n.) வயல்; (M.E.R. 12 of 1923.) land, field.

*[பண்ணு → பண்]*

**பண்கயிறு** *pan-kayiru,* பெ. (n.) தோணியின் இடப்பக்கத்துப் பாய்மரக் கயிறு; larboard stay-rope of a dhoney. (naut.)

*[பண் + கயிறு]*

**பண்குறுணி** *pan-kuruni,* பெ. (n.) வரிவகை (M.E.R. 442 of 1925); a tax.

*[பண் + குறுணி]*

**பண்கொடி** *pan-kodi,* பெ. (n.) பிரப்பங்கொடி. (மூ.அ.); came or rattan used for wattling or wicker work, osier, long switch.

*[பண்ணுகொடி → பண்கொடி]*

**பண்செய்-தல்** *pan-šey-,* செ. குன்றாவி (v.t.) 1. பண்படுத்துதல் (சங்.அக); to prepare, as the ground; to make fit for cultivation. 2. ஒப்பனை செய்தல்; to decorate. *'பெரிய திருவடியைப் பண்செய்து'* (ஈடு.6,2, ப்ர)

*[பண் +செய்-,]*

**பண்டக்கலம்** *paṇḍa-k-kalam,* பெ. (n.) பொன் அணிகலன்; gold ornament. *"பண்டக் கலம்பகர் சங்கமன் தன்னை"* (மணிமே. 26, 23.)

*[பண்டம்[1] + கலம்]*

**பண்டக்காரன்** *paṇḍa-k-kāraṉ,* பெ. (n.) 1. செல்வமுள்ளவன் (வின்.); rich man. 2. பண்டத்துக்குரியவன் (கொ.வ.); owner of goods.

*[பண்டம் + காரன்]*

**பண்டகசாலை** *paṇḍaga-šālai,* பெ. (n.) *பண்டசாலை* (யாழ்.அக.) பார்க்க; see, *paṇḍašālai.*

*[பண்டசாலை → பண்டகசாலை]*

**பண்டகம்** *paṇḍagam,* பெ. (n.) பெருமூங்கில்; thick or stout bamboo. (சா.அக.)

**பண்டகன்** *paṇḍagaṉ,* பெ. (n.) அலி; eunuch. *"பண்டக னோர்நின்று வினவ"* (சேதுபு. அனு. 13.)

*[பெண்டு → பெண்டகன் → பண்டகன்]*

**பண்டகாசினி** *paṇḍakāšiṉi,* பெ. (n.) பரத்தை (யாழ்.அக.); harlot, prostitute.

**பண்டகாரி** *paṇḍakāri,* பெ. (n.) கருவூலக் காரன்; treasurer. *"விரும்பி வந்தடைந்த பண்டகாரிக்கு வேறு சொன்னாள்"* (மேருமந். 285.)

*[பண்டாரி → பண்டகாரி]*

**பண்டகி** *paṇḍagi,* பெ. (n.) 1. பெருந்திப்பிலி; elephant long pepper climber. 2. சேம்பு; indian kale. (சா.அக.)

**பண்டகிரி** *paṇḍagiri,* பெ. (n.) வல்லாரை; (சா.அக.) Indian penny wort.

**பண்டந்தாங்கி** *paṇḍan-tāṅgi,* பெ. (n.) பண்டங்களை வைக்க உதவும் மிசை முதலியன (இ.வ.); table, shelf of other article of furniture used as a stand.

*[பண்டம் + தாங்கி]*

**பண்டப்பேழை** *paṇḍa-p-pēḻai,* பெ. (n.) சமையற் பொருள்களை வைக்கும் பண்டந்தாங்கி (புதுவை); dresser.

*[பண்டம் + பேழை]*

**பண்டபாத்திரம்** *paṇḍa-pāttiram,* பெ. (n.) பொருள், ஏனம், முதலியவை; household things or articles. *"உடனடியாக வீட்டை யொழித்துக் கொடுக்கச் சொன்னால் பண்டபாத்திரங்களைத் தூக்கிக் கொண்டு எங்கே போவது?"*

*[பண்டம் + பாத்திரம்]*

**பண்டம்[1]** *paṇḍam,* பெ. (n.) 1. பொருள்; substance, article, store, provision. *'அப்பண்டஞ் சால மிகுத்துப் பெயின்'* (குறள்,475.) 2. ஏனம் முதலியன (வின்.); materials; utensils. 3. பணியாரம் (பிங்); cake. 4. பயன்; profit, advantage. *"பாதம் பணிவார்கள்பெறு பண்டம்மது பணியாய்"* (தேவா.1001,5) 5. பொன் (பிங்); gold. 6. செல்வம்; wealth, riches. "நீதியான பண்டமாம் பரம சோதி" (திவ். திருக்குறுந்.11) 7. ஆடுமாடுகள்; cattle. 8. உண்மை; truth, certainly. *"பரலோகத்திலிருப்பது பண்டமன்றே"* (தேவா.187,10)

தெ. பண்டமு. க. பண்ட ம. பண்டம்

*[பண் → பண்டு → பண்டம்]*

*(வ. மொ. வ. பக். 29.)*

**பண்டம்²** *pandam,* பெ. (n.) 1. வயிறு (யாழ்.அக.); belly. 2. உடல் (சங்.அக.); body.

*[பண்டு → பண்டம்]*

**பண்டம்³** *pandam,* பெ. (n.) பழம்; fruit. "*ஒல்குதீம் பண்டம் பெய்தொழுகும் பண்டியும்*" (சீவக.62)

தெ. பண்டு

*[பண்டு → பண்டம்]*

**பண்டம்பாடி** *pandam-pādi,* பெ. (n.) கொண்டு செல்லத்தக்க உடைமைப் பொருள்கள்; goods and chattels.

*[பண்டம் + பாடி]*

**பண்டமண்டலி** *panda-mandali,* பெ. (n.) வெள்ளைச் சாரணை; white shauranay. (சா.அக.)

*[பண்டம் + மண்டலி]*

**பண்டமாற்று** *panda-māṟṟu,* பெ. (n.) ஒரு பொருளைக் கொடுத்து (தேவையான) மற்றொரு பொருளைப் பெறுதல்; exchange of goods for goods barter "*அரிசி கொடுத்துக் கீரை வாங்குவது பண்டமாற்று முறைதான்*". "*கங்கை நதிப் புரத்துப் கோதுமைப் பண்டம் காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்வோம்.*" (பாரதி)

*[பண்டம் + மாற்று]*

**பண்டர்** *pandar,* பெ. (n.) கீழ்மக்களுள் பாடும் வகுப்பினர்; (திவா.); bards singers of a low caste. "*பண்டர் குழுக்களுங் குலைகுலைந்திட*" (திருவிளை.விறகு.48.)

*[பண் → பண்டர்]*

**பண்டர்²** *pandar,* பெ. (n.) அசுரர்; asuras, as wicked. "*அமரருக்கிடர் கூரும் பண்டர்கள்*" (திருப்பு. 786.)

*[ஒருகா. பண்டி → பண்டர்]*

தெ. பண்ட.

**பண்டரங்கம்** *pandarangam,* பெ. (n.) *பாண்டரங்கம் பார்க்க,* (அகநி.); a dance of sivan. see *pāndarangam.*

*[பாண்டரங்கம் → பண்டரங்கம்]*

**பண்டரங்கன்** *pandarangan,* பெ. (n.) சிவபிரான்; **šivan**. as dancing the pāndarangam dance "*பசுபதீ பண்டரங்கா வென்றேனானே*" (தேவா.297,6.)

*[பாண்டரங்கம் → பாண்டரங்கன் → பண்டரங்கன்]*

**பண்டவறை** *panda-v-arai,* பெ. (n.) *பண்டசாலை* பார்க்க, (யாழ்.அக.) see pandašalai.

தெ. பண்டருவு

*[பண்டம் + அறை]*

**பண்டவாளம்** *panda-vālam,* பெ. (n.) 1. கைம்முதல்; stock, capital, funds, means. 2. பல்பண்டம் (வின்.); different kinds of articles. 3. உள்ள நிலைமை; true condition, traits of character. '*அவன் பண்ட வாளம் வெளியாயிற்று*'

தெ. பண்டவாலமு. க. பண்டவாள

*[வண்டவாளம் → பண்டவாளம்]*

**பண்டவெட்டி** *paṇḍa-veṭṭi,* பெ. (n.) வரிவகை; (S.I.I.V,365) a tax.

*[பண்டம் + வெட்டி]*

**பண்டறிசுட்டு** *paṇḍari-cuṭṭu,* பெ. (n.) முன்னமே யறிந்ததைக் குறிக்குஞ்சுட்டு; demonstrative root referring to what is previously known. *'அதுவே பண்டறிசுட்டு'* (இறை. 2, உரை.பக்.24.)

*[பண்டறி + சுட்டு]*

**பண்டன்** *paṇḍaṉ,* பெ. (n.) ஆண்மையில்லாதவன்; impodent man. (சா.அக.)

*[பெண்டன் → பண்டன்]*

**பண்டனம்** *paṇḍaṉam,* பெ. (n.) **1.** போர்; battle, fighting, warfare. **2.** கவசம்; armour.

**பண்டாக்கள்** *paṇḍākkaḷ,* பெ. (n.) இராமேசுவரம் முதலிய தலங்களில் வழிப்போக்கர்க்கு உதவிசெய்யும் பார்ப்பனச் சடங்காசிரியர் (புரோகிதர்); a class of brahmin Priests who assist pilgrims, as in Rāmēšvaram.

க. பண்ட

*[பண்டாரம் → பண்டா + கள்]*

**பண்டாகி** *paṇḍāgi,* பெ. (n.) **1.** கத்தரி; brinjal **2.** சேம்பு (மலை.); indian kales.

*[பண்டாங்கி → பண்டாகி.]*

**பண்டாங்கி** *paṇḍāṅgi,* பெ. (n.) சிறுவழுதலை என்னும் கத்தரிக்காய் வகை; wild brinjal. (சா.அக.)

**பண்டாடுபழநடை** *paṇḍāḍu-paḻa-naḍai,* பெ. (n.) தொன்றுதொட்டு வரும் வழக்கம்; ancient, immemorial custom. *"பண்டாடு பழநடை இறுத்து வந்த தாத்திலே"* (S.I.I.V,142)

*[பண்டு + ஆடு + பழநடை]*

**பண்டாரக்கண்காணி** *paṇḍāra-k-kaṇkāṇi,* பெ. (n.) கருவூல அலுவலர்; treasury officer. *"விற்குமிடத்துப் பண்டாரக்கண்காணி புறப்பட்டு நிலை நிச்சயித்து"* (S.I.I.VII,42)

*[பண்டாரம் + கண்காணி]*

**பண்டாரக்கல்** *paṇḍāra-kal,* பெ. (n.) அரசுக் கருவூலத்தில் பயன்படுத்தும் நிறை; (S.I.I.III, 295) weight used by the government treasury.

*[பண்டாரம் + கல்]*

**பண்டாரக்காரியம்** *paṇḍāra-k-kāriyam,* பெ. (n.) அரசு அலுவல்; govt. business.

*[பண்டாரம் + காரியம்]*

பண்டாரம் = அரசு

காரியம் = Skt.

**பண்டாரக்குரு** *paṇḍāra-k-kuru,* தோன்றியக் குரு (ஆகமக்குரு) (யாழ்.அக.); priest who teaches Agamās.

*[பண்டாரம் + குரு]*

**பண்டாரச்சொம்** *paṇḍāra-c-com,* பெ. (n.) பொதுச்சொத்து (வின்.); public property, property of the state or commonwealth.

*[பண்டாரம் + சொம்]*

**பண்டார சந்நிதி** *paṇḍāra šannidi,* பெ. (n.) 1. சிவமடத்தின் தலைமைத் துறவி; the chief of the šaiva mutts of the non-brahmins. 2. திருமடத்துப் பெரியார்களின் சமயமெய்நூல் ஆய்வுக் கூடம் (யாழ்.அக.); šaiva mutts where šastraic discussions are held.

*[பண்டாரம் + சந்நிதி]*

சந்நிதி = Skt.

**பண்டார சாத்திரம்** *paṇḍāra-šāttiram,* பெ. (n.) திருவாவடுதுறை மடவளாகத்துத் துறவிகளியற்றினவாகிய மூன்று தசகாரியம், சன்மார்க்க சித்தியார், சிவாச்சிரமத் தெளிவு, சித்தாந்தப்பஃறொடை, சித்தாந்த சிகாமணி உபாய நிட்டை வெண்பா, உபதேச வெண்பா, நிட்டை விளக்கம், அதிசயமாலை, நமச்சிவாயமாலை, உபதேசப்பஃறொடை, பஞ்சாக்கரப் பஃறொடை என்ற 14 சிவனிய மெய்ந்நூல்கள்; treatises on šaiva siddhānda based on the mey-kaṇḍa-šāttiram, 14 in number, written by the ascetics of ādiṉam Triuvāvaḍuturai viz., the three tašakāriyams by different authors. šaṉmā-rkka-šittiyār, šivāc-cirarma-teḷivu, šittanta-p-pakṟodai, šittānda šigāmaṇi upayarittai-veṇpa, upatēca-veṉpa, niṭṭaivilakkam, aticaya-mālai, nama-c-šivāya mālai, upatēša-p-pakṟoḍai pañjākkara-p-pakṟoḍai.

*[பண்டாரம் +* Skt. sāstrā> *த.சாத்திரம்]*

**பண்டாரத்தி** *paṇḍāratti,* பெ. (n.) பண்டாரச் சாதிப்பெண் (யாழ்.அக.); woman of the paṇḍāram class.

*[பண்டாரம் → பண்டாரத்தி]*

'இ' பெண்பாலீறு

**பண்டாரத்தீவட்டி** *paṇḍāra-t-tivaṭṭi,* பெ. (n.) *பண்டார விளக்கு* பார்க்க, (நாஞ்.); see *paṇḍāra viḷakku.*

*[பண்டாரம் + தீவட்டி]*

**பண்டாரத்தெரு** *paṇḍāra-t-teru,* பெ. (n.) அரசவீதி (யாழ்.அக.); kings high-road.

*[பண்டாரம் + தெரு]*

**பண்டாரத்தோப்பு** *paṇḍāra-t-tōppu,* பெ. (n.) அரசுத் தோட்டம் (வின்.); government garden.

*[பண்டாரம் + தோப்பு]*

**பண்டாரநாழி** *paṇḍāra-nāḻi,* பெ. (n.) கோயிலிலுள்ள ஒருவகையளவு; (S.I.I.V, 225) a kind of measure used in temples.

*[பண்டாரம் + நாழி]*

**பண்டாரப்பிள்ளை** *paṇḍāra-p-piḷḷai,* பெ. (n.) காவல் துறை அதிகாரியின் ஏவலாள் (யாழ்ப்.); attendant of a native officer of police.

*[பண்டாரம் + பிள்ளை]*

**பண்டாரம்[1]** *paṇḍāram,* பெ. (n.) 1. கருவூலம்; stores, wares, treasure. *"தன்னடியவர்க்கு மூலபண்டாரம் வழங்குகின்றான் வந்து முந்துமினே"* (திருவாச.36,5.) 2. கருவூலச் சாலை; public treasury, repository. *"பண்டாரங் காமன் படையுவள் கண்காண்மின்"* (பரிபா. 11, 123.) 3. களஞ்சியம் (கோவை.); granary om. 4. அரசு; government, 5. இனிய தின்பண்டம் (வின்.); varied and delicious food. 6. பல்பண்டம் (சூடா.); articles of food. 7. பொது (யாழ்ப்.); that which is public.

8. பூசாரிகள் கடவுட் படைப்பியமாகக் கொடுக்கும் மஞ்சள் நிறப் பொடி (வின்.); yellow powder kept in a little box by priests of village deities and given to worshippers.

தெ. பண்டாரமு.

*[பண் → பண்டு → பண்டம் = பண்ணப்பட்ட பொருள். பண்டம் → பண்டாரம்]* வ.மொ.வ.29.

**பண்டாரம்²** *paṇḍāram,* பெ. (n.) 1. சமயக் கடைப்பிடியாளன்; religious mendicant. 2. சிவமடத்தைச் சார்ந்த துறவி; a saiva monk. 3. பூக்கட்டி விற்கும் ஒருவகைச் சாதியார்; (இ.வ.) a caste of non-brāhmin šaivaites who sell garlands of flowers. *'பண்டாரம் பிண்டத்துக்கு அழுகிறான்; லிங்கம் பால்சோற்றுக்கு அழுகிறது'* (பழ.)

தெ. பண்டாரமு.

ம. பண்டாரம்

(பண்டாரம் = போலித்துறவியான ஆண்டி, இரப்போன். வடவர் பிண்டம் (சோற்றுருண்டை) வாங்கிப் பிழைப்பவன் என மூலப்பொருள் கூறுவர். இதற்குப் பண்டாரம் என்னும் சொல்லைப் பிண்டார என்று திரித்துக் கொண்டதே காரணம்) வ.மொ.வ.24)

**பண்டாரம்³** *paṇḍāram,* பெ. (n.) 'கணியம்' கூறும் 'வள்ளுவர்' என்னும் குலத்தினன்; a caste in astrologer.

**பண்டாரமேளம்** *pandāra-mēḷam,* பெ. (n.) அரசு விளம்பரங்குறிக்கும் பறை; drum beaten in proclaiming government notifictions.

*[பண்டாரம் + மேளம்]*

**பண்டாரவாடை** *paṇḍāra-vāḍai,* பெ. (n.) குடிபாத்தியமான சிற்றூர்; (இ.வ.) village whose income belongs to the cultivators.

*[பண்டாரம் + வாடை]*

**பண்டாரவாய்க்கால்** *paṇḍāra-vāykkāl,* பெ. (n.) பொதுவாய்க்கால் (யாழ்.அக.); public canal.

*[பண்டாரம் + வாய்க்கால்]*

**பண்டாரவாரியம்** *paṇḍāra vāriyam,* பெ. (n.) கோயில் உசாவலவை; managing committee of temples. (T.A.S, 293.)

*[பண்டாரம் + வாரியம்]*

**பண்டாரவிடுதி** *paṇḍāra-viduti,* பெ. (n.) அதிகாரிகள் தங்கும் பொது விடுதி (யாழ்.அக.); rest-house or lodging of a public officer.

*[பண்டாரம் + விடுதி]*

**பண்டாரவிளக்கு** *paṇḍāra-viḷakku,* பெ. (n.) நிலா வெளிச்சம்; (நாஞ்.) moon light, a term used in jest.

*[பண்டாரம் + விளக்கு]*

**பண்டாரவுள்ளிருப்பு** *paṇḍāra-v-uḷḷiruppu,* பெ. (n.) கருவூல அதிகாரியின் பணியிடம்; (T.A.S, 291.) office of a treasurer.

*[பண்டாரம் + உள்ளிருப்பு]*

உள்ளிருப்பு = கருவூலக்காவல்

**பண்டாரவூழியம்** *paṇḍāra-v-ūḻiyam,* பெ. (n.) பண்டார வேலை பார்க்க; *see paṇḍāra-vēlai.*

*[பண்டாரம் + ஊழியம்]*

**பண்டாரவேலை** *paṇḍāra-vēlai,* பெ. (n.) 1. பொதுவூழியம்; service required of the public. 2. கட்டாயத்தின் மேற்செய்யும் வேலை; work done under constraint.

*[பண்டாரம் + வேலை]*

**பண்டாரி** *paṇḍāri,* பெ. (n.) 1. கருவூலக் காரன்; (R.F.) treasurer or store keeper; treasurer of a religious establishment. 2. உடையார் சாதிப் பட்டப் பெயர்; a title of the uḍaiyār caste. 3. கப்பற் சமையற்காரன்; shipcook. 4. *பண்டாரப்பிள்ளை* பார்க்க, see *paṇḍārappiḷḷai.* 5. மரக்கலப் பண்டங் காப்போன்; (naut.) supercargo.

ம. பண்டாரி

*[பண்டாரம் → பண்டாரி]*

**பண்டாரி** *paṇḍāri,* பெ. (n.) பண்டாரி என்னும் மரவகை; false bog myrtle. (சா.அக.)

**பண்டாரை** *paṇḍārai,* பெ. (n.) *விராலி* பார்க்க; see *virāli* (L.) jamaica switch sorrel.

**பண்டி**[1] *paṇḍi,* பெ. (n.) 1. வண்டி; cart, wagon, carriage. *"செந்நெற் பகரும் பண்டியும்"* (சீவக. 61.) 2. நான்காவது விண்மீன் (உரோகிணி) (சூடா.); the fourth nokṣatra.

தெ.க. பண்டி ம. வண்டி கோத. வண்டி

தோட. பொடி. து. பண்டி. கொலா. பண்டி.

ef. skt. பண்டி. பிரா. பண்டி. மராத். பாடி

*[பண்டம் → பண்டி]*

**பண்டி** *paṇḍi,* பெ. (n.) 1. வயிறு; belly, paunch. *"பண்டி நிறைவுறு பின்பு"* (பாரத. வேத. 48.) 2. உடல்; body. *"புழுப்பெய்த பண்டிதன்னை"* (தேவா. 702, 2.) 3. யானை (அக.நி.); elephant.

ம. பண்டி

*[பண்டம் → பண்டி]*

**பண்டிகை** *paṇḍigai,* பெ. (n.) 1. திருநாள்; festival; periodical festival. 2. எழுதகவகை (வின்.); a kind of mouldring or cornice.

தெ. பண்டுக. க. பண்டிகெ. ம. பண்டிக.

*[பண்டு → பண்டிகை]*

**பண்டித** *paṇḍida,* பெ.அ. (part.) மொழியில் புலமையுடைய; scholarly; scholastic. *"பண்டித நடை", "பண்டிதத் தமிழ்"*

**பண்டிதப் பார்ப்பார்** *paṇḍida-p-pārppār,* பெ. (n.) அறநூல் ஞாயங்களில் வல்லவர்களான மாத்துவப் பார்ப்பனர்; (வின்.) mādhva brahmins well versed in sanskrit classics and law books.

*[பண்டித + பார்ப்பார்]*

**பண்டிதம்** *paṇḍidam,* பெ. (n.) 1. கல்வித் திறம்; education. 2. மருத்துவம்; art of healing the medical art. *"சீரான வொருவர் பண்டிதமன்றி வெகுவிதஞ் செய்து கொள்வோர்களிடமும்"* (திருவேங். சத. 73.)

*[பண்டிதன் → பண்டிதம் = புலமை]*
வ.மொ.வ.29.

**பண்டிதர்** *pandidar,* பெ. (n.) மொழி கற்பிக்கும் ஆசிரியர்; teacher (esp. language teacher) *"இவர் எங்கள் பள்ளியில் தமிழ்ப் பண்டிதர்"*

*[பண்டிதம் → பண்டிதர்]*

**பண்டிதலாடசிங்கி** *pandidalāda śiṅgi,* வல்லாரை; indian pennywort. **(சா.அக.)**

**பண்டிதலாயக்கு** *pandidālayakku,* பெ. (n.) புடைவை வகை; **(இ.வ.)** a kind of saree.

*[பண்டித + லாயக்கு]*

*லாயக்கு=அரபு*

**பண்டிதவாய்** *pandidavāy,* பெ. (n.) கடுக்காய் (தைலவ. தைல.); indian gallnut.

*[பண்டித + வாய்]*

**பண்டிதன்** *pandidan,* பெ. (n.) **1.** புலவன் (பிங்.); man of learning and erudition, pandit. *"பண்டிதராய் வாழ்வார் பயின்று"* (ஏலாதி. **9.**) *'நீ பெரும் பண்டிதனாக வாழ்த்துகிறேன்'* (உ.வ.) **2.** வெள்ளைக்காரர் ஆட்சிக் காலத்தில் வழக்கு மன்றங்களில் அறநூல்களை எடுத்துக் கூற அமர்த்தப் பட்டிருந்த பணியாளன்; law officer formerly appointed in east India companyi's courts for the interpretation of Hindu laws. **3.** மாத்துவப்பார்ப்பனன்; mādhva brahmin, as formerly engaged as pandits in the law courts. **4.** மருத்துவன்; *doctor, physician,* medical man. *"பண்டிதனு மெய்யுறு வேதனையும்"* (திருப்பு. **59.**) **5.** முடிதிருத்துவோருக்குரிய பட்டப் பெயர்; title assumed by barbers. **6.** அறிவன் (புதன்) (சூடா.); the planet mercury. **7.** வெள்ளி (வின்.); the planet venus. **8.** வரிக்கூத்து வகை (சிலப். **3,** பக். **88.**); a kind of masquerade dance. *'கண்டதைக் கற்றவன் பண்டிதன் ஆவான்'* (பழ.)

*[பண்டு → பண்டம் → பண்டிதன் = பல பொருள்களை அறிந்த புலவன்.* பண்டிதன் → பண்டிதம் = புலமை.

பேரா. பரோ வேறு வகையில் இச்சொல்லைத் தென்சொல் என்று காட்டுவர். அவர் கூறுமாறு:

"pandita-' wise, learned, properly 'ripered, mature' cf. Te paṇḍu to ripen, mature, ripe, paṇḍa wisdom, intelligence,' pj. pand- to mature, Go., kol. paṇḍ - to ripen' - The sanskrit language, p.384."

வடவர், பண்டா (ஓதி, அறிவு, கல்வி) என்னும் சொல்லினின்று சிலரும், ஸ்பந்தித (துடிப்பு) என்னும் சொல்லினின்று சிலரும் ஆக இருவேறு வகையில் பண்டிதன் என்னும் சொல்லைத் திரிப்பர். பண்டா என்னும் சொல்லும் பண்டம் என்பதின் திரிபே. துடிப்பை மனத்துடிப்பு என்பர் – வ.மொ.வ.29.]

**பண்டியுளிரும்பு** *pandiyulirumbu,* பெ. (n.) வண்டியின் இரும்பச்சு (திவா.); the axle of a carriage.

*[பண்டியுள் + இரும்பு]*

**பண்டிலன்** *pandilan,* பெ. (n.) தூதன்; messenger, ambassador.

*ஒருகா : பண்டிதன் → பண்டிலன்*

*[தூதர்க்கு வேண்டிய அறிவுக் கூர்மையை பற்றியது]*

**பண்டு[1]** *pandu,* பெ. (n.) **1.** ***பண்டை[1]*** பார்க்க; see *pandai.* *"பண்டாய நான்மறையும்"* (திருவாச. **48, 1.**) **2.** பார்க்க, ***பண்டை[1], 2,*** see *pandai.* *"பண்டறியேன் கூற்றென் பதனை"*

(குறள், 1083.) *'பண்டு தொட்டு இருந்து வரும் பழக்கமா இது?'* (உ.வ.) *'பண்டொரு நாள்'* (உ.வ.)

**தெ.** பண்டு

**ம.** பண்ட்டு

*[பள் → பண்டு]*

**பண்டு²** *paṇḍu,* **பெ.** (n.) முற்காலம்; former time, previous time. *"தண்டமும் தணிதிநீ பண்டையிற் பெரிதே"* (புறநா. 10.)

**தெ.** பண்டு.

*[பள் → பண்டு]*

**பண்டு³** *paṇḍu,* **பெ.** (n.) **1.** பழம்; fruit. **2.** ஈருள்ளி; onion. (சா.அக.)

**பண்டுகம்** *paṇḍugam,* **பெ.** (n.) **1.** ஓமம் (மலை.); bishops weed. **2.** செவ்வகத்தி (மலை.); red flowered west Indian pea-tree.

*[பண்டு → பண்டுகம்]*

**பண்டுபம்** *paṇḍubam,* **பெ.** (n.) கொம்மட்டி; fowls cucumber. (சா.அக.)

**பண்டுபரிகாசம்** *paṇḍu-parikāšam,* **பெ.** (n.) பகடிவிளையாட்டு; coarse or rough joking.

*[பண்டு + பரிகாசம்]*

பரிகாசம் = Skt.

**பண்டுலி** *paṇḍuli,* **பெ.** (n.) சிறுகீரை; pig green. (சா.அக.)

**மறுவ.** பண்டுலிகம்.

**பண்டுவம்** *paṇḍuvam,* **பெ.** (n.) மருத்துவம்; medical treatment. (இ.வ.)

*[பண்டு → பண்டுவம்]*

**பண்டுவன்** *paṇḍuvaṉ,* **பெ.** (n.) ***பண்டிதன்,*** **5.** (இ.வ.) பார்க்க; see *paṇḍidaṉ.*

*[பண்டுவம் → பண்டுவன்]*

**பண்டை¹** *paṇḍai,* **பெ.** (n.) **1.** பழமை; oldness. *"பண்டைப் பிறவியராகுவர்"* (மணிமே. 11, 33.) **2.** முற்காலம்; former time, previous time. *"தண்டமுந் தணிதிநீ பண்டையிற் பெரிதே"* (புறநா. 10.)

*[பண்டு → பண்டை]*

*'பண்டை பட்டபாட்டைப் பழங்கிடுகில் போட்டுவிட்டுச் சம்பா நெல்குத்திப் பொங்கல் இடுகிறாள்'* (பழ.)

**பண்டை²** *paṇḍai,* **பெ.** (n.) அவைக்காகாச் சொல்; (இ.வ.) indecent language.

**மறுவ:** அவையல் கிளவி.

**தெ.** பண்டு.

*[பண்டு → பண்டை]*

**பண்டை³** *paṇḍai,* **பெ.** (n.) **1.** அறிவு; knowledge. **2.** கல்வி; learning.

*[பண்டு → பண்டை]*

**பண்டைக்காலம்** *paṇḍai-k-kālam,* **பெ.** (n.) ***பண்டைநாள்*** பார்க்க; see *paṇḍaināḷ.*

*[பண்டை + காலம்]*

**பண்டைநாள்** *paṇḍai-nāḷ,* பெ. (n.) முன்னாள்; former days, antiquity. *"பண்டை நாளிலே நின் திருவருளும்"* (திவ். திருவாய். 9, 2, 1.) *'பண்டை நாளில் தமிழர் கடல்கடந்து சென்று வாணிகம் செய்தனர்'* (உ.வ.) *'பண்டைய நாளில் தோன்றிய இலக்கியங்கள் தமிழுக்குப் பெருமை சேர்க்கின்றன'*

*[பண்டை + நாள்]*

**பண்டைப்பயில்வு** *paṇḍai-p-payilvu,* பெ. (n.) முற்பிறப்பின் பழக்கம்; practice gained in previous births. *"பண்டைப் பயில்வாலருச் சித்து"* (பெரியபு. சண்டே. 35.)

*[பண்டை + பயில்வு]*

**பண்டையூழி** *paṇḍai-y-ūeḷi,* பெ. (n.) முதலூழி; the first of the four yugas *"பண்டையூழியிற் பார்மலி வுற்றதே"* (சீவக. 2581.)

**மறுவ.** ஆதியுகம்

*[பண்டை + ஊழி]*

**பண்டையோர்** *paṇḍaiyōr,* பெ. (n.) முன்னோர்; the ancients. *"பண்டையோ ருரைத்த தண்டமிழ் நல்லுரை"* (சிலப். 28, 209.)

*[பண்டு → பண்டையோர்]*

**பண்டைவினை** *paṇḍaiviṉai,* பெ. (n.) முன்வினை; past karma *"பண்டை வினைகள் பறிய நின்ற"* (தேவா. 395, 2.)

*[பண்டை + வினை]*

**பண்ணத்தி** *paṇṇatti,* பெ. (n.) உரையும் பாட்டுமாகச் செய்யப்படும் ஒருவகைப் பனுவல் (தொல். பொ. 492.); literary composition in mixed prose and verse.

*[பண் → பண்ணத்தி]*

**பண்ணப்பணை-த்தல்** *paṇṇa-p-paṇai-,* 2. செ.கு.வி. (v.i.) கப்புங்கிளையும் விட்டுச் செழித்தல்; to branch out widely, as flourishing tree. *"அஃதுடைமை பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்"* (நாலடி. 251.)

*[பண்ண + பணை-,]*

**பண்ணமை-த்தல்** *paṇ-ṇ-amai-,* 4. செ.குன்றாவி. (v.t.) அணியப்படுத்துதல்; to prepare. *"பண்ணமைத் தெழுதப்பட்ட பாவை போல்"* (சீவக. 729.)

*[பண் + அமை-,]*

**பண்ணமை முழவு** *paṇṇamai-muḻavu,* பெ. (n.) வீரமுழவு வகை (சிலப். 3. 27. உரை); a kind of war drum.

*[பண்ணமை + முழவு]*

**பண்ணல்**[1] *paṇṇal,* பெ. (n.) கலைத்தொழில் எட்டனுள் பாடநினைத்த பண்ணுக்கு இணை, கிளை, பகை, நட்பான நரம்புகள் பெயருந் தன்மை மாத்திரையறிந்து வீக்குகை (சீவக. 657, உரை); at tuning the lute strings according to the required melody, one of eight kalai-t-toḻil.

*[பண் → பண்ணல்]*

**பண்ணல்**[2] *paṇṇal,* பெ. (n.) பருத்தி; cotton. (சா.அக.)

**பண்ணவன்** *paṇṇavaṉ,* பெ. (n.) 1. கடவுள்; god. *"பண்ணவ னெண்குணன்"* (சிலப். 10, 188.) (பிங்.) 2. தேவன் (சூடா.); deva or god, a superhuman being. 3. அருகன் (பிங்.); arhat. 4. முனிவன்; sage. *"பண்ணவர் படிவங் கொண்டான்"* (சீவக. 395.) 5. குரு (பிங்.); spiritual preceptor. 6. திண்ணியன் (பிங்.); strong man. 7. பாணன் (சூடா.); bard, lyrist.

*[பண் → பண்ணவன்]*

**பண்ணவி** *pannavi,* பெ. (n.) தேவி; goddess. *"பண்ணவித னருளினாலே"* (தாயு. சித்தர். 4.)

*[பண்ணவன் → பண்ணவி]*

**பண்ணறை** *pannarai,* பெ. (n.) **1.** அடைவு கேடு (திவ்.திருமாலை, 33, வ்யா, பக்,110.); irregularity, disorder. **2.** இசையறிவு அற்றவன்; one without a sense of music. *"பண்ணறை யடிமையான்காண்"* (திருவாலவா. 54, 35.)

*[பண் + அறை]*

அறுவது = அறை, உறுப்பறை = உறுப்புக் குறைபாடு, 'மூக்கறையன்' (உ.வ.)

**பண்ணறையன்** *pannariayan,* பெ. (n.) தெளிவாகப் பேச இயலாதவன்; one who talks gibberish, gibberer. *"மூக்கிழந்த பண்ணறையனானாலும் பாராரோ"* (நெல்விடு. 270.)

*[ பண் + அறையன் ]*

**பண்ணாங்குழி** *pannankuli,* பெ. (n.) நெற்குத்தும் பண்ணை போல் எதிரெதிர் வரிசையில் 14 வட்டமான பள்ளம் அல்லது குழிதோண்டி அதில் சிறு கற்களையிட்டு ஆடும் ஆட்டம்; 14 hollows used in a particular kind of game.

*பண்ணை = பள்ளம்*

*மறுவ : பன்னாங்குழி, பல்லாங்குழி, பள்ளாங்குழி*

**பண்ணாங்குழி**

நெற்குத்தும் பண்ணை போல் வட்டமான பள்ளம் அல்லது குழிதோண்டி அதிற் கற்களையிட்டு ஆடும் ஆட்டம் பண்ணாங்குழி எனப்படும். பண்ணையென்பது பள்ளம். பண்ணை பறித்தல் குழிதோண்டுதல்.

பண்ணாங்குழி என்னும் பெயர் அவ்வவ்விடத்தைப் பொறுத்துப் பன்னாங்குழி, பல்லாங்குழி, பள்ளாங்குழி என வெவ்வேறு வடிவில் வழங்கும். பெரும்பாலும் பதினான்கு குழி வைத்து இவ்விளையாட்டு ஆடப் பெறுவதால் பதினான்கு குழி என்பது முறையே பதினாங்குழி, பன்னாங்குழி எனத் திரிந்ததாகச் சிலர் கொள்வர். ஆயின் பதினாங்குழி என எங்கும் வழங்காமை யானும் பன்னான்கு என்பது இலக்கிய வழக்கத்தினாலும் பண்ணாங்குழி, பள்ளாங்குழி என்னும் வடிவங்களே பெருவழக்கமாய் வழங்குதலானும், பதினான்கிற்குக் குறைந்தும் கூடியும் குழிகள் வைத்துக் கொள்ளப்படுதலானும் பள்ளாங்குழி என்பதற்குப் பள்ளமான குழி என்றே பொதுமக்களாற் பொருள் கொள்ளப்படுதலாலும் பண்ணாங்குழி அல்லது பள்ளாங்குழி என்பதே திருந்திய வடிவமாம்.

ஆடுவார் தொகை : இதை இருவர் ஆடுவர். ஆடுகருவி நிலத்திற் சமமான இருபடுக்கை வரிசையாகக் கில்லப்பட்ட 10 அல்லது 14 அல்லது 16 குழிகளும், அவற்றுள் அவ்வைத்தாய் இடுவதற்கு வேண்டிய கழற்சிக்காய் (கச்சக்காய்) அல்லது புளியங்கொட்டை அல்லது கூழாங்கற்களும், இதற்கு வேண்டுங் கருவிகளாம்.

சிலர், என்றும் எங்கும் வசதியாய் ஆடுதற் பொருட்டு, வேண்டிய அளவு பள்ளஞ் செதுக்கப் பெற்ற மரக் கட்டைகளை வைத்திருப்பர்.

ஆடிடம் : இது வீட்டுள்ளும், வீட்டு அல்லது மரநிழலிலும் ஆடப் பெறும். இது ஏனை வகைகட்கும் ஒக்கும்.

ஆடுமுறை : குழி வரிசைக் கொருவராக இருவர் வரிசையடுத்து எதிரெதிர் உட்கார்ந்து குழிக்கைந்தாக எல்லாக்குழிகளிலும் கற்களைப் போடுவர். முந்தியாடுவர் தம் வரிசையில் ஏதேனுமொரு குழியிலுள்ள கற்களைத்தையும் எடுத்து வலப்புறமாக சுற்றிக்

குழிக்கொன்றாகப் போட்டுக் கொண்டே போதல் வேண்டும். கற்களைப் போட்டு முடிந்தபின், கடைசிக்கல் போட்ட குழிக்கு அடுத்த குழியிலுள்ள கற்களனைத்தையும் எடுத்து அதற்கப்பாலுள்ள குழியில் ஒவ்வொன்றாகப் போட்டுக் கொண்டு போதல் வேண்டும். இங்ஙனம் போடும் போது தம் வரிசையில் இடவலமாகவும் எதிரி வரிசையில் வல இடமாகவும் போட்டுச் செல்ல வேண்டும். கடைசியாகப் போட்ட குழிக்கு அடுத்தகுழி, வெறுமையாக இருந்தால் அதற்கடுத்த குழியிலுள்ள கற்களனைத்தையும் எடுத்துத் தம்மிடம் வைத்துக் கொள்ள வேண்டும். அதன்பின், எதிரியார் தம் வரிசையிலுள்ள ஒரு குழியிலிருந்து தொடங்கி, முன் சொன்னாவாறே ஆடுவர். கடைசியாகப் போட்ட குழிக்கு அடுத்த இரு குழிகளும் கல் இல்லாவிடில் ஆடுபவர் ஒன்றும் எடுக்காமலே நின்றுவிட வேண்டும். ஒவ்வொருவரும் தத்தம் வரிசையிலுள்ள குழியொன்றில் 4 கற்கள் சேர்ந்துவிடின் அவற்றைப் பசு என்று சொல்லி எடுத்துக் கொள்வர். சிலவிடங்களில், 8 கல் சேர்ந்துவிடின் அவற்றைப் பழம் என்று சொல்லி எடுத்துக் கொள்வர்.

இங்ஙனம் இருவரும் மாறி மாறி ஆடிவரும்போது, எடுத்துக் கொள்ளப்படாது எஞ்சியுள்ள கற்களெல்லாம் ஒரே வரிசையிற் போய்ச் சேர்ந்துவிடின் ஆட்டம் நின்றுவிடும். இருவரும் தாந்தாம் எடுத்து வைத்திருக்கும் கற்களை எண்ணுவர், கடைசியில் ஒரே வரிசையில் போய்ச் சேர்ந்த கற்களெல்லாம், அவ்வரிசையாரைச் சேரும். மிகுதியான கற்களை எடுத்தவர் வென்றவராவர்.

சிலவிடங்களில் ஒரே ஆட்டையில் வெற்றியைத் தீர்மானியாமல் ஐந்தாட்டையின் பின் அல்லது பத்தாட்டையின் பின் தீர்மானிப்பர். அம்முறைப்படி ஆடும்போது முன் ஆட்டைகளில் தோற்றவர் வென்றவரிடம் தமக்கு வேண்டிய கற்களைக் கடன் வாங்கிக் கொள்வர். வென்றவர் கடன் கொடாவிடின் இருக்கின்ற கற்களை அவ்வைந்தாகக் குழிகளில் போட்டுவிட்டுக் கல் இல்லாத அல்லது ஐந்துகல் இல்லாத குழிகளை வெறுமையாக விட்டுவிட வேண்டும் அவ்வெறுங் குழிகளுக்குப் 'பவ்வீக் குழிகள்' என்று பெயர். அவற்றில் ஒவ்வொரு குச்சு இடம்பெறும். ஒருவரும் அவற்றில் ஆடல் கூடாது.

தோற்றவர்க்கு ஒரு குழியும் நிரம்பாத பொழுது (அதாவது ஐந்து கற்கும் குறைவாக இருக்கும் போது) இருக்கின்ற கற்களை ஒவ்வொன்றாகக் குழிகளில் போட்வீட்டு, கல் இல்லாத குழிகளைப் பவ்வீக் குழிகளாக விட்டுவிடல் வேண்டும். அன்று எதிரியாகும் தம் வரிசையிலுள்ள எல்லாக் குழிகட்கும் ஒவ்வொரு கல்லே போட வேண்டும். இங்ஙனம் ஒவ்வொரு கல்லே போட்டு ஆடும் முறைக்குக் 'கஞ்சி காய்ச்சுதல்' என்று பெயர். அவ்வைந்து கல்போட்டு ஆடித் தோற்றவர், கஞ்சி காய்ச்சி ஆடும்போது வெல்லவும் இடமுண்டு. ஒரு முறை வென்றவர் மறுமுறை முந்தியாடல் வேண்டும்.

ஓர் ஆட்டை முடிந்தபின் வெற்றியும், தோல்வியுமின்றி இருவரும் சமமாகக் கற்கள் வைத்திருப்பின், அடுத்த ஆட்டையில் 'சரிபாண்டி' ஆடல் வேண்டும். முதலாவது அவ்வைந்தாகவும் பின்பு பத்து பத்தாகவும் கற்களை எடுத்து, அத்தனையும் போட்டு ஆடுவது சரிபாண்டியாடலாகும். இதில் விரைந்து விளைவு காணலாம்! பாவாணர்– தமிழ் நாட்டு விளையாட்டுகள் (பக். 90–92)

**பண்ணாட்டு** *pannāttu,* பெ. (n.) அதிகாரம்; authority. ***"வெள்ளைக்காரன் காலத்திலே தலைதலைக்குப் பண்ணாட்டு"*** (எங்களூர், 152.)

*[பண்ணாடி → பண்ணாட்டு]*

**பண்ணாடி[1]** *pannadi,* பெ. (n.) பண்ணையை ஆளுமை செய்பவன் (எங்களூர், 16.); master in fields. ***"ஆள் ஆளும் பண்ணாடி, எருது ஆர் மேய்க்கிறது?"*** (பழ.)

*[பண்ணையாளி → பண்ணாளி பண்ணாடி]*

பண். வயல்.

**பண்ணாடி**[2] *pannādi,* பெ. (n.) பண்ணைக்கு உரியவன்; the owner of a farm, landed proprietor. (cm.)

*[பண்ணை ஆளி = பண்ணையாளி பண்ணாளி → பண்ணாடி]*

**பண்ணாளத்தி** *pan-n-alatti,* பெ. (n.) பண் அலப்பு (இராக ஆலாபனம்) (சிலப். 3, 26, உரை.); prolongation of a tune.

*[பண் → ஆளத்தி]*

**பண்ணானவன்** *pan-n-āṉavan,* பெ. (n.) நன்னெறியாளன்; man of good manners or habits.

*[ பண் → பண்ணானவன் ]*

*(ஆனவன் = எழுவாய் **வேற்றுமை** ஆண்பாற் சொல்லுருபு)*

**பண்ணிக்கக்கூலி** *pannikka-k-kūli,* பெ. (n.) வரிவகை (S.I.I.vi, 189); a tax.

*[ பணிக்கு + கூலி ]*

**பண்ணிக்குறுவை** *panni-k-kuruvai,* பெ. (n.) குறுவை நெல்வகை; a kind of kuruvai paddy.

*[பன்றி + குறுவை]*

(இவ்வகை நெற்பயிர், குட்டையாக இருந்ததனால், குட்டையான பன்றியை ஒப்பு நோக்கி, பன்றிப்புடலை என்றாற் போல, இப்பெயர் பெற்றது)

**பண்ணிகாரம்** *pannigāram,* பெ. (n.) 1. பல பண்டம் (திவா.); stores, provisions. 2. பணியாரம்; cakes, pastry. *"பண்ணிகாரம் பெய் பண்டிகள்"* (கூர்மபு. கண்ணனவ. 45.)

தெ. பணியாரமு.

*[ ஒருகா: பணியாரம் → பண்ணிகாரம் ]*

**பண்ணிகுரும்பன்** *pannikurumban,* பெ. (n.) நிலப்பனை; ground palm.

மறுவ: பண்ணிக் குறும்பனை. (சா.அக.)

**பண்ணிமோத்தை** *pannimōttai,* பெ. (n.) சிறு குறட்டை என்னும் மூலிகை; small variety of shavarifruit. (சா.அக.)

**பண்ணிமோந்தான்** *pannimōndān,* பெ. (n.) *பன்றிமோந்தான்* பார்க்க; see *panrimōntān.* (சா.அக.)

**பண்ணியக்காரன்** *panniya-k-kāran,* பெ. (n.) ஒருசார் வன்னியரின் தலைவன்; head man among a class of Vanniyars. (G.Sm. D.l.i. 144.)

*[ பண்ணை → பண்ணியம் + காரன் ]*

**பண்ணியக்குழம்பு** *panniya-k-kulambu,* பெ. (n.) ஒருவகை நெகிழ்ச்சிப் பணியாரம் (இராசவைத். 139.); a kind of semi-solid preparation.

*[பண்ணியம் + குழம்பு]*

**பண்ணியசாலை** *panniyaśālai,* பெ. (n.) 1. வணிகப்பண்டசாலை; merchants warehouse; 2. பணியாரக்கடை; pastry shop. 2. சந்தை; market.

*[பண்ணியம் + சாலை]*

**பண்ணியடைப்பன்** *panniyadaippan,* பெ. (n.) மாடுகளுக்கு வரும் ஒருவகை அடைப்பான் நோய்; a cattle disease. (சா.அக.)

**பண்ணியப்பெண்** *panniya-p-pen,* பெ. (n.) பரத்தை (யாழ்.அக.); harlot, whore.

**மறுவ.** விலைமகள்

*[பண்ணியம் + பெண்]*

**பண்ணியபலத்துவம்** *panniya-palattuvam,* பெ. (n.) வணிகஊதியம்; (வின்.) gain profit or success in trade.

*[பண்ணியம் + பலத்துவம்]*

பலத்துவம் = Skt.

**பண்ணியம்**[1] *panniyam,* பெ. (n.) இசைக் கருவி; musical instrument. *"குயிலுவர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழ"* (மணிமே. 7, 123.)

*[பண் → பண்ணியம்]*

**பண்ணியம்**[2] *panniyam,* பெ. (n.) 1. பண்டம்; stores, provisions. *"காம ருருவிற் றாம் வேண்டும் பண்ணியம்"* (மதுரைக். 422.) 2. பணியாரம்; cakes, pastry, confectionery. *"பண்ணியப் பகுதியும்"* (சிலப். 6, 135.) 3. விற்கப்படும் பொருள்; merchandise. *"கொடுப்போர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழு"* (மணிமே. 7, 125.)

(பண் → பண்ணியம் = பண்ணப்பட்ட பல்வேறுபொருள். வடவர், மெச்சத்தக்கது, வாங்கற்கும் விற்றற்கும் உரியது என்று செயற்கை முறையில் வெவ்வேறு மூலப் பொருள் கூறுவர். வ.மொ.வ.29.)

**பண்ணியவிலைஞர்** *panniyavilaiñar,* பெ. (n.) பண்டவாணிகர்; dealers in stones and provisions. *"பெருங்கடல் நீந்திய மரம் வலியுறுக்கும் பண்ணிய விலைஞர் போல"* (பதிற்றுப். 76, 5.)

*[பண்ணியம் + விலைஞர்]*

**பண்ணியற்றிறம்** *panniyarriram,* பெ. (n.) ஆறு சுரமுள்ள இசை (சிலப். 3, 46, உரை.); (mus.) secondary melody-type, hexachord, in ancient Dravidian music.

*[பண்ணியல் + திறம்]*

**பண்ணியாங்கனை** *panniyānganai,* பெ. (n.) பண்ணியப் பெண் பார்க்க; see *panniya-p-pen.*

*[பண்ணியம் + அங்கனை]*

**பண்ணியாரம்** *panniyāram,* பெ. (n.) *பணியாரம்* பார்க்க; see *paniyāram.* *"பலவிடிவினை யுடைய பண்ணியாரங் கொண்டு வந்து"* (பொருந. 108, உரை.)

*[பணியாரம் → பண்ணியாரம்]*

**பண்ணிவை-த்தல்** *panni-vai-,* செ.குன்றாவி. (v.t.) ஆசிரிய (புரோகித)ராயிருந்து சடங்கு நடத்தி வைத்தல்; to officiate as priest. *"யார் அந்தத் திருமணம் பண்ணி வைக்கிறார்?"*

*[பண்ணி + வை-,]*

**பண்ணு-தல்** *pannu-,* 12. செ.குன்றாவி. (v.t.) 1. செய்தல்; to make, effect, produce, accomplish. *"உம்பர்க்கிடந்துண்ணப்பண்ணப்படும்"* (நாலடி.37.) 2. அணியப்படுத்துதல்; to fit out,

make suitable. *"பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்"* (புறநா. 12.) 3. ஒப்பனை செய்தல்; to adorn. *"பட்டமொ டிலங்கப் பண்ணி"* (சூளா. கல்யா. 14) 4. இசைவாசித்தல்; to sing in an instrument, as a tune *"மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்"* (மலைபடு. 534.) 5. இசையமைத்தல்; to tune musical instruments. *"பண்ணல் பரிவட்டணை யாராய்தல்"* (சீவக. 652, உரை.) 6. சமைத்தல்; to cook. *"பாலுமிதவையும் பண்ணாது பெறுகுவீர்"* (மலைபடு. 417.) *'பண்ணப் பண்ணப் பலவிதம் ஆகும்'* (பழ.) *'பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்'* (பழ.)

க. பண்ணு

**பண்ணுமை** *paṉṉumai*, பெ. (n.) இசைத் தன்மை; quality of a melody. *"பண்ணுமை நிறீஇயோர் பாணிக் கீதம்"* (பெருங். மகத. 14, 245.)

*[பண் → பண்ணுமை]*

**பண்ணுரை** *paṉṉurai*, பெ. (n.) புனைந்துரை; words of praise. *"பண்ணுரையாற் பரவித் துயர் தீர்த்தான்"* (சீவக. 228.)

*[பண் + உரை]*

**பண்ணுவன்** *paṉṉuvṉ*, பெ. (n.) 1. குதிரைப் பாகன் (சூடா.); horse-groom. 2. யானைப் பாகன் (யாழ்.அக.); mahout.

*[பண் → பண்ணுவன்]*

**பண்ணுறு[1]-தல்** *paṉṉuṟu-*, 4. செ.கு.வி. (v.i.) அணியமாதல்; to become ready. *"முன்னுறு கிளவியுட் பண்ணுறப் பணிக்கலும்"* (பெருங். உஞ்சைக். 32, 71.)

*[பண் → பண்ணுறு-,]*

**பண்ணுறு[2]-த்தல்** *paṉṉuṟu-*, 18. செ.குன்றாவி. (v.t.) 1. நுகத்திற் பூட்டுதல்; to yoke. *"ஏற்றினஞ் சிலம்பப் பண்ணுறீஇ"* (சீவக. 44.) 2. ஊர்திகளை அணியப்படுத்துதல்; to furnish with trappings, as an elephant. *"அண்ணல் யானை பண்ணுறுத்தேறி"* (பெருங், உஞ்சைக், 37, 45.) 3. ஒப்பனைசெய்தல்; to decorate.

*[பண் → பண்ணுறு-,]*

**பண்ணை** *paṉṉai*, பெ. (n.) 1. மருதநிலம் (பிங்.); agricultural tract. *"வளநீர்ப் பண்ணையும் வாரியும்"* (சிலப். 11, 13.) 2. வயல் (பிங்.); paddy field. *"பண்ணை சூழ்ந் திலகுந் திருமுனைப் பழையநாடு"* (பாரத. பாயி. 6.) 3. தோட்டம்; garden, cultivated plot of ground. *"வெள்ளநீர்ப் பண்ணையும் விரி நீரேரியும்"* (சிலப். 13, 192.) 4. நீர்நிலை (பிங்.); tank, pond; lake. 5. ஓடை (சிலப். 13, 192, உரை); stream. 6. மரத்திற்கு அடியில் நீர் பாய்ச்சுமாறு இடும் பாத்தி; a basin or tranch for water round the root of a tree. *'மரத்திற்குப் பண்ணை பிடிக்க வேண்டும்'* 7. சொந்த வேளாண்மை; direct cultivation. 8. வாரக்குடி; establishment of farm labourers. 9. பனந்தோப்புக் குடிசை; (இ.வ.) hut in a palmyra tope, as for storing sugar and toddy. 10. மக்கட்கூட்டம் (திவா.); multitude of people. 11. மகளிர் கூட்டம்; bevy of ladies. *"பண்ணையி னாடனோக்கி"* (கம்பரா. பூக்கொய். 5.) (பிங்.) 12. தொகுதி; group. *"ஒலித்தான் முரசின் பண்ணை"* (கம்பரா. மகரக்கண். 9.) 13. பெருங்குடும்பம்; (வின்.) large family. 14. அவை (பிங்.); assembly. 15. மிகுதி; exess. *"துன்பப் பண்ணைத் துடர் பிணி"* (ஞானா. 16, 6.) 16. மகளிர் விளையாட்டு (தொல். பொ. 150.); girls' play. 17. விலங்கு துயிலிடம் (பிங்.); lair, sleeping place of beast 18. விலங்கின் மேற்சேணம்; (வின்.) saddle

of a beast. **19.** மரக்கலம்; **(யாழ்ப்.)** large dhoney. **20.** ***சாவற்சூட்டுப் பண்ணை*** பார்க்க; *see šāvarcūttu-p-pannai.* **21.** ஒருவகைக் கீரை; a kind of greens having glistening white spikes. ***"குமிண்டியும் பண்ணையுங் கூட முளைக்கின்ற கொல்லைக் கம்பை"*** (குளிப்பா. 1, 142, 38) **22.** கூரல்மீன் குடலிலிருந்து செய்யப்படும் ஒரு வகைப் பிசின்; **(வின்.)** a kind of glue made of the intestines of the kūral fish; **23.** தடவை; times. ***'மனிச்சிலே நாலிரண்டு பண்ணை'*** (ஈடு, **9, 1, 5.**) **24.** ***பண்*** பார்க்க; see *paṇ.* ***"வண்டியிர் குரல் பண்ணை போன்றனவே"*** (பரிபா. **14, 4.**)

க. பண்ணெய ம. பண. கோத. பண்

*[பண் → பண்ணு → பண்ணை]*

**பண்ணைக்காரன்** *pannai-k-kāraṉ,* **பெ. (n.)** **1.** உழவன் (சங்.அக.); husbandman, cultivator. **2.** சிற்றூர் உதவிமணியகாரன்; assistant headman of a village. **3.** ***பண்ணையாள்*** பார்க்க, (C.G.) see *paṇṇai-y-āḷ.* **4.** நிலக்கிழார்; rich landlord, farm owner.

*[பண்ணை + காரன்]*

*'காரன்' – உடைமைப் பொருளில் வரும் ஆண்பாற் பெயரீறு.*

**பண்ணைக் காலிகம்** *paṇṇai-k-kāligam,* பெ. (n.) சூரைச் செடி; jackal jujube. **(சா.அக.)**

*[பண்ணை + காலிகம்]*

**பண்ணைக்கிரு-த்தல்** *paṇṇaikkiru-,* **4.** செ.கு.வி. (v.i.) பண்ணையில் ஊழியஞ் செய்தல்; **(வின்.)** to serve as lobourer on a farm.

*[பண்ணைக்கு + இருத்தல்]*

**பண்ணைக்கீரை** *paṇṇai-k-kīrai,* பெ. (n.) சேவற்பண்ணைக் கீரை; cocks comb greens.

**மறுவ:** மலைப்பண்ணைக் கீரை **(சா.அக.)**

**பண்ணைச்சுமை** *paṇṇai-c-cumai,* பெ. (n.) அறுவடைக் காலத்தில் குடிவாரமாகக் கொடுக்கப்படும் கதிர்க்கட்டு; **(வின்.)** sheaves given to agricultural labour ers in harvest time as kuḍi-vāram.

*[பண்ணை + சுமை]*

**பண்ணைச்சேவிதம்** *paṇṇai-c-cēvitam,* பெ. (n.) சங்கஞ்செடி; four spined monetia. **(சா.அக.)**

*[பண்ணை + சேவிதம்]*

**பண்ணைநிலம்** *paṇṇai nilam,* பெ. (n.) **சொந்த வேளாண்** நிலம்; lands directly cultivated by the owner, home farm lands (C.G.)

***[பண்ணை + நிலம்]***

**பண்ணைப்பருவம்** *paṇṇai-p-paruvam,* **பெ.** (n.) சிறு செய்திகளைப் பொருட்படுத்த வேண்டாத பெருஞ்செல்வநிலை; afflluent state in which minor matters are not looked into.

*[பண்ணை + பருவம்]*

**பண்ணை பாய்-தல்** *paṇṇai-pāy-,* **8.** செ.கு.வி. (v.i.) புனலிற் பாய்ந்து விளையாடுதல்; to plunge and sport in water. ***"மருதமேறிப் பண்ணை பாய்வோள்"*** (ஐங்குறு. **74.**)

*[பண்ணை + பாய்தல்]*

**பண்ணை பார்—த்தல்** *paṇṇai-pār-*, 4. செ.கு.வி. (v.i.) 1. வேளாண் நிலங்களைக் கண் காணித்தல்; to manage lands; to attend to one's farm 2. பெருங்குடும்பத்தை ஆளுமை செய்தல்; (வின்.) to manage a large family. (w.) 3. பண்ணைக்கிருத்தல் பார்க்க, (இ.வ.) see paṇṇaikkiruttal.

*[பண்ணை + பார்த்தல்]*

**பண்ணைமாரிதம்** *paṇṇai māridam*, பெ. (n.) இண்டங்கொடி; sensitive creeper. (சா.அக.)

*[பண்ணை + மாரிதம்]*

**பண்ணையம்** *paṇṇaiyam*, பெ. (n.) பண்ணை வைத்து நடத்தும் வேளாண்மை (எங்களூர், 21); farming.

*[பண்ணை → பண்ணையம்]*

**பண்ணையரிசி** *paṇṇai-y-ariši*, பெ. (n.) மூங்கிலரிசி; bamboo sago. (சா.அக.)

**பண்ணையரிவாள்** *paṇṇai-y-arivāḷ*, பெ. (n.) கதிரறுக்கும் அரிவாள்; sickle.

*[பல் → பன் → பண் → பண்ணை]*



**பண்ணையவீடு** *paṇṇaiya-vīḍu*, *பண்ணை வீடு* பார்க்க; (இ.வ.) see *paṇṇaivīḍu*.

*[பண்ணையம் + வீடு]*

**பண்ணையாடு—தல்** *paṇṇai-y-āḍu-*, 5. செ.கு.வி. (v.i.) விளையாடுதல்; to play. *"வனத்திடைப் பண்ணையாட"* (சீவக. 1579.)

*[பண்ணை + ஆடு—.]*

**பண்ணையார்** *paṇṇaiyār* பெ. (n.) பெருநிலக் கிழார்; land lord.

*[பண்ணை + ஆர். ஆர் – மதிப்புரவு விகுதி]*

(சிற்றூர்களில் பெருமளவில் நிலம் தோப்பு (நன்செய், புன்செய்) முதலிய வற்றைச் சொந்தமாகக் கொண்டவரை '*பண்ணையார்*' என்று மதிப்புரவாக அழைப்பர். '***எங்கள் ஊர்க் கோயிலில் பண்ணையாருக்குத்தான் முதல் மரியாதை***' (உ.வ.)

**பண்ணையாள்** *paṇṇai-y-āḷ*, பெ. (n.) பண்ணை வேலைக்காரன்; permanent farm-servant. *'அவர் இருபது ஆண்டாக எங்கள் பண்ணையாளாக இருக்கிறார்'* (உ.வ.)

*[பண்ணை + ஆள்]*

**பண்ணையுப்பு** *paṇṇaiyuppu*, 1. வெடியுப்பு; nitre. 2. மூங்கிலுப்பு; a white silicious matter found in the joints (nodes) of female bamboo. (சா.அக.)

**பண்ணைவீடு** *paṇṇai-vīḍu*, பெ. (n.) 1. பெரிய நிலக்கிழாரின் வீடு; house of a big landlord. 2. மடைப்பள்ளி (யாழ்.அக.); kitchen. 3. பண்டசாலை; (வின்.) store-house.

*[பண்ணை + வீடு]*

**பண்ணை வை¹-த்தல்** *pannai-vai-,* 5. செ.கு.வி. (v.i.) 1. தானே வேளாண்மை செய்ய ஆள்முதலியன அமர்த்துதல்; to engage farm-labourers. 2. தோணியை அணியப் படுத்துதல்; to make ready a dhoney.

*[பண்ணை + வை-,]*

**பண்ணை வை²-த்தல்** *pannai-vai-,* 4. செ.குன்றாவி. (v.t.) சமைத்தல் (யாழ்ப்.); to cook.

*[பண்ணை + வை-,]*

**பண்பகப்பூ** *panbagappū,* பெ. (n.) 1. சீரகம்; cumin seed. 2. கராம்பூ; clove. 3. கோட்டம்; arabian costus. (சா.அக.)

**பண்பட்டவன்** *pan-pattavan,* பெ. (n.) கல்வியறிவும் பட்டறிவும் உள்ளவன்; educated and experienced man.

*[பண் + பட்டவன்]*

**பண்பட்டுத்திரி-தல்** *pan-pattu-tiri-,* 2. செ.கு.வி. (v.i.) ஊழியஞ் செய்து வருதல்; (வின்.) to attend courteously on one; to continue in a course of service (w.)

*[பண்படு + திரி-,]*

**பண்படு-தல்** *panpadu-,* 20. செ.கு.வி. (v.i.) 1. சீர்திருந்துதல்; to become refined or reformed. *"பண்பட்ட செந்தமிழ்"* (தனிப்பா. 1, 171, 23.) *'இசையால் மனம் பண்படும்'* (உ.வ.) 2. நிலம் முதலியன செப்பமாதல்; to be suitable for tillage, as land. *'காடாகக் கிடக்கும் நிலம் பண்பட நாளாகும்'* (உ.வ.) 3. அமைதல்; (வின்.) to be obedient, submissive. 4. உதவுதல்; (வின்.) to help, save.

*[பண் + படு-,]*

**பண்படுத்து-தல்** *pan-padudu-,* 12. செ.குன்றாவி. (v.t.) 1. சீர்திருத்துதல்; to refine; to temper; to season. *'இலக்கியம் மக்களைப் பண்படுத்தும்'* (உ.வ.) 2. நிலம் முதலியவற்றைச் செம்மைப்படுத்துதல்; to prepare or make suitable for fillage as land.

*[பண்படு + பண்படுத்து-,]*

**பண்பாகுபெயர்** *panbāgu-peyar* பெ. (n.) பண்புப் பெயர் பண்பிக்கு ஆகிவருவது (தொல். சொல். 115.); (gram) metonymy in which a word denoting quality is used to denote an object having that quality.

மறுவ. குணவாகுபெயர்.

*[பண்பு + ஆகுபெயர்]*

(பண்பாகு பெயர், சொல்லிய பண்பின் அல்லது குணத்தின் பெயர் அப்பண்பை உடைய பொருளுக்குப் பெயராக வருவது; a kind of melonymy in which a word denoting quality if used for the object having that quality. *"நீல நிறமுடைய கல்லை 'நீலம்' என்று குறிப்பிடும் போது 'நீலம்' பண்பாகுபெயர்"*)

**பண்பாடு** *panbādu,* பெ. (n.) திருந்திய ஒழுக்கம்; உள்ளத்தின் செம்மை; culture.

*[பண்படு → பண்பாடு]*

எளியோரிடத்தும் இனிதாகப் பேசுவதும் புதிதாய் வந்த ஒழுக்கமுள்ள அயலாரை விருந்தோம்புவதும் இரப்போர்க்கிடுவதும் இயன்றவரை பிறர்க்குதவுவதும் கொள்கையும் மானமுங் கெடின் உயிரை விடுவதும் பண்பாட்டுக் கூறுகளாம்.

பண்பாடு பல பொருட்கு உரியதேனும் நிலமும் மக்கள் உள்ளமும் பற்றியே பெருவழக்காகப் பேசப்பெறும். ஆங்கிலத்திலும்

'culture' என்னும் வினைச்சொல்லும் அங்ஙனமே. இவ்விருவகைப் பண்பாட்டுள்ளும் மக்களைத் தழுவிய உளப்பண்பாடே சிறப்பாகக் கொள்ளவும் சொல்லவும் பெறும்.

நாகரிகத்தினும் உயர்ந்த நிலையே பண்பாடாயினும் நாகரிகமின்றியும் பண்பாடுண்டு. காட்டில் தங்கும் முற்றத் துறந்த முனிவரும் ஆடையின்றியும் நீராடாதும் மண்ணில் இருப்பர் ஆயினும் பண்பாட்டில் அவர் சிறந்தவராவர். கரவாது கரைந்து இனத்தோடு உண்ணும் காக்கையும் வேலாற் குத்தியவிடத்தும் நன்றியறிவுள்ள நாயும் ஒருகாலத்தில் ஒரே பெடையோடு கூடிவாழும் வானப் பறவையினமும் நாகரிகமில்லா அஃறிணையாயினும் பண்பாட்டில் மக்களினும் விஞ்சியவையே. (பண். தமி. நா. பண். பக். 7.8)

**பண்பாளர்** *paṇbāḷar,* பெ. (n.) சிறந்த குணநலன்களைப் பெற்றிருப்பவர்; cultured man. *"அவர் ஒரு அறிஞர் மட்டுமல்லர் சிறந்த பண்பாளரும் ஆவார்".*

*[பண்பு + ஆளர்]*

**பண்பாளன்** *paṇbāḷaṉ,* பெ. (n.) நல்லபண்பு களுள்ளவன்; person of good qualities. *"பாயும் பனிமறைந்த பண்பாளா"* (திவ். இயற். 1, 86.)

*[பண்பு + ஆளன்]*

**பண்பானபழத்தி** *paṇbāṉa paḻatti,* பெ. (n.) சர்க்கரைக் கொம்மட்டி; watermelon. (சா.அக.)

**பண்பி** *paṇbi,* பெ. (n.) பண்பையுடைய பொருள்; person or thing posessing a quality. *'வினைமுத லாதலும் பண்பியுமாகிய ஒரு நிமித்தம் பற்றி'* (தொல். சொல். 427. சேனா.)

*[பண்பு → பண்பி]*

**பண்பின்றொகை** *paṇbiṉṟōgai,* பெ. (n.) *பண்புத்தொகை* (தொல். சொல். 416.) பார்க்க; see *paṇbu-t-togai.*

*[பண்பின் + தொகை]*

**பண்பு** *paṇbu,* பெ. (n.) 1. வண்ணம், வடிவு, அளவு, சுவையென்னும் நாற்குணம் (திவா.); quality of four kinds, viz., vaṇṇam, vaḍivu, aḷavu, šuvai. 2. இயல்பு; nature; property. *"நுண்ணிதின் விளக்க லதுவதன் பண்பே"* (தொல். பொ. 478.) 3. மனத்தன்மை; disposition, temper. *"ஈதென்ன பண்பிவட்கே"* (தணிகைப்பு. களவு. 184.) 4. பிறரியல்பை யறிந்து நடக்கும் நற்குணம்; good quality, courtesy. *"பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்"* (கலித். 133.) 5. வகை; mode, state, manner. *"பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்"* (திருவாச. 2, 53.) 6. பண்புப் பெயர்; (gram.) noun denoting quality. *"பண்புகொள் பெயர்க்கொடை"* (தொல். சொல். 18.) 7. அழகு (தஞ்சைவா. 31, உரை); beauty. 8. முறை; usage according to sāstrās, customs, manners. *"பண்பினா னீக்கல் கலம்"* (ஆசாரக். 27.) 9. செய்கை; action, deed. *"இப்பாத கந்தரு பண்பை யிழைத்தேம்"* (பிரமோத். 9, 38.)

கொத. பண்பண்

*[பண் → பண்பு]*

**பண்புகாட்டு–தல்** *paṇbu-kāṭṭu-,* 9. செ.கு.வி. (v.i.) இயற்கைக் குணத்தை வெளிப் படுத்துதல் (யாழ்ப்.); to betray one's true nature.

*[பண்பு + காட்டு–,]*

**பண்புகொள்பெயர்** *paṇbu-koḷ-peyar,* பெ. (n.) 1. பண்புச்சொல் தழுவிய பெயர்; noun qualified by an adjective denoting qualitly as šēññāyiṟu. *"பண்புகொள் பெயர்க் கொடை"* (தொல். சொல். 18.) 2. பண்படியாகப் பிறந்த பெயர்ச் சொல் (தொல். எழுத். 482, உரை); concrete noun derived from a quality, as kaṟiyatu. 3. பண்பியைக் குறிக்கும் பெயர்; word of quality denoting the object which has the quality. *"பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்"* (தொல். சொல். 115)

*[பண்புகொள் + பெயர்]*

**பண்புச்சொல்** *paṇbu-c-col,* பெ. (n.) பண்புணர்த்தும் சொல்; word denoting quality.

*[பண்பு + சொல்]*

**பண்புடையார்** *paṇbuḍaiyār,* பெ. (n.) *பண்பாளர்* பார்க்க; see *paṇbāḷar. "பண்புடையார் பட்டுண் டுலகம்"* (குறள்.996)

*[பண்பு + உடையார்]*

**பண்புத்தொகை** *paṇbu-t-togai,* பெ. (n.) சிறப்பிப்பதும் சிறப்பிக்கப் படுவதுமாகிய சொற்களால் ஆகிய தொகை; (gram.) an appositional compound word in which the first member stands in adjectival relation to the second. *'முன்மொழிப் பண்புத் தொகையும்'* (வீரசோ. தொகை. 5, உரை)

*[பண்பு + தொகை]*

**பண்புதொகுமொழி** *paṇbu-togu-moḻi,* பெ. (n.) *பண்புத் தொகை* பார்க்க; see *paṇbu-t-togai. "ஐம்பாலறியும் பண்புதொகு மொழியும்"* (தொல். எழுத். 482.)

*[பண்பு + தொகுமொழி]*

**பண்புப்பெயர்** *paṇbu-p-peyar,* பெ. (n.) பண்பைக் குறிக்கும் பெயர்; (Gram.) noun denoting a quality. *"பண்புகொள் பெயர்க்கொடை"* (தொல். சொல். 18.)

*[பண்பு + பெயர்]*

**பண்புருபு** *paṇburubu,* பெ. (n.) பண்பைக் குறிக்கும் ஆகிய என்னும் சொல்லுருபு (நன். 365, உரை.); the word āgiya denoting adjectival relation of one word to another.

*[பண்பு + உருபு]*

**பண்புரைப்பார்** *paṇburaippār,* பெ. (n.) தூதர் (பிங்.); messengers, agents, emissaries.

*[பண்பு + உரைப்பார்]*

**பண்புலம்** *paṇ-pulam,* பெ. (n.) உரமிட்ட வயல்; well manured field. *"பண்புல வுழவர்"* (பெருங். வத்தவ. 265.)

*[பண் + புலம்]*

**பண்புவமை** *paṇbuvamai,* பெ. (n.) ஒத்த பண்பு சொல்லி உவமிக்கும் உவமை (தண்டி. 29.); (rhet.) a species of simile in which the point of comparison is in regard to qualities and properties.

*[பண்பு + உவமை]*

**பண்பொட்டு** *paṇboṭṭu,* பெ. (n.) *பண்புத் தொகை* பார்க்க; see *paṇbu-t-togai. 'வடாஅது தென்னும் முற்றுவினைக் குறிப்பைப் பெயர்ப் படுத்திப் பனிபடு நெடுவரையொடு பண்பொட்டாக்கி'* (புறநா. 6, உரை.)

*[பண்பு + ஒட்டு]*

**பண்மகள்** *paṇ-magaḷ,* பெ. (n.) விறலி; songstress. *"பண்மகளும்.... தேர்ப்பவனியுண் டென்றாள்"* (திருவாரூ. 219.)

*[பண் + மகள்]*

**பண்மாறு** *paṇ-māṟu,* பெ. (n.) தேசிக் கூத்தை ஒருமுறை ஆடிமுடிக்கை (சிலப். 3, 153, உரை); completing one round or turn of tēši-k-kūttu.

*[பண் + மாறு]*

**பண்மையனான்** *paṇmaiyaṉāṉ,* பெ. (n.) செம்புக்கல்; ruby gem. (சா.அக.)

**பண்மையாதி** *paṇmai-y-ādi,* பெ. (n.) உடம்பில் அறுநிலைகளில் ஒன்றான கழுத்துப்பகுதி (விசுத்தி); one of the six centres of the body; it is in the neck region. (சா.அக.)

**பண்விடு–தல்** *paṇ-viḍu-,* 2. செ.குன்றாவி. (v.i.) நிலைகுலைதல்; to go to pieces; to be wrecked, shattered. *"நெஞ்சம் பண்விட்டது"* (சீவக. 676.)

*[பண் + விடு–.]*

**பண அஞ்சல்** *paṇa-aññal,* பெ. (n.) பணவிடை பார்க்க; see paṇa-v-iḍai. *"அஞ்சல் நிலையத்திற்கு சென்று பண அஞ்சல் (பணவிடை) அனுப்பிவிட்டு வா"*

*[பணம் + அஞ்சல்]*

**பணக்கலியாணம்** *paṇa-k-kaliyāṇam,* பெ. (n.) திருமணத்தில் மொய்யிடுங் காலத்துச் செய்யும் விருந்து; feast given at the time of receiving presents from friends on a marriage occasion.

*[பணம் + கலியாணம்]*

**பணக்காரன்** *paṇa-k-kāṟaṉ,* பெ. (n.) செல்வன்; rich man.

*[பணம் + காரன்]*

**பணக்காரி** *paṇa-k-kāri,* பெ. (n.) செல்வ முள்ளவள்; rich woman. fem. of பணக்காரன்.

*[பணம் + காரி]*

**பணக்கொழுப்பு** *paṇa-k-koḻuppu,* பெ. (n.) ***பணச்சலுகை*** பார்க்க; see *paṇa-c-calugai.*

*[பணம் + கொழுப்பு]*

**பணச்சலுகை** *paṇa-c-calugai,* பெ. (n.) செல்வச் செருக்கு (வின்.); show, parade, insolence of wealth.

*[பணம் + சலுகை]*

**பணத்தட்டு** *paṇa-t-taṭṭu,* பெ. (n.) 1. பண மில்லாக்குறைவு; want of money. 2. பணத்துடன் கூடிய தட்டு; a plate with full of money. *'பணத்தட்டுபுலவர்க்கோ அரசர்க்கோ'* (உ.வ.)

*[பணம் + தட்டு]*

தட்டு = 1. குறைபாடு, 2. தாம்பாளம்

**பணத்தூக்கம்** *paṇa-t-tūkkam,* பெ. (n.) இரண்டு மஞ்சாடி கொண்ட ஓர் எடுத்தலளவை; a measure of weight = 2. mañjāḍi.

மறுவ. பணத்தூக்கு

*[பணம் + தூக்கம்]*

**பணதரம்** *paṇa-taram,* பெ. (n.) பாம்பு (சங்.அக.); serpant, as hooded.

பணம் = படம், படமெடுக்கும் பாம்பு. மறுவ. பணாகரம்.

*[பணம் + தரம்]*

தரம் = skt.

**பணதி** *paṇadi,* பெ. (n.) 1. வேலைப்பாடு; workmanship. ***"வாய்ப்புடைப் பணதி வல்லோர் வகுத்த.... கம்மத்தழகொடு புணர்ந்து"*** (பெருங். மகத. 3, 27.) 2. செயல்; action. ***"பாகமறப் பணதியற"*** (ஞானவா. தேவபூ. 21.) 3. படைப்பு; creation. ***"மூன்றுலகாம் பணதி செய்து"*** (ஞானவா. தாசூ. 30.) 4. அணிகலன்; jewels, ornament. 5. கற்பனை; fancy, delusion. ***"உளத்திலோர் பணதிபோல"*** (ஞானவா. வில்வ. 9.)

*[பண் → பண்ணு → பணதி]*

**பணப்பயிர்** *paṇa-p-payir,* பெ. (n.) தவசம் அல்லாத வருமானத்தைத் தரக் கூடிய கரும்பு, பருத்தி போன்ற பயிர்கள்; commerical crop; cash crop. ***'ஒருசில மாவட்டங்களில் வருமானத்தைத்தரக்கூடிய பணப்பயிர்களை அதிகமாகப்பயிரிடுவர்'***

*[பணம் + பயிர்]*

**பணப்பலகை** *paṇa-p-paḷagai,* பெ. (n.) சிறு காசுகளை எளிதில் எண்ணியறிதற்குச் செய்த குழிகளுள்ள மரப்பலகை (நாஞ்.); a flat piece of wood with small dens each equal in size to a small coin, used in countng coins.

*[பணம் + பலகை]*

**பணப்பித்து** *paṇa-p-pittu,* பெ. (n.) பணப்பேராசை; greed of money, avarice.

*[பணம் + பித்து]*

**பணப்புரட்சி** *paṇa-p-puraṭci,* பெ. (n.) செல்வமிகுதி (யாழ்ப்.); command of money, abundance of wealth.

*[பணம் + புரட்சி]*

**பணப்புரட்டு** *paṇa-p-puraṭṭu,* பெ. (n.) 1. பணப்புரட்சி பார்க்க; see paṇa-p-puraṭci. 2. மோசடி; cheat.

*[பணம் + புரட்டு]*

**பணப்புள்ளி** *paṇa-p-puḷḷi,* பெ. (n.) 1. பணக்காரன்; a rich person. 2. மாட்டுக்குற்றவகை (மாட்டுவா. 19.); a defect in cattle.

*[பணம் + புள்ளி]*

**பணப்பெயர்ச்சி** *paṇa-p-peyarcci,* பெ. (n.) கடன் வாங்கிப் பணந்திரட்டுகை (யாழ்ப்.); raising money by borrowing, etc.,

*[பணம் + பெயர்ச்சி]*

**பணப்பேய்** *paṇa-p-pēy,* பெ. (n.) பணத்தில் மிக்க ஆசை; extreme avarice.

*[பணம் + பேய்]*

**பணபரம்** *paṇaparam,* பெ. (n.) பிறப்பு நல்லோரையிலிருந்து இரண்டு ஐந்து, எட்டு, பதினோராமிடங்கள் (குமாரசு. இராசி. 2.); (astrol.) the second fifth, eighth, and elventh houses from the ascendant.

*[பணம் + பரம்]*

**பணபனன்** *paṇabaṉaṉ,* பெ. (n.) அரசமரம்; peepul tree. (சா.அக.)

**பணம்**[1] *paṇam,* பெ. (n.) பருமை (சது.); thickness, largeness.

*[பணை → பணம்]*

**பணம்**[2] *paṇam,* பெ. (n.) 1. பொருட்செல்வம்; wealth. 2. பொற்காசு (சூடா.); coin; money, gold coin. *'பணவிடுதூது'* 3. பழைய அளவை முறை கொண்ட வெள்ளி, மற்றும் பொற்காசு வகை; fanam. 4. வாணிபச்சரக்கு (யாழ்.அக.); commodity for sale. 5. விலை (யாழ்.அக.); price. 6. வேலை (யாழ்.அக.); business. 7. வீடு (யாழ்.அக.); house.

க. ஹண

**பணம்**[3] *paṇam,* பெ. (n.) 1. அரசால் வெளியிடப்படுவதும், மதிப்புக் குறிக்கப் படுவதும், மாழை, தாள் ஆகியவற்றால் ஆகியதுமான, வாங்கல், விற்றல் ஆகிய செயல்பாடுகளுக்குக் கருவியாகப் பயன்படும் ஊடகம்; money. *"எந்தப் பொருள்கள் வாங்குவதற்கும், விற்பதற்கும் பணம் தேவைப் படுகிறது"* 2. (ஒருவரிடம்) அதிகப் பண இருப்பு; possesssion of money and wealth. *"பணத் திமிரில் என்ன வேண்டுமானாலும் பேசலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா?" "பணம் என்றால் பிணம் கூட வாயைத் திறக்கும்"* (பழ.)



**பணம்**[4] *paṇam,* பெ. (n.) 1. பாம்பின் படம்; expanded hood of a cobra. *"நாகபணந் திகழ்"* (தேவா. 84, 4.) 2. பாம்பு (சூடா.); cobra *"கரும்பணக் கச்சைக் கடவுள்"* (திருவாச. 3, 96.) 3. யானையை நடத்துதற்குரிய தலைவனுடைய கருவி; a hooded instrument for guiding elephants. *"பணப் பாகரைப் பரிந்து குத்தி"* (பதினொ. ஆளுடை 108.)

**பணம்**[5] *paṇam,* பெ. (n.) இடங்கை வலங்கைப் பிரிவினர் (G.Sm.D.I.i, 126.); subsection of iḍangai and valangai classes.

**பணம்**[6] *paṇam,* பெ. (n.) பணையம், 3. பார்க்க; see panaiyam. 3. *"பொருளனைத்தையும் பணத்திடை மாய்த்தே"* (வேதாரணி. பலபத். 4.)

**பணம்**[7] *paṇam,* பெ. (n.) பந்தயம்; bet. *"சூதில்...பொருளனைத்தையும் பணத்திடை மாய்த்தே"* (வேதாரணி. பலபத். 4.)

**பணம்பண்ணு-தல்** *paṇam paṇṇu,* 15. செ.கு.வி. (v.i.) பணம் ஈட்டுதல்; make or earn money. *"நேர்மையான வழியில் பணம் பண்ணப்பார்"*

*[பணம் + பண்ணு-,]*

**பணம்பரிமாறு-தல்** *paṇam-parimāṟu,* 6. செ.கு.வி. (v.i.) 1. காசு புரளுகை; circulation of money. 2. கையிருப்பிற் பணமிருக்கை; command of money.

*[பணம் + பரிமாறு-,]*

**பணம் பறி-த்தல்** *paṇam-paṟi-,* 4. செ.கு.வி. (v.i.) பொருளைக் கவர்தல்; to extort money by dishonourable means.

*[பணம் + பறி-,]*

**பணம்பு** *paṇambu,* பெ. (n.) பாலம் (ஸ்ரீபுராணம்.ms); bridge.

க. ப்ரநம்பு

**பணம்வை–த்தல்** *paṇam-vai-,* 4. செ.கு.வி. (v.i.) 1. பொருட்பந்தயம் வைத்தல்; to bet money, as in gambling. *"பணம் வைத்துச் சூதாடினான்"* 2. திருமணம் முதலான நிகழ்ச்சிகளில் அன்பளிப்பாகப் பணம் வழங்குதல்; to present money for the couple.

*[பணம் + வை–,]*

**பணமடி[1]–த்தல்** *paṇam-aḍi-,* 4. செ.குன்றாவி. (v.t.) மாழைகளிலும் தாளிலும் அரசு பணம் அச்சிட்டு வெளியிடுதல்; to mint coins and currency by the government.

**பணமடி[2]–த்தல்** *paṇam-aḍi-,* 4. செ.கு.வி. (v.t.) *பணம்பறி–,* (இ.வ) பார்க்க; see *paṇam-paṟi-.*

*[பணம் + அடி –,]*

**பணமணி** *paṇa-maṇi,* பெ. (n.) பணாமணி, பார்க்க 1. *"உரககங்கணந் தருவன பணமணி"* (துக்கயாகப்.காப்பு.)

*[பணம் + மணி]*

**பணமிடுக்கு** *paṇa-miḍukku,* பெ. (n.) செல்வத்தாலான வலிமை; power of wealth.

*[பணம் + மிடுக்கு]*

**பணமிதப்பு** *paṇa-midappu,* பெ. (n.) செல்வ மிகுதி; abundance of money.

*[பணம் + மிதப்பு]*

**பணமுட்டு** *paṇa-muṭṭu,* பெ. (n.) *பணத்தட்டு* பார்க்க, see *paṇat-taṭṭu.*

*[பணம் + முட்டு]*

**பணமுடக்கம்** *paṇa-muḍakkam,* பெ. (n.) 1. *பணத்தட்டு* பார்க்க; see *paṇa-t-taṭṭu.* 2. பணம் வட்டியின்றி வீணாகத் தங்குகை; money lying idle without interst.

*[பணம் + முடக்கம்]*

**பணமுடிச்சு** *paṇa-muḍiccu,* பெ. (n.) பணத்தைத் துணியில் கட்டிவைக்கும் முடிப்பு; money tied in a little piece of cloth, or at the end of a garment.

*[பணம் + முடிச்சு]*

**பணமுடிப்பு** *paṇa-muḍippu,* பெ. (n.) ஒருவரைப் பாராட்டிச் சிறப்பிக்கும் முறையில் அல்லது ஒரு நோக்கத்துக்காகச் செலவிடும் பொருட்டுத் திரட்டி வழங்கப்படும் பெருந் தொகை; sum of money collected and given as a gift; purse. *"விடுதலைப் போராட்ட ஈகிக்கு விழாவில் பணமுடிப்பு வழங்கினார்கள்" "கட்சித் தலைவரிடம் தேர்தலுக்காகத் தொண்டர்கள் பணமுடிப்புத் தந்தனர்"*

*[பணம் + முடிப்பு]*

**பணமுடை** *paṇa-muḍai,* பெ. (n.) *பணத்தட்டு* பார்க்க; see *paṇa-t-taṭṭu.*

*[பணம் + முடை]*

**பணயக்கைதி** *paṇaya-k-kaidi,* பெ. (n.) தங்கள் கோரிக்கைகளுக்கு இணங்கும்படி கடத்தல்காரர்கள், முனைப்பாளர்கள் போன்றோர் எதிர்த்தரப்பினரை மருட்டிப் பணியவைக்கும் நோக்கத்துடன் பிடித்து வைக்கப்பட்டிருப்பவர்; hostage; person head

for ranson. *"வானூர்திக் கடத்தல்காரர்கள், செல்கையரைப் பணயக்கைதிகளாகப் பிடித்து வைத்திருப்பது எந்த வகையிலும் நியாயம் இல்லை"*

*[பணம் + கைதி]*

கைதி = urutu

**பணயம்** *paṇayam,* பெ. (n.) 1. ஈடாக வைக்கும் பொருள்; pledge, pawn. *"பூணுமாரமும் பணயமாக"* (கம்பரா. ஊர்தே. 185.) 2. விலைமகளுக்குக் கொடுக்குங் கூலி; hire of a harlot. *"பார்ப்பான் பணயங்கொடுத்து"* (விறலிவிடு.) 3. *பணையம்,* பார்க்க, 3. see *paṇaiyam,* 3.

ம. பணயம்

**பணயம்** *paṇayam,* பெ. (n.) பந்தயமாகவோ ஈகமாகவோ) திரும்பப் பெறல் அரிது என்று தெரிந்தும் எளிதாக நினைத்துத் துணிந்து முன்வைக்கிற ஒன்று; staking ones property, life, etc., *"பந்தயத்திற்காகச் சொத்து முழுவதையும் பணயமாக வைத்து விளையாடுபவர்கள் சோம்பேறிகள்"; "தீக்குள் அகப்பட்டுக் கொண்டவர்களை உயிரைப் பணயம் வைத்துத் தீயணைப்புப் படையினர் காப்பாற்றினர்"*

*[பிணையம் → பணையம்]*

**பணர்** *paṇar,* பெ. (n.) 1. மரக்கிளை; branches. 2. அடர்ந்த கொப்பு; thick branches. *"பணர்விட்டுக் கிளைக்கிறது".*

*[பணை → பணர்]*

**பணவஞ்சல்** *paṇa-v-añjal,* பெ. (n.) *பணவிடை²* பார்க்க; see *paṇaviḍai²,* *'அஞ்சலகம் சென்று பணவஞ்சல் அனுப்பி வா'* (உ.வ.)

*[பணம் + அஞ்சல்]*

**பணவம்** *paṇavam,* பெ. (n.) தம்பட்டம் (திவா.); a small single-headed drum. *"பணவந்தூரி"* (கம்பரா. பிரமாத்திர. 5.)

*[பண் → பணவம்]*

**பணவர்க்கம்** *paṇa-varkkam,* பெ. (n.) காசாயம் (கல்.); tax payable in cash.

*[பணம் + வர்க்கம்]*

வர்க்கம் = Skt.

**பணவன்** *paṇavaṉ,* பெ. (n.) வேலைக்காரன் (வின்.); servant.

*[பணம்² → பணவன்]*

**பணவாசி** *paṇa-vāśi,* பெ. (n.) பழைய வரிவகை (S.I.I.iv, 122); an ancient tax.

*[பணம் + வாசி]*

**பணவிடை¹** *paṇa-v-iḍai,* பெ. (n.) பணவெடை பார்க்க; (கணக்கதி. பக். 28.) see *paṇaveḍai.*

*[பணம்² + எடை → பணவிடை]*

**பணவிடை²** *paṇa-viḍai,* பெ. (n.) ஒருவர் மற்றொருவருக்குப் பணத்தை அஞ்சல் அலுவலகத்தின் மூலமாகக் கட்டணம் செலுத்தி அனுப்பும் முறை; money order (sent through post office) *"விண்ணப்பக் கட்டணத்தைப் பணவிடை மூலம் செலுத்தலாம் என்று குறிப்பிடப்பட்டிருந்தது" "ஊருக்குப் பணத்தைப் பணவிடை மூலம் அனுப்புவது பாதுகாப்பாக இருக்கும்".*

*[பணம் + விடை]*

**பணவியிரி** *paṇaviyiri,* பெ. (n.) கருடன் கிழங்கு; snake caper. (சா.அக.)

**பணவீக்கம்** *pana-vikkam,* பெ. (n.) ஒரு நாட்டில் பணப்புழக்கம் அதிகமாவதால் பணத்தின் மதிப்புக்குறைந்து அகவிலை அதிகமாகும் நிலை; inflation. *"பணவீக்கம் எந்த நாட்டிற்கும் நல்லதன்று"*

*[பணம் + வீக்கம்]*

**பணம்வெட்டு[1]–தல்** *panam-vettu-,* 5. செ.குன்றாவி. (v.t.) காசு வார்த்தல்; to mint coins.

*[பணம் + வெட்டு–,]*

**பணம்வெட்டு[2]–தல்** *panam-vettu-,* 5. செ.கு.வி. (v.i.) பொருளைப் பிடுங்கிக் கொள்ளல்; to extort money by dishonourable means.

*[பணம் + வெட்டு–,]*

**பணம்வெட்டு[3]–தல்** *panam-vettu-,* செ.கு.வி. (v.i.) 1. பணங்கொடுத்தல்; to give money for something. 2. கையூட்டுக் கொடுத்தல்; to give bribe.

*[பணம் + வெட்டு –,]*

**பணவெடை** *pana-v-edai,* பெ. (n.) 4 குன்றிமணி அல்லது அரைக்கால் வராகனெடையுள்ள பொன்னிறை (வின்.); gold smiths weight - 4 kunri-mani - 1/8 varāgan edai.

*[பணம்[2] + எடை]*

**பணவை[1]** *panavai,* பெ. (n.) 1. பரண்; watch-tower; loft. *"ஆசினிப் பணவை யேறி"* (கலித். 41.) *"விளங்கல் மீமிசை பணவைக் கானவர் புலம்புக்குண்ணும் புரிவளைப் பூசல்"* (மலைபடு. 298.) *"விண்தோய் பணவை மிசை"* (குறிஞ்சிப். 226.)

**பணவை[2]** *panavai,* பெ. (n.) 1. கழுகு (பிங்.); eagle. 2. பேய் (சூடா.); devil. 3. அளவு (அக.நி.); measure.

*[பண் – பணவை*
*பிணம் – பணவை*
*பணம் → பணவை]*

**பணவொடுக்கு** *pana-v-odukku,* பெ. (n.) பணஞ்செலுத்துகை (யாழ்ப்.); remittance of money, as into a treasury.

*[பணம்[2] + ஒடுக்கு]*

**பணறு** *panaru,* பெ. (n.) பணர் (யாழ்.அக.) see panar.

*[பணர் → பணறு]*

**பணாகரம்** *panāgaram,* பெ. (n.) பாம்பு (சங்.அக.); serpent.

மறுவ. பணாதரம்

*[பணம் + ஆகரம்]*

ஆகரம் = Skt.

**பணாங்கனை** *panānganai,* பெ. (n.) விலைமகள் (யாழ்.அக.); prostitute.

*[பணம் + பணாங்கனை]*

**பணாடவி** *panādavi,* பெ. (n.) பாம்புப் படத்தின் கூட்டம்; crowd of expanded hoods, as of the divine serpent ādišēdan. *'ஆயிரம் பணாடவி யுருந்தவத் தொருவன்'* (கல்லா. 41, 7.)

*[பணம் + அடவி]*

**பணாதரம்** *panātaram,* பெ. (n.) *பணாகரம்* பார்க்க, see *panāgaram.* *"பணாதரேச்சுரப் படலம்"* (காஞ்சிப்பு.).

*[பணம் + தரம்]*

தரம் = Skt.

**பணாமகுடம்** *paṇā-magudam,* பெ. (n.) பாம்பின் படமுடி; the expanded hood of a cobra formed into a crown.

*[பணம் + மகுடம்]*

**பணாமணி** *paṇā-maṇi,* பெ. (n.) 1. நாகமணி; the gem in cobra's head. *"பாரகஞ் சுமந்த பாம்பின் பணாமணி பறிக்க வேண்டின்"* (கம்பரா. மகுடபங். 40) 2. மாணிக்க வகை; a kind of ruby. *"கோமளங் குருவிந்தம் பதுமராகம் பணாமணியே"* (திருவாலவா. *25, 12)*

*[பணம் + மணி]*

**பணாமரம்** *paṇāmaram,* பெ. (n.) கொப்படர்த்தியான மரம்; any tree with close thick twigs and branches. (சா.அக.)

*[பணை → பணர் → பணா + மரம்]*

**பணாமுடி** *paṇā-muḍi,* பெ. (n.) பாம்பின் படமுடி; the hood of the cobra, as its crown. *"சோதிப் பணாமுடி யாயிரங் கொண்ட தொல்லறி வென்னுமொர் பாம்பின்மேல்"* (பாரதி. பாஞ்சாலி,1,81.)

*[பணம் + முடி]*

**பணாமுத்திரை** *paṇā-muttirai,* பெ. (n.) முத்திரைவகை (சைவாநு. வி.18); a handpose, in worship.

*[பணம் + முத்திரை]*



**பணாயிதம்** *paṇāyidam,* பெ. (n.) வணங்குகை (யாழ்.அக.); bowing, making obeisance.

*[பணி + இதம்]*

இதம் = Skt.

**பணாயை** *paṇāyai,* பெ. (n.) 1. கடைவீதி; market-place. 2. தொழில்; business. 3. வணிகத்தில் ஊதியம்; profit in a transaction.

*[பண் → பணாயை]*

**பணாவிருத்தம்** *paṇāviruttam,* பெ. (n.) பாவட்டை; common indian pellet shrub. (சா.அக.)

**பணி¹—தல்** *paṇi-,* 4. செ.கு.வி. (v.i.) 1. தாழ்தல்; to be low in height, as a house, a roof or a branch; to be short; as a person or post; to be lowered. *"பணியிய ரத்தைநின் குடையே"* (புறநா. 6.) 2. பெருமிதமின்றி யடங்குதல்; to be humble; to be submissive, as in speech. *"எல்லார்க்கும் நன்றாம் பணிதல்"* (குறள், 125.) 3. இறங்குதல் (வின்.); to decline, as a heavenly body; to descend lower, as a bird. 4. பரத்தல், (சீவக. 2531,

உரை.); to spread. 5. தாழ்ச்சியாதல்; to become inferior. 6. குறைதல் (யாழ்ப்.); to fall, as prices, wages. 7. எளிமையாதல் (யாழ்ப்.); to be reduced in circumstances.

ம. பணியுக.

*[பண் → பணி]*

**பணி[2]–தல்** *paṇi-,* 2. செ.குன்றா.வி. (v.t.) 1. வணங்குதல்; to bow to, make obeisance. to, *"உடையான் கழல் பணிந்திலை"* (திருவாச. 5, 35.) 2. உண்ணுதல் (யாழ்ப்.); to eat. *"பூதம் பணிகிறது போலப் பணிகிறான்"*

**பணி[3]–த்தல்** *paṇi-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. தாழ்த்துதல்; to lower or lead down, degrade, humbled. *"வேந்தன் வேற்றவர்ப் பணிப்ப"* (பு.வெ. 4, 9, கொளு.) 2. குறைத்தல் (வின்.); to reduce, as price. 3. மிதித்தல்; to set foot on, tread. *"நந்து மாமையும் பணித்து"* (சீவக. 2109.)

*[பணி[1] → பணி–,]*

**பணி[4]–த்தல்** *paṇi-,* 4. செ.குன்றா.வி. (v.t.) 1. அருளிச்செய்தல்; to say, speak, declare, used of a superior. *"வாய்திறந்தொன்று பணித்த துண்டு"* (திவ். பெரியதி. 2, 8, 9.) 2. ஆணை யிடுதல்; to order, command, direct. *"வீயா விழுச்சீர் வேந்தன் பணித்ததூஉம்"* (மணிமே. 20, 10.) 3. கொடுத்தல்: to give, bestow. *"திருவிரனெகிழ்ந்து வாள்பணித்தான்"* (தேவா. 658, 8.)

ம. பணிக்க

*[பணி[1] → பணி–,]*

**பணி[5]–த்தல்** *paṇi-,* 4. செ.குன்றா.வி (v.t.) அதிகாரம், கட்டளை போன்றவற்றுக்கு கட்டுப்படுதல்; அடங்கிக் கீழ்ப்படிதல்; submit. (one self to authority, order etc.) *"அப்பா சீற்றமாகப் பேசினால், நீ பணிந்து போகக் கூடாதா?" "உன் மிரட்டலுக்கு நான் பணிய மாட்டேன்"*

**பணி[6]** *paṇi,* பெ. (n.) 1. செயல்; act. action, performance. 2. தொழில்; work, service, trade, art, pursuit *"உன்பணிநீ பணித்திலை"* (அஷ்டப். திருவேங்கடத்தந். 52.) 3. தொண்டு; services to a deity, as by a devotee: services to a temple, as construction of buildings, etc. *"திருப்பணிகள் செய்வேனுக்கு"* (திருவாச. 40, 10.) 4. பணிகை (பிங்.); bowing, reverencing. *"என்கடன் பணி செய்து கிடப்பதே"* (தேவா. 221, 9.) 5. பரக்கை (சீவக. 1531, உரை.); expanding, spreading. 6. கடினமான வேலை; difficult task. *'போய்ப் புகுருகை சாலப் பணியாயிருக்கும்'* (ஈடு. 6, 1, 7.) 7. நுகர்ச்சிப்பொருள்; object of enjoyment. *'கலம்ப மாலையைப் பணியாக'* (ஈடு.) 8. அணிகலன் (பிங்.); jewel; ornament. *"பணியெலாம் பணியதாகி"* (கந்தபு. ததீசியுத். 160.) 9. மலர்களால் அணியழகு செய்தல்; decoration with flowers. 10. பட்டாடை (இ.வ.) (வின்.); silk cloth. 11. தோற்கருவி (பிங்.); drum. 12. வேலைப்பாடு; workmanship. *"பணி பழுத்தமைந்த பூண்"* (கம்பரா. இலங்கைகே. 12.) 13. வகுப்பு (ஈடு.); row. class, order.

ம. பணி

*[பண்ணு → பணி]*

**பணி[7]** *paṇi,* பெ. (n.) 1. செயலை நிறைவேற்றும்படி ஆணையிடுதல்; கட்டளையிடுதல்; order; cause (w.o.) to carry out (an order) *"வெள்ளத்தில் ஊறுபட்டவர்களுக்கு உதவித்தொகையை*

உடனடியாக வழங்குமாறு அதிகாரிகளை அமைச்சர் பணித்தார்" 2. பெரும்பாலும் அலுவலகத்தில் இன்ன முறையில் செய்யுமாறு அறிவுறுத்தல்; குறிப்பிடுதல்; mostly in official use instruct; direct s.o. to do certain things *"இது பற்றிய செய்தியை விரைவில் அனுப்பி வைக்குமாறு நீங்கள் பணிக்கப் பட்டுள்ளீர்கள்" "தங்களுக்கு நினைவூட்டுமாறு நான் பணிக்கப்பட்டுள்ளேன்"*

**பணி**[8] *paṇi,* பெ. (n.) **1.** சொல் (பிங்.); saying, word. *"பல்லிருங் கூந்தல் பணிநோனான்"* (கார்நாற். 24.) **2.** கட்டளை; command, order, direction. *"வேற்றரசு பணிதொடங்கு நின்னாற்றலொடு புகழேத்தி"* (புறநா. 17.) **3.** நெறிமுறை; rule. *"குஞ்சி பணியொடு பரிந்து நின்றார்"* (மேருமந். 123.) **4.** வில்வித்தை முதலியவற்றைக் கற்பிக்குந் தொழில்; profession, of teaching archery and other allied arts. *"நன்றி கூர் பணிக்கு மீ ந்து"* (திருவாலவா. 35, 6.) **5.** ஈகை (யாழ்.அக.); gift.

*[பணி[7] – த்தல் → பணி]*

**பணி**[9] *paṇi,* பெ. (n.) **1.** அலுவலகம், தொழிற் சாலை முதலியவற்றில் தரப்படும் பொறுப்பை ஊதியம் பெற்று நிறைவேற்றுவது; வேலை; work; service. *"அவர் அரசுப் பணியில் உள்ளார்" "பணி நேரம் மாற்றி அமைக்கப் பட்டுள்ளது" "துப்புரவுப் பணி"* **2.** பொது நலத்திற்காக ஊதியம் பெற்றுக்கொள்ளாமல் செய்யும் வேலை; தொண்டு; work; service (for a public cause) *"அவர் செய்த கலைப்பணி கள் ஏராளம்" "தேர்தல் பணியில் தொண்டர்கள் முனைப்பாக ஈடுபட்டுள்ளனர்" "மக்களுக்காகப் பணி புரியவிருப்பம்"*

**பணி**[10] *paṇi,* பெ. (n.) நாகம் (பிங்.); cobra.

*[பணம் → பணி]*

**பணி**[11] *paṇi,* பெ. (n.) தாழ்ச்சி (ஈடு. 10,3,4 ஜீ); lowlness, meanness.

*[பண் → பணி]*

**பணிக்கம்**[1] *paṇikkam,* பெ. (n.) **1,** திருத்தம்; amendment, correction. **2.** தொழிலின் நேர்மை; accuracy of design; neatness; elaboration in a work.

*[பண் → பணி → பணிக்கம்]*

**பணிக்கம்**[2] *paṇikkam,* பெ. (n.) எச்சில் உமிழுங் கலம்; spittoon.

*[படிக்கம் → பணிக்கம்]*

**பணிக்களரி** *paṇi-k-kaḷari,* பெ. (n.) தொழில் செய்யுமிடம்; workshop. *'கொல்லனது பணிக் களரியாகிய குறிய கொட்டிலிடத்தன வாயின எந்நாளும்'* (புறநா. 95, உரை.)

*[பணி + களரி]*

**பணிக்கன்** *paṇikkaṉ,* பெ. (n.) **1.** ஆசிரியன் (பிங்.); teacher. **2.** படைக்கலம் பயிற்றுவோன்; fencing master, one who teaches the use of arms. *"பண்புடையா னொரு பணிக்கன் றோன்றி"* (திருவாலவா. 35, 1.) **3.** கூத்துப் பயில்விப்போன்; director or manager of a play; instructor, as of actors; dancing master. **4.** தலைமைக் கொற்றன் (வின்.); master builder. **5.** தச்சன் (திருவாலவா. அரும்.); carpenter. **6.** யானைப்பாகன் (வின்.); mahout, elephant driver. **7.** முடிதிருத்துவோர் தலைவன் (வின்.); headmen of the barber caste. **8.** நச்சு மருத்துவன்; physician for snake-bite. **9.** சாராயங் காய்ச்சுவோன் (வின்.); one who distils arrack. **10.** ஒரு சாதிப் பெயர்; a caste-title. **11.** வெல்லங்காய்ச்சுதல் முதலிய

செய்யும் ஒருசாதி; a babouring class. **12.** பள்ளர்சாதி வகையான்; a sub-division of the paḷḷar caste. (G.Tg.D.I. **90.**)

ம. பணிக்கன்

*[பணி³ → பணிக்கன்]*

**பணிக்காயன்** *paṇikkāyaṉ,* பெ. (n.) பணியாளன்; officer. *"பணிக்காயன் சொக்க லிங்கம்..... தையலங்கி யொன்றெனக்குத் தந்தான்"* (விறலிவிடு.)

*[பணிக்காரன் → பணிக்காயன்]*

**பணிக்காரன்** *paṇi-k-kāraṉ,* பெ. (n.) வேலையாள்; servant.

*[பணி + காரன்]*

**பணிக்கு¹** *paṇikku,* பெ. (n.) **1.** பணிக்கம்¹, 2. பார்க்க. *'பணிக்கானவேலை'* 2. நல்ல உடற் கூறு (வின்.); good health, good constitution.

*[பணி → பணிக்கு]*

**பணிக்கு²** *paṇikku,* பெ. (n.) **1.** விவரமான குறிப்பு; detailed account or statement. 2. கலந்தாய்வு; counsel. நிலங்களின் பணிக்கு

*[பணிக்கம் → பணிக்கு]*

**பணிக்குச்செலுத்து—தல்** *paṇikkuseluttu-,* 9. செ.கு.வி. (v.i.) வேலையாட்களின் வேலையை கண்காணித்தல்; to act as the superintendent of workmen. *'பணிக்குச் செலுத்துகிறவன்'*

*[பணிக்கு + செலுத்து—,]*

**பணிக்குச் சொல்—(லு)தல்** *paṇikku-šol-,* **10.** செ.கு.வி. (v.i.) **1.** வேலை செய்யும் முறையைக் காட்டுதல் (வின்.); to give direction, as in doing a work. **2.** குற்றங்கூறுதல்; to criticise. *"கட்டின வீட்டுக்குப் பணிக்கு சொல்லுகிறான்"* (கொ.வ.)

*[பணிக்கு + சொல்லு—,]*

**பணிக்கூடம்** *paṇi-k-kūḍam,* பெ. (n.) கொல்லனுலைக்கூடம் (நாநார்த்த. **948**); smithy.

*[பணி + கூடம்]*

**பணிக்கை** *paṇikkai,* பெ. (n.) நேர்த்தியாய் முகமயிர் வெட்டுகை (யாழ்ப்.); trimming the hair about the face.

*[பணி → பணிக்கை]*

**பணிக்கொட்டில்** *paṇi-k-koṭṭil,* பெ. (n.) தொழிற்சாலை; workshop, factory. *"அவர்கள் தங்கின பணிக் கொட்டிலிலே சென்று"* (ஈடு, 9. 1. 2.)

*[பணி + கொட்டில்]*

**பணிக்கொட்டு** *paṇi-k-koṭṭu,* பெ. (n.) கடவுளுக்குப் பூக்களால் ஒப்பனை செய்யும் போது 'சுத்த மத்தளம்' என்னும் வாத்தியம் இயக்குதல் (தஞ்சை.); beating of suttamattaḷam while decorating a deity with flowers.

*[பணி + கொட்டு]*

**பணிக்கொடை** *paṇi-k-koḍai,* பெ. (n.) (பெரும்பாலும் அலுவலக வழக்கில்) குறிப்பிட்ட ஆண்டுகளுக்குக் குறையாமல் பணிபுரிந்த ஊழியர் ஒய்வு பெறும்பொழுது அல்லது பணியில் இருக்கும் காலத்தில் இறக்க நேரிடும் போது வரையறுக்கப்பட்ட முறைப்படி

வழங்கப்படும் ஓய்வுக் காலச் சலுகை வகையைச் சேர்ந்த தொகை; gratuity. *"ஓய்வு பெறும் ஊழியர்கள் பணிக்கொடை வந்தவுடன் பல நற்பணிக்குச் செலவு செய்வர்"*

*[ பணி + கொடை ]*

**பணிக்கொத்து** *paṉi-k-kottu,* பெ. (n.) ஊரக ஊழியருக்காக வாங்கும் வரிவகை (S.I.I.v, 374); cess collected for the maintenance of village servants.

*[ பணி + கொத்து ]*

**பணிகாரத்துத்தி** *paṉikāra-t-tutti,* பெ. (n.) *பணியாரத்துத்தி*(யாழ்.அக.) பார்க்க; see *paṉiyāra-t-tutti.*

*[பணியாரத்துத்தி → பணிக்காரத்துத்தி]*

**பணிகாரம்** *paṉigāram,* பெ. (n.) *பணியாரம்* (யாழ்.அக.) பார்க்க; see *paṉiyāram.*

**பணிகொள்(ளு)-தல்** *paṉi-kol,* 15. செ.குன்றா.வி. (v.t.) தொண்டனாக ஏற்றுக் கொள்ளுதல்; to accept as a servant. *"பாவியேனைப் பணி கொண்டாய்"* (திருவாச. 5, 54.)

*[பணி + கொள்-,]*

**பணிகோள்** *paṉi-kōl,* பெ. (n.) வணக்கம்; submission, homage. *"படிறிடை மிடைந்த பணிகோ ளீயா"* (பெருங். உஞ்சைக். 56, 150.)

*[பணி(வு) + கொள் → கோள்]*

**பணிச்சக்கரம்** *paṉi-c-cakkaram,* பெ. (n.) வித்திடுதற்கு நாட்பார்க்க உதவும் பாம்பு வடிவான ஒரு கணியச்சக்கரம் (யாழ்.அக.); (astrol.) diagram in the form of a snake used in selecting an auspicious day for sowing a field.

*[ பணி + சக்கரம் ]*

**பணிசவன்** *paṉiśavaṉ,* பெ. (n.) *பணிசெய்வோன்* பார்க்க; 2 (இ.வ.) see *paṉiceyvōṉ.*

*[பணி → பணி + செய்வான் - செவன் → சவன்]*

**பணிசாரகன்** *paṉiśāragaṉ,* பெ. (n.) வேலையாள் (யாழ்.அக.); servant.

*[பணி + சாரகன்]*

**பணிசிவன்** *paṉiśivaṉ,* பெ. (n.) *பணிசெய்வோன்,* 2 (பேரூர்ப் புராணம், பள்ளுப்.) பார்க்க; see *paṉi śeyvōṉ.*

*[பணி + செய்வான் → செவன் → சிவன்]*

**பணிசெய்வோன்** *paṉi-śeyvōṉ,* பெ. (n.) **1.** வேலைக்காரன்; servant. **2.** திருமணம், இறப்பு முதலிய காலங்களில் சங்கு அல்லது தாரையூதும் சாதியான்; a caste whose profession is to blow the long trumpet or conch at weddings and funerals.

**மறுவ.** பணிக்கன்.

*[பணி + செய்வோன்]*

**பணித்தட்டார்** *paṉi-t-taṭṭār,* பெ. (n.) அணிகலன் செய்யும் பொற்கொல்லர்; goldsmiths. *'பணித்தட்டார் பணி பண்ணுமிடங்களில்'* (சிலப். 6, 135, உரை.)

*[பணி + தட்டார்]*

**பணித்திறக்கு—தல்** *paṇittirakku,* செ. குன்றா.வி. (v.t.) கீழிறக்கி வைத்தல் (வின்.); to put down, as a load.

*[பணித்து + இறக்கு—,]*

**பணித்துக்கட்டு—தல்** *paṇittu-k-kaṭṭu-,* செ.குன்றாவி. (v.t.) **1.** தாழக்கட்டுதல்; to build low, as a wall or a house. **2.** ஆடையைத் தொங்க உடுத்தல்; to tie a garment so that it may hang low.

*[பணித்து + கட்டு—,]*

**பணித்தூசு** *paṇi-t-tūšu,* பெ. (n.) அணியழகுச் சீலைவகை (பிங்.); embroidered cloth.

*[பணி + தூசு]*

தூசு = ஆடை **"*தூசினா லங்கை நீவி*"** (சீவக. 1302)

**பணிதம்** *paṇidam,* பெ. (n.) பந்தயப்பொருள்; stake in gambling. **"*பாய வகையாற் பணிதம் பலவென்றாள்*"** (பு.வெ.12,வென்றிப்.16.)

*[பணி → பணிதம்]*

**பணிதானம்** *paṇidāṉam,* பெ. (n.) ஊழ்கம் (தியானம்) வழி இறையைப் போற்றி செய்கை (யாழ்.அக.); prayer with profound religious meditation.

*[பணி + தியானம் → தானம்]*

தானம் = Skt. *தியானம்* = Skt.

**பணிதி¹** *paṇidi,* பெ. (n.) **1.** வேலை; work, structure. **"*செங்கற்பணிதி*"** (கோயிலொ.93.) **2.** அணிகலன்; jewel, ornament. **"*பணிதிக்கு மேக்கென்றா ரென்ப ணிக்கும்*"** (குமர.பிர. காசிக.90.) **3.** ஒப்பனை; adorning, decoration. **4.** வணங்கத்தக்கது (பெருங்.அரும். பக்.871.); a praiseworthy thing. **5.** செல்வச் செருக்கு; insolence of wealth. **"*பணிதியில் மாயா மூழ்கா விடுவேனோ*".** (திருப்பு.1043.)

*[பண் → பணி → பணிதி]*

**பணிதி²** *paṇidi,* பெ. (n.) சொல்; word, speech. **'*ஸ்நிக்தமான பணிதியாலும்*'** (ஈடு,1,4,7.)

*[பணித்தல் → பணிதி ]*

**பணிதி³** *paṇidi,* பெ. (n.) தண்ணீர்விட்டான் கிழங்கு; water root. (சா.அக.)

**பணிந்தவன்** *paṇindavaṉ,* பெ. (n.) குள்ளன்; dwarf.

*[பணி¹ → பணிந்தவன்]*

**பணிநர்** *paṇinar,* பெ. (n.) ஏவல்செய்வோர்; attendants, servants. **"*வேந்தன்பணி நரைக்காண்மின்*"** (பெருங்.உஞ்சைக்.40,244.)

*[பணி → பணிநர்]*

**பணிப்பகை** *paṇi-p-pagai,* பெ. (n.) **1.** கருடன்; the white necked kite, as the enemy of the snake. **"*பணிப்பகை முன்னுழல் பரிசு*"** (காஞ்சிப்பு.நகர.98.) **2.** மயில்; peacock (சா.அக.)

*[பணி + பகை]*

**பணிப்படுத்து—தல்** *paṇi-p-paḍuttu-,* 9. செ.குன்றா.வி. (v.t.) 1. ஒப்பனை செய்தல்; (யாழ்.அக.); to adorn. 2. செப்பனிடுதல் (சங்.அக.); to repair. 3. உண்டாக்குதல்; to make manufacture. 4. வேலை செய்தல்; to work into shape. '*பணிப்படுத்தின கம்பு*' (நாஞ்.)

*[பணி + படுத்து—,]*

**பணிப்பாளர்** *paṇi-p-pāḷar,* பெ. (n.) (இலங்.) ஒரு துறையின் இயக்குநர்; director of a department, etc. "*கல்விப்பணிப்பாளர்*".

*[பணி + பணிப்பாளர்]*

**பணிப்பு**[1] *paṇippu,* பெ. (n.) தணிவு; lowness,....... as of tone. "*பணிப்புற வரற்றின பலப்பல பதங்கம்*" (இரகு.தேனு.9.)

*[பணி → பணிப்பு]*

**பணிப்பு**[2] *paṇippu,* பெ. (n.) ஏவல்; command, order. "*பணிப்பின்றியும்*' (பு.வெ.1,1, கொளு.)

*[பணி → பணிப்பு]*

**பணிப்பூட்டு** *paṇi-p-pūṭṭu,* பெ. (n.) அணிகலக்கொக்கிப்பூட்டு; lock of a clasp in an ornament.

*[பணி + பூட்டு]*



**பணிப்பெண்** *paṇi-p-peṇ,* பெ. (n.) 1. மருத்துவமனை, தொழிற்சாலை போன்றவற்றில் சிறுசிறு வேலைகளைக் கவனிக்கும் கடைநிலைப் பெண் ஊழியர்; last grade woman worker (in hospitals, factories, etc.) "*அந்தப்பணிப்பெண் வீட்டு வேலை நன்றாகச் செய்வாள்*" 2. (உ.வ.) பெரும்பாலும் அரண்மனையில் ஊழியம் செய்யும் பெண்; maid servants.

ம. பணிப்பெண்

*[பணி + பெண்]*

**பணிப்பொத்தி** *paṇi-p-potti,* பெ. (n.) துகில்வகை; (சிலப்.14,108,உரை) a garment of ancient times.

*[பணி + பொத்தி]*

**பணிப்பொன்** *paṇi-p-poṉ,* பெ. (n.) அணிகலவடிவான பொன்; gold in the form of ornaments, opp. to kaṭṭi-p-poṉ. "*கட்டிப்பொன் போலே அவன், பணிப்பொன் போலே திருநாமம்*" (திவ்.திருப்பா.3,60,வ்யா.)

*[பணி + பொன்]*

**பணிபதம்** *paṇi-padam,* பெ. (n.) *பணிமொழி*[1] பார்க்க; see *paṇi-moḻi.*[1] "*பலநாள் பணிபதமுங்கூறி*" (பு.வெ.12, வென்றிப்.11.)

*[பணி + பதம்]*

**பணிபாதடம்** *paṇipādaḍam,* பெ. (n.) வழிபாடு; prayer. (சா.அக.)

**பணிபுரி—தல்** *paṇipuri-,* 2. செ.கு.வி. (v.i.) *பணியாற்று—தல்* பார்க்க; see *paṇi-y-āṟṟu-,* "*அவன் ஒழுங்காகப் பணிபுரிந்ததனால் பணி உயர்வு பெற்றான்*".

*[பணி + புரி—,]*

**பணிபோ—தல்** *paṇi-pō-,* செ.கு.வி. (v.i.) ஒரே வேலையாயிருத்தல்; to be engaged fully in a single pursuit. *'இதுவே பணி போந்திருக்குமிறே'* (ஈடு,3,7,4.)

*[பணி + போ—,]*

**பணிமக்கள்** *paṇi-makkaḷ,* பெ. (n.) தொண்டு புரிவோர்; servants, temple servants. *"பணிமக்கள் சட்டரைப் பிழைக்கப்பேசுவார் ஒருகாசு தண்டப்படுவது"* (T.A.S.I, 9.).

*[பணி + மக்கள்]*

**பணிமடங்குதல்** *paṇi-madaṅgudal,* பெ. (n.) வேலைமுடிகை; closing of the work. *'கோயில் பணிமடங்கினால் மணியெறிந்து விடுதல் இயல்பு'* (முல்லைப்.50,உரை.)

*[பணி + மடங்கு—,]*

**பணிமனை** *paṇimaṉai,* பெ. (n.) பேருந்துகளை பழுதுபார்க்கவும் நிறுத்தி வைக்கவும் பயன்படுத்தப்படும் இடம்; shed (for buses either for repairs or for parking): workshop; depot. *"இந்தப் பேருந்து பணிமனைக்குச் செல்வதால் யாரும் ஏறாதீர்கள்" "இந்தப் பணிமனையில் குறைந்தது ஐம்பது பேருந்துகளையாவது நிறுத்தலாம்"*

*[பணி + மனை]*

**பணிமாறு—தல்** *paṇi-māṟu-,* 5. செ.குன்றா.வி. (v.t.) தொண்டு செய்தல்; to render service to a deity or a superior person, as by waving a fan, carrying incense, blowing, a trumpet, etc. *"சாமரைகள் பணிமாற"* (உத்தரரா. இலவண.110.). 2. பணிசெய்வோர் இடம் மாறுதல்; to transfer. *'அவர் பணி மாற்றம் பெற்றுச் சேலம் சென்றார்'*

*[பணி + மாறு—,]*

**பணிமுட்டு** *paṇi-muṭṭu,* பெ. (n.) தளவாடம்; tools, instruments; requisites.

தெ. பணிமுட்டு

*[பணி + முட்டு²]*

**பணிமுடக்கம்** *paṇi-mudakkam,* பெ. (n.) வேலை நிறுத்தம் (நாஞ்.); labourer's strike.

*[பணி + முடக்கம்]*

**பணிமூப்பிமார்** *paṇi-mūppimār,* பெ. (n.) தேவரடியார்; temple dancing-girls. *"பணிமூப்பிமாரில் ராசராசீச்சுரத்துப் பதியிலாரில்"* (S.I.I.V.297.)

*[பணி + மூப்பிமார்]*

**பணிமூப்பு** *paṇi-mūppu,* பெ. (n.) பெரும்பாலும் அலுவலக வழக்கில் ஒரே நிலையில் பணிபுரியும் பலருள் ஒருவர் மற்றவரைவிட எவ்வளவு காலம் மிகுதியாகப் பணியாற்றி உள்ளார் என்பதைக் கணக்கிடும் கால அளவு; seniority (of an employee in the service). *"பணிமூப்பிற்குத் தகுந்தாற்போல ஊதிய அளவு இருக்கும்".*

*[பணி + மூப்பு]*

**பணிமொழி¹** *paṇi-mōḻi,* பெ. (n.) 1. தாழ்ந்தசொல்; humble, submissive language. 2. மென்மொழி; low, gentle speech, as of a woman. *"பணிமொழியரிவை"* (பு.வெ.12, பெண்பாற்,10, கொளு.) 3. பெண்; woman. *"பணிமொழி வாலெயிறு ஊறிய நீர்"* (குறள்,1121.)

*[பணி + மொழி]*

**பணிமொழி²** *paṇi-mōḻi,* பெ. (n.) கட்டளை; word of command. *"படையுள் படுவோன் பணிமொழி கூற"* (சிலப்.8,13.)

*[பணி + மொழி]*

**பணியம்** *paṇiyam,* பெ. (n.) சங்கு; conch. (சா.அக.)



**பணியரங்கு** *paṇi-y-araṅgu,* பெ. (n.) குறிப்பிட்ட ஒரு துறையில் பயிற்சி அளிக்கும் பட்டறை; workshop. *"நாடகப் பணியரங்கில் பங்கு பெற்றவர்களுக்குச் சான்றிதழ் வழங்கப்பட்டது"*

*[பணி + அரங்கு]*

**பணியல்** *paṇiyal,* பெ. (n.) வழிபாடு (சங்.அக.); worship, obeisance.

*[பணி → பணியல்]*

**பணியறு-த்தல்** *paṇi-y-aṟu-,* 4. செ.கு.வி. (v.i.) தன்செயலற்று நிற்றல்; to be free from all egoistic actions. *'பற்றடங்கலும் விடுமாகில்......பணியறுத்தல் என்கிற நிலைக்கு........துணையாகநிற்கும்'* (திருக்களிற்றுப்.39,உரை.)

*[பணி + அறு-,]*

**பணியார்** *paṇiyār,* பெ. (n.) பகைவர்; foes, enemies. *"பணியார் பகையரணம் வேண்டி லெளிதென்றான் வேந்து"* (பு.வெ.6,12.)

*[பணி → ஆ (+ எதிர்ம.) + பணியார்]*

**பணியாரக்குடம்** *paṇiyāra-k-kuḍam,* பெ. (n.) மணமகள் வீட்டாரால் மணமகன் வீட்டுக்குச் சீர்வரிசையாக அனுப்பப்படும் பணியாரம் நிறைந்த குடம் (இ.வ.); a pot full of cakes, being one of the marriage presents commonly given by the bride's party.

*[பணியாரம் + குடம்]*

**பணியாரச்சட்டி** *paṇiyāra-c-caṭṭi,* பெ. (n.) பணியாரஞ்சுடும் சட்டி; pot for preparing cakes.

*[பணியாரம் + சட்டி]*

**பணியாரத்துத்தி** *paṇiyāra-t-tutti,* பெ. (n.) *பெருந்துத்தி* பார்க்க; see *peruntutti*, common evening mallow.

*[பணியாரம் + துத்தி]*



**பணியாரம்** *paṇiyāram,* பெ. (n.) தின்பண்டம்; cakes, pastry, fritters. *"பணியாரந்தோசை முன்னோனுக்கிட்டேத்தி"* (தனிப்பா.1,185,12)

தெ. பண்யாரமு.

'பணியாரமோ சிலுசிலுப்போ'-பழ.

*[ பண் → பணியாரம் ]*

**பணியாரி** *paṇiyāri,* பெ. (n.) ஒட்டொட்டி என்னும் மூலிகை; a kind of herb. (சா.அக.)

**பணியாள்** *paṇi-y-āḷ,* பெ. (n.) 1. ஊழியம் செய்பவர்; servant. "*அவருடைய வளமனையில் எத்தனைப் பணியாட்கள்*" 2. (அலுவலகத்தில்) கடைநிலை ஊழியர்; last srafe employee (in an office) "*விளிமணி அடித்துப் பணியாளை வரச் செய்தார்*"

*[ பணி → ஆள் ]*

**பணியாளர்** *paṇi-y-āḷar,* பெ. (n.) (அலுவலகத்தில்) பணிபுரிபவர்; பணிக்கு அமர்த்தப்பட்டவர்; employee. "*அரசுப் பணியாளர்*" "*வைப்பகப் பணியாளர் கழகம்*".

*[ பணி → ஆளர் ]*

**பணியாற்று–தல்** *paṇi-y-āṟṟu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. வேலைபார்த்தல்; work (in an office) "*என் தங்கை வைப்பகத்தில் பணியாற்றுகிறாள்*" 2. தொண்டுசெய்தல்; பொது நலனுக்காகப் பாடுபடுதல்; serve. "*நான் தேர்தலில் தோல்வி அடைந்தாலும் மக்களுக்குத் தொண்டாற்றுவேன்*"

*[ பணி → ஆற்று–, ]*

**பணியிடம்** *paṇi-y-iḍam,* பெ. (n.) (உ.வ.) அலுவலகத்தில் பதவிக்கான இடம்; post. "*வெறுமையாக இருக்கும் பணியிடங்களை நிரப்பினால் செயற்பாடுகள் செம்மையாக நடைபெறும்*'

*[ பணி → இடம் ]*

**பணியிரும்பு** *paṇi-y-irumbu,* பெ. (n.) வேலைக்கு நயமான இரும்பு; wrought iron as opposed to வார்த்த இரும்பு - cast iron. (சா.அக.)

*[பணி + இரும்பு]*

**பணியிறை** *pani-y-iṟai,* பெ. (n.) பாம்பரசன் (ஆதிசேடன்); Adišēḍaṉ, the king of serpendts. "*பணியிறையுஞ்சொலவரிதால்*" (பிரபுலிங்.சூனியசிங்கதானத்தி.4.)

*[பணி[6] + இறை]*

**பணியினாக்கு** *paṇiyiṉākku,* பெ. (n.) *தண்ணீர் விட்டான்* பார்க்க (மலை.); *see taṉṉir viṭṭāṉ* a common climber with many fleshy roots.

*[பணியின் + நாக்கு]*

(பாம்பின் நாக்கை யொத்த வடிவுடையதாகலின் குழூஉக்குறியாக மருத்துவத்தில் பயன்படுத்தியதாகலாம்)

**பணியோள்** *paṇiyōḷ,* பெ. (n.) பணிப்பெண்; maidservant. "*தன்புடைநின்ற பணியோள்*" (பெருங்.உஞ்சைக். 34, 46.)

*[பணி → பணியோள்]*

**பணிலம்** *paṇilam,* பெ. (n.) 1. சங்கு; conch. "*வெண்மணிப் பணிலங் கொழித்து*" (திருவாச.6,41). 2. வலம்புரியாயிரஞ் சூழ்ந்த சங்கு (சலஞ்சலம்.); a fabulous conch said to be surrounded by 1000 valampuri conches. 3. சங்கினாலியன்ற கைவளை வகை; conch bracelets, "கைப்பணிலந் தன்னைக் கழற்றிவிடுத்து" (சொக்க.உலா.171.)

*[பணி → பணிலம்]*



**பணிவிடை** *paṇi-viḍai,* பெ. (n.) 1. குற்றேவல்; service. "*பணிவிடை வானவர் புரிய*" (குற்றா.தல.மூர்த்தி.10.) 2. திருப்பணி; temple service; temple construction. "*பொருடனை... பணிவிடைக் குரித்தாக்கிய பெருமான்*" (உபதேசகா. சிறப்புப்.10.) 3. தொழில்; work, business, occupation office, work of an artist. 4. கட்டளை; commission, order command. "*இறைவவிப் பணிவிடை தருக*" (பாரத.வேத்,32.)

*[பணி + விடை]*

**பணிவிடைக்காரன்** *paṇiviḍai-k-kāraṉ,* பெ. (n.) 1. வேலையாள்; servant, house servant. 2. தொழிலாளி (வின்.); artisan, workman. 3. கோயிற்பிள்ளை; sexton, church-attendant. chr.

*[பணிவிடை + காரன்]*

**பணிவிடை மடத்தாள்** *paṇiviḍai-madattāḷ,* மடத்துத் துணைமகள்; laysister (pond.) (பணிவிடை + மடத்தாள்).

**பணிவிளக்கு** *paṇi-viḷakku,* பெ. (n.) கோயில் விளக்கு வகை; a kind of lamp used in temples. "*திருக்குத்துப் பணிவிளக்கு*" (கோயிலொ.15.)

*[பணி + விளக்கு]*



**பணிவு** *paṇivu,* பெ. (n.) 1. கீழ்ப்படிகை; submission, subordination. "*பணிவுடையனின் சொலனாதல்*" (குறள்,95.) 2. வணக்கம்; humility, veneration. "*பணிவினால் மனமதொன்றி*" (திவ். திருமாலை,21.) 3. குறை; defect, demerit. "*பணிவரும் பைந்துகில்*" (சீவக.3028.) 4. தாழ்விடம்; low place, depression.

*[பணி → பணிவு]*

**பணினம்** *paṇiṉam,* பெ. (n.) பாம்பு (யாழ்.அக.); serpant.

*[பணி → பணினம்]*

**பணீசன்** *paṇīšaṉ,* பெ. (n.) 1. பாம்பரசன் (ஆதிசேடன்); adišēḍaṉ. 2. பதஞ்சலி முனிவர்; the sage patanjali. "*வனபணீசனொடெய்த*" (கோயிற்பு.இரணியவன்,95)

*[பணி + ஈசன்]*

ஈசன் = Skt.

**பணுக்கம்** *paṇukkam,* பெ. (n.) மந்திரவித்தையினால் மயக்குதல்; hypnotising or attracting or influencing one by magic or charm. (சா.அக.)

**பணை—த்தல்** *paṇai-,* **4. செ.கு.வி.** (v.i.) **1.** பருத்தல்; to be thick, large; to extend; to ramify; to grow thick or close, as branches. "*பணைத்த வெம்முலை*" (கம்பரா.எழுச்சி.33.) **2.** செழித்தல் (நாலடி.251.); to thrive, flourish. **3.** பிழைத்தல்; to miss, fail, err. "*பணைத்த பகழி*" (நற்.165.)

*[பணை → பணை–,]*

**பணை²** *paṇai,* பெ. (n.) **1.** பெருமை, (தொல். சொல். 339.); thickness, bigness. **2.** பெருமை (பிங்.); dignity, excellence, superiority. **3.** மரக் கொம்பு (பிங்.); branch of a tree. **4.** *மூங்கில்* பார்க்க; see *mūngil bamboo.* "*பெரும்பணைத்தோள்*" (பு.வெ. 11, ஆண்பாற். 1.) **5.** *அரசு* பார்க்க, (பிங்.); pipal. (க.பணெ.) **6.** மருத நிலம் (பிங்.); see *arašu*; agricultural tracts. "*பெருந் தண்பணை பாழாக*" (புறநா. 16.) **7.** வயல்; paddy field. "*இரும்பணை திரங்க*" (பதிற்றுப். 43, 12.) **8.** நீர் நிலை (பிங்.); tank, pond-for horses and elephants. **9.** குதிரை, யானைகள் தங்கும் கூடம்; stable for horses and elephants. "*பணையமை பாய்மான்*" (கலித்.57.) "*பணைநிலை முனைஇக் களிறுபடிந் துண்டென*" (புறநா.23.) **10.** விலங்கு துயிலிடம் (பிங்.); lair of an animal. **11.** முரசு; drum, large drum. "*வியன்பணை உருமென வதிர்பட்டு*" (பதிற்றுப். 29, 5.) **12.** இசைக்கருவி; musical instrument. "*பணைசார்தரு மிடக்கரம்*" (திருவாலவா. 32, 14.) **13.** மருதநிலப்பறை; drum used in agricultural tracts. **14.** பரண்; (அக.நி.) watch-tower. **15.** உயரம்; height. "*பணையடுப்பிற் றயிலாதி பருவமுற்றுறா*" (தைலவ. தைல.) **16.** தவறுகை (தொல்.சொல். 334); failure; missing. **17.** ஐந்து ஆண்டு கொண்ட காலஅளவு; (jaina) a period of five years. "*ஆண்டு பணையுகம்*" (மேருமந். 94.) **18.** சாணைக்கல்; whetstone, hone. "*பணையான்*" (அகநா. 1, உரை.) **19.** தோள்; shoulder.

க. பணெ ம. பண. கோத. பண்.

*[பண் → பணை]*

**பணை³** *paṇai,* பெ. (n.) **1.** உலைக்களத்துப் பட்டடை, (குறள்.828 மணக்.பக்28), **2.** யானைத் தந்தம், tusk of an elephant "**மகரிகையு மிருபணைகளும்..... ஒளிவிட...... முடுகின கரிகளே**" (பாரத. பதினாறாம்.20.)

**பணைத்திராய்** *paṇai-t-tirāy,* பெ. (n.) திராய் வகை; a kind of chick weed.

*[பணை → பணைத்திராய்]*

**பணையம்** *paṇaiyam,* பெ. (n.) **1.** ஈடு; pawn, pledge. "***கருங்கோட்டுச் சீறியாழ் பணையமிது கொண்டு***" (புறநா. 316.) **2.** காலணிவகை; a kind of anklet. "***காலுக்குப் பணையமுங் கட்டி***" (சீதக். 30.) **3.** பந்தயப்பொருள்; stake in gambling. "*யாது பணைய* ***மென*** *வியம்ப*" (நள. கலிநீ. 88)

*[பணயம் → பணையம்]*

ம. பணயம்

**பணையல்** *paṇayal,* பெ. (n.) கொல்லன் கூடத்தில் இரும்பு வேலைக்கான அடிமனை; stirrup in smiths forge.

*[பண் → பணை → பணையல்]*

**பணையவன்** *paṇaiyavaṉ,* பெ. (n.) முரசறை வோன்; drummer. *"பணையவருறை பதி யதுகுறுகி"* (சீவக. 602.)

*[பணை [2] → பணையவன்]*

**பணையான்** *paṇaiyāṉ,* பெ. (n.) சாணைக்கல் செய்வோன் (அகநா. 1. உரை); maker of whetstone.

*[பணை [2] → பணையான்]*

**பணையேர்** *paṇaiyēr* பெ. (n.) கூலிக்கு விடும் ஏர்; hired plough, dist.fr. māṟṟēr.

*[ பணம் + ஏர் ]*

**பத்தகணம்** *patta-kaṇam,* பெ. (n.) அடியார் குழாம்; band of devotees (w.)

*[பத்தர் + கணம் → பத்தகணம்]*

**பத்தகாரன்** *patta-kāraṉ,* பெ. (n.) சமையற் காரன் (யாழ்.அக.); cook.

*[பதம் → பத்தம் + காரன்]*

**பத்தகேசரி** *patta kēcari,* பெ. (n.) கருப்பூரம். (யாழ்.அக.); common camphor.

*[பத்த + கேசரி]*

**பத்தங்கம்** *pattangam,* பெ. (n.) செஞ்சந்தனம்; red sandal. (சா.அக.)

**பத்தங்கி** *pattaṅgi,* பெ. (n.) *சப்பங்கி*[3] பார்க்க, sappan wood. see *sappaṅgi.*

**பத்தங்கெட்டவன்** *pattaṅ-keṭṭavaaṉ,* பெ. (n.) ஒழுக்கங் கெட்டவன்; proflilgate.

*[பதம் → பத்தம் + கெட்டவன்]*

**பத்தசந்தம்** *pattasantam,* பெ. (n.) உணவு விருப்பம் (யாழ்.அக.); desire for food, appetite. *'பத்தசந்தத்தாலே அவன் பாழானான்'* (உ.வ.)

*[பதம் → பத்த + சந்தம்]*

**பத்தசனம்** *patta-caṉam,* பெ. (n.) அடியார் குழாம் (யாழ்.அக.); devotees. *"வந்தனம் வந்தனம் பத்தசனங்களுக்கு வந்தனம்"* (கூத்துப்.)

*[பத்தர் + சனம்]*

**பத்தசாரம்** *patta-ccāram,* பெ. (n.) காடி (தைலவ. தைல.); vinegar. *'ஊறுகாய்க்குப் பத்தசாரம் ஊற்றிப் பாதுகாத்தால் பத்துமாசம் வரை கெடாது'* (உ.வ.)

*[பதம் → பத்தம் + சாரம்]*

**பத்தசை** *pattacai,* பெ. (n.) அமுதம் (யாழ்.அக.); nectār.

*[பதம் → பத்தம் → பத்தசை]*

**பத்தடி** *pattaḍi,* பெ. (n.) இடம்; place, location 'எந்தப்பத்தடியிலிருந்து வருகிறாய்?' (உ.வ.).

*[ பற்று + அடி ]*

**பத்ததசை** *patta-tasai,* பெ. (n.) உயிர்கள் மும்மலத்திற்கு உட்பட்டநிலை; state of sould in bondage, opp to mutti-tasai.

**பத்ததி[1]** *pattati,* பெ. (n.) 1. ஒழுங்கு (தைல. தைல.); series, row line, range. 2. தோன்றிய

(ஆகம)ச்சடங்குகளுக்கு வழிகாட்டும் நூல்; manual of ritualistic rules. *"அகோர சிவாசாரியார் பத்ததி"* **3.** வழி (நாமதீப. **541.**); road, way.

*[பத்தி → பத்ததி]*

**பத்ததிவாசி—த்தல்** *pattati-vāsi-,* **4.** செ.கு.வி. (v.i.) சடங்கு நிகழும் போது சடங்கைச் செய்து வைப்பவன் சடங்கு நூல்நெறிகளைப் படித்தல்; to read the ritualistic rules while the rites are being performed.

*[பத்ததி + வாசித்தல்]*

**பத்தபராதீனன்** *patta-parātīṉaṉ,* பெ. (n.) கடவுள்; god, as being bound to his devotees.

*[பத்தர் + பராதீனன்]*

பராதீனன் = skt

**பத்தம்¹** *pattam,* பெ. (n.) **1.** கட்டு; bond tie. thickness, largeness. **2.** உண்மை; truth. opp. to apattam.

*[பற்று → பத்து → பத்தம்]*

**பத்தம்²** *pattam,* பெ. (n.) **1.** உணவு; food. (திவ். நாய்ச். **12, 6,** வ்யா.); **2.** செய்ந்நன்றி யறிகை; gratitude. *'இவன் பத்தமுள்ளவன்'* (j.)

*[பதம் → பத்தம்]*

**பத்தம்³** *pattam,* பெ. (n.) குவியல்; mass, heap, collection "தூற்றும் பத்தம்" (பட்டினத்துக் கோயிற்றிரு.**2.**).

*ஒ. நோ. பற்றம்*

**பத்தம்⁴** *pattam,* பெ. (n.) உண்கலம்; eating vessel. "பத்தங்குடை செருப்புந் தொழுபாவீ" (நீலகேசி, **328.**).

*[பத்தர் → பத்தம்]*

**பத்தயம்** *pattayam,* பெ. (n.) பத்தாயம்,4 பார்க்க; See pattāyam.*4* *"எலிப் பத்தயம்"* (நெல்லை.) *'தசக்கூலிக்குப் பத்தாயத்தில் நெல்லிருக்கிறதா?'* (குஞ்.)

*[பற்று → பத்து → பத்தயம்]*

**பத்தர்¹** *pattar.* பெ. (n.) **1.** பத்தல், பார்க்க, **1, 4, 5. 2.** தொட்டி; wooden trough for feeding animals. *"பன்றிக் கூழ்ப்பத்தரில்"* (நாலடி, **257.**) **3.** குடுக்கை; cocoanut shell or gourd used as a vessel. *'கொடிக்காய்ப் பத்தர்'* (கல்லா. **40, 3.**)

*[பத்தல் → பத்தர்]*

**பத்தர்²** *pattar,* பெ. (n.) தட்டார் பட்டப் பெயருள் ஒன்று; a caste fitle of goldsmiths.

*[பற்று → பற்றர் → பத்தர்]*

**பத்தர்³** *pattar,* பெ. (n.) **1.** அடியார்; devotees, votaries. *"பத்தர் சிக்கெனப் பிடித்த செல்வமே"* (திருவாச, **37, 8.**) **2.** அன்புடையார்; persons who are loyal to god, king or country. **3.** வீரச்சிவனியரில் புலாலுண்ணாத வகுப்பினர்; (இ.வ.) a caste of virašaiva vegetarians.

*[பற்று → பற்றர் → பத்தர்]*

**பத்தர்⁴** *pattar,* பெ. (n.) இருவினைப்பந்தமுள்ள உயிர்கள் (அஷ்டாதச. தத்வத். பக். **16**); persons subject to bondage, and pursuing worldly pleasures.

**பத்தர்**[5] *pattar,* பெ. (n.) வணிகர்கள்; merchants. (w.)

**பத்தர்**[6] *pattar,* பெ. (n.) வெள்ளி; silver. (சா.அக.)

**பத்தர்**[7] *pattar,* பெ. (n.) யாழினோர் உறுப்பு; a part of yāḻ "பத்தரும் கோடு மாணியு நரம்புமென்று" (சிலப். கானல். கட்டுரை.)

**பத்தரா** *pattarā,* பெ. (n.) முசு முசுக்கை பார்க்க, (சங்.அக.); see musumusukkai bristly bryony.

*[பத்தர் → பத்தரா]*

**பத்தராசு** *pattarāsu,* பெ. (n.) *அந்தி மந்தாரை* பார்க்க; see *pattarāsu,* four o' clock plant.

**பத்தராய்ப் பணிவார்** *pattarāy-p-paṇivāri,* பெ. (n.) தொகையடியாருள் சிவபிரானுக்குத் தொண்டுபுரியும் ஒருசாரார். (தேவா. 738, 10.); pious persons who render service to šivaṉ and his devotees, one of tokai-y-adiyār. q.v. *"பத்தராய்ப் பணிவார்கள் அடியார்க்கும் அடியேன்"* (திருத்தொண்டத்.)

*[பத்தராய் + பணிவார்]*

**பத்தராவி** *pattarāvi,* பெ. (n.) திருமால்; thirumāl as the life of his disciples. (பத்தர் களுக்கு உயிர் போன்றவன்) *"பத்தராவியைப் பாண்மதியை"* (திவ். பெரியதி. 10, 1, 8.)

*[பத்தர் + ஆவி]*

**பத்தரூபி** *pattarūbi,* பெ. (n.) பத்த கேசரி பார்க்க, (மூ.அ.) See patakēsari

*[பத்த + ரூபி]*

**பத்தல்** *pattal,* பெ. (n.) *பத்தர்,* பார்க்க. see *pattar.* "குளப்புவழியன்ன கவடுபடு பத்தல்" (பொருந. 4.)

**பத்தல்** *pattal,* பெ. (n.) 1. மரத்தாலான நீரிறைக்கும் கருவி; a wooden bucket. *"தீம்பிழி யெந்திரம் பத்தல் வருத்த"* (பதிற்றுப். 19, 23.) 2. பத்தர்¹, பார்க்க, 2. 3. *பத்தர்¹,* பார்க்க, 3 see *pattar¹.* 2. 4. குழி; ditch, depression. *"ஆன்வழிப் படுநர் தோண்டிய பத்தல்"* (நற், 240.) 5. நாருரித்தற்கு ஏற்ற பனைமட்டையின் ஒருறுப்பு; a part of the stem of the palmyra leaf, out of which fibre is extracted. (g.tn.d. 1, 221.)

*[பள் → பத்து → பத்தல்]*

**பத்தவச்சலன்** *patta-vachalaṉ,* பெ. (n.) அடியார்களிடம் பேரன்பு கொண்ட கடவுள்; god, as having great love for his devotees. *"பக்தவற்சலனா யோங்கும் பான்மையால்"* (வரத. பாகவத. நாரசிங்க. 233.)

*[பத்தர் + skt. vatsalā > த.→ வச்சலன் (வ.)]*

**பத்தவிராசி** *pattavirāci,* பெ. (n.) குதிரைச் சாதி வகை (அசுவசா. 14.); a kind of horse.

**பத்தறா** *pattarā,* பெ. (n.) முசுமுசுக்கை (சங்.அக.); bristly bryony.

மறுவ: பத்தரா.

**பத்தனம்** *pattaṉam,* பெ. (n.) பட்டணம்; city; town. *"சித்திப் பெயர்ப் பத்தனம் புகுவார்கட்டு"* (திருநூற். 40.)

*[பட்டணம் → பத்தனம்]*

**பத்தா¹** *pattā,* பெ. (n.) கணவன்; husband. *"பத்தாவாக வசிகரித்தும்"* (உத்தரரா. இராவணன்பிற. 19.) (சூடா.)

**பத்தாசிப்பெட்டி** *pattāsi-p-petti,* பெ. (n.) *பத்தாயப்பெட்டி* பார்க்க, see *pattāyap-petti.*

*[பத்தாசி + பெட்டி]*

**பத்தாசு** *pattāsu,* பெ. (n.) படகு; boat. *"அணிபெறு பத்தாசி லேறிக்கொண்டேன்"* (சீதக்.)

**பத்தாசை** *pattācai,* பெ. (n.) நன்றியும் அன்பும்; gratitude and love.

*[பற்று + ஆசை → பத்தாசை]*

**பத்தாம்பசலி** *pattām-pacali,* பெ. (n.) பழையபோக்கு; tendency ot cling to old ways or methods. "*பத்தாம்பசலி முறையிலேயே வேளாண்மை செய்து வருவதாகக் குறைசொல்கிறோம்*" "*பத்தாம்பசலிக்கொள்கை*"; 2. பழமையாளி; பழைமைமுறை; old fashioned person. "*இந்தப் பத்தாம்பசலியிடம் போய்க் கலப்புத் திருமணத்தைப் பற்றிப் பேசுகிறாயே!*"

[பசலி என்பது வேளாண்மை ஆண்டு. மிக முந்திய காலம் என்னும் பொருளிலேயே 10 ஆம் பசலி – பத்தாம் பசலி வழங்கப் பெறுகின்றது.]

*[பத்து → ஆம் + பசலி]*

பசலி = உருது.

**பத்தாம்பிறப்பு** *pattāmpirappu,* பெ. (n.) 1. பத்தாவது குழந்தை; the tenth child born to a woman. 2. பத்துமுறை புடம் போடுவதால் உண்டாகும் மருந்து; calx or the product derived or obtained after a mineral has been subyected to violent heat or cacination ten times over. (சா.அக.)

*[பத்து + ஆம் + பிறப்பு]*

**பத்தாமிடம்** *pattāmidam,* பெ. (n.) பூநீறு; efflorescent salt found deposited on the soil of fullers earth. (சா.அக.)

**பத்தாமுதயம்** *pattā-udayam,* பெ. (n.) மேழ (சித்திரை) மாதத்துப் பத்தாம் நாள்; tenth day of the month of cittirai. "*பத்தாமுதயத்தில் தெங்கு வைத்தாற் பலனுக்கேதுங் குறைவில்லை*" (நாஞ்.)

*[பத்து + ஆம் + உதயம்]*

உதயம் = skt

**பத்தாயப்பெட்டி** *pattāya-p-petti,* பெ. (n.) பெருமரப்பெட்டி வகை (குஞ்.); a kind of large wooden box.

*[பத்தாயம் + பெட்டி]*

**பத்தாயம்** *pattāyam,* பெ. (n.) 1. நெல் முதலிய தவசம் இட்டுவைக்குங் களஞ்சியம்; receptable for grain, etc, grain bin. 2. பெரும்பெட்டகம்; a very large box. 3. விலங்கு முதலியன அடைக்குங்கூடு; cage for keeping animals. 4. எலி முதலியன பிடிக்கும் பொறி; trap for catching animals, rats, ketc.

ம. பத்தாயம்.

*[பற்று → பத்து → பத்தாயம்]*

**பத்தாயி** *pattāyi,* பெ. (n.) 1. கொழும்புச் சாராயம்; columbo arrack. 2. ஒருவகைக் கற்கண்டு; a kind of sugar-candy. 3. ஒருவகைக் கருப்பூரம்; a kind of camphor. (சா.அக.)

**பத்தாலகம்** *pattālagam,* பெ. (n.) நரிவழுக்கை; diabetes plant. (சா.அக.)

**பத்தாறு** *pattāṟu,* பெ. (n.) முறையே பத்துமுழமும் ஆறுமுழமுமாய் அமைந்த அரையாடை மேலாடைகள்; a pair of cloth, tend and six cubits in length, worn by men.

*[பத்து + ஆறு]*

**பத்தி¹** *patti,* பெ. (n.) 1. வரிசை; row, train, column, rank, range, file, colonade, series. "*பத்தியிற் குயிற்றிய....சித்திரக்கிம்புரி*" (சீவக.83.) 2. வகுப்பு; class; arrangement; division (n.) 3. மாதிகை முதலியவற்றின் நீளவாட்டுப் பகுதி; columns in writing or print. (w.) '*மாதிகை மூன்று பத்திகொண்டது*' 4. பாத்தி; garden beds in rows (w.) 5. முறைமை, (சூடா.); mode,method order. way, plan, manner; established rule or austorn. 6. அணியழகான வேலைப்பாடு; fineness in workanship. "*பத்திப் பல்வினை*" (பெருங்.இலாவான.6,55.) 7. வீட்டிறப்பு; sloping verandah-roof. "*வீட்டிற் பத்தியிறக் கினார்கள்*" (w.) 8. தூண்களின் இடைவெளி; room or space between illars (w.ñ). 9. யானையின் நடைவகை; gait of an elephant. "*வினைதகு வட்டமும் வீதியும் பத்தியும்........இமைப்பினியற்றினான்*" (சீவக.1839.)

*[பற்று → பற்றி → பத்தி]*

**பத்தி²** *patti,* பெ. (n.) 1. கடவுள் முதலியோரிடத்திலுள்ள பற்று; devotion to god, guru, king, etc. "*பத்திசெய்யடியரைப் பரம்பரத்துய்ப்பவன்*" (திருவாச.2.119.) 2. வழிபாடு. (சூடா.); service; worship. ஒழுக்கம் (சூடா.); moral conduct.

'*பத்திகொள்பவன் முத்தி கொள்பவன்*' பழ.

*[பற்று → பத்து → பத்தி]*

(பத்தி (வரிசை) skt பங்க்தி (pankti) பத்தி (பெரியோர் மாட்டுப்பற்று) skt (bhakti) இங்ஙனம் இருவேறு வகையில் வடமொழியில் எழுதப் பெறுவதால் பத்தி என்பது இருவேறு சொல்லோ என்று ஐயுறற்க.

பக்தி என்னும் சொல்லிற்கும் பாகம் என்னும் சொல்லிற்கும் வடமொழியாளர் பஜ் (bhaj) என்னும் ஒரே மூலங் காட்டுவதையும் பகு என்னும் முதனிலையினின்றே திரிந்துள்ள பக்கம் என்னும் சொல்லை அவர் 'பக்ஷ' என்று திரிப்பதையும் நோக்குக.

இங்ஙனம் ஒரே முதனிலையினின்று திரிந்துள்ள பல்வேறு திரிசொற்களை எழுத்து மாற்றி வெவ்வேறு மூலத்திலிருந்து திரிந்த சொற்களாகக் காட்டுவது வடமொழியாளர் வழக்கம்.

முத்தம் என்னும் தென்சொல்லை முக்த என்று திரித்தது போன்றே பத்தி என்ற தென்சொல்லையும் 'பக்தி' என்று திரித்துள்ளனர் வடமொழியாளர். (பாவாணர் – செல்வி, '75. ஆடி. பக்கம்.59.)

**பத்தி³** *patti,* பெ. (n.) ஒருதேர், ஒருயானை மூன்று குதிரை, ஐந்து காலாட்கள் கொண்டபடை; the smallest division of an army = 1 chariot, 1 elephant, 3 horses, 5 soldiers.

*[பத்து → பத்தி]*

**பத்திக்கீற்று** *patti-k-kīṟṟu,* பெ. (n.) மகளிர் தோள், மார்பகங்களில் சந்தனக் குழம்பால் எழுதும் வரிக்கோலம் (மணிமே.3.122. அரும்.); lines draws with sandal paste on a maidens breasts and shoulders.

*[பத்தி + கீற்று]*

**பத்திக்குறடு** *patti-k-kuṟaḍu,* பெ. (n.) கோயிலுள் எழுப்பப்பட்டிருக்கும் திண்ணை (கோயிலொ.17.); raised platform in a temple.

*[பத்தி + குறடு]*

**பத்திகாண்டம்** *patti-kāṇdam,* பெ. (n.) பத்திச் செய்திகளடங்கிய வேதப்பகுதி (வேதா.சூ.12. உரை.); the portion of the vēdās dealing with devotion.

*[பத்தி + காண்டம்]*

**பத்திகாண்டி** *patti-kāṇḍi,* பெ. (n.) பத்திவழியில் செல்வோன் (வேதா.சூ.13.); one absorbed in devotion.

*[பத்தி + காண்டம் → காண்டகர் → காண்டிகர் → காண்டி]*

**பத்திகாண்டிகர்** *patti-kāṇḍikar,* பெ. (n.) பக்குவர் மூவருள் பத்தி வழியில் ஈடுபடுவோர் (வேதா.சூ.13.); (w.) those who are absorbed in devotion one of three pattkuvar, q.v.

*[பத்தி + காண்டகர் → காண்டிகர்]*

**பத்திச்சுவாலகர்** *patti-c-cuvālakar,* பெ. (n.) *பத்திச்சுவாலையர்,* பார்க்க; see *patti-c-cuvākiyar.*

*[பத்தி + சுவாலகர்]*

சுவாலகர் = skt.

**பத்திச்சுவாலையர்** *patti-c-cuvalaiyar,* பெ. (n.) பத்திச் சிறப்பால் ஒளிமயமாக விளங்கும் வானோர் கணத்தினர்; seraphim, a class of angels who burn like flame in their piety, r.c.

*[பத்தி + சுவாலையர்]*

சுவாலையர் = skt.

**பத்திசாரன்** *patti-sārṉ,* பெ. (n.) *திருமழிசையாழ்வார்* பார்க்க: (குருபரம்.) a vaisṇava saimt. see *thirumaḷisai āḷvār.*

*[பத்தி + சாரன்]*

**பத்திசூலம்** *pattisūlam,* பெ. (n.) ஒருவகைச்சூலநோய்; disease attended with pin prick pain (சா.அக.)

**பத்திடை** *pattiḍai,* பெ. (n.) ஆயிரம் பலங்கொண்ட நிறுத்தலளவை. (நான்காம். பால.) a measure of weight = 1,000 palams.

**பத்திநடவு** *patti-naḍavu,* பெ. (n.) நாற்றை ஒரே யொழுங்கில் நடும் நடவு; (இ.வ.) transplanting seedlings in a row.

*[பத்தி + நடவு]*

**பத்திநெறி** *patti-neṟi,* பெ. (n.) பத்தியால் வீடுபேறடையும் முறை; path of salvation through devotion. "*பத்தி நெறி யறிவித்து*" (திருவாச.51,1.)

*[பத்தி + நெறி]*

**பத்திபாய்—தல்** *patti-pāy-,* 2. செ.கு.வி. (v.i.) 1. ஒளிவீசுதல்; to stream out, as pencils of rays. "*பிறங்கிய விலையு மிடமுறு*

*பத்திபாய்தலும்"* (திருவாலவா.25,11.) 2. எதிரொளிசெய்தல்; to be reflected. *"அடுத்த துணர்த்தும் வெண்படிகம் பத்தி பாயாதவா றெனவே"* (மதுரைப்பதிற்.70.)

*[பத்தி + பாய்தல்]*

**பத்திபாலன்** *patti-bālaṉ,* பெ. (n.) ஐந்து அல்லது ஆறு காலாட்களின் தலைவன் (சுக்கிர நீதி, 73.); head of five or six infantry soldiers.

*[பத்தி +* skt bāla > *த.பாலன்]*

**பத்திமம்** *pattimam,* பெ. (n.) தாமரைத் தாது; filaments of lotus flower. (சா.அக.)

**பத்திமாலை** *patti-mālai,* பெ. (n.) 1. இடுப்புவரை தொங்குவதும் மணமக்கள் அணிவதுமான மாலை; garland of flowers worn round the reck by a bride and bridegroom and hanging down to the waist. 2. தாழ்வடம்; an ornament worn round the neek.

*[பத்தி + மாலை]*

**பத்திமான்** *pattimāṉ,* பெ. (n.) பத்தி மிக்கவன்; poious man.

*[பத்தி + மகன் → மான்]*

**பத்திமுகம்** *patti-mukam,* பெ. (n.) பத்தல் அல்லது சுவரின் முன்பக்கநெற்றி; top portion of a pandal or wall. *"பவழக் கொடுங்காழ் பத்தி முகத்தழுத்தி"* (பெருங்.உஞ்சைக்.34,137.)

*[பத்தி + முகம்]*

**பத்திமை** *pattimai,* பெ. (n.) இறைப் பற்றுடைமை; devotion, devoutness piety. *"பத்திமையாற் பணிந்தடியேன்"* (தேவ.161,3.) 2. காதல்; affection, love. *"தெளிந்தாரைத் தீங்கூக்காப் பத்திமை"* (இனி.நாற்.33.)

*[பத்தி → பத்திமை]*

**பத்தியக்கட்டுப்பாடு** *pattiya-k-kaṭṭu-p-pāḍu,* பெ. (n.) பத்தியத்தில் கட்டுப்பாடாக இருத்தல்; restriction of diet. (சா.அக.)

*[பத்தியம் + கட்டுப்பாடு]*

**பத்தியக்கடுமை** *pattiya-k-kaḍumai,* பெ. (n.) பத்தியக் கொடுமை; rigidity of diet. (சா.அக.)

*[பத்தியம் + கடுமை]*

**பத்தியக்கறி** *pattiya-k-kaṟi,* பெ. (n.) பத்தியத்திற்குப் பயன்படும் காய்கனிகள்; vegetables and fruits useful for those on diet. (சா.அக.)

*[பத்தியம் + கறி]*

**பத்தியக்காரி** *pattiya-k-kāri,* பெ. (n.) சிறுகீரை; pigs greens. (சா.அக.)

*[பத்தியம் + காரி]*

**பத்தியக்குற்றம்** *pattiya-k-kuṟṟam,* பெ. (n.) பத்தியக்குறைவினால் ஏற்படும் குற்றம்; faults or disorders arising from non-observance of diet. (சா.அக.)

*[பத்தியம் + குற்றம்]*

**பத்தியக்குறைவு** *pattiya-k-kuṟaivu,* பெ. (n.) பத்தியமுறைக்கு எதிராகப் பல பொருள் களையும் உண்ணல்; improper diet acting against or contrary to prinaples of diet, non-observance of diet. (சா.அக.)

மறுவ. பத்தியதாழ்வு.

*[பத்தியம் + குறைவு]*

**பத்தியக்கேடு** *pattiya-k-kēḍu,* பெ. (n.) *பத்தியக்குற்றம்* பார்க்க, see *pattiya-k-kuṟṟam* (சா.அக.)

மறுவ. பத்தியத்தவறு

*[பத்தியம் + கேடு]*

**பத்தியங்கா–த்தல்** *pattiyaṅ-kā-,* 4. செ.கு.வி. (v.i.) கொடுக்கப்பட்ட மருந்துக்கேற்ற உணவெடுத்தல்; to observe a prescribed diet.

*[பத்தியம் + காத்தல்]*

**பத்தியத்தாழ்வு** *pattiya-t-tāḻvu,* பெ. (n.) பத்தியத்தவறுதலால் நேருங்குற்றம்; violation of dietary rules.

*[பத்தியம் + தாழ்வு]*

**பத்தியநூல்** *pattiyanūl,* பெ. (n.) பத்தியங்காத்தலைக்கூறும் நூல்; a treatice of book on dietary. (சா.அக.)

*[பத்தியம் + நூல்]*

**பத்தியப்பெருமை** *pattiya-p-perumai,* பெ. (n.) பத்தியம் இருப்பதன் சிறப்பு; greatness and usefuiness of observing diet. (சா.அக.)

*[பத்தியம் + பெருமை]*

*"பத்தியத்தாலுண்டாகும் பண்டிதற்குப் பேராண்மை பத்தியத்தாலுண்டாகும் பாண்டிதங்கள்–பத்தியத்தை விட்டார் பிணிவகைகள் வித்தரிக்கும் விட்டிடலை விட்டாற் பறக்கும் வினை"* (தேரைவெண்பா. செய்.600)

**பத்தியம்**[1] *pattiyam,* பெ. (n.) 1. மருந்துக் கிசைந்த உணவு; prescribed diet for a patient. *"அபத்தியம் பத்தியமெனப் பூணாய்ந்திடாமல."* (கைவல். சந்.25.) 2. நலம்; that which is good or agrreeable. *"பத்தியம் சிறிதுற்றிலே னுன்பாற் பத்தியொன்றிலேன்"* (அருட்பா, vi. சிற்சபைவிளக்.9.) 3. உன்னிப்பு; seriousness, earnestness, attention. *"அவன் சொல்வதைப் பத்தியமாய்க் கேள்"* (w.) 4. படிப்பணம்; batta, subsistence allowance (w.) 5. கையூட்டு; bribe. 6. *கடுக்காய்* பார்க்க; (பிங்.) see *kaḍukkāy* chebulic myroboelan. 7. *அவுரி* பார்க்க; (பிங்.) see *aouri* indian indigs. 8. பூவாது காய்க்குமரம்; tree that bears fruit without blossming.

*[பற்று → பத்து → பத்தியம்]*

**பத்தியம்**[2] *pattiyam,* பெ. (n.) 1. செய்யுள் (வீரசோ.யாப்.6.); poetry, dist fr.kattiyam. 2. தெலுங்கில் வழங்கும் இசைப்பாட்டுவகை (கொ.வ.); a kind of musical composition in telugu.

*[ பத்தி → பத்தியம் ]*

**பத்தியம் பிடி–த்தல்** *pattiyam-piḍi-,* 4. செ.கு.வி. (v.i.) பத்தியமாக உண்ணுதல் (இராசவைத்.); to be under prescribed diet.

*[பத்தியம் + பிடித்தல்]*

**பத்தியம்போடு-தல்** *pattiyampodu-,* 5. செ.கு.வி. 1. பத்தியமாக உணவு சமைத்தல்; to prepare a prescribel diet. 2. நோயாளிக்கு மருந்துக் கேற்ற உணவு கொடுத்தல்; to put a patient under diet; to diet one. 3. மகவு உயிர்த்தவளுக்கு மூன்றாம் நாள் பத்திய உணவு கொடுத்தல்; to give food to a woman inconfinement on the third day of the delivery.

*[பத்தியம் + போடு-,]*

**பத்தியமுரிச்சான்** *pattiyamuri-e-cāṉ,* பெ. (n.) அகத்தி; sesbane. (சா.அக.)

*[பத்தியம் + முரிச்சான்]*

**பத்தியம்முரி-த்தல்** *pattiyammuri-,* 4. செ.கு.வி. (v.i.) பத்தியமுறைகளைக் கைவிடல்; breaking off or discontinuing the observance of diet. (சா.அக.)

*[பத்தியம் + முரித்தல்]*

**பத்தியமுறி-த்தல்** *pattiya-muṟi-,* 4. செ.கு.வி. (v.i.) 1. மருந்துப் பத்தியத்தைக் கெடுத்தல்; to violate the dietary prescription. 2. குறித்தகாலத்திற்கப்பால் பத்தியவுணவை நீக்குதல்; to take regular meals after completing the period of dietary regulation.

*[பத்தியம் + முரி → முறி-,]*

**பத்தியமுறிவு** *pattiyamuṟivu,* பெ. (n.) பத்தியக்கேடு பார்க்க; see *pattiya-k-kēḍu.* (சா.அக.)

*[பத்தியம் + முறிவு]*

**பத்தியமுறை** *pattiyamuṟai,* பெ. (n.) *பத்தியவிதி, pattiyaviti.* (சா.அக.)

**பத்தியமூலிகை** *pattiyamūligai,* பெ. (n.) காயகற்ப மருத்துவக் காலத்தில் கற்ப மருந்து சாப்பிடும் போது உதவும் பத்திய மூலிகைகள்; herbs canbe used in diet by those who take medicien for reajuvenation. (சா.அக.)

**பத்தியமூலிகைகள்**

1. கோரக்கர் மூலி. 2. கஞ்சாங்கோரை. 3. விடதாரி. 4. கருஞ்சூலி 5. கடுக்காய். 6. வெண்காரை. 7. எட்டி. 8. துவரை. 9. பொன்னாவிரை. 10. ஏறழிஞ்சில். 11. கரும்பசளை. 12. குட்டித் தக்ககாளி. 13. கருந்துளசி. 14. பேராமுட்டி. 15. ஆடையொட்டி. 16. பாவட்டை. 17. கையாந்தகரை. 18. நெல்லி. 19. கருணைக் கிழங்கு. 20. புளியரணை. (சா.அக.)

**பத்தியவிளக்கம்** *pattiyavilakkam,* பெ. (n.) பத்தியமான உணவு முறை (பாண்டி); dietary.

*[ பத்தியம் + விளக்கம் ]*

**பத்தியிறக்கு-தல்** *patti-y-iṟakku-,* 11. செ.கு.வி. (v.i.) தாழ்வாரம் இறக்குதல்; to make a sloping veranda-roof.

*[பத்தி + இறக்கு-,]*

**பத்தியுலாவு-தல்** *patti-y-ulāvu,* 5. செ.கு.வி. (v.i.) 1. வரிசையாயுலாவுதல்; to walk together in rows, as a company. (w.) 2. கடவுள் ஊர்தியில் எழுந்தருளி உலாவி வருதல்; to have a deity carried backward and forward a number of times within prescribed limits in simulation of his taking a walk. (இ.வ.)

*[பத்தி + உலாவு-,]*

**பத்திரகாளி** *pattirakāli,* பெ. (n.) இராசபலை என்னும் மூலிகை; kings tonic. (சா.அக.)

**பத்திரகாளிசாறு** *patrikāalisāru,* அனைத்துக் காய்ச்சல்களுக்கும் கொடுக்கப்படும் ஓர் ஆயுள் வேத மருந்து; an ayurvedic medicine for fevers which is suppossed to be told by goddess padrakali. (சா.அக)

**பத்திரகிரி** *pattirakiri,* பெ. (n.) பட்டினத்தடிகள் காலத்து விளங்கிய ஒரு பெரியார்; a royal saint, said to be a contemparary of pattinattdikaḷ.

**பத்திரகெந்தம்** *pattira kendam,* பெ. (n.) தாளிசபத்திரி; east indian plum. (சா.அக)

**பத்திரங்கம்** *pattirangam,* பெ. (n.) செஞ்சந்தனம்; red sandalwood. (சா.அக.)

**பத்திரசந்தனி** *pattira santaṉi,* பெ. (n.) நன்னாரி; indian sarasparilla. (சா.அக.)

**பத்திரசியம்** *pattirasiyam,* பெ. (n.) சந்தனம்; sandal. (சா.அக.)

**பத்திரசுரம்** *pattira suram,* பெ. (n.) எழுத்தாணிப்பூடு; style plant (சா.அக.)

*[பத்திரம் + சுரம்]*

**பத்திரசூசி** *pattirasūsi,* பெ. (n.) 1. முள்; thorn. 2. இலைமுள்; leaf thorn. (சா.அக).

*[பத்திரம் + சூசி]*

**பத்திரதருணி** *pattirataruni,* பெ. (n.) செவ்வந்தி; chemmomile flower. (சா.அக.)

**பத்திரதாருகம்** *pattiratārugam,* பெ. (n.) தேவதாரு; deccany deodar. (சா.அக.)

**பத்திரதாலி** *pattiratāli,* பெ. (n.) 1. சாதிமல்லிகை; aralian jasmine. 2. சாதிப்பூ; spanisth jasmine (சா.அக)

**பத்திரதாளம்** *pattiratāḷam,* பெ. (n.) இலைக்கட்டு; application of leaves on an ulcer or boil abscess etc. (சா.அக)

மறுவ. பத்திரதானம்

**பத்திரபதி** *pattirapat,i* பெ. (n.) சிற்றாமுட்டி; cylon sticky mallow. (சா.அக.)

**பத்திரபலா** *pattirapalā,* பெ. (n.) வலுவைக் கொடுக்கும் மூலிகை; a kind of rejuvenate medicine. (சா.அக)

**பத்திரபாணி** *pattirapaṉi,* பெ. (n.) பூசணி; ash pumpkin. (சா.அக)

**பத்திர மஞ்சம்** *pattira m̲anjam,* ஒருவகை நாரப்பூடு; a variety of saccharam. (சா.அக.)

**பத்திரமடந்தை** *pattira m̲adanthai,* பெ. (n.) நாய்ப்பாகல்; buffalo carolah. (சா.அக.)

**பத்திர முத்தக் காசு** *pattira mutta-k-kāsu,* பெ. (n.) கோரைக் கிழங்கு; nut grass root. (சா.அக.)

**பத்திராக்கியம்** *pattirakkiyam,* பெ. (n.) தாளிசபத்திரி; east indian plum.

மறுவ: பத்திரகெந்தம் (சா.அக.)

**பத்திராங்கம்** *pattirāngam,* பெ. (n.) **1.** ஊமத்தை; datura. **2.** செஞ்சந்தனம்; red sandal wood. **3.** இலவங்கப் பட்டை; cinnombark. (சா.அக.)

*[பத்திரம் + அங்கம்]*

**பத்திரா** *pattirāsam,* பெ. (n.) நாவல்; jamoon tree. (சா.அக.)

**பத்திராசம்** *pattira,* பெ. (n.) குமிழ்; comb teak. (சா.அக.)

**பத்திராசனம்** *pattirāsanam,* பெ. (n.) கருங்காலி மரம்; ebony. (சா.அக.)

**பத்திராசிரம்** *pattirāsiram,* பெ. (n.) கொடிச் சண்பகம்; creeper champase. (சா.அக.)

**பத்திராசிரயம்** *pattirāցirayam,* பெ. (n.) *சந்தனம்* பார்க்க, (மலை.); sandalwood. see *santaṉam.*

**பத்திராட்சம்** *pattirāṭcam,* பெ. (n.) அந்திமந்தாரை பார்க்க; four-o'clock (w.)

**பத்திராத்தியம்** *pattirāttiyam,* பெ. (n.) திப்பலி மூலம் (மூ.அ.); root of long pepper.

**பத்திராருகம்** *pattirāṟukam,* பெ. (n.) தேவதாருவகை (தைலவ.தைல.); a kind of cedar.

**பத்திராவதி** *pattirāvati,* பெ. (n.) பெருங் குமிழ்; comb teak. (சா.அக.)

**பத்திரி**[4] *pattiri,* பெ. (n.) கொத்தளம்; battery. (w.)

**பத்திரிப்பு** *pattirippu,* பெ. (n.) சுவரின் அடிப்பாகம் பிதுங்கி வரும்படி கட்டுங்கட்டு; offset. (Arch.).

**பத்திரை** *pattirai,* பெ. (n.) **1.** அவுரி; indigo plant. **2.** மஞ்சள்; turmeric. **4.** கீரிபுரண்டான் செடி; mangoose plant. (சா.அக.)

**பத்தினி** *pattiṉi,* பெ. (n.) **1.** மனைவி; wife. **2.** கற்புடையாட்டி; chaste wife. ***"யானுமோர் பத்தினியே யாமாகில்"*** (சிலப். 21,36–7.)

*[படி → பட்டினி → பத்தினி]*

**பத்தினிக்கடவுள்** *pattini-k-kadavul,* பெ. (n.) கடவுளாகக் கருதப்பட்ட கண்ணகி; kaṇṇaki deified. "*பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டுமென*" (சிலப்.25,114)

*[பத்தினி + கடவுள்]*

**பத்தினிக்கல்** *pattini-k-kal,* பெ. (n.) இறந்த கற்புடையாட்டியின் பொருட்டு நாட்டப்படுங்கல்; memorial stone raised on behalf of a chase. woonen. "*பத்தினிக் கற்கால் கொண்டனன் காவலன்*" (சிலப்.26,253–4.)

*[பத்தினி + கல்]*

**பத்தினிபாகம்** *pattini-pākam,* பெ. (n.) ஒருவன் மனைவியருக்குள் அமையும் பாகப்பிரிவினை; division of a person's property among his wives (r.f.)

*[பத்தினி + பாகம்]*

**பத்தினிபிள்ளை** *pattinipiḷḷai,* பெ. (n.) குடிப்பிறந்த மக–ன்–ள்; legitimate child (w.)

*[பத்தினி + பிள்ளை]*

**பத்தினிமாது** *pattinimātu,* பெ. (n.) சீவகமூலி; moon creeper.

மறுவ. சீந்தல். (சா.அக.)

*[பத்தினி + மாது]*

**பத்து–தல்** *pattu,* செ.குன்றாவி. (v.t.) 1. ஆடு,மாடு முதலியவற்றை ஓர் இடத்திலிருந்து போகும்படி ஒட்டுதல்; விரட்டுதல்; chaseaway (stray cattle) "*பயிரை மேய்ந்த மாட்டைப் பத்தினான்*" 2. போ,வா என்னும் வினையோடு (கால் நடைகளை) கூட்டிப்போதல்; கூட்டி வருதல்; take or lead the cattle to some place. "*மாட்டைச் சந்தைக்குப் பத்திக் கொண்டுபோக வேண்டும்*".

**பத்து**[1] *pattu,* பெ. (n.) 1. ஒன்பதோடு ஒன்று கூடிய எண்; one more than nine. "*ஒன்று முதலாகிய பத்தூர் கிளவி*" (தொல். எழுத்.475) 2. நாலாயிரப்பனுவலில் பத்துப்பதிகம் கூடிய பகுதி; group of ten patikam in nālāyira-p-pirapandam.3. பத்தாம் பிறைநாள்(தசமி); the tenth titi of a lunar fortught. "*ஒன்பதும் பத்தும் தேளும்*" (விதான.குணாகுண.29.) 4. இறந்த பத்தாநாட் செய்யும் இறப்புச் சடங்கு; funeral ceremony on the tenth day of a person's death. (brāh.)

தெ.பதி க.பத்து கோட. பத், தோட. பாட் குட. பத்தி து. பத்து. கொலா. பதி

**பத்து**[2] *pattu,* பெ. (n.) 1. பற்று, பார்க்க see paṟṟu. 2. வயல்; field.

(எ.டு.) *[கோவில்பற்று → கோவில்பத்து]*

**பத்து**[3] *pattu,* பெ. (n.) *பத்தி*[2] பார்க்க see *patti*[2] "*பத்துடை யடிவர்க் கெளியவன்*" (திவ். திருவாய்.1,3.1.)

**பத்து**[4] *pattu,* இடை (part.) 1. எண்ணுக்கு முன் சேர்த்து '*ஏறத்தாழ*' என்னும் பொருளில் வருஞ்சொல்; a prefix to numerals, meaning about. "*உண்டாலும் ஒரு காலே பத்தெட்டு நாளைக்கு உண்ணவுமாய்*" (திவ். திருநெடுந்.1,வ்யா.) 2. சீட்டுக் கட்டில் பத்துக்குறியுள்ள சீட்டினம்; card marked with ten pips, in playhing cards.

**பத்து**[6] *pattu,* பெ. (n.) 1. மூலிகை அரைத்து அல்லது மண் போன்றவற்றைக் குழைத்து உடலில் பூசிக் காயவிட்டு ஒட்டிக் கொள்ளவைத்தல்; herbal or mud plaster (on an affected part of the body) "*தலைவலி தாங்க முடியாததால் சுக்குப் பத்து போட்டுக் கொண்டாள்*" "*மஞ்சள் பத்து வீக்கத்தை வடிக்கும்*" 2. சமையல் ஏனங்களில் ஒட்டியிருக்கும் உணவுப் பொருக்கு; food particles sticking (to cooking utensils) "*கழுவியும் சட்டியில் பத்துப் போகவில்லை*"

*[ பற்று → பத்து ]*

**பத்துக்கட்டு** *pattu-k-kaṭṭu,* பெ. (n.) குடியானவன் வேளாண்மை செய்யும் நிலம்; a ryots usual holding (m.m 642.)

*[பத்து*[2] *→ கட்டு]*

**பத்துக்காடு** *pattu-k-kāḍu,* பெ. (n.) 1. வயனிலம்; field. 2. திட்டமான புன்செய்த் தீர்வை; a fixed assessment of rent on dry land. (w.g.)

*[பத்து*[2] *+ காடு]*

**பத்துக்கால் மன்னன்** *patti-k-kāl mannaṉ,* பெ. (n.) *பத்துக்காலோன்,* பார்க்க. see *pattu-k-kālōṉ.* (சா.அக.)

**பத்துக்காலோன்** *pattu-k-kālōṉ,* பெ. (n.) பத்துக்கால்களையுடைய நண்டு; crab, as having 10 feet.

*[பத்து' + காலோன்]*

**பத்துசத்துவம்** *pattu-sattuvam,* பெ. (n.) மகளிர் உடற்பண்பு, மனப்பண்பு இவற்றை அடிப்படையாக்கித் தேவவியல்பு, மாந்தவியல்பு, நாகவியல்பு, இயக்கவியல்பு, யாழோரியல்பு, பேயியல்பு, அரக்கவியல்பு, காகவியல்பு, குரங்கியல்பு, கழுதையியல்பு (தேவசத்துவம் மானிட சத்துவம், நாகசத்துவம்,இயக்கசத்துவம், காந்தர்வசத்துவம், பைசாச சத்துவம், அசுரசத்துவம், காகசத்துவம் குரங்கு சத்துவம் கார்த்தப சத்துவம்) என்று வகுக்கப்படும் பத்துவகைக் குணவியல்பு (கொக்கோ. 4,); (erot.) the ten characteristics in accordance with which women are classilfied viz., dēva-sattuvam, manusa-sattuvam, naga-sattuvam, iyakka-sattuvam, kāntarva-saattuvam, paisasa-sattuvam, asura-sattuvam, kāgaa-sattuvam, kurangu-sattuvam, kārtaba-sattuvam.

*[பத்து + சத்துவம்]*

**பத்துநாடி** *pattu-nāḍi,* பெ. (n.) உடம்பினுள் உயிருக்குப் பற்றுக்கோடாகவுள்ள பத்து நாடிகள்; the ten vital newes or arteries in the body essential for existence. (சா.அக.)

*[பத்து + நாடி]*

**பத்துநோன்பு** *pattu-nōṉbu,* பெ. (n.) பத்து நாள் நடைபெறும் ஒரு முகம்மதிய நோன்பு; muharram, a muhum-madoṉ festival, which continues for tendays.

*[பத்து + நோன்பு]*

**பத்துப்பாட்டு** *pattu-p-pāṭṭu,* பெ. (n.) திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப் படை, பெரும்பாணாற்றுப் படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப் பாலை, மலைபடுகடாம் என்ற பத்துப் பாடல்கள் அடங்கிய பழைய நூற்றொகுதி; a collection of ten ancient tamil poems. *'பார்த் தொல்காப்பியமும் பத்துப்பாட்டுங் கலியும்'* (தனிப்பா.) *"பத்துப் பாட்டாதி மனம்"* (மனோன்.)

*[பத்து + பாட்டு]*

**பத்தும் பத்தாக** *pattum-pattāka,* (து.வி.) (adv.) முழுமையாக; wholly, fully. *"தன்னுடைய விஜய பரம்பரைகளைப் பத்தும் பத்தாகக் காட்டிக் கொடுக்க"* (ஈடு, 7, 4, ப்ர.)

*[பத்தும் + பத்தாக]*

**பத்துமணிக் கேசரம்** *pattu maṇi-k-kēsaram,* பெ. (n.) தாமரைத்தாது; filaments of lotus. (சா.அக.)

**பத்துமாற்றுத்தங்கம்** *pattu-māṟṟu-t-taṅgam,* பெ. (n.) உயர்ந்த தங்கம்; unalloyed gold of standard fineness. *"பத்து மாற்றுத் தங்கமாக்கியே பணிகொண்ட"* (தாயு. சின்மயா. 7.)

*[பத்து' + மாற்று + தங்கம்]*

**பத்தூரம்** *pattūram,* பெ. (n.) *பொன்னாங்காணி* see poṉnaṅkaṇi பார்க்க (தைலவ. தைல.); a plant found in damp places; sessile plant.

*[பத்து → பத்தூரம்]*

**பத்தெட்டுக்குத்தல்** *pattettu-k-kuttal,* பெ. (n.) நன்றாகக் குத்தித் தீட்டிய அரிசி; well-cleaned rice.

*[பத்தெட்டு + குத்தல்]*

(நெல்லை ஒருமுறைக்குப் பலமுறைக் குத்தித் தீட்டித் தூய்மையான அரிசி யாக்குதலால் இவ்வழக்குத் தோன்றியதா கலாம்)

**பத்தேமாரி** *pattēmāri,* பெ. (n.) சிறுமரக்கலம்; a small vessel fitted with one or two sails for caarrying goods over the sea (nāñ.)

**பத்தேரி** *pattēri,* பெ. (n.) *பத்திரி* பார்க்க 4 (இ.வ.); see *pattiri 4.*

*[பத்திரி → பத்தேரி]*

**பத்தை** *pattai,* பெ. (n.) 1. வெந்தோன்றி; white november plant. 2. மூங்கிற்பத்தை; bamboo split. 3. (காய்கறி பழம் போன்ற வற்றின்) கீற்று; slice (of vegetables, fruits) *'பூசனிப்பத்தை' 'மாங்காய்ப் பத்தை' 'தேங்காய்ப் பத்தை"* (சா.அக.)

**பத்தை** *pattai,* பெ. (n.) 1. சிறுதுண்டு; thin piece, as of bamboo; ;slice, as of cocoanut (w.) *"இரண்டு தேங்காய்ப்பத்தை வாங்கிவா"* 2. மண்ணோடு கூடிய பசும்புற்றுண்டு; turf. குயவன் மட்பாண்டத்தைச் சக்கரத்தினின்று அறுக்கும் கருவி; a pottor's tools with which the pot is removed from the wheel.

தெ. பட்ட

*[பட்டை → பற்றை → பத்தை]*

(மு.தா.123)

**பத்தைகட்டு¹-தல்** *pattai kattu-,* செ.கு.வி. (v.i.) முறிந்த எலும்புக்கு மூங்கிற்பத்தை வைத்துக் கட்டல்; bandaging with bamboo splints for broken or fractared bone. (சா.அக.)

*[பத்தை + கட்டு-,]*

**பத்தை கட்டு²-தல்** *pattai-kattu-,* 17. செ.குன்றா.வி. (v.t.) பொய்மொழிகளால் பாசாங்கு செய்து குற்றத்தை மறைக்க முயலுதல்; to try to hide a defect by fals statement.

*[பத்தை + கட்டு-,]*

**பத்தொடு எட்டுக்கொள்ளல்** *pathodu-ettukkollal,* பெ. (n.) மூச்சுப் பழக்கத்தைக் குறிக்கும் பத்தொடு எட்டுசேர்த்தல் adding eight to ten, probably referring to the scientific breathing of yogis.

*"நேசமுடன் பத்தொடு எட்டுங் கொண்டு நெடுங்காலம் வாழ்ந்திருப்பான் புவியின் மீதில்"* (சா.அக.)

**பத-த்தல்** *pata-,* 21. செ.கு.வி. (v.i) ஈரமாதல்; to become moist, soft, marshy. *'அப்பளம் பதத்துப் போயிற்று'* (புதுவை.)

*[பதம் + அறு → அத்து + அல்]*

'அல்' – தொ.பெ.விகுதி

**பதக்கத்தார்** *patakka-t-tār,* பெ. (n.) *பதகதார்* பார்க்க, (இ.வ.) see *pataka-tār.*

*[பதகம்³ → பதக்கம் + அத்து + ஆர்]*

**பதக்கம்** *patakkam,* பெ. (n.) சரடு முதலிய வற்றிற் கோக்கப்படும் கல்லிழைத்த தொங்கற் கழுத்தணி; a pendant set with gems and suspended from the necklace. (s.i.i.ii, 429)

*[பட → பத → பதக்கம்]* (வ.மொ.வ. 199) skt. பதக



**பதக்கம்** *patakka[m,* பெ. (n.) 1. (வெற்றியின் அல்லது ஒரு நிகழ்ச்சியின் நினைவாக அளிக்கப்படும்) உருவம், எழுத்து போன்றவை பொறிக்கப்பட்ட, மதிப்புடைய மாழை வில்லை; medal (given to one's bravery or victory or to s-o-as a soovenir) ஆசிய விளைபாட்டுப் போட்டியில் நான்கு தங்கப் பதக்கம் பெற்றவருக்குப் பாராட்டு. *"இது வெள்ளி விழாகி கொண்டாட்டத்தின் போது வழங்கப்பட்ட பதக்கம்"* 2. (தொடரி முதலிய வற்றில் கோக்கப்படும்) ஏதேனும் ஒரு வடிவத்தில் செய்யப்பட்ட அல்லது கற்கள் பதிக்கப்பட்ட சிறு தங்க வில்லை; pendant. *"மயில் பதக்கம் வைத்த தொடரி" "வயிரக்கல் பதக்கம்"*

*[ பட → பத → பதக்கம் ]*

(வ. மொ. வ. 29)

ஒ. நோ : படாகை → பதாகை

**பதக்கிரமம்** *pata-k-kiramam,* பெ. (n.) நடன நடைமுறை; regularity of step in a dance. (w.)

*[பதம்² + கிரமம்]*

கிரமம் = skt.

**பதக்கிரமம்** *patakkiramam,* பெ. (n.) காலடி; foot print. (சா.அக.)

*[பதம் + கிரமம்]*

கிரமம் = skt.

**பதக்கு** *patakku,* பெ. (n.) இரண்டு குறுணி கொண்டதோர் அளவு; a measure of capacity. = 2 a kuruṇi. *"பதக்குமுன் ... தூணிக் கிளவி"* (தொல். எழுதி. 239.)

*[பதம் → பதக்கு]*

**பதக்குப் பதக்கெனல்** *patakku-p-patakkanal,* பெ. (n.) அச்சத்தால் நெஞ்சு துடித்தற் குறிப்பு; expr. signifying throbbing of the heart through fear. (w.)

*[பதக்கு + பதக்கு + எனல்]*

**பதக்கேடு** *pata-k-kōḍu,* பெ. (n.) பக்குவங் கெடுகை; over ripeness; overboiled, decayed or rotten condiltion debility (w.) *'பதங்கெட்ட பண்டத்தைத் தின்னாதே; இதங்கெட்ட இடத்தில் கட்டாதே'* (பழ.)

*[பதம் + கேடு]*

**பதகம்** *patakam,* பெ. (n.) பறவை (பிங்.) bird, winged creature. *"பதகத் துடறொடில்"* (இரகு. நகரப் 27.)

*[பறவை → பறகை → படகம் → பதகம்]*

**பதகம்²** *patakam,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில் மராட்டியர் ஆட்சிக்காலத்தில் பிரிக்கப் பட்டச் சிற்றூர்த் தொகுதி (g.Tj.d.i. 170.); an administrative unit in the tanjore dt. made up of a number of villages, formed during the maharata rule.

*[பதி → பதிகம் → பதகம்]*

**பதகரம்** *patagaram,* பெ. (n.) அறுகம்புல்; couch grass, pauic grass. (சா.அக.)

**பதகரி** *patakari,* பெ. (n.) 1. குளம்பிக் கொட்டை; coffee seed. 2. ஒருவகைத் தோல் நோய்; a kind of skin disease. 3. ஒருவகைப் புண்; a kind of ulcer. (சா.அக.)

**பதகிரி** *patakiri,* பெ. (n.) தோல்நோய் வகை; a kind of skin desease. (nāṅ)

**பதங்க கந்தகம்** *patangankantagam,* பெ. (n.) பதங்கித்த கந்தகம்; sublimed sulphur. (சா.அக.)

*[ பதங்கம் + கந்தகம் ]*

**பதங்கச்சி** *patankacci,* பெ. (n.) இந்திரச் செய்ந்நஞ்சு; one of the 32 kinds of prepared arsenic. (சா.அக.)

**பதங்கத்திற் சமைந்த நாரி** *patangattir-camainta nāri,* பெ. (n.) கார்முகிற் செய்ந்நஞ்சு; a prepared arsenic so called because its colour resumbles that of cloud. (சா.அக.)

*[ பதங்கத்தில் + சமைந்த + நாரி ]*

**பதங்கம்** *patangam,* பெ. (n.) 1. *பதகம்* பார்க்க (திவா.); see *patagam.* *"பதங்க முழவொத்த"* (கம்பரா.கார்கால.79) 2. விட்டில்; grasshoper. *"நீள்பதங்க முன்னா"* (திருவாலவா.60,1) *"சுடரில் விழு பதங்கமெனத் தளர்ந்தார்"* (சிவரக. கணபதியுடன். 1.3) 3. இதளியம் ; mercury (W) 4. கருப்பூரம், சாம்பிராணி, கந்தகம் முதலிய மருந்துச் சரக்குகளை மேன் மூடியிட்டு எரிக்கும்போது அம்மூடியின் கீழ்ப்புறத்தில் படிந்திருக்கும் சரக்கு (பைஷஜ); extrades essence of drugs, such as champer sulphur, gum, benzoin, etc., in the form of a shining semi-liquid body produced by sublimation. *"பதங்க முழவொத்த"* 5. *சப்பங்கி* பார்க்க; sappan wood (L.) see *sappangi.*

*[ ஒருகா: பதகம் → பதங்கம் ]*

**பதங்கமம்** *patangamam,* பெ. (n.) *பதங்கம்,* 1,2, (சங்.அக.) பார்க்க; see patangam.

*[ பதங்கம் → பதங்கமம் ]*

**பதங்கமேற்று—தல்** *patangam-ērru-,* 6. செ.குன்றாவி. (v.t.) எரித்துப் பதங்கம் எடுத்தல்; to extract essence of drugs by sublimation. (w.)

*[ பதங்கம் + ஏற்று—]*

**பதங்கமேறு—தல்** *patangamēru,* 7. செ.கு.வி. (v.i.) எரிப்பதனால் ஆவியாகப் படிதல்; being deposited after heating into vapour. (சா.அக.)

*[பதங்க + மேறு]*

**பதங்கலிங்கம்** *patangalingam,* பெ. (n.) சாதிலிங்கம்; vermillion, red sulphate or mercury. (சா.அக.)

*[பதங்கம் + இலிங்கம்]*

**பதங்கவிதி** *patangaviti,* பெ. (n.) பதங்க முறையாய்ச் சரக்குகளை எடுப்பதற்கு வேண்டிப் பின்பற்றும் நெறிமுறைகள்; rules of sublimation. (சா.அக.)

*[பதங்கம் + விதி]*

விதி =skt

**பதங்கவைப்பு** *patanga-vaippu,* பெ. (n.) 1. பதங்கமெடுக்கை; extraction of essences. 2. பதங்கமாக எடுக்கப்பட்ட மருந்து; essence of drugs extrected.

*[பதங்கம் + வைப்பு]*

**பதங்கன்** *patangan,* பெ. (n.) கதிரவன் (திவா.); the sun. *"உருப்ப பதங்களை யொப்பன"* (கம்பரா. கும்பக.211) *"எற்பதங்கன்றுவளர் சோமனங்கியிவர் செய்கையாய்"* (மறைசை.48)

*[பதங்கம் → பதங்கன்]*

(ஒளியுடைய இதளியம் பதங்கம் என்ற பெயர் பெறுதலால் ஒளிவீசும் கதிரவனுக்கும் இப்பெயர் தொடர்ந்ததாகலாம்).

**பதங்கி-த்தல்** *patangi,* 5. செ.குன்றாவி. (v.t.) *பதங்கமேற்று-,* பார்க்க, (பைஷஜ); see *patangamērru.*

*[பதங்கம் → பதங்கித்தல்]*

**பதங்கு** *patangu,* பெ. (n.) 1. குழி; hole in the ground. 2. ஓட்டுவரிசை; tiles set in a row. 3. பிளந்த பனையின் பாதி; half of a split palmyra tree.

*[பள் → படு → படங்கு → பதங்கு]*

**பதச்சாயை** *pata-c-cāyai,* பெ. (n.) மக்களின் நிழல்; human shadow. *"அவச்சாயை பதச் சாயை யறையே"* (சூடா.உள்.64)

*[பதம்² + சாயை]*

**பதசம்**[1] *patasam,* பெ. (n.) 1. பறவை; bird.

*[பறவை → பறகை → படகம் → பதகம் + பதசம்]*

**பதசம்**[2] *patasam,* பெ. (n.) 2. நிலவு; moon.

*[பதம் → பதசம்]*

**பதசாரி** *pata-cāri,* பெ. (n.) நாட்டியத்திற் காலடியிடும் வகை; a kind of movement of steps. *"பதசாரி சாரிகொள்ள"* (விறலிவிடு.)

*[பாதம் → பதம் + சாரி = பதசாரி]*

**பதசாலம்** *pata-sālam,* பெ. (n.) மகளிர் அணியுங் காலணி வகை; a kind of foot-ring worn by women. *"பன்னியகை விரலாழி சிலம்பொடு பதசாலம்"* (சிவரக.தேவி மயம்.7)

மறுவ. பாதசாலம்

*[பாதம் → பதம் + சாலம்]*

**பதஞ்செய்-தல்** *patañcey-,* 1. செ.குன்றாவி. (v.t.) 1. பதப்படுத்துதல்; to temper, கொ.வ. 2. மென்மையாக்குதல்; to soften. *"நிரந்தரங் குளிர்ந்து நின்றுபதஞ் செயுநீர்"* (சி.சி.2,66)

*[பதம் + செய்-]*

**பதட்டம்** *patattVA,* பெ. (n.) *பதற்றம்* பார்க்க (கொ.வ.); see *patarram.*

*[பதற்றம் → பதட்டம்]*

**பதடி** *patadi,* பெ. (n.) 1. பதர் (திவா.); chaff, blighted grain. *"பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல் மக்கட் பதடியெனல்"* (குறள்.196) 2. உமி; husk. *"பகர்நிலாக் கற்றை பதடியா"* (பெருந்தொ.1278) 3. பயனின்மை; futility. *"பதடிவைகல்"* (குறுந்.323) 4. வில் (சங்.அக.); bow.

*[பதர் → பதடி]*

தெ. பதடு

**பதண்பதணெனல்** *patan-patanenal,* பெ. (n.) மனம் பரிதவித்தற்குறிப்பு; expr. signifying trembling of the heart. "*பதண்பதணென் றானிறே*" (ஈடு, 1,10,6.)

*[பதண் + பதண் + எனல்]*

**பதணம்** *patanam,* பெ. (n.) 1. மதிலுண்மேடை (திவா.); mound or raised terrace of a fort, rampdart. "*நெடுமதி னிரைப் பதணத்து*" (பதிற்றுப்.22,25) 2. மதில்; walls of a fort, fortification. (W.)

*[பதனம் → பதணம்]* (தென்மொழி மே.71. பக்.22)

**பதத்திரி** *padattiri,* பெ. (n.) பறவை; bird (சா.அக.)

**பதந்தவறு–தல்** *patan-tavaru,* 5. செ.கு.வி. (v.i.) 1. இரவில் விண்மீன் விழுதல்; to fall as a meteor by night (W.) 2. நிலையினின்று நழுவுதல்; to slip down, as from one's position. (இ.வ.)

*[பதம் + தவறு–]*

**பதந்திரவல்லி** *padantiravalli,* பெ. (n.) முடக்கொத்தான்; smooth leaved heart pea. (சா.அக.)

**பதநியாசம்** *pata-niyācam,* பெ. (n.) 1. நடனத்தில் ஒழுங்குபெற அடி வைக்கும் முறை; regularity of step in dancing. 2. பூடுவகை; shrub.

*[பதம் + நியாசம்]*

நியாசம் = skt

**பதநிறம்** *pata-niram,* பெ. (n.) ஒருவகைக் கருப்புக்கல் (யாழ்.அக.); a kind of black stone.

*[பதம் + நிறம்]*

**பதநீர்** *pata-nir,* பெ. (n.) புளிப்பேறாதபடி, சுண்ணாம்பிடப்பட்ட கலசத்துளிறக்கிய இனிப்புக்கள்; sweet toddy drawn in a pot lined with lime to prevent fermentation.

*[பதம் + நீர்]*

**பதப்பட்டை** *padappattai,* பெ. (n.) ஒருவகைக் கொத்து நேர்வாளச் செடி; cluster croton. (சா.அக.)

*[பதம் + பட்டை]*

**பதப்படு–தல்** *pata-p-padu-,* 20. செ.கு.வி. (v.i.) 1. பக்குவப்படுதல்; to be seasoned. 2. பழுத்தல்; to ripen.

*[பதம் + படு–.]*

**பதப்படுத்து–தல்** *pata-p-paduttu,* 17. செ.குன்றாவி. (v.t.) 1. பயன்படும்படிச் செய்தல்; to make a thing fit for use. 2. இணக்குதல்; to reconcile. (கொ.வ.)

*[பதம் + படு–.]*

**பதப்பர்** *patappar,* பெ. (n.) வெள்ளத்தைத் தடுக்க இடும் மணற் கோட்டை; heaped sand to prevent in roads of flood. "*பலசூழ் பதப்பர் பரிய*" (பதிற்றுப்.30,18)

*[பொதி → பதி → பதப்பு → பதப்பர்]*

**பதப்பலம்** *pata-p-palam,* பெ. (n.) காற்பலம்; quarter of a palam. "*பதப்பலம் எண்ணெயி லிட்டு*" (தைலவ.தைல)

**பதப்பாடு** *pata-p-pāḍu,* பெ. (n.) **1.** பக்குவமாகை; being seasoned, tempered, fitted , adapted or trained (W.) **2.** பழுக்கை; ripening, (W.). **3.** மதிலுறுப்பு (பிங்.); component parts of a fortification including ornamental figures.

*[பதம் + பாடு]*

**பதப்பேறு** *pata-p-pēṟu,* பெ. (n.) *பதமுத்தி* (யாழ்.அக.) பார்க்க; (saiva.) see *patamutti.*

*[பதம் + பேறு]*

**பதபத்திரம்** *padapattiram,* பெ. (n.) நந்தியாவட்டம் என்னும் மூலிகை; indian rose-bay. (சா.அக.)

**பதபதெனல்** *pata-pateṉal,* பெ. (n.) ஈரடுக்கொலிக்குறிப்பு; expr. signifying (அ) the sound of water in swift motion or of a storm (ஆ) நெஞ்சடித்தற் குறிப்பு; the trambling of the heart.

*[பதபத + எனல்]*

**பதபாகம்** *pata-pākam,* பெ. (n.) **1.** அமரிக்கை; gentleness, mildness, calmness. (W.) **2.** தகுதி; fitness, suitability (கொ.வ.)

*[பதம் + பாகம்]*

**பதம்[1]** *patam,* பெ. (n.) **1.** பக்குவம்; proper consistency, required degree of hardness or softness, quality of fitness. "*சில்பதவுணவின்*" (பெரும்பாண்.64) **2.** உணவு (திவா.); cooked food. "*பதமிகுத்துத் துய்த்தல் வேண்டி*" (சிலப்.28,189) **3.** சோறு (திவா.); boiled rice. **4.** அவிழ் (சூடா.); a grain of boiled rice. **5.** தண்ணீர் (திவா.); water. **6.** ஈரம் (திவா.); dampness, moisture. "*மாவெலாம் பதம் புலர்ந்த*" (கம்பரா.மூலபல.79) **7.** கள்; toddy. "*மகிழ்ப்பதம் பன்னாட்கழிப்பி*" (பொருந.111) **8.** அறுகம்புல்; tender grass. **9.** இளம்புல் (பிங்); tender grass. **10.** இனிமை; gentleness, sweetness. "*வெங்குருவரசர் பதம்பெற வெழுதி வரைந்திடு மேடு*" (திருவாலவா.38, 40) **11.** இன்பம் (சூடா.); joy, delight. **12.** அழகு; beauty (w.) **13.** ஏற்ற சமயம்; fit occasion, opportunity. "*எண்பதத் தாலெய்தல்*" (குறள்.991) **14.** தகுதி; suitability. **15.** பொழுது (பிங்.); time "*குறைகொள் வானவர் பதங்கிடையாது இறைகொள்ள*" (திருவிளை.வரகு.50) **16.** நாழிகை (திவா.); Indian hour of 24 minutes. **17.** கூர்மை; sharpness, as of the edge of a knife. "*கத்தி பதமாயிருக்கிறது*" **18.** அடையாளம் (சங்.அக.); sign, indication. **19.** அளவை (சங்.அக.); measure. "*சொற்பதங் கடந்துநின்ற சுந்தரன்*" (திருவிளை.மாபாத.39) **20.** பொருள் (யாழ்.அக.); thing, substance. **21.** காவல் (யாழ்.அக.); watch. **22.** கொக்கு (யாழ்.அக.); crane. **23.** முயற்சி (யாழ்.அக.); effort. **24.** மாறுகோலம் (யாழ்.அக.); disguise.

ம. பதம் கொத. பத்ம். மால்ட். பதொ.

*[பதி → பதம்]* (செல்வி 75, ஆடி பக்.601)

**பதம்[2]** *patam,* பெ. (n.) (நாட்.) இன்பச் சுவை நிறைந்த பாடலுக்கு ஆடப்படும் நாட்டிய வகை; a composition on the theme of love rendered in slow tempo in dance recitals. "*அந்தப் பெண் குறிப்பிட்ட அந்தப் பாடலுக்கு பதமாக ஆடினாள்*".

*[ பதி → பதம் ]*

**பதம்[3]** *patam,* பெ. (n.) **1.** கால்; foot, leg. "*எறிபதத்தானிடங்காட்ட*" (புறநா. 4) "*கிண்கிணி யிலங்கிய பதம் பெறுவேனே*"

அரிச். பாயிர. 1) 2. செய்யுளடி; foot or line of a stanza. (w). 3. நாலிலொன்று (பிங்.); quarter. 4. நாழி (பூரட்டாதி) *"விளங்கு பதங்கேட்டையாங்குநல்ல"* (விதான. குணாகுண. 11). the 27th naksatra. 5. இசைப்பாட்டு வகை; a kind of musical composition. *'முத்துத் தாண்டவர் பதம்'* 6. இடம்; place, site, location. *"பதங்களேழும்"* (குக்கயாகப். 147) *"ஆரணங்கள் முடிந்த பதத்து"* (கோயிற்பு. பாயிர. 2) 7. பதவி; situation, rank. *"பிரிவில் தொல் பதந்துறந்து"* (கம்பரா. திருவடி சூட்டு 101). *"அண்டர்தம் · பதம் யாவையுமடைந்து"* (பிரமோத். பஞ்சா. 40); 8. தெய்வப்பதவி; state of future bliss. *"சிவ பதமளித்த செல்வமே"* (திருவாச. 37, 3); 9. வழி; way, road. path. 10. தரம்; cricumstance, capacity, *"பெண்டிருந் தம்பதங் கொடுக்கும்"* (புறநா. 151) 11. வரிசை (பிங்.); row, order, series. 12. வீடு கட்டுதற்கு இடமறிய வரையும் மனைநூலின் வரைபடக் கட்டங்கள்; (astrol.) compartments drawn on a chart for determining the site for building a house. (w.) 13. ஒளி; light, brightness. *"பொற்பதப் பொதுவார் புகழ்"* (கோயிற்பு.காப்பு.)

ம. பதம். குட. பத. து. பதநுனி, பதணுனி மால்ட். பொத்கொ.

*[ பதி → பதம் ]*

**பதம்செய்தல்** *padamseytal,* பெ. (n.) இளகச் செய்தல்; to make soft. (சா.அக.)

*[பதம் + செய்தல்]*

**பதம்பத்மாசனம்** *patam-patmācanam,* பெ. (n.) ஒகநிலைவகை; a yōgic posture.

*[பதம்² + பத்மாசனம்]*

பத்மாசனம் = skt

**பதம்பார்¹-த்தல்** *patam-pār-,* 4. செ.கு.வி1. (ஒருவரிடமிருந்து கற்றதை அவரிடமே பயன்படுத்தி) ஆய்வு செய்தல்; test (the effectiviness of 8th on S.O.from whom i has been acquired) *"குருவையே பதம்பார்க்கும் மாணக்கனாக மாறிவிட்டாயா?"* 2. காயப்படுத்துதல்; hurt inadvertently. *"கொஞ்சம் கவனக் குறைவாக இருந்ததில் கத்தி கையைப் பதம் பார்த்துவிட்டது!". "வேகமாக வந்த பந்து ஆட்டக்காரரின் மூக்கைப் பதம் பார்த்து விட்டது."*

*[பதம் + பார்]*

**பதம்பார்-த்தல்** *patam-pār-,* 4. செகுன்றாவி (v.t.) 1. சுவையறிதல்; to try the taste or consistency of boiling rice; to try a fruit by feeling, smelling. (w). 2. ஒரு செயலைத் தொடங்குமுன் ஆராய்ந்து பார்த்தல்; to exercise great caution before entering on a business. 3. விதையிட நிலத்தின் பக்குவம் அறிதல்; to examine the moistness of land in order to ascertain its fitness for sowing (w) 4. ஆய்வு செய்தல்; to test. (கொ.வ.)

*[பதம் + பார்-,]*

**பதமத்தியம்** *pata-mattiyam,* பெ. (n.) வான் வட்டம் அல்லது வளி மண்டலத்தைப் பார்ப்போனுக்கு நேர் கீழாகவுள்ள இடம்; (arston) nadir. (c.g.)

*[பதம் + மத்தியம்]*

மத்தியம் = skt

**பதமம்** *patamam,* பெ. (n.) 1. திங்கள்; moon. 2. பறவை; bird. 3. விட்டில்; a kind of moth.

*[பதம் → பதமம்]*

பதம் = விட்டில்

**பதமாக்கல்** *padanākkal,* பெ. (n.) 1. பக்குவப்படுத்தல்; making fit. 2. இளகச் செய்தல்; making soft. 3. பயன்படும்படிச் செய்தல்; to make use. 4. பக்குவ நிலைக்குக் கொண்டு வருதல்; bringing to perfection. (சா.அக.)

*[பதம் + ஆக்கல்]*

**பதமாய்க் கிளறல்** *padamāy-k-kiḷaṟal,* பெ. (n.) இளகியம் முதலிய மருந்துகளைப் பக்குவப் படும்படித் தீயிட்டுக் கிளறுதல்; stirring medicine on fire during preparation till it reaches perfection. (சா.அக.)

*[பதம் → பதமாய் + கிளறல்]*

**பதமாயெரித்தல்** *padamāyeri-,* பெ. (n.) 1. பக்குவப்படும்படியெரித்தல்; burning or heating so as to bring to perfection. 2. அளவுப்படி யெரித்தல்; heating as per prescribed degree. (சா.அக.)

*[பதம் → பதமாய் + எரி-,]*

**பதமிடல்** *padamidal,* பெ. (n.) 1. மருந்து பூசுதல்; rubbing medicine. 2. எண்ணெய்ப் பூசுதல்; anointing with medicated oil to soften the affected part. 3. மெதுவாகும்படிச் செய்தல்; to softer. (சா.அக.)

*[பதம் + இடல்]*

**பதமுத்தி** *pada-mutti,* பெ. (n.) பரமுத்திக்குக் கீழ்ப்பட்ட இந்திரன் முதலிய இறையவர் பதங்கள்; inferior state of bliss. *"அத்தவங்களின் பயனாகிய பதமுத்திகளை"* (சி. போ. பா. 8,1. பக். 168)

*[பதம் + முத்தி]*

**பதமுறக்காய்ச்சல்** *padamurakkāyccal,* பெ. (n.) மருந்தின் இயல்பு கெடாதபடிக் கைமுறையாய்ப் பக்குவப்படிக் காய்ச்சுதல்; boiling or heating medicine under preparation so as not get it spoiled in its quality. (சா.அக.)

*[பதமுற + காய்ச்சல்]*

**பதமை** *padamai,* பெ. (n.) 1. மென்மை; softness, tenderness, mellowness, as of ripe fruits of well boiled food. 2. மந்தகுணம்; slowness dullness. 3. மெல்லோசை; lowness, softness of voice. 4. அமைதி; gentleness, mildness, delibrateness, calmness. *"பதமையாகக் காரியம் பார்க்கிறவன்"* 5. இணக்கம்; pliancy, smoothness, resignation.

*[பதம்¹ → பதமை]*

**பதமோதகம்** *padamōdagam,* பெ. (n.) பைரவ சாதியாகிய ஆண்சாதி நால் வகைகளுள் ஒன்று; one of the classes of men divided according to their lust. (சா.அக.)

**பதயுகம்** *pada-yugam,* பெ. (n.) இணையடிகள்; a pair of feet. *"பதயுகத் தொழில் கொடு"* (கம்பரா. நகரப். 49)

*[பதம் + யுகம்]*

யுகம்=skt

**பதர்¹** *patar,* பெ. (n.) 1. உள்ளீடற்ற நெல்; chaff, husk, empty ears of grain. *"பதர்கொள்வார் நெல்லோடுற்றால்"* (அரிச். பாபர. 11) 2. பயனின்மை; unsubstantiality; emptiness; worthlessness; insipidity; inferiority. *"பதரில் செம்பொன்"* (பெருங். உஞ்சைக். 34, 194) 3. பயனற்றவன்;

worthless person. *"பேதையும் பதரே"* (நறுந்.) 4. குற்றம்; fault, defect. *"பதாறு திருமொழி"* (சீவக. 2850.) 5. அறிவிலி; stupid. *"மருந்தரிதாற் பெற்றும் வயிற்றுட் பெய்யாது, பரிந்தளற்றுட் பெய்த பதர்"* (இன்னிசை. 14. பொரு. 10)

ம. பதிர் க. ஹதிர்

*[பதவு → பதர்]*

**பதர்—த்தல்** *patar-,* 4. செ.கு.வி. (v.i.) பதராய்ப் போதல்; to become useless. *"ஒருகால் பதர்த்த திறே"* (ஈடு, 2, 8, 5)

*[பதர் → பதர்த்தல்]*

**பதர்ச்சொல்** *padar-c-col,* பெ. (n.) பொருளில்லாத சொல்; meaningless word. *"பதர்ச் சொற் பருப்பொருள் பன்னுபு நீக்கி"* (பெருங். இலாவாண. 4, 51)

*[பதர் + சொல்]*

**பதரம்** *padaram,* பெ. (n.) இலந்தை; zyzphus jujuba. (சா.அக.)

**பதரவாக்கினி** *padaravākkiṉi,* பெ. (n.) கடல்நுரை; cuttle fish. (சா.அக.)

**பதரி** *patari,* பெ. (n.) 1. *இலந்தை* பார்க்க, (தைலவ. தைல); see jufeebe - tree. 2. *பதரிகாசிரமம்* பார்க்க.; see *patarikāasiramam.*

**பதரிகண்டம்** *padarikaṇḍam,* பெ. (n.) ஒட்டை மரம்; camel tree. (சா.அக.)

*[பதரி + கண்டம்]*

**பதரிகா** *padirikā,* பெ. (n.) கருப்பு நாயுருவி; a black variety of indian burr. (சா.அக.)

**பதலபம்** *padalabam,* பெ. (n.) கருப்புத் தேக்கு; black teakwood. (சா.அக.)

**பதலம்** *patalam,* பெ. (n.) மிகுவிழிப்பு; care, caution, safety, security. *"திருவாபரணங்கள்... கருவுலகத்திலே பதலம் பண்ணுகிறதும்"* (கோயிலொ. 76)

க. பதுல.

*[பதனம் → பதலம்]*

**பதலை[1]** *patalai,* பெ. (n.) 1. மலை; (பிங்.) mountain. *"இப்பதலைக்கல்லவோ"* (இரகு. தேனுவ. 62) 2. சிறுமலை (சூடா.) hill. 3. மத்தளம் (யாழ்.அக.); a kind of drum. 4. ஒருகட்பகுவாய்ப்பறை (பிங்.) single-headed large drum. *"நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கி"* (புறநா. 6, 4) 5. தாழி (பிங்.); large-mouthed pot. *"பதலை தோறும் பனிநீர்"* (அரிச். பு. விவாக. 292). 6. கோபுரம் முதலியவற்றின் மேல் வைக்கும் அணியழகுக் கலசம்; ornamental pitcher mounted on a tower, etc; *"பதலைக் கபோதத் தொளிமாடம்"* (திவ். பெரியதி. 3, 8, 2) 7. தோணி; boat. (w.)

தோட. பாவோஸ் மால்ட். பதலி.

*[ படலை → பதலை ]* (மு.தா.125)

**பதலை[2]** *padalai,* பெ. (n.) குண்டான், தாழி, சாடி போன்ற வாயகன்ற ஏனம்; a wide or broad mouthed vessel as basin. (சா.அக.)

**பதலைவங்கு** *padalai-vaṅgu,* பெ. (n.) மலைக் குகை; cave. *"பாம்பதாய்ப்பதலை வங்கிற் பாவி தான் பரிணமித்தான்"* (மேருமந். 741)

மறுவ. வங்கு.

*[பதலை + வங்கு]*

**பதவம்** *padavam,* பெ. (n.) *அறுகு* பார்க்க

"பெரும்பதவப் புல்மாந்தி" (கலித். 109); see *aruku.* bermuda grass.

*[பதம் → பதவு → பதவம்]*

(தென்மொழி.மே71. பக்.22)

**பதவல்** *pataval,* பெ. (n.) குப்பை; rubbish, refuse.

*[பதவு → பதவல்]*

பதவு = புன்மை

**பதவாடம்** *padavāḍam,* பெ. (n.) மாக்களி; pastry made out of flour. (சா.அக.)

**பதவாடை** *paḍavāḍai,* பெ. (n.) மாக்களிக் கட்டு; poultice. (சா.அக.)

**பதவாடைகட்டல்** *padavāḍaikāṭṭal,* பெ. (n.) பதவாடை செய்தல்; applying poultice. (சா.அக.)

*[பதவாடை + கட்டல்]*

**பதவாடைசெய்தல்** *padavāḍaiseytal,* பெ. (n.) மாக்களி கட்டல்; applying poultice. (சா.அக.)

*[பதவாடை + செய்தல்]*

**பதவாயுதம்** *pada-vāyutam,* பெ. (n.) கோழி; cock, as having its feet for weapons. "பதவாயுதக் கொடி வேள் தாதை கீர்த்தியைப் பாடுதற்கு" (மறைசை. 89).

*[பாதம் → பதம் + ஆயுதம்]*

ஆயுதம் = skt

**பதவி**[1] *padavi,* பெ. (n.) நீர்மையுள்ளவன்; person of real humility. "பதவியாய்ப் பாணி யானீரேற்று" (திவ். இயற். 2, 89.)

*[பதம் → பதவு → பதவி]*

**பதவி**[2] *padavi,* பெ. (n.) 1. நிலை; station, situation, position, rank. 2. வழி; (திவ். இயற். 2, 89, அரும்); road path, way. 3. புண்ணிய உலகம்; worlds of the gods, lower stabes of bliss. "பதவியை யாவர்க்கும் நல்கும் பண்ணவன்" (கம்பரா. வாலிவ. 136) 4. சிவனுலகு, இறைவனருகிருத்தல் சிவனுருவம், சிவன் திருவடிப் பேறு என்ற நால்வகை முத்தி நிலை. (பிங்.) final states of bliss. four in number, viz. calōkam, cāmipam, cārupam, cāyucciam.

*[பதம் → பதவு → பதவம் → பதவி]*

(தென்மொழி.மே71. பக்.22)

**பதவி இறக்கம்** *patavi-irakkam,* பெ. (n.) ஒருவரை அவர் இருக்கும் பதவியைக் காட்டிலும் அதிகாரத்திலும் மதிப்பிலும் குறைந்த பதவிக்கு மாற்றுதல்; demotion. "தான் வேறொரு துறைக்கு மாற்றப்பட்டதையே பதவி இறக்கமாகக் கருதுகிறார்".

*[பதவி + இறக்கம்]*

**பதவி உயர்வு** *patavi-uyarvu,* பெ. (n.) ஒருவர் இருக்கும் பதவிக்கு அடுத்த மேல்நிலைப் பதவி அளித்தல்; promotion. "தனியார் நிறுவனங்களில் திறமையின் அடிப்படையில் பதவி உயர்வு தரப்படுகிறது". "பதவி உயர்வு என்பது தானாக கிடைக்க வேண்டும்".

*[பதவி + உயர்வு]*

**பதவிசு** *patavisu,* பெ. (n.) அமைதி; peace.

*[பதவு → பதவிது → பதவிசு. ஒ.நோ. நறுவிது → நறுவிசு]*

(தென்மொழி.மே71. பக்.23)

**பதவிநீக்கம்** *patavi-nikkam,* பெ. (n.) **1.** பணிநீக்கம் காண்க; see paṇinikkam. *"பணி செய்பவர்கள் தவறு செய்யும் போது பதவி நீக்கம் செய்யாமல் சிறு தண்டனை கொடுக்க வேண்டும்".* **2.** (குடியாட்சி முறையில்) தேர்ந்தெடுக்கப் பட்ட அரசை அதிகாரம் இழக்கச் செய்தல்; dismissal (of an elected government.) *"அந்த மாநிலத்தில் சிறுபான்மை அரசு பதவி நீக்கம் செய்யப்பட்டுக் குடியரசுத் தலைவர் ஆட்சி செயற்படுத்தப் பட்டுள்ளது."*

*[பதவி + நீக்கம்]*

**பதவிப்பிரமாணம்** *patavi-p-pramāṇam,* பெ. (n.) அமைச்சர், சட்டமன்ற உறுப்பினர், நடுவர் முதலியோர் பதவி ஏற்கும் போது அதிகாரமுறைப்படி எடுத்துக் கொள்ளும் உறுதி மொழி; swearing in (ceremony) *"குடியரசுத் தலைவர் இன்று காலை பத்து மணிக்குத் தலைமை நடுவருக்குப் பதவிப் பிரமாணம் செய்து வைப்பார்".*

*[பதவி + பிரமாணம்]*

பிரமாணம் = skt

**பதவியது** *pataviyatu,* பெ. (n.) **1.** மெல்லியது; that which is soft or smooth. **2.** அமைதியானது; that which is mild or gentle.

*[பதவு → பதவியது]*

**பதவியன்** *pataviyaṉ,* பெ. (n.) அமைதியானவன்; man of mild, amiable disposition. ēw) *'இவன் பதவியன்'* (உ.வ.)

*[பதவி + பதவியன்]*

(தென்மொழி.மே71. பக்.23)

**பதவியேற்றல்** *padaviēṟṟal,* **4.** செ.கு.வி. (v.i.) உறுதிமொழி கூறிப்பதவியை ஒப்புக் கொள்ளுதல்; be sworn in; take office. *"ஆளுநரால் உறுதிமொழி கூறுவிக்கப்பட்டு முதலமைச்சராகப் பதவியேற்றார்."*

*[பதவி + ஏற்றல்]*

**பதவு** *padavu,* பெ. (n.) **1.** *அறுகு* பார்க்க; see *arugu* - bermuda grass. *"பதவு மேயலருந்து மதவுநடை நல்லான்"* (அகநா. 14.) **2.** புல்; grass. *"பதவு காலங்களின் மேய்த்தும்'* (பெரியபு. சண்டே.26) **3.** புற்கட்டு; bundle of grass. **4.** புன்மை; insignificancy, smallness, trifle. *"பதவிய மனிதரேனும்"* (கம்பரா. நிந்தனை. 71) **5.** அமைதி(யாழ்ப்); mildness, gentleness.

*[பதம்' → பதவு]*

**பதவை**[1] *padavai,* பெ. (n.) வழி(திவா.); path *"கணைநுழைந்த வப்பதவை"* (இரகு. திக்குவி. 205)

*[பதவி → பதவை]*

(தென்மொழி.மே71. பக்.23)

**பதவை**[2] *padavai,* பெ. (n.) ***பதவல்*** பார்க்க. (இ.வ.) see *pataval.*

*[பதவு → பதவை]*

**பதற்றம்** *padaṟṟam,* பெ. (n.) முன்பின் திட்ட மின்றிப் பரபரப்புக் கொள்ளுதல். rushness; hurry. *"ஆழ்வாருடைய பதற்றத்தைக் கண்டு"* (ஈடு, 2, 1, 1.)

ம. பதறுக. க. பதறு. தெ. பதரு, பதுரு, பதுருசு மால்ட் பத்ரரெ பத்கரெ.

*[பதறு → பதற்றம்]*

**பதற்றம்**[2] *patarram,* பெ. (n.) 1. செயல் படுவதில் இயல்நிலை இழந்து காட்டும் பரபரப்பு; excitement. ***"தொலைவரியைக் கையில் வாங்கிப் பதற்றத்துடன் பிரித்தார்". "நேர்ச்சி எப்படி நடந்தது என்று பதற்றப்படாமல் சொல்லுங்கள்".*** 2. (கலவரம், போர் முதலியவற்றால் தாக்கமுற்ற பகுதியில்) அடுத்து என்ன நடக்கும் என்று கூற முடியாதபடி அச்சம் நிறைந்திருப்பது; tension. ***"பதற்றம் நிலவும் பகுதியில் போர்ப்படை நிறுத்தப்பட்டுள்ளது". "தலைமையமைச்சர் கொல்லப்பட்ட செய்தி நாடு முழுவதும் பதற்ற நிலையை ஏற்படுத்தியுள்ளது."***

*[பதறு → பதற்றம்]*

**பதறிடல்** *padaridal,* பெ. (n.) 1. விரைதல்; being restless. 2. திடுக்கிடல்; being taken by surprise. (சா.அக.)

**பதறியடித்துக்கொண்டு** *patari-yadittu-k-kotuntu,* வி.அ. *(adf.)* கலக்கத்துடன் **விரைவாக**; in disordorly haste (due to panic.) ***"ஐயோ என்ற கூச்சலைக் கேட்டுப் பதறியடித்துக் கொண்டு படுக்கையிலிருந்து எழுந்தான்".***

**பதறு-தல்** *padaru-,* 5. செ.கு.வி. (v.i.) 1. **கலங்குதல்**; to be fluried, confused, agitated. ***"பதறிக் குலை குலைய"*** (நீதிநெறி. 90) 2. முன்பின் திட்டமின்றிப் பரபரப்புக் கொள்ளுதல்; to be impatient, over hasty; to hurry. ***"அருத்தியிற் பதறிவந்தோம்"*** (அரிச். பு. சூழ்வினை. 22) ***"பதறிய காரியம் சிதறும்"*** (பழ.)

*[பதற்றம் → பதறு-,]*

**பதறை** *patarai,* பெ. (n.) ***வெண்டோன்றி*** பார்க்க (மலை.); malabar glory lily. see *vendōnri.*

**பதன்** *patan,* பெ. (n.) பக்குவம்; maturity, the right age, stage or degree.

*[பதம் → பதன்]*

**பதன்படு-தல்** *patanpadu-,* 3. செ.கு.வி. (v.i.) 1. பக்குவமாதல்; (உ.வ.) to mature. 2. பதமையாதல் (உ.வ.); softness, tenderness.

*[பதன் + படு-,]*

**பதன்பதனெனல்** *patan-patan-enal,* பெ. (n.) பதண்பதணெனல் பார்க்க, *'இவணெஞ்சு பதன்பத னென்றிட'* (திருப்பு. 11). see *patanpatanenal.*

*[பதன் + பதன் + எனல்]*

**பதனபாண்டம்** *padanapāndam,* பெ. (n.) பக்குவமாக விழிப்போடு பாதுகாக்க வேண்டிய ஏனங்கள்; pots, bottles or articles sorving to keep medicine safely. (சா.அக.)

(பதனபாண்டங்கள்: 1. கண்ணாடிக்குப்பி, 2. சீனக்களிமண் பாண்டம். 3. மட்கலம். 4. மண்சாடி. 5. மருப்புச்சிமிழ். 6. மாட்டுக் கொம்பு. 7. தேங்காய்க்குடுக்கை 8. சுரைக் குடுக்கை முதலியன.)

**பதனம்**[1] *patanam,* பெ. (n.) 1. மிகுவிழிப்பு; care, cause, attention, circumspection. *"பட்டணம் பதனம்"* (இராமநா. உயுத். 23) 2. பாதுகாப்பு; safety, security, protection. *"பதனகவசத்துடன்"* (ஞானவா. சுக்கி. 19) 3. பார்க்க, பதணம். ***"பதனமுமதிலும்"*** (கம்பரா. முதற்போர். 32.) see patanam

*[பதம் → பதன் → பதனம்]*

(தென்மொழி.மே.71.)

**பதனம்²** *patanam*, பெ. (n.) 1. இறக்கம். (யாழ்.அக.); descending, falling down. 2. தாழ்மை; (சங்.அக.) humility. 3. அமைதி; mildness, gentleness. *"பதனமானவன்"* 4. பிறப்போரைக்கு ஆறு எட்டு பன்னிரண்டாமி டங்கள்; sixth, eighth and twelfth houses from the ascendant.

*[பதி → பதனம்]*

(செல்வி.75, ஆடி.பக்.601.)

**பதனழி—தல்** *patan-ali-*, 2. செ.கு.வி. (v.i.) பக்குவநிலை தவறுதல்; to become over-ripe, as fruits.

மறுவ. ஊழ்த்தல்.

*[பதன் + அழி–,]*

**பதனழிவு** *patan-alivu*, பெ. (n.) *பதக்கேடு* பார்க்க, (திவா.) see *pata-k-kēdu*.

மறுவ. ஊழ்ப்பு

*[பதன் + அழிவு]*

**பதனார்** *padanār*, பெ. (n.) முசுமுசுக்கை என்னும் மூலிகை; bristly or rough bryony. (சா.அக.)

**பதனாறுவி** *padanāruvi*, பெ. (n.) அழுகண்ணி; indian weeping plant. (சா.அக.)

**பதனி** *patani*, பெ. (n.) *பதநீர்* பார்க்க; see *patanīr*.

*[பதநீர் → பதனி]*

**பதனிட்ட தோல்** *patan-itta-tōl*, பெ. (n.) செப்பனிடப்பட்ட தோல்; tanned leather. (இ.வ.)

*[பதன் + இட்ட + தோல்]*

**பதனிடு—தல்** *patan-idu*, 4. செ.குன்றாவி. (v.t) தோல் முதலியவற்றை மெதுவாக்குதல்; to tan; to temper, season, soften, mollify. (w.)

மறுவ. பக்குவமாக்கல்

*[பதன் + இடு–,]*

**பதாகம்** *patākam*, பெ. (n.) *1. பதாகை*, பார்க்க 1. *'உரகபதாகன்'*. (w.) see, *patakai*, 1. ஆடலுக்குரிய ஆண்கைகளுள் ஒன்று; a hand-pose. (சிலப். பக். 92)

*[பதாகை → பதாகம்]*

**பதாகன்** *patākan*, பெ. (n.) பதாகை யுடையோன்; one who have possess a banner, flag, ensign.

*[பதாகம் → பதாகன்]*

**பதாகை** *patākai*, பெ. (n.) 1. விருதுக் கொடி. (சூடா.); ensign, banner, standard. 2. பெருங்கொடி; large flag. *"பதாகை... அருவியி னுடங்க"* (மதுரைக். 373) (பிங்.) 3. நான்கு விரலுந் தம்முள் ஒட்டி நிமிரப் பெருவிரலைக் தூக்கி நிறுத்தும் இணையாவினைக்கை வகை (சிலப். 3, 18.) (natyā) gesture with one hand in which the thumb is bent while the other fingers are held close and upright 4. ஐந்து விரல்களையும் நெருக்கி நேரே நீட்டும் ஆடற்கை வகை. (பரத. பாவ. 20) (natya) gesture with one hand in which the fingers are stretehed directly forward

*[படாகை → பதாகை]*

மு.தா.125.

**பதாகைசோத்திகம்** *patākai-cōttikam*, பெ. (n.) *பதாகை*, 4. பார்க்க, (பரத. பாவ. 63); see *patakai* 4.

*[பதாகை + சோத்திகம்]*

சோத்திகம் = skt.

**பதாகை முத்திரை** *padāgai-muttirai,* பெ. (n.) ஆடற்கலையின் வழிபாட்டுமுறையின் கை முத்திரை வகை (செந். x 426; a kind of



hand-pose in worship.

*[பதாகை + முத்திரை]*

**பதாசி** *padāsi,* பெ. (n.) சாம்பற்சாரம்; potash. (சா.அக.)

**பதாதி¹** *padādi,* பெ. (n.) காலாட்படை (பிங்.); infantry.

*[பாதம் + பதம்+ ஆதி]*

**பதாதி²** *padādi,* பெ. (n.) ஒரு யானையும், ஒரு தேரும், மூன்று பரியும், ஐந்து காலாட்களும் கொண்ட சேனைத் தொகுதி (சூடா.); smallest division of an army, consisting of an chariot, one elephant, three horses and five infantry.

*[பதாதி—காலாள் முதலிய நாற்படை—சிறுபடை]*

*[பாதம் → பதம்+ ஆதி]*

**பதாதியானவன்** *padādi-y-āṉavaṉ,* பெ. (n.) அமைதியற்றவன் (w); restless, uneasy, anxious person.

*[பாதம் + பதம் + ஆதி + ஆனவன்]*

**பதாயுதம்** *padāyudam,* பெ. (n.) பதவாயுதம் பார்க்க; see *patavāyatam.* *"பதாயுத மொக்கு மெனும்படி"* (திருப்பு.307)

*[பதம் + ஆயுதம்]*

ஆயுதம் = Skt.

**பதார்த்தக் கூட்டுமுறை** *padārtta-k-kūṭṭumuṟai,* பெ. (n.) மருந்துப்பொருள்களைச் சேர்க்கும் வகை; method of combining various drugs to prepare medicines. (சா.அக)

**பதார்த்த குணசிந்தாமணி** *padārttaguṇa-sindāmaṇi,* பெ. (n.) தேரையர் இயற்றியதாகக் கூறப்படுவதும் பல பண்டங்களின் தன்மையைக் கூறுவதுமான ஒரு மருத்துவ நூல்; a work on materia medica, ascribed to Tēriaiyar.

**பதார்த்த சாரநூல்** *padārtta-sāranūl,* பெ. (n.) மருந்துகளும் மருத்துவமுறையும், நோய்நீக்கு முறையும் பற்றி விளக்கும் மருத்துவநூல்; a branch of medicine dealing with the application and operation of remedies, art of healing and scientific account of the treatment of diseases (சா.அக.)

**பதி¹—தல்** *pati-,* 4. செ.கு.வி. (v.i.) 1. முத்திரை எழுத்தச்சு முதலியன அழுந்துதல்; to be inprinted, impressed, marked, stamped, engraven, indented. 2. தாழ்ந்திருத்தல்; to be low-lying, as land, to be depressed, sunk, hollow, worn away. *பதிந்த நிலம்* 3. ஆழ்தல்; to sink in, as the foot or a wheel in mud, to enter, penetrate, as into a soft body. 4. ஊன்றுதல்; to be absorbed, engrossed involved, as the mind in any object. *மனம் பாடத்திற் பதிகிறதா?* 5. தங்குதல்; to perch, roost, to occupy, settle, abide. *"பதிசென்று*

7. கோள் முதலியன இறங்குதல்; to decline after meridional transits to be near setting, as a heavenly body, to descend, alight, as a bird.(w.) 8. விலை தணிதல்; to be low, as price. விலையைப் பதியக் கேட்டான் (உ.வ) 9. அதிகாரம் பெறுதல்; to be invested with power, authority, (w.) 10. அமைதியாதல்; to be mild, gentle or tractable, to become submissive, modest or humble. *பள்ளிக் கூடத்தில் பையன் பதிந்திருக்கிறான்* 11. அச்சத்தால் பின்னிடுதல் அல்லது இணங்குதல்; to quail, flinch.

ம. பதி.

**பதி²–தல்** *pati-,* 2. செ.குன்றாவி. (v.t.) 1. பதிவேட்டில் எழுதுதல்; to register, enter in writing. (கொ.வ.) 2. மணி முதலியன இழைத்தல்; to fix, insert, ingraft, inlay, as a gem. 3. பாவுதல்; to pave, as floor. *"தளத்துக்குக் கல்பதியப் போகிறார்கள்"*. 4.பெயர்ப்பட்டியில்சேர்த்தல்; to take on the roll.

*[பதி → பதி–,]*

**பதி–த்தல்** *pati-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. அழுத்துதல்; to imprint, impress, stamp, engrave, as in mind, to plunge. *"பத்திக் கடலுட் பதித்த பரஞ்சோதி"* (திருவாச.11,12) 2. மணி முதலியன இழைத்தல்; to infix, insert, ingraft, inlay, as gems, to enchase. 3. குழியாக்குதல் (வின்.); to excavate, sink 4. தாழ்த்துதல்; to lower height, price, etc, to set lower, insert deeper. 5. பதியம் போடுதல்; to plant a shoot, runner or creeper (இ.வ.) 6. எழுதுதல்; to enter in a register. (கொ.வ.) 7. அதிகாரங் கொடுத்தல்; to invest with power, authority or prerogative. (w.)

*[பதி–(த.வி) → பதித்தல்(பி.வி)]*

**பதி³** *pati,* பெ. (n.) 1. பதிகை; penetration, transfixion, thrust. *"நுண்ணிலைவேல் பதிகொண்டு"* (சீவக.1186) 2. நாற்று; (இ.வ.) sapling for transplantation 3. பதியம்¹ பார்க்க; (இ.வ.) see patiyam¹ 4. உறைவிடம்(திவா.); abode, residence. *"பதியிற் கலங்கிய மீன்"* (குறள்.1116) 5. வீடு (திவா.); home, house. 6. கோயில் (சங்.அக.); temple. 7. குறி சொல்லுமிடம்; an oracular shrine. *"பதியிருந்த பதியெல்லாம் பதிவாகச் சென்றேன்"* (நாஞ்.மருமக்.மா) 8. ஊர்; town, city, village. *"பதியெழுவறியாப் பழங்குடி"* (சிலப்.1.15) 9. நிலம் (தைலவ.தைல.); the earth. 10. குதிரை (அக.நி.); horse. 11. பதிவிளக்கு; lamp fixed on a pot while exorcizing devils. 12. நாள்; day, time.

**பதிக்கினி** *patikkiṉi,* பெ. (n.) தற்கொண்டானைக் கொன்றவள் (வின்); one who murders her husband.

**பதிகம்¹** *patigam,* பெ. (n.) *பதியம்¹* பார்க்க; see *patiyam.* *"பதிகம் பரிக்குங்குழல்"* (மறைசை.11)

*[பதி → பதியம் → பதிகம்]*

**பதிகம்²** *patigam,* பெ. (n.) தெய்வத்தைப் பற்றிப் பெரும்பாலும் பத்துச் செய்யுளாற் பாடப்படும் சிற்றிலக்கியம்; poem in praise of a deity consisting generally of ten stanzas.

*[பல் → பது → பத்து → பது → பதிகம்]*

(பதிகம் சிற்றிலக்கிய வகையைச் சேர்ந்தது. நான்கடி முதல் எட்டடி வரையுள்ள வெண்பாவை முன்வைத்து ஆசிரியத்துறை, ஆசிரிய மண்டிலம்(விருத்தம்) ஆகிய செய்யுட்களால் பத்துப் பாட்டுக்களாலாயினும்

இருபது பாட்டுக்களாலாயினும் பாடுவது. இந்த இலக்கணம் பன்னிரு பாட்டியலில் மட்டும் (III) உள்ளது. பிற்காலத்தில் பாடப் பெற்றுள்ள பதிகங்கள் ஆசிரிய மண்டிலப் பாக்களால் பத்துப் பாடல்களால் அமைந்துள்ளன என்பது எண்ணத்தக்கது)

**பதிகம்³** *patigam,* பெ. (n.) பாயிரம், (நன்.1); preface, introduction, foreword.

*[பல் → பது → பத்து → பது → பதிகம்]*

முகவுரைக்கும் பதிகம் என்ற பெயருண்டு 'முகவுரை, பதிகம், அணிந்துரை, நூன்முகம், புறவுரை, தந்துரை புனைந்துரை பாயிரம்' (நன். பொது.1.) இந்நூற்பாவிற்கு, 'ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பல்வகைப் பொருளையும் தொகுத்துச் சொல்வது' என்று உரை கூறுவர்.

*"ஆக்கியோன் பெயரே வழியே எல்லை*
*நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே*
*கேட்போர் பயனோடாய் எண் பொருளும்*
*வாய்ப்பக் காட்டல் பாயிரத்தியல்பே"*
(நன்.47)

*"காலங் களனே காரணம் என்றிம் மூவகை*
*யேற்றி மொழிநரும் உளரே"*
(நன்.48)

தொல்காப்பியம், நன்னூல், சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியவற்றின் சிறப்புப்பாயிரம் பெரும்பாலும் இம்முறையைத் தழுவி அமைந்தவையே.

மா.வி.அகராதி, ப்ரதி+அக என்பதன் திரிபென்று 'ப்ரதீக' என்னும் சொல்லைக் காட்டி, நோக்கியது, நோக்கு, தோற்றம், முகம், முற்பகுதி, செய்யுளின் முற்பகுதி, முதற்சொல் என்று பல்வேறு மேற்கோள்களை இடர்ப்பட்டுப் பொருத்தி, வேறுபட்ட கருத்துகளைத் தொடர்பு படுத்தியிருப்பது, அதன் செயற்கைத் தன்மையைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றது.
(வ.மொ.வ.பக்.30)

"பதிகம் என்பது பல்வகைப்பொருளும்"
தொகுதியாகச் சொல்வது தானே–திவாகரம்

**பதிகம்⁴** *patigam,* பெ. (n.) 1. பாசி; cryptoganic plants of small size floating on water such as algae, moss etc. 2. நீர்ப்பூடு; aquatic plants. (சா.அக.)

**பதிகரம்** *patigaram,* பெ. (n.) நீர்ப்பாசி; water moss, duckweed. (சா.அக.)

**பதிகன்¹** *patigaṉ,* பெ. (n.) வழிப்போக்கன்; way farer. "*அந்நாளி லொருவணிகன் பதிகனாகி*" (பெரியபு.திருஞான.473)

*[பதி → பதிகன்]*

(காலால் நடந்து செல்பவன்)

**பதிகன்²** *patigaṉ,* பெ. (n.) காலாள்; foot soldier.

*[பதி → பாதம் → பதிகன்]*

**பதிச்சம்** *paticcam,* பெ. (n.) வாலுளுவை (மலை.); spindle tree.

*[பதி → பதிச்சம்]*

**பதிச்சியம்** *paticciyam,* பெ. (n.) கருங்குவளை; black indian water lily.

**பதிசித்திரம்** *pati-cittiram,* பெ. (n.) கோபுரப் பதுமை (கோயிலொ.122); images adorning a temple tower.

*[பதி + சித்திரம்]*

**பதித்திரி** *patittiri,* பெ. (n.) உலைத்துருத்தி (சது.); smith's bellows.

*[பதி → பதித்திரி]*

**பதித்தெழுது–தல்** *patitteḻudu*, 5. செ.குன்றாவி. (v.t.) 1. அழுந்த எழுதுதல்; to write forming a deep impresion. 2. மேலே இடம் விட்டுக் கீழேயெழுதுதல்; to write in the lower half of a page leaving space at the top.

*[பதித்து + எழுது–,]*

**பதிநாராயணம்** *patinārāyaṇam*, பெ. (n.) வாத நாராயணம் என்னும் மரவகை; a kind of tree. (சா.அக.)

**பதிப்பகம்** *patipagam*, பெ. (n.) பொத்தகம் முதலியவற்றை அச்சிட்டு வெளியிடும் நிறுவனம்; publishing house.

*[பதிப்பு → பதிப்பகம்]*

**பதிப்படை** *pati-p-padai*, பெ. (n.) பதிபடை பார்க்க; see *paṭipaḍai*. "*பெரிய திருவடியைப் பதிப்படையாக வைத்து வந்து*" (திவ். நெடுஞ்.23, வ்யா. பக்.213)

*[பதி + படை]*

**பதிப்பாசிரியர்** *patippāsiriyar*, பெ. (n.) பிறரின் கட்டுரைகளையோ நூலையோ தொகுத்து அல்லது முறைப்படுத்தித் தரும் பொறுப்பை ஏற்பவர்; editor (of a work). "*தமிழில் பழைய நூல்களைப் பதிப்பாசிரியர்கள் வெளியிட்டுள்ளனர்*".

*[பதிப்பு + ஆசிரியர்]*

**பதிப்பாளர்** *patippāḷar*, பெ. (n.) பொத்தகம் முதலியவற்றை வெளியிடும் பணியைச் செய்பவர்; publisher.

*[பதிப்பு → பதிப்பாளர்]*

**பதிப்பி–த்தல்** *patippi*, 4. செ.குன்றா.வி. (v.t.) பொத்தகம் முதலியவற்றை ஒழுங்குபடுத்தி அச்சிட்டு வெளியிடுதல்; edit (a book, etc.) publish. "*இந்த நூலை முதலில் பதிப்பித்தவர் பெயர் இந்தப் பதிப்பில் விடப்பட்டிருக்கிறது*". "*நூற்றுக்கு மேற்பட்ட நூல்களைப் பதிப்பித்த நிறுவனம் இது*".

*[பதிப்பு → பதிப்பி]*

**பதிப்பு** *patippu*, பெ. (n.) 1. பதிய அழுத்துகை; imprinting, indentation. 2. நூல் அச்சிடுகை; editing, printing, as a work. 3. அச்சிடப்பட்ட நூல்; that which is edited.

*[பதி → பதிப்பு]*

**பதிப்புரிமை** *patippurimai*, பெ. (n.) பொத்தகம், திரைப்படம் முதலியவற்றின் பயன்பாடு, வெளியீடு முதலியவற்றை உருவாக்கியவர் ஒப்புதல் இல்லாமல் மற்றொருவர் பயன்படுத்த முடியாத வகையில் அளிக்கப்படும் காப்புரிமை; copyright.

*[பதிப்பு + உரிமை]*

**பதிப்பெயர்–த்தல்** *pati-p-peyar-*, 3. செ.குன்றாவி (v.t.) விட்டு நீக்குதல்; to relinuish. "*உண்ணா நோன்போ டுயிர்ப்பதிப் பெயர்ப்புழி*" (மணிமே.14,95)

*[பதி + பெயர்]*

**பதிபடை** *pati-paḍai*, பெ. (n.) மறைந்து நிற்கும் போர்ப்படை; army lying in ambush. (w.)

*[பதி + படை]*

**பதிபந்தம்** *patibandam*, பெ. (n.) தடை; obstacle. "*வர்த்தமானப் பதிபந்தங் காண்*" (வேதா.சூ.141)

*[பதி + பந்தம்]*

**பதிபாதமூலப்பட்டுடையார்** *pati-pādamūla-p-paṭṭuḍaiyar,* பெ.(n.) கோயிற் பணியாளர் வகை (S.I.iii,III); a class of temple servants.

*[பதி + பாதம் + மூலம் + பட்டு + உடையார்]*

**பதிபோடு[1]–தல்** *pati-pōḍu,* 19. செ.குன்றாவி.(v.t.) 1. நாற்று நடுதல்; to transplant 2. பதியம் போடுதல்; to plant, as slips, to insert, as grafts. (கொ.வ.)

*[பதி + போடு–,]*

**பதிபோடு[2]–தல்** *pati-pōḍu,* 20. செ.கு.வி. (v.i.) பதுங்குதல்; to crouch. *புலி பதிபோடுகின்றது* (இ.வ.)

*[பதி + போடு–,]*

**பதிமினுக்கி** *pati-miṉukki,* பெ. (n.) துடைப்பம் (தைலவ.தைல.); broom, as cleaning a place.

*[பதி + மினுக்கி]*



**பதியஞ்சர்க்கரை** *patiyañ-carkkarai,* பெ. (n.) ஒட்டும் பதத்திலுள்ள சர்க்கரை (நாஞ்.); molasses in a viscous condition.

*[பதியம் + சருக்கரை → சர்க்கரை,]*

**பதியம்[1]** *patiyam,* பெ. (n.) 1. நாற்று; sapling or cluster of saplings planted, layer or runner in serted. 2. நாற்றுமுடியை இரண்டொரு நாட்குச்சேற்றில் பதித்து வைக்கை; temporary planting of a cluster or saplings in mud. 3. ஊன்றிநடுஞ்செடி, கொடி, கிளை முதலியன; slip, shoot, graft. 4. இலைப்பாசி; species of duckweed. "*செறியணிப் பதியத்திடை வளரிளஞ் சேல்கள்*" (இரகு.நாட்டுப்.7.)

*[பதி → பதியம்]*

**பதியம்[2]** *patiyam,* பெ. (n.) 1. பாடல்; stanza. "*பன்னுதிருப்பாவை பல்பதியம்*" (திவ்.திருப்பா. தனியன்) 2. பார்க்க, *பதிகம்2;* (Insc.) see *patikam, 2.*

*[பதி → பதியம்]*

**பதியம் போடு–தல்** *patiyam-pōḍu,* செ.கு.வி. (v.i) மல்லிகை, பனிநீர்ப்பூ அல்லது முள்ளலரி முதலிய செடியின் கிளையை வளைத்து மண்ணில் புதைத்து அந்தக் கிளை,வேர்விட்ட பின் முதல் செடியிலிருந்து வெட்டி விடுதல்; graft a plant.

*[பதியம் + போடு–,]*

**பதியமிடு–தல்** *patiym-iḍu-,* 20. செ.கு.வி. (v.i.) *பதியம்போ–,* பார்க்க; see *pati-yam-pōḍu-*

*[பதியம் + இடு–,]*

**பதியரம்** *patiyaram,* பெ. (n.) சத்திசாரம்; alkaline salt. (சா.அக.)

**பதியரி** *pati-y-ari,* பெ. (n.) நாற்று (அக.நி.); saplings for transplanting.

*[பதி + அரி]*

**பதியன்** *patiyaṉ*, பெ. (n.) பதியம் போடுவதால் தனியாக முளைத்து வரும் செடி; graft. "*பனிநீர்ப்பூ அல்லது முள்ளலரிப் பதியன்*".

*[பதி → பதியம் → பதியன்]*

**பதியார்** *patiyār*, பெ. (n.) கோயிற்பணியாளர்; (S.I.I V 295) temple servant.

*[பதி → பதியார்]*

**பதியெழவு** *pati-y-eḻavu*, பெ. (n.) வலசை போகை; flight from home from fear of the king or a hostile army. "*பதியெழு வறியாப் பழங்குடி*" (மலைபடு.479). *பதியெழுவறியாப் பழங்குடி (சிலப். 1:15)*

*[பதி + எழு → எழவு]*

மறுவ. பதியெழுவு

**பதியெழு-தல்** *pati-y-eḻu*, 2. செ.குவி. (v.i.) வலசை போதல்; to flee from home from fear of the king or a hostile away. "*பதியெழு வறியாப் பழங்குடி*" (சிலப்.1.15).

*[பதி + எழு-,]*

**பதிரன்** *patiraṉ*, பெ. (n.) செவிடன் (யாழ்.அக.); deaf persion.

*[பதி → பதிரன்]*

**பதிவாகமூடு-தல்** *pativāgamuḍu-*, 1. செ.கு.வி. (v.i.) வெளிக்காற்றுப் புகாதபடியும் உள்ளாவி வெளியே போகாத படியும் பொருத்தமாக மூடுதல்; covering with a vessel closely so that air may not enter into vapour cannot escape out through the opening between the lids

*[பதிவாக + மூடு-,]*

**பதிவாளர்** *pativāḷār*, பெ. (n.) 1. சில அரசுத் துறைகளில் குறிப்பிட்ட விளத்தங்களை அதிகார முறைப்படி ஆவணங்களில் பதிவு செய்வதற்கு உரிய பொறுப்பில் உள்ள அதிகாரி; official responsible for registering and maintaining records cas relating to land records, births and deaths, etc.); registrar "*பிறப்பு இறப்புப் பதிவாளர் அலுவலகம்*" 2. (உயர்கல்வி நிறுவனங்களில்) கல்விப்பணி அல்லாத ஆள்வினைப் பொறுப்புகளுக்கு உரிய உயர் அதிகாரி; registrar (of a university, etc.) *பல்கலைக்கழகப் பதிவாளர்.*

*[பதிவு → பதிவாளர்]*

**பதிவிடம்** *pativiḍam*, பெ. (n.) ஒளித்திருக்கு மிடம்; ambush, hiding place.

*[பதிவு + இடம்]*

**பதிவிடை** *pativiḍai*, பெ. (n.) *பதிவிடம்* பார்க்க; (w.) see *pativiḍam.*

*[பதி + விடை]*

**பதிவிளக்கு**¹ *pati-viḷakku*, பெ. (n.) பேயோட்டுதற்காகக் குடத்தின்மேற்பதிய வைத்த விளக்கு; lamp fixed on a pot while exorcizing devils. (w.)

*[பதி + விளக்கு]*

**பதிவிளக்கு**² *pativiḷakku*, பெ. (n.) சுடர் மருந்தெண்ணெய் அணியம் செய்வதற்கு பயன்படுத்தும் விளக்கு; a lamp used in the preparation of medicated oils. (சா.அக.)

**பதிவு** *pativu,* பெ. (n.) **1.** அழுந்துகை; impression, identation. **2.** பள்ளம்; lowness of a surrface; depression. *'நிலம் பதிவாயிருக் கிறது'.* **3.** தோன்றுவதற்கு முன்னுள்ள திங்களது நிலை; (w.) situation of the moon before its rise. **4.** வான்மீன்களின் சாய்வு; (w.) declination of a heavenly body. **5.** பதுக்கம்; stooping, crouching, lurking, as a thief or a beast ready to spring on its prey; ambush. **6.** நிலைவரம்; permanence. *'அந்த ஊரில் அவன் பதிவாயிருக்கிறான்'* **7.** தீர்மானிக் கப்பட்ட செலவு; allotment, as in a budjet. *'இந்தக் கோயிலில் சங்கு ஊதுவதற்குப் பதிவு ஏற்படவில்லை'* (நாஞ்.) **8.** வழக்கம்; custom, habit. **9.** கணக்குப் பதிகை; registering, entering, as in account. **10.** பதியப்பட்டது; registry, entry. **11.** மனம் ஊன்றுகை; engrossment, absorption in an object or pursuit. **12.** அமைதி; submission, obedience, humility. *'பதிவாய் நடந்து கொள்'* **13.** விலைத் தணிவு; lowness of price (w.) **14.** பதியம்; sapling, layer of a plant.

*[பதி¹ → பதிவு]*

**பதிவு²** *pativu,* பெ. (n.) **1.** குனிவு; bent posture. **2.** சாய்வு; slanting position. (சா.அக.)

**பதிவு அஞ்சல்** *pativu-añjal,* பெ. (n.) முகவரியில் உள்ளவருக்குச் சேர்ப்பிக்கப்படும் என்பதை உறுதி செய்வதற்காகக் கூடுதல் கட்டணம் செலுத்திச் சான்று பெற்றுக் அனுப்பும் அஞ்சல்; registered post. *"சில குறிப்பிட்ட கடிதங்களையும் அல்லது இன்றியமையாத வேண்டுகோட் படிவங்களை பதிவு அஞ்சல் மூலமாக அனுப்புவார்கள்".*

*[பதிவு + அஞ்சல்]*

**பதிவுகாரன்** *pativu-kāran,* பெ. (n.) வாடிக்கைக் காரன்; (இ.வ.) customer.

*[பதிவு + காரன்]*

**பதிவுநாடா** *pativu-nāḍā,* பெ. (n.) ஒலிப்பதிவு செய்வதற்கும் ஒளிப்பதிவு செய்வதற்கும் பயன்படுத்தும் வேதிப் பொருள் பூசப்பட்ட மெல்லிய இழை; magnetic tape for audio and video recording. *"பாடல்கள் கேட்பதற்கும், திரைப்படங்கள் பார்ப்பதற்கும் இந்த பதிவு இழை இன்றியமையாததாக கருதப்படுகிறது."*

*[பதிவு + நாடா]*

**பதிவேடு** *pati-vēḍu,* பெ. (n.) அலுவலகங்களில் நடவடிக்கைகளை முறையாக எழுதிவைக்கும் சுவடி; register (as in an office) *"வருகைப் பதிவேட்டைக் காணவில்லை".*

*[பதிவு + ஏடு]*

**பதிவுவை-த்தல்** *pativu-vai-,* 3. செ.குன்றாவி. (v.t.) **1.** கணக்கிற் பதிதல்; to enter in an account. **2.** வாடிக்கை வைத்தல்; to become a customer of a shop.

*[பதிவு + வை-,]*

**பதிவை-த்தல்** *pati-vai-,* **4.** செ.குன்றாவி. (v.t.) பார்க்க, *பதிபோடு-,;* see *pati-pōḍu-,*

*[பதி² + வை-,]*

**பதிற்றந்தாதி** *patirrandāti,* பெ. (n.) வெண்பா அல்லது கலித்துறையில் பத்துப் பாடலால் ஈறு தொடங்கி(அந்தாதி)த் தொடையாகப் பாடப்படும் சிற்றிலக்கியம். (இலக்.வி. 841); a poem of 10 stanzas in veṇbā or kalitturai verse in andāti-t-toḍai.

*[பதிற்று + அந்தாதி]*

**பதிற்றுப்பத்தந்தாதி** *patiṟṟu-p-pattan-dāti,* பெ. (n.) பெரும்பாலும் பத்துப்பாடற்கு ஒரு சந்தமாகப் பத்துச் சந்த வேறுபாடுடைய 100 செய்யுளில் ஈறு தொடங்கியாகப் பாடப்படும் சிற்றிலக்கிய வகை; a poem of 100 stanzas in andāti-t-todai, each group of 10 being composed in a different metre. '*மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி படித்திருக்கிறாயா?*'.

*[பத்து → பதிற்று + பத்து + அந்தாதி]*

அந்தாதி = Skt.

'ஈறுதொடங்கி' என்பது முற்றுந்தமிழாம்

**பதிற்றுப்பத்து** *patiṟṟu-p-pattu,* பெ. (n.) 1. நூறு; ten times ten. 2. எட்டுத்தொகையுள் ஒன்றானதும் சேரர் பதின்மரைப் பற்றிப் புலவர் பதின்மரால் பாடப்பெற்றதும் ஒரொருவர்க்குப் பத்துப்பாட்டாக நூறுபாடல்களால் அமைந்ததுமான நூல்; a collection of 10 decades on 10 cēra kings, composed by ten poets, one of eṭṭu-t-togai, q.v. "*ஒத்த பதிற்றுப் பத்தோங்கு பரிபாடல்... இத்திறத்த எட்டுத்தொகை*" (தனிப்பா.)

*[பதிற்று + பத்து]*

பாடியோர் – பாடப்பட்டோர்

2. குமட்டூர்க் கண்ணனார்– இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்

3. பாலைக்கௌதமனார்– பல்யானைச் செல்கெழுகுட்டுவன்

4. காப்பியாற்றுக்காப்பியனார்– களங்காய்ச் சென்னிநார்முடிச்சேரல்

5. பரணர் – கடல்பிறக்கோட்டியசெங்குட்டுவன்

6. காக்கைப்பாடினி– ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

7. கபிலர் – செல்வக்கடுங்கோவாழியாதன்

8. அரிசில்கிழார் – தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை

9. பெருங்குன்றூர்கிழார் – குடக்கோ இளஞ்சேரல்இரும்பொறை.

**பதின்மர்** *patiṉmar,* பெ. (n.) 1. பத்துப்பேர்; ten persons. "*குறுநிலக் குடிகள் பதின்மரும்*" (நன். 272. மயிலை) 2. திருமாலடியாராகிய பத்து ஆழ்வார்கள்; the ten vaisṇava saints "*அழகர் பதின்ம ரருந்தமிழ் கொண்டார்*" (அழகர் கலம். அவையடக்) 3. திருக்குறள் உரையாசிரியர்கள் மல்லர்பரிப்பெருமாள் என்பவே வள்ளுவர் நூற்செல்கையுரை கண்டறிவர் தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சுருதி பரிமேலழகர் திருமலையர்.

க. பதிம்பர்.

*[பத்து → பதின் → பதின்மர்]*

**பதினாயிரம்** *patiṉ-āyiram,* பெ. (n.) பத்து ஆயிரங் கொண்ட எண்; ten thousand.

*[பதின் + ஆயிரம்]*

**பதினாலுவேகமறி–த்தல்** *patiṉāluvēgamaṟi-,* 4. செ.கு.வி. (v.i.) உடம்பில் இயற்கையாகவே ஏற்பட்டுள்ளபசி, வேட்கை, தும்மல், இருமல் விக்கல், கொட்டாவி, ஏப்பம், காற்று, சிரிப்பு, அழுகை, துன்பம், மகிழ்ச்சி முதலியவற்றை அடக்குதல்; the fourteen involuntary actions-urgings-naturally attributed to the human body. viz, hunger, thirst, defection, urine, sneeze, cough, hiccup, yawning, belcluing, wind, (passing out through anus) sleep vomitting, tears and semen.

**பதினி** *patiṉi,* பெ. (n.) பதநீர்; palmira juice.

*[பதநீர் + பதனி]*

மறுவ. பனஞ்சாறு, பதனி

**பதினெட்டாம்படி** *patiṉ-eṭṭām-paḍi,* பெ. (n.) 1. அழகர்கோயில் முதலியவற்றிற் சூளறவு செய்வதற்கு இடமாயுள்ளதும், பதினெட்டுப் படிகளுடையதுமான கட்டு; a flight of eighteen

steps in certain sacred places like-alagar-kōyil, where people take oath. 2.உரிய காலத்திலன்றிக் காலங் கடந்து பூப்படையும் பெண்; girl who attains puberty long after the normal age.

*[பதினெட்டாம் + படி]*

**பதினெட்டாம்படிக் கறுப்பன்** *patin-eṭṭām badi-k-karuppan,* பெ. (n.) பதினெட்டாம் படிக்கட்டில் வாழுஞ் சிறுதெய்வம்; a demigod residing in patineṭṭāmpaḍi.

*[பதினெட்டாம் படி + கறுப்பன்]*

**பதினெட்டாம்படியான்** *patin-eṭṭāmpaḍiyān,* பெ. (n.) *பதினெட்டாம்படிக் கறுப்பன்* பார்க்க; see *patineṭṭāmbadi-k-karuppan.*

*[பதினெட்டாம் + படியான்]*

**பதினெட்டாம் பெருக்கு** *padin-eṭṭam-perukku,* பெ. (n.) 1. கடகமாதம் பதினெட்டாம் பக்கலில் நிகழும் காவேரிப் பெருக்கு; high floods of the cauvery on the 18th of āḍi. 2. கடகமாதத்துப் பதினெட்டாநாளில் கொண்டாடும் விழா; festival observed on the 18th āḍi.

*[பத்து → பதின் + எட்டு → எட்டாம் + பெருக்கு]*

**பதினெட்டு** *patin-eṭṭu,* பெ. (n.) 1. பத்துக்கு மேல் எட்டுக் கொண்ட எண்; eighteen. 2. பார்க்க, *பதினெட்டாம் பெருக்கு* (இவ.) see *patinettām perukku.*

*[பத்து → பதின் + எட்டு]*

**பதினெட்டுவாத்தியம்** *patin-eṭṭu-vāttiyam,* பெ. (n.) பதினெட்டுவகையான இசைக் கருவிகள்; the eighteen kinds of musical instruments.

*[பதினெட்டு + வாச்சியம் → வாத்தியம்]*

**பதினெண்கண்ணன்** *patin-en-kaṇṇan,* பெ. (n.) முருகன் (நாமதீப. 32); god muruga, as having eighteen eyes. (பதினெண் கண்களையுடையவன்.)

*[பதின் + எண் + கண்ணன்]*

**பதினெண்கணம்** *patin-en-kaṇam,* பெ. (n.) கணம்4, 5. பார்க்க (பிங்.) (புறநா. 1, உரை.); the 18 classes of celestial hosts.

*[பதின் + எண் + கணம்]*

**பதினெண்கீழ்க்கணக்கு** *patin-eṇ-kīḻ-k-kaṇakku,* பெ. (n.) அடிநிமிர்வில்லாது பெரும்பான்மை வெண்பாவான் அமைந்து, அறம், பொருள், இன்பங்களுள் ஒன்றையேனும் பலவற்றையேனும் கூறும் நாலடியார், நான்மணிக்கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணையைம்பது, ஐந்திணை யெழுபது, திணை மொழியைம்பது, திணைமாலை நூற்றைம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், முதுமொழிக் காஞ்சி, ஏலாதி, கைந்நிலை என்னும் பதினெட்டு நூல்கள்; the group of 18 short classics, mostly in veṇbā metre, on one or more of the themes aṟam, porul, iṉbam, viz., nālaḍiyār, nāṉmaṇikkaḍigai, iṉṉā-nārpatu, iṉiyavai-nārpaḍu, kār-nāṟpaḍu, kaḷavaḻi nāṟpaḍu, aintiṇaimpatu, aintiṇai-eḻupatu, tiṇaimoḻi-yaimpatu, tiṇaimālāi, nuṟṟaimpatu, tirukuṟal, tirikaḍugam, āsāra-k-kōvai, paḻa-moḻi, ciṟupañja mūlam, mutumoḻi-k-kāñjhi, ēlāti, kainnilai.

*[பதின் + எண் + கீழ்க்கணக்கு]*

**பதினெண்குடிமக்கள்** *patit-eṉ-kuḍi-makkaḷ,* பெ. (n.) *குடிமக்கள்* பார்க்க; see *kuḍimakkaḷ.* the eighteen kudi-makkaḷ of a village.

*[பதின் + எண் + குடிமக்கள்]*

**பதினெண்குற்றம்** *patiṉ-eṉ-kuṟṟam,* பெ. (n.) பசி, நீர்வேட்டல், அச்சம், வெகுளி, உவகை, வேண்டல், நினைப்பு, உறக்கம், நரை, நோய்ப்படுதல், இறப்பு, பிறப்பு, மதம், இன்பம், புதுமை (வியப்பு), வியர்த்தல், துன்பம், கையறவு என்னும் யாக்கைக்குரிய பதினெட்டு வகையான குறைகள். (பிங்.); the eighteen kinds of defects of the human body, viz. pasi, nīr-vēṭṭal, accam, veguḷi, uvagai, vēndal, ninaippu, uṟakkam, narai, nōy-p-padutal, iṟappu, pirappu, matam, iṉbam, putumai, viyarttal, tuṉbam, kaiyaṟavu.

*[பதின் + எண் + குற்றம்]*

**பதினெண்சித்தர்** *patiṉ-eṉ-šittar,* பெ. (n.) திருமூலர், இராமதேவர், கும்பமுனி, இடைக்காடர், தன்வந்திரி, வால்மீகி, கமலமுனி, போகநாதர், மச்சமுனி, கொங்கணர், பதஞ்சலி, நந்திதேவர், போதகுரு, பாம்பாட்டி, சட்டைமுனி, சுந்தரானந்த தேவர், குதம்பைச் சித்தர், கோரக்கர் என்ற பதினெட்டுச் சித்தர்கள்; the eighteen šittars, viz., tirumūlar, irāmatēvar, kumbamuṉi, idaikkāḍar, taṉvantiri, vālmīki, kamalamuṉi, bōganādar, maccamuṉi, koṅgaṇar, patañjali, nantitēvar, pōtakuru, pāmpāṭṭi, caṭṭaimuṉi, cuntāraṉatatēvar, kudambai-c-cittar, kōrakkar.

*[பதினெண் + சித்தர்]*

**பதினெண்பாடை** *patiṉ-eṉ-pāḍai,* பெ. (n.) *பதினெண்மொழி* பார்க்க; (திவா.); see *patiṉ-eṉ-moḻi.*

*[பதினெண் + பாடை]*

**பதினெண்புராணம்** *patiṉ-eṉ-purāṇam,* பெ. (n.) சிவபிரானைப் பற்றிக் கூறும் மச்சபுராணம், கூர்மபுராணம், வராகபுராணம், வாமனபுராணம், சிவமகாபுராணம், இலிங்க புராணம், பவிடியபுராணம், காந்தபுராணம், மார்க்கண்டேயபுராணம், பிரமாண்டபுராணம், என்ற பத்தும், திருமாலைப் பற்றிக் கூறும் விட்டுணுபுராணம், பாகவதபுராணம், கருட புராணம், நாரதீயபுராணம், என்ற நான்கும் நான்முகனைப் பற்றிக் கூறும் பிரமபுராணம் பதுமபுராணம் என்ற இரண்டும், தீயைப் பற்றிக் கூறும் ஆக்கினேய புராணம் ஒன்றும், கதிரவனைப் பற்றிக் கூறும் பிரம வைவர்த்த புராணம் ஒன்றும் ஆகிய பதினெட்டுத் தலைமைப் புராணங்கள். (பிங்.); the eighteen chief purāṇās in sanskrit, compiled by vyāsa, viz., maccapurāṇam, kūrma purāṇam, varāga-purāṇam, vāmaṉa-purāṇam, šiva-magāpurāṇam, liṅga-purāṇam, pavidiya-purāṇam, kanda-puraṇam, markkaṇḍēya-puraṇam, piramāṇda purāṇam, these ten devoted to the praise of siva, vitṇupurāṇam, pakavata purāṇam, karuda purāṇam, naratīya puranam these four devoted to the praise of agṉi, piramavaivartha purāṇam devoted to the praise of the sun.

*[பதினெண் + புராணம்]*

*புராணம்=Skt*

**பதினெண்பூமி** *patiṉ-eṉ-boomi,* பெ. (n.) தமிழ் நூல்களில் கூறப்பட்ட சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலிங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மதம், கடாரம், கவுடம், கோசலம், தமிழகம் என்ற 18 நாடுகள். (நன். 272, மயிலை.); the eighteen countries, mentioned in tamil literature viz., ciṅgalam, cōṉagam, cāvagam, cīṉam, tuḷuvam, kudagam, koṅgaṇam, kaṉṉadam, magatam, kadāram, kauḍam, kosalam, tamiḻagam.

*[பதினெண் + பூமி]*

*பூமி = Skt*

**பதினெண்மொழி** *patin-en-moli,* பெ. (n.) தமிழ்நூல்களில் வடமொழி நீங்கலாக எண்ணப்பட்ட சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கு, கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கவுடம், கோசலம், தமிழ் என்ற பதினெட்டு பாடைகள்; the eighteen languages mentioned in tamil literature, other than sanskrit viz., šingalam, cōnagam, cāvagam, cinam, tuluvam, kudagam, konganam, kannatam, kollam, telungu, kalingam, vankam, kangam, magadam, kadāram, kavudam, kōcalam, tamil.

*[பதினெண் + மொழி]*

**பதினைந்தாம்புலி** *patin-aindām-puli,* பெ. (n.) கீறிய கட்டத்தில் புலியென்று கூறப்படும் மூன்றுகாய்களையும் நாயென்று கூறப்படும் பதினைந்து காய்களையும் வைத்து ஆடப்படும் விளையாட்டுவகை; a kind of chess played with two sets of pieces, one set numbering three and styled puli, and the other set numbering fifteen and styled nōy.

*[பதினைந்தாம் + புலி]*

**பதினைந்துநாயும் புலியும்** *patinaindu nāyum-puliyum,* பெ. (n.) ***பதினைந்தாம்புலி*** (நாஞ்.) பார்க்க; see *patin-aindām-puli.*

*[பதினைந்து + கட்டல்]*

**பதினோ்ராடல்** *patin-ōr-ādal,* பெ. (n.) பார்க்க, *கூத்து,* 2. (சிலப். 3, 14, உரை.); see *kūttu.*

*[பதினோரு + ஆடல்]*

*[இப்பதினோராடலும் அசுரரைக் கொல்ல அமரராடின; இவை இரண்டு கூறுபடும்;* என்னை? "அல்லியம் கொட்டி குடை குடம் பாண்டரங்கம் மல்லு டனின்றாடலாறு", "துடிகடையம்பேடு மரக்காலே பாவை, வடிவுடன் வீழ்ந்தாடலைந்து" (சிலப். 3.14. உரை) *]*

**பதினோராந்திருமுறை** *patin-ōrān-tirumurai,* பெ. (n.) சிவனடியார் பலரால் பாடப்பெற்றதும் சிவனியத் திருமுறைகளுள் பதினொன்றாவது மான நூற்றொகுதி; the eleventh canonical book of saivites, consisting of poems composed by different saiva saints.

*[பதினோராம் + திருமுறை]*

இத்திருமுறையில் 12 அருளாளர்கள் பாடிய 40 நூல்கள் உள்ளன. 1400 பாடல்கள் இப்போது கிடைக்கின்றன. இத்திருமுறையைத் தொகுத்தவர் நம்பியாண்டார் நம்பி ஆவர். இத்திருமுறையில் அமைந்த நூல்கள் தெய்வங்களையும் அடியார்களையும் பற்றியவை பெரும்பாலும் சிவபெருமானுடைய போற்றிப் பாடல்களாக அமைந்தவை முன்னுள்ள பத்துத் திருமுறைகளும் ஆம். திருமந்திரத்திலும் திருவிசைப்பாவிலும் மாத்திரம் சில பாடல்கள் முறையே பிள்ளையாரையும் முருகனையும் போற்றும் வகையில் உள்ளன. இத்திரு முறையில் பிள்ளையாரைப் பற்றியவை–3; முருகவேளைப் பற்றியது–1; சிவபெருமானைப் பற்றியவை–25; திருஞானசம்பந்தரைப் பற்றியவை –2; சேரமான் பெருமானளப் பாட்டுடைத்தலைவராக உடையது–1; திருத்தொண்டர் அனைவரையும் பற்றியது–1;

இத்திருமுறையில் தொகுக்கப்பெற்றச் சிற்றிலக்கிய வகைகள் 21. அவற்றுள் அந்தாதி–8; ஆற்றுப்படை–1, இரட்டை மணிமாலை–4, உலா–2, எட்டு–1, எழு கூற்றிருக்கை–1, எழுபது–1, ஏகாதசமாலை–1, ஒருபா ஒருபஃது–1, கலம்பகம்–1, கலி வெண்பா–1, கோபப்பிரசாதம்–1, திருமுகப் பாசுரம்(சீட்டுக்கவி)–1, தொகை–1, நான்மணி மாலை–1, பதிகம்–2, பெருந்தேவ பாணி–1, மறம்–2, மும்மணிக் கோவை–7, மண்டிலம் (விருத்தம்)–2, வெண்பா–1.

ஆசிரியரும் நூல்களும்

1. திருவாலவாயுடையார் – 1. திருமுகப்பாசுரம்

2. காரைக்காலம்மையார் – 1. திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம் 2. திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம் 3. திருவிரட்டைமணிமாலை

4. அற்புதத்திருவந்தாதி

3. ஐயடிகள் காடவர்கோன் நாயனார் – 5. சேத்திரத்திருவெண்பா.

4. சேரமான் பெருமான் பெருமாள் நாயனார் – 6. பொன்வண்ணத்தந்தாதி 7. திருவாரூர் மும்மணிக்கோவை 8. திருக்கயிலாய ஞான உலா

5. நக்கீரதேவநாயனார் – 9. கயிலை பாதிகாளத்திபாதி அந்தாதி 10. திருஈங்கோய் மலை எழுபது 11. திருவலஞ்சுழி மும்மணிக் கோவை 12. திருவெழுகூற்றிருக்கை 13. பெருந்தேவபாணி 14. கோபப்பிரசாதம் 15. கார் எட்டு 16. போற்றித்திருக்கலிவெண்பா 17. திருமுருகாற்றுப்படை 18. திருக்கண்ணப்பதேவர் திருமறம்

6. கல்லாடதேவநாயனார் – 19. திருக் கண்ணப்பதேவர்திருமறம்

7. கபிலதேவநாயனார் – 20. மூத்தநாயனார் திருவிரட்டைமணிமாலை 21. சிவபெருமான் திருவிரட்டைமணிமாலை 22. சிவபெருமான் திருவந்தாதி

8. பரணதேவநாயனார் – 23. சிவபெருமான் திருவந்தாதி

9. இளம்பெருமானடிகள் – 24. சிவபெருமான் மும்மணிக்கோவை

10. அதிராவடிகள் – 25. மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை

11. பட்டிணத்துப்பிள்ளையார் – 26. கோயில் நான்மணிமாலை 27. திருக்கழுமல மும்மணிக்கோவை 28. திருவிடைமருதூர் மும்ணிக்கோவை 29. திருவேகம்பமுடையார் திருவந்தாதி 30. திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது

12. நம்பியாண்டார் நம்பி – 31. திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை 32. கோயில் திருப்பண்ணியர் விருத்தம் 33. திருத்தொண்டர் திருவந்தாதி 34. ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி 35. ஆளுடைய பிள்ளையார் திருச்சண்டைவிருத்தம் 36. ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை 37. ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை 38. ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம் 39. ஆளுடையபிள்ளையார் திருத்தொகை 40. திருநாவுக்கரசு தேவர் திருவேகாதச மாலை.

**பதுக்கம்** *padukkam,* பெ. (n.) 1. ஒளிக்கை; skulking, lurking, hiding. 2. கபடம்; (w.) clandestine conduct *'பதுக்கமாய் நடக்கிறான்'*. 3. எய்தல், பாய்தல் முதலியவற்றுக்காகப் பதுங்குகை; stooping, crouching, hiding, as one watching to shoot a game, as a beast to spring on its prey. 4. பின்னிற்கை; (w.) servility, cringing, fawning.

*[பதுங்கு → பதுக்கம்]*

**பதுக்கல்** *padukkal,* பெ. (n.) வெளிச்சந்தையில் எளிதில் கிடைக்காத பொருளை அல்லது நேரிய விலைக்கு விற்க வேண்டிய பொருளை விற்காமல் சட்டத்திற்கு மாறாக மறைத்து வைத்திருப்பது; hoarding. *"பதுக்கலைத் தடுப்பதற்கு இந்த சடுதிச்சட்டம் கொண்டுவரப்பட்டுள்ளது." "பதுக்கலைத் தடுக்கப் பொதுமக்களும் உதவ வேண்டும்".*

**பதுக்காய்** *padukkāy,* பெ. (n.) பருத்துக் குள்ளமாயுள்ள–வன்–து; that which is short, stout or stocky, as a person or an animal. 2. உள்ளான் வகை; a kind of snipe.

*[பதிவு → பதுவு → பது → பதுக்காய்]*

**பதுக்காயன்** *patukkāyan,* பெ. (n.) குறுக்கே வளர்ந்த குள்ளன்; short, thickest person, dwarf.

*[பதிவு → பதுவு → பது → பதுக்காயன்]*
காயம் = உடம்பு.

**பதுக்காரம்** *padukkāram,* பெ. (n.) ஒருவகைக் கும்மட்டி; a kind of bitter apple. (சா.அக.)

**பதுக்கு–தல்** *padukku-,* 2. செ.குன்றாவி. (v.t.) 1. ஒளித்தல்; to hide, secrete, conseal. 2. பொருள், பணம் முதலியவற்றை அதிக அளவில்) சட்டத்துக்கு புறம்பாக மறைத்து வைத்தல்; hoard. *"கிடங்கில் பதுக்கி வைத்திருந்த நூறு மூட்டை நெல்லைக் காவல் துறையினர் கைப்பற்றினர். "சிலர் வெளிநாட்டு வைப்பகங்களில் பணத்தைப் பதுக்கியுள்ளது தெரியவந்தது."*

*[பதுக்கு → பதுக்கு–.]*

**பதுக்கை**[1] *padukkai,* பெ. (n.) 1. கற்குவியல்; pile of stones. *"பதுக்கைத்தாய வொதுக்கருங்கவலை"* (ஐங்குறு.362.); 2. இலைக்குவியல்; heap of leaves. *"பதுக்கை நிரைத்த கடுநவை யாராற்று"* (கலித்.12,2.) 3. மணற்குன்று; sand-bank; elevation. *"பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி"* (புறநா.264.) 4. சிறுதூறு (திவா.); thicket, bushes, low jungle. *"உவலைப் பதுக்கை முரம்பு"* (குஞ்சைவா.363.) 5. பாறை; (பிங்.) *"பாடலம் புனைந்தகற் பதுக்கை யிவ்விடனே"* (கல்லா.6.)

*[ஒருகா; பதுங்கு → பதுக்கை]*

**பதுக்கைக்கடவுள்** *padukkai-k-kaḍavuḷ,* பெ. (n.) மணற்குன்றின் மேலுள்ள நடுகற்றெய்வம்; idol on an elevation or mound *"வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்"* (அகநா.35.)

*[பதுக்கை + கடவுள்]*

**பதுகரை** *padukarai,* பெ. (n.) பழமுண்ணிப் பாலை; silvery-leaved ape flower. see paḻam-uṇṇi-p-pālai.

*[பது + கரை]*

**பதுகளா** *padukaḷā,* பெ. (n.) பழமுண்ணிப் பாலை; adam's apple of the granese. (சா.அக.)

**பதுங்கலன்** *paduṅgalaṉ,* பெ. (n.) 1. பின்னிற்பவன்; skulker. 2. கூச்சமுள்ளவன்; shy, bashful person.

*[பதுங்கு → பதுங்கலன்]*

**பதுங்கி** *paduṅgi,* பெ. (n.) *பதுங்கலன்* பார்க்க; (w.) see *paduṅgalaṉ.*

*[பதுங்கு → பதுங்கி]*

**பதுங்கு–தல்** *paduṅgu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. ஒளித்தல்; to hide, conceal oneself. *"அரண்புக்குப் பதுங்கினானை"* (கம்பரா. அங்கத.31.) 2. பதிவிருத்தல்; to lie in ambush, crouch. *"பதுங்கிலும் பாய்புலி"* (திருமந்.2914.) 3. மறைத்தல்; to disappear. *"பருதியை முகின்மறைப்பப் பாயொளி பதுங்கினாற் போல்"* (சி.சி.2,83.) 4. பின்னிற்றல்; to fawn, cinge. (w.)

க. ஹதுகு ம. பதுங்நுக, பதியுக.

து. பதெயுனி, பட்டுணி.

**பதுங்கு**[2] *paduṅgu,* பெ. (n.) குத்துக்கல் வரிசை; (இ.வ.) brick on edge.

*[பதுக்கு → பதுங்கு]*

**பதுங்கு குழி** *paduṅgu-kuḻi,* பெ. (n.) எதிரியின் குண்டுவீச்சு, துப்பாக்கிச் சூடு போன்றவற்றிலிருந்து பாதுகாத்துக்கொள்ளும் பொருட்டு மறைந்துகொள்ள வெட்டப்படும் ஆழமான குழி; trench. *பொதுவாகப் படைத் தளத்தில் பதுங்கு குழியைப் பயன்படுத்துவர்"*

*[பதுங்கு + குழி]*

**பதுங்குபிடி–த்தல்** *padungu-piḍi-,* 4. செ.குன்றா.வி. (v.t.) மேற்றளத்துக்குச் சிறுகற்பாவுதல் (இ.வ.); to pave with bricks on edge, as in terracing.

*[பதுங்கு + பிடி –,]*

**பதுங்கூன்று–தல்** *padungūṉṟu-,* 8. செ.குன்றா.வி. (v.t.) ***பதுங்குபிடி–.*** பார்க்க, (இ.வ.) see *padungu-piḍi-,*

*[பதுங்கு + ஊன்று–,]*

**பதுப்பி–த்தல்** *paduppi-,* 7. செ.குன்றா.வி. (v.t.) மறைத்தல்; to hide. "*பண்டைக் கோலத்தைப் பதுப்பித்திடும் பட்டாங் குரையாய்*" (வள்ளி. கதை. ms)

*[பதுக்கு + பதுப்பி–,]*

**பதுபரணி** *padubaraṇi,* பெ. (n.) பெருங் குமிழ்; coom teak. (சா.அக.)

**பதுமகெந்தி** *padumakendi,* பெ. (n.) தாமரைக் கிழங்கு; lotus roof.

மறுவ; பதும கெந்தகம். (சா.அக.)

**பதுமகோமளை** *paduma-kōmaḷai,* பெ. (n.) கற்பிற்சிறந்த சூரபன்மன் தேவி. (கந்தபு. புதல்வ.1.); the wife of sūra padma, famed for her chastity.

*[பதுமம் + கோமளை]*

**பதுமநாபன் இராச்சியம்** *patumanāpan-rāceiyam,* பதுமநாமப் பெருமாளுக்கு உரியதான திருவாங்கூர்ப் பகுதி; the travancore state as belonging to god padmanābha.

*[பதுமநாபன் + இராச்சியம்]*

**பதுமப்பிரபர்** *paduma-p-pirabar,* பெ. (n.) தீர்த்தங்கரர் இருபத்துநால்வருள் ஒருவர். (திருக்கலம். காப்பு.உரை.) (jaina.) an arhat, one of 24 tirttaṅgarar.

*[பதுமம் + பிரபர்]*

**பதுமனார்** *padumaṉār,* பெ. (n.) நாலடியாருக்குப் பாலியலதிகாரங்கள் வகுத்து உரையிட்ட பழைய ஆசிரியர்; an ancient commentator on Nāladiyār, who classified its stanzas.

*[பதுமம் → பதுமனார்]*

(இவர் நாலடியாரைத் திருக்குறளிற்போல அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாற்படுத்து ஒவ்வொரு பொருளை வற்புறுத்துவனவாகிய நாற்பது அதிகாரமாகப் பகுத்து உரையெழுதியவர்.)

**பதுமாக்கம்** *padumākkam,* பெ. (n.) *பதுமவீசம்.* (மூ.அ.) பார்க்க,; see *padumavisam.*

*[பதுமம் + ஆக்கம்]*

**பதுமாடம்** *padumāḍam,* பெ. (n.) கடுகு ரோகணி; black helebore. (சா.அக.)

**பதுமார்க்கம்** *patumārkkam,* பெ. (n.) *கவிழ்தும்பை* பார்க்க (மலை.); see *kaviḻtumbai.* a low annual, flourishing in dry localities.

*[பது + மார்க்கம்]*

**பதுமை²** *padumai,* பெ. (n.) 1. பாவை; puppet. doll. 2. உருவச் சிலை; idol. "*எந்தை பிரான் வடிவத்தோடு பொருந்து பதுமையை*" (உபதேசகா. சிவவிரத.404.)

*[படிமை → பதிமை → பதுமை]*

**பதுமைக்கதை** *padumai-k-katai,* **பெ.** (n.) விக்கிரமாதித்தனைப் பற்றிப் போசவரசனுக்கு முப்பத்திரண்டு பதுமைகள் கூறியதாக வழங்கும் கதைத் தொகுதி; (w.) stories of vikramāditya said to have been told by **32** puppets to the king **Bhōja**.

*[பதுமை + கதை]*

**பதுமையாட்டம்** *padumai-y-āṭṭam,* பாவைக் கூத்து; puppet show.

**மறுவ:** பொம்மலாட்டம்.

*[பதுமை + ஆட்டம்]*

**பதுலிகம்** *paduligam,* **பெ.** (n.) **1.** பெருங் குரும்பை என்னும் மூலிகை; aloe. **2.** பனங் கொட்டை;. palmyra nut. **(சா.அக.)**

**பதுவாரம்** *paduvāram,* **பெ.** (n.) வரிவகை (S.I.I. viii, **214**); a tax.

**பதுவை** *paduvai,* **பெ.** (n.) வலம்புரிக்காய்; fruit of twisting stick. **(சா.அக.)**

**பதை—த்தல்** *padai-,* **11. செ.கு.வி.** (v.i.) **1.** துடித்தல்; to throb, as in sympathy; to flutter, quiver, beat, as the heart through fear, pain or grief. *"பாடுகின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை"* (திருவாச. **5, 31.**) **2.** வருந்துதல்; to be in agony, as a creature in fire; to suffer intensely. **3.** நடுங்குதல்; to shake. *"அடிபதைத் தூற்றிய வரக்கி"* **(கம்பரா. சூரிப்ப. 97.) 4.** பதற்றப் படுதல்; to be anxious. *"பறந்து போதுங்கொ லென்று பதைக்கின்றாா்"* **(கம்பரா. பள்ளி. 15.) 5.** செருக்கடைதல்; **(இ.வ.)** to be conceited.

க. **பதெ.**

*[பதை → பதை—,]*

**பதை** *padai,* **பெ.** (n.) கடுகு; mustard. **(சா.அக.)**

**பதைத்துவிழு—தல்** *padaittu-vilu-,* **2. செ.கு.வி.** (v.i.) **1.** துன்பம் மிகுதல்; to burst forth in agony, as on hearing and news. **2.** பதற்றம் மிகுதல்; to be very eager, anxious or restless.

*[பதைத்து + விழு—,]*

**பதைப்புக்கெட** *padaippu-k-keḍa,* **(வி.எ.)** (adv.) விரைவின்மையாக; leisurely (w.).

**மறுவ;** பரபரப்பின்றி

*[பதைப்பு + கெட]*

**பதைபதை—த்தல்** *padai-padai-,* **4. செ.கு.வி.** (v.i.) மிகத்துடித்தல்; to throb through pain, fear or grief; to be in anguish; to suffer excruciating pain. *"அங்கமும் பதைபதைத்து"* **(பிரபோத. 26, 21.)**

*[பதை + பதை—,]*

**பந்தக்காட்சி** *panda-k-kāṭci,* **பெ.** (n.) சிவன் கோயிலில் நடைபெறும் சில திருவிழா இறுதியில் உமையம்மையின் ஊடற்குறியாகச் இறைவனின் தீப்பந்தங்களைத் தேவியின் உடன்சுற்றத்தார் பறித்துச் செல்லும் திருவிழா; ceremony observed at the close of some saiva festivals when the torches of šiva are snatched away by the retinue of the goddess in indication of the her-quarrel (w.)

*[பந்தம் + காட்சி]*

**பந்தக்கினம்** *pandakkiṉam,* **பெ.** (n.) கண்டில் வெண்ணெய்; ointment prepared from baellium. **(சா.அக.)**

**மறுவ:** குங்கிலிய வெண்ணெய்

**பந்தகபத்திரம்** *pandaka-pattiram,* பெ. (n.) ஈடுகாட்டி எழுதிய ஆவணம்; hypothecation deed.

*[பந்தகம் + பத்திரம்]*

பத்திரம் = Skt.

**பந்தகம்** *pandagam,* பெ. (n.) **1.** *பந்தம்* பார்க்க, 1, 2, 3, see *pandam* 1, 2, 3. **2.** அடைமானம்; pledge, mortgage. **3.** பிறர்க்குரியது; alientation.

**பந்தசாரம்** *panda-šāram,* பெ. (n.) வயிரவகை (S.I.I.i, 78, 4); a kind of diamond.

*[பந்தம் + சாரம்]*

**பந்தசேவை** *panda-šēvai,* பெ. (n.) கன்னி (புரட்டாசி) மாதக் காரி(சனி)க்கிழமை யொன்றில் திருமாலின் பொருட்டுத் தீப்பந்தம் பிடித்து வெறி கொண்டு ஆடும் திருவிழா; (இ.வ.) a festival in honour of tirumāl held on a saturday in puraṭṭāši, in which the devotees possessed by the deity, dance with flaming torches in their hands.

*[பந்தம் + சேவை]*

சேவை = Skt.

**பந்தடி-த்தல்** *pandaḍi-,* **4. செ.கு.வி.** (v.i.) பந்து விளையாடுதல்; to play with ball. ***"சென்று பந்தடித்துமே"* (சிலப். 29.** கந்துகவரி.)

*[பந்து + அடி –,]*

**பந்தடி**[2] *pandaḍi-,* பெ. (n.) பந்துவிளையாட்டு; game with balls. ***"தேவியரிருவரும்..... பந்தடி காணிய நிற்ப"*** (பெருங். வத்தவ. 12, 15.)

*[பந்து + அடி –,]*

**பந்தடிமேடை** *pandaḍi-mēḍai,* பெ. (n.) பந்து விளையாடும் இடம்; ground where ball is played; tennis court.

*[பந்தடி + மேடை]*

**பந்தணம்** *pandaṇam,* **பெ.** (n.) பற்று; attachment. ***"பந்தணம் மலையொன்றிலம்"*** **(தேவா. 859, 7.)**

*[ பந்தம் → பந்தணம் ]*

**பந்தணைநல்லூர்** *pandaṇainallur,* **பெ. (n.)** தேவாரமூவரால் பாடல் பெற்றதும் **காவிரியின்** வடக்கில் உள்ளதுமான தஞ்சை **மாவட்டச்** சிவத்தலம்; a sivan temple place in the north of kāvēri in Tanjore Dt.

*[பந்து + அணைந்த + நல்லூர்]*

**பந்த தயிலம்** *panda-tayilam,* பெ. (n.) எரித்துத் துளித்துளியாக மருந்துக்கு எடுக்கும் சுடரெண்ணெய்; medicinal oil formed of drops of compounds burnt with oil. (w.).

*[பந்தம் + தயிலம்]*

தயிலம் = Skt.

**பந்ததிகாரி** *pandadigāri,* பெ. (n.) *பந்தாதிகாரி* (திருவாலவா. அரும்.) பார்க்க; see *pandādigāri.*

*[பந்து + அதிகாரி]*

**பந்தநாடி** *pandanāḍi,* பெ. (n.) இழுத்துப் பிடித்த நாடி; strained pulse. **(சா.அக.)**

*[பந்தம் + நாடி]*

**பந்தம்** *pandam,* பெ. (n.) 1. அழகு; beauty. 2. கட்டு; baudage; legature. 3. பாசம்; attachment to wordly objects. 4. திரட்சி; lump, mass. 5. மயிர்முடி; hairlock. 6. முடிச்சு; knot. 7. தொடர்பு; relation. 8. பொன்; gold. 9. பெருந்துத்தி; large bellows. 10. மலம்; faeces. 11. மலக்கட்டு; obstuction to the free passage of stool. 12. உயிர்த்தொடர்பு; spiritual baudage. (சா.அக.)

ம. பந்தம் து. பந்த்யெ.

*[பற்று → பத்து → பந்து → பந்தம்]*

**பந்தம்**[1] *pantam,* பெ. (n.) நுனியில் துணி சுற்றப்பட்டு எண்ணெய்யில் முக்கியெடுத்த, எரிப்பதற்கு ஏந்தான கம்பு; தீப்பந்தம்; torch (made of some combustible substance) *"இறைவன் ஊர்வலத்தின் முன் பலர் பந்தம் பிடித்து வந்தார்கள்"*

*[பற்று → பத்து → பந்து → பந்தம்]*

**பந்தயம்** *pantayam,* பெ. (n.) 1. விளையாட்டுப் போன்றவற்றில் பலர் கலந்துகொள்வதாகவும் ஒருவர் வெற்றி பெறுவதாகவும் அமையும் நிகழ்ச்சி; போட்டி; contest; competion. *"குதிரைப் பந்தயம்" "யார் அதிகம் சாப்பிடுகிறார்கள் என்று பந்தயம் நடத்தினார்கள்"* 2. ஒன்றைக் குறித்த முடிவு இவ்வாறுதான் இருக்கும் என்று வெவ்வேறு கருத்துக் கூறுபவர் இடையே பணம் முதலியவை கட்டி நடக்கும் போட்டி; bet. *"இந்த வேலை உனக்குக் கிடைக்காது, என்ன பந்தியம்?" "தோற்றுவிட்டால் பந்தயப் பணத்தை உடனடியாகத் தரவேண்டும்"*

ம. பந்தயம் கொ. பந்திகம் தோட. பத்யம். க. பந்த, பந்த்ய து. பந்த. தெ. பந்தமு, பந்தெழு பந்தகின்சு

*[பந்தம் → பந்தயம்]*

**பந்தயம் கட்டு-தல்** *pantayam kattu-,* 5. செ.கு.வி (v.i.) பணம் கட்டி அல்லது பொருள் வைத்துப் பந்தயத்தில் இறங்குதல்; make a bet; bet. *"இந்தத் தேர்தலில் எந்தக் கட்சிக்கும் பெருபான்மை கிடைக்காது என்று கூறி நூறு உருபா பந்தயம் கட்டியிருக்கிறார்"*

*[பந்தயம் → கட்டு]*

**பந்தரம்** *pandaram,* பெ. (n.) 1. காண்டகச் செய்ந்நஞ்சு; an unknown mineral poison. 2. கற்கடகச் செய்ந்நஞ்சு; one of the 32 kinds of native arsenic. (சா.அக.)

**பந்தரி** *pandari,* பெ. (n.) பிடா என்னும் ஒரு வகையுப்பு; a prepared salt. (சா.அக.)

**பந்தல்** *pandal,* பெ. (n.) பிடிப்பு; catching as in ஊதைப்பிடிப்பு; rheumatism. (சா.அக.)

**பந்தல்** *pantal,* பெ. (n.) 1. நான்கு பக்கமும் கழிகளை நட்டு அதன் மேல் படுக்கை வாட்டில் குறுக்கும் நெடுக்கமாகக் கம்புகள் வைத்துக் கீற்றுகளைப் போட்டு அல்லது கனமான துணியைக் கட்டிச் செய்யும் அமைப்பு; a temporary shed with a roof made of plaited coconut leaves or cloth (fro a function; pupose, etc.) *"தன் பெண்ணின் திருமணத்திற்காக ஆயிரம் பேர் உட்காரக் கூடிய பந்தல் போட்டிருக்கிறார்" "கோடைக் காலத்தில் அவர் வீட்டு வாசலின் முன்பு பெரிய பந்தல் போடப்பட்டிருக்கும்"*

2. கொடி படருவதற்கு ஏற்ற வகையில் கால்களை நட்டு அதன் மேல் குறுக்கும் நெடுக்குமாகக் கழிகளைக் கட்டிய அமைப்பு; a simple structure with a frame for creepers to climb. *"அவரைப் பந்தல்".*

ம. பந்தல். க. பந்தர், பந்தர, (பந்தல்) குடகு. பந்த. தெ. பந்திரி, பந்திலி கொலா. பந்திலி.



**பந்தல்கத்தரி** *pandal kattari,* பெ. (n.) வெள்ளரிக்காய்; cucumber (சா.அக.)

*[பந்தல் + கத்தரி]*



**பந்தல் சேவை** *pandal ševai,* பெ. (n.) திருப்பதிகுடை விழாவில் தீப்பந்தத்தை முதுகில் இருபுறமும் மாறிமாறியடித்துக் கொள்ளும் சடங்கு; ceremony performed at the Tiruppati kuḍai function.

**பந்தல்வரிசை** *pandal variššai,* பெ. (n.) மணமகளுக்குக் கொடுக்கும் சீர்வரிசைப் பொருட்களையெல்லாம் கலியாணப் பந்தலில் எல்லோரும் காணுமாறு அழகுற வைத்தல்;

**பந்தவரிசை** *pandavarisai,* பெ. (n.) 1. குதிரைப் பற்செய்ந்நஞ்சு; red orpiment. (சா.அக.) 2. ஒருவகை விளையாட்டு; a play with flambeaus lighted at each end. 3. தீவட்டியின் வரிசை; a course of order of lights in a procession.

**பந்தற்கால் நடுதல்** *pandaṟkāl naḍu-,* செ.கு.வி. (v.i.) கலியாணக்கால் நடுதல்; erecting the first pole of a nuptial booth.

**பந்தற்கால் முழுத்தம்** *pandaṟ kāl muḻuttam,* பெ. (n.) *பந்தற்கால் நடுதல்* பார்க்க; see *pandaṟkāl naḍu-,.*

**பந்தற்பூ** *pandaṟppū,* பெ. (n.) இலுப்பைப்பூ; mahua flower. (சா.அக.)

**பந்தன்**[1] *pandan,* பெ. (n.) ஒளவையாராற் பாடப்பெற்ற வணிகக் கொடையாளன்; a man cherry caste, philanthraphist on whose name Avvaiyar wrote pandaṉan tādi.

**பந்தன்**[2] *pandan,* பெ. (n.) சீர்பாதச் செய்ந் நஞ்சு; a kind of prepared arsawe. (சா.அக.)

**பந்தனந்தாதி** *pandanantādi,* பெ. (n.) பந்தன் மேல் ஒளவையாரால் பாடப்பெற்றச் சிற்றிலக்கியம்; a poem in antadi metre concerning pandaṉ by Avvaiyār.

*[பந்தன் + அந்தாதி]*

**பந்தாட்டு—தல்** *pandāṭṭu,* செ.குன்றாவி. (v.t.) அலைத்து வருத்துதல்; to tease; to vex. "*பந்தாட்டியே விடுவேண்டி*" (குருகூர்ப். 89)

*[பந்து + ஆடு → பந்தாடு → பந்தாட்டு]*

**பந்தாடு—தல்** *pantādu-,* 7. செ.கு.வி. (v.i.) ஒருவரை ஒன்றிலும் நிலைக்க விடாமல் அலைக்கழித்தல்; kick around shunt. *"ஆலை மேலாண்மை, தொழிலாளர்களை வேலையில் சேர்ப்பதும் நீக்குவதுமாகப் பந்தாடிக் கொண்டிருக்கிறது"*

*[பந்து + ஆடு—,]*

**பந்தாதி** *pandāti,* பெ. (n.) கத்தரிக்காய்; brinjal. (சா.அக.)

*[பந்தம் + ஆதி]*

**பந்தானம்** *pantāṉam,* பெ. (n.) உறவினர்கள் கூட்டம்; large circle of relations (இ.வ.)

*[பந்து → பந்தானம்]*

**பந்தி—த்தல்** *pandi-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. கட்டுதல்; to tie, bind, fasten, connect, confine. *"பந்தித்த சடையின் மேலே"* (தேவா. 305, 8.) 2. கூடுதல்; to join, combine. *"பந்தியாப் பழுப்பு நாறின்"* (சீவக. 1287.) 3. ஆதனைக் கட்டுக் குள்ளாக்குதல்; to keep the soul in bondage. *"பந்தித்து நின்ற பழவினை"* (தேவா. 292, 1.)

*[பந்தம் → பந்தி—,]*

**பந்தி**[2] *panti,* பெ. (n.) கட்டு; tie.

தெ. பந்தி

*[பந்தம் → பந்தி]*

**பந்தி**[3] *pandi,* பெ. (n.) 1. ஒழுங்கு (சூடா.) row, order, series, line. *"பண்ணமை வயப்பரிகள் பந்தியினிரைத்தார்"* (கம்பரா. வரைக்காட்சி. 13.) 2. உண்டற்கு அமர்ந்தவர் வரிசை; line of person seated for dining. 3. குதிரை முதலிய வற்றின் சாலை; stable for horses or elephants *"இவுளிகள் கண்ணு பந்தியிற் கட்டத் தகுமென"* (திருவாலவா. 27, 16.)

*[பத்தி → பந்தி]*

**பந்திக்கட்டு** *pandi-k-kaṭṭu,* பெ. (n.) உணவருந்துவதற்கென்று அமைந்த கட்டடம்; dining hall. *"உக்கிராணம் களஞ்சியம் பந்திக்கட்டு பண்ணை முதலிய எல்லா இடங்களின் விசாரனை வேலைகளின்"* (மீனாட். சரித். i, 36)

*[பந்தி + கட்டு]*

**பந்திடலின் பழம்** *pandiḍalinpaḻam,* பெ. (n.) எலுமிச்சம் பழம்; lime fruit. (சா.அக.)

**பந்தித்திரம்** *panditiram,* பெ. (n.) நட்பு (யாழ்.அக.); friendship.

*[பந்தம் → திரம் = பந்தத்திரம் → பந்திரம்]*

**பந்திப்பாய்** *pandi-p-pay,* பெ. (n.) விருந்தினர் உண்ணும்போது உட்காரவிரிக்கும் நீண்டபாய்; long narrow mat for seating persons while dining (w.)

*[பந்தி + பாய்]*



**பந்திப்பாவாடை** *pandi-p-pāvāḍai,* பெ. (n.) விருந்தினர் உட்கார விரிக்கும் ஆடை; (w.) cloth for a row of guests to sit on.

*[பந்தி + பாவாடை]*

**பந்திபந்தனா** *pandipandaṉā,* பெ. (n.) ஆத்தி மல்லிகை; an unknown plant said to be useful in rejuvenatation. (சா.அக.)

**பந்திபேதம்** *pandi-pēdam,* பெ. (n.) அமுது படைப்பதிற் காட்டும் ஒருதலைப்பக்கம்; invidious distinction in serving food.

*[பந்தி + பேதம்]*

பேதம் = Skt.

**பந்திபோசனம்** *pandi-pōšaṉam,* பெ. (n.) உடனுண்ணுகை; dining in company.

*[பந்தி + போசனம்]*

போசனம் = Skt.

**பந்தியம் கூறுவாள்** *pandiyam kūṟuvāḷ,* பெ. (n.) கொசு; mosquito. (சா.அக.)

**பந்தியர்** *pandiyar,* பெ. (n.) ஒருவகுப்பினர்; persons of the same group. ***"தழுவத்தக்க பந்திய ரெவரும்"*** (கம்பரா. மாயாசீ. 1.)

*[பந்தி → பந்தியர்]*

**பந்தியேற்று-தல்** *pandi-y-ēṟṟu,* 5. செ.குன்றாவி. (v.t.) உடனுண்டு ஒருவன் நிலையை உயர்த்துதல்(நெல்லை.); to raise a person's status in society by dining with him.

*[பந்தி + ஏற்று-,]*

**பந்தி வஞ்சனை** *pandi-vañjaṉai,* பெ. (n.) பந்தியில் வேறுபாடு காட்டுதல்; invidious distinction in serving food.

*[பந்தி + வஞ்சனை]*

**பந்தி வழங்கு-தல்** *pandi-vaḻaṅgu-,* 7. செ.கு.வி. (v.i.) உணவு பரிமாறுதல்; to serve food. 'பந்தி வழங்கவிலை' (கோவ. 15)

*[பந்தி + வழங்கு-,]*

**பந்திவிசாரணை** *pandi-višāraṇai,* பெ. (n.) உணவளிக்கும் போது பந்தியிலுள்ளாரை விருந்தோம்பல்; attending on persons dining in a pandi.

*[பந்தி + விசாரணை]*

விசாரணை = Skt.

**பந்திவிட்டோடல்** *pandivittōḍal,* பெ. (n.) நோய் நீங்கல்; getting rid of the disease. (சா.அக.)

**பந்தினம்** *pantiṉam,* பெ. (n.) உறவினர் கூட்டம்; relatives; funsman.

*[பந்தம் → பந்து + இனம்]*

**பந்து¹** *pandu,* பெ. (n.) சுற்றம்; relation, kinsman. ***"சிந்தையா னினைவார்களைச் சிக்கெனப் பந்துவாக்கி"*** (தேவா. 263, 9.)

*[பந்தம் → பந்து]*

**பந்து²** *pandu,* பெ. (n.) 1. உண்டை வடிவான விளையாட்டுக் கருவி; ball used in play. ***"பந்தார் விறலி"*** (திவ். திருப்பா. 18.) 2. சுருள்; roll, as of string or thread. 3. நீர் வீசுங்கருவி வகை; water squirt. ***"பந்தொடு சிவிறியிற்***

*சிதற"* (சீவக. 86.) 4. மட்டத்துருத்தி; bellows (w.) 5. திரிகை (பிங்.); mill, handmill, potter's wheel. 6. கட்டு; (w.) tie, fastening. 7. சூழ்ச்சி செய்தல்; (w.) conspracy.

ம. பந்து. தெ. பந்தி

*[பற்று → பந்து]*



**பந்து³** *pandu,* இடை. (part.) பொருளின்றி வழங்கும் ஒரு சொல் விழுக்காடு; an expletive. "*என்னைக் கொண்டு பந்து*" (திருவாலவா. 30, 29)

க. பந்து

**பந்துக்கட்டு¹** *pandu-k-kaṭṭu,* பெ. (n.) 1. சுற்றமிகுதி; large circle of relations. 2. கொள்வதுங் கொடுப்பதுமான தொடர்பு (சம்பந்தக்கட்டு) (வின்.); relation by marriage.

*[பந்து + கட்டு]*

**பந்துக்கட்டு²** *pandu-k-kaṭṭu,* பெ. (n.) 1. சூழ்ச்சி; plot, conspiracy. 2. கூட்டச் சேர்க்கை; confederacy. 3. கட்டுக்கட்டிச் செல்லுகை; fabrication, forgery.

*[பந்து + கட்டு]*

**பந்துக்குடி** *pandu-k-kudi,* பெ. (n.) ஒருசார் செட்டிவகுப்பினர் (madu.); a sect of ceṭṭi caste.

**பந்துகம்** *pandugam,* பெ. (n.) ஒருவகை மூலிகைச் செடி; penta peles phoenicea. (சா.அக.)

**பந்துபந்தாய்விழல்** *pandupandāyviḻal,* பெ. (n.) கூட்டோடே விழல்; falling in lamps as round worm from the intestines. (சா.அக.)

**பந்துமாலை** *pandu-mālai,* பெ. (n.) பூப்பந்து (வின்.); flower garland rolled into a ball.

*[பந்து + மாலை]*

**பந்துமுலை** *pandumulai,* பெ. (n.) பப்படாம் என்னும் கடைச்சரக்கு; fever plant. (சா.அக.)

மறுவ: பற்பாடகம்

**பந்துவராளி** *pandu-varāḷi,* பெ. (n.) ஓராகவகை; a melody-type.

தெ. ம. பந்துவராளி

*[பந்து + வராளி]*

வராளி = Skt.

**பந்துவீச்சு** *pantu-viccu,* பெ. (n.) மட்டைப் பந்து ஆட்டத்தில் மட்டையுடன் விளையாட அணியமாக இருப்பவரை நோக்கிப் பந்தை வீசுதல்; bowling (in cricket). "*தன்னுடைய சிறந்த பந்து வீச்சால் அணிக்கு வெற்றியைத் தேடித்தந்தார்*"

*[பந்து + வீச்சு]*



**பந்தெறிகளம்** *panderi-kalam,* பெ. (n.) *பந்தடிமேடை* பார்க்க; see *pandadi-mēdai.* "*பந்தெறி களத்து மணிக்கயிற்றூசன் மறலிய விடத்தும்*" (பெருங். உஞ்சைச். 34, 115)

*[பந்து + எறி+களம்]*

**பப்ப** *pappa,* (int.) இகழ்ச்சிக்குறிப்பு; a term signifying ridicule, "*பப்பவப்பர்*" (திவ். பெரியதி. 1, 3, 7)

**பப்படகம்** *pa-p-padagam,* பெ. (n.) பப்படம் பார்க்க See Pappaḍam

**பப்படப்புல்** *pappada-p-pul,* பெ. (n.) மருந்துச்செடிவகை (நாஞ்.); a medicinal plant.

*[பற்படம் + புல்→பற்படப்புல்→பப்படப்புல்]*

**பப்படப்பூ** *pappada-p-pū,* பெ. (n.) பப்படத்திற்குரிய மாவிற் செய்த உண்பண்ட வகை; an eatable made of the dough for pappaḍam.

*[பப்படம் + பூ]*

**பப்படம்** *pappaḍam,* பெ. (n.) அப்பளம்; light, thin cake or water made of the flour of black gram to which bi-carbonate of soda is added.

தெ. அப்பட மு அப்பளமு. க. பப்பள பப்படி, அப்பள, அப்பட. ம. பப்படம்

**பப்பத்து** *pa-p-pathu,* பெ. (n.) பத்துக் கொண்ட கூறுகள் (தொல்.எழுத். 482,உரை); group of tens.

*[பத்து + பத்து]*

**பப்பரத்தி** *pappavathi,* பெ. (n.) *பம்பரத்தி* பார்க்க; see *pamparatti.* "*கண்டறிந்தார் பம்பரத்தி*" (விறலிவிடு)

*[பம்பரத்தி → பப்பரத்தி]*

**பப்பரப்புளி** *papparappuḷi,* பெ. (n.) பெருக்க மரம்; brahmin tamarind. (சா.அக.)

மறுவ: பார்ப்பாரப்புளி, பொந்தம்புளி.

**பப்பரமுள்ளி** *papparamulli,* பெ. (n.) கண்டங் கத்திரி; brahmin mully, indian night shade.

மறுவ: குத்துச்செடி (சா.அக.)

**பப்பிளி** *pappiḷi,* பெ. (n.) சுருள் பட்டைக் கொடி; a creeper. (சா.அக.)

**பப்பு¹–தல்** *pappu,* 4. செ.கு.வி. (v.i.) பரவித்திரிதல்; to roam about. "*சேரன் குலத்தனாம் பப்பிப்போய படைஞன்*" (தியாக.லீலை.14,7.)

**பப்பு²–தல்** *pappu,* 5. செகுன்றாவி (v.t.) உண்ணுதல்; to eat. "*பாராணமாய்த் தான்றானே பப்பினான்*" (பஞ்ச. திருமுக. 2016) 2. கொடுத்தல்; to give.

**பப்பு³** *pappu,* பெ. (n.) *பருப்பு,* பார்க்க; see *paruppu.* "*பப்புகடை, பப்பு கடை*" (உ.வ.)

*[பருப்பு → பப்பு]*

**பம்படாயம்** *pampadeāyam,* பெ. (n.) மாயக்கலை பற்றிய மூன்றெழுத்தி லொன்றாகிய கிலி; in magic, one of the three mystic syllables kili. (சா.அக.)

**பம்பரத்தி** *pambaratti,* பெ. (n.) **1.** காமம் மிக்குடையவள்; a passionate woman. **2.** ஆடு மாலை; one who does not stay at one place. (சா.அக.)

**பம்பரம்¹** *pambaram,* பெ. (n.) **1.** வேகமாகச் சுழற்றி விளையாடும் கருவி; top. "*பம்பரமா மெனச் சுழன்றார்*" (கம்பரா. கிங்கர. 30.) **2.** பாற்கடலைக் கடைதற்குத் தேவர்கள் மத்தாகக் கொண்ட மந்தர மலை; (w.) Mt. Mandara used by gods as a rod for churning the ocean of milk.

பம்பல் → பம்பர் → பம்பரம் skt. bhramaraka தலைப்பக்கம் விரிவானது. '*சாட்டையிலாப்பம்பரம்போல்*' (உவமத்.)

**பம்பரம்²** *pambaram,* பெ. (n.) *பம்பரத்தி* பார்க்க; (w.) see *pambaratti.*

**பம்பரமாட்டு¹-தல்** *pambaram-āṭṭu-,* 7. செ.கு.வி. (v.i.) பம்பரஞ் சுழற்றி விளையாடுதல் to spin a top.

*[பம்பரம் + ஆட்டு-,]*

**பம்பரமாட்டு²-தல்** *pambaram-āṭṭu-,* **8.** செ.குன்றாவி. (v.t.) அலைக்கழித்தல்; to trouble or vex.

*[பம்பரம் + ஆட்டு-,]*

**பம்பரை** *pambarai,* பெ. (n.) ஒரு வகைப் பலா; a kind of tree. (சா.அக.)

**பம்பல்** *pambal,* பெ. (n.) **1.** பரந்த வடிவு (சூடா.); expanse, spaciousness. **2.** ஒலி (அக.நி.) sound. **3.** களிப்பு; (w.) joviality, festivity. **4.** பொலிவு (திவா.); luxuriance, abundance. **5.** அறுவடை; (இ.வ.) harvest. **6.** துளி; drop. "*பானந்தனை யொத்து விழுந்தது மாரிப் பம்பல்*" (அரிச். பு. நாட். 4.)

*[பம்பு → பம்பல்]*

**பம்பவெட்டி** *pamba-veṭṭi,* பெ. (n.) ஒருவகை மரம்; (Nels.) apple bladder nut, l.tr..

*[பம்ப + வெட்டி]*

**பம்பளிமாசு** *pambaḷimāšu,* பெ. (n.) பெரு நாரத்தை; batavian orange. (சா.அக.)

**பம்பாய் வாத்து** *pambāy vāttu,* பெ. (n.) தட்டை வடிவிலுள்ளதும் உணவாகப் பயன்படு வதுமாகிய கடல்வாழ் மீன்; a sea fish called bombay duck; it is flat ans is relished in food. (சா.அக.)

*[பம்பாய் + வாத்து]*



**பம்பிகை** *pambigai,* பெ. (n.) பீர்க்கு (மலை.) sponge-gourd.

*[பம்பு → பம்பிகை]*

**பம்பு[1]–தல்** *pambu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. செறிதல்; to be close, thick, crowded. *"பம்பி மேகம் பரந்தது"* (கம்பரா. ஆற்று. 3.) 2. நிறைதல்; to be full. *"பம்புமுத முண்ணாத தென்னை யென்ன"* (பெரியபு. திருமுறை. 4.) 3. பரவுதல்; (பிங்.) to spread, over spread, as vegetation, water, darkness. *"இராமப் பேர் பம்ப"* (கம்பரா. தனி. 4.) 4. எழுதல் (சூடா.); to rise, ascend. 5. ஒலித்தல்; to sound. *"எதிர் பம்புஞ் சீயமதென"* (இரகு. திக்கு. 102.)

*[பம்பு → பம்புதல்]*

**பம்பு–தல்[2]** *pambu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. பரவுதல்; spreading. 2. பரந்த வடிவு; broad figure. (சா.அக.)

**பம்பு[3]** *pambu,* பெ. (n.) வேடிக்கை; merriment, pastime *"நம்பனடியவர்க்கு நல்காத் திரவியங்கள் பம்புக்காம்"* (தனிப்பா. 1, 93, 8.)

ம. பம்பு
*[வம்பு → பம்பு]*

**பம்பு[4]** *pambu,* பெ. (n.) *பம்பு மூங்கில்* பார்க்க; see *pambu mūṅgil.*

க. பொம்பு

port. மாம்பு.

**பம்புமூங்கில்** *pambu-mūṅgle,* பெ. (n.) *கல்மூங்கில்* பார்க்க; a veriety of bamboo. (இ.வ.) *see kalmūṅgil.*

*[பம்பு + மூங்கில்]*

**பம்பேயம்** *pambēyam,* பெ. (n.) நொச்சிமரம்; nocchi plant. (சா.அக.)

**பம்பை** *pambai,* பெ. (n.) 1. பறைப்பொது; a kind of drum or tabour. *"தழங்குரற் பம்பையிற் சாற்றி"* (சீவக. 40.) 2. முல்லை நெய்தனிலங்கட்குரிய பறை (திவா.) (இலக். வி. 392. உரை.); drum of jungle or maritime tracts. 3. பறட்டை மயிர் (பெரியபு. சிறுத். 27.) coarse, dishevelled, bushy hair, often too short to be tied.

*[பம்பு → பம்பை]*

**பம்பை[2]** *pambai,* பெ. (n.) இராமாயணத்துக் கூறப்பட்டுள்ள ஒரு பொய்கை; a lake mentioned in Rāmāyaṇa. *"புண்ணிய முருகிற் றன்ன பம்பையாம் பொய்கை புக்கார்"* (கம்பரா. சவரி. 9.)

*[பம்பு → பம்பை]*

**பம்பை[3]** *pambai,* பெ. (n.) பாம்பன் நீர்வழி; (w.) the pamban strait between the continent of india and the island of Ramesvaram

*[பம்பு → பம்பை]*

**பம்பைக்காரன்** *pambai-k-kāraṉ,* பெ. (n.) பம்பையடிக்கும் தொழிலுடையவன்; one whose profession is to beat the pambai drum.

*[பம்பபை + காரன்]*

**பம்பைசுற்றல்** *pambai-cuṟṟal,* பெ. (n.) மகளிர் விளையாட்டு வகை(வின்); a kind of girl's game.

*[பம்பை + சுற்றல்]*

**பம்பைத்தலை** *pambai-t-talai,* **பெ.** (n.) பறட்டைத் தலை; head with bushy uncombed hair.

*[பம்பை + தலை]*

**பம்பையடி–த்தல்** *pambai-y-aḍi-,* **செ.கு.வி.** (v.i.) இயைபின்றி அதிகமாய்ப் பேசுதல்; (இ.வ.) to indulge in irrelevant talks.

*[பம்பை + அடி –,]*

**பம்மக்கம்** *pammakkam,* **பெ.** (n.) ஓரத்தையல்; (இ.வ.) hemming.

*[பம்மல் → பம்மு → பம்மக்கம்]*

**தெ.** பம்மகமு

**பம்மந்திராய்** *pammantirāy,* **பெ.** (n.) பேறு காலச் சிக்கல்களையும் அரத்தச் சிக்கல் களையும் வெளிப்படுத்த உதவும் ஒரு மூலிகை; spreading chickwood. (சா.அக.)

**மறுவ:** பம்பம், பம்பந்திராய்

**பம்மணி** *pammaṇi,* **பெ.** (n.) முடி உதிரச் செய்யும் குதிரை நோய் (அசுவசா. 123.); a disease of horses in which the hair falls off.

**பம்மத்து** *pammattu,* **பெ.** (n.) *பம்மாத்து* பார்க்க, (w.) see *pammāttu.*

*[பம்மாத்து → பம்மத்து]*

**பம்மல்** *pammal,* **பெ.** (n.) **1.** மூட்டம்; lowering, as of clouds *'எழுந்தது தண்பனிப் பம்மல்'* (பாகவத. 10, கோவியர்.) **2.** தையல் நூலோட்டம்; basting, stitching coarsely. (w.) **3.** சென்னைக்கு அருகிலுள்ள ஓர் ஊர்; a town near chennai.

*[பம்மு → பம்மல்]*

**பம்மாத்து** *pammāttu,* **பெ.** (n.) வெளிப்பகட்டு (நெல்லை.); false show, pretension, deceptive appearances.

உருது. கம்மத்

*[பம்பு → பம்மு → பம்மாத்து]*

**பம்மாரி** *pammāri,* **பெ.** (n.) பெருங்குமிழ்; comb teak. (சா.அக.)

**மறுவ:** பம்பாரி

**பம்மாற்று** *pammāṟṟu-,* **பெ.** (n.) *பம்மாத்து* பார்க்க; see *pammāttu. "பம்மாற்றுக் காட்டிவந்த பாழ்ம்பதரே* (பஞ்ச. திருமுக. 617.)

*[பம்மாத்து → பம்மாற்று]*

**பம்மு¹–தல்** *pammu-,* **5. செ.கு.வி.** (v.i.) **1.** முகில் முதலியன மூட்டம் போடுதல்; to lower, as clouds. **2.** மறைதல்; to lurk, skulk. ***"காவலரைக் கண்டதும் திருடன் பம்மி விட்டான்"*** **3.** செறிதல்; to be close, thick, crowded. **4.** ஒலித்தல்; to sound. ***"பம்மை பம்பின்"*** (கம்பரா. கைகே. 60.)

**பம்மு²–தல்** *pammu-,* **5. செ.குன்றாவி.** (v.t.) நூலோட்டுதல்; to baste, pin a seam to be sewed. ***"பம்மித் தைக்கிறது"*** (வின்.)

**பம்மை²** *pammai,* **பெ.** (n.) பொம்மை (யாழ். அக.); doll puppet

*[பதுமை → பம்மை]*

**பம்மை²** *pammai,* பெ. (n.) பொம்மை (யாழ்.அக); doll, puppet.

*[பதுமை → பம்மை]*

**பய¹-த்தல்** *paya-,* 12. செ.கு.வி. (v.i.) 1. விளைதல்; to yield, produce, put forth fruit. *"பயவாக் களரனையர்" (குறள், 406)* 2. உண்டாதல் (திவா.) to come into existence; to be made. 3. பயன்தருதல்; to take place; to be productive of good or evil. **"நல்வினை பயந்த தென்னா"** (கம்பரா. கார்முக. 36) 4. கிடைத்தல் (சூடா.); to be obtained.

*[ப்பம் → பய → பய-,]*

**பய²-த்தல்** *paya-,* 12. செ.குன்றாவி. (v.t.) 1. படைத்தல்; to produce, create. *"தேவதேவன் செழும்பொழில்கள் பயந்து காத்தழிக்கும்"* (திருவாச. 5, 30) 2. பெறுதல் (திவா.); to beget generate, give birth to. *"பராவரும் புதல்வரைப் பயக்க"* (கம்பரா. மந்தரை.47.) 3. கொடுத்தல்; to give. *"இன்னருள் பயந்து"* (தேவா.775,4.) 4. பூத்தல்; to blossom. *"தாமரை பயந்த வொண்கேழ் நூற்றித ழலரின்"* (புறநா.27.) 5. இயற்றுதல்; to compose. *"சிங்கடி தந்தை பயந்த..... தமிழ்"* (தேவா.201,12.)

*[பயம்¹ → பய-,]*

**பய³-த்தல்** *paya-,* 12. செ.கு.வி. (v.i.) நிறம் வேறுபடுதல்; to change in hue or complexion, as the skin through love-sickness; to turn sallow through affliction. *"மாமையொளி பயவாமை"* (திவ்.இயற்.திருவிருத்.50.)

*[பசத்தல் → பயத்தல்]*

**பய⁴-த்தல்** *paya-,* 12. செ.கு.வி. (v.i.) அச்சமுறுதல்; to be afraid of, alarmed at, used only in the past tense. *"பயந்தழுதனணிற்ப"* (பெருங். வத்தவ. 13,47.)

*[பயம்² → பய-,]*

**பய** *paya,* பெ. (n.) 1. நீர்முள்ளியிலை; leaf of water thorn. 2. பைய, மெல்ல; slowly. (சா.அக.)

**பயக** *payaga,* பெ. (n.) முலைப்பால்; breast milk. (சா.அக.)

**பயகை** *payagai,* பெ. (n.) ஒருவகைமரம்; an unknown tree. (சா.அக.)

மறுவ. பயரை.

**பயசம்** *payašam,* பெ. (n.) *பயசு,* 1,2. (யாழ்.அக.) பார்க்க. see *payašu.*

**பயசா** *payašā,* பெ. (n.) மான்செவிக்கள்ளி; leafy milk spurge. deer's ear spurge.

மறுவ. இலைக்கள்ளி. (சா.அக.)

**பயசி** *payaši,* பெ. (n.) *பயசு,3.* பார்க்க; see *payašu,3.*

**பயசு** *payašu,* பெ. (n.) 1. நீர்; (பிங்.) water. 2. பால்; (பிங்.) milk. *"அழுபாலர் பயசுண்டல்போல்."* (திருப்பா. 68, 8) 3. திருநாமப்பாலை. (மலை); oval leaved china root.

**பயத்தம் பருப்பு** *payattam-paruppu,* பெ. (n.) பாசிப்பருப்பு; green gram. *"பயத்தம் பருப்புக் குழம்பு சுவையாக இருக்கும்".*

மறுவ. சிறுபருப்பு

பயற்றம்பருப்பு

**பயதம்** *payadam,* பெ. (n.) வண்டு; bee. (சா.அக.)

**பயதி** *payadi,* பெ. (n.) இயல்பு; (இ.வ) nature, characteristic.

**பயதிரா** *payadirā,* பெ. (n.) சுழல் வண்டு; whirling beetle. (சா.அக.)

**பயந்தாள்** *payandāḷ,* பெ. (n.) தாய் (சூடா.); mother. *"பயந்தாடனக்கு மொழிந்தனனே"* (வெங்கைக்கோ. 361.)

*[பயத்தல் → பயந்தாள்]*

**பயந்தோர்** *payandōr,* பெ. (n.) பெற்றோர்; parents. *"அவட் பயந்தோரை யானாது புகழ்ந்தன்று"* (பு. வெ. 11, ஆண்பாற். 5, கொளு)

*[பய¹–த்தல் → பயந்தோர்]*

**பயந்தோர்ப் பழிச்சல்** *payandōr-p-paḻiccal,* பெ. (n.) தலைவியின் பெற்றோரைத் தலைவன் வாழ்த்திப் புகழும் புறத்துறை (பு. வெ. 11, ஆண்பாற். 5.); (purap.) theme in which the hero praises the parents of his lady love.

*[பயந்தோர் + பழிச்சல்]*

**பயப்படு¹–தல்** *paya-p-paḍu-,* 20. செ.கு.வி அஞ்சுதல்; to be afraid of. *"சுற்றிப் பார்க்கப் பயப்பட்டுத் தூரவைத்துத் தொழுதோமே"* (தமிழ்நா. 234.)

*[பயம் → பயப்படு–,]*

**பயப்பய** *paya-p-paya,* adv. மெல்லமெல்ல; slowly. *"பயப்பயக் கொண்டு போனார்"* (கம்பரா. எழுச்சி 53.)

*[ஒருகா: பைய + பைய → பய + பய]*

**பயப்பாடு¹** *paya-p-pāḍu,* பெ. (n.) பயன் படுகை; fruition, fruitfulness. *"தொன்னெறி மரபாற் பயப்பாடுள்வழி"* (இலக். வி. 641.)

*[பயன் + பாடு → பயப்பாடு]*

**பயப்பு¹** *payappu,* பெ. (n.) 1. பயன்; profit, advantage. *"பயப்பே பயனாம்"* (தொல். பொ. 307.) 2. கருணை(வின்); grace, mercy, clemency.

*[பயன் → பயப்பு]*

**பயப்பு²** *payappu,* பெ. (n.) 1. நிறம் வேறுபடுதல்; change of hue, as of the skin through love sickness; turning sallow through affliction. *"செய்யவாயுங் ...... பயப் பூர்ந்தவே"* (திவ். திருவாய். 5,3,2.) 2. பொன்னிறம்; gold colour.

*[பய²–த்தல் → பயப்பு]*

**பயம்¹** *payam,* பெ. (n.) 1. பலன் (சூடா.); profit, gain, advantage. *"பயங்கெழு மாநிலம்"* (புறநா. 58.) 2. வினைப்பலன்; fruit of one's action. 3. பழம்; fruit. (இ.வ.) 4. இன்பம்; sweetnes, pleasantness. *"சீரமை பாடற்பயத்தாற் கிளர் செவிதெவி"* (பரிபா. 11, 69.) 5. அரசிறை (சிலப். 2, 2.); kings revenue. 6. தன்மை; nature. *"அங்கையு ணெல்லி யதன் பய மாதலால்"* (பு. வெ. 2, 13.)

*[பயன் → பயம்]*

**பயம்²** *payam,* பெ. (n.) 1. நீர் (திவா.); water. *"மாகமுட்டப் பயங்கொண்டு"* (திருவாலவா. 30, 4.) 2. பால்; milk. *"புலியுழை மடிப்பய முண்டு"* (உபதேகா. கைலை. 9.) 3. வாவி (திவா.); tank. 4. அமுதம் (சூடா.); nectar.

**பயம்பகர்—தல்** *payam-pagar-,* **3.** செ.கு.வி. (v.i.) பயன்படுதல்; to be of use. *'உலகு பயம்பகர'* (பரிபா. 11, 34.)

*[பயம்[1] + பகர்—தல்]*

**பயம்பு[1]** *payambu,* பெ. (n.) **1.** பள்ளம் (திவா.); depression, hollow. **2.** குழி; pit. *"கரந்து பாம்பொடுங்கும் பயம்பு"* (மலைபடு.199.) **3.** யானைபடுகுழி (பிங்.); pit to ensnare elephants, kheda. *"பயம்பில் வீழ்யானை"* (சிலப்.25.31.) **4.** நீர்நிலை (பிங்.); tank, pond.

*[பயம்[1] + பு.]*

**பயம்பு[2]** *payambu,* பெ. (n.) *வசம்பு* பார்க்க; see *vašambu* sweet flag. *"பயம்புங் கோட்டமும்"* (பெருங்.உஞ்சைக்.41,35.)

**பயரப்பெறு—தல்** *payara-p-peṟu,* **8.** செ.குன்றாவி. (v.t.) அரசினரால் திரும்ப எடுத்துக் கொள்ளப் படுதல் (T.S.S. iii, 167); to resume, as by government.

*[பெயர → பயர + பெறு—,]*

**பயருதி** *payarudi,* பெ. (n.) *திருநாமப்பாலை.* (மலை.) பார்க்க; see *tirunāmappālai.* oval-leaved china root.

**பயரை** *payarai,* பெ. (n.) மரவகை; (w.) ceylon tea. m.tr.,

**பயல்[1]** *payal,* பெ. (n.) **1.** சிறுபிள்ளை; boy. *"காந்திமதி நாதனைப் பார் அதி சின்னப்பயல்"* (பாரதி.) **2.** இழிஞன்; fellow, used in contempt. *"மாரப்பயல் கணை தைத்திட"* (குனிப்பா. 1,265,2.)

ம. பைதல், பசகன் பசுங்ஙள்

க. பசுள, பசுளெ

குட. பஜ்ஜ. து. பசி, பய்ய

தெ. பய்த். கோண். பெடி பார்ஜி. பெய்ய

ஒ.நோ. பைதல்.

*[பையல் → பயல்]*

**பயல்[2]** *payal,* பெ. (n.) **1.** பாதி (பிங்.) half. **2.** பாகம்; side, share. *"பொருப்பரசி பயலன்"* (திருக்கோ.240.) **3.** பள்ளம். (பிங்.); hollow. **4.** குறிப்புச் சொல்; suggestive word. *"பயலான பேச்சாலே கேட்க"* (திவ். திருநெடுந். 21, வ்யா. பக்.10.)

க. பஞ்சு. குட. பப்பி. து. பசலு

தெ. பஞ்சு. நாய்க். பயக். கோன். பையானா

குய். பாஃபா

*[பகல் + பயல்]*

**பயல்[3]** *payal,* பெ. (n.) (பேவ) **1.** சிறுவனை அன்புடன் அழைக்கப்பயன்படுத்தும் சொல்; a term of endearment used esp. while referring to boy. *"அந்தச் சுட்டிப் பயலை எங்கே காணோம்?"* **2.** மதிப்பூரவற்ற முறையில் ஓர் ஆணைக் குறிப்பிடப் பயன்பயன்படுத்தப்படும் சொல்; a term used contemptuously toreter to a man. *"கயவாளிப் பயல்' "திருட்டுப் பயல்" "எந்தப் பயலுக்கு என்னை எதிர்க்கும் துணிவு இருக்கிறது'*

**பயலாள்** *payal-āḷ-,* பெ. (n.) வளரிளமைப் பருவத்தவன்—ள்; adolescent.

*[பயல்[1] + ஆள்]*

**பயலி[1]** *payali,* பெ. (n.) மூடன்; stupid fellow, dunce. *'நான் முதலியாகிலுமாகிறேன், பயலியாகிலுமாகிறேன்'* (ஈ.டு,6,2,6.)

*[பயல் → பயலி]*

**பயலி²** *payali,* பெ. (n.) ***பசளை*** பார்க்க (இ.வ.); see *pasaḷai.*

*[வயலை → வயலி → பயலி]*

**பயலேறுவாரம்** *payal-ēṟu-vāram,* பெ. (n.) பண்ணையில் உழுபவனுக்கு உரிய வாரம்; (C.G.) proportion of the crop claimed by a tenant who contributes only his personal labour, but does not supply ploughts, oxen, seeds and manure

*[பயிர் → பயில் → பயல் + ஏறு + வாரம்]*

**பயலை** *payalai,* பெ. (n.) ***பயலை நோய்*** பார்க்க; see *payalai nōy.* "***என்பயலை யறிவுறா தொழிவதுவும்***" (தேவா.88,2.)

*[பசலை → பயலை]*

**பயளி** *payaḷi,* பெ. (n.) ***பயலை***(யாழ்.அக.) பார்க்க; see *payalai.*

**பயளை** *payaḷai,* பெ. (n.) **1.** பசலைக்கீரை; a kind of pasalai green. **2.** சிற்றாமுட்டிவேர்; root of ceylon sticky mallow. (சா.அக.)

*[பசலை → பயளை]*

**பயற்றங்கஞ்சி** *payaṟṟaṅ-kañji,* பெ. (n.) பயறு வெல்லம் முதலியவை கூட்டி அட்ட கஞ்சி; a liquid preparation with eereals, sugar, etc.,

*[பயறு + அம் + கஞ்சி]*

**பயற்றங்கன்னி** *payaṟṟaṅkaṉṉi,* பெ. (n.) காராமணி; cow pea. (சா.அக.)

**பயற்றங்காய்** *payaṟṟaṅ-kāy,* பெ. (n.) ஒருவகைப்பயறு (காராமணி) உள்ளடங்கிய காய்; pulse in the pod used for curry. (பதார்த்த.716.) **2.** பயறு வகை; a species of pulse. **3.** பூணூலின் நீளத்தைக் குறைக்க இடும் முடிச்சுவகை; sheepshank in the sacred thread.

*[பயறு + அம் + காய்]*

**பயற்றங்கு** *payaṟṟaṅgu,* பெ. (n.) காடைக்கண்ணிவரகு; indian oats. (சா.அக.)

**பயற்றங்கொடி** *payaṟṟaṅgoḍi,* பெ. (n.) தட்டைப்பயற்றஞ் செடி; chowless pean.

*[பயறு + அம் + கொடி]*

**பயற்றம்பருப்பு** *payaṟṟamparuppu,* பெ. (n.) ஒருவகைப் பச்சைப் பருப்பு; split green gram. (சா.அக.)

**பயற்றம்பொட்டு** *payaṟṟam-poṭṭu,* பெ. (n.) குறுநொய்யொடு கலந்த பயற்றந்தோல்; husk of cereals with small particles of grit.

*[பயறு + அம் + பொட்டு]*

**பயற்றம்மை** *payaṟṟammai,* பெ. (n.) சிச்சிலுப்பை பார்க்க; chicken-pox.

*[பயறு + அம்மை]*

**பயற்றமோடு** *payaṟṟamōdu,* பெ. (n.) ***பயற்றம்பொட்டு*** பார்க்க; see *payarram-poṭṭu.*

*[பயறு + அம் + ஓடு]*

**பயற்றுங்கள்ளி** *payaṟṟuṅkaḷḷi,* பெ. (n.) கள்ளிமரம்; tursted sparge tree.

*[பயசு → பயிற்று + கள்ளி]*

**பயற்றுமி** *payaṟṟumi,* பெ. (n.) *பயற்றம்பொட்டு* பார்க்க; see *payaṟṟam-poṭṭu* (w.).

*[பயறு + உமி]*

**பயறி** *payaṟi,* பெ. (n.) *பயற்றம்மை.* (இ.வ.) பார்க்க, see *payaṟṟammai.*

*[பயறி → பயரி]*

**பயறு** *payaṟu,* பெ. (n.) **1.** மொச்சை, உளுந்து; துவரை போன்றவற்றின் முழுப் பருப்பு; pulses of various kinds, "*பயற்றுமண்டி*" **2.** *பாசிப்பயறு* பார்க்க; see *paśi-p-payaṟu,* "*பாசிப்பயற்றை வடை செய்து சாப்பிட்டால் சுவையாக இருக்கும்*"

**பயறு** *payaṟu,* பெ. (n.) **1.** தவசப்பருப்பு; cereals, pulse of various kinds. **2.** பாசிப்பயறு; green-gram. "*பயற்றுத் தன்மை கெடாது கும்மாயமியற்றி*" (மணிமே.27, 185.) **3.** பார்க்க (பிங்.); the 14th naksatra. **4.** நிலவரியோடு சேர்த்துத் தண்டப்பெற்று வந்த சிறுவரி (நாஞ்.); a petty cess collected from landholders.

அறுவை(சித்திரை)

ம. பயறு **தெ.** பெசலு

**க.** பெசர் **கொலா.** பெசால்

**நாய்க்.** பெசால்

**பார்ஜி** : பயரி

**பயறு வகைகள்**

1. பாசிப்பயறு
2. உளுத்தம் பயறு
3. தட்டைப்பயறு
4. வயற்பயறு
5. காராமணிப்பயறு
6. மொச்சைப்பயறு
7. கொள்ளுப்பயறு
8. சிறுபயறு
9. பீனிசப்பயறு
10. மின்னிப்பயறு
11. சடைப்பயறு
12. நாய்ப் பயறு
13. நரிப்பயறு
14. காட்டுப் பயறு
15. எலிப்பயறு
16. துலுக்கப் பயறு
17. பனிப்பயறு
18. கொல்லைப்பயறு
19. கற்கடகப் பயறு
20. நீர்ப்பயறு
21. பிச்சிப்பயறு
22. கொடிப்பயறு

(சா.அக.)

**பயறுபோடு–தல்** *payaṟu-pōḍu-,* 20. செ.கு.வி. (v.i.) **1.** இறந்த எட்டாவதும் பதினைந்தாவது மாகிய நாட்களில் நடக்குஞ் சடங்குகளுக்கு உறவின்முறைப் பெண்டிரை அழைக்குங் குறியாகப் பயறுபோடுதல்; to offer cereals as a token of inviting women-relatives and friends for the funeral ceremonies conducted on the eighth and the fifteenth days after death. **2.** பயனின்றிப் பிறன் பொருட்டு உழைத்தல்; to work for another with no advantage to oneself.

*[பயறு + போடு–,]*

**பயன்** *payan,* பெ. (n.) **1.** செயலின் விளைவு; result of an cetion; consequence. ***"இந்தப் புதிய திட்டத்தின் பயனாக ஏழைகளுக்கு இலவசமாக வீடு கிடைத்தது." "மக்களுக்கு உதவாத கல்வியால் என்ன பயன்"*** **2.** ஒருவரால் அல்லது ஒரு செயலைக் செய்வதால் விளையும் நன்மை; ஏந்து; பயன்பாடு; benefit; use. ***"நான் அவனுடன் பேசுவதால் ஏதேனும் பயன்உண்டா?" "காய்கறிகளை நிறையச் சாப்பிடுவதால் பல பயன்கள் உள்ளன."***

**பயன்**[1] *payan,* பெ. (n.) **1.** *பயம்*[1] பார்க்க; see payam 1, **2.** ***'வேள்விப் பயன்'*** **(குறள்,87.) (திவா.) 2.** சொற்பொருள்; meaning, signification. ***"சொற்குப் பயன்றேர்ந்துவா"*** **(குமர.பிர.மதுரைக்.53.) 3.** செல்வம்; wealth ***"பயன்தூக்கி"*** **(குறள்,912.) 4.** ***பயம்***[1] பார்க்க see payam[1], 3 ***"பயனாகு நல்லாண்பனை"*** **(சிவப்.பிரபந். நால்வர்.17.) 5.** அகலம் **(திவா.);** width, breadth; extent. **6.** சாறு; juice. ***"வம்பார் கொழுங்கனிச் செழும்பயன் கொண்டு"*** **(தேவா.460.3.)**

**பயன்**[2] *payan,* ***பயம்***[3] பார்க்க, see payam[3] ***"சீர்த்திமென் பயன்...... அன்பராங்..... கன்றையூட்டுமால்"*** **(பிரபுலிங்.துதி.17.)**

**பயன்சொல்(லு)-தல்** *payan-šōl-,* **5. செ.கு.வி.** (v.i.) **1.** பயன் இன்னதென்று சொல்லுதல்; to give out results. **2.** பொருளுரைத்தல்; to interpret, as verses; to render the meaning of; to expound. (w.)

*[பயன் + சொல்-,]*

**பயன்படு-தல்** *payan-padu-,* **20. செ.கு.வி.** (v.i.) நன்மை விளைவிப்பதாக அல்லது உதவியாக இருத்தல்; be useful; be of help. ***"மின்சாரம் எத்தனையோ வகையில் நமக்குப் பயன்படுகிறது" "குழுகாயத்துக்குப் பயன்படும் வகையில் இந்த அமைப்பு இயங்கும்"***

**பயன்படு-தல்** *payan-padu-,* **20. செ.கு.வி.** (v.i) பயன்பாட்டிற்குவரியதாதல்; to be of use or services. ***"சொல்லப் பயன்படுவர் சான்றோர்"*** **(குறள்,1078.)**

*[பயன் + படு-,]*

**பயன்படுத்து-தல்** *payan-paduttu-,* **5. செ.கு.வி.** (v.i) தேவையை நிறைவேற்றும் பொருட்டு அல்லது நன்மை, ஏந்து போன்றவற்றைப் பெறும் பொருட்டு கையாளுதல்; பயன்படச்செய்தல்; use; utilize; make use of ***"இருக்கும் மூல வளங்களை முறையாகப் பயன்படுத்திப் பல தொழிற் சாலைகளை நிறுவலாம்" "தன் தந்தைக்கு இருக்கும் சாய்காலைப் பயன்படுத்தி அவன் எந்தச் செயலையும் செய்து நிறைவேற்றி விடுவான்."***

**பயன்பண்ணு-தல்** *payan-pannu-,* **5.செ.கு.வி.** (v.i.) ***பயன்சொல்(லு)*** பார்க்க; see *payansollu-,.*

*[பயன் + பண்ணு-,]*

**பயன்பழக்கு-தல்** *payan-palakku-,* **5.செ.குன்றாவி.**(v.t.) செய்யுட் பொருளுணர்த்து தல்; to teach the meaning of verses (w.).

*[பயன் + பழக்கு-,]*

**பயன்பாடு** *payanbādu,* பெ. (n.) **(உ.வ.)** பயன்தரும் அல்லது பயன்படக்கூடிய தன்மை; பயன்பாடு; use; utility. ***"இயற்கை உரங்களின் பயன்பாட்டை உழவர்கள் உணர்ந்திருக் கிறார்கள்" "நூலின் பின்னிணைப்பு அதன் பயன்பாட்டை மிகுவிக்கிறது".***

**பயன்மரம்** *payan-maram,* பெ. (n.) இனிய பழந்தரும் மரம்; fruit-bearing tree. "*பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றால்*" (குறள், 216.)

*[பயன் + மரம்]*

**பயன்முடிவு** *payan-muḍivu,* பெ. (n.) *பயன்முற்று* பார்க்க; (w.) see *payan-muṟṟu.*

*[பயன் + முடிவு]*

**பயன்முற்று** *payan-muṟṟu,* பெ. (n.) செய்யுளுக்குப் பொருள் கூறுமிடத்துப் பொருள் இனிது விளங்கத் தனித்தனியே பிரிக்கப்படும் சொற்றொடர்; portion of a stanza taken for the purpose of interpreting with ease (w.).

*[பயன் + முற்று]*

**பயனாளி** *payan-āḷi,* பெ. (n.) (பெ.வ) குறிப்பிட்ட திட்டம், சட்டம் முதலிய வற்றிலிருந்து பயன்பெறுபவர்; beneficiary. "*இந்த ஊரக வளர்ச்சித்திட்டத்தின் பயனாளிகள் ஏழை மக்கள்தான்*"

*[பயன் + ஆள் + இ]*

**பயனில்சொல்** *payan-il-col,* பெ. (n.) இழிசொல் நான்கனுள் ஒன்றாகிய வீண்சொல்; purposeless or useless word, word of no import, one of four iḻi-col, q.v. "*பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில் சொல்லெனு*" (மணிமே.24,127.) "*பயனில்சொல் பாராட்டுவானை மகனெனல் மக்கட் பதடியெனல்*" (குறள்.196.)

*[பயன் + இல் + சொல்]*

**பயனிலாள்** *payan-ilāḷ,* பெ. (n.) வேசை (சூடா.); harlot.

*[பயன் + இலாள்]*

**பயனிலி** *payan-ili,* பெ. (n.) பயனற்றவன்–வள்–து; useless person or thing.

*[பயன் + இலி]*

**பயனிலை** *payanilai,* பெ. (n.) சொற்றொடரில் எழுவாய் கொண்டுமுடியும் சொல்; predicate "*அன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே*" (தொல்.சொல்.67.)

*[பயன் + நிலை]*

**பயனீகரி** *payanīgari,* பெ. (n.) செந்தாழை; red fragrant screw pine. (சா.அக.)

**பயனுவமம்** *payan-uvamam,* பெ. (n.) பயன்பற்றிவரும் ஒப்புமை (தொல்.பொ.276, உரை.); (rhet.) comparison based on effect or result.

*[பயன் + உவமம்]*

**பயிக்கம்** *payikkam,* பெ. (n.) இரப்பு; alms. "*பாழூரிற் பயிக்கம்புக் கெய்தவாறே*" (தேவா.698,8.)

*[பய² → பயிக்கம்]*

**பயிட்டம்** *payiṭṭam,* பெ. (n.) முத்துவகை; (S.I.I.II,143,32.) a kind of pearl.

**பயித்தியக்கரப்பான்** *payittiya-k-karappāṉ,* பெ. (n.) பைத்தியத்தை உண்டாக்கும் ஒருவகைக் கரப்பான்; a variety of skin eruption causing visanity or unsoundness of mind. (சா.அக.)

**பயித்திய நாசனி** *payittiya nāsaṉi,* பெ. (n.) மலைமா; hill mango, hill balsam tree. (சா.அக.)

**பயிந்திரி** *payindiri,* பெ. (n.) செய்நஞ்சு வகை (யாழ்.அக.); a prepared arsenic.

**பயிர்[1]–தல்** *payir-,* 4. செ.கு.வி. (v.i.) விலங்கு முதலியன ஒன்று ஒன்றனைக் குறியிட்டு அழைத்தல்; to call, cry, as beasts, birds or insects. "*கடுவன்......மந்தியைக் கையிடூஉப் பயிரும்*" (புறநா.158.)

**பயிர்[2]–தல்** *payir-,* 2. செ.குன்றாவி. (v.t.) 1. அழைத்தல்; to summon, call "*நாட்டிறை பயிருங் காலை முரசம்*" (சிலப்.26,52.) 2. இசைத்தல்; to sound, as instruments. '*பண்ணுக்கிளை பயிரும் பண்ணியாழ்*" (மணிமே.7,46.)

*[ஒருகா.பயில் → பயிர்–,]*

**பயிர்[3]** *payir,* பெ. (n.) 1. விலங்குஅழைக்கும் ஒலிக்குறிப்பு; call, as of animals to attract one another '*கலை இளம்பிணையைப் பயிரான் அழைப்பின்*' (புறநா.157,உரை.) 2. பறவைக்குரல் (பிங்.); note of birds 3. ஒலி; sound, noise. "*பயிரொன்று கலையுஞ் சங்கும்*" (கம்பரா. உலாவி.8.) 4. இசைக்கருவி; musical instrument. "*பயிர்களார்ப்பெடுப்ப*" (கம்பரா. சம்புமாலி,22.) *5.* சைகை; hint, signal "*அறிபயிர் காட்ட*" (பெருங்.வத்தவ.14,10.) 6. விதந்து கட்டிய வழக்கு; (திவ.); cant, slang, code-word.

*[பயில் → பயிர்]*

**பயிர்[4]–த்தல்** *payir-,* 11. செ.குன்றாவி. (v.t.) 1. அருவருத்தல்; to show aversion to or disgust at. 2. மனங்கொள்ளாதிருத்தல். (சீவக.1624.); to be sulky or ill-humoured about.

*[பயில் → பயிர் → பயிர்–,]*

**பயிர்[5]** *payir-,* பெ. (n.) *பயிர்ப்பு* பார்க்க; see *payirppu* 1. "*பயிரிலா நரம்பிற்கீதம்*" (சீவக. 2048)

*[பயில் → பயிர் ]*

**பயிர்[6]** *payir-,* பெ. (n.) 1. பைங்கூழ்; (பிங்.); growing grain, crop, herbage, shrubbery. 2. பயன்படுத்தத்தகும் செடிகள்; any useful vegetable plant. 3. குருத்து (உரி.நி.); tender sprout. 4. பார்க்க, இடலை see iḍalai (L.) wild olive.

க. ம. பயிர்

*[பயில் → பயிர் ]*

**பயிர்க்குடி** *payir-k-kuḍi,* பெ. (n.) பயிரிடுங் குடி; (w.) cultivator, husbandman, peasant.

*[பயிர் + குடி]*

**பயிர்க்குழி** *payir-k-kuḻi,* பெ. (n.) பயிரிட்டு வளர்க்கும் பாத்தி; garden plot for raising cereals.

*[பயிர் + குழி]*

**பயிர்கொளுத்து–தல்** *payir-koḷuttu-,* செ.கு.வி. (v.i.) 1. பயிர்செய்தல்; to cultivate. '*ஏறப்பயிர் கொளுத்தும் ஏற்பாடும்*' (சரவண.பணவிடு.24.)

*[பயிர் + கொளுத்து–,]*

**பயிர்ச்சுழற்சி** *payir-c-cuḻaṟci,* பெ. (n.) சுழல் முறையில் பயிரிடுகை; crop rotation. "*நெல்லும் கரும்பும் சில இடங்களில் பயிர்ச்சுழற்சி முறையில் வேளாண்மை செய்யப்படுகிறது*"

*[பயிர் + சுழற்சி]*

**பயிர்ச்செலவு** *payir-c-celavu,* பெ. (n.) பயிர்த்தொழில்; cultivation, husbandary.

*[பயிர் + செலவு]*

**பயிர்செய்-தல்** *payir-sey-,* **வி.(-செய்ய,-** செய்து காண்க; *பயிரிடு;* see *parir-iṭu.*

**பயிர்த்தொழில்** *payir-t-toḻil,* **பெ.** (n.) வேளாண்மை; husbandry, agriculture.

*[பயிர் + தொழில்]*

**பயிர்தீக்குங்காற்று** *payir-tikkuṅ-kāṟṟu,* **பெ.** (n.) காலமல்லாத காலத்தில் **உண்டாவதும்** பயிரை அழியச் செய்வதுமாகிய **காற்று;** unseasonal wind that blights the crop **(w.).**

*[பயிர் + தீய்க்கும்காற்று → தீக்கும்காற்று]*

**பயிர்ப்பங்கு** *payir-p-paṅgu,* **பெ.** (n.) மரங்கள் வைத்து வளர்த்தற்காகக் கொடுக்கும் விளைவின் பகுதி; share of the produce of trees given to the cultivator who reared them (w.)

*[பயிர் + பங்கு]*

**பயிர்ப்பு** *payirppu,* **பெ.** (n.) **1.** அருவருப்பு **(திவா.);** disgust, abhorrence. **2.** மகடூஉக் குணம் நான்கனுள் கண்டறியாதன கண்டுழி யுண்டாம் மனங்கொள்ளா நிலை **(பிங்.);** delicacy, modesty, shrinking from anything strange, one of four magadūu-k-kuṇam, q.v. ***"கண்டறியாதன கண்டுழி மனங் கொள்ளாத பயிர்ப்பும்"*** **(தொல். பொ. 99, உரை.) 3.** மனங் கொள்ளாமை; disagreement, estrangement. *"பயிர்ப்பறச் சிறகாற் புல்லி"* **(சீவக. 1624.) 4.** பிசின்; resin. *"பலவின் பயிர்ப்புறு தீங்கனி"* **(கலித். 50.) 5.** தூய்மையற்றது; unpurity, uncleanness (w.).

*[பயிர்[3] → பயிர்ப்பு]*

**பயிர்பிடி-த்தல்** *payir-piḍi-,* **செ.கு.வி.** (v.i.) பயிரில் தவச மணி பற்றுதல்; to put forth grains of corn.

*[பயிர் + பிடி-,]*

**பயிர்வழி** *payir-vaḻi,* **பெ.** (n.) **1.** வேளாண்மை செய்யப்பட்ட வயல்; cultivated field. ***"பயிர்வழிக் குத்தகை எச்சம்"*** **2.** வயலிடையுள்ள பாதை; path through the fields.

***[பயிர் + வழி]***

**பயிர்வெளி** *payir-veḷi,* **பெ.** (n.) வயல்; **(வின்.)** field.

*[பயிர் + **வெளி**]*

**பயிர்வை-த்தல்** *payir-vai-,* **4. செ.கு.வி.** (v.i.) **1.** பயன் தரும் **மரஞ்செடி கொடிகள்** நடுதல்; to plant fruit trees or vegetables. **2.** நில வேளாண்மை செய்தல்; **(இ.வ.)** to cultivate lands.

*[பயிர் + வை-,]*

**பயிரடி-த்தல்** *payir-aḍi-,* **4. செ.கு.வி.** (v.i.) செழித்தற் பொருட்டுப் **பயிரிடையேயுழுதல்;** to plough between rows of standing crop to promote its growth

*[பயிர் + அடி-,]*

**பயிரடைப்பு** *payir-aḍaippu,* நிலத்தைப் பயிர் செய்ய ஒப்படைக்கை; tenancy. *'பயிரடைப்பான நிலத்திலே'* (S.I.I. V, 373.)

*[பயிர் + அடைப்பு]*

**பயிரவ மாத்திரை** *payira māttirai,* பெ. (n.) சீதளம், புண் இவற்றிற்குக் கொடுக்கும் மாத்திரை; pill given for phlegm, humour, ulcers etc. (சா.அக.)

**பயிரவன்** *payiravan,* பெ. (n.) ஒரு சிலேட்டுமக் கூறு; a phlegmatic disposition. (சா.அக.)

**பயிரவி²** *payiravi,* பெ. (n.) முடக் கொற்றான் (மலை.) பார்க்க, lasser balloon vine. see mudakkoṟṟāṉ.

**பயிரவீதி** *payiraveethi,* பெ. (n.) தங்க அரளி; yellow, excile or foreign oleander. (சா.அக.)

**பயிரழிவு** *payir-āḻivu,* பெ. (n.) விலங்கு, வெள்ளம், முதலியவற்றால் உண்டாம் பயிர்க் கேடு; damage to crops by beasts, floods, etc.

*[பயிர் + அழிவு]*

**பயிரா¹-தல்** *payir-ā-,* 6. செ.கு.வி. (v.i.) சினையாதல்; to be pregnant, as animals. *"இந்த மாடு பயிராகியிருக்கிறது"* (இ.வ.)

*[பயிர் + ஆ -,]*

**பயிரா-தல்²** *payir-ā-,* 6. செ.கு.வி. (v.i.) பயிருண்டாதல்; to grow up, as crop. *"வாழை கமுகொடு தெங்கு பயிராவதாய்"* (அறப். சத.18)

*[பயிர் + ஆ -,]*

**பயிராகு-தல்** *payirāku-,* 7. செ.கு.வி. (v.i.) பயிர் விளைதல்; be cultivated. *'இந்த ஆண்டு மழை இல்லாமல் நிலத்தில் ஒன்றும் பயிராகவில்லை'*

*[பயிர் + ஆகு-,]*

**பயிரி¹** *payiri,* பெ. (n.) *பசளை* பார்க்க; (மூ.அ.) see *pašaḷai.*

**பயிரி²** *payiri,* பெ. (n.) அம்மைவகை (யாழ்.அக.); measles.

*[பயிர் → பயிரி]*

**பயிரிடு¹-தல்** *payir-iḍu-,* 20. செ.கு.வி. (v.i.) (நிலத்தில்) பயிர் விளைவித்தல்; வேளாண்மை செய்தல்; grow crops; cultivate. *"இந்த நிலத்தில் என்ன பயிரிடலாம்" "நெல் பயிரிட முடயாது"*

**பயிரிடு²-தல்** *payir-iḍu-,* 20. செ.கு.வி. (v.i.) விலங்கு ஒலிக்குறிகாட்டி அழைத்தல்; to call, cry out, as animals. *"தான்வீழ் பெடைக்குப் பயிரிடூஉச் சுரக்கும்"* (நற். 31.)

*[பயிர் + இடு-,]*

**பயிரிலி** *payiri-ili,* பெ. (n.) வெற்றுநிலம்; uncultivated land *"பயிரிலி புன்செயாய்க் குட்டமு மண்ணுமிட்டுக் கிடந்தமையில்"* (S.I.I. III, 170, 16.)

*[பயிர் + இல் → இலி]*

'இ' உடைமைப்பொருளீறு

**பயிரிளம்** *payiriḷam,* பெ. (n.) வெள்வேல்; babal with white bark. (சா.அக.)

**பயிருகம்** *payirugam,* பெ. (n.) பழம்பாசி (மலை.); a kind of moss.

**பயிருழவு** *payir-uḻavu,* பெ. (n.) பயிரிடையே உழுகை; ploughing between rows of standing crop (w.).

**மறுவ.** பயிரடி

*[பயிர் + உழவு]*

**பயிரூக்கி** *payir-ūkki,* பெ. (n.) பயிரினுடைய சீரான வளர்ச்சிக்கு ஊக்கம் தரக்கூடிய வேதிப் பொருள்; plant hormone.

*[பயிர் + ஊக்கி]*

**பயிரெரித்த பாவி** *payirrerita-pāvi,* பெ. (n.) செம்பல்லி; red lizard. (சா.அக.)

**பயிரேற்று–தல்** *payir-ēṟṟu-,* **6.** செ.குன்றாவி. (v.t.) பயிர் செய்தல்; to cultivate. *"பயிரேற்றி அனுபவிக்க"* (s.i.i. iii, **134.**)

*[பயிர் + ஏற்று–,]*

**பயிரேறு–தல்** *payir-ēṟu-,* **7.** செ.கு.வி. (v.i.) பயிர் செழித்தல்; to thrive, as vegetation

*[பயிர் + ஏறு–,]*

**பயில்[1]–தல்** *payil-,* **2.** செ.கு.வி கல்வி, கலை முதலியவை கற்றல்; பள்ளியில் படித்தல்; learn (a subject, an art, etc.); study. (in a school, etc.) *"இவர் என்னிடம் இசை பயின்றவர்" "தட்டச்சுப் பயின்று வருகிறேன்"*

**ம.** பயிலுக

**பயில்[2]–தல்** *payil-,* **2.** செ.கு.வி. (v.i.) **1.** தேர்ச்சியடைதல்; to become trained, accustomed **2.** பழகுதல்; to gain acquaintance, move as friends. *"பயிறொறும் பண்புடையார் தொடர்பு"* (குறள், **783.**) **3.** நிகழ்தல்; to occur, take place. **4.** நெருங்குதல்; to be close, thick, crowded. *"பயிலிதழ் மலர்"* (கலித். **103.**) **5.** பொருந்துதல்; to join, unite. **6.** ஒழுகுதல்; to behave, conduct oneself. **7.** நடமாடுதல்; to roam about. *"நந்தி நந்தினி பயிலுகின்ற பேரொலி"* (தணிகைப்பு. அகத். **103.**) **8.** தங்குதல்; to stay, abide, reside, to haunt *"புலவர் பயிலுந் திருப்பனையூர்"* (தேவா. **635, 6.**)

**ம.** பயிலுக

**பயில்[3]–தல்** *payil-,* **14.** செ.குன்றாவி. (v.t.) **1.** கற்றல் (திவா.) to practise, learn by practise *'படைக்கலம் யாவும் ...... மாதவன் வயிற்பயில் வரதன்'* (பாரத. வாரணா. **29.**) **2.** சொல்லுதல்; to speak, utter, tell, talk.

**ம.** பயிலுக

*[பயிறல் → பயில்தல்]*

**பயில்[4]–தல் (பயிறல்)** *payil-,* **3.** செ.கு.வி. (v.i.) ஒலித்தல் (பிங்.); to utter indistinct sounds as birds; to sound. *"பொழில் குயில் பயிறரும புரம்"* (தேவா. **535, 1.**)

**ம.** பயிலுக

**பயில்[5]–தல்** *payil-,* **5.** செ.குன்றாவி. (v.t.) அழைத்தல்; to call. *"பேடையைப் பயிலுங் குயில்"* (கம்பரா. வனம்புகு. **45.**)

**பயில்[6]** *payil,* பெ. (n.) **1.** பழக்கம்; practice, habit, exercise, use. **2.** சொல்; word.

**பயில்[7]** *payil,* பெ. (n.) **1.** சைகை; beckoning sign, signal. ***"பயிலாக வேதுக்கழைத்தீரென வந்தாள்"*** (விறலி.விடு.) **2.** குழூஉக்குறி; secret language, cant. ***"பயில் பலவும் பேசி"*** (பதினொ. ஆளுடை. திருவுலா. 112.)

**பயில்பன்னா** *payilpaṉṉa,* பெ. (n.) கப்பல் முன்னணியம் (nant.); forecast.

**பயில்விழிகாட்டல்** *payilviḻikkāṭṭal,* பெ. (n.) பெண்களிடத்தில் கண்குறிப்புக் காட்டல்; wink at girls. (சா.அக.)

**பயில்வு** *payilvu,* பெ. (n.) இருப்பு; existence, life. ***"அடிமைக்கட் பயிலாதார் பயில்வென்னே"*** (தேவா. 1063, 6.)

*[பயில் → பயில்வு]*

**பயிலகம்[1]** *payilagam,* பெ. (n.) தட்டச்சு, சுருக்கெழுத்து முதலியன பயிலுதற்குரிய நிறுவனம்; institute of training (in typing, shortand, etc.) ***"தட்டச்சுப் பயிலகம்"***

**பயிலகம்[2]** *payilagam,* பெ. (n.) தட்டுப்பலா; an unknown tree probably a variety of jack tree. (சா.அக.)

**பயிலடி—த்தல்** *payil-aḍi-,* **4.** செ.கு.வி. (v.i.) சீழ்க்கையடித்தல்; (இ.வ.) to whistle.

*[பயிர் → பயில் + அடி –,]*

**பயிலரங்கம்** *payil-araṅgam,* பெ. (n.) கலந்துரையாடல் மூலமும் செய்முறைப் பயிற்சி மூலமும் குறிப்பிட்ட துறையை அறிந்து கொள்வதற்காக நடத்தப்படும் குறுகிய காலப் பயிற்சி; workshop on a particular subject, 'அகராதியியல் பயிலரங்கு', 'நாடகக்கலைப் பயிலரங்கு'

*[பயில் + அரங்கம்]*

**பயிலல்** *payilal,* பெ. (n.) எடுத்தலோசை (சூடா.); high note.

*[பயில் → பயிலல்]*

**பயிலி** *payili,* பெ. (n.) *பசளை* (இ.வ.) பார்க்க; see *pašaḷai.*

*[பயில் → பயிலி]*

**பயிலிகம்** *payiligam,* பெ. (n.) குப்பைமேனி; rabbish plant. (சா.அக.)

**மறுவ:** பயிலியம்

**பயிலியம்** *payiliyam,* பெ. (n.) குப்பைமேனி பார்க்க (மலை.); a wide-spread common weed.

*[பயில் → பயிலியம்]*

**பயிற்கணக்கு** *payiṟ-kaṇakku,* பெ. (n.) குழூஉக்குறியெண்; (j.) words denoting numbers, current among merchants.

*[பயில் + கணக்கு]*

**பயிற்சி** *payiṟci,* பெ. (n.) வேலை, விளையாட்டு போன்றவற்றில் பட்ட அறிவு பெறத் தேவையான செயல் குறிப்புகளைப் பல முறை செய்து பழக்கப்படுத்திக்கொள்ளும் முறை; traning. ***"போதுமான பயிற்சி இல்லாதால்தான் நம் வீரர்கள் போட்டியில் தோற்றார்கள்"*** ***"போர்க்காலத்தில் மக்களுக்கும் படைக்கலப் பயிற்சி அளித்தல் உண்டு"***

**பயிற்சி** *payiṟci,* பெ. (n.) **1.** பழகு; practice, habit, training, learning. **2.** பழக்கம்; familiarity, acquaintance.

*[பயில் → பயிற்சி]*

**பயிற்சிக்கல்லூரி** *payirci-k-kallūri,* பெ. (n.) குறிப்பிட்ட தொழில், வேலை முதலிய வற்றுகான பயிற்சி அளிக்கும் நிறுவனம்; training colleger. ***"ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி" "காவலர் பயிற்சிக் கல்லூரி"***

*[பயிற்சி + கல்லூரி]*

**பயிற்சியாளர்** *payirci y-āḷar,* பெ. (n.) குறிப்பிட்ட பணிக்கு ஏற்ற பயிற்சியை அளிப்பவர்; trainer; coach. *"ஒட்டப் பந்தய வீராங்கனையார் தமக்கென ஒரு பயிற்சியாளரை அமர்த்திக் கொண்டுள்ளார்" "கொலை நடந்த இடத்துக்குத் துப்புத் துவக்கும் நாயுடன் அதன் பயிற்சியாளரும் வந்திருந்தார்"* **2.** பயிற்சி பெறுபவர்; trainee. *"பயிற்சியாளர் களுக்குச் சான்றிதழ் வழங்கப்பட்டது"*

*[பயிற்சி → பயிற்சியாளர்]*

**பயிற்றி** *payiṟṟi,* பெ. (n.) பயிற்சி பார்க்க; 2 *'பழமையும் பயிற்றியும்........ உடையார்'* (இறை. 2. பக், 27.)

*[பயிற்சி → பயிற்றி]*

**பயிற்று-தல்** *payiṟṟu-,* 5. செ.குன்றாவி. (v.t.) **1.** பழக்குதல்; to train, habituate accustom. *"சிறந்தது பயிற்றல்"* (தொல். பொ. 192.) **2.** கற்பித்தல்; to teach, instruct. *"அற்றை நாளாதியாக வவர்களும் பயிற்றுகின்றார்"* (சீவக. 1647.) **3.** பலகாற் கூறுதல்; to repeat many times. *"கரப்பி லுள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி"* (புறநா. 34.) **4.** சொல்லுதல்; to speak, utter, tell. ***"தீண்டியுங் கண்டும் பயிற்றியும்"*** (பு.வெ. 9, 11.) **5.** செய்தல்; to do, perform *"வழிபாடு பயிற்றினான்"* (திருவானைக். தீர்த்த. 34.) **6.** கொளுவுதல்; to cause to hold. *"பயிற்றிய தெனநிறம் பரந்த"* (துணிகைப்பு. நாட்டுப். 53.)

*[பயில் → பயிற்று-,]*

**பயிற்றுநர்** *payiṟṟunar,* பெ. (n.) ***பயிற்சியாளர்,*** பார்க்க. see *payirciyāḷar.*

*[பயில் → பயிற்று → பயிற்றுநர்]*

**பயிற்றுமொழி** *payiṟṟu-moḻi,* பெ. (n.) **பாடம் கற்பிக்கப்** பயன்படுத்தும் மொழி; medium of instruction. *"முன்பு கல்லூரியில் **ஆங்கிலம் மட்டும்** பயிற்று மொழியாக **இருந்தது"***

*[ பயிற்றும் + மொழி]*

**பயிற்றுவி-த்தல்** *payiṟṟu-vi-* 8. செ.குன்றா.வி1. ஒருவருக்கு ஒன்றைக் கற்றுக்கொடுத்தல்; பயிற்சி அளித்தல்; teach. *"கல்வி பயிற்றுவிக்கும் ஆசிரியர்களுக்கு உயர் ஊதியம் தரப்பட வேண்டும்" "இங்குப் பெண்களுக்குத் தையல் பயிற்றுவிக்கப்படும்"* **2.** ஒருவரைப் பழக்குதல்; train. *"எங்களுடைய தொழிற்சாலைக்கு ஏற்ற வகையில் தொழிலாளர்களைப் பயிற்று விக்கிறோம்"*

*[பயில் → பயிற்று → பயிற்றுவி-,]*

**பயிறு** *payiṟu,* பெ. (n.) *பயறு* பார்க்க; see *payaṟu. "பயிறு வகைகளை வேகவைத்துச் சாப்பிட்டால் உடலுக்கு நல்லது என்பார்கள்".* (உ.வ.)

*[பயறு → பயிறு]*

**பயின்**[1] *payiṉ,* பெ. (n.) **1.** உட்படுகுருத்து; the inner most tender leaves of palm sprouts. **2.** குருத்து; shoots of the palm. **3.** அரக்கு; lac. (சா.அக.)

**பயின்**[2] *payiṉ,* பெ. (n.) **1.** பிசின்; gum, glue. *"பல்கிழியும் பயினும்"* (சீவக. 235.) **2.** பாலேடு (திவா.); cream. **3.** கப்பலின் சுக்கான்; rudder. *"சிதையுங் கலத்தைப் பயினாற் றிருத்தும் திசையறி மீகானும்"* (பரிபா. 10, 54.)

*[பயில்[1] → பயின்]*

**பயினன்** *payiṉaṉ,* பெ. (n.) ஆயிரந்தலை யுடையதாகக் கருதப்படும் அரவரசு (ஆதிசேடன்); ādišēša. *"பயினன் மேல்வரு கல்லென"* (பாரத. சம்பவ. 119.)

*[பை → பையினன் → பயினன்]*

**பயினாசெல்லி** *pauyinācelli,* பெ. (n.) ஒரு வகைச் செடி; a plant named acanthus ilicifolia. (சா.அக.)

**பயினி**[1] *payiṉi,* பெ. (n.) கூடுகை (திவா.); union.

*[பயில்[1] → பயினி]*

**பயினி**[2] *payiṉi,* பெ. (n.) குறிஞ்சி நிலத்து உண்டாம் ஒருவகை மரம் (குறிஞ்சிப். 69.); a kind of tree peculiar to hilly tracts.

து. பாய்னி.

*[பயின் → பயினி]*

**பயூதூலை** *payūtūlai,* பெ. (n.) வெள்ளி; silver. (சா.அக.)

**பயோகனம்** *payōgaṉam,* பெ. (n.) ஆலங்கட்டி; hail stone. (சா.அக.)

**பயோதகம்** *payōdakam,* பெ. (n.) **1.** பெருங் கடல்; ocean. **2.** முகில்; cloud. (சா.அக.)

மறுவ: பயோதம்

**பயோதகி** *payōdagi,* பெ. (n.) பாற்கடல்; milk sea. (சா.அக.)

**பயோததி** *payōtati,* பெ. (n.) **1.** பாற்கடல்; the sea-milk. *"திரை கெழு பயோத்தி துயிலும் தெய்வவான் மரகத மலை"* (கம்பரா. திருவவ. 12.) **2.** கடல் (பிங்.); sea.

*[பயம் + உததி]*

உததி = Skt.

**பயோதம்** *payōdam,* பெ. (n.) மேகம் (யாழ்.அக.); cloud.

**பயோதரப்பத்து** *payōdara-p-pattu,* பெ. (n.) மகளிர் மார்பகங்களைப் பற்றிப்பத்துப் பாடல்களாற் சிறப்பித்துக்கூறும் சிற்றிலக்கிய வகை. (இலக்.வி.852.); a poem in ten stanzas on woman's breasts.

*[பயோதரம் + பத்து]*

**பயோதரம்** *payodaram,* பெ. (n.) **1.** முகில் (பிங்.); cloud as holding water. (நீரைக் கொண்டது.) **2.** கடல்; (யாழ்.அக.); sea **3.** முலை; woman's breasts, as containing milk. *"பஞ்சா ரமளிப் பிரிதலுண்டோ வெம் பயோதரமே"* (திருக்கோ.378.) **4.** பால் (யாழ்.அக.) milk **5.** கரும்பு. (யாழ்.அக.); sugar cane.

*[பயம் + உதரம்]*

உதரம் = Skt.

**பயோதி** *payōdi,* பெ. (n.) கடல்; sea. "*பயோதிபோற் சூழ்ந்ததாமே*" (மேருமந்.1077)

**பயோதிகம்** *payōdigam,* பெ. (n.) கடல்நுரை; sea froth-cuttle fish bone. (சா.அக.)

**பயோநிதி** *payōnidi,* பெ. (n.) பெருங்கடல்; ocean. (சா.அக.)

**பர்ப்படகம்** *parppadagam,* பெ. (n.) *பர்ப்பாடகம்* (இ.வ.) பார்க்க; see *parppāḍagam.*

*[பர்ப்பாடகம் → பர்ப்படகம்]*

**பர்ப்பாடகம்¹** *parppāḍagam,* பெ. (n.) 1. செடிவகை; fever plant, s.sh. (w.)

**பர்ப்பாடகம்²** *parppāḍagam,* பெ. (n.) அப்பளவகை; a kind of thincake. (இ.வ.)

*[அப்பளம் → பப்படம் – பர்ப்படம் → பர்ப்பாடகம்]*

**பர்பணம்** *parpaṇam,* பெ. (n.) *பாவட்டை* (தைலவ.) பார்க்க; see *pāvaṭṭai.*

**பர–த்தல்** *para-,* 10. செ.கு.வி. (v.i.) 1. பரவுதல்; to spread, extend; to be diffused, as water, air, odour, epidemic, clouds or light. "*பனிமலை முதல் குமரி முனை வரை பரந்திருக்கும் துணைக்கண்டம்*" "*ஆனிற் பரக்கும் யானைய முன்பிற்கானக நாடனை*" (புறநா.5.) 2. தட்டை யாதல்; to be flattened, as by hammering; to be broad, as a plane surface. "*நாநுனிபரந்து*" (தொல்.எழுத்.93.) 3. அலமருதல்; to be bewildered, perplexed. "*பரந்து கெடுக உலகியற்றி யான்*" (குறள்,1062.)

**தெ.** பரட்சு **க.** பரெ **ம.** பரக்க **து.** பரதுனி

*[பா → பார் – பர–]*

**பரக்க¹** *parakka,* வி.அ. (adv.) 1. ஓர் இடத்தில் மட்டும் அல்லாமல் பல இடங்களில்; பெருமளவில்; extensively. "*பெண்ணுரிமைக் கருத்துகளை நூல் முழுதும் பரக்கக் காணலாம்*" 2. இடத்தை நிரப்பி இருக்கும்படி; பரப்பி; spreading occupyingalarge space. "*ஏன் கூடத்தில் பண்டங்களைப் பரக்க வைத்திருக்கிறாய்*"

*[பா → பார் → பர → பரக்க]*

**பரக்க²** *parakka,* து.வி (adv). விரிவாய்; in detail, in extense. "*பரக்கவென்பகர்வது*" (கம்பரா. சடாயுவுயிர்.11.)

*[பர → பரக்க]*

**பரக்கப்பரக்கப்பார்–த்தல்** *parakka-p-parakka-p-pār-,* 4. செ.கு.வி. (v.i.) அலமந்து விழித்தல்; to look blank and confused. (கொ.வ.)

*[பரக்க + பரக்க + பார்–,]*

**பரக்கம்** *parakkam,* பெ. (n.) அகன்றது; extension, wideness.

*[பர → பரக்கம்]*

**பரக்கழி¹–தல்** *parakkaḻi-,* 2. செ.கு.வி. (v.i.) பெரும்பழியுறுதல்; to fall into disgrace; to lose one's fair name. "*நின்மல னென்றோதிப் பரக்கழிந்தாள்*" (திவ்.பெரியதி.4,8,5.)

*[பர → பரக்கம் + அழி–,]*

**பரக்கழி²–த்தல்** *parakkaḻi-,* 4. செ.குன்றா.வி. (v.t.) பெரும்பழிவிளைத்தல்; to cause disgrace. "*கொந்தளமாக்கிப் பரக்கழித்து*" (திவ்.நாய்ச். 12,3.)

*[பர → பரக்கம் + அழி–,]*

**பரக்கழி³** *parakkaḻi,* பெ. (n.) 1. பெரும்பழி; disgrace, infamy "*பரக்கழி யிதுநீ பூண்டாற் புகழையார் பரிக்கற் பாலார்*" (கம்பரா. வாலிவதை.79.) 2. சீர்கெட்டவ–ன்–ள்; (நெல்லை.) immodest person.

*[பரக்கம் + அழி]*

**பரக்கழிவு** *parakkaḻivu,* பெ. (n.) பார்க்க, *பரக்கழி.* see *parakkaḻi.*

*[பரக்கம் + அழிவு]*

**பரக்காவெட்டி** *parakkāveṭṭi,* பெ. (n.) அதிகமாய் விரைவுபடுபவன்–ள், overhasty person. (இ.வ.)

*[பரபர → பரபரக்கா → பரக்கா + வெட்டி]*

**பரக்கு–தல்** *parakku,* 5. செ.கு.வி. (v.i.) அலைந்துதிரிதல்; to roam about. "*பரக்கினார் படுவெண்டலை யிற்பலி*" (தேவா.117,9.)

*[பர → பரக்கு–,]*

**பரக்குடி** *para-k-kuḍi,* பெ. (n.) பரவர் குடியிருக்குமிடம்; (இ.வ.) parava quarters.

*[பரவர்குடி → பரக்குடி]*

**பரக்கூலி** *para-k-kūli,* பெ. (n.) சுமைகூலி; wages for carrying. "*பரக்கூலிபட்டுக் கொண்டுவந்து*" (S.I.I.v,497.)

*[பாரம் → பரம் + கூலி]*

**பரக்கொடை** *parakkoḍai,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy.

*[பரம் + கொடை]*

**பரக்கொரவை** *para-k-koravai,* பெ. (n.) 1. பதின்மூன்று விரலம் வளர்வதும் பச்சை நிறமுள்ளதுமான நன்னீர்மீன்வகை; murrel, fresh-water fish, greenish, attaining 13in. in length. 2. பார்க்க, குறவை; see kuṟavai.

*[பரம் + குறவை → கொரவை ]*

**பரகதி** *para-kadi,* பெ. (n.) வீடுபேறு; salvation, as the highest goal. "*பரகதி புகுவானே*" (திருவாச.5,35.)

*[பரம் + கதி]*

கதி = Skt.

**பரகம்** *paragam,* பெ. (n.) விலங்குகளிலும், நிலைத்திணைகளிலுமுள்ள மூலத்தாதுப் பொருட்கள்; a name for the root tissues in animal and plants, the pulp of plants. (சா.அக.)

**பரகுடிலம்** *para-kuḍilam,* பெ. (n.) மூலமந்திரம் (ஓம்); the mūla mandiram ōm (w.).

**பரகுபரகு** *paragu-paragu,* பெ. (n.) தடுமாறித்திரிகை; wandering in utter perplexity. "*என்பரகுபரகுகெடுவது என்று*" (ஈடு,4,9,1.)

*[பரகு + பரகு]*

**பரகுபரகெனல்** *paraku-parakeṉal,* பெ. (n.) 1. தடுமாறுதற்குறிப்பு; expr. signyfying utter perplexity. "*விஷயாந்தரப்ராவண்யத்தாலே பரகுபரகென்று திரிந்தவன்*" (திவ். திருமாலை.38,128.) 2. ஒலிக்குறிப்பு; onom. expr. of scratching sound. "*பரகுபரகென்றே சொறிய*" (தனிப்பா.)

*[பரகு + பரகு + எனல்]*

**பரகுரவை** *para-kuravai,* பெ. (n.) பரக்கொரவை பார்க்க; murrel.

**பரகுரு** *para-guru,* பெ. (n.) அறிவாசிரியன் (ஞானதீக்கை.1.); spiritual preceptor.

*[பர + குரு]*

**பரங்கருணை** *parań-karuṇai,* பெ. (n.) தெய்வவருள்; the divine mercy. *"பருகற்கினிய பரங்கருணைத் தடங்கடலை"* (திருவாச.11,15.)

*[பரம் + கருணை]*

**பரங்கி** *parańgi,* பெ. (n.) 1. *கண்டு பாரங்கி* பார்க்க; see *kaṇḍupārańgi* a tree. 2. இலவங்கம் பார்க்க; see ilavańgam

**பரங்கிக்கள்ளவராகன்** *parańgi-k-kaḷḷavarāgaṉ,* பெ. (n.) மட்டமான மாழைக்காசுவகை (சரவண.பணவிடு.206.); an inferior coin.

*[பரங்கி + கள்ளவராகன்]*

**பரங்கியாமணக்கு** *parańgi-y-āmaṇakku,* பெ. (n.) செங்கொழும் பப்பாளி (M.M.55.); papaya.

*[பரங்கி + ஆமணக்கு]*

**பரங்கிரி** *parań-kiri,* பெ. (n.) *பரங்குன்றம்* பார்க்க; see *parańguṉṟam.*

**பரங்குன்றம்** *parań-kuṉṟam,* பெ. (n.) 1. *திருப்பரங்குன்றம்* பார்க்க; *see tiruparankundram* a shrine. *"தண்பரங்குன்றம்"* (பரிபா.8,130.) 2. இமயமலைச் சாரலில் உள்ள திருப்பிரிதி என்னும் திருமால்தலம்; a visṇu shrine on the slopes of the Himālayās.

*[பரன் + குன்றம்]*

**பரங்குன்று** *parań-kuṉṟu,* பெ. (n.) பார்க்க, *பரங்குன்றம்* பார்க்க; see *parankunram.* *"பனியேய் பரங்குன்றின் பவளத்திரளே"* (திவ்.பெரியதி.7,1,6.)

*[பரம் + குன்று]*

**பரசிவம்**[1] *para-šivam,* பெ. (n.) பார்க்க, *பரசிவன்.* see *parašivaṉ.*

*[பரசிவன் → பரசிவம்]*

**பரசிவம்**[2] *para-šivam,* பெ. (n.) ஆற்றல் (சக்தி) ஒடுங்கிறதற்கிடமாய் நின்ற மெய்ப்பொருள் இது; மெய்ப்பொருளெலாங் கடந்த முடிவிலே நின்றது; sivan in his highest form. *"ஒடுங்கு நாளினிலே யயனரியுருத்திரன் மகேசன்—நெடுஞ்சதாசிவன் விந்துநாதஞ் சத்தி நெறியே—யடங்கிடம் பரசிவத்தினிற் பரசிவமனைத்துங்—கடந்த—கடந்ததத்துவ முடிவிலே நின்றது கருதி"* (அருணாசலபு. திருமலை. 5.)

**பரசிவமூர்த்தி** *para-šiva-mūrti,* பெ. (n.) அருட்சிவம் (சதாசிவம்) (சி.லி. ஞாந. 3.); manifestation of sivan.

*[பரசிவம் + மூர்த்தி]*

மூர்த்தி = Skt.

**பரசிவன்** *para-šivaṉ,* பெ. (n.) மேனிலை (துரிய)ச் சிவன்; siva in His highest form.

*[பரம் + சிவன்]*

**பரசீவைக்கியம்** *para-šivaikkiyam,* பெ. (n.) ஆதனும் கடவுளும் ஒன்றுகை (விவேக சூடா. 9.); union of the individual soul with the superme soul.

*[பர + சீவைக்கியம் (சீவ + ஐக்கியம்)]* = Skt.

**பரசு[1]–தல்** *parašu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. போற்றுதல்; to praise, extol. ***"செந்நாவலர் பரசும்புகழ்த் திருப்பெருந்துறை"*** (திருவாச. 34, 1.) 2. மெல்லென ஒதுக்கி யெடுத்தல்; to sift gently 3. மெல்லெனத் தேய்த்தல்; nān. to rub gently.

க. பரசு

*[பரவு → பரசு]*

"பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள" (தொல்.865)

**பரசு[2]–தல்** *parašu-,* 10. செ.கு.வி போற்றி வழிபடல்; extol. ***"சண்டேசன்றாள் பிரசமலரிறைத் திறைஞ் சிப்பரசு வாமே"*** (சேதுபு. கடவுள்வா. 12.)

**பரசு[2]** *parašu,* பெ. (n.) 1. மூங்கில்; bamboo. 2. கோடாசரி என்னும் மூலிகை; a kind of herb. (சா.அக.)

**பரசு[4]** *parašu,* பெ. (n.) பண்வகை (பிரதாப. விலா. 55.); a kind of melody.

**பரசு[5]** *parašu,* பெ. (n.) தெரிநிலை வினைப்பகுதி; buse word of clear indication.

**பரசுகம்** *para-šugam,* பெ. (n.) வீட்டின்பம்; the bliss of salvation.

*[பர + சுகம்]*

சுகம் = Skt.

**பரசுபாணி** *parašu-pāṇi,* பெ. (n.) துரிசு; copper sulphate.

**பரசை** *parašai,* பெ. (n.) ஆறு முதலியன கடக்கும் சிறிய ஓடம்; wicker-boat, coracle.

*[பரிசு → பரசை]*

**பரஞ்சம்** *parañjam,* பெ. (n.) நுரை; foam, froth. (சா.அக.)

**பரஞ்சாட்டு–தல்** *parañ-cāṭṭu-,* 5. செ.குன்றாவி (n.) பொறுப்புக் கட்டுதல்; to saddle one with responsibility. ***"மாற்று மருந்து முக்கண் மருந்தென்று பரஞ்சாட்டி"*** (குற்றா. குற. 42.)

*[பாரம் → பரம் + சாட்டு–,]*

**பரஞ்சுடர்[1]** *parañ-cuḍar,* பெ. (n.) பார்க்க, பரஞ்சோதி ***"பாரதங் கைசெய் திட்டு வென்ற பரஞ்சுடர்"*** (திவ். பெரியதி. 1, 8, 4.)

*[பரம் + சுடர்]*

**பரஞ்சுடர்[2]** *parañ-cudar,* பெ. (n.) சுயம்பிரகாசக் கடவுள்; Supreme Being as the Light Divine. "*பரஞ்சுடர் முக்கட் பரமன்*" என்று முதற்குறிப்புக்கவி. (திருக்கருவைக் கவித்துறையந்தாதி.)

**பரஞ்சோதி** *parañjōdi,* பெ. (n.) 1. கடவுள்; Supreme Being, as the Light Divine. கடவுள்; god. 2. சிவன்; siva. ***"பவமாயங் காத்தென்னை யாண்டுகொண்ட பரஞ்சோதி"*** 3. திருமால்; Tirumāl. ***"பாம்பினணைப் பள்ளிகொண்டாய் பரஞ்சோதி"*** (திவ். பெரியதி. 11, 8, 7.)

*[பரம் + சோதி]*

**பரஞ்சோதி முனிவர்** *parañ-jōdi-muṉivar,* பெ. (n.) 1. மெய்கண்ட தேவரின் ஆசிரியரான சிவநெறிப் பெரியார்; a saiva sage, the guru

of Meykaṇḍa tēvar. 2. திருவிளையாடற்புராணம் இயற்றிய ஆசிரியர்; the author of Tiruviḻaiyāḍaṟ-purāṇam.

*[பரஞ்சோதி + முனிவர்]*

(பரஞ்சோதிமுனிவர் 16 ஆம் நூற்றாண்டில் தஞ்சை மாவட்டத்துத் திருமறைக்காட்டில் சிவனியமரபில் தோன்றியவர். திருவிளையாடற் புராணம் பாடிய இவரியற்றிய வேறு நூல்கள்: மதுரை அறுபத்து நான்கு திருவிளையாடற் போற்றிக்கலிவெண்பா, மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி, வேதாரணிய புராணம்.)

**பரஞ்சோதியார்** *parañjōdiyār,* **பெ.** (n.) பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்தவரும் சிதம்பரப் பாட்டியல் என்னும் இலக்கண நூலைச் செய்தவருமான சிவனியப்பெரியார்; auther of chitambara-p-pāttiyal in 16th C.

(சிதம்பரச் செய்யுட் கோவை போலத் தலத்தின் சிறப்பை யுணர்த்தும் முறையில் பாட்டி யலையும் கூறுகின்றது. புலவர்களாற் போற்றப்படுவது. இது உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல், பொருளியல், மரபியல் என்னும் ஐந்தியல்களையுடையது. இவர் சிவனியநெறியர் என்பதனை அந்நூலின் சிறப்புப் பாயிரத்தால் உணரலாம்.)

**பரஞ்சோலி** *parañjōli,* பெ. (n.) பெருஞ்சோலி; a kind of tree.

**மறுவ:** பெருஞ்சூலி, மருட்சூலி (சா.அக.)

**பரஞான தீபவிளக்கம்** *para-ñāṉa-tība-viḷakkam,* பெ. (n.) திருவருள்; divine grace. *"தேற வுதிக்கும் பரஞான தீபவிளக்கங் காண"* (திருப்பு. 588.)

*[பரஞானம் + தீபம் + விளக்கம்]*

**பரஞானம்** *para-ñāṉam,* பெ. (n.) **1.** கடவுளைப் பற்றிய அறிவு; knowledge of god. **2.** இறைவனோடு ஒன்றிநின்று அவனை நுகர்ந்துணரும் பத்தி நிலை வகை; (vaiṢṇ) the second and intermediate stage of devotion in which a devotee gains intimate knowledge of the Supreme Being by means of spiritual union.

*[பரம் + ஞானம்]*

ஞானம் = Skt.

**பரட்டை**[1] *paraṭṭai,* **பெ.** (n.) தலை முடி எண்ணெய்ப்பசை இல்லாமல் தாறுமாறாகப் பரந்து கிடப்பது; unkempt apppearance. ***"தலை சீவிக்கொண்டு வரக்கூடாதா? இப்படிப் பரட்டையாக வந்து நிற்கிறாயே"(உ.வ.)*** ***"பரட்டைமுடி" "பரட்டைத்தலை"***

*[பர → பரட்டை]*

**பரட்டை**[2] *paraṭṭai,* **பெ.** (n.) செடி முதலியன தலை பரந்து நிற்கை; spreading, as of shrubs.

**க.** பரட்டெ

*[பர → பரட்டை]*

**பரட்டைக்கீரை** *paraṭṭai-k-kīrai,* **பெ.** (n.) *பறட்டைக் கீரை* **(பதார்த்த. 603.)** பார்க்க; see *paṟaṭṭai-k-kīrai.*

**மறுவ:** எலிச்செவிக்கீரை

*[பரட்டை + கீரை]*

**பரட்டையம்** *paraṭṭaiyam,* பெ. (n.) ஒட்டுச் சல்லடம்; a close fitting drawers, used by athlets. *"பரட்டைய நரல வீக்கி"* (சூளா. கல்யா. 16.)

ஒருகா: *[பரட்டை → பரட்டையம்]*

**பரடு** *paradu,* பெ. (n.) காற்கரண்டை; ankle; *"புடைச்சிறு பரடு புல்லிக்கிண்கிணி சிலம்பொ டார்ப்ப"* (சீவக. 2445.)

க. பரடு

*[பரல் → பரடு]*

**பரண்[1]** *paran,* பெ. (n.) 1. பொருள்களைப் போட்டு வைப்பதற்காக அறையின் மேற் கூரையிலிருந்து கட்டித் தொங்கவிடப் பட்டிருக்கும் மரச்சட்டம் அல்லது அது போன்று கட்டப்பட்ட சுதைமாத் தளம்; loft of wooden plants or cement slabs for storing odds and ends. *"பழைய பொருள்களை எல்லாம் பரணில்தான் வைப்பார்கள்"* 2. (காவல் செய்வதற்காக) கம்புகளைக் கொண்டு அமைக்கப்படும் உயரமான மேடை; a kind of watch-tower.(made of bamboo) *"பரண் மீது ஏறி நின்று பார்த்தால் தொலை தூரத்திலிருந்து வரும் ஆளையும் பார்த்து விடலாம்" "வேடர்கள் மரங்களின் மீதே பரண் அமைத்துக் கொள்வார்கள்"*

*[பரம் → பரண்]*

**பரண்[2]** *paran,* பெ. (n.) 1. காவல் மேடை; watch tower. 2. மேற்றட்டு; rack over a fireplace, loft under the roof of a house. 3. மச்சு; upper storey. *"சூழ்பரண் மேல் போர் கடா வரசர்"* (திவ். திருவாய். 8, 4, 1.)

*[பரம் → பரண்]*

**பரண்[3]** *paran,* பெ. (n.) மேற்கவசம்; luting the vessel containing the medicine with cloth and clay or other tenacious substance when exposed to fire. (சா.அக.)

**பரண்டாசாலா** *parandāšālā,* பெ. (n.) தட்டையாய்—அகலமாய்க் காணக்கூடுமோர் ஆற்று மீன். (தஞ்சை.மீன்.); a kind of river fish.



**பரண்டை** *parandai,* பெ. (n.) 1. பறவை வகை; a kind of bird. *"பறண்டை வலத்திற் பாடி வலத்திலிருந்து இடத்திற் போந்து"* (சர்வா. சிற். 16.) 2. பார்க்க, பரடு. (j.) see paradu. 2. கணைக்கால்; ankle.

*[பற → பறண்டை → பரண்டை]*

பரண்டை வகைகள்:

1. தாழம் பரண்டை
2. சாண் பரண்டை
3. வெள்ளப் பரண்டை
4. செதில் பரண்டை
5. ஆலைப் பரண்டை
6. ஓலைப் பரண்டை
7. காற்றுப் பரண்டை

**பரணதேவர்** *parana-dēvar,* பெ. (n.) பதினோராந் திருமுறையில் சிவபெருமான் திருவந்தாதி இயற்றிய ஆசிரியர்; a poet, author of siva perumāntiruvandādi in patinōrāntirumurai.

*[பரணர் + தேவர்]*

**பரணம்** *paraṇam,* பெ. (n.) **1.** தாங்குகை; maintaining, supporting. *"உலக பரணத் திற்காகக் கடவுள் தோற்றரவு செய்கிறார்"* **2.** உடுத்துகை; wearing, putting on. **3.** கவசம் (யாழ்.அக.); armour **4.** சம்பளம் (யாழ்.அக.); pay, salary. **5.** பட்டுச்சீலை (யாழ்.அக.); silk saree. **6.** பாரம் (யாழ்.அக.); burden, load. **7.** பார்க்க, பரணி, **1.** (w.) see paraṇi, **1.**

**பரணர்** *paraṇar,* பெ. (n.) கடைக்கழகக்காலப் புலவர்; a poet in last sangam.

(இவர் சங்கப் புலவர்களில் ஒருவர். பல நூல்களையும் நன்கு ஓதியுணர்ந்த—படியால் பேரறிவாளராகத் திகழ்ந்தார். கபிலர்பால் இவர் பெரு நண்புடையவர். அதனால் பலரும் இவர்களிருவரையும் ஒருங்கிணைத்துக் *'கபிலபரணர்'* என்று கூறுவர். இவர் செங்குட்டுவன் என்னுஞ் சேர மன்னன் மீது பத்துப் பாடல்களைப் பாடினார். இப்பாடல்களின் பொருட்டுச் சேர மன்னன் பல ஊர்களையுடைய ஒரு நாட்டையும், குட்டுவன் சேரல் என்னும் தன் அருமைத் திருமகளையும் நன்கொடையாக வழங்கினான். அக்காலத்தில் இருந்த முடியுடை மன்னர்கள் இவர்பால் பாடல் பெறுவதைத் தமக்கோர் பெருமையாகக் கருதினார்கள். இவர் எவர்பாலும் இனிய பண்பினொடு பழகினார். அரசராயினும் குடிகளாயினும் ஒருவரோடொருவர் மாறுபடுவராயின் இவர் அவர்களிடையே புகுந்து அறவுரைகள் பல புகன்று அவர்களை நண்பர்களாக்கி விடுவார். *"பரணன் பாடினன் மற்கொன் மற்று நீ"* என்று இவரால் அதிகமான் பாடப் பெற்றிருப்பதை ஒரு புகழாக ஔவையார் வியந்து கூறியுள்ளார். தாங்கருதியவற்றை முடித்தற்கு மன்னர்கள் இவருடைய உதவியையே நாடினர். பேகன் தன் மனைவி கண்ணகியைத் துறந்து பரத்தை வசப்பட்டிருந்தபோது இவர் *"மடத்தகை மாமயில்"* எனனுஞ் செய்யுளைப் பாடி நல்லறிவுச்சுடர் கொளுத்திப் பேகன் தன் மனைவியோடு வாழுமாறு செய்தார்.)

**பரணி[1]** *paraṇi,* பெ. (n.) போர்முகத்தில் ஆயிரம் யானைகளை அழித்து வென்ற வீரனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட சிற்றிலக்கியவகை (இலக்.வி.839.); a poem about a hers who destroyed 1000 elephants in war.

கழக (சங்க)க் காலத்தில் 'களவழி' எனப்பட்ட சிற்றிலக்கிய வகையே பின்னாளில் பரணி எனப் பெற்றது. பெருமிதம் வாய்ந்த போர்க்களக்காட்சிகளைக் கூறுவதால் உயர்வுப்பொருளில் (பரம் + பரண்) பரணி என்னும் பெயர் அமைந்ததாகக் கொள்ளலாம் அடுப்பு எனப்பொருள்படும் விண்மீன் பெயரான பரணி நாளில் கொண்டாடப் பெறும் போர் வெற்றி விழாவைச் சிறப்பித்துப் பாடுதலின் பரணி யென்னும் பெயர் பெற்ற சிற்றிலக்கியம் என்றும் போரில் வெற்றி வீரனைப் பாடுதலைப் பொருளாகக் கொண்ட நூல் பரணி எனப்படும் என்றும் கூறுவர். இலக்கண முறைப்படி இது புறத்திணையின் பாற்படும். "ஆனைஆயிரம் அமரிடை வென்ற மானவனுக்கு வகுப்பது பரணி" பாட்டியல் இலக்கணம். பரணி நூல்களில் இந்நாளில் சிறந்து விளங்குவது கலிங்கத்துப் பரணி. இதனைப் பாடியவர் செயங்கொண்டார் என்னும் புலவர்.)

**பரணி[2]** *paraṇi,* பெ. (n.) சாடி; a kind of jar. *"ஊறுகாய்ப் பரணி".*

**பரணி[3]** *paraṇi,* பெ. (n.) மூலிகையின் இறுதிப்பெயர்; second term referring to different plants as shown under.

**பரணி வகைகள்**

1. ஏலாபரணி
2. சாலாபரணி
3. கதிராபரணி
4. திலாபரணி

5. பீலுபரணி
6. மாடிபரணி
7. மதுப்பரணி (கொம்மட்டி மாதுளை)
8. சுக்கிலபரணி (ஏழிலைப் பன்னை)
9. சிரிபரணி (பேராமல்லி)
10. பொற்றிலைப் பரணி (சித்தாமல்லி)
11. சவ்வியப்பரணி (குமுகை) (சா.அக.)

**பரணிகுடிசை** *paraṇi kuḍišai,* பெ. (n.) ஓலையால் வேய்ந்தகுடில்; a hut thatched with leaves. "*ஒரு பரணி குடிசையிலே ஒரு திவ்ய மங்கள விக்கிரகத்தையும் வளர்த்துக் கொண்டு*" (கோயிலொ. 27.)

*[பரணம் → பரணி + குடிசை]*

**பரணிசெய்தல்** *paraṇi ceytal,* பெ. (n.) சிமிழில் அடைத்தல்; preserving in caskets. (சா.அக.)

**பரணிமழை** *paraṇi-maḻai,* பெ. (n.) மேழ(சித்திரை) மாதத்துப் பதின்மூன்றாம் பக்கலுக்கு (தேதிக்கு)ப் பின் பெய்யும் மழை; shower in the month of cittirai after the 13th day. "*சித்திரைத் திங்கள்பதின் மூன்றுக்கு மேனல்ல சீரான பரணி மழையும்*" (அறப். சத. 79.)

*[பரணி + மழை]*

**பரணை**[1] *paraṇai,* பெ. (n.) *பரண்* பார்க்க; see *paraṇ.* '*மேலே உள்ள பரணையில் உள்ள சில பொருளை எடு*'

*[பரண் → பரணை]*

**பரணை**[2] *paraṇai,* பெ. (n.) 1. தண்ணீர் விட்டான் கிழங்கு; water root. 2. மேல்தோல்; outer skin. (சா.அக.)

**பரத்தல்** *parattal,* பெ. (n.) 1. பரவுதல்; spreading as epidemic. 2. மிகுதல்; exceeding. 3. மிகுதியாதல்; increasing. 4. தட்டையாதல்; becoming flat. 5. பரம்புதல்; spreading. 6. விரித்தல்; opening. (சா.அக.)

**பரத்தமை**[1] *parattamai,* பெ. (n.) பணத்திற்காக ஆடவர் பலருடன் உடலுறவு கொள்ளும் தொழில்; prostitution. "*பரத்தமை அற்ற குமுகாயம் உருவாக வேண்டும்*".

**பரத்தமை**[2] *parattamai,* பெ. (n.) விலை மகளிருடன் கூடும் ஒழுக்கம்; consorting with harlots. "*பண்பில் காதலன் பரத்தமை நோனாது*" (மணிமே. 7, 50.)

*[பரத்தை² → பரத்தமை]*

**பரத்தர்** *parattar,* பெ. (n.) காமுகர்; libertine. "*வறுமொழியாள ரொடுவம்பப் பரத்தரொடு*" (சிலப். கொலைக்கள. 63.)

**பரத்தன்** *parattaṉ,* பெ. (n.) பரத்தையை நுகர்பவன்; (சிலப்.); adultrate with prostitute.

*[பரத்தமை → பரத்தன்]*

**பரத்தன்** *parattaṉ,* பெ. (n.) வேசையருடன் கூடி யொழுகுபவன்; profiligate, debauchee. "*நண்ணேன் பரத்தநின் மார்பு*" (குறள், 1311.)

*[பரத்தை → பரத்தன்]*

**பரத்தி** *paratti,* பெ. (n.) நெய்தனிலப்பெண் (சூடா.); woman of the maritime tract.

*[பரவன் (ஆ.பா.)] – பரத்தி (பெ.பா.)*

**பரத்தியர்** *parattiyar,* பெ. (n.) நெய்தனிலத்துப் பெண்டிர்; women in costal region. "*நுளையர் நுளைச்சியர் பரதர் பரத்தியரளவரளத்தியர்*" (அகப்பொ. அகத்திணை 24.).

**பரத்திரல்காசு** *parattiral-kāšu,* பெ. (n.) சோழர் காலத்து வழங்கிய செப்பு நாணய வகை; (insc.) a copper coin current in the cōla period.

*[பரத்திரல் + காசு]*

**பரத்தின்பஞ்சு** *parattin pañju,* பெ. (n.) கண்டங்கத்திரி; indian night shade.

**பரத்து[1]–தல்** *parattu-,* 5. செ.குன்றாவி. (v.t) விரித்தல்; to spread. "*சர்க்கரை யாற் பாத்திப்பரத்தி*" (தேவையுலா, 203.)

*[பர → பரத்து–,]*

க. பரடு. ம. பரத்துக.

**பரத்து[2]–தல்** *parattu-,* 5. செ.கு.வி. (v.i) நிரப்புதல்; பரப்புதல்; spread (sth over a place.) "*ஈரமாக இருக்கும் வைக்கோலை உதறிப் பரத்திக் காயப் போடு*".

*[பர → பரத்து–,]*

**பரத்துவன்** *parattuvan,* பெ. (n.) பரத்துவாசன் என்னும் முனிவர்; a saint. "*பண்டை நூற்றெரி பரத்துவனும் போயினான்*" (கம்பரா. கிளை கண்டு. 138)

*[பரத்துவாசன் → பரத்துவன்]*

**பரத்தை[1]** *parattai,* பெ. (n.) அயன்மை; strangeness. "*தன்வயி னுரிமையு மவன்வயிற் பரத்தையும்*" (தொல். பொ. 111)

*[பர → பரத்தை]* (மு.தா.125.)

**பரத்தை[2]** *parattai,* பெ. (n.) 1. பொதுமகள்; harlot, strumpet, prostitute, courtesan. 2. பரத்தமைத்தனம் (தொல். பொ. 147 உரை.); adulterous conduct, profligacy, infidelity.

*[பர → பரத்தை]* (மு.தா.125.)

**பரத்தை[3]** *parattai,* பெ. (n.) ***செம்பரத்தை*** பார்க்க; shoe flower. see *šemparattai.*

*[செம்பரத்தை → பரத்தை]*



**பரத்தை கூறல்** *parattai-kūral,* பெ. (n.) தலைவியின் நெருங்கியவர்கள் கேட்கும்படி தலைவனுடைய மாலையைப் பெறுதல் பரத்தைக்கு எளியது என அவளே கூறல் என்னும் துறை; subject or theme in agam.

"தேங்கமழ் சிலம்பன் தாரெமக் கெளிதெனப்,
பாங்கவர் கேட்பப் பரத்தை மொழிந்தன்று"

(பு.வெ.பெருந். 31.)

**பரத்தைமை** *parattaimai,* பெ. (n.) ஒழுக்கக்கேடு; adultery, concubinage. "*தலைவன் பரத்தைமை கருதினாளாயிற்று*". (தொல். பொ. 147)

*[பரத்தை → பரத்தைமை]*

**பரத்தையிற்பிரிவு** *parattaiyiṟ-pirivu,* பெ. (n.) பரத்தையைக் குறித்து மனைவியை விட்டுப் பிரிந்திருத்தலைக் கூறும் அகத்துறை. (அக.நா. 204, உரை.); (akap) theme of forsaking one's wife and seeking the company of a harlot.

*[பரத்தையில் + பிரிவு]*

**பரத்தையினகற்சி** *parattaiyiṉ-agaṟci,* பெ. (n.) *பரத்தையிற்பிரிவு (தொல். பொருள். 41)* பார்க்க; see *parattayiṟ piṟivu.*

*[பரத்தையின் + அகற்சி]*

**பரத்தையையேசல்** *parattaiyai-yēšal,* பெ. (n.) தலைவனோடு நீர்விளையாட்டை விரும்பிய தலைவி, பரத்தையைப் பழித்தல் என்னும் துறை; subject or theme in Akam.

*"அணிவய லூரனொ டப்புவிழவு அமரும்*

பணிமொழி அரிவை பரத்தையை ஏசின்று"

(பு.வெ.பெருந். 10.)

**பரத்தைவாயில் பாங்கி கண்டுரை–த்தல்** *parattaivāyil pāṅgi kaṇḍuraittal,* செ.கு.வி. (v.i.) சேரிப்பரத்தையின் தோழி, இற்பரத்தை தோழிக்குச் சொல்லும் அகத்துறை; a theme or subject in Akam. "உம்மில் அரிவை உரை மொழி ஒழிய, எம்மில் வலவனும் தேரும் வருமெனப், பரத்தை வாயிற்குப் பாங்கி பகர்ந்தன்று" (பு.வெ.பெருந்.34.)

**பரதசாத்திரம்** *parada-šāttiram,* பெ. (n.) அரபத்த நாவலர் இயற்றிய ஒரு தமிழ் நடனக்கலை நூல்; a treatise in Tamil on the art of dancing by Arapatta - nāvalar.

**பரதசூடாமணி** *parada-šūdāmaṇi,* பெ. (n.) தாளத்தைப் பற்றிக் கூறும் தாள சமுத்திரமென்ற இசைநூலின் ஆசிரியர்; author of an ancient treatise on tāḷam named Tāḷašamuttiram.

*[பரத + சூடாமணி]*

**மறுவ.** தாளசமுத்திரம்.

**பரதசேனாபதீயம்** *parada-šēṉābadiyam,* பெ. (n.) ஆதிவாயிலார் வெண்பாவில் இயற்றிய ஒரு நாடக நூல்; (சிலப். உரைச்சிறப்புப்பா. 10); a treatise on dancing and acting in veṇbā verse, by ādi-vāyilār.

*[பரத + சேனாபதீயம்]*

**பரதத்துவம்** *para-tattuvam,* பெ. (n.) பரம்பொருள்; highest truth, god. "*அத்தனே பரதத்துவப் பொருளென்று*" (திருவிளை. விடையி. 3)

*[பரம் + தத்துவம்]*

**பரதத்துவன்** *para-tattuvaṉ,* பெ. (n.) கடந்த சிவபிரான்; lord sivaṉ. "*அத்தன் பரதத்துவன்*" (கோயிற்பு. வியாக்கி. 29.)

*[பரம் + தத்துவம்]*

தத்துவம் = Skt.

**பரதம்**[2] *paradam,* பெ. (n.) ஒரு பேரெண் (பிங்.); a hundred quadrillions.

தெ. பரதமு

**பரதர்²** *paradar,* பெ. (n.) ஒழுக்கக் கேடர். (சிலப். 5, 200, அரும்.); debaunchees, profligates.

*[பரத்தர் → பரதர்]*

**பரதர்³** *paradar,* பெ. (n.) நெய்தனில மாக்கள், செட்டிகள் (சூடா. நிக); fishing tribes. "*பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்*" (சிலப். 2:2)

**பரதவர்²** *paradavar,* பெ. (n.) மீன்பிடிதொழில் செய்வாருள் ஒரு வகுப்பினர். (நெல்லை. மீன.); fishing tribes.

*[படவர் → பரவர் → பரதவர்]*

(ஒ. மொ. 224.)

**பரதவர்³** *paradavar,* பெ. (n.) 1. நெய்தனில மாக்கள்; inhabitants of maritime tract, fishing tribes. "*மீன்விலைப் பரதவர்*" (சிலப். 5, 25.). "*பரதவர் நெய்தலே*" (அரிச்ச. நாட்டு. 58.). 2. தென்திசைக்கண் ஆண்ட ஒருசார் குறுநில மன்னர்; a dynasty of rulars of the Tamil country. '*தென்பரதவர் போரேறே*'' (மதுரைக். 144.). 3.வைசியர்; višyas. "*பரதவர் கோத்திரத் தமைந்தான்.*'' (உபதேசகா. சிவத்துரோ. 189)

*[படவர் → பரவர் → பரதவர்]*

(ஒ.மொ.224.)

**பரதவராசகுலம்** *paradavarāšakulam,* பெ. (n.) உப்பங்கழியில் வலை வீசி மீன்பிடிப்போருள் ஓர் வகுப்பினர் (செங்கை. மீன.); fishing tribes in backwaters.

*[பரதவர் + ராசர் + குலம்]*

அரசர் = தமிழ்

ராசர் = Skt.

**பரதவன்** *paradavan,* பெ. (n.) நுழையன்; (பதிற்றுப்பத்து); inhabitants of sea coast.

மறுவ. நுளையன்.

*[பரவன் → பரதவன்]*

**பரதளவிபாடன்** *paradaḷa-vibāḍan,* பெ. (n.) பகைக்படையை அழிப்பவன் என்று பொருள்படும் ஒரு விருது; destroyer of enemy's forces, a military title. பகைவீர வீரன் பரதளவிபாடன் (குழைக்காதர் திருப்பணிமாலை, 16)

**பரதன்³** *paratan,* பெ. (n.) 1. மீன்பிடிப்போன்; fisherman. "*படர்திரைப் பரதர் முன்றில்*'' (கம்பரா. கார்கால. 74.) 2. கடலோடி; mariner, seaman. "*பரதர் மலிந்த பயங்கெழுமாநகர்*" (சிலப். 5:158.)

*[பரதவன் + பரதன்]* (தமி. வ.93.)

**பரதாகம்** *para-tāgam,* பெ. (n.) வருத்தம்; distress. "***பார்த்தவுடனெங்கள் பரதாகமோர்வாக்கால் தீர்த்தருளும்***'' **(தெய்வச்.விறலிவிடு.15.).**

**பரதெய்வம்** *para-teivam,* பெ. (n.) முழுமுதற் கடவுள் (தாயு. சுகவாரி. 1); the supreme God.

*[பரம் + தெய்வம்]*

**பரதேவதை** *para-dēvadai,* பெ. (n.) *பரதெய்வம்* பார்க்க; see *parateivam.* "*தற்பர மதான பரதேவதையை*' (தாயு.திருவருள்வி. 3)

*[பரம் + தேவதை]*

**பரந்த** *paranda,* பெ. அ. (adj.) **1.** பெரும் பரப்புடைய; அகலமான; vast; wide; broad. "*பரந்த பாலைவனம்*". "*அதனுடைய பரந்த மார்பில் குழந்தை படுக்கக் கிடந்தது*". **2.** பிறர் நலத்தைக் கருதுகிற; தாராளமான; senerous (nature) broad (out look) "*அவருடைய பரந்த நோக்கத்தைப் பாராட்ட வேண்டும்*"? "*எல்லோருக்கும் உதவி செய்யும் பரந்த மனம் படைத்தவர்*".

**பரந்தங்கம்** *paran tangam,* பாக்கு மரம்; arecanut tree. (சா.அக.)

**பரந்துகெடு-தல்** *parandu-kedu-,* **20.** செ.கு.வி. (v.i.) எங்குஞ் சுழன்று கெடுதல்; to perish everywhere. "*இரந்துமுயிர் வாழ்தல் வேண்டிற் பரந்து கெடுவுலகிற்றியான்*" (திருக். 1062.).

**பரந்தெய்வம்** *paranteyvam,* பெ. (n.) பரதெய்வம் பார்க்க; see parateivam. "*ஆதி பரந்தெய்வ மண்டத்து நற்றெய்வம்*" (திருமந். 1767.).

**பரப்ப** *parappa,* வி.அ. *(adv.)* மிக; extremely, greatly. "*பரப்பக்கொடு வினையர்*" (நாலடி, 124)

*[பர → பரப்ப]*

**பரப்பரிசி** *parappariši,* பெ. (n.) பார்க்க, பிரப்பு, **1.** இ.வ.; offering of rice, etc., to a deity.

*[பிரப்பு → பரப்பு + அரிசி]*

**பரப்பளவு** *para-p-paļavu,* பெ. (n.) ஓர் இடத்தின் நீளத்தையும் அகலத்தையும் பெருக்கக் கிடைக்கும் அளவு; (கோளம், உருளை போன்றவற்றின்) மேல்பரப்பின் அளவு; area; surface area. "*வீட்டு மனையின் பரப்பளவு ஆயிரம் சதுர அடி*". "*வட்டத்தின் பரப்பளவைக் கணக்கிட ஒரு நூல் உண்டு*".

**பரப்பற** *parappara,* (வி.எ.) (adv.) சுருக்கமாக; briefly. "*பரப்பற எழுபாட்டாலே அநுபவிக்கலாம் படி*" (ஈடு. அவ.)

*[பரப்பு + அற]*

**பரப்பாங்கல்** *para-p-pāngal,* பெ. (n.) கப்பிக்கல்; gravel stone. (சா.அக.)

*[பரப்பு + ஆம் + கல்]*

**பரப்பாழ்**[1] *para-p-pāl,* பெ. (n.) வானவெளி. (சங்.அக.); the ethereal expanse.

*[பரம் + பாழ்]*

**பரப்பாழ்**[2] *para-p-pāl,* பெ. (n.) பரமாகிய அருவுருப் பொருள்; the sibtle body. "*முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்*" (பழங்கவி.).

*[பரம் + பாழ்]*

**பரப்பானோடு** *parappānōdu,* பெ. (n.) தளவரிசைக்குரிய சதுரவோடு (நெல்லை); flooring tiles.

*[பரப்பு → ஆன் + ஓடு]*

**பரப்பிரமசன்னிதி** *para-p-piramašannidi,* பெ. (n.) சிவமுன்றில்; the sacred presence of sivan. "*பார் முழுவதும் பரப்பிரம – சன்னிதி*" (கோயிற்பு. வியாக்கி. 5)

*[பரப்பிரமம் + சன்னிதி]*

சந்நிதி = skt

**பர(ப்)பிரமம்** *para-p-piramam,* பெ. (n.) (அ.வ.) 1. பெருங்கடவுள்; முழுமுதற் கடவுள் (சி.சி.12,7,மறைஞா.); Supreme Being. 2. உலக வாழ்வைச் சிறிதும் பொருட்படுத்தாதவன்; one who is indifferent to worldly considerations.

*[பரம் + பிரமம்]*

பிரமம் = skt

**பரப்பிரமவிந்து** *para-p-pirama-vindu,* பெ. (n.) வாலைவடிசாறு (மூ. அ.); sublimate of mercury.

*[பரம் + பிரமம் + விந்து]*

**பரப்பு[1]–தல்** *parappu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. பரவச்செய்தல்; to spread, as grain, to layout, as goods. to diffuse, as odour. "*நிதிபரப்பி*" (திருவாச.8,3.) 2. செய்தி முதலியன பரப்புதல்; to disseminate, as news; to propagate, as opinions 3. விரித்தல்; to distend; to expand, as wings. "*காலைப் பரப்பி நின்றான்*" 4. ஒழுங்கின்றி வைத்தல்; to place confusedly, as books on a table. *எல்லாம் பரப்பிக் கிடக்கின்றன* 5. நிலை பெறுத்தல்; to establish. "*நான்மறையோர் புகழ்பரப்பியும்*" (பட்டினப்.202.) 6. பெருகக் கொடுத்தல்; to give lavishly. "*பெத்த முத்தியும் பரப்பு பெண்ணரசி*" (விநாயகபு.2,7.)

தெ. க. பரபு

*[பர → பரப்பு–,]*

**பரப்பு[2]** *parappu,* பெ. (n.) 1. இடவிரிவு; expanse, extension, space, surface, area. "*நன்பெரும்பரப்பின் விசும்பு*" (பதிற்றுப்.17,12.) 2. விரவிப் பரவுதல்; diffused or extended state of a being, corporeal or incorporeal; diffusion; overspreading "*படரொளிப்பரப்பே*" (திருவாச.22,8.) 3. உலகம்; world. "*பரப்பினடுப் படுவதொரு மேருகிரி*" (கோயிற்பு.வியாக்.6.) 4. மிகுதி; multiplicity, variety of forms (w.) 5. தொகுதி; mass. '*படர்சடைப்பரப்பும்*" கோயிற்பு.நடராச.33.) 6. அளவு; range, compass, extent of a subject. (w.) 7. நெற்பரப்பு; நிலைப்பரப்பு என்றிரு வகையான நிலவளவு; land measure, of two kinds, viz., neṟ-parappu, nilai-p-parappu. 8. கடல். (அக.நி.) sea, ocean. 9. பார்க்க, *பரப்பரிசி* see *parapparši* 10. முகடு; ceiling (w.). 11. கதவுநிலையின் மேலுள்ள மண் தாங்கிப் பலகை; lintel. 12. படுக்கை; bed, couch.

தெ. பரபு. ம. பரப்பு

*[பர → பரப்பு]*

**பரப்பு[3]** *parappu,* பெ. (n.) 1. மூவளவை கொண்ட பொருளின் வெளிப்பகுதி; நீர்மத்தின் பரவிய நிலை; surface: extense. "*இந்தக் கண்ணாடிகுவிந்த பரப்பை உடையது*" 2. பரப்பளவு; area "*சகாராப் பாலைநிலத்தின் பரப்பு தார்ப்பாலைநிலத்தின் பரப்பைவிட அதிகம்*" "(உ.வ.)

**பரப்பு[4]** *parappu,* பெ. (n.) **பரம்பு** பார்க்க; see *parambu.* '*பரப்பில் காசும் நெல்லும் நியோகம் எழுதி* (S. I. I. vi. 29)

*[பா → பரவு → பரம்பு → பரப்பு]*

**பரப்பு[5]** *parappu,* பெ. (n.) 1. கடல்; ocean. "*சேதுக்கதைவட சொற்பரப்பை*" (சேதுபு. அவையட.4.). 2. திரள்; abundance. "*பின்தாழ்படர்சடைப்பரப்பும்*" (கோயிற்பு. நடராச.13.)

**பரப்பு[6]–தல்** *parappu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. பலரும் அறியச் செய்தல்; spread (news,

rumour, ect.,) disseminate. *"வீணாகப் பொய்யுரைகளைப் பரப்பிக் கொண்டிருக்காதீர்கள்"* **2.** தொற்றச்செய்தல்; spread (the disease) *"கண்ட இடத்தில் எச்சில் துப்புவது நோயைப் பரப்பும்"* **3.** (மணத்தை, ஒளியை) இடம் நிறையுமாறு வெளியீடுதல்; spread (fragrance); diffuse (light) *"மணம் பரப்பும் மலர்த்தோட்டம்" "நிலவு கடலில் தன்வெண்ணிறக் கதிர்களைப் பரப்பி யிருக்கிறது"* **4.** குவியலாகச் சேர்ந்துள்ளதை ஒரு பரப்பில் சமமாக இருக்குமாறு பிரித்துவிடுதல்; spread out (sth-so as to fill a space); layout. *"ஈரம் காயவேண்டுமெனில் நெல்லைப் பரப்பி வைக்கவேண்டும்"*

**பரப்புச்சட்டம்** *parappu-c-caṭṭam,* **பெ.** (n.) சுவரின் மேல் இடும் சட்ட வகை (C.E.M.); wall-plate.

*[பரப்பு + சட்டம்]*

**பரப்புமாறு-தல்** *parappu-māṟu-,* **5.** செ.கு.வி. (v.i.) இடமில்லாதபடி பரவுதல்; to spread all over, as yellow spots. *"வைவர்ண்யமானது பரப்பு மாறிற்று"* (ஈடு,5,3,2.)

*[பரப்பு + மாறு-,]*

**பரபத்தி** *para-patti,* **பெ.** (n.) கடவுளை நேர்காணத் தகுதியாக்குவதாகிய பத்தியின் முதலாவது நிலை; (மாலியம்) the first stage of devotion in which a devotee perceives the supreme being by his spiritual vision. (vaisn.)

*[பர + பத்தி]*

**பரபத்தியக்காரன்** *para-pattiya-k-kāraṉ,* பெ. (n.) பங்காளி; partner.

*[பா → பாத்தி → பாத்தியம் → பத்தியம் + காரன்]*

**பரபத்தியக் கூட்டாளி** *para-pattiya-k-kūṭṭāḷi,* பெ. (n.) பங்காளி; (C.G) partner.

*[பரபத்தியம் + கூட்டாளி]*

**பரபத்தியம்** *parapattiyam,* **பெ.** (n.) **1.** முதல்; capital. **2.** வணிகக் கடன்களைப் பொறுக்கும் மதிப்பு; credit in commercial circle. **3.** கொடுக்கல் வாங்கல்; money dealings.

**தெ.** பரபத்தியமு

*[பர + பத்தியம்]*

**பரபதம்** *para-padam,* பெ. (n.) **1.** மேலாகிய பொருள்; final bliss. *"தற்பரம்"* **2.** வீடுபேறு; final bliss. *"மழுவாற்றுண்டித் திகழ் தவனைப் பரபதத்துளிருத்தித் தானும்"* (சேதுபு. கடவுள் வா. 12.). *"உண்மைப் பரபதமும்"* (பெரியபு. திருமுறை. 17.)

*[பர + பதம்]*

**பரபர¹-த்தல்** *parapara-,* **3.** செ.கு.வி. (v.i.) **1.** விரைவுபடுதல்; to be in a hurry. *"பஞ்சாக்கரத்தைப் பரபரப்பா வெண்ணாத பாவம்"* (அருணகிரியந்.) **2.** தன் வயமழிதல்; to lose self control. *"மேனி பரபரத்துளங் களித்து"* (பிரபோத. 18, 53.) **3.** சுறுசுறுப்பாதல்; to be active, energetic, diligent. **4.** தினவெடுத்தல்; to feel a tingling or itching sensation.

**பரபர²—த்தல்** *parapara-*, **3.** செ.கு.வி. (v.i) **1.** செயல்படுவதில் பொறுமை இழந்து விரைவுபடுதல்; be in a hurry. *"தொடர்வண்டி கிளம்புவதற்கு இன்னும் நேரம் இருக்கிறது, அதற்குள் ஏன் பரபரக்கிறாய்?"* **2.** (மனம், அல்லது கை, கால்) துருதுருத்தல்; (of mind) feel an urge (to be sth.); (of hands legs.) have an itch (to do sth.) *"பிறந்த குழந்தையைப் பார்க்க வேண்டும் என்று மனம் பரபரத்தது" "ஓடிப் போய்விட வேண்டுமென்று கால்கள் பரபரத்தன"*.

**பரபரப்பு¹** *paraparappu*, பெ. (n.) **1.** வேகம்; hurry haste, bustle. **2.** சுறுசுறுப்பு; activity, energy, eagerness, avidity; earnestness. *"பரபரப்பினோடே பலபல செய்து"* (நீதிநெறி. 90.) **3.** தினவு; itching or tingling sensation. (w.)

*[பரபர → பரபரப்பு]*

**பரபரப்பு²** *paraparappu*, பெ. (n.) **1.** மனத்தில் அல்லது செயலில் ஏற்படும் அமைதியும் பொறுமையும் இழந்த நிலை; துடிப்பு; state of excitement. *"அவன் ஊருக்குச் செல்லும் மகிழ்ச்சியில் ஒரே பரபரப்பாக இருந்தான்" "துப்பறியும் கதை படிக்கும்போது உள்ளத்தில் கட்டுக்கடங்காத பரபரப்பு ஏற்படுகிறது"* **2.** பலரின் கவனத்தை ஈர்த்து ஆர்வத்தைத் தூண்டும் நிலை; sth. sensational. *"இந்த முறையீடு பெரும் பரபரப்பை உண்டாக்கி யிருக்கிறது"*

**பரபரவெனல்** *para para-v-enal*, பெ. (n.) விரைவுக் குறிப்பு; கொ.வ. expr. signying haste, speed, etc. *"பரபரவென்று நடந்தான்"*

**பரபரன்** *para-paran*, பெ. (n.) முழுமுதற் கடவுள்; the supreme being. *"முழுதுண்ட பரபரன்"* (திவ். திருவாய். 1, 1, 8.)

*[பரம் + பரன்]*

**பரபரெனல்** *para-parenal*, பெ. (n.) பார்க்க, *பரபரவெனல்*; see *parapara-v-enal*. *"பரபரெனச் சென்றெதிரே"* (விறலிவிடு.)

*"ஆடிக்குடத் தடையும் ஆடும்போதே இரையும்*
*மூடித் திறக்கின் முகங்காட்டும்—நாடிமண்டை*
*பற்றிப் பரபரெனும் பாரிற்பிண் ணாக்கு முண்டாம்*
*உற்றிடுபாம் பெள்ளெனவே வோது"*
– காளமேகப்புலவர்.

*[பரபர + எனல்]*

**பரபோகம்** *para-bōgam*, பெ. (n.) **1.** சிவ போகம், பேரின்பம்; highest bliss. *"பரபோகம் பெறலா மெனப்பகர்ந்தான்"* (கோயிற்பு. வியாக். 4.). *'பரபோகம் தேடி, இகபோகம் நாடி, வாழ்க்கையைப் பெற வேண்டும்'* (பழ.)

**பரம்** *param*, பெ. (n.) **1.** மேலானது; that which is pre-eminent, excellent. *"விரதமே பரமாக சாத்திரங் காட்டினார்"* (திருவாச.4,50.). **2.** திருமால் நிலை ஐந்தனுள் ஒன்று (அஷ்டாதச.தத்வத்.3,41.). **3.** கடவுள்; god. *"காணலாம் பரமே"* (திருவாச.5,44.). **4.** மேலுலகம்; heaven. *"இகரபரமாகி யிருந்தவனே"* **5.** மேன்மை; that which is celestial, divine or heavenly. **6.** துறக்கம் (பிங்.); final bliss. **7.** பிறவி நீக்கம்; liberation from births. **8.** முன் (பிங்.); the front. **9.** மேலிடம்; upon portion. *"அகிற்புகை பரங்கொடு போகி"* (இரகுநகர.4). **10.** அயல்; that which is different or alien. **11.** சார்பு; side, party. *"தெவ்வரென்பார் பரமொருங்குவதலால்"* (கம்பரா.யுத்த.மந்திரப்.90.) **12.** தகுதி; fitness. *"தம்பரமல்லன வாண்மைகளை"* (திவ். பெரியதி. 10,7,13.) **13.** நிறைவு (நாமதீப.774.); completeness, fulness. **14.** நிரயம் (பிங்.); hell.

**பரம்பர்** *parambar*, பெ. (n.) உழவர்குடிவகை; a class of cultivators. *"அளவர் பள்ளிகள் பரம்பர் உட்பட உழுது இறுத்து"* (s.I.I.vii, 385.)

*[பரம்பு → பரம்பர்]*

**பரம்பு[1]–தல்** *parambu,* **5.** செ.கு.வி (v.i.) **1.** பரவுதல்; to spread, an water, bad news, epidemics; to extend; to expand; to become diffused, as air, rays; to prevade; to over spred, as clouds, darkness. **2.** தட்டையாக விரிதல்; to be spread out or become flattened by mashine or hammering. **3.** நிறைதல்; to occupy, overrun, as an army.

*[பரப்பு → பரம்பு–,]*

**பரம்பு[2]** *parambu,* பெ. (n.) **1.** உழுத கழனியைச் சமப்படுத்தும் பலகை; board or roller for smoothing land newly ploughed; harrow, drag. *"பரம்பு மேற்போய செய்யுள்"* (சேதுபு. திருநாட். 44.) *"எங்ஙனும் பரம்படிப்பவர் பற்பல கோடியே"* (அரிச்.நாட்டு.33.) **2.** பரவியநிலம்; dry ground laid out, especially for plantain or palm gardens. *"பரம்பெலாம் பவளம்"* (கம்பரா. நாட்டுப் 2.) **3.** மூங்கிற்பாய்; (nāñ.) bamboo mat.

*[பரம்பு → பரம்பு]*

**பரம்பு[3]** *parambu,* பெ. (n.) வரப்பு; embankment, ridge or mound to enclose water (w.)

*[வரம்பு → பரம்பு]*

**பரம்பு[4]** *parambu,* பெ. (n.) வரிக்கணக்கு; revenue account. *"பரம்பில் நெல்லுங்காசும் வெள்ளாளர் பக்கல் நியோகமெழுதிக் கொள்ள"* (s.I.I.vi. vi, 27.)

*[ஒருகா: வரம்பு → பரம்பு]*

**பரம்பு[5]** *parambu,* பெ. (n.) இடவிரிவு; (R.T.) extension, spread.

க. ஹரகு

*[பரப்பு → பரம்பு]*

**பரம்புக்கொன்றை** *parambu-k-konrai,* பெ. (n.) **1.** கொன்னை; cassia genus. **2.** கருங்காலி; black sundara tree. **3.** பேய்க் கருவேல்; foreign babool.

**பரம்பப்பலகை** *parambu-p-palagai,* பெ. (n.) *பரம்பு[2]*, **1.** (G.Tj.D.I. **1, 98**) பார்க்க; see *parambu.*

**பரம்பை** *parambai,* பெ. (n.) *வன்னி* பார்க்க; see *vanni.* (I.) indian mesquit.

**பரம்பொருள்** *param borul,* பெ. (n.) இறைவன்; கடவுள்; god, the absolute. *"எங்குமாம் பரம் பொருளையாழும் வணங்குதுமே"* (மகாவாக்கியம் பாயிரம். 1.) *"பரம் பொருளை ஞானிகளே அறிவர்".*

**பரம்மக்கன்கல்** *parammakkan-kal,* பெ. (n.) உடன்கட்டையேறியவளைக் குறிக்கும் அடையாளக் கல்; (M.E.R.)sati stone 192. of 1931–32.

*[பரம் + ஐக்கியம் + கல்]*

ஐக்கியம் = Skt.

**பரம** *parama,* பெ. (n.) *"மிகவும் என்னும் பொருளிலும் மிகுந்த அளவிலான"* என்னும் பொருளிலும் வழங்கும் அடைமொழி; an intensifier used in the sense of extreme of sth, (hence=) top, great, total ect. *"இந்தச்செய்தி பரம கமுக்கமாக வைக்கப்பட்டிருந்தது" "ஏற்பாடு பரம பொந்திகையாக இருந்தது"*

**பரமகதி[1]** *parama-gadi,* பெ. (n.) **1.** பரமபதம்; salvation. **2.** இறுதிக்காலத்துப் புகும் அடைக்கலம்; the ultimate refuge. **3.** முழுநாள் நடைவேகம்; (astron.) maximum daily motion.

*[பரம + கதி]*

கதி = Skt.

**பரமகதி²** *paramagati,* பெ. (n.) வீடுபேறு; liberation; salvation.

*[பரமம் + கதி]*

**பரமகலை** *parama-kalai,* பெ. (n.) மலைமகள் (பார்வதி); pārvadi. (கூர்மபு. திருக்கலியாண. 23.); the Goddess parvadi.

*[பரமம் + கலை]*

**பரமஞானம்** *parama-ñānam,* பெ. (n.) ஒரு சிவநாமம்; a name of sivan. *"பெயரெமக்குப்– பரபதம்பம ஞானம்–பராற்பரம்"* (கோயிற்பு. பதஞ்சலி. 66.) a name of sivan.

*[பரமம் + ஞானம்]*

**பரமண்டலம்** *para-mandalam,* பெ. (n.) (கிறித்.) மேல் உலகம்; வானுலகம்; heaven. *"பரமண்டலத்தில் இருக்கிற எங்கள் பிதாவே என்று தொடங்கியது வழிபாடு"*

*[பரம் + மண்டலம்]*

**பரமபதசோபனப் படம்** *paramapada-šopana-p-padam,* பெ. (n.) தாயக் கட்டையின் எண்ணிக்கைக்குத் தகுந்தபடிக் காயை நகர்த்திக் கட்டத்தில் காட்டப்பட்டுள்ள ஏணி வழியாக மேல் வரிசைக்குச் செல்வது அல்லது பாம்பு வழியாகக் கீழ் வரிசைக்கு இறங்குவது என்ற முறையில் விளையாடி இறுதியில் வானுலகப் பதவி என்னும் கட்டத்தை அடையும் விளையாட்டு; a board game of snakes and ladders in which the topmost square represents heaven. *"வைகுண்ட ஏகாதசி அன்று விளையாடப் பரமபத சோபனப்படம் வாங்கிவர வேண்டும்"*

*[பரமம் + பதம் + சோபனம் + படம்]*

சோபனம் = Skt.

**பரமபதபடம்** *paramapada-padam,* பெ. (n.) கட்டங்களிற் காய் வைத்தாடும் ஒருவகை விளையாட்டிற்குரிய படம் (இ.வ.); board for a kind of backgammon.

மறுவ. பரமபதசோபனம்

*[பரமபதம் + படம்]*



**பரமபதம்** *parama-padam,* பெ. (n.) மாலிய வழக்கில் முத்தி; வானுலகம்; the holy feet of the lord; salvation. "அமல னுலகெனும் பரமபதத்தினை" (கம்பரா. பயன்.5) *"அவர் பரமபதம் சேர்ந்தார்"*

*[பரமம் + பதம் ]*

**பரமம்** *paramam,* பெ. (n.) 1. ஆதன்; soul. *"அகிலசத்தி யுடைத்தாயநந்தமான பரமம்"* (ஞாநலா. மனத்தின். 3.) 2. மிகமேலாகியது; that which is excellent. *"தீர்த்தங்களை வைக்கும் மேலாய் மன்னலாற் பரமதீர்த்த மெனப் பெயர் வழங்கலாகும்"* (திருவிளை. தீர்த்த. 11.)

*[பரம் → பரமம்]*

**பரமயோகி** *parama-yōgi,* பெ. (n.) நண்டு (சா.அக.); crab.

**பரம வங்கிசகம்** *parama-vangišagam,* பெ. (n.) ஒரு வகைச் சன்னியாசம்; (சி.சி. 8, 11. மறை.) a kind of asceticism.

**பரமன்**¹ *paraman,* பெ. (n.) 1. சிவன்; siva. *"பரமனை மதித்தி டாப்பங்க யாசனன்"* (கந்தபு. கடவுள்வா. 9.) "மாநடமாடும் பரமனார்" (தேவா.600)

வ. பரம.

*[பரம் → பரமன்]* (வ.மொ.வ.200)

**பரமன்**² *paraman,* பெ. (n.) முதற்கடவுள்; the Supreme Being. *"பரமன் அடி பணிந்தார்"*

*[பரம் → பரமன்]*

**பரமன் விந்து** *paramanvindu,* பெ. (n.) இதளியம்; mercury. (சா.அக.)

*[பரமன் + விந்து]*

**பரமாகாயம்** *paramāgāyam,* பன்னிரண்டாம் பெரு வெளி. (திருவிளை. வேதத்துக்குப். 31.); the place of the twelfth and last avastai or station of the soul in the practice of the motionless ascetic.

*[பரம் + ஆகாயம்]*

ஆகாயம் = Skt.

**பரமாச்சாரியார்** *paramā-c-cāriyār,* பெ. (n.) சமய குருவை அழைக்கும் மதிப்புரவுச் சொல்; a term of respect for the spiritual preceptor (among Hindus.)

*[பரம் + ஆச்சாரியார்]*

*[ஆசாரம் → ஆச்சாரம்]*

**பரமாணுவாதம்** *paramāṇu-vādam,* பெ. (n.) இவ்வுலகம் அணுக் கூட்டத்தாலாகியது என்னும் நையாயிக மதம் (பிரபஞ்ச. வி. 28.); atomic theory of the origin of the world.

*[பரமம் + அணு + வாதம்]*

வாதம் = Skt.

**பரமாணு** *paramāṇu,* பெ. (n.) அதிநுண்மவணு; *"முன்னூ பரமாணுவத்தனை யதிற்புனைகு வார மலனாவார்"* (சேதுபு. பிறமகுண்ட. 7.); an atom, the invisible base of aggregate bodies.

*[பரமம் + அணு]*

**பரமாத்(து)மா** *paramā-t-tumā,* பெ. (n.) (குத்.) மேலான ஆதன்; கடவுள்; god, the superme soul.

*[பரமம் + ஆத்துமா]*

ஆத்துமா = Skt.

**பரமேட்டி** *paramēṭṭi,* பெ. (n.) 1. சிவன்; siva. *"பண்ணிய னான் மறை விரித்த பரமேட்டி"* (திருவிளை. மெய்ந். 8.) *"சாய்க்காட்டெம் பரமேட்டி பாதமே"* (தேவா. 41, 4.) 2. பரம்பொருள்; the supreme being. 3. நான்முகன் (பிங்); nanmugan. 4. திருமால்; tirumāl. *"பல்லாண்டென்று பவித்திரனைப் பரமேட்டியை"* (திவ்.திருப்பல். 12.) (பிங்.) 5. அருகன், (பிங்); arhat. 6. பரமபதத்திலுள்ள ஐம்பூதங்களொன்று; one of the five elements of parama-patam. *"உற்ற பரமேட்டி முதலோங்கிய வைம்பூத நிலை"* (மாறனலங். 91,129.)

**பரமைகாந்தி** *paramai kāndi,* பெ. (n.) கடவுளிடமே மனத்தை நிறுவும் பெரியோன்; a devote whofixes his mind on God alone. *"பரமை காந்திகளைப்போலே உன்னையொழிய நான் எத்தைக் கொள்வான்"* (ஈடு, 5, 1, 4.)

**பரரூபம்** *pararūbam,* பெ. (n.) எழுத்தினை மாறச் சேர்த்து அமைக்கை (R); permutation of letters.

**பரல்** *paral,* பெ. (n.) **1.** பருக்கைக்கல்; small loose pebbles with or without sand. **2.** விதை; seed. (சா.அக.)

**மறுவ:** சுக்கான்கல்.

**பரலோகம்** *para-lōgam,* பெ. (n.) இறந்தவர் செல்வதாகக் கருதப்படும் மேல் உலகம்; முத்தி; heavenly abode (said to be the destination of the soul of the deceesed). *"செத்துப் பரலோகம் போனவனைச் சாட்சிக்கு அழைக்க முடியுமா?"*

*[பரம் + உலகம் → லோகம்]*

உலகம் = தமிழ்

**பரவடிச்சம்பா** *paravaḍi-c-cambā,* பெ. (n.) சம்பா நெல்வகை; a kind of campa paddy

*[பரவடி + சம்பா]*

**பரவணி** *paravaṇi,* பெ. (n.) **1.** குடிவழி பரம்பரை; genealogy. **2. கொடிவழி;** lineal descent, hereditary succession.

**பரவணிக்கேள்வி** *paravaṇi-k-kēḷvi,* பெ. (n.) செவிவழிச் செய்தி; (யாழ்ப்.) tradition.

*[பரவணி + கேள்வி]*

**பரவணித்தொந்தம்** *paravaṇi-t-tondam,* பெ. (n.) குடிவழிக்குணம்; (யாழ்ப்.) inherited characteristics, as infirmities of temper.

*[பரவணி + தொந்தம்]*

*தொற்று → தொத்து → தொந்து → தொந்தம்*

*தொன்று → தொந்து → தொந்தம்*

**பரவணிப்பட்டம்** *paravaṇi-p-paṭṭam,* பெ. (n.) குடும்பச் சிறப்புப் பெயர்; family title (w.).

*[பரவணி + பட்டம்]*

**பரவணிப்பட்டவன்** *paravaṇi-p-paṭṭavaṉ,* பெ. (n.) **1.** குடிவழியுரிமையாளன்; herditary successor. **2.** உயர்ந்த கொடி வழியில் தோன்றியவன்; a man of noble ancestry.

*[பரவணி + பட்டவன்]*

**பரவர்**[1] *paravar,* பெ. (n.) தமிழகத்தில் கடற் கரையோரங்களில் படகேறி மீன்பிடித்து வாழும் சாதியார்; a fisherman caste living in villages along the coast in the south of the Tamil country. *"மீன்பல பரவன் வலை கொணர்ந்திட்டனன்"* (திருமந். 2031.)

*[படவை → பரவர்]*

ஒருகா. பரதவர் → பரவர்

**பரவர்**[2] *paravar,* பெ. (n.) **1.** மீன்பிடி தொழில் செய்வாருள் ஒரு வகுப்பினர் the parava caste **2.** பரவையை ஆளும் மாந்தர். (நெல்லை. மீன.); one who manage the sea.

**பரவல்**[1] *paraval,* பெ. (n.) **1.** பரவின இடம்; broad stretch of land. *"அந்தப் பிரதேசம் பரவலானது"* **2.** வாழ்த்து; praising, worshipping. *"பரவலும் புகழ்ச்சியும்"* (தொல். பொருள். 82.)

*[பர → பரவு → பரவல்]* (மு.தா.72)

**பரவல்**[2] *paraval,* பெ. (n.) புகழ்தல்; *"பரவலருங் கொடைக்கு நின்றன் பனிக்குடைக்கும்"* (இராமா. சடாயுகாண். 21.)

**பரவலாக்கு** *paravalākku,* 5. செ.கு.வி. அதிகாரம் ஓர் இடத்தில் மட்டும் குவிந்திருக்காமல் பகிர்ந்து பல இடங்களிலும் இருக்கச் செய்தல்; decentralizer; devolve. *"நடுவண் அரசின் அதிகாரங்களை மாநிலங் களுக்கும் பரவலாக்குவது குறித்துக் கருத்துத் தெரிவித்தார்"*

**பரவலாக; பரவலான** *paravlāga, paravalāṉa,* வி.அ., பெ.அ. (adv.) (adj.) பல இடங்களிலும் பலர் தரப்பிலும்; பல இடங்களில் அமைந்த; பெருமளவில் காணப்படுகிற; in many places; widespread. *"தமிழகமெங்கும் பரவலாக மழை பெய்திருக்கிறது". "அவரைப் பற்றி இப்படிப் பரவலாகப் பேசப்படுகிறது"*

**பரவளிதளை** *paravaḷitaḷai,* பெ. (n.) *பாவையதளை* பார்க்க; see *pāvai-y-adaḷai.* (சா.அக.)

**பரவற்காட்டுப் புன்செய்** *paravar-kāṭṭu-p-puṉcey,* பெ. (n.) புதர்க் காட்டினிடையேயுள்ள புன்செய்ப் பயிர்; (R.T.) dry cultivation amidst brush-wood.

*[பரவற் காடு + புன்செய்]*

**பரவற்காடு** *paravar-kāḍu,* பெ. (n.) புதர்க் காடு; (W.G.) jungle of brush-wood.

*[பரவல் + காடு]*

**பரவா** *paravā,* பெ. (n.) ஒரு மீன்; coryphaena hippurus. (சா.அக.)

**பரவாகீசுவரி** *para-vagišuvari,* பெ. (n.) சிவை (சி. போ. வ. தீ.47); šiva šatti.

*[பரம் + வாக்கு + ஈசுவரி]*

வாக்கு = Skt.

**பரவாசுதேவன்** *paravāšudēvaṉ,* பெ. (n.) பரமபதத்துள்ள திருமால்; manifestation of tirumal in heaven.

*[பரம் + வசு + தேவன்]*

வசு = Skt.

**பரவிந்து** *paravindu,* பெ. (n.) சிவத்தோடு கலந்த ஆற்றல் (சத்தி); (சி. போ. பா. 223); Ammai (sathi) in union with sivam.

*[பரம் + விந்து]*

**பரவிப்பார்–த்தல்** *paravippār-,* புடைபட வொற்றி யாராய்தல்; (சி.சி. 2:19. சிவஞாந.); amploying and directing spies.

**பரவிப்புன்செய்** *paravi-p-puṉšey,* பெ. (n.) சமப்படுத்திய புன்செய் (இ.வ.) levelled dry land.

*[பரவை → பரவி + புன்செய்]*

**பரவு¹–தல்** *paravu-,* 9. செ.குன்றா.வி. (v.t.) 1. பரப்புதல்; to lay open to view, as goods in a declare (w.) 2. புகழ்தல்; to praise, extol. *"பரவு நல்லொழுக்கின் படி பூண்டது"* (கம்பரா. ஆற்றுப். 12.) 3. போற்றுதல்; to worship, reverece, adore. *"பரவல் பழிச்சுதல்"* (பரிபா. 10, 116.) *"கைதொழுது இரந்து வேண்டிப்பரவி மீண்டு"* (திருவிளை. மெய்க்கா. 21) 4. பாடுதல்; to sing. *"யாழிற் பரவுமின்"* (கல்லா. 10.) 5. சொல்லுதல்; to declare. *"பரவருமணிகள் விளங்கிய"* (திருவாத. திருப்பெருந். 3)

க. கரகு

*[பர → பரவு → பரவு–,]* (மு.தா.72)

**பரவு²–தல்** *paravu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. நீர்மம், காற்று முதலியவை சுற்றிலும் செல்லுதல்; (of liquid, gas, ect.) spread. *"சட்டையில் பட்ட மை பரவிப் பெரிய கறையாகி விட்டது" "ஒரு குடிசையில் பற்றிய தீ மற்ற குடிசைகளுக்கும் பரவியது"* 2. வெளிச்சம், இருள் ஆகியவை படர்தல்;

(of darkness) spread; cover. *"வீடு முழுவதும் இருள் பரவியிருந்தது"* 3. (நோய் பலரையும்) பற்றுதல்; ஊறுபடுத்தல்; (of disease) be contagious; be infectious. *"இது எளிதில் பரவக் கூடிய தொற்றுநோய்"* 4. பல இடங்களில் பரந்திருத்தல்; be extended. *"இந்த அரசரின் ஆட்சி வட இந்தியா முழுவதும் பரவி இருந்தது"*

*[பர → பரவு → பரவு-,]* (மு.தா.72)

**பரவு³** *paravu,* பெ. (n.) கருநிறமானதும் ஐந்துவிரலம் வளர்வதும் வெப்பமான நீரோட்டங்களிற் காணப்படுவதுமான ஆற்று மீன் வகை; river-fish, black, attaining 5. in. in length, found in hot streams.

**பரவுக்கடன்** *paravu-k-kaḍaṉ,* பெ. (n.) நேர்த்திக் கடமை; oblation in fulfillment of a vow. *'கொற்றவைக்குப் பரவுக்கடன் பூண்டலும்'* (தொல். பொ. 58, உரை.)

*[பராய் → பரவு + கடன்]*

**பரவுக்கெண்டை** *paravu-k-kēṇḍai,* பெ. (n.) வெண்ணிறமானதும் ஐந்துவிரலம் வளர்வது மான ஆற்றுமீன் வகை; river fish, silvery, attaining 5 in in length.

*[பரவு + கெண்டை]*



**பரவுகால்** *paravukāl,* பெ. (n.) பத்து வளி களுள் ஒன்றான விரவன்; one of the ten vital airs of the human body pervading the whole body. (சா.அக.)

*[பரவு + கால்]*

**பரவுதும்** *paravuḍum,* பெ. (n.) வேண்டுதும்; to praise, to worship.

*[பரவு → பரவுதும்]*

**பரவெட்டிமீன்** *paraveṭṭi-mīṉ,* பெ. (n.) mud-skipper நெய் வெட்டி, 2. பார்க்க, see ney-veṭṭi.

*[பரவு → பர + வெட்டி + மீன்]*

**பரவெளி** *paraveḷi,* பெ. (n.) 1. மூளை; brain. 2. கருப் பிண்டம் (மூன்று மாதத்திற்கு மேலும் ஐந்து மாதத்திற்கு உள்ளும் உள்ள பிண்டக்கரு) foetus between the periods of 3–5 months. 3. மண்டை; cranium; human skull. 4. முகில் மண்டலத்திற்கு அப்பாற்பட்ட தூய வான் வெளி; etheric region of the sky. (சா.அக.)

**பரவெளி** *para-veḷi,* பெ. (n.) 1. பரமன் உறையும் அறிவு வெளி; the great cosmic space. 2. கடவுள்; god, considered as space.

*[பரம் → பர + வெளி]*

**பரவை¹** *paravai,* பெ. (n.) 1. பரப்பு; expanse, extent, extension, plane surface, breadth. *"அமிதப் பரவையது"* (தக்கயாகப். 154.) 2. கடல்; sea, ocean. *"பாய்திரைப் பரவை மீமிசை முகிழ்த்த"* (பதினொ. பட்டின. திருக்கழு. 1.) 3. பரவைய்முது (பிங்.) பார்க்க,; see paravai-y-amudu. 4. ஆடல் (பிங்.); dance.

"பரவை நோக்குபு" (திருவானைக். திருமால்வ. 29.) 5. பரவல்; that which is spread, as grain on floor. "வரகின்.... பரவை" (குறுந். 220.) 6. மதில் (பிங்.); wall. 7. திடல்;(யாழ்ப்) shoal 8. தேங்கி நிற்கும் நீர்(வின்.); stagnant water, as in pools. 9. பரவை நாச்சியார் பார்க்க, see paravainācciyār. "பேர் பரவை" (பெரியபு. தடுத்தாட். 148.)

*[பர → பரவை]* மு.தா.25

**பரவை²** *paravai,* பெ. (n.) உப்பு; salt. (சா.அக.)

**மறுவ:** பரவைதாகம், பரவையமுது.

**பரவைநாச்சியார்** *paravai-nācciyār,* பெ. (n.) சுந்தரமூர்த்தி நாயனார் தேவியர் இருவருள் ஒருவர்; a wife of sundara mūrtti nāyanār.

*[பரவை + நாச்சியார்]*

**பரவைப்புல்வரி** *paravai-p-pul-vari,* பெ. (n.) பரந்த புற்றரையில் கால்நடைகள் மேய்தற்குக் கொடுக்கும் வரி (M.M. 703.); tax for grazing cattle on a large tract.

*[பரவை + புல் + வரி]*

**பரவையமுது** *paravai-y-amudu,* பெ. (n.) உப்பு (சங்.அக.); salt.

*[பரவை + அமுது]*

**பரவையாழ்** *paravai-yāḻ,* பெ. (n.) நால்வகை யாழ்களுள் ஒன்றான பேரியாழ்; a kind of large lute, one of four yāḻ, q.v.

*[பரவை + யாழ்]*

**பரவையிதளை** *paravaiidaḷai,* பெ. (n.) இந்தியக் காட்டு இதளைமரம்; Indian wild olive. (சா.அக.)

**பரவையுண் மண்டளி** *paravaiyuṉ mandaḷi,* பெ. (n.) திருவாரூரிலுள்ள ஒரு சிவன் கோயில் (தேவா.); a sivan shrine in Tiru-v-ārur.

(சோழவள நாட்டில் திருவாரூரில் கீழைத் தேர்த்தெருவில் இப்பெயரை யுடைய தேவாரம் பெற்ற திருகோயில் இருக்கிறது. இங்கெழுந் தருளிய இறைவன் ஒரு காலத்தில் வருணன் இந்நகரத்தின் மீது ஏவிய கடலை உண்டு வற்றச் செய்தமை பற்றி இக்கோயில் இவ்வாறு பெயர் பெற்றது என்பர். இக்கோயிலுக்குள் உள்ள குளத்தில் மூழ்கித்தான் சுந்தரர் மற்றொரு கண்ணையும் பெற்றனர் என்பர்.)

**பரவை வழக்கு** *paravai-vaḻakku,* பெ. (n.) உலகவழக்கு; colloq usage, opp. to ceyyuḷ vaḻakku. *'இவை செய்யுளகத் தல்லது, பரவை வழக்கினுள் வாரா'* (தொல். பொருள். 330, உரை)

*[பரவை + வழக்கு]*

**பரளைமரம்** *paraḷai maram,* பெ. (n.) கம்பளி வெட்டி என்னும் மரவகை; a tree symploc as spicata. (சா.அக.)

**பரன்¹** *paraṉ,* பெ. (n.) 1. கடவுள்; god, as the Supreme Being. "பரனே...வரனே" (திவ். பெரியதி. 7, 7, 4.) 2. அயலவன்; foreigner, stranger, alien. 3. ஆதன்; (saivan.) individual soul. "ஏரியல் பரன் பசுவென்றறி" (ஞானா. 5.)

*[பரம் → பரன்]*

**பரன்²** *paraṉ,* பெ. (n.) சிவன்; sivṉn. "வெந்த சாம்பரும் பூசுமோபரனெனு மேலோன்" (கந்தபு. ததீசியுத். 1.)

*[பரம் → பரன்]*

**பரனந்தி** *paranandi,* பெ. (n.) பரதெய்வம் (ஔவை.கு. ஞானம்பிரி.5.) பார்க்க; see parateyvam.

*[பரன் + நந்தி]*

**பரா** *parā,* பெ. (n.) தூள்; dust. (சா.அக.)

**பராக்கடி—த்தல்** *parākadi-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. கவனிக்காது செய்தல்; to disregard. neglect. *'பராக்கடித் திருந்தானாகை யன்றிக்கே"* (ஈடு. 6, 1, 9.) 2. அவமதித்தல்; to despise; *"பராக்கடிக்கும் பணியலர்"* (அஷ்டப். திருவரங்கத்தந். 43.)

*[பராக்கு + அடி—,]*

**பராக்காட்டு—தல்** *parākkāṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) *பராக்குக்காட்டு* பார்க்க; see *parākku-k-kaṭṭu-.*

*[பராக்கு + காட்டு—,]*

**பராக்கு**[1] *parākku,* பெ. (n.) 1. கவனமின்மை; inattention, heedlessness. *"பராக்கற வானந்தத்தேறல் பருகார்"* (திருமந். 331.) 2. மறதி; forgetfulness; absent-mindedness. *"அவா ....... பராக்காற் காவானாயின்"* (குறள். 366, உரை)

*[பரம் + பராக்கு]*

**பராகம்**[1] *parāgam,* பெ. (n.) 1. சந்தனம்; sandal. 2. நறுமணப் பொடி; aromatic or fragrant powder. to disregard. 3. நாய்த்துளசி; white basil. 4. பூந்தாது; farina. 5. மகரந்தம்; pollen. 6. தூள்; dust. (சா.அக.)

**பராகமண்** *parāga-maṇ,* பெ. (n.) செம்மண்; red ochore. (சா.அக.)

**பராங்கவம்** *parāgavam,* பெ. (n.) பெருங்கடல்; ocean. (சா.அக.)

**பராந்தக பாண்டியன்** *parāndaga paṇḍiyaṉ,* பெ. (n.) பாண்டிய அரசருள் ஒருவன்; an ancient pāṇḍya king. இவன் பரசக்கர கோலாகலனுடைய இரண்டாவது மகன். முதலாவது மகன் வரகுணவர்மன். தமையனாகிய வரகுண வர்மன் காலமான பின் பராந்தக பாண்டியன் அரசாட்சி செய்யத் தொடங்கினான். இவன் தன்னுடைய தமையனைப் போல் சடைய வர்மன் என்னும் பட்டமுடையவனாக விருந்தான். இவன் கொங்கர்களைப் போரில் வென்றும் பெண்ணாகட நகரையழித்தும் பல போர்களைச் செய்தான். இவனுக்கு வீர நாராயணன் எனவும் பெயர் வழங்கியது. இவனுடைய பட்டத்தரசியின் பெயர் வானவன் மாதேவி.

**பராந்தகன்** *parāndagaṉ,* பெ. (n.) 1. பகைவர்க்கு காலன்போன்றவன்; one who is like yama to his enemies. 2. புகழ்பெற்ற ஒரு சோழவரசன் (கல்); a famous cōḻa king. 3. எட்டாவது நூற்றாண்டில் விளங்கிய பாண்டியருள் ஒருவன் (கல்); pāṇḍiya king of the 8th century A.D. 4. *திருமங்கையாழ்வார்* (திவ்ய சூரி.) பார்க்க. see *Tirumaṅgai-y-āḻvār.*

**பராபரன்** *parā-paraṉ,* பெ. (n.) பரம்பொருள்; god, as most high. பராபரர் பரம்பரர் (தேவா.542, 7)

*[பரம் + பரன்]*

**பராய்த்துறை[1]** *parāytturai,* பெ. (n.) திருப்பாய்த்துறை என்னும் சிவத்தலம்; a Sivan shrine in Trichy Dt.

இவ்வூர் திருச்சி மாவட்டத்தில் அமைந்துள்ளது. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்ற தலம். இது மாணிக்கவாசகரும் இத்துறை இறைவன் பற்றிப் பாடுகிறார் "பராய்த்துறை மேவிய பரனே போற்றி" (திருவா–போற்றித்–153) நாவுக்கரசர் இத்தலம் பற்றிப் பாடும்போது, "*பரப்பு நீர்வரு காவிரித் தென்கரைத் திருப்பராய்த்துறை மேவிய செல்வரே*" (9144–1) எனச் சொல்லும் காவிரியின் தென்கரைத் தலம் இது என்பது தெரிகிறது. இன்றும் காவிரியின் தென்கரைத் தலமாகத் திருப்பராய்த்துறை இருப்பது நாவுக்கரசர் கருத்துக்குத் தெளிவு அளிக்கிறது. எனவே காவிரியின் தென்கரைத் துறையில் அமைந்த பரவுமிடம் என்ற நிலையில் சிவன் கோயிலைக் குறிப்பிட்ட '*பராய்த்துறை*' பின்னர் அந்த இடத்திற்கும் பெயராகி இருக்கும் எனத் தோன்றுகிறது. "தென்பராய்த் துறையாய் சிவலோகா" (திருவாச. செத்திலா.4.)

**பராயனார்** *parāyanār,* பெ. (n.) கடைக்கழகக் காலப் புலவர்; a sangam poet.

(இடந்தலைப்பாட்டின் கண் தலைவியைக் கண்ட தலைமகன் ஐயுறுற்றுக் கூறுவதாக இவரமைத்த (நற்.155) செய்யுள் சுவைமி கவுடையது.

**பராரி** *parāri,* பெ. (n.) தன் ஊரில் வாழமுடியாமல் வெளியேறிய ஆள்; one who has abandrong his home; runaway. "*பஞ்சப் பராரி*"

**பராரை[1]** *parārai,* பெ. (n.) 1. மரத்தின் பருத்த அடி; large trunk, of a tree "*இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து*" (திருமுரு.10.) "*பராரை யாலநிழன் மருங்கு மறை முதல்*" (திருவிளை.அட்டமா.2.) 2. விலங்கின் பருத்த மேல்தொடை; hip or haunch, as of deer, sheep. "*பராரை வேவை பருகெனத் தண்டி*" (பொருந.104.)

*[பருமை + அரை]*

**பராரை[2]** *parārai,* பெ. (n.) உள்ளோசை; internal sound, as the rumbling of the bowels.

*[பருமை + அரை]*

**பராவதம்** *parāvadam,* பெ. (n.) வாலுளுவை; (வைத்தியாரி); a sort of cucumber.

**பராவமுது** *parā-v-amudu,* பெ. (n.) தெய்வங்கட்குரிய அமுதம்; ambrosia. "*பராவமுதெய்துவதாகாதோ*" (திருவாச.492.)

*[பராவு + அமுது]*

**பராவிவை–த்தல்** *parāvi-vai-,* செ.குன்றாவி. (v.t.) நேர்த்திக்கடனாகக் கொடுத்தல் (s.i.i.ii,379); to make an offering to a deity in fulfilment of a vow.

*[பராவு → பராவி + வை–,]*

**பராவு–தல்** *parāvu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. புகழ்தல்; to praise. "*தற்பராய் நின்று*" (பு.வெ.10,15,உரை.) 2. வணங்குதல்; (திவ்.நாய்ச்.9,6.) to worship. 3. வணங்கி வாழ்த்துதல் "*பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள்*" (தொல்.உரி.84.)

*[பரவு → பராவு–,]*

பரவுதல்–வழிபடுதல்

**பரி[1]–தல்** *pari-,* 4. செ.கு.வி. (v.i.) 1. பற்றுவைத்தல்; to covet. "*பண்டம் பகர்வான் பரியான்*" (பு.வெ.12, ஒழிபு.2.) 2. காதல் கொள்ளுதல்; to be affectionate. "*பாண*

*பரிந்துரைக்க வேண்டுமோ"* (ஐந்.ஐம்.23.) **3.** இரங்குதல்; to sympathise. "*பாழாய்ப் பரிய விளிவதுகொல்"* (பு.வெ.3,8.) **4.** சார்பாகப் பேசுதல்; to plead, intercede. "*நீ அவனுக்காகப் பரிய வேண்டாம்"* **5.** வருந்துதல்; to be troubled, distressed; to suffer. "*பழவினைப் பயனீ பரியல்"* (மணிமே. 12,50.) **6.** பிரிதல்; to part, separate. (w.) **7.** அறுதல்; to be sundered. "*பரிந்தமாலை"* (சீவக.1349.) **8.** முறிதல்; to break off. "*வெண்குடை கால்பரிந் துலறவும்"* (புறநா.229.) **9.** அழிதல்; to be destroyed; to perish. "*பழவினை பரியுமன்றே"* (சீவக.1429.) **10.** ஓடுதல்; to run. "*மாவே....பரிதலின்"* (புறநா.97. **11.** வெளிப்படுதல்; to go out; to escapte. "*பரிச்சின்ன ஞானம் பரிய"* (சிவப்பிர.சிவஞா.நெஞ்சு.81.)

**பரி²—தல்** *pari-,* **2.** செ.குன்றாவி. (v.t.) அஞ்சுதல்; to fear. "*வடுப்பரியு நாணுடையான்"* (குறள்,502.) **2.** வருந்திக் காத்தல்; to guard with difficulty. "*பரியினு மாகாவாம் பாலல்ல"* (குறள், 376.) **3.** பகுத்தறிதல்; to discern, discriminate. "*பரிந்துணராப் பைத லுழப்ப தெவன்"* (குறள்,1172.) **4.** அறிதல்; to know. "*பவர்முல்லை தோன்றி பரியாம லீன்ற"* (பு.வெ.12, இருபாற்.7.) **5.** அறுத்தல்; to cut asunder. "*கருங்கோட் டெருமை கயிறுபரிந்து"* (ஐங்குறு.95.) **6.** அழித்தல்; to destroy. "*என்பரியு மேதிலான் றுப்பு"* (குறள், 802.) **7.** நீங்குதல்; to be free from, as sin. "*பவம் பரிந்தவர்க ளொத்தார்"* (சூளா.இரத.85.) **8.** கடத்தல்; to pass beyond, crossover, "*காமந் தலைபரிந்து"* (பு.வெ.12, இருபாற்8.) **9.** உதிர்த்தல்; to shake down. "*தெங்கினொண்பழம் பரீஇ"* (சீவக.68.) **10.** வாங்கிக் கொள்ளுதல்; to get, take. "*இளங்கமு கெருத்திற் காய் பரீஇ"* (சீவக.1616.) **11.** மேற்கொள்ளுதல்; conduct something. "*பசைதல் பரியாதாம் மேல்"* (நாலடி.60.) **12.** விரும்புதல்; to want; wish. "*நிலையா எனவுணர்ந்தார் என்றும் பரிவதிலர்"* (நாலடி, 182.).

*[பரி → பரி-,]*

**பரி²—த்தல்** *pari-,* **11.** செ.குன்றாவி. (v.t.) **1.** அறுத்தல் (அக.நி.); to cut asunder. **2.** சூழ்தல்; to surround, spread over. "*குருதி பரிப்ப"* (அகநா.31.)

**பரி³—த்தல்** *pari-,* **4.** செ.கு.வி. (v.i.) ஓடுதல்; to run proceed. "*மகளிரஞ்சி யீரெண்டு கடலிற் பரிக்கும்"* (குறுந்.401.)

*[பரி² — பரி—.]*

க. பரி.

**பரி⁴** *pari,* பெ. (n.) **1.** செலவு (பிங்.); motion, gait. "*காலே பரிதப்பின"* (குறுந்.44) **2.** வேகம் (திவா.) speed, rapidity, quickness. **3.** குதிரைக்கதி; pace of a horse. "*பரீஇ யிவுளி"* (புறநா.4.) **4.** குதிரை; horse. "*பரிமேற்கொண்டான்"* (திருவாச.8,3.) **5.** குதிரைமரம்; wooden horse used as a contrivance for directing the course of water. "*பரிநிறுத்துவார்"* (திருவிளை.மணத.5.) **6.** உயர்ச்சி (திவா.); height, elevation, tallness. **7.** பெருமை (திவா.) greatness. **8.** கறுப்பு; (தைலவ.தைல.) blackness, darkness. **9.** மாயம் (பிங்.); delusion deception. **10.** பருத்தி (பிங்.) பார்க்க, see parutti. cotton plant.

க. பரி.

**பரி⁵—த்தல்** *pari-,* **11.** செ.குன்றாவி. (v.t.) **1.** சுமத்தல்; to bear, carry, sustain. "*பளகரெல்லா மனைப்பாரம் பரித்தனர்"* (திருநூற்.16.) **2.** ஆள்வினைபுரிதல்; to carry on, conduct, manage. "*மண்டமர்ப் பரிக்கு*

*மதனுடைய நோன்றாள்"* (புறநா.75.) 3. பாதுகாத்தல்; to guard, protect. *"சிட்டறைப் பரிக்கும் தேவதேவை"* (குற்றா.தல.தக்கன் வேள்விச்.128.) 4. பொறுக்கி யெடுத்தல்; to pick up. *"குடவோலை பரித்தல்"* (கல்.) 5. அணிதல் (யாழ்.அக.) to wear.

**பரி⁶** *pari-,* பெ. (n.) 1. பாதுகாக்கை, (அக.நி.); cherishing, supporting. 2. சுமை. (பிங்.); weight. 3. துலை (பிங்.); balance.

*[பரி⁵ → பரி]*

**பரி⁷** *pari,* பெ. (n.) 1. அன்பு; love, affection. (w.) 2. வருத்தம் (சூடா.) trouble, distress.

**பரி⁸** *pari,* (part.) மிகுதிப்பொருள் குறிக்கும் ஓர் இடைச்சொல்; particle denoting intenseness. *"பரி புலம்பினரென"* (சிலப்.10,226.)

**பரிக்கந்தி** *pari-k-kandi,* பெ. (n.) *அமுக்கரா. (தைலவ.தைல)* பார்க்க; see *amukkarā* winter cherry.

*[பரி + கந்தி]*

**பரிக்காரம்¹** *parikkāram,* பெ. (n.) ஒப்பனைசெய்கை; adorning, decoration, improvement. (w.)

*[பரி → பரிக்காரம்]*

**பரிக்காரர்** *pari-k-kārar,* பெ. (n.) குத்துக்கோற்காரர்; யானைக்காரர்; men armed with goods to control an elephant. *"களிற்றை யொண்பரிக்காரர்...... கொண்டுவருதலும்"* (பதினொ.ஆளு, திருவுலா 109.) 2. குதிரை நடத்துவோர் (யாழ்.அக.); horse-grooms.

தெ. பரிக்காடு

*[பரி → பரிக்காரர்]*

**பரிக்கும்** *parikkum,* பெ. (n.) தாங்கும்; to give support.

**பரிக்குத்தானு** *parikkuttāṉu,* பெ. (n.) காரீய மலை; mountain of lead orer or mines. (சா.அக.)

**பரிக்குளம்** *parikkuḷam,* பெ. (n.) 1. குதிரைக் குளம்பு; horses hoof. 2. குதிரைக் குளம்புப் பூடு; arrow head. (சா.அக.)

**பரிக்கை²** *parikkai,* பெ. (n.) தாங்குகை; bearing support. *"சனந் தழைத்திடப் பரிக்கையால்"* (இரகு. குலமு. 8)

*[பரி⁴ → பரிக்கை]*

**பரிக்கோல்** *pari-k-kōl,* பெ. (n.) குத்துக்கோல்; elephant goad. *"மதத்தாற் பரிக்கோ லெல்லையில் நில்லாத களிறுபோல"* (தொல். பொருள். 11, உரை)

*[பரி + கோல்]*

**பரிகணி-த்தல்** *parikaṇi-,* 11. செ.குன்றாவி. (v.t.) அளவிடுதல்; to measure, estimate. *"தம்மறிவுகேடு பரிகணிக்கப் போகா தென்கிறார்."* (ஈடு, 6, 9, 7,)

*[பரிகணி → பரிகணி-,]*

**பரிகதம்** *parigadam,* பெ. (n.) பேயாலமரம்; a kind of wild banyan. (சா.அக.)

**பரிகம்¹** *parigam,* பெ. (n.) 1. அகழி; ditch 2. மதிலுண்மேடை; mound within a rampart. see parigai. 3. மதில். (சூடா.); forfification. 4. அழிக்கை. (யாழ்.அக.); killing, destroying

**பரிகம்[2]** *parigam,* பெ. (n.) கரண்டிவகை (E.T.); a kind of spoon.

*[பரிகரம் → பரிகம்]*

**பரிகம்[3]** *parigam,* பெ. (n.) **1.** கிழங்கு; bulbous root; tuber. **2.** நீர்ச்சாடி; water jar. **3.** இரும்புத் தண்டு; iron rod. **4.** கருப்பம் குறுக்கிடுவது; transeverse presentation. (சா.அக.)

**பரிகருப்பம்** *parikaruppam,* பெ. (n.) பேறு காலத்தில் கதவின் தாழ்ப்பாளைப் போல் பிண்டம் 3குறுக்காகத் திரும்பியிருத்தல்; obstructed labour in which the foetus lies transversely across the uterus like a bolt. (சா.அக.)

**மறுவ:** பரிகம்

**பரிகருமம்** *pari-karumam,* பெ. (n.) கணிதவகையு ளொன்று (யாப். வி. 528); a method of calculation.

**பரிகல பரிச்சின்னங்கள்** *parigala pariccinnangal,* பெ. (n.) எடுபிடி முதலியன கொண்டு செல்லும் ஏவலாளர் (S.I.I.vi: 104); attendants in charge of the royal paraphernalia.

*[பரிகலம் + பரிச்சின்னம்]*

**பரிகலம்[1]** *parikalam,* பெ. (n.) **1.** தெய்வம், பெரியோர் இவர்கள் நுகர்ந்தெஞ்சிய மிச்சம்; remains of the offerings to garland, food etc., made to a deity or a guru. ***"வேதியச் சிறுவற்குப் பரிகலம் கொடுத்த திருவுளம் போற்றி"*** (பதினொ. கோயினான். 40.) **2.** குரு முதலியோர் உண்ட கலம்; plate or eating vessal used by a holy person. ***"மலரயன் கொடுத்த பரிகல மிசையவே"*** (குற்றா. குற. 13.) ***"நல்ல பரிகலந்திருத்தி"*** (திருவிளை. விருத்த. 24.)

*[பரிகரம் → பரிகலம்]*

**பரிகலம்[2]** *parikalam,* பெ. (n.) **1.** சேனை (சூடா.); army. **2.** நாடு முழுவதுஞ் சென்று தொற்று நோயைப் பரப்புவதாகக் கருதப்படும் பேய்க் கூட்டம்; (j.) army of demons believed to march through a country and inflict epidemics.

*[பரிகரம் → பரிகலம்]*

**பரிகாரன்** *parikāran,* பெ. (n.) வேலைக்காரன்; servant. ***"மடத்துப் பரிகாரர்களுக்கும்"*** (s.i.i.v, 189.)

*[பரிகாரம் → பரிகாரன்]*

**பரிகால்** *parikāl,* பெ. (n.) தீங்கான காலம்; inauspicious occasion. ***"செயகால் பரிகால் மட்டும் தென்புறத்துத் திண்ணை விட்டிருக்கிறது"*** (இ.வ.)

**பரிகீர்த்தனம்** *parikirttanam,* பெ. (n.) புகழ்கை (யாழ்.அக.); praising.

*[பரி + கீர்த்தனம்]*

*[கிர்த்தி → கீர்த்தி → கீர்த்தனை → கீர்த்தனம்]*

**பரிகை[1]** *parigai,* பெ. (n.) காவல்; guard. ***"படைப்பரிகைத் துரகங்கள்"*** (துக்கயாகப். 267.)

*[பரி → பரிகை]*

**பரிகை[2]** *parigai,* பெ. (n.) **1.** அகழி (திவா.); moat, ditch. **2.** மதிலுண்மேடை (பிங்.) mound within a rampart. ***"தோன்றுமிப் பரிகை"*** (மேருமந். 1054.)

**பரிச்சதம்** *pariccadam,* பெ. (n.) போர்வை; covering.

**பரிச்சந்தம்** *pariccandam,* பெ. (n.) அரசபரிச் சின்னம்; royal insignia and paaraphernalia. *"வீசுவெண் சாமராதி பரிச்சந்த முழுதும் விட்டார்"* (மேருமந். 1048.)

*[பரி + சந்தம்]*

**பரிச்சாத்தினர்** *pari-c-cāttiṉar,* பெ. (n.) குதிரை ராவுத்தர்; a horse-man. *"குலாவுவாம் பரிச் சாத்தினர் வரும் பெருந்தன்மை கூறுவாம்"* (திருவாத. குதிரை. 10.)

*[பரி + சாத்து → சாத்தினர்]*

**பரிச்சாத்து** *pari-c-cāttu,* பெ. (n.) குதிரைத் திரள்; troop of horses. *"வந்தது முதுபரிச் சாத்து"* (திருவாலவா. 28, 29.)

*[பரி + சாத்து]*

**பரிச்சிமிழ்** *pari-c-cimiḻ,* பெ. (n.) பொன் சிமிழ்; gold casket, for preservation of valuable medicines. (சா.அக.)

**பரிச்சின்னம்**[1] *pariccinnam,* பெ. (n.) அளவு பட்டது; anything subject to limitation. *"பரிச்சின்ன ஞானம் பரிய"* (சிவப்பிர. சிவஞா. நெஞ்சு 81.)

*[பரி + சின்னம்]*

**பரிச்சின்னம்**[2] *pariccinnam,* பெ. (n.) அரசர் முதலியவர்க்குரிய சின்னம்; insignia of a great person. *"மணிமுத்தின் பரிச்சின்னம் வரம்பின்றாக"* (பெரியபு. திருஞான. 1016.)

*[பரி + சின்னம்]*

**பரிச்செண்டு** *pari-c-ceṇḍu,* பெ. (n.) 1. விளையாடும் செண்டு வகை; a ball used in a game. *"நிலைச் செண்டும் பரிச்செண்டும் வீசிமிக மகிழ்வெய்து"* (பெரியபு. சேரமான். 126.) 2. பரிச்செண்டு வீசியாடும் விளையாட்டு; a game.

*[பரி + செண்டு]*

**பரிச்செம்பிப் பனத்தி** *pari-c-cembi-p-paṉatti,* பெ. (n.) செந்தாடுபாவை என்னும் அறியப்படா மூலிகை; an unknown plant. (சா.அக.)

**பரிசக்குன்று** *pariša-k-kuṉṟu,* பெ. (n.) நாகப் பச்சை; an inferior green stone found naturally. (வைத்தியபரி) (சா.அக.)

**பரிசகம்** *parišagam,* பெ. (n.) சித்திரசாலை; artists studio. *"படிச்சந்த மாக்கும் படமுளவோ நும் பரிசகத்தே"* (திருக்கோ. 78.)

**பரிசங்கிளத்தல்** *parišaṅ-kiḷattal,* பெ. (n.) தலைவியை மணத்தற்குரிய அருவிலையைத் தோழி தலைவனுக்கு உரைத்தலாகிய அகத் துறை (களவியற். 115.) (akap.) theme in which the lady's maid informs the hero of an impossibly high bride-price.

*[பரிசம் + கிளத்தல்]*

**பரிசசுண்ணம்** *pariša-š-šuṇṇam,* பெ. (n.) நாகப் பச்சைச் சுண்ணம்; calx of green stone. (சா.அக.)

**பரிசட்டம்** *paricaṭṭam,* பெ. (n.) பார்க்க **பரியட்டம்**; see *pariyaṭṭam.* *'இவர்க்கே சாத்தும் திருப்பரி சட்டத்துக்கு'* (s.i.i.ii, 71, 6.)

*[பரி + சட்டம்]*

**பரிசநாடி** *parša nādi,* பெ. (n.) உணர்ச்சிக் குரிய நரம்பு; nerve of sensation. (சா.அக.) பார்க்க பரிசகாலம் (w.) see pariša-kālam.

*[பரிசம் + நாடி]*

**பரிசப்பணம்** *pariša-p-paṇam,* பெ. (n.) பரிசம், 4, 5. (G.Tj.D.I, 73.) பார்க்க, see parišam.

*[பரிசம் + பணம்]*

**பரிசபேதி** *parišabēdi,* பெ. (n.) கற்கடகச் செய்ந்நஞ்சு; a kind of native arsenic. (சா.அக.)

**பரிசம்**[1] *parišam,* பெ. (n.) 1. மணமகளுக்கு மணமகன் வீட்டாரளிக்கும் பணம், அணிகலன்கள் ஆகியன; jewels etc, presented bride-preice. 2. மணமகள் வீட்டார் மணமகன் வீட்டார்க்கு அளிக்கும் பொருட்கொடை; dowry. 3. கூத்திக்குக் கொடுக்கும் முன்பணம் (சிலப். 3,163, உரை.); a concubines fee.

**பரிசம்**[2] *parišam,* பெ. (n.) வல்லெழுத்து; hard consonant. *"பரிசம் வல்லினப் பெயர்"* (பேரகத். 31.)

**பரிசம்**[3] *parišam,* பெ. (n.) ஆழம்; depth. *'நாலாள் பரிசம்'*

**பரிசம் போடு—தல்** *parišam-pōdu-,* 20. செ.கு.வி. (v.i.) திருமணம் உறுதி செய்தல் (கொ.வ.); to perform the ceremony of betrothal

*[பரிசம் + போடு—,]*

**பரிசமணி** *pariša-maṇi,* பெ. (n.) பள்ளர் திருமண உறுதி செய்தலின் பொருட்டு கட்டுங் கழுத்தணி; necklace tied around the rack of the bride at a betrothal ceremony among paḷḷās.

*[பரிசம் + மணி]*

**பரிசல்** *parišal,* பெ. (n.) சிற்றோடம்; coracle, wicker-boat covered with leather, used to cross the rivers.

*[பரிசு → பரிசல்]*

(இச்சிற்றோடம் மூங்கில் பிரம்பு போன்றவற்றாலும் செய்தல் உண்டு)

**பரிசனமூலி** *parišaṉa mūli,* பெ. (n.) பொன்னாக்கு மூலிகை; plant capable of transmuting. (சா.அக.)

மறுவ: பரிசமூலி

**பரிசில்**[1] *parišil,* பெ. (n.) 1. கொடை; gift, donation, by a king to a poet, present. *"பரிசில் வாழ்க்கைப் பரிசிலர்"* (சிறுபாண். 218.) *"வாயிலோயே வாயிலோயே .... வரிசைக்கு வருந்து மிகப் பரிசில் வாழ்க்கைப், பரிசிலர்க் கடையா வாயி லோயே"* (புறநா. 206:45) *"ஓதி மந்தரு பரிசி னேருறு நடையாளை"* (சேதுபு. விதூம. 82.) சங்கப் புலவர்களுள், பரிசில் பெற்றோர் பலர் உண்டு. 2. பரிசு, 5. பார்க்க, see parišu 5. *"திகிரிப் பரிசில் விடப்படு சுழியில்"* (குமர. பிர. முத்துக். 38)

*[பரிசு → பரிசல்]*

**பரிசில்கடா நிலை** *parišil kaḍā nilai,* பெ. (n.) பரிசில் நீட்டித்த தலைவனுக்குப் பரிசில் வேட்டோன் தன்னிடும்பை கூறிக் கேட்கும் புறத்துறை (புறநா. 101.) (purap.) theme of soliciting bounty from a patron who delays his favour.

*[பரிசில் + கடாநிலை]*

**பரிசில்விடை** *parišil-viḍai,* பெ. (n.) தன்புகழ் கூறுவோர்க்கு அரசன் வேண்டியன வழங்கி அவர் மகிழ விடைகொடுத்தலைக்கூறும் புறத்துறை (பு.வெ.9,26); theme of a king's bestowing gifts upon his panegyrists and permitting then to leave in a happy mood.

*[பரிசில் + விடை]*

**பரிசிலர்** *parišilar,* பெ. (n.) பரிசில் வேண்டி இரப்போர்; solicitors of gifts. *"பரிசில் வாழ்க்கைப் பரிசிலரேத்த"* (சிறுபாண். 218.) *"பரிசிலர்க் கருங்கல நல்கவும்"* (புறநா. 14.)

*[பரிசில் → பரிசிலர்]*

**பரிசிலாளர்** *parišilāḷar,* பெ. (n.) பரிசில் வேண்டி இரப்போர்; (திவா.) solicitors of gifts. *"ஏத்திய பரிசிலாளர்க்கெண்ணிய வனைத்து நல்கும்"* (அரிச்ச, சூழ். 32.)

*[பரிசில் + ஆளர்]*

**பரிசிற்றுறை** *parišiṟṟuṟai,* பெ. (n.) அரசன் முன்னே பரிசிலர் தாம் கருதிய பேறு இது வெனக் கூறும் புறத்துறை (பு. வெ. 9, 5.); (purap.) theme of bards representing their needs to a patron.

*[பரிசில் + துறை]*

**பரிசின்மாக்கள்** *parišiṉ-mākkaḷ,* பெ. (n.) *பரிசிலர்*; காண்கsee *parišilar.*

**பரிசினிலை** *parišiiṉilai,* பெ. (n.) பரிசில் கொடுத்த பின்னும் விடைகொடுக்கத் தாழ்க்கும் தலைவனிடத்தினின்று பரிசில் பெற்றோன் தானே செல்ல ஒருப்படுதலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 9, 25.); (purap.) theme of a bard informing his patron of his intention to go home, when the better delays giving permission to leave even after the presents are awarded.

*[பரிசில் + நிலை]*

**பரிசு¹** *parišu,* பெ. (n.) **1.** குணம் (பிங்.); quality, nature, property. *"பிள்ளை பரிசிது வென்றால்"* (திவ். பெரியதி. 3, 3, 2.) **2.** தன்மை; manner, way, method, mode, fashion. *"தெரியும் பரிசாவ தியம்புகவே"* (திருவாச. 5, 9.) **3.** நெறிமுறை; order, rule. *"பரிசொடும் பரவிப் பணிவார்"* (தேவா. 612, 3.) **4.** பெருமை; honour, dignity. *"தக்கனு மெச்சனுந்தம் பரிசழிய"* (திருவாச. 13, 15.) **5.** சிற்றோடம்; coracle, wicker-boat coverd with leather, used to cross rivers. கொ.வ. **6.** கொடை; gift, donation, present, boon. *"பாதகத்துக்குப் பரிசு வைத்தானுக்கே"* (திருவிசைப் திருப்பல். 10.) **7.** பார்க்க, see parisam பரிசம், **4.** (இ.வ.) **8.** மானம்; dignity. *"பரிசழிந்து செய்யீரோ என்னானும்"* (நாலடி. 309.)

**பரிசு²** *parišu,* பெ. (n.) **1.** வெற்றிக்கு உரிய அல்லது பாராட்டுக்கு உரிய செயலுக்கு வழங்கப்படுவது; prize; award. *"ஓட்டப் பந்தயத்தில் வெற்றி பெற்றவருக்கு ஆயிரம் உரூபா பரிசு" "நோபல் பரிசு பெற்ற இந்தியர்"* **2.** குலுக்கல் முறையில் விழும் பணம்; (of lottery) prize money. *"பரிசுச்சீட்டை வாங்கி வைத்துக் கொண்டு பரிசு விழாதா என்று ஏங்குவர் பலர்"* **3.** அன்பளிப்பு; gift. *"மணமேடையில் திருமணப் பரிசுகள் குவிந்தன" "பரிசுப் பொருள் விற்பனைக்கு என்றே தனிக் கடைகள் இருக்கின்றன"*

**பரிசு**[3] *parišu,* பெ. (n.) 1. நற்குணம்; good habit. *"பத்திமையும் பரிசுமிலை"* (திருவாச. கண்ட. 7.) 2. தன்மை; manner. *"கண்ட பரிசுரைப் பேனென்ன"* (பிரம–காண், சிவராத்திரி–மகி. 1.) 3. பாராட்டி வழங்கும் கொடை; reward *"கையலென் சிலபரிசு கொண்டெதிர் காணுவேன்"* (சிவரக, தேவியுடம். 3.)

**பரிசுகெடு–தல்** *parišu-kedu-,* 20. செ.கு.வி. (v.i.) சீரழிதல்; to be bereft of all sense of honour (w.)

*[பரிசு + கெடு–,]*

**பரிசுச்சீட்டு** *parišu-c-cīṭṭu,* பெ. (n.) குலுக்கல் முறையில் தேர்ந்தெடுத்துப் பணம் பரிசாகத் தருவதற்கு விற்கப்படும், வரிசை எண் அச்சிட்ட தாள்; lottery ticket *"பரிசுச்சீட்டு விழுந்தால் வீட்டுக்கு, விழாவிட்டால் நாட்டிற்கு"*

*[பரிசு + சீட்டு]*

**பரிசுத்த பாணி** *parišuttapāṇi,* பெ. (n.) துரிசு; blue vitriol copper (சா.அக.)

*[பரி + சிமிழ்]*

**பரிசுற்றிவாட்டல்** *parišuṟṟi vāṭṭal,* பெ. (n.) கட்டிய சரக்கெல்லாம் கிண்ணிக் கருப்பூரத் தீயில் வாட்டிச் செந்தூரமாக்கல்; the process of calcination of consolidated drugs by exposing or subjecting them to the moderate heat of burning camphor cake. (சா.அக.)

**பரிசை** *parišai,* பெ. (n.) 1. கேடகம்; (தொல். பொருள். 67, உரை.) பி–ம் (சூடா.); shield, buckler. 2. விருது; large umbrella, as a badge of honour. 3. பரிசு. பார்க்க,5 see parisu,

க. பரிகெ

**பரிசை**[2] *parišai,* பெ. (n.) கருமத்தைத் தடுத்தற் பொருட்டுப் பொறுக்க வேண்டுந் துன்பங்கள்; the troubles endured for checking karma. *"ஆற்றல் பரிசை முதலாகிய வன்ன வெல்லாம்"* (நீலகேசி. 125.)

*[பரி → பரிசை]*

**பரிசைக்காரன்** *parišai-k-kāraṉ,* பெ. (n.) 1. கேடகம் பிடிப்போன்; shield bearer. 2. கேடகம் பிடிக்குந் தொழிலாளிகளின் பரம்பரையிற் பிறந்த சாதியன்; person belonging to the caste of shield-bearers.

*[பரிசை + காரன்]*

**பரிஞ்சு** *pariñju,* பெ. (n.) வாட்பிடி; hilt or handle of a sword.

தெ. பருட்சு.

**பரிடையார்** *pariḍaiyār,* பெ. (n.) ஆள்வினைச்சவையார் (T.A.S.ii 40); members of an administrative council.

ஒ.நோ. பரடையார்

**பரித்தவம்** *pari-t-tavam,* பெ. (n.) கருங்காலி; black sundara tree. (சா.அக.)

**பரித்தானை** *pari-t-tāṉai,* பெ. (n.) அறுவகைத் தானையுள் குதிரைப்படை (திவா.) cavalry, one of aṟuvakai-t-āṉai.

*[பரி + தானை]*

**பரிதகனம்** *paritagaṉam,* பெ. (n.) பொசுக்குதல்; roasting. (சா.அக.)

*[பரி + தகனம்]*

**பரிதஞ்சிரணம்** *paridañjiraṇam,* பெ. (n.) மஞ்சிபத்திரி; an unknown drug said to convert gold in to a red oxide. (சா.அக.)

**பரிதவி¹–த்தல்** *paridavi-,* 11. செ.கு.வி. (v.i.) 1. துன்புறுதல்; to grieve, sorrow. *"சீரழிந்து நெஞ்சந் தியங்கிப் பரிதவித்தான்"* (பிரபோத. 30, 25.) 2. வருந்துதல்; to suffer. 3. இரங்குதல்; to pity, sympathise. *"பால னென்று பரிதவிப்பார்"* (சேதுபு. அக்கி. 37.)

**பரிதவி²–த்தல்** *paridavi-,* 11. செ.கு.வி. இரங்கத்தக்க நிலையில் வருந்தித் தவித்தல்; suffer; be in a state of distress. *"கணவனை இழந்து பரிதவிக்கும் இளம் பெண்" "தண்ணீர்த் தட்டுப்பாட்டால் மக்கள் பரிதவிக்கிறார்கள்"*

**பரிதவிப்பு** *paridavippu,* பெ. (n.) வருத்தத் துடன் கூடிய தவிப்பு; suffering; despair. *"நடுவர் என்ன தண்டனை தருவாரோ என்ற பரிதவிப்போடு நின்றிருந்தான்"*

**பரிதாகம்** *paridāgam,* பெ. (n.) 1. உடம்பின் எரிச்சல்; (சா.அக.) burning sensation of the body. 2. வெம்மை; (இலக்.அக.); heat.

*[பரி + தாகம்]*

**பரிதி¹** *paridi,* பெ. (n.) 1. ஒளிவட்டம்; halo round the sun or moon. *"வளைந்து கொள்ளும் பரிதியை"* (இரகு. இந்து. 7.) 2. வட்டவடிவு (திவா.); circle, circumference. *"பரிதி ஞாலத்து"* (புறநா. 174.) 3. கதிரவன்; sun. *"இலைகளின் வழியாக ஊடுருவிற்று பரிதியின் ஒளி" "பரிதியஞ் செல்வன்"* (மணிமே. 4, 1.) 4. தேருருளை; wheel of a car. *"அத்தேர்ப் பரிதி"* (களவழி. 4.) 5. சக்கராயுதம்; discus. *"பரிதியிற் றோட்டிய வேலைக் குண்டகழ்"* (கல்லா. 80, 23.) 6. சக்கரவாகப்புள் பார்க்க; cakra bird. *"தண்கோட்டகம் பரிதியங் குடிங்கு கூடுமே"* (இரகு. நாட்டுப். 40.) 7. ஒளி; light, lustre; radiance, brightness. *"பரிதியம் பரிதியொத் தான்"* (இரகு. இந்து. 7.) 8. வேள்வித்தூண்; sacrificial stake. 9. ஓமாலிகையைச் சுற்றியிடப்படும் நாணற்புல்; the bunches of darbha grass laid round a sacrificial fire. *"பாசிலை நாணற்படுத்துப் பரிதி வைத்து"* (திவ். நாய்ச். 6, 7.) 10. திருக்குறளுரை யாசிரியருள் ஒருவர் (தொண்டை. சத. 40, மேற்கோள்); one of the commentators of the kuṟaḷ. 11. சீக்கிர பரிதி பார்க்க,; (astron.) epicycle.

**பரிதி²** *paridi,* பெ. (n.) (கணி.) வட்டத்தின் சுற்றாக அமையும் கோடு; சுற்றளவு; circumference. *"வட்டத்தின் நடுவிலிருந்து பரிதிக்குக் கோடு வரைந்தால் அது 'ஆரம்' ஆகும்"*

**பரிதி³** *paridi,* பெ. (n.) 1. கதிரவன்; sun. *"பரிதி நன் மரபில்வரு பார்த்திபன்"* (அரிச்ச. காப்பு. 2.) 2. வட்டம்; round. *"இளங்கதிர்ப் பாரிதி சூட்டியியர் தென்னலாமே"* (சிந்தா. காந்த. 35.)

**பரிதி⁴** *paridi,* பெ. (n.) 1. பொன்; gold. 2. வெண்கீரைத் தண்டு; white garden green. 3. நாணல் (தருப்பை); sacrificial grass. (சா.அக.)

**பரிதி⁵** திருக்குறளுக்கு உரையெழுதிய பதின்மருள் ஒருவராவர் இவர் *'பருதி'* எனவும் வழங்கப்படுவர். பதின்மூன்றாம் நூற்றாண்டினர். பரிமேலழகர்க்கு முற்பட்டவர்.

ஒன்பது உரைகள் எழுதப்பட்டும் திருக்குறளில் வரும் ஐயம் தெளியமாட்டாமல் தமிழுலகம் வருந்தியதாக, அந்த ஐயங்கள் நீங்கப் பரிமேலழகர் செவ்விய நல்லுரை செய்தாரென்பதால், அவ்வொன்பது உரை யாசிரியருள் ஒருவராகிய *'பரிதியார்'* அவர்க்கு முற்பட்டவராதல் தெளிவாதல் காண்க. இவர் சிவனியச் சமயத்தினர்.

இவருரை சொற்பொருளுரை பொழிப்புரை யின்றிக் கருத்துரையாக அமைந்துள்ளது. இவருரையால் திருக்குறள் கருத்தை விளங்கிக் கொள்வது அரிது.

**பரிதிக்காய்** *paridi-k-kāy,* பெ. (n.) பச்சைக் கடுக்காய்; green gallnut. (சா.அக.)

**பரிதிகாந்தம்** *paridikāndam,* பெ. (n.) கதிரவர் காந்தம்; jasper. *"பரிதிகாந்த மென்றுரைத்திடு பன்னொரு சிகரத்து"* (உபதேசகா. கைலை. 24.)

*[பரிதி + காந்தம்]*

**பரிதிசடாவாரி** *paridišaḍāvāri,* பெ. (n.) சவுரிக் காய்; a kind of medicinal plant. (சா.அக.)

**மறுவ:** குறட்டை

**பரிதி நியமம்** *paridi niyamam,* பெ. (n.) தஞ்சைமாவட்டச் சிவன்கோயில்களுள் ஒன்று; a Sivan temple in Tanjore district.

**பரிதிநீர்** *paridinīr,* பெ. (n.) பனிநீர்; dew water. (சா.அக.)

**பரிதிப்பச்சை** *paridi-p-paccai,* பெ. (n.) கதிர்ப் பச்சை; a fragrant plant. (சா.அக.)

**பரிதிபாகை** *paridi-pāgai,* பெ. (n.) வானவியல் அளவை வகை; (w.) (astron.) mean degrees counted on an epicycle, always on a given ratio to those of the deferent.

*[பரிதி + பாகை]*

**பரிதிமாற் கலைஞர்** *paridimāṟkalaiñar,* பெ. (n.) இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த சிறந்த தமிழறிஞரும் பன்னூல் ஆசிரியருமான சான்றோர்; a well known Tamil pandit and author of many literary books in 20thC.

தம் பெயரைத் தமிழாகச் செய்ய விரும்பிய சூரியநாராயண சாத்திரியார் – சூரியன் – பரிதி; நாராயணன் – மால்; சாத்திரியார் – கலைஞர் என்பதால் பரிதி மாற்கலைஞர் என்று ஆக்கிக்கொண்டார். சென்னை கிறித்தவக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக விளங்கியவர். மதிவாணன் நாடகத் தமிழ் நூல், தமிழ் வரலாறு முதலிய பலநூல்களை எழுதியவர்.

**பரிதியங்குடிங்கு** *paridiyaṅguḍiṅgu,* பெ. (n.) சக்கரவாகப் புள்; ruddy goose. (சா.அக.) *"கோட்டசம் பரிதியங்கு டிங்கு கூடுமே"* (இரகு, நாட்டு. 40.)

**பரிதிவட்டம்** *paridi-vaṭṭam,* பெ. (n.) கதிர் மண்டலம்; suns disc. *"வெங்கதிர்ப் பரிதி வட்டத் தூடுபோய் விளங்குவாரே"* (திவ். பெரியதி. 4, 5, 10)

**மறுவ:** ஊர்கோள், வட்டம், பரிவேடம்

*[பரிதி + வட்டம்]*

**பரிது¹** *paridu,* பெ. (n.) தன்மை; manner, mode. *'பட்டபரிது விடுபேறு அட்டிப்பேறாக'* (T.A.S.ii, 68.)

*[பரிசு → பரிது]*

**பரிது²** *paridu,* பெ. (n.) பரியது, (பெரியது); that which is big.

"*பரியது கூர்ங் கோட்ட தாயினும் யானை வெரூஉம் புலிதாக்குறின்*" (குறள். 599)

**பரிந்துகொண்டு வரு—தல்** *parindu kondu,* 21. செ.கு.வி. (v.i.) (ஒருவரின்) சார்பாக அல்லது ஆதரவாக முன் வருதல்; offer ones sympathy (in support of somebody.) *"அவன் செய்த தவறு என்னவென்று தெரியாமல், அவனுக்குப் பரிந்துகொண்டு வருகிறாயா?"*

*[பரிந்துகொண்டு + வரு—,]*

**பரிந்துபேசு—தல்** *parindu-pēšu-,* 5. செ.கு.வி. (n.) 1. ஒருவற்காக ஏற்றுப் பேசுதல்; to plead, intercede, vindicate advocate ones interets. *"உன் நண்பன் என்பதற்காகப் பரிந்து பேசு கிறாயா?" "உங்கள் சண்டையில் நான் யாருக்கும் பரிந்து பேசமாட்டேன்" "தொழிலாளர்களுக்காக நிர்வாகத்திடம் பரிந்து பேசினார்"* 2. அன்போடு கூறுதல்; to speak with feeling solicit with earnestness. *"பரிந்து பேசி யொன்று கொடுத்தாய்"* (அருட்பா, அருட்பிர. 98.)

*[பரிந்து + பேசு—,]*

**பரிந்துரை**[1] *parindurai,* பெ. (n.) கருத்து, ஓர்வு ஆகியவற்றை பயன்படுத்திக் கொள்ளும்படி அல்லது நடைமுறைப்படுத்தும் படி முன்வைத்தல்; make recommendation, recommend. *"பல்கலைக்கழக மானியக் குழு பரிந்துரைத்த ஊதிய விகிதங்களைப் பல்கலைக் கழகங்கள் ஏற்றன". "மாணவர்கள் படிக்க வேண்டிய நல்ல புத்தகங்களை ஆசிரியர்கள் பரிந்துரைக்க வேண்டும்"*

**பரிந்துரை**[2] *parindurai,* பெ. (n.) 1. இவ்வாறு செய்யலாம் என்னும் முறையில் வழங்கும் கருத்து; ஓர்வு; recommendation. *"கல்லூரிக்கு இசைவு வழங்கலாம் என வல்லுநர் குழு பரிந்துரை செய்தது"* 2. ஒருவருக்கு சார்பான எழுத்து அல்லது பேச்சு; recommendation (for a post, ect.) *"அமைச்சரிடமிருந்து பரிந்துரைக் கடிதம் பெற முயன்றான்"*

**பரிநீதி** *pari-nīdi,* பெ. (n.) குதிரையிலக்கணங் கூறும் நூல்; treatise on horses. *"வெம்பரி நீதி கேண்மோ"* (திருவாலவா. 28, 62.)

*[பரி +Skt. niti › த. நீதி]*

**பரிப்பாகன்** *pari-p-pāgaṉ,* பெ. (n.) குதிரை நடத்துவோன்; horse-groom. *"தாவிவரும் பரிப்பாகன்"* (திருவாச. 18, 8.)

*[பரி + பாகன்]*

**பரிப்பு**[1] *parippu,* பெ. (n.) 1. இயக்கம்; movement, motion. *"அஞ்ஞாயிற்றுப் பரிப்பும்"* (புறநா. 30.) 2. துக்கம்; distress, sorrow. *"எனக்கென்ன மனப்பரிப்பே"* (திவ். திருவாய். 6, 4, 6.)

*[பரி → பரிப்பு]*

**பரிப்பு**[2] *parippu,* பெ. (n.) தாங்குகை; supporting, sustaining, bearing, as a burden.

*[பரி → பரிப்பு]*

**பரிப்புகாரன்** *parippu-kāraṉ,* பெ. (n.) ஊட்டுப் புரையை மேல் உசாவல் செய்யும் பணியாளன்; an officer superintending uṭṭu-p-purai.

*[பரிப்பு + காரன்]*

**பரிப்பெருமாள்** *parípperumāḷ,* பெ. (n.) (திருக்குறள் உரையாசியருள் ஒருவர்; a commendator of Tiru-k-kuṟaḷ.

திருக்குறள் உரையாசிரியர் பதின்மருள் ஒருவர். இவர் திருக் குறளுரையோடு சொல்லிலக்கண நூலும் காமநூலும் ஆராய்ந்து எழுதியுள்ளார். சேது நாட்டிலுள்ள 'செழுவை' என்னும் ஊரில் பிறந்தவர்.

*"தெள்ளி மொழியியலைத்*
*தேர்ந்துரைத்துத் தேமொழியார்*
*ஒள்ளிய காமநூல்*
*ஓர்ந்துரைத்து— வள்ளுவனார்*
*பொய்யற்ற முப்பாற்*
*பொருளுரைத்தான் தென்செழுவை*
*தெய்வப் பரிப்பெருமாள் தேர்ந்து"*

என்னும் சிறப்புப் பாயிர வெண்பா காண்க. பரிமேலழகர்க்கு முற்பட்டவர். வடநூற்புலமை உடையவர்

இவருரை காளிங்கர் உரையைவிடச் சுருக்கமானது. பொழிப்புரையாக அமைந்தது. ஒவ்வோரதிகாரத்தும் அவதாரிகை கூறுதலும் அதிகார வைப்புமுறை கூறுதலும். விளக்க வுரை கூறுதலும் கூற்றுவிளக்கம் கூறுதலும் இவரியல்பு.)]

**பரிபணம்** *paripaṇam,* பெ. (n.) 1. கைப்பணம் (யாழ்.அக.); pocket money. 2. மூலத்தொகை; capital.

*[பரி + பணம்]*

**பரிபரி** *pari-pari,* பெ. (n.) யானையை அடக்கு தற்குரியதோர் குழூஉக்குறி (சீவக. 1834, உரை.); an expr. used for controlling elephants.

*[பரி + பரி]*

**பரிபரிசி** *paripariśi,* பெ. (n.) குதிரைவாலி; horse tail plant. (சா.அக.)

**பரிபாகம்** *paripāgam,* பெ. (n.) 1. சமைக்கை; cooking. 2. ஏற்ற பக்குவம்; fit condition. 3. முதிர்வு; ripeness, maturity, perfection. *"என் பரிபாகமின்மை நோக்கார்"* (குமர, பிர, சிதம்பரச்செய். 19.)

*[பரி + பாகம்]*

**பரிபாகி** *paripāgi,* பெ. (n.) 1. தகுந்தவன்; fit person. 2. அறிவு முதிர்ச்சியுள்ளவன்; a person of mature wisdom.

*[பரி + பாகி]*

**பரிபாட்டு** *pari-pāṭṭu,* பெ. (n.) *பரிபாடல்* பார்க்க; see *pari-pāḍal.* *"பரிபாட்டமுதம்"* (பரிபா. உரைச் சிறப்பு.)

*[பரி + பாட்டு]*

**பரிபாடல்**[1] *pari-pāḍal,* பெ. (n.) 1. ஒருவகைப்பா (தொல். பொ. 430.); a kind of stanza with sections of various metres. 2. எட்டுத் தொகையுள் எழுபது பரிபாட்டால் தொகுக்கப்பட்டதொரு நூல்; an anthology of 70 stanza, one of ēṭṭu-t-togai *"செய்ய பரிபாடற் றிறம்"* (தனிப்பா.)

*[பரி + பாடல்]*

[கழகத் தொகை நூல்கள் எட்டனுள் ஒன்று. இசைப்பாட்டு வகையில் ஒன்றான பரிபாடல் என்ற வகையைச் சேர்ந்த எழுபது பாட்டுகள் கொண்டது. இப்போது முதல் இருபத்திரண்டு பாட்டுகளே பழையவுரையுடன் கிடைத்துள்ளன. வேறு வகையால் இரண்டு பாடல்களும், சிதறியவை சிலவும் கிடைத்துள்ளன. இவற்றுள் திருமாலுக்கு ஏழு பாட்டும் முருகனுக்கு எட்டும், வையை யாற்றுக்கு ஒன்பதும், மதுரையைப் பற்றி ஆறு சிதைவுகளும் உள்ளன. இதனால் இப் பரிபாடல் மதுரையையும் வையையாற்றையும் அவற்றை யடுத்துள்ள பரங்குன்றம், அழகர் மலை, ஆகியவற்றையும் வரைந்து கொண்டு பாடுவதாக அமைந்த தென்பது விளங்கு கின்றது.]

**பரிபாடி** *paripāḍi,* பெ. (n.) ஒழுங்கு (யாழ்.அக.); method, arrangement.

*[பரி + பாடி]*

**பரிபிட்டகம்** *paripiṭṭagam,* பெ. (n.) ஈயம்; lead. (சா.அக.)

**பரிபின்னால்** *paripiṉṉāl,* பெ. (n.) பருத்தி; cotton shrub. (சா.அக.)

**பரிபுட்கரை** *pariputkarai,* பெ. (n.) ஒருவகை வெள்ளரி; a species of cucumber. (சா.அக.)

**பரிபுடம்** *paripāḍam,* பெ. (n.) நூறு எருவைக் கொண்டு போடும் புடம்; fire setup for purpose of calcination with the aid of one hundred cowdung cakes. (சா.அக.)

*[பரி + புடம்]*

**பரிபுரம்** *pari-puram-,* பெ. (n.) சிலம்பு; anklet. "*மெல்லடிப் பரிபுரமாயின தணந்து*" (கந்தபு. துணைவ. 7)

*[பரி + புரம்]*

**பரிபுலம்பு—தல்** *pari-pulambu,* 5. செ.கு.வி மிக வருந்துதல்; to be in great distress. "*பக்க நீங்குமின் பரிபுலம்பினெரென்*" (சிலப். 10226)

*[பரி + புலம்பு]*

**பரிபூரணம்**[1] *paripūraṇam,* பெ. (n.) 1. நிறைவு; fulness, perfection, pervasion. 2. மிகுதி (யாழ்.அக.); abundance, plenty. 3. பொந்திகை; satifaction. 4. பெண் குழந்தைகளை நிறையப் பெற்ற தாய் தந்தையர் இனிப் பெண்பிறக்க வேண்டாம் என்ற கருத்துடன் கடைசிப் பெண்ணுக்கிடும் பெயர்; name given to a female child born after a number of daughters when its parents do not want any more. 5. முடிவு; end. 6. மரணம்; death. "*அந்தச் சாமியார் பரிபூரண மானார்*" (கொ.வ.)

*[பரி + பூரணம்]*

பூரணம் = Skt.

**பரிபெல்லம்** *paribellam,* பெ. (n.) பெருமுத்தக் காசு; large variety of cyprus root. (சா.அக.)

**பரிமகம்** *parimagam,* பெ. (n.) குதிரை வேள்வி; horse sacrifice. "*அன்னோன் பரிமகமுற்றி*" (கூர்மபு. இராமனவ. 8.)

*[பரி + மகம்]*

மகம் = Skt.

**பரிமகம்**[2] *pari-magam,* பெ. (n.) குதிரை வேள்வி; "*வரி மாஞ்செய்வான் வேண்டி*" (திருவிளை. புராண வரயா. 17.)

*[பரி + மகம்]*

**பரிமண்டலம்** *parimaṇḍalam,* பெ. (n.) சிற்றீஞ்சு; small date. (சா.அக.)

*[பரி + மண்டலம்]*

**பரிமணி** *parimaṇi,* பெ. (n.) கரந்தை; sweet basil. (சா.அக.)

**பரிமா** *pari-mā,* பெ. (n.) குதிரை; horse. "*பரிமாவின் மிசைப்பயின்ற வண்ணமும்*" (திருவாச.2,116.)

*[பரி + மா]*

**பரிமாணனார்** *parimāṇaṉār,* பெ. (n.) ஓர் இலக்கண வாசிரியர் (நன்.401.மயிலை); author of a treatise on grammar, not extant.

**பரிமாவடிப்போர்** *pari-mā-vaḍippōr,* பெ. (n.) குதிரைப்பாகர் (யாழ்.அக.); grooms.

*[பரிமா + வடிப்போர்]*

**பரிமாற்றக்காரி** *parimāṟṟa-k-kāri,* பெ. (n.) விலைமகள்(வின்); unchaste woman.

*[பரிமாற்றம் + காரி]*

**பரிமாற்றக்குறை** *parimāṟṟa-k-kuṟai,* பெ. (n.) *பரிமாற்றப் பிழை* பார்க்க; see *parimāṟṟa-p-piḻai.*

*[பரிமாற்றம் + குறை]*

**பரிமாற்றத்தாழ்ச்சி** *parimāṟṟa-t-tāḻcci,* பெ. (n.) *பரிமாற்றப்பிழை* பார்க்க; see *parimāṟṟa-p-piḻai.*

*[பரிமாற்றம் + தாழ்ச்சி]*

**பரிமாற்றப் பிழை** *parimāṟṟa-p-piḻai,* பெ. (n.) தீயொழுக்கம்(வின்); bad habits, misconduct.

*[பரிமாற்றம் + பிழை]*

**பரிமாற்றம்** *parimāṟṟam,* பெ. (n.) 1. மாற்றிக்கொள்ளுகை; exchanging interchanging. 2. நெறிமுறைகளைக் கைக் கொள்ளல்; observance of prescribed rules and conventions. "*அந்நினைவுக்கு அனுரூபமான பரி மாற்றத்தை*" (ஈடு,7,9,11.) 3. நடக்கை(யாழ்ப்); behaviour, conduct. 4. நோய்பரவியிருக்கை(வின்); prevalence, as of disease 5. கலந்திருக்கை(யாழ்ப்); intercourse familiarity 6. கள்ளப் புணர்ச்சி (யாழ்ப்); illicit intercourse.

*[பரி + மாற்றம்]*

**பரிமாற்றவணி** *parimāṟṟa-v-aṇi,* பெ. (n.) ஒன்றைக் கொடுத்து மற்றொன்று பெறுதலைக் கூறும் அணி. (வீரசோ.அலங்.3) a figure of speech describing an exchange.

*[பரிமாற்றம் + அணி]*

**பரிமாற்று¹** *parimāṟṟu,* பெ. (n.) கோயில் திருமேனியின் படையலுக்குரிய பொருள்(இ.வ.); articles of offering to a deity.

*[பரிமாற்றம் → பரிமாற்று]*

**பரிமாற்று²** *parimāṟṟu,* பெ. (n.) பண்டமாற்று (திருவாலவா. 30,45); exchange.

*[பரிமாறு → பரிமாற்று]*

**பரிமாறு¹–தல்** *parimāṟu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. மாற்றிக் கொள்ளுதல்; to give and take, exchange, interchange. 2. உணவு படைத்தல்; to distribute, serve, as food to guests. "*செவிவாயா விசைத்தருந்துப் பரிமாறி*" (குற்றா.தல.முதனூல்.7.) 3. நுகர்தல்; to enjoy. "*ராசபுத்திரன்......நினைத்தபடிக்குப் பரிமாறாலாமிறே*" (ஈடு,1,2,7.) 4. பணிமாறுதல்; to render service by fanning, blowing an instrument, etc. "*துணைக்கவரி பரிமாற*" (ஞானவா.லீலை.22.) 5. கையாளுதல்; to use, as utensil; to handle, as furniture. "*பரிமாறுகிற உடைமை*" 6. உட்கொள்ளுதல்; to partake of, as food or drink. 7. புணர்தல்(யாழ்ப்); to copulate with.

*[பரிமாறு → பரிமாறு–,]*

**பரிமாறு²–தல்,** *parimāṟu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. நடமாடுதல்; (j) to go frequently; to resort, as men or animals 2. பரவுதல்; (w.) to prevail, as epidemic. 3. பரவுதல்; to move about, "*சிறு விரல்கள் தடவிப் பரிமாற*" (திவ். பெரியாழ்.3,6,8.) 4. செலாவணியாதல்; to circulate, as money (w.) 5. ஒழுகுதல்; (இ.வ.) to conduct oneself. 6. உலாவுதல்; (w.) to walk about, as a convalescent person.

*[பரிமாறு + பரிமாறு–,]*

**பரிமாறு³—தல்** *parimāṟu-,* **5.** செ.கு.வி. ஒருவர் மற்றவருக்கு இலையில் அல்லது தட்டில் உணவை உண்பதற்கு உரிய முறையில் வைத்தல்; உணவு படைத்தல்; serve (food) *"கணவனுக்கு குழந்தைகளுக்கும் பரிமாறி விட்டுத் தானும் உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்தாள்" "திருமண வீட்டுப்பந்தியில் பரிமாற ஐந்து பேராவது வேண்டும்"* **2.** கொடுத்துப் பெறுதல்; பரிமாற்றம் செய்தல்; exchange. *"இரு நாடுகளும் தத்தம் வயத்தில் உள்ள போர்ச் சிறையாளிகளை (கைதிகளை)ப் பரிமாறிக்கொள்ள உடன்பட்டன" "இருநாட்டுத் தலைவர்களும் கருத்துகளைப் பரிமாறிக் கொண்டனர்"*

**பரிமித்திரம்** *parimittiram,* பெ. (n.) வீரம் என்னும் மருந்து; perchloride of mercury. (சா.அக.)

மறுவ: பரிமிட்டம்

**பரிமித்துரு** *parimitturu,* பெ. (n.) சவ்வீரம்; corrosive sublimate. (சா.அக.)

**பரிமுகம்¹** *pari-mugam,* பெ. (n.) **1.** முதல் விண்மீன்; the first viṉ-mīṉ. **2.** காலின் குதிரைமுகம் (யாழ்.அக.); shin of the leg.

*[பரி + முகம்]*

**பரிமுகம்²** *parimugam,* பெ. (n.) **1.** கணைக்கால்; ankle, **2.** முன்னங்கால்; part from foot to knee.

**பரிமுகமாக்கள்** *parimuga-mākkaḷ,* பெ. (n.) கின்னரர்; mythical beings with the human body and the head of a horse. *"பரிமுக மாக்களைப் பாராய்"* (கம்பரா.சித்திர.11.)

*[பரிமுகம் + மாக்கள்]*

**பரிமுகவம்பி** *parimuga-v-ambi,* பெ. (n.) குதிரைமுகத்தோணி; a boat having the figure-head of a horse. *"பரிமுகவம்பியுங் கரிமுகவம்பியும்"* (சிலப்.13, 176.)

*[பரிமுகம் + அம்பி]*

**பரிமுசல்** *parimušal,* பெ. (n.) குடவம் (பித்தளை); brass. (சா.அக.)

**பரிமேதம்¹** *pari-mēdam,* பெ. (n.) குதிரை வேள்வி; horse sacrifice. *"நகுடனென்போ னரும்பரி மேதவேள்வி யாற்றினான்"* (திருவிளை. இந்திரன்பழி.60.)

*[பரி + மேதம்]*

மேதம் = Skt.

**பரிமேயம்** *parimēyam,* பெ. (n.) அளவுபட்டது; that which is measured or limited.

*[பரி + மேயம்]*

**பரிமேலழகர்** *parimēglaḷakar,* பெ (n.) திருக்குறளுக்கு உரையெழுதிய பதின்மருள் இறுதியானவரும் எட்டுத்தொகையுள் ஒன்றாகிய பரிபாடலுக்கும் உரைஎழுதிய வருமான உரையாசிரியர். author of commen dator on kural and paripāḍaḷ.

பரிமேலழகரின் ஊர் காஞ்சிபுரம் என்பதை. *"திருக்காஞ்சி வாழ் பரிமேலழகன் வள்ளுவர் நூற்கு வழிகாட்டினான் தொண்டை மண்டலமே"* என்பதால் அறியலாம். *"திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்"* என்று பெரியாழ்வாரும் பணித்தார் என்று இவர் 39ஆம் அதிகாரத் தொடக்கத்தில் எழுதியுள்ளமையாலும் 349, 370 குறளுரையில் திருவாய்மொழியை எடுத்துக் காட்டி இருத்தலாலும் திருமால டியாரிடத்து இவர்க்கு இருந்த அன்பையும், திருவாய்மொழியில்

இவர்க்கிருந்த ஈடுபாட்டையும் அறியலாம். இவர் மாலிய (வைணவ)ராயினும் பிற மத நூல்களை வெறுப்பின்றி ஆராய்ந்து தம் உரையில் அவற்றின் முடிவுகளை எடுத்தாண்டுள்ளார்; வடநூற்புலமை யுடையவர்.

இவருடைய உரைநடை சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல் முதலிய அழகுகளை யுடையது; திட்பநுட்பஞ் செறிந்தது. சிலவிடங்களில் செய்யுள் போல மோனை எதுகையுடன் விளங்குவது. தமிழில் காணப்படும் உரைகளுக்கெல்லாம் தலைவரம்பாயது இவர் உரைநடையின் உயர்வை விளக்கவேண்டின் 643 ஆம் குறளுரையில் "*சொல்லின் குணங்களாவன வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல் விழுப்பயன் தருதல் என்றிவை முதலாயின*" என்று இவர் கூறிய குணங்கள் எல்லாம் கொண்டது இவர் நடை என்று சுருங்கக் கூறலாம். இவர் உரையின் சிறப்பைக் கண்டே "*பார்மேல் பரித்தவுரையெல்லாம் பரிமேலழகன் தெரித்த வுரையாமோ தெளி*" என்று புலவர்கள் பாராட்டுவாராயினர்.

**பரிய** *pariya,* பெ. அ. (adj.) பருத்த, thick, large, brig. "*பரிய மாசுணங்கயிறா*" (தேவா.1138,6.)

க. பிரிய

*[பல் → பர் → பரு → பரிய*
*பரிய → பெரிய]*

**பரியகம்** *pariyagam,* பெ. (n.) 1. சிலம்பு; anklet consisting of lottle bells "*பரியகஞ் சிலம்பு*" (திவா.) 2. காற்காப்பு; ankle-ring "*பரியக நூபுரம்*" (சிலப்.6,84.) 3. கைச்சரி. (சூடா.); arm-ring.

*[பரி + அகம்]*

**பரியங்கப்பாதி** *pariyanga-p-pādi,* பெ. (n.) குதிரைவாலி; horse tail plant. (சா.அக.)

**பரியசம்** *pariyašam,* பெ. (n.) ஓமம்; carum copticum. (சா.அக.)

**பரியட்டக்காசு** *pariyatta-k-kāšu,* பெ. (n.) துகில்வகை (சிலப்.14,108,உரை); a garment of ancient times.

*[பரிவட்டம் → பரியட்டம் + காசு]*

**பரியட்டம்** *pariyattam,* பெ. (n.) 1. *பரிவட்டம்,* 1,2. (திருவிருத்.12,வ்யா.87.) பார்க்க; see *pari-vattam.*

*[பரிவட்டம் → பரியட்டம் ]*

**பரியத்தியம்** *pariyattiyam,* எலும்பு முழுவதையும் சூழ்ந்திருக்கும் சவ்வு; the tough fibrous membrane surrounding a bone. (சா.அக.)

**பரியநல்வேதிச்சி** *pariyanal vēdicci,* பெ. (n.) முண்டினி மரம்; an unknown plant useful in alchemy. (சா.அக.)

**பரியம்** *pariyam,* பெ. (n.) 1. மணப்பரிசம் bride-price. "*பல்வளை பரியமாக*" (சீவக.1047.) 2. பரத்தையர் பெறுங்கூலி; hire of a prostitute. ஒரு நாளைக்குப் பரியமாக வென்று அரசனாற் பெறப்பட்டாள் (சிலப்.3,163,அரும்.)

*[பரிசம் → பரியம் ]*

**பரியயணம்** *pariyayaṇam,* பெ. (n.) சேணம். (யாழ்.அக.); saddle.

*[பரி + அணம் → அயணம் ]*

**பரியயம்** *pariyayam,* பெ. (n.) 1. அசட்டை; carlessness. 2. எதிரிடை; opposition 3. ஒழுங்கின்மை; disorder.

*[பரி + அயம்]*

**பரியரை** *pariyarai,* பெ. (n.) மரத்தின் பெரிய அடிப்பகுதி; large trunk of a tree. *"பரியரைக்கமுகின்"* (பெரும்பாண்.9.)

*[ஒருகா. பராரை → பரியரை ]*

**பரியல்** *pariyal,* பெ. (n.) 1. இரங்குகை; grieving, feeling distress. *"பரியல்வேண்டா"* (புறநா.172.) 2. விரைந்து செல்லுகை; going fast. *"பரியணாவொடு பன்மலைப்படரும்"* (அகநா.28.)

*[ஒருகா; பரிதல் → பரியல்]*

**பரியழல்** *pari-y-alal,* பெ. (n.) *வடவைத்தீ* பார்க்க; see *vadavai-t-ti* the mare shaped fire believed to lie hidden in the ocean. *"பரியழல் மீது போர்த்திடு மஞ்சனப் புகையென"* (கந்தபு.கடவுள்.10.)

*[பரி + அழல்]*

**பரியன்** *pariyan,* பெ. (n.) 1. பெரியோன்; a great person. 2. உருவத்தாற் பெரியவன்; a being of great dimension. *"நேரியனாய்ப் பரியனுமாய்"* (சி.சி.8,28.)

*[பல் → பர் → பரு]*

**பரியாகாரம்** *pariyāgāram,* பெ. (n.) 1. காகம்; crow. 2. தவசக்குவியல்; heap of grain. (சா.அக.)

**பரியாமி** *pariyāmi,* பெ. (n.) மருளூமத்தை; bur-weed heache plant. (சா.அக.)

**பரியாமை** *pariyāmai,* பெ. (n.) பற்றுச் செய்யாமை; (பு.வெ.) having no affection.

*[பரி → பரியாமை]*

**பரியாளம்**[2] *pariyālam,* பெ. (n.) பரிவாரம்; attendants. *"விரசையந் தனம் போர் வேழம் வெம்பரி யாளங்க–டடையிட மின்றியீண்ட"* (சேதுபு. சங்கரபா. 83.)

**பரியாளன்** *pariyālan,* பெ. (n.) *பரிவாரன்.* (நாமதீப. 138.) பார்க்க; see *parivāran.*

*[பரிவாரன் → பரியாளன்]*

**பரியாறுடையான்** *pariyārudaiyān,* பெ. (n.) செம்பாம்புக்கோள் (நாமதீப. 103.); moons descending node.

*[பரி + ஆறு + உடையான்]*

**பரியானம்** *pariyānam,* பெ. (n.) சேணம்; saddle.

*[பரி + ஆணம் → ஆனம்]*

**பரியேரிடையாதி** *pariyēridaiyādi,* பெ. (n.) தகரை; ringworm plant. (சா.அக.)

**பரில்லம்** *parillam,* பெ. (n.) கொட்டணை, உமரி முதலிய கடற்கரைச் செடிகளின் சாம்பலிலிருந்து எடுக்குமோர் தூய்மையற்ற எரியுப்பு; impure sodium, carbonate obtained from the burnt ashes of some sea shore plants. (சா.அக.)

**பரிவட்ட அரைஞாண் கயிறுகட்டு** *parivatta-araiñān-kayiru kattu,* பருவட்டத்தில் கட்டப்படும் கீழ்க்கட்டு;

மறுவ: பெருட்ட அண்ணா கவுறுகட்டு.

*[பரிவட்டம் + அரை + ஞாண் + கயிறு + கட்டு]*

**பரிவட்டச்சீலை** *parivatta-c-cilai,* பெ. (n.) நேர்த்தியான ஆடை; (வின்) fine cloth

*[பரிவட்டம் + சீலை]*

**பரிவட்டணை** *parivaṭṭaṇai,* பெ. (n.) 1. மாறுகை; charge, transformation. 2. கலைத்தொழில் எட்டனுள் வீக்கின யாழ் நரம்பைக் கரணஞ் செய்து தடவுகை (சீவக. 657, உரை.); (mus.) sounding the strings of lute by passing the fingers overthem, one of eight kalai-t-toḻil. q.v. 3. விருது; paraphernalia. *"சத்திர சாமர முதலிய பரிவட்டணைகளோடு"* (குருபரம். 191.) *"ஐம்பரி வட்டணை யகத்தில் வாழுயிர்க்கு"* (மேருமந். 216.)

*[பரி + வட்டணை]*

**பரிவட்டம்**[1] *parivaṭṭam,* பெ. (n.) 1. ஆடை; garment, cloth, robe. *"ஈறில் விதத்துப் பரிவட்ட மூழினிரைத்தே"* (பெரியபு. ஏயர்கோ. 36.) 2. கோயில் மதிப்புரவாக வணங்குவோர் தலையைச் சுற்றிக்கட்டும் கடவுளாடை; vestment of a deity tied round the head of its devotee, as a mark of honour. 3. பணிக்கு அடையாளமாக அரசன் அளிக்கும் நிலைக் கவசம்; (w.) robes given by a king to a person on his appointment to an office. 4. துயர (துக்க)காலத்தில் தலையிற் கட்டுஞ் சீலை; head-dress worn in mourning. 5. நெய்வார் கருவி வகை; (w.) a weavers instrument

மறுவ: ஊர்கோள், வட்டம், பரிவேடம்

*[பரி + வட்டம்]*

**பரிவட்டம்**[2] *parivaṭṭam,* பெ. (n.) *பரிவேடம்,* (C.G.) பார்க்க; see *parivēḍam.*

**பரிவட்டம்**[3] *parivaṭṭam,* பெ. (n.) (கோயிலில்) மதிப்புரவிற்கு உரியவர்களைப் பெருமிதம் செய்யும் பொருட்டு அவர்கள் தலையில் அணிவிக்கும் கடவுளுக்குச் சாத்திய பட்டுத் துணி; a piece of silk cloth that is first put on the consecrated idol and then tied round the head of a distinguished guest as a mark of honour (in temples.) *"முதன்மை அமைச்சர் பரிவட்டம் கட்டி வரவேற்கப்பட்டார்"*

**பரிவட்டம்**[4] *parivaṭṭam,* பெ. (n.) கடவுட்டிருமேனிகளின் உடை; dresses of idols. *"பரிவட்டத் தொகை திருவாவரணம் பயிலறைகள்"* (சிவரக. தேவி. மேருகயிலை.19.)

**பரிவத்தி-த்தல்** *parivatti-,* 11. செ.குன்றாவி. (v.t.) சுற்றுதல்; to circumambulate, walk round. *"இடம் வலம் பரிவத்திப்ப"* (திருவாலவா. 28, 56.)

*[வட்டித்தல் + வத்தித்தல்]*

**பரிவதனம்**[1] *parivadaṉam,* பெ. (n.) அழுகை (யாழ்.அக.); lamentation.

*[பரி + வதனம்]*

**பரிவதனம்**[2] *parivadaṉam,* பெ. (n.) ஏளனம் (யாழ்.அக.); dabuse.

**பரிவயம்** *parivayam,* பெ. (n.) 1. அரிசி; rice. 2. இளமை(யாழ்.அக.); youth.

*[பரி + வயம்]*

**பரிவர்** *parivar,* பெ. (n.) அன்புள்ளவர்; those who love. *'பரிவர்.... சொல்லுகிற பாசுரத்தை'* (திவ். திருவாய். 4, 2, பன்னீ. ப்ர.)

*[பரிவு → பரிவர்]*

**பரிவருத்தனம்** *parivaruttaṉam,* பெ. (n.) 1. பரிவருத்தனை பார்க்க; 1. *"இருநிலத்தவர் ...... கொள்ளும் பரிவருத்தனம் போல்"* (சேதுபு. திருநா. 79.) 2. குதிரை நடைவகை (சுக்கிர நீதி, 72.); a pace of a horse.

*[பரிவருத்தனை → பரிவருத்தனம்]*

பரிவருத்தனம் = Skt.

**பரிவலம்** *parivalam,* பெ. (n.) வெள்ளி; silver. (சா.அக.)

**பரிவற்சனம்** *parivaṟcaṉam,* பெ. (n.) 1. (யாழ்.அக.) 1. கொலை; murder. 2. விடுகை; leaving, abandoning.

*[பரி + வற்சனம்]*

**பரிவாட்டி** *parivāṭṭi,* பெ. (n.) காசுக்கட்டி; black catechu. (சா.அக.)

**பரிவாடம்** *parivāḍam,* பெ. (n.) மொச்சைக் காய்; country bean. (சா.அக.)

**பரிவாதினி** *parivādiṉi,* பெ. (n.) வீணைவகை (பரத.ஒழிபி.15); a kind of lute.

**பரிவாரதேவதைகள்** *parivāra-dēvadaigaḷ,* பெ. (n.) கோயிலில் திருச்சுற்றிலுள்ள தெய்வப் படிமங்கள்; attendant deities of a superior god.

*[பரிவாரம் + தேவதைகள்]*

**பரிவாரம்**[1] *parivāram,* பெ. (n.) 1. சூழ்வோர் (திவா.); train, retinue, attendants. 2. படை (சது.); army, body of troops. 3. ஏவலாளர்; servants. 4. மறவர் அகம்படியருள் ஒரு பிரிவினர்; a sub-division of Maṟavar and Agambaḍiyar castes. (E.T.) 5. கோயம்புத்தூர், திருச்சிராப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களிலுள்ள தொட்டிய பெரு நிலக் கிழார்கள்; the Toṭṭiya zamindars in tne districts of coimbator, Trichirapally Madura and thinnevelly. 6. உறை (யாழ்.அக.); case, sheath.

**பரிவாரம்**[2] *parivāram,* பெ. (n.) (அரசர் போன்றோருடன்) உடன் வருவோர்; (பெரும் பாலும் கேலியாகக் கூறும் போது) உடன் வரும் கூட்டம்; (formerly) retinue (of a king, ect.), (often homorously) attendants; followers. *"பரிவாரமாக வரும் கூட்டத்தைக் கண்டு அச்சப்படவேண்டாம்"*

**பரிவாரம்**[3] *parivāram,* பெ. (n.) சூழ்ந்திருக்கு தேவர்; *"மற்றைப்பரி வாரத்தார் மாஷயந் தானும்"* (சைவ.ச. பொது. 461.)

மறுவ: பரியாளம், பரிவாரம்

**பரிவாராலயம்** *parivārālayam,* பெ. (n.) சுற்றுக் கோயில்; temples of the subordinate deities. *"ஸ்ரீராஜ ராஜேஸ்வர முடையார் கோயிலிற் பரிவாராலயத்து"* (s.i.i.ii, 86.)

*[பரிவாரம் + ஆலயம்]*

ஆலயம் = Skt.

**பரிவாலி** *parivāli,* பெ. (n.) குதிரை வாலி; horse tail plant. (சா.அக.)

**பரிவிக்கட்டு-தல்** *parivi-k-kaṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) *பரிந்துபேசு*—பார்க்க; see *parindupēšu*-intercede. *"நீ அவனுக்குப் பரிவிக் கட்டினது போதும்"*

*[பரிவி + கட்டு–,]*

**பரிவிண்ணன்** *pariviṉṉaṉ,* பெ. (n.) *பரிவித்தி (யாழ்.அக.)*; பார்க்க see *parivitti.*

*[பரி + விண்ணன்]*

**பரிவித்தி** *parivitti,* பெ. (n.) தம்பி மணந்து கொள்ளத் தான் மணமுடியாத தமையன் (யாழ்.அக.); unmarried elder brother whose younger brother is married.

*[பரி + வித்தி]*

**பரிவிந்தகன்** *parivindagaṉ,* பெ. (n.) முன்னோன் மணமுடியாதிருக்க மணம் முடித்த பின்னோன்; பார்க்க *பரிவேத்தா* (யாழ்.அக.); see *parivētta.*

*[பரி + விந்தகன்]*

**பரிவிந்து** *parivindu,* பெ. (n.) தில்லைமரம்; tigers milk tree. (சா.அக.)

**பரிவிந்துப்பால்** *parivindu-p-pāl,* பெ. (n.) தில்லைப்பால்; milk of tigers milk tree. (சா.அக.)

**பரிவிரட்டம்** *pariviraṭṭam,* பெ. (n.) தவறு (யாழ்.அக.); mistake, error, blunder.

*[பரி + விரட்டம்]*

**பரிவிருகிதம்** *parivirugidam,* பெ. (n.) அதிகப் படுகை (யாழ்.அக.); increase.

*[பரி + விருகிதம்]*

**பரிவிருங்கணம்** *pariviruṅgaṇam,* பெ. (n.) மிகுதிப் படுகை (யாழ்.அக.); growth; increase.

*[பரி + விருங்கணம்]*

**பரிவிளங்கம்** *pariviḷaṅgam,* பெ. (n.) வளி (வாயு)விளங்கம்; wind berry, worm killler. (சா.அக.)

**பரிவு**[1] *parivu,* பெ. (n.) **1.** அன்பு; affection. *"பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்"* (புறநா. 184.) *"பாகனைய சொல்லியொடு தம் பிரிவிற்பின் யோக"* (இராமா. அகத். 54.) **2.** பத்தி; devotion, piety. *"பரிவின் தன்மை யுருவு கொண்டனையவன்"* (பதினோ. திருக்கண்ண. 1. கல்லாட.) **3.** இன்பம் (சூடா.) delight, pleasure. *"பரிவு பொங்க வந்து எடுத்தணைத்து"* (பாரத. சம்பவ.1.) **4.** ஈரநெஞ்சு; sympathy. *"பரிசிலாளர் வயினளவில் பரிவும்"* (சேதுபு. முத்தீர். 17.) **5.** வருத்தம்; distress, affliction. *"கம்பஞ் செய் பரிவு நீங்கி"* (சீவக. 1737.) **6.** குற்றம்; fault, defect *"பண் வகையாற் பரிவு தீர்ந்து"* (சிலப். 7, 1.) **7.** முதிர்ச்சி (யாழ்.அக.); ripeness.

*[பரி[1] → பரிவு]*

*"பரிவு இல்லா உண்டியில் பட்டினி நன்று; அன்பு இல்லாப் பெண்டிரில் பேய் நன்று"* (பழ.)

**பரிவு**[2] *parivu,* பெ. (n.) (ஒருவரின் அல்லது ஒன்றின்) நலனில் அக்கறையும் ஈரநெஞ்சும்; sympathy and consideration. *"நான் சொன்ன முறையீடுகளை அதிகாரி பரிவுடன் கேட்டுக் கொண்டார்" 'தேர்வு எப்படி எழுதினாய்?" என்று பரிவாகக் கேட்டார்'*

**பரிவேட்டணம்** *parivēṭṭaṇam,* பெ. (n.) (யாழ்.அக.) **1.** சுற்றளவு; circumferance. **2.** சூழ்கை; surrounding.

*[பரி + வட்டணம் → வேட்டணம்]*

**பரிவேட்டி—த்தல்** *parivēṭṭi-,* **11. செ.குன்றாவி.** (n.) சுற்றுதல் **(சங்.அக.)**; to sorround; to circumambulate.

*[பரிவேட்டணம் → பரிவேட்டி—,]*

**பரிவேட்டி²** *parivēṭṭi,* பெ. (n.) வலம் வருகை; circumambulation from left to right. *"தேவரெலா மேவி விளைத்த பரிவேட்டியான்"* (காளத். உலா. 93.)

*[வட்டம் → வட்டித்தல் → வேட்டி –,]*

**பரிவேட்பு** *parivēṭpu,* பெ. (n.) பறவை வட்ட மிடுகை; circling, hovering, as of a bird. *"பார்வற் கொக்கின் பரிவேட்பு"* (பதிற்றுப். 21, 27.)

*[பரி + வட்பு → வேட்பு]*

**பரிவேடணம்** *parivēḍaṇam,* பெ. (n.) (யாழ்.அக.) 1. விருந்தினர்க்குப் பரிமாறுகை: serving meals to guests. 2. பார்க்க. *பரி வேட்டணம்,* 2. see *parvivēṭṭaṇam.*

*[பரி + வேடணம்]*

**பரிவேடம்** *parivēḍam,* பெ. (n.) கதிரவனையும், நிலவையும் சுற்றிக் காணப்படும் ஊர் கோள் வட்டம்; halo around the sun or moon. *"பரி வேடமிட்டது கோல் பார்"* (பாரதவெண், வாசுதே. 124.)

*[பரி + வட்டம்‘ → வடம் → வேடம்]*

**பரிவேடிப்பு** *parivēḍippu,* பெ. (n.) பார்க்க. *பரிவேடம் (சீவக. 1098, உரை.);* see *parivēḍam.*

*[பரி + வேடிப்பு]*

**பரிவேத்தா** *parivēttā,* பெ. (n.) தமையன் மணவாதிருக்கத் தான் மணந்து கொண்ட தம்பி; an younger brother who marries while his elder brother remains unmarried. *"பரிவேத்தா வென்னும் புன்சொற்கு"* (திருவாலவா. 43, 5.)

*[பரி + வேத்தா]*

**பரு¹–த்தல்** *paru-,* 11. செ.கு.வி. (v.i.) பெருத்தல்; to become large, bulky, plump; to swell. *"பருத்த தோளு முடியும் பொடிபட"* (தேவா. 498, 11.)

*[பெரு → பரு–,]*

**பரு¹–த்தல்** *paru-,* 11. செ.கு.வி. 1. சதைப்பற்று மிகுதல்; பெருத்தல்; grow fat. *"முன்பு பார்த்ததைவிட இப்போது பருத்திருந்தார்" "இப்படிப் பருத்து விட்டாயே! என்று அதிசயப்பட்டார்"* 2. (தடி முதலியவை) சுற்றளவில் பெரிதாக இருத்தல்; be thick and round. *"கைத்தடி மேல்பகுதி பருத்தும் கீழ்ப்பகுதி சிறுத்தும் இருந்தது"*

**பரு³–த்தல்** *paru-,* 4. செ.கு.வி(v.i.) 1. அதிகரித்தல்; to increase. 2. தடித்தல்; to grow large. *"பாவனை மனைத்தாலே பருத்தெழுமனமதாகும்"* (ஞானவா–ஞானவிந். 8.)

**பரு²** *paru,* பெ. (n.) 1. முகமுதலியவற்றில் உண்டாஞ் சிறுகட்டி வகை; pimple, as on the face; pustule; blotch. *"பருவைக் கிள்ளாதே" "முகப்பரு"* (கொ.வ.) 2. சிலந்திப் புண்; (இ.வ.) boil. 3. கணு (யாழ்.அக.) node. 4. கடல் (யாழ்.அக.); sea. 5. மலை (யாழ்.அக.) mountain. 6. மேலுலகம் (யாழ்.அக.); heaven. 7. நெல்லின் முளை (குஞ்.); sprout of paddy plant.

**பரு²** *paru,* பெ. (n.) 1. பருமை; *"பருச்சுழி யின்றி மிதக்குமதகரி"* (சேதுபு. நாட்டு. 12.) 2. தெரிநிலை வினைப்பகுதி; root of the declarative verb.

**பருக்கண்** *parukkaṇ,* பெ. (n.) பரும்படியானது; coarseness; (j.) roughness as of cloth; clumsiness of work.

*[பரு → பருக்கன்]*

**பருக்கல்சிலை** *parukkal šilai,* பெ. (n.) பருக்கைக்கல்; small pebbles. (சா.அக.)

**பருக்கல்சீனி** *parukkal šiṉi,* பெ. (n.) 1. அழுக் கெடுக்காத சருக்கரை; coarse sugar. 2. பனங்கட்டி; palmyra jaggery. (சா.அக.)

**பருக்காங்கல்** *parukkāṅgal,* பெ. (n.) *பருக்கைக் கல்;* பார்க்க; see *parukkai-k-kal.*

*[பருக்கை + ஆம் + கல்]*

**பருக்கு¹–தல்** *parukku-,* 5. செ.குன்றாவி. (v.t.) பெருக்குதல் (பரராச, i, 231.); to increase.

*[பெருக்கு → பருக்கு–,]*

**பருக்கு¹–தல்** *parukku-,* 5. செ.குன்றாவி. (v.t.) பருகச் செய்தல்; to cause to drink. *"நீர்தான் கொணர்ந்து...... பருக்கி யிளைப்பை நீக்கீரே"* (திவ். நாய்ச். 13, 4.)

*[பருகு → பருக்கு–,]*

**பருக்கென்னு–தல்** *parukkeṉ-,* 5. செ.கு.வி. (v.i.) 1. பருத்துக் காட்டுதல் (சீவக. 2339.) to be thick, bulky. 2. கொப்புளித்தல்; to blister. *'பருக்கென்ற........ கொப்புள்'* (சீவக. 2339, உரை.)

*[பருக்கு + என்னு–,]*

**பருக்கை¹** *parukkai,* பெ. (n.) 1. பருமனாகை; becoming bulky. 2. சோற்றவிழ்; single grain of cooked rice. *"சாப்பிட்ட இடத்தில் பருக்கைகள் சிதறிக் கிடந்தன" "பருக்கையிலாக் கூழுக்குப் போட வுப்பில்லை யென்பார்க்கும்"* (தனிப்பா.) 3. பருக்கைக்கல்; small pebbles. (புறநா. 246, உரை.) 4. பளிங்கு (பிங்.) crystal 5. புல்லன்; a mean fellow.

**பருக்கை²** *parukkai,* பெ. (n.) கோது; refuse, drege; sediment *"அதில் பருக்கை தட்டாத படி அதன் வாயிலே பிழியுமாய்த்து"* (திவ். பெரியதி. 1, 2, 5. வ்யா.)

**பருக்கைக்கல்** *parukkai-k-kal,* பெ. (n.) 1. சிறுகூழாங்கல்; small pebbles. *"திருவடி களிடத்தே செம்பருக்கைக் கல்லுறுத்த"* (அருட்பா, vi அருட்பிர. 79.) 2. பார்க்க, பருக்கை, 4 (சூடா.) 3. கக்கான்கல் (இ.வ.); kankar, limestone, an impure concretionary carbonate of lime.

*[பருக்கை + கல்]*

**பருகல்** *parugal,* பெ. (n.) 1. குடிக்கை; drinking; 2. நால்வகையுணவுள் குடித்தற்குரியது (திவா.); liquid food, one of nālvagai-y-uṇavu.

*[பருகு → பருகல்]*

**பருகு–தல்** *parugu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. குடித்தல்; to drink. *"பருகுவார் போலினும்"* (குறள்,811.) 2. உண்ணுதல்; to eat, devour. *"நிறையைப் பருகாப் பகல்கரந்த பையுள் கூர்மாலை"* (பு.வெ.12,பெண்பாற்.9.) 3. நுகர்தல்; to enjoy. *"பருகுவன் பைதனோ யெல்லாங் கெட"* (குறள்,1266.)

*[பருகு → பருகு–,]*

**பருகு²** *parugu,* பெ. (n.) *பருகல்,1* பார்க்க; see *parugal.* *"பருகுவன்ன வேட்கை யில்வழி"* (புறநா.207.)

**பருகும் பெருவிதம்** *parugum-peruvidam,* பெ. (n.) மருந்துண்ணும் போது, மருந்துண்பதற்கு உதவியாயிருக்கும் பொருள், அளவு பத்தியம் முதலானவற்றுடன் அறிந்துண்ணும் ஓர் அரியமுறை; the unique method of taking of medicine only after fully ascertaining the measure or size, vehicle ormedium diet etc. (சா.அக.)

**பருங்கடி** *paru-ṅ-kaḍi,* பெ. (n.) இலேசாய்ப் பற்படுகை (யாழ்.அக.); superficial bite.

*[பருமை → பரும் + கடி]*

**பருங்கண்வலை** *paruṅkaṇvalai,* பெ. (n.) பெரிய கண்களுடைய மீன்பிடிவலை (முகவை. மீன.); a kind of fishing net.

*[பருமை + கண் + வலை]*

**பருங்கம்** *paruṅgam,* பெ. (n.) கசகசா; poppy seeds. (சா.அக.)

**பருங்கல்** *paru-ṅ-kal,* பெ. (n.) அச்சம்; (இ.வ.) fear.

*[பரு + கல்]*

**பருங்காயம்** *paru-ṅ-kāyam,* பெ. (n.) பெருங்காயம் (தைலவ.தைல.); asafoetida.

*[பருமை → பரும் + காயம்]*

**பருங்காராம்** *paru-ṅ-kārām,* பெ. (n.) *பருங்காராமணி* பார்க்க; see *paruṅkārāmaṇi.*

**பருங்காராமணி** *paru-ṅ-kāramāṇi,* 1. பெரும்பயறு; big variety of cowpea. (சா.அக.)

**பருங்காரியம்** *paru-ṅ-kāriyam,* பெ. (n.) பெருங்காரியம் (வின்.); important business.

*[பருமை → பரும் + காரியம்]*

**பருங்காலிகம்** *paruṅgāligam,* பெ. (n.) தணக்கு மரம்; calamaran wood. (சா.அக.)

**பருங்கி** *paruṅgi,* பெ. (n.) வண்டு (நன்.107,மயிலை பி.ம்.); bee.

**பருங்கு—தல்** *paruṅgu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. பறித்தல்; to pluck, as fruit: to tear off. "*இருங்கனி பருங்கி மிகவுண்ட மந்தி*" (தேவா.1096,3.) 2. கொல்லுதல்; to kill, "*களிறீர்க்கின்றவனைப் பருங்கி*" (திவ். பெரியாழ்.1,2,7.)

**தெ.** பருகு

*[பருங்கி → பருங்கு—,]*

**பருங்குடல்** *paru-ṅ-kuḍal,* பெ. (n.) பெருங்குடலின் ஒருபகுதி (வின்.); colon, a part of the large intestine.

*[பருமை → பரும் + குடல்]*

**பருங்குறடு** *paru-ṅ-kuṟaḍu,* பெ. (n.) இரும்பு முதலியவற்றைப் பற்றுங் கருவி (திவா.); large tongs.

*[பருமை → பரும் + குறடு]*

**பருங்குறிஞ்சி** *paru-ṅ-kuriñji,* பெ. (n.) ***பெருங்குறிஞ்சி (தைலவ.தைல.79.)*** பார்க்க; see *peruṅkuṟiñji.*

*[பருமை → பரும் + குறிஞ்சி]*

**பருங்கெளிறு** *paruṅkeḻiṟu-,* பெ. (n.) பருத்த கெளிற்று மீன்; stout stumy or cat fish.

**பருங்கை** *paruṅ-kai,* பெ. (n.) 1. வள்ளன்மையுடையவன் (வின்.); liberal person. 2. பெருஞ்செல்வம் (இ.வ.); opulence. 3. பெருஞ்செல்வன் (வின்.); opulent person.

*[பருமை → பரும் + கை]*

**பருங்கொண்டமீன்** *paru-ṅ-koṇḍamīṉ,* பெ. (n.) ஆழ்கடலிற் பிடிபடும் பெரிய மீன் (முகவை. மீன்.); large and stout fish.



**பருங்கோரை** *paruṅkōrai,* பெ. (n.) 1. சம்பங்கோரை; elephant sedge grass. 2. சடாமாஞ்சில்; valerian. (சா.அக.)

**பருச்சனியம்** *paruccaṉiyam,* பெ. (n.) மேகம் (அக.நி.); cloud.

*[பரு → பருச்சனியம்]*

**பருச்சி** *parucci,* பெ. (n.) காட்டாமணக்கு; parging nut.

**பருசக்கால்** *paruša-k-kāl,* பெ. (n.) தூண்டில் முள்ளின் முனைக்கூறு (நெல்லை, மீன.); fish-hook.

பரியல் = விரைவு

மீன் விரைந்துசென்று தூண்டில் முள்ளைப் பற்றுவதாலும் பற்றுதலால் உயிர்நீங்குதலாலும்

பரியல் + கால் = பருசக்கால்.

**பருசிரிங்கி** *paruširiṅgi,* பெ. (n.) களாவிழுதி; indian ipecacuanha. (சா.அக.)

**பருஞ்சாய்** *paru-ñ-cāy,* பெ. (n.) சடாமாஞ்சி (தைலவ. தைல.78.) பார்க்க, see saḍāmañji. spikenard; valerian. (சா.அக.)

*[பருமை → பரும் + சாய்]*

*[பரு + காய்]*

**பருஞ்சுறுநாறி** *paruñjuṟunāṟi,* பெ. (n.) பேய்த்துவரை; bitter red gram. (சா.அக.)

**பருடையார்** *paruḍaiyar,* பெ. (n.) பரிடையார்; (T.A.S.ii. 45) பார்க்க; see *paridaiyār.*

**பருணன்** *paruṇaṉ,* பெ. (n.) செயற்படுத்துபவர்; a person of great ability, tact and persistence. "*அமரிற்பருணன்றன் பெரும்பாசமும்*" (கம்பரா.இலங்கைகேள்.59.)

*[பருணம் → பருணன்]*

**பருத்தவச் செடி** *parvttava-c-cedi,* பெ. (n.) குண்டு மல்லிகை; a kind of jasmine.

பருத்துவம் = குடமல்லிகை.

**பருத்தவம்** *paruttavam,* பெ. (n.) குடமல்லிகை; a kind of jasmine flower.

மறுவ. பருத்த மல்லிகை (சா.அக.)

**பருத்த வல்லிகை** *parutta-valligai,* பெ. (n.) மல்லிகை; (வைத்தியபரிபா.) jasmine.

**பருத்தவழகி** *paruttavalagi,* பெ. (n.) மல்லிகை; jasmine.

**மறுவ.** பருத்தவல்லிகை (சா.அக.)

**பருத்தவழகை** *paru-t-tavalagai,* பெ. (n.) *அடுக்குமல்லிகை (மலை.)* பார்க்க; see *adukkumalligai.* double-flowered jasmine.

*[பருத்த + அழகை]*

**பருத்தவன்** *paruttavan,* பெ. (n.) தடித்தவன்; corpulent man.

*[பெருத்தவன் → பருத்தவன்]*

**பருத்தாரம்** *paruttāram,* பெ. (n.) குதிரை; horse. (சா.அக.)

**பருத்தி[1]** *parutti,* பெ. (n.) **1.** பஞ்சுஉண்டாகுஞ் செடிவகை; indian cotton-plant, **2.** பஞ்சு; cotton. "*பருத்தி நூற்கிறான்*" (இ.வ.) "*கோடைக்காலத்திற்கு ஏற்ற பருத்தி ஆடை*" க. பா்தி. ம. பருத்தி

*[பரு → பருத்தி ]*

'*பருத்தி பட்ட பாடெல்லாம் பாடுகிறது.*' (பழ.)

'*பருத்திக் கடையிலே நாய்க்கு அலுவல் என்ன?*'

'*பருத்தி புடவையாய்க் காய்த்தது*' (பழ.)

மறுவ: பரி, பன்னல், காற்பாசம், பருத்தி.

"*பருத்தியிலை மொட்டிரண்டைப் பாலிலரைத் துண்ண*" (பதார்த்தகுணசி.)



**பருத்திவகைகள்**

1. செம்பருத்தி
2. பெலப்பருத்தி
3. சீமைப் பருத்தி
4. இலாடன் பருத்தி
5. காட்டுப் பருத்தி
6. மலைக்காட்டுப் பருத்தி
7. பூம்பருத்தி
8. தாளிப்பருத்தி
9. தீப்பருத்தி
10. உப்பம் பருத்தி
11. வனப்பருத்தி
12. வெண்பருத்தி
13. பட்டுப் பருத்தி
14. வாயிலைப் பருத்தி
15. பேய்ப் பருத்தி
16. தாய்ப் பருத்தி
17. குப்பைப் பருத்தி
18. ஐம்பருத்தி
19. பூளைவாய்ப்பருத்தி (சா.அக.)

**பருத்திக்கண்ணி** *parutti-k-kaṇṇi,* ஒருவகை கடல்மீன்; a kind of sea fish.

*[பருத்தி + கண்ணி ]*



**பருத்திக்காடு** *parutti-k-kāḍu,* பெ. (n.) பருத்திவிளைநிலம் (வின்.); cotton field.

*[பருத்தி + காடு ]*

*'பருத்திக்காடு உழுகிறதற்கு முன்னே பொம்மனுக்கு ஏழு முழமும் திம்மனுக்கு ஏழு முழமும்'* (பழ.)

**பருத்திக்குண்டிகை** *parutti-k-kuṇḍigai,* பெ. (n.) பருத்தியடைத்த குடுக்கை (நன்.34.); a small-mouthed shell stuffed with cotton.

*[பருத்தி + குண்டிகை ]*

**பருத்திக்கொட்டை** *parutti-k-koṭṭai,* பெ. (n.) (மாடுகளுக்கு உணவாக பயன்படும்) பருத்தி விதை; cotton seed (used as cattle feed) *"மாடுகளுக்கு பருத்திக்கொட்டை வைத்தாயா?"* என்று அவர் கேட்டார்.

*[பருத்தி + கொட்டை ]*

**பருத்திக்கொல்லை** *parutti-k-kollai,* பெ. (n.) பருத்திக்காடு பார்க்க; see *parutti-k-kāḍu.*

*[பருத்தி + கொல்லை ]*

**பருத்தித்தா** *paruttittā,* பெ. (n.) உப்பம்பருத்தி; a variety of herbaceous cotton. (சா.அக.)

**பருத்தித்தூரு** *parutti-t-tūru,* பெ. (n.) வாய்ப்புண்; thrush so called from its whitish appearance. (சா.அக.)

**பருத்திநூல்** *parutti-nūl,* பெ. (n.) பஞ்சுநூல்; cotton yarn or thread.

*[பருத்தி + நூல்]*

**பருத்திப்பச்சை** *parutti-p-paccai,* பெ. (n.) கதிர்ப்பச்சை; a fragrant green plant. (சா.அக.)

**பருத்திப்பஞ்சு** *parutti-p-pañju,* பெ. (n.) பருத்தியிலிருந்து எடுக்கும் பஞ்சு; cotten taken from parutti.

*[பருத்தி + பஞ்சு]*

**பருத்திப்பெண்டு** *parutti-p-peṇḍu,* பெ. (n.) பருத்திநூற்கும் பெண்; woman who spins cotton thread *"பருத்திப் பெண்டின் பனுவ லன்ன"* (புறநா. 125)

*[பருத்தி + பெண்டு]*

**பருத்திப்பொதி** *parutti-p-podi,* பெ. (n.) பருத்தி மூட்டை; bale of cotten *'பருத்திப் பொதிக்கு ஒரு நெருப்புப் பொறிபோல'* (பழ)

*[பருத்தி + பொதி]*

**பருத்திமணை** *parutti-maṇai,* பெ. (n.) பருத்தியினின்று கொட்டையைப் பிரித் தெடுக்கும் இயந்திரமமைந்தமணை; gin.

*[பருத்தி + மணை]*

**பருத்திமரம்** *parutti-maram,* பெ. (n.) கோங்கிலவு; a kind of cotton tree.

மறுவ: கன்னிகாரம்.



**பருத்திவீடு** *parutti-vīdu,* பெ. (n.) பருத்தியினின்று பிரிக்கப்பட்ட பஞ்சு; ginned cotton "*கோடைப் பருத்திவீடு நிறை பெய்தமூடை*" (புறநா.393)

*[பருத்தி + விடு → வீடு]*

**பருத்திற்குமுலான்** *paruttir- kumūlān,* பெ. (n.) ஒட்டொட்டி; a grass whose seeds stick to the clothes.

மறுவ: ஒட்டங்காய்ப்புல்.

**பருதி**[1] *parudi,* பெ. (n.) விளையாட்டுக் குரியவளையம் (புதுவை); quoit.

*[பர் → பரிதி → பருதி]*

மறுவ; பரிதி

**பருதி**[2] *parudi,* பெ. (n.) **1.** வெடிப்புச் சுண்ணம்; calcined nitre. **2.** எருக்கு; mader plant (சா.அக.)

**பருதிக்கல்** *parudi-kkal,* பெ. (n.) மந்தாரச் சிலை; a black mineral stone. (சா.அக)

**பருதிப்பச்சை** *parudi-p-paccai,* பெ.(n.) கதிர்ப்பச்சை; a fragrant green plant. (சா.அக)

**பருதிப்பாதிரி** *parudi-p-pādiri,* பெ.(n.) வெள்ளைப் பாதிரி; white variety of trumpet flower tree. (சா.அக)

**பருதிப்பால்** *parudi-p-pāl,* பெ.(n.) எருக்கம் பால்; milk of mader plant. (சா.அக)

**பருந்தடைப்பு** *parundadaippu,* பெ.(n.) எழுத்துக்கள் எண்கள் முதலியவற்றை அடைத்துக் காட்டுவதற்கு இடும் ஓர் அடையாளக்குறி; double bracket ()

*[பருந்து + அடைப்பு]*

**பருந்தலை** *paru-n-talai,* பெ. (n.) **1.** பெரியதலை; large head. **2.** செருக்குள்ளவன் (வின்.); swelled head, haughty person. **3.** பார்க்க, பருந்தலைக் காரன்; see paruntalai-k-kāran. **4.** மாட்டுக்குற்ற வகை (மாட்டுவா.16.); a defect in cattle.

*[பெரும் → பரும் + தலை]*

**பருந்தலைக்கறையான்** *paruntalai-k-karaiyān,* பெ.(n.) கறையான் வகை (வின்.); a large- headed white ant.

*[பரும் + தலை + கறையான்]*

**பருந்தலைக்காரன்** *parundalai-k- kāran,* பெ. (n.) பெரியதனக்காரன் (வின்.); big-wig, person of property, authority, respectability or dignity.

*[பருந்தலை + காரன்]*

**பருந்தலையெறும்பு** *paruntalai-y- erumbu,* பெ.(n.) பருத்த தலையையுடைய எறும்புவகை (வின்.); a large- headed emmet.

*[பருந்தலை + எறும்பு]*



**பருந்தாட்டம்** *parundāṭṭam,* பெ. (n.) பருந்து தன் இரையைக் கொத்தியாட்டுஞ் செயல் போன்ற பெருந்துன்பம்; extreme torment, as the pecking and, tossing of its prey by the kite *"பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டி"*(தனிப்பா,1,170,22)

*[பருந்து + ஆட்டம்]*

**பருந்திற்குழூலான்** *parundirkumūlāṉ,* பெ. (n.) ஒட்டொட்டி என்னும் புல்வகை; sticking grass. (சா.அக)

**பருந்தின் விருந்து** *parundiṉ virundu,* பெ.(n.) நண்டு; crab, as a prey of kites. (சா.அக)

*[பருந்தின் + விருந்து]*

**பருந்தின் விழுக்காடு** *paruntin-viḻu-k-kādu,* *பருந்தின் வீழ்வு(நன்.18,மயிலை)* பார்க்க; see *paruntin vilvu.*

*[பருந்தின் + விழுக்காடு]*

**பருந்தின் வீழ்க்காடு** *parundiṉ-vilukkāḍu,* பெ.(n.) *பருந்தின் வீழ்வு (இறை. 4, 57)* பார்க்க; see *parundiṉ-viḻvu.*

*[பருந்தின் + வீழ்க்காடு]*

**பருந்தின் வீழ்வு** *parundiṉ-viḻvu,* பெ. (n.) நூற்பாநிலை நான்கனுள் முன்பின் இயைபில்லாது செய்மையிலுள்ள நூற்பாவோடு இயைபுபட்டு நிற்பது (நன். 19.); the principle of the kite's swoop whereby a sūtra occuring in a treatise is not directly connected either with its preceding or succeeding sūtra, but connected with some remote sūtra, one of four cuttitra-nilai, q.v.

*[பருந்து + இன் + வீழ்வு]*

**பருந்து[1]** *parundu,* பெ. (n.) 1. பறவை வகை (பு. வெ. 3, 12.); common kite. 2. வளையல்; bracelet. *"பறாஅப் பருந்தின்கட் பற்றி"* (கலித். 147.)

க. பர்து. ம. பருந்து

மறுவ: பாறு
சேனம்
கங்கம்
பாரசிகை



பருந்து வகைகள் 1. கரும்பருந்து – black kite. 2. புன்செய்ப் பருந்து – dwarf kite. 3. பாம்புப் பருந்து – common serpent eagle. 4. குடுமிப் பருந்து – crested hawk. 5. செம் பருந்து – red kite. 6. தேன் பருந்து – honey. kite. 7. பறைப்பருந்து – parish kite. 8. வெள்ளைப் பருந்து – white kite.

**பருந்துக் கிளிஞ்சல்** *parundu-k-kiḻiñjal,* பெ. (n.) கிளிஞ்சல் வகையு ளொன்று (குஞ்சை. மீன.); a kind of shell.

*[பருந்து + கிளிஞ்சல்]*



**பருந்துருமம்** *parundurumam,* பெ. (n.) இங்குணம் (சா.அக.) பார்க்க; see iṅguṇam.

**பருந்துவால்** *parundu-vāl,* பெ. (n.) பருந்துவால் போல் வெட்டி இணைக்கும் பலகையின் மூலைப் பொருத்து; dove tailing.

*[பருந்து + வால்]*

**பருந்துவாயன்** *parundu-vāyaṉ,* பெ. (n.) மீன் வகை; a kind of fish. ***"தோகை பருந்து வாயன் மட்டி மீன்"*** (பறானை. பள்ளு. 15.)

*[பருந்து + வாயன்]*



**பருந்துவாலன்** *parunduvālaṉ,* பெ. (n.) ஓர் கடல்மீன்; a kind of sea fish.



**பருந்தேக்கு** *parun-tēkku,* பெ. (n.) தேக்கு வகை (தைலவ. தைல.135.); a kind of teak.

*[பருமை → பரும் + தேக்கு]*

**பருநகம்** *parunagam,* பெ. (n.) சிவப்புக் கொன்னை; red indian laburnam. (சா.அக.)

**பருநடை** *paru-naḍai,* பெ. (n.) வேகமான நடை (இ.வ.); swift walk, as of bull.

*[பெருநடை → பருநடை]*

பருந்து வகைகள்



சிறிய கரும்பருந்து



செம்பருந்து



கடல்பருந்து



கள்ளப் பருந்து



பெரும்பருந்து



ஆளிப் பருந்து

பருந்து வகைகள்



பூனைப் பருந்து



பாம்புப் பருந்து



புஞ்சைப் பருந்து



ராசாளிப் பருந்து



சேற்றுப் பூனைப் பருந்து



வெள்ளைப் பூனைப் பருந்து

**பருநன்னாரி** *paru-nannāri,* மலை நன்னாரி; country sarsa-parilla.

மறுவ: மாகாளிக் கிழங்கு பருநாரி. (பதார்த். 428.)

*[பருமை → பரும் + நன்னாரி]*



**பருநீலிமூலி** *parunili mūli,* பெ. (n.) செம் பருத்தி; red cotton. (சா.அக.)



**பருநெல்** *paru-nel,* பெ.(n.) *பெருநெல் (நெல்லை)* பார்க்க; see *peru-nel.* an inferior kind of paddy.

*[பரு–மை + நெல்]*

**பருப்பதம்** *paruppadam,* பெ. (n.) மலை; mountain. *"பலகோடி பருப்பதக்கோ டொத்து"* (அரிச்ச. நாட்டு. 7.) *"பருப்பத மிறைஞ்சி விழி சோதி பயில் வித்து"* (கோயிற்பு. இரணிய. 17.) *"பருப்பதத்துக் கயல் பொறித்த பாண்டியர் குலபதிபோல்"* (திவ். பெரியாழ்.5,4,7.)

*[பரு → பருப்பு → (பொருப்பு) → பருப்பம் → பருப்பதம்]*

**பருப்பம்** *paruppam,* பெ. (n.) **1.** அளவு; quantity. **2.** பருமை; largeness. **3.** மலை; mountain. (சா.அக.)

**பருப்பு** *paruppu,* பெ. (n.) **1.** உடைத்துக் காய வைத்துச் சமையலுக்குப் பயன்படுத்தும் துவரை, உளுந்து போன்றவற்றின் விதை; dhal; tentil. *"அரிசி விலை, பருப்பு விலை எல்லாம் ஏறிவிட்டது"* **2.** வெந்த துவரம் பருப்பு; cooked dhal. *"தட்டில் சோறு வைத்துப் பருப்பும் போட்டு நெய் ஊற்றினான்"* **3.** சில வகைத் தாவரங்களில் ஓட்டுக்குள் இருப்பது அல்லது தோல் மூடி வெளியில் தெரியும் படியாக இருப்புது; nut (of some plants.) *"வேர்க்கடலைப் பருப்பு" "முந்திரிப் பருப்பு"* **4.** தேங்காயின் வெண்ணிறச் சதைப் பகுதி; kernel (of coconut) *'பருப்பிலே நெய் விட்டது போல'* (பழ.)

**பருப்புக்கஞ்சி** *paruppu-kañji,* பெ.(n.) பயற்றம்பருப்பாற் செய்யப்பட்ட கஞ்சிவகை (வின்.); a liquid preparation made of greengram and sugar.

*[பருப்பு + கஞ்சி]*

**பருப்புக் கந்தகம்** *paruppu-k-kandagam,* பெ. (n.) தமிழ் மருத்துவத்தில் பயன்படுவதும் பருப்பைப் போலிருப்பதும், பளபளப்பான மஞ்சள் நிறமுடையதுமாகிய கந்தக வகை; dholl sulpher. (சா.அக.)

*[பருப்பு + கந்தகம்]*

**பருப்புக்கீரை** *paruppu-k-kīrai,* பெ. (n.) **1.** கீரை வகை (M.M.363); common cock's greens. **2.** பூடுவகை (வின்.); white goose-foot.



**பருப்புக்குழம்பு** *paruppu-k-kuḻambu,* பெ. (n.) பருப்பு நிறைந்த புளிக்குழம்பு; sauce made of dholl.

*[பருப்பு + குழம்பு]*

**பருப்புச் சாதம்** *paruppu-c-cādam,* பெ.(n.) *பருப்புப் பொங்கல் (இ.வ.)* பார்க்க; see *paruppu-p-pongal.*

*[பருப்பு + சாதம்]*

சாதம் = Skt.

**பருப்புச் சாம்பார்** *paruppu-c-cāmbār,* பெ. (n.) *பருப்புக் குழம்பு (உ.வ.)* பார்க்க; see *paruppu-k-kūḻambu.*

*[பருப்பு + சாம்பார்]*

சாம்பார் = மகாராட்.

**பருப்புத் துவையல்** *paruppu-t-tuvaiyal,* பெ.(n.) பருப்பை வறுத்து அரைத்துச் செய்யும் துவையல்; chutney made of fried dholl.

*[பருப்பு + துவையல்]*

**பருப்புத்தேங்காய்** *paruppu-t-tēngāy,* பெ. (n.) தேங்காய்த் துருவலையும் கடலைப் பருப்பையும் வறுத்து வெல்லப்பாகில் போட்டுக் கிளறிக் கூம்பு வடிவத்தில் செய்து சில சடங்குகளில் பயன்படுத்தும் ஓர் இனிப்புப் பண்டம்; a cone shaped confection of fried coconut scrapings and bengal gram mixed with jaggery displayed on certain cocasions such as wedding.

*[பருப்பு + தேங்காய்]*



**பருப்பு நீர்** *paruppu-nīr,* பெ. (n.) *பருப்புக் கஞ்சி (நாஞ்.)* பார்க்க; see *paruppu-k-kañji.*

*[பருப்பு + நீர்]*

**பருப்புப் பொங்கல்** *paruppu-p-pongal,* பெ. (n.) பருப்புக் கலந்து சமைத்த சோறு (பதார்த்த. 1402.); food of rice and dholl boiled together.

*[பருப்பு + பொங்கல்]*

**பருப்புப்பொடி** *paruppu-p-poḍi,* பெ. (n.) (சோறுடன் சேர்த்துக்கொள்ள) வறுத்த துவரம் பருப்பு, மிளகு முதலியவற்றை இடித்துத் தயாரிக்கும் பொடி; powdered lentil mixed with pepper (added to cooked rice to give a mild flavour)

*[பருப்பு + பொடி]*

**பருப்பு மண்ணணை—த்தல்** *paruppu-maṇ-ṇ-aṇai-,* 4. செ.கு.வி. (v.i.) பருப்புச் செடிகளைச் சூழ மண்ணணைத்தல் (யாழ்ப்.); to bank the earth close around bears to support them.

*[பருப்பு + மண்ணணை—,]*

**பருப்பு மத்து** *paruppu mattu,* பெ. (n.) வெந்த பருப்பை மசிக்க உதவும் மத்துவகை; a staff with a round head for mashing boiled dholl.

*[பருப்பு + மத்து]*



**பருப்பு ரசம்** *paruppu-rašam,* பெ.(n.) பருப்பு கலந்த சாற்றுவகை; pepper-water prepared with dholl.

*[பருப்பு + ரசம்]*

ரசம் = Skt.

**பருப்புருண்டை** *parupppuruṇḍai,* பெ. (n.) துவரம் பருப்பை அரைத்து உருட்டிக் குழம்பில் வேகவைத்த உருண்டை; balls of ground dholl, boiled with sauce.

*[பருப்பு + உருண்டை]*

**பருப்பு வேகு—தல்** *paruppu-vēgu-,* 2. செ.கு.வி. எதிர்மறை வடிவத்தில் அல்லது எதிர் மறைத் தொனியில் ஒருவருடைய தந்திரம், உத்தி, மறைமுக முயற்சி பலித்தல்; (of ones tricks) be effective; try to be smart. ***"இந்த ஊரில் பருப்பு வேகாது"***

**பருப்பொருள்[1]** *paru-p-poruḷ,* பெ. (n.) கண்ணால் காணக் கூடியதும் தொட்டு உணரக் கூடியதுமான பொருள்; object that can be seen or felt; concrete object. ***"கல், மண் எல்லாம் பருப்பொருள்"***

**பருப்பொருள்[2]** *paru-p-poruḷ,* பெ. (n.) செய்யுளில் வெளிப்படையாகத் தெரியும் பொருள்; obvious meaning.

**பருப்பொருள்[3]** *paru-p-poruḷ,* பெ.(n.) 1. நூலின் பிண்டப்பொருள்; contents of a book stated in general form. *'பருப்பொருட்டாகிய பாயிரம்'* (இறை. கள. 1, உரை.) 2. சுவையற்ற செய்தி; unsavoury tasteless matter. *"பதர்ச்சொற் பருப்பொருள் பன்னுபு நீக்கி"* (பெருங். இலாவாண. 4, 51) 3. பாட்டின் மேலேழுந்தவாரியான பொருள்; superficial meaning, as of a stanza, *"பருப்பொருள் கடிந்து பொருட்டொடர்ப் படுத்து"* (பத்துப்பாட்டு. உரைச்சிறப்.)

*[பருமை + பொருள்]*

**பருப்போரை** *paruppōrai,* பெ. (n.) *பருப்புச்சாதம் (யாழ். அக.)* பார்க்க; see *paruppu-c-cādam,*

*[பருப்பு + ஓரை]*

**பருபருக்கை** *paruparukkai,* பெ. (n.) 1. வேகாத சோறு; rice partially boiled (வின்.) 2. சிறு கூழாங்கல் போன்ற பொருள் (வின்.); anything

of the size of small pebbles, as small fruits. 3. ஓரினப் பொருள்களிற் பெரியது (யாழ்ப்.); the largest thing in a collection of eatables, as of fruits. 4. சிறிதும் பெரிதுமான பொருட்டொகுதி (யாழ். அக.); a collection of things of various size. 5. ஒன்றிரண்டாக உடைக்கப்பட்ட தானியம்; grain not well-ground.

*[பரு + பருக்கை]*

**பருபலா** *parupalā,* பெ. (n.) கறிப்பாலை; a kind of pālai.

**பரும்படி** *parumbaḍi,* பெ. (n.) 1. கறிகாய்களுடன் அமைந்த சோறு; food with side dishes. 2. செவ்வையற்றது (வின்.); that which is clumsy, imperfect. 3. பருமட்டு (யாழ். அக.); thick, bulky object. 4. பெருவாரி (இ.வ.); large scale or quantity 5. உரப்பானது; that which is coarse, rough.

**பரும்பனையன்** *parumpaṉaiyaṉ,* பெ. (n.) ஒரு வகை யம்மை நோய்; a variety of small pox. (சா.அக.)

**பரும்பிடி** *parum-piḍi,* பெ. (n.) நெறிதவறிப் பொருள் பறிக்கை (புதுவை.); extortion.

*[பெரும்பிடி → பரும்பிடி]*

**பரும்புடவை** *parum-puḍavai,* பெ. (n.) ஆடை வகை; a kind of cloth. *"பரும் புடவைப் பொதி ஒன்றுக்குக் காசு பத்து"* (s.i.i.viii, 233.)

*[பெரும்புடவை → பரும்புடவை]*

**பருமட்டக்குறிப்பு** *parumaṭṭa-k-kuṟippu,* பெ. (n.) 1. *பருமட்டம், 1, 2.* பார்க்க; see *parumaṭṭam* 2. கரட்டுவடிவில் குறிக்கப்பட்டது (இ.வ.); rough draft.

*[பருமட்டம் + குறிப்பு]*

**பருமட்டம்** *parumaṭṭam,* பெ. (n.) 1. பரும்படியான மதிப்பு; rough calculation. 2. கரட்டுவடிவில் குறிக்கப்பட்ட நிலை; rough ness, crudeness, as in the first process of carving.

**பருமட்டமடி-த்தல்** *parumaṭṭam-aḍi-,* செ. குன்றாவி. (v.t.) பருவெட்டாகச் செய்தல்; to chisel or hammer roughly.

*[பருமட்டம் + அடி –.]*

**பருமட்டு** *parumaṭṭu,* பெ. (n.) 1. *பருமட்டம்,* பார்க்க; see paru-maṭṭam. 2. பருத்த பொருள்; thick, bulky object.

**பருமணல்**[1] *parumaṇal,* பெ. (n.) வரிக் கூத்துவகை (சிலப். 3, 13, உரை.); a mas-querade.

**பருமணல்**[2] *parumaṇal,* பெ. (n.) பெருமணல்; rough saud.

மறுவ. கூழாங்கல்.

**பருமணற்கல்** *parumaṇaṟ-kal,* பெ. (n.) கூரிய கல் (இ.வ.); grit; sandstone in which the grains of quartz are angular.

*[பரு–மை + மணற்கல்]*

**பருமணி முத்துப் பூடு** *parumaṇi muttu-p-pūḍu,* பெ. (n.) பேராமணக்கு; large castor seed. (சா.அக.)

**பருமம்**[1] *parumam,* பெ. (n.) 1. பசுமை; thickness, bulkiness, largeness. 2. 18 வடங்கொண்ட அரைப்பட்டிகை; women's waist-band consisting of 18 strings of beads and gems. "*பருமந்தாங்கிய*" (திருமுரு. 146) 3. பிட்டம் (யாழ்.அக.); the buttocks of woman.

**பருமம்**[2] *parumam,* பெ. (n.) 1. கவசம் (பிங்.); coat of mail, armour. 2. குதிரைக் கலனை; saddle; pillion. "*பருமங்களையா பாய்பரிக் கலிமா*" (நெடுநல். 179) 3. யானைக் கழுத்து மெத்தை; cushion on an elephant's neck. "*அவ்வியானை.... புனைபூண் பருமத்து*" (கலித். 97) 4. எருத்து முதுகிலிடும் அணியழகு விரிப்பு; trappings, as on the back of a bull. "*பருமம் புறங்கௌவி மின்ன*" (திருவிளை. மாயப்பசு. 14)

**பருமரக்கோல்** *parumara-k-kōl,* பெ. (n.) பாய் மரம் (மீன.பொ.வ.); mast.

**பருமரப்பாய்** *parumara-p-pāy,* பெ. (n.) பாய் மரம் மற்றும் பாய் (மீன.பொ.வ.); mast.

**பருமரம்பி** *parumarambi,* பெ. (n.) பெருங் காளான்; a kind of mushroom. (சா.அக.)

**பருமல்** *parumal,* பெ. (n.) கப்பற் குறுக்குமரக்கை (வின்.); yard arm in a vessel or dhony.

**பருமற்கயிறு** *parumar̲-kayir̲u,* பெ. (n.) கப்பற்காய் தூக்குங் கயிறு (வின்.); rope to twist a sail, the main brace.

*[பருமல் + கயிறு]*

**பருமன்** *paruman̲,* பெ. (n.) 1. ஒரு பொருளுக் கான எடையைத் தரும் பரிமாணம்; கனம்; thickness. 2. (ஒருவரின் உடலைக் குறிக்கையில்) சரிக்குச் சரியைவிடச் சதைப் பற்று மிகுந்த நிலை; (of ones body) bulkiness; plumpness. "*அவர் ஆறடி உயரம், உயரத்திற்கு ஏற்ற பருமன்*"

**பருமனைச்செம்பு** *paruman̲ai-c-cembu,* பெ. (n.) *தாம்பூரச் சிகை (சா.அக.)* பார்க்க; see *tāmbūra-c-cigai.*

**பருமி**[1]**–த்தல்** *parumi-,* 11. செ.குன்றாவி. (v.t.) ஒப்பனைசெய்தல்; to decorate, as an elephant. "*முத்தம் பரிமித்திடைதேய்த்து*" (கூர்மபு. அந்த காசு.53.) "*பல்கதிராரமும் பூணும் பருமித்து*" (சீவக.2113.) 2. பண்ணுறுத்தல்; to furnish with trappings, as an elephant. "*பருமித்த களிற்றினாலும்*" (சிந்தா. காந்தரு. 20.)

**பருமி**[2]**–த்தல்** *parumi-,* 11. செ.கு.வி. (v.i.) 1. எக்களிப்புடனிருத்தல் (வின்.); to be in high spirits; to exult. 2. படைக்கலம் பயிலுதல் (சூடா.); to practise the use of weapons.

**பருமிட்டான்** *parumittān̲, (cedi.)* பெ. (n.) அடுக்குச் செம்பரத்தை; double scarlet shoe flower. (சா.அக.)



**பருமிதம்** *parumidam,→* பெ. (n.) 1. எக்களிப்பு (வின்.); exultation. 2. படைக்கலம் பயிலுகை (யாழ். அக.); practising use of weapons.

*[பெருமிதம் → பருமிதம்]*

**பருமிப்பு** *parumippu,* பெ. (n.) சிலம்பம்; fencing (pond.)

*[பருமி → பருமிப்பு]*

பருமித்தல் = சிலம்பம் பயிலுதல்

**பருமீன்** *parumīṉ,* பெ. (n.) *பருங்கொண்ட மீன் (செங்கை.மீன்.)* பார்க்க; see *parunkoṇḍamīṉ.* large and stout fish.

*[பரு–மை + மீன் → பருமீன்]*



**பருமுத்து** *paru-muttu,* பெ. (n.) 1. பெரிய முத்து; large pearl. 2. பெரியம்மையின் கொப்புளம்; pustules in small-pox.

*[பருமை → பரு + முத்து]*



**பருமுளை வராகன்** *parumuḷai-varāgaṉ,* பெ. (n.) காசுவகை (M.E.R. 1923–4, p. 110.); a coin.

*[பருமுளை + வராகன்]*

**பருமுறி** *paru-muṟi,* பெ. (n.) முரடான வேட்டி வகை (நாஞ்.); a kind of coarse cloth for mens wear.

*[பருமை → பரு + முறி]*

முறி = துண்டித்தது

**பருமூலம்** *parumūlam,* பெ. (n.) முளைமூலம்; piles. (சா.அக.)

**பருமை** *parumai,* பெ. (n.) 1. பருத்திருக்கை; thickness, bulkiness, corpulence. 2. பெருமை; greatness. 3. பரும்படியான தன்மை; roughness, coarseness, grossness. 4. இன்றியமை யாமை; seriousness, importance, gravity. *'இது பருங்காரியமாயிருக்கிறது'* (வின்.)

க. பெர்மெ

*[பரு → பருமை]*

**பருமை செய்–தல்** *parumai-cey-,* 3. செ.குன்றாவி. (v.t.) திருத்திச் செப்பனிடுதல்; to repair. ***'இம்மடைகளும் கரையும் பருமை செய்கைக்கு'*** (s.i.i.vii 252.)

*[பருமை + செய்தல்]*

**பருவக்காய்** *paruva-k-kāy,* பெ. (n.) உரியகாலத்தில் காய்க்கும் காய்; fruits of the the proper time or season. (சா.அக.)

*[பருவம் + காய்]*

**பருவக்காற்று**[2] *paruva-k-kāṟṟu,* பெ. (n.) குறிப்பிட்ட காலத்தில் மட்டும் கடலிலிருந்து நிலப்பகுதிக்குள் குறிப்பிட்ட திசையில் வீசி மழை பெய்யச்செய்யும் காற்று; the monsoon. ***"தென்மேற்குப் பருவக்காற்று"***

*[பருவம் + காற்று]*

**பருவகம்** *paruvagam,* பெ. (n.) முழந்தாள்; knee. (சா.அக.)

**பருவகாலம்** *paruva-kālam,* பெ. (n.) 1. ஏற்றகாலம்; proper season. 2. பக்குவகாலம்; season of ripening or maturity. 3. காருவா அல்லது வெள்ளுவா; new or fullmoon.

*[பருவம் + காலம்]*

**மறுவ.** பதம்
எல்லை
பருவம் காலம்
வேலை பொழுது
அமையம் யாண்டு
காலை

**பருவசந்தி** *paruva-šandi,* பெ. (n.) காருவாக் கடையும் வெள்ளுவா முதலும் சந்திக்கும் காலம் (யாழ்.அக.); the junction between the full and the new moon with the following lunar day.

*[பருவம் + சந்தி]*

**பருவசந்திரன்** *paruva-šandiraṉ,* பெ. (n.) முழுநிலா; full moon.

*[பருவம் + சந்திரன்]*

சந்திரன் = Skt.

**பருவசந்துக்கட்டு** *paruvašandu-k-kaṭṭu,* பெ. (n.) காருவா அல்லது வெள்ளுவாவிற்குச் சிலநாள் முன் தொடங்கி அதற்குப்பின் சிலநாள் வரையுள்ள காலம்; period commencing a few days before the fullmoon or the new moon and ending a few days after it.

*[பருவம் + சந்து+ கட்டு]*

**பருவஞ்சம்** *paruvañjam,* பெ. (n.) பருந்து; kite. (சா.அக.)

**பருவஞ்செய்–தல்** *paruvañ-cey-,* 1. செ.கு.வி. (v.i.) செழிப்பாதல்; to be luxuriant. ***'பீஜம் பருவஞ் செய்கிறது'*** (ஈடு.4.7.ப்ர)

*[பருவம் + செய்தல்]*

**பருவஞ்சொல்(லு)–தல்** *paruvañcol-,* 13. செ.கு.வி. (v.i.) அறிவுரை கூறுதல் (வின்.); to advise.

*[பருவம் + சொல்–,]*

**பருவட்டம்** *paruvaṭṭam,* பெ. (n.) 1. பரும்படியான மதிப்பு; rough calculation 2. பருமையாய்க் குறிக்கப்பட்ட நிலை; roughness, crudeness, as in the first process of carring.

*[பருமை → வட்டம்]*

**பருவட்டு** *paruvaṭṭu,* பெ. (n.) *பருவட்டம்* பார்க்க; see *paruvaṭṭam.*

*[பரு + வட்டு]*

**பருவட்டுமீன்** *paruvaṭṭumīṉ,* பெ. (n.) *பருங்கொண்ட மீன் (நெல்லை)* பார்க்க; see *paruṅkoṇḍamīṉ* fish in large size.

*[பருவட்டு + மீன்]*



**பருவணிகை** *paruvaṇigai,* பெ. (n.) கண்ணோய் வகை (யாழ்.அக.); an eye disease.

**பருவத்தொழுக்கம்** *paruvattoḻukkam,* பெ. (n.) காலத்துக்கேற்ப நடிக்குஞ் செயல்; seasonable conduct. *"பாயற் பள்ளியும் பருவத் தொழுக்கமும்"* (மணிமே.2,24.)

*[பருவம் + அத்து + ஒழுக்கம்]*
அத்து = சாரியை.

**பருவதம்** *paruvadam,* பெ. (n.) மீன்வகை (சங்.அக); a kind of fish.

*[பரு → பருவதம்]*



**பருவதி** *paruvadi,* பெ. (n.) திங்கள் (யாழ்.அக.); moon.

*[பரி → பரு → பருவதி]*

**பருவதிக்கந்தம்** *paruvati-k-kantam,* பெ. (n.) *அந்திமந்தாரை* பார்க்க; see *andi-mamdārai.* four O' clock flower.

மறுவ. அந்திமல்லிகை

*[பருவதி + கந்தம்]*



**பருவதிமிலை** *paruvatimilai,* பெ. (n.) குறிப்பிட்ட பருவத்தில் மட்டுமே வலைப்படுந் திமிலைமீன் (குஞ்சைமீன்); a kind of large and stout fish, catching in a particular season.

*[பருவம்+ திமலை]*

**பருவநாடி** *paruva-nāḍi,* பெ. (n.) ஞாயிறும் திங்களும் ஒரே ஓரையிலேனும் ஒன்றுக் கொன்று ஏழாம் ஓரையிலேனும் நிற்குங்காலம் (வின்.); time of conjunction or opposition of the sun and the moon.

*[பருவம் + நாடி]*

**பருவப்பனை** *paruva-p-paṉai,* பெ. (n.) 1. இதரயிட்டம் பனை ஐந்தனுள் சாறெடுத்த பெண்பனை (G. Tn. D. I, 307); female palmyra which has been tapped, one of five idarayiṭṭam-paṉai. 2. காலத்திற் காய்க்கும் பனை (வின்.); palmyra that bears fruits at the proper season.

*[பருவம் + பனை]*

**பருவபெலாச்சி** *paruva-pelācci,* பெ. (n.) கடல் மீன்வகை; see fish, plumbaceous colour.



**பருவம்[1]** *paruvam,* பெ. (n.) 1. காலம்; time, term, period, season. *"இவை பாராட்டிய பருவமு முளவே"* (அகநா.26.) 2. காருவா அல்லது வெள்ளுவா (சங்.அக.); new or full moon. 3. கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில் முதுவேனில் என்ற ஆறு பருவங்கள்; the six seasons of two months each. kār, kūdir, muṉ-paṉi, piṉ-paṉi, iḷa-vēṉil, mudu-vēṉil. *"பருவமாறினும்"* (கந்தபு.மார்க்.176) *"பருவமாறிய பருவத்தில் வையைநீர் பரந்து வருவதாகியும்"* (திருவிளை. எல்லாம்.12) 4. மாதம்; month. *"பங்குனிப் பருவம்"* (சீவக. 851.) 5. மழைக்காலம்; rainy season, that of the north-east monsoon. 6. தக்க காலம்; suitable, proper time, opportunity, time or period for any action or pursuit. *"பெருஞ்செல்வம்..... பருவத்தா லேதிலான் றுய்க்கப்படும்"* (நாலடி, 274) 7. பயிரிடுதற்குரிய காலம்; proper season for agricultural operations. 8. ஆண்டு; year. *"பருவமொராயிரந் தீர"* (கம்பரா.அகலி. 28.) 9. அகவை; age, period of life. *"பருவ மெனைத்துள"* (நாலடி, 18.) *"பன்னிரு பருவத் தென்றான்"* (பிர. காண். சிவதான. 8.) 10. இளமை (திவா.); youthfulness, juvenility. *"பருவச்சோலைத் தனியிடமதனை நண்ணி"* (இராம. சூர்ப்ப.71) 11. பயனளிக்குங்காலம். (வாக்குண்.5); fruit-bearing period. 12. ஆடவர் பெண்டிர்கட்குரிய வெவ்வேறு வாணாட்கால நிலைகள்; various stages of life in males and females. 13. கணு. knot, joint in the human body or plants. 14. நூலின் ஒரு கூறு; section of a book; chapter. *'உத்தியோக பருவம்'.* (வின்.) 15. நிலைமை; state of things; aspect, position, circumstances *'இப்போதைக் குள்ள பருவமிது'.* (வின்.) 16. உயர்ச்சி (வின்.); elevation. 17. அளவு; degree, rate, proportion. 18. கதிரவன் ஒவ்வோர் ஓரையிலும் புகும் காலம்; time of the sun's entering a new sign of the zodiac. (வின்.) 19. உவாமறுநாள், எண்மி, ஒண்மி உவாமுன்னிருநாள், காருவா அல்லது வெள்ளுவா என்னும் ஒவ்வொரு இருகிழமையிலும் வரும் ஐந்து சிறப்பு நாள்கள் (M.M.726); the five religious ceremonial days in each fortnight, viz piradamai, astami, navami, piradōšam, amavāšai or paurṇami. 20. பருவப்பனை (நெல்லை.)பார்க்க; see paruvappaṉai. 21. முகம்மதியர் திருவிழாவகை (சங்.அக.); *'பெருநாள்'* a muhammadan festival. 22. பக்குவம்; suitability; *"அரும்பருவமடைதலுமே"* (சி.சி.8.10) *'பருவத்தே பயிர் செய்'.* (பழ.)

*[பரு → பருவு → பருவம்]*

**பருவம்**[2] *paruvam,* **1.** ஒருவர் அல்லது ஒன்று தோன்றியதிலிருந்து கடந்து வருகிற வளர்ச்சி நிலை; stage (in the development of s.o. or.sth); season;-hood. ***"குழந்தைப் பருவத்திலிருந்தே அவன் என்னுடைய நண்பன்". "கொசுக்களை அவற்றின் முட்டைப் பருவத்திலே ஒழிக்க வேண்டும்".*** **2.** பெண் இல்லற வாழ்க்கையில் பங்கேற்பதற்கு உரிய முதிர்ச்சி; (of women) puberty; coming of age. ***"பருவத்துக்கு வந்த பெண்" "பருவப் பெண்கள்"*** **3.** வேளாண்மையில் குறிப்பிட்ட தொழிலுக்கான காலம்; தட்பவெப்ப நிலையில் குறிப்பிட்ட நிலைக்கான காலம்; (of agriculture climate) season. ***"தென்மேற்குப் பருவம்".***

**பருவம் பார்[1]-த்தல்** *paruvam-pār-,* செ.குன்றாவி (v.t.) ஆழம்பார்த்தல்; to probe, sound. ***"அவனைப் பருவம் பார்க்க வேண்டும்"*** (கொ.வ.) **2.** கலந்தாய்தல் (வின்.); to consider or devise measures: to think how to act.

*[பருவம் + பார்-,]*

**பருவம் பார்[2]-த்தல்** *paruvam pār-,* செ.கு.வி. (v.i.) தக்க சமயம் பார்த்தல்; to seek opportunity.

*[பருவம் + பார்-,]*

**பருவம் வந்த பழச்சாறு** *paruvam vanda paḻa-c-cāṟu,* பெ. (n.) பூநீறு எடுக்கும் காலத்தில் அதனின்று பிரித்தெடுக்கும் குரு நீர்; a saline preparation extracted from the saline efflorescence on the soil of fuller's earth containing a great proportion of soda corbonate. This preparation which is peculiar to Tamil Siddha Medical Science is said very useful for Alchemy. (சா.அக.)

*[பருவம் + வந்த + பழச்சாறு]*

**பருவமலைவு** *paruvamalaivu,* பெ. (n.) ஒரு காலத்திற்குரியதை மற்றொரு காலத்துக் குரியனவாகக் கூறுவது (தண்டியல.117.உரை.); error or impropriety in ideas.

*[பருவம் + மலைவு]*

**பருவமழை**[1] *paruva-maḻai,* பெ. (n.) உரிய காலத்திற் பெய்யும் மழை; seasonal rain. (monsoon rain). ***"வடகிழக்குப் பருவமழை"***

*[பருவம் + மழை]*

***"ஒவ்வொரு பருமமழையின்போதும் வெள்ளப் பேரிடர் ஏற்படுகிறது".***

**பருவமுறை** *paruva-muṟai,* பெ. (n.) (உயர்கல்வி நிறுவனங்களில்) ஆறு மாதத்துக்கு ஒரு பாடத்திட்டமும் தேர்வும் கொண்ட கல்வி முறை; semester (system). ***"எங்கள் கல்லூரியில் பருவமுறை நடைமுறைக்கு வந்துள்ளது".***

*[பருவம் + முறை]*

**பருவமெய்து-தல்** *paruvam-eydu-,* 5. செ.கு.வி (v.i) பூப்படைதல்; come of age; (of girls) attain puberty. ***"தமிழ் நாட்டில் பெண்கள் பருவமெய்துதலை விழாவாகக் கொண்டாடுவர்"***

*[பருவம் + எய்து-,]*

**பருவமேழு** *paruvam-ēḻu,* பெ. (n.) பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்ற ஏழுவகைப் பெண் பருவம்; stages of woman's life, of which there are seven, viz., pētai, petumpai, maṅkai, maḍantai, arivai, terivai, pērilampeṇ.

*[பருவம் + ஏழு]*

**பருவயோனி** *paruva-yōṉi,* பெ. (n.) *பார்க்க, கரும்பு* (மலை.); see *sugar-cane.*

*[பருவம் + யோனி]*

யோனி = Skt.

**பருவரல்¹** *paruvaral,* பெ. (n.) 1. துன்பம்; suffering, affliction. *"பொறையின்று பெருகிய பருவரற் கண்ணும்"* (தொல். பொ. 151.) *"விண்ணவர் பருவரல் உழப்ப"* (கூர்மபு. அட்டமூர். 19.) 2. பொழுது (அக.நி.); time.

*[பருவா → பருவரல்]*

**பருவல்** *paruval,* பெ. (n.) பருத்தது (வின்.); anything large or thick

*[பரு → பருவல்]*

**பருவவலைப்பு** *paruva valaippu,* பெ. (n.) பருவகால மீன்பிடித்தொழில் (முகவை.மீன.); fishing in proper season.

*[பருவம் + வலைப்பு]*

**பருவவேடன்** *paruva vēdaṉ,* பெ. (n.) வேடன் எனப் பெறும் மீன் வகையுளொன்று (குஞ்சை.மீன.); a kind of fish named as hunter.

*[பருவம் + வேடன்]*



**பருவா¹-தல்** *paru-va,* 13 செ.கு.வி. (v.i.) வருந்துதல்; to suffer; to be afflicted. *"இமைப் பிற் பருவரார்"* (குறள்.1126.)

*[பருவரல் → பருவா-,]*

**பருவா²-தல்** *paru-vā-,* 15. செ.குன்றாவி. (v.t.) 1. துன்புறுத்தல்; to tease, torment. 2. அருவருத்தல் (சது); to abhor, detest.

*[பருவரல் → பருவா-,]*

**பருவாகை** *paru-vagai,* பெ. (n.) ஒரு வகை மரம்; a kind of tree. *"அமுக்கிரி"* (தைல.தைலவ. 42.) பார்க்க; see *amukkiri.*

*[பரு + வாகை]*

**பருவாய்ச்சுறா** *paruvāy-c-cuṟā,* பெ. (n.) வாயகன்ற சுறாமீன்; a kind of wide mouth shark.

மறுவ. செஞ்சுறா.

*[பருமை + வாய் + சுறா]*



**பருவான்** *paruvāṉ,* பெ. (n.) பாய்மரந் தாங்குங் குறுக்குக் கழி; (naut.) yard, the support of a square sail.

மறுவ. பருமல்

*[பரு + வான்]*

**பருவி** *paruvi,* பெ. (n.) *தில்லை (மலை.)* பார்க்க; see *tillai.* blinding tree.

*[பரு → பருவி]*

**பருவிலை** *paruvilai,* பெ. (n.) தில்லைமரம்; tiger's milk. (சா.அக.)

**பருவு¹-தல்** *paruvu-,* 5. செ.குன்றாவி. (v.t.) அரித்தல்; to sweep or gather together. *"பருவிக் குறவர் புனத்திற் குவித்த பருமாமணி"* (தேவா. 1027, 5.)

*[பரு → பருவு-,]*

**பருவு²** *paruvu,* பெ. (n.) 1. பெருத்தல்; to become large. 2. பறித்தல் (பிங்.); to pluck.

*[பரு → பருவு]*

**பருவுழவு** *paru-v-uḻavu,* பெ. (n.) 1. அகல உழுகை; ploughing wide apart. 2. அகலமாக உழுத ஏர்ச்சால் (யாழ்ப்.); furrows in ploughing wide apart.

*[பரு + உழவு]*

**பருவெட்டு¹** *paru-veṭṭu,* பெ. (n.) 1. பரும்படியான செதுக்கு; hewing in the rough, in carpentry. 2. பரும்படியான வேலை; rough work; coarse, uneven work. 3. சூழ்ச்சி; sly means; scheming, artful management.

*[பரு + வெட்டு]*

**பருவெட்டு²** *paru-veṭṭu,* பெ. (n.) (வ.வ.) தடித்த தன்மை; thick. *"பருவெட்டு அரிசி".*

**பருவெள்ளம்** *paruveḷḷam,* பெ. (n.) இயல்பினுஞ் கூடுதலான கடல் நீரோட்டம் (செங்கை.மீன.)

*[பெரு → பரு + வேலை]*

**பருவேலை** *paru-vēlai,* பெ. (n.) 1. பரும்படியான வேலை; coarse or rough work. 2. அரைகுறையாகச் செய்த வேலை; work imperfectly done.

*[பரு + வேலை]*

**பருவை** *paruvai,* பெ. (n.) கண்ணால் காணுமாறில்லாமல் தரத்திலும் இனத்திலும் பலவகைப்பட்ட மீன்கள் கடலடியில் எழுப்பும் ஒலியான் அறியத்தகு நிலை. (செங்கை.மீன.) sound which is made by fishes in the sea-bed.

**பருவைநாள்** *paruvaināḷ,* பெ. (n.) பல்வகை இன மீன்கள் நீரடியில் மேய்ந்தலையும் முழுமதி நாள். the full moon day.

*[பருவை + நாள்]*

கடல்நீர் கீழ் மேலாயும் மேல் கீழாயும் சுழலும் முழுமதி நாளில் பல்வகை இன மீன்கள் கூட்டமாய்த் திரியும் இந்நாளே பருவை நாளாம். (செங்கை.மீன.)

**பரூஉ¹** *parūu,* பெ. (n.) 1. பருமை; thickness, greatness, largeness. *"பரூஉக் குற்றரிசி"* (புறநா. 399.) 2. மிகுதிப்படுகை (வின்.); increasing.

*[பரு → பரூஉ]*

**பரூஉ²** *parūu,* பெ. (n.) பறிக்கை (பிங்.); plucking, snatching.

*[பரு → பரூஉ]*

**பருஉக்கை** *parūu-k-kai,* பெ. (n.) **1.** பருத்த கை; large, powerful arm. **2.** வண்டியின் தெப்பக்கட்டை; (வண்டியில் அச்சுமரத்தின் மேல் நெடியவா யிரண்டுபக்கத்து நெடுகக் கிடக்கும் பருமரங்கள்); big wooden bar placed perpendicularly over the axle of a cart. *"எழூஉப் புணர்ந்தன்ன பருஉக்கை நோன்பார்"* (பெரும்பாண். 48.)

*[பருஉ + கை]*

**பருஉமோவாய்ப்பதுமர்** *parumōvāy-p-padumar,* பெ.(n.) கழகக்காலப் புலவர். இவருடைய மோவாய் பருத்திருந்ததனால் இப்பெயர் பெற்றார்போலும் குறுந்தொகையின் 101ஆம் பாடலைப் பாடியுள்ளார்; sangam poet, author of 101st stanza of kuṟundogai.

**பரேண்** *parē,* பெ. (n.) மிக்கவன்மை; great strength. *"பரேணுடைப்புயத்து"* (விநாயகபு. 73,49.)

*[பரு + ஏர்]*

**பரேர்** *parēr,* பெ. (n.) மிக்கஅழகு; much beauty. *"பரேரம்புழகுடன்"* (குறிஞ்சிப். 96.)

*[பரு + ஏர்]*

**பரேரம்புழகு** *parērampuḻagu,* பெ. (n.) மலையெருக்கம்பூ; hill-madar flower.

**மறுவ.** பரோம்புழகு

*[பரேர் + அம் + புழகு]*

**பரை**[1] *parai,* பெ. (n.) **1.** பார்க்க, பறை[3] (வின்.); measure of capacity. **2.** 2 கனஅடியும் 544 கன அங்குலமுங்கொண்டவளவு (M.M. 655.); a cubic measure-2 cub. ft. 544 cub, in.

**பரைக்காக்கை** *parai-k-kākkai,* பெ. (n.) ஓரிடத்தில் தங்காமல் மரத்திற்கு மரம் பறந்தலையுங் காக்கை; beggar crow. it flies from tree to tree with undulating flight without a place for its habitation.

*[பரை + காக்கை]*

(இக்காக்கை கரைந்தால் வீட்டிற்கு விருந்தினர் வருவர் என்று ஒரு நம்பிக்கையும் இருந்தது; it is a common belief. that its call fore bodes approach of guests to the house. (சா.அக.)

**பரைச்சி** *paraicci,* பெ. (n.) **1.** மலைமகள்; malaimagal. *'அறங்காத்தமா பரைச்சி'* (திருப்பு. 1037.) **2.** *சத்தி சாரம் (சா.அக.)* பார்க்க; see *satti-šāram.*

*[பரை → பரைச்சி]*

**பரைநாதவஞ்சி** *parainadavañji,* பெ. (n.) நெல்லி; indian goose berry. (சா.அக.)



**பரைநாதம்** *parainadam,* பெ. (n.) **1.** அப்பிரகம்; mica, talc. **2.** பூநீறு; efflorescent salt on the soil of fuller's earth. (சா.அக.) **3.** நெல்லிக்காய்க் கந்தகம்; myrobalam, gandhar, rhombic crystals of sulphur.

**மறுவ.** பரைநாதன்

**பரைபுருவம்** *paraipuruvam,* பெ. (n.) (பூரகம்) உள்ளிழுக்கும் மூச்சு; inhalation of (prāṇā.) uyir-vaḷi (சா.அக.)

*[பரை + புருவம்]*

**பரையன்** *paraiyan,* பெ. (n.) (பூரகம்) உள்ளிழுக்கும் மூச்சு; inhalation of (prāṇā.) uyir-vaḷi (சா.அக.)

**பல்**[1] *pal,* பெ. (n.) **1.** வாயில் வைத்துக் கடித்து மெல்லுவதற்கு ஏற்றவகையில் இரு தாடைகளிலும் வரிசையாக அமைந்திருக்கும் தட்டையான அல்லது கூரிய முனை கொண்ட உறுதியான வெண்ணிற உறுப்பு; tooth, fang, *"முகைவெண்பல்"* (கலித். 58.) **2.** யானை பன்றி முதலியவற்றின் கொம்பு; tusk. *"ஒரு கருங்கேழலின் பல்"* (பிரபுலிங். கைலாச. 14.) **3.** நங்கூர நாக்கு; fluke of an anchor. (w.) **4.** சக்கரம் வாள் முதலியவற்றின் பற்போன்ற கூர்; cog of a wheel; tooth of a saw or sickle. பல்தேய்ந்துபோன இந்த வாளினால் எதையும் அறுக்க முடியாது. **5.** சீப்புப்பல் (வின்.); tooth of a comb. சீப்பின் பல் உடைந்துபோய் விட்டது. **6.** காலிறங்காத சேலையில் கோத்து வாங்கும் மொக்கு (வின்.); scollop in the border of a garment; indentation; notch. **7.** வெள்ளைப்பூண்டு முதலியவற்றின் தனித்தனியான உள்ளீடு (வின்.); the inner tooth-like piece, as of garlic. 'குழம்பக்கும்' பூண்டு இரண்டு பல் தட்டிப்போடு (உ.வ) **8.** தேங்காய் உள்ளீட்டின் சிறுதுண்டு (இ.வ); small piece of coconut pulp. 'சீடையின் தேங்காய்ப்பல் பல்லிடுக்கில் மாட்டிக் கொண்டது' (உ.வ)

**தெ.** பலு. **க.** ஹல் **ம.** பல்

**மறுவ:** எயிறு
முறுவல்
நகை
மூரல்

**பல்**[3] *pal,* பெ.அ. (adj) மிகுந்த, பல; many. *"பல்லாண்டு வாழ்க", "பல்வேறுவகை".*

*[புல் → பல்]* செல்வி, வைகாசி 74 பக். 310

**பல்**[4] *pal,* பெ. (n.) ஒளியுள்ளது, வெள்ளையானது; that which is lightness, whiteness.

*[வாள் → வால் → பால் → பல்]* (சு.வி.)

**பல்கணி** *pal-kaṇi,* பெ. (n.) சாளரம் (யாழ்.அக.); lattice, window.

**மறுவ:** பலகணி

*[பல் + கண் + இ]*

**பல்கல்** *palgal.* பெ. (n.) *பல்குதல்* பார்க்க; see *palgudal.*

**பல்கலை** *pal-kalai,* பெ. (n.) பல கூறுகள்; aspects. *"பத்திரட்டியினீரி ரண்டொழிந்த பல்கலை யோன்"* (பாரத. குருகுல.5.)

*[பல் + கலை]*

**(கலை, கூறு, பங்கு என்பன ஒரு பொருளாம்.)**

**பல்கலைக்கழகம்**[2] *pal-kalai-k-kalgam,* பெ. (n.) **1. தேர்வுகள்** நடத்துதல், பட்டப்படிப்பு வகுப்புகள் **நடத்துதல்** போன்ற பணிகளைச் செய்வதும் **ஆராய்ச்சி** நடுவமாக விளங்குவது மான **உயர்கல்வி** நிறுவனம்; university. ***"சென்னைப் பல்கலைக்கழகத்தில் உலக முழுவதும் இருந்து வந்து பயில்கின்றனர்"*** **2. (பெ.வ.) (மேற்குறிப்பிட்ட** நிறுவனத்தின் ஆள்வினை **அமைப்பைக்** கொண்ட, ஆனால்) ஆராய்ச்சியை மட்டும் மேற்கொள்கிற உயர் கல்வி நிறுவனம்; centre for advanced research (on the model of a university). *"தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம்"* *"தெலுங்குப் பல்கலைக்கழகம்"*

*[பல் + கலை + கழகம்]*

(மாநில ஆளுநரை வேந்தராகவும் ஆளுநரால் அமர்த்தப்பெறும் ஒருவரைத் துணைவேந்தராகவும் கொண்டு, செயற்படுவது.)

**பல்காப்பியம்** *palkāppiyam,* பெ. (n.) பல்காப்பியனார் இயற்றிய ஓர் யாப்பிலக்கண நூல் (தொல். பொ. 650, உரை.); an ancient work or prosody by palkāppiyaṉār.

*[பல் + காப்பியம்]*

**பல்காப்பியனார்** *palkāppiyaṉār,* பெ. (n.) யாப்பிலக்கண நூலாசிரியருள் ஒருவர். (தொல்.பொ. 650, உரை); the author of an ancient work on prosody.

*பல்காப்பியம் → பல்காப்பியனார்*

*ஒ.நோ தொல்காப்பியம் → தொல்காப்பியனார்*

**பல்காயம்** *palkāyam,* பெ. (n.) பல்காயனார் செய்ததோர் யாப்பிலக்கண நூல் (யாப்.வி.பக். 22.); an ancient work on prosody by palkāyaṉār.

**பல்காயனார்** *palkāyaṉār,* பெ. (n.) யாப்பிலக்கண நூலாசிரியருள் ஒருவர் (தொ.பொ. 650, உரை.); the author of an ancient work on prosody.

*[பல்காயம் → பல்காயனார்]*

**பல்கால்** *pal-kāl,* வி.அ (adv.) பல்காலும்; பார்க்க, see palkālum. *"பல்காலுந்தோன்றி"* (நாலடி. 27.)

*[பல் + கால்]*

**பல்காலும்** *pal-kālum,* வி.அ (adv.) பல சமையம் அடிக்கடி; many times, oftentimes, frequently. *"பல்காலுந் தோன்றி"* (நாலடி. 27.)

*[பல் + காலும்]*

**பல்காற் பறவை** *pal-kāṟ-paṟavai,* பெ. (n.) வண்டு; bee, as many-footed. (பல காலுள்ள பறவை) *"பல்காற் பறவைகிளைசெத்தோர்க்கும்"* (பெரும்பாண். 183.)

*[பல் + கால் + பறவை]*

**பல்கு—தல்** *palgu-,* செ.கு.வி. (v.i.) 1. பல வாதல்; to increase, as in number or quantity. *"ஞாயிறு பல்கிய மாயமொடு"* (பதிற்றுப். 62, 6.) 2. மிகுதல்; to multiply enhance, intensify. *"பல்கிய விருப்பினான்"* (பிரமோத். பஞ்சா. 21.)

*[பல் → பல்கு–.]* (செல்வி. வைகாசி'74 பக். 510.)

*"அண்மைக் காலத்தில் தொழிற் பயிற்சிக் கல்லூரிகள் பல்கிவிட்டன".*

*"பாம்புகள் கொல்லப்படுவதால் வயலில் எலிகள் பல்குவதற்கு வாய்ப்பு உள்ளது"*

*"கழிவு நீர் தேங்கும் இடங்களில் கொசுக்கள் பல்கிப் பெருகுகின்றன"*

**பல்குன்றக்கோட்டம்** *pal-kuṉṟa-k-kōṭṭam,* பெ. (n.) தொண்டை மண்டலத்துள் ஒரு நாடு; an ancient division of Toṇḍaimaṇḍalam. *"செயங் கொண்ட சோழ மண்டலத்துப் பல் குன்றக் கோட்டத்து"* (s.i.i. i. 103.)

*[பல் + குன்றம் + கோட்டம்]*

(தொண்டை நாட்டின் பெரும் பிரிவாகிய இருபத்து நான்கு கோட்டங்களுள் ஒன்று. பல குன்றுகளைத் தன்னகத்தே கொண்டிருந்த படியால் 'பல்குன்றக் கோட்டம்' என வழங்கலாயிற்று.)

**பல்சக்கரம்** *pal-šakkaram,* பெ. (n.) *பற்சக்கரம்* பார்க்க; see *parchakkaram.*

*[பல் + சக்கரம்]*



**பல்சந்தமாலை** *pal-šanda-mālai,* பெ. (n.) பத்துவகைச் சந்தங்களாலியன்றதும் பத்து முதல் நூறு வரை செய்யுட்கள் கொண்டது மான சிற்றிலக்கிய வகை (இலக்.வி. 834.); a poem of 10 to 100 stanzas in ten kind of šandam.

*[பல் + சந்தம் + மாலை]*

(பத்து முதலாக நூறு ஈறாகப் பல்சந்த முடையதாகி வருவதொரு சிற்றிலக்கியம். இது நேரிசை வெண்பா நூறு ஈறுதொடங்கி வந்தால் 'வெண்பா அந்தாதி' யென்றும் கலித்துறைநூறு அந்தாதியாக வந்தாற் 'கலித்துறையந்தாதி' யென்றுஞ் சொல்லப்படும். "*பத்தந்தாதி நூறந்தம் பல்சந்தமாலையாம்*" (வெண்பாப். செய்யு. 9.) என்று த.சொ.அக. குறிக்கிறது.)

**பல்சந்தி** *pal-šandi,* பெ. (n.) 1. கரும்பு (அருநி.); sugar-cane. 2. மூங்கில்; bamboo.

*[பல் + சந்தி]*

**பல்தேய்தல்** *pal-tēydal,* பெ. (n.) பல்லின் தேய்வால் உண்டாகும் நோய் வகை (M.L.); absorption of dentine.

*[பல் + தேய்தல்]*

**பல்தைத்துவம்** *paltaituvam,* பெ. (n.) ஆதொண்டை; a thorny creeper, ceylon caper.

மறுவ. ஆதண்டன், ஆதொன்டன் காற்றோட்டி

*[பல் + தைத்துவம்]*

**பல்நங்கூரம்** *palnangūram,* பெ. (n.) (நங்கூர வகையுள்) பற்கள் போலுந்தரையில் பதியும் நங்கூரம்; a kind of anchor.

*[பல் + நங்கூரம்]*



**பல்நாக்கு** *pal-nākku,* பெ. (n.) தண்ணீரைத் தள்ள இணைக்கப்பட்டிருக்கும் துடுப்பின் பலகை; (இ.வ.) oar-blade.

*[பல் + நாக்கு]*

**பல்நோய்** *pal-nōy,* பெ. (n.) *பல்நோவு* பார்க்க; see *pal-nōvu.*

*[பல் + நோய்]*

**பல்நோவு** *pal-nōvu,* பெ. (n.) பல்லில் உண்டாம் வலி; tooth ache, dentalgia.

*[பல் + நோவு]*

**பல்படாத கன்னு** *pal-paḍāda-kannu,* பெ. (n.) பல் விழாத கன்று; infant calf.

**மறுவ:** பல்லு படாத கன்னு.

**பல்பொடி** *pal-poḍi,* பெ. (n.) *பற்பொடி* பார்க்க; see *par-poḍi, "பற்பொடி வாங்கிக் கொண்டு வா"*

**பல்பொருட்சூளாமணி** *pal-poruṭ-cūḷāmaṇi,* 17ஆம் நூற்றாண்டில் இருந்த ஈசுர பாரதியார் இயற்றிய ஒரு நிகண்டு; a Tamil Lexicon composed by Išurabāradiyār, 17th c.

*[பல் + பொருள் + சூளாமணி]*

**பல்பொருட்பெயர்** *pal-poruṭ-peyar,* பெ. (n.) *பலபொருளொரு சொல் (சூடா.)* பார்க்க; see *palaporuḷorušol.*

*[பல் + பொருள் + பெயர்]*

**பல்பொருள் அங்காடி** *pal-poruḷ-aṅgāḍi,* பெ. (n.) தேவையான அனைத்துப் பொருள்களும் ஒரே கட்டடத்தில் விற்பனை செய்யப்படுகிற இடம்; super market; departmental store. *"வீட்டிற்கு தேவையான அனைத்துப் பொருள் களும் பல்பொருள் அங்காடியில் கிடைக்கும்"*

*[பல்பொருள் + அங்காடி]*

**பல்முட்டுவாள்** *pal-muṭṭu-vāḷ,* பெ. (n.) வாள் வகை cross-cut saw. (C.E.M.)

*[பல் + முட்டு + வாள்]*

**பல்முளைத்தல்** *pal-muḷaittal,* பெ. (n.) **1.** எயிறெழுகை; dentition. **2.** கடைவாய்ப் பல் முளைக்கை; cutting of the wisdom tooth.

*[பல் + முளைத்தல்]*

**பல்மோடிக்காய்** *pal-mōḍi-k-kāy,* பெ. (n.) *நிலப்பூசணி* பார்க்க; see *nilappūsaṇi.* panicled bindweed.

**பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி** *palyāgašālai mudukudumi-p-peruvaḻudi,* பெ. (n.) இவ்வரசன் பஃறுளியாறும் பிறநாடுகளும் கடல் கொள்வதற்கு முன் ஆண்ட பாண்டியன்; an ancient pandia king.

இவன் வடிம்பலம்ப நின்ற பாண்டிய னுடையை வழி முறையில் தோன்றியவன். இவனுடைய இயற்பெயர் குடுமியென்பது இவன் அரசர்கள் செய்தற்குரிய வேள்விகள் பலவற்றைச் செய்து சிறப்புற்றானாகையால் இவனுடைய இயற்பெயருக்கு முன்னே பல்யாக சாலை என்னும் அடைமொழி சேர்ந்து வழங்கலாகியது இவன் பெயர் கல்வெட்டுக்களிலும் இடம் பெற்றிருப்பதாக அறிஞர்கள் கூறு கின்றனர். இவனுடைய சிறப்பை விளக்கக்கூடிய பாடல்கள் புறநானூற்றில் 6, 9, 12, 15, 64 உள்ளன.)

**பல்யானைச் செல்கெழு குட்டுவன்** *palyānai-c-celgeḻu kuttuvan,* பெ. (n.) சேர மன்னர்களில் ஒருவன் பெருஞ்சோற்றுதியன் சேரலாதனுடைய மகன். son of peruñcōṟṟutiyan a cēra king.

இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனுக்குத் தம்பியும், சேரன் செங்குட்டுவனுக்குச் சிற்றப்பனுமாவான். உம்பற்காடு என்னுஞ் சேர நாட்டுப்பகுதியில் தன்னாட்சியை நடத்தி இருந்தவன். பூழியர், மழவர், கொங்கர் ஆகிய வீரர்களைப் படையிற் சேர்த்திருந்தான். தன் குடியில் உள்ள முதியவர்களைப்புரந்து பாராட்டினான். அவர்கட்கு வேண்டிய நிலப்பகுதிகளைக் கொடுத்து வாழச் செய்தான். ஒருமுறை மேலைக்கடலினும் கீழைக்கடலினும் யானைகளைக் கொண்டு ஒரே பகலில் நீரை வருவித்து நீராடினான். ஆயிரை என்னும் மலையில் இருந்த கொற்றவையைத் தன் முன்னோர் செய்தவாறே தானும் வழிபட்டான்.

பாலைக் கௌதமனார் என்னும் புலவர் இவனைப் புகழ்ந்து பாடியிருக்கிறார். அப்புலவர் மறையவர். அப்புலவர் விரும்பிய வாறு பத்து வேள்விகளைச் செய்து அவரையும் அவர் மனைவியையும் வீட்டுலகம் புகச் செய்தான். இவ்வரசன் இறுதிக் காலத்தில் துறவு பூண்டதாகக் கூறுவர்.)

**பல்லக்கு**[1] *pallakku,* பெ. (n.) **1.** ஆட்கள் தூக்கிச் செல்லும் ஊர்தி வகை; palanquin. *"தந்தப் பல்லக்குஞ் சிவிகையுந் தாங்கி"* (தொண்டைசத,87.) *"எழுவாப் பல்லக்காளாக்கினான் பல்கலை தேர்வேந்தனும்"* (இன்னிசை. 14.) **2.** பல்லக்கு போன்ற புனைவுடைய பாடை; funeral bier.

க. பல்லக்கி. ம. பல்லக்கு. **பிரா.** பல்லங்க **க.** பரியங்க்க

*'பல்லக்கு ஏற யோகம் உண்டு; உந்தி ஏறச் சீவன் இல்லை'* (பழ.)

*'பல்லக்குக்கு மேல் மூடி இல்லாத வனுக்கும் காலுக்குச் செருப்பு இல்லாத வனுக்கும் கவலை ஒன்றே'* (பழ.)

*[பல் → பல்லக்கு]* (செல்வி. வைகாசி,'74 பக்510.)

(சென்னைப்பல்கலைக்கழகத் தமிழ் அகரமுதலியில், இச்சொல் வட மொழியினின்று பிராகிருத வழியாகத் தமிழுக்கு வந்ததென்று தலைகீழாகக் குறிக்கப்பட்டுள்ளது.)



**பல்லக்குயோகம்** *pallakku-y-ōgam,* பெ. (n.) பல்லக்கில் ஏறிச் செல்லுதற்குரிய நன்னிலை (வின்.); (astrol.) prosperous condition enabling one to ride a palanquin.

*[பல்லக்கு + ஓகம் → யோகம்]*

யோகம் = Skt.

**பல்லகம்** *pallagam,* பெ. (n.) கரடி (யாழ்.அக.); bear.

*[பல் → பல்லகம்]*

**பல்லகி** *pallagi,* பெ. (n.) பார்க்க, *சேங் கொட்டை* (மலை.); see *šēṅkoṭṭai.* marking-nut tree.

**மறுவ:** பல்லதி

**பல்லங்குழி** *pallaṅ-kuḻi,* பெ. (n.) பார்க்க, *பல்லாங்குழி,* see *pallāṅkuḻi.*

*[பன்னாங்குழி → பல்லங்குழி]*

**பல்லசைவு** *pal-l-ašaivu,* பெ. (n.) பற்கள் ஆடுதலால் உண்டாம் நோய் வகை (இங்.வை. 166.); loose tooth.

*[பல் + அசைவு]*

**பல்லழகி** *pallaḻagi,* பெ. (n.) அழிஞ்சில்; a kind of medicinal herb red wood. (சா. அக)

மறுவ. செம்மரம்

**பல்லணம்** *pallaṇam,* பெ. (n.) குதிரைக் கலனை; saddle. *"பண்ணு பல்லண மருமமற்று"* (கம்பரா. மூலபல. 14.)

**க.** பல்லண

**பல்லதி¹** *palladi,* பெ. (n.) சேங்கொட்டை; (வைத்தியபரி.); marking nut tree.

**பல்லதி²** *palladi,* பெ. (n.) பண்வகை (பரத. இராக.56.); a specific melody type.

**பல்லம்¹** *pallam,* பெ. (n.) ஒரு பேரெண் (திவா.); a very great number.

*[பல் → பல்லம்]*

(செல்வி, வைகாசி,' 74 பக். 510)

**பல்லம்²** *pallam,* பெ. (n) *பல்லணம் (சூடா)* பார்க்க; see *pallaṇam.*

**பல்லம்³** *pallam,* பெ. (n.) 1. கரடி; bear "*சினப்பல்ல முதலானமா*" (உபதேசகா. சிவபுண். 90) 2. படைக்கல வகை; a kind of weapon. 3. அம்பு; arrow. "*ஆயிர கோடி பல்லம்*" (கம்பரா. நாகபாச. 107.) "*வேடர்பல்ல முயிர் நிலைவாயிற்பட்டமான்*" (அரிச்ச. மயாந. 42) 4. *பல்லகி. (மலை.)* பார்க்க, see *pallagi.*

*[பல் → பல்லம்]*

**பல்லயம்** *pallayam,* பெ. (n.) ஒருவகைக் கைவாள்; a kind of dagger. "*ஈட்டி பல்லயம் பிச்சுவாவுடன்*" (பிரதாப. விலா. 123)



**பல்லவத்திரு** *pallavattiru,* பெ. (n.) செயலை (அசோகு) (மலை.); aśoka tree.

**பல்லவபருணிச்செடி** *pallava-paruṇi-c-ceḍi,* பெ. (n.) இலந்தை; jujubi-plant. (சா.அக)

**பல்லவர்** *pallavar,* பெ. (n.) பலர்; many person. "*பல்லவராயரருகுநின்ற பரிசனராங் கணங்கடமை*" (சிவரக. நந்திகரை 3.) "பல்லவர்க் கிரங்கும் பாடிமிழ் நெய்தல்" (பு.வெ. 10, காஞ்சிப்.6, கொளு.)

*[பல் → பலர் → பல்லர் → பல்லவர்]*

**பல்லவன்** *pallavaṉ,* பெ. (n.) **1.** பரத்தன், தீயன் (சூடா.); rake, libertine. **2.** கீழ்மகன் (பிங்.); low, base person.

**பல்லவி¹** *pallavi,* பெ. (n.) இசைப்பாட்டில் திரும்பத் திரும்பப் பாடப்படும் முதலுறுப்பு; the chorus or burden of a kīrttaṉam išai-p-pāṭṭu.

க. பல்லவி

*[பல்லவம் → பல்லவி]*

**பல்லவி²** *pallavi,* பெ. (n.) **(இசை)** இசைப்பாடலின் முதல் உறுப்பு; the opening or the first unit of a composition. **1. ஒரு** இசைக் கலைஞரின் பண் (இசை, அராகம்), தாளத் திறமையைப் பாட்டின் வரியைக் கொண்டு விரிவுபடுத்துவதற்கு உரிய இசை வடிவம்; any group of words which could be repeated (with variaion in tempo) so as to bring out the mastery of the artist over. தாளம். "*அந்த இசைக் கலைஞர் பல்லவியின் வரிகள் சமூக தத்துவமாக பாடினார்*" 2. (ஒருவர்) திரும்பத் திரும்பக் கேட்பதால் சலிப்புத் தரும் ஒன்று; (the usual) retrain. "*வீட்டின் எப்போதும் அது இல்லை, இது இல்லை என்கிற பல்லவிதானா?*" செல்வி. வைகாசி. 74 பக்510.)

*[பல்லவம் → பல்லவி]*

**பல்லவத்தி** *pallavatti,* பெ. (n.) செயலை (அசோக) மரம்; asoka tree. (சா.அக.)

**பல்லவபரணி** *pallavaparaṇi,* பெ. (n.) புளிப் பிலந்தை; sour jujuba. (சா.அக.)

**பல்லவம்** *pallavam,* பெ. (n.) **1.** இலை; leaf **2.** தளிர்; sprout or shoot **3.** புளியம் பிரண்டை; sour adamant creeper. (சா.அக.)

**பல்லழகி**[1] *pal-l-aḻagi,* பெ. (n.) செம்மரம்; red wood.

மறுவ: அழிஞ்சில் மரம் (சா.அக.)

**பல்லவை**[1] *pallavai,* பெ. (n.) பலபொருள்; many things. *"பல்லவை நுதலியவகர விறுபெயர்"* (தொல். எழுத். 174.)

*[பல → பல் + அவை]*

**பல்லவை**[2] *pallavai,* பெ. (n.) **1.** இழிவான பொருள் (யாழ்.அக.); base or mean thing. **2.** இழிவு (வின்.); meanness.

**பல்லழகி**[2] *pal-l-aḻagi,* பெ. (n.) **1.** அழகிய பல்லை யுடையவள்; a woman having a fine set of teeth. **2.** சாதிக்காய்; nut meg so called from its lending beauty to the teeth. **3.** வெற்றிலை; betel leaf. (சா.அக.)

**பல்லன்** *pallaṉ,* பெ. (n.) நீண்ட பல்லுள்ளவன்; man with long or large teeth.

*[பல் → பல்லன்]*

**பல்லா**[1] *pallā,* பெ. (n.) *பல்லாய்.* பார்க்க, see *pallāy.*

*[பல்லாய் → பல்லா]*

**பல்லா**[2] *pallā,* பெ. (n.) நீட்டலளவை வகை (வின்.); a linear measure.

**பல்லாக்கு** *pallākku,* பெ. (n.) *பல்லக்கு* பார்க்க; see *pallakku. "பல்லாக்கு வாங்கப் போனேன் ஊர்வலம் போக, நான் பாதியிலே திரும்பி வந்தேன் தனி மரமாக"* என்பது ஓர் *இசைப்பாடல் வரி'*

**பல்லாங்குழி** *pallāṅ-kuḻi,* பெ. (n.) **1.** பதினான்கு குழிகொண்டதாய் ஒருவகை விளையாட்டிற்கு உதவும் பலகை; a thick plank with 14 hollows used in a particular kind of game. **2.** சோகி முதலியவற்றால் பல்லாங்குழிப் பலகையில் ஆடும் விளை யாட்டு; the game played with cowries, etc., on a pallāṅkuḻi.

ம. பல்லாங்குழி

மறுவ. பாண்டி.

*[பன்னான்கு + குழி → பல்லாங்குழி]*

மகளிர் விளையாட்டுக்களில் ஒன்று. ஒரே பலகையிலோ அல்லது ஒன்றோடொன்று இணைக்கப்பெற்ற இரண்டு பலகைகளிலோ இரண்டு வரிசை களில் ஏழு ஏழு குழிகள் இருக்குமாறு அமைப்பர். அவற்றில் சோழிகள் அல்லது புளியங்கொட்டை போன்ற விதைகளை, முத்தாட்டம், பசுவாட்டம், சுட்டாட்டம் என்ற ஆட்ட வகைகளுக்கேற்ப ஒவ்வொரு குழியிலும் நான்கு முதல் பன்னிரண்டு காய்களாக வைத்து விளையாடுவர். குடவம்(பித்தளை), வெள்ளி முதலிய மாழைகளிலும்பல்லாங்குழிகள் செய்யப்படுவதுண்டு *பண்ணாங்குழி* பார்க்க; see *paṇṇṅguḻi.*



**பல்லாட்டம்** *pal-l-āṭṭam,* பெ. (n.) *பல்லசைவு* பார்க்க; (M.L.) see *pallašaivu.*

*[பல் + ஆட்டம்]*

**பல்லாடகம்** *pallāḍagam,* பெ. (n.) சேராங் கொட்டை; marking nut. **(சா.அக.)**

**பல்லாடு¹–தல்** *pal-l-āḍu,* செ.கு.வி. (v.i.) கெஞ்சுதல் (இ.வ.); to cringe.

*[பல் + ஆடு–,]*

**பல்லாடு²–தல்** *pal-l-āḍu-,* **10.** செ.குன்றாவி. மெல்லுகை; chewing, nibbling. *'பல்லாடப் பசி தீரும்'* (பழ.)

*[பல் + ஆடு–.]*

**பல்லாண்டிசை–த்தல்** *pal-l-āṇḍišai-,* **4.** செ.கு.வி. (v.i.) போற்றிப்பாடுதல் (மங்களா சாசனம்செய்தல்) (பெரியாழ்–1–9–5.); abenedication

**பல்லாண்டு** *pal-l-āṇḍu,* பெ. (n.) **1.** பலயாண்டு; many years. *"பல்லாண்டும் பரமாத்துமனைச் சூழ்ந்திருந் தேத்துவர்"* (திவ். திருப்பல். 12.) **2.** நீடுவாழ்க என்னும் வாழ்த்து; a benedication of longevity. *"பல்லாண்டென்னும் பதங்கடந் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே"* (திருவிசை. திருப்பல். 4.) *"பாவையர் பல்லாண் டிசைப்ப"* (இராமா. திருவவ. 43.) **3.** *திருப்பல்லாண்டு* பார்க்க; a poem. see *tiruppallāṇḍu.*

*[பல் + ஆண்டு]*

**பல்லாத்தி** *pallātti,* பெ. (n.) சேரான்; marking nut tree. **(சா.அக.)**

**மறுவ:** பல்லாதி (சா.அக.)

**பல்லாதகி** *pallādagi,* பெ. (n.) *சேங்கொட்டை, (மலை.)* பார்க்க; marking-nut tree.

**பல்லாதாரினி** *pallātāriṇi,* பெ. (n.) நாறு கரந்தை; a kind of medicinal herb. **(சா.அக.)**

**மறுவ:** கொட்டைக்கரந்தை

**பல்லாய்** *pallāy,* பெ. (n.) ஒருவகை மட்கலம்; earthern vessel.

**உரு:** பல்லா

**பல்லார்** *pallār,* பெ. (n.) பலர்; many person. *"பல்லா ரகத்து"* (குறள், 194.) *"பல்லார் முனியப் பயனில சொல்லுவான்"* (குறள். 191.)

*[பல → பல் + ஆர்]*

**பல்லி¹** *palli,* பெ. (n.) **1.** பலுகுக் கட்டை; a kind of harrow. *"பல்லியாடிய பல்கிளை"* (புறநா. 120.) **2.** பெரிய பல்லுடையவள்; woman with long or large teeth.

**க:** ஹலிவெ

*[பல்² → பல்லி]*

**பல்லி²** *palli,* பெ. (n.) **1.** சிற்றுயிரி வகை; wall lizard. *"சிறுவெண் பல்லிபோல"* (புறநா. 256.) **2.** பூடுவகை (பிங்.); a creeping plant. **3.** சிற்றூரின் அரைக் கூறு (சுக்கிர நீதி. 27.); **4.** கற்சிலைப்புள் (பிங்.); a bird.

**க:** ஹல்லி



**பல்லி³** *palli,* பெ. (n.) வெற்றிலைக் கணுவில் அரும்புங் குருத்து (வின்.); shoot or tendril from the nodes of the betel plant.

*[பல்கு → பல்கி → பல்லி]*

**பல்லி⁴** *palli,* பெ. (n.) உடம்பு; human body. *"பல்லி யுடையார் பாம்பரிந் துண்கின்றார்"* (திருமந்.280.)

*[பல் → பல்கு]*

பல்லி = பல்குவதையுடையது.

ஒன்றன்பின் ஒன்று பல்குவதற்கு இடனாக இருப்பதால் உடலுக்குப் 'பல்லி' எனலாயிற்று

**பல்லி⁵** *palli,* பெ. (n.) வேர்; root. (திவ். பெரியாழ். 3, 4, 2, வ்யா. பக். 594.)

**பல்லிக்காற்பூடு** *pallikkāṟpūḍu,* பெ. (n.) பல்லிக்காலைப் போன்ற மூலிகைச்செடி; lizard foot herb.

மறுவ: பல்லிப்பூடு

**பல்லிக்குஞ்சு** *palli-k-kuñju,* பெ. (n.) பல்லிக் குட்டி (வின்.); young of a lizard

*[பல்லி² + குஞ்சு]*

**பல்லிக்கை¹** *pallikkai,* பெ. (n.) பார்க்க, *பல்லி²* 1. (வின்.) see *pallikkai.*

*[பல்லி → பல்லிக்கை]*

**பல்லிக்கை²** *pallikkai,* பெ. (n.) பார்க்க, *பல்லாதகி.* (சங்.அக.) see *pallādagi.*

**பல்லிகி** *palligi,* பெ. (n.) *பல்லாதகி (சங்.அக.)* பார்க்க; see *pallādagi.*

**பல்லிகை** *palligai,* பெ. (n.) 1. பல்லி; lizard. 2. சேங்கொட்டை; marking nut. (சா.அக.)

**பல்லிகை** *palligai,* பெ. (n.) *பல்லாதகி (சங்.அக.)* பார்க்க; see *pallādagi.*

**பல்லிகொட்டுதல்** *palli-koṭṭudal,* பெ. (n.) பல்லி ஒலி எழுப்புதல் (திவ். பெரியதி. 10, 10, 4.); chirping of a lizard.

*[பல்லி² + கொட்டுதல்]*

**பல்லிச்செடி** *paḷḷi-c-cedi,* பெ. (n.) கவிழ் தும்பை; a kind of Tumbai.

**பல்லிசாத்திரம்** *palli-šāttiram,* பெ. (n.) பல்லிக் குறியியல்; science of interpreting the chirpings of a lizard.

*[பல்லி + சாத்திரம்]*

சாத்திரம் = Skt.

பல்லியெழுப்பும் ஒலி–சொல்லுக்குப் பலன்கூறும் நூல்

**பல்லிடுக்கி** *pal-l-iḍukki,* பெ. (n.) பல்லைப் பிடுங்கும் குறடு (புதுவை.); pincers to extract teeth.

*[பல் + இடுக்கி]*

**பல்லிதழ்** *pal-l-idal*, பெ. (n.) பல இதழ் கொண்ட மலர்; flower, as many-petalled. *"பல்லித ழுண்கண்"* (ஐங்குறு. 170.)

*[பல் + இதழ் → பல்லிதழ்]*

**பல்லிநுண் பற்றாக** *palli-nuṇ paṟṟāka*, பெ. (n.) பல்லியானது சுவரிலே இடைவெளி யின்றிப் பற்றியிருப்பது போல. (பெரியாழ்.3-4-2.); to Rold full grip, as lizard.

**பல்லிப்பூடு** *palli-p-pūḍu*, பெ. (n.) கொல்லைப் பல்லி; lizard plant.

*[பல்லி + பூடு]*

**பல்லிப்பூண்டு** *palli-p-pūṇḍu*, *கொல்லைப் பல்லி (பதார்த்த.278.)* பார்க்க; see *kollai-p-palli.* a flowering parasitic plant.

*[பல்லி + பூண்டு]*

**பல்லிபடு-தல்** *palli-paḍutal*, 20. செ.கு.வி *பல்லிகொட்டு-தல் (நற்.169, உரை.)* பார்க்க; see *pallikoṭṭu-*,

*[பல்லி + படு-,]*

**பல்லிபற்று-தல்** *palli-paṟṟu-*, 5. செ.கு.வி. (v.i.) ஒன்றைவிடாது பிடித்தல்; to hold fast, as lizard. *"இந்திரியங்கள் ஸ்வஸ்வ விஷயங் களிலே பல்லிபற்றுகையாலே"* (ஈடு.5,4,1.)

*[பல்லி + பற்று-,]*

**பல்லியங்காசனம்** *palliyaṅgāsaṉam*, பெ. (n.) ஒகஇருக்கைவகை (சீவக.3114,உரை); (jaina) a kind of sitting posture practised by ascetics in meditation.

*[பல் + அங்கம் + ஆசனம்]*

அங்கம், ஆசனம் Skt.

**பல்லியடித்தல்** *palli-y-aḍittal*, பெ. (n.) *பல்லிகொட்டுதல்* பார்க்க; see *pallikottu-*,.

*[பல்லி + அடி]*

**பல்லியம்[1]** *palliyam*, பெ. (n.) பல்வகை வாச்சியங்கள்; musical instruments of all sorts. *"யாழொடு பல்லியங் கறங்க"* (புறநா. 281.)

*[பல் → பல்லியம்]*

**பல்லியம்[2]** *palliyam*, பெ. (n.) 1. குதிரைப்பந்தி (அகநி.); stable. 2. தாளம்; time-measure. 3. தொங்கல்; hangings. 4. மருதநிலம்; agricultural tract.

*[பல் → பல்லியம்]*

**பல்லியாடு** *palli-y-āḍu*, பெ. (n.) கண் உட்குழிந்த ஆடு; goat without strength. (சா.அக.)

**பல்லியாடு-தல்** *palli-y-āḍu-*, 5. செ.குன்றாவி. (v.t.) விதைத்தபின் பலுகடித்தல்; to level a field with a narrow. *"பல்லியாடிய பல்கிளைச் செல்வி"* (புறநா.120)

*[பல்லி + ஆடு-,]*

**பல்லிருள்** *pallirul*, பெ. (n.) இரும்பிலி; cochin, china ebonytree. (சா.அக.)

**பல்லிரை** *pallirai*, பெ. (n.) சதுரக்கள்ளி (மலை.); square spurge.

**பல்லிவிழுகுறி** *palliviḻu-kuṟi,* பெ. (n.) பல்லி உடலில் விழுதலைக் கொண்டு அறியும் நிமித்த கணியம்; omen from the fall of lizard on one's person.

*[பல்லி + விழிகுறி]*

**பல்லிழைப்புளி** *pal-l-iḻaippuḷi,* பெ. (n.) இழைப்புளி வகை(C.E.M.); toothing-plane.

*[பல் + இழைப்புளி]*



**பல்லிளி¹–த்தல்** *pal-l-iḷi-,* செ.குவி. (v.i.) 1. பல்லை வெளிக்காட்டுதல்; to grim, show the teeth. "*அஞ்சிப்பல்லிளித்து*" (உத்தரரா. அசுவமே. 124.) 2. புடவை சாயம் போதல்: to lose colour, as a saree.

ம. பல்லிளிக்க

*[பல் + இளி–,]*

**பல்லிளிடு²–த்தல்** *pal-l-iḷi-,* 4. செ.கு.வி. (v.i.) வெளிப்பூச்சால் மறைக்கப்பட்டிருந்த நகை முதலியவற்றின் உண்மையான தன்மை தெரிய வருதல்; show (ones) trvedours. "*வெள்ளி முலாம் பூசப்பட்ட கொலுசு பல்லிளித்து விட்டது*"

**பல்லிற்சொத்தை** *palliṟ-cottai,* பெ. (n.) கெட்டுப்போன பல்; carious tooth. (M.L.)

**பல்லிறுக்கி** *palliṟukki,* பெ. (n.) மதகரி வேம்பு (மலை.); chittagong wood.

**பல்லினர்** *palliṉar,* பெ. (n.) சதுரக்கள்ளி; square spurge. (சா.அக.)

மறுவ. பல்லிறை

**பல்லினார்** *palliṉār,* பெ. (n.) கிலுகிலுப்பை; rattle wort. (சா.அக.)



**பல்லினார் மரம்** *palliṉār maram,* பெ. (n.) ஆத்திமரம்; common mountain ebony. (சா.அக.)

மறுவ: ஆத்தி

**பல்லினாற்குழவி** *palliṉārkuḻavi,* சவுரிக் கொடி; a kind of creeper.

மறுவ: அம்மையார் கூந்தல். (சா.அக.)

பல்லினர்க்குழவி

**பல்லீறு** *pal-l-īṟu,* பெ. (n.) பற்களைப் பற்றியுள்ள தசை; gum.

*[பல் + ஈறு]*

**பல்லீறுக்கட்டி** *pal-l-īṟu-k-kaṭṭi,* பெ. (n.) பல்லீற்றில் உண்டாம் புண்; gum boil.

*[பல்லீறு + கட்டி]*

**பல்லீறுச்சுரப்பு** *pal-l-īṟu-c-curappu,* பெ. (n.) *பல்லீறுக்கட்டி* பார்க்க; see *pal-l-īṟu-k-kaṭṭi.*

*[பல்லீறு + சுரப்பு]*

**பல்லுக்கட்டு—தல்** *pallu-k-kaṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. பல்லுக்குத்தங்கம் கட்டுதல்; to fasten teeth, as with gold. 2. செயற்கைப்பல் வைத்தல் (இக்.வ.); to insert artificial.

*[பல்லு + கட்டு—,]*

**பல்லுக்கடித்தான்** *pallu-k-kaḍittāṉ,* பெ. (n.) கடல்மீன் வகையு ளொன்று (முகவை.மீன); a kind of sea-fish.

**பல்லுக்கடுங்கூத்தன்** *pallukkaḍuṅkūttaṉ,* பெ. (n.) துரிசு; blue vitriol. (சா.அக.)

**பல்லுக்கருகு—தல்** *pallu-k-karugudal,* பெ. (n.) இறக்குந்தறுவாயில் பற்கள் கறுத்துப்போகை (வின்.); darking of the teeth as at the approach of death.

*[பல்லு + கருகுதல்]*

**பல்லுக்கலப்பை** *pallu-k-kalappai,* பெ. (n.) கொழுவிற் சேர்க்கப்பட்டதும் பற்களுள்ளதுமான பலகையோடமைந்த கலப்பை (இக்.வ.); horrow consisting of a plank fitted with iron teeth and fixed to plough.

*[பல்லு + கலப்பை]*

**பல்லுக்கழகு** *pallukkaḻagu.* பெ. (n.) வெற்றிலை; betel leaf. (சா.அக.)

**மறுவ.** பல்லழகி

**பல்லுக்கழலை** *pallu-k-kaḻalai,* பெ. (n.) பற்கழலை; a tumour composed of tooth substance. (சா.அக.)

**பல்லுக்காட்டு—தல்** *pallu-k-kāṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. வெளிப்படச்சிரித்தல்; to laugh outright 2. கெஞ்சுதல்; to cringing manner. 3. *பல்லிளி*[2] பார்க்க; see *pal-l-iḷi.*

*[பல்லு + காட்டு—,]*

**பல்லுக்காந்திப்பெட்டி** *pallu-k-kāndi-p-peṭṭi,* பெ. (n.) நெல்வகை (A); a kind of paddy.

**பல்லுக்கிளிஞ்சல்** *pallu-k-kiḻiñjal,* பெ. (n.) பல்லைப் போல் தோற்றமுடைய கிளிஞ்சல் வகை; dentated shell. (சா.அக.)

*[பல் → பல்லு + கிளிஞ்சல்]*

**பல்லுக்குச்சி** *pallu-k-kucci,* பெ. (n.) பல்விளக்க உதவுங்குச்சி; small twig used as a brush to clean the teeth.

*[பல் → பல்லு + குச்சி]*

**பல்லுக்கிட்டு–தல்** *pallu-k-kiṭṭudal,* 4. செ.கு.வி குளிர் முதலியவற்றால் வாய்திறக்க முடியாமல் பற்கள் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கை; inter locking of teeth, as in extreme cold. '*முனிவர்க்கும் பல்லுக்கிட்டும்*' (இராமநா.பாலகா.11.)

*[பல் → பல்லு + கிட்டு–,]*

**பல்லுக்குத்து[1]–தல்** *pallu-k-kuttu-,* 5. செ.கு.வி. (v.i.) பல்லிடுக்கிற் செருகிய பொருளைக் குத்தியெடுத்தல்; dentated shell. (சா.அக.)

*[பல் → பல்லு + குத்து–,]*

**பல்லுக்குத்து[2]** *pallu-k-kuttu,* பெ. (n.) *பல்வலி, 1* பார்க்க; see *pal-vali.*

ம. பல்லுக்குத்து

*[பல் → பல்லு + குத்து]*

**பல்லுக்குவெளி** *pallukkuveḷi,* பெ. (n.) பாக்கு; arecanut. (சா.அக.)

**பல்லுக்குத்தி** *pallu-k-kutti,* பெ. (n.) பற்குத்துங் கருவி; tooth-pick.

மறுவ. பல்லுக்குத்தி

*[பல் → பல்லு + குத்தி]*

**பல்லுக்கெஞ்சு–தல்** *pallu-k-keñju-,* 15. செ.கு.வி. (v.i.) *பல்லுக்காட்டு, 2 (யாழ்.அக.)* பார்க்க; see *pallu-k-kāṭṭu-.*

*[பல் → பல்லு + கெஞ்சு–,]*

**பல்லுக்கொழுக்கட்டை** *pallu-k-koḻukkaṭṭai,* பெ. (n.) சிறு குழந்தைக்கு முதற்பல் முளைக்கும் போது செய்யுங் கொழுக்கட்டைவகை (வின்.); a kind of pastry coverd with roasted pulse or rice in imitation of teeth, made on the appearance of a child's first tooth.

*[பல்லு + கொழுக்கட்டை]*

**பல்லுக்கொறி[1]** *pallu-k-koṟi,* செ.கு.வி. (v.i.) பல்லைக் கடித்தல் (வின்.); to grind the teeth together.

*[பல்லு + கொறி–,]*

**பல்லுக்கொறி[2]** *pallu-k-koṟi,* செ.குன்றாவி. (v.t.) சிறுகசிறுகப் பல்லாற் கருவி மெல்லுதல்; to nibble.

*[பல்லு + கொறி–,]*

**பல்லுகம்** *pallugam,* பெ. (n.) 1. கரடி (சூடா. 3:20.); 2. பெருவாகை (வைத்தியபரி.); siris

**பல்லுங்கம்** *palluṅgam,* பெ. (n.) மூங்கில்; bamboo tree. (சா.அக.)

**பல்லுத்தீட்டு–தல்** *pallu-t-tīṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. *பல்விளக்கு* பார்க்க; see *pal viḷakku.* 2. *பல்லுக்கொறி (யாழ்.அக.)* பார்க்க; see *pallu-k-kuṟi.*

*[பல்லு + தீட்டு]*

**பல்லுத்தீட்டு[2]–தல்** *pallu-t-tīṭṭu-,* 5. செ.குன்றாவி. (v.t.) வைதல் (யாழ்ப்.); to abuse.

*[பல்லு + திட்டு → தீட்டு–,]*

**பல்லுத்தேய்–த்தல்** *pallu-t-tēy-,* 4. செ.கு.வி. (v.i.) *பல்விளக்கு* பார்க்க; see *pal-viḷakku-,*

*[பல்லு + தேய்]*

**பல்லுப்படுதல்** *pallu-p-paḍudal,* பெ. (n.) 1. கடிபடுகை; being hurt by a bite 2. கால் நடைக்குக் கடைவாய்ப்பல் முளைக்கை; cutting of teeth in cattle *'மாடு பல்லுப்பட்டதா?'* (உ.வ.) 3. வசைமொழி பலிக்கை; fulfilment of a curse.

*[பல் → பல்லு + படுதல்]*

**பல்லுப்பூனை** *pallu-p-pūṉai,* பெ. (n.) நச்சுப் பூச்சி வகை (சித்தர்சிந்து); a kind of venomous animal.

*[பல்லு + பூனை]*

**பல்லுமினுக்கு–தல்** *pallu-miṉukku-,* 7. செ.கு.வி. (v.i.) *பல்விளக்கு–, (வின்.)* பார்க்க; see *pall viḷakku-.*

*[பல்லு + மினுக்கு–,]*

**பல்லுமேழி** *pallu-mēḻi,* பெ. (n.) புன்செய் முதலியவற்றில் உழுதற்கு உதவுங்கலப்பை வகை (இ.வ.); a kind of plough used to harrow dry lands.

*[பல்லு + மேழி]*



**பல்லுவன்** *palluvaṉ,* பெ. (n.) இழிந்தோன் (நாமதீப. 178.); mean person.

*[பல்லவன் → பல்லுவன்]*

**பல்லுவரி** *pallu-vari,* பெ. (n.) 1. கட்டடங்களில் செங்குத்தாக வைக்கப்பட்ட செங்கற்களின் வரிசை; brick on edge, as in buildings. 2. எழுதகத்தில் பற்கள் போலத் தோன்றும்படி ஒன்றுவிட்டொன்று நீட்டிவைக்கும் செங்கல் வைப்பு; tooth-like projections with interspaces, in cornice.

*[பல்லு + வரி]*



**பல்லுளைவு** *pal-l-uḷaivu,* பெ. (n.) 1. பல்நோவு; tooth-ache. 2. கடிக்கும் ஆவல்தோன்றப் பல்லிலே தினவெடுக்கை; itching of the teeth to bite.

*[பல்லு + உளைவு]*

**பல்லுறுசெங்களை** *palluṟu seṅgaḷai,* பெ. (n.) குதிரைப்பற்செய்ந்நஞ்சு; red orpiment. (சா.அக.)

**பல்லுறைப்பை** *pal-l-uṟai-p-pai,* பெ. (n.) பல அறைகளையுடைய பை; a bag of many pouches. *"பல்லுறைப் பையினுள்ளறை தோறும்"* (பெருங். மகத. 17, 131.)

*[பல் + உறை + பை]*

**பல்லூகம்** *pallūgam*, பெ. (n.) 1. கரடி; bear. 2. குரங்கு; monkey. (சா.அக.)

*[பல் + ஊகம்]*

**பல்லூழ்** *pal-l-ūḻ*, பெ. (n.) பலதடவை; many times. *"பல்லூழ் சேயிழை தெளிர்ப்ப"* (அகநா. 51.)

*[பல் + ஊழ்]*

**பல்லூறுதல்** *pal-l-ūṟudal*, பெ. (n.) பல் முளைக்கையில் உண்டாந் தினவு; itching sensation in cutting teeth.

*[பல் + ஊறுதல்]*

**பல்லெழுதகம்** *pal-l-eḻudagam*, பெ. (n.) எழுதக வகை (C.E.M.); gothic cornice

*[பல் + எழுதகம்]*

**பல்லைக் கடி[1]-த்தல்** *pallai-k-kaḍi-*, 4. செ.கு.வி. (v.i.) சினம் முதலியவற்றால் பல்லை நெருநெருத்தல்; to grind the teeth, gnash the teeth, as in anger.

*[பல்லை + கடி-,]*

**பல்லைக்கடி[2]-த்தல்** *pallai-k-kaḍi-*, 4. செ.கு.வி. (v.i.) தூங்கும் போது ஒலியெழுப்பும் விதத்தில் ஒன்றின் மீது ஒன்று படும்படி பற்களை அழுத்தமாக அசைத்தல்; grind ones teeth. *"குழந்தை தூக்கத்தில் அடிக்கடி நறநற வென்று பல்லைக் கடிக்கிறது"*

**பல்லைக்கடித்து கொள்ளு-தல்** *pallai-k-kaḍittu-koḷ-*, 12. செ.கு.வி. (v.i.) (உணர்ச்சியோ செய்கையோ தன்னை மீறிச் சென்றுவிடாமல்) கட்டுப் படுத்திக் கொள்ளுதல்; bite ones lips; restrain oneself; control. *"சினத்தில் எதிர்த்துப் பேசிவிடாமல் இருக்க வேண்டுமே என்று பல்லைக் கடித்துக்கொண்டான்"* *"இந்த வேலையில் இன்னும் இரண்டு மாதம் பல்லைக் கடித்துக் கொண்டு இரு, பிறகு வேறு வேலைக்கு முயற்சி செய்யலாம்"*

**பல்லைக்காட்டு-தல்** *pallai-k-kāṭṭu-*, 5. செ.கு.வி. (v.i.) *பல்லுக்காட்டு* பார்க்க; see *pallu-k-kāṭṭu-*. *'பல்லைக் காட்டிச் சிரிக்காதே'* (பழ.)

*[பல்லை + காட்டு-,]*

**பல்லைக் கெஞ்சு-தல்** *pallai-k-keñju-*, செ.கு.வி. (v.i.) பல்லுக் கெஞ்சு-, பார்க்க; see *pallu-k-keñju.*

*[பல்லை + கெஞ்சு-,]*

**பல்லைத் திற-த்தல்** *pallai-t-tiṟa-*, செ.கு.வி. (v.i.) **பல்லுக்காட்டு-**, பார்க்க; see *pallu-k-kāṭṭu-*. *'நீரந்த* ***வேளையிலே பல்லைத்*** *திறந்து விட்டீர்'* (தனிப்பா. 1, 226, 19.)

*[பல்லை + திற-,]*

**பல்லைப் பிடித்துப்பார்-த்தல்** *pallai-p-piḍittu-pār-*, 4. செ.குன்றாவி. (v.t.) 1. பல்லைக் கூர்ந்து பார்த்தல் lit, to examine ones teeth. 2. மாட்டின் அகவை உறுதி செய்தல்; to ascertain the age, as of a bull. *'தானங் கொடுத்த மாட்டை பல்லைப் பிடித்துப் பார்க்கிறதா'* (பழ.) 3. ஒருவன் திறனைப் ஆய்வுசெய்தல்; to test the ability as of a person.

*[பல்லை + பிடித்து + பார்-,]*

**பல்லைப் பிடுங்கு–தல்** *pallai-p-piḍuṅgu-,* **5.** செ.குன்றாவி. (v.t.) lit, to pull out ones tooth (பல்லைப் பிடுங்கி விடுதல்) வலுவை வாங்குதல்; to deprive a person of his power, influence, etc. *'இவன் இப்பொழுது பல்லைப் பிடிங்கின பாம்பு'* (உ.வ.) *'பல்லைப் பிடுங்கிய பாம்பு போல'* (பழ.)

**பல்வச்சிரக்காரை** *pal-vaccira-k-kārai,* பெ. (n.) பல்லின் வெண்மைப் பாகம் (C.G.); enamel of the teeth.

*[பல் + வச்சிரம் + காரை]*

வச்சிரம் = Skt.

**பல்வதிந்தன்** *palvadindan,* பெ. (n.) பஞ்சொட்டி; tooth pulp. (சா.அக.)

**பல்வலம்** *palvalam,* பெ. (n.) சிறுகுளம் (சூடா.); pool, small tank, pond.

**பல்வலாவாசம்** *palvalāvāšam,* பெ. (n.) ஆமை; tortoise. (சா.அக.)



**பல்வலி** *pal-vali,* பெ. (n.) **1.** பல்லில் ஏற்படும் நோவு; tooth ache. **2.** பல்லீற்று நோவு; inflammation of the gum.

*[பல் + வலி]*

**பல்வலிப்பறவை** *pal-vali-p-paṟavai,* பெ. (n.) *எண்காற்புள்* பார்க்க; see *eṇ-karpuḷ* a fabulous bird. *"பல் வலிப் பறவை பற்றுபு"* (பெருங். இலாவாண. 11, 54.)

*[பல் + வலிப்பறவை]*

**பல்வளம்** *pal-vaḷam,* பெ. (n.) நாட்டமைதி ஆறனுள் நிலநீர் முதலியவற்றின் வளம் (பிங்.); fertile nature of a country, one of six nāṯṯamaidi. q.v.

*[பல் + வளம்]*

**பல்வாங்கி** *palvāṅgi,* பெ. (n.) *பல்லிடுக்கி (புதுவை)* பார்க்க; see *pal-l-iḍukki.*

*[பல் + வாங்கி]*

ஒ.நோ. முள்வாங்கி

**பல்விலக்கியுளி** *pal-vilakki-y-uli,* பெ. (n.) மர மறுக்கும் வாளின் பல்லை நிமிர்க்க உதவும் உளிவகை (இ.வ.); a saw-setting chisel.

*[பல் + விலக்கி + உளி]*



**பல்விழு–தல்** *pal-viḻudal,* **2.** செ.கு.வி **1.** முளைத்தபல் அசைந்து விழுகை; falling down of teeth. **2.** மாடு முதலியவற்றிற்குப் பல் முளைக்கை (கொ.வ.); the cutting of teeth, as of a bull

*[பல் + விழு–,]*

**பல்விளக்கி** *palvilakki,* பெ. (n.) **1.** பற்குச்சி; tooth twig. **2.** செந்நாயுருவி; a kind of medicinal herb. (red indian bar) (சா.அக.)

**பல்விளக்கு—தல்** *pal-viḷakku-,* **5.** செ.கு.வி. (v.i.) பல்லைத் தூய்மை செய்தல் (பதார்த்த. 1303.); to clean the teeth.

*[பல் + விளக்கு–,]*

**பல்விளக்குமூலிகை** *palviḷakku mūligai,* பெ. (n.) பல்துலக்கவுதவும் ஆல், வேல், பூலா, வேம்பு, நாயுருவி முதலானவற்றின் குச்சிகள்; the green twigs of various plants, banian, babul, poolah, margosa, indian burr. (சா.அக.)

**பல்வெக்கை** *palvekkai,* பெ. (n.) கடல்மீன்வகை; தாடைப் பகுதி கூர்மையாகக் காணப்படும் (நெல்லை. மீன.). a kind of seafish having the sharp jaws.

மறுவ.நெடுவாய்.

*[பல் + வெக்கை]*

**பல்வெட்டிலை** *pal-veṭṭilai,* பெ. (n.) இலை வகை (குற்.); dentate leaf.

*[பல் + வெட்டு + இலை]*

**பல்வேவு** *palvēvu,* பெ. (n.) பல்நோய் வகை (பாராச. 1, 218.); tooth-ache.

*[பல் + வேவு]*

**பல்வேறு** *palvēṟu,* பெ.அ. (adv.) பலவித; வெவ்வேறு; (many.) different; various. *'அந்த நிறுவனம் பல்வேறு பண்டங்களை உறுவாக்கம் செய்கிறது'.*

**பல்வை—த்தல்** *pal-vai-,* **4.** செ.கு.வி. (v.i.) *பல்லுக்கட்டு, 2 (குற்.)* பார்க்க; see *pallu-k-kaṭṭu.*

*[பல் + வை–,]*

**பல்வைத்தியம்** *pal-vaittiyam,* பெ. (n.) பல்நோய் தீர்க்கும் மருத்துவம் (C.G.); dentistry

*[பல் + வைத்தியம்]*

வைத்தியம் = Skt.

**பல்வைத்தியன்** *pal-vaittiyan,* பெ. (n.) பல் மருத்துவஞ் செய்வோன்; (குற்.) dental surgeon, dentist.

*[பல் + வைத்தியன்]*

வைத்தியன் = Skt.

**பல[1]** *pala. (pron.)* ஒன்றுக்கு மேற்பட்டவை; many, several, diverse. *"பலவற் றிறுதி யுருபிய னிலையும்"* (தொல். எழுத். 220.)

க. ஹல. ம. பல

*[பல் → பல]*

**பல[2]** *pala,* பெ. (n.) **1.** எண்ணிக்கையில் அதிகம்; many. *"அவருடைய கதைகளில் பல வற்றை நான் படித்திருக்கிறேன்"*

**பல[3]** *pala,* பெ.அ. (adj.) எண்ணிக்கையில் அதிகமான; many. *"போட்டியில் பல நாடு களைச் சேர்ந்த அணிகள் கலந்து கொண்டன" "பல இடங்களில் மழை பெய்துள்ளது"*

**பலக்கு** *palakku,* பெ. (n.) பலக்குராசம்; bitter fig. (சா.அக.)

மறுவ: பேயத்தி

பலகாரி

பலக்குளி

**பலகடி** *palakadi,* பெ. (n.) கவடி (வைத்தியபரி.); a small sea-shell.

**பலகணி**[1] *pala-kaṇi,* பெ. (n.) **1.** சாளரம்; lattice window. *"பலகணி வழியாக வேடிக்கைப் பார்ப்பது சிலருடைய இயல்பு"* **2.** கண்வாயில் (தைலவ. தைல.); wicket.

*[பல் → பல + கண் + இ]*

**மறுவ:** காலதர்

சாளரம் குறுங்கண்
நூழை
சாளரவாயில்
நுழை



**பலகணிச் சன்னல்** *palagaṇi-c-caṉṉal,* பெ. (n.) இரும்புக் கம்பியிட்ட சன்னல் (C.E.M); grated window.

*[பலகணி + சன்னல்]*

**பலகணிப்பாலம்** *palagaṇi-p-pālam,* பெ. (n.) இருப்புப் பாலம் (C.E.M); lattice bridge.

*[பலகண் → பலகணி + பாலம்]*

**பலகம்** *palagam,* பெ. (n.) (யாழ்.அக.) **1.** நாற்காலி; chair. **2.** அடுக்கு; layer, pile. **3.** கேடகம்; shield.

*[பலகை → பலகம்]*

**பலகலப்பு** *pala-kalappu,* பெ. (n.) *பலகலவை* பார்க்க; see *pala-kalavai.*

*[பல + கலப்பு]*

**பலகலவை** *pala-kalavai,* பெ. (n.) **1.** பலவற்றின் கலப்பாலானது; mixture of diverse things; miscellany. **2.** நறுமணக்கூட்டுப் பொடி (யாழ்.அக.); a mixture of fragrant substances.

*[பல + கலவை]*

**பலகறை**[1] *palagaṟai,* பெ. (n.) **1.** சோகி (சீவக. 2773. உரை); cowry. **2.** சுட்டநீறு; calcined cowry.

**பலகறை**[2] *palagaṟai,* பெ. (n.) கவடி; *"பணில மொத்த பலகறை"* (அரிச்ச. மயாந. 9.); shells, couries, used in some places-as coins.



**பலகறைப் பற்பம்** *palagaṟai-p-paṟpam,* பெ. (n.) வயிற்றில் ஈரற்கட்டியைப் போக்கும் பல கறைப் புடமிட்ட பற்பம்; calcined cowry used for the enlargement of spleen. (சா.அக.)

**பலகாயம்** *pala-kāyam,* பெ. (n.) மிளகு, கடுகு, வெந்தயம் போன்ற கறிக்குதவும் பண்டங்கள்; sundry spices as pepper. etc. *“பலகாயம் நிசதி மிளகு ஆழாக்கும் கடுகு உழக்கும்”* (s.i.i.iii, 381.)

*[பல + காயம்]*

காயம் = மணப்பொருள்

**பலகாரம்**[1] *palagāram,* பெ. (n.) யானை மேற்றவிசு (வின்.); seat with canopy on an elephants back.

**பலகாரி** *palagāri,* பெ. (n.) 1. உடம்பிற்கு வலுவைக் கொடுக்கும் மருந்துகள்; a medicine that lends tone to the system-tonic. 2. பேயத்தி; bitter fig. 3. தொட்டிச் செய்ந் நஞ்சு; a kind of arsenic. (சா.அக.)

மறுவ: காட்டத்தி

**பலகால்** *pala-kāl,* பெ. (n.) பலமுறை; many times. பலகாலும் பழகியுள்ளோம் பாவலருடன்.

*[பல + கால்]*

**பலகி** *palagi,* பெ. (n.) நிலத்தைச் சமப்படுத்த உதவும் பரம்புப் பலகை (கோவை); a kind of harrow used for levelling the ground after ploughing.

க. ஹலிகெ.



**பலகீரை** *pala kīrai,* பெ. (n.) கலவங்கீரை; mixed vegetable greens having medical virtues. (சா.அக.)

மறுவ: கூட்டுக்கீரை, கலவைக்கீரை

*[பல + கீரை]*

**பலகீரைப்பதார்த்தம்** *pala kīrai-p-padārttam,* பெ. (n.) கலவைக் கீரைக் கறி (புதுவை.); a relish made of kalavai-k-kīrai.

*[பல + கீரை + பதார்த்தம்]*

பதார்த்தம் = Skt.

**பலகீரைபறி-த்தல்** *palakīrai-paṟi-.* செ.கு.வி. (v.i.) தீங்கு செய்தல்; to do mischief.

*[பலகீரை + பறி-,]*

**பலகுசந்தனம்** *palagu-šandaṉam,* செவ் வள்ளிக் கிழங்கு; red sweet potatoe. (சா.அக.)



**பலகுராசம்** *palagu-rāšam,* பெ. (n.) காட்டத்தி; wild fig. (சா.அக.)

**பலகேசரம்** *palakēšaram,* பெ. (n.) தென்னை *(மலை.)* பார்க்க; cocoanut palm.

**பலகை[1]** *palagai,* பெ. (n.) **1.** மரப்பலகை; board, plank. *"பொற்பலகை யேறி யினிதமர்ந்து"* (திருவாச. 16, 1.) **2.** உழவிற் சமன்படுத்தும் மரம்; levelling plank. **3.** சூதாட உதவுவதும் கோடுகள் வரையப்பட்டதுமான பலகை; gaming table. *"பலகை செம்பொனாக"* (சீவக. 927.) **4.** நெடும்பரிசை (தொல். பொ. 67, உரை, பி–ம். பக். 209.); long shield, buckler. **5.** பறைவகை; a drum. *"வீணை பலகை தித்தி வேணுசுரம்"* (விறலிவிடு.) **6.** யானைமேற்றவிசு (பிங்.); seat on an elephants back, howdah. **7.** எழுதுபலகை; tablet, slate. **8.** ஒருவகை வரிக்கூத்து; masquerade dance. **9.** தொட்டிச்செய்ந்நஞ்சு வகை (மூ.அ.); a mineral poison. **10.** வயிரத்தின் குணங்களுளொன்று; a quality of the diamond.

**க.** ஹலகெ.

**பலகை[2]** *palagai,* பெ. (n.) **1.** நெற்றி எலும்பு; fore head bone, frontal bone. **2.** பச்சைக் கற்பூரம்; crude camphor. **(சா.அக.)**

**பலகை[3]** *palagai,* பெ. (n.) **1.** நீரைப் பின்தள்ளி (கடல்) மேற் செல்லுதற் குரிய–மரப்பலகை–துடுப்பு (நெல்லை.மீன.); oar, paddle.

**பலகை ஆற்று–தல்** *palagai-y-āṟṟu,* **7.** செ.கு.வி மரக்கலத்தின் வேகத்தைக் குறைத்தல்; to reduce the force of the vessel.

**பலகைக் கயிறு** *palagai-k-kayiṟu,* பெ. (n.) நெசவுக் கருவி வகை (யாழ்.அக.); a weavers implement.

*[பலகை + கயிறு]*

**பலகைக்கல்** *palagai-k-kal,* பெ. (n.) எழுதுங்கல்; slate. **(சா.அக.)**

**மறுவ:** எழுதுபலகை

*[பலகை + கல்]*

**பலகைக்கள்ளி** *palagai-k-kaḷḷi.* பெ. (n.) *சப்பாத்துக்கள்ளி* **(யாழ்ப்.)** **பார்க்க;** prickly-pear. see *sappāttu-k-kaḷḷi.*

*[பலகை + கள்ளி]*

**பலகைக் காந்தம்** *palagai-k-kāndam,* பெ. (n.) தட்டையான காந்தக் கல் **(வின்.);** flat loadstone bar.

*[பலகை + காந்தம்]*

**பலகைசுரண்டி** *palagai-śuraṇḍi,* பெ. (n.) சீவுளி (இ.வ.); carpenters scraping instrument.

**மறுவ:** இழைப்புளி

*[பலகை + சுரண்டி]*

**பலகைத்தரை** *palagai-t-tarai,* பெ. (n.) பரம்படித்த நிலம் (வின்.); land smoothed by drawing a board over it.

*[பலகை + தரை]*

**பலகை நாக்கு** *palagai-nākku,* பெ. (n.) வலிக்கும் தண்டுமரத்தின் அலகு (இ.வ.); blade of an oar.

**ம.** பலக நாக்கு

*[பலகை + நாக்கு]*



**பலகைப்பா** *palagai-p-pā-,* பெ. (n.) தேரின் மேற்றட்டு (வின்.); the floor of a chariot.

*[பலகை + பா]*

**பலகை மஞ்சள்** *palagai-mañjaḷ,* பெ. (n.) பிளப்பு மஞ்சள் (கொ.வ.); cut pieces of turmeric.

*[பலகை + மஞ்சள்]*

**பலகைமரம்** *palagai-maram,* பெ. (n.) 1. நெசவுக் கருவி வகை (வின்.); a weavers instrument. 2. பலகையறுக்க உதவும் மரம்; tree fit for saving into planks.

*[பலகை + மரம்]*

**பலகை முடி** *palagai muḍi,* பெ. (n.) வலைக் கண்ணில் இடப்பெறும் முடிச்சு வகையுள் ஒன்று (செங்கை.மீன.); a kind of knot in fishing net.

*[பலகை + முடி]*

**பலகையடி—த்தல்** *palagai-y-aḍi-,* செ.கு.வி. (v.i.) பரம்படித்தல் (யாழ்ப்.); to smooth a rice-field with a board.

*[பலகை + அடி —,]*

**பலகையறு—த்தல்** *palagai-y-aṟu-,* 1. செ.கு.வி. (v.i.) பலகை யறுத்தெடுத்தல்; to saw a board from tree.

*[பலகை + அறு—,]*

**பலகையுப்பு** *palagai-y-uppu,* பெ. (n.) வளையலுப்பு; a mineral salt known as glass gall felvitrix.

மறுவ: பலகையுரு. (சா.அக.)

*[பலகை + உப்பு]*

**பலகையுரு** *palagai-y-uru,* பெ. (n.) *வளையலுப்பு (யாழ்.அக.)* பார்க்க; a medicinal salt.

*[பலகை + உரு]*

**பலகையெழுதுகல்** *palagai-y-eḻuḍukal,* பெ. (n.) மாக்கல்; slate, pencil.

மறுவ: மாவுக் குச்சி. (சா.அக.)

**பலகோசம்** *pala-kōšam,* பெ. (n.) பல்லோர்தம் பெயரிற் பதிவு செய்யப்பட்ட நிலக்கணக்கு (R.T.); a record of lands registered in the names of several persons.

*[பல + கோசம்]*

கோசம் = Skt.

**பலங்கரம்** *palaṅgaram,* பெ. (n.) பித்தம்; bile. (சா.அக.)

**பலங்கனி** *pala-ṅ-kaṉi,* பெ. (n.) பலாப்பழம் (திவ். பெரியதி. 3, 1, 5.); jack fruit. (சா.அக.)

*[பல + கனி]*

**பலச்சகி** *pala-c-cagi,* பெ. (n.) குன்றிமணி; jewellers bead. (சா.அக.)

**பலச்சரீடம்** *palaccarīḍam,* பெ. (n.) *குன்றி (மலை.)* பார்க்க; see *kuṉṟi.* crab's eye.

**பலச்சாரம்** *pala-c-cāram,* பெ. (n.) அரத்த நிறக் கொய்யாப் பழம்; red guava fruit. (சா.அக.)

**பலசங்கியமம்** *palaśaṅgiyamam,* பெ. (n.) பாக்குமரம்; areca nut tree on palm.

**பலசங்கியம்** *pala-śaṅgiyam.* பெ. (n.) *பலசங்கியமம்* பார்க்க; see *pala saṅgiyamam* (சா.அக.)

**பலசரக்கு** *pala-šarakku.* பெ. (n.) பலவகைப் பண்டம்; groceries, goods of various kinds; food stuffs. (c.g.) *"பலசரக்குக் கடை" "பல சரக்குக் காரனைப் பயித்தியம் பிடித்தது போல"* (பழ.)

க. ஹலசரகு

*[பல + சரக்கு]*

**பலசரக்குச்செய்நீர்** *palašarakku-c-ceyanir,* பெ. (n.) வேதுகாப்பு செய்நீர்; a pungent liquid prepared from several unknown drugs by a secret process and used in Alchemy. (சா.அக.)

*[பலசரக்கு + செய்நீர்]*

**பலசாடவம்** *palaśāḍavam,* பெ. (n.) *மாதுளை (மலை.)* பார்க்க; see *mādulai* pome-granate. (சா.அக.)

**பலசாரி** *palaśāri,* பெ. (n.) உடும்பைப் போல் வால்பக்கம் முட்கள் அமைந்த ஒருயிரி; a species of guana with spikes at the tail found in the Himalayan regions, used in medicine. (சா.அக.)

**பலசிகா** *palaśigā,* பெ. (n.) இருள்செடி; gold tree. (சா.அக.)

**பலசு** *palaśu.* பெ. (n.) 1. பாக்கு; areca nut. 2. பாலாட்டம்; supposed soma plant. (சா.அக.)

**பலஞ்சேறு** *palañ-cēṟu,* பெ. (n.) நடுகைக்கு உழுது பண்படுத்தப்பட்ட நிலம் (R.T.); ploughed land prepared for transplanting.

*[பதம் + சேறு]*

**பலண்டு** *palaṇḍu,* பெ. (n.) *பலாண்டு* பார்க்க (வின்.); see *palāṇḍu.*

*[பலாண்டு → பலண்டு]*

**பலண்டுறுக பாடாணம்** *palaṇḍuṟugapāḍāṇam,* பெ. (n.) பிறவிச்செய் நஞ்சு வகை; a mineral poison.

**பலதரப்பட்ட** *pala-tarappaṭṭu,* பெ.அ. (adj.) பல வகையான; of all sarts; different kinds of. *"பலதரப்பட்ட மக்களும் இந்த வைப்பகத்தில் கணக்கு வைத்திருக்கிறார்கள்" "ஒரு நல்ல ஆளுமையில் பலதரப்பட்ட இன்னல்களையும் சந்திக்கும் திறமை வேண்டும்"*

**பலதாரமணம்** *pala-tāra-maṇam,* பெ. (n.) பலபெண்களை மணம்செய்தல்; polygamy.

*[பல + தாரம் + மணம்]*

**பலதிரட்டு** *pala-tiraṭṭu,* பெ. (n.) தொகை நூல் (யாழ்.அக.); compilation, anthology.

*[பல + திரட்டு]*

**பலதிரியம்** *palatiriyam,* பெ. (n.) மூன்றுவகைக் காய்; அவை கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய்; the three myrobalans. (சா.அக.)

**பலதூசு** *palatūsu,* பெ. (n.) *புளியாரை (மலை.)* பார்க்க; see *puḷi-y-ārai* yellow wood sorrel. (சா.அக.)

*[பல + தூசு]*

**பலப்பத்தூள்** *palappattūḷ,* பெ. (n.) மாக்கல் தூள்; powder of slate. (சா.அக.)

*[பலப்பம் + தூள்]*

**பலப்பாழ்** *palappāḻ,* பெ. (n.) வெள்ளைக் கழற்கொடி; a white species of molucca bean creeper. (சா.அக.)

**பலப்பிரியம்** *palappiriyam,* பெ. (n.) செம் போத்து; Indian cuckoo. (சா.அக.)

**பலப்பிரேதம்** *palappirēdam,* பெ. (n.) *திப்பிலி (மலை.)* பார்க்க; see *tippili* long pepper.

*[பல + பிரேதம்]*

**பலபட்டடை** *pala-paṭṭaḍai,* பெ. (n.) 1. பலசாதி (வின்.); people of various castes. 2. கலப்புச் சாதி (கொ.வ.); mixed caste. 3. பல பண்ட முள்ள சாலை (வின்.); store room in which diverse articles are kept 4. பல கலப்பானது (கொ.வ.); mis cellaneous collection. 5. வணிகர் கட்கும் தொழிலாளர்கட்கும் இடும் பொதுவரி (R.T.); a general tax on merchants and artisans.

*[பல + பட்டடை]*

**பலபட்டறை** *pala-paṭṭarai,* பெ. (n.) *பலபட்டடை (யாழ்.அக.)* பார்க்க; see *pala paṭṭaḍai.*

*[பல + பட்டறை]*

**பலபட** *pala-paḍa,* வி.அ (adj.) நிகழ்வுகள் குறித்துப் பலவாறு; in a variety of ways. ***"செய்யுள், நாடகம் என்று பலபடப் பேசினார்"***

**பலபடப்புனைவணி** *palapaḍa-p-puṉaivaṇi,* பெ. (n.) ஒரு பொருளினிடத்துப் பல அடிங் களிருத்தலாற் பல பொருள்களை அதன்பால் ஏற்றிக் கூறும் அணி (அணியி. 7.) (rhet.) a figure of speech in which an object is compared to several things in respect of several qualities.

*[பலபட + புனைவு + அணி]*

**பலபடு-தல்** *pala-paḍu-,* 20. செ.கு.வி. (v.i.) 1. பலவாதல்; to become manifold; to be divided into many parts; to ramify. 2. கட்சிப் படுதல்; to be divided, as a party into factions.

*[பல + படு-,]*

**பலபண்டம்**[1] *pala-paṇṭam,* பெ. (n.) பண்ணியம்; (சூ.நிக. 6:62); musical instrument.

**பலபாண்டம்**[2] *pala-pāṇḍam,* பெ. (n.) அரிதாரம்; yellow orpiment. (சா. அக.)

**பலபத்திரன்** *palapattiraṉ,* பெ. (n.) பலதேவன்; elder brother of krishna one of tasāvatāram. *"காழுலக்கை கொள்கைப் பலபத்திரன்"* (சேதுபு. இலக்கும. 3.)

**பலபத்திரன்கொடி** *palapattiraṉ-koḍi,* பெ. (n.) பனை (பிங்.); palmyra-palm, as the insignia on the banner of Balabhadra.

*[பல + பத்திரன் + கொடி]*

பத்திரன் = Skt.

**பலபத்திரன்படை** *palapattiraṉ-paḍai,* பெ. (n.) கலப்பை (பிங்.); plough, as the weapon of Balabhadra.

*[பலபத்திரன் + படை]*

**பலபல** *pala-pala,* pron. **மிகப்பல (தொல். எழுத். 215, உரை.); many.**

*[பல + பல]*

**பலபலிரிதி** *palapaliridi,* பெ. (n.) ஞாழல்; saffron.

**பலபலெனல்** *pala-paleṉal,* பெ. (n.) *பலபலவெனல்* பார்க்க *"பல்லியும் பலபலென்னப் பகருது"* (குற்றா. குற. 63.) see *palapalaveṉal.*

*[பலபல + எனல் → பலபலெனல்]*

**பலபலவெனல்** *pala-pala-v-eṉal,* பெ. (n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; onom, expr. signifying sounding, chirping, as of a lizard; rustling, as of falling leaves. *'பனிக்காலத்தில் மரத்தினின்று பலபலவென்று இலை யுதிர்கின்றது'* 2. பொழுது விடிதற்குறிப்பு; day-breaking. *'பலபலவென்று விடிந்தது'* 3. கண்ணீர் விரைந்து வடிதற்குறிப்பு; trickling down, as of tears. *'கண்களிலிருந்து நீர் பலபலவென்று விழுந்தது'*

*[பலபல + எனல்]*

**பலபாடு** *pala-pāḍu,* பெ. (n.) 1. பலவகைத் துன்பம்; all sorts of trouble. 2. பலவகையான வசவு, இகழ்ச்சி பழி; various scenes of disgrace. 3. பல்வேறுபட்ட செயல்; miscellaneous business.

*[பல + பாடு]*

**பலபிணிக்கு வாய்த்த கறி** *palapiṇikku vāytta kaṟi,* பெ. (n.) பலநோய்களுக்கும் நற்கறியான அரைக்கீரை; garden spinach. (சா.அக.)

**மறுவ.** அறுகீரை, அறைகீரை

**பலபூரகம்** *palapūragam,* பெ. (n.) 1. மாதுளை; pomegranate. 2. கொம்மட்டி மாதுளை; lemon citron. (சா.அக.)

**மறுவ.** பலபூரம்

*[பல + பூரகம்]*

**பலபூரம்** *palapūram,* பெ. (n.) *பலபூரம்* பார்க்க (சங்.அக.); see *palapūram.*

*[பல + பூரம்]*

**பலபை** *palabai,* பெ. (n.) **கதிரவன் நண்ணிலக் கோட்டில் நிற்கும்போது கதிரவக்கடிகார** நடுவில் விழும் நிழல் (யாழ்.அக.); equinoctial shadow of the gnomon at noon.

**பலபொருட்சொற்றொடரணி** *palaporuṭ-šoṟṟoḍaraṇi,* பெ. (n.) பல பொருள்களைத் தருதற்குரிய சொற்களைப் புணர்த்துக் கூறும் அணிவகை; a rhetorical embellishment, a figure of speech.

**பலபொருள்குறித்த ஒரு வினைத்திரிசொல்** *palaporuḷ-kuṟittaoru-viṉai-t-tirišol,* பெ. (n.) செந்தமிழ் நிலத்துமொழியாகச் செய்யுட்கே யுரித்தாய் கற்றோர்க்கு மாத்திரம் பொருள் விளக்கிப் பலபொருட்டருமொரு வினைச்

சொல்; (நன். 2. 72, உரை.); a difficult verb to be understood, and capable verb of being applied to differnt things. *'வரைந்தான் என்பது நீக்கினான் கொண்டான் என்னும் பலபொருள் குறித்த ஒரு வினைத்திரிசொல்'*

**பலபொருள் குறித்த ஓருரித் திரிசொல்** *palaporuḷ-kuṟitta-ōruri-t-tiriśol,* பெ. (n.) அரிதுணர் பொருளாய்ப் பல பொருடருமோருரிச் சொல்; a particle difficult to be understood, and capable of being applied to different things. *"கடி என்பது, காப்பு, உரிமை, அச்சம், கரிப்பு, விளக்கம், சிறப்பு, மணம் முதலிய பல பொருள் குறித்த ஒருரித்திரி சொல்"* (நன். 272. உரை.)

**பலபொருளுவமை** *pala-poruḷ-uvamai.* பெ. (n.) ஓர் உவமேயத்திற்குப் பல பொருள் உவமையாக வரும் உவமையணி (தண்டி. 30.); (rhet.) comparison of one object with many things. *"வேலுஞ் சேலும் போலும் விழி"*

*[பல + பொருள் + உவமை]*

**பலபொருளொருசொல்** *pala-poruḷ-oru-śol,* பெ. (n.) பலபொருள் கொண்டதொரு கிளவியம்; a word of many meanings. *"ஆயிரு வகைய பலபொருள் ஒருசொல்"* (தொல். பொ. 52.) *"பகவனே யீசன் மாயோன்"* (சூ.நிக. 11. ககரவெ.)

*[பலபொருள் + ஒருசொல்]*

**பலபோகம்** *pala-pōgam,* பெ.(n.) நிலத்தில் பலர்க்குரிய தனித்தனி நுகர்ச்சி (C.G.); tenure by which inhabitants hold hands in severalty, each being responsible for the revenue of his own holding opp. to ēgā pōgam.

*[பல + போகம்]*

**பலம்** *palam,* பெ. (n.) முப்பத்தைந்து நிறை (கிராம்) கொண்ட நிறுத்தலளவை; (a former) measure of weight, roughly about 35 grams.

**பலம்** *palam,* பெ. (n.) 1. மருக்காரை; common emetic nut. 2. சேராங்கொட்டை; marking nut. (சா.அக.)

**பலம்பம்** *palambam,* பெ. (n.) சேங்கொட்டை; marking nut. (சா.அக.)

**பலம்பலா** *palambalā,* பெ. (n.) *சிற்றாமுட்டி* பார்க்க; see *śiṟṟamuṭṭi.* (சங்.அக.);

*[பலம் + பலா]*

**பலம்பழம்** *palambaḻam,* பெ. (n.) சேங்கொட்டை (மலை.); marking-nut tree.

*[பலம் + பழம்]*

**பலமந்தம்** *palamandam,* பெ. (n.) அதிகமப்பு; dyspeptic. (சா.அக.)

**பலமுகம்** *pala-mugam,* பெ. (n.) பலவழி; various sides, directions, ways, means sources or points.

*[பல + முகம்]*

**பலமுனை** *pala-muṉai,* பெ. (n.) கற்றச்சுளி வகை (நாஞ்.); a kind of chisel used by stonemasons.

*[பல + முனை]*

**பலமுனைவரி** *pala-muṉai-vari,* பெ. (n.) விளைச்சல் செய்யப்பட்ட பொருள் ஒவ்வொரு முறையும் விற்கப்படும்போது அரசால் போடப்படும் விற்பனை வரி; sales tax levied at every point of sale from production to the last sale, multiple point. *'பலமுனை வரியால் பொதுமக்கள் பெரிதும் பாதிக்கப் பட்டுள்ளனர்'*

**பலமை** *palamai,* பெ. (n.) குன்றிமணி; jewellers bead. (வைத்தியபரி) (சா.அக.)

**பலர்** *palar, (pron.)* **1.** அதிக எண்ணிக்கையினர்; plurality of persons many, several persons. *“பலரறி சொல்லே”* (தொல். சொல். 7.) 2. சபை (சது.); assembly, meeting, society. *'திரைப்படம் எடுக்கும் இடத்தில் பலர் கூடி நின்று வேடிக்கைப் பார்த்தார்கள்'*

க. பலர்

*[பல் + அர்]*

**பலர்பால்** *palar-pāl,* பெ. (n.) ஐம்பாலுள் உயர் 1திணையிற் பன்மை குறித்து வரும் பால். (நன். 262.) (நன். வினையியல். 7. உரை); (gram.) plural of the uyar-tiṇai, one of ai-m-bāl. q.v.

*[பலர் + பால்]*

**பலரறிசுட்டு** *palar-aṟi-šuṭṭu,* பெ. (n.) உலகறி பொருண்மேல் வருஞ்சுட்டு; demonstrative word referring to what is well known but not expressed.

*[பலர் + அறி + சுட்டு]*

**பலரறிசொல்¹** *palar-aṟi-šol,* பெ. (n.) 1. *பலர்பால். (gram.)* ***(தொல். சொல். 7.)*** பார்க்க; see *palarpāl.* 2. பலருமறிந்த செய்தி (வின்.); news publicly known. 3. வீண்பேச்சு (திவா.); general talk, rumour.

*[பலர் + அறி + சொல்]*

**பலராசனம்** *palar-āšaṉam,* பெ. (n.) பலரமரும் இருக்கை (புதுவை.); sofa.

*[பலர் + ஆசனம்]*

ஆசனம் = Skt.

**பலலம்** *palalam,* பெ. (n.) **1.** சேறு (யாழ்.அக.); mire, slush. **2.** பிண்ணாக்கு; oil-cake. **3.** தசை; flesh.

*[ஒருகா: பழனம் → பலலம்]*

**பலலோத்திரம்** *palalōttiram,* பெ. (n.) வெள்ளி லோத்திரம்; (வைத்தியபரி.); the park of wood-apple tree.

**பலவக்கல்** *palavakkal,* பெ. (n.) பற்பக் கல்; slate rock. (சா.அக.)

*[பலகை → பலவம் + கல்]*

**பலவகைக்கீரை** *palavagai-k-kīrai,* பெ. (n.) கலவைக் கீரை; several mixed greens with medical virtues. (சா.அக.)

மறுவ. காட்டுக்கீரை, கலவைக்கீரை, கலவங்கீரை

*[பலவகை + கீரை]*

**பலவகைத்தாது** *palavagai-t-tādu,* பெ. (n.) எழுவகைத் தாது; the seven constituents of the body. (சா.அக.)

*[பலவகை + தாது]*

**பலவம்¹** *palavam,* பெ. (n.) **1.** காய்; green fruit. **2.** பழம்; ripe fruit. **3.** கர்ச்சூரம்; date plan. (சா.அக.)

*[பலம் → பலவம்]*

**பலவம்²** *palavam,* பெ. (n.) குழி (அக.நி.); hollow.

ஒருகா.*[பிலம் → பலம் → பலவம்]*

**பலவயிற்போலியுவமை** *palavayir-pōli-y-uvamai,* பெ. (n.) ஒருதொடரியப் பொருளோடு மற்றொரு தொடரியப் பொருள் உவமிக்கப் படுகையிற் பலவிடங்களில் உவமஉருபு வெளிப்பட்டுவரும் உவமை வகை (தண்டி. 30.); (rhet.) a figure of speech in which a simile is elaborated to several details.

*[பல + வயின் + போலி + உவமை]*

**பலவரவை** *pala-varavai,* பெ. (n.) பலவழியிற் துண்டுதுண்டாக வந்த நிலங்கள்; lands acquired bit by bit, in a village. "*விக்கிரம சோழ நல்லூரில் பல வரவையான நிலத்து*" (s.i.i. viii. 29.)

*[பல + வரவு → பலவரவு → பலவரவை]*

**பலவரி** *pala-vari,* பெ. (n.) அகரநிரலில் மெய்யெழுத்துக்களின் வரிசை (வின்.); row of consonants in the alphabet.

**மறுவ.** ஒற்றின் வருக்கம்

*[பல + வரி]*

**பலவரை** *palavarai,* பெ. (n.) கடற்சோகி என்னும் ஒருவகை மூலிகை; a kind of medicinal herb. (சா.அக.)

**பலவழித்தோன்றல்** *pala-vali-t-tōnral,* பெ. (n.) மருமகன் (சது.); nephew.

*[பல + வழி + தோன்றல்]*

**பலவற்பலா** *palavarpalā,* பெ. (n.) ஐவிரலி என்னும் கொடிவகை; a kind of climber named; ai-virali. (சா.அக.)



**பலவறிசொல்** *pala-v-ari-šol,* பெ. (n.) அஃறிணைப் பன்மைச் சொல்; (gram) a word in the neuter plural.

*[பல + அறி + சொல்]*

**பலவன்** *palavan,* பெ. (n.) மருந்துச்செடிவகை (யாழ்ப்.); a medicinal herb, of which there are two kinds, viz., vedi-p-palavan, pēy-p-palavan.

*[பலம் → பலவன்]*

**பலவாட்டைப்பூடு** *palavāttai-p-pūdu,* பெ. (n.) பல்லாண்டுகள் பயன்தரும் மூலிகைச் செடி; perenial plant. (சா.அக.)

**பலவாடைப்பூண்டு** *palavādai-p-pūndu,* பெ. (n.) செம்பருத்தி; red cotton plant. (சா.அக.)

*[பலவாடை + பூண்டு]*



**பலவாறு** *palavāṟu,* வி.அ. (adv.) பல்வேறு வகையாக; variously. '*அவரைப் பற்றிப் பலவாறு பேசிக் கொள்கிறார்கள்*'.

**பலவானம்** *palavāṉam,* பெ. (n.) மந்தாரச் சிலை (யாழ்அக.); a black stone.

**பலவிலி** *palavili,* பெ. (n.) பாம்பைப் போற் கொடி படர்ந்தும், கிழங்கு பெரிதாகவும் உள்ள ஒருவகைக் கற்பமூலிகை; a rejuvenating creeper resembling a serpent with a large bulbous root. it is dried and used as a medicinal powder. (சா.அக.)

**பலவின் கூட்டத்தற்கிழமை** *palaviṉ-kuṭṭa-t-taṟ-kiḻamai,* பெ. (n.) படைகளது தொகுதி யென்றாற் போல்வரும் பலபொருட் கூட்டத் தற் கிழமை (நன். 33. உரை.); an inseparable quality relating to a noun of multitude-as படையது தொகுதி.

**பலவின்பால்** *palaviṉ-bāl,* பெ. (n.) (இலக்.) அஃறிணையில் பலவற்றைக் குறிப்பிடும் சொல்; the term for neuter plural, one of ai-m-bāl.

*[பலவின் + பால்]*

**பலவினீட்டம்** *palaviṉiṭṭam,* பெ. (n.) பல பொருள் கூட்டம்; a collection of many things. "*ஒன்றன் கூட்டம் பலவின் ஈட்டம்*" (நன். 300.)

*[பலவின் + ஈட்டம்]*

**பலவினைச்சிலேடை** *pala-viṉai-c-cilēḍai,* பெ. (n.) பலவினைபற்றி வருஞ் சிலேடையணி வகை (தண்டி.75.); a figure of speech in which a double meaning is carried through several verbs.

*[பலவினை + சிலேடை]*

சிலேடை = Skt.

**பலவினைத்திரிசொல்** *pala-viṉai-t-tirišol,* பெ. (n.) செந்தமிழ் நிலத்து மொழியாய்க் கற்றோர்க்கு மாத்திரம் பொருள்விளக்கி ஒரு பொருள் குறித்த பலசொல்லாய் வரும் வினைச் சொல்; (வ.று.) '*படர்ந்தான், சென்றான் என்பது போயினானென்னும் ஒரு பொருள் குறித்த பலவினைத்திரிசொல்*' (நன். 292, உரை.); a difficult verb expressing different subjects.

*[பலவினை + திரிசொல்]*

**பலவு** *palavu,* பெ. (n.) பலாமரம்; jack-tree. "*பாடல நெடும் பலவுடைபங் கமுகு*" (திருவாத. திருப்பெரு. 12.)

*[பலா → பலவு]*

ஒ.நோ. நிலா → நிலவு

**பலவுறு-தல்** *pala-v-uṟu-,* 2. செ.கு.வி. (v.i.) பெருவிலை பெறுதல்; to fetch a high price. "*பலவுறு திருமணி*" (மலைபடு. 516.)

*[பல + உறு-,]*

**பலவெதுப்பு** *palaveduppu,* பெ. (n.) செரிமானக் காய்ச்சல்; digestion fever. (சா.அக.)

**பலவைநாக்கு** *palavainākku,* பெ. (n.) துடுப்பின் கடைப்பகுதி (முகவை. மீன.); the end of the oar or paddle.



**பலன்** *palaṉ,* பெ. (n.) *பலாண்டு (மலை.)* பார்க்க; see *palāṇḍu.*

*[பலாண்டு → பலண்டு → பலன்]*

**பலன்றிகாசம்** *palaṉṟikāšam,* பெ. (n.) தேயிலை; tea plant. (சா.அக.)

**பலனிகம்** *palaṉigam,* பெ. (n.) சதுரக்கள்ளி; square spurge. (சா.அக.)



**பலா¹** *palā,* பெ. (n.) பலாமரம்; jack tree. *"பலா மாவைப் பாதிரியைப் பார்"* (தனிப்பா.)

*[பல் → பலா]*

## பலாவின் வகைகள்

1. பொம்பலா,

   மறுவ: கானற்பலா, காட்டுப்பலா, ஆனைப் பலா, அயினிப்பலா.

2. தேன்பலா

   மறுவ: வேர்ப்பலா

3. புளிப்பலா
4. குரங்குப்பலா
5. ஈரப்பலா
6. செம்பலா
7. சீமைப்பலா
8. குட்டிப்பலா
9. திணிப்பலா
10. ஆசினிப்பலா

    மறுவ: சீமைப்பலா

11. கணுப்பலா
12. கறிப்பலா
13. சுரதப்பலா
14. பஞ்சொட்டிப்பலா
15. பேய்ப்பலா
16. காண்டம் பலா
17. தந்திப்பலா
18. வெடிப்பலா
19. தட்டுப்பலா
20. வருக்கைப் பலா
21. நாட்டுப் பலா
22. ஒட்டற் பலா
23. அக்கினிப் பலா
24. தலையணைப் பலா
25. சிறுபலா.

(சா.அக.)

**பலா²** *palā,* பெ. (n.) சிற்றாமுட்டி; *"அசுவகந்தி பலாலாட்சை"* (தைல.தைலவ. 26) *'பலா உத்தமம், மா மத்திமம், பாதிரி அதமம்'* (பழ.)

மறுவ: பனசம்
வருக்கை
பலா
பாகல்
பலவு

**பலாக்காய்முருகு** *palā-k-kāy-murugu,* பெ. (n.) காதணிவகை (இ.வ.); a kind of ear-ornament.

*[பலா + காய் + முருகு]*

**பலாக்கொட்டைச்சொறி** *palākkoṭṭai-c-coṟi,* பெ. (n.) சொறிவகையுள் ஒன்று – கடல்வாழ் ஒருயிரி

**பலாக்கொட்டையரம்** *palā-k-kottai-y-aram,* பெ. (n.) அரவகை (C.E.M.); pit-saw file.

*[பலாக்கொட்டை + அரம்.*

*அரம் = வன்பொருள்களை அராவும் இரும்புக்கருவி]*

**பலாங்கம்** *palāṅgam,* பெ. (n.) ஒருவகை மீன்; a kind of fish. (சா.அக.)

**பலாங்காட்சி** *palāṅkāṭci,* பெ. (n.) காட்டுக் கோங்கு; jungle cotton. (சா.அக.)

**பலாச்சவம்** *palāccavam,* பெ. (n.) அனிச்சை; snake jasmine. (சா.அக.)

**பலாச்சுளை** *palā-ccuḷai,* பெ. (n.) பலாப்பழத்தின் கொட்டையோடு கூடியதும் தனித்தனியாகப் பிரிக்கக் கூடியதுமான சதைப்பகுதி; pulp segment in jack fruit

*[பலா + சுளை]*

**பலாசம்** *palāšam,* பெ. (n.) புரசு; palastree. *"பலாசக் கோல்கையுந்தாங்கி"* (திருவிளை. நகர. 83.)

மறுவ: ஈரப்பலா. கலியாணமுருங்கை

**பலாசினி** *palāšini,* பெ. (n.) தாமரை மணி; lotus seed. (சா.அக.)

**பலாசினை** *palasiṉai,* பெ. (n.) பரக்க நடுதல்; planting with space. (மு.தா. 125.)

**பலாசேதி** *palācēdi,* பெ. (n.) கிளிமுருக்கு; thorny coral tree. (சா.அக.)

மறுவ: கலியாணமுருங்கை.

**பலாண்டு** *palāṇḍu,* பெ. (n.) ஈருள்ளி; onion. (சா.அக.)

**பலாப்பழம்** *palāppaḻam,* பெ. (n.) முட்கள் அடர்ந்த, பச்சைநிற தடித்த மேல்தோலையும் வெளிர் மஞ்சள் நிறத்தில் சுளைசுளையாக அமைந்த சதைப் பகுதியையும் கொண்ட பெரிய பழம்; jackfruit. *'பலாப்பழச் சுளையைத் தேனில் தோய்த்துத் தின்றால் சுவையும் மிகுதி; வயிற்றுக்குக் கேடும் வராது. (உ.வ.)* *'பலாப்பழத்தை ஈக்கள் மொய்ப்பது போல'* (பழ.) *'பலாப்பழத்துக்கு ஈயைப் பிடித்தா விட வேண்டும்'* (பழ.)

*[பல் → பலா]*

**பலாபலி** *palā-pali,* பெ. (n.) அமுக்கிராக் கிழங்கு; horse root.

**பலாமடக்கு** *palāmaḍakku,* பெ. (n.) சிற்றாமுட்டி; pavania zeylamicā. (சா.அக.)

**பலாவினி** *palāviṉi,* பெ. (n.) பலாவீழி; a medicinal plant. (சா.அக.)

மறுவ: விழுதி

**பலாவு** *palāvu,* பெ. (n.) *பலாமடக்கு* பார்க்க; see *palāmadakku.* (சா.அக.)

**பலாளிதம்** *palāḻidam,* பெ. (n.) நஞ்சுப்பாலை; a poisonous creeper. (சா.அக.)

**பலானவம்** *palāṉavam,* பெ. (n.) காட்டாதளை; physic nut. (சா.அக.)

**பலிக்கணம்** *palikkaṇam,* பெ. (n.) தேக்கு; teak wood tree. (சா.அக.)

**பலிகை** *paligai,* பெ. (n.) பிண்ணாக்கு; (வைத்தியபரி); oil cake

**பலிங்கிச்சான்** *paliṅgiccāṉ,* பெ. (n.) ஒரு வகைக்கடல் மீன்; a kind of see fish. (சா.அக.)



**பலினி** *paliṉi,* பெ. (n.) 1. கோங்குமரம்; silk cotton tree. 2. ஞாழல்; different herbs used in perfumes and ungeants as jasmine, cuscus root etc.

**பலுக்கினியன்** *palukkiṉiyaṉ,* பெ. (n.) ஆடவை (ஆனி), கடகம் (ஆடி), மடங்கல் (ஆவணி), கன்னி (புரட்டாசி) மாதங்களில் விதைத்து ஐந்து மாதங்களிற் பயிராகும் சம்பா நெல்வகை (இ.வ.); a kind of šambā paddy sown in Aṉi and the following three months and maturing in five months.

**பலுக்கு¹–தல்** *palukku-,* செ.கு.வி (v.i.) 1. தெளிய ஒலித்தல் உச்சரித்தல்; to be pronounced clearly *'அவன் பேசும் போது எழுத்துகள் பலுக்கப்படுகின்றன'* 2. தற்புகழ்ச்சியாகப் பேசுதல்; to boast *'என்னடி மெத்தப் பலுக்குகிறாய்'* (மதுரகவி .94) 3. பேசுதல்; to speak **"கண்பலுக்க"**( தேவா. 262,7)

தெ. பலுகு

*[பணி → பனி → பலி → பலு → பலுக்கு → பலுக்கு–,]*

**பலுக்கு²–தல்** *palukku,* 8. செ.குன்றாவி (v.t) தெளித்தல் (இ.வ); to sprinkle

*[பிலுக்கு → பலுக்கு–,]*

**பலுகடி–த்தல்** *palugaḍi-,* 4. செ.குன்றாவி (v.t.) நெருங்கி முளைத்த பயிர்களை விலக்குதற்கும், வருத்தமின்றிக் களைகட்டு தற்குமாகக் கீழ்நோக்கியுள்ள கூரிய பல முனைகளையுடைய பலகையால் உழுது பண்படுத்துதல். (புறநா. 120, குறிப்பு); to draw a harrow over a field to allow of easy weeding.

மறுவ: தாளியடித்தல்.

*[பலுகு → பலுகடி–,]*

**பலுகு¹** *palugu,* பெ. (n.) தாளியடிக்கை; harrowing.

க. ஹரகு.

**பலுகு²–தல்** *palugu,* செ.கு.வி (v.i.) *பல்கு–, (யாழ்–அக)* பார்க்க; see *palgu.*

*[பல்கு → பலுகு–,]*

**பலுகுக்கட்டை** *palugu-k-kaṭṭai,* பெ. (n.) வயலில் மண்கட்டிகளை உடைத்துச் சமப்பரப்பாக்குவதற்கான பல கொழுத்தட்டு; (இ.வ.); harrow

மறுவ. தாளியடிக்குங் கட்டை

*[பலுகு + கட்டை]*



**பலையுறுதைலம்** *palai-y-uṟu-tailam,* பெ. (n.) சிற்றாமுட்டித் தைலம்; (தைல. தைலவ. 27); a kind of herbal oil.

**பலோருகம்** *palōrugam,* பெ. (n.) *பாதிரி (மலை)* பார்க்க; see *pādiri.* trumpet flower

**பவ்வத்து** *pauvattu* பெ. (n.) *பப்பத்து*(வின்.) பார்க்க; see *pappattu.* group of tens

*[பப்பத்து → பவ்வத்து]*

**பவ்வம்**[1] *pavvam* பெ. (n.) 1. மரக்கணு(சூடா); knots in a tree 2. வெள்ளுவா(சூடா); full moon 3. பருவ காலம்; season of the year. *"நால் வகைப் பவ்வம்"* (அருங்கலச். 165)

*[பருவம் → பவ்வம்]*

**பவ்வம்**[2] *pavvam* பெ. (n.) 1. கடல்; ocean (சீவக. 508.) *"எதிரெதிர் கலாவிப் பவ்வங் கொண்டு"* 2. நீர்க்குமிழி (சூடா); water bubble 3. நுரை (வின்.); froth, foam, spume.

*[பா → பாவு → பவ்வு → பவ்வம்]*

**பவ்வாதி** *pavvādi,* வி.அ. (adv.) *பப்பாதி*(வின்.) பார்க்க; see *pappādi.*

*[பப்பாதி → பவ்வாதி]*

**பவ்வியை** *pavviyai,* பெ. (n.) ஆனைத்திப்பிலி; elephant long pepper.

**பவ்வீ** *pa-v-v-ī,* பெ. (n.) மலத்தின் இடக் கரடக் கற்பெயர் (நன் .178); faeces. a euphemistic periphrasis.

*[ப் + ஈ பீ (பவ்வீ) இடக்கரடக்கல்]*

**பவண்** *pavaṇ* பெ. (n.) கொடி (புறநா.109 உரை. பி.ம்); creeper.

**பவணந்தி முனிவர்** *pavaṇandi muṉivar* பெ. (n.) நன்னூலியற்றிய சைன முனிவர்; a jain, the author of Naṉṉūl.

(இவர் சமணமுனிவர் ஈரோடு மாவட்டம் பெருந்துறை தொடர்வண்டி நிலையத்திற்கு அண்மையிலுள்ள (சீனாபுரம்) சனகை என்பது இவர் பிறந்து வளர்ந்த ஊராகும். இவ்வூரில் ஆதிநாத தீர்த்தங்கரர் கோயில் இருக்கிறது. சமண முனிவர்கள் இன்றும் வழிபாடு செய்து வருகிறார்கள். பவணந்தி முனிவர் இலக்கிய இலக்கணப் பயிற்சியிற் சிறந்து விளங்கியவர். இவர் காலத்தில் வாழ்ந்திருந்த சீயகங்கன் என்பவன் எல்லோரும் எளிதில் உணர்ந்து கொள்ளுமாறு இலக்கண நூல் ஒன்று செய்ய வேண்டுமென்று இவரை வேண்டிக் கொள்ள இவர் நன்னூல் என்னும் இலக்கண நூலைச் செய்தார். எழுத்து சொல் என்னும் இரண்டை மட்டும் சுருக்கமாகவும் விளக்கமாகவுஞ் செய்யப்பட்ட இவருடைய நன்னூல் இன்றும் சிறப்புடன் விளங்குகிறது.)

**பவணை** *pavaṇai* பெ. (n.) கழுகு (பிங்.); eagle.

*[உவளை → உபனை → பவனை]*

**பவர்[1]–தல்** *pavar-*, 3. செ.கு.வி. (v.i.) நெருங்கியிருத்தல்; to crowd, to be dense. *"கடியமுலை நல்லார் பவரும் வடுகூர்"* (தேவா. 1007,4.)

*[அவ் → பவ் → பவர்]*

**பவர்[2]** *pavar-*, பெ. (n.) நெருக்கம்; denseness. *"பவர்சடை யந்தணன்"* (கம்பரா. வேள்வி.47.)

*[அவ் → பவ் → பவர்]*

**பவர்[3]** *pavar*, பெ. (n.) 1. பரந்திருத்தல்; pervasiveness, permeation. "*பவர் கொள் ஞானவெள்ளச் சுடர்மூர்த்தி*" (திவ். திருவாய். 2,2,6.) 2. அடர்ந்த கொடி; dense creeper. *"நறைப்பவர்"* (நற்.5.)

**பவழக்கடகம்** *pavaḻa-k-kaḍagam*, பெ. (n.) பவளத்தாற் செய்யப்பட்ட கையணிவகை (s.i.i.26.); coral bracelet

*[பவழம் + கடகம்]*

**பவழக்காசு** *pavaḻa-k-kāšu*, பெ. (n.) *பவளம்* பார்க்க; see *pavaḷam*. "*பவழக் காசொடு பன்மணி விரைஇ*" (பெருங்.இலாவாண.19,142.)

*[பவழம் + காசு]*

**பவழக்கான்மல்லிகை** *pavaḻa-k-kāṉ-malligai*, பெ. (n.) *பவளமல்லிகை (குறிஞ்சிப். 82,உரை.)* பார்க்க; see *pavaḷa-malligai*.

*[பவழம் + கால் + மல்லிகை]*

**பவழநிறச்சாத்தி** *pavaḻanira-c-cātti*, பெ. (n.) நாகதாளி; a species of Tāḷi. (சா.அக.)

**பவழத்திரி** *pavaḻa-t-tiri*, பெ. (n) பவழ மாலைஃகை (பெருங். மகத. 17, 163); a necklet made of coral.

*[பவளம் → பவழம் + திரி]*

**பவழம்[1]** *pavaḻam*, பெ. (n.) *பவளம்* பார்க்க; *"பவழம் புனைந்து பருதி சுமப்ப"* (கலித்.80.) see *pavaḷam*.

*[பவளம் → பவழம்]*

**பவழம்[2]** *pavaḻam*, பெ. (n.) அணிகலன்களில் பதிப்பதற்குப் பயன்படுத்தும் இளஞ்சிவப்பு நிறத்தில் கிடைக்கும் கடல்வாழ் உயிரினங்களின் எலும்பிலிருந்து பெறும் விலை மதிப்புடைய பொருள்; (pink or red) coral. *'பவழம் போன்ற உதடுகள்"*.

**பவழமல்லி** *pavaḻa-malli*, பெ. (n.) வெண்ணிற இதழ்களையும் சிவப்பு நிறக்காம்பையும் கொண்ட மணம் மிகுந்த சிறிய பூ; jasmine (that blooms at night)

*[பவழம் + மல்லி]*

பவழமல்லிகை *pavaḻa-malligai*, பெ. (n.) *பவளமல்லிகை (உ.வ.)* பார்க்க; see *pavaḷa-malligai*.

*[பவழம் + மல்லிகை]*

பவழவாய் *pavaḻa-vāy*, பெ. (n.) கருத்தங்கும் பை; womb. *"பவழவாய்ச் செறுவுதன்னுள்"* (சீவக.379.)

*[பவழம் + வாய்]*

**பவளஅகத்தி** *pavaḷa-agatti*, பெ. (n.) செவ்வகத்தி; sesbania grandiflora. (சா.அக.)

*[பவளம் + அகத்தி]*

**பவளக்கல்** *pavaḷa-k-kal,* பெ. (n.) கானகக்கல்; a stone with black dors. (சா.அக.)

*[பவளம் + கல்]*

**பவளக்காய் மல்லிகை** *pavaḷakkāy malligai,* பெ. (n.) பவளமல்லிகை; coral jasmine. (சா.அக.)

*[பவளக்காய் + மல்லிகை]*

**பவளக்காலி** *pavaḷa-k-kāli,* பெ. (n.) 1. சிவந்த காலுள்ள ஒரு பறவை; a kind of bird with red legs. 2. பேருமரி; coral plant. (சா.அக.)

*[பவளம் + காலி]*

**பவளக்குண்டு** *pavaḷakkuṇḍu,* பெ. (n.) 1. கடுக்காய்; gall nut 2. சாதிக்காய்; nut meg. (சா.அக.)

*[பவளம் + குண்டு]*

**பவளக்குருந்தம்** *pavaḷa-k-kurundam,* பெ. (n.) செங்குருந்து; atlantiagenus. (சா.அக.)

மறுவ. பவளக்குருந்து.

**பவளக்குற்றம்** *pavaḷa-k-kuṟṟam,* பெ. (n.) பவளத்திலுள்ள குற்றம்; blemishes in the coral. (சா.அக.)

*[பவளம் + குற்றம்]*

**பவளக்குறிஞ்சா** *pavaḷa-k-kuṟiñjā,* பெ. (n.) *பவளக் குறிஞ்சி* பார்க்க; see *pavaḷa-k-kuṟiñji.*

மறுவ: கனகாம்பரம்

*[பவளம் + குறிஞ்சா]*

**பவளக்குறிஞ்சி** *pavaḷa-k-kuṟiñji,* பெ. (n.) 1. *சீனப்பூ* பார்க்க; see *šīṉa-p-pū.* crape myrtle. 2. *மருதோன்றி* பார்க்க; see *marutōṉṟi.* henna. 3. மருதோன்றி வகை; unarmed orange nail-dye.

*[பவளம் + குறிஞ்சி]*

**பவளக்குன்றி** *pavaḷa-k-kuṉṟi,* பெ. (n.) குன்றிவகை (பதார்த்த.342); crab's eye.

*[பவளம் + குன்றி]*

**பவளக்குன்றி** *pavaḷa-k-kuṉṟi,* பெ. (n.) குன்றிமணி; jeweller's bead.

மறுவ: குண்டுமணி (இக்குன்றிமணியால் வெள்ளை, அரத்த பித்தம், ஈளை, கரப்பான் முதலிய பிணிகள் போம் (சா.அக.)

*[பவளம் + குன்றி]*

**பவளக்கொடி** *pavaḷa-k-koḍi,* பெ. (n.) 1. கடலில் வளரும் கொடிவகை; red coral, as a marine plant. "*தரளக்குவைகளும் பவளக்கொடிகளும் சுமந்து*" (தேவா.115,5.) 2. வெற்றிலை வகை (G.Sm.D.I.i.215.); a variety of betel. 3. ஓர்அரசி; a queen.

*[பவளம் + கொடி]*

**பவளக்கொடி மாலை** *pavaḷa-k-koḍi-mālai,* பெ. (n.) பவளக்கொடி என்ற அரசியின் கதைபற்றிப் புகழேந்திப் புலவர் இயற்றியதாகக் கூறப்படும் பாட்டு; a ballat on the queen Pavaḷa-k-koḍi, ascribed to Pugalēndi

*[பவளம் + கொடி + மாலை]*

**பவளக்கொம்பன்** *pavaḷa-k-kombaṉ,* பெ. (n.) பவள நிறக்கொம்புள்ள யானை (வின்.); elephant with tusks resembling coral in color.

*[பவளம் + கொம்பன்]*

**பவளங்கட்டி** *pavaḷaṅ-kaṭṭi,* பெ. (n.) பவளமாலையணியும் கொங்கு வேளாளர் வகை (E.T.vi,188.); a sub-division of koṅguvēlāḷās wearing coral necklace.

*[பவளம் + கட்டி]*

ஒ.நோ: லிங்கங்கட்டி

**பவளச்சர்க்கரைவள்ளி** *pavaḷa-c-carkkarai valli,* பெ. (n.) சிவப்புச் சர்க்கரைவள்ளி; red variety of sweet potato. (சா.அக.)

*[பவளம் + சர்க்கரைவள்ளி]*



**பவளச்செவிக்கீரை** *pavaḷa-c-cevi-k-kīrai,* பெ. (n.) எலிச்செவி; a kind of edible greens.

*[பவளம் + செவி + கீரை]*



**பவளச்சேர்க்கை** *pavaḷa-c-cērkkai,* பெ. (n.) முருங்கைக்கல்; coral polyps. (சா.அக.)

*[பவளம் + சேர்க்கை]*

**பவளச்சோளம்** *pavaḷa-c-cōḷam,* பெ. (n.) சிவப்புச் சோளம்; red miaze (சா.அக.)

*[பவளம் + சோளம்]*

**பவளத்தாவடம்** *paraḷa-t-tavaḍam,* பெ. (n.) பவளமாலை (H.C.M.); coral necklace.

*[பவளம் + தாழ்வடம் → தாவடம்]*



**பவளத்தீவு** *pavaḷa-t-tīvu,* பெ. (n.) ஒரு தீவு; (கடல் நடுத்தீவு) coral Island "*பவளத்தீவினி னுறைபவர்*" (கம்பரா. படைக்காட்.13.)

*[பவளம் + தீவு]*

**பவளத்துத்தி** *pavaḷa-t-tutti,* பெ. (n.) கற்பக மூலிகையெனக் கருதப்படும் சிவப்புத்துத்தி; red and pink abutilon. (சா.அக.)

*[பவளம் + துத்தி]*

**பவளத்துவம்** *pavaḷattuvam,* பெ. (n.) புனல்முருங்கை; Indian coral tree. (சா.அக.)

**பவளநிறம்** *pavaḷaniṟam,* பெ. (n.) பவளத்தின் ஆறுவகை நிறம்; six different colours of coral. (சா.அக.)

*[பவளம் + நிறம்]*

**பவளநீர்** *pavaḷa-nīr,* பெ. (n.) அரத்தம் (சங்.அக.); blood.

*[பவளம் + நீர்]*

**பவளநெடுங்குஞ்சியோன்** *pavaḷa-neḍuṅ-kuññiyōṉ,* பெ. (n.) வயிரவர் (வின்.); bhairava.

*[பவளம் + நெடும் + குஞ்சி + ஆன் → ஓன்]*

*ஆவோ வாதல் செய்யுளுள்ளாதலின் குஞ்சியான் குஞ்சியோ னாயிற்று*

**பவளநெய்ச்சிட்டி** *pavaḷaneycciṭṭi,* பெ. (n.) சிவப்பு நெய்ச்சிட்டி என்னும் காட்டுச்சீரகம்; wild cumin. (சா.அக.)

*[பவளம் + நெய்ச்சிட்டி]*

**பவளப்பழம்** *pavaḷa-p-paḻam,* பெ. (n.) முற்றின பவளம்; red coral.

*[பவளம் + பழம்]*

ஒ.நோ. தெங்கம்பழம், நெருஞ்சிப்பழம்.

**பவளப்பிச்சி** *pavaḷa-p-picci,* பெ. (n.)
1. *பவளக்கொடி* பார்க்க; see *pavaḷa-k-koḍi.*
2. பவளமல்லிகை; coral jasmine. (சா.அக.)

*[பவளம் + பிச்சி]*

**பவளப்புற்று** *pavaḷa-p-puṟṟu,* பெ. (n.) வைப்புச் செய்ந்நஞ்சு வகை (வின்.); a prepared arsenic, one of 32.

*[பவளம் + புற்று]*

**பவளப்பூச்சி** *pavaḷa-p-pūcci,* பெ. (n.) ஓர் வகைக் கடல் மீன் (சா.அக.); a kind of sea-fish.



**பவளப்பூண்டு** *pavaḷa-p-pūṇḍu,* பெ. (n.)
1. செடிவகை; a species of glasswort, 2. *உமரி.1* பார்க்க (வின்.); marsh samphire see *umari.*

*[பவளம் + பூண்டு]*

**பவளப்பூல்** *pavaḷa-p-pūl,* பெ. (n.) *பவளப்பூலா* (சங்.அக.) பார்க்க; see *pavaḷa-p-pūlā.*

*[பவளம் + பூல்]*

**பவளப்பூலா** *pavaḷa-p-pūlā,* பெ. (n.) *சிவப்புப்பூலா.2* (L.) பார்க்க; see *sivappu-p-pūlā* coral berry tree.

*[பவளம் + பூலா]*

**பவளபற்பம்** *pavaḷaparpam,* பெ. (n.) பவளத்தாற் செய்யப்பட்ட மிக நுண்ணிய தூள்; a white calx made of red coral.

*[பவளம் + பற்பம்]*

மறுவ: பவளப்பொடி.

**பவளபாதத்தோன்** *pavaḷapādattōṉ,* பெ. (n.) வழலைக்கட்டி; soap. (சா.அக.)

**பவளம்**[1] *pavaḷam,* பெ. (n.) ஒன்பான் மணியுள் ஒன்று; red coral, stony axis of stem of gorgonian. one of onbāṉ-maṇi. q.v. "*பவளத் தன்னமேனி*" (குறுந்.1.) "*பவளக் கொடி*" "*பவளமால் வரையினில வெறிப்பது போல்*" (திருவாத.காப்பு.)

மறுவ: துகிர், துப்பு, அரத்தம், துவர்,

*[பவளம்]*

**பவளம்**[2] *pavaḷam,* பெ. (n.) பூவழலை; menstrual blood. (சா.அக.)

**பவளம்** *pavaḷa-maṇi,* பெ. (n.) பவளத்தாலாகிய கையணி; red coral bracelet.

*[பவளம் + மணி]*

**பவளமல்லிகை** *pavaḷa-malligai,* பெ. (n.) மரவகை (L.); night-flowering jasmine.

தெ. பகடமல்லெ. க. ஹவளமல்லிகெ

*[பவளம் + மல்லிகை]*

**பவளமாலை** *pavaḷa-mālai,* பெ. (n.) பவளத்தாலான கழுத்தணி வகை (H.C.M.); coral necklace

*[பவளம் + மாலை]*

**பவளமீன்** *pavaḷa-mīṉ,* பெ. (n.) வண்ணத்துப் பூச்சிமீன் (முகவை.மீன.); butterfly fish.

*[பவளம் + மீன்]*



**பவளமுத்து** *pavaḷa-muttu,* பெ. (n.) சிவப்பு முத்து; pink pearl. (சா.அக.)

*[பவளம் + முத்து]*

**பவளமூக்கரைச்சாரணை** *pavaḷa-mūkkarai-c-cāraṇai,* பெ. (n.) சிவப்பு மூக்கரைச் சாரணை; red shaurany. (சா.அக.)

*[பவளம் + மூக்கரை + சாரணை]*



**பவளவகத்தி** *pavaḷa-v-agatti,* பெ. (n.) செவ்வகத்தி; west India sesbeane. (சா.அக.)

*[பவளம் + அகத்தி]*

**பவளவங்கசெந்தூரம்** *pavaḷavaṅgašendūram,* பெ. (n.) பவளமும் வங்கமும் சேர்ந்து செய்யப்பட்ட செந்தூரம்; calcined red of coral and tin. (சா.அக.)

*[பவளம் + வங்கம் + செந்தூரம்]*

**பவளவங்காரவாச்சி** *pavaḷa-vaṅgāra-vācci,* பெ. (n.) ஒருவகைக் கீரை; a kind of pot herb used as edible greens. (சா.அக.)

பூடுவகை (வின்.); sea-purslane.

*[பவள + வங்கார + வாச்சி]*

**பவளவடம்**[1] *pavaḷa-vaḍam,* பெ. (n.) பவழத்தாற் கட்டிய மாலை (திவ்.பெரியாழ். 1,9,2,வ்யா.); a garland made of corals.

*[பவளம் + வடம்]*

**பவளவடம்**[2] *pavaḷa-vaḍam,* பெ. (n.) பவளத்தாலான முன்கை வளை; wristlet of coral. "*மணிக்கட்டில் சாத்தின சிறுப்பவளவடமும்*" (திவ். பெரியாழ். 1, 5, 10, வ்யா.)

*[பவளம் + வடம்]*

**பவளவடிவன்** *pavaḷa-vaḍivaṉ,* பெ. (n.) முருகன் (நாமதீப.31.); Murugan, as red-complexioned.

*[பவளம் + வடிவன்]*

**பவளவல்லி** *pavaḷavalli,* பெ. (n.) செவ்வல்லி; red Indian waterlily. (சா.அக.)

*[பவளம் + வல்லி]*

**பவளவறுகு**[1] *pavaḷa-v-āṟugu,* பெ. (n.) அறுகம்புல் வகை (மூ.அ.); a kind of bermuda grass.

*[பவளம் + அறுகு]*

**மறுவ.** செவ்வறுகு. (உயிர்ப்பு வினை யிலேற்படும் சிக்கலுக்கு இச் செவ்வறுகுச் சாறு பயன்தரவல்லது.)

**பவளவாருதி** *pavaḷavārudi,* பெ. (n.) சிறுசண்பகம்; cananga of flower tree. (சா.அக.)

**பவளவாளை** *pavaḷa-vāḷai,* பெ. (n.) மீன்வகை; a kind of fish. "*பவளவாளை மூக்கன் வாளை*" (பறாளை.பள்ளு.16.)

*[பவளம் + வாளை]*



**பவளவிழா** *pavaḷa-viḻā,* பெ. (n.) எழுபத்தைந்தாம் ஆண்டின் நிறைவை ஒட்டிக்கொண்டாடப்படும் விழா; celebration marking the completion of 75th year; (in india) platinum jubilee. "*கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் ஆகியவை பவளவிழாக் கொண்டாடப்படுகின்றன*"

*[பவளம் + விழா]*

**பவளிம்பு** *pavaḷimbu,* பெ. (n.) குழந்தையைத் துயில்விக்கப்பாடும் தாலாட்டுப் பாட்டு; lullaby.

**தெ.** பல்விலிம்பு

பா →

**பவன்** *pavan,* பெ. (n.) 1 சிவபிரான்; siva. "*பவனே போற்றி*" (திருவாச.4,176.) 2. கடவுள் (பிங்); God. as self-existent. 3. புதிதாய் உண்டாவது; that which just comes into being, as a bud. "*பவனாயிருப்பதொரு ஆலந்தளிர்*" (ஈடு,2,2,7.)

*[பவம் → பவன்]*

**பவன்** *pavan,* பெ. (n.) உருத்திரரு ளொருவர் (துக்கயாகப். 443, உரை.); a Rudra

*[பவம் → பவனம் + சக்கரம்]*

**பவனசக்கரம்** *pavana-šakkaram,* பெ. (n.) ஓரைச்சக்கரம் (வின்.); zodiac.

*[பவம் → பவனம் + சக்கரம்]*

**பவனசம்** *pavanašam,* பெ. (n.) *பவனாசனம்* பார்க்க; see *pavanāšanam.* '*பவனசகுலம்*' (பாரத. பதினாறாம்.23.)

*[பவனம் + ஆசனம் → பவனசம்]*

**பவனம்**[1] *pavanam,* பெ. (n.) 1. பவமானன் (பிங்.) பார்க்க; "*பாரகந்திருவடியாப்பவனம் மெய்யா*" (திவ்.பெரியதி.6,6,3.) 2. நெல்முதலியன தூற்றுகை (வின்.); winnowing, as grain.

**பவனம்**[2] *pavanam,* பெ. (n.) 1. வீடு (பிங்.); house, dwelling, abode "*பாலறிமாக்கடம் பவனம்*" (திருவாலவா. நகர.8.) 2. அரண்மனை; palace, castle. "*பருமணிப் பவனத் தெய்தினான்*" (இரகு.இரகுவு.30.) 3. நிலம் (பிங்.); earth. 4. உலகப்பொது; world 5. ஓரை (பிங்.); zodiacal sign. 6. நாகலோகம் (சூடா.); nether world of the nāgās 7. பாம்பு (திவ்.); serpent. 8. துறக்கம்; indrais heaven. "*பவனமிச் சடங்கொண் டேகி*" (உபதேசகா. உருத்திராக்.89.) 9. விமானம்; chariot; celestial car. "*சென்றுதன் பவனம் புக்கான்*" (மேருமந்.204.) 10. பூனை (திவா.); cat.

**பவனம்**[3] *pavanam,* பெ. (n.) ஓரைச்சக்கரக் குறி; zodiacal sign; "*சங்கரனூர்தி நாமந்தங்கிய பவனந்தன்னில்*" (சேதுபு.இராமனுரு.8.8.)

மறுவ: அரத்தை.

**பவனவாசல்** *pavana-vāsal,* பெ. (n.) *பவனவாய்*(வின்.) பார்க்க; see *bavanavāy.*

*[பவனம் + வாசல்]*

**பவனவாய்** *pavana-vāy,* பெ. (n.) எருவாய் (வின்.); anus, fundament, as passage for wind (w.)

*[பவனம் + வாய்]*

**பவனவெளிச்செவி** *pavana-veli-c-cevi,* பெ. (n.) சிவப்பு எலிச்செவிக்கீரை; a red variety of rat ear plant.

**பவனன்** *pavanan,* பெ. (n.) *பவமானன்* பார்க்க; see *pavamānan.* '*பவனனிற்றிரிகுறர்*' (கம்பரா. தாடகை41.)

*[பவமானன் → பவனன்]*

**பவனிக்குடை** *pavani-k-kudai,* பெ. (n.) அரசன் உலாவருகையிற் பிடிக்குங் குடை (சீவக. 2369, உரை); umbrella held over a king in stabe procession.

*[பவனி + குடை]*

**பவனிபோ—தல்** *pavaṉi-pō-,* செ.கு.வி. (v.i.) *பவனிவா—,* பார்க்க; see *pavaṉivarutal.*

*[பவனி + போ + தல்]*

**பவனிவா—தல் (பவனி வருதல்)** *pavaṉi-vā-*, 18. செ.கு.வி. (v.i.) உலாவருதல்; to parade, go in procession; to ride in state.

*[பவனி + வா—, (வருதல்)]*

**பவாசிவித்து** *pavāši-vittu,* பெ. (n.) கார்போகவரிசி; scrufy pea, psoralla.

**பவானி**[1] *pavāṉi,* பெ. (n.) 1. உமாதேவி (பிங்.); parvati. 2. காவிரியிற் கலப்பதோர் கிளையாறு; a tributary of the kāvēri.

**பவானி**[2] *pavāṉi,* பெ. (n.) 1. கொற்றவை; Durga. "*பவானியடி சிந்தனையில் வந்தனை செய்தே*" (சிவரக. தாருக. 12) 2. உமையவள்; parvati. '*'பவானி முதலாப்புகறுந்தனி நாமங்கள் செப்பி*' (சிவரக. கணபதியுடன் கடவு. 7)

**பவி**[1]**—த்தல்** *pavi-,* 4. செ.கு.வி. (v.i.) உண்டாதல்; to be realised happen. "*யாவும் பவிக்கும் நின்னிடத்தே*" (திருக்காளத். 4, காளன். 52)

**பவி**[2] *pavi,* பெ. (n.) இடியேறு (வின்.); thunderbolt, weapon of indra.

**பவிகம்** *pavigam,* பெ. (n.) சிறப்பு (யாழ்.அக.); good, merit;

**பவிசு**[2] *pavišu,* பெ. (n.) (பே.வ.) (திடீரென்று வரும்) மேல்நிலை; தகுதி; status (newly acquired.) "*அவனுக்குப் பவிசு வந்து விட்டது, அதனால்தான் இப்படி எல்லாம் ஆடுகிறான்*".

**பவிடிய புராணம்** *pavidiya-purāṇam,* பெ. (n.) பதினெண் தொன்மத்தொன்று; one of patiṉeṇ-purāṇam, q.v.

*[பவிடியம் + புராணம்]*

**பவித்திரமாலை** *pavittira-mālai,* பெ. (n.) பட்டால் அல்லது நூலால் முடிப்புக்களுடன் செய்யப்பட்ட மாலை வகை; necklace of silk or cotton thread knotted in a special way.

*[பவித்திரம் + மாலை]*

**பவித்திரமுடிச்சு** *pavittira-mudiccu,* பெ. (n.) மகளிர்கூந்தலின் முடிப்பு வகை (இ.வ.); a kind of knot in which the hairtuft is tied.

*[பவித்திரம் + முடிச்சு]*

**பவித்திரவிரல்** *pavittira viral,* பெ. (n.) முத்திரை விரல் (கொ.வ.); the ring finger on which is worn the pavittiram.

*[பவித்திரம் + விரல்]*

**பவித்திரன்** *pavittiraṉ,* பெ. (n.) தூயவன்; consecrated or sacred person; pure, holy man. "*நீண்முடி கவித்தனன் பவித்திரற் றொழுதே*" (சீவக. 2366.)

*[பவித்திரம் → பவித்திரன்]*

**பவிதம்** *pavidam*, பெ. (n.) மிளகு (வைத்தியபரி.); pepper.

**பவியம்** *paviyam*, பெ. (n.) *உகா* பார்க்க; see *ugā*. a kind of tree.

**பவினி** *pavini*, பெ. (n.) நாணல்; (வைத்தியபரி.); reed.

**பவுண்டிற்கம்** *pavuṇḍirgam*, பெ. (n.) கரும்பு; sugar-cane.

**பவுத்துவம்** *pavuttuvam*, பெ. (n.) மரகதம்; (வைத்தியபரி.); emerald.

**பவுரி** *pavuri*, பெ. (n.) கூத்தின் விகற்பம்; *"பதியாயிருந்த தேகப்பவுரிகுலையாமலே"* (தாயு. சித்தாக. 4.)

**பழக்கங்காட்டு–தல்** *palakkaṅ-kāṭṭu-*, 9. செ.கு.வி. (v.i.) தீயொழுக்கத்தை வெளிப் படுத்துதல் (வின்.); to betray bad habits.

*[பழக்கம் + காட்டு–,]*

**பழக்கம்[1]** *palakkam*, பெ. (n.) 1. பயிற்சி; initiation, training, exercise, use. *"பழக்கமோ டர்ச்சித்த மாணி"* (தேவா. 542, 5.) 2. வழக்கம்; habit, practice, custom. திருமணத்தில் நலங்கு வைப்பது வழக்கம். 3. அறிமுகம்; conversation, intimacy, intercourse, acquaintance, association. 4. ஒழுக்கம் (வின்.); manners, behaviour. 5. திறமை; expertness, cleverness, dexterity acquired by practice. 6. அமைதிக் குணம் (வின்.); tameness; domestication.

*[பழகு → பழக்கம்]*

**பழக்கம்பண்ணல்** *palakkam paṇṇal*, பெ. (n.) ஒன்றை இடையறாது பயிலல்; practising. (சா.அக.)

*[பழக்கம் + பண்ணல்]*

**பழக்காடி** *palakkāḍi*, பெ. (n.) பழச்சாறி லிறக்கிய காடி; fermented fruit juice like wine. (சா.அக.)

*[பழம் + காடி]*

**பழக்கவழக்கம்** *palakka-valakkam*, பெ. (n.) தொடர்ந்து பின்பற்றப்பட்டு வரும் செயல் முறை; நடைமுறை; costoms and habits. *"ஒவ்வொரு நாட்டுக்கும் தனித்தனியான பழக்க வழக்கங்கள் உள்ளன", "அவருடைய பழக்கவழக்கங்களெல்லாம் சற்று வேறுபாடு டையனவாய் இருக்கும்"*

*[பழக்கம் + வழக்கம்]*

**பழக்கமுடையார்** *palakkam-uḍaiyār*, பெ. (n.) சிற்றூர்த் தெய்வம்; a village deity.

*[பழக்கம் + உடையார்]*

**பழக்காய்** *pala-k-kāy*, பெ. (n.) செங்காய் (உ.வ.); fruit, nearly ripe.

*[பழம் + காய்]*

**பழக்கு[1]–தல்** *palakku-*, 8. செ.குன்றாவி. (v.t.) 1. பழகச் செய்தல்; to train, domesticate. 2. பழக்கம் ஏற்படும்படி செய்தல்; make a habit of (sth.); habituate (oneself to sth.) *"குழந்தையை எப்போதும் தூக்கிக் கொண்டு போய் பழக்கிவிட்டு, இப்போது நடக்கச் சொன்னால், அழுகிறான்", "காலையில் எழுந்ததும் தேநீர் கொடுத்துப் பழக்காதே"*

க. பழக்கிசு

*[பழக்கம் → பழக்கு–,]*

**பழகாடி** *palagādi,* பெ. (n.) பட்டறிவுடையவன் (யாழ்ப்.); person initiated or trained.

*[பழகு + ஆள் → பழகாள் → பழகாளி → பழகாடி]*

**பழகாத பழக்கம்** *palagādapalakkam,* பெ. (n.) கெட்ட பழக்கம்; bad habits. (சா.அக.)

*[பழகாத + பழக்கம்]*

**பழகினமுகம்** *palagina-mugam,* பெ. (n.) அறிந்த முகம்; familiar face.

*[பழகின + முகம்]*

**பழகு[1]–தல்** *palagu-,* செ.கு.வி. (v.i.) **1.** பயிலுதல்; to practise, to become initiated; to be used; to be habituated. *"பழகு நான் மறையின் பொருளாய்"* (திவ். நாய்ச். **4, 10.**) **2.** உறவு கொள்ளுதல்; to become acquainted, to be familiar. **3.** பதப்படுதல் (வின்.); to become fitted, tempered, wholesome, as a utensil or tool. **4.** சாதுவாதல்; to become broken or trained, as an animal; to be tamed, as a savage (w.) **6.** இணக்கமாதல்; to agree, as a house, village, etc. *'ஊர் உடம்புக்குப் பழகி விட்டது'* **6.** ஊடாடுதல் (வின்.); to be customary, familiar. **7.** நாட்படுதல் (இ.வ.); to be old. 'பழகப்பழகப் பாலும் புளிக்கும்' (பழ.)

*[பழகு → பழகு–,]*

**பழகு[2]–தல்** *palagu-,* செ.குன்றாவி. (v.t.) *பள்கு* (Mss.) பார்க்க; see *palgu-,*

**பழங்கண்** *palaṅ-kaṇ,* பெ. (n.) **1.** துன்பம்; distress, affliction, sorrow, vexation. *"பகைவ ராரப் பழங்கண் ணருளி"* (பதிற்றுப். **37, 3.**) *"முனிவிரிமையவர் தம்பழங்கணீங்க"* (சிவராத். கடவுள். **8.**) **2.** மெலிவு (பிங்.); loss of strength, or power, weariness, lassitude emaciation. thinness. **3.** ஒலி (சூடா.); sound.

*[பழ–மை + கண் → பழங்கண்]*

**பழங்கண்ணோட்டம்** *pala-ṅ-kaṇṇōṭṭam,* பெ. (n.) நெடுநாட் பழக்கத்தால் நிகழும் இரக்கம் (குறள். **1292,** உரை.); sympathy felt on account of old and long acquaintance.

*[பழ–மை + கண்ணோட்டம்]*

**பழங்கணக்கு** *pala-ṅ-kaṇakku,* பெ. (n.) **1.** பழைய கணக்கு; old account, account previously settled. **2.** சென்று கழிந்த செய்தி; something obsolete. *"அந்தப் பழங் கணக்கினைப் பார்ப்பதி லென்னே"* (அருட்பா. ii, கொடிவண். **6.**)

*[பழ–மை + கணக்கு]*

**பழங்கணாளர்** *palaṅgaṇ-āḷar,* பெ. (n.) துன்புற்றோர்; distressed persons.

*[பழங்கண் + ஆள் + அர்]*

**பழங்கதை** *pala-ṅ-kadai,* பெ. (n.) **1.** முன் வரலாறு; story of ancient times. **2.** மறந்த செய்தி; a past event, long forgotton. **3.** *பழங்காதை* பார்க்க; see *pala-ṅ-kādai.*

*[பழ–மை + கதை]*

**பழங்கந்தை** *pala-ṅ-kandai,* பெ. (n.) கிழிந்த துணி; worn-out rags, tatters.

*[பழ–மை + கந்தை]*

**பழங்கலம்** *pala-ṅ-kalam,* பெ. (n.) ஆண்ட பாத்திரம் (வின்.); used or old vessel.

*[பழ—மை + கலம்]*

**பழங்கள்** *pala-ṅ-kaḷ,* பெ. (n.) விளைந்து புளித்த கள்; old liquor matured with keeping. *'விளைத்த பழங்க ளனைத்தாய்'* (பு.வெ. 1. 2, இருபாற். 14.)

*[பழ—மை + கள்]*

**பழங்கறி** *pala-ṅ-kari,* பெ. (n.) முதனாட் சமைத்து மிஞ்சியதை மறுநாள் பயன் கொள்ளுதற்கேதுவாய்ப் பக்குவப்படுத்திய கறி (இ.வ.); remnant of relishes rehashed and preserved

*[பழ—மை + கறி]*

**பழங்காசு** *pala-ṅ-kāśu,* பெ. (n.) பண்டை நாளில் வழங்கிய நாணயவகை (I.M.P.Rd. 21.); a coin of ancient times.

*[பழ—மை + காசு]*

**பழங்காடி** *pala-ṅ-kāḍi,* பெ. (n.) மிகப் புளித்த காடி; sour vinegar.

*[பழ—மை + காடி]*

**பழங்காதை** *pala-ṅ-kādai,* பெ. (n.) தொன்மம்; purāṇa, as an old stroy. *"பழங்காதை மூவாறினுள்"* (சேதுபு. அவைய. 3.)

*[பழ—மை + காதை]*

**பழங்காய்** *palaṅgāy,* பெ. (n.) வேம்பு; margosa fruit. (சா.அக.)

**பழங்காய்ச்சல்** *pala-ṅ-kāyccal,* பெ. (n.) நாட்பட்டசுரம்; long continued fever.

**பழங்கிடையன்** *pala-ṅ-kiḍaiyaṉ,* பெ. (n.) கட்டுக்கிடைப் பண்டம் (யாழ்ப்.); old commodities, goods lying long unsold.

*[பழ—மை + கிடையன்]*

**பழங்கிணறு** *pala-ṅ-kiṇaṟu,* பெ. (n.) பாழான கிணறு (இ.வ.); unused well.

மறுவ. பா(ழு)ங்கிணறு (கொ.வ.)

*[பழ—மை + கிணறு]*

**பழங்கிணறு தூர்வாங்கு—தல்** *palaṅ-kiṇaṟu tūr-vāṅgu-,* 5. செ.கு.வி. (v.i.) மறந்துபோன செய்திகளை நினைப்பூட்டிப் பேசுதல் (இ.வ.); to talk about old and forgotten things

*[பழ—மை + கிணறு + தூர்வாங்கு—,]*

**பழங்குடி[1]** *pala-ṅ-kuḍi,* பெ. (n.) பழமையான குடி; ancient family. *"பதியெழு லறியாப் பழங்குடி"* (மலைபடு. 479.)

*[பழைமை + குடி]*

**பழங்குடி[2]** *pala-ṅ-kuḍi,* பெ. (n.) ஒரே வகையான, பழமையான வாழ்க்கை முறையைப் பின்பற்றி ஓர் இடத்தில் காலம் காலமாக வாழும் குமுகாயத்தினர்; tribe; tribal people. *"பழங்குடி மக்கள்" "பழங்குடியினரின் வாழ்க்கை முறை, உணவு, உடை, பழக்க வழக்கங்கள் முதலியவற்றில் கட்டுப்பாட்டோடு வாழ்ந்து வந்தனர்".*

*[பழம் + குடி]*

**பழங்குடி[3]** *pala-ṅ-kudi,* பெ. (n.) தொன்று தொட்டு மேம்பட்டு வருகின்ற குடியின் கட்பிறந்தவர்; the in heritor of the great ancient family. "*வழங்குவதுள் வீழ்ந்தக்கண்ணும் பழங்குடி பண்பிற்றலைப் பிரிதலின்று*". (திருக்.955.)

**பழசு** *palašu,* பெ. (n.) நாட்பட்டது; that which is old or damaged by time. "*தேன் அல்பழுமாய்ப் பழசுமாயிருக்கும்*" (திவ். திருநெடுந், 26,வியா,226.)

க. பழசு

*[பழமை → பழசு]*

**பழசுபடு—தல்** *palašupadu-,* 20. செ.கு.வி 1. வலிமைகுன்றுதல்; losing in essence becoming stale. 2. பழையதாதல்; becoming old by losing its freshness. (சா.அக.)

*[பழசு + படுதல்]*

**பழஞ்சரக்கு** *palañ-carakku,* பெ. (n.) 1. பழங்கிடையன் பார்க்க; see *pala-ṅ-kidaiyan* 2. துய்ப்பு; karma of past births whose effect has begun to operate. "*வறிதே தீயப் பழஞ்சரக்கும்*" (மதுரைப்.49.)

*[பழமை + சரக்கு]*

**பழஞ்சலாகையச்சு** *pala-ñ-calāgai-y-accu,* பெ. (n.) பழைய காசு வகை(s.i.i.v,91.); a kind of old coin.

*[பழமை + சலாகை + அச்சு]*

சலாகை = skt.

**பழஞ்சாதம்** *pala-ñ-cādam,* பெ. (n.) பார்க்க, பழஞ்சோறு, see pala-ñ-cōṟu.

*[பழம் + சாதம்]*

சாதம் = skt.

**பழஞ்சி** *palañgi,* பெ. (n.) *பழஞ்சோறு (நெல்லை)* பார்க்க; see *pala-ñ-cōṟu.*

*[பழங்கஞ்சி → பழஞ்சி]*

**பழஞ்சிட்டம்** *palañcittam,* பெ. (n.) பழைய சிட்டக்கல்; old overburnt brick. (சா.அக.)

*[பழம் + சிட்டம்]*

**பழஞ்சீலை** *palañcīlai,* பெ. (n.) பழையதுணி; old cloth. (சா.அக.)

*[பழம் + சீலை]*

**பழஞ்சுரத்துக்கட்டி** *palañcurattu-k-katti,* பெ. (n.) மண்ணீரல் வீக்கம்; spleen enlarged due to fever. (சா.அக.)

*[பழம் + சுரம் + அத்து + கட்டி]*

**பழஞ்செய்க்கடன்** *palañ-cey-k-kadan,* பெ. (n.) நிலவரி நிலுவை; unpaid balance of land revenue, "பழஞ்செய்க்கடன் வீடு கொண்டது" (புறம்,35உரை.)

*[பழம் + செய் + கடன்]*

**பழஞ்செருக்கு** *pala-ñ-cerukku,* பெ. (n.) மிகுந்த குடிவெறி; inebriety, intoxication. "*பழஞ்செருக்குற்ற வனந்தர்ப்பாணியும்*" (மணிமே.7,72.)

*[பழம் + செருக்கு]*

**பழஞ்சொல்** *pala-ñ-col,* பெ. (n.) பழமொழி (சூடா.); proverb, maxim. "அங்கு அப்பழஞ்சொல் புதுக்கும் எம்அச்சத்தால்" (திருவாச.7:19,2)

*[பழம் + சொல்]*

**பழஞ்சோற்றுத்தண்ணீர்** *pala-ñ-cōrru-t-tannir,* பெ. (n.) நீராகாரம் (யாழ்ப்.); water strained from cold rice kept from overnight (j.)

*[பழம் + சோற்று + தண்ணீர்]*

**பழஞ்சோறு** *pala-ñ-cōru,* பெ. (n.) பழைய சோறு; boiled rice preserved in water and kept overnight. "*பழஞ்சோற்றுப் புகவருந்தி*" (புறநா.395.) "*பழஞ்சோறும் வெங்காயமும் வேளாண் மக்களின் காலை உணவு*"

*[பழம் + சோறு]*

**பழந்தக்கராகம்** *pala-n-takka-rāgam,* பெ. (n.) ஒருவகைப் பழைய பண் (பிங்.); (mus.) an ancient melody-type.

*[அராகம் → ராகம் =skt.]*

*[பழம் + தக்கராகம்]*

**பழந்தண்டுலம்** *palantandulam,* பெ. (n.) பழைய அரிசி; stocked rice. (சா.அக.)

*[பழம் + தண்டுலம்]*

**பழந்தண்ணீர்** *pal-ñ-tannir,* பெ. (n.) சோற்றுநீர் (நீராகாரம்) (உ.வ); water allowed to stand overnight on cooked rice.

*[பழம் + தண்ணீர்]*

**பழந்தரை** *pala-ñ-tarai,* பெ. (n.) நெடுங்கால வேளாண்மையால் செழிப்பிழந்த நிலம்; land grown less fertile on account of long cultivation (w.)

*[பழம் + தரை]*

**பழந்தின்னிவவ்வால்** *palan-tinni-vavvāl,* பெ. (n.) வவ்வால் வகை; flying fox, as a frugivovous bat.

*[பழந்தின்னி + வௌவால்]*

**பழந்துட்டு** *pala-n-tuttu,* பெ. (n.) காலணா மதிப்புக் கொண்ட பழைய காசுவகை; (இ.வ) an old coin = 3 pies,

*[பழம் + துட்டு]*

**பழந்தேன்** *palan-tēn,* பெ. (n.) நாட்பட்டதேன்; old and long kept honey. (சா.அக.)

*[பழம் + தேன்]*

**பழநடை** *pala-nadai,* பெ. (n.) வழக்கம்; custom. "*பழநடைசெய் மந்திரவிதியிற் பூசனை*" (திவ்.பெரியதி.2,3,4.)

*[பழம் + நடை]*

**பழநி** *palani,* பெ. (n.) திண்டுக்கல் மாவட்டத்தில் முருகக்கடவுள் கோயில் கொண்டிருக்கும் திருவாவினன்குடி என்னும் இடம்; a murugan shrine in Dindugal district.

*[பொதினி → பழனி]*

**பழப்பாக்கு** *pala-p-pākku,* பெ. (n.) முதிர்ந்த பாக்கு(வின்); ripe areca nut.

*[பழம் + பாக்கு]*

**பழப்பாசம்** *palappāšam,* பெ. (n.) கருஞ்சீரகம் (மலை.); black cumin.

**பழப்புளி** *pala-p-puli,* பெ. (n.) புளியம்பழவுருண்டை(வின்); tamarind pulp formed into balls.

*[பழம் + புளி]*

**பழப்பேசி** *palappēši,* பெ. (n.) கீழ்நோக்கி வளரும் மூலிகை வகை; prostrate herb. சிறுநெருஞ்சி பார்க்க; see ciruneruñci.

**பழபடையாதி** *palapaḍaiyādi,* பெ. (n.) எட்டிமரம்; vomica tree. (சா.அக.)

**பழம்**[1] *palam,* பெ. (n.) 1. கனி; fruit, ripe fruit. "காயே பழமே" (தொல். பொ. 643.). "*பழச்சுவையினானை*" (திருவாச.திருப்போற்.15.) 2. அகவை முதிர்ந்தோன்; very aged person. 3. நற்பயன்; fruitfulness, success. 4. ஆட்டக்கெலிப்பு; winning points, as in a game of tick-tack. 5. முக்கால்; three quarters. ஆறுதற்பழம், இணங்கற்பழம் cant.

*[பழு → பழம்]*

'*பழம் பழுத்தால் கொம்பில் தங்காது*' (பழ.)

'*பழத்திலே பழம் மிளகாய்ப் பழம்*' (பழ.)

'*பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல*' (பழ.)

'*பழம்புண்ணாளி பாதி மருத்துவன்*' (பழ.)

மறுவ; பலம், கனி, பழம்.

**பழம்**[2] *palam,* பெ.அ (adj.) முந்திய; கடந்தகால; பழைய; ancient; old; olden (days) "*சோழர் காலத்துப் பழங்காசுகள் கிடைத்தன*" "*பழங்காலத்துக் கதைகள்*"

**பழம்பகை** *palam-pagai,* பெ. (n.) நெடுங்காலப் பகைமை; inveterate hatred. "*பழம்பகை நட்பாதலில்*" (பழ.97.) 2. மனவயிரம்; cherished enmity. 3. இயற்கைப்பகை; natural enmity, as between cat and rat.

*[பழம் + பகை]*

**பழம்பஞ்சாங்கம்** *pala-m-pañjāngam,* பெ. (n.) 1. பழைய கதை; old tale. 2. பண்டைக்காலத்து வழக்கவொழுக்கத்தை யுடையவ–ன்–ள்; old fashioned person.

*[பழம் + பஞ்சாங்கம்]*

பஞ்சாங்கம் = skt.

**பழம்பஞ்சாரம்** *pala-m-pañjāram,* பெ. (n.) 1. நாட்பட்டது; that which is very old, as a bullock, a horse, a garment. 2. அகவை முதிர்ந்தோன்; a very old person.

*[பழம் + பஞ்சாரம்]*

*பஞ்சாங்கம் → பஞ்சாரம்*

**பழம்பஞ்சு** *palampañju,* பெ. (n.) உருளைக் கிழங்கு; common potato (சா.அக.)

**பழம்பஞ்சுரம்** *pala-m-pañjuram,* பெ. (n.) குறிஞ்சிப்பண்வகை (பிங்.) a secondary melody-type of the kuriñji class.

*[பழம் + பஞ்சுரம்]*

**பழம்படி** *pala-m-paḍi,* து.வி. (adv) முன்போல; as formerly, as before. "*பழம்படியே தசமுகனை விட்டார்*" (தக்கயாகப்.226.)

*[பழையபடு → பழம்படி]*

**பழம்பாக்கு வாங்கு–தல்** *palam-pākku-vāngu-,* 7. செ.கு.வி. (v.i.) திருமணம் உறுதிசெய்தல்(இ.வ.); to settle a marriage as by exchange of fruits and arecanuts between the parents of the bride and the bridegroom.

*[பழம் + பாக்கு + வாங்கு–,]*

**பழம்பாசகம்** *palam-pāšagam,* பெ. (n.) கருஞ்சீரகம்; black cumin.

**பழம்பாசி** *pala-m-pāši,* பெ. (n.) 1. *கொட்டைப்பாசி (மூ.அ)* பார்க்க; a kind of mass. 2. *வெதுப்படக்கி* பார்க்க; (M.M 669) a soft wolly plant.

மறுவ: கோரைப்பாசி, கொடிப்பாசி

*[பழம் + பாசி]*

**பழம்பாடம்** *pala-m-pādam,* பெ. (n.) 1. முன்படித்த பாடம்; old lesson. 2. நன்கு நினைவுடன் திருப்பிச்சொல்லக் கூடிய பாடம்; any lesson which one can recite easily.

*[பழம் + பாடம்]*

**பழம்பிசின்** *palampišin,* பெ. (n.) சாலாம்பிசின்; oriental salep. (சா.அக.)

**பழம்புண்ணாளி** *pala-m-punnāli,* பெ. (n.) அழுந்தியறிந்தவன்; experienced man, as one who has long suffered the ills of life. *"பழம்புண்ணாளி பரிகாரி"*

*[பழம் + புண்ணாளி]*

**பழம்புள்ளிமாடை** *palam-pullimādai,* பெ. (n.) பழைய நாணயவகை (S.I.I.291); an ancient coin.

*[பழம் + புள்ளி + மாடை]*

**பழம்புளி** *palampuli,* பெ. (n.) 1. கொறுக்காய்ப்புளி; 2. பத்தியத்திற்குதவும் பழம்புளி; old tamarind, useful in diet. 3. தலைப்பிண்டத்து மூளை; referring to the brain of the first born foetus technical term used in alchemy. (சா.அக.)

*[பழம் + புளி]*

**பழம்பெருச்சாளி** *pala-m-peruccāli,* பெ. (n.) அழுந்தியறிந்த தந்திரசாலி; (Lit., old bandicoot) (பழமையான பெருச்சாளி; man of much experience and artfulness, used in contempt. (கொ.வ.) *"அரசியலில் பழம் பெருச்சாளிகள் இளைஞர்களுக்கு வாய்ப்பு கொடுக்க வேண்டும்"*

*[பழம் + பெருச்சாளி]*

**பழம்பெரும்** *pala-m-perum,* பெ.அ. (adj.) வயது நிறைந்து அனுபவம் மிகுந்த; veteran. *"பழம்பெரும் அரசியல்வாதி"*.

*[பழம் + பெரும்]*

**பழம்பொருள்** *pala-m-porul,* பெ. (n.) 1. கடவுள்; *"முப்பொருளாம் பழம் பொருள்"* (சிவரக.கணபதிவந்தனை.25.) 2. புதையல்; hidden treasure. 3. பழையபொருள்; an anciant thing.

*[பழம் + பொருள்]*

**பழம்போக்கு** *pala-m-pōkku,* பெ. (n.) பழைய முறை(வின்); ancient or antiquated style.

*[பழம் + போக்கு]*

**பழம் விடு—தல்** *pala-m-vitu-,* 20. செ.கு.வி (v.i.) சிறுவர்கள் சண்டைக்குப்பின் மீண்டும் நட்புக்கொள்ளுதல்; (of children) restore friendship. *"அண்ணனை என்னோடு பழம் விடச் சொல் – என்று அம்மாவிடம் கெஞ்சினான்"*

*[பழம் + விடு]*

**பழமண்ணிப் படிக்கரை** *palamaṇṇi-p-padikkarai,* பெ. (n.) இலுப்பைப்பட்டு என்னும் தஞ்சை மாவட்டச் சிற்றூர்; தேவாரம் பெற்ற தலம்; a place name of Tanjore Dt., "*விடுத்தவன் கைநரம்பால் வேதகீதங்கள் பாடவறப்படுத்தவன் பால் வெண்ணீற்றன்பழ மண்ணிப்படிக்கரையே*" –22–7.

**பழமலையந்தாதி** *pala-malai-y-andādi,* பெ. (n.) திருமுதுகுன்றத்திற் கோயில் கொண்டுள்ள சிவபெருமான் மீது சிவப்பிரகாசஅடிகள் இயற்றிய ஈறு தொடங்கி (அந்தாதி); an andādi poem on šiva at pala-malai or viruttācalam by šivappirakāša-šuvāmigaļ

*[பழமலை + அந்தாதி]*

**பழமனை** *pala-manai,* பெ.(n.) இடிந்து பாழான வீடு. (யாழ். அக.); ruined house.

*[பழம் + மனை]*

**பழமா** *pala-mā,* பெ. (n.) தேமா (மலைபடு.138,உரை.); sweet mango.

*[பழம் + மா]*

**பழமுண்ணிப்பாலை** *palam-uṇṇi-p-pālai,* பெ. (n.) மரவகை; silvery leaved ape-flower.

*[பழம் + உண்ணி + பாலை]*

**பழமுதல் கண்காணி** *pala-mudalkaṇkāṇi,* பெ. (n.) கோயில் மேற்பார்வையாளன் (M.E.R.I of 1921); temple supervisor.

*[பழம் + முதல் + கண்காணி]*

**பழமுதிர்சோலை** *palamudir-cōlai,* பெ. (n.) முருகக்கடவுளின் படைவீடு ஆறனுள் ஒன்று. (திருமுரு.317.); a shrine sacred to murugan one of six padai-vidu.

*[பழம் + முதிர் + சோலை]*

**பழமுந்தினவெட்டு** *pala-m-mundina-vettu,* பெ. (n.) பழைய காசுவகை (பணவிடு. 141); an ancient coin.

*[பழம் + முந்து + வெட்டு]*

**பழமெடு–த்தல்** *palam-edu-,* 3. செ.கு.வி. (v.i.) 1. ஆட்டங்கெலித்தல்; to win in dice or tick-tack 2. பழத்தைப் பறித்தல் (அகநா.18,உரை) to Pluck the fruits.

*[பழம் + எடுத்தல்]*

**பழமை** *palamai,* பெ. (n.) 1. தொன்மை; oldness, ancientnes, antiquity. 'பழமையான சிற்பங்கள் அரசு அருங்காட்சியகத்தில் பார்வைக்குள்ளன.' 2. தொன்மையானது; that which is ancient, as a place; that which is antiquated or old fashioned. "*பரமர் பழமை யெனலாம்....... மயிலாடுதுறை*" (தேவா. 496, 5.) 3. வழங்காதொழிந்தது; what is obsolete (w.) 4. சாரமின்மை; staleness, vapidness, insipidity. 5. முதுமொழி (சூடா.); old saying, proverb. 6. நெடுநாட்பழக்கம்; long established intimacy. 7. நாட்பட்டதால் ஏற்படுஞ்சிதைவு; decay from age. 8. பழங் கதை; ancient history; chronicle. 9. மரபு; long established usage or custom. (w.)

*[பழைமை → பழமை]*

**பழமை பாராட்டு—தல்** *palamai-pārāṭṭu-*, 5. செ.கு.வி. (v.i.) நெடுநாளாக உள்ள பெரும் பழக்கத்தைத் தெரிவித்தல்; to dwell fondly on one's long acquaintace. *"நன்மொழிகள் பேசிப் பழமை பாராட்டி"* (கொக்கோ.) "பற்றற்ற கண்ணும் பழைமைபாராட்டுதல் சுற்றத்தார் கண்ணே யுள." (திருக். 521)

*[பழைமை + பாராட்டு–,]*

**பழமைவாதி** *palamai vāti*, பெ. (n.) பழமை யானது சிறந்தது என்ற கொள்கை உடையர்; பழமைக்குச் சார்பானவர்; conservative. *"பழமைவாதிகளின் நல்ல பட்டறிவுகளைக் கேட்டறிந்தாலோ அல்லது புத்தக வடிவில் படித்துத் தெரிந்தாலோ அவற்றைக் கடைப்பிடித்து வாழவேண்டும்"*

*[பழமை + வாதி]*

வாதி = skt.

**பழமொழி[1]** *pala-moli*, பெ. (n.) 1. முதுசொல்; மக்களிடையே நீண்டகாலமாக வழங்கிவருவதும், பேச்சு வழக்கிலும், எழுத்து வழக்கிலும் சான்றாகக் காட்டப்படுவதுமான கருத்துத் தொடர்; proverb, maxim. *"பழமொழியும் பார்த்திலீரோ"* (கம்பரா. சூர்ப்ப. 139.) 2. பதினெண் கீழ்க்கணக்கினுள் ஒன்றும், முன்றுறை யரையனார் இயற்றியதும் ஒவ்வொரு செய்யுளும் ஒவ்வொரு பழமொழியுடன் கூடியதாய் அறநெறி கூறுவதும் 400 செய்யுட்கள் கொண்டதுமான நூல்; an ancient didactic work of 400 stanzas, by nunrurai-y-araiyanar each explaining a principle of conduct by means of a proverb, one of patinen-kil-k- kanakku q. v

*[பழமை + மொழி]*

மறுவ: பழமொழி நானூறு,

(பழமொழிகள் ஒரு நாட்டின் பழம்பெருஞ் செல்வம். இவை பெரும்பாலும் பட்டறிவின் பயனாக மக்களால் படைக்கப்பெற்றவை. எதுகை, மோனை, ஓசை, சொல், நயம், சில ஆழ்ந்த கருத்துகள் முதலியவை நிரம்பிய சொற்றொடர்களே இவை ஆகும். பழைய மொழியே பழமொழி. எளிமையும் இனிமையும் நிறைந்தவை இவை. பழமொழிகளைக் கொண்டு மக்களின் நாகரிகத்தையும் பண்பாட்டையும் நன்கறியலாம். வரலாற்று நிகழ்ச்சிகளையும் சில பழமொழிகள் காட்டுகின்றன. அவற்றால் அவற்றின் காலங்களையும் ஒருவாறு கணக்கிடலாம்.

பழமொழிகள் பெரும்பாலும் அறவுரைகளையும் அறிவுரைகளையும் கொண்டிருக்கும். அவற்றுள் பல ஓதற்கு எளியனவாயும் உணர்தற்கு அரியனவாயும் அமைந்திருக்கும்.

எழுத்தறிவுக்கு இயற்கை அறிவு இளைத்த தில்லை என்பதைப் பழமொழிகள் பறைசாற்று கின்றன. வாழ்க்கைப் பாதையில் நெருக்கடி நேரங்களில் அனைவருக்கும் கைவிளக்காக இவை பயன்படுகின்றன.

பழமொழிகளை உரையிலும் பாட்டிலும் அறிஞர்கள் பயன்படுத்தியுள்ளார்கள். பழமொழிகள் எப்போதோ யாராலோ உண்டானவை. எனினும் இவற்றை அனைவரும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். அதுவே இதன் சிறப்பு. பல சொல்லியும் விளக்க முடியாத பல உண்மை களைப் பழமொழிகளால் எளிதில் விளக்க இயலும். உள்ளத்தின் உணர்ச்சிகளையும் பழ மொழிகளால் எளிதில் எடுத்துக்காட்ட முடியும் என்பது கற்றாரும் கற்றாரினும் கல்லாரும் பேசும் பேச்சால் உள்ளங்கை நெல்லிக்கனியாய் விளங்கும். பழமொழிகளின் மிகு பழந்தொகுப்புசுவை, ஒன்று மறையாகவும் மதிக்கப் பெற்று திருநூலில் (பைபிளில்) இடம் பெற்றிருத்தல் இங்குக் குறிப்பிடத் தக்கது.

பலநாட்டுப் பழமொழிகளையும் பொறுக்கி எடுத்து அவற்றை ஒப்புநோக்கி ஆராய்வது இன்பந் தரும் இலக்கியப் பணியாகும். மொழி ஒலிகள் வேறுபட்டாலும் மக்கள் நிறங்கள் வேறுபட்டாலும் சிறந்த சில பொதுவான

உண்மைகள், மாந்தர் உள்ளத்து எழும் உணர்ச்சிகள் ஆகியவை உலகத்துக்கே பொது என்பதை இவ்வாராய்ச்சி உறுதி செய்யும். அஃதுடன் பன்னாட்டுப் பழமொழிகள் அவ்வந்நாட்டிற்கே உரிய இலக்கியம், சமயம், மரபுகள் ஆகியவற்றை ஒருவாறு அறியவும் இடங் கொடுக்கின்றன.

சிற்சில சமயம் மொழி ஆய்வுக்குப் பழமொழிகள் துணைபுரிவதுண்டு. சில பழமொழிகளைக் கொண்டு மொழியின் பேச்சுவழக்கு, திசைச்சொல் கலப்பு, கிளைமொழிகள், வழக்கிறந்த சொற்கள் ஆகியவற்றையும் அறிந்து கொள்ளுகின்றேம்.

தமிழினத்தவரைப் போன்ற மிகப் பழையதொரு மக்கள் குமுகாயத்தில் பழமொழிவளம் சிறந் திருப்பது இயல்பே. பழமொழிகளின் சிறப்பு நோக்கிப் படைப்புகளில் பழமொழி நானூறு ஒன்றாகும். உலகம் புகழும் தமிழ் மறையாகிய திருக் குறளோடு சேர்த்துப் பதினெண் கீழ்க்கணக்கு களில் ஒன்றாகப் போற்றப் பெறுவதும் பழமொழி நானூறு என்னும் நூலே.

தமிழ்ப் பழமொழிகளில் எத்தனையோ வகை யுண்டு; அவற்றையெல்லாம் தொகுத்துப் பார்த்தால் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற்பொருள் பற்றியும் எடுத்துரைக்கும் பழமொழிகள் நிலவுவதைக் காணலாம். பொய் யாமொழிகளாகவும் அழியா மொழிகளாகவும் விளங்கும் அவை காலங்கடந்தவை.

பழமொழிகள் சில கால அடைவில் இலக்கிய மொழிகள் ஆவதும் இலக்கிய மொழிகள்கால அடைவில் பழமொழிகள் ஆவதும் இயற்கை. பாட்டுலகில் பாடவேறுபாடு இருப்பதுபோலவே பழமொழி உலகிலும் உண்டு. சாதி, சமயம், தொழில், வட்டாரம் முதலியவற்றிற்கு ஏற்பப் பேச்சுத்தமிழ் வேறுபடுவது போலவே பழமொழிப் படைப்பிலும் வேறுபாடு விளங்கக் காணலாம். சில பழமொழிகள் தம் உண்மை உருவம் திரிந்து உலாவலும் உண்டு. இழிந்த பழமொழிகளும் உள.

ஆறாயிரம் தமிழ்ப் பழமொழிகளை ஆங்கில மொழியாக்கத்துடன் முதன் முதல் 1874–ல் பெருசிவல் வெளியிட்டார். அதன்பின் 1887–ல் சென்சர் எருமன் 3,644 தமிழ்ப் பழமொழி களை ஆங்கில மொழியாக்கத்துடன் பாகு படுத்தி வெளியிட்டார். அதன் பின் தமிழ்ப் பழமொழிகள் பெருந் தொகுப்பு ஒன்றை 1894இல் அப்பர் இலாராசு ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளிப்படுத்தினர். அவர் *“தமிழ்ப் பழமொழிகள் தமிழ் மக்களின் மெய்யறிவுக் களஞ்சியம்”* என்று புகழ்ந்துள்ளார். பல துறைப்பட்ட பழமொழி களுள் சிலவற்றை இங்குக் காண்போம்:

*அரசன் அன்று கொல்லும், தெய்வம் நின்று கொல்லும்.*

*அரசன் எவ்வழி; குடிகள் அவ்வழி.*

*அரியும் சிவனும் ஒண்ணு, அறியாதவன் வாயில் மண்ணு.*

*ஆலும் வேலும் பல்லுக்குறுதி, நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி.*

*ஏணிமேல் ஏறியவன் இறங்கத்தானே வேண்டும்.*

*ஒய்யாரக்கொண்டையாம் தாழம்பூவாம் உள்ளே இருக்குமாம் ஈரும் பேனும்.*

*கல்லாடம் கற்றவனிடம் சொல்லாடாதே.*

*குதிரை கீழே தள்ளியதுமல்லாமல் குழியும் பறித்ததாம்.*

*கெட்டிக்காரன் சந்தைக்குப் போனால் கொடுக் கவும் மாட்டான், கொள்ளவும் மாட்டான்.*

*தவத்திற் கொருவர், தமிழுக்கிருவர்.*

*தன் கையே தனக்குதவி.*

*தோட்டிபோல் உழைத்துத் துரைபோல் சாப்பிட வேண்டும்.*

*நெய்யை உருக்கு; மோரைப் பெருக்கு.*

*ஆவைவிட்டுவிட்டு எருதைக் கறக்கலாமா?.*

*படிக்கிறது இராமாயணம், இடிக்கிறது பெருமாள் கோயில்.*

*விருந்தும் மருந்தும் மூன்றே நாள்.*

*வைது கெட்டாருமில்லை; வாழ்த்தி வாழ்ந் தாருமில்லை.*

*தில்லிக்குப் பாட்சா ஆனாலும் தள்ளைக்குப் பிள்ளை தானே.*

*துயரத்தைச் சொல்லி ஆற்றவேண்டும்; கட்டி யைக் கீறி ஆற்ற வேண்டும்.*

*தென்னை மரத்திலே தேள் கொட்டிற்றாம், பனைமரத்திலே நெறிகட்டியதாம்.*

*துட்டுக்கு எட்டுச் சட்டி வாங்கிச் சட்டி எட்டுத்துட்டுக்கு விற்றாலும் வட்டிக்கு ஈடில்லை.*

**பழரசம்** *pala-rasam,* பெ. (n.) பழச்சாறு; juice of fruits.

*[பழம் + ரசம்]*

**பழவடியார்** *pala-v-adiyār,* பெ. (n.) வழிவழித் தொண்டர்; hereditary devotees, devotees whose piety comes to them as a heritage. *"நின்பழவடியாரொடும்"* (திருவாச. 6, 35.)

*[பழம் + அடியார்]*

**பழவரிசி** *pala-v-ariśi,* பெ. (n.) குத்திப் பழகிய அரிசி; rice husked and kept for some months. *"பல்லைத் தகர்த்துப் பழவரிசியாகப் பண்ணிக் கொள்ளீரே"* (கலிங். 511.)

ம. பழயரி

*[பழம் + அரிசி]*

**பழவினை** *pala-viṉai,* பெ. (n.) முன்வினை; ஊழ்வினை deeds of former births. *"நம்மை முழுதுடற்றும் பழவினையைக் கிறிசெய்த வாபாடி"* (திருவாச. 13, 8.)

*[பழம் + வினை]*

**பழவேற்காடு** *palavēṟ-k-kāḍu* பெ. (n.) திருவள்ளூர் மாவட்டத்தில் பொன்னேரி வட்டத்தில் சென்னைக்குச் சில கல் தொலைவில் வடக்கே உள்ள ஊர்; a village in Tiruvaḷḷūr Dt. (பழமையான வேல்வகைச் செடிகள் வளர்ந்த காடுகள் கொண்டது பழவேற்காடு எனப் பட்டது. இவ்வூரை யொட்டி 20 கல் நீளமான ஓர் ஏரி இருக்கின்றது. இவ்வேரி வள மிக்க மீன்துறையாகும். முதலில் பழவேற்காடு தச்சுக்காரர்கள் வசமிருந்தது.

இப்போது இங்கேயுள்ள நூற்றுக்கணக்கான தச்சுக்காரர் அடக்க மேடைகள் அதன் பழங்காலப் பெருமைக்குச் சான்று பகர்கின்றன. இப்பொழுது இவ்வூரில் மீன்பிடித்தலும், பனையோலைத் தொழிலும் இன்றியமையாத் தொழில்களாக நடந்து வருகின்றன.)

*[பழமை + வேல் + காடு]*

**பழனம்¹** *palaṉam,* பெ. (n.) 1. வயல்; paddy field. *"பழன மஞ்ஞை யுகுத்த பீலி"* (புறநா. 13.) 2. மருதநிலம்; agricultural land. *"பன்மலர்ப் பழனத்த"* (கலித். 78.) 3. பொய்கை; tank. *"பழன வாளைப் பரூஉக்கட் டுணியல்"* (புறநா. 61.)

*[பழம் → பழன் → பழனம்]*

**பழனம்²** *palaṉam,* பெ. (n.) தஞ்சைமாவட்டச் சிற்றூர்; a village in Tanjore Dt. (திருப்பழனம் என, தஞ்சாவூர் மாவட்டத்தில் அமைந்துள்ளது இவ்வூர். திருவையாற்றுக்குக் கிழக்கே

இரண்டு கல் தொலைவில் உள்ளது. சிவனடியார்கள் மிகவும் விரும்பும் தலம் இது என்பதைப் பலரின் பாடல்களும் உணர்த்துகின்றன.

சிவபெருமான் திருவிரட்டை மணிமாலையில் அதன் ஆசிரியர்,

*"குருகினம் சென்றிடறும் கழனிப் பழனத் தரசை"* (28) என்று போற்றுகின்றார்.

*"பாங்கார் பழனத்தழகா போற்றி"* என்கின்றார். மாணிக்கவாசகர். (திருவாச.போற்றி.–157)

*"நனி மஞ்சுடைய நறுமாங்கனிகள் குதி கொண்டெதிருந்திப் பலவின் கனிகள் திரை முன் சேர்க்கும் பழனநகராரே"* – திருநாவு சம்பந்தர்–67–5.

*"பருவரால் வயல் சூழ்ந்த பழனத்தான்"* – திருநாவுக்கரசர்–149–1

*"வாளைபாய் புனற் பழனத் திருப்பழனம் மருங் கணைந்து"* – (பெரியபு.–திருநாவுக்கரசர் – 199.)

இவை போன்ற பாடல்கள் பழனத்தின் வளத்தினைக் காட்டவல்லன.

**பழனல்வெதிர்** *palaṉal-vetir,* பெ. (n.) *பழனவெதிர்*(ஐங்குறு. 91. பி–ம்.) பார்க்க; see *palaṉa vetir.*

*[பழனம் → பழனல் + வெதிர்]*

**பழனவெதிர்** *palaṉa-vetir,* பெ. (n.) கரும்பு; sugarcane. *"பழனவெதிரின் கொடிப்பிணை யலளே"* (ஐங்குறு. 91.)

*[பழனம் + வெதிர்]*

**பழனி** *palaṉi,* பெ. (n.) திண்டுக்கல் மாவட்டத்தில் முருகன் கோயில் கொண்டிருக்கும் திருவாவிநன்குடி என்னும் முருகனுடைய ஆறுபடைவீட்டினுள் மூன்றாவதாகக் கருதப்படும் திருத்தலம்; a murugan shrine in Dindigul district.

*[ஒருகா: பொதினி → பழனி]*

**பழனிச்சம்பா** *palaṉi-c-campā,* பெ. (n.) சம்பா நெல்வகை; a kind of campā paddy.

*[பழனி + சம்பா]*

**பழனிமட்டம்** *palaṉi-maṭṭam,* பெ. (n.) குதிரை வகை (அசுவசா. 3.); a kind of horse.

*[பழனி + மட்டம்]*

**பழனியாண்டவன்** *palaṉi-y-āṇḍavan,* பெ. (n.) ***பழனியாண்டி*** பார்க்க; see *palaṉiyāṇḍi.*

*[பழனி + ஆண்டவன்]*

**பழனியாண்டி** *palaṉi-y-āṇḍi,* பெ. (n.) பழனியில் கோயில் கொண்டுள்ள முருகக் கடவுள்; Lord Murugan at palani Hills.

*[பழனி + ஆண்டி]*

**பழனிவேலன்** *palaṉi-vēlaṉ,* பெ. (n.) *பழனியாண்டி* பார்க்க; see *palaṉi-y-āṇḍi.*

*[பழனி + வேலன்]*

**பழி[1]–த்தல்** *pali-,* 11. செ.குன்றா.வி. (v.t.) 1. இகழ்தல்; to blame, censure, ridicule, revile. *"உலகம் பழித்தது"* (குறள். 290.) 2. புறங்கூறுதல்; to slander, caluminate. (இ.வ.) *"இப்படி யொரு செயலைச் செய்து விட்டு வந்து நிற்கும் உன்னைப் பழிக்காமல் பாராட்டவா செய்வார்கள்".*

**பழி¹** *paḻi,* பெ. (n.) **1.** இகழ்ச்சி; blame, censure, reproach, ridicule. *"புகழிற் பழியி னென்றா"* (தொல். சொல். 73.) **2.** அலர்; slander, calumny. *"ஒன்றார் கூறுமுறுபழி நாணி"* (பு.வெ. 11, பெண்பாற். 4.) **3.** குறை; complaint, imputation charge, disparagement. (w.) **4.** குற்றம்; fault, crime. *"பொழிபல பெருகிய பழிநீர் தேஎத்து"* (பட்டினப். 26.) **5.** கரிசு; sin guilt. *"தசமா முகன் பூவியலும் முடிபொன்றுவித்த பழிபோயற"* (தேவா. 890, 2.) **6.** பழிதீர்த்தல்; revenge, vengeance, vindictiveness. (w.) **7.** பொய்; falsehood, deceit. **8.** பகை; discord. **9.** ஒன்றுக்கும் உதவாதவன்; worthless fellow. (கொ.வ.) *'பழி ஓரிடம் பளகு ஓரிடம்' 'பழிக்கு அஞ்சாதவன் கொலைக்கு அஞ்சுவானா?'* (பழ.)

**பழி²** *paḻi,* பெ. (n.) கடும் குற்றம்; பெறுந்தவறு; charge; accusation. *"உன்னைப் பட்டினி போட்டேன் என்ற பழி எனக்கு வேண்டாம்".*

**பழி³** *paḻi,* பெ. (n.) **1.** குற்றம்; crime. (பிங்கல. 186.). **2.** தீவினை; *"ஒருவற்கு பால தோரும் பழி"* (திருக். 40.) **3.** பழிப்பு; scorn, contempt. *"பாபமும் பழியும் பூண்டு படிக்கொரு பொறை யாய்நின்றார்"* (கந்தபு. பததீசியுத். 118.)

**பழிக்காணி** *paḻi-k-kāṇi,* பெ. (n.) *அரத்தக் காணிக்கை* பார்க்க; see *aratta-k-kāṇikkai.* blood-money (m.m.)

*[பழி + காணி]*

**பழிக்குடி** *paḻo-k-kudi,* பெ. (n.) **1.** பழம்பகை கொண்ட குடும்பம்; family cherishing inveterate hatred. **2.** ஏழைக்குடி; family low in rank.

*[பழி + குடி]*

**பழிக்குப்பழி** *paḻikku-p-paḻi,* பெ. (n.) ஒருவர் செய்த தீமைக்குப் பகரமாக திரும்பச் செய்யும் தீமை; an eye for an eye; revenge. *"தந்தையின் கொலைக்குப் பழிக்குப் பழி வாங்குவேன் என்று சூளுரைத்தான்", "அவர் எப்போதோ செய்த தவறுக்காக இப்போது பழிக்குப்பழி தீர்க்க நினைப்பது முட்டாள்தனம்"*

*[பழிக்கு + பழி]*

**பழிக்குவிடு-தல்** *paḻikku-viḍu-,* **18.** செ.குன்றா.வி. (n.) அழியவிடுதல்; to abandon one to his evil ways; to allow one to ruin oneself (j.)

*[பழிக்கு + விடு-,]*

**பழிகட்டு¹-தல்** *paḻi-kaṭṭu-,* **5.** செ.கு.வி. (v.i.) **1.** சண்டை தொடுத்தல்; to pick a quarrel. **2.** அடாத குற்றஞ் சாட்டுதல்; to bring an injust accusation. **3.** பகைமூட்டுதல்; to sow discord. **4.** குற்றஞ்செய்தல்; to commit a crime.

*[பழி + கட்டு-,]*

**பழிகட்டு²-தல்** *paḻikaṭṭu-,* **5.** செ.குன்றா.வி. (v.t.) அச்சுறுத்துதல்; to threaten in order to effect one's purpose.

*[பழி + கட்டு-,]*

**பழிகரப்பங்கதம்** *paḻi-kara-p-paṅkatam,* பெ. (n.) வசையைக் குறிப்புப் பொருளாக கொண்ட செய்யுள் வகை (தொல். பொ. 438, உரை.); verse containing contemptuous insinuation.

*[பழிகரப்பு + அங்கதம்]*

**பழிகரப்பு** *paḻi-karappu,* பெ. (n.) *பழி கரப்பங்கதம்* பார்க்க; see *paḻikarappankatam.*

*[பழி + கரப்பு]*

**பழிகாரன்** *paḻi-kāraṉ,* பெ. (n.) **1.** பிறர்மேற் பழி கூறுபவன்; accuser (w.) **2.** கொடுந் தீவினையாளன்; great sinner. *"பழிகாரனங்கே யிணக்க மாகாதே"* (அழகர் கல. 67.) **3.** பழிவாங்குவோன்; wreak vengence on, take revenge.

*[பழி + காரன்]*

**பழிகிடு[1]—த்தல்** *paḻi-kiḍa-,* **3.** செ.கு.வி. (v.i.) தன்நோக்கம் நிறைவேற ஒருவன் வீட்டு வாயிலில் உண்ணாமற் காத்துக் கிடத்தல்; to sit and starve at a persons door in order to make him comply with ones demand; to sit in dhurna.

*[பழி + கிட—,]*

**பழிகூறல்** *paḻi-kural,* பெ. (n.) தூற்றல் (சூ.நீக. 12:7.); to cast aspersion upon; to caluminate

*[பழி + கூறல்]*

**பழிச்சு[1]—தல்** *paḻiccu-,* **5.** செ.குன்றா.வி. (v.t.) **1.** புகழ்தல்; to praise, extol, eulogise. *"விறலியர் கை தொழூஉப் பழிச்சி"* (மதுரைக். 694.) **2.** வணங்குதல்; to adore, worship. *"கைவல் விளையர் கடவுட்பழிச்ச"* (பதிற்றுப். 41, 6.) **3.** வாழ்த்துதல்; to bless. *"பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள"* (தொல்.உரி.84.) *"நிற்பழிச்சிச் சேறும்"* (புறநா. 113.) **4.** கூறுதல்; to announce, tell. *"பொருளினிப் பழிச்சுகின்றதே"* (சீவக. 3041.)

*[வழுத்து → பழிச்சு → பழிச்சு—,]*

**பழிச்சு[2]** *paḻiccu,* பெ. (n.) போற்று (தொல். சொல். 382.); praise, adoration.

*[வழித்து → பழிச்சுதல் → பழிச்சு]*

**பழிச்சொல்** *paḻi-c-col,* பெ. (n.) *பழி* பார்க்க **1. 2.** (பிங்.); see *paḻi.* **1, 2.** பழிமொழி; (வழக்.) reproach

*[பழி + சொல்]*

**பழிசும—த்தல்** *paḻi-suma-,* **2.** செ.கு.வி. (v.i.) **1.** இகழ்ச்சியேற்றுதல்; to bear reproach. *"தேரையார் தெங்கிள நீருண்ணார் பழி சுமப்பர்"* (தமிழ்நா. 74.) **2.** பழி ஒருவன் மேல் வருதல்; to be held responsible for anothers crime.

*[பழி + சுமத்தல்]*

**பழிசுமத்து—தல்** *paḻi-sumattu-,* **5.** செ.குன்றா.வி. (v.t.) முறையில்லாது குற்றஞ்சாட்டுதல்; to accuse falsely.

*[பழி + சுமத்து—,]*

**பழிசை** *paḻicai,* பெ. (n.) இகழ்ச்சி (இலக்.அக.); scorn.

*[பழி → பழிசை]*

**பழித்துக்காட்டு—தல்** *paḻittu-k-kāttu-,* **9.** செ.கு.வி. **1.** ஒருவரின் பேச்சு, நடை போன்றவற்றைத் தரக்குறைவாகவும் பகடியாகவும் நடித்துக் காட்டுதல்; imitate (s.o.) in a slightly offensive manner. *"ஒருவரைப் பற்றி இன்னொருவர் பழித்துக் காட்டுவது நல்லதன்று."* **2.** ஒருவரை மதிக்காத போக்கில் அல்லது தன் சினத்தை வெளிப்படுத்தும் வகையில் முகத்தைக் கோணுதல் போன்ற செயல்கள் செய்தல்; வலித்துக்காட்டுதல்; make faces at. *"அவன் அதட்டியவுடன் குழந்தை பழித்துக் காட்டிவிட்டு உள்ளே ஓடிவிட்டது"*

*[பழித்து + காட்டு—,]*

**பழித்துரை** *palitturai,* பெ. (n.) பழிச் சொல் பார்க்க; see pali-c-col. *"நம்பழித்துரை யெல்லாம்"* (சித். மரபுகண். 17.).

*[பழித்து + உரை]*

**பழிதீதம்** *palititam,* பெ. (n.) மகாரம்; the mystic letter 'ma' (சா.அக.)

**பழிதீர்—த்தல்** *pali-tir-,* 4. செ.கு.வி. (v.i.) 1. பழி வாங்குதல்; to take revenge. 2. கரிசு போக்குதல்; to expiate geilt; to atone. *"இந்திரன் பழிதீர்த்த படலம்"* (திருவிளை.)

*[பழி + தீர்த்தல்]*

**பழிதூற்று** *pali-tūrru-,* செ.குன்றா.வி. (v.t.) அலர் பரப்புதல்; to cast aspersion upon; to calumniate. *"குடிபழி தூற்றுங் கோலனுமல்லன்"* (சிலப். 23, 24.)

*[பழி + தூற்று—,]*

**பழிப்பதுபோலப் புகழ்—தல்** *palippatu pōla pugal-,* 3. செ.கு.வி. (v.i.) ஒன்றன் பழியினால் அதன் புகழ்ச்சியேனும் மற்றொன்றின் புகழ்ச்சியேனும் ஒன்றன் புகழ்ச்சியினால் அதன் பழிப்பேனும் மற்றொன்றன் பழிப்பேனுந் தோன்றக்கூறும் செய்யுள் அணியழகு வகை; (rhet.) apparent praise or censure of an object, artfully suggesting the censure or praise either of the same object or another.

*[பழிப்பது + போல + புகழ்—தல்]*

**பழிப்பனவு** *palippanavu,* பெ. (n.) பழித்தற் குரிய செயல் (யாழ்.அக.); blameworthy deed.

*[பழி → பழிப்பனவு]*

**பழிப்பு** *palippu,* பெ. (n.) 1. இகழ்ச்சி, அவமதிப்பு; scorn, contempt, blasphemy. *"பழிப்பரு நலனும் பண்பும்", "பெறுவது பழிப்பால்"* (கம்பரா. படைக்காட்சி. 50.) 2. குறளை; slander. 3. குற்றம்; blame, guilt. 4. குறை; defect. *"பன்னிரு படலம் பழிப்பன் றுணர்ந்தோர்"* (பு. வெ. சிறப்புப்.)

*[பழி → பழிப்பு]*

க. பழிவு

**பழிப்புக்காட்டு—தல்** *palippu-k-kāttu-,* 5. செ.கு.வி. *பழித்துக் காட்டு* – பார்க்க; see *palittu-k-kāttu.*

**பழிப்புக்காரன்** *palippu-k-kāran,* பெ. (n.) 1. இகழ்ச்சி செய்வோன்; blasphemer, reviler. 2. நகைப்புக்கு இடமானவன்; laughing-stock, object of ridicule.

*[பழிப்பு + காரன்]*

**பழிப்புவமை** *palippuvamai,* பெ. (n.) உவமேயத்தை உயர்த்தி உவமானத்தைப் பழிக்கும் அணி (வீரசோ. அலங். 14.); (rhet.) figure of speech in which the object compared is extolled by attributing a defect to the object of comparison.

*[பழிப்பு + உவமை]*

**பழிபாதகம்** *pali-pātakam,* பெ. (n.) பெருந் தீவினை; heinous crime.

*[பழி + பாதகம்]*

**பழிபிடி—த்தல்** *pali-pidi-,* 4. செ.கு.வி. (v.i.) பகை காட்டுதல்; to show enmity (w.)

*[பழி + பிடி—,]*

**பழிபோடு—தல்** *pali-pōdu-,* செ.குன்றா.வி. (v.t.) *பழிசுமத்து—,* பார்க்க; see *palisumattu-,* (w.)

*[பழி + போடு—,]*

**பழிமீட்கு—தல்** *pali-mitku-,* **5. செ.**குன்றா.வி. (v.t.) *பழிவாங்கு—,* பார்க்க **(யாழ்.**அக.); see *palivāngu-,*

*[பழி + மீட்கு—,]*

**பழி முடி—தல்** *pali-mudi-,* **செ.**கு.வி. (v.i.) பகை மூட்டுதல்; to sow discord (w.)

*[பழி + முடி —,]*

**பழிமுடி—த்தல்** *pali-mudi-,* செ.குன்றா.வி. (v.t.) *பழிவாங்கு—.* **பார்க்க** see *palivāngu-.* (w.)

*[பழி + முடி —,]*

**பழிமூட்டு—தல்** *pali-mūttu-,* செ.கு.வி. (v.i.) கோள் **சொல்லுதல் (யாழ்.**அக.); to tell tales.

*[பழி + மூட்டு—,]*

**பழிமூளுதல்** *pali-mīlutal,* பெ. (n.) பகை யுண்டாகை; kindling of wrath (w.)

*[பழி + மூளு—,]*

**பழிமொழி** *pali-moli,* பெ. (n.) **1.** இகழ்ச்சி; reproach. **2.** புறங்கூறுகை (யாழ்.அக.); aspersion.

*[பழி + மொழி]*

**பழியேல்—தல் (பழியேற்றல்)** *pali-y-ēl-,* **9.** செ.கு.வி. (v.i.) குற்றப் பொறுப்பைத் தாங்குதல்; to take on oneself the responsiblity or guilt of an evil action.

*[பழி + ஏற்றல்]*

**பழிவாங்கு—தல்** *pali-vāṅku-,* **5.** செ.குன்றா.வி. (v.t.) தீமைக்குத் தீமை செய்தல்; to wreak vengeance, avenge. *"வேலை நிறுத்தம் செய்த தொழிலாளர்களைப் பழி வாங்கும் வகையில் உள்ளது ஆளுமையாளர்களின் நடவடிக்கை", "ஆளுமையின் பழிவாங்கும் நடவடிக்கையை கைவிட்டு தொழிலாளர் களின் நலனில் அக்கறை செலுத்துவது மாந்த அறம்."*

*[பழி + வாங்கு]*

**பழிவேலை** *pali-velai,* பெ. (n.) வருத்தி வாங்கப்படும் வேலை; work unwillingly done; compullsory labour. (w.)

*[பழி + வேலை]*

**பழு—த்தல்** *palu-,* **4.** செ.கு.வி. (v.i.) **1.** பழுமாதல்; to ripen, grow ripe, as fruits, grain. *"பயன்மர முள்ளூர்ப்பழுத்தற்றால்"* (குறள்,216.) **2.** முதிர்தல்; to grow mature, arrive at perfection as in knowledge, science, piety. *"மற்பழுத்தகன்ற மார்பத்து"* (சீவக.435.) **3.** மூப்படைதல்; to become old. *'பழுத்த ஆள்'* (இ.வ.) **4.** பக்குவமாதல்; to become fit, as for salvation (w.) **5.** கைவருதல்; to be trained; to become experienced. *"செந்நாச் சொற்பழுத்தவர்க்கும்"* (சீவக.435.) **6.** பருமுதலிய முற்றுதல்; to suppurate, come to head. as a boil. *'சிரங்கு பழுத்துவிட்டது'* **7.** மனங்கனிதல்; to melt, as heart. *"பழுத்த மனத்தடியர்"* (திருவாச.24,4) **8.** நிறம் மாறுதல்;

to change colour by age, as ivory, horn, grain; to become pale or yellowish, as the body by disease; to be discoloured as the teeth. (w.) **9.** வெற்றியடைதல்; to become successful '*மேற்கண்ட வேலை பழுத்தது*' **10.** செழித்தல்; to prosper. "*பல்கிய கிளைஞரும் பழுக்க வாழுநர்*" (பிரமோத்.6,47.) **11.** மிகுதல்; to abound. "*தொளிபழுத்த தண்பணை*" (காசிக்.துருவ.11.) **12.** காரம் முதலியன கொடாமையால் (மகப்பெற்ற) புனிற்றீன்ற வயிறு பெருத்தல்; to become flably and weak, as the abdomen of a woman after-child-bith for want of stimulants. **13.** பழுப்பு நிறமாதல்; to take a fine brilliant colour, as gold, ret-hot iron. "*பழுக்கச் சுட்ட பொன்*" **14.** குழைதல்; to become flexible, plaint. "*விற்பழுத்து*" (சீவக.435.) **15.** செலவழிதல் (மரபுவழக்கு); blow money on something. 'மருத்துவரிடம் சென்றுவந்ததில் ஆயிரம் உருபாய் பழுத்துவிட்டது' (உ.வ.)

க.பண்.

*[புல் → புள் → பள் → பளு → பழு + பழு–,]*

'*பழுத்த ஓலையைப் பார்த்துக் குருத்து ஓலை சிரிக்கிறதாம்*'! (பழ.)

**பழு²** *paḷu,* பெ. (n.) *பழுப்பு¹* பார்க்க **1.** see *paḷuppu* "*விழுக்கோட்பலவின் பழுப்பாய்*" (அகநா.12.)

**பழு³** *paḷu,* பெ. (n.) **1.** விலாவெலும்பு rib. "*யானையின் பழுப்போல்*" (சீவக.1561.) **2.** விலா; side of the body. '*முடக்கிய விருகை பழுப்புடையொற்றி*' (திவா.). **3.** ஏணியின் படிச்சட்டம்; round of a ladder. "*ஒரு பழு ஏறப்பெற்றது*" (ஈடு, 10,6,5.). **4.** சட்டம்; frame. "*தொட்டிற்பழுவைப் பிடித்துக்கொண்டு*" (ஈடு,5,10,6.) **5.** பேய்; devil "*பழுவும் பாந்தளும்*" (குறிஞ்சிப்.259.).

*[படு → படி. படு → பழு]*

**பழுக்க¹** *paḷukka,* பெ. அ. (adv.) முற்றவும் thoroughly, perfectly. "*பழுக்க ஓதி*" (குருபரம்.186.). **2.** சிறந்த தேர்ச்சி நிறைந்த; முதிர்ந்த; (of experience ina particular field) rich. "*நாடகத்துறையில் பழுத்த பட்டறிவு பெற்றவர்*"

**பழுக்கக் காய்ச்சு–தல்** *paḷukka-k-kāyccu-,* **5.** செ.குன்றாவி. சிவக்கக் காய்ச்சுதல்; to burn to red-heat, as iron.

*[பழுக்க + காய்ச்சு–,]*

**பழுக்கச்சுடு–தல்** *paḷukka-c-cuḍu-,* **1.** செ.கு.வி. (v.i.) பொன்னைப் பழுப்பு நிறம் ஆகும்படி ஊதுதல்; heating gold to attain yellow colour. (சா.அக.)

மறுவ: பழுக்கவூதுதல்

**பழுக்கச்சுடு–தல்** *paḷukka-c-cuḍu,* **2.**செ.குன்றா.வி. (v.t.) *நிறம் ஏறப் பொன்னைத் தீயிற் காய்ச்சுதல்;* to refire gold, etc., by heating it in fire.

*[பழுக்க + சுடு–,]*

**பழுக்கப்போடு–தல்** *paḷukka-p-poḍu-,* **19.** செ.குன்றா.வி. (v.t.) **1.** கனியச்செய்தல்; to make fruits ripe artificially, as by covering them with straw. **2.** ஒரு வினை முற்றுதற்குக் காத்திருத்தல்; to await the maturity of some great event. (w.)

*[பழுக்க + போடு–,]*

**பழுக்கா** *paḷukkā,* பெ. (n.) பொன்னிறம்; gold colour. (சா.அக.)

**பழுக்காய்** *paḷu-k-kāy,* பெ. (n.) 1. பழுத்த பாக்கு; ripe areca-nut. "*பழுக்காய்க் குலை*" (சீவக.826.) 2. மஞ்சள் கலந்த செந்நிறம்; yellowish, orange or gold colour, as of ripe areca-nut. 3. தேங்காய் (யாழ்.அக.); cocoa-nut 4. சாயநூல்; coloured yarn. "*பழுக்காய்ப்புடைவை*"

*[பழு + காய்]*

**பழுக்காய்க்கரை** *paḷukkāy-k-karai,* பெ. (n.) சாய நூலாலமைந்த ஆடைக்கரை; stripe or border of a cloth, in initation of silk, opp. to paṭṭu-k-karai.

*[பழுக்காய் + கரை]*

**பழுக்காய்த்தாம்பாளம்** *paḷukkāya-t-tambāḷam,* பெ. (n.) பழுக்காய் நிறமுள்ள தட்டுவகை; lacquer tray, as reddish in colour. loc.

*[பழுக்காய் + தாம்பாளம்]*

**பழுக்காய்நூல்** *paḷukkāy-nūl,* பெ. (n.) சாய மிட்டநூல்; coloured thread or yarn.

*[பழுக்காய் + நூல்]*

**பழுக்காய்ப்பெட்டி** *paḷukkāy-p-peṭṭi,* பெ. (n.) ஒருவகை அணிகலப்பெட்டி; lacquer box or case.

*[பழுக்காய் + பெட்டி]*

**பழுக்குறை** *paḷu-k-kurai,* பெ. (n.) எண்குறைந்த விலாவெலும்புகளையுடைய எருதுவகை; an ox having lesser bumber of ribs than usual. (இ.வ.)

*[படி → படு → பழு + குறை]*

**பழுத்த சுமங்கலி** *paḷutta-sumaṅkali,* பெ. (n.) கணவனோடு நீண்டகாலம் வாழ்ந்து வருகிற, மங்கலமான தோற்றம் கொண்ட பெண்மணி; a woman who has been blessed with a long period of married life (and whose husband is living.)

*[பழுத்த + சுமங்கலி]*

*சு + மங்கலம் → மங்கலி*

*சு* = Skt.

**பழுத்தபழம்** *paḷutta-paḷam,* பெ. (n.) 1. முதிர்கிழவன்; aged person, as ripe fruit. 2. பக்குவசாலி; one mature for liberation frombirths (w.) 3. தீமையிற் கைதேர்ந்தவன்; consummate rogue. (j.)

*[பழுத்த + பழம்]*

**பழுத்தமண்** *paḷttamaṇ,* பெ. (n.) செம்மண்; red earth. (சா.அக.)

**பழுதடை—தல்** *paḷudaḍai,* 3. செ.கு.வி. (v.i.) சீர்கெடுதல்; கோளாறு அடைதல்; (of machines) breakdown; (of buildings; etc.) fall into (a state of disrepair.) "*பொறிகளைப் பழுதடைய விடாமல் தக்க முறையில் பராமரிக்க வேண்டும்*"

*[பழுது + அடை—,]*

**பழுதயம்** *paḷutayam,* பெ. (n.) ஒருவகை மருந்து செய்முறை; a medicinal preparation as நொச்சிப் பழுதயம். (சா.அக.)

**பழுது** *paḷutu,* பெ. (n.) 1. பயனின்மை (தொல்.சொல்.324.); unprofitableness 2. குற்றம் (திவா.); defect, blemish, flaw, fault. "*பழுதிறொல் புகழாள் பங்க*" (திருவாச.28,10.)

3. சிதைவு; damage, injury, ruin "*இவை பழுதிலை*" (தேவா.543,2.) 4. பதனழிந்தது; anything tainted rotten, putrid, marred. 5. பிணமாயிருக்குந்தன்மை (சிலப்.19;66.) the state of being a corpse. 6. பொய் (பிங்.); lie. "*பழுதுரையாதவனுரைப்பான்*" (திருவாலவா. 39,9.) 7. வறுமை; poverty. "*பழுதின்று*" (பொருந.150.) 8. தீங்கு; evil; "*பழுதெண்ணு மந்திரியின்*" (குறள்,639.) 9. உடம்பு; body. "*பழுதொழிந் தெழுந் திருந்தான்*" (சிலப்.19,66.) 10. ஒழுக்கக்கேடு; moral evil, turpitude. 11. இடம். (அக.நி.); place 12. நிறைவு; fullness.

*[பாழ் → பழுது]*

**பழுதுடைநாயகம்** *palutudainayakam,* பெ. (n.) தாமரை; lotus flower. (சா.அக.)

**பழுதுடைநெட்டி** *palutudainetti,* பெ. (n.) பேராமுட்டி; ceylon stick mallow. (சா.அக.)

**பழுதுபார்–த்தல்** *palutupār-,* 11. செ. குன்றா.வி. (v.t.) செப்பனிடுதல்; to repair, mend.

*[பழுது + பார்–,]*

**பழுதை** *paludai,* பெ. (n.) 1. வைக்கோற்புரி; thick twist of straw, used as a rope. "*பழுதை யெடுத் தோடி வந்தான் பார்*" (தனிப்பா.54,105.) 2. கயிறு; (பிங்.); rope 3. பாம்பு; snake, as resembling straw. (இ.வ.)

'*பழுதை என்று கிடக்கப்படவுமில்லை; பாம்பு என்று நினைக்கப்படவுமில்லை*'' (பழ.)
'*பழுதை என்று மிதிக்கவும் முடியவில்லை; பாம்பென்று தாண்டவும் முடியவில்லை*' (பழ.)

*[வல் → பல் → பலு → பழு → பழுதை]*

**பழுதை** *palutai,* பெ. (n.) வளர்ச்சியுற்ற கத்தலை மீன் (குமரி.மீன.) matured kattalai fish.

**பழுதைக்கயிறு** *palutai-k-kayiru,* பெ. (n.) கோட்டுக்கயிறு; thick twist of straw, used as a rope.

*[பழுதை + கயிறு]*

**பழுநு–தல்** *palunu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. கனிதல்; to grow ripe, become mellow. 2. முதிர்தல்; to mature. "*வண்டுபடப் பழுநிய தேனார் தோற்றத்துப் பூவும்*" (மதுரைக்.475.) 3. முற்றுப் பெறுதல்; to be full or perfect. "*வளம் பழுநி*" (மலைபடு,578.)

*[பழு → பழுநு–,]*

**பழுப்படைசு–தல்** *paluppadaišu-,* 9. செ.கு.வி. (v.i.) *பழுப்பேறு*(யாழ்.அக.) பார்க்க; see *paluppēru*.

**பழுப்பரிசி** *paluppariši,* பெ. (n.) நாட்பட்டமையாற் பழுப்பு நிறமடைந்த அரிசி; rice turned yellow or brown with age.

*[பழுப்பு + அரிசி]*

**பழுப்பு**[1] *paluppu,* பெ. (n.) 1. பொன்னிறம்; ripeness; yellowness of fruits; change of colour; natural colour of gold. 2. அரிதாரம்; yellow orpiment "*பந்தியாப் பழுப்பு நாறில்*" (சீவக.1287.) 3. முதிர்ந்து மஞ்சணிறம் அடைந்த இலை; leaf burned yellow with age 4. சிவப்பு; pink, reddish colour; light pink, as of cloth. "*அதரத்திற் பழுப்புத்தோற்ற*" (ஈடு,5,3,3.) 5. சீழ்; pus "*புண்ணிலுள்ள பழுப்பை யெடுத்துவிடவேண்டும்*"

*[பழு → பழுப்பு]*

**பழுப்பு**[2] *palुppu,* பெ. (n.) *பழு*[3] பார்க்க; see *palु*[3] "*பழுப்பேணி*" (கந்தபு. வள்ளியம்.50.)

*[பழு*[3] *→ பழுப்பு]*

**பழுப்புக்கருப்பூரம்** *paluppu-k-karuppūram,* பெ. (n.) மஞ்சள் கருப்பூரம்; yellow camphor. (சா.அக.)

*[பழுப்பு + கருப்பூரம்]*

**பழுப்புச்சருக்கரை** *paluppu-c-carrukarai,* பெ. (n.) *நாட்டுச்சர்க்கரை* பார்க்க; see *nāṭṭu-c-c-carkkarai.*

*[பழுப்பு + சருக்கரை]*

**பழுப்புச்சாற்றுச் சத்துக்காதி** *paluppu-c-cāṟṟu-c-cattukkāti,* பெ. (n.) செவ்வகத்தி; red sesbane. (சா.அக.)

**பழுப்புப்பொன்** *paluppu-p-poṉ,* பெ. (n.) செம்பொன்; gold of a bright yellow hue. (w.)

*[பழுப்பு + பொன்]*

**பழுப்பு நிலக்கரி** *paluppunilakkari,* பெ. (n.) கரும் பழுப்பு நிறத்திலிருக்கும் மிகுந்த எரியாற்றல் இல்லாத நிலக்கரி; lignite. 'தமிழகத்தில் நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி வெட்டியெடுக்கப்படுகிறது' (உ.வ.)

*[பழுப்பு + நிலக்கரி]*

**பழுப்பேறுதல்** *paluppērutal,* செ.கு.வி. (v.i.) செம்பட்டை நிறமாதல்; to become salmon-coloured as cloth.

*[பழுப்பு + ஏறு–,]*

**பழுபாக்கு** *palupākku,* பெ. (n.) கொட்டைப் பாக்கு; arecanut. (சா.அக.)

*[பழு + பாக்கு]*

**பழுபாகல்** *palu-pākal,* பெ. (n.) 1. கொடிவகை (பதார்த்த.713.) prickly carolah climber. 2. தும்பை (மலை.) பார்க்க; white dead nettle.

*[பழு + பாகல்]*

**பழுமணி** *palu-maṇi,* பெ. (n.) மாணிக்கம்; ruby. "*பழுமணியல்குற் பூம்பாவை*" (சிலப்.21,23.)

*[பழு + மணி]*

**பழுமரம்** *palu-maram,* பெ. (n.) 1. பழுத்தமரம்; tree laden with fruit. "*யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந்தன்ன*" (புறநா.173.) 2. *ஆல்* பார்க்க; see *āl.* banyan. "*பழுமரப்பறவை*" (சீவக.828.) "இலைத்தலைய பழுமரத்தின் மிசை" (திருவிளை. பழியஞ். 8.)

*[பழு + மரம்]*

**பழுவம்** *paluvam,* பெ. (n.) 1. காடு; forest "*பழுவந்தோன்றிற் றவணே*" (சீவக.1414.) 2. தொகுதி; multitude, crowd. "*பழுவ நாட்குவளை*" (கம்பரா.சூர்ப்ப.3.)

*[புல் → பல் → பலு. பழு → பழுவம்]*

**பழுவூர்** *paluvūr,* பெ. (n.) திருச்சி மாவட்டப் பாடல்பெற்ற சிற்றூர்; a village in Trichi dt.

"*குரக்கினம் விரைப்பொழிலின் மீது கனியுண்டு பரக்குறு புனற் செய் விளையாடு பழுவூர்*" திருஞானசம்பந்தர்–170–8.

"*மண்ணின் மிசையாடி மலையாளர் தொழுதேத்தி பண்ணினொலி கொண்டு பயில்கின்ற பழுவூர்*" (–4)

என ஞானசம்பந்தர் பாடல்கள் பழுவூர் பற்றிய எண்ணம் தருகின்றன. பழுமரம் என்பது ஆலமரத்தை குறிக்கும் நிலையில் ஆலங்காடு, ஆலந்துார் போன்று *'பழுவூர்'* என்ற ஊர்ப்பெயர் அமைந்திருத்தல் தெளிவு.

**பழுவெலும்பு** *palu-v-elumbu,* பெ. (n.) விலாவெலும்பு; rib. ***"பழுவெலும்பைப் பிடுங்க"*** (திருப்பு.138.)

*[பழு + எலும்பு]*

**பழுனிய** *palunia,* வி.அ. (adj.) 1. பருவ முதிர்ந்த; to ripe *"வண்டுபடப் பழுனிய தேனார் தோற்றத்து"* (மதுரைக்.475.) 2. முற்றுப் பெற்ற; to mature. ***"நைவளம் பழுனிய பாலைவல்லோன்"*** (குறிஞ்சி.146.)

*[பழு → பழுனிய]*

**பழுனு-தல்** *palunu-,* 5. செ.கு.வி. (v.i.) *பழுநு-,* பார்க்க; see *palunu,* ***"தீற்தொடை பழுநிய"*** (பதிற்றுப்.8,21.)

*[பழு → பழுனு-]*

**பழூஉ** *palūu,* பெ. (n.) பேய்; devil. ***"பழூஉப் பல்லன்ன"*** (குறுந்.180.)

*[பழு → பழூஉ]*

**பழை** *palai,* பெ. (n.) புளித்த பனங்கள்(பிங்.); sour palmyra toddy, as old.

*[பழைமை → பழை]*

**பழைஞ்சோறு** *palai-ñ-cōru,* பெ. (n.) *பழஞ்சோறு* பார்க்க. ***"பாம்புஞ் சனியுமுடனேற் பழைஞ்சோறாம்"*** (சினேந்.247.) see *palañcōru.*

*[பழைமை → பழை + சோறு]*

**பழைது** *palaitu,* பெ. (n.) 1. பழையது; that which is old. ***"பழைதோ புதிதோவென்று"*** (மணிமே.30,248.) 2. *பழஞ்சோறு* பார்க்க; see *palañ-cōru.*

*[பழைமை → பழையது + பழைது]*

**பழைதூண்** *palaitūṇ,* பெ. (n.) *பழஞ்சோறு* (சினேந்.246.) பார்க்க; see *palañcoru.*

*[பழைது + ஊண்]*

**பழைமை** *palaimai,* பெ. (n.) 1. *பழமை* பார்க்க; see *palamai.* ***"பழைமை எனப்படுவது யாதெனின் யாதும் கிழமையைக் கீழ்ந்திடா நட்பு"*** (திருக். 801.) 2. நட்டாரது பழையராந் தன்மை பற்றி அவர் பிழைத்தன பொறுத்தல் (திருக்குறள். 81. அதி.); tolerance.

க. பழவே.

**பழைய[1]** *palaiya,* வி.எ. (adj.) நாட்பட்ட; old. ***"பழைய வடியார்க்கு"*** (திருவாச. 5, 89.)

க. பழய

***'புதியமொந்தையில் பழைய கள்'*** (பழ.)

***'பழைய குருடி கதவைத் திறடி'*** (பழ.)

**பழைய[2]** *palaiya,* பெ.அ (காலத்தால்) முந்திய; முன்பு இருந்த old (in time); old (by use.) "பழைய வீடு இடிந்து விழும் நிலையில் உள்ளது" "பழைய பயன்படாத பொருள்களை எல்லாம் பொங்கலின் போது கழித்து விடுவது தமிழ்மக்கள் வழக்கம்"

**பழையஅரைப்பு** *palaya-araippu,* பெ. (n.) பழைய இலுப்பைக் கட்டி; oil cake of bassia fruit which has gone old. (சா.அக.)

*[பழைய + அரைப்பு]*

**பழைய ஆகமம்; (பழைய ஏற்பாடு)** *palaiya-ākamam; palaiya-erpātu,* பெ. (n.) கிறித்துவின் வருகையை அறிவிக்கும் வாசகங்களைக் கொண்ட நூல்; old testament.

*[பழைய + ஆகமம்]*

ஆகமம் = skt.

**பழைய கருமாந்தரம்** *palaiya karumāntaram,* பெ. (n.) பண்டைக் காலத்தில் கொண்டையங் கோட்டை மறவருள் காலமல்லாக் காலத்தில் இறந்தவனுடைய மண்டையோட்டைப் புதை குழியினின்று எடுத்து, கூத்து முதலிய வற்றுடன் அவன் பொருட்டுச் செய்யும் சாச் சடங்கு; an ancient funeral ceremony among kondayṅkōttai maravar in which the skull of a person who died an unnatural death is exhumed and certain rites are performed with dancing etc.

*[பழைய + கருமம் + அந்தரம்]*

அந்தரம் = skt.

**பழையது** *palaiyatu,* பெ. (n.) *பழைது* பார்க்க; see *palaidu.*

க. ஹழயது

'*பழையது மீந்த இடம் காணியாட்சி* (பழ.)

**பழையநாள்** *palaiya-nāḷ,* பெ. (n.) பண்டைக் காலம்; former days or times.

*[பழைய + நாள்]*

**பழையபடி** *palaiya-padi,* வி.எ. adv. 1. முன்போல்; as formerly, as before. 2. மறுபடியும்; again.

*[பழைய + படி]*

**பழையபுண்ணாளி** *palaya punnāli,* பெ. (n.) 1. நாட்பட்ட நோயாளி; chronic patient. 2. பலரிடம் மருந்துண்டு நோய் தீராதவன்; an ailing patient who had undergone treatment under various physicians. (சா.அக.)

*[பழைய + புண்ணாளி]*

**பழையமனிதன்** *palaya-manidan,* பெ. (n.) 1. முதுமை யடைந்தவன்; aged man. 2. இரங்கத்தக்க நிலையிலுள்ள மாந்தன்; unregenerate human being chr.

*[பழைய + மனிதன்]*

மனிதன் = skt.

*[மானுஷ்ய → மனுஷ – மனுச → மணிச →மனித]*

**பழையர்** *palaiyar,* பெ. (n.) 1. முன்னோர்; the ancients. 2. கள்விற்போர்; toddy sellers. *"பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்"* (மலைபடு. 459.) *"பழையர்தம் மனையன் பழநறை"* (கம்ப. நாட். 50.)

க. பழெயர்

*[பழைமை → பழையர்]*

**பழையவமுது** *palaiya-v-amudu,* பெ. (n.) *பழைது* பார்க்க; see *palaidu.*

*[பழைய + அமுது]*

**பழையவெதுப்பு** *palaiyaveduppu,* பெ. (n.) நாட் பட்ட காய்ச்சல்; chronic fever. (சா.அக.)

*[பழைய + வெதுப்பு]*

**பழையவேற்பாடு** *palaiyā-v-ērpāḍu,* பெ. (n.) **1.** பண்டைவழக்கம்(கொ.வ.); old, ancient custom. **2.** கிறித்தவத் திருநூலின் தொன்மை அறிவுநூல்; the old testament (cr.)

*[பழைய + ஏற்பாடு]*

**பழையன்[1]** *palaiyaṉ,* பெ. (n.) **1.** மோகூர்த் தலைவனும் பாண்டியன் படைத் தலைவனுமான ஒரு சிற்றரசன் (மதுரைக். 508.); an ancient chief of mōkūr, the commander of a pania king. **2.** போர் என்னும் ஊர்த்தலைவனும் சோழன் படைத் தலைவனுமான ஒரு சிற்றரசன்; (அகநா. 326.) an ancient chief of pōr, the commander of a chōla king.

*[பழை + அன்]*

**மறுவ:** பழையன் – மாறன்.

**பழையனூர் நீலி[1]** *palayaṉūr nili,* பெ. (n.) முற்பிறப்பில் தன் கணவனாயிருந்த வணிகனாற் கொல்லப்பட்டுப் பேயுருவடைந்து, பின் அக்கணவனை வஞ்சித்துக் கொன்று பழிக்குப்பழி வாங்கிய பெண்பேய்; (தொண்டை. உ. 57. வரை) a she devil who in revenge for being murdered by her husband in her former human existence, slew him in a wily manner. 'பழையனூர் நீலி, பரிதவித்து அழுதது போல'. (பழ.)

(பேயாகக் கருதப்பட்ட பெண்மகள். வணிகன் ஒருவன் தன் மனைவியைக் கொலை செய்துவிட அவள் பேயாகித் தன் கணவனைப் பழிவாங்கத் திரிந்து கொண்டிருந்தாள். அவ்வணிகன் ஒருமுறை தனியே ஊர்க்குச் சென்றபோது, கள்ளிக்கட்டை ஒன்றைக் குழந்தையாக்கிக் கையிலேந்தி, இறப்பதற்குமுன் இருந்த அதே வடிவுடன் அவனைப் பின் தொடர்ந்து தன்னைக் கைவிட்டதாகக் குறைகூறி ஏற்றுக் கொள்ள வேண்டினாள். அவன் இவள் பேயென அறிந்து, அஞ்சி அருகிலிருந்த பழையனூர் வேளாளரிடம் முறையிட்டான். அவர்கள் எழுபதின்மரும் இவளைப் பேயென்று ஐயுறாமல் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று தீர்ப்புக் கூறினர். அந்தவூரில் அன்றிரவு ஒரு தனி வீட்டில் இருந்து மறுநாள் போகும்படியும் கூறினர். இவளால் அவனுக்குத் தீங்கு நேரின் தங்கள் உயிரைக் கொடுப்பதாகவும் உறுதி கூறினர். அன்றிரவு இவள் பேயாகி, அவனைக் கொன்றுவிட்டாள். மறுநாள் வணிகன் இறந்துகிடக்கக் கண்டு, வேளாளர்கள் எழுபதின்மரும் தங்களுயிரைத் துறந்தனர். அப்பேயையே பழையனூர் நீலி என வழங்கினர். இக்கதை தொண்டை மண்டல சதகத்திலும் வந்துள்ளது.)

*[பழையனூர் + நீலி]*

**பழையாறை[1]** *palaiyāṟai,* பெ. (n.) தஞ்சைமாவட்ட வரலாற்றுச் சிறப்புடைய சிற்றூர்; a village in Tanjore with historical significance. [சோழவள நாட்டில் கும்பகோணத்திற்கு அண்மையில் தெற்குப் பக்கத்தில் உள்ள ஊர். பல்லவ மன்னன் நந்தி வர்மன் இவ்வூரைத் திருத்தித் தன்னுடைய பெயரை அதற்கிட்டு நந்திபுரம் என்று மாற்றினான். இங்குத் திருமால் கோயில் ஒன்றைக் கட்டி அதற்கு நந்திபுர விண்ணகரம் என்று பெயர் சூட்டினான். சோழ மன்னனாகிய இராசராசன் காலம் வரையிலும நந்திபுரம் என்னும் பெயர் பழை யாறைக்கு வழங்கி வந்தது. இவ்வூரிற் சோழனுடைய மாளிகை சிறந்து விளங்கிற்று. ஆயிரம் மாடங்களையுடையதாய் விளங்கிய அம்மாளிகை ஆயிரத்தளி என்று பெயர் பெற்றது. இராசராசனுடைய உடன் பிறந்தாளாகிய குந்தவையின் தனிமாளிகை யொன்றும் அந்நகரில் அமைந்திருந்தது. சோழ னுடைய மாளிகை இருந்த இடம் இந்நாளில் சோழமாளிகை என்னுஞ் சிற்றூராக விளங்கு கின்றது. அவ்வூரின் வடபால் இருந்த பழைமையான சிவன் கோயில் வடதளி என்று அழைக்கப்பட்டது. புறச்சமயத்தார். பழையாறையில் தழைத்திருந்த காலத்தில் அக்கோயிலை அடைத்திருந்தனர். நாவுக்கரசர் உண்ணாநோன்பிருந்து அக்கோயிலைத்

திறக்கச் செய்தார். பழையாறை என்று இன்றும் சுட்டப்படும் தலம் தஞ்சாவூர் மாவட்டத்தில் அமைகிறது. திரு நாவுக்கரசர் பாடல் பெற்ற கோயில்களை உடையது. பழையாறையில் உள்ள வடதளி தவிர சத்திமுற்றம், பட்டீச்சரம் ஆகிய கோயில்களும் இங்கு உள்ளன. எனவே சத்தி முற்றம், பழையாறை வடதளி, பட்டீச்சரம் என்பன இன்று ஊர்ப் பெயர் போன்று தோன்றினும், பழையாறையின் பகுதிகள் கோயில் காரணமாகப் பெயர் பெற்ற நிலையையே இவண் காண்கின்றோம்.]

**பழையாறைப்பாறை** *palayārai-p-pārai,* பெ. (n.) கொள்ளிடத்தின் கழிமுகத்திலுள்ள பழையாறைக்குக் கிழக்கே 75 பாக ஆழத்தில் கீழ் மேலாய் 50 மாத்திரி (மீட்.) நீளத்தில் கடலடியில் உள்ள பாறையின் பெயர் (தஞ்சை.மீன.); a kind of sea rock.

*[பழையாறை + பாறை]*

**பழையான்** *palaiyān,* பெ. (n.) 1 மிகப் பழையவன்; the ancient. *“வானத்துயர் வானைப் பழையானை”* *(தேவா. 1064, 9.)* 2. நீண்டகால நட்புடையன்; old friend. *“பழையார்கட் பண்பிற்ற லைப்பிரியா தார்”* (குறள், 810.)

*[பழைமை → பழையான்]*

**பழையோள்** *palaiyōl,* பெ. (n.) கொற்றவை; durga. *“இழையணி சிறப்பிற் பழையோள் குழவி”* (திருமுரு. 259.)

**மறுவ.** காடுகாள்

*[பழைமை → பழையோள்]*

**பள்** *pal* பெ. (n.) 1. பள்ளர்குலம்; pallar caste. 2. நாடகச் சிற்றிலக்கிய வகை; (அருநி.); a dramatic poem dealing with the life of pallas. 3. காளி முதலிய தெய்வங்கட்குப் காவு கொடுக்குங் காலத்துப் பாடப்படும் பண் வகை(இ.வ.); a tune used expecially when offering sacrifice to kāli.

*[புல் → புள் → பள்]*

**பள்கு-தல்** *palgu-,* 5. செ.கு.வி. (v.i.) பதுங்குதல்; to cower, crouch. *“பள்கி நோக்குபு பயிர்த்து நடந்தான்”* (சூளா. சுயம். 31.)

*[ஒருகா. புல் → புள் - பள் → பள்கு-,]*

**பள்ளக் கடுக்காய்** *pallakkadukkāy,* பெ. (n.) நெல் வகை; a kind of paddy.

**பள்ளக்கழனி** *palla-k-kalani,* பெ. (n.) தாழ்வான பகுதியிலுள்ள வயல்; paddy field which is located in down place.

**மறுவ.** பள்ளகெழனி.

*[பள்ளம் + கழனி]*

**பள்ளக்காடு** *pallakkādu,* பெ. (n.) தாழ்ந்த புன்செய் நிலம்; low puncey land, opp. to mettan-kādu.

*[பள்ளம் + காடு]*

**பள்ளக்கால்** *palla-k-kāl,* பெ. (n.) 1. *பள்ளக்காடு*(இ.வ.) பார்க்க; see *palla-k-kādu.* 2. தாழ்ந்த நன்செய் நிலம்; low nancey land. 3. தாழ்விடத்துப் பாயும் வாய்க்கால்; channel carrying water to lands in low level. அந்த நிலத்துக்குப் பள்ளக்கால் வழியாக நீர்ப் பாயும்.

*[பள்ளம் + கால்]*

**பள்ளக்குடி** *palla-k-kudi,* பெ. (n.) 1. பள்ளர் குலம்; the palla caste. 2. *பள்ளச்சேரி* பார்க்க; see *palla-c-cēri.*

*[பள்ளர் + குடி]*

**பள்ளக்கை** *palla-k-kai,* பெ. (n.) தாழ்ந்த நிலம்(வின்); low land

*[பள்ளம் + கை]*

**பள்ளச்சி** *pallacci,* பெ. (n.) *பள்ளத்தி*(யாழ்.அக.) பார்க்க; see *pallatti.*

*[பள்ளன் → பள்ளச்சி]*

*'இ' பெண் பாலீறு.*

**பள்ளச்சேரி** *palla-c-cēri,* பெ. (n.) பள்ளர் குடியிருக்கும் இடம்; pallar quarters.

*[பள்ளர் + சேரி]*

**பள்ளத்தாக்கு** *palla-t-tākku,* பெ. (n.) 1. மலைகளின் இடைப்பட்ட தாழ்விடம்; valley. 2. தாழ்ந்த நிலம்; low land.

க. ஹள்ளடதாகு

*[பள்ளம் + தாக்கு]*

தாக்கு = இடம்

**பள்ளத்தி** *pallatti,* பெ. (n.) பள்ளர்குலப் பெண்; woman of palla caste.

*[பள்ளன் → பள்ளத்தி]*

*'இ' பெண் பாலீறு.*

**பள்ளத்துமீன்** *pallattumīṉ,* பெ. (n.) கடலடியிலுள்ள பள்ளமான பரப்பில் மேயும் மீன். (செங்கை.மீன.); deep sea fish.

*[பள்ளம் + அத்து + மீன்]*

'அத்து' சாரியை

**பள்ளந்திருவல்** *pallan-tiruval,* பெ. (n.) உருவலஃமப்பிற் சூரைமீன் போல உள்ள கடல் மீன் (குமரி.மீன.); a kind of sea fish.

**பள்ளநாலி** *palla-nāli,* பெ. (n.) தாழ்விடத்துப் பாயும் நீர்க்கால்; channal carrying water to lands in a low level. *"அடைத்து ஏற்ற வேண்டாத படி நீருக்குப் பள்ளநாலியான கோயில்"* (திவ். திருமாலை. 20, வ்யா)

*[பள்ளம் + நாளம் – நாளி → நாலி]*

க. ஹள்ளடநாலெ

**பள்ளம்[1]** *pallam,* பெ. (n.) 1. தாழ்வு; lowness. *"பள்ளமதாய படர்சடைமேற்.... கங்கை"* (தேவா. 427, 1.) *'பள்ளத்துவழி வெள்ளம்போல்'* (இறை.உரை.) 2. தாழ்நிலம்; low land valley. *"பள்ளங்கண்டு வருபுனல் போல்"* (திருவிளை.வளையல்.4.) 3. ஆழம்; depth. *"பள்ள வேலை பருகுபு"* (இரகு. ஆற்று. 1.) 4. குழி; hollow pit, ditch. *"பள்ளமீனிரை தேர்ந்துழலும்"* (தேவா. 93. 5.) 5. முகம், கால் இவற்றில் உள்ள குழிவு; dimple, depression, as in the face; aroh of foot below instep.

தெ. பள்ளமு. க. பள்ள. ம. பள்ள.

*'பள்ளம் இறைத்தவன் பங்கு கொண்டு போகிறான்'* (பழ.)

*'பள்ளம் உள்ள இடத்திலே தண்ணீர் நிற்கும்'* (பழ.)

*'பள்ளம் மேடில்லாமல் பருத்தி விளைகிறது'* (பழ.)

*'பள்ளத்திலே இருந்தால் பெண்டாட்டி; மேட்டிலே இருந்தாள் அக்காள்'* (பழ.)

*'பள்ளத்தில் இருந்தால் பெண்டாட்டி; மேட்டில் ஏறினால் தாயா?'* (பழ.)

*'பள்ளத்தில் இருக்கிறவன், பள்ளத்திலேயே இருப்பானா?'* (பழ.)

**பள்ளம்பறி¹-த்தல்** *pallam-pari-,* செ.கு.வி. (v.i.) குழிதோண்டுதல்; to dig a hole.

*[பள்ளம் + பறி-,]*

**பள்ளம் பறி²-த்தல்** *pallam pari-,* 4. செ.குன்றா.வி. (v.t.) ஒருவனைக் கெடுக்க முயலுதல்(இ.வ.); to seek to ruin.

*[பள்ளம் + பறி-,]*

**பள்ளமடை** *palla-madai,* பெ. (n.) 1. தாழ்ந்த விடத்துப் பாயும் கால்; channel carrying water to lands in a low level. 2. பள்ளமான வயற்குப் பாயும்படி வைக்கப்பட்ட மடை; an opening or a vent in a canal at a lower level as against one on a higher level. (இ.வ.) 3. தாழ்ந்த விட்டத்தில் வேகமாகப் பாயும் நீரோட்டம்; rapid flow of current in a channel. *"கூற்றுதைத்த கழற்கன்பு பள்ளமடையாய்"* (பெரியபு. சிறுத். 4.) 4. எளிதாகப் பாய்தற்கு இயலும் நிலம்; land irrigated with great ease. *"அந்தக் கழனி பள்ளமடை"* 5. எளிதில் நிகழ்வது; that which happens with natural ease. *"ஸ்திரீ புருஷனைக் கண்டு ஸ்நேகிக்கை பள்ளமடை"* (திவ். திருப்பா. வ்யா. அவ.)

*[பள்ளம் + மடை]*

இ. ஹள்ளமடெ

**பள்ளயம்** *pallayam,* பெ. (n.) *பள்ளையம்* பார்க்க; see *pallaiyam,* *"பொன் பள்ளயமுமி ங்கிருக்க"* (இராமநா. அயோத். 20.).

தெ. பல்லமு ம. பள்ளயம்.

*[பள்ளை → பள்ளையம் → பள்ளயம்]*

**பள்ளவோடம்** *pallavōdam,* பெ. (n.) படகு வகை; a kind of boat. *"ஊருணியிலே திருப்பள்ளவோடம் பொன்னாலே* பண்ணி நிறுத்தி" (கோயிலொ. 16.).

*[பள்ளம் + ஓடம்]*

**பள்ளன்** *pallan,* பெ. (n.) 1. பள்ளர் குலத்தான்; a male of palla caste. 2. கடுகு; mustard. (சா.அக.)

*[பள்ளம் + அன்]*

**பள்ளாடு** *pal-l-ādu,* பெ. (n.) *பள்ளையாடு* பார்க்க; see *pallai-y-ādu.*

*[பள்ளை + ஆடு → பள்ளாடு]*

**பள்ளி** *palli,* பெ. (n.) 1. இடம்; place. *"சொல்லிய பள்ளி நிலையின வாயினும்"* (தொல். எழுது. 100.) 2. சிற்றூர் (பிங்.). 3. இடையர்சேரி; herdsmens village. *"பண்ணுப் பெயர்த்தன்ன காவும் பள்ளியும்"* (மலைபடு. 451.) 4. நகரம் (பிங்.); town. 5. முனிவர் இருப்பிடம்; hermitage, cell of recluese. *"மாதவி மாதவர் பள்ளியு ளடைந்ததும்"* (மணிமே. 18, 8.) *"அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளியும்"* (சிலப். ஊர்காண். 11.) 6. கோயில்; temple *"கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால்"* (குறள். 840.) 7. சமண, புத்தக் கோயில்; temple, place of worship, especially of jains and buddists. *"புத்தர் நோன்பியர் பள்ளியுள்ளுறை"* (திவ். பெரியதி. 2, 1, 5.) 8. அரசருக்குரிய அரண்மனை முதலியன; palace, anything belonging to royalty. *"பள்ளித்தேவாரம்"* 9. வேலைக் களம்; workshop. *"தச்சன் வினைபடுபள்ளி"* 10. மக்கட்படுக்கை; sleeping place or bed. 11. தூக்கம் (கலித். 121.); sleep. *"பாற்கடலில் பள்ளிக்கொள்வான்"*

(கோயிற். பதஞ்சலி. 2.) 12. விலங்கு துயிலிடம் (பிங்.); sleeping place of animals. 13. பள்ளிக்கூடம்; school. *"பள்ளி யிலோதி வந்ததன் சிறுவன்"* (திவ். பெரியதி. 2, 3, 8.) 14. அறை (அக.நி.); room, chamber. 15. அறச்சாலை; alms-house. (w.) 16. சாலை; enclosure. *"புதுப்பூம் பள்ளி"* (புறநா. 33.) 17. வன்னியசாதி; the vanniya caste. 18. *பள்ளத்தி (நெல்லை.)* பார்க்க; see *pallatti.* 19. குறும்பர்; petty rulers. *"ராஜாக்கள் போகப் பள்ளிகள் வந்து புகுருமா போலே'* (திவ். இயற். திருவிருத்த. 40. வியா. 235.) 20. பயிலகம்; institute offering training.

க. பள்ளி

*'பள்ளிப்பிள்ளை யென்றால் செல்வம் குறையுமா?'* (பழ.)

*'பள்ளியை நினைத்துப் பாயில் படுத்தால் பரமசிவன் போலக் கனவு வரும்'* (பழ.)

*'பள்ளி கையில் பணமிருந்தால் பாதி ராத்திரியிலே பாடுவாள்'* (பழ.)

## பள்ளி

புல்லுதல் = துளைத்தல்.

புல் = உட்டுளை, துளை, உட்டுளை நிலைத் திணைவகை.

புல் – புள் – புழு – புழுத்தல் = துளைத்தல்.

புல் – பொல். பொல்லுதல் = துளைத்தல்.

பொல்லம் பொத்துதல் = நார்ப் பெட்டியின் ஓட்டையடைத்தல்.

பொல்லாமணி = துளையில்லா மணி.

பொல்லாப் பிள்ளையார் = உளியிடாப் பிள்ளை யார் படிமை.

பொல் – பொள். பொள்ளுதல் = துளைத்தல்.

பொள்ளல் = துளை, ஓட்டை.

*"சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது வீதலோ நிற்றல் வியப்பு"* – (நன்னெறி, 12.)

புள் – பள் – பள்கு. பள்குதல் = பதுங்குதல், பள்ளமான இடத்தில் மறைதல். பள்கு – பழ்கு.

பள் – பள்ளம் = 1. தாழ்விடம், 2. தாழ்நிலம். 3. தாழ்மட்டம், தாழ்வு. 4. குழிவு. 5. கன்னத்தில் விழுங்குழிவு. 6. ஆழம். 7. கிடங்கு. 8. குழி.

துளைத்தல் தோண்டுதல். தோண்டும் நிலம் முதலிற் பள்ளமாகும்; பின்பு கிடங்காகும்; அதன் பின் குழியாகும்; குழி ஒன்றை ஊடுரு வின் துளையாகும். தோண்டத் தோண்டத் தோண்ட ஆழம் மிகும்.

பள் – பள்ளி. பள்ளிக்கிருத்தல் = விதைகள் சேற்றிற் பதிந்து கிடத்தல் (நாஞ்சில் நாட்டு வழக்கு).

பள் – பள்ளை = குள்ளம்.

பள்ளையன் = குள்ளன், குறுகிப் பருத்தவன்.

பள்ளையாடு = குள்ளமான ஆட்டுவகை.

குள்ளம் பள்ளம்போல் தாழ்மட்ட மாயிருத்தலால், பள்ளை யெனப்பட்டது.

பள்ளை – பள்ளையம் = தாழ் மட்டமான (தட்டையான) உண்கலம். ம. பள்ளையம்.

பள்ளையம் போடுதல் = சிறு தெய்வத்திற்குக் கீழே படைத்தல்.

பள்ளி = 1. தாழ்வு, தாழ்வான இடம், தாழ் மட்டம், 3. தாழ்வான வீடு அல்லது குடிசை, 4. தாழ்வான வீடுகள் சேர்ந்து சிற்றூர், 5.தாழ் வான இடைச்சேரி. *"காவும் பள்ளியும்"* (மலைபடு. 451.) ஒ.நோ: படு – பாடி = இடைச் சேரி. படுத்தல் = தாழ்வாயிருத்தல். 6. நெடி தாய் எழுந்து நிற்கும் நிலையும் குறிதாய் அமர்ந்திருக்கும் நிலையும் இன்றித் தாழ்வாய் நில அல்லது அடித்தள மட்டமாய் நீளக் கிடக்கும் நிலை. 7. அங்ஙனங் கிடத்தல், படுத்தல், 8. படுக்கும் இடம், விலங்கு துயிலிடம். 9. படுக்கும் பாயல், பரப்பல், விரிப்பு, மெத்தை. 10. படுத்துத் தூங்குதல், தூக்கம். 11. படுக்கும் அறை. 12. படுத்துத் தங்கும் வீடு,

வீடு (மடைப்பள்ளி = சமையல் செய்யும் தனி வீடு). 13. அரசன் வீடாகிய அரண்மனை. 14. தெய்வ வீடாகிய திருக் கோயில். "*கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால்*" (குறள். 840). சமணக் கோயில், புத்தக்கோயில். 15. துறவியர் தங்கும் மடம். 16. முனிவரிருக்கை. 17. அறச்சாலை. 18. தங்கும் இடம். 19. இடம். "*சொல்லிய பள்ளி நிலையின வாயினும்*" (தொல். எழுத்து. 100). 20. கோவிலில் அல்லது மடத்தில் நடை பெறும் துவக்கக் கல்விச்சாலை. 21. பணி மனை. "*தச்சன் வினைபடு பள்ளி*" (களவழி. 15.) 22. பல வீடுகள் சேர்ந்தது பேரூர், பல காரை வீடுகள் சேர்ந்தது நகர் அல்லது நகரம். 23. ஊர்ப் பெயரீறு. எ–டு: குராப்பள்ளி, திருக்காட்டுப் பள்ளி. தெ. பல்லி (b) மதனபல்லி, பங்கனப்பல்லி. க. ஹள்ளி. மாரண்டஹள்ளி. பழங்கன்னடத்தில் பள்ளி யென்று வழங்கிய ஊர்ப்பெயர் ஈறுகளெல்லாம், புதுக் (ஹொச) கன்னடத்தில் ஹள்ளி என்று மாறிவிட்டன.

பள்ளி – வ. பல்லீ, பல்லி (கதாசரித்சாகர) = சிறு வீடு, சிற்றூர்.

பல்லி என்னும் வடசொல் வேதத்தில் வழங்காது பிற்காலச் சமற்கிருதத்திலேயே வழங்குதலும் பகரமுதல் எடுப்பொலி பெறாமை யும், வேர்ச்சொல் இன்மையும், வேறு பொருள் கொள்ளாமையும், அது தமிழ்த் திரிசொல் என்பதைத் தெள்ளத்தெளிவாகக் காட்டும். ஆயினும், அதைத் தமிழ்ச்சொற்கு மூல மென்று சென்னைப் ப.க. தமிழ் அகரமுதலி தொகுத்தோர் துணிச்சலுடன் காட்டியிருப்பதும் இன்றும் தமிழ்ப் பேராசிரியரும் அதை உணரா திருப்பதும், உணர்த்தினும் சிறிதுஞ் செவிக் கொளா திருப்பதும், இற்றைத் தமிழன் தன் உயர்திணைத் தன்மையை அல்லது நெஞ் சுரத்தை முற்றும் இழந்துவிட்டானோ என்று ஐயுற்று வருந்தச்செய்கின்றன.

பள்ளிக்குறிப்பு, பள்ளிகொண்டான், பள்ளி கொள்ளுதல், பள்ளிமண்டபம், பள்ளிமாடம், பள்ளியந்துலா, பள்ளியம்பலம், பள்ளியயர்தல், பள்ளியறை, பள்ளியெழுச்சி என்பன படுக்கை அல்லது தூக்கம்பற்றிய வழக்குச் சொற்கள்.

பள்ளிபடுத்தல், பள்ளிபடை என்பன அரசரையும் முனிவரையும் அடக்கஞ் செய்தல் பற்றிய வழக்குச் சொற்கள். அடக்கஞ் செய்தல் நிலையாகப் படுக்கைப் படுத்துதல் போன்றது.

பள்ளிகம்பு வைத்தல் என்பது, வரி செலுத்தாத வன் வீட்டின் முன் கம்பு நட்டு மறியல் செய்யும் நாஞ்சில் நாட்டு வழக்குப்பற்றிய சொல். பள்ளியோடம் என்பது சிறு வீடு போன்ற அமைப்புள்ள மரக்கலம்.

பள்ளிக்கட்டில், பள்ளிக்கட்டு, பள்ளித்தேவாரம், பள்ளிப் பீடம், பள்ளிவேட்டை என்பன, அரண் மனை அல்லது அரசன் தொடர்பான வழக்குச் சொற்கள்.

பள்ளிச்சந்தம் என்பது சமண புத்தக் கோவில் மானியமும், பள்ளிவாசல் என்பது மகமதியர் கோவிலும் பற்றிய வழக்குச் சொற்கள்.

பள்ளிக்கணக்கன், பள்ளிக்கணக்கு, பள்ளிக்கு வைத்தல், பள்ளிக்கூடம், பள்ளிக்கூடத்தான், பள்ளித்தோழமை, பள்ளிப் பிள்ளை, அரைப் பள்ளி, உச்சிப்பள்ளி என்பன, திண்ணைப் பள்ளிக்கூடம் அல்லது துவக்கக் கல்விச் சாலை பற்றிய வழக்குச் சொற்கள்.

இனி, வேறு சில வழக்குச் சொற்களும் உள.

இத்தகைய வழக்குச் சொற்கள் வடமொழியில் இல்லை.

பள் – படு – படுக்கை, படை.

ஒ.நோ: Goth. *badi*, OE. *bed*, OS vedu (d) E. bed.

படு – பாடு – பாடி, பாடை. படு – படி. படிதல்.

ஒ.நோ: OE., OS. bidan, Goth. beidan, E. bide.

பள் – பாள் – பாளம் = 1. பரந்து தட்டையான கட்டி. 2. கனத்த தகடு.

பள்ளி – (பாளி) – பாழி = 1. மக்கள் துயிலிடம். "*பெரும்பாழி சூழ்ந்த விடத்தரவை*" (திவ். இயற். 1:80.) 2. விலங்கு துயிலிடம் (பிங்.) 3. குகை (திவா.) 4. கோயில். "*ஐயன் பாழியில் ஆனைபோர்க் குரித்தாம் அன்று*" (ஈடு, 1:1:3)

5. பாசறை (பிங்.) 6. முனி வரிருக்கை. "*பூதந் தம்பாற் பாட்டிக்கொண் டுண்பவர் பாழிதொறும்*" (தேவா. 186:5) 7. மருத நிலத்தூர் (சூடா.) 8. வதியும் இடம், இடம். "*வானவர்கோன் பாழி*" (திவ்.இயற்.2:13.) 9. நகரம் (பிங்.) 10. சிறு குளம் (தொல். சொல். *400, உரை.)* 11. இறங்கு துறை. "*இவர் தம்மைத் தானுணர்ந்தால் இவர்க்குப் பாழி கிருஷ்ணாவதார மிறே*" (திவ். இயற். திருவிருத். 61.) 12. எலிவளை, எலிப்பாழி.

இனி, பாள் – பாளி – பாழி என்றுமாம்.

பாள் – பாளை – பாளையம் = 1. பாசறை. 2. போர்க்குச் செல்லும் படை வழியில் தங்கியிருக்கும் இடம். 3. படை நிலையாக இருக்கும் ஊர்.

பாழி = Gk. *polis,* city.

E. *acropōlis* (f. Gk. akropolis, akros, topmost, outer most. *polis,* city), citadel or elevated part of a Greek city, esp. of Athens.

E. *decapolis* (f. Gk. *deka,* ten *polis,* city), confederacy of ten cities in the Ist century B.C. in a region in the NE part of ancient palestine.

E. *necropolis* (f. Gk. *nekros,* cropse, dead body, *polis,* city), cemetery.

E. *cosopolis* (f. Gk. *kosmos,* universe, *polis,* city), a cosmopolitan city.

E. *comopolitan,* a Belonging to all parts of the world; n. person free from national limitations.

E. *cosmopolite,* n. Citizen of the world; a. free from national prejudices; Gk. *kosmopolites, kosmos,* universe, *polites,* citizen.

E. *cosmopolitical,* a. Belonging to universal polity.

E. *metropolis,* n. chief city of a country, capital, metropolitan bishops see, centre of activity. (LL. f. Gk. *metropolis,* meter, mother. polis, city.)

E. *metropolitan,* a & n. Of a or the metropolis; belonging to, forming part of, mother country as dist. from its collnies; of ecclesiastical metropolis; metropolitan biship; biship having authority over beishops of a province, in the west equivalent to archbishop, in Greek church ranking above archbishop and below partriarch, whence metropolianat; inhabitant of a metropolis.

(LL. *metropolitanus* f. Gk. *metropolites* f. *metropolis*

E. Metropolitan magistrate, paid london magistrate.

E. *police,* n. Civil administration, department of government concerned with public order. civil force responsible for enforcing law and maintaining public order [F. f. Md. L. *policie,* politia.]

E. *policlinic,* n. Clinic in private houses; f. G. *poliklinik* f. Gk. *polis,* city + clinic.

E. *policy,* n. Statecraft, course of action adopted by government, party, etc; pollitical sagacity, prudent conduce. [ME. f. OF. *policie* f. L. f. Gk. *politeia,* citizenship *polity,* polites citizen f *polis,* city.]

E. *political* a. & n., Of the State or its government of public afairs of politics; f. *politic.*

E. *politician,* a. One skilled in politics, statesmen, one intersted or engaged in politics,

esp. as profession, one who makes a trade of politics; f. *politic.*

E. *politicze, ise,* v.i. & t. Act the politician; engage in, talk, polities; give political character to; f. *politic* + ize (suf).

E. *politica-* in comb. as politico, economical politico-geographical, politico-social, politico-religious etc; f. *politic.*

E. *polity,* n. (Condition of civil order; from process, of civil government; organized society, [f. obs F. *politic* or L. *politia,* policy.]

'ஊர் காவல்', 'பாடி காவல்' என்பன போன்றே, police என்னும் காவல் துறைப் பெயரும் நகரப் பெயரினின்று தோன்றியிருத்தலை நோக்குக.

(பாவாணரின் – தமிழின் தலைமையை நாட்டும் சொற்கள் – 'தலைமைத் தமிழ்' நூலிலிருந்து. – 137 – 141)

**பள்ளிக்கட்டில்** *palli-k-kaṭṭil,* பெ. (n.) அரியணை; throne. *"நின் பள்ளிக்கட்டிற் கீழே"* (திவ். திருப்பா. 22.) (நாஞ்.)

*[பள்ளி + கட்டில்]*

**பள்ளிக்கட்டு** *paḷḷi-k-kaṭṭu,* பெ. (n.) **1.** அரசன் மகள் திருமணம்(நாஞ்); marriage of a princess. **2.** சிற்றூருண்டாக்குகை(M.M.); founding a village.

*[பள்ளி + கட்டு]*

**பள்ளிக்கணக்கன்** *paḷḷi-k-kaṇkkaṉ,* பெ. (n.) பள்ளிக்கூடச் சிறுவன்; a pupil at school. *"பள்ளிக் கணக்கன் புள்ளிக் கணக்கறியான்"* (பழ.)

*[பள்ளி + கணக்கன்]*

**பள்ளிக்கணக்கு** *palli-k-kaṇakku,* பெ. (n.) பள்ளிக்கூடத்துப் படிப்பு; school-learning, bookish knowledge.

*[பள்ளி + கணக்கு]*

கணக்கு: பொத்தகம், நூல்.

*'பள்ளிக் கணக்குப் புள்ளிக்கு உதவாது'* (பழ.)

**பள்ளிக்கிராமம்** *paḷḷi-k-kirāmam,* பெ. (n.) கோயிற்குரிய சிற்றூர்(வின்); village belonging to a temple.

*[பள்ளி + கிராமம்]*

கிராமம் = skt.

ஒ.நோ: பள்ளிச்சந்தம்

**பள்ளிக்கிரு–த்தல்** *paḷḷikkiru-,* செ.கு.வி. (v.i) வித்துகள் சேற்றிற் பதிந்து கிடத்தல்; to lie deep in the mud, as seeds. *'வித்துப் பள்ளிக் கிருந்தால் மழையினால் மோசமில்லை'* (நாஞ்.)

*[பள்ளிக்கு + இரு–,]*

**பள்ளிக்குவை–த்தல்** *paḷḷikku-vai-,* **4.செ.குன்றா.வி.** (v.t.) பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி எழுத்துப் பயிற்சி செய்வித்தல்; to put to school, as a child

*[பள்ளிக்கு + வை–,]*

**பள்ளிக்குறிப்பு** *paḷḷi-k-kuṟuppu,* பெ. (n.) தூக்கக் குறி; signs of sleep. *"பள்ளிக்குறிப்புச் செய்யாதே பாலமுதுண்ண நீ வாராய்"* (திவ்.பெரியதி.10,4,6.)

*[பள்ளி + குறிப்பு]*

**பள்ளிக்கூட்டம்** *palli-k-kūttam,* பெ. (n.) எழுத்தறியாத மக்கள் பிரிவினர் கூடுமிடம்(நாஞ்.); a common place where illiterate low caste people assemble.

*[பள்ளி + கூட்டம்]*

**பள்ளிக்கூடத்தான்** *palli-k-kūdattāṉ,* பெ. (n.) பள்ளியில் படிக்கும் மாணவன்; school going student.

*[பள்ளி + கூடத்தான்]*

**பள்ளிக்கூடத்துத்தம்பி** *palli-k-kūdattu-t-tambi,* பெ. (n.) சிற்றூரில் எழுதப் படிக்கத் தெரிந்தவன்(இ.வ.); literate villager.

*[பள்ளிக்கூடத்து + தம்பி]*

**பள்ளிக்கூடம்** *palli-k-kūtam,* பெ. (n.) கல்லூரிப் படிப்புப் போன்ற மேற்படிப்புக்கு அடிப்படையாக அமையும் முதல் வகுப்பிலிருந்து பன்னிரண்டாம் வகுப்புவரை உள்ள கல்விச்சாலை; School up to the xii standard. கல்வி கற்பிக்கும் இடம்; School. *"படித்த, படிக்கும் அனைவருக்கும் முதல் நண்பன் பள்ளிக் கூடம்."*

*[பள்ளி + கூடம்]*

**பள்ளிக் கெட்டு** *palli-k-kettu,* பெ. (n.) *பள்ளிக்கட்டு, 1. (நாஞ்.)* பார்க்க; see *palli-k-kattu.*

*[பள்ளி + கெட்டு]*

**பள்ளிகம்புவை-த்தல்** *palli-kambuvai,* 4. செ.கு.வி (v.i.) அரசுக்குத் தீர்வை செலுத்தாதவன் வீட்டில் ஒரு சிறுகம்பு நட்டுத் தீர்வை செலுத்தும்வரை அவன் வெளியேறக் கூடாதென மறியல் செய்தல்(நாஞ்.); to plant a stick in front of the house of a person whose revenue is in arrears indicating that his movements are restrained till the dues are paid.

*[பள்ளி + கம்பு + வை-,]*

**பள்ளிகொண்ட பெருமாள்** *palli-konda-perumāl,* பெ. (n.) *பள்ளி கொண்டான்*(I.M.P.II, RD,179-c.) பார்க்க; see *pallikondāṉ.*

*[பள்ளி + கொண்ட + பெருமாள்]*

**பள்ளிகொண்டான்[1]** *palli-kondāṉ,* பெ. (n.) கிடந்த திருக்கோலங்கொண்ட திருமால்; thirumāl in the sleeping posture.

*[பள்ளி + கொண்டான்]*

**பள்ளி கொண்டான்[2]** *palli kondāṉ,* பெ. (n.) ஒரு திருமால் தலம்; a Thirumal Shrine,

(வேலூர் மாவட்டத்தில் குடியாத்தம் தொடர் வண்டி நிலையத்திற்குத் தெற்கே மூன்று கல் தொலைவில் பாலாற்றின் கரையில் உள்ள ஓர் ஊர். இங்குள்ள திருமால் பள்ளி கொண்ட கோலத்தோடு விளங்குவார். பிறவிடங்களிலும் பள்ளி கொண்ட கோலமாக இருந்தாலும் இங்கு மட்டும் பள்ளி கொண்டான் என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது. கோயிலிலுள்ள கல்வெட்டுகளில் இருந்து இக்கோயில் கி.பி.பத்தாம் நூற்றாண்டில் இருந்த விக்கிரமச் சோழன் காலத்துக்கு முன்னதாகவே கட்டப்பட்டிருக்க வேண்டுமென்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

**பள்ளிகொள்-(ளு)-தல்** *palli-kol-,* 16. செ.கு.வி. (v.i.) துயில் கொள்ளுதல்; to sleep. *"பள்ளிகொள்கயிறுபோல்"* (சீவக.905.)

*[பள்ளி + கொள்ளு-,]*

**பள்ளிச்சந்தம்**[1] *palli-c-candam,* பெ. (n.) சமண புத்தக் கோயில்களுக்கு விடப்பட்ட சிற்றூர் (S.I.I.ii,**386.**); gift of a village especially to a jaina or buddhist temple.

*[பள்ளி + சந்தம்]*

**பள்ளிச்சாணார்** *palli-c-cāṇār,* பெ. (n.) சென்னைப் பக்கமுள்ள சாணார் வகையினர்; a division of the cāṇār caste around madras.

*[பள்ளி + சாணார்]*

**பள்ளித்தாசரி** *palli-t-tāšari,* பெ. (n.) இரவலரான தமிழ் மாலிய அடியார்(இ.வ.); non brahmin tamil speaking vaisṇava mendicant,

*[பள்ளி + தாசரி]*

தாசரி = skt

**பள்ளித்தாமம்** *palli-t-tāmam,* பெ. (n.) *திருப்பள்ளித் தாமம் (பெரியபு.எறிபத்த.40.)* பார்க்க; see *tirupalli-tāmam.* garland of flowers for the idol. "*கொந்தலர் பள்ளித் தாமங் குஞ்சி நின்றலைந்துசோரப் பைந்தழை யலங்கல் மார்பர் நிலத்திடைப் பதைந்து வீழ்ந்தார்*" (பெரியபு, கண்ணப். **170.**).

*[பள்ளி + தாமம்]*

**பள்ளித்தேவாரம்** *palli-t-tēvāram,* பெ. (n.) **1.** அரண்மனையில் வணங்குந்தெய்வம்; deity or idol worshipped in a palace. **2.** அரண்மனைத் தெய்வத்திற்குரிய பூசை; worship of the deity in a palace.

*[பள்ளி + தேவாரம்]*

**பள்ளித்தொங்கல்** *palli-t-oṅkal,* பெ. (n.) பொன்னாலாகிய கழுத்தணிவகை; golden necklace (I.M.P.cg.**1104.**)

*[பள்ளி + தொங்கல்]*

**பள்ளித்தோழமை** *palli-t-tōlamai,* பெ. (n.) பள்ளிக்கூடத்துநட்பு; school companionship. "*அவனுக்குப் பள்ளித் தோழமை பலித்தபடி*" (ஈடு,**2,1,6,**)

*[பள்ளி + தோழமை]*

**பள்ளிநூலகம்** *palli-nūlagam,* பெ. (n.) பள்ளிக்கூடத்து மாணவர்களுக்குப் பயன்படும் வகையில் உள்ள நூலகம்; school library.

*[பள்ளி + நூலகம்]*

**பள்ளிப்பிள்ளை** *palli-p-pollai,* பெ. (n.) மாணாக்கன்; pupil, student. (கொ.வ.)

*[பள்ளி + பிள்ளை]*

**பள்ளிப்பீடம்** *palli-p-piḍam,* பெ. (n.) *பள்ளிக்கட்டில்,* (T.A.S.iv,**125.**) பார்க்க; see *palli-k-kaṭṭil.*

*[பள்ளி + பீடம்]*

**பள்ளிபடு-த்தல்** *palli-paḍu-,* **20.** செ.குன்றா.வி. (v.t.) அரசர் முதலியோர்க்கு ஈமக்கடன் செய்தல்; to perform the last rites of burial or cremation, as of deceased king. "*இனைந்திரங்கிப் பள்ளிபடுத்தார்களே*" (சீவக. **292.**).

*[பள்ளி + படு-,]*

**பள்ளிபடை** *palli-paḍai,* பெ. (n.) அரசர் முதலியோர்க்குப் புரியும் ஈமக்கடன்; to perform the last rites of burial or cremation, as of a deceased king. "*பள்ளிபடைப் படலம்*" (கம்பரா.) **2.** இறந்த அரசரின் நினைவாகக்கட்டப்பட்ட கோயில்(S.I.I.iii,**24.**); temple erected in memory of kings.

*[பள்ளி + படை]*

**பள்ளிபடைக்கோயில்** *palli-padai-k-koil,* பெ. (n.) *பள்ளிபடை* பார்க்க, see *palli-padai.*

*[பள்ளி + படை + கோயில்]*

**பள்ளிமண்டபம்** *palli-mandabam,* பெ. (n.) *பள்ளிமாடம்* பார்க்க; see *pallimādam.*

*[பள்ளி + மண்டபம்]*

**பள்ளிமாடம்** *palli-mādam,* பெ. (n.) துயிலிடம்; sleeping room, especially of gods or kings. "*பள்ளிமாட மண்டபம்*" (சீவக.146.).

*[பள்ளி + மாடம்]*

**பள்ளிமிசுக்கு** *palli-mišukku,* பெ. (n.) விளைச்சலின் மதிப்புக் கணக்கு(இ.வ.); computation of the estimated value of a crop.

*[பள்ளி + பிசுக்கு]*

**பள்ளியந்துலா** *palli-y-antulā,* பெ. (n.) உறங்கும் பல்லக்கு; pallanquin fitted for sleeping. "*பள்ளியந்துலா வேறுவர்*" (மதுரைப்பதிற்.19.).

ஒருகா; ஆந்தோளி→பள்ளியந்துலா

*[பள்ளி + அம் + துலா]*

ஆயத்தோளி = பல்லக்கு

**பள்ளியம்பலம்** *palli-y-ambalam,* பெ. (n.) *பள்ளிமாடம்* பார்க்க; see *palli- mādam.* "*ஓர்பள்ளியம்பலத்துள் ளினிதிருந்து*" (பெருங்.வத்தவ.133.)

*[பள்ளி + அம்பலம்]*

**பள்ளியயர்-தல்** *palli-y-ayar-,* செ.கு.வி. (v.i.) உறங்குதல்; to sleep. "*ஒள்ளிழை மகளிர் பள்ளியயர*" (மதுரைக்.623.)

*[பள்ளி + அயர்-,]*

**பள்ளியறை** *palli-y-arai,* பெ. (n.) துயிலிடம்; bed chamber "*இற்றைக்கடியேன் பள்ளியறைக் கெய்து*" (அருட்பா,குறியா.10.)

*[பள்ளி + அறை]*

**பள்ளியாண்டு விழா** *palli-y-āndu-vilā,* பெ. (n.) பள்ளிக் கூடத்தில் ஆண்டு தோறும் நடைபெறும் கல்வியாண்டு நிறைவு விழா; school annual day.

*[பள்ளி + ஆண்டு + விழா]*

**பள்ளியாமனைத்தீவு** *pallyāmanai-t-tivu,* பெ. (n.) கீழைக்கரைக்கு நேர் கிழக்கேயுள்ள கடல்நடுத் தீவு. (முகவை.மீன.); an island which is in the east of kila-k-karai.

**பள்ளியின் முக்கூடல்** *palliyinmukkūdal,* பெ. அரியான்பள்ளி எனப்படும் தேவாரம் பெற்ற, திருவாரூர் மாவட்டச் சிற்றூர்; a village in Thiruvārūr Dt.

(அப்பர் பாடல் பெற்ற இவ்வூர் பிற முக்கூடல் போன்று இணைவு காரணமாக அமைந்திருக்கலாம் எனத்தோன்றுகிறது. எனினும் அவரது பாடல்கள் இவ்வூர் பற்றிய எந்த விளக்கத்தையும் தரவில்லை. இன்று திருவாரூர்ப் பக்கத்தில் இவ்வூர் உள்ளது என்று மட்டுமே தெரிகிறது.)

**பள்ளியெழுச்சி** *palli-y-elucci,* பெ. (n.) 1. துயில் நீங்குகை; rising from asleep as of a deity or great person. 2. *திருப்பள்ளியெழுச்சி* பார்க்க; see *tiru-p-*

*palli-y-elicci.* hymn, daily sung to awaken the deity. **3.** அரசர் முதலியோரைத் துயிலெழுப்பும் சிற்றிலக்கியம்(வின்); a poem sung to awaken princes or other great persons from sleep.

*[பள்ளி + எழுச்சி]*

**பள்ளியெழுச்சிமுரசம்** *palli-y-elucci murašam,* பெ. (n.) அரசர் துயில் நீங்கி யெழுதலைக் குறிக்கும் முரசு(வின்); morning drum signifying the rising of a king from his sleep.

*[பள்ளி + எழுச்சி + முரசம்]*

**பள்ளியோடம்** *palli-y-ōdam,* பெ. (n.) படகுவகை (சிலப்.14,74,உரை.); a kind of boat.

*[பள்ளி + ஓடம்]*

**பள்ளியோடவையம்** *palliyōda-vaiyam,* பெ. (n.) பள்ளியோடம் போன்ற வண்டி; a boat-like cart. "*திண்டேர்ப் புரவியைப் பள்ளியோட வையத்திற் பூட்டி*" (பரிபா.20,14,உரை.).

*[பள்ளி + ஓடம் + வையம்]*

**பள்ளிவளர்–தல்** *palli-valar-,* செ.கு.வி. (v.i) *பள்ளியயர்–,*(யாழ்.அக.) பார்க்க; see *palliyar-,*

*[பள்ளி + வளர்–,]*

**பள்ளிவாசகம்** *palli-vāsagam,* பெ. (n.) பள்ளியின் நோக்கத்தைக் காட்டும் முகப்பு மேற்கோள் வாசகம்; motto of the school.

*[பள்ளி + வாசகம்]*

**பள்ளிவாசல்** *palli-vāšal,* பெ. (n.) இசுலாமியர் இறைவனை வழிபடுகிற இடம்; mosque. "*நாள்தோறும் குறைந்தது ஐந்து முறை பள்ளிவாசல் சென்று தொழுகை நடத்துவார்கள் இசுலாமியர்கள்*"

*[பள்ளி + வாசல்]*

**பள்ளிவாளம்** *pallivālam,* பெ. (n.) நச்சுப்பூச்சி வகை (சித்தர் சிந்து); a kind of poisonous insect.

*[பள்ளி + வாளம்]*

**பள்ளிவேட்டை** *palli-vēttai,* பெ. (n.) திருவனந்தபுரத்துப் (பதுமநாபப்) பெருமாள் கோயில் திருவிழாவில் பேரரசரை முதன்மையாகக் கொண்டு, பெருமாள் வேட்டையாடுவதாக நிகழ்த்துந் திருவிழா; a moke-hunt in the temple festival at Trivandrum in which the Maharajah takes the chief part.

*[பள்ளி + வேட்டை]*

**பள்ளு–தல்** *pallu-,* **15.** செ.கு.வி. (v.i.) பளப்பளப்பாதல்; to become glittering. (இஃதோர் வழக்கிறந்த வினை எனப் பாவாணர் (வே.க.101.) குறிப்பிட்டுள்ளார்).

**பள்ளு** *pallu,* பெ. (n.) *பள்* பார்க்க; see *pal.* பிறர் நிலத்தில் உழுது பயிர் செய்யும் தொழிலாளர்களை இலக்கிய மாந்தராகக் கொண்ட சிற்றிலக்கிய வகை; a kind of poetical work having peasants or tenant farmers as characters. "*முக்கூடற்பள்ளு*" என்னும் சிற்றிலக்கிய வகையில் உழவர்களின் வாழ்க்கை முறையினை வெளிக்காட்டி இருக்கிறார்கள் ஆசிரியர் பெயர் தெரியவில்லை

மறுவ: உழத்திப்பாட்டு

*[பள் → பள்ளு]*

**பள்ளு நாடகம்** *paḷḷu nāḍakam,* பெ. (n.) பள்ளர் குலத்தினர் வாழ்க்கை நிகழ்ச்சி பற்றிய நாடகம்; a drama about the pallar caste life events.

(பள் என்பது தாழ்ந்த (பள்ளமான) நன்செய் நிலங்களையும் அங்குச் செய்யப்படும் உழவுத்தொழிலையும் குறிப்பது. ஆகவே பள்ளு என்பது உழவரின் பாட்டுக்குப் பெயராக அமைந்தது. பதினேழாம் நூற்றாண்டில் மோகனப்பள்ளு என்ற ஒரு நூல் இயற்றப்பட்டடது. அந்த நூல் இப்போது முழுமையும் கிடைக்கவில்லை. சில பாடல்களே கிடைக்கின்றன. காவேரியாற்றில் வெள்ளம் வருவதைப்பற்றியும், உழவர்களின் பலவகை மாடுகளைப்பறியும், விதை விதைத்தல், நாற்று நடுதல் முதலான தொழில்வகைபற்றியும் அழகான இசையில் பாடப்பட்ட பாடல்கள் உள்ளன.

இப்போது கிடைக்கும் உழவர் பாடல்கள் கொண்ட பள்ளு நூல்கள் சில உள்ளன. அவற்றுள் இலக்கியச் சிறப்புப்பெற்று விளங்குவது முக்கூடற்பள்ளு என்பதாம். அதைப் பாடியவர் பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த மாலிய சமயப் புலவர். அது ஒரு கதையாக நாடக வடிவில் அமைந்துள்ளது. பண்ணையார் என்பவர் நிலங்களுக்கு உரிமையுள்ள முதலாளி. பள்ளன் என்பவன் உழுது பயிரிடும் தொழிலாளி. அவனுக்கு மனைவியர் இருவர். அவன் இளைய மனைவியிடம் மிக்க அன்புகொண்டு அவளுடன் தங்கி வாழ்வது மூத்தவளால் பொறுக்க முடியவில்லை. பண்ணையாரிடம் சென்று பள்ளன்மேல் குறை கூறுகிறாள். வயல் வேலைகளையும் புறக்கணித்துவிட்டு அவன் இளையவளிடம் காலம் கழிப்பதாகச் சொல்கிறாள். பண்ணையார் பள்ளனை அழைத்துக் கடிந்து கேட்கிறார். பள்ளன் முதலாளியின் சொற்படி நடப்பதாகக் கூறிவிட்டு, உழவு முயற்சியில் ஈடுபடுகிறான்; மறுபடியும் இளையவளின் காதல் அவனைக் கவர்கிறது. கடமைகளை மறக்கிறான். அப்போதும் மூத்த மனைவி முதலாளியிடம் சென்று முறையிடுகிறாள். முதலாளி சினம் கொண்டு அவனுக்குத் தண்டனை கொடுக்கிறார். அவன் தொழுவில் மாட்டப்பட்டுத் துன்பப்படுகிறான். அதைக் கண்டு மூத்த மனைவியின் மனம் நோகிறது. அவனை மன்னித்து விடுதலை செய்யுமாறு அவளே முதலாளியை வேண்டிக்கொள்கிறாள். அவனுக்கு விடுதலை கிடைக்கிறது. உடனே அவன் ஒழுங்காகக் கடமைகளைச் செய்ய முற்படுகிறான். ஒரு மாடு அவனை முட்டித் தள்ளுகிறது. அவன் படுக்கையில் கிடந்து தேறுகிறான். மறுபடியும் உழவுக்கடமைகளைச் செய்கிறான். அறுவடை ஆகிறது, அப்போது கிடைத்த நெல்லைப் பங்கிடும்போது, பள்ளன் தனக்கு உரிய பங்கைத் தரவில்லை என்று மூத்தவள் சுற்றுப் புறத்தாரிடம் முறையிடுகிறாள். இளையவள் சினம் கொள்கிறாள். மூத்தவளும் இளையவளும் ஒருவரை ஒருவர் ஏசுகிறார்கள். இறுதியில் அமைதி அடைகிறார்கள். தலைவனை வாழ்த்துகிறார்கள். இவ்வாறு முக்கூடற்பள்ளு என்ற இந்நூல் அமைகிறது. ஏறக்குறைய இவ்வகையான கதைப் போக்கும் நாடக இயல்பும் கொண்டே மற்றப் பள்ளுநூல்கள் பலவும் அமைந்துள்ளன.

பதினேழு பதினெட்டாம் நூற்றாண்டு களில் சிவனியர்க்கும் மாலியர்க்கும் இடையே தருக்கங்களும் பூசல்களும் இருந்து வந்தன. ஆகவே, அக்காலத்தில் இயற்றப்பட்ட நூல்களிலும் புலவர்கள் அவற்றைப் புகுத்தினார்கள், பள்ளு நூல்களில் வரும் மனைவியர் இருவர்க்குள் நிகழும் பூசலில், ஒருத்தி சிவனியச் சமயத்தாளாகவும் மற்றொருத்தி மாலியச் சமயத்தாளாகவும் கற்பனை செய்து, அவர்கள் ஒருவரை ஒருவர் ஏசும்போது, ஒருத்தி சிவனைப் பழிக்க, மற்றொருத்தி திருமாலைப் பழிப்பதாகப் பாடுவது உண்டு. முக்கூடற்பள்ளு திருமாலின்மேல் அன்பு கொண்ட புலவர் எழுதிய நூல் ஆகையால், மாலியத்துக்குச் சிறப்புத் தரப்படுகிறது. தொன்மக் கதைகள் முதலியன குறிப்பிடப்படுகின்றன.

நாட்டுப்பாடல்களில் மிகுதியாக வழங்கும் சிந்து என்னும் பாட்டு வடிவத்தையும்,

இலக்கியத்தில் உள்ள கலிப்பா என்னும் செய்யுள் வடிவத்தையும், இந்நூலில் கையாண்டிருக்கிறார். எல்லாப்பாடல்களும் நாடகமாந்தரின் கூற்றுகளாவே உள்ளன. புலவர் கூற்றாக ஒன்றும் இல்லை. நாடகமாந்தர் கூறுவனவாக இருப்பதால், அவர்கள் அறிந்த சிற்றூர்ச் செய்திகளாகவே எல்லாம் உள்ளன. ஆற்றில் வெள்ளம் வருதல், மாடுகளின் இயல்பு, விதைகளின் வகைகள், உழவு நடவு அறுவடை முதலிய தொழில் வகைகள், உழவர்களின் பழக்கவழக்கங்கள், அவர்களின் பேச்சு நடைகள் முதலிய பலவற்றையும் பாடல்களில் காணலாம். பிறகு பள்ளுநூல் பாடியவர்கள், இந்த முறையை அவ்வளவாகப் போற்றவில்லை. புலவர்களின் இலக் கியத்திற்கே உரிய அகவல், வெண்பா முதலிய செய்யுள்களையும் பள்ளுநூல்களில் புகுத்தினார்கள், உழவர்களின் பேச்சுக்கு அப்பாற்பட்ட நடையையும் கருத்துகளையும் அவற்றில் அமைத்தார்கள். ஆகையால் அந்தப் பள்ளுநூல்களில் பல நடப்பியலுக்கு அப்பாற்பட்டவையாக உள்ளன. உணர்ச்சியால் தூண்டப்பட்டுப் பாடாமல், அந்தந்த ஊர்மக்களின் மகிழ்ச்சிக்காகத் திருத்தலத் தொன்மங்கள் பல தலங்களுக்கும் பாடப்பட்டமைபோல், அந்தந்த ஊர்களைப் புகழ்வதற்காகவும், அங்கங்கே வாழ்ந்த செல்வர்களைப் புகழ்வதற்காகவும் பள்ளுநூல்களைச் சில புலவர்கள் இயற்றினார்கள். பறாளை விநாயகர் பள்ளு, கதிரைமலைப் பள்ளு, குருகூர்ப் பள்ளு முதலியன தலங்களைச் சிறப்பிப்பதற்காக எழுதப்பட்டவை. நாற்பது பள்ளு நூல்களைப்பற்றி இப்போது அறியமுடிகிறது. வேறு பல, காலத்தால் மறைந்து போயிருக்கலாம். இராம நாடகம் என்ற செய்யுள் நாடக நூல் பாடிப் புகழ்பெற்ற அருணாசலக் கவிராயரும் சீகாழி என்ற தலத்தைப்பற்றிய 'சீகாழிப்பள்ளு' என்ற நூல் பாடினார். அந்த நூலின் பாடல்களில் இப்போது ஐந்துமட்டுமே கிடைக்கின்றன.

பிற்காலத்தில் என்னயினாப்புலவர், மேடையில் முக்கூடற்பள்ளு நடிக்கப் படுவதற்கு ஏற்ற வகையில் பலவற்றைச் சேர்த்து அமைத்து 'முக்கூடற்பள்ளு நாடகம்' என்ற பெயரால் எழுதினார். அது பல இடங்களிலும் நடிக்கப்பட்டு வந்தது. அந்த நூல் 320 செய்யுள் கொண்டது. அதில் கோமாளி ஓர் இலக்கிய மாந்தனாகச் சேர்க்கப் பட்டிருக்கிறான். மக்கள் கண்டு சுவைத்து மகிழ்வதற்காகக் கதைப் போக்கிலும் புதிய நிகழ்ச்சிகள் சில சேர்க்கப்பட்டன.

**பள்ளை** *pallai,* பெ. (n.) **1.** குள்ளம்; that which is short and stocky, as a person or an animal. **2.** ஆடு. (பிங்.); sheep or goat. **3.** ***பள்ளையாடு*** பார்க்க; see *pallaiyāḍu.* **4.** வயிறுபருத்த விலங்கு (யாழ்.அக.); pot-bellied animal.

*[பள் → பள்ளை]*

பழங்கன்னடம்; பட்டெ. (செல்வி. '75 சித். பக். 431.)

**பள்ளுவிலி** *palluvili,* பெ. (n.) ஒரு குலம் (யாழ்ப்.); a caste.

*[பள்ளு → பள்ளுவிலி]*

**பள்ளைச்சி** *pallaicci,* பெ. (n.) குள்ளமானவள்(யாழ்ர்.); dwarfish woman.

*[பள்ளை → பள்ளைச்சி]*

**பள்ளைச்சூடன்** *pallai-c-cūḍaṉ,* பெ. (n.) ஒருவகைக் கருப்பூரம்; a variety of camphor. (சா.அக.)

**பள்ளையம்** *pallaiyam,* பெ. (n) **1.** உண்கலம்; dish. (w.) **2.** சிறுதெய்வத்துக்குப் படைக்கும் படையல்; offerings to demons or inferior deities.

ம. பள்ளயம்.

*[பள் → பள்ளையம்]*

**பள்ளையம்போடு-தல்** *pallaiyam-pōdu-,* **20.** செ.கு.வி. (v.i.) தெய்வத்திற்குமுன் சோறு கறி முதலியவற்றைப் படைத்தல்; to spread before a deity offerings of rice, vegetables, etc;

*[பள் → பள்ளையம் + போடு-,]*

(செல்வி '75 வைகாசி பக். 463.)

**பள்ளையன்** *pallaiyan,* பெ. (n.) குறுகிப் பருத்தவன் (யாழ்.அக.); short and stocky man.

*[பள் → பள்ளை → பள்ளையன்]*
(செல்வி '75 சித்திரை பக். 431.)

**பள்ளையாடு** *pallai-y-ādu,* பெ. (n.) குள்ளமான ஆட்டுவகை. (பதார்த்த.148,உரை.); a species of dwarf goat.

**ம.** பள்ளையாடு

*[பள் → பள்ளை + ஆடு]*

**பளக்கு** *palakku,* பெ. (n.) கொப்புளம்; bubble. "*பளக்கு மூக்குடையான்*" (சிவதரு. சுவர்க்க நரக.30.).

*[புல் → பல் → பள் → பளக்கு]*

**பளகம்**[1] *palagam,* பெ. (n.) மலை; mountain. "*பளகமன்ன....தேர்*" (பாரத.இரண்டாம்போ.5)

**பளகம்**[2] பெ. (n.) பவளம் (யாழ்.அக.); coral.

*[பவளம் → பளகம்]*

**பளகர்** *palagar,* பெ. (n.) **1.** மூடர்; stupid persons. "*பருந்திரைகொள்ள மெய் வீழ்வது காணும் பளகர்களே*" (திருநூற்.60.) **2.** குற்ற முடையவர்; guilty persons. "*பஞ்சபூதப் பளகீரும்வசமன்றே*" (தேவா.717,3.)

*[பளகு → பளகர்]*

**பளகு** *palagu,* பெ. (n.) குற்றம்; guilt. "*பளகறுத் துடையான் கழல் பணிந்திலை பரகதி புகுவானே*" (திருவா8. 5, 35).

**தெ.** பலுகு

*[பள்கு → பளகு]* (மீட்போலை-சூன்-சூலை.84பக்46)

**பளபள-த்தல்** *pala-pala-,* **11.** செ.கு.வி. (v.i.) ஒளிவிடுதல்; to glitter, shine, as hair well-oiled, as a surface well-polished. "*பளபளக்கும் நிலைவெள்ளிக் கலங்களில் உணவு வந்தது*".

*[பளபள → பளபள-,]*

**பளபளப்பு**[1] *palapalappu,* பெ. (n.) ஒளியால் ஏற்படும் மினுமினுப்பு; glitter; sheen. "*வாள் கூர்மையாகப் பளபளப்பாக இருந்தது*". "*பல முறை துவைத்து விட்ட பிறகும் துணியின் பளபளப்புக் குறைய வில்லை*".

*[பளபள → பளபளப்பு]*

**பளபளப்பு**[2] *palapalappu,* பெ. (n.) ஒளி; glittering, lustre, radiance. "*வரவரப் பளபளப்பாகி*" (குனிப்பா, i, 260, 1) **2.** பாடல்நயம்; refinement, as of words in poetry. "*பளபளப்பினிய சொற்கமைய வேண்டும்*" (குமரே. சத. 86)

**க.** பளக்கனெ

*[பளபள → பளபளப்பு]*

**பளபளவெனல்** *pala-pala-v-enal,* பெ. (n.) **1.** ஒளிக்குறிப்பு; expr. signifying glittering. "*பளபளென மெய்யை யுரப்பாக்கும்*" (பதார்த்த. 1202) glittering **2.** ஒலிக்குறிப்பு; bursting sound.

*[பள + பள + எனல்]*

**பளபளா** *pa*ḷ*a-pa*ḷ*a*, (யாழ்.அக.) 1. இன்மைக் குறிப்பு; word expressing 'no'. 2. *பளாபளா* பார்க்க; see *pa*ḷ*āpa*ḷ*ā*.

*[பளபள → பளபளா,]*

**பளா** *pa*ḷ*ā*, int *பளாபளா* பார்க்க; see *pa*ḷ*ā pa*ḷ*ā*.

**பளாபளா** *pa*ḷ*ā-pa*ḷ*ā*, int. வியப்புக் குறிப்பு; word ironically expressing 'fine' or ' bravo' "*பளாபளாவதிக வெகுமானமாகும்*" (திருவேங். சத. 29)

*[பளா + பளா]*

**பளார்என்று** *pa*ḷ*ār-e*ṉṟ*u*, வி.அ. (adv.) அடி, அறை போன்றவை சுரீரென்று வலிக்கும்படி ஓசையோடு; (of slap, etc.) with a sharp sound. "*மறுமொழி சொல்வதற்குள் பளாரென்று கன்னத்தில் ஓர் அறை விழுந்தது*". "*பளாரென்று அடித்துவிட்டார்.*"

**பளிக்கறை** *pa*ḷ*ikkarai*, பெ. (n.) *பளிக்கறை மண்டபம்* பார்க்க; see *pa*ḷ*ikkarai ma*ṇḍ*abam*. "*பளிக்கறைபுக்க காதை*" (மணிமே. 4).

*[பளிங்கு + அறை]*

**பளிக்கறை மண்டபம்** *pa*ḷ*ikka*ṟ*ai-ma*ṇḍ*apam*, பெ. (n.) பளிங்குக் கற்களால் செய்யப்பட்ட மாளிகை; crystal palace. "*மெய்புறத்திடூஉம் பளிக்கறை மண்டபமுண்டு*" (மணிமே. 3, 64.)

*[பளிக்கறை + மண்டபம்]*

**பளிக்காய்** *pa*ḷ*ikkāy*, பெ. (n.) பச்சைக் கருப்பூரங் கலந்த பாக்கு. (பெருங்.இலாவாண. 2,72.); areca-nut mixed with refined camphor.

*[பளிங்கு[1] + காய்]*

**பளிக்குமாடம்** *pa*ḷ*ikku-mā*ḍ*am*, பெ. (n.) *பளிக்கறை மண்டபம்* பார்க்க; see *pa*ḷ*ikka*ṟ*ai ma*ṇḍ*abam*. "*எரிமணிப் பளிக்குமாடத் தெழுந்ததோர் காமவல்லி*" (சீவக.549.)

*[பளிங்கு + மாடம்]*

(பளிங்கு → பளிக்கு–வலித்தல் விகாரம்)

**பளிக்குவயிரம்** *pa*ḷ*ikku-vayiram*, பெ. (n.) வயிரவகை; diamond. "*உதரபந்தனம் ஒன்றில் தடவிக்கட்டின......பளிக்கு வயிரம் இரண்டும்*" (S.I.I.ii,164,118.)

*[பளிங்கு → பளிக்கு + வயிரம்]*

**பளிங்கம்** *pa*ḷ*ingam*, பெ. (n.) 1. கட்டுக் கொடை என்னும் பெரும்பறவை; indian roller (a bird of large size.) 2. கஞ்சாங்கோரை; white basil. (சா.அக.)

**பளிங்கறை** *pa*ḷ*inga*ṟ*ai*, பெ. (n.) பளிங்குப் பாறை; crystal rock. "*தண்டலை மருங்கும் பளிங்கறை சூழ்தலங்களினும்*" (சேதுபு. திருநாட்.6.)

*[பளிங்கு + அறை]*

**பளிங்கீச்சான்** *pa*ḷ*inki-c-cā*ṉ, பெ. (n.) கொசுப்புழுக்களைத்தின்னும் ஒருவகைச் சிறு கடல்மீன் வகை; a small sea fish living on mosquito, warms in the sea. (சா.அக.)

**பளிங்கு[1]** *pa*ḷ*ingu*, பெ. (n.) 1. படிகம்; crystal, crystal quarte. "*அடுத்தது காட்டும் பளிங்குபோல்*" (குறள்,706.) 2. கண்ணாடி (யாழ்.அக.); mirror. 3. வெள்ளி (பிங்.); the

planet venus. 4. கருப்பூரம்; camphor, "*முப்பழநீர் பளிங்களைஇ*" (சீவக.2356.)

"*பளிங்கு போன்றமனம்*"

**பிரா.** பளிக,ஸ்படிக.

**மறுவ:** படிகம், பளிங்கு, பருக்கை, காழ்.

*[பளி → பளிங்கு]* வே.க.101.

**பளிங்கு²** *paliṅgu,* பெ. (n.) *அழுங்கு* பார்க்க; see *alunku-* indian scaly ant eater.

*[பள் → பளி → பளிக்கு → பளிங்கு]*

**பளிங்கு³** *paliṅgu,* பெ. (n.) ***பளிஞ்சி*** பார்க்க; (j.) see *paliñji.*

*[பளிக்கு → பளிங்கு]*

**பளிங்குக்கல்** *paliṅgu-k-kal,* பெ. (n.) *பளிங்கு¹,1.* பார்க்க; see *palingu¹.*

*[பளிங்கு + கல்]*

**பளிங்குக்கீச்சான்** *paliṅgu-k-kiccāṉ,* பெ. (n.) ஒரு வகை மீன்; a kinid of fish.

[(இதன் முதுகுப் பரப்பு நீலம் படர்ந்த சாம்பல் நிறமுடையது. கீச் கீச்சென்று பறவையைப் போன்ற ஒலியெழுப்புந் தன்மை இதன் குறிப்பிடத்தக்க பண்புகளிலொன்று இதன் வேறு பெயர் கிளிமீன். (செங்கை. மீன.)]

**பளிங்குக்குருவங்கம்** *paliṅgu-k-kuruvaṅgam,* பெ. (n.) தொழில் முறையில் அல்லது மருத்துவத்தில் பயன்படுத்தும் ஒரு வகை வங்கபற்பம்; an oxide of lead used in medicine. (சா.அக.)

*[பளிங்கு + குருவங்கம்]*

**பளிங்குச்சாம்பிராணி** *paliṅgu-c-cāmbirāṇi,* பெ. (n.) பளிங்கு போன்ற வெண்மையான சாம்பிராணி; white crystals of frankinceuse. (சா.அக.)

*[பளிங்கு + சாம்பிராணி]*

சாம்பிராணியைச் சுராலை என்பது தமிழ்வழக்கு.

**பளிங்குச் செய்ந்நஞ்சு** *paliṅgu-c-cey-n-nañju,* பெ. (n.) வெள்ளைச் செய்ந்நஞ்சு; white arsenic. (சா.அக.)

*[பளிங்கு + செய்ந்நஞ்சு]*

**பளிங்குப்பாத்திரம்** *paliṅgu-p-pāttiram,* பெ. (n.) கண்ணாடி ஏனங்கள்; glassware. (சா.அக.)

*[பளிங்கு + பாத்திரம்]*

பாத்திரம் = skt.

**பளிங்குப்பு** *palinguppu,* பெ. (n.) 1. பாறையுப்பு; rock salt. 2. ஒருவகைக் கல்லுப்பு; crystals of salt. (சா.அக.)

*[பளிங்கு + உப்பு]*

**பளிங்குப்புட்டி** *paliṅgu-p-puṭṭi,* பெ. (n.) கண்ணாடிக் குப்பி; glass bottle. (சா.அக.)

**பளிங்குமத்து** *paliṅgumattu,* பெ. (n.) கண்ணாடியாற்செய்த மருந்தரைக்கும் மத்து; a glass pestle for grinding or powdering and mixing up of medicines. (சா.அக.)

*[பளிங்கு + மத்து]*

**பளிங்குமாசிக்கட்டி** *paliṅgumāši-k-katti,* பெ. (n.) பளிங்குருவான வங்கம்; an oxide of lead iitharge. (சா.அக.)

*[பளிங்கு + மாசிக்கட்டி]*

**பளிங்குவடம்** *paḷiṅgu-vaḍam,* பெ. (n.) படிகமாலை; necklace of crystal beads.

*[பளிங்கு + வடம்]*

**பளிங்குறை** *paḷiṅguṟai,* பெ. (n.) பளிங்குப்பாறை; crystal rock. "*தண்டலை மருங்கும் பளிங்கறை சூழ் தலங்களினும்*" (சேதுபு.திருநாட்.6.)

**பளிங்கைக்கயிறு** *paḷiṅgai-k-kayiṟu,* பெ. (n.) கயிறுவகையு ளொன்று; a kind of rope (சா.அக.)

*[பளிங்கு + கயிறு]*

**பளிச்சட்டியெனல்** *paḷiccaṭṭi-y-eṉal,* பெ. (n.) ஒளிவீசற்குறிப்பு; expr, signifying gleaming, flashing.

*[பளிச்சட்டி + எனல்]*

**பளிச்சிடு-தல்** *paḷiccidu-,* 20. செ.கு.வி. (v.i.) கண்ணைப் பறிக்கும் வகையில் மின்னுதல்; ஒளிவீசுதல்; flash; shine brightly gleam. "*மின்னல் பளிச்சிட்டு மறைந்தது*" "*இருட்டில் பளிச்சிட்ட ஊர்தி விளக்குகளால் கண்கள் கூசின*" (உ.வ.) "*அவர் பேச்சிலேயே அவரது ஆழ்ந்த அறிவு பளிச்சிட்டது*"

*[பளிச் → பளிச்சிடு-,]*

**பளிச்சுநடுவு** *paliccu-natuuv,* பெ. (n.) அதிக இடைவெளி விட்டு நடப்பட்ட நடவு; (in agriculture) transplantation.

மறுவ: பளிச்சி நடவு.

*[பளிச்சு + நடவு → நடுவு]*

**பளிச்சுப்பளிச்செனல்** *paḷiccu-p-paḷicc-eṉal,* பெ. (n.) ***பளிச்செனல்*** பார்க்க; see *paḷicceṉal.*

*[பளிச்சு + பளிச்சு + எனல்]*

**பளிச்செனல்** *paḷicceṉal,* பெ. (n.) 1. ஒளிவீசற்குறிப்பு; expr. signifying flashing, shining. 2. விரைவுக் குறிப்பு; promptness, repiddity 3. தெளிவுக்குறிப்பு; sharp pain. 4. நோதற் குறிப்பு; decidedness; vividness '*பளிச்சென்று குத்துகிறது*'

*[பள் → பளி → பளிச்சு → பளிச்செனல்]* (வே.க.101.)

**பளிஞ்சி** *paliñji,* பெ. (n.) தோணிக்கயிறு; back-stay rope (naut.)

**பளிதச்சுண்ணம்** *paḷida-c-cuṇṇam,* பெ. (n.) பச்சைக்கருப்பூரங் கலந்த பொடி; fragrant powder mixed with refined camphor "*நாவிக்குழம்பொடு பளிதச் சுண்ணம்*" (சீவக.2994.)

*[பளிதம் + சுண்ணம்]*

**பளிதம்**[1] *paḷidam,* பெ. (n.) 1. கருப்பூரம்(சூடா.); camphor. "*மருமிகுந்திடுபளிதகுங்குமம்*" (சிவரக.சுகமுநி.23.) 2. பச்சைக் கருப்பூரம்; refined camphor. "*பாசிலைத் திரையலும் பளிதமும் படைத்து*" (மணிமே.28,243.) 3. பல்லம் என்னும் ஒரெண்; a kind of number.

*[பள → பளிதம்]* (வ.மொ.வ.203)

**பளிதம்[2]** *paḷidam,* பெ. (n.) 1. ஒரு பேரெண். (சூடா.); a very great number. 2. பச்சடி; a semi fluid vegetable relish. "*பொரிக்கறிபளிதம் பாகு புளிங்கறி*" (பிரபுலிங்.ஆரோகண34.)

*[பல் → பள் → பளி → பளிதம்]*

**பளீரிடு-தல்** *paḷiriḍu-,* 20. செ.கு.வி.(v.i.) *பளிச்சிடு-,* பார்க்க; see *paḷiccitu.*

**பளீரெனல்** *paḷir-eṉal,* பெ. (n.) அ. ஒளிவீசற்குறிப்பு; (expr. signifying) gleaming fleshing. ஆ. ஒலிக்குறிப்பு; clashing, cracking, clanging. இ. நோதற்குறிப்பு; throbbing, aching.

*[பளீர் + எனல்]*

**பளு[1]** *paḷu,* பெ. (n.) *பளுவு* பார்க்க; see *paḷuvu.*

*[பல் → பள் → பளு]* (வே.க.)

**பளு[2]** *paḷu,* பெ. (n.) 1. (பொருளின்) கனம்; heaviness. "*இவ்வளவு பளுவாக இருக்கும் கல்லை இந்த வண்டியில் ஏற்ற முடியாது*" "*மூட்டை பளுவாக இருக்கிறது*" 2. (வேலை, வரி முதலியவற்றில்) சுமை; burden (of work, taxation, etc) "*அலுவலகத்தில் வேலைப் பளு அதிகம்*" "*வரிப்பளுவைக்குறைக்க வேண்டும்*" (*உ.வ.*)

*[பல் → பள் → பளு]* (வே.க.)

**பளுதூக்கி** *paḷu-tūkki,* பெ. (n.) தடித்த கம்பிகளைப் பயன்படுத்திக் கனமான பொருள்களைத் தூக்கும் ஒரு வகைப் பொறி; crane. "*துறைமுகத்தில் பளுதூக்கியைப் பயன்படுத்துவார்கள்*"

*[பளு + தூக்கி]*

**பளுதூக்கும்போட்டி** *paḷutūkkum-pōṭṭi,* பெ. (n.) வட்டவடிவ இரும்பு எடைகள் இரு முனைகளில் இணைக்கப்பட்ட இரும்புக் கம்பியைக் குறிப்பிட்ட முறையில் தலைக்கு மேல் தூக்கிப் பிடிக்கும் ஒரு விளையாட்டுப் போட்டி; weight lifting. "*ஆசிய விளையாட்டுப் போட்டிகளிலும் ஒலிம்பிக்குப் போட்டிகளிலும் பளுதூக்கும் போட்டி நடைபெறுகிறது*"

*[பளு + தூக்கும் + போட்டி]*

**பளுவு** *paḷuvu,* பெ. (n.) 1. கனம்; heaviness. 2. கடுமை; severity. 'நோய் பளுவாயிருக்கிறது'

**தெ.** பலுவு

**பளை** *paḷai,* பெ. (n.) விலங்கு முதலியவற்றின் வளை (யாழ்ப்.); hole; lair of a beast.

*[வளை → பளை]*

**பற்கட்டு-தல்** *paṟkaṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) 1. ஏதேனும் நோயால் பற்கள் கட்டிக்கொண்டு நோயாளி துன்பப்படல்; tooth ache. 2. சொத்தை விழுந்த பற்களுக்குப் பகரமாகவோ எல்லாப் பற்களையும் எடுத்துவிட்டோ பொய்ப்பற்கள் கட்டிக் கொள்ளுதல்; setting of artificial teeth.

*[பல் + கட்டு-.]*

**பற்கடி-த்தல்** *paṟ-kaḍi-,* 4. செ.கு.வி. (v.i.) சினம் முதலியவற்றால் பல்லைக் கடித்தல்; to gnash the teeth, as in anger.

*[பல் + கடித்தல்]*

**பற்கறை** *paṟ-kaṟai,* பெ. (n.) 1. பல்லிற் கட்டியாய்த் திரண்டிருக்கும் ஊத்தை; tartar. 2. பற்களிலில் ஏற்றிய கறுப்புக்கறை; artificial blackness of the teeth. 3. குருக்கத்தி; fig. (சா.அக.)

*[பல் + கறை]*

**பற்காட்டு—தல்** *par-kāṭṭu-,* **5.** **செ.கு.வி.** (v.i.) **1.** சிரித்தல்; to grin. **2.** பல்லைக் காட்டிக் கெஞ்சுதல்; to cringe. "*நீயருள்க வெமக்கென்று பற்காட்டி நிற்பவர்போல்*" (திருவாத.பு.திருப்பெருந்.201.)

*[பல் + காட்டு—,]*

**பற்காவி** *paṟ-kāvi,* **பெ.** (n.) **1.** வெற்றிலை பாக்குப்போடுவதால் பல்லில் ஏறிய செந்நிறம்; red colour on the teeth due to a kind of ochre or composition of betel. **2.** காசுக்கட்டி; lowny foliaged cutch.

*[பல் + காவி(வு)]*

**பற்காறை** *paṟ-kāṟai,* **பெ.** (n.) **1.** *பற்கறை* பார்க்க; see *parkaṟai.* **2.** *பற்காவி* பார்க்க; see *paṟkāvi.*

*[பல் + காறை]*

**பற்கிட்டு—தல்** *paṟ-kiṭṭu,* **10.** **செ.கு.வி.** (v.i.) பல்லைக்கிட்டிக்கும் ஒரு நோய்; tetanus.

*[பல் + கிட்டு—,]*

**மறுவ:** தாட்கிட்டிசன்னி

**பற்கிளிஞ்சல்** *paṟkiliñjal,* **பெ.** (n.) ஒரு வகைக் கடல்படு கிளிஞ்சல் (நெல்லை,மீன.); a kind of shell.

*[பல் + கிளிஞ்சல்]*

**பற்குச்சி** *paṟ-kucci,* **பெ.** (n.) பல்விளக்கும் சிறுதும்பு; fibrous stick used as a tooth-brush.

*[பல் + குச்சி]*

**பற்குச்சு** *paṟ-kuccu,* **பெ.** (n.) *பற்குச்சி (யாழ்.அக.)* பார்க்க; see *paṟkucci.*

*[பல் + குச்சு]*

**பற்குடைச்சல்** *paṟ-kuḍaiccal,* **பெ.** (n.) **1.** பல்நோவு; tooth-ache. **2.** சொத்தைப்பல்; carious tooth.

*[பல் + குடைச்சல்]*

**பற்குத்தி** *paṟ-kutti,* **பெ.** (n.) பற்சந்திலகப் பட்டதை நீக்க உதவுங்குச்சி; tooth pick.

**மறுவ.** பற்குற்றி.

*[பல் + குத்தி]*

**பற்குத்து** *paṟ-kuttu,* **பெ.** (n.) *பற்குடைச்சல்,* பார்க்க **1.** (கடம்பபு.இலீலா.101.) see *paṟkuttu.*

*[பல் + குத்து]*

**பற்குற்றி** *paṟkuṟṟi,* **பெ.** (n.) பல்லிடுக்குகளில் தங்கியுள்ள நுண்ணிய பொருள்களைக் குற்றியெடுக்கும் ஊசியைப் போன்ற கருவி; tooth pick for removing dirt in the teeth.

*[பல் + குத்து → குற்று → குற்றி]*

**மறுவ.** பல்குத்தி.

**பற்குறவை** *paṟkuṟavai,* **பெ.** (n.) கருப்புக் குறவை மீன்; a kind of kuṟavai. (சா.அக.)

*[பல் + குறவை]*

**பற்குறி** *paṟ-kuṟi,* **பெ.** (n.) கலவிக் காலத்து மகளிர் உதட்டில் ஆடவர் பற்பட்டு உண்டாம் தழும்பு; (erot.) marks of a man's teeth on a woman's lips.

*[பல் + குறி]*

**பற்கொம்பு** *paṟ-kombu,* பெ. (n.) *பற்குச்சி* பார்க்க; see *paṟkucci.*

*[பல் + கொம்பு]*

**பற்கோலா** *paṟkōlā,* பெ. (n.) பற்கள் கூர்மையாய் அல்லது பெரிதாயுள்ள ஒரு கடல் மீன்; sharp teethed and big size sea fish. (சா.அக.)

*[பல் + கோலா]*

**பற்சர்** *paṟcar,* பெ. (n.) பகைவர்; foes, enemies. (w.)

**பற்சாரம்** *paṟcāram,* பெ. (n.) ஒருவகை நோய் (பரராச, i, 235.); a kind of disease.

*[பல் + சாரம்]*

**பற்சீவி** *paṟcivi,* பெ. (n.) பல்விளக்கி; a brush to clean the teeth.

*[பல் + சீவி]*

**பற்சீவு–தல்** *paṟ-sivu-,* 5. செ.கு.வி. (v.i.) பல்விளக்குதல்; to clean the teeth. "***கோடாகிய கோலாலே பற்சீவி***" (சீவக.803, உரை.)

*[பல் + சீவு–,]*

**பற்சீவுங்கோல்** *paṟ-civuṅ-kōl,* பெ. (n.) *பற்குச்சி,* **(திவா.)** பார்க்க; see *paṟkucci.*

*[பல் + சீவும் + கோல்]*

**பற்சொத்தை** *paṟ-cottai,* பெ. (n.) பல்லிற் பூச்சிவிழும் நோய்; caries of the teeth. (m.l.)

*[பல் + சொத்தை]*

**பற்சோதி** *parcōti,* பெ. (n.) 1. கடலை; bengal gram. 2. பல்லின் துலக்கம்; brilliancy of the teeth. 3. பல்லின் பளிங்கு; enamel of the teeth. (சா.அக.)

**பற்பசை** *parpašai,* பெ. (n.) பல் துலக்குவதற்குப் பயன்படுத்தும் வேதிப் பொருள்களால் செய்யப்பட்ட வழுவழுப்புத் தன்மை உடைய பொருள்; tooth paste.

*[பல் + பசை]*

**பற்படகம்** *paṟpaḍagam,* பெ. (n.) சிறுபூடுவகை; fever plant,

மறுவ: பற்படகம், பிற்படம், பற்பாடகம், பற்படாகம்

*[பற்பாடகம் → பற்படகம்]*

**பற்படிகம்** *paṟpadikam,* பெ. (n.) சிவப்பாதளை; red physicnut. (சா.அக.)

*[பல் + படிகம்]*

**பற்பணம்** *paṟpaṉam,* பெ. (n.) 1. ஒருபலங் கொண்ட நிறையளவு (தைலவ.தைல.); a standard weight palam. 2. பாவட்டை; Indian paretha.

*[பல் + பணம்]*

**பற்பமாக்கல்** *paṟpamākkal,* பெ. (n.) புடமிட்டு நீறாக்கல்; reducing to an oxide by process of calcination. (சா.அக.)

*[பற்பம் + ஆக்கல்]*

**பற்பரி** *paṟpari,* பெ. (n.) தைவேளைப்பூடு; five leaved cleame.

**பற்பல** *par-pala,* பெ. அ. (adj.) வெவ்வேறான, பல வகையான; different; various "*பற்பல மொழிகளைப் பேசுபவர்கள் நிறைந்த நாடு*" "*அரசு ஊழியர்களுக்குப் பற்பல சலுகைகள் அறிவிக்கப்பட்டுள்ளன.*"

**பற்பாசகம்** *parpāšgam,* பெ. (n.) கருந்தகரை; black species of foetid cassia.

**பற்பாசி** *parpāši,* பெ. (n.) **1.** பல்காறை; serumal tartar. **2.** காய்ச்சலால் பற்களில் படியும் மாசு; dry crusts or the dark brown foul matter which collect on the lips and teeth as in fevers.

*[பற்பம் + பாசி]*

**பற்பாடகம்** *parpaḍākam,* பெ. (n.) *பற்படகம்* **(நாமதீப.310.)** பார்க்க; see *parpaḍakam.*

மறுவ: குத்துத்திராய்

**பற்பாறை** *parpārai,* பெ. (n.) செங்காந்தள்; red november flower plant. **(சா.அக.)**

*[பல் + பாறை]*

**பற்பீர்க்கு** *par-pirkku,* பெ. (n.) வெள்ளைப் பீர்க்கு **(மலை.)**; sponge gourd.

*[பல் + பீர்க்கு]*

**பற்பேத்தை** *par-pēttai,* பெ. (n.) பல்லரணை என்னும் பல்லீற்று நோய்; gum boil (j.) perts aveloar abscess.

**பற்பொடி** *par-poḍi,* பெ. (n.) பல்துலக்குவதற்குப் பயன்படுத்தும் வேதியியல் அல்லது மூலிகைப் பொடி; toothpowder.

*[பல் + பொடி]*

**பற்ற** *parra,*(இடை.) *part.* **1.** முன்னிட்டு; with refecence to '*அதைப் பற்ற*' **(திருவிருத். 44, 256) 2.** ஒட்ட; very closely or completly **3.** காட்டிலும்; than '***அதைப்பற்ற இது நல்லது***'.

*[பற்று → பற்ற]*

**பற்றகற்றி** *parrakarri,* பெ. (n.) மடைக்கலஞ் சுறண்டுங் கருவி; scraper, instrument for cleaning the inside of a vessel.

*[பற்று + அகற்றி]*

**பற்றச்சுடு—தல்** *parra-c-cuḍu-,* **18.** செ.குன்றா.வி (v.t.) ***பற்றவை—,*** பார்க்க; see *parravai-,*

*[பற்ற + சுடு—,]*

**பற்றடி—த்தல்** *parradi-,* **4.** செ.கு.வி. (v.i.) சுவர் முதலியவற்றிற்கு ஒட்டிடுதல் **(யாழ்.அக.)**; to fill up the interstices as of a wall.

*[பற்று + அடி —,]*

**பற்றடைப்பு** *parradaippu,* பெ. (n.) வேளாண்மைக்காக நிலத்தைக் குடிகளிடம் விடுங் குத்தகை; lease for cultivation. ''*பற்றடைப்பில் நாடுகளெல்லாம்*'' **(கொண்டல்விடு.85.)**

*[பற்று + அடைப்பு]*

**பற்றம்** *parram,* பெ. (n.) **1.** கற்றை; collection, mass, as of hair. "*குழற் பற்றத்தையும்*" **(சீவக.1707) 2.** கூட்டம்; crowd, multitude "*ஆட்டுப்பற்றம்*" (nāñ) **3.** கனம்; thickness, bulk. (j.) **4.** வீக்கம்; swelling. **5.** துணையாகப் பிடிக்கை; grasping, takinghold, bearing (j.) **6.** நன்றியறிவு; gratitude (j.)

*[பற்று → பற்றம்]*

**பற்றம்பிடி—த்தல்** *parram-pidi-*, **4.** **செ.குன்றா.வி.** (v.t.) இருவர் சேர்ந்து தாங்குதல். (யாழ்.அக.); to lift together, as two persons.

*[பற்றம் + பிடி—,]*

**பற்றல்** *parral*, பெ. (n.) தண்ணீர் பாய்வதற்கு மரத்தாலேனும் கல்லாலேனும் மேல்மூடியின்றிச் செய்யப்படுவது; a kind of open conduit-pipe made either of wood or stone. (nañ.)

*[பற்று → பற்றல்]*

**பற்றலம்பு—தல்** *parralambu*, **9.** **செ.கு.வி.** (v.i.) சமைத்த கலங்களைக் கழுவுதல்; to wash dishes.

*[பற்று + அலம்பு—,]*

**பற்றலர்**[1] *parralar*, பெ. (n.) பகைவர் (திவா.); enemies. *"பற்றலர்த முப்புரம்"* (தேவா.89,6.)

*[பற்று + அல்லாதவர் → அலர்]*

**பற்றவை—த்தல்** *parra-vai-*, **4.** **செ.குன்றாவி.** (v.t.) **1.** மாழைகளைப் பொருத்துதல்; (வழக்.) to solder, weld together. **2.** நெருப்பு மூட்டுதல்; to kindle, as fire. **3.** பகை விளைத்தல்; to make enemies; to sow discord.

*[பற்ற + வை—,]*

**க.** பட்டீசு.

**பற்றற்றார்** *parrarrār*, பெ. (n.) முனிவர் (வழக்.) saint, sage.

*[பற்று + அற்றார்]*

**பற்றற்றான்** *parrarrān*, பெ. (n.) **1.** *பற்றிலான்* பார்க்க; see *parrlān*. *"பற்றுக பற்றற்றான் பற்றினை"* (குறள்,350.) **2.** முனிவன்(உரி.நி); sage.

*[பற்று + அற்றான்]*

**பற்றற** *parrara*, வி.எ. (adj.) முழுதும்; exhaustively, entirely. *"மிகுந்தவையெல்லாம் பற்றற அழிந்து"* (குரிபரம். 166.)

**ம.** பற்றற

*[பற்று + அற]*

**பற்றறு—த்தல்** *parraru-*, **4.** **செ.குன்றா.வி.** (v.t.) தீர்மானித்தல்; to decide. *"வழக்குகளைப் பற்றறுத்து வருவே னான் உன்னிடத்தில்"* (வ.க.42.)

*[பற்று + அறு—,]*

**பற்றறுதி** *parrarudi*, பெ. (n.) முழுதுந் தொடர்பறுகை; absolute sverance of connectin. *'அற்றறுதி பற்றறுதியாய் விட்டது'*

*[பற்று + அறுதி]*

**பற்றாக்குறை** *parrā-k-kurai*, பெ. (n.) **1.** தேவைக்கும் குறைவாக உள்ள நிலை; கட்டுப்பாடு; scarcity; shartage. *"வறட்சியினால் தண்ணீர்ப் பற்றாக்குறை ஏற்பட்டுள்ளது"* *"மின்சாரப் பற்றாக்குறை"* **2.** வரவைவிட அல்லது கையிருப்பைவிடச் செலவு அதிகமாக இருப்பதால் ஏற்படும் பணக்குறைவு; deficit. *"இந்த ஆண்டின் வரவுசெலவுத் திட்டத்தில் ஏற்படும் பற்றாக்குறையைச் சரிக்கட்டப் புதிய வரிகள் போடப்படலாம்"*

*[பற்று + ஆ (எதிர்மறை) + குறை]*

**பற்றாக்கூலி** *paṟṟā-k-kūli,* பெ. (n.) 1. சிறிதளவு கூலி; poor wages. 2. நாட்கூலி; daily wages.

*[பற்று + ஆ (எதிர்மறை) + கூலி]*

**பற்றாக்கை** *paṟṟākkai,* பெ. (n.) 1. அம்புத் திரள் கட்டுங் கயிறு (சூடா.); cord for tying a bunch of arrows. 2. அம்புத்திரள் (பிங்.); cluster of arrows.

*[பற்று + ஆக்கை]*

ஆக்கை = கயிறு

**பற்றாசு**[1] *paṟṟāšu,* பெ. (n.) 1. மாழைகளைப் பொருத்த இடையிலிடும் பொடி; solder. 2. நேரிசை வெண்பாவில் முதற் குறளி னிறுதிச் சீரோடு தனிச் சொல்லைப் பொருத்தும் அசை; (pros.) metrical syllable uniting the first kuṟal-veṇbā of a nērišai-veṇbā and tani-c-cīr. *"பற்றாசொன்றுதான் ...... இடைநின்று கூட்டுதல் போல"* (வெங்கைக் கோ. 415) 3. பற்றுக்கோடு; support, prop. *'அபராத ஸஹத்வம் பற்றாசாக'* (ஈடு, 1, 4, ப்ர) 4. தஞ்சம்; refuge. *"பற்றாசான பெரிய பிராட்டி"* (ஈடு. 8, 9, 1.) 5. காரணம்; cause, means. *"கிருதஜ்ஞதையே பற்றாசாக வந்து"* (ஈடு, 5, 1, 10.)

*[பற்று + ஆசு]*

**பற்றாதது** *paṟṟādadu,* பெ. (n.) பொருட் படுத்தாதது (யாழ்.அக.); insignificant object.

*[பற்று + ஆ(எதிர்மறை)+ அது]*

**பற்றாப்படி** *paṟṟāpaḍi,* பெ. (n.) 1. போதியதும் போதாததுமானது (யாழ்.அக.); that which is doubtfully sufficient. 2. குறைவு; deficiency.

*[பற்று + ஆ (எதிர்மறை)+ படி]*

**பற்றாப்பணையம்** *paṟṟā-p-paṇaiyam,* *பற்றாப்படி (யாழ்.அக.)* பார்க்க; see *paṟṟāpaḍi.*

*[பற்று + ஆ (எதிர்மறை)+ பணையம்]*

**பற்றாப்போரி** *paṟṟā-p-pōri,* பெ. (n.) தகுதி யற்ற எதிரி (யாழ்.அக.); unequal foe.

*[பற்று + ஆ (எதிர்மறை)+ போரி]*

**பற்றாமாக்கள்** *paṟṟāmākkaḷ,* பெ. (n.) *பற்றலர்* பார்க்க; see *paṟṟalar.* *"பற்றா மாக்கள் தம் முடனாயினும்"* (மணிமே. 1, 62.)

*[பற்று + ஆ (எதிர்மறை)+ மாக்கள்]*

**பற்றாயம்** *paṟṟāyam,* பெ. (n.) 1. பெரும் பெட்டி; a very large box. *"திருக்கதவை நீக்கிப் புக்குப் பற்றாயத்தை ...... முறித்து"* (m.e.r. 1905–6.) 2. விலங்குகளைப் பிடிக்கவும் அடைக்கவும் உதவும் கூடு முதலியன; trap for catching animals; cage for keeping animals.

*[பத்தாயம் → பற்றாயம்]*

**பற்றாயார்** *paṟṟāyār,* பெ. (n.) முனிவர் (சூடா.); sages.

*[பற்று + ஆ + ஆர்]*

**பற்றார்** *paṟṟār,* பெ. (n.) 1. *பற்றலர்* பார்க்க, see *paṟṟalar.* *'பற்றார்க்கினிது'* (குறள், 865.) 2. பகைவர் (சூ.நிக. 2:51.); enemies

*[பற்று + ஆர்]*

**பற்றாள்** *paṟṟāḷ,* பெ. (n.) அறியாள் (பரிபாடல்.); innocent women.

**பற்றாற்றல்** *parrarral*, பெ. (n.) பற்றியவிடம் விடாது நிற்றல்; to hold firmly. *"பற்றாற்றிப் பற்றியார் வெல்வதரண்"* (திருக். 747.)

*[பற்று + ஆற்றல்]*

**பற்றி**[1] *parri*, பெ. (n.) *பற்றாசு*, **1.** பார்க்க; see *parrāśu*.

*[பற்று → பற்றி]*

**பற்றி**[2] *parri*, இடை. (part.) குறித்து; of, about, concerning, respecting, adverting to, referring to. *'என்னைப் பற்றிக் கவலைப் படாதே'* (வழக்.) *"மொழிச் சிக்கல் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"*.

*[பற்று → பற்றி]*

**ம.** பற்றி

**பற்றிக்கொண்டுவரு—தல்,** *parri-k-kontu-vāru-*, **3.** செ.கு.வி. (v.i.) மிக அதிக அளவில் சினம், எரிச்சல் போன்றவை உண்டாதல்; get enraged. *"கயவாளிப்பயல், நல்லவன் போல் பேசுவதைக் கேட்டால் யாருக்குத்தான் பற்றிக் கொண்டு வராது"*

*[பற்றிக்கொண்டு + வரு—,]*

**பற்றிப்படர்—தல்** *parri-p-padar-*, **3.** செ.கு.வி. (v.i.) **1.** கொடிபடர்தல்; to entwine and spread, as a creeper. **2.** குடும்பஞ் செழித்தல்; to thrive, as a family.

*[பற்றி + படர்தல்]*

**பற்றிப் பிடி—த்தல்** *parri-p-pidi-*, **4.** செ.கு.வி. (v.i.) சோறுவெந்து கரிந்து போதல்; to be heated dry, as in cooking rice. *'சோறு பற்றிப் பிடித்திருக்கிறது'*

*[பற்றி + பிடி—,]*

**பற்றிய** *parriya*, பெ.அ. (adj.) தொடர்பான; குறித்த; concerning; regarding. *"இது எதைப்பற்றிய பேச்சு என்றே விளங்க வில்லை", "யாரைப் பற்றிய கட்டுரை இது?" "வரலாறு பற்றிய ஆராய்ச்சி"*

*[பற்று → பற்றிய]*

**பற்றியிழுத்—தல்** *parri-y-ilu-*, **3.** செ.கு.வி. (v.i.) மூச்சு வாங்குதல்; to take hard breaths when dying.

*[பற்றி + இழு—,]*

**பற்றியெரி—தல்** *parri-y-eri-*, **3.** செ.கு.வி (v.i.) **1.** தீமூண்டெரிதல்; to catch fire. **2.** சினம் மூளுதல்; to get enraged; to become angry.

*[பற்றி + எரி—,]*

**பற்றிரும்பு** *parrirumbu*, பெ. (n.) இணைக்கும் தகட்டிரும்பு (யாழ்.அக.); cramp iron, iron-brace, band, cincture.

**ம.** பற்றிரும்பு

*[பற்று + இரும்பு]*

**பற்றிலார்** *parrilar*, பெ. (n.) **1.** *பற்றலர் (சூடா.)* பார்க்க; see *parralar*. **2.** உலகப் பற்றற்றவர் களாகிய முனிவர்கள்; sages, as devoid of worldly attachment. *"பாதமல்லது பற்றலர் பற்றிலார்"* (கம்பரா. சிறப்புப். 3.)

*[பற்று + இல் (எ.ம.) + ஆர்]*

**பற்றிலான்** *parrilān*, பெ. (n.) பற்றற்றவனாகிய இறைவன்; god, as having no attachment. *"பற்றிலானடி பணிந்தில ரேனும்"* (பிரமோத். 22, 3.)

*[பற்று + இல் (எ.ம.) + ஆன்]*

**பற்றிலி** *parrili,* பெ. (n.) வேளாண்மை செய்யப் படாமலும் வரி இறுக்கப்படாமலும் உள்ள வெற்று நிலம்; uncultivated land whose revenue remains unpaid ***"காணியாளர் ...... இறாது பற்றிலியாகிய நிலம்"*** (s.i.i. v. 376.).

*[பற்று + இல் (எ.ம.) + இ]*

'இ' உடைமைப் பொருளீறு

**பற்றின்மை** *parrinmai,* பெ. (n.) **1.** இறைவன் எண்குணத்தொன்றாகிய பற்றின்மை; detachment, one of iraivan-enkunam. **2.** உலகப் பற்று இல்லாமை; detachment in worldly attachments.

*[பற்று + இன்மை]*

**பற்றினர்** *parrinar,* பெ. (n.) **1.** உறவினர் (சூடா.); relations. **2.** நண்பர்கள்; friends, adherents, allies.

*[பற்று + இன் + அர்]*

**பற்று¹–தல்** *parr-,* **5.** செ.குன்றா.வி. (v.t.) **1.** பிடித்தல்; to grasp, seize catch, hold. ***"பற்றுமினென்றவர்"*** **(திருவாச. 3, 145.) 2.** ஏற்றுக் கொள்ளுதல்; to receive, accept, embrace. ***"பற்றுதலன்றி யுண்டோ புகல்"*** **(கம்பரா. விபீடண. 108) 3.** மனத்துக் கொள்ளுதல்; to embrace, adhere to. ***"பற்றுக பற்றற்றான் பற்றினை"*** **(குறள். 350.) 4.** தொடுதல்; to touch. ***"கீழ்பாற் பருவரைப் பற்றாமுன்மை"*** **(கம்பரா. தைலமாட்டு. 54.) 5.** உணர்தல்; to apprehend, comprehend. ***"பற்றிய நூலில்லார்"*** **(ஏலாதி. 36.) 6.** ஒட்டுதல்; to drive, as sheep bullocks. ***"ஆடுமாடுகளைப் பற்றிக் கொண்டு வா!"***

**க.** பட்டு. **ம.** பற்றுக.

*[பற்று → பற்று–,]*

**பற்று²–தல்** *parru-,* **5.** செ.கு.வி. (v.i.) **1.** நிறம் பிடித்தல்; to hold, as colour. **2.** தீ முதலியன மூளுதல்; to be kindled, as fire.anger, desire, to be ignited. ***"ஒரு குடிசையில் பற்றிய தீ காற்றினால் அருகிலிருந்த குடிசைக் களுக்கும் பரவ ஆரம் பித்தது", "காடு பற்றி எரிந்தது"*** **3.** பயனுறுதல்; to have effect, as drugs. **4.** தகுதியாதல்; to be fitting, qualified. ***"பற்றாப்பணியும் பணியாக்கி"*** **(திருவானைக். கொசா. 57.) 5.** ஒட்டுதல்; to stick. ***"பரிபவ முதுகிற் பற்றப் பொறித்தபோது"*** **(கம்பரா. கும்பகருண. 17.) 6.** பொருந்துதல்; to become joined to or welded together as metals soldered. **7.** போதியதாதல்; to be sufficient. ***"உண்டையா மெனவும் பற்றா"*** **(கம்பரா. அதிகாயன். 217.) 8.** உறைத்தல்; to smart, to fed pungent, as pepper in the eyes. **9.** உண்டாதல்; to form, as rust flower, etc.

**பற்று³–தல்** *parru-,* **5.** செ.குன்றா.வி. (v.t.) **1.** நோய் முதலியவை ஒருவரை தொற்றுதல்; (of disease, etc.) catch; infect (with) ***"உன்னைப் பற்றியிருக்கிற கண் நோய் மற்றவர்களையும் பற்றக் கூடிய வாய்ப்பு இருக்கிறது" "நல்லபழக்கங்களைவிடத் தீய பழக்கங்கள் நம்மை உடனே பற்றிக்கொள்வது ஏன்?"*** **2.** (ஏனங்கள் முதலியவற்றில்) படிதல்; ஒட்டுதல்; stick (to the bottom of a vessel). ***"பானையில் பற்றி யிருந்த சோற்றுப் பருக்கைகளைச் சுரண்டி கழுவினாள்"*** **3.** (ஒருவரிடமிருந்து பணம், பொருள் முதலியவற்றைக்) கட்டாயப்படுத்திப் பறித்தல்; sponge (sth. off) ***"என்னிடமிருந்து பற்ற வேண்டியதையெல்லாம் பற்றிக் கொண்டான்"***

**பற்று⁴–தல்** *parru-,* **5.** செ.கு..வி. (v.i.) பொறுத்தல்; to hold one self in patience; to wait. ***"சோறு சமையப் பற்றாமல்"*** (ஈடு,1,3,1.)

**பற்று[5]** *parru,* பெ. (n.) **1.** பிடிக்கை; grasp, grip, seizure. **2.** ஏற்றுக்கொள்கை; acceptance. **3.** அகப்பற்று, புறப்பற்றுகளாகிய நேயங்கள்; adherence, attachment, affection, clinging of the minds ot sensual objects. of two kinds. viz., aka-p-parru, pura-p-parru. *"பற்றற்றான்"* (குறள்,350.). **4.** தொடர்பு; connection, affinity bond. **5.** ஒட்டு; piece put on or nailed on for strength. **6.** பற்றாசு; solder. **7.** பசை; paste, glue. **8.** அட்டகலத்திற் பற்றிப் பிடித்திருக்கும் சோற்றுப் பருக்கை; particles of boiled rice adhering to the cooking pot. *"மட்கலமொழிய வேறுபற்றிலை"* (பிரபுலிங்.ஆரோகண.38.) **9.** சோற்றுப் பருக்கை யொட்டியுள்ள ஏனம்; pot containing particles of food adhering to it, as impure. *"பற்றலம்ப வேண்டும்"* **10.** உரிமையிடம்; place under one's possession. *"இவ்விடம் இன்னார்பற்று"* (ஈடு. 1, 3, 9.) **11.** தங்குமிடம்; resting place. *"பற்றாகின்று நின் காரணமாக"* (பரிபா. 8. 10.) **12.** பல ஊர்களுடைய நாட்டுப்பகுதி (பு. வெ. 7, 2, உரை.); portion of a country consisting of many villages. **13.** பெற்றுக் கொண்ட பொருள்; receipt, things received. **14.** பற்றுக்கோடு; support. *"பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர்"* (குறள், 88.) **15.** அன்பு; love, devotion. **16.** நட்பு; friendship. *"பற்றோடிக லற்ற பரம்பொருளை"* (கந்தபு. காமத. 23.) **17.** வீட்டுநெறி; path to salvation. *"பற்றற்றான் பற்றினை"* (குறள். 350.) **18.** செல்வம்; riches, treasure. *"பற்றற்ற கண்ணும்"* (குறள், 521.) **19.** இல்வாழ்க்கை; family life. *"இயைவ கரவாத பற்றினில்"* (இனி. நாற். 27.) **20.** கொள்கை; purpose, intention, principle. "செழுஞ்சோதியைத் தொழுஞ்சீலந் தம்பற்றாக" (பெரியபுநமிநந்தி.7.).

க. பட்டு ம. பற்று.

**பற்று[6]** *parru,* பெ. (n.) **1.** தூண் (திவா.); pillar. **2.** வயல்; paddy field. *"செட்டிப் பற்றில் கண்ணி வைத்து"* (குற்றா. குற. 102.) **3.** கட்டு; bundle as of betel leaves. *"வெற்றிலைப் பற்று"* (S.I.I.iii. 188, 8.) **4.** மருந்துப் பூச்சு; plaster; poultice; medical application. **5.** மேகப்படை; disease of the skin, ringworm, proriasis. **7.** சிற்றூர்; village, parish. **3.** கலவைச் சுண்ணாம்பு வகை; cement.

*[பட்டு → பற்று]* (மு.தா. 124.)

**பற்று[7]** *parru,* பெ. (n.) **1.** உலக வாழ்க்கை மீது ஒருவர் கொண்டிருக்கும் பிடிப்பு; விருப்பு; (worldly) attachment; bondage. *"வாழ்க்கையில் பற்றுள்ளவர்களுக்குத்தான் முன்னேற வேண்டும் என்ற துடிப்பு இருக்கும்" "நான் என்ன பற்றற்ற துறவியா, எந்த ஆசையும் இல்லாமல் இருப்பதற்கு?"* **2.** ஒருவர் ஒன்றின் நலனில் கொண்டி ருக்கும் அழுத்தம்; பிணைப்பு; love (for sth.); fervour. *"கட்சிப் பற்று வெறியாக மாறிவிடக் கூடாது?"*

**பற்று[8]** *parru,* பெ. (n.) **1.** அறிதல்; to know *"பற்றருசின் மயவம்பரமும்பர்"* (கோயிற்பு. திருவிழா. 14.) **2.** பெற்றதன் மேனிகழுமாசை; desire, *"பற்றார் வஞ்செற்ற முதலாக"* (சிந்தா. முத்தி. 192.) **3.** ஒட்டு; attachment. *"உனக்கும் எனக்கும் ஒட்டும் இல்லை, உறவும் இல்லை என்று சொல்லி விடாதே"* **4.** பற்றியவிடம்; a place to hold, *"பற்றாற்றிப் பற்றியார் வெல்வதரண்"* (குறள். 748.) (ஆகுபெயர்) **5.** பற்றுக்கோடு; support. *"பரிந்தோம்பிப் பற்றற்றேமென்பர்"* (குறள். 88.) **6.** வாரப்பாடல்; a kind of musical. song. (சிலப். 14, 155 உரை.)

**பற்றுக்கட்டு** *parru-k-kattu,* பெ. (n.) **1.** குடியுரிமை நிலம்; ryot's holding. **2.** புன்செய் நிலத்தின் ஆண்டுக்குத்தகை; annual rent on dry land.

*[பற்று + கட்டு]*

**பற்றுக்கட்டொழுங்கு** *paṟṟu-k-kaṭṭo ḻuṅgu,* **பெ.** (n.) தீர்வையைச் செலுத்தும் பொறுப்புடன் உழுதற்குத் தொடங்கிய குடியானவனுக்கு நிலம் உரிமையாகும் முறை; system of land tenure whereby lands once brought under cultivation by a ryot become thereby part and parcel of his holding subject to the incidence of taxation.

*[பற்றுக்கட்டு + ஒழுங்கு]*

**பற்றுக்கம்பு** *paṟṟu-k-kambu,* **பெ.** (n.) பரம்பு மரத்தில் ஊன்றுங் கழி; peg planted in the levelling plank.

*[பற்று + கம்பு]*

**பற்றுக்கால்** *paṟṟu-k-kāl,* **பெ.** (n.) **1.** தாங்கு கட்டை (யாழ்.அக.); support of a lever or swing. 2. பொய்க்கால்; artificial leg.

*[பற்று + கால்]*

**பற்றுக்காவல்** *paṟṟu-k-kāval,* **பெ.** (n.) நிலக்காவல் (நாஞ்.); watch for the lands.

*[பற்று + காவல்]*

**பற்றுக்குறடு** *paṟṟu-k-kuṟaḍu,* **பெ.** (n.) கம்மக்கருவி வகை; tongs, black smiths pincers.

*[பற்று + குறடு]*

**பற்றுக்கொடிறு** *paṟṟu-k-koḍiṟu,* **பெ.** (n.) *பற்றுக்குறடு*(சிலப். **16, 108.** அரும்.), பார்க்க; see *parru-k-kuṟaḍu.*

*[பற்று + கொடிறு]*

**பற்றுக்கோடு**[1] *paṟṟu-k-kōḍu,* **பெ.** (n.) **1.** பற்றுக்கோல்; walking stick. **2.** நிலைக்களன் (திவா.); support. **3.** தஞ்சம் (திவா.); refuge. **4.** கட்டுத்தறி (திவா.); post to which animals are tied. **5.** களைகண்; சார்பாக இருப்பது; support; anything which is supportive. ***"முதுமைக் காலத்தில்தான் மனைவி எவ்வளவு பெரிய பற்றுக்கோடு என்பது தெரியும்"*** **6.** சான்று; evidence; proof. ***"பற்றுக்கோடு நின்பத மன்றியிலை"*** (மதுரையந்தாதி.)

*[பற்று + கோடு]*

**பற்றுக்கோல்** *paṟṟu-k-kōl,* **பெ.** (n.) **1.** ஊன்று கோல்; walking stick. **2.** மாடுகளுக்குச் சூடு போடஉதவும் இருப்புக்கோல்; iron-rod used to brand oxen. **3.** ஈயம் பற்றவைக்கும் கருவி; sollderiпg iron. **4.** கம்மக் கருவியினொன்று; black smiths pole. **5.** பொருளைப் பிடித்து எடுப்பதற்கான இடுக்கி அல்லது இடுக்கி போன்ற கருவி; a kind of tongs.

*[பற்று + கோல்]*

**பற்றுச்சீட்டு** *paṟṟu-c-cīṭṭu,* **பெ.** (n.) **1.** ஒப்புதல் சீட்டு; receipt. **2.** வேளாண்மைக் குத்தகை ஆவணம்; lease-deed of cultivation.

*[பற்று + சீட்டு]*

**பற்றுதல்** *paṟṟutal,* **பெ.** (n.) **1.** அன்பு; love, attachment fondness. (சூ.நிக. எ:33) அவருக்குக் குடும்பத்தின் மீது ஒரு சிறிதும் பற்றுதல் இல்லை. **2.** பத்தி; devotion, devotednesss. **3.** நம்பிக்கை; confidence, fidelity. **4.** பிடித்துக்கொள்ளுதல்; to hold. ***"உலக்கை பற்றி"*** (அரிச்ச. மயாநய **2.**)

*[பற்று → பற்றுதல்]*

**பற்றுநர்** *parrunar,* பெ. (n.) நண்பர்(திவா.); friends.

*[பற்று → பற்றுநர்]*

**பற்றுப்பத்திரம்** *parru-p-pattiram,* பெ. (n.) கடன் வாங்கினவன் சில பொருள் கொடுத்த போது தனிகன் அந்தப் பொருளைப் பற்றினதற்காக எழுதிக் கொடுக்கும் ஆவணம் (வழக்.); receipt for pledged things.

*[பற்று + பத்திரம்]*

பத்திரம் = skt.

**பற்றுப்பருக்கை** *parru-p-parukkai,* பெ. (n.) சோற்றுப்பருக்கை; grain of cooked rice. 'அவன் ஒரு பற்றுப்பருக்கைகூட ஈயாதவன்' (உ.வ.)

*[பற்று + பருக்கை]*

**பற்றுப்பாடு-தல்** *parru-p-pāḍu-,* 5. செ.கு.வி. (v.i.) வாரமா பாடுதல் (சிலப். ம, 19, அரும்.); to sing in accompaniment.

*[பற்று + பாடு-,]*

**பற்றுப்பார்-த்தல்** *parru-p-pār-,* 4. செ.கு.வி. (v.i.) உரைத்து ஆய்ந்தறிதல்; to test by rubbing, as a piece of turmeric. "ஊரிற் பெண்கள் தங்களுக்குப் பூசுகைக்கு மஞ்சள் அரைத்தல் பற்றுப்பார்ப்பது இவனஉடம்பிலே யாய்த்து" (திவ்.பெரியாழ். 3,2,2 வியா. பக்.536.)

*[பற்று + பார்-,]*

**பற்றுப்பொதுக்காவல்** *parru-p-podu-k-kāval,* பெ. (n.) சிற்றூர்க்காவற்காரன்; watchman of the village.

**பற்றுப்போடு-தல்** *parru-p-pōḍu-,* 19. செ.கு.வி. (v.i.) பூச்சு மருந்து தடவுதல்; to apply medicine, as an anguent.

*[பற்று + போடு-,]*

**பற்றுமஞ்சள்** *parrumañjal,* பெ. (n.) நிறம் பிடிக்கும் பூச்சு மஞ்சள்; turmeric used by women in bathing ***"பற்று மஞ்சள் பூசி"*** (திவ். பெரியாழ். 3, 2, 2.)

*[பற்று + மஞ்சள்]*

**பற்றுமதி** *parrumadi,* பெ. (n.) பெற்றுக் கொள்கை; receipt, as of money.

*[பற்று + மதி]*

**பற்றுமுறி** *parrumuri,* பெ. (n.) ஒப்புகைச்சீட்டு; receipt. "பற்றுமுறி கொடுத்தோம்" (S.I.I.viii,84.)

*[பற்று + முறி]*

**பற்றுவகை** *parruvagai,* பெ. (n.) பெற்றுக் கொண்ட பொருளின் குறிப்பு; items of money or goods received.

*[பற்று + வகை]*

**பற்றுவரவு[1]** *parru-varavu,* பெ. (n.) 1. கொடுக் கல் வாங்கல்; transaction; dealing. 2. கணக்கின் வரவு செலவுக்குறிப்பு; debit and credit. ***"கண்டெழுது பற்று வரவினின் மயிர் பிளந்தே கணக்கி லணுவாகிலும் விடார்"*** (குமரேச. சத. 4.)

*[பற்று + வரவு]*

**பற்றுவரவு²** *parru-varavu,* பெ. (n.) கடை முதலியவற்றில் கணக்கு எழுதும்பொழுது செலவும் வருமானமும்; in bock-keeping expenditure and income. ***"கணக்கியல் பாடத்தில் பற்றுவரவு வரும்"***

*[பற்று + வரவு]*

**பற்றுவாய்** *parru-vāy,* பெ. (n.) 1. பற்று வைக்கும் இடம்; edges of fusible metals soldered together. 2. துமுக்கியில் மருந்திடும் தொளை; pan, touch-hole of a gun or cannon. 3. கொட்டுவாய்ச் சமயம்; nick of time.

*[பற்று + வாய்]*

**பற்றுள்ளம்** *parrullam,* பெ. (n.) இவறற்றன்மை; a variciousness, greediness. ***"பற்றுள்ள மென்னும் இவறன்மை"*** (குறள். 438)

*[பற்று + உள்ளம்]*

**பற்றை** *parrai,* பெ. (n.) 1. செங்காந்தள் (சூடா.); malabar glory lily. 2. தூறு (ஈடு. 3, 9, 7.); bushes, low shrubberry, underwood. ***"பற்றைக்காடு"*** 3. கீழ்மகன்; low, mean person. ***"பாரிலோர் பற்றையைப் பச்சைப் பசும் பொய்கள் பேசவே"*** (திவ். திருவாய். 3, 9, 7.) 4. தொகுதி; cluster.

*[பற்று → பற்றை]*

**பற்றைச்சி** *parraicci,* பெ. (n.) விலைமகள்; prostitute.

பரத்தை → பத்தை → பற்றை → பற்றைச்சி

**பற¹–த்தல்** *para-,* 3. செ.கு.வி. (v.i.) 1. பறவை, பஞ்சு முதலியன வானத்திற் செல்லுதல்; to fly, hover, flutter or float in the air, as light bodies. ***"குடம்பை தனித்தொழியப் புட் பறந்தற்றே"*** (குறள், 338.) 2. வேகமாய்ச் செல்லுதல்; to move with celerity or great velocity; to hasten. ***"குரைகழன் மைந்தனைக் கொண்டு பறந்தான்"*** (சீவக. 521.) 3. விரைதல்; to be in a hurry, to be overhasty. ***"நானேன் பறப்பேன் நராதிபனே"*** (தனிப்பா. 1, 290.7.). 4. அமைதியற்று வருந்துதல்; to be greatly agitated. ***"அழுதழுது பறக்கின்றானே"*** (இராமநா. உயுத். 98.) 5. சிதறியொழிதல்; to be scattered, dispersed, to disappear. ***"அவன் பணமெல்லாம் பறந்து விட்டது"***

க. பறு, ம. பறக்க.

*[பற → பற–,]*

'பறந்து பறந்து பாடுபட்டாலும் பகலுக்குச் சோறில்லை' (பழ.)

**பற²–த்தல்** *para-,* 3. செ.கு.வி. (v.i.) 1. வானவெளியில் வேகமாகச் செல்லுதல்; fly. ***"ஒலியின் வேகத்தில் பறக்கும் வானூர்தி களும் உண்டு" "அடிபட்ட பறவை பறக்க முடியாமல் கீழே விழுந்தது" "வால் சரியாக இல்லாததால் பட்டம் பறக்கவில்லை"*** 2. வானூர்தியில் செல்கை; fly; travel by plane. ***"தொழில் தொடர்பாக வெளி நாட்டுக்கு பறந்து சென்றார்"*** 3. மேலே கிளம்பிக் காற்றில் அலைதல்; (of dust, etc.) fly; give off. ***"புழுதி பறக்க வந்து நின்றது ஊர்தி" "பொறி பறக்கும் வெயில்" "ஆவி பறக்கும் குளம்பி"*** 4. வேகத்துடன் செல்லுதல் அல்லது செயல்படுதல்; மிகவும் விரைவுகொள்ளுதல்; rush; speed; fly, hurry. ***"வெவ்வேறு திசைகளிலும் ஊர்திகள் பறக்க மிகுந்த இரைச்சலுடன் இருந்தது சாலை", "தொடர் வண்டி வருவதற்கு ஒரு மணி நேரம் இருக்கும் போதே பறக்கத் தொடங்கி விட்டார்".***

**பறக்கடி–த்தல்** *parakkadi-,* 4. செகுன்றாவி. (v.t) 1. சிதறடித்தல்; to cause to fly; to scatter, disperse. 2. துரத்துதல்; to hasten.

*[பற → பறக்கடி–,]*

**பறக்கவிடு—தல்** *parakkavidu-*, 18. செ.குன்றா.வி. (v.t.) 1. வானத்திற் செல்லும்படி செய்தல்; to let fly, as a bird or kite. 2. உதவிசெய்யாது கைவிடுதல்; to forsake and make one helpless. 3. தொந்தரவு செய்தல்; to vex, tease one by importunity 4. கெடுத்தல்; to defeat, ruin.

*[பறக்க + விடு—,]*

**பறக்காவட்டி** *parakkāvatti,* பெ. (n.) பறுபறப்புக் காரன்; thoughtless or reckless person.

*[பற → பறக்காவட்டி]*

'பறப்பான் பயிர் இழந்தான்' (பழ.)

'பறப்பான் பயிர் இழந்தான்; அறக்காஞ்சி பெண்டிழந்தான்' (பழ.)

**பறக்கும் தட்டு** *parakkum tattu,* பெ. (n.) வேறு கோள்களைச் சார்ந்ததாகவும் வானில் உலவுவதாகவும் கூறப்படும் தட்டு வடிவப் பறக்கும் பொருள்; flying-saucer; unidentified flying object. (ufo)

*[பறக்கும் + தட்டு]*

**பறக்கும் படை** *parakkum-patai,* பெ. (n.) உடனடியாக விரைந்து சென்று நடவடிக்கை எடுப்பதற்காகவோ முன்னறிவிப்பு இல்லாமல் நோட்டஞ் செய்வதற்காகவோ எப்போதும் அணிய நிலையில் இருக்கும் அலுவலர் குழு; flying squard. *"செல்கைச் சீட்டு இல்லாமல் தொடர்வண்டியில் சென்றவர்களைப் பறக்கும் படை மடக்கிப் பிடித்தது"*

**பறக்குறவை** *parakkuravai,* பெ. (n.) கருப்புக் குறவை மீன்; a dark dock fish. (சா.அக.)

**பறகுபறகெனல்** *paraku-parakenal,* பெ. (n.) சொறிதற் குறிப்பு; onom, expr. of scratching. *"பறகுபறகென்றே சொறிய"* (தனிப்பா. 1, 273, 14.)

*[பறகு + பறகு + எனல்]*

**பறங்கி**[1] *parangi,* பெ. (n.) 1. *பறங்கிக்காரன்,* பார்க்க; see *parankikāran.* 2. பறங்கிக்காய்; great pumpkin.

*'பறங்கி நல்லவன்; பிரம்பு பொல்லாதது'* (பழ.)

க. பரங்கி

*[பல் → பர் → பரங்கி → பறங்கி]*

**பறங்கி**[2] *paranki,* பெ. (n.) பாலியல் நோய் வகை; veneral disease, syphilis.

போர்த். பிரான்கோ (branco)

**பறங்கிக்காய்** *parangi-k-kāy,* பெ. (n.) காய்கறியாகப் பயன்படுத்தும் பக்கவாட்டில் புடைத்து உருண்டையாக உள்ள வெளிர்ச் சிவப்பு நிறக்காய்; great pumpkin. *"பறங்கிக் காய் குழம்பு"*

**மறுவ:** சர்க்கரைப்பூசணி,

*[பறங்கி + காய்]*

க. பரங்கிக் காயி

**பறங்கிக்காரன்** *parangikkāran,* பெ. (n.) 1. நிறம் பற்றி ஐரோப்பியர்களைக் குறிக்கப் பெரும் பாலும் மதிப்புக் குறைவான முறையில் பயன் படுத்தும் சொல்; (not in polite use) whiteman, european. 2. ஆங்கிலோ இந்தியன்; anglo indian.

*[பறங்கி + காரன்]*

**மறுவ:** சட்டைக்காரன்

**பறங்கிக்கிழங்கு** *parańki-k-kilańgu,* பெ. (n.) *பறங்கிச் சக்கை* பார்க்க; see *parańgi-c-cakkai.*

*[பறங்கி + கிழங்கு]*

**பறங்கிக்கூர்மை** *parańki-k-kūrmai,* பெ. (n.) அணியம் செய்யப்பட்ட உப்பு வகை; (யாழ்.அக.); a kind of prepared mineral salt.

*[பறங்கி + கூர்மை]*

**பறங்கிக்கொறுக்காய்ப் புளி** *parańki-k-korukkāy-p-puli,* பெ. (n.) சீமைக்கொடுக்காய்ப் புளி; mamila tamarind. (சா.அக.)

**பறங்கிச்சக்கை** *parańki-c-cakkai,* பெ. (n.) **1.** ஒருவகைக் கொடி; chino-root, climbing shrubby plant. **2.** மரவகை; quinine tree.

*[பறங்கி + சக்கை]*

**க.** பரங்கிச்சக்கெ

**பறங்கிச் சாம்பிராணி** *parańki-c-cambi-rāṇi,* பெ. (n.) **1.** பெரிய மரவகை; salai tree. indian olibanam. **2.** சாம்பிராணி வகை; exudus of indian frankincense. (சா.அக.)

*[பறங்கி' + சாம்பிராணி]*

சாம்பிராணி = மராத்தி

**பறங்கிச்சிலைநிறம்** *parańgiccilai-niram,* பெ. (n.) ஒருவகைக் கறுப்புக் கல் (யாழ்.அக.); a kind of black stone.

*[பறங்கி + சிலை + நிறம்]*

**பறங்கிச்சுறா** *parańgi-c-curā,* பெ. (n.) சுறா மீன் வகை; english hammer headed shark-zygama malleus. (சா.அக.)

**பறங்கித்தாழை** *parańgi-t-tālai,* பெ. (n.) செந்தாழை (அன்னாசி); pineapple.

*[பறங்கி + தாழை]*

**பறங்கிநோய்** *parańgi-nōy,* பெ. (n.) ஒருவகைப்பாலியல் நோய்வகை; venereal diease, syphilis.

*[பறங்கி + நோய்]*

**பறங்கிப்பட்டை**[1] *parańgi-p-paṭṭai,* பெ. (n.) பறங்கிச்சக்கை; climbing shrubby plant.

*[பறங்கி + பட்டை]*

**பறங்கிப்பட்டை**[2] *parańgi-p-paṭṭai,* பெ. (n.) சீனக்கிழங்குப் பட்டை, (வைத்தியபரி.); china root.

**பறங்கிப் பாடாணம்** *parańgi-p-pāḍāṇam,* பெ. (n.) பிறவிச் செய்ந்நஞ்சு வகை; a mineral poison, corrosive subli-mate.

*[பறங்கி + பாடாணம்]*

**பறங்கிப்புண்** *parańgi-p-puṇ,* பெ. (n.) ஒரு வகை நோய்; veneral disease, syphilis.

*[பறங்கி + புண்]*

**க.** பரங்கிஹுண்ணு

**பறங்கிப்பூசனி** *parańgi-p-pūsini,* பெ. (n.) கோடைப் பூசனி; a kind of pumpikin chiefly cultivated in summer.

*[பறங்கி + பூசனி]*

**பறங்கிப்பூரகி** *parangi-p-pūragi,* பெ. (n.) ஒட்டுப்பலா; a kind of herb.

*[பறங்கி + பூரகி]*

**பறங்கிப்பேட்டை** *parańgi-p-pēṭṭai,* பெ. (n.) கடலூர் மாவட்டத்தில் உள்ள ஒரூர்; (வழக்.); a small town in cuddalore Dt.

**பறங்கியணிநுணா** *parańgi y-aṇi nuṇā,* பெ. (n.) இராமசீத்தா; manilla custard apple tree. (சா.அக.)

*[பறங்கியணி + நுணா]*

**பறங்கியாதளை** *parańgiyātalai,* பெ. (n.) சிவப்பாதளை; red castor plant.

மறுவ: பறங்கியாமணக்கு (சா.அக.)

**பறங்கியாமணக்கு** *parańgiyāmaṇkku,* பெ. (n.) 1. கொழும்பழ (பப்பாளி)மரம்; papaya. 2. சீன நாட்டாமணக்கு; china castor plant.

*[பறங்கி + ஆமணக்கு]*

**பறங்கிவராாகன்** *parańgivarāgaṉ,* பெ. (n.) பறங்கிப் பேட்டையில் வழங்கி வந்த பொற்காசு வகை; a gold coin of porto-novo.

*[பறங்கி + வராகன்]*

**பறங்கிவாழை** *parańgivaḻai,* பெ. (n.) அரசதாளி என்னும் வாழை வகை; a variety of plantain; red-costate-leaved banana. (சா.அக.)

*[பறங்கி + வாழை]*

**பறங்கிவியாதி** *parańgiviyāti,* பெ. (n.) *பறங்கிநோய்* பார்க்க; see *parańginōy.*

*[பறங்கி + வியாதி]*

**பறங்கிவிரணம்** *parańgiviraṇam,* பெ. (n.) *பறங்கி²,* பார்க்க (பைஷஜ. 200.); see *parańgi².*

*[பறங்கி + விரணம்]*

விரணம் = skt.

**பறங்கிவேல்** *parańgivēl,* பெ. (n.) சீமைவேல்; jerusalem-thorn, (foreign solah.) (சா.அக.)

*[பறங்கி + வேல்]*

**பறங்கிவைப்பு** *parańgivaippu,* பெ. (n.) 1. செய்ந்நஞ்சு செய்யுமுறை; rules for preparing assenic. 2. வைப்புச் செய்ந்நஞ்சு; prepared arsenic.

*[பறங்கி + வைப்பு]*

**பறட்டை** *paraṭṭai,* பெ. (n.) 1. செழிப்பற்றது (யாழ்.அக.); that which is dry or wilted. 2. தூற்று மயிர்; tangled locks, shaggy, bushy hair. 3. பறட்டைக்கீரை; a kind of greens. 4. இன்மையைக் குறிக்கும் ஒரு விளை யாட்டுக் குறியீடு; a term used in a game, meaning 'nothing'. 5. ஒரு இகழ்ச்சிமொழி; a term of reproach. 'அவன் பயல், பறட்டை யென்று பேசினான்'.

க. பறட்டெ.

*[பர → பரடு → பரட்டை → பறட்டை]*

(மு. தா. 133)

**பறட்டைக்காடு** *paṟaṭṭai-k-kāḍu,* பெ. (n.) தூறடர்ந்தகாடு; thick, low jungle.

*[பறட்டை + காடு]*

**பறட்டைக்கீரை** *paṟaṭṭai-k-kīrai,* கீரைவகை; wild colewort.

*[பறட்டை + கீரை]*

**பறட்டைச்சி** *paṟaṭṭaicci,* பெ. (n.) தூறு போன்ற தலைமயிர் உடையவள்; a girl or woman who has shaggy, untidy hair.

*பறட்டை → பறட்டைச்சி*

*[பறட்டையன் என்பதன் பெண்பாற்சொல்.]*

**பறட்டைத்தலை** *paṟaṭṭai-t-talai,* பெ. (n.) தூறடர்ந்த மயிர்த்தலை; head with shaggy, untidy hair.

*[பறட்டை + தலை]*

**க.** பறட்டெதலெ.

**பறட்டைமரம்** *paṟaṭṭaimaram,* பெ. (n.) **1.** தலையடர்த்தியுள்ள மரம்; short sleuder tree with a bushy top. **2.** குறுகிய கிளைகளையும் சிறிய இலைகளையும் கொண்ட நீண்டமரம்; tall tree with short leaves and stunted boughs.

*[பறட்டை + மரம்]*

**பறட்டையன்** *paṟaṭṭaiyaṉ,* பெ. (n.) தூறடர்ந்த மயிர்த்தலையன்; person with shaggy hair.

*[பறட்டை → பறட்டையன்]*

**பறண்டு—தல்** *paṟaṇḍu-,* **5.** செ.குன்றா.வி. (v.t.) உகிர் முதலியவற்றால் சுரண்டுதல்; to scratch, as with nails.

**க.** பரடு.

*[பற்று → பற—பறண்டு—,]*

**பறண்டை** *paṟaṇḍai,* பெ. (n.) **1.** ஒருவகை வாச்சியம்; a musical instrument. *"பாடும் பறண்டையு மொந்தையு மார்ப்ப"* **(தேவா.293.9.)** **2.** கைமுட்டியின் மொழி; in knuckle ***"கோலியாட்டத்தில் தோற்றவன் பறண்டையிற் படும்படி முட்டடித்தான்".***

*[பற → பறண்டு → பறண்டை,]*

**பறணி** *paṟaṇi,* பெ. (n.) பெருங்குரும்பை; young unripe coconut fruit. **(சா.அக.)**

**பறத்தி** *paṟatti,* பெ. (n.) பறைச்சி; **(இருளா.)** paṟiah woman.

*[பறைச்சி → பறத்தி]*

**பறதி** *paṟati,* பெ. (n.) பதற்றம்; over-hastiness, over-anxiety.

*[பற → பறதி]*

**பறதை** *paṟatai,* பெ. (n.) செங்கத்தரி; false peacock foot tree. (சா.அக.)

**பறந்தடி—த்தல்** *paṟantaṭi-,* **4.** செ.கு.வி. (v.i.) கவலையால் வேகப்படுதல்; to hurry in anxiety.

*[பற → பறந்தடி—,]*

**பறந்தலை** *parantalai,* பெ. (n.) **1.** பாழிடம்; desert. "*பூளை நீடிய வெருவரு பறந்தலை*" (புறநா.23.) "*யாங்கணும் பரந்த வோங்கிரும் பறந்தலை*" (மணிமே. சக்கரவாள. 96.) **2.** பாலைநிலத்தூர் (தொல்பொருள். 18,உரை.) village in a desert tract. **3.** சுடுகாடு (பதிற்றுப்-44,19.); burning-ground. **4.** போர்க்களம்; battle-field. "*வெண்ணிப் பறந்தலை*" (புறநா.66.) **5.** படைவீடு; camp of an invading army. "*களிற்றுக் கணம் பொருத கண்ணகன் பறந்தலை*" (புறநா. 64.)

*[பற → பறந்தலை]*

**பறந்தோடு-தல்** *parantōtu-,* 5. செ.கு.வி. (v.i.) விரைந்து நீங்குதல்; vanish; disappear quickly. '*மாத்திரை சாப்பிட்டதும் தலைவலி பறந்தோடியது*'.

*[பறந்தது + ஓடு]*

**பறநாட்டுப் பெருங்கொற்றனார்** *paranāttu-p-peruṅkorranār* பெ. (n.) அகநானூற்று 323 ஆம் பாடலைப் பாடிய கடைக்கழகக் காலப்புலவர்; a sangam poet.

(புறநாட்டுப் பெருங்கொற்றனார் என்னும் பாட வேறுபாடு உண்டு. வானிற் புயல் தொகுதிகள் செல்லுந் தோற்றம் யானைகள் கூட்டமாகச் செல்வதுபோல் இருக்கிறதென்று கூறுகிறார் (அகம்.323.))

**பறப்பன்** *parappan,* பெ. (n.) **1.** தேள் (திவா.); scorpion. "*போனான் பறப்பன் முள்ளுறுத்தி*" (சேதுபு. அனுமகுண்.14) **2.** நளி ஓரை (திவா.); scorpio in the zodiac. **3.** விரைவாளன்; hasty person.

*[பற → பறப்பன்]*

**பறப்பன** *parappana,* பெ. (n.) சிறகுடைய உயிரிகள்; birds, as flying creatures. "*ஊர்வன, நடப்பன, பறப்பன*" (தாயு.பரிபூ.2.)

*[பற → பறப்பன]*

**பறப்பு** *parappu,* பெ. (n.) **1.** பறக்கை; flying, flight. **2.** மிகுவிறைவு; haste, hurry, quickness, speed. **3.** கவலை; anxiety, care, concern.

*[பற → பறப்பு]*

**பறப்புப்பார்-த்தல்** *parappu-p-pār-,* 4. செ.கு.வி நாள்வேலைகளைக் கவனித்தல்; to attend to one's daily avocations or personal concerns.

*[பறப்பு → பறப்பு + பார்-,]*

**பறப்பை** *parappai,* பெ. (n.) **1.** பறவை; bird. "*விலங்கு சாதிப் படிமமும் பறப்பைதாமும்*" (சூளா. சுயம்.81.) **2.** கருடன் முதலிய பறவை வடிவமாகச் செய்யப்பட்ட வேள்வி மேடை (**வேதிகை**); a dais for sacrificial fire, in the form of a bird. "*அங்கியை வேதிகைப் பறப்பை மேலுய்த்து*" (கந்தபு.. வேள்வி.3.) **3.** வேள்வியில் நெய்வைக்கும் மரவை; a kind of wooden vessel for keeping sacrificial ghee. "*பரிதிகண் மதலைநாண் பறப்பை பல்பசு*" (கந்தபு. சாலைசெய்.23.) (யாழ்.அக.)

*[பற → பறப்பை]*

**பறப்பைப்படு-த்தல்** *parappai-p-paḍu-,* 20. செ.கு.வி. (v.i.) கருடன், பருந்து முதலிய பறவைவடிவாக வேள்விமேடை அமைத்தல்; to construct a dais for sacrificial fire in the shape of birds like garuda, kite, etc. "*பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்பும்*" (தேவா.1,2.)

*[பறப்பை + படு-,]*

**பறபற¹–த்தல்** *paṟapaṟa-,* 3. செ.கு.வி. (v.i.) மிகவிரைதல் (யாழ்.அக.); to hasten; hurry.

*[பற → பறபற–,]*

**பறபற²–த்தல்** *paṟapaṟa-,* 3. செ.கு.வி. (v.i.) பறபறவென்று ஒலித்தல்; (onom) to make a burring noice.

*[பற → பறபற–,]*

**பறபறவிளையாட்டு** *paṟapaṟaviḷaiyāṭṭu,* பெ. (n.) ஒருவிளையாட்டு வகை (யாழ்.அக.); a game.

*[பறபற + விளையாட்டு]*

**பறபறெனல்¹** *paṟapaṟeṉal,* பெ. (n.) விரைவுக்குறிப்பு; expr, signifying quickness, hastiness, rapidity, etc.

*[பறபற + எனல்]*

**பறபறெனல்²** *paṟapareṉal,* பெ. (n.) துணி கிழித்தல் முதலிய நிகழும் போது உண்டாம் ஒலிக்குறிப்பு; onom, expr. of sound made in tearing cloth, scratching.

*[பறபற + எனல்]*

**பறம்பர்** *paṟambar,* பெ. (n.) தோல் வினைஞர் (திவா.); those whose caste duty is to work in leather.

*[புறம்பு → பறம்பர்]*

**பறம்பி** *paṟambi,* பெ. (n.) வஞ்சகி; deceitful, cunning woman. ***"நீதிபோல நெகிழ்ந்த பறம்பிகள்"*** (திருப்பு.7.)

து. பரமெது. பரமெ

*[புறம்பு → பறம்பு → பறம்பி]*

**பறம்பு¹–தல்** *paṟambu-,* 5. செ.குன்றா.வி (v.t.) அடித்தல்; to beat thrash.

**பறம்பு²** *paṟambu,* பெ. (n.) 1. மலை (பிங்.); hill, mountain. 2. பாரியின் மலை; a mountain belonging to the chief Pāri. ***"அளிதோ தானே பாரியது பறம்பே"*** (புறநா.109.) 3. பாரியின் நாடு (புறநா.110.); the country of the chief pāri. 4. முலை (பிங்.); woman's breast.

*[பரம் → பரம்பு → பறம்பு]*

**பறம்பை** *paṟambai,* பெ. (n.) கருந்தாளி என்னும் மூலிகை; a kind of herb. (சா.அக.)

**பறல்** *paṟal,* பெ. (n.) பறவை; bird ***"விரிசிறைப் பறலின் கடுமையாலெய்தி"*** (பாரத. இந்திரப்பிரத்த.21.)

*[பற → பறல்]*

**பறலிகை** *paṟalikai,* பெ. (n.) பறளை (பிங்.); layer, stratum.

*[பறல் → பறலிகை]*

மறுவ: பறளை

**பறவாதி** *paṟav ati,* பெ. (n.) 1. பேராசைக் காரன்; greedy man. 2. ஏதேனும் ஒரு நோக்கம் பற்றி விரைவுகொள்பவன்; hasty person intent on an object. 3. விரைவு; over. hastiness, over-anxiety.

*[பற → பறவாதி]*

**பறவெட்டி** *paṟaveṭṭi,* பெ. (n.) பழுப்பு நிறமுள்ளதும் ஒன்பது விரலம் வளர்வதுமான கழிமீன் வகை; mud skipper, back water fish, brownish, attaining 9 in length.



**பறவை**[1] *paṟavai,* பெ. (n.) 1. புள்; bird. *"பல் விருகமாகிப் பறவையாய்"* (திருவாச. 1, 27.) *"மிக்கநாரைப் பறவையும்"* (சிவரக. நந்திகேசுவர. 1.) 2. சிறகு (அக.நி.); wing, feather. 3. வண்டு; bee. *"தாதுண் பறவை வந்து"* (ஐங்குறு. 82.) 4. காக்கை (அவிட்டம்) (திவா.); the 23rd nakshatra. *"பணிதரு பெண்ணை மரக்கால் பறவையும் பத்திரையும்"* (விதான. குணாகுண. 16.) 5. அம்மை வகை; a kind of measles. 6. பறக்கும் பாம்பு; flying snake. *"பறவை மாநாகம் வீழ்ந்து"* (சிந்தா. பதுமை. 118.)

*[பற → பறவை]*

**பறவைக்கட்டு** *paṟavai-k-kaṭṭu,* பெ. (n.) பருப் பருவாய் உடம்பில் எழும் ஒருவகைப் புண்; a kind of syphilis giving rise to several wart like growths on the surface of the body. (சா.அக.)

**பறவைக்கெண்டை** *paṟavai-k-keṇḍai,* பெ. (n.) பறக்குங் கெண்டை; flying carp. (சா.அக.)

*[பறவை + கெண்டை]*



**பறவைக்கோலா** *paṟavai-k-kōlā,* பெ. (n.) 1. நீலநிறமுள்ளதும், ஒன்பது விரலம் வளர் வதுமான பறக்கும் மீன் வகை; flying fish, bluish, attaining. 9in in length. 2. முன்பு நீல நிறமாகவும் பின்பு வெண்ணிறமாகவும் மாறும் பறக்குமீன் வகை; flying fish, bluish turning slivery.

*[பறவை + கோலா]*



**பறவைச்சாலா** *paṟavai-c-cālā,* பெ. (n.) பறக்கும் குணவியல்புடைய சாலா என்னும் மீன் (தஞ்சை.மீன.) chala fish which have a flying habbit.

*[பறவை + சாலா]*

**பறவைத்தும்பி** *paṟavai-t-tumbi,* பெ. (n.) பறக்குந் தும்பி மீன் (முகவை.மீன.); thumbi fish which have a flying habbit.

*[பறவை + தும்பி]*



**பறவைநாகம்** *paṟavai-nāgam,* இறக்கை முளைத்த நாகப் பாம்பு; winged serpant.

*[பறவை + நாகம்]*



**பறவைப்பூ** *paṟavai-p-pū,* பெ. (n.) ஒருவகைக் கண்ணோய்; a kind of eye disease. (சா.அக.)

**பறவைமாநாகம்** *paṟavaimānāgam,* பெ. (n.) பறக்கும் பாம்பு (சீவக. 1283.); winged serpent.

*[பறவை + மாநாகம்]*

**பறவை மீன்** *paṟavai min,* பெ. (n.) *பறவைக்கோலா* பார்க்க; see *paṟavai-k-kōlā.*

*[பறவை + மீன்]*

**பறவை முது கெண்டை** *paṟavai mudukeṇḍai,* பெ. (n.) தாவிப் பாயும் தன்மை கொண்ட கெண்டை மீன் வகை; a kind of keňdai (barbus) fish which is having flying habbit.

*[பறவை + முது + கெண்டை]*



**பறவையணில்** *paravaiyaṇil,* பெ. (n.) தாவிச் செல்லும் அணில்; flying squirrel. (சா.அக.)

*[பறவை + அணில்]*



**பறவையின் வச்சிரம்** *paṟavayin vacciram,* பெ. (n.) பொன்னம்பர் (யாழ்.அக.); ambergris.

*[பறவையின் + வச்சிரம்]*

வயிரம் → வயிர – வசிர → வஜ்ர = skt.

**பறவைவிழி** *paṟavaiviḻi,* பெ. (n.) முன் தள்ளிய கண்; prominent eyes. (சா.அக.)

*[பறவை + விழி]*

**பறவைவேந்தன்** *paṟavai vēntaṉ,* பெ. (n.) கருடன்; king of birds and is held in high esteem by the hindus because of its service as a vehicle or carrier of god mahavishnu. (சா.அக.)

மறுவ: கருடாழ்வார்
பெரிய திருவடி

*[பறவை + வேந்தன்]*



**பறழ்** *paṟaḻ,* பெ. (n.) 1. மரங்களில் வாழ்வன, தவழ்வன, (மூங்கா, வெருகு, எலி, அணில், நாய், பன்றி, புலி, முயல், நரி) இவற்றின் இளமைப் பெயர் (திவா.); name applied to the young of arborel creatures, reptiles and certain other animals like mūngā, veruku, etc., *"பறழ்ப் பன்றிப் பல்கோழி"* (பட்டினப். 75.) 2. பருப்பு (தைலவ. தைல. 54.); dholl.

**பறளா** *paṟaḷā,* பெ. (n.) ஐந்தடி வளர்வதும் பொன்னிறம் இடை கலந்த சாம்பல் நிற முள்ளதுமான கடல் மீன் வகை; dolphin, greyish shot with gold, attaining 5ft. in length.



**பறளிகை** *paṟaḷigai,* பெ. (n.) *பறளை* பார்க்க; see *paṟaḷai.*

*[பறளை → பறளிகை]*

**பறளை** *paṟaḷai,* பெ. (n.) 1. மாழைத் தகடு (S.I.I.ii, 7); plate of metal. 2. பற்றிரும்பு; cramp-iron. 3. குறடு; smiths tongs. 4. தளவரிசைப் படை; layer, stratum. *'கட்டிடம் பறளையாய்ப் பேர்ந்து போயிற்று'*

**பறளைச்சந்தனம்** *paṟaḷai-c-canda-ṉam,* பெ. (n.) தட்டையாகத் தட்டி வைத்த சந்தனம்; cake of sandal paste.

*[ஒருகா. வரள் → பறள் → பறளை + சந்தனம்]*

**பறாஅக்குருகு** *paṟāa-k-kurugu,* பெ. (n.) கொல்லன் உலை மூக்கு; the nose of the black-smith's anvil. *"பறா அக்குருகினுயிர்த்தலு முயிர்த்தனன்"* (கலி. 54.)

*[பற + ஆ (எ.ம.) + குருகு]*

**பறாண்டு–தல்** *parāṇḍu-,* **5.** செ.குன்றா.வி. (v.t.) உகிர் முதலியவற்றால் சுரண்டுதல்; to scratch, as with nails.

*[பிறாண்டு → பறாண்டு–,]*

**பறாரிடு–தல்** *parāriḍu-,* **20.** செ.கு.வி (v.i.) பறாரென்று ஒலி செய்தல் (யாழ்.அக.); to make a burring sound.

*[பறார் → பறாரிடு–,]*

**பறாரெனல்** *parār-eṉal,* பெ. (n.) ஒலிக்குறிப்பு (யாழ்.அக.); onom expr of burring sound.

*[பறார் + எனல்]*

**பறி¹–தல்** *pari-,* **4.** செ.கு.வி. (v.i.) **1.** ஓடிப் போதல்; to slip out run away, as a horse; to flow out quickly, as water. *"பண்டை வினைகள் பறிய நின்ற"* (தேவா. **395. 2.**) **2.** நிலைபெயர்தல்; to be displaced suddenly; to be capsized; to give way; to be titted; to be uprooted. (க. பறி.) **3.** வெளிப்படுதல்; to escape, as breath in sighing as air from a bottle; to fly off, as steam, as heat from the system. *"மூச்சுப்பறிகிறது"* **4.** எய்யப்படுதல்; to be discharged as an arrow. **5.** ஒலியுடன் வெளிப்படுதல்; to explode; to be voided, as wind from the stomach. or bowels. *'வாயு பறிகிறது'* **6.** முன்செல்லுதல்; to move forward as the sight in reading, the feet in walking. **7.** கட்டவிழ்தல்; to be loosened, as bonds. *"பந்தம் பறியப் பரிமேற்கொண்டான்"* (திருவாச. **8, 3.**) **8.** இல்லாமற்போதல்; to be lost, as property, office or influence. **9.** தொலைவு நிலையாதல்; to be at a distance. to get to a distance. "பறியப்பார்"

*[பற → பறி–,]*

**பறி²–தல்** *pari-,* **4.** செ.கு.வி. (v.i.) **1.** ஒட்டிப் போதல்; to sink in, as the belly by starvation. **2.** திரட்டப்படுதல்; to be gathered, collected as tribute, debt. *'கடன் பறிய வில்லை'* **3.** அறுதல்; to be cut off, torn apart, as roots. *"வீசின காற்றின் வேர் பறிந்த வெற்பினும்"* (கம்பரா. வாலிவ. **10.**) (க. பறி) **4.** உண்டாதல்; to sprout, shoot up. *'கதிர் பறியவில்லை'* **5.** தணிதல்; to subside, fall down, as temparature. *"சூடு பறிந்தது"* **6.** தீர்மானப் படாதிருத்தல்; to remain unsettled. *"நெல் விலை பறியவில்லை"*

**பறி³–தல்** *pari-,* **2.** செ.குன்றாவி. (v.t.) தப்பிப் போதல்; to escape from. *"பாகரைப் பறிந்தோடி"* (கம்பரா. கும்பகருணன். **320.**)

**பறி⁴–தல்** *pari-,* **4.** செ.கு.வி **1.** ஒழுகுதல்; leak, fall by drops. *"செம்புனல் பறிந்த"* (திருவிளை. தண்டி. **29.**) **2.** போதல்; go away. *"எதிர்ப்பர் பின் பறிவர் நேர் போயெழுந்து வானேறு போல–வதிர்ப்பர்"* (திருவிளை. அங்க. **19.**)

**பறி⁵–த்தல்** *pari-,* **11.** செ.குன்றா.வி. (v.t.) **1.** செடி யிலிருந்து இலை முதலியவற்றை வலிய நீக்குதல்; to pluck, crop, pick off with a twist. *"அடகு பறித்துக் கொண் டட்டு"* (நாலடி. **289.**) **2.** பிடுங்குதல்; to weed, eradicate, to pull out, as an arrow. *"மெய்வேல் பறியா நகும்"* (குறள், **774.**) **3.** வலிதிற் கவர்தல்; to take by force, to usurp, grasp, extort, rub, plunder, confiscate. *"வில்லினைப் பறித்தான்"* (கம்பரா. அதிகாயன். **168.**) **4.** தோண்டுதல்; to dig, excavate. 'அவன் பறித்த குழியில் அவனே விழுவான்' **5.** பாரம் இறக்குதல்; to unload. *"பாரத்தையும் பறியாமல்"* (புறநா. **30, 11,**உரை.) **6.** அழித்தல்;

to destroy. *"எண்ணிலா வெள்ள மெஞ்சப் பறித்தபோது"* (கம்பரா. கும்பகருணன். 17.) 7. நீக்குதல்; to abandom to dismiss. *"பரியா வடியாற் பறியான்"* (ஏலாதி. 47.)

*'பறித்த காட்டுக்குப் பயம் இல்லை'* (பழ.)

*[பற → பறி → பறி–,]*

**பறி⁶–த்தல்** *pari-,* 11. செ.குன்றாவி. (v.t.) (இலங்.) ஊர்தியி லிருந்து பொருள்களை இறக்குதல்; unload. *"வண்டிக்காரன் விறகைத் தெருவில் பறித்து விட்டுப் போய்விட்டான்"*

**பறி⁷** *pari,* பெ. (n.) 1. மீன் பிடிக்குங் கருவி; contrivance for catching fish. *"பறியுடை முன்றில்"* (பெரும்பாண். 265) 2. பிடுங்குகை; plucking, cropping, picking off. *"பறி கொடலையினார்"* (தேவா. 572, 10.) 3. கொள்ளை; seizre, plunder, depredation, pillage, extortion. 4. இறக்கின பாரம்; goods unloaded or discharged, as from a cart, a boat. 5. பனையோலைப் பாய்; mat of palm leaf. *"பறிப்புறத்திட்ட பாலொடை யிடையன்"* (நற். 142.) 6. உடம்பு; body. *"பறியே சுமந்துழல்வீர் பறிநரி கீறுவ தறியீர்"* (தேவா. 1154, 2.) 7. பொன்; gold, a slang term. *"பொற் கொல்லர் பொன்னைப் பறி என்றும்"* (தொல். சொல், 17, இளம்பூ.)

*[பறி² → பறி]*

**பறி⁸** *pari,* பெ. (n.) பிடிக்கப்பட்ட மீனைச் சேர்த்து வைக்க ஏதுவான பனை யோலைப் பெட்டி (மீன. பொ. வ.) a kind of basket which is made from palmyra leaf.
'பறி நிறைந்தால் கரை ஏறுவான்' (பழ.)



**பறிக்கல்** *parikkal,* பெ. (n.) கிட்டக்கல்; scoria, dross, overburnt light brick. (சா.அக.)

மறுவ: பறிக்கல்லு.

*[ஒருகா: பறி → பறிக்கல்]*

**பறிகாரன்** *parikāran,* பெ. (n.) 1. முறை யில்லாதவன்; நடுநிலைமையில்லாதவன்; extrotioner. 2. வழிப்பறிசெய்பவன்; highway robber.

***[பறி + காரன்]***

**பறிகொடு¹–த்தல்** *pari-kodu-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. களவு கொடுத்தல்; to be robbed of. *"உடைமை கள்ளர் கையிற் பறிகொடுத்து"* (தனிப்பா. 1. 238, 9.) 2. சாகக் கொடுத்தல்; to lose, as children.

*[பறி + கொடு–,]*

'பறிகொடுத்த காட்டில் அச்சமில்லை' (பழ.)

**பறிகொடு²–த்தல்** *pari-kodu-,* 22. செ.கு.வி. (v.i.) 1. இரங்கத் தகுந்த வகையில் விட்டு விடுதல்; be robbed of; lose regrettaby. *"கூட்டத்தில் பணத்தைப் பறிகொடுத்துவிட்டு அலறினான்"* 2. மனத்தை நாட்டம்

கொள்ளவிடுதல்; கவரவிடுதல்; lose ones heart (to s.o. or sth.) *"அவள் அழகில் மயங்கி மனத்தைப் பறி கொடுத்து நின்றான்"*

**பறிச்செம்பு** *pari-c-cembu,* பெ. (n.) 1. தங்கச் செம்பு; consolidated copper with the refined gold. 2. பொன்னாக்கச் செம்பு; gold used in alchemy. (சா.அக.)

(பொன்னை 'பறி' என்பது மருத்துவர் குழூஉக்குறி.)

**பறிதலைக்கையர்** *paritatai-k-kaiyar,* பெ. (n.) *பறிதலையர்* பார்க்க; see *paritalaiyar.* "பழதுளம் வேவா நின்ற பறிதலைக்கையர்" (திருவாலவா. 37,74.)

*[பறிதலை + கையர்]*

**பறிதலையர்** *pari-talaiyar,* பெ. (n.) தலை மயிரைப் பறித்துவிடுஞ் சமணர்; jains who pluck of all the hair from their heads. "பறி தலையராற் சாலப் பழுதாமன்றே" (திருவாலவா.37.7.)

*[பறி + தலையர்]*

**பறிபோ¹-தல்** *pari-pō-,* 8. செ.கு.வி. (v.i.) கொள்ளையிடப்படுதல்; to be plundered. *"பார்ப்பான் கதையும் பறிபோச்சோ"* (தனிப்பா. 1, 32, 61.)

*[பறி + போ-,]*

**பறிபோடு-தல்** *pari-pōḍu-,* 20. செ.கு.வி. (v.i.) மீ ன் பிடிக்கப் பறிவைத்தல்; to set the pari in water for catching fish.

*[பறி + போடு-,]*

**பறிபோ²-தல்** *pari-pō-,* 8. செ.கு.வி. (v.i.) பணம், பொருள், உரிமை முதலியவை; சட்டப்படி பறிக்கப் படுதல்; be snatched away; be taken away (law fully); be stripped of. *"ஊழல் குற்றம் மெய்ப்பிக்கப்பட்டதால் அவருடைய பதவி பறிபோயிற்று"*

**பறிமணல்** *parimaṇal,* பெ. (n.) பொன்மணல் (யாழ்.அக.); gold mixed with sand. (gold ore.)

*[பறி + மணல்]*

**பறிமுதல்** *parimudal,* பெ. (n.) 1. அரசால் கவர்ந்து கொள்ளப்பட்ட பொருள்; confiscated property. 2. கொள்ளையிடப் பட்ட பொருள்; things plaudered from a person. *"எங்களிடம் படைக்கலமே இல்லாத போது படைக்கலப் பறிமுதல் என்ற பேச்சுக்கே இடமில்லை"*

*[பறி + முதல்]*

**பறிமுதல்செய்-தல்** *parimudal-šey-,* செ.கு.வி. (v.i.) அரசு சட்ட முரணாக வைத்திருப்பதை அல்லது சட்ட நடவடிக்கையாக ஒன்றைக் கைப்பற்றுதல்; confiscate. *"நெறிமுறைகளை மீறியதற்காகத் தொழிற்சாலை உரிமம் பறிமுதல் செய்யப்பட்டது"*

*[பறிமுதல்+ செய் → பறிமுதல்செய்-,]*

**பறிமுறை** *parimurai,* பெ. (n.) பல்விழுந்து முளைக்கை; cutting of second teeth. *"பல்லின் பறிமுறை பாராட்டினையோ"* (கலித். 22.)

*[பறி + முறை]*

**பறியலூர்** *pariyalūr,* பெ. (n.) சிவபிரானது மறச்செயல் நிகழ்ந்த, சிவத்தலங்கள் எட்டனுள் ஒன்று; a sivan shrine, one of atttavirattam.

*"திருந்து மறையோர் திருப்பறியலூரில் விரிந்த மலர்ச்சோலை வீரட்டத்தானே"* - 134-2.

*"திரையார் புனல் சூழ் திருப்பறியலூரி விரையார் மலர்ச் சோலை வீரட்டத்தானை"* – 134–2

**மறுவ.** பரசலூர்

*[பறி¹ → பறியல் + ஊர்]*

**பறியவிடு–தல்** *pariya-vidu-,* 20. செ.குன்றாவி. (v.t.) 1. தப்பவிடுதல் (யாழ்.அக.); to let one escape. 2. நெகிழவிடுதல்; to let slip.

*[பறி → பறிய + விடு–,]*

**பறியோலை** *pari-y-ōlai,* பெ. (n.) பனையோலைப் பாய்; mat of palm leaf. *"பறியோலைச் சயனத்தர்"* (திவ். பெரியாழ். 11, 5.)

*[பறி + ஓலை]*

**பறிவு** *parivu,* பெ. (n.) 1. கழிவு; discharge, sudden dislodgement, slipping out. 2. அதிர்கை; snapping, explosion. 3. நிலை பெயர்கை; giving way, as a post. 4. ஒட்டிப் போகை; sinking, falling in, as of the belly.

*[பறி¹ + பறிவு]*

**பறிவை** *parivai,* பெ. (n.) 1. சீந்தில், (சது.) பார்க்க; moon creeper; gulancha. 2. (சா.அக.) நந்தியாவட்டம் (மலை.); east indian rosebay; wax flower. 3. செடி வகை (பிங்.); a plant. 4. *தாழை* (நாமதீப. 313.) பார்க்க; see *tālai.* fragrant screw-pine.

*[பறி → பறிவை]*

**பறுகன்** *parugan,* பெ. (n.) குள்ளன்; short person.

*[பறுகு → பறுகன்]*

**பறுகீ** *parugi,* பெ. (n.) 1. சீமைக் கற்றாழை; foreign aloe. 2. பெருங்குறும்பை; young nut of coconut. (சா.அக.)

**பறுகு** *parugu,* பெ. (n.) 1. குள்ளம்; shortness, stuntedness, as of a person. 2. சிறுதூறு (யாழ்.அக.); low bushes.

*[பள் → பள்கு → பறுகு]*

**பறுணி** *paruṇi,* பெ. (n.) 1. கொள்ளு; horse gram. 2. சீந்தில்; moon creeper. 3. கருங் குமிழ்; black cashmere tree. 4. சிறுகுமிழ்; small cashmere tree. 5. பட்டைச் சாராயம்; arrack. 6. பெருங்குறும்பை; young nut of coconut. 7. வல்லாரை(சங்.அக.); penny wort.

**பறுவாங்கண்ணி** *paruvāṅ-kaṇṇi,* பெ. (n.) கப்பற்பாயின் அடிப்பகுதியைக் கட்டவுதவுங் கயிறு; foot-rope.

**பறுவான்** *paruvāṉ,* பெ. (n.) கப்பற்பாயைத் தாங்கும் கழி; yard, the support of square sail.

**தெ.** பரமானு

**பறை¹–தல்** *parai-,* 4. செ.குன்றா.வி. 1. சொல்லுதல்; to speak; say. *"ஏதம்பறைந் தல்லசெய்து"* (திவ்.திருவாய்.4,6,8.)

**பறை²–தல்** *parai-,* 3. செ.கு.வி. (v.i.) 1. அழிதல்; to vanish; disappear. *"பரவுவாரவர் பாவம் பறையுமே"* (தேவா.1213,11.) 2. தேய்தல்; to be wasted, worn out or impaired. *"நெடுஞ்சுவர் பறைந்த கொட்டில்"* (பெரும்பாண். 189.) *"பார்வையைத்த பறைந்தாள் விளவின்"* (பெரும்பா.95.).

**பறை³–த்தல்** *parai-,* 11. செ.குன்றா.வி. (v.) 1. சொல்லுதல்; to say, speak. *"பொய்ப்பசி பறைத்திளைய கள்வன்"* (துணிகைப்பு. களவு. 135.) 2. நீக்குதல்; to remove, destroy. *"பாவம் பறைக்குற்றால் பறைக்கலாமே"* (சீவக. 1434.)

**பறை⁴** *parai,* பெ. (n.) 1. முரசு; kettle-like drum. *"அறைபறை யன்னர் கயவர்"* (குறள், 1076.) , *"போர்ப்பறை"* 'பறைக்கண் கடிப்பிடுமாறு' (பழமொ.) 2. பறைச்சாதி; the paraiya caste, as drum-beaters. *"இவர் பறைச் சேரியிலேயிருந்து"* (கோயிலொ. 109) 3. வட்டம்; ring. *"பறைக்கட் பீலித்தோகை"* (அகநா. 15.) 4. சொல் (பிங்.); word, saying, statement. 5. விரும்பிய பொருள்; desired object. *"இறைவாநீ தாராய்பறை"* (திவ். திருப்பா. 28.) 6. ஒரு முகத்தலளவை; a measure of capicity. *"அளக்கும் பறை முதலியன"* (சிலப். 14, 208, அரும்) 7. மரக்கால் முதலியவற்றின் வாய்ப்பட்டம் (சிலப். 14, 208, அரும்); ring round the mouth of a vessel. 8. ஒரு சிற்றிலக்கியம்; a dramatic composition. அவர் பாடின பள்ளும் பறையும் இசையிலே கேட்டருளும்படி (கோயிலொ.109.) 9. வரிக்கூத்துவகை (சிலப். 3, 13, உரை.); a masquerade dance. 10. குகை (அருநி. 640.); cave.

ம. பற

*[பறை¹ → பறை]*

**பறை⁵** *parai,* பெ. (n.) 1. பறக்கை; flying. *"துணைபறை நிவக்கும் புள்ளின மான"* (மலைபடு. 55.) 2. இறகு; wing, feater, plumage. *"பைங்காற் கொக்கின் மென்பறைத் தொழுதி"* (நெடுநல். 15.) *"பறைவிரித்துரு நனைத்த போது"* (சேதுபு. பாலபாச. 35.) 3. பறவை; bird. *"பல்பறைத் தொழுதி"* (குறுந். 175.) 4. கருவி; tool. *"நிறையோசை பெற்ற பறை யோசை யற்று"* (அரிச்சந். மயாந. )

**பறை⁶** *parai,* பெ. (n.) 1. முன்பு வழக்கில் இருந்த ஆறு மரக்கால் கொண்ட முகத்தலளவு; (formerly) a measure of 6 மரக்கால் 2. மேற்சொன்ன அளவு குறிக்கப்பட்ட கலம்; a cylindrical vessel made of iron or brass which can hold the state quantity.

**பறைக்கம்பு** *parai-k-kambu,* பெ. (n.) முகத்தலளவையில் தலைவழிக்கும் கம்பு; rod for striking off the excess in measuring grain.

*[பறை⁴ + கம்பு → பறைக்கம்பு]*

**பறைக்கால்** *parai-k-kāl,* பெ. (n.) *பறைக் காலி* பார்க்க; see *parai-k-kāli.*

**பறைக்காலி** *parai-k-kāli,* பெ. (n.) *பறைக்காளி* பார்க்க; see *parai-k-kāḷi.*

*[பறை + காலி]*

**பறைக்காளி** *parai-k-kāḷi,* பெ. (n.) 1. ஒரு வகை மெல்லிய துணிவகை; muslin, a fine cloth. 2. ஒருவகை முருட்டுத்துணி; coarse cloth.

உருது. பறகாளா

*[பறை + காளி]*

**பறைக்கிளுவை** *parai-k-kiḷuvai,* பெ. (n.) முள்ளுக்கிளுவை; berrys madras balsam tree. (சா.அக.)

**பறைக்குடிச்சி** *parai-k-kudicci,* பெ. (n.) எவட்சாரம்; nitre. (சா.அக.)

**பறைக்குடும்பு** *parai-k-kudumbu,* பெ. (n.) 1. வரிக்கூத்து வகை (சிலப். 3; 13, உரை.)

*[பறை + குடும்பு]*

**பறைக்கும்பை** *parai-k-kumbai,* பெ. (n.) *பறைச்சேரி* பார்க்க; see *parai-c-cēri.*

*[பறை + கும்பை]*

**பறைக்கொம்மட்டி** *parai-k-kommatti,* பெ. (n.) *பேய்க் கொம்மட்டி,* பார்க்க. see *pēy-k-kommatti* colocynth.

*[பறை + கொம்மட்டி]*

**பறைச்சல்** *paraiccal,* பெ. (n.) பேச்சு (யாழ்.அக.); talk, speech.

*[பறை[3] → பறைச்சல்]*

**பறைச்சி** *paraicci,* பெ. (n.) பறைக்குடிப் பெண்; a paraiya woman fem. of paraiyan.

*[பறையன் → பறைச்சி]*

**பறைச்சேரி** *paraiccēri,* பெ. (n.) பறை முழக்குவோர் குடியிருப்பு **ஊர்ப்பகுதி; paraiya** village or quarters.

ம. பறச்சேரி

*[பறை[4] + சேரி]*

**பறைசாற்று–தல்** *parai-šāṟṟu-,* **5.** செ.கு.வி. (v.i.) செ.குன்றா.வி (v.t.) **1.** *பறையறைதல்* பார்க்க; see *parayarai-,* **2.** கமுக்கத்தை வெளிப்படுத்துதல்; to blab out secrets.

மறுவ: செந்தாழை

*[பறை + சாற்று–,]*

**பறைசீவி** *paraisīvi,* பெ. (n.) **1.** சிறுநன்னாரி; a species of sarasparilla swallow root. **2.** கொள் என்னும் தவச வகை; horse gram. **(சா.அக.)**

***[பறை + சீவி]***

**பறைத்தப்பட்டை** *parai-tappattai,* பெ. (n.) *பறைமேளம்* பார்க்க; see *paraimēlam.*

*[பறை + தப்பட்டை]*

**பறைத்தம்பட்டம்** *parai-t-tambattam,* பெ. (n.) *பறைமேளம்,* பார்க்க; see *paraimēlam.*

*[பறை + தம்பட்டம்]*

**பறைத்தாதர்** *parai-t-tādar,* பெ. (n.) வள்ளுவரில் ஒருசாரார்; a section of valluvās.

*[பறை + தாசர் → தாதர்]*

தாசர் = skt

**பறைத்தேமல்** paraittēmal, *பெ. (n.)* கருப்புத் தேமல்*; black spots on the skin.* **(சா.அக.)**

**பறைத்தொம்பர்** *parai-t-tombar,* பெ. (n.) *பறைக் கூத்தாடி,* **2.** பார்க்க; see *parai-k-kūttādi-2*

*[பறை + தொம்பர்]*

**பறைதட்டு[1]–தல்** *parai-tattu-,* **5.** செ.கு.வி. & செ.குன்றா.வி (v.i.) (v.t.) *பறையறை–,* ***(யாழ்.அக.)*** பார்க்க; see *parai-y-arai.*

*[பறை + தட்டு–,]*

**பறைதட்டு[2]–தல்** *parai-tattu-,* **3.** செ.கு.வி. (v.i.) (இலங்.) *பறைசாற்று* பார்க்க; see *parai-cāṟṟu.*

**பறைநாகம்** *parainägam,* பெ. (n.) கருப்பு நாகம்; black cobra. **(சா.அக.)**

*[பறை + நாகம்]*

**பறைநிலை** *parainilai,* பெ. (n.) ஒரு வகைச் சிற்றிலக்கிய நூல்; a kind of cirrilakkiyam.

*[அரசர்கட்கு முடிபுனை விழாவிலும் கடவுளர் விழாவிலும், நாடும் நகரமும் நலம் பெற வேண்டுமென இயம்பிவரும் நெறியை வஞ்சிப் பாவில் அமைத்துப் பாடுவது. இந்நூலி லக்கணம் பன்னிரு பாட்டியலில் மட்டு முள்ளது (211). வள்ளுவர்கள் மேற் கூறிய இரு விழாக்களிலும் யானை மீதமர்ந்து பறை யறைந்து, அரசரைக் கடவுள் காக்க வேண்டுமென்று வாழ்த்துவதைப் பாடுவதாக இருக்கலாம்.]*

**பறைநீதம்** *parainītam,* பெ. (n.) வெள்ளை யாதளை; white leaved physics nut. (சா.அக.)

**பறைப்படுத்து–தல்** *parai-p-paduttu-,* 5. செ.கு.வி. செ.குன்றா.வி (v.i.) (v.t.) பறையறை– see paraiyarai-, *"மன்றங்கறங்க மயங்கப் பறைபடுத்து"* (பு. வெ. ஒழிபு. 5.)

*[பறை + படுத்து–,]*

**பறைப்பருந்து** *parai-p-parundu,* பெ. (n.) கரும்பருந்து; black kite, a kind of eagle. (சா.அக.)

*[பறை + பருந்து]*

**பறைப்பாரி** *parai-p-pāri,* பெ. (n.) இராக் காவலாளரின் பாடல்வகை; a song of night-watchmen.

*[பறை + வரி → பரி → பாரி]*

**பறைப்புடையன்** *parai-p-pudaiyan,* பெ. (n.) புடையன் பாம்பு வகை (யாழ்.அக.); a species of earth-snake.

*[பறை + புடையன்]*

**பறைப்பூச்சி** *parai-p-pūcci,* பெ. (n.) சிலந்திப் பூச்சி; spider. (சா.அக.)

*[பறை + பூச்சி]*

**பறைமுறை** *parai-murai,* பெ. (n.) பறை யறைந்து விளம்பரம் செய்கை; publishing by beat of drum.

*[பறை + முறை]*

**பறைமேளம்** *paraimēlam,* பெ. (n.) **1.** பறையர் தப்பட்டை; drum of paraiyās. **2.** அலப்புவோன்; one unable to keep a secret; babbler, talkative person.

*[பறை + மேளம்]*

**பறைமை** *paraimai,* பெ. (n.) வரிக் கூத்து வகை (சிலப். 3. 13. உரை. பக். 89.); a masquerade dance.

*[பறை → பறைமை]*

**பறையடி–த்தல்** *parai-y-adi-.* 4. செ.குன்றா.வி. செ.கு.வி (v.i.) & (v.t.) பார்க்க, ***பறையறை–, (கம்பரா. வாலிவதை. 143.);*** see *paraiyarai-,*

*[பறை → பறையடி –,]*

**பறையலகு** *parai-y-alagu,* பெ. (n.) பலகறை; cowry shell. *"பறையல கனைய வெண்பல்"* (சீவக. 2773.)

*[பறை + அலகு]*

**பறையறை[1]–தல்** *parai-y-arai-,* 3.செ.குன்றா.வி. (v.i.) **1.** செய்தி தெரிவிக்கு மாறு பறையடித்தல்; to publish by beat of drum. *"பறையறைந் தல்லது செல்லற்க வென்னா"* (கலித். 56.)

*[பறை + அறை–,]*

**பறையறை²–தல்** *parai-y-arai-,* 3. செ.கு.வி. (v.i.) நெஞ்சடித்தல்; to throb; as heart, from fear. *"இருவர்மா மனமும் பறையறைந் தயர்வுடனடுங்க"* (பாரத. இராசசூ. 24.)

*[பறை + அறை–,]*

**பறையன்** *paraiyan,* பெ. (n.) நால்வகை இசைக்குடிமக்களுள் ஒருவன்; a caste, one of four musical caste. *"பாணன் பறையன் துடியன் குடம்பனென்று அந்நான்கல்லது குடியுமில்லை"* (புறநா. 335.)

*[பறை → பறையன்]*

**பறையாமை¹** *parai-y-āmai,* பெ. (n.) கருநிற முள்ள ஆமை; a fresh-water tortoise, dark-in-colour.

*[பறை + ஆமை]*

**பறையாமை²** *paraiyāmai,* பெ. (n.) சொல்லாமை; not to tell.

*[பறை + ஆ (எ.ம.) + மை]*

**பறைவிடு–தல்** *parai-vidu-,* 18. செ.குன்றா.வி. (v.t.) செ.கு.வி. (v.i.) **பறையறை–**, பார்க்க, see பறையறை–, *"பறைவிட்டது"* (பெருங், மகர, 27, தலைப்பு)

*[பறை + விடு–,]*

**பறைவு** *paraivu,* பெ. (n.) 1. சொல்லுகை; speaking, talking, telling, blabbing, chattering. 2. தெரிவிக்கை; making known proclaiming. *"பறைவுற வரைந்தவாறும்"* (கூர்மபு. அனுக். 4.)

*[பறை¹ → பறைவு]*

**பறைவெட்டு** *parai-vettu,* பெ. (n.) பறை கொட்டுகை (யாழ்.அக.); beating of drum.

*[பறைவிடு → பறைவெட்டு]*

**பன்¹** *pan,* பெ. (n.) 1. நாணல் வகை; bulrush. 2. பருத்தி (நன். சங்கர. அரும்); cotton. 3. பன்பாயின் பின்னற் சதுரம்; square or checker in braiding bulrush. 4. அரிவாட்பல் (இலக்.அக.); tooth of a serrated sickle.

*[பல் → பன்]*

**பன்²** *pan,* பெ. (n.) 1. சொல்லல்; to tell. *"பன்னருஞ்சிறப்பில்"* (நன். பாயிரம்.) (முதனிலைத் தொழிற்பெயர்) 2. தெரிநிலை வினைப்பகுதி; verbal root.

*[பல் → பன்]*

**பன்³** *pan,* பெ. (n.) செயற்கையிழை யினாலாகிய மீன் பிடித்தற்கு உரிய மெல்லிய தூண்டிற் கயிறு (செங்கைமீன.); artificial rope for fish-hook.

**பன்பாய்** *panpāy,* பெ. (n.) கொழும்புப்பாய்; rushmat colombo mat.

*[பன் + பாய்]*

**பன்மணிமாலை** *panmaṇimālai,* பெ. (n.) கலம்பகவுறுப்புக்களுள் ஒருபோகும் ஊசலும் அம்மானையுமின்றி வரும் சிற்றிலக்கியம் (இலக். வி. 814); a poem containing all the sections of a kalambagam except oru-pōku, ūsal, and ammāṉai.

*[பல் + மணி + மாலை]*

**பன்மா** *paṉmā,* வி.எ. (adv.) *பன்மாண்* பார்க்க; see *paṉmāṉ.* *"பன்மா நாடுகெட வெருக்கி"* (பதிற்றுப். 83, 7.)

*[பல் + மாண் → பன்மா]*

**பன்மாகேசுவரர்** *paṉmākēšu varar,* பெ. (n.) சிவனடியார் திருக்கூட்டம்; company of saiva-devotees. *"பன்மா கேசுவர ரிரக்ஷை"* (S.I.I. iii. 95, 158.)

*[பன் + மகா + ஈசுவரர்]*

**பன்மாண்** *paṉ-māṉ,* து.வி. (adv) பலபடியாக; in many ways. *"பன்மாண் பாலில் வறுமுலை சுவைத்தனன்"* (புறநா. 160.)

*[பல் + மாண்]*

**பன்முக** *paṉmuga,* பெ.அ. (adj) பலவகையான; வேறுபட்ட; multifaceted; varied. *"அவருடைய பன்முகச் செயல்வென்றி களைப் பாராட்டி அவருக்கு விருது அளிக்கப் பட்டது"*

*[பல் + முக]*

**பன்முறை** *paṉmuṟai,* பெ. (n.) 1. பலதடவை; many times. *"பன்முறையதிசயித்து"* (திருவாலவா. 27.40) 2. பலவகை; many kinds *"பன்முறையானும் வினையெஞ்சுகிளவி"* (தொல்.சொல்.235)

*[பல்¹ + முறை]*

**பன்மை** *paṉmai,* பெ. (n.) 1. ஒன்றல்லாதது; plural, opp. to orumai. *"தானறி பொருள் வயிற் பன்மை கூறல்"* (தொல். சொல். 23.) 2. தொகுதி; plurality, multitude. *"உயிர்ப் பன்மை"* (புறநா. 19.) 3. ஒருபடிப்பட்டிராமை; inconsistency, inconstancy. *"பன்மையே பேசும் படிறன் றன்னை"* (தேவா. 674, 5.) 4. நேர் குறிப்பின்மை; indefiniteness. *"பன்மையாகவே பேசினான்"* 5. பொது வகையானது; (செல்வி 74.) anything of middling quality. 6. பார்த்தும் பாராமை; connivance. *"அவன் பன்மையாய் விட்டான்"*

*[பல் → பன் → பன்மை]*

**பன்மைச் சமூகம்** *paṉmai-c-camūgam,* பெ. (n.) பல இனமக்களும் பல மதத்தைச் சார்ந்தவர்களும் பல மொழி பேசுபவர்களும் ஒன்றாக வாழும் குமுகாயம்; pluralistic society.

*[பன்மை + சமூகம்]*

சமூகம் = Skt.

**பன்மைப்பால்** *paṉmai-p-pāl* பெ. (n.) பலர் பால் பலவின்பால்கள்; (gram.) plural number. *"பன்மைப் பாலாற் கூறுதல்"* (தொல். சொல். 62, இளம்பூ.)

*[பன்மை + பால்]*

**பன்மைப் பொதுப்பெயர்** *paṉmai-p-podu-p-peyar,* பெ. (n.) பன்மைப்பால்கட்குரிய பொதுப் பெயர்; common name in plural. *"கோதை கள்"* (நன்னூ. பெயரி. 27.)

*[பன்மை + பொதுப்பெயர்]*

**பன்மை பண்ணு-தல்** *paṉmai-paṇṇu-,* 11. செ.கு.வி. (v.i.) பார்த்தும் பாராதது போலிருத்தல்; to connive at a fault; to reprove or punish slightly.

*[போன்மை → பன்மை + பண்ணுதல்]*

**பன்மை பற்றிய வழக்கு** *paṉmai-paṟṟiya vaḻakku,* பெ. (n.) ஒரு கூட்டத்திற் பலரின் அல்லது பலவற்றின் இலக்கணத்தைக் கொண்டு கூட்டத்தையே அவ்விலக்கணமுடையதாக வழங்கும் வழக்கு; usage following the major number of cases. *"வேற்றுமை

யென்பது பன்மை பற்றிய வழக்கெனினுமமையும்" (தொல். சொல். 62, சேனா.)

*[பன்மை + பற்றிய + வழக்கு]*

**பன்மையியற்பெயர்** *panmai-y-iyar-peyar,* 1. ஓரினப் பலபொருளைக் குறிக்கும் இயற்பெயர் (தொல். சொல். 176, 182, சேனா); name generally denoting a species or group. 2. பல பாலையும் குறித்து நிற்கும் பெயர் (நன். 284, விருத்.); name denothing objects of several pāl.

*[பன்மை + இயல் + பெயர்]*

**பன்மொழித் தொகை** *panmoli-t-togai.* பெ. (n.) இரண்டு பெயருக்கு மேற்பட்ட பெயர்களாலாகிய தொகை (தொல். சொல். 420, உரை.); a compound made up of more than two nouns.

*[பல்¹ + மொழி + தொகை]*

**பன்மொழித் தொகைத் தொடர்** *panmoli-t-togai-t-todar,* பெ. (n.) பலமொழிகளைத் தொடர்ந்து நிற்குந் தொகை நிலை; "செந்நிறக் குவளை" (நன்னூ. பொதுவிய. 34.) a compound sentance made up of more than two nouns.

**பன்றி** *panri,* பெ. (n.) 1. கொழுத்த உடலையும் குட்டையான கால்களையும் சற்று நீண்டு குவிந்த வாயையும் உடைய கறுப்பு அல்லது வெள்ளை நிறத்தில் காணப்படும் விலங்கு வகை(தொல். சொல். 553.); hog; swine; pig. "காட்டுப்பன்றி" 2. பன்றி வடிவான பொறிவகை; a kind of hog shaped machine. "சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்" (சிலப், அடைக்கலம். 214.) 3. பன்றி நாடு பார்க்க; see *panri-nādu.* "பன்றி யருவா வதன் வடக்கு" (நன். 273, உரை.)

தெ. க. பன்டி. ம. பன்னி து; பஞ்சி

மறுவ: அரி
மைம்மா
கைம்மா
கோட்டுமா
கரம்
அத்திரி
இருளி
கனலி
கருமா
மோழல்
கோணி
கேழல்
எறுழி
களிறு
போழ்முகம்.
கிடி.

*[புல் → பல் → பன் → பன்றி]*

பன்றிவகைகள்

1. ஊர்ப்பன்றி.
2. காட்டுப்பன்றி.
3. நாட்டுப்பன்றி.
4. கடற்பன்றி.
5. முள்ளம்பன்றி.
6. சீனப்பன்றி.
7. சீமைப்பன்றி.
8. அந்தமான் பன்றி.
9. மூக்கம் பன்றி.

'பன்றிக் குட்டிக்கு ஒரு சந்தி ஏது?' (பழ.)
'பன்றிக் குட்டி ஆனை ஆமா'? (பழ.)
'பன்றி பல குட்டி, அரிமா ஒரு குட்டி' (பழ.)
'பன்றி பல குட்டி போட்டு என்ன?' (பழ.)
'பன்றியோடு கூடிய கன்றும் மலம் தின்னும்' (பழ.)

**பன்றி இறால்** *panri iral,* பெ. (n.) தலை பருத்துக் கூர்மையாய்க் காணப்படுவதோர் இறால் மீன் (குஞ்சை.மீன.); a kind of prawn.

*[பன்றி+ இறால்]*

**பன்றிக்கரணம்** *panri-k-karanam,* பெ. (n.) கரணம் பதினொன்றனுள் ஒன்றாகிய காலப் பகுதி; a division of time, one of eleven karaṇam.

*[பன்றி + காரணம்]*

**பன்றிக்கலவாயன்** *panri-k-kaḷavāyan,* பெ. (n.) பழுப்பு நிறமுள்ளதும், ஓரடி நீளம் வளர் வதுமான கடல்மீன் வகை; a sea-perch, light, brownish-red, attaining 1 ft, in length.

*[பன்றி + கலம் + வாயன்]*



**பன்றிக்கிடை** *panri-k-kiḍai,* பெ. (n.) பன்றிகள் அடையுமிடம்; pig-sty.

*[பன்றி + கிடை]*

**பன்றிக்கிழங்கு** *panri-k-kilangu,* பெ. (n.) பன்றி மோந்தான் கிழங்கு; water chestnut. (சா.அக.)

*[பன்றி + கிழங்கு]*

**பன்றிக்கிளி** *panri-k-kiḷi,* பெ. (n.) பச்சை நிறமுள்ள கடல்மீன் வகை; carrot wrass, green.

*[பன்றி + கிளி]*



**பன்றிக்குட்டி** *panrikkutti,* பெ. (n.) ஒரு வகைச் சதுப்பு நிலமரம்; cynad mangrove. (சா.அக.)

*[பன்றி + குட்டி]*

**பன்றிக்குத்தி** *panri-k-kutti,* பெ. (n.) சிறுமர வகை; compound cymed mangrove.

*[பன்றி + குத்தி]*

**பன்றிக்குருவி** *panri-k-kuruvi,* பெ. (n.) குருவி வகை; white-headed babbler.

*[பன்றி + குருவி]*

**பன்றிக்குளி** *panri-k-kuḷi,* பெ. (n.) ஒரு வகை மீன்; a kind of fish. (சா.அக.)



**பன்றிக்குறும்பர்** *panri-k-kurumbar,* பெ. (n.) குறும்பர் இன வகையினர்; a section of the kurumbar caste. *"பன்றிக் குறும்பர் பன்னிருவ ரென்னச் சிறந்தார் படிமீது"* (திருவாலவா. 59, 18.)

*[பன்றி + குறும்பர்]*

**பன்றிக்குறும்பு** *panri-k-kurumbu,* பெ. (n.) *நிலப்பனை (மலை.)* பார்க்க; see *nilappanai.* a plant

*[பன்றி + குறும்பு]*

**பன்றிக்குறுவை** *panri-k-kuruvai,* பெ. (n.) **1.** காய்ச்சல் வகை; anthrax fever. **2.** நெல் வகை; a kind of paddy.

*[பன்றி + குறுவை]*

**பன்றிக்கூழ்ப்பத்தர்** *panri-k-kul-p-pattar.* பெ. (n.) *பன்றிப்பத்தர், 1.* பார்க்க; see *panri-p-pattar.* *"பன்றிக் கூழ்ப்பத்தரிற் றேமா வடித்தற்றால்"* (நாலடி. 257.)

*[பன்றி + கூழ் + பத்தர்]*

**பன்றிக்கொடி** *panri-k-kodi,* பெ. (n.) வேள் புலவரசராகிய சாளுக்கியரது பன்றிக்குறி கொண்ட கொடி (திவா.); the banner of the hog belonging to caḷukkiya kings of vēlpulam.

*[பன்றி + கொடி]*



**பன்றிக்கொம்பு** *panri-k-kombu,* பெ. (n.) **1.** பன்றியின் கோரைப்பல்; hog's tusk. **2.** ஒரு வகை மீன்கொம்பு; tusk of the sea-hog.

*[பன்றி + கொம்பு]*

**பன்றிக்கொவ்வை**[1] *panri-k-kovvai,* பெ. (n.) கோவைவகை; a kind of caper.

*[பன்றி + கொவ்வை]*

**பன்றிக்கொவ்வை**[2] *panri-k-kovvai,* பெ. (n.) சிறுகுறட்டை; small coruttay gourd. (சா.அக.)

*[பன்றி + கொவ்வை]*

**பன்றிக்கொழுப்பு** *panri-k-koluppu,* பெ. (n.) *பன்றிநெய்* பார்க்க; see *panrinēy.*

*[பன்றி + கொழுப்பு]*

**பன்றிக்கோவை** *panri-k-kōvai,* பெ. (n.) கருங்கோவை; black caper. (சா.அக.)

*[பன்றி + கோவை]*

**பன்றிச்சுருக்கு** *panri-c-curukku,* பெ. (n.) கைப்பெருவிரல்களைத் தொடைகளின் புறத்தே செலுத்திக் கயிற்றாற் கழுத்தோடிணைத்து உடல் குனியவைக்கும் பள்ளிக்கூடத் தண்டனை; a mode of panishment in schools in which the thumbs are tied together under the hams with a cord close round the neck.

*[பன்றி + சுருக்கு]*

**பன்றிச்சேத்தான்** *panri-c-cēttān,* பெ. (n.) 1. சாம்பல் நிறமுள்ளதும் 2அடி நீளம் வளர்வதுமான கடல்மீன்வகை; cock-up, greyish, attaining 2ft. in length. 2. சாம்பல் நிறமுள்ளதும் 5 அடி நீளம் வளர்வதுமான கடல்மீன்வகை; cock-up, grey, attaining 5ft in length.

*[பன்றி + சேத்தான்]*



**பன்றித்தகரை** *panri-t-tagarai,* பெ. (n.) தகரைச் செடிவகை (சங்.அக.); bristle-tipped oblong-leaved eglandular senna.

*[பன்றி + தகரை]*

**பன்றித்தாளி**[1] *panri-t-tāli,* பெ. (n.) சிறுமரவகை; leather-leaved betel-nut-laurel.

*[பன்றி + தாளி]*

**பன்றித்தும்பு** *panri-t-tumbu,* பெ. (n.) அழுக்கெடுக்கத் தட்டார் பயன்படுத்தும் கருவிவகை; brush used by gold smiths.

*[பன்றி + தும்பு]*



**பன்றித்தோண்டிப்பூடு** *panri-t-tōndi-p-pūdu,* பெ. (n.) கோரைக் கிழங்கு; fragrant tuber of cyperus rotundus. (சா.அக.)

மறுவ; பன்றித்தோன்றி

*[பன்றி + தோண்டி + பூடு]*



**பன்றிநாடு** *panrināḍu,* பெ. (n.) கொடுந் தமிழ்நாடு பன்னிரண்டனுள் பழனி மலையைச் சுற்றியுள்ள நாடு (தொல்.சொல். 394,இளம்.); the region aound the palani hills, one of 12 koḍun-tamil-nāḍu.

*[பன்றி + நாடு]*

**பன்றிநெய்** *panrinēy,* பெ. (n.) பதப்படுத்தப்பட்ட பன்றிக் கொழுப்பு; prepared lard.

*[பன்றி + நெய்]*

**பன்றிநெல்** *panrinel,* பெ. (n.) காட்டு நெல்வகை. (யாழ்.அக.); a wild paddy.

*[பன்றி + நெல்]*

**பன்றிப்பத்தர்** *panri-p-pattar,* பெ. (n.) 1. பன்றிக்குக் கூழிடுந்தொட்டி; hog-trough. 2. ஒருவகை நீரிறைக்குங்கருவி. (சிலப்.10,110, உரை.); water-scoop for irrigation.

*[பன்றி + பத்தர்]*

**பன்றிப்பறை** *panri-p-parai,* பெ. (n.) காட்டுப்பன்றிகளை வெருட்டக்கொட்டும் பறை; pot-shaped drum for frightning away wildhogs. "*பன்றிப் பறையும்*" (மலைபடு.344.) (பிங்.)

*[பன்றி + பறை]*

**பன்றிப்பாகல்** *panri-p-pagal,* பெ. (n.) ஒருவகைப்பாகல்; a variety of bitter gourd. (சா.அக.)

*[பன்றி + பாகல்]*

**பன்றிப்பிடுங்கன்** *panri-p-piḍungan,* பெ. (n.) ஒருவகை மூலிகை; white climber, indian lendem. (சா.அக.)

மறுவ: பன்றிப் பிடுக்கன்

*[பன்றி + பிடுங்கன்]*

**பன்றிப்பிடுங்கொடி** *panri-p-piduṅkoḍi,* பெ. (n.) நீலமலைப்பன்றிப் பிடுக்கன் என்னும் மூலிகை; night honey suckle. (சா.அக.)

*[பன்றி + பிடுங்கொடி]*

**பன்றிப்புடல்** *panri-p-puḍal,* பெ. (n.) 1. கொம்புப்பாகல் (பதார்த்த.710.); oblong balsam apple see kombu-p-pagal. 2. புடல் வகை; a kind of snake gourd.

*[பன்றி + புடல்]*



**பன்றிப்புல்** *panri-p-pul,* பெ. (n.) வலம்புரிப்புல்; spear-grass.

*[பன்றி + புல்]*

**பன்றிப்பொறி** *panri-p-pori,* பெ. (n.) (பன்றியெந்திரம்); (சிந்தா.) a kind of ancient machine which is fixed in the port.

**பன்றிமயிர்** *panrimayir,* பெ. (n.) பன்றியின் முதுகிலுள்ள கனமான கட்டைமயிர்; hogs bristles.

*[பன்றி + மயிர்]*

**பன்றிமலை** *panrimalai,* பெ. (n.) பழனி மலையையடுத்துள்ள குன்று; a hill adjacent to palani hill.

*[பன்றி + மலை]*

**பன்றிமீன்** *panrimin,* பெ. (n.) 1. பன்றிச் சேத்தான் பார்க்க; see panri-c-cēttān. 2. மஞ்சள் நிறமானதும் நெடிதாய் வளருவது மான கடல்மீன்வகை; sea-fish, yellowish, attaining a large size. 3. பழுப்பு நிறமுள்ளதும் ஏழடி நீளம் வளர்வதுமான கடல்மீன்வகை; sea fish brownish, attaining 7ft. in length and weighing 300lbs.

**மறுவ.** கொடுவாய்மீன் பனையேறி (சா.அக.)

*[பன்றி + மீன்]*



**பன்றிமுகம்** *panri-mugam,* பெ. (n.) நிரயவகைகளில் ஒன்று; a hell. "*பன்றி முகமெனு நரகில்*" (சேதுபு. தனுக்கோ.10.)

*[பன்றி + முகம்]*

**பன்றிமுள்** *panrimul,* பெ. (n.) முள்ளம் பன்றியின் உடல்முள்; porcupine's quill.

*[பன்றி + முள்]*

**பன்றிமொத்தை** *panri-mottai,* பெ. (n.) 1. கிழங்குள்ள மரவகை; water-nut. 2. கொடி வகை (மலை.); common delight of the woods. 3. *சிறுகுறட்டை* பார்க்க; see *sirukurattai.*; a kind of snake-gourd.

*[பன்றி + மொத்தை]*

**பன்றிமோந்தான்** *panrmondān,* பெ. (n.) பன்றி *மொத்தை, 1.* **பார்க்க;** see *panrimottai.*

*[பன்றி + மோந்தான்]*

**பன்றியாட்டம்** *panryāttam,* பெ. (n.) 1. பன்றித் தன்மை; swinishness. 2. பன்றிபோல் இருகைகளையும் நிலத்திலூன்றிச் சுற்றி வந்து விளையாடும் பிள்ளை விளையாட்டுவகை; boy's play of moving in a circle on all fours like a pig.

*[பன்றி + ஆட்டம்]*

**பன்றிவாகை¹** *panrivāgai,* பெ. (n.) பச்சிலை மரம்; bastard rose wood. (சா.அக.)

மறுவ: வரியாங்கம்

*[பன்றி + வாகை]*

**பன்றிவாகை²** *panrivāgai,* பெ. (n.) ஒருவகை நீண்ட மரம்; tube - in-tube wood

*[பன்றி + வாகை]*

**பன்றிவார்** *panrivār,* பெ. (n.) பன்றியின் இறைச்சி; pork bacon.

*[பன்றி + வார்]*

**பன்றிவாழை** *panri-vālai,* பெ. (n.) நீண்ட குலையுள்ள ஒருவகை வாழை மரம்; a plantain tree with long and stooping bunches (சா. அக.)

*மறுவ:* ஆனை வாழை

*[பன்றி + வாழை]*



**பன்றிவாளை** *panrrivālai,* பெ. (n.) ஒரு வாளை மீன்(முகவை.மீன); a kind of vāḷai fish.

*[பன்றி + வாளை]*

**பன்றிவெட்டு–தல்** *panrivēttu-,* **5.** செ.கு.வி *பன்றியாட்டம்* பார்க்க; see *panriyāttam.*

*[பன்றி + விளையாட்டு → வெட்டு]*

**பன்றுகம்** *panrugam,* பெ. (n.) அசமதாகம்; என்னும் ஓமத்தைப்போன்ற ஒரு மருந்துச் சரக்கு; pimpinella involucrata.

**(இம்மருந்துச் சரக்கு, வளியைத் தணித்துச் சுறுசுறுப்டையுண்டாக்குமெனச் சா.அக. கூறும்).**

**பன்றை** *panrai,* பெ. (n.) நெய்க்கொண்டான்; soap nut tree (சா.அக.)

மறுவ: நெய்க்கொட்டான்.

**பன்னக்காரன்**[1] *panna-k-kāran,* பெ. (n.) கீற்றுமுடைவோன்; braider or worker in leaves, olas or straw.

*[பன்னம் + காரன்]*

**பன்னக்காரன்**[2] *panna-k-kāran,* பெ. (n.) வெற்றிலை வாணிகன்; a dealer in betel-leaves.

*[பன்னம்² → பன்னக்காரன்]*

**பன்னகசயனன்** *pannaka-sayanan,* பெ. (n.) பாம்பிற் பள்ளிகொண்டோனாகிய திருமால்; thirumāl, as lying on a snake. "*பன்னக சயனாதி பண்ணவர்*"(பிரபுலிங். வசவண்.29.)

***[பன்னகம் + சயனன்]***

**சயனன்** = skt

**பன்னகசாலை** *pannagasālai,* பெ. (n.) ***பன்னசாலை,*** பார்க்க; (யாழ்.அக.); see ***pannasālai***

***[பன்னகம்¹ + சாலை]***

**பன்னகண்டம்** *pannakandam,* மரம். (யாழ்.அக.); tree.

***[பன்னகம்² + கண்டம்]***

**பன்னகந்தி** *pannakandi,* பெ. (n.) கருவேம்பு (நாமதீப.302.); black neem

**பன்னகப்பூணினான்** *pannaga-p-pūniṉāṉ,* பெ. (n.) பாம்பை அணிகலனாகவுடைய சிவபெருமான் (உரி.நி.); sivan, as having ornaments of snakes.

*[பன்னகம்² + பூணினான்]*

**பன்னகம்²** *pannagam,* பெ. (n.) இலை; leaf.

*[பன் → பன்னகம்]*

**பன்னகம்²** *pannagam,* பெ. (n.) 1. பாம்பு (திவா.); snake "*கடிக்கும் பன்னகம் பிடிப்பருஞ்சீயம்*" (தேவா.171,9) 2. சீதாங்கச் செய்ந்நஞ்சு (யாழ்.அக.); a mineral poison 3. *பன்னாங்கு,2* பார்க்க; see *pannangu.*

*[பை + நாகம் = பைந்நாகம் → பந்நாகம் → பன்னாகம் → பன்னகம் ]*

**பன்னகமுயர்த்தோன்** *pannagamuyarttōṉ,* பாம்புக்கொடியுடைய துரியோதனன் (பிங்.); Duryōdanan, as having the insignia of snake on his banner.

*[பன்னகம்² + உயர்த்தோன்]*

**பன்னகர்** *pannagar,* பெ. (n.) நாகவுலகினர்; an order of beings inhabiting nāka-lōkam "**பன்னகர்க்கு நாதன்**" (மேருமந்.204.)

*[பன்னகம் → பன்னகர்]*

**பன்னகவைரி** *pannagavairi,* பெ. (n.) பாம்பின் பகைவனான கருடன்; (திவா.) garuḍan, as the foe of snakes.

*[பன்னகம் + வயிரி → வைரி]*

**பன்னகாசனன்¹** *pannakāsanaṉ,* பெ. (n.) பாம்பையுண்பவனான கருடன் (அரு.நி.688.); garuda, as the devourer of snakes.

*[பன்னகம் + அசனன்]*

அசனன் = skt.

**பன்னகாசனன்²** *pannakāsanaṉ,* பெ. (n.) திருமால். (அரு.நி.688.); thirumāl, as seated on a snake.

*[பன்னகம் + ஆசனன்]*

ஆசனன் = skt.

**பன்னகாபரணன்** *pannakabaranaṉ,* பெ. (n.) *பன்னகப்பூணினான்,* பார்க்க. (பெரியபு.எறிபத்.40.) see *pannaga-p-pūniṉann.*

*[பன்னகம் + ஆபரணன்]*

ஆபரணன் = skt.

**பன்னகுடி** *pannakuḍi,* பெ. (n.) *பன்னசாலை* பார்க்க; see *pannasālai.* "*பன்னகுடி மன்னினரே*" (சிவரக.தாரு.15.)

*[பன்ன + குடி]*

**பன்னச்சத்தகம்** *panna-c-cattagam,* பெ. (n.) ஓலை பின்னுவார் கையரிவாள்; braider's curved knife.

*[பன்னம் + சத்தகம்]*

சத்தகம் = skt.

**பன்னசாலை** *pannasālai,* பெ. (n.) இலைவீடு; leafy hermitage "*பன்னசாலை பழமைப் படவமைத்து*" (சிவரக.தாருக.19.) "*கைகளினின்று பன்னசாலை கட்டவல்ல வாயவே*" (புறத்திரட்டு; இடுக்கண் அழியாமை.)

*[பன்ன + சாலை]*

**பன்னத்தண்டு** *pannattanḍu,* பெ. (n.) நெய்வார் கருவியினொன்று; a weaver's implement

*[பன்னை² → பன்மை+ தண்டு]*

பன்னை = தறி

**பன்னத்தை** *pannattai,* பெ. (n.) *பனிநத்தை,* பார்க்க; see *paninattai.*

*[பனிநத்தை → பன்னத்தை]*

**பன்னநரன்** *pannanaran,* பெ. (n.) சாச்சடங்கில் பயன்படுத்தும் நாணலாலாகிய மக்களுரு; eiffigy in human shape made of leaves, used in funeral rites.

*[பன்னம் + நரன்]*

**பன்னபோசனம்** *panna-pōsanam,* பெ. (n.) இலையுணவு. (யாழ்.அக.); vegetable food.

*[பன்னம் + போசனம்]*

**பன்னம்**[1] *pannam,* பெ. (n.) ஒலைமுடைகை; braiding with ola or straw, plaiting.

*[பன்னு → பன்னம்]*

**பன்னம்**[2] *pannam,* பெ. (n.) 1. இலை; leaf "*மரகதப் பன்னத் தாம்பல்*' (கல்லா.53,28.) "*விதங்கெழுமலர் நீர்பன்ன மென்கனி வழங்குவாரை*" (சேதுபு.இராமநாத.25.) 2. இலைக்கறி (பிங்.); curry made of leaves. 3. சாதிபத்திரி (தைலவ.தைல.); mace. 4. *பலாசு (யாழ்.அக.)* பார்க்க; see *palāsu.* 5. வெற்றிலை (யாழ்.அக.); betel leaf.

*[பன் → பன்னம்]*

**பன்னமாசாலம்** *pannamāsalam,* பெ. (n.) மரவகை (யாழ்.அக.); a kind of tree.

**மறுவ:** கருந்தாளி

*[பன்னம்² + மாசாலம்]*

மசாலம் = skt.

**பன்னமிருகம்** *pannamirugam,* பெ. (n.) தழையுண்ணும் விலங்கு (யாழ்.அக.) animal subsisting on leaves.

*[பன்னம்² + மிருகம்]*

**பன்னரிவாள்** *pannarivāl,* பெ. (n.) கருக்கரிவாள்; sickle.

*[பன் → பன்னரிவாள்]*



**பன்னல்** *pannal,** பெ. (n.) 1. பஞ்செஃகுகை; tousing cotton with the hand. "*பன்னலம் பஞ்சிக் குன்றம்*" (சீவக.2274.). 2. பருத்தி (சூடா.); cotton for spinning 3. சொல்லுகை. (யாழ்.அக.); speaking. 4. சொல் (சூடா.); word, utterance 5. நெருக்கம் (சூடா.); closeness, denseness. 6. ஆராய்கை; searching, investigation "*பன்னல் சான்ற வாயிலொடு*" (தொல்.பொ.146.)

*[பன் → பன்னு → பன்னல்]* (சு.வி.61.)

**பன்னலதை** *pannalatai,* பெ. (n.) *பன்னவல்லி,* பார்க்க; see *pannavalli*

*[பன்னம் + லதை]*

லதா–லதை = skt.

**பன்னவல்லி** *pannavalli,* பெ. (n.) வெற்றிலைக்கொடி; betel plant.

*[பன்னம் + வல்லி]*



**பன்னவேலை** *pannavēlai,* பெ. (n.) ஓலைமுடைதற்றொழில்; braiding ōlās.

*[பன்னம் + வேலை]*

**பன்னா** *pannā,* பெ. (n.) 1. மங்கியவெண்மை நிறமுள்ளதும் 9 விரல நீளம் வளரக்கூடியதுமான கடல்மீன்வகை; a species of maigre, silvery grey, attaining 9 in. in length 2. வெண்மை நிறமுள்ளதும் 3 அடி நீளம் வளரக் கூடியதுமான வெள்ளைக் கற்றலை என்னுங்கடல்மீன்; a species of maigre, silvery, attaining 3 ft. in length, 3. பசுமை நிறமும் 3 விரல நீள வளர்ச்சியுமுள்ள நன்னீர் மீன்; a fresh water fish rifle green attaining 3 in. in length.

*[பன் + பன்னா]*

**பன்னா[2]** *pannā,* பெ. (n.) சாட்டையில் கட்டு கட்டும் வார்; leather-lash of a whip.

*[பனைநார் → பன்னார் → பன்னா]*

**பன்னாக்கு** *pannākku,* பெ. (n.) துடுப்பின் ஒரு கூறு (செங்கை.மீன.); a part of paddle, or oar.

**பன்னாகத்தலை** *pannāka-t-talai,* பெ. (n.) ஒருவகைக் கடல்மீன்; a kind of sea fish.



**பன்னாகம்** *pannāgam,* பெ. (n.) 1. பன்னாங்கு, 1. பார்க்க; see pannāṅgu,1. 2. பல்லக்கு முதலியவற்றின் மேற்கட்டி; top of a palanquin or carriage. 3. துளசி(வைத்.பரி.); holy basil.

**பன்னாங்கு** *pannāṅgu,* பெ. (n.) 1. தென்னந்தட்டி; braided cocoanut leaf. 2. பல்லக்கு முதலியவற்றின் மேற்கட்டி; top of a palanquin or carriage.

க. பன்னாங்க

மறுவ: கமுது

**பன்னாங்குழி** *pannāṅ-kuḻi,* பெ. (n.) பல்லாங்குழி; a think plank with 14 hollows. used in a particular kind of game.

*[பன்னான்கு குழி → பன்னாங்குழி]*

**பன்னாசம்** *pannāšam,* பெ. (n.) **துளசி** *(யாழ்.அக.)* பார்க்க; see *tulasi;* sweet basil.

**பன்னாசனம்[1]** *pannāšanam,* பெ. (n.) புற்பாய் (யாழ்.அக.); grass mat,

*[பன் + ஆசனம்]*

ஆசனம் = skt.

**பன்னாசனம்²** *pannal*, பெ. (n.) இலையுணவு (யாழ்.அக.); vegetable food.

*[பன் + அசனம் → ஆசனம்]*

**பன்னாசி** *pannāsi*, பெ. (n.) *பன்னாசம்,* பார்க்க; see *pannasam.*

*[பன்னாசம் → பன்னாசி]*

**பன்னாட்டு நிதியம்** *pannāttu-nitinam*, பெ. (n.) பல நாடுகளுக்கு இடையே புழங்கும் பணப்பரிமாற்ற அளவீடுகளை முறைப் படுத்துதல், அயல்நாட்டுச் செலாணிக்கு எற்படும் தடைகளை நீக்குதல் முதலிய நோக்கங்க ளுக்காக ஏற்படுத்தப்பட்ட பொருள் நிறுவனம் international monetary fund.

*[பன்னாட்டு + நிதியம்]*

நிதியம் = skt.

**பன்னாட்டு மன்றம்** *pannāttu-m-marram*, பெ. (n.) (பெ.வ.) ஒன்றிய நாடுகள் அவை; united nations organization. ***"அமைதியை நிலைநாட்டும் பொறுப்பு பன்னாட்டு மன்றத்துக்கு உரியது"***

*[பன்னாட்டு + மன்றம்]*

**பன்னாடு** *pannādu*, பெ. (n.) **1.** பழையநாடு; an ancient country ***"பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி"***

**பன்னாடை¹** *pannādai*, பெ. (n.) **1.** தெங்கு, பனை இவற்றின் மட்டைகளை மரத்தோடு பிணைத்து நிற்கும் வலைத்தகடு போன்ற நாற்பொருள்; fibrous cloth like web about the bottom of the leaf stalk of a palmyra or cocnut tree. **2.** நல்லதைத் தள்ளி அல்லதைக் கொள்ளும் பேதை அல்லது முட்டாள்; fool, as losing sight of what is essential and firmly grasping what is useless. **3.** இழை நெருக்க மில்லாத் துணிவகை(சூ.நிக.4:12.); a cloth of loose texture நெய்யரி;

மறுவ; நாரி, நெய்யரி, நாரரி, பன்னாடை

*[பனை + ஆடை = பனையாடை → பன்னாடை]*

பன்னாடை நெய்யரியாகப் பயன்படுத்தப் பெறுவதாலும் சாற்றைப்போக்கிச் சக்கையைப் பற்றிக் கொள்வதாலும் பயனுள்ளதை விட்டுப் பயனற்ற செய்தியைப் பற்றிக் கொள்ளும் பேதைக்குவமையாயிற்று.

**"அன்னம் ஆவே மண்ணொடு கிளியே இல்லிக் குடம் ஆடெருமை நெய்யரி அன்னர் தலையிடை கடை மாணாக்கர்" (நன். பாயி. 38.) (வே.க.77)**

**பன்னாணம்** *pannanam*, பெ. (n.) *பன்னாங்கு* பார்க்க; see *pannangu.*

*[பன்னான்கு → பன்னாணம்]*

**பன்னாத்து** *pannāttu*, பெ. (n.) பனாத்து, பார்க்க; see panattu.

*[பனாத்து → பன்னாத்து]*

**பன்னாபன்னாவெனல்** *pannāpannāvenal*, பெ. (n.) ஒன்றைப் பலமுறை பேசுதற்குறிப்பு; expr. signifying repetition.

*[பன்னா + பன்னா + எனல்]*

**பன்னாலம்** *pannālam*, பெ. (n.) தெப்பம். (யாழ்.அக.); raft.

**பன்னி¹** *panni*, பெ. (n.) *பத்தினி* பார்க்க; see *pattini.* ***"பன்னி யகலிகை"*** (கம்பரா.அகலி.72.)

*[ஒருகா: படிமை → பட்டினி → பத்தினி → பன்னி]*

**பன்னி[2]** *panni,* பெ. (n.) **1.** சணல்; hemp, flex.

*[பன் + பன்னி]*

**பன்னி[3]** *panni,* பெ. (n.) **1.** கற்புடைய பெண்; chasty woman. **2.** குருவின் மனைவி; the wife of Guru, (spiritual teacher.) **(சா.அக.)**

*[பன் → பன்னி]*

**பன்னி[4]** *panni,* பெ. (n.) பனிநீர்; dew water.

*[பன் → பன்னி]*

**பன்னிக்குடம்** *panni-k-kudam,* பெ. (n.) *பன்னீர்க்குடம்,* பார்க்க; see *pannir-k-kudam.*

*[பன்னீர்க்குடம் → பன்னிக்குடம்]*

**பன்னிக்கொடி** *panni-k-k-kodi,* பெ. (n.) காட்டுப்பிரண்டை என்னும் மூலிகை; a wild herb.

**பன்னிசாத்தான்** *pannicāttān,* பெ. (n.) ஒருவகைக் கடலுயிரி; epinephelus tauviner greesy rock cod.

*[பன்னி + சாத்தான்]*

சாத்தான் = skt.

**பன்னியமேனி** *panniyaméni,* பெ. (n.) இருப்பவல்; indian cutweed. **(சா.அக.)**

*[பன்னியம் + மேனி]*

**பன்னிரண்டாஞ்செட்டி** *pannirandañcetti,* பெ. (n.) திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள ஒருசார் செட்டிவகுப்பினர்(G.Te.D.1,282.); a section of the cetti caste in Tricirappalli dt.

*[பன்னிரண்டு + ஆம் + செட்டி]*

**பன்னிரண்டு** *pannirandu,* பெ. (n.) பத்தும் இரண்டும் கூடிய ஒரெண் (தொல்.எழுத். 434, உரை.); twelve. "*மூலத்தில் தோன்றி முடிவில் இருநான்காகிக் கால்வெளியில் பன்னிரண்டாம் காண்*" (ஔவைக்குறள்,41.) "*பருத்திபட்ட பாடுதான் பன்னிரண்டும் பட்டதே*" (சிவவாக்.)

க. பன்னெரடு

*[பத்து→பதின் → பன்+ இரண்டு]*

**பன்னிரண்டு சோதிலிங்கம்** *pannirandu šodilinkam,* பெ. (n.)

பன்னிரண்டு சோதிலிங்கங்கள்: சௌராட்டிரத்தில் சோமநாதர்; திருச் சைலத்தில் மல்லிகார்ச்சுனர்; உச்சயினியில் மாகாளேசுவரர்; நர்மதையாற்றங்கரையில் ஒங்காரேசுவரர்; திருக் கேதாரத்தில் கேதாரநாதர்; இடாகினி எனுமிடத்தில் பீமசங்கரர்; வாரணாசியில் (காசி) விசுவேசுவரர்; கோதாவரிக்கரையில் திரியம்பகேசுவரர்; சிதாபிரத்தில் வைத்யநாதலிங்கம் தாருக அடவியில் நாகேசுவரர்; இராமேசுவரத்தில் இராமேசுவரர்; சீவாலயத்தில் குச்மேசுவரர்.

*[பன்னிரண்டு + சோதிலிங்கம்]*

சோதிலிங்கம் = skt.

**பன்னிரண்டு திருமண்** *panniwandutiruman,* பெ. (n.) உடம்பிற் பன்னிரண்டு இடங்களில் அணியப்படும் மாலியக்குறியீடு; vaishnava marks on the twelve parts of body.

*[பன்னிரண்டு + திருமண்]*

**பன்னிருகரத்தோன்** *pannirukarattōn,* பெ. (n.) முருகக்கடவுள். (பிங்.); murugan as having 12 hands.

*[பன்னிரு + கரத்தோன்]*

கரத்தோன் = skt.

**பன்னிருகைப்பெருமான்** *pannirukai-p-perumān,* பெ. (n.) பன்னிருகரத்தோனாகிய முருகக்கடவுள்; murugan, as having 12 hands.

*[பன்னிரு + கை + பெருமான்]*

**பன்னிருதிருமுறைகள்** *pannirutirumuraigaḷ,* பெ. (n.) சிவனிய நாயன்மார்களால் பாடப்பெற்றதும் பன்னிரு பிரிவுகளாகப் பகுக்கப் பெற்றதுமான போற்றிப்பாடல்கள்; a class of scared writings, ods.

(தமிழர் போற்றிப் பாராட்ட வேண்டிய நூல்கள் இன்னவை இன்னவை என்பதைப் பிற்காலத்தினர் தெளிவாக உணர்ந்து கொள்ளுமாறு நம்பியாண்டார் நம்பி, சிறந்த நூல்களைத் திருமுறைகள் என்று பெயர் கொடுத்துத் தொகுத்தார். அந்நூல்கள் திருஞானசம்பந்தருடைய தேவாரங்கள் 1,2,3 திருமுறைகள்; திருநாவுக்கரசருடைய தேவாரப்பதிகங்கள் 4,5,6 ஆந் திருமுறைகள்; ஏழாம் திருமுறை சுந்தரருடையது; மணிவாசகர் எழுதிய 'திருவாசகம் எட்டாந்திருமுறை திருவிசைப்பா திருப்பல்லாண்டு முதலியன ஒன்பதாந் திருமுறை; திருமூலர் திருவாய் மலர்ந்தருளிய திருமந்திரம் பத்தாவது திருமுறை.

பிற்காலத்தில் திருவாலவாயுடையார் திருமுகப் பாசுரம் முதலிய நாற்பது சிற்றிலக்கியங்களும் பதினொன்றாந் திருமுறையாகவும் சேக்கிழார் பாடியருளிய திருத்தொண்டர் மாக்கதையாகிய பெரிய புராணம் பன்னிரண்டாவது திருமுறையாகவும் கொண்டு பன்னிரு திருமுறைகள் தொகுக்கப்பட்டுள்ளன.

**பன்னிருபடலம்** *pannirupadalam,* பெ. (n.) அகத்தியனார் மாணாக்கர் பன்னிருவர் இயற்றியதாகச் சொல்லப்படுவதும் புறப் பொருளைப் பற்றியதுமான ஓர் இலக்கணநூல். (பு.வெ.சிறப்.); an ancient treatise on purattiṇai believed to have been written by the twelve disciples of agastyā.

*[பன்னிரு + படலம்]*

**பன்னிருபாட்டியல்[2]** *pannirupāṭṭiyal,* பெ. (n.) இலக்கியங்களின் ஒருசார் மரபுகளைக் கூறும் ஓரிலக்கண நூல்; a treatise on poetic composition.

(தமிழ் நூல்களின் இலக்கணங் கூறும் நூல்களிலொன்று. தமிழிற் பாட்டியல் கூறுவன வெண்பாப் பாட்டியல், வரையறுத்த பாட்டியல் பன்னிருபாட்டியல், சிதம்பரப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், இலக்கணவிளக்கப் பாட்டியல் என்பவையாகும். இவற்றுள் பன்னிருபாட்டியல் சிறப்புடையது. மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என்பவற்றுக்கு இந்நூலிலேயே இலக்கணங்கள் கூறப்பெற்றுள்ளன. இலக்கியத்திற்கு (காப்பியத்திற்கு) இந்நூல் கூறும் இலக்கணம் சிறந்துள்ளது.

இந்நூலாசிரியர் பெயர் தெரியவில்லை; இந்நூல் எக்காலத்தது என்பதுந் தெரியவில்லை. இது நூற்பாவினால் யாக்கப் பெற்றது. இந்நூல் எழுத்தியல் சொல்லியல், இனவியல் என்னும் மூன்றியல்களையுடையது. எழுத்தியலில் எழுத்துகளின் பிறப்பும், நூல்களின் முதற்செய்யுளில் முதல் சீரின்கண் அமைத்தற்குரியன என்று கூறப்பெறும் பொருத்தங்களில் வருணப்பொருத்தம், கதிப்பொருத்தம், உண்டிப் பொருத்தம் பாற்பொருத்தம், தானப் பொருத்தம், கன்னற் பொருத்தம், புட்பொருத்தம், நாட்பொருத்தம் என்னும் எட்டுப் பொருத்தங்களும் சொல்லியலில் சீர்க்கணப் பொருத்தம், மங்கலப் பொருத்தம், பெயர்ப் பொருத்தம், என்னும் மூன்று பொருத்தங்களும் ஆகிய பன்னிரு பொருள்கள் கூறப்பெற்றதனால் பன்னிருபாட்டியல் என்னும் பெயர்வந்தது. இனவியலில் நூல்களின் இலக்கணங்கள் கூறப் பெற்றுள்ளன.

இந்நூலின் நூற்பாக்களில் பலவற்றிற்கு நூலாசிரியராலேயே மேற்கோள் நூற்பாக்கள் காட்டப் பெற்று, அவற்றின் கீழ் அவற்றை இயற்றியவர்களின் பெயர்களும் குறிக்கப் பெற்றுள. அவை கழகக்காலப் புலவர்கள் பெயராகவே உள, எனினும் அவர்களால் பாட்டியல் நூல்கள் இயற்றப் பெற்றுள்ளன என்பதற்கு வேறு சான்றுகள் இல்லை.)

**பன்னீர்** *pannir,* பெ. (n.) **1.** பனிநீர்ப் பூ முதலிய பூக்களினின்று இறக்கப்படும் நறுமண நீர் (பதார்த்த.1435.); rose water or other fragrant extract, used in perfumery "திருமணத்திற்கு வருபவர்களைப் பன்னீர் தெளித்து வரவேற்பது இயற்கை" **2.** சீழ்நீர்; serum, thin humour, as from poisonous bites, ulcers. **3.** கருப்பைநீர்; water of the amnion **4.** மரவகை (பதார்த்த.620.); dew flower.

*[பனிநீர் → பன்னீர்]*

**தெ.** பன்னீரு **க.** பன்னீர்

**பன்னீர்க்குடம்** *pannir-k-kudam,* பெ. (n.) கருப்பையைச் சூழ்ந்த நீர்ப்பை; amnion, the membrane containing water in which the foetus floats.

*[பன்னீர் + குடம்]*

**பன்னீர்க்குப்பி** *pannir-k-kuppi,* பெ. (n.) **1.** பன்னீர் அடைத்துள்ள புட்டி; bottle containing rosewater. **2.** *பன்னீர்ச் செம்பு* **பார்க்க;** see *pannir-c-cembu.*

*[பன்னீர் + குப்பி]*

**பன்னீர்ச்செம்பு** *pannir-c-cembu,* பெ. (n.) **1.** பன்னீர் அடைத்துத் தெளிக்குங் கருவி; long-necked sprinkler for rosewater. **2.** பன்னீர்ச் செம்புபோல் செய்யப்பட்ட தாலியுருவகை; jewel piece in a necklace, shaped like a rose water sprinkler **3.** பன்னீர்ச் செம்புருவமைந்த மதிலுறுப்பு; baluster.

*[பன்னீர் + செம்பு]*



**பன்னீர்ச்செம்புக்கிராதி** *pannir-c-cembu-k-kirāti,* பெ. (n.) பன்னீர்ச் செம்பு போலுருக்கள்வைத்துக் கட்டிய மேற்கட்டடத்துக் கைப்பிடிச்சுவர். (கட்டட.நாமா.) balustrade.

*[பன்னீர் + செம்பு + கிராதி]*

கிராதி = போர்த்துக்கீசியம்

**பன்னீர்த்துருத்தி** *pannir-t-turatti,* பெ. (n.) **1.** பன்னீர் தெளிக்கும் துருத்திவகை; rose water-sprinkler **2.** *பன்னீர்க்குப்பி, 1,* பார்க்க, see *pannir-k-kuppi.*

*[பன்னீர் + துருத்தி]*

**பன்னீர்ப்பூ** *pannir-p-pū,* பெ. (n.) பனிமலர்ப்பூ; rose

மறுவ; முளரிப்பூ.

ஒருகா *[பனிமலர்ப்பூ → பன்னீர்ப்பூ]*

**பன்னீர்மரம்** *pannir-maram,* பெ. (n.) ஒரு பூ மரம்; a kind of flower tree. (வழக்.)

மறுவ: காட்டுமல்லி.

**பன்னீர்வடி—த்தல்** *pannirvadi-,* **4. செ.கு.வி.** (v.i.) நறுமண எண்ணெய் இறக்குதல்; to distil fragrant essences.

*[பன்னீர் + வடி —,]*

**பன்னீராயிரப்படி** *pannirayira-p-padi,* பெ. (n.) அழகிய மணவாள சீயர் பன்னீராயிரம் எழுத்துகளில் இயற்றிய திருவாய்மொழி விரிவுரை; a commentary on thiruvāymoḷi, in 12,000 letters by alakiya-manavāḷasiyar.

*[பன்னீராயிரம் + படி]*

**பன்னு[1]–தல்** *pannu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. பஞ்செஃகுதல்; to touse with the fingers, as cotton. "*பன்னலம் பஞ்சிக்குன்றம்*" (சீவக. 2274.) 2. ஆராய்ந்து செய்தல்; to do anything with consideration or skill "*நீயனைய பொன்னே பன்னுகோலம்*" (திருக்கோ.122.) 3. புகழ்தல்; to praise "*என்னாவினாற் பன்ன வெம்பிரான் வருக*" (திருவாச.5,99.) 4. பேசுதல்; to speak say, talk, declare. "*பன்னியிரக்கும்*" (கம்பரா.கைகே.41.) 5. படித்தல்; to read "*ஓலை வாங்கிப் பன்னுவனோ*" (பிரமோத்.13.) 6. நின்று நின்று பேசுதல் அல்லது படித்தல்; to speak, talk or read haltingly, as a learner. 7. பாடுதல்; to sing. "*பல்கீதமும் பன்னினார்*" (தேவா.408,3.) 8. நரம்புக் கருவி குயிற்றுதல்; to play on stringed instruments. "*யாழ்கொடுபன்னிநின்று பாடுவார்*" (பாகவத.1,கண்ண.24) 9. பின்னுதல்; to weave 10. கொய்தல்; to cut, reap. 11. அரிவாளைக் கூராக்குதல்; to sharper, as sickle.

*[பல் → பன் → பன்னு–,]*

(செல்வி சன.80 பக். 253.)

**பன்னு[2]–தல்** *pannu-,* 15. செ.கு.வி. (v.i.) நெருங்குதல். (சூடா.); to be close, thick, crowded.

*[பல் → பன் → பன்னு–,]*

**பன்னு[3]** *pannu,* பெ. (n.) இறுக்கப்படும் வரிப்பணம்; tax, custom, rent, tribute,

*[பன் → பன்னு]*

தெ. பன்னு.

**பன்னுமல்** *pannumal,* பெ. (n.) புல்லால் அமைத்த பை. (யாழ்.அக.); bag made of grass.

*[பன் + பன்னுமல்]*

**பன்னை[1]** *pannai,* பெ. (n.) கடல்மீன் வகை; weak-fish.

*[பன் → பன்னை]*



**பன்னை[2]** *pannai,* பெ. (n.) தறி; hand-loom.

*[பன்னு → பன்னை]*

தெ. பன்ன க. பன்னெ,

**பன்னை[3]** *pannai,* பெ. (n.) 1. செடிவகை (யாழ்.அக.); a kind of plant. 2. கருப்பூரம்; camphor.

*[பன் → பன்னை]*

**பன்னொன்று** *pannonru,* பெ. (n.) பதினொன்று *(சூடா.)* பார்க்க; see *padinonru.*

க. பந்நொன்டு

*[பதின் + ஒன்று → பன்னொன்று]*

**பணங்கட்டி** *panankatti,* பெ. (n.) பனைவெல்லம் (யாழ்.அக.); palmyra jaggery.

*[பனை + கட்டி]*

**பனங்கட்டிக்குட்டான்** *paṉaṅkaṭṭi-k-kuṭṭāṉ,* பெ. (n.) பனஞ்சாறு காய்ச்சியூற்றும் ஓலைக்குட்டான் வகை; a small jaggery basket-mould.

*[பனங்கட்டி + குட்டான்]*

**பனங்கட்டியெறும்பு** *paṉaṅkaṭṭi-y-erumbu,* பெ. (n.) எறும்புவகை; a kind of ant.

*[பனங்கட்டி + எறும்பு]*

**பனங்கதிர்** *paṉaṅ-kadir,* பெ. (n.) பனம்பூ; flower of the male palmyra.

*[பனை + கதிர்]*



**பனங்கந்து** *paṉaṅkandu,* பெ. (n.) பனைமரச்செறிவு; large close group of palmyra trees.

*[பனை + கந்து]*

**பனங்கருக்கு** *paṉaṅ-karukku,* பெ. (n.) 1. பனைமட்டையின் கூர்மையுள்ள விளிம்பு; black jagged edge of palmyra leaf stalk 2. இளம்பனை; young palmyra tree.

*[பனை + கருக்கு]*

**பனங்கள்** *paṉaṅkaḷ,* பெ. (n.) பனைமரத்திலிருந்து இறக்கப்படும் மது; palmyra toddy.

*[பனை + கள்]*

**பனங்களி** *paṉaṅkaḷi,* பெ. (n.) பனம் பழத்தின் உள்ளீடு; pulp of the palmyra fruit before it is dried.

*[பனை + களி]*

**பனங்கற்கண்டு** *paṉaṅkaṟ-kaṇḍu,* பெ. (n.) பனஞ்சாற்றைக் காய்ச்சிச் செய்யப்படும் கற்கண்டு வகை (பதார்த்த.189.); rock candy made of palmyra sap.

*[பனை + கற்கண்டு]*

**பனங்கற்றாழை** *paṉaṅkaṟṟāḻai,* பெ. (n.) காட்டுக்கற்றாழை; wild kaṟṟāḻai, (aloe) (சா.அக.)

மறுவ: பனந்தாழை, கருந்தாழை.



**பனங்காட்டூர்** *paṉaṅkāṭṭūr,* பெ. (n.) வடார்க்காட்டு மாவட்டச் சிற்றூர்; a place name of North Arcot Dt.

(திருப்பனங்காடு என்று இன்று சுட்டப்படும் தலம் வடஆர்க்காடு மாவட்டத்தில் அமைந்துள்ளது பனைமரக்காடு காரணமாகப் பெயர் பெற்றது என்பது தெளிவு. தல மரமும் பனையாக இங்கு அமைகிறது. சுந்தரர் பாடல் பெற்றது இத்தலம்,

*"மயிலார் சோலைகள் சூழ்ந்த வன்பார்த்தான் பனங்காட்டூர்ப் பயில்வானுக் கடிமைக் கட்பயிலாதார் பயில்வென்னே"* (86–6)

*"மஞ்சுற்ற மணிமாட வன்பார்த்தான் பனங்காட்டூர் நெஞ்சத் தெங்கள் பிரானை நினையாதார் நினைவென்னே"* (86–8) என்ற பாடலடிகள் பனங்காட்டூர் சிவன் கோயில் தோன்றிய பின்னர், மக்கள் வாழும் பகுதியாக மாறியது என்ற எண்ணத்தைத் தரும் நிலையில் அமைகிறது.

மேலும் பனங்காட்டூர் என, பனைமரம் காரணமாகப் பல ஊர்கள் பெயர் பெற்றுள்ளன. இதினின்று தனிமைப் படுத்தவே வன்பார்த்தான் பனங்காட்டூர் எனச் சுட்டினரோ எனத் தோன்றுகிறது. எனினும்'வன்பார்த்தான்' என்பதற்குரியப் பொருள் தெளிவாகவில்லை சேக்கிழாரும் இதனை,

*"மாடநெருங்கு வன்பார்த்தான் பனங்காட்டூர் செல்வமல்கு திருப்பனங்காட்டூர்"* (ஏயர்; 193,194) என்று புகழ்கின்றார்.

மறுவ: வன்பார்த்தான் பனங்காட்டூர்.)

**பனங்காடி** *paṉaṅkāḍi,* பெ. (n.) ஒருவகைக் காடிக்கள்; palmyra vinegar.

*[பனை + காடி]*

**பனங்காடு** *paṉaṅkāḍu,* பெ. (n.) பனைமரம் அடர்ந்த தோப்பு; palmyra grove.

*[பனை + காடு]*

*'பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சுமா?'* (பழ.)

**பனங்காடை** *paṉaṅkāḍai,* பெ. (n.) காடைவகை; a kind of kāḍai.

காக்கைக்கும் மைனாவுக்கும் நடுவளவுள்ளது; வெளிப்பாங்கான இடங்களில் மொட்டைப் பனை மரங்கள் மேலோ கம்பத்தின் மேலோ அமர்ந்து இரைதேடும். இப்பறவை பசுமை கலந்த நீல நிறமுடைய சிறகுகளை கொண்ட அழகிய பறவை.)

வகைகள்: 1. பனங்காடை 2. பருத்த அலகுப்பனங்காடை

*[பனை + காடை]*



**பனங்காய்** *paṉaṅ-kāy,* பெ. (n.) பனை மரத்தின் காய்; fruit of the palmyra.

*[பனை + காய்]*

நிலைமொழியீற்று ஐகாரங்கெட்டு 'அம்' சாரியை தோன்றி அதன் ஈற்று மகரம் 'ங'கரமாகத் திரிந்தது

**பனங்காய்க் கறுப்பு** *panankay-k-karuppu,* பெ. (n.) கறுப்பும் சிவப்பும் கலந்த நிறம்; mixing colour black and red.

*[பனங்காய் + கறுப்பு]*

**பனங்காய்க்காடி** *paṉaṅkāy-k-kāḍi,* பெ. (n.) பனம்பழச்சாற்றிற் செய்த ஒருவகைக்காடி; dilution of palmyra pulp in water, fermented to give relish to palmyra jelly.

*[பனங்காய் + காடி]*

**பனங்காய்ச் செய்ந்நஞ்சு** *paṉaṅkāy-c-ceynañju,* பெ. (n.) தாலம்பச் செய்ந்நஞ்சு; one of the 64 kinds of poisons contemplates in tamil siddha medicine a kind natural poison. (சா.அக.)

*[பனங்காய் + செய்ந்நஞ்சு]*

**பனங்காய் வண்டி** *panankāy vandi,* பெ. (n.) நுங்கெடுத்த பனங்காய்கள் இரண்டை, ஒரு குச்சியினால் நடுவில் இணைத்து கவைக்குச்சி ஒன்றினால் வேகமாக உருட்டிச்செல்லும் சிறார் விளையாட்டுவண்டி; a playing cart made by palmyra fruit.

*[பனங்காய் + வண்டி]*



**பனங்காரி** *panankāri,* பெ. (n.) பனங்காய் நிறமுள்ள மாடு; bull having the colour of palmyra fruits.

*[பனை + காரி]*

**பனங்கிழங்கு** *panankilangu,* பெ. (n.) பனங்கொட்டையிலிருந்து உண்டாவதும் உண்டற்குரியதுமான நீண்ட முளை (பதார்த்த.402.); the long and edible palmyra root.

*[பனை + கிழங்கு]*



**பனங்கிளி** *panankili,* பெ. (n.)
1. பனைமரத்தில் வாழும் அன்றில் என்னும் பறவை; the anril bird, as frequenting palmyrās
2. ஒருவகைக் கிளி; a species of parrot.

*[பனை + கிளி]*



**பனங்கீரை** *panan-kirai,* பெ. (n.) கீரைவகை; a kind of edible greens

*[பனை + கீரை]*

**பனங்குட்டி** *panankutti,* பெ. (n.) இளம்பனைமரம்; young palmyra tree.

*[பனை + குட்டி]*

**பனங்குடை** *panankudai,* பெ. (n.) பதநீர் முதலியவற்றை வைப்பதற்குப் பனை யோலையாற் செய்த கூடை; ōla basket for holding palmyra juice or food "*வெள்ளமலை....இரும்பனங்குடை மிசையும்*' (புறநா.177.)

*[பனை + குடை]*

**பனங்குத்து** *panankuttu,* பெ. (n.) *பனங்குட்டி,* பார்க்க; see *panankutti.*

*[பனை + குத்து]*

**பனங்குந்து** *panaṅkundu,* பெ. (n.) பனம்பழநார்; fibre of the palmyra fruit.

*[பனை + குந்து]*

**பனங்குருகு** *paṉaṅkurugu,* பெ. (n.) *பனங்குருத்து* பார்க்க; shoot of palmyra see *paṉaṅkuruttu.*

*[பனை + குருகு]*

**பனங்குருத்து** *paṉaṅkuruttu,* பெ. (n.) பனைமரத்தின் குருத்து; shoot of palmyra. tender leaves of the palmgrā. (சா.அக.)

(இதை நீரிலிட்டுக் காய்ச்ச நீரின் நச்சுத்தன்மை போய்விடும்)

**பனங்குரும்பை** *paṉaṅkurumbai,* பெ. (n.) பனம்பிஞ்சு; very young palmyra fruit.

**க.** பனெகுருபெ.

*[பனை + குரும்பை]*

**பனங்குற்றி** *panaṅkuṟṟi,* பெ. (n.) பனைமரத்துண்டு; a palmyra log.

*[பனை + குற்றி]*

**பனங்கூடல்** *paṉaṅkūḍal,* பெ. (n.) (இலங்) பனங்காடு; palmyra grove. "*பனங்கூடல் ஊடாகச் செல்லும் ஒற்றையடிப்பாதையில் நடந்தோம்*" (உ.வ.)

*[பனை + கூடல்]*

**பனங்கை** *paṉaṅgai,* பெ. (n.) *பனஞ்சலாகை* பார்க்க; see *paṉañcalāgai.*

*[பனை + கை]*

**பனங்கொட்டை** *panaṅkoṭṭai,* பெ. (n.) பனம்பழத்தின் உள்ளீடான விதை; palmyra stone.

*[பனை + கொட்டை]*

**பனங்கொட்டைநண்டு** *paṉaṅkoṭṭainaṇḍu,* பெ. (n.) ஒரு வகைக் கடல் நண்டு (முகவை. மீன.); a kind of sea crab.

*[பனங்கொட்டை + நண்டு]*

**பனங்கோந்து** *paṉaṅkōndu,* பெ. (n.) பனைமரப்பிசின்; palmyra resin.

*[பனை + கோந்து]*

**பனங்கோரை** *paṉaṅkōṟai,* பெ. (n.) பெருங்கோரை என்னும் குறட்டை மூலிகை (சா.அக.); large sedge.

**பனங்கோல்** *paṉaṅ-gōl,* பெ. (n.) வீடுகட்டுதலில் பயன்படுத்தப்படும் பனைமரக்கோல்; palmyra lath.

**மறுவ:** பனைவரிச்சல்.

*[பனை + கோல்]*

**பனங்கோவை** *paṉaṅkōvai,* பெ. (n.) அப்பைக் கோவை; saffron or red indian caper. (சா.அக.)

*[பனை + கோவை]*

**பனச்சைவம்** *paṉa-c-caivam,* பெ. (n.) சிவப்புநெல்; a red variety of paddy. (சா.அக.)

**பனசம்** *paṉašam,* பெ. (n.) **1.** பலா; jack "*பனசம்வாழை*" (கம்பரா.மாரீசன்வதை.96) **2.** பாற்சொற்றி (திவா); a kind of viscous plant **3.** முள் (யாழ்.அக); thorn. (சா.அக.)

**மறுவ:** ஆசினி, ஈரப்பலா.

**பனசயித்தி** *panašayitti,* பெ. (n.) அரசு; peepul tree.

**பனசை[1]** *panašai,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள திருப்பனந்தாள்என்னும் ஊர்; Tiru-p-panandāḷ. a village in the Tanjore district. ***"வேண்டியநா ணாணாற் பனசை நகரத்து"*** (திருவாரூ.442.)

*[பனந்தாள் → பனசை]*

**பனசை[2]** *panašai,* பெ. (n.) **1.** ஒருவகை நச்சு அம்மை; pustular and phelegmonous inflammation of the skin, a dangerous kind of smallpox. **2.** நச்சுப்பாம்பு வகை; a venomous kind of snake.

**பனஞ்சக்கை** *panañ-cakkai,* பெ. (n.) **1.** பனம்பழத்தின் சாறெடுத்த பண்டம்; refuse of the palmyra fruit. **2.** ***பனஞ்சலாகை, பார்க்க;*** see *panañcalāgai.*

*[பனை + சக்கை]*

**பனஞ்சட்டம்** *panañcaṭṭam,* பெ. (n.) ***பனஞ்சலாகை,*** பார்க்க; see *panañcalagai.*

*[பனன + சட்டம்]*

**பனஞ்சலாகை** *panañcalāgai,* பெ. (n.) பனைவரிச்சல்; palmyra lath.

*[பனன + சலாகை]*

**பனஞ்சாணார்** *panañcāṇār,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள ஒருசார் சாணார் வகுப்பினர்; a division of the cāṇār caste, as tapping the palmyra, in the Tanjore dt.

*[பனை + சாணார்]*

**பனஞ்சாத்து** *panañcāttu,* பெ. (n.) ***பனஞ்சலாகை,*** பார்க்க; see *panañcalāgai.*

*[பனை + சாத்து]*

**பனஞ்சாறு** *panañjāṟu,* பெ. (n.) ***பதநீர்,*** பார்க்க; see *padanir.* sweet toddy.

*[பனை + சாறு]*

**பனஞ்சிராய்** *panañcirāy,* பெ. (n.) **1.** பனையின் செதுக்குத் துண்டு; palmyra chip or splinter. **2.** ***பனஞ்சிறாம்பு,*** பார்க்க; see *panañciṟāmbu.*

*[பனை + சிராய்]*

**பனஞ்சிறாம்பு** *panañciṟāmbu,* பெ. (n.) ***பனஞ்செறும்பு,*** பார்க்க; see *panañceṟumbu.*

*[பனை + சிறாம்பு]*

**பனஞ்சீத்தை** *panañ-cittai,* பெ. (n.) அழுகிய பனங்கொட்டை; rotten kernal of a palmyra stone.

*[பனை + சீத்தை]*

**பனஞ்சுளை** *panañcuḷai,* பெ. (n.) நுங்கு; pulp of the palmyra fruit.

*[பனை + சுளை]*

**பனஞ்செறும்பு** *panañceṟumbu,* பெ. (n.) பனைமரத்திற் செறிந்துள்ள நரம்பு; fibres or wires in palmyra wood. ***"இரும்பனஞ் செறும் பினன்ன பரூஉமயிர்"*** (அகநா.277.)

*[பனை + செறும்பு]*

**பனஞ்சோற்றி** *panañ-cōṟṟi,* பெ. (n.) ***பனஞ்சோறு*** பார்க்க; see *panañcōṟu*

*[பனை + சோற்றி]*

**பனஞ்சோறு** *panañcōṟu,* பெ. (n.) பனையினுள் வெளிறு (நன்.பக்.107.); pith of palmyra wood.

*[பனை + சோறு]*

**பனத்தனத்தி** *panat-taṉatti,* பெ. (n.) அரசு. peepul tree.

**பனத்தி** *paṉatti,* பெ. (n.) பார்ப்பனத்தி (தொல்.சொல்.463,உரை.); brahmin woman. *"பறைச்சி போகம் வேறதோ? பனத்தி போகம் வேறதோ"* (சித்.பாடல்.)

*[பனவன் → பனத்தி]*

**பனந்தலை** *paṉantalai,* பெ.(n.) பனையுத்தரம்; palmyra beam

*[பனை + தலை]*

**பனந்தாமன்** *paṉan-tāmaṉ,* பெ. (n.) பனம்பூமாலையனான பலபத்திரன் (சூடா.); balabadrā, as wearing palmyra flowers.

*[பனை + தாமன்]*

**பனந்தார்** *paṉantār,* பெ. (n.) பனம்பூப்போற் பொன்னாற்செய்த கழுத்தணிவகை; gold necklace resembling a garland of palmyra flowers.

*[பனை + தார்]*

**பனந்தாரான்** *paṉantārāṉ,* பெ. (n.) **1.** பனம்பூமாலை யணிந்தோன் lit., one who wears a garland of palmyra flowers. **2.** பலராமன்; balabadra. **3.** சேரன் (யாழ்.அக.); cēra king.

*[பனை + தாரான்]*

**பனந்தாழை**[1] *paṉantāḻai,* பெ. (n.) புல்லுருவிவகை; a parasite of tāḻai species, found chiefly on palmyras.

*[பனை + தாழை]*

**பனந்தாழை**[2] *paṉantāḻai,* பெ. (n.) ஒருவகைக் கற்றாழை; a kind of aloe, so called from colour of the leaves.

மறுவ: பூந்தாழை, அன்னாசி பனந்திராய், பனந்தாள்

*[பனை + தாழை]*

**பனந்தாள்** *paṉandāḷ,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்துத் திருப்பனந்தாள் என்னும் ஊர்; Tiruppaṉantāḷ, a village in Tanjore Dt.

"*புரம் மூன்றும், தீச்சரத்தான் செற்றான் திருப்பனந்தாள் தாடகையீ ச்சரத்தான் பாதமே ஏத்து*" என்பது சேத்திரக் கோவை வெண்பா (21) மேலும் புராணக் கதையின் படி தாடகை வணங்கியதன் காரணமாகத் '*தாடகையீச்சரம்*' எனப்பெயர் அமைந்தது என்பது தெரிகிறது. சம்பந்தர் தம் தேவாரத்தில்,

"*தண்பொழில் சூழ் பனந்தாட்டிருத் தாடகையீச்சரமே*" (320–1)

"*அறைமலி தண்புனலும் மதியாடரவு மணிந்த தலையவனூர் பனந்தாட்டிருத் தாடகையீச்சரமே*" (320–7)

"*போதவிழ் பொய்கைதனுட் டிகழ் புள்ளிரியப் பொழில்வாய்த் தாவிழும் பனந்தாட்டிடருத் தாடகையீச்சரமே*" (320–10)

என இதன் செழுமை குறித்துப் பாடுகின்றார். சேக்கிழாரும் "*செழுமலர்ச் சோலைவேலித் திருப்பனந்தாள்*" என (17–25–3–4) இதனை இயம்புகின்றார்.

**பனந்திராய்** *paṉantirāy,* பெ. (n.) ஒருவகைத் திராய்; a kind of indian chickweed. (சா.அக.)

**பனந்தும்பு** *panantumbu,* பெ. (n.) *பனைநார்* பார்க்க; see *panainār.*

*[பனை + தும்பு]*

**பனந்துவசன்** *panantuvašan,* பெ. (n.) பனைக் கொடியையுடையவன் (பிங்.); balabadra, as having the figure of a palmyra on his banner.

*[பனை + துவசன்]*

துவசன் = skt.

**பனந்தோட்டம்** *panantōṭṭam,* பெ. (n.) *பனங்காடு* பார்க்க; see *pana-ṅkāḍu.*

*[பனை + தோட்டம்]*

**பனந்தோடு** *panantōḍu,* பெ. (n.) பனையின் குருத்தோலை (பு.வெ.10,1,உரை.); tender leaf of the palmyra.

*[பனை + தோடு]*

**பனந்தோல்** *panan-tōl,* பெ. (n.) 1. பனங்காய்த்தோல்; rind of palmyra fruit 2. பனங்கிழங்குத் தோல்; skin which covers the palmyra root.

*[பனை + தோல்]*

**பனப்பாசி** *pana-p-pāši,* பெ. (n.) கொடிப்பாசி; என்னும் நீர்ப்பாசிவகை; a kind of moss creeping upon water.

*[பன + பாசி]*

**பனம்** *panam,* பெ. (n.) பருமை (சூடா.); largeness, thickness.

**பனம்பஞ்சு** *panampañju,* பெ. (n.) கபிலநிறமும், அரத்தப்பெருக்கையும் ஒழுக்கையும் நிறுத்துவதுமான பனை மரத்தின் பஞ்சு; a brown cotton like soft substance found outside the base of the fronds. It is employed by Singalese Doctors as a styptic for arresting hemorrhage whether moderate or abundant from superficial wounds. (சா.அக.)

**பனம்பட்டை** *panampaṭṭai,* பெ. (n.) 1. பனையுத்திரம்; palmyra beam. 2. பனஞ்சட்டம்; split palmyra 3. நீரிறைக்கும் பனையோலைப் பட்டை; water-basket of palmyra leaves.

*[பனை + அம் + பட்டை]*

**பனம்பற்று** *panam-parru,* பெ. (n.) பனந்தோப்பு (S. I. I. viii, 209); palmyra tope

*[பனை → பனம் + பற்று]*

**பனம்பன்னாடை** *panampannāḍai,* பெ. (n.) பனை ஓலையில் ஒட்டி நிற்கும் வலை போன்ற பின்னல்; the fibrous web covering the leaf rib. (சா.அக.)

*[பனை → பனம் + பன்னாடை]*

**பனம்பாகு** *panampāgu,* பெ. (n.) பதநீரைக் காய்ச்சியெடுக்கும் பாகு (வின்.); palmyra molasses; syrup made of sweet palmyra toddy.

*[பனை + அம் + பாகு]*

**பனம்பாணி** *panampāṇi,* பெ. (n.) *பனம்பாகு,* பார்க்க; see *panampāgu.*

**பனம்பாதி** *panampādi,* பெ. (n.) அரைப்பணவெடை; 29 1/2 grains weight. (சா.அக.)

**பனம்பாய்ச்சு** *panampāyccu,* பெ. (n.) கூரைமேலிடுவதற்கும் வேலியடைப்பதற்கும் பயன்படும் சிறுபனஞ்சட்டம்; small palmyra lath for roofing and hedging.

*[பனை + அம் + பாய்ச்சு]*

**பனம்பாரம்** *panambāram,* பெ. (n.) பனம்பாரனார் இயற்றிய இலக்கணநூல் (நன்.52,மயிலை.); a treatise on grammar by panampāranār.

**பனம்பாரனார்** *panambāranār,* பெ. (n.) அகத்தியனார் மாணாக்கருள் இலக்கண நூலொன்றும் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரமும் செய்த ஆசிரியர் (தொல். பாயி.உரை.); a disciple of Agastya, author of a treatise on grammar and of the preface to Tolkāppiyam.

**பனம்பால்** *panambāl,* பெ. (n.) பனங்கள்; palmyra toddy. (சா.அக.)

*[பனை + பால்]*

**பனம்பிசின்** *panampišin,* பெ. (n.) *பனங்கோந்து,* பார்க்க; see *panankōndu*

*[பனை + பிசின்]*

**பனம்பிடுக்கு** *panampiḍukku,* பெ. (n.) *பனங்கதிர்* பார்க்க; see *panankadir.*

*[பனை + பிடுக்கு]*

**பனம்புடையல்** *panampuḍaiyal,* பெ. (n.) பனம்பூமாலை; garland of palmyra flowers. **"இரும்பனம் புடையல்"** (பதிற்றுப். 42,1.)

*[பனை + புடையல்]*

**பனம்பூ** *panam-pū,* பெ. (n.) ஆண்பனைப் பாளை; the spadix of the male palmyra tree.

(இப்பனம்பூவினால் ஊதைக்குன்மம், மூத்திரச்சிக்கல், பல்நோய், பழஞ்சுரம் ஆகியன போகும் எனச் சா.அக. கூறும்.)

**பனம்பூவல்லி** *panampūvalli,* பெ. (n.) ஒருவகைக் காட்டுக் கொடிப்பூ; wild rattan, endogenous climber.

*[பனை + பூவல்லி]*

**பனம்பெட்டி** *panampeṭṭi,* பெ. (n.) 1. சில்லுக்கருப்பட்டி வைக்கும் பெட்டி; small basket to keep palmyra jaggery 2. கள்ளிறக்கும் நார்ப்பெட்டி; bottle made of the sheath of the palmyra stalk for drawing the juice

*[பனை + பெட்டி]*

**பனம்பொச்சு** *panampoccu,* பெ. (n.) *பன்னாடை* பார்க்க; see *pannāḍai*

*[பனை + பொச்சு]*

**பனம்போந்தை** *panampōndai,* பெ. (n.) பனங்குருத்து பார்க்க, see panankuruttu. **"இரும்பனம் போந்தைத்தோடும்"** (பொருந.143.)

*[பனை + போந்தை]*

**பனம்வரிச்சல்** *panamvariccal,* பெ. (n.) *பனஞ்சட்டம்* பார்க்க,; see *panancaṭṭam.*

*[பனை + வரிச்சல்]*

**பனம்வரிச்சு** *panamvariccu,* பெ. (n.) *பனஞ்சட்டம்* பார்க்க; see *panancaṭṭam.*

*[பனை + வரிச்சு]*

**பனமலை²** *panamalai,* பெ. (n.) தென் ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள ஒரு சிற்றூர்; இது பல்லவர்காலத்துக் கற்றளியொன்றின் மூலம் சிறப்புப் பெற்றுள்ளது; a village in south arcot dt, it is famous for the pallava temple art,

[பிற்காலப் பல்லவமன்னர்களுள் கலைத் துறையில் சீரிய தொண்டாற்றிச் சிறப்புப் பெற்ற இராசசிம்மன் (இரண்டாம் நரசிம்மவர்ம பல்லவன்) இங்குத் தாளகிரி ஈசுவரன் ஆலயம் என்னும் கோயிலை எழுப்பியுள்ளான் பொதுவாகக் கட்டடக் கலையின் கூறுகளை நோக்குங்காலை, இக்கோயில் அம்மன்னன் எழுப்பிய, பிற கோயில்களாகிய காஞ்சிபுரம் இராசசிம்மேசுவரத்தையும், மாமல்லபுரம் கடற்கரைக் கோயிலையும் ஒத்துள்ளது. இங்குக் கருவறையைத் தவிர மூன்று பரிவார அறைகள், அதன் மூன்று பக்கங்களிலும் இணைத்துக் கட்டப்பட்டிருக்கின்றன. இக்கோயிலுள்ள பல்லவர் காலத்து ஓவியமொன்று இறைவனின் நடனத்தைத் தம் இரு கண்களாலும் இறைவி பருகிக் களிப்பதைக் காட்டுகின்றது; இவ்வோவியம் சற்று சிதைந்திருப்பினும், வண்ணந் தீட்டுவதிலும், இயற்கை உருவங்களை இயல்பான கோடுகளைக் கொண்டே சமைப்பதிலும் பல்லவர் காலத்துக் கலைஞர்கள் அடைந்திருந்த மேன்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது; இது ஏறத்தாழ அசந்தா முறையை ஒத்துள்ளது. பனமலையில் ஒரு சிறு குடைவரைக் கோயிலுமுண்டு. அங்கு அரிமாவூர்தியளாகிய எண்கைக் கொற்றவை அரிமா மீது அமர்ந்து காட்சி தருகிறாள். இங்குள்ள கல்வெட்டொன்று 'ராஜசிம்மன்', 'ரணஜயன்', 'ஸ்ரீபரன்', 'சித்ரகார்முகன்', 'ஏகவீரன்', 'சிவசூடாமணி' என்ற பலவிருதுகளை இரண்டாம் நரசிம்மவர்மன் பெற்றிருந்ததைத் தெரிவிக்கின்றது.]

**பனமுதமுட்டுச்சத்து** *panamudamuttu-c-cattu,* பெ. (n.) பூநாகம்; earth worm. (சா.அக.)

**பனர்** *panar,* பெ. (n.) கிளை (யாழ்.அக.); branch.

*[ஒருகா: பணை → பனர்]*

**பனரை** *panarai,* பெ. (n.) நெய்க்கொட்டான்; soap nut tree. (சா. அக.)

**பனலை** *panalai,* பெ. (n.) *பூவந்தி (மலை.)* பார்க்க; see *pūvandi. soap nut.*

**பனவட்டு** *panavattu,* பெ. (n.) வட்டமாகச் செய்யப்பட்ட வெல்லம்; a semicircular palmyra jaggery casts in moulds. (சா.அக.)

மறுவ: பனை வெட்டு

*[பனைவெட்டு → பனவெட்டு]*

**பனவன்** *panavan,* பெ. (n.) பார்ப்பனன்; brahmin "*திருப்பெருந்துறை யுறையும் பனவன்*" (திருவாச.34,3.) "*பவனர்கையிற்க கைக்குப் பை கணிறைவித்து*" (திருவிளை. வரகுணனுக்கு.6.)

**பனவி** *panavi,* பெ. (n.) பார்ப்பனத்தி; brahmin lady "*தூய வருந்ததிபெயர்கொள் பனவியாகி*" (ஞானவா.லீலிகதை.25.)

**பனவு** *panavu,* பெ. (n.) பார்ப்பனத்தன்மை (இலக்.வி,45,உரை); brahmin characteristics.

*[பனவன் → பனவு]*

**பனவெல்லம்** *panavellam,* பெ. (n.) *பனைவெல்லம்* பார்க்க; see *panaivellam.*

*[பனை + வெல்லம்]*

**பனாட்டு**[1] *paṉāṭṭu,* பெ. (n.) பனம்பழத்தின் பாகு (தொல்.எழுத்.284.); inspissated extract of palmyra fruit and sap. (நன்னூ.உயிரீற்றுப் ஆ.காண்டிகையுரை.53.)

*[பனை + அட்டு]*

**பனாட்டு**[2] *paṉāṭṭu,* பெ. (n.) பனம்பழத்தின் சாற்றைப் பிழிந்து உலரவைத்துக்தகடு போல் தட்டையாகச் செய்யப்படும் ஒரு வகை உணவுப் பண்டம்; (யாழ்ப்.) an eatable made from palm juice.

*[பனை + அட்டு]*

**பனாட்டுக்கூடை** *paṉāṭṭu-k-kūḍai,* பெ. (n.) பருத்துத் தடித்த குள்ளன்; fat person of short stature.

*[பனாட்டு + கூடை]*

**பனாட்டுத்தட்டு** *paṉāṭṭu-t-taṭṭu,* பெ. (n.) *பனாட்டுத்தோல்,* பார்க்க; see *paṉāṭṭu-t-tōl.*

*[பனாட்டு + தட்டு]*

**பனாட்டுத்தோல்** *paṉāṭṭu-t-tōl,* பெ. (n.) பனம்பாகின் மெல்லிய பொருக்கு; thin lamina or flakes of palmyra jelly.

*[பனாட்டு.+ தோல்]*

**பனாத்துஜோடு** *panattujōḍu,* பெ. (n.) செருப்புவகை; a kind of shoe.

*[பனாத்து + ஜோடு]*

*ஜோடு* = skt.

*[சுவடு → சோடு எனில் முற்றுந்தமிழாம்]*

**பனாயிப்பு** *paṉayippu,* பெ. (n.) கற்பனை; abrication.

*[பன் → பனாய்ப்பு → பனாயிப்பு]*

**பனி**[1]**—த்தல்** *paṉi-,* 11. செ.கு.வி. (v.i.) 1. பனிகொள்ளுதல்; to be bedewed. *"முழுமெயும் பனித்து"* (சிலப்.4,6.) 2. துளித்தல்; to flow out; to be shed, poured up. *"உவகைநீர் பனிக்குமுன்னே"* (பாரத.சம்பவ.79.) 3. குளிர்தல்; to become cool. *"வையகம் பனிப்ப"* (நெடுநல்.1.) 4. குளிரால் நடுங்குதல்; to shiver with cold. *"மயில்பனிக்கு மென்றருளிப் படாஅமீத்த"* (புறநா.145.) 5. நடுங்குதல்; to tremble; to be agitated; to quake *"உள்ளுநர் பனிக்கும் பாழாயினவே"* (புதிற்றுப், 13, 19)

**பனி**[2]**—த்தல்** *paṉi-,* 11. செ.கு.வி. (v.i.) 1. விடாமழை பெய்தல் (பிங்.); to rain incessantly, constantly 2. அஞ்சுதல்; to be in fear 3. வருந்துதல்; to suffer, to be in pain. 4. ததும்புதல்; to spring forth, as tears. to swell. *"பனித்துப் பனிவாருங் கண்ணவா"* (பரிபா.6,85.)

**பனி**[3]**—த்தல்** *paṉi-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. நடுங்கச் செய்தல்; to cause to tremble *"தெவ்வர் சுட்டினும் பனிக்குஞ்சுரம்"* (மலைபடு.398.) 2. வருந்து; to cause to suffer. 3. அடித்தல்; to beat, as drum. *"தொண்டகங் கோறலை பனிப்ப"* (கல்லா.13.)

**பனி**[4] *paṉi,* பெ. (n.) 1. நீராவி குளிர்ந்து விழும் துளி (நிகண்டு); dew 2. பனிக்கட்டி; snow, frost. *"பனிபடு நெடுவரை"* (புறநா.6.) 3. குளிர்; chill, cold. *"பெரும்பனி நலிய"* (நெடுநல்.7.) 4. குளிர்ச்சி; coolness, chillness. moist. thinfog. *"பனிநீர்க்கங்கை"* (கம்பரா.கையடை.12.) 'இந்தப் பனிபெய்யும் இரவில் ஏன் வெளியே போகிறாய்? 'பனி மூட்டம் நிறைந்த மலைப்பாதை'

க.ம. பநி. து. ஹநி

*பனி பெய்து கடல் நிறையுமா?'* (பழ.)*பனி பெய்து குளம் நிரம்புமா?'* (பழ.)*'பனி பெய்தால் மழை இல்லை, பழம் இருந்தால் பூ இல்லை!"* (பழ.)

**பனி⁵** *pani,* பெ. (n.) **1.** நீர்; water. **2.** கண்ணீர்; tears. ***"கணார்ந்தன பனியே"*** (ஐங்குறு. 208) **3.** மழை; rain ***"குன்றெடுத்துப் பாயும் பனிமறைத்த பண்பாளா"*** (திவ்.இயற்.1,86.) **4.** மஞ்சு; mist, fog, haze. ***"பனியால் நனைந்து வெயிலாலுணர்ந்து"*** (அரிச். மயானகா. 21.)

*'பனி பெய்தால் மழை இல்லை, பழம் இருந்தால் பூ இல்லை'* (பழ.)*'பனிப் பெருக்கிலே கப்பல் ஓட்டலாமா?'* (பழ.)*பனியை நம்பி ஏர்பூட்டினது போல'* (பழ.)

**பனி⁶** *pani,* பெ. (n.) **1.** இனிமையானது; that which is resfreshing, soothing, gratifying. *"பனிக்கனி வாய்ச்சியர்"* (கம்பரா. நீர் விளைாட்டு.22.) **2.** அச்சம் (பிங்.); fear, dread. **3.** நடுக்கம்; trembling, agitation, quaking. *"பனியரும்பி"* (குறள்,1223.) **4.** நோய்வகை (சிலப்.4,6,உரை.); a kind of disease. **5.** காய்ச்சல்; fever **6.** துன்பம்; distress, suffering *"ஆப்பனித் தாங்கிய"* (நான்மணி.2.) **7.** துக்கம் (யாழ்.அக.); sorrow.

**மறுவ:** இமம் துகினம் மஞ்சு நீகாரம் பனி ஏமந்தம்

**பனிக்கஞ்சி** *panikkañji,* பெ. (n.) தாமரை; (வைத்தியபரி.) lotus flower

*[பனிக்கு + அஞ்சி]*

**பனிக்கட்டி** *pani-k-katti,* பெ. (n.) உறைந்து திடப்பொருளாக மாறிவிட்ட மழைத்துளி அல்லது நீர்; hail stone; ice. *"பனிக்கட்டி மழை", "பனிக்கட்டியைச் சாக்கில் கட்டிக் கொண்டு வந்தான்"*

**மறுவ:** ஆலங்கட்டி

**பனிக்கட்டு** *pani-k-kattu,* பெ. (n.) பனி தலையில் விழாதபடி துணியினால் கட்டுகை; covering for the head to ward off the chill of dew.

*[பனி + கட்டு]*

**பனிக்கதிர்** *pani-k-kadir,* பெ. (n.) குளிர்ந்த ஒளியையுடைய திங்கள் (பிங்.); moon, as cool-rayed. ***"பனிக்கதிர்ப் பகைமலர்"*** (சீவக.1020) ***"வெம்பினை பனிக்கதிரல்னாநீ"*** (கந்தபு. ஆற்று. 24.)

*[பனி + கதிர்]*

**பனிக்கரடி** *pani-k-karadi,* பெ. (n.) குளிர்நாடுகளில் வாழும் அடர்ந்த வெண்ணிற முடைய ஒருவகைக் கரடி; polar bear.

*[பனி + கரடி]*

**பனிக்கற்றை** *pani-k-karrai,* உறைந்தபனி; the white particles of frozen dew. (சா.அக.)

**பனிக்காடு** *panikkādu,* பெ. (n.) மூடுபனி அடர்ந்த காடு; a large tract of land dimmed by mist or thick fog. (சா.அக.)

*[பனி + காடு]*

**பனிக்காலம்** *pani-k-kālam,* பெ. (n.) ***பனிப்பருவம் (பதார்த்த.1433.)*** பார்க்க; see *pani-p-paruvam.*

*[பனி + காலம்]*

**பனிக்காற்று** *pani-k-kārru,* பெ. (n.) **பனியினால்** குளிர்ச்சியடைந்த வாடைக்காற்று; cold wind in the dewy season.

*[பனி + காற்று]*

(இக்காற்றினால் காய்ச்சல், தலைவலி, சளிப்பு, ஊதைக்குடைச்சல் நரம்பிசிவு முதலான நோய்கள் தோன்றுமெனச், (சா. அக.) கூறுகிறது.)

**பனிக்கில்** *panikkil,* பெ. (n.) காட்டத்தி; wild figtree.

**பனிக்குடம்**[1] *pani-k-kuḍam,* பெ. (n.) *பன்னீர்க்குடம்,* பார்க்க; see *pannir-k-kuḍam.*

*[பனி + குடம்]*

**பனிக்குடம்**[2] *pani-k-kudam,* பெ. (n.) வயிற்றினுள் கருவையும் கருமிதக்கும் நீர்மத்தையும் தாங்கியுள்ளமெல்லிய பை; bag of water (in the womb); amnion.

**பனிக்குடமுடைதல்** *panikkuḍam-uḍaital,* பெ. (n.) மகப்பேற்றின் முன்னிகழ்வாகப் பனிக்குட நீர் வெளிப்படுகை; flowing of the amniotic fluid.

*[பனிக்குடம் + உடைதல்]*

**பனிக்குல்லா** *pani-k-kullā,* பெ. (n.) பனிக்காலத்தில் அணியுங்குல்லா வகை; a cap worn during the dewy season.

*[பனி + குல்லா]*

குல்லா = உருது.

**பனிக்கூர்மை** *pani-k-kūrmai,* பெ. (n.) இந்துப்பு (யாழ்.அக.); rock-salt.

*[பனி + கூர்மை]*

**பனிச்சக்கீரை** *panicca-k-kīrai,* பெ. (n.) **முள்ளிக்கீரை;** vegetable greens with thorns of **the amaranthus** genus. (சா.அக.)

**பனிச்சகா** *paniccakā,* பெ. (n.) கஞ்சாங்கோரை; white basil. (சா.அக.)

மறுவ: பனிச்சா

**பனிச்சங்காய்** *paniccaṅgāy,* பெ. (n.) *காட்டத்தி, 2. (மலை.)* பார்க்க; see *kāṭṭatti,2.*

*[ஒருகா. பனி + சங்கு + காய்]*

**பனிச்சட்டைமீன்** *paniccaṭṭaimīn,* பெ. (n.) ஏரியில் மேயும் கெண்டை மீன் வகையுளொன்று; a kind of fish named as keṇdai living in lake.

**பனிச்சரிவு** *pani-c-carivu,* பெ. (n.) பனிமூடிய மலையிலிருந்து பாறை போல் பெயர்ந்து வரும் பனி; avalanche. *"பனிச்சரிவின் காரணமாக இமய மலைச் சாலைகளில் போக்குவரத்துத் தடைப்படுகிறது"*

*[பனி + சரிவு]*

**பனிச்சவன்** *paniccavan,* பெ. (n.) பல்லக்குப் போகி; palanquin bearer.

*[பணிசெய்பவன் → பனிச்சவன்]*

**பனிச்சா** *paniccā,* பெ. (n.) கஞ்சாங்கோரை, (மலை.); white basil.

**பனிச்சாமை** *pani-c-cāmai,* பெ. (n.) சாமை வகை (யாழ். அக.); a kind of little millet.

**பனிச்சிக்காய்** *panicci-k-kāy,* பெ. (n.) *பனிச்சங்காய் (மலை.)* பார்க்க; see *paniccaṅgāy.*

ம. பனிச்சி

*[பனிச்சை + காய்]*

**பனிச்சுடர்** *paṉi-c-cuḍar,* பெ. (n.) நிலவு; moon. "*பனிப்பகையைப் பனிச்சுடர் விட்டெறிப்பன*" (தக்கயாகப். 485)

*[பனி + சுடர்]*

**பனிச்சை** *paṉiccai,* பெ. (n.) 1. ஐம்பான் முடிகளுள் ஒன்று. (சீவக.2437 உரை.); a mode of dressing the hair of women, one of ai-m-bāṉ-muḍi 2. கழுத்தின் பின்குழி (பிங்.); depression on the nape of the neck. 3. ஒருவகைப் பிளவை; swollen ulcer on the back of the head. 4. காட்டத்திமரம்; gaub. see kaṭṭatti.

*[பனி → பனிச்சை]*

மறுவ: பனிச்சிக்காய், காட்டுமங்குசுதான், தும்பிலி, பனிச்சிக, தும்பிகை.

**பனிச்சைப்பிசாசு** *paṉi-c-ai-p-piśāšu,* பெ. (n.) பேய் பிடித்த நோய்; a disease supposed to be caused by the influence of a devil perhaps settling on this tree. (சா.அக.)

*[பனிச்சை + பிசாசு]*

**பனிசிக்காய்** *paṉišikkāy,* பெ. (n.) தும்பிலிக்காய்; fruit of black ebony. (சா.அக.)

மறுவ: பனிச்சைக்காய், தும்பிக்காய், பனிச்சை.

**பனித்தாங்கி** *paṉi-t-taṅgi,* பெ. (n.) 1. காட்டுமருக்கொழுந்து; wild southam word 2. பூநீறு; salt found on the soil of full's earth.

மறுவ: கிழவன்தாடி.

**பனித்துண்டம்** *pani-t-tuṇḍam,* பெ. (n.) பனியையுடைய துண்டமாகிய பிறை; cresent "*பனித்துண்டஞ்சூடும் படர்ச்சடையம் பலவன்*" (திருக்கோ.132.)

*[பனி + துண்டம்]*

**பனித்துளி** *paṉi-t-tuḷi,* பெ. (n.) *பனி* பார்க்க; see *paṉi.*

*[பனி + துளி]*

**பனிதாங்கி** *paṉitāṅgi,* பெ. (n.) மணற் பாங்கான நிலத்தில், கல்லிழைத்த கம்மல் போல் வட்டமாகவும் மையத்தில் ஒருகுருத்துப் பூவும் உடையதாய் உள்ள மூலிகை; this herb is found in the dew season in sandy soil; it looks like stone studded ear ring in the circular form with flower in the middle. (சா.அக.)

*[பனி → தாங்கி]*

**பனிநத்தை[1]** *paṉi-nattai,* பெ. (n.) மழைக்காலத்துத் தோன்றும் நத்தை வகை; a kind of snail appearing during the rainy season.

*[பனி + நத்தை]*

**பனிநத்தை[2]** *paṉinattai,* பெ. (n.) ஊமச்சி; a shell fish that sticks to rocks in the sea cocule. (சா.அக.)

*[பனி + நத்தை]*

**பனிநாக்கி** *paṉinākki,* பெ. (n.) பொதிகை மலைச் சாரலில் விளையும் தங்கத்தைப் பொடியாக்கும் ஒரு மூலிகை; it is a peculiar herb found in the southern part of podigai hills of tinnevelly dt. (சா.அக.)

*[பனி → தாக்கி]*

**பனிநிலையம்** *paṉinilaiyam,* பெ. (n.) பனி உண்டாவதற்கு ஆரம்பிக்கும் வெப்பவளவு; the temparature to which the dew begins to form dew point. (சா.அக.)

*[பனி + நிலையம்]*

**பனிநீர்[1]** *paninir,* பெ. (n.) **1.** பனித்துளி; dew drop. **2.** பன்னீர்; rosewater. "*நிறைபனி நீரெடுத்து நிலந்தொறுந் தெளித்து*" (திருவாலவா.4,19.)

ம. பன்னீர்

*[பனி + நீர்]*

**பனிநீர்[2]** *pani-nir,* பெ. (n.) தயிர் முதலியன வடிந்தபின் மேலாக எஞ்சிநிற்கும் தெளிந்தநீர்; the clear liquid at the top, when curd is allowed to settle. 'பனிநீருள்ளது வடித்துக் கட்டியாயிருக்கிற தயிரும்' (திவ். பெரியாழ். 2,2,2, வ்யா. பக்.250)

*[பனி + நீர்]*

**பனிப்பகை** *pani-p-pagai,* பெ. (n.) பனியின் பகைவனான கதிரவன் (பிங்.); sun, as the foe of dew and fog.

*[பனி + பகை]*

**பனிப்பகைவன்** *panippagaivan,* பெ. (n.) கதிரவன்; the sun, as causing disappearance of dew when rising and so considered as enemy of dew. (சா.அக.)

மறுவ: பனிப்பகை

*[பனி + பகைவன்]*

**பனிப்பகைவானவன்** *pani-p-pagai-vānavan,* பெ. (n.) *பனிப்பகை* பார்க்க; see *panippagai.* "*பனிப்பகை வானவன் வழியில்*" (மணிமே.25,180.)

*[பனிப்பகை + வானவன்]*

**பனிப்படலம்** *pani-p-padalam,* பெ. (n.) திரண்ட பனிமுகில்; thick expanse of fog.

*[பனி + படலம்]*

**பனிப்பதம்** *pani-p-padam,* பெ. (n.) ஈரித்த நிலை; moist condition of anything exposed to dew.

*[பனி + பதம்]*

**பனிப்பயறு[1]** *pani-p-payaru,* பெ. (n.) **1.** பனிக்காலத்தில் விளையும் பயறு; a sort of green gram grown in dew season. **2.** பனியைக் கொண்டு முதிரும் பயறு; pulce brought to perfection by night dew. (சா.அக.)

மறுவ: பனிப்பயற்றங்கொடி

*[பனி + பயறு]*

**பனிப்பயறு[2]** *pani-p-payaru,* பெ. (n.) *வயற்பயறு* பார்க்க; see *vayarpayaru.* field gram.

*[பனி + பயறு]*

**பனிப்பருவம்** *pani-p-paruvam,* பெ. (n.) பனிபெய்யக்கூடிய சிலை (மார்கழி), சுறவம் (தை), கும்பம் (மாசி), மீனம் (பங்குனி) மாதங்கள்; dewy season.

*[பனி + பருவம்]*

**பனிப்பாறை** *pani-p-pārai,* பெ. (n.) பெரும்பனிக்கட்டி; large mass of ice. "*வீழ்பனிப் பாறைகள்*" (சீவக.1904.)

*[பனி + பாறை]*

**பனிப்பிரபை** *pani-p-pirabai,* பெ. (n.) நிலவு; moonlight. "*பனிப்பிரபை யிட்டவித்தே*" (தக்கயாகப்.482.)

*[பனி + பிரபை]*

பிரபை = skt

**பனிப்பு** *paṉippu,* பெ.(n.) **1.** நடுக்கம்; agitation, trembling. ***"தேவர் மெய்பனிப்புற"*** (கல்லா. முரு. துதி.) *"தலைப்பனிப்பு"* (திருவிளை. விருத்தகு.20.) **2.** அச்சம் (பிங்.); fear.

*[பனி → பனிப்பு]*

**பனிப்புக் கட்டு—தல்** *paṉippu-k-kaṭṭu-,* செ.கு.வி. (v.i.) வருத்தமுண்டாக்குதல்; to strike of influence unfavourably, as cold.

*[பனிப்பு + கட்டு—,]*

**பனிப்புகட்டு** *paṉi-p-pugaṭṭu,* பெ. (n.) பனிகொட்டுகை (யாழ்.அக.); falling of dew.

*[பனி + புகட்டு]*

*[பனி → பனிப்பு + கொட்டு → கட்டு]*

**பனிப்புகார்** *paṉi-p-pugār,* பெ. (n.) மூடுபனி; mist of dew, heze or fog. (சா.அக.)

*[பனி + புகார்]*

**பனிப்புழு** *paṉi-p-puḻu,* பெ. (n.) **1.** கம்பளிப் பூச்சி; small grub, caterpiller, blight in vegetation in the dewy season. **2.** சேற்றுப்புழு; a very small worm causing itching between the toes in the dewy season.

*[பனி + புழு]*

**பனிப்பூங்காரம்** *paṉi-p-pūṅgāram,* பெ. (n.) வெயிலுடன் கூடிய மந்தாரம்; mist or fog with sunshine.

*[பனி + பூங்காரம்]*

**பனிப்பூடு** *paṉi-p-pūḍu,* பெ. (n.) **1.** பனிக்காலத்தில் முளைக்கும் பூடு; plants grown in the dew season. **2.** தூய கங்கைநீர்; a secret term for. பனிக்குடத்துநீர். **3.** எள்ளுச் செடி; gingelly or sesamam plant. (சா.அக.)

*[பனி + பூடு]*

மறுவ. எள்

**பனிப்பெயர்தல்** *paṉi-p-peyardal,* பெ. (n.) பனிபெய்தல்; falling of dew.

*[பனி + பெயர்தல்]*

**பனிப்போர்** *paṉi-p-pōr,* பெ. (n.) **நேரடியான** மோதலாக வெளிப்படாத உட்பகை; **cold war.** *"விளையாட்டு அமைச்சகத்துக்கும் விளையாட்டு வீரர்களுக்கும்* ***இடையே*** *பனிப்போர் துவங்கியிருக்கிறது".*

*[பனி + போர்]*

**பனிமப்பு** *paṉi-mappu,* பெ. (n.) ***பனிமேகம்,*** பார்க்க; see *paṉimēgam.*

*[பனி + மப்பு]*

**பனிமலை** *paṉimalai,* பெ. (n.) **இமயமலை; the** Himalayas.

ம. பனிமல.

*[பனி + மலை]*

**பனிமனிதன்** *paṉimaṉidaṉ,* பெ. (n.) **அடர்ந்த** முடி உடையதும் மாந்தனைவிடப் **பெரியதும்,** இமயமலைப் பகுதியில் உலவுவதாக நம்பப்படுவதுமான உருவம்; yeti. ***"பனிமனிதனின் காலடிச் சுவடுகளைக் கண்டதாகப் பலர் கூறுகிறார்கள்".***

*[பனி + மனிதன்]*

மனிதன் = skt.

மாந்தன் = தமிழ்

**பனிமாசு** *pani-māšu,* பெ. (n.) *பனிமேகம், (சீவக.2807, உரை)* பார்க்க; see *pani-mēgam.*

*[பனி + மாசு]*

**பனிமுகில்** *pani-mugil,* பெ. (n.) *பனிமேகம் (சீவக. 2807.)* பார்க்க; see *pani-mēgam.*

*[பனி + முகில்]*

**பனிமேகம்** *pani-mēgam,* பெ. (n.) வெண்மேகம்; light rainless cloud in the dewy season.

*[பனி + மேகம்]*

**பனிமேய்ச்சல்** *pani-mēyccal,* பெ. (n.) **1.** காலை மேய்ச்சல்; grazing of animals in early mornings. **2.** அளவுக்கு மிஞ்சி சிற்றின்பம் நுகர்கை; enjoying sensual pleasures to satiety.

*[பனி + மேய்ச்சல்]*

**பனிமை** *panimai,* பெ. (n.) இந்துப்பு; sindh salt an impure sodium chloride. (சா.அக.)

**பனிமொந்தன்** *pani-mondan,* பெ. (n.) வாழைவகை; a kind of plantain.

*[பனி + மொந்தன்]*

**பனிமொழி** *pan-moli,* பெ. (n.) இனிய மொழியுடைய பெண். (காரிகை, உறுப். 18.); woman, as speaking sweet words.

*[பனி + மொழி]*

**பனியடித்தல்** *pani-y-adittal,* பெ. (n.) *பனிப் பெயர்தல்* பார்க்க; see *pani-p-peyardal.*

*[பனி + அடித்தல்]*

**பனியவரை** *pani-y-avarai,* பெ. (n.) பனியால் முதிரும் அவரை; country bean brought to perfection by dew fall. (சா.அக.)

*[பனி + அவரை]*

**பனியெதிர்பருவம்** *pani-y-edir-paruvam,* பெ. (n.) சிலை (மார்கழி) சுறவ (தை) மாதங்களாகிய முன்பனிப் பருவம் (தொல்.பொ.7.); season comprising the two months, mārgaḷi, and tai, when dew falls during the early part of the night.

*[பனி + எதிர் + பருவம்]*

**பனியொடுக்கம்** *pani-y-odukkam,* பெ. (n.) பெரும்பனி வீழ்கை; the fall of heavy dew.

*[பனி + ஒடுக்கம்]*

**பனிவரகு** *pani-varagu,* பெ. (n.) வரகுவகை; common millet.

*[பனி + வரகு]*

**பனிவெடி** *pani-vedi,* பெ. (n.) *பனிவெடிப்பு,* பார்க்க; see *pani-vedippu.*

*[பனி + வெடி]*

**பனிவெடிப்பு** *pani-vedippu,* பெ. (n.) **1.** பித்தவெடிப்பு; chaps, cracked foot, fissured foot. 2. பனியாற் கைகால்களில் உண்டாகும் புண்; chilblain.

*[பனி + வெடிப்பு]*

**பனிற்று—தல்** *panirru-,* செ.குன்றாவி. (v.t.) தூவுதல்; to shed. *"குருதி பனிற்றும் புலவுக் களத்தோனே"* (பதிற்றுப்.57,3.)

*[பனி → பனிற்று–,]*

**பனுக்கு-தல்** *panukku-,* செ.குன்றாவி. (v.t.) துளித்தல் (யாழ்ப்.); to sprinkle, moisten by sprinkling.

*[பனுக்கு → பனுக்கு-,]*

**பனுவல்** *panuval,* பெ. (n.) **1.** நல்லதாக ஆக்கப்பட்ட பஞ்சு; toused cotton. "*பருத்திப் பெண்டின் பனுவ லன்ன*" (புறநா. 125.) **2.** பஞ்சிநூல். (சூடா.); cotton thread. **3.** சொல்; word; discourse. "*மெய்யறி பனுவலின்*" (தொல்.சொல்.90.) **4.** பாட்டு; stanza, musical composition. "*வரிநவில் பனுவல்*" (புறநா. 135.) **5.** நூல்; treatise on scientific subjects. "*பனுவற் றுணிவு*" (குறள்,21.) **6.** கேள்வி; learning through oral instruction. "*செவிமுதல் வித்திய பனுவல்*" (புறநா. 237.) **7.** ஆராய்ச்சி; research. "*பனுவ னுண்ணு னடையுளார்*" (சீவக. 464.) **8.** கல்வி (பிங்.); learning.

*[பன்னு → பனுவல்]*

**பனுவல் வாழ்த்து** *panuval vālttu,* பெ. (n.) ஒரு நூலைப் புலவர் புகழ்தலைக் கூறுந்துறை (மாறனலங்.84,102.); a theme in which an author's work is eulogised.

*[பனுவல் + வாழ்த்து]*

**பனுவல் வென்றி** *panuval venri,* பெ. (n.) பிற நூல்களினும் ஒரு நூல் சிறப்புடைத் தெனக் கூறுந் துறை (மாறனலங்.198,477.); a theme which declares the superior merits of a treatise over others.

*[பனுவல் + வென்றி]*

**பனுவலாட்டி** *panuval-ātti,* பெ. (n.) கலைகளின் தெய்வமாகிய கலைமகள் (பிங்.); kalaimagal, as goddess of sciences.

*[பனுவல் + ஆட்டி]*

'ஆட்டி' பெண்பாலீறு.

**பனுவு-தல்** *panuvu-,* செ.குன்றாவி. (v.t.) சொல்லுதல்; to say, utter. "*பனுவுமா பனுவி*" (தேவா. 818,6.)

*[பன்னு → பனுவு-,]*

**பனை** *panai,* பெ. (n.) **1.** மரவகை; palmyra-palm. "*இரும்பனை வெண்டோடு மலைந் தோனல்லன்*" (புறநா.45.) "தாலப்புல்லின் வால்வெண் தோட்டு" (சிலப். 16:15:17) **2.** ஒரு பேரளவு; a large measure, opp. to tinai. "*பனையெ னளவும்*" (தொல்.எழுத்.169.) **3.** (17வது) பனை விண்மீன் (அனுடம்) the 17th naksatra. "*ஓங்கும் பனை துளங்கொளி பூரட்டாதி*" (இலக்.வி.791.) **4.** மூன்று விரல நீளம் வளர்வதும் கறுப்பு நிறமுள்ளதுமான நன்னீர் மீன் வகை; a fresh water fish, rifle green, attaining 3 in. in length. "*சுனையிற் பனைமீன்*" (கம்பரா. கடறாவு. 50.)

க-பனெ, ம.பன.

*[பல் → பன் → பனை]*

'*பனை ஏறியும் பாளைதொடாது இறங்கினாற்போல*'. (பழ.)

'*பனை ஏறி விழுந்தவனைக் கடாஏறி மிதித்ததுபோல*'. (பழ.)

'*பனையின் நிழலும் நிழலோ, பகைவர் உறவும் உறவோ?*' (பழ.)

'*பனையில் இருந்து விழுந்தவனைப் பாம்பு கடித்ததுபோல*' (பழ.)

'*பனை வெட்டின இடத்திலே கழுதை வட்டம் போட்டது போல*'. (பழ.)

மறுவ. பெண்ணை கரும்புறம்
தாலம் புல்
தாலப்புல் நீலம்
புற்றாளி கருந்தாள்
போந்தை
போந்து
புற்பதி
தாளி

**பனைமரத்தின் வகைகள்**

1. ஆண்பனை
2. பெண் பனை
3. கூந்தற்பனை – உடலற்பனை, ஈரம்பனை
4. தாளிப்பனை – குடைப்பனை
5. குமிதிப்பனை
6. சாற்றுப்பனை
7. ஈச்சம் பனை
8. ஈழற்பனை
9. சீமைப்பனை
10. ஆதம்பனை
11. திப்பிலிப்பனை
12. கிச்சிலிப்பனை
13. இளம்பனை
14. கூறைப்பனை
15. இடுக்குப்பனை
16. தாதப்பனை
17. காந்தம் பககாண்டம் பனை
18. பாக்குப் பனை
19. ஈரம் பனை
20. சீனப்பனை
21. ஏறுபனை
22. செம்பனை

*'பனைமரத்திற்கு நிழல் இல்லை; பசித்தவனுக்கு முறை இல்லை'.* (பழ.)

*'பனைமரம் ஏறுகிறவனை எதுவரையும் தாங்கலாம்?'* (பழ.)

*'பனை மரத்தின் கீழிருந்து பாலைக் குடித்தாலும், கள்ளைக் குடித்தான் என்பார்கள்'.* (பழ.)

**அடையாளந் தெரிய முடியாத பனைவகைகள்.**

1. அலாம் பனை
2. கொண்டைப் பனை
3. ஏரிலைப் பனை
4. ஏசறுப் பனை
5. காட்டுப் பனை
6. கதலிப் பனை
7. வலியப் பனை
8. வரதப் *பனை
9. அலகுப் பனை
10. நிலப்பனை

**பனைக்காரல்** *paṉaikkāral,* பெ. (n.) ஒரு வகைக் காரல்மீன்; a kind of fish. (சா.அக.)

*[பனை + காரல்]*

**பனைக்குருவி** *paṉai-k-kuruvi,* பெ. (n.) ஐவிரல் நீளமும், சாம்பல் நிறமும் மேற்புறம் வழவழப்பும் இறகுபக்கமும் வால்பக்கமும் கருப்பு நிறமுடைய பனைமரத்துக் குருவி; palmyra sparrow of five inches long, outside wholly glassy and ashy brown, darker on wings and tail. So called from its frequenting the palmyra trees. (சா.அக.)

*[பனை + குருவி]*

**பனைக்கொடியோன்** *paṉai-k-koḍiyōṉ,* பெ. (n.) 1. பனையைக் கொடியாகவுடையவன் (பலராமன்) (புறநா.56.); lit. one having the palmyra for his ensign. 2. வீடுமன் (பாரத. மூன்றாம்போ. 24.); bhīṣma.

*[பனை + கொடியோன்]*

**பனைக்கோரை** *paṉai-k-kōrai,* பெ. (n.) கோரைவகை; a kind of sedge.

*[பனை + கோரை]*

**பனைச்சாரல்** *paṉai-c-cāral,* பெ. (n.) ஒரு வகைச் சாரல் மீன்; a kind cāral fish. (சா.அக.)

*[பனை + சாரல்]*



**பனைச்சை** *paṉaiccai,* பெ. (n.) காட்டத்தி; wild fig.

**பனைசதி** *paṉai-šati,* பெ. (n.) அரசு (வைத்.பரி.); peepul tree.

**பனைதி** *paṉaiti,* பெ. (n.) அரச மரம்; peepul tree. (சா.அக.)

**பனைநாடு** *paṉai-nāḍu,* பெ. (n.) கடல் கொள்ளப்பட்ட ஒரு தென்றமிழ் நாடு (தொல்.பொ.650.உரை.); a portion of the southern Tamil country have been submerged.

*[பனை + நாடு]*

**பனைநார்** *paṉai-ṉār,* பெ. (n.) பனை மட்டையிலிருந்து எடுக்கப்படும் நார்; fibre of the stern of the palmyra leaf.

ம. பனநார்.

*[பனை + நார்]*

**பனைநிழல்** *paṉai-niḻal,* பெ. (n.) 1. பனை மரத்தின் நிழல்; shadow of a palmyra tree. 2. அருநிழல்; scarcity of shadaw. ***"பனைநிழலும் நிழலோ? பகைவர் உறவும் உறவோ"*** (பழ.)

**பனைநுங்கு** *paṉai-nuṅgu,* பெ. (n.) நுங்கு பார்க்க; see *nuṅgu.*

*[பனை + நுங்கு]*

**பனைப்பாட்டம்** *paṉai-p-pāṭṭam,* பெ. (n.) பனைமரக்குத்தகை; lease of palmyra trees.

*[பனை + பாட்டம்]*

**பனைப்பால்** *paṉaippāl,* பெ. (n.) பனங்கள்; palmyra toddy. (சா.அக.)

*[பனை + பால்]*

**பனைப்போழ்** *paṉai-p-pōḻ,* பெ. (n.) *பனந்தோடு* பார்க்க; see *panandōḍu.* ***"பனைப்போழ் செரீஇ"*** (புறநா.22.)

*[பனை + போழ்]*

**பனைமடல்** *paṉai-maḍal,* பெ. (n.) 1. பனங்குருத்து; young stem of the palmyra leaf. 2. பனையோலை; palmyra leaf; olā.

*[பனை + மடல்]*

'பனை மட்டையில் மழை பெய்தது போல' (பழ.)

**பனைமரச்சம்பா** *panai-mara-c-cambā,* பெ. (n.) மூன்று திங்களில் விளையும் சம்பா நெல்வகை; a kind of cambā paddy that matures in three months.

*[பனை + மரம் + சம்பா]*

**பனைமீன்**[1] *panai-mīn,* பெ. (n.) எட்டரை விரல நீள வளர்ச்சியும் கறுப்பு நிறமும் உள்ள மீன்வகை; climbing-fish, rifle green, attaining 8 1/2 in in length. "*பனைமீன் வழங்கும் வளைமேய் பரப்பின்*" (மதுரைக். 375.)

மறுவ: பனைக்காரல்.

*[பனை + மீன்]*

**பனைமீன்**[2] *panaimīn,* பெ. (n.) பெருமீன் வகை; whale.

*[திமிங்கிலம். இதனை இன்றும் புதுவை வாழ்நர் பனைவாளை, உறவி என்பர். (சங். நூல். மீன்கள்.)]*

**பனைமுகரி**[1] *panaimugari,* பெ. (n.) உடல் காய்ந்து, கறுத்து, உடம்பும் கழுத்தும் வீங்கிப் பிதற்றலோடு இசிவுநோய் காணும் ஒரு வகைச் சிறிய அம்மைநோய்; a kind of small pox attended with moderate fever and swelling of the body and neck renders the body black and sometimes delirium follows. (சா.அக.)

**பனைமுகரி**[2] *panaimugari,* பெ. (n.) மடங்கல் (ஆவணி) மாதத்தில் விதைக்கப்பட்டு நான்கு திங்களில் விளையும் நெல்வகை; a kind of paddy, sown in āvani, and maturing in four months.

*[பனை + முகரி]*

**பனைமுகரியம்மன்** *panai-mugari-y-amman,* பெ. (n.) அம்மைவகை; confluent variety of small-pox.

*[பனை + முகரி + அம்மன்]*

**பனைமுகிழ்** *panaimugil,* பெ. (n.) நுங்குக்காயின் மேற்றோடு; integument or envelope of the young palmyra fruit.

*[பனை + முகிழ்]*

**பனைமூக்கன்** *panaimūkkan,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy. "*நிறக்கும் பனை மூக்க னென்றும்*" (நெல்விடு.185)

*[பனை + மூக்கன்]*

**பனைமூக்காரன்** *panaimūkkāran,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy.

*[பனை + மூக்கு + காரன்]*

**பனையடைப்பு** *panai-y-adaippu,* பெ. (n.) *பனங்காடு(யாழ்ப்.)* பார்க்க; see *panankādu.*

*[பனை + அடைப்பு]*

**பனையன்** *panaiyan,* பெ. (n.) **1.** மீன்வகை; a kind of fish. **2.** பனை விரியன் என்னும் அம்மை வகை; a most malignant variety of small-pox or cholera.

மறுவ. கொடுவாரி நோய்.

ம. பனயன்.

*[பனை → பனையன்]*

**பனையன் தேளி** *panayantēli,* பெ. (n.) *பனையேறிக் கெண்டை* பார்க்க; see *panaiyērikendai.*

*[பனையன்+ தேளி]*

**பனையிடுக்கு–தல்** *panai-y-iḍukku-,* 5. செ.கு.வி. (V.i.) 1. சாறு வழியும்படி பனம் பாளையை நசுக்குதல்; to press the palmyra flower - stem to make its juice flow. 2. கள்ளிறக்குதல்; to draw toddy.

*[பனை + இடுக்கு–,]*

**பனையிதக்கை** *panai-y-idakkai,* பெ. (n.) *பனைமுகிழ்* பார்க்க; see *panaimugil.* ''*இரும்பனை யிதக்கையி னொடியும்*'' (அகநா.365.)

*[பனை + இதக்கை. இதக்கை = மேற்றோடு]*

**பனையூசல்** *panai-y-ūšal,* பெ. (n.) பனைமரங்களிற் கட்டி ஆடப்பெறும் ஊசல்; a swing suspended between palmyra trees. "*மடற்பனை யூசலொடு*" (பெருங். உஞ்சைக். 40,59.)

*[பனை + ஊசல்]*

**பனையூர்** *panaiyūr,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்து அமைந்துள்ள ஓர் ஊர்; a place name in Thiruvārur Dt.

(திருப்பனையூர் என்ற இத்தலம் இன்று திருவாரூர் மாவட்டத்தில் உள்ளது. பனை காரணமாக எழுந்த ஊர்ப்பெயர் இது. தலமரமும் பனையாக அமைகிறது.

'*திருப்பனையூரில் விருப்பன் ஆகியும்*' என மாணிக்கவாசகர் வாசகம் இவ்வூரைச் சுட்டுகிறது. (கீர்த் – 87). சம்பந்தர், சுந்தரர் இருவரும் இத்தலத்தைப் பாடுகின்றனர்.

"*கண்ணின் றெழு சோலையில் வண்டு*
*பண்ணின் றொலி செய் பனையூரே*" (37–2)

"*பொறையார் மிகுசீர் விழமல்கப்*
*பறையா றொலிசெய் பனையூரே*" (37–5)
எனச் சம்பந்தரும்,

"*மாடமாளிகை கோபுரத் தொடு மண்டபம்*
*–வளரும் வளர் பொழில்*
*பாடல் வண்டறையும் பழனத் திருப்பனையூர்*"
(87–1)

"*செங்கண் மேதிகள் சேடெறிந்து*
*தடம்படிதலிற் சேலினத் தொடு*
*பைங்கண் வாளைகள் பாய் பழனத்*
*திருப்பனையூர்*" (87–3)

எனச் சுந்தரரும் இவ்வூர் வளம் பாடுகின்றனர்.

சேக்கிழார் '*வள மல்கிய சீர்த் திருப்பனையூர்*' (ஏயர்.54) எனக் காட்டுகின்றார்.)

**பனையேறி¹** *panai-y-ēṟi,* பெ. (n.) ஒருவகைக் கெண்டைமீன்; a fish called climbing perch. (சா.அக.)

**மறுவ:** கல் கொறுக்கை,
வெள்ளைச் சாண்டுவா,
கொடுவாய்.

*[பனை + ஏறி]*

(இம்மீனின் சிலுவாய் மாறுபட்டு அமைந்திருப்பதால் நீரிலும் நிலத்திலும் வாழும் இயல்பினது எனச் சா.அக. கூறும்.)

**பனையேறி²** *panai-y-ēṟi,* பெ. (n.) 1. பனையேறுஞ் சாணாரச் சாதி; sāṉār whose occupation is palmyra tapping. 2. பாம்புவகை; noeturnal, dipsadidae. 3. பனைவிரியன் என்னும் பாம்பு வகை; a kind of snake. 4. பனைமீன் பார்க்க; see panai-mīṉ. 5. பனைவாரி என்னும் கொடுவாரி நோய்; a dangerous kind of small-pox.

ம. பனயேறி.

*[பனை + ஏறி]*

**பனையேறிக் கெண்டை** *paṉai-y--ēṟi-k-keṇḍai,* பெ.(n.) குளம், குட்டை முதலிய நன்னீர்களிலும் கழிமுகங்களிலும், கழிமுகத் தீவுகளிலும் வாழ்வதுமான சிறுமீன் வகை. ஒன்பது விரல்நீளம் வரையில் வளரக்கூடியது. a back water, and fresh water fish attaining a in, in length.

மறுவ. சென்னல் பனையன்தேளி

*[பனை + ஏறி + கெண்டை]*

**பனையேறு-தல்** *paṉaiyēṟu-,* 5. செ.கு.வி. (v.i.) கள் இறக்கும் குறிப்பிட்ட இனத்தார் செய்யும் தொழில்; an occupation of certain castes.

*[பனை + ஏறு-,]*

**பனைவட்டு** *paṉaivaṭṭu,* பெ. (n.) *பனைவெல்லம்,* பார்க்க; see *paṉai vellam.*

*[பனை + வட்டு]*

**பனைவடலி** *paṉaivaḍali,* பெ. (n.) இளம்பனை; young palmyra.

*[பனை + வடலி]*

**பனைவாரி** *paṉaivāri,* பெ. (n.) பெரியம்மை வகை; a dangerous form of small-pox.

*[பனை + வாரி]*

**பனைவாரை** *paṉai-vārai,* பெ. (n.) பனஞ்சாத்து; split palmyra.

*[பனை + வாரை]*

**பனைவாழை** *paṉaivāḻai,* பெ. (n.) அடுக்கு வாழை; the tallest among the plantain, trees with punches in ascending order; this is common in malabar. (சா.அக.)

*[பனை + வாழை]*

**பனைவாளை** *paṉaivāḷai,* பெ. (n.) திமிங்கலம் whadle. (பனைமீன் எனச் சொல்லப்படும் திமிங்கலத்தைப் புதுவை மீனவர் '*பனைவாளை*' என்பர். (புதுவை.மீனவ.)

**பனைவிரியன்** *paṉai-viriyaṉ,* பெ. (n.) கொடிய நஞ்சுடையதும் கடித்தால் கொடிய இறப்பை ஏற்படுத்துவதும், வயல், குடிசை, வீடு, சன்னலோரம் ஆகிய இடங்களில் வாழ்வதும் ஆகிய ஒரு வகை விரியன் பாம்பு; a kind of viper called - palmyra viper. (krait) (சா.அக.)

*[பனை + விரியன்]*

**பனைவெட்டு** *paṉai-veṭṭu,* பெ. (n.) *பனைவெல்லம்,* பார்க்க; see *paṉaivellam*

*[பனை + வெட்டு]*

**பனைவெல்லம்** *paṉai-vellam,* பெ. (n.) பனஞ்சாற்றைக் காய்ச்சியெடுக்கும் வெல்லம்; jaggery, coarse sugar made of palmya sap *"பனைவெல்லம் சேர்த்த தேநீர் உடலுக்கு நல்லது"*

*[பனை + வெல்லம்]*

## 'பா'

**பா¹** *pā*, பெ. (n.) பகரமெய்யும் (ப்) ஆகார உயிரும் (ஆ) சேர்ந்து பிறந்த உயிர்மெய் யெழுத்து; the compound of 'ப்' and 'ஆ'

**பா²–த்தல்** *pā-*, 4. செ.குன்றாவி (v.t.) பகுத்தல்; to divide, distribute. "*பாத்துண்பதுமிலர்*" (திருநூற்.89)

"*பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னும் தீப்பிணி தீண்டல் அரிது*" (திருக்குறள். 227.)

"*தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால் அம்மா அரிவை முயக்கு*" (திருக்குறள். 1107)

"*பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்*" (திருக்குறள். 44.)

*[பகுத்தல் → பாத்தல்]*

**பா³–தல்** *pā-*, 4. செ.குன்றாவி (v.t.) பகுத்தல்; to divide, distribute.

*[பகுத்தல் → பாத்தல் → பா–,]*

**பா⁴** *pā*, பெ. (n.) பாட்டு, செய்யுள்; poem, verse (written according to the roles of metre. "***வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் நால்வகைப் பாக்கள்". "பாவேந்தர் என்னும் பட்டம்.***" சேட்புலத்திருந்த காலத்தும் ஒருவன் எழுத்தும் சொல்லும் தெரியாமற் பாட மோதுங்கால் அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுளென்று உணர்தற் கேதுவாகிப் பரந்து பட்டுச் செல்வதோர் ஓசை. (பேரா.தொல். பொருள்.313). பாவென்றது சேட்புலத்திருந்து சொல்லும் பொருளும் தெரியாமல் ஒருவன் கூறியவழியும் இஃது இன்ன செய்யுளென்று அறிவதற்கு ஏதுவாகிப் பரந்து படச் செய்வதோர் ஓசை (நச்.தொல். செய்.1).

**பா⁵** *pā*, செ.கு.வி. (v.i.) 1. பரப்பு; expanse. "*பாவடி யானை*" (புறநா.233) 2. தேர்த்தட்டு (அரு.நி.); the central platform of a chariot. 3. பாட்டு; verse, stanza, poem. "*அத்தொடை பாவி நடத்தலிற் பாவே*" (இலக்.வி.711) 4. கைமரம்; rafter. "*பழுவெலும்பினி பாவடுக்கியே*" (கலிங்.87) 5. நெசவுப்பா; warp. "*பாவிடையாடு குழல்*" (திருவாச.24,8) 6. பஞ்சி நூல் (சூடா.); cotton thread. 7. நிழல் (யாழ்.அக.); shadow. 8. கடிகாரவூசி (யாழ்.அக.); gnomon or needle of a sun-dial.

*[பாவு → பா.]*

**பா⁶** *pā*, பெ. (n.) 1. காப்பு; protection. "*பன்னு பாவென்ற தூய்மை பருகுதல் காப்புங் கூறும்*" (காஞ்சிப்பு.திருவேகம்.48) 2. பருகுகை (காஞ்சிப்பு. திருவேகம்.48); drinking.

**பா⁷** *pā*, பெ. (n.) 1. தூய்மை; purity, holiness. "*பன்னு பாவென்ற தூய்மை*" (காஞ்சிப்பு. திருவேகம்.48) 2. அழகு (யாழ்.அக.); beauty.

**பா⁸** *pā*, பெ. (n.) 1. பாம்பு; snake. 2. பூனைக்காலி; cowhage.

**பாக்கட்டிக்கப்பல்** *pājjaṭṭi-k-kappal*, பெ. (n.) சிறு கப்பல் (தஞ்சை.மீனவ.); small fishing boat.

*[பாய்கட்டிக்கப்பல் → பாக்கட்டிக்கப்பல்]*

**பாக்கட்டு–தல்** *pā-k-kaṭṭu*, 5. செ.கு.வி.(v.i.) நெசவுப்பாவில் அற்ற இழையை இணைத்தல்; to join the broken threads of the warp (weav.).

*[பா+ கட்டு–,]*

**பாக்கடிக்கும்நேரம்** *pākkaḍikkum nēram,* பெ. (n.) *பாக்குக்கடிக்கும் நேரம்* பார்க்க; see *pākku-k-kaḍikkum-nēram.* (சா.அக.)

*[பாக்குக்கடிக்கும் நேரம் → பாக்கடிக்கும் நேரம்]*

**பாக்கம்**[1] *pākkam,* பெ. (n.) 1. நெய்தல் நிலத்தூர்; sea-side village. "கொழும்பல் குடிச் செழும் பாக்கத்து" (பட்டினப்.27) 2. ஊர்; town. village. "கட்கொண்டிக் குடிப் பாக்கத்து" (மதுரைக்.137) 3. அரசனிருப்பு (பதிற்றுப்.13, 12,உரை); royal residence.

*[பகு –பக்கம் → பாக்கம்]*

**பாக்கம்**[2] *pākkam,* பெ. (n.) சிறுமூட்டை; small bandle. "ஆமணக்கங்கொட்டை வண்டி ஒன்றுக்குக் காசு பத்தும் பொதி ஒன்றுக்குக் காசு அரையும் பாக்கம் ஒன்றுக்குக் காசு காலும்" (S.I.I.viii,232)

*[பொக்கம் → பாக்கம்]*

**பாக்கல்** *pākkal,* பெ.(n.) பாவுகல் (யாழ்.அக.); paving stones, slabs for flooring.

**மறுவ.** பரவுகல், பாக்கல்லு.

*[பா*[4] *→ பாக்கல்] [பாவுகல் → பாக்கல்]*

**பாக்கழி**[1] *pākkaḻi,* பெ. (n.) மருத யாழ்த் திறன்களுள் ஒன்று (பிங்.); a secondary melody type of marudam class.

*[ஒருகா: பாக்கம் → பாக்கழி]*

**பாக்கழி**[2] *pākkaḻi,* பெ. (n.) நெசவு நூல்(இ.வ.); yarn.

*[பா*[4] *→ பாக்கழி]*

**பாக்களவு** *pkkaḷavu,* பெ. (n.) சிற்றளவு; an insignificant quantity.

*[பாக்கு + அளவு]*

**பாக்கன்**[1] *pākkaṉ,* பெ. (n.) செம்படவன்; fisherman.

**பாக்கன்**[2] *pākkaṉ,* பெ. (n.) 1. பூனை (திவா.); cat. 2. காட்டுப்பூனை (பிங்.); wild cat.

*[பா → பாக்கம்]*



**பாக்கால்** *pākkāl,* பெ. (n.) *பாக்கானூல்* பார்க்க; see *pāk-k-kānūl.*

**ம.** பாக்கால்.

**பாக்கானூல்** *pā-k-kānūl,* பெ. (n.) நெசவுப்பாவில் நெய்த பிறகு அச்சில் எஞ்சிய நூல்; surplus thread in weaver's chain while putting it into the loom.

*[பா*[4] *+ கால்*[1] *+ நூல்]*

**பாக்கியச்சீட்டு** *pākkiya-c-ciṭṭu,* பெ. (n.) ஆகூழ்ச்சீட்டு; lottery.

*[பாக்கியம் + சீட்டு]*

**பாக்கியசாலி** *pākkiyšāli,* பெ. (n.) நல்வினையாளன்; fortunate, blessed person.

*[பாக்கியம் + சாலி]*

**பாக்கியத்தானம்** *pākkiya-t-tāṉam,* பெ. (n.) பிறப்போரை இடத்திற்கு ஒன்பதாவதும் பாக்கியத்தைக் குறிப்பதுமான இடம்; (Astrol.) the ninth house from the ascendant, regarded as the sign of prosperity. "*குருத்தான பாக்கியத் தானவாதி*" (வீமே.உள்.263)

*[பாக்கியம் +* skt. *ஸ்தானம் > த. தானம்]*

**பாக்கியம்** *pākkiyam,* பெ. (n.) **1.** நல்லூழ்; lot, destiny. **2.** நல்வினை; happy destiny, good fortune, acespicious fate. "*அதனைப் பலரறியார் பாக்கியத்தால்*" (குறள்,1141) **3.** செல்வம்; prosperity, riches. "*ஞாலமுடையார் பெறுகுவர் பாக்கியமே*" (சிவப். பிர. சிவஞான. கலம்.51) **4.** பகல் 15 முழுத்தங்களுள் பதினைந்தாவது (விதான. குணாகுண—73, உரை); the 15th of the 15 divisions of day. **5.** *பாக்கியத்தானம்* (வீமே.உள்.263.) பார்க்க; see *pākkiya-t-tāṉam.*

*[பாகு → பாக்கு=பகுதி.பாக்கு → பாக்கியம்]* மு.தா.104.

(பாக்கு என்னும் சொல்லை "bhag" என எடுத்தொலிப்பதனாலேயே அது வடசொற்போல் தோன்றுகிறது. இயம் என்பது ஓர் ஈறு ஒ.நோ. கண் → கண்ணியம் (மு.தா.) பண் → பண்ணியம்)

**பாக்கியம்²** *pākkiyam,* பெ. (n.) வடிநீர் (சங்.அக.); decoction infusion.

*[பகு → (பாக்கு) → பாக்கியம்]*

**பாக்கியலட்சுமி** *pākkiyalaṭcumi,* பெ. (n.) திருமகள்; the Goddess of wealth of fortune.

*[பாக்கியம் +* skt. lakshmi*> த. இலக்குமி. லட்சுமி]*

**பாக்கியவதி** *pākkiyavati,* பெ. (n.) நிறைந்த செல்வமுடையவள்; fortunate, blessed woman; wealthy woman.

*[பாக்கியம் + skt. vati > வதி]*

**பாக்கியவந்தன்** *pākkiyavandaṉ,* பெ. (n.) *பாக்கியவாளன்* பார்க்க; see *pākkiyavāḷan.*

*[பாக்கியம் + skt. vandan > த. வந்தன்]*

**பாக்கியவாளன்** *pākkiyavāḷaṉ,* பெ. (n.) நிறைந்த செல்வமுடையவன்; fortunate, blessed woman; wealthy man. "இப்பாடல் வல்லவர் பாக்கியவாளரே" (தேவா.866,11.)

*[பாக்கியம் + ஆளன்]*

**பாக்கியவான்** *pākkiyavāṉ,* பெ. (n.) ***பாக்கியவாளன்*** பார்க்க; see *pākkiyavāḷaṉ.*

**பாக்கியவீனம்** *pākkiyavīṉam,* பெ. (n.) போகூழ்; misfortune ill-luck, unhappiness.

*[பாக்கியம் + skt. hīnam > த. ஈனம்]*

**பாக்கியாதிபதி** *pākkiyādipadi,* பெ. (n.) பாக்கியத்துக்குரிய ஒன்பதாம் வீட்டுக்குடையவன் (வீமே.உள்.264.உரை) (Astrol) the lord of the ninth house from the ascendant.

*[பாக்கியம் + skt. atipathi > த. அதிபதி]*

**பாக்கியாநுகூலம்** *pākkiyānukūlam,* பெ. (n.) செல்வப் பேற்றுக்குப் பயன்தருவது (யாழ்.அக.); that which conducive to prosprity.

*[பாக்கியம் + skt. aanukūlam > த. அநுகூலம்]*

**பாக்கிலை** *pākkilai,* பெ. (n.) பாக்கு வெற்றிலை; areca-nut and betel leaf. "ஓயாது பாக்கிலை கொடுத்திடுவர் உற்றநாள் நான்காகிலோ" (குமரேச. சத.)

*[பாக்கு + இலை]*

**பாக்கு**[1] *pākku,* பெ. (n.) 1. அடைக்காய்: areca-nut. "*பாக்கும் புணரார் பெரியாரகத்து*" (ஆசாரக்.71) 2. கமுகு: areca-palm. "*பாக்குத்தோப்பு*" 3. பாக்குக்குப் மாற்றாகப் பயன்படும் பட்டையையுடைய ஒருவகைச் செடி; a hill shrub with yellow flowers, having a bark that is used as a substitute for areca-nut.

"*பாக்காக இருந்த வரைக்கும் பையிலே இருந்தது– இப்போது தோப்பாகி விட்டது – நமக்கு அடங்குமா?*"

"*பாக்குக் கொடுத்தால் பந்தலிலே என்ன அலுவல்*" (பழ.)

**பாக்கு**[2] *pākku,* பெ. (n.) 1. எதிர்கால வினையெச்ச ஈறு; suffix of a verbal derivative, signifying purpose. "*உண்பாக்குச் சென்றான்*" (நன்.343) 2. தொழிற்பெயரீறு; ending of a verbal noun. "*கரப்பாக்கு*";, "*வேபாக்கு*". (குறள்.1127,1128).

*[பாகு → பாக்கு]* (செல்வி. 75 ஆனி. பக்.523.)

**பாக்குக்கக்கல்** *pākku-k-kakkal,* பெ. (n.) துப்பிய வெற்றிலை பாக்கு எச்சில்; chewed betel spit out.

*[பாக்கு + கக்கல்]*

**பாக்குக்கட்டு-தல்** *pākku-k-kaṭṭu,* செ.கு.வி. (v.i.) பாக்கை வைத்து விளையாடுதல்; to play with areca-nuts.

*[பாக்கு + கட்டு–,]*

**பாக்குக்கடிக்கும்நேரம்** *pākku-k-kaḍikkum nēram.* பெ. (n.) மிகக்குறுகிய காலம்; short space of time.

*[பாக்கு + கடிக்கும் + நேரம்]*

**பாக்குக்கண்** *pākku-k-kaṉ,* பெ. (n.) பாக்கின் கண்; eye of an areca-nut.

*[பாக்கு + கண்]*

**பாக்குக்கல்** *pākku-k-kal,* பெ. (n.) ஒரு வகை பாறைக்கல்; a kind of rock. (சா.அக.)

*[பாக்கு + கண்]*

**பாக்குக்கன்று** *pākku-k-kaṉṟu,* பெ. (n.) கமுகுப் பதியம்; young plant of areca-palm.

*[பாக்கு + கன்று]*

**பாக்குக்கொடு-த்தல்** *pākku-k-kōḍu-,* 4. செ.கு.வி (v.i.) *பாக்கு வைத்-தல்* பார்க்க; see *pākku-vai-,.*

*[பாக்கு + கொடு–,]*



பாக்கு



பாதிரி



பாசாண பேதா

**பாக்குச்சத்து** *pākku-c-cattu,* பெ. (n.) பாக்கினின்று உருவாக்கும் ஒரு சிவந்த பொருள்; a brown red colouring matter obtained from areca nuts, known as arecared.

மறுவ: காசுக்கட்டி.

*[பாக்கு + skt. šattu > த. சத்து]*

**பாக்குச்சாரம்** *pākku-c-cāram,* பெ. (n.) 1. வெற்றிலை பாக்கு மென்றதனால் உண்டாம் சாறு; juice of areca-nut, betel etc., 2. *பாக்குத் தம்பலம்* பார்க்க (யாழ்.அக.); see *pākku-t-tambalam.* 3. கழிச்சலையும், வாய்நீரையும் வடிக்கும் தன்மையானதும், நாடி நடையை மெதுவாக்கும் தன்மையதுமாகிய எண்ணெய்ப் பொருள்; an oily and volatilebasic substance obtainable from arecanut-It is said to be a purgative and a sialogogue and to slow the pulse 4. பாக்கை வேக வைத்து அதனின்று வடிக்கும் சாரம்; essence of area nut derived by boiling it.

*[பாக்கு + சாரம்]*

**பாக்குச்சீவல்** *pākku-c-cīval,* பெ. (n.) பாக்கு வெட்டியாற் சீவப்பட்ட பாக்குத் துகள்; areca-nut parings.

*[பாக்கு + சீவல்]*

**பாக்குச்செதில்** *pākku-c-cedil,* பெ. (n.) *பாக்குச் சீவல்* பார்க்க; see *pākku-c-cīval.*

*[பாக்கு + செதில்]*

**பாக்குச்செதிள்** *pākku-c-cedil,* பெ. (n.) *பாக்குச் சீவல்* பார்க்க; see *pākku-c-cīval.*

*[பாக்கு + செதிள்]*

**பாக்குச்செருக்கல்** *pākku-c-cerukkal,* பெ. (n.) தூய்மையற்ற பாக்கை உட்கொள்வதனால் உண்டாகும் மயக்கம்; dizziness caused by chewing rotten areca-nuts.

*[பாக்கு + செருக்கல்]*

**பாக்குச்செருகல்** *pākku-c-cerugal,* பெ. (n.) *பாக்குச்செருக்கல்* பார்க்க; see *pākku-c-cerukkal.*

*[பாக்கு + செருகல்]*

**பாக்குட்டிக் கப்பல்** *pā-k-kuṭṭi-k-kappal,* பெ. (n.) சிறு கப்பல்; small fishing ship.

*[பாய்கட்டிக்கப்பல் → பாக்குட்டிக் கப்பல்.]*



**பாக்குணன்** *pākkuṇaṉ,* பெ. (n.) ஆற்றும் மருந்து; healing medicine. (சா.அக.)

**பாக்குத் தம்பலம்** *pākku-t-tambalam,* பெ. (n.) மென்று வெளியில் துப்பப்பட்ட வெற்றிலை பாக்கு; chewed betel spit out.

*[பாக்கு + தம்பலம்]*

**பாக்குத்துவை—த்தல்** *pākku-t-tuvai-,* 4. செ.கு.வி. (v.i.) மெல்லுதற்குத் தகுதியாகப் பாக்குரலில் வெற்றிலைப் பாக்கை இடித்தல்; to pound together areca-nut, betel, etc. in a small mortar.

*[பாக்கு + துவை—,]*

**பாக்குப்பட்டை** *pākku-p-paṭṭai,* பெ. (n.) 1. கமுகமட்டையின் விரிந்த அடிப்பாகம்; lower part of the leaf stalk of the arca-palm. 2. செடிவகை; johnswort koḍaikkāṉal shrub.

*[பாக்கு + பட்டை]*

**பாக்குப்பறித்தல்** *pākku-p-paṟital,* பெ. (n.) மணமகளைக் காதலித்த மற்றொருவன் மணமகன் முதலியோரை அவமதிக்க, திருமண வீட்டில் மணமகனைச் சேர்ந்தவர் வைத்திருக்கும் தம்பலத்தை வலியப் பிடுங்குகை; snatching of the betel-nut from the bridegroom's party by his rival at the bride's house, deemed an insult.

*[பாக்கு + பறித்தல்]*

**பாக்குப்பனை** *pākku-p-paṉai,* பெ. (n.) பாக்குமரம்; arecapalm. (சா.அக.)

*[பாக்கு + பனை]*



**பாக்குப்பாளை** *pākku-p-pāḷai,* பெ. (n.) பாக்கு மரத்தில் பூவைக் கொண்டிருக்கும் மடல்; flower sheath or spathe of the areca-palm.

*[பாக்கு + பாளை]*

**பாக்குப்பிடி—த்தல்** *pākku-p-piḍi,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. பிறனுக்குத்தீங் குண்டாம்படிச் சூழ்ச்சி செய்தல்; to contrive to entangle another in some danger. "*அவனைப் பாக்குப் பிடிக்கிறான்*" 2. குறைத்து விடுதல்; to diminish, encroach upon. "*கூலியைப் பாக்குப் பிடிக்கக் கூடும்*"(பாக்கை வெட்டுவதற்குப் பாக்கு வெட்டியின் வாயில் வைத்துப் பிடி).

*[பாக்கு + பிடி—,]*

**பாக்குப்பிளவு** *pākku-p-piḷavu,* பெ. (n.) 1. பாக்குத் துண்டு; slice of areca-nut. 2. பாதியாக வெட்டப்பட்ட பாக்கு; sized areca-nut.

*[பாக்கு + பிளவு]*

**பாக்குப்பை** *pākku-p-pai,* பெ. (n.) வெற்றிலைபாக்கு இடும் பை; betel pouch.

*[பாக்கு + பை]*

**பாக்குப்போல்சீவல்** *pākku-p-pōlcīval,* பெ. (n.) பாக்கைச் சீவுமாறு போலச் சீவுதல்; to slice the arecanut.

*[பாக்குப்போல் + சீவுதல்]*

**பாக்குமட்டை** *pākku-maṭṭai,* பெ. (n.) 1. பாக்கு மரத்தில் உண்டாகும் மட்டை; the leaf-stalk of the areca-palm. 2. பாக்குப் பட்டை; see pākku-p-paṭṭai. 'பாக்கு

மட்டையினால் பயன்கொளும்பொருட்கள் செய்து பயன்படுத்துதல் சுற்றுப்புறச் சூழலுக்கு நல்லது'.

*[பாக்கு + மட்டை]*

**பாக்குமரம்** *pākkumaram,* பெ. (n.) கழுகமரம்; area nut tree.

*[பாக்கு + மரம்]*



**பாக்குரல்** *pākkural,* பெ. (n.) தம்பலமிடிக்கும் கையுரல்; small mortar in which betel and areca-nut are mashed.

*[பாக்கு + உரல்]*

**பாக்குறற்கல்** *pākkuraṟ-kal,* பெ. (n.) *பாக்குரல்* பார்க்க; see *pākkural.*

*[பாக்கு + உரல் + கல்]*



**பாக்குவெட்டல்** *pākku-veṭṭal,* பெ. (n.) பாக்குத் துண்டு; slice of areca-nut.

*[பாக்கு + வெட்டல்]*

**பாக்குவெட்டி** *pākku-veṭṭi,* பெ. (n.) பாக்குச் சீவுங்கருவி; nut-crackers for slicing areca-nuts. "*பதமாயிருந்த பாக்குவெட்டி*" (தனிப்பா.1,273,14)

*[பாக்கு + வெட்டி]*

'ஆலங்குடி பாக்குவெட்டி' பெயர் பெற்றது.



**பாக்குவெட்டிக் கீரை** *pākkuveṭṭi-k-kīrai,* பெ. (n.) பாக்கு வெட்டியைப் போல் இலை பிரிந்த கீரை; a kind of greans the leaves of which is split into two parts just like the pincers. (சா.அக.)

*[பாக்குவெட்டி + கீரை]*

**பாக்குவெட்டியைக்காணோமே** *pākku veṭṭiyai-k-kāṇōmē,* பெ. (n.) பெண்கள் விளையாட்டு வகை; a kind of game for girls. பாக்குவெட்டியைக் காணோமே என்று சொல்லித் தொடங்கும் விளையாட்டு. அச்சொல்லையே பெயராகக் கொண்டது. இது வடகொங்கு நாட்டில் "பருப்புச் சட்டி" எனப்படும்.

ஆடுவார்தொகை :

பொதுவாக அறுவர்க்குக் குறையாத பலர் இதை ஆடுவர்.

ஆடிடம் :

ஊர்ப் பொட்டல்.

ஆடுமுறை :

தலைமையான இது பெதும்பையார் (எட்டு அகவை முதல் 11 அகவை வரையுள்ள பெண் பெதும்பை). அண்ணாவியார் போல் எதிரெதிர் நின்று கொள்வர். அவருள் ஒருத்தியின் பின்னால் ஏனைச் சிறுமியரெல்லாரும் ஒருத்தி அரையாடையை இன்னொருத்தி பற்றிக் கொண்டு வரிசையாய் நிற்பர். இன்னொருத்தி அவ்வரிசைக்கு எதிர்நின்று மறுக்காட்டி வலமும் இடமும் சுற்றிச் சென்று, வரிசையாய் நிற்கும் சிறுமியருள் அண்ணாவியொழிந்த பிறருள் ஒருத்தியை அல்லது பலரைத் தொடமுயல்வாள். அவள் வலஞ் செல்லும் போது இடமும் இடஞ் செல்லும்போது வலமுமாக வரிசையாக நிற்குஞ் சிறுமியர் வளைந்து வளைந்து இயங்குவர். தொடப்பட்ட பெண் நீங்கிவிட வேண்டும். இங்ஙனம் அண்ணாவியொழிந்த எல்லாப் பெண்களும் தொடப்படும் வரை ஆட்டுத் தொடரலாம்.

ஓர் ஆட்டை முடிந்த பின், மறுமுறையும் முன்போன்றே ஆடப்பெறும்.

ஆட்டு (ஆட்டம்) நிகழும் போது, தனித்து நிற்பவளும் வரிசை முதல்வியுமான அண்ணாவியர் இருவரும், பின்வருமாறு பாட்டுப் பாடி நெடுகலும் உறழ்ந்துரைப்பர். பாட்டு முடிந்தவுடன் திருப்பப்படும்.

பாண்டி நாட்டுப் பாட்டு.

1. த. பாக்கு வெட்டியைக் காணோமே
   வ. தேடி ஓடிப் பிடித்துக்கொள்

2. த. வெற்றிலைப் பெட்டியைக் காணோமே
   வ. தேடி ஓடிப் பிடித்துக்கொள்.

3. த. ஆடு கிடக்கிற கிடையைப் பார்
   வ. ஆட்டுப் பிழுக்கையைத் தூர்த்துப்பார்.

4. த. குட்டி கிடக்கிற கிடையைப் பார்
   குட்டிப் பிழுக்கையைத் தூர்த்துப்பார்.

5. த. பல்லே வலிக்குதே
   வ. நெல்லைக் கொறித்துக் கொள்.

கொங்குநாட்டுப் பாட்டு

1. த. பருப்புச்சட்டி
   வ. திருப்பி நக்கு

2. த. வாழை யிலை
   வ. வழித்து நக்கு

3. த. ஊசியால குத்துவேன்
   வ. வீட்டுமேல ஏறுவேன்

4. த. கிணற்றிலே குதிப்பேன்
   வ. கல்லெடுத்துப் போடுவேன்

5. த. தலையே நோகுதே
   வ. தலையணை போட்டுக் கொள்.

**பாக்குவெட்டு** *pākkuveṭṭu,* பெ. (n.) பாக்கு; areca nut. "*ஒரு பாக்குவெட்டு கொடு*" (உ.வ.)

*[பாக்கு + வெட்டு]*

**பாக்குவெற்றிலை** *pākku-veṟṟilai,* பெ. (n.) தாம்பலம்; areca-nut and betel.

*[பாக்கு + வெற்றிலை]*

**பாக்குவெற்றிலைக் கூட்டு** *pākkuveṟṟilai-k-kūṭṭu,* பெ. (n.) நறுமணச் சரக்குக் கலந்த பாக்குத்தூள்; spices mixed with chopped areca-nuts, used in chewing betel.

*[பாக்கு + வெற்றிலை + கூட்டு]*

**பாக்குவை[1]–த்தல்** *pākku-vai,* **4.** செ.கு.வி. (v.i.) வெற்றிலைபாக்கு வைத்துத் திருமணத்திற்கு அழைத்தல்; to invite persons to a wedding, presenting areca-nut and betel.

*[பாக்கு + வை–,]*

**பாக்குவை[2]–த்தல்** *pākku-vai,* **4.** செ.கு.வி. (v.i.) இசை நிகழ்ச்சி, நாடகநிகழ்ச்சி முதலியன நடத்துவோர்க்கு நிகழ்ச்சியை ஏற்பாடு செய்வோர் முன்னதாக வெற்றிலைப்பாக்கு வைத்துக்கொடுத்து நிகழ்ச்சியை உறுதி செய்தல்; conformation between artists and programmers by the betel nut.

*[பாக்கு + வை–,]*

**பாக்குவை[3]–த்தல்** *pākku-vai,* **18.** செ.குன்றாவி. (v.t.) ***பாக்குப் பிடி–,*** பார்க்க; see *pākku-p-piḍi-,.*

*[பாக்கு + வை–,]*

**பாக்குறடு** *pākkuṟāḍu,* பெ. (n.) பாதக்குறடு என்னும் சொல்லின் மறு வடிவம்; corr. of பாதக்குறடு.

*[பாதக்குறடு → பாக்குறடு]*

**பாக்குறண்டி** *pākkuṟaṇḍi,* பெ. (n.) பால்குறண்டி என்னும் மூலிகை வகை; milk kurandi. (சா.அக.)

**மறுவ.** காய்க்குறண்டி, பாற்குறண்டி.

**பாக்கை** *pākkai,* பெ. (n.) ***பாக்கம், 1,2*** பார்க்க; see *pākkam.* 1,2. ***"நென்னலிப் பாக்கை வந்து"*** **(பதினொ.திருவே.திருவந்.74)**

*[பாக்கு → பாக்கை]* **(வ.மொ.வ.192)**

**பாககம்** *pāgagam,* பெ. (n.) பிரிக்குந் தொகை; dividing amount.

*[பாகம் → பாககம்]*

**பாகசம்** *pāgašam,* பெ. (n.) ஒரு வகையுப்பு **(வைத்தியநூ.)**; a kind of salt.

**பாகசாத்திரம்** *pāgašāttiram,* பெ. (n.) உணவு பக்குவம் பண்ணுதலை உணர்த்தும் நூல்; science of cooking. ***மடைநூல்*** பார்க்க; see *maḍai-nūl.*

*[பாக + skt. sāstram> த. சாத்திரம்]*

**பாகசாலை[1]** *pāgašālai,* பெ. (n.) **1.** மருந்து கலக்கும் இடம்; a place for mixing medicine-pharmacy. **2.** மருந்து முடிக்கும் இடம்; place where medicines are prepared pharmacuetical works **(சா.அக.)**

*[பாகம் + சாலை]*

**பாகசாலை[2]** *pāgašālai,* பெ. (n.) மடைப்பள்ளி; kitchen. ***"இன்னமுத பாகசாலை"*** **(பிரபோத.11,29)**

*[பாகம் + சாலை]*

**பாகசிலைக்கல்** *pagašilaikkal,* பெ. (n.) **1.** சிலாநாகம்; zinc spar. **2.** சூடாலைக்கல்; zinc stone. **(சா.அக.)**

**பாகஞ்செய்–தல்** *pāgañcey-,* **13.** செ.கு.வி. (v.i.) **1.** உணவு செய்தல்; to cook. **2.** மருந்தினைப் பக்குவமாகச் செய்துகொடுத்தல்; to prepare the medicine with extra carefull.

*[பாகம் + செய்–,]*

மருத்துவத்தில் பலவகையான பாகங்கள் உள.

1. கைப்பாகம்
2. ஆயபாகம்
3. அரைப்புப் பாகம்
4. கலப்புப் பாகம்
5. புடபாகம்
6. கொள்பாகம்
7. தைலபாகம்
8. இளகிய பாகம்
9. மதுபாகம்
10. இருத பாகம்
11. வேதிப்பாகம்
12. கியாழபாகம்
13. வடகபாகம்
14. சரணபாகம்
15. சாசனபாகம்
16. சுவைப்பாகம் (சா.அக.)

**பாகஞ்செய்வோன்** *pāgañceyvōṉ*, பெ. (n.) நோயாளிக்கு அணுக்கமாயிருந்து மருந்து கொடுத்துக் கவனித்துக் கொள்பவன்; one attending on the patient to compound and administer medicine and also to give all comforts to him. (சா.அக.)

"உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென் றப்பானாற் கூற்றே மருந்து." (குறள்.950)

**பாகடை** *pāgaḍai*, பெ. (n.) *பாக்கு வெற்றிலை* பார்க்க; see *pākkuveṟṟilai*. "*குருக்கொள் சுண்ணமார் பாகடை*" (காஞ்சிப்பு.வலம்புரி.37)

*[பாக்கு→பாகு + அடை]*

**பாகண்டன்** *pākaṇḍaṉ*, பெ. (n.) வெளிப்புனைவுக்காரன்; pompus, showy person, one who puts on appearances.

**பாகண்டை** *pāgaṇḍai*, பெ. (n.) சிவதை; turbith root, Indian jalap. (சா.அக.)

**பாகதாரி** *pāgadāri*, பெ. (n.) சமையற்காரன் (யாழ்.அக.); cook.

*[பாகம் + skt. dāri> த. தாரி]*

**பாகதானம்** *pāgadāṉam*, பெ. (n.) *பாகசாலை (யாழ்.அக.)* பார்க்க; see *pāgašālai*.

*[பாகம் + skt. stāṉam> த. தானம்]*

**பாகப்படவுருக்கல்** *pāgappaḍa-v-urukkal*, பெ. (n.) பக்குவப்படும்படி உருக்குதல்; melting to the required standard. (சா.அக.)

*[பாகம்பட + உருக்கல்]*

**பாகப்படுத்-தல்** *pāka-p-paḍu*, 20. செ.கு.வி. (v.i.) 1. சமைத்தல்; to cook. 2. பங்கு செய்தல்; to divide shares.

*[பாகம் + படு-,]*

**பாகப்படுத்து-தல்** *pāga-p-paḍuttu-*, 5. செ.கு.வி. (v.i.) 1. பயன்படும்படித் தகுதியாக்கல்; making anything fit for use. 2. பதப்படுத்துதல்; to prepare anything fit for adaptation, seasoning as pickles. (சா.அக.)

*[பாகம் + படுத்து-,]*

**பாகப்பத்திரம்** *pāga-p-pattiram,* பெ. (n.) சொத்துப் பிரிவினையைக் குறிக்கும் ஆவணம்; partition deed.

*[பாகம் + skt. batra> த. பத்திரம்]*

**பாகப்புடி** *pāga-p-puḍi,* பெ. (n.) குயவன் சூளை; potter's kiln.

மறுவ: பாகபுடி

*[பாகம் → புடம் → புடி]*

**பாகபடை** *pāga-paḍai,* பெ. (n.) விளைச்சலுக்குத் தக்கவாறு, தீர்வையைத் தவசமாகத் தண்டல் செய்யும் முறை (இ.வ.); a system of land revenue in which a fixed share of the produce is collected.

*[பாகம் + படு + படை → பாகபடை]*

**பாகபாண்டம்** *pāga-pāṇḍam,* பெ. (n.) சமையலுக்குரிய சட்டி பானை முதலிய மட்பாண்டங்கள் (யாழ்.அக.); mud-pot used for cooking.

***[பாகம் + பாண்டம்]***



**பாகபேதம்** *pāgapēdam,* பெ. (n.) சமையல் வேறுபாடு; difference in cooking, by different cooks.

*[பாகம் + skt. bēda> த. பேதம்]*

**பாகம்¹** *pāgam,* பெ. (n.) **1.** சமையல்; cooking, dressing food **2.** வெப்பத்தால் வாடுதல்; heating. "*பாகமொடு விரகம்*" (வேதா.சூ.77) **3.** பக்குவம்; maturity, ripeness. "*இப்பழம் நல்ல பாகத்தி லிருக்கிறது*" **4.** மூவகைச் செய்யுள் நடையாகிய கொடி முந்திரி பாகம், கதலி பாகம், தேங்காய்ப் பாகம்; poet style of poetry, three in number. viz., kodimuṇḍiripāgam, kadalī-pāgam, thēnkāipāgam. "*பாகத்தினாற் கவிதை பாடிப் படிக்கவோ*" (தாயு.சச்சிதா.3). **5.** மனநிலை; state of mind. "*குறிப்பின்றியும் பாகமுணர்வாள் குறிப்புப் பெற்றுழி மிகவுணரும்*" (தொல்.பொ.127, உரை).

*[பகு → பாகம்]*

**பாகம்²** *pāgam,* பெ. (n.) **1.** பகுக்கை (சூடா.); sharing, dividing. **2.** கூறு; part, portion. "***தினையின் பாகமும் பிரிவது திருக்குறிப்பன்று***" (திருவாச.5,37) **3.** பாதி (சூடா.); half, moiety. **4.** பாகை; (math.) degree. **5.** பக்கம்; side, place. "*பாகம் பெண்ணோடாயின பரிசும்*" (திருவாச.2,78). **6.** காயம்; injury. "*பாகத்தைப் படாத நெஞ்சின்*" (சீவக.2278,உரை) **7.** பிச்சை (பிங்.); alms, charity. **8.** பறைவகை (சிலப்.3,27,உரை); a kind of drum.

*[பகு → பாகம்]*

**பாகம்³** *pāgam,* பெ. (n.) **1.** கை; arm. **2.** நான்கு முழங்கொண்ட கைந்நீட்டளவு (அகநி); measure of the arms extended= 4 cubits. **3.** ஒரு வகையுப்பு; a kind of salt (சா.அக.)

**பாகம்⁴** *pāgam,* பெ. (n.) **1.** பகுதி, உறுப்பு; part (of a machine, etc.) "*வெடித்துச் சிதறிய வானூர்தியின் பாகங்களைத் தேடும் பணி நடைபெறுகிறது.*" "*அச்செய்பொறியின் ஒரு பாகம் பழுதாகியிருக்கிறது.*" **2.** (சொத்தில்)

உரிமைப் பங்கு; share (in a property). *"இந்த வீட்டில் எனக்கும் ஒரு பாகம் உள்ளது"* 3. (நூலின்) தொகுதி; volume (of a novel, etc.) *"இந்தப் புதினம் மூன்று பாகங்களாக வெளிவந்துள்ளது."* 4. (நாடகம் போன்றவற்றில்) நடிப்புப் பகுதி, புனைவு; role, part (in a drama, etc.) *"நாடகத்தில் வள்ளி பாகத்தை ஏற்று நடித்துப் புகழ் பெற்றவர்."*

*[பாகு + பாகம்]* (செல்வி'75. ஆனி பக்.533)

**பாகம்[5]** *pāgam,* பெ. (n.) கடலெல்லை மற்றும் ஆழத்தைக் குறிக்குமொரு சொல். (மீனவ.பொ.வ.); a word indicating nautical limit and depth.

**பாகம்[6]** *pāgam,* பெ. (n.) இடம்; place spot region. *"கன்னபாகமும்"* (பாரத. புச்ப.33)

**பாகம் பகிர்-தல்** *pāgam pagir-,* செ.கு.வி. (v.i.) உறவினர்களுக்கிடையில் சொத்துக்களைப் பிரித்து எடுத்துக் கொள்ளுதல்; to divide an estate, as a kinsmen.

*[பாகம் + பகிர்-,]*

**பாகம்போடு-தல்** *pāgampōḍu,* 19.செ.குன்றாவி. (v.t.) கைப் பாகத்தால் அளவிடுதல்; to measure by the arm.

*[பாகம் + போடு-,]*

**பாகமா[1]-தல்** *pāgam-ā,* பெ. (n.) 1. முழுமை யடைதல்; to come to perfection. 2. பக்குவமடைதல்; reaching a matured state as in preparation of medicine medicated oil electuaries etc. (சா.அக.)

*[பாகம் + ஆ –,]*

**பாகமா[2]-தல்** *pāgam-ā,* 6. செ.கு.வி. (v.i) 1. உணவு முதலியன அணியமாதல்; to be fit for use, as food. 2. மருந்து முதலியன பதமாதல்; to reach a fitting condition, as medicine.

*[பாகம் + ஆ –.]*

**பாகமா[3]-தல்** *pāgam-ā,* 6. செ.கு.வி. (v.i) பங்கு பிரிக்கப் படுதல்; to be divided, partitioned.

*[பாகம் + ஆ –.]*

**பாகர்[1]** *pāgar,* பெ.(n.) 1. தேரின் மேற்றட்டைச் சுற்றியுள்ள மரக் கைப்பிடிச் சுவர் (சிறுபாண்.258.உரை); wooden balustrade in a car. 2. தேர்; car *"எழில் நடைப் பாகரொடு"* (சிறுபாண்.258).

*[பாகு → பாகர்]* வ.மொ.வ.193

**பாகர்[2]** *pāgar,* பெ.(n.) யானை, குதிரை முதலியவற்றை பாங்காயிருந்து நடத்துவோர். elephant or horse driver. *"பாகனை யரசன் குறிப்பினாலேவ"* (பாரத.குருகுல.கா.நா.); *"யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்"* (நாலடி.213).

*[பாங்கர்→ பாகர்]*

**பாகல்[1]** *pāgal,* பெ. (n.) கொடி வகை; balsam-pear, climber. *"ஒருநாட் பாகற் கொடியே பலவறுப்பான்"* (திருவாரூ.421).

க. ஹாகல்

*[பாகு + அல்]*

பாகல்வகை

| | |
|---|---|
| 1. கொம்புப்பாகல் (அல்.) | கொம்பன்பாகல் |
| 2. மிதிபாகல் | 3. சின்னப்பாகல் |
| 4. நிலப்பாகல் | 5. காட்டுப்பாகல் |
| 6. நாய்ப்பாகல் | 7. பேய்ப்பாகல் |
| 8. முட்பாகல் | 9. எருமைப்பாகல் |
| 10. காட்டுப்பாகல் | 11. நரிப்பாகல் |

(சா.அக.)



**பாகல்²** *pāgal,* பெ. (n.) **1.** பலாமரம்; jack tree.*"பரிமளப் பாகலிற் கனிகளைப் **வீறி.** நற்படியி னிட்டேகுரக்கின மாடும்"* **நற்.180. 2.** வெண்பாவட்டை; white pavettai, pavettai.

**பாகலம்** *pāgalam,* பெ. (n.) யானைக்கு வரும் காய்ச்சல் நோய் வகை (சூடா.); fever affecting elephants.

**பாகலன்** *pākalan,* பெ. (n.) பித்தன்; lunatic.

**பாகற்காய்** *pāgaṟkāy,* பெ. (n.) பாகல் கொடியில் காய்க்கும் காய்; bitter-guard. *"பாகற்காயின் சாறு எடுத்து அருந்தி வந்தால் உடம்புக்கு மிகவும் நல்லது."*

*[பாகல் + காய்]*

**பாகற்பலா** *pāgaṟpalā,* பெ. (n.) பெருங்குமிழ்; large goomiz. (சா.அக.)

**பாகற்பழம்** *pāgaṟpaḻam,* பெ. (n.) காய்ச்சல், நீரிழிவு, இரைப்பு, மூலம், குட்டம், மலப்புழு இவற்றைப் பாகற்பழம் போக்கும்; riped balsam pear. It is useful in cases of fever urinary disease, bronchitis, piles, leprosy and worms in the intestines. (சா.அக.)

*[பாகல் + பழம்]*

**பாகன்³** *pāgan,* பெ. (n.) **1.** யானைப் பாகன்; elephant driver, mahout. ***"யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்"*** (நாலடி.213) *"கைவல் பாகன் பையென இயக்க"* (அகநா.) **2.** தேர் முதலியவற்றை நடத்துவோன்; charioteer, muleteer, horseman, rider. ***"தேரிற் பாகனா யூர்ந்த தேவதேவன்"*** (திவ்.பெரியதி.7,5,2). **3.** அறிவன் (புதன்) (சூடா.); the planet mercury.

**மராத்.** பாகா. **ம.** பாவான்.

*[பாங்கன்→ பாகன்]*

*[பாகம் → பாகன்]* செல்வி, திசம்.79 பக்.582.

**பாகன்⁴** *pāgan,* பெ. (n.) பக்குவம் பெற்றவன்; one who has attained moral or spiritual ripeness. *"பவத்திடை மூழ்கும் பாக ரல்லவர்"* (கந்தபு.அடிமுடி.98)

**பாகன்³** *pāgan,* பெ. (n.) **1.** ஒரு பக்கத்திற் கொண்டவன்; person who has anything at his side, partner. *"நாரிபாகன்"* (தேவா.1172,9) **2.** செயற்றுணை செய்வோன்; agent. ஒ.நோ. பாங்கன் *"இவன் விளையாட்டுக் கெல்லாம் பாகன்"* **3.** வரிவாங்கி (யாழ்ப்); pimp.

**பாகனம்** *pāgaṉam,* பெ. (n.) ஆண்டு (யாழ்.அக.); year.

*[பாசனம்→ பாகனம்]*

**பாகா** *pāgā,* பெ. (n.) பனைச் சர்க்கரை; sugar obtained from palmyra juice. (சா.அக.)

*[பாகு → பாகா]*

**பாகாசயம்** *pāgāśayam,* பெ. (n.) உண்ட உணவைப் பக்குவப்படுத்தும் சிறுகுடல்; small intestines capable of digesting the food taken into the system. (சா.அக.)

**பாகார்** *pāgār,* பெ. (n.) 1. கோட்டை மதில் (அக.நி.); fortwall. 2. இடம்; place.

க. பாகல். ஒ.நோ. பாகர்.

*[பாகர் → பாகார்]*

**பாகாரம்** *pāgāram,* பெ. (n.) எண்வகைக் கணிதத்தில் ஒன்றாகிய வகுத்தல் (பிங்.); (math.) division, one of eṇ-kaṇidam.

*[பகு → பாகு → பாகாரம்]*

**பாகாரி** *pāgāri,* பெ. (n.) வெண்பொன்; impure gold of a white colour. (சா.அக.)

**பாகி[1]-த்தல்** *pāgi-,* 11. செ.குன்றாவி பங்கிடுதல்; to divide, apportion.

*[பாகு → பாகி.பாகித்தல்]* (செல்வி. திசம்.79. பக்.182)

**பாகி[2]** *pāgi,* பெ. (n.) தகுதியானவன்; competent, eligible peson.apportion.

*[பாகு → பாகி]*

**பாகி[3]** *pāgi,* பெ. (n.) கட்டுரையில் பொருள் நிரலுக்கு ஏற்ப அமைக்கப்படும் பத்தி; paragraph.

*பாகியமைப்பு* (Paragraph Structure)

எப்பொருளைப்பற்றி யெழுதினாலும் அப்பொருளைப் பற்றிய கருத்துகளையெல்லாம் கோவைபட அமைத்துக்கொண்டு ஒவ்வொன்றையும்பற்றி இயன்ற அளவு அல்லது வேண்டுமளவு தனித்தனிப் பகுதியாக ஒவ்வொரு வாக்கியத்தொகுதி வரைவது பாகியமைப்பு அல்லது பாகிவரைவு ஆகும்.

கடிதம் கட்டுரை ஆவணம் (பத்திரம்) முதலியன பாகியமைப்பையே பாகுபாடாக் கொண்டிருக்கும். நூலாயின், அதிகாரம் இயல் முதலிய பிரிவுகளாக வகுக்கப்பட்டு அவற்றுள் ஒவ்வொரு சிறு பிரிவும் பாகியமைப்புடையதாக விருக்கும்.

பாகியமைப்புடன் எழுதப்பட்ட எவ்வகை எழுத்தீடும், படிப்பதற்கு வசதியாகவும் பொருள் எளிதாய் விளங்குவதற்கு ஏதுவாகவும் பார்வைக்கு நன்றாகவும் இருப்பதால், உரைநடையில் எழுதும் எல்லாவற்றையும் பாகியமைப்புடனே எழுதுதல் வேண்டும்.

ஒரு பாகியின் இறுதி முழுவரியாகவும் இருக்கக்கூடுமாதலால், ஒரு பாகிக்கும் இன்னொரு பாகிக்கும் இடையீடு பார்த்தவுடன் தெளிவாய்த் தெரியுமாறு, ஒவ்வொரு பாகியின் முதல் வரியும் சற்று வலமாகத் தள்ளித் தொடங்கப்பெறும்.

பாகியமைப்பு நெறிமுறைகள் (Principles of Paragraph Structure)

பாகியமைப்பானது கருத்தடைவுபற்றிய ஏரண முறைப்பட்டதேயன்றி, அவரவர் விருப்பம் போலச் செயற்கை முறையாய்ப் பகுத்துக் கொள்வதன்று; ஆகையால், பாகியமைப்புப் பற்றிய சில திட்டமான நெறிமுறைகள் தெரிந்துகொள்ளல் வேண்டும் அவையாவன.

**1. ஒருமைப்பாடு** (Unity)

ஒரு வாக்கியம் ஒரே உண்மையை அல்லது விதியைப்பற்றியிருத்தல் போல ஒரு பாகியும் ஒரே பொருளை அல்லது பொருட் கூறாகிய கருத்தைப்பற்றி யிருத்தல் வேண்டும். இது பாகியொருமைப்பாடு எனப்படும்.

எப்பொருளாயினும் பல கருத்துகளைத் தழுவினதாக அல்லது உள்ளடக்கினதாகவே யிருக்கும். அவற்றுள் ஒவ்வொன்றையும் பற்றி ஒவ்வொரு பாகி வரைதல் வேண்டும்; ஒரு கருத்துப் பல உட்கருத்துகளைக் கொண்டதாயின், அவற்றுள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பாகியமைத்தல் வேண்டும்.

**2. ஒழுங்கு** (Order)

பாகியமைப்புப் பற்றிய இரண்டாவது நெறிமுறை கருத்தொழுங்காகும். இது பாகியொழுங்கு எனப்படும். இஃது அகவொழுங்கு புறவொழுங்கு என இரு திறத்தது. ஒரு பாகிக்குள்ளே யமைந்திருக்கும் கருத்தொழுங்கு அகவொழுங்கும், அதற்குப் புறமாக, முன்னும் பின்னும் அமைந்திருக்கும் கருத்தொழுங்கு புறவொழுங்கும் ஆகும்.

முதலாவது, ஒரு கட்டுரையின் பல பாகிக் கருத்துகளும், முன் பின் முறை பிறழாது ஏரணத் தொடர்ச்சியாயிருத்தல் வேண்டும் இரண்டாவது, ஒவ்வொரு பாகியினுள்ளும் அமைந்திருக்கும் வாக்கியங்கள், அவ்வப்பாகிக் கருத்துப்பற்றி ஏரணத் தொடர்பு பூண்டிருத்தல் வேண்டும்.

பொதுவாக, ஒரு பாகியின் முதல் வாக்கியம் பாகிக் கருத்தைத் தொடங்கல் வேண்டும்; அதன் இறுதிவாக்கியம் அதை முடித்தல் வேண்டும். இடையிலுள்ள வாங்கியங்களெல்லாம், பொருள் தொடர்ச்சி குலையாது பாகிக்கருத்தை வளர்க்கவோ விளக்கவோ வற்புறுத்தவோ வேண்டும். பாகிக் கருத்து அமைந்திருக்கும் வாக்கியம் கருத்து வாக்கியம் (Topical Sentence) அல்லது திறவு வாக்கியம் (Key Sentence) எனப்படும். இது பாகியின் முதலாவது இடையி லிருப்பது இடையாயது. இறுதியிலிருப்பது கடையாயது. முதல் வாக்கியம் படிப்பவர் உள்ளத்தைக் கவர்ந்து அவவது ஆர்வத்தை யெழுப்புவதாயும் இடை வாக்கியங்கள் அவ்வார்வத்தை மேலும் மேலும் வளர்ப்பனவாயும், இறுதி வாக்கியம் அதை சால்வு (திருப்திப்) படுத்துவதாயும், இருத்தல் வேண்டும்; பிஞ்சு தோன்றிக் காயாய்ப் பருத்துக் கனியாய்ப் பழுத்தாற்போல், பாகிக் கருத்தும் முன்பு தோன்றி முறையே வளர்ந்து முடிவில் முதிரவேண்டும்.

பாகிப்பொருள் ஒரு வரலாறாயின் பாகி வாக்கியங்கள் அவ் வரலாற்று நிகழ்ச்சிகளை முறை பிறழாது தொடர்ந்து கூறுதல் வேண்டும்

**3. வகைப்பாடு** (Variety)

பாகியமைப்பின் மூன்றாம் நெறிமுறை வகைப்பாடு அஃதாவது, பாகிகளெல்லாம் ஒரு கோவையின் அல்லது மாலையின் செய்யுள் களைப்போல் ஒரே யளவாயிராது. குறிதும் நெடிதுமாக வெவ்வேறளவாயிருத்தல். இது பாகி வகைப்பாடு எனப்படும் ஒரு பாகியின் அளவு அதன் கருத்தைப் பொறுத்திருத்தலால் பாகிகளெல்லாம் தாம் கூறும் கருத்தின் ஒடுக்க விரிவிற் கேற்றவாறு குறுகியும் நீண்டுமிருக்கும். ஒரு பாகி வாக்கியத்தினாலும் அமையலாம்; பல வாக்கியங்களினாலும் அமையலாம். அதன் சிற்றெல்லையே யன்றிப் பேரெல்லை திட்டமாக வகுத்தற்குரிய தன்றாயினும் அஃது ஒரு பக்கத்திற்கு மிகாதிருத்தல் நல்லதாம். மிக விரிவுபட்ட பாகிப்பொருள் பல கருத்துகளாகப் பிரித்துக்கொள்ளுற்கு இடந்தருமாதலின். ஒரு பக்கத்திற்கு மேற்படும் கழிநெடும் பாகியைப் பல சிறு பாகிகளாகப் பிரித்துக்கொள்வது நன்று. பாகியமைப்பின் பயன் படிக்கை வசதியும் பொருள் தெளிவுமாதலின், அப் பயன் கெடுமாறு பாகிகளை வரை கடந்து நீட்டுதல் தகாது.

ஒரு பாகியின் இடையில் மேற்கோட் செய்யுள் வருமாயின் அதைத் தனித்து வரைதல் வேண்டும். அஃதாவது, செய்யுள் வடிவு கெடாமல் புதுவரியில் தொடங்கி ஒவ்வோர் அடியையும் அல்லது அடிப்பகுதியையும் தனி வரியாய் வரைதல் வேண்டும் ஒரே அடி அல்லது அடிப்பகுதியாயின் பாகியொடு சேர்த்தும் வரையலாம்

இதுகாறும் கூறியவற்றின் தொகுப்பு:

பாகியமைப்புப்பற்றிய நெறிமுறைகள். 1. வலந்தள்ளித் தொடங்கல். 2. கருத்தொருமை 3. கருத்தொழுங்கு. 4. அளவு வேறுபாடு. 5. மேற்கோட் செய்யுளின் தனிவரைவு என ஐந்து. (பாவாணர்– உயர்தரக் கட்டுரை இலக்கணம் இரண்டாம் பாகம் பக்.43–45)

**பாகி⁴** *pāgi,* பெ. (n.) ஊர்தியோட்டும் பெண்; a female rider. "*கலைப்பாகி கொண்டுவளாய் நின்றாள்*" (திவ்.பெரியாழ்.1,3,9)

*[பாகன் → பாகி]*

**பாகி⁵** *pāki,* பெ. (n.) நாய்; dog. (சா.அக.)

**பாகிடு¹–தல்** *pāgiḍu,* 12. செ.குன்றாவி. (v.t.) பங்கிடுதல்; to divide, apportion.

**பாகிடு²–தல்** *pāgiḍu,* 20. செ.கு.வி. (v.i.) இரப்போர்க்கு ஈதல்; to give alms. "*பாகிடுவான் சென்றேனை*" (தேவா.54,4)

*[பாகு + இடு–,]*

**பாகினேயன்** *pāginēyaṉ,* பெ. (n.) உடன்பிறந்தாள் மகன்; sister's son "*பாகினேயரான கீழையகத் தாழ்வார்*" (கோயிலொ.95)

**பாகீடு** *pāgiḍu,* பெ. (n.) பங்கிடுகை; share, portion, allotment.

*[பாகிடு → பாகீடு]*

**பாகு¹** *pāgu,* பெ. (n.) 1. குழம்பான உணவு (திவா.); any liquid food. "*பொரிக்கறி பளிதம்பாகு புளிங்கறி*" (பிரபுலிங். ஆரோகண.34) 2. இளகக் காய்ச்சிய வெல்லம்; treale, molasses, sugar syrup. "*ஞானக் கரும்பின் தெளிவைப் பாகை*" (திருவாச.9,15) 3. சருக்கரை (பிங்.); coarse sugar, palm sugar. 4. பால் (சூடா.); milk. 5. பாக்கு; areca-nut "*குற்றபாகு கொழிப்பவர்*" (கம்பரா. நாட்டுப்.29) 6. அடுப்பு (பரணி) என்னும் விண்மீன் (அக.நி.); the second nakṢatrā.

தெ. பாகு.

*[பகு → பாகு]*

**பாகு²** *pāgu,* பெ. (n.) 1. பகுதி; share, portion, lot, division. 2. இரப்பு; alms. "*பாகிடுவான் சென்றேனைப் பற்றி நோக்கி*" (தேவா.54,4) 3. கரை; bank. 4. சிலை (சத்தி) (அக.நி.); siva's consort.

*[பகு → பாகு]*

**பாகு³** *pāgu,* பெ. (n.) 1. பாகன் 1,2, பார்க்க; see pagan. "பாகுகழிந்தி யாங்கணும் பறைபட வரூம் வேகயானை" (சிலப், 15,46) 2. ஆள்வினை (நிருவாக)த் திறன்; art, ability. "*போர்ப்பாகு தான்செய்து*" (திவ்.திருவாய்.4,6,3).

*[பாகன்¹ → பாகு]* (செல்வி. 75, ஆனி, பக்.533)

**பாகு⁴** *pāku,* பெ. (n.) கை; arm.

**பாகு⁵** *pāgu,* பெ. (n.) அழகு; beauty, charm. "*பாகாரிஞ்சிப் பொன்மதில்*" (கம்பரா.ஊர்தே.82).

தெ. பாகு.

*[பகு → பாகு]*

**பாகுடம்** *pāguḍam,* பெ. (n.) **1.** கையுறை; gift, present. "*நரிப்படைக் கொரு பாகுடம் போலே*" (திவ்.பெரியாழ்.4,5,8) **2.** அரசிறை (சங்.); royal revenue, impost, tripute

பிரா. pāaḍa க. பாவுட.

*[பாகு → பாகுடம்]*

**பாகுடி** *pāguḍi,* பெ. (n.) தொலைதூரம்; long distance "*பாகுடிப் பார்வற் கொக்கின்*" (பதிற்றுப்.16)

*[பா → பாகுடி]*

**பாகுதம்** *pāgudam,* பெ. (n.) கருஞ்சீரகம்; black cumin. (சா.அக.)



**பாகுபடுத்து–தல்** *pāgu-paḍuttu-,* **10.** செ.கு.வி. வேறுபாடு தெரியும் வகையில் பிரித்தல்; classify, sort out, differntiate. "*எதற்காக ஏழை பணக்காரன் என்று பாகுபடுத்திப் பேசுகிறாய்.*" "*மூளை, செய்திகளைப் பாகுபடுத்தி நம்மை உணரச் செய்கிறது.*"

**பாகுபடு–தல்** *pāgu-paḍu,* **20.** செ.கு.வி. பிரிவுபடுதல்; to be classified. "*அவை இனைத்துப் பாகுபடுமென்றும்*" (தொல். சொல்.427, சேனா)

*[பாகு² + படு–,]*

**பாகுபந்து** *pāgupandu,* பெ. (n.) ஒரு சிற்றூர் நிலத்திலுள்ள கூட்டுரிமை; joint interest in the property of a village or persons associated.family.

*[பாகம் + பந்து → பாகுபந்து]*

**பாகுபந்துமிராசு** *pāgupandu mirāsu,* பெ. (n.) ஒரு குடும்பத்திலுள்ள உறுப்பினர்களுக் குண்டான நிலக் கூட்டுரிமை ; occupance of land in coparcenery especially by members of the same family.

*[பாகுபந்து.* U. mirāši › *த. மிராசு]*

**பாகுபாடு** *pāgupāḍu,* **பெ. (n.) பிரிவுபடுகை; division, sub-division, class. (உம்.)** "***முன்னூற் பாற்படு பொருளுந்சைவப் பாகுபாடுணர்ந்து***" **(சிவரக.பாயிர.21.)**

*[பாகுபடு → பாகுபாடு]*

**பாகுபிடித்தல்** *pāgupiḍittal,* பெ. (n.) **1.** பாகு செய்து உருண்டை பிடித்தல்; to make a lump of jellied matter. **2.** தேன் ஊற்றி இளகியமாகச் செய்தல்; making into an electuary by adding honey-aconserve. (சா.அக.)

**பாகுமுறிதல்** *pāgu-muṟidal,* பெ. (n.) பாகு பதம் தவறுதல்; failing in the preparation of a syrup by exceeding the stage. (சா.அக.)

*[பாகு + முறி]*

**பாகுவலயம்** *pāguvalayam,* பெ. (n.) தோள்வளை(S.I.I.ii, 163); armlet.

*[வாகுவலயம் → பாகுவலயம்]*



**பாகுவன்** *pāguvan,* பெ. (n.) சமையற்காரன் (யாழ்.அக.) ; cook.

*[பாகம் → பாகுவன்]*

**பாகுளி** *pāguḷi,* பெ. (n.) கன்னி (புரட்டாசி) மாதத்து நிறைநிலா நாள்; full moon in the month of puraṭṭāši. "*அதைப் பாகுளி யென்று*" (விநாயகபு.37,81)

**பாகை[1]** *pāgai,* பெ. (n.) ஊர்; village, town.

*[பாகு → பாகம் → பாகை]* மு.தா.104.

**பாகை[2]** *pāgai,* பெ. (n.) 1. பகுதி (சூடா.); part. division, section. 2. வட்டத்தை முந்நூற்றறுபதாகப் பிரித்து வந்த ஒரு பகுதி (யாழ்.அக.); (math) degree. 3. காலவளவு வகை; a division of time.

*[பாகு → பாகம் → பாகை]* மு.தா.104.

**பாகை[3]** *pāgai,* பெ. (n.) களிற்றின் உடலில் மதநீர் ஊறுமிடம்; the spot from which ichor flows in an elephant. "முகபாகை குதிபாய் கடாம்" (தக்கயாகப்.3)

*[பாகு → பாகை]*

**பாகை[4]** *pāgai,* பெ. (n.) கோணத்தை அளக்கப் பயன்படும் அலகு, வட்டத்தின் 360 சமபாகத்தில் ஒரு பாகம்; degree (to measure angles.)

*[பாகு → பாகை]*

**பாகைமானி** *pāgai-māṉi,* பெ. (n.) (கோணத்தை வரையவும் அளக்கவும் பயன்படும்) பாகைகள் குறிக்கப்பட்டு அரைவட்ட வடிவில் இருக்கும் கருவி; protractor.

*[ பாகை + மானி]*

**பாகையிட்ட பாத்திரம்** *pāgai-y-iṭṭa pāttiram,* பெ. (n.) அளவு குறித்த ஏனம்; graduated vessel. (சா.அக.)

*[பாகை + இட்ட + skt. pātra> த. பாத்திரம்]*

**பாகையிடல்** *pāgai-y-iḍal,* பெ. (n.) அளவிடல்; to graduate. (சா.அக.)

*[பாகை + இடல்]*

**பாகையெலும்பு** *pāgai-y-elumbu,* பெ. (n.) ஒரு மூக்கெலும்பு; a nasal bone. (சா.அக.)

*[பாகை + எலும்பு]*

**பாங்கம்** *pāṅgam,* பெ. (n.) பலண்டுறுகச் செய்ந்நஞ்சு; one of the 32 kinds of native arsenices, as contemplated in Tamil Siddha medicine. (சா.அக.)

**பாங்கயம்** *pangayam,* பெ. (n.) 1. ஆகாய கருடன்; sky root, snake caper. 2. வெற்றிலைப்பாக்கு; betel leaf and nut. (சா.அக.)

**பாங்கர்**[1] *pāṅgar,* பெ. (n.) 1. இடம்; place, location. "*பல்லியும் பட்ட பாங்கர்*" (சீவக.1909) 2. பக்கம்; side, neighbourhood. "*அதற்குப் பாங்கர் மன்னுபூங் கோயிலாக்கி*" (தணிகைப்பு. அகத்.166) "*ஈசன் பாங்கரந்தரியங்கில்லாமல்*" (சிவரக. நந்திகண.5.) 3. பாங்கர்க்கொடி; a climber. "*பாங்கரும் முல்லையும்*" (கலித். 111) "*குல்லையும் குருந்துங் கோடலும் பாங்கரும்*" (கலித் 103–3)

*[பாக்கு → பாங்கு*[1] *→ பாங்கர்]* மு.தா.104.

**பாங்கர்**[2] *pāṅgar,* பெ. (n.) உகாமரம்; tooth brush tree. "*பாங்கர் மராஅம்பல் பூந்தணக்கம்*" (குறிஞ்சிப்.85)

*[பாங்கு → பாங்கர்]*

**பாங்கல்** *pāṅgal,* பெ. (n.) வேங்கைமரம்; kino tree. (சா.அக.)

**பாங்கற்கூட்டம்**[2] *pāṅgaṟ-kūṭṭam,* பெ. (n.) தோழனது உதவியால் தலைவியைத் தலைவன் குறியிடத்துக் கூடுகை (திருக்கோ.); (akap) union of a hero with his heroine effected through the aid of his companion. "இடந்தலைப்பாடு – பாங்கற்கூட்டம்" (அகப்.கள.5.)

*[பாங்கன் + கூட்டம்]*

**பாங்கன்** *pāṅgaṉ,* பெ. (n.) 1. தோழன்; friend, associate, companion. "*பாங்க னிமித்தம் பன்னிரண் டென்ப*" (தொல்.பொ.104) 2. கணவன்; husband. "*பொருள்வயிற் பாங்கனார் சென்ற நெறி*" (நாலடி.400)

ம. பாங்ஙன்

*[பாக்கு → பாங்கு → பாங்கர். பாங்கு → பாங்கன்]* மு.தா.104.

ஒ.நோ ME. OF. St. Paggis & page.

**பாங்கனகம்** *paṅgaṉagam,* பெ. (n.) பனைச் சருக்கரை; palmyra sugar. (சா.அக.)

**பாங்காக்கெண்டை** *pāṅgā-k-keṇḍai,* பெ. (n.) ஒரு வகைக்கெண்டை மீன்; bangkok strain.

**பாங்காலி** *pāṅgāli,* பெ. (n.) ஒரு வகை மரம்; burma iron wood tree. (சா.அக.)

**பாங்கானவன்** *pāṅgāṉavaṉ,* பெ. (n.) மதிப்புரவுள்ளவன்; man of polite address and manners.

*[பாங்கு → பாங்கானவன்]*

**பாங்கி** *pāṅgi,* பெ. (n.) தலைவியின் தோழி; female companion of a heroine, lady's maid. "*பாங்கற்கூட்டம் பாங்கியிற் கூட்டம்*" (நம்பியகப்.அகத்.27) "பாங்கியர் மருங்குசூழ" (பொரியபு. தடுத்தாட்.) fem. of பாங்கன்.

*[பாங்கன் → பாங்கி]* செல்வி. '75, ஆனி. பக். 534.

**பாங்கிச் சிலைநிறம்** *pāṅgi-c-cilainiṟam,* பெ. (n.) மாங்கிடச்சிலை; a kind of mineral stone mentioned in the Tamil Siddha medicine. (சா.அக.)

**பாங்கிமதிவுடம்பாடு** *pāṅkimatiyuḍampāḍu*, பெ. (n.) பாங்கி தலைவி வேறுபாட்டைக் கண்டு புணர்ச்சியினுண்மையறிந்து ஆராய்ந்து தன்மதியுடம்படுதல்; என்னும் துறை; a theme in love poetry.

*[பாங்கி + மதி + உடன்பாடு]*

(அது, முன்னுறவுணர்தல், குறையுறவுணர்தல், இருவருமுள்வழி யவன் வரவுணர்தல் என மூவகைப்படும். (உ.ம்) "*முன்னுறவுணர்தல் குறையுற வுணர்த லிருவருமுன் வழியவன் வரவுணர்தலென் - றொரு மூன்று வகைத்தே பாங்கி மதி யுடம்பாடு*" (அகப். கள.22)

**பாங்கியிற்கூட்டம்** *pāṅgiyiṟkūṭṭam*, பெ. (n.) தோழியின் உதவியால் தலைவியைத் தலைவன் குறியிடத்துக் கூடுகை; (Akap.) union of a hero with his heroine effected through the aid of her female companion.

*[பாங்கி[1] + இன் + கூட்டம்]*

**பாங்கிற்கூட்டல்** *pāṅkiṟ-kūṭṭal*, பெ. (n.) தலைவன் தலைவியை ஆயத்துச் செலுத்தல்; (வாண.42.முகம்); to send the heroine with her companions.

*[பாங்கு→ பாங்கில் + கூட்டல்]*

*'இன்' உருபு கருவிப்பொருள் உணர்த் திற்று*

**பாங்கினம்** *pāṅgiṉam*, பெ. (n.) ஆயம்; suite, company. "*யாங்கணுந் திரிவோள் பாங்கினங் காணாள்*" (மணிமே.8,35).

*[பாங்கு[1] → பாங்கினம்]*

**பாங்கீலி** *pāṅgīli*, பெ. (n.) கீலி மீன் வகையுள் ஒன்று (முகவை.மீனவ.); a kind of sea-fish.



**பாங்கு[1]** *pāṅgu*, பெ. (n.) 1. பக்கம்; side, neighbourhood. "*காடுகொண்டலர்ந்த பாங்கெலாம்*" (சூளா.நாட்.2) 2. இடம்; place, location. "*பட்டி மண்டபத்துப் பாங்கறிந் தேறுமின்*" (மணிமே.1,61) 3. ஒப்பு; equality, likeness. "*பாங்கருஞ் சிறப்பின்*" (தொல்.பொ.78) 4. நன்மை; goodness. "*பாங்கலா நெறி*" (வாயுசங்.இருடி.பிரம.11) 5. அழகு; beauty, fairness, neatness. "*பாங்குறக்கூடும் பதி*" (பு.வெ.9,51.கொளு) 6. தகுதி; agreeableness. "*பாங்குற வுணர்தல்*" (தொல்.சொல்.396) 7. உடல்நலம்; health. "*திருமேனி பாங்கா?*" 8. இயல்பு; nature, propriety. 9. ஒழுக்கம்; gentility, politeness. "*பாங்குடையீர்*" (திருவாச.7,3) 10. தோழமை; companionship. "*நீயும் பாங்கல்லை*" (திவ்.திருவாய்.5,4,2) 11. துணையானவ-ன்-ள்; companion. "வேல் விடலை பாங்கா" (திணைமாலை.89) 12. இணக்கம்; accommodation, conciliation. "*நின்னொடு பாங்கலா மன்னர்*" (இலக்.வி. 611,உதா) 13. துணையாதல்; partisanship, interest, favour. "*வேந்தன் ஒருவர்க்குப் பாங்குபடினும் தாந்தாமொருவர்கட்பாங்கு படாதோர்*" (யாப்.வி.96, பக்.515) 14. விதி; means. "*கடன் தீர்ப்பதற்கு என் கையில் பாங்கில்லை*" (நாஞ்.)

க. பாங்கு. ம. பாங்ஙு

*[பாக்கு → பாங்கு]* ஒ.நோ: போக்கு → போங்கு (செல்வி'75, ஆனி பக் 534.)

**பாங்கு²** *pāṅgu,* பெ. (n.) தொழுகை நடத்து மிடம்; (இசுலா.) cell for prayer.

**பாங்கு³** *pāṅgu,* செ.கு.வி. (v.i.) **1.** (செயலைச் செய்யும்) முறை, வகை; way, manner (of doing 5th) "*அவர் விருந்தோம்பும் பாங்கே தனி*", "*கழக காலப் பாடல்களில் இயற்கைக் காட்சிகளைச் சித்திரிக்கும் பாங்கு சிறப்பானது*" 2. பக்குவம், நயம்; grace, tact. "*பாங்காகப் பேசிச் செயலை முடித்துவிடு*". பாட்டரங்கம் பாங்காக இருந்தது. **3.** உரிய தன்மை நிறைந்தது; characteristic features, features (appropriate to Sth) "*மணல் பாங்கான நிலம்*" "*குடும்பப் பாங்கான கதையுள்ள திரைப்படம்*". "*கட்டுரை இன்னும் சிறிது திறனாய்வுப் பாங்குடன் இருந்திருக்கலாம்.*"

[*பங்கு → பாங்கு*] வ.மொ.வ.193.

**பாங்கு⁴** *pāṅgu,* பெ. (n.) **1.** உரிமை, rights. (சூ.நிக.) 2. உறவு (சிந்தாமணி. **651.**); relationship. 3. நற்குணம்; good habit. "*பாங்கினானீங் கலாகாப் பதஞ்சலி யென்னு நாமந்தாங்கி*". (கோயிற்பு.பதஞ்சலி.பிரு). **4.** பக்கம்; side, neighbourhood. "*பாங்கோடிச் சிலை வளைத்து*". (பெரியபு.தடுத்.140). **5.** *வாங்கு* பார்க்க; see *vāṅgu.* "*நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கின் தேற்றும்*" (நற்.246–2)

"*பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்*" (பதிற்று.76–12)

"*பல்லியும் பாங்கொத் திசைத்தன*" (கலி.11–21)

"*பற்றினின் பாங்கினியது இல்*" (இனி.நா.26–4)

"*பாங்கத்துப் பல்லி படும்*" (ஐந்.எழு.41–4)

"*பாங்கினிற் பாடியோர் பண்ணுப் பெயர்த்தாள்*" (சிலப்.7–47–4)

"*பாங்கிற் கண்டவள் பளிக்கறை புக்கதும்*" (மணி.பரி.40)

[*பங்கு → பாங்கு*] வ.மொ.வ.193

**பாங்குதிரி–த்தல்** *pāṅgu-tiri,* செ.குன்றாவி. (v.t.) *பாங்குபிரி* (நாஞ்.). பார்க்க; see *pāṅgu-piri. பாங்கு + பிரி → பாங்குபிரி–,*

**பாங்குநெல்** *pāṅgu-nel,* பெ. (n.) நெல்வகை (விவசா.2); a kind of paddy.

**பாங்கு தூக்கிவை–த்தல்** *pāṅgu-tūkki-vai,* செ.கு.வி. (v.i.) வயலில் ஆட்டுக்கிடை வைப்பதற்கு முன் விரியோலை முதலியவற்றை வயலில் அமைத்தல்(நாஞ்.); to put up hut, etc, as a preliminary to the penning of sheep for manuring of field.

**பாங்கு பண்ணு–தல்** *pāṅgu-paṇṇu,* 5. செ.கு.வி. (v.i.) நேர்த்தியாக அணிதல்; to dress neatly.

[*பாங்கு¹ + பண்ணு–,*]

**பாங்கு பரிசனை** *pāṅguparišaṉai,* பெ. (n.) நன்னடை; good manners, gentle dress and behaviour.

[*பாங்கு + பரிசு → பரிசனை*]

**பாங்கு பாவனை** *pāṅgupāvaṉai,* பெ. (n.) *பாங்கு பரிசனை* பார்க்க; see *pāṅgu-parišaṉai.*

[*பாங்கு + skt. bhāvanā>* **த. பாவனை**]

**பாங்கு பிரி–த்தல்** *pāṅgu-piri-,* 4. செ. குன்றாவி. (v.t.) கிடை வைத்தபின் ஒவ்வொருவருக்குரிய ஆடுகளைத் தனித்தனியாய்ப் பிரித்தல்; to divide the respective sheep of shepherds who have jointly penned them up for manuring a field.

*[பங்குபிரி → பாங்குபரி]*

**பாங்குமம்** *pāṅgumam,* பெ. (n.) கருஞ்சீரகம்; black cumin. (சா.அக.).

மறுவ: பாங்குதம்

*[பாங்கு → பாங்குமம்]*



**பாங்கெடுத்துவை–த்தல்** *pāṅgeḍuttu-vai,* 4. செ.கு.வி. (v.i.) *பாங்குதூக்கி வை (நாஞ்)* பார்க்க; see *pāṅgutūkkivai.*

*[பங்கெடுத்துவை → பாங்கெடுத்துவை]*

**பாங்கோர்** *pāṅgōr,* பெ. (n.) நட்பினர்; friends. *"பாங்கோர் பாங்கினும்"* (தொல்.பொ.41)

*[பாங்கு[1] + பாங்கோர்]*

**பாச்சகி** *pāccagi,* பெ. (n.) தண்டுக்கீரை; amaranthus gangesticus. (சா.அக.).



**பாச்சல்** *pāccal,* பெ. (n.) *பாய்ச்சல்,* பார்க்க; see *pāyccal. "பாச்சன் மாத்திரம்"* (ஞானவா.சதவு.6)

*[பாய் → பாய்ச்சல் → பாச்சல்]*

**பாச்சா[1]** *pāccā,* பெ. (n.) வல்லமை; show of power. *"உன் பாச்சா என்னிடம் பலிக்காது"* (கொ.வ.)

*[பாய்ச்சல் → பாச்ச + பாச்சா]*

**பாச்சா[2]** *pāccā,* பெ. (n.) *பாச்சை*(நாமதீப்.266). பார்க்க; see *pāccai.*

**பாச்சாங்குள்ளி** *pāccāṅkuḷḷi,* பெ. (n.) விளையாட்டில் முறையின்றி, தருக்கஞ் செய்பவன்–ள்; one who makes unjust claims in a game.

**மறுவ.** வாச்சாங்குளி.

*[பாசாங்கு + கொள்ளி → பாச்சாங்குள்ளி]*

**பாச்சாங்குள்ளியடி–த்தல்** *pāccāṅkuḷḷi-y-aḍi,* 4. செ.கு.வி. (v.i.) விளையாட்டில் முறையின்றி தருக்கஞ் செய்தல்; to make unjust clam's in a game.

*[ பாச்சாங்குள்ளி + அடி –,]*

**பாச்சாவுருண்டை** *pāccā-v-uruṇḍai,* பெ. (n.) நச்சுக் கருப்பூர உருண்டை; naphthaline balls.

*[பாச்சை + உருண்டை → பாச்சாவுருண்டை]*

**பாச்சான்** *pāccāṉ,* பெ. (n.) **1.** திருகுக்கள்ளி; twist spurge. **2.** கொடிக் கள்ளி; creeping milk hedge. **3.** தும்பை இலை; leaf of leucus. (சா.அக.)



**பாச்சி[1]** *pācci,* பெ. (n.) தாய்ப்பால்; milk, mother's milk. "*பாச்சி சோச்சி*" (இராமநா.பாயி.)

**தெ.க.** பாசி, **ம.** பாச்சி

*[பால் → பாச்சி]*

[பாலை மழலையர் 'பாச்சி' என வழங்குப. (வைத்திய பரிபாடை);]

**பாச்சி[2]** *pācci,* பெ. (n.) பாசி; fishery in tanks or pools.

*[பாசி → பாச்சி]*

**பாச்சி[3]** *pācci,* பெ. (n.) *பாச்சிகை* பார்க்க; see *pāccigai.*

*[பாய்ச்சிகை → பாச்சி]*

**பாச்சி[4]** *pācci,* பெ. (n.) அலைவாய்க்கரை நோக்கி வரும் இருவேறலைகட்கிடையேயுள்ள நீர்பரப்பு (செங்கை.மீன.); water surface between two sea tides.

**பாச்சிக்கட்டை** *pācci-k-kaṭṭai,* பெ. (n.) *பாச்சிகை* பார்க்க; see *pāccigai.*

*[பாச்சி + கட்டை]*

**பாச்சிக்குத்தகை** *pācci-k-kuttagai,* பெ. (n.) *பாசிக்குத்தகை* பார்க்க; see *pāšikkuttagai.*

*[பாசி → பாச்சி + குத்தகை]*

**பாச்சிக்கை** *pāccikkai,* பெ. (n.) *பாச்சிகை* பார்க்க; see *pāccigai.*

*[பாச்சிகை → பாய்ச்சிகை → பாச்சிக்கை]*

**பாச்சிகா** *pāccigā,* பெ. (n.) பாலாட்டங்கொடி; soma plant of ancient fame. (சா.அக.).

மறுவ. சோமலதை

**பாச்சிகை** *pāccigai,* பெ. (n.) சூதாடு கருவி; dice.

**தெ.** பாசிக, **ம.** பாச்சிக, **க.** பாசிகெ

*[பாய்ச்சிகை → பாச்சிகை]*



**பாச்சியம்** *pācciyam,* பெ. (n.) **1.** பகுதி; part, share, portion, allotment. **2.** வகுக்கப் படுந்தொகை; dividend arith.

*[பாத்தியம் → பாச்சியம்]*

**பாச்சியமந்திரி** *pācciamandiri,* பெ. (n.) பிடாலவணம்; a kind of mineral salt with which bangles are made. (சா.அக.).

**பாச்சில் வேள் நம்பன்** *pāccil-vēḷnamban,* பெ. (n.) எட்டாம் நூற்றாண்டைச்சேர்ந்த புலவர்; a poet, in 8th c.

*[பாச்சில் + வேள் + நம்பன்]*

(இவருடைய இயற்பெயர் நம்பன். கல்வெட்டின் உதவியால் அறியப் பெறுபவர்களில் இவரும் ஒருவர். சோழ மண்டலத்தைச் சார்ந்த மழநாட்டின்கண் விளங்கும் திருப்பாச்சிலாச் சிரமமே இவரது ஊர். சுவரன் மாறன் என்னும் இரண்டாம் பெரும் பிடுகு முத்தரையனை இவர் பாடியிருக்கின்றார். இந்த முத்தரையன் திருக்காட்டுப் பள்ளியின் பக்கத்திலுள்ள நியமம் என்ற ஊரில் பிடாரியார் கோயிலொன் றேற்படுத்தி, அக்கோயிலில் உள்ள தூண்களில், தன் மீது பாடிய பாடல்களைக் குறித்திருப் பதோடு பாடிய புலவர்களின் பெயர்களையும் குறிப்பிட்டிருக்கின்றான். அக்கோயில் சிதைந்து போனபடியால் அதிலுள்ள தூண்களையும், கற்களையும் திருக்காட்டுப் பள்ளிக்கருகிலுள்ள செந்தலை என்னும் ஊரில் கொண்டு சென்று ஒரு சிவன் கோவில் கட்டினார்கள். அத் தூண்களுள் ஒன்றில் நம்பன் பாடிய பாடல்கள் உள்ளன. பாடல்கள் யாவும் கட்டளைக் கலித்துறைகளாகவும் வெண்பாக்களாகவும் காணப்படுகின்றன.)

**பாச்சிலாச் சிரமம்** *pāccilā-c-cirāmam,* பெ. (n.) திருவாசி எனப்படும், பாடல் பெற்ற ஊர்; a place name in Tanjore Dt.

(இவ்வூர் தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ளது. 'பாச்சில் கூற்றத்து ஆச்சிராமமாதலின் பாச்சில் ஆச்சிரமம்' என்று வழங்கப்படுகிறது என்ற கருத்து அமைகிறது. ஆச்சிரமம் முனிவர்களின் இருப்பிடத்தைக் குறிப்பிடும் நிலையில் இப்பெயர் அமைந்ததோ எனத் தோன்றுகிறது. சம்பந்தர், சுந்தரர் பாடிய கோயில் இங்கு உள்ளது.

"அன்னமாம் பொய்கை சூழ் தரு பாச்சிலாச் சிராமத் துறை" (சுந்.14–2)

"பொன் விளை கழனிப்
புள்ளினஞ் சிலம்புமாம் பொய்கைப்
பாச்சிலாச் சிராமத்து" (சுந்,14–4)

"மஞ்சடை மாளிகைசூழ் தருபாச்சிலாச் சிராமத்துறைகின்றவன்" (44–3) என்கின்றார் சம்பந்தர்.)

**பாச்சிவரி** *pācci-vari,* பெ. (n.) *பாசிவரி* பார்க்க; see *pāši-vari.*

*[பாசி → பாச்சி + வரி]*

**பாச்சுத்தி**[1] *pāccutti,* பெ. (n.) *பாற்சொற்றி* பார்க்க; see *pār-coṟṟi.*

*[பாற்சொற்றி → பாச்சுத்தி]*

**பாச்சுத்தி**[2] *pāccutti,* பெ. (n.) எருக்கு முதலான செடிகளிலிருந்து பாலெடுத்து இறுக வைத்த ஒரு பொருள்; the viscid juice of madar and other plants collected and evaporated in shallow dish in the sum or in the shade. (சா.அக.).

**மறுவ.** பாச்சொற்றி, பாற்சோற்றி, பாச்சோந்தி.

**பாச்சுருட்டி** *pā-c-curuṭṭi,* பெ. (n.) நெய்த ஆடையைச் சுருட்டும் நெசவுத் தறிமரம் (யாழ்.அக.); weaver's beam, a revolving bar of wood round which the woven cloth is wound.

*[பாய்ச்சுருட்டி → பாச்சுருட்டி]*

பா + சுருட்டி

**பாச்சுற்றி** *pā-c-cuṟṟi,* பெ. (n.) *பாச்சுருட்டி* பார்க்க; see *pā-c-curuṭṭi.*

**பாச்சை** *pāccai,* பெ. (n.) **1.** புத்தகப் பூச்சி; silver fish. **2.** தத்துப்பூச்சி வகை; a house hold pest. **3.** சுவர்க்கோழி; cricket. **4.** கரப்பு; cockroach.

*[பாய்ச்சல் → பாச்சை]*

**பாச்சையுருண்டை** *pāccāi-v-uruṇḍai,* பெ. (n.) பாச்சை முதலிய பூச்சிகள் துணி, தாள் முதலியவற்றை அரித்து விடாமல், தடுக்கப் பயன்படுவதும் வெள்ளை நிறமுடையதும் ஒருவகை நெடி உடையதாக இருப்பதும் வேதிப் பொருளால் செய்யப்பட்டதுமான சிறிய உருண்டை; naphthaline ball

*[பாச்சை + உருண்டை]*

**பாச்சொற்றி** *pāccoṟṟi,* பெ. (n.) *பாற்சொற்றி* பார்க்க; (சா.அக.); a plant, see *pāccoṟṟi*

ம: பாச்சொற்றி

*[பாற்சொற்றி → பாச்சொற்றி]*

**பாச்சொற்றிப்பாலை** *pāccoṟṟi-p-pālai,* பெ. (n.) *பாற்சொற்றி* பார்க்க; see *pāṟcoṟṟi.*

*[பாற்சொற்றி + பாலை]*

**பாச்சொறி** *pāccoṟi,* பெ. (n.) *பாற்சொற்றி* பார்க்க; see *pāṟcoṟṟi.*

*[பாற்சொற்றி → பாற்சொறி]*

**பாசக்கட்டு** *pāśa-k-kaṭṭu,* பெ. (n.) பிறப்பிற்குக் காரணமான **உயிர்த்தொடர்பு**; the bondage of the soul resulting **in births.**

*[பாசம் + கட்டு]*

**பாசக்கயிறு** *pāša-k-kayiṟu,* பெ. (n.) சுருக்குக் கயிறு; rope with a noose, a weapon of yama.

*[பாசம் + கயிறு]*



**பாசகம்[1]** *pāšagam,* பெ. (n.) இரைப்பைக்கும் சிறுகுடற்கும் நடுவில் இருப்பதும், செரிமானத்திற்குச் கரணியமாக இருப்பதும், உடலுக்கு வெப்பத்தை தந்து உணவுச் சாரத்தை மற்ற கழிந்த உணவினின்றும் பிரித்து உடம்பிற்கு ஊட்டத்தைக் கொடுப்பதாகவும் உள்ள மூலநெருப்பு (மூலாக்கினி); gastric fire which is situated between the stomach and the small intestines which are the seats of fire of digestion. It assists digestion and imparts heat to the whole body and separates the nourishing juice (chyle) from other excrementitious substances (dejecta) (சா.அக.)

**பாசகம்[2]** *pāšagam,* பெ. (n.) **1.** சீரகம்; seed. **2.** பெருங்கொம்மட்டி; cucumis colocynthis. (சா.அக.)

**பாசகம்[3]** *pāšagam,* பெ. (n.) வகுக்குமெண்; divisor.

*[பாகசம் → பாசகம்.]*

**பாசகரன்** *pācakaran,* பெ. (n.) பாசத்தைக் கையிலுடைய கூற்றுவன் (யாழ்.அக.); yama, as holding the noose of death in his hand.

*[பாசம் + skt. kara> த. கரன்]*

**பாசகன்** *pāšagan,* பெ. (n.) சமையற்காரன் (பதிற்றுப்.67, 16, அரும்.); cook.

**பாசகி** *pāšagi,* பெ. (n.) வெற்றிலை; betel leaf. (சா.அக.)

**பாசகுசுமம்** *pāša-kušumam,* பெ. (n.) இலவங்கம்(தைலவ. தைல.64); clove tree.

மறுவ. கிராம்பு

**பாசசாலம்** *pāša-šālam,* பெ. (n.) உயிர்களின் பாசத்தொகுதி; the innumerable entanglements of the soul.

*[பாசம் + skt. jālam> த. சாலம்]*

**பாசஞானம்** *pāša-ñānam,* பெ. (n.) 1. சொல்லாலும் மனத்தாலும் கலைகளின் அறிவாலும் அறியும் அறிவு; (saiva) knowledge obtained through the senses and the mind. 2. அறியாமை; spiritual ignorance.

*[பாசம் + skt. gnānam> த.ஞானம்]*

**பாசடகு** *pāšadagu,* பெ. (n.) பசியகீரைவகை; a kind of edible green. *"பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்"* (புறநா.62–14)

**பாசடம்** *pāšadam,* பெ. (n.) வெற்றிலை; betel leaf.

*[பாசடை → பாசடம்]*



**பாசடும்பு** *pāšadumbu,* பெ. (n.) பசிய அடம்பு என்னும் படர்கொடி; hare leaf. *"ஏர்கொடிப் பாசடும்பு பரியஊர்பு இழிபு"* (ஐங்குறு.101–2) *"ஆய்கொடிப் பாசடும்பு அரிய ஊர்பிழிபு"* (அகநா.330–14)

*[பசுமை + அடம்பு → அடும்பு]*

**பாசடை** *pāšadai,* பெ. (n.) பசியஇலை; green leaf. *"பாசடை நிவந்த கணைக்கா னெய்தல்"* (குறுந்.9) *"வள்ளுகிர் கிழிந்த வடுவாழ் பாசடை"* (சிறு.பாண்.182) *"நெய்தற் பாசடை புரையும் அஞ்செவி"* (நற். 47–3) *"களிற்றுச் செவி யன்ன பாசடை மயக்கி"* (குறுந்.246–2) *"பாசடை நிவந்த பனிமலர்க் குவளை"* (ஐங்குறு.225–2)

**பாசத்தளை** *pāša-t-talai,* பெ. (n.) பாசக்கட்டு பார்க்க; see *pāša-k-kattu.* *"பற்றென்னும் பாசத்தளையும்"* (திரிகடு. 22.)

*[பாசம் + தளை]*

**பாசத்தன்** *pāšattan,* பெ. (n.) *பாசதரன்* பார்க்க; see, *pāsataran.*

*[பாசம் + அத்து + அன்]*

**பாசதரன்** *pāsa-taran,* பெ. (n.) 1. பாசக்கயிற்றைக் கையிலுடைய காலன்; one holding the noose. yama. 2. வருணன்; varuna.

*[பாசம் + skt. dharan> த. தரன்]*

**பாசதரிசனம்** *pāša-tarišaṉam,* பெ. (n.) *பாசஞானம்* பார்க்க; see *pāša-ñāṉam.* உலகவழிபாடு (சி. சி. அ: உ அ. நிரம்ப.)

*[பாசம் + skt. dharshan> த. தரிசனம்]*

**பாசநாசம்** *pāša-nāšam,* பெ. (n.) குருவின் தீக்சையால் ஆணவம், கன்மம், மாயையென்ற மலங்களை நீக்குகை; (siva.) annihilation of the three evil principles in the soul through the process of tikkai by a gun.

*[பாசம் + நாசம்]*

**பாசநீக்கம்** *pāša-nikkam,* பெ. (n.) மும்மலங் களிலிருந்து விடுபடுகை; (saiva.) emancipation from mummalam, the three bonds binding the soul.

*[பாசம் + நீக்கம்]*

**பாசபந்தம்** *pāša-pandam,* பெ. (n.) 1. *பாசக் கட்டு* பார்க்க; see *pāša-k-kaṭṭu.* *"பாசபந்தத்தினாலே* ***சீவனாம்"*** (தசகா. ஆன்மசு. 2.) 2. ***பாசக்கயிறு*** பார்க்க ; see *pāša-k-kayiṟu.*

*[பாசம் + பந்தம்]*

**பாசபந்தர்** *pāša-pandar,* பெ. (n.) மாயைத்தொடர்புள்ளவர்; those bound by the entanglements of māyai.

*[பாசம் + பந்தம் → பந்தர்]*

**பாசபந்திகர்** *pāša-pandigar,* பெ. (n.) *பாசபந்தர்* பார்க்க; see *pāšapandar.*

**பாசபாணி** *pāša-pāṇi,* பெ. (n.) (பாசத்தைக் கையில் கொண்டோன்) one holding the noose in hand. 1. சிவன்(யாழ்.அக.); siva. 2. வருணன்; varuna. 2. இயமன்; yama. 2. விநாயகன்(யாழ்.அக.); vinayaka.

*[பாசம் + பாணி]*

**பாசபெத்தர்** *pāša-pettar,* பெ. (n.) *பாசபந்தர்* பார்க்க; see *pāšapandar.*

*[பாசம் + பெற்றார்–பெத்தர்]*

**பாசம்¹** *pāšam,* பெ. (n.) 1. கயிறு; cord. 2. கயிறு வடிவான படைக்கல வகை. noose, snare, as a weapon. *"கட்டாதுன்னையென் கடுந்தொழிற் பாசம்"* (மணிமே. 22, 71.) *"கைக்கொள் பாசத்துக் கைப்படு வோரென"* (சிலப். 5–132) *"தொடுத்தபா சத்துத் தொல்பதி நரகரை"* (மணிமே. 1–23) 3. படையணிவகுப்பு வகை; a kind of battle-array. *"பாச நாமமணியினின்ற வீரரோடு பற்றினான்"* (பாரத. பதினான். 18.); 4. தளை; tie, bondage. *"பாசத்தூளிட்டு விளக்கினும்"* (நான்மணி. 99.) 5. மும்மலம்; (saiva.) bond, or the obstructive principle which hinders the souls form finding release in union with siva, one of the three patārttam. *"பதிபசு பாசமென"* (திருமந். 115.) 6. அன்பு; love. *"பாசமாகிய பந்து கொண்டாடுநர்"* (சீவக. 1320.) 7. பற்று; attachment. *"மனைப்பாசங் கைவிடாய்"* (நாலடி. 130.) 8. பத்தி; devotion. *"பாசம் பரஞ்சோதிக் கென்பாய்"* (திருவாச. 7, 2) 9. தையல் (பிங்.); sewing, stitching. 10. கவசம்; (பிங்.); mail coat or mail. 11. ஊசித்தொளை (பிங்.); eye of a needle. 12. நூல் (சூடா.); thread. 13. சுற்றம்; friends and relations. *"பாசம் பசிப்படியைக் கொளலும்"* (திரிகடு.20.) 14. சீரகம்(மலை).; cumin.

*[பசை → பாசம்]* *(வ.மெ.வ.42.)*

**பாசம்²** *pāšam,* பெ. (n.) பேய்; demon, vampire *"பலிகொண்டு பெயரும் பாசம் போல"* (பதிற்றுப் 71, 23.).

*பசை → பாசம் பாசு = பச்சூன்*

**பாசம்** சொல்மூலம்: பய் → பாய் → பாய் + அம் → பாயம் → பாசம். சொற்பொருள்கள். 1. அன்பு. 2. பற்று. 3. தளை. 4. கயிறு. 5. தையல். 6. சுற்றம். பய்: பசுமைக் கருத்து மூலவேர். பசுமைக் கருத்தின் கிளை வளர்ச்சியாக ஒட்டுதல் கருத்து நிரம்பி, அதனின்றும் பலபடியான சொல்லாக்கங்கள் செழிப்பெய்தின. பசுமையும் ஈரத்தன்மையும் உடைய ஒன்றே ஒட்டுறவுக்கு இயல்வதாயும், வறட்சியும் உலர்ச்சியும் உடைய ஒன்று, இயைவுக்கு இயலாததாகவும் உள்ளதை ஈண்டுக் கருத்தில் கொள்ள வேண்டிய உண்மைகளாம். பாயம் = விருப்பம், விழைவு, அன்பு, புணர்ச்சி விருப்பம். பாயம் = விருப்பம் ''பளிங்கு சொரிவு அன்ன பாய்சுனை குடைவுழி நளிபடு சிலம்பில் பாயம் பாடி'' (குறிஞ்.57–58) (நச்.உரை: பாயம்பாடி = மனத்துக்கு விருப்பமானவற்றைப்பாடி.)

பாயம் = புணர்ச்சிவிருப்பம் "ஈர்ஞ்சேறு ஆடிய இரும்பல்குட்டிப் பன்மயிர்ப் பிணவொடு பாயம் போகாது" (பெரும்.341–342.) (நச். உரை: ஈரத்தையுடைய, சேற்றை அளைந்த கரிய பலவாகிய குட்டிகளையுடைய, பலவாகிய மயிர்களையுடைய பெண்பன்றிகளுடனே, புணர்ச்சியைக் கருதும் கருத்தாற் போகாமல்....) பாயம் → பாசம் = அன்பு, வேட்கை. ஒ.நோ: தேயம் → தேசம். நேயம் → நேசம் ஈயல் → ஈசல் நெயவு → நெசவு. பாசம் = அன்பு. "பாசமாகிய பந்து கொண்டாடுநர்" (சீவக.1320.) பாசம் = பற்று "மனைப்பாசம் கைவிடாய்" (நாலடி.130.)

பாசம் : பத்திமை. ''பாசம் பரஞ்சோதிக்கென்பாய்'' (திருவாச.7:2) தன்னைப் பொருந்திய அன்புடைய சுற்றத்தினர் 'பாசம்' என்ற சொல்லாலேயே குறிக்கப்பெற்றனர். (பாசம்=சுற்றம்.) "ஆசை பிறகண் படுதலும், பாசம் பசிப்ப மடியைக் கொளலும்'' (திரிகடு:20) அன்பையும் விழைவையும் வேட்கையையும் குறித்தவாறு வளர்த்து பயிலப் பெற்றதாகிய, 'பாசம்' என்னும் சொல் தமிழ்மொழியில் மட்டுமே தோன்றிய ஒன்றாகும். தொடர்ந்த பரவலான வழக்காற்றிலும் உள்ளதாகும். இம்மேற்கண்ட பொருள்களையுடைய "பாசம்" என்னும் தூய செந்தமிழ்ச்சொல், வடமொழியில் அறவேயில்லை. தமிழ்மொழிப் புலவர்களுக்கும் பொதுமக்களும் உற்ற வடமொழி மயக்கமும், தன்னுணர்வின்மையும் அச்சொல்லை வடமொழியென்றே பிழைபட எண்ணிப் பயிலச் செய்துவிட்டன.

'பய்' என்னும், ஒட்டுதல், ஒன்றுதல் கருத்து மூலவழியாகப் பிணித்தல் கருத்தும், கட்டுதல் கருத்தும் வளர்ந்தன. ''பாசம்'' என்பது ஒன்றைப் பற்றிப் பிணிப்பதாகிய கயிற்றுக்கும் ஆகி வந்தது. பாசம் = கயிறு. "விளம்பழம் கமழும் கமஞ்சூற்குழிசிப் பாசம் தின்ற தேய்கால் மத்தம்" (நற்.12:1–2) (கருத்து: கயிறு ஆடித் தேய்த்தலாலே தேய்ந்த தண்டினை உடைய பெருமத்து....) பாசத்தளை: பற்றிப் பிணிக்கும் தளைக்கயிறு. "பற்று என்னும் பாசத்தளையும், பலவழியும் பற்று அறாது ஓடும் அவாத்தேரும்" (திரிகடு:22:1–2.) நமனின் கையகத்திருப்பதாகக் கருதப்பெற்ற கயிறு, 'பாசம்' என்னும் கிளைப் பொருண்மைச் சொல்லோடு பிணிக்கப் பெற்று ஓர் இருபெயரொட்டுச் சொல்லாகப் 'பாசக்கயிறு' என்றும் பயிலப் பெற்றது. அச்சவுணர்ச்சியால் பேதையர் உள்ளத்தில் தோன்றிய 'பேய்' என்னும் உருவம் உயிரைக்கயிற்றில் பிணித்துக் கவர்வது என்ற அடிப்படையில் 'பாசம்' என்ற சொல்லாலேயே அப்பேயும் குறிக்கப் பெற்றது.

பாசம் = பேய் ஒ.நோ."பலிகொண்டு பெயரும் 'பாசம்' போல'' (பதிற்.71:23) பாசம் = பாசக்கயிறு. 1.''கைக்கொள் பாசத்துக் கைப்படுவோர்" (சிலம்பு.5:132) 2. கறைகெழு பாசத்துக்கையகப் படுதலும் பட்டோன் றவ்வை படுதுயர் கண்டு கட்டிய பாசத்துக் கடிது சென்றெய்தி'' (சிலம்பு.15:79) 3.''கட்டா துன்னையென் கடுந்தொழிற் பாசம்'' (மணிமே.22:71) பிணிக்கும் கயிற்றைக் குறித்த "பாசம்" என்ற சொல், வடமொழியில் "pāsa" எனத் திரிந்து. "பாசம்" என்ற செம்மையான வடிவம் அம்மொழிக்கண் இல்லை. வடமொழி அகராதிகளில் "pāsa" என்ற சொல்லுக்கு – வலை, கண்ணி, சுருக்கு, கயிறு, தொடரி,

அதனைக் கட்டுவிப்பது என்பதான பொருள்களையே சுட்டிச் செல்கின்றனர். அச்சொல்லுக்கு நேரே, –அன்பு, விழைவு, விருப்பம், அன்புறவு என்ற தமிழ்ப்பொருள் எதுவும் குறிக்கப் பெறவேயில்லை. பிணித்துத் தளைக்கும் கயிறாகிய "பாசம்" என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபுகளை, அதன்வழி வடபாலியர் வளர்த்துக் கொண்ட கிளைக் கருத்துக்களுடன் கீழ்வரும் பட்டியலில் காணலாம்.

பாசம்> (sanskrit) pāsa = noose, pāsaka (Lex,) pāsi = rope (கயிறு) pāsika = leather strap on plough Pali: pāsa = tie Pāsiya = little do. katei: Pōs = trap. (கண்ணி) Khohistānī: Pas = noose (சுருக்கு, முடிச்சு) Nepali: Pāso = net Oriya: Pāsa = net Bengāli: Pās = noose Mythili: Pās = net (வலை) Kes-Pās = lock of hair Hindi: Pās, Pāsā = noose. Old Gujarāti: Pāsu =noose. Konkanī: Pāsu Sinhalese: Pāsa = net.

**பாசம்³** *pāšam,* பெ. (n.) கொங்கணவர் நூலிற் சொல்லியபடி செய்யப் பெறும் ஒரு வகைக் குருமருந்து; a universal medicine of high potency used for the preparation of several kinds of medicines. (சா.அக.)

*[பசை → பாசம்]*

**பாசமறுக்கும் பருமலை** *pāšamarukkum parumalai,* பெ. (n.) நாகமலை; mountain containing zinc ore. (சா.அக.)

**பாசமாலை** *pāša-mālai,* பெ. (n.) கழுத்தணி வகை; a kind of neck-ornament. *"பாசமாலை ..... யொன்றிற் கோத்த தாலி பதினேழு"* (s.i.i.iii. 225)

*[பாசம் + மாலை]*

**பாசமீதல்** *pāšamiīdal,* பெ. (n.) 1. இதளியக் குளிகைக்கு உயிர் கொடுத்தல்; to animate or give life to consolidated mercury ball. 2. அன்பு காட்டல்; to show affection or kindness. (சா.அக.)

*[பாசம் + ஈதல்]*

**பாசமுடத்தாசன்** *pāšamuḍatāšaṉ,* பெ. (n.) முயல்; rabbit. (சா.அக.)

**பாசமோசனம்** *pāca-mōcaṉam,* பெ. (n.) பாச நீக்கம் பார்க்க; see pasavimōsanam. *"பலவித மாசான் பாசமோசனந் தான் பண்ணும் படி"* (சி. சி. 8, 3.)

*[பாசம் + மோகனம் → மோசம்]*

**பாசரிவாள் கத்தி** *pāšarivāḷ-katti,* பெ. (n.) ஆக்கரிவாள்; a kind of sickle.

மறுவ: பாசுகராகத்தி

*[பாசம் + அரிவாள்கத்தி]*



**பாசருகம்** *pāšarugam,* பெ. (n.) அகில்(மலை.); egle-wood.

**பாசல்** *pācal,* பெ. (n.) *பாச்சி* (செங்கை.மீனவ.) பார்க்க; see *pācci.*

**பாசலம்** *pāšalam,* பெ. (n.) **1.** நெருப்பு; fire. **2.** காற்று; air, wind.

**பாசவர்[1]** *pāšavar,* பெ. (n.) இலையமுதிடுவார்; one who give vegetarian food.

**பாசவர்[2]** *pāšavar,* பெ. (n.) வெற்றிலையிடு வோர்; dealers in betel leaves. ***"பாசவர் வாசவர் மைந்நிண விலைஞரோடு"*** (சிலப். 5, 26.)

**பாசவர்[3]** *pāšavar,* பெ. (n.) **1.** ஆட்டிறைச்சி விற்கும் வணிகர்; dealers in mutton. ***"பாசவ ரூனத் தழித்த வானிணக் கொழுங்குறை"*** (பதிற்றுப். 21, 9) **2.** இறைச்சி விற்போர் (சிலப். 5, 26, உரை); dealers in meat.

*[பாசு → பாசவன்]* மு.தா.210

**பாசவர்[4]** *pāšavar,* பெ. (n.) கயிறுதிரித்து விற்போர் (சிலப். 5,26, உரை); those who make and sell ropes. ***"பாசவர்வாசவர்"*** (சிலப். இந்திர. 26.) (கயிறு திரித்துவிற்பாரும் பச்சிறைச்சி சூட்டிறைச்சி விற்பாருமாம் என்பர் சிலப்பதிகார உரை யாசிரியர். (த.சொ.அக.)

**பாசவல்** *pāšaval,* பெ. (n.) **1.** செவ்வியவல்; rice obtained from fried paddy. ***"பாசவ லிடித்த கருங்கா முலக்கை"*** (குறுந். 238–1) ***"பாசவ லிடிக்கு மிருங்கா முலக்கை"*** (அகநா. 141–18.) a preparation of rice obtained by pestling fried paddy. ***"பாசவல் முக்கி"*** **2.** பசிய விளை நிலம்; green field. ***"பாசவற் படப்பையாரெயில் பலதந்து"*** (புறநா. 6)

**பாசவிமோசனம்** *pāša-vimōcaṉam,* பெ. (n.) மலபந்தம் நீங்குகை; realease of the soul from worldly bonds. *பாசமோசனம்* பார்க்க; see *pasamōsaṉam.*

*[பாசம் + skt.vi-mōcaṉa› த. விமோசனம்]*

**பாசவினை** *pāša-viṉai,* பெ. (n.) பந்தத்திற்கேது வாகிய வினை; ***"பாசவினையை பறித்து நின்று"*** (திருவாச. 9, 4.) karma, causing bondage of souls.

*[பாசம் + வினை]*

**பாசவீடு** *pāša-vīḍu,* பெ. (n.) பாசநீக்கம்; detachment of affection. ***"பாச வீடும் சிவப்பேறு மென"*** (சி. போ. பா. 10, பக். 399)

*[பாசம் + வீடு]*

**பாசவேடம்** *pāšavēḍam,* பெ. (n.) கருந்தகரை; black species of foetidcassia. (சா.அக.)

**பாசவைராக்கியம்** *pāša-vairākkiyam,* பெ. (n.) புவிவெறுப்பு, உலகவெறுப்பு (யாழ்.அக.); determined hatred of worldly attachment.

*[பாசம் + வயிரம் → vairāgya › த. வயிராக்கியம்]*

**பாசளை** *pāšaḷai,* பெ. (n.) குன்றி; wild licorice. (சா.அக.)



**பாசறவு[1]** *pāšaṟavu,* பெ. (n.) பற்றறுகை (ஈடு. 5, 3, 1.); absence of worldly attachment.

*[பாசம் + அறு → அறவு]*

**பாசறவு[2]** *pāšaṟavu,* பெ. (n.) **1.** நிறத்தினழிவு; loss of colour or complexion. *"பாசற வெய்தி"* (திவ். திருவாய். 5, 3. 1.); **2.** துன்பம் (துக்கம்); (ஈடு. 6, 8, 7.) sorrow.

*[பாசம் + அறு → அறவு]*

**பாசறை[1]** *pāšaṟai,* பெ. (n.) **1.** பகைமேற் சென்ற படை தங்குமிடம்; encampment or tent of of an invading army; *"மாறு கொள்வேந்தர்; பாசறை யார்க்கே"* (பதிற்றுப். 83, 9.); warcamp. **2.** பசிய இலையாற் செறிந்தமுழை;bushy cave, cavern. *"மரகதப் பாசறை ... பணிமாமணி திகழும்"* (தஞ்சைவா. 130) **3.** மர வகை (யாழ்.அக.); a kind of tree. **4.** மணியாசப் பலகை(வின்); a piece of board for smoothing plaster.

*[பசு(மை)→பாசு + அறை ]*

**பாசறை[2]** *pāšaṟai,* பெ. (n.) துன்பம்; (திவா.) suffering, distress, affliction.

**பாசறை[3]** *pāšaṟai,* பெ. (n.) **1.** பசிய இலை களால் வேயப்பட்ட சிறுவீடு; hut made from green leaves. *"பாசறை முழுது மொரு பெருங் கடவுட் பரிமள மொல் லெனப்பரப்பி"* (பாரத. குருகுல. சாக.) **2.** பாடிவீடு; camp. *"பாசறை யல்லது நீ யொல்லாயே"* (புறநா–நக)

மேல் கூரை, சுற்றிலும் மறைப்பு முதலியன உள்ள பாசறைகளும் மறைப்பு இல்லாத பாசறைகளும் உண்டு. பாசறை ஓர் ஊர் போலவே அமைக்கப் பெறும்; பாடிவீட்டினின் றும் மாறுபட்டது. பாடிவீடு படைகள் தங்கும் நிரந்தரமான கட்டடம்; பாசறை தற்காலிகத் தங்குமிடம். படைவீடெனவும் தமிழில் வழங்கும்.

*"மாறு கொள்வேந்தர் பாசறையோர்க்கே"* (பதிற்றுப் பத்து. 83, 9.)

*"அரசிருந்து பணிக்கு முரசுமுழங்கு பாசறை"* (முல். 79.)

*"பருந்துபறக் கல்லாப் பார்வற் பாசறை"* (மது. 231)

*"பலரொடு முரணிய பாசறைத் தொழிலே"* (நெடு. 1880

*"தெறலருந் தானைப் பொறையன் பாசறை"* (நற். 18–5)

*"போருடை வேந்தன் பாசறை"* (ஐங். 427–3)

*"மரங்கொன் மழகளிறு முழங்கும் பாசறை"* (பதிற்று. 16–8.)

*"ஓடாப் பூட்கை வேந்தன் பாசறை"* (அகம். 100–8)

*"கேட்டியோ பூட்கை வேந்தன் பாசறை"* (புறம். 289–8)

*"பகைப்புலம் புக்குப் பாசறை யிருந்த"* (சிலப். 26–180.)

*"பரிநிமிர் தானையான் பாசறை நீர்த்தே* (பரி. 19–35)

**பாசறை நிலை** *pāšaṟai-nilai,* பெ. (n.) பகை வேந்தர் பணிந்தொடுங்கவும் வெற்றி வேந்தன் அவரிடத்தை விட்டு நீங்கானாய்ப் பாசறையில் தங்குதலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 3. 21.); theme of a victorious king continuing in war-camp even after the surrender of his enemies.

*[பாசறை + நிலை]*

(மதிக்குடைக்கீழ் வழிமொழிந்து
மன்னரெலாம் மறந்துரப்பவும்
பதிப்பெயரான் மறவேந்தன் பாசறை
யிருந்தன்று (பு.வெ.கொளு.3:21.)

("கரும்பொடு காய்நெற் கனையெரி
யூட்டிப் பெரும்புனல் வாய்திறந்த
பின்னும் – சுரும்பின் தொகை மலிந்த
தண்குவளைத் தார்மலரான்
பகைமெலியப் பாசறையுளான்")
(பு.வெ.வெண்பா.3:21.)

**பாசறை முல்லை** *pāšarai-mullai,* பெ. (n.) பாசலறையில் தலைமகன் தன் தலைவியை நினைக்கும் புறத்துறை(தொல். பொ. 76உரை.); a theme in which a hero thinks of his beloved when absent from her in war-camp.

*[பாசறை + முல்லை]*

**பாசன்** *pāšan,* பெ. (n.) 1. சீவான்மா; (சது.); the soul, as subject to births and mundance attachments. 2. இயமன்; (நாமதீப. 86.) yama. 3. வருணன்; (நாமதீப. 82.) varvna. 4. சிவபெருமான்; (யாழ்.அக.) siva.

*[பாசம் → பாசன்]*

**பாசனக்கால்** *pāšana-k-kāl,* பெ. (n.) நிலங் களுக்குப் பாயும் நீர்க்கால் (இ.வ.); irrigation channel.

*[பாசனம் + கால்]*

**பாசன பேதி** *pāšana-bēdi,* பெ. (n.) செப்பு நெரிஞ்சில்; a thistle with a red flower. (சா.அக.)

*[பாசநவேதி → பாசனபேதி]*

**பாசனம்**[1] *pāšanam,* பெ. (n.) 1. வெள்ளம்; flood. *"இடும்பை யென்னும் பாசனத்தழுந்து கின்றேன்"* (தேவா. 955, 9); 2. நீர்ப் பாய்ச்சல்; irrigation. 3. வயிற்றுப்போக்கு; diarrhoea.

*[பாய் → பாயனம் → பாசனம்]*

**பாசனம்**[2] *pāšanam,* பெ. (n.) 1. ஏனம்; vessel. *"மணிப்பாசனத் தேந்தி"* (பெரியபு. ஏயர்கோ. 35.); 2. உண்கலம்; (பிங்.); dish or plate for eating. 3. மட்பாண்டம்; mud vessel. 4. மரக் கலம்; boat. *"பத்தியான பாகனம்"* (திவ். திருச்சந். 100.) 5. அடிப்படை; support, basis. *"பொய்க் கெல்லாம் பாசனமாய்"* 6. தங்குமி டம்; receptacle. *"பிரேமபாசனம்"* 7. சுற்றம்; relations, kindred. *"பாசன மன்னவர் பாங்கர் சுற்றிட"* (கந்தபு. சிங்கமு. 8.) 8. மீட்பு (யாழ்.அக.); deliverance.

*[பாசம் → பாசனம்]*

**பாசனம்**[3] *pāšanam,* பெ. (n.) 1. பங்கு (யாழ்.அக.); share. 2. பிரிவுக்கணக்கு (யாழ்.அக.); (arith.) division.

**பாசனம்**[4] *pāšanam,* பெ. (n.) 1. நெருப்பு; fire. 2. மருந்து வகை (யாழ்.அக.); a medicine. 3. புளிப்பு; sourness.

**பாசனாங்கம்** *pāšanāngam,* பெ. (n.) கற்பகமரவகை (தக்காயகப்.757,உரை.); a celestial tree, one of karpaga-taru.

**பாசனி** *pāšani,* பெ. (n.) 1. கடுக்காய்; galnut. 2. செரிக்கச் செய்யும் மருந்து; any medicine which aids or stimulates digestion. (சா.அக.)

**பாசாங்கடி-த்தல்** *pāšāngaḍi,* 4. செ.கு.வி. (v.i.) போலியாக நடித்தல்; to dissemble, feign innocence.

*[பாசாங்கு + அடி –,]*

**பாசாங்கு** *pāšāngu,* பெ. (n.) 1. போலிநடிப்பு; dissimulation, hypocrisy, pretence, humbug. 2. வஞ்சகம்; trickery, deception. *"பாக்குக் கொடுக்கு மந்தப் பாசாங்கோ"* (பணவிடு.315).

*[பாய் → பாய்ச்சல் → பாச்சல் → பாச்சம் (ஒ.நோ.) நீச்சல் → நீச்சம் பாச்சல் காட்டுதல் → பாச்சங்காட்டுதல் = பாய்வது போல் மெய்ப்பாடு செய்து பாயாமல்*

*ஏமாற்றுதல். பாச்சாங்காட்டுதல் → பாச்சாங்கு → பாசாங்கு = ஒன்றைச் செய்யாமலே செய்வதுபோல் ஏமாற்றுதல்]*

**பாசாங்குக்கள்ளி** *pāšāṅgu-k-kaḷḷi,* பெ. (n.) *பாசாங்குக்காரி* பார்க்க; see *pāšāṅgu-k-kāri.*

*[பாசாங்கு + கள்ளி]*

**பாசாங்குக்காரன்** *pāšāṅgu-k-kāraṉ,* பெ. (n.) பாசாங்கு செய்வோன்; hypocrite, dissembler.

*[பாசாங்கு + காரன்]*

**பாசாங்குக்காரி** *pāšāṅgu-k-kāri,* பெ. (n.) பாசாங்கு செய்பவள்; a hypocritical woman.

*[பாசாங்கு + காரி]*

**பாசாங்குசதரன்** *pāšāṅguša-daraṉ,* பெ. (n.) கணபதி (பிங்.) (பாசத்தையும் அங்குசத்தையும் தாங்கியிருப்பவன்); Geṉēša, armed with a noose and an elephant - goad.

*[பாசம் + அங்குசம் +* skt. dhara> *த. தரன்]*

**பாசாடிணபேதி** *pāšāṇapēdi,* பெ. (n.) 1. நெருஞ்சி; cow's thorn. 2. சிறு நெருஞ்சி; red cow thorn.

**பாசாளைத்திருக்கை** *pāsāḷai-t-tirukkai,* பெ. (n.) திருக்கை மீன்வகையுள் ஒன்று; a kind of tirukkai fish.

*[பாசாளை + திருக்கை]*

**பாசி[1]** *pāši,* பெ. (n.) 1. பசுமையுடையது; that which is green. "*பாசிப் பாசத்து*" (சீவக.1649). 2. நீர்ப்பாசி; moss, lichen, duckweed, "*பாசியற்றே பசலை*" (குறுந்.399) 3. கடற்பாசி (வின்.); seaweed. 4. நெட்டி, 5 (மலை) பார்க்க; see, netti. sola pith. 5. பூஞ்சாளம் (வின்.); saprophyte, mouldiness due to dampness. 6. *சிறு பயறு* (பிங்.) பார்க்க; see *ciru payaru* green gram. 7. குழந்தைகளின் கழுத் தணிக்கு உதவும்மணிவகை;variegated glass beads or green earthen beads for children's necklaces. "*புனையும் வெண்பாசி பூண்டு*" (திருவாலவா.52,3) 8. மேகம், (அக.நி.); cloud. 9. *பாசிநிலை* பார்க்க; see *pāšinilai.* "*நீர்ச்செரு வீழ்ந்த பாசியும்*" (தொல்.பொ.68).

க. பாசி

*[பாசு → பாசி]* மு.தா.46.

பாசி தமிழ் மருத்துவத்தில் பல்வேறு வகையாகக் கீழே குறிப்பிட்டபடிக் கொள்ளப்படும்.

| | | |
|---|---|---|
| 1. குளத்துப்பாசி | - | tank moss. |
| 2. ஆற்றுப்பாசி | - | river weed. |
| 3. கடற்பாசி | - | seaweed. |
| 4. ஈழத்துப்பாசி | - | cylon moss |
| 5. மலாய்ப்பாசி | - | malay agar agar. |
| 6. கொடிப்பாசி | - | creeper moss. |
| 7. கூந்தற்பாசி | - | trailing moss. |
| 8. குறத்திப்பாசி | - | cuckoos eye. |
| 9. கற்பாசி | - | stone moss. |
| 10 மரப்பாசி | - | tree moss. |
| 11. மஞ்சட்பாசி | - | yellow dyelichen |
| 12. இலைப்பாசி | - | large leafed moss. |

13. முட்டைப்பாசி – moss with inflated appendages.

14. நீர்ப்பாசி – duck weed.

15. பழம்பாசி – fruit moss.

16. கொட்டைப்பாசி – seed moss.

17. கோரைப்பாசி – reed moss.

18. தாட்பாசி – palm leaf moss.

19. வேலம்பாசி – acacia mossa.

20. வேப்பம்பாசி – margosa moss.

21. வழுக்குப் பாசி – slimy moss. (சா.அக.)

**பாசி²** *pāsi*, பெ. (n.) 1. வருணன் (யாழ்.அக.); varuna. 2. கூற்றுவன்(யாழ்.அக.); yama, god of death. 3. ஆதன்(நிகண்டு); soul. 4. நாய் (பிங்.); dog.

*[பாசம் → பாசி]*

**பாசி³** *pāši*, பெ.(n) கிழக்கு; east. "பாசிச் செல்லாது" (புறநா.226)

[கிழக்கு எனப் பொருள்படும் 'பாசி' பிராசி என்னும் வடசொல்லின் திரிபே–பாவாணர். தமி. வர.259]

**பாசி⁴** *pāši*, பெ. (n.) சமைக்கை (யாழ்.அக.); cooking.

*[பாசு → பாசி]*

**பாசி⁵** *pāši*, பெ. (n.) 1. மீன் பிடிப்பு; fishery. 2. மீன்; fish. 'பாசிக்குத்தகை'.

*[பாசு → பாசி]*

**பாசி இறால்** *pāši iṟāl*, பெ. (n.) ஒரு மீன்; (மீன்து.அக.); peracus semisulcatus.

*[பாசி + இறால்]*



**பாசி உளுவை** *pāši vuḷuvai*, பெ. (n.) உளுவை மீன் வகை; a sea fish and fresh water fish.

மறுவ: உழுவை.

*[பாசி + உளுவை]*

இம்மீன் உடலில் பாசி போன்று ஒருபொருள் படிந்து காணப்படுவதால் இப்பெயர் பெற்றது போலும். (தஞ்சைமீனவ.)



**பாசிக்கல்** *pāši-k-kal*, பெ. (n.) கடலடியிற் கிடைக்கும் பாசி படர்ந்த கல் (நெல்லை. மீனவ.); sea bed stone which is spreading with moss.

*[பாசி + கல்]*

**பாசிக்குத்தகை** *pāši-k-kuttagai,* **பெ.** (n.) மீன் குத்தகை; fishing lease.

*[பாசி + குத்தகை]*

**பாசிகட்டி** *pāši-katti,* **பெ.** (n.) வலைச் சாதியாரில் ஒரு வகுப்பினர் **(E.T.vii.274)**; a sub-division of the valaiyar caste.

*[பாசி + கட்டி]*

**பாசிகம்** *pāšigam,* **பெ.** (n.) கருமருது; black or Negroe's olive. **(சா.அக.)**

**பாசிகி** *pāšigi,* **பெ.** (n.) மூங்கில்; bamboo. **(சா.அக.)**

**பாசித்தீர்வை** *pāši-t-tirvai,* **பெ.** (n.) *பாசிவரி* பார்க்க; see *pāši-vari.*

*[பாசி + தீர்வை]*

**பாசித்தேளி** *pāši-t-tēli,* **பெ.** (n.) பாசி படர்ந்த தோற்றமுடைய தேளிமீன் **(குஞ்சை.மீனவ.)**; a kind of tēlifish.

*[பாசி + தேளி]*



**பாசிதம்** *pāšidam,* **பெ.** (n.) **1.** பிரிக்கப்பட்ட பங்கு; that which is divided; a portion, a share. **2.** வகுத்த ஈவு; (math.) quotient.

**பாசிதூர்த்துக்கிட–த்தல்** *pāši-tūrttu-k-kida-,* **3. செ.கு.வி.** (v.i.) அழுக்குப் பிடித்துக் கிடத்தல்; to be overspread with dirt. "*பாசி தூர்த்துக் கிடந்த பார்மகட்கு*" **(திவ்.நாய்ச்.11,8).**

*[பாசி + தூர்த்துக்கிட –,]*

**பாசிநிலை** *pāši-nilai,* **பெ.** (n.) பகைவருடைய வலிகெட அவருடைய அகழியிடத்துப் பொருதலைக் கூறும் புறத்துறை **(பு.வெ. 6,17,கொளு)**; (purap) a theme describing the crusing defeat of an enemy in an action at the moat of his fortress, inflicted by an invading army.

*[பாசி + நிலை]*

("அடங்காதார் மிடல்சாயக் கிடங்கிடைப் போர்மலைந்தன்று"

உழிஞையார் நொச்சியாருடன் அகழியிடத்தே போர் செய்தது **பாசிநிலை** என்னும் துறையாம்.

**நீரின்கண் பாசிபோல்** இருவரும் ஒதுங்கியும் **தூர்ந்தும் பொருதலின்** பாசிநிலை எனக் **குறியீடு பெற்றது** என்க. இதனை, "நீர்ச்செரு **வீழ்ந்த பாசி**" என்பர் தொல்காப்பியனார்.

"நாவாயும் தோணியும் மேல்கொண்டு நள்ளாதார் ஓவார் விலங்கி உடலவும்–பூவார் அகழி பரந்தொழுகும் அங்குருதிச் சேற்றுப் பகழிவாய் வீழ்ந்தார் பலர்" **(பு.வெ.111)** )

**பாசிநீக்கம்** *pāši-nikkam,* **பெ.** (n.) சொற்றோறும் அடிதோறும் பொருளேற்று வரும் பொருள்கோள் **(இறை.56, உரை)**; a mode of construction of stanza by which a number of independent sentencess are held

together by a central idea running through the whole.

*[பாசி + நீக்கம்]*

**பாசிநீக்கு** *pāši-nikku,* பெ. (n.) *பாசி நீக்கம்* (இறை.56, உரை) பார்க்க; see *pāši-nikkam.*

*[பாசி + நீக்கு]*

**பாசிநீர்** *pāši-nir,* பெ. (n.) பாசிபடர்ந்த நீர்; water covered by moss.

*[பாசி + நீர்]*

**பாசிப்படை[1]** *pāši-p-paḍai,* பெ. (n.) 1. திடீரென்று தாக்கும் போர்ப்படை; storming army. 2. வலிமையுள்ள படை (யாழ்.அக.) ; strong army.

*[பாய் → பாய்சி → பாசி + படை]*

**பாசிப்படை[2]** *pāši-ppaḍai,* பெ. (n.) கைவிடப்பட்ட நம்பிக்கை (வின்); forlorn hope.

*[பாசி + படை]*

**பாசிப்பயற்றம்மை** *pāši-p-payaṟṟammai,* பெ. (n.) அம்மைநோய்வகை (M.L.); chicken-box.

*[பாசிப்பயறு + அம்மை]*

**பாசிப் பயறு** *pāši-p-payaṟu,* பெ. (n.) பச்சைப் பயறு; green gram. தவச வகைகளில் பச்சென்றிருப்பதாலிப்பெயர். இது தென்னிந்தியாவில் அதிகமாகப் பயிரிடப்படும், நெல் வயல்களில் நெல் அறுத்த பின்பு இதைத் தெளித்துப் பயிராக்குவதுண்டு. தமிழர்கள் இதைச் சிறப்புக் குழம்பு, பொங்கல், கஞ்சிஇவ்வினங்களில் சேர்ப்ப துண்டு. துவரம் பருப்பிற்கு அடுத்தபடி இது உணவிற்குப் பயன்படுவதால். சிறப்பானது. பத்திய மானதும், ஊட்டமும், குளிர்ச்சியும், தரக் கூடியது; சிறு துவர்ப்புமுண்டு, இதை நோயாளிக்குப் பலவகையாக செய்து கொடுக்கலாம். இதை நோய் வாய்ப்பட்டு எழுந்தவர்களுக்குக் கஞ்சியாகவும், தண்ணீ ராகவும், செய்து கொடுக்கலாம். இதன் தூளை எரிச்சலுக் காகவும், சூட்டைத் தணிக் கவும் கண்ணிற்கிடுவதுண்டு, இது பித்தத்தைக் நீக்கும், இது சீதளத்தைத் தருவதாகுமாதலால் மழைக் காலத்திலும் பனிக் காலத்திலும் அதிகமாகப் பயன்படுத்தக் கூடாது. இதை அளவுக்கதிகமாக உண்டால் கழிச்சல் ஏற்படும். இதன் மாவைக் களிபோல் கிளறிப் பால் கட்டுண்டான பெண்களுக்கு மார்பில் வைத்துக் கட்ட நோய் நீங்கிப் பால் சுரப்புண்டாகும்; green gram-phaseolus mungo. it is so called because of its green colour. It is very commonly grown in south india. but cultivated all over india. generally the seeds are scattered in rice fleds after the harvest in the month of january or february the tamilians use this in food along with rice as pongal, or conjee or as both. It is neat in importance to dholl. (red gram) popularly used in food. It is dietery and nutritious. It is whole some and suited to sick person. The soup made of it is often the first article of diet prescribed recovery from actute illness. It is said to be useful in relieving the heat and burning of the eyes when applied in the form of powder. it removes the biliouness but adds vayo. (wind humour) to the system as it is of a cooling nature, it is

not sound advisable to make much use of it in the rainy and dew seasons, excessive use of it causes diarrhoea, the flour of the pulse is boiled and applied as poultice to woman's breast for promoting the secretion of milk in cases where the natural flow is arrested. The whole pulse is a good diet for breakfast. (சா.அக.)

*[பாசி + பயறு]*



**பாசிப்பருப்பு** *pāši-p-paruppu,* **பெ. (n.) உடைத்த** பாசிப் பயறு; broken **green gram.** "***பாசிப்பருப்புக் குழம்பு நன்றாக இருக்கும்.***"

*[பாசி + பருப்பு]*

**பாசிப்பருவம்** *pāši-p-paruvam,* **பெ. (n.)** மீசையினிளம்பருவம்; initial stage in the growth of moustache. "*பாசிப்பருவமுள்ள மீசையுந் திருத்தி*" (சீதக்.30).

*[பாசி + பருவம்]*

**பாசிப்பல்** *pāšippal,* பெ. (n.) பாசி பற்றிய **பல்;** foul tooth. (சா.அக.)

*[பாசி + பல்]*

**பாசிப்பாட்டம்** *pāši-p-pāṭṭam,* பெ. (n.) மீன் பிடிப்பதற்கு இடும் வரி (I.M.P.Mr.327).; tax on fishing.

*[பாசி + பாட்டம்]*

**பாசிபடர்–தல்** *pāši-paḍar,* **3. செ.கு.வி.** (v.i.) **1.** பாசி வளர்தல்; moss growing. **2.** பல்லில் ஊத்தை பிடித்தல்; dirt collected on the teeth. **3.** கண்ணில் பீளை சாறுதல்; muco purulence in the eye.

*[பாசி + படர்–,]*

**பாசிபந்து** *pāšipandu,* பெ. (n.) தோளணி வகை; an armlet. "*கட்டழகன் பாசிபந்து கட்டினான்*" **(விறலிவிடு.1117).**

*[பாசி + பந்து]*

**பாசிபற்றினபல்** *pāši-paṟṟiṉa-pal,* பெ. (n.) ஊத்தையும் பசுமை நிறமும் பிடித்த பல்; foul tooth.

*[பாசிபற்றின + பல்]*

**பாசிபற்று–தல்** *pāši-paṟṟu-,* **5.செ.கு.வி.** (v.i.) பாசியுண்டாதல்; to become mossy or mouldy.

*[பாசி + பற்று–,]*

**பாசிபிடி–த்தல்** *pāši-piḍi-,* **4.செ.கு.வி.** (v.i.) *பாசிபற்று* பார்க்க; see *pāšipaṟṟu-,*

*[பாசி + பிடி –,]*

**பாசிபிடித்தபல்** *pāši-piḍitta-pal,* பெ. (n.) ***பாசிபற்றினபல்*** பார்க்க; see *pāšipaṟṟiṉa-pal.*

*[பாசி + பிடித்த + பல்]*

**பாசிபூ–த்தல்** *pāši-pū-,* செ.கு.வி. (v.i) 1. *பாசிபற்று* பார்க்க; see *pāši-parru.* 2. பழமையாதல்; to be ancient, to be antiquated. *"பாசிபூத்த வேதம் பேசவேண்டாவோ"* (ஈடு, 1,6,2).

*[பாசி + பூ–,]*

**பாசிமட்டி** *pāšimatti,* பெ. (n.) பாசி படர்ந்த கல் (தஞ்சை. மீனவ.); stone which spreading moss.

*[பாசி + மட்டி]*

**பாசிமணி** *pāši-mani,* பெ. (n.) 1. கரிய மணிவடம்; a string of smath black beads. 2. பச்சை மணிவடம்; green, earthen beads. 3. ஒரு வகை மண்ணால் செய்யப்பட்ட, வெண்களிமண் (பீங்கான்) போன்ற பளபளப்பான மணி; beads made of clay (for making necklace). *"அவள் கழுத்தில் பாசிமணி மாலை!".*

*[பாசி + மணி]*

**பாசிமறன்** *pāši-maran,* பெ. (n.) போர்மேற் சென்ற படை பாசிநிலை வெற்றிக்குப்பின், *பகைவர் ஊரகத்துப் போர் விரும்புதலைக் கூறும் புறத்துறை* (தொல்.பொ.68, உரை); (purap) a theme describing the desire of an invading army to carry the battle into the city of an enemy, after inflicting a crushing defeat on him at the moat of his fortress..

*[பாசி + மறம் → மறன்.]*

**பாசிமாவேலை** *pāšimāvēlai,* பெ. (n.) சிறுதும்பை; small leucus. (சா.அக.)

மறுவ. பாசியா.

**பாசிமீன்** *pāšimīn,* பெ. (n.) ஒரு கடல் மீன் (நெல்லை.மீனவ); a kind of sea fish.

*[பாசி + மீன்]*



**பாசிமுரல்** *pāši-mural,* பெ. (n.) ஆறுவிரலம் (ஆறங்குலம்) வளரும் கடல்மீன் வகை; halfleak, sea-fish, attaining 6 in. in length, hemirhamphus xanthopterus.

*[பாசி + முரல்]*



**பாசிலை** *pāšilai,* பெ. (n.) 1. பச்சையிலை (திவா); green leaf. *"பாசிலை நாணற் படுத்துப் பரிதிவைத்து"* (திவ்.நாய்ச்.6,7). *"பாசிலை யொழித்த பராஅரைப் பாதிரி"* (பெரும்.4)

*"நீலத்து அன்ன பாசிலை அகந்தொறும்"* (நற்,249–2)

*"பாசிலை முல்லை ஆசில் வான்பூ"* (குறுந்.108–3)

"*அம்ம வாழி தோழி பாசிலை*" (ஐங்,112–1)
"*வெறிகொள் பாசிலை நீலமொடு சூடி*" (அகம்,138–5)
"*இமிழ்ப்புற நீண்ட பாசிலை*" (புறநா.283–12)
"பணையைந் தோங்கிய பாசிலைப் போதி" (சிலப், 10–11)
"*பாசிலை செறிந்த பசுங்காற் கழையொடு*" (மணிமே.19–75) 2. வெற்றிலை; betel leaf. "*பாசிலை சுருட்டி*" (சீவக.1987).

*[பசு(மை) → பாசு பாசு+ இலை]*

**பாசிவரமாசு** *pāšivaramāšu,* பெ. (n.) கொட்டைப் பாசி; seed moss. (சா.அக.)

**பாசிவரால்** *pāšivarāl,* பெ. (n.) பாசி படர்ந்த இடங்களில் மேயும் வரால்மீன் (தஞ்சை. மீனவ.); a kind of fresh water fish.

*[பாசி + வரால்]*

**பாசிவரி** *pāši-vari,* பெ. (n.) மீன்பிடித்துக் கொள்வதற்குக் கொடுக்கும் வரி; tax paid for the privilege of fishing. "*பாசிவரிக் காரனோ*" (விறலிவிடு.458).

*[பாசி + வரி]*

**பாசிவிலை** *pāši-villai,* பெ. (n.) மீன் விலை; price of fish.

*[பாசி + விலை]*

**பாசிழை** *pāšilai,* பெ. (n.) ஒப்பனை செய்யப்பட்ட பெண்; well-adorned woman. "*பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய*" (புறம்,367,6) "*பாசிழைப் பகட்டல்*" (பட்டினப்.147). "நறுதல் அரிவை பாசிழை விலையே" (அகநா.19–11.)

*[பசு(மை) → பாசு பாசு+ இழை]*

**பாசிழை மகளிர்** *pasilai magalir,* பெ. (n.) பசிய இலைகளால் புனைவு செய்யப்பெற்ற மகளிர்; well adorned women, with festive green leaves.

"*ஆய்பொன் னவிர்தொடிப் பாசிழை மகளிர்*" (மது,519)

**பாசினம்** *pāšinam,* பெ. (n.) கிளிக்கூட்டம்; flock of parrots. "*பாசினங் கடீஇயர்*" (நற்.134).

*[பசுமை + இனம் ]*

**பாசு**[1] *pāšu,* பெ. (n.) 1. பசுமை (திவா.); greenness, verdure. 2. மூங்கில் (சூடா.); bamboo. 3. வீரம் (யாழ்.அக.); bravery, courage.

**பாசு**[2] *pāšu,* பெ. (n.) *பாசம்*[2], 6 பார்க்க; see *pāšam.* tie. wordly attachment. "*பாசற்றவர் பாடி நின்றாடும் பழம்பதி*" (தேவா, 889, 7).

**பாசுக்கோல்** *pāšu-k-kōl,* பெ. (n.) சாயம் போடுதலில் நூலைத் திருப்பி விடப் பயன்படுத்தும் ஒரு பக்கக் கூர்மையான மரக்கோல்; a stick used in the dying process.

*[பாய்ச்சு → பாசு + கோல்]*

**பாசுணம்** *pāšuṇam,* பெ. (n.) பக்கம்; side. "*பாப்பமை பலகையொடு பாசுணங் கோலி*" (பெருங்.உஞ்சை,38,148,உரை).

**பாசுவசுறோணி** *pāšuvašurōṇi,* பெ. (n.) காட்டாமணக்கு; physicnut.

**பாசுசெங்கி** *pāšū-šeṅgi*, பெ. (n.) *பாஞ்சேங்கி* பார்க்க; see *pāñjeṅgi*

மறுவ: அரிவாள் முனைப்பூண்டு.

**பாசூர்** *pāšūr*, பெ. (n.) திருப்பாச்சூர் எனச் செங்கல்பட்டு மாவட்டத்தில் அமைந்துள்ள ஓர் ஊர்; a village in chengalpet Dt.

(சம்பந்தராலும்,அப்பராலும் பாடல் பெற்றது இவ்வூர். சிவ பெருமான் மூங்கில் அடியில் தோன்றியமையின் இப்பெயர் பெற்றது என்கின்றனர் (பாசு – மூங்கில்) ஆயின் சம்பந்தர், *"பைந்தண் மாதவி சோலை சூழ்ந்த பாசூர்"* –196–1 *"பைவாய் நாகம் கோடலீனும் பாசூர் "* –196–3 *"பாடற் குயில்கள் பயில்பூஞ் சோலைப் பாசூர்"* – 196–5 என இதன் இயற்கை வளத்தையும், செழுமையையும் ஒவ்வொரு பாடலிலும் கூறிச் செல்லும் நிலையில், *"பசுமையான ஊர்"* என்ற எண்ணத்திலேயே இவ்வூர் *'பாசூர்'* எனச் சுட்டப்பட்டிருக்க வேண்டும் என்பது பொருத்தமாக அமைகிறது.)

**பாசை**[1] *pāšai*, பெ. (n.) சமைக்கை **(யாழ்.அக);** a cooking

**பாசை**[2] *pāšai*, பெ. (n.) பாசி (இ.வ); moss

**பாஞ்சாங்கயிறு** *pāñjāṅkayiṟu*, பெ. (n.) மணிவலையில் மணியுடன் சேர்ந்திருக்குங் கயிறு (தஞ்சை.மீனவ); a kind of fishing net rope which have iron or brass beads in the end.

**பாஞ்சாலங்குறிச்சி** *pāñjālaṅkuṟicci-*, பெ. (n.) வெள்ளையரை எதிர்த்துப் போராடிய வீரபாண்டியகட்டபொம்மனின் தலைநகரமாக விளங்கிய கோட்டை நகரம்; a fort town which was the capital of veera pāṉḍiya kattapommaṉ.

**பாஞ்சாலிகை** *pāñjāligai*, பெ. (n.) சித்திரப்பாவை என்னும் மூலிகை; a kind shrub. **(சா.அக)**

**பாஞ்சேங்கி** *pāñjeṅgi*, பெ. (n.) மிளிறை; sickle leaf plant used in eye diseases (சா.அக)

மறுவ: அரிவாள் மூக்கி

**பாட்டக்காரன்** *pāṭṭa-k-kāraṉ*, பெ. (n.) **1.** குத்தகைக்காரன்; lessee **2.** குடியானவன் tenant.opp.to caṉmi.

*[பாட்டம் + காரன்]*

**பாட்டகம்** *pāṭṭagam*, பெ. (n.) சிச்சிலுப்பையம்மை (வின்.); chicken-pox

**பாட்டகன்** *pāṭṭagaṉ*, பெ. (n.) பாடகன் பார்க்க; see pāḍagaṉ.

*[பாட்டு → பாட்டகன்]*

**பாட்டங்கால்** *pāṭṭaṅkal*, பெ. (n.) தோட்டமாகிய இடம்; place of a garden. *"முல்லையுந் தாய பாட்டங்கால் தோழிநம்"* **(கலித்.111,40)**

*[பாட்டம் + கால்]*

**பாட்டச்சீட்டு** *pāṭṭa-c-ciṭṭu*, பெ. (n.) குத்தகைக்காரன் எழுதிக்கொடுக்கும் குத்தகைச்சீட்டு; lease-deed.

*[பாட்டம் + சீட்டு]*

**பாட்டத்தோயம்** *pāṭṭattōyam*, பெ. (n.) தண்ணீர் மேலிருந்து படும்படிகுளித்தல்; a bath in which water is showered upon the person from above shower bath. (சா.அக.)

*[பாட்டம் + தோயம்]*

**பாட்டநிலம்** *pāṭṭa-nilam,* பெ. (n.) **1.** குறைந்த தவசவரியுடைய நன்செய் நிலம்; (G.Tn.D.I.311.); wet lands on which was fixed a low assessment in grain. **2.** குத்தகைக்கு வாங்கிய நிலம்; the land obtained on lease

*[பாட்டம் + நிலம்]*

**பாட்டநெல்** *pāṭṭa-nel,* பெ. (n.) குத்தகை யொப்பந்தப்படி குத்தகைக்காரனால் நிலச் சொந்தக்காரருக்கு அளக்கப்பட வேண்டிய நெல் (s.i.i.v,92.); the quantum of paddy fixed to be paid as rent to a landlord in a contract of lease

*[பாட்டம் + நெல்]*

**பாட்டப்பிடிப்பு** *pāṭṭa-p-piḍippu,* பெ. (n.) பாட்டக்காரன் பாட்டநெல் தவறாமல் அளப்பதற்கு உறுதியாக அவனிடமிருந்து நிலத்துக்குரியவன் வாங்கும் முன்பணம் (நாஞ்.); the amount of premium paid by a lessee to his landlord

*[பாட்டம் + பிடிப்பு]*

**பாட்டம்**[1] *pāṭṭam,* பெ. (n.) **1.** தோட்டம்; garden *"பாங்கரும் பாட்டங்காற் கன்றொடு செல்வேம்"* (கலித்.116) **2.** முகில்; cloud. "வலைவளஞ் சிறப்பப் பாட்டம் பொய்யாது" (நற்.38) **3.** அச்சலச்சலாய்ப் பெய்யும் மழை; shower of rain. *'ஒரு பாட்டம் மழை விழுந்தாற் போலே'* (ஈடு,1,5,6). **4.** வரி; tax,rent *"ஆட்டுப்பாட்டம், மீன் பாட்டம்"* **5.** கிட்டிப்புள்ளு விளையாட்டில் ஒரு பகுதி; part of the play of tip-cat **6.** கிட்டிப்புள்ளின் விளையாட்டு முறை; turn in the play of tip-cat. **7.** குத்தகை; contract of lease. *'கோயில் நிலத்தைப் பாட்டம் ஏற்றுப் பயிரிடுகிறேன்'* **8.** குத்தகைப்படி தரவேண்டிய நெல்; (land) lease; the grain to be given by the tenant as per agreement *" வறட்சி காரணமாகக் குத்தகைக்காரர்கள் பாட்டம் அளக்கவில்லை"* **9.** குறுக்காக விருக்கும் நிலை; crosswise position. *"செங்கல்லை நாட்டமும் பாட்டமுமாக வைத்துக் கட்டவேணும்"* **10.** பறவைகளின் கூட்டம், தொகுதி; throng *"குருவிகள் பாட்டம் பாட்டமாக வந்தன"*

*[பாடு → பாட்டம்]*

**பாட்டம்**[2] *pāṭṭam,* பெ. (n.) பாட்டு; a word denoting song which occurs in combination with. *"அன்று சிறியவர் முதல் பெரியவர் வரை ஆட்டம் பாட்டமாக இருந்தார்கள்"* (பாட்டு என்னும் சொல் பாட்டம் என்று திரிந்து 'ஆட்டம் பாட்டம்' என்ற இணைமொழியில் மட்டுமே வழக்கில் உள்ளது.)

*[பாட்டு → பாட்டம்]*

**பாட்டமாளன்** *pāṭṭam-āḷaṉ,* பெ. (n.) **1.** அரசிறை யலுவலர் (M.E.R.101 of 1926–6); officer in charge of revenue collections. **2.** உழவுப்பாத்தியமுடையவன் (T.A.S.iii:167); cultivator lessee.

*[பாட்டம் + ஆளன்]*

**பாட்டரங்கம்** *pāṭṭaraṅgam,* பெ. (n.) ஏதேனும் ஒரு தலைப்பில் பாவலர்கள் பலர் மேடையேறிப் பாடும் நிகழ்ச்சி; parts meet or forum.

*[பாட்டு + அரங்கம்]*

**பாட்டரம்** *pāṭṭaram,* பெ. (n.) தட்டையான அரவகை (நாஞ்); a kind of flat file

*[பாடு + அரம்]*

**பாட்டன்**[1] *pāṭṭaṉ,* பெ. (n.) **1.** பெற்றோரின் தந்தை; grandfather ***"தந்தை தாயே பாட்டன் காணி"***; **2.** முன்னோன்; ancestor, grandsire ***'பாட்டன் காணி'***

மறுவ: தாதைதன்றாதை, மூதாதை, *[படு → பாடு → பாட்டன்]*

**பாட்டன்**[2] *pāṭṭaṉ,* பெ. (n.) பாட்டமதத்தான் (சி.சி.1.1.மறைஞா); follower of the system of kumārila bhaṭṭar.

*[பட்டன் → பாட்டன்]*

**பாட்டா**[1] *pāṭṭā,* பெ. (n.) *பாட்டன்*[1] (யாழ்.அக.) பார்க்க; see *pāṭṭaṉ.*

*[பாட்டன் → பாட்டா]*

**பாட்டா**[2] *pāṭṭā,* பெ. (n.) **1.** புளிப்பு; sourness, fermentation. ***"கள்ளுப் பாட்டாவாயிருக்கிறது"***; **2.** புளித்த கள்; sour toddy.

*[படு → பாட்டா]*

**பாட்டாசாரியர்** *pāṭṭācāriyar,* பெ. (n.) மீமாஞ்சையின் பாட்டமதப்பிரிவுக்கு ஆசிரியரான குமாரிலபட்டர்; kumārila bhaṭṭa, the author of a system of Mīmāmsā philosophy

*[பட்டன் → பாட்டன் → பாட்டம் + ஆசாரியம்]*

**பாட்டாள்**[1] *pāṭṭāḷ,* பெ. (n.) **1.** உழைப்பாளி; industrious person. **2.** சோம்பேறி; idler

*[பாடு + ஆள்]*

**பாட்டாள்**[2] *pāṭṭāḷ,* பெ. (n.) பாடுபவன்/ள் (வின்); songster.

*[ பாடு → பாட்டு + ஆள்]*

**பாட்டாளி** *pāṭṭāḷi,* பெ. (n.) உடல் உழைப்பையே அடிப்படையாகக் கொண்டு வாழ்க்கை நடத்துபவர்; உழைப்பாளி; worker industrious person ***"பாட்டாளி மக்கள் வறுமையில் வாடுவதா"*** **2.** *பாட்டாள்*(யாழ்.அக) பார்க்க; see *pāṭṭāḷ*

*[பாடு + ஆளி]*

**பாட்டி**[1] *pāṭṭi,* பெ. (n.) **1.** பெற்றோரின் தாய்; grandmother "தந்தை தாயே பாட்டன் பாட்டி". (பன்னிருபா.179). **2.** கிழவி; aged women. ***"மடநடைப் பாட்டியர்த்தப்பி"*** (பரிபா.10,37).

*[பாட்டன் → பாட்டி]*

**பாட்டி**[2] *pāṭṭi,* பெ. (n.) பன்றி,நாய், நரியாகிய விலங்கின் பெண்பாற் பெயர் (தொல், பொ.620.621); female of hog, dog and fox. ***"வேட்டம் மறந்து துஞ்சுங்கொழுநர்க்குப்பாட்டி"*** (அகநா.196,4)

*[பட்டி → பாட்டி]*

**பாட்டி**[3] *pāṭṭi,* பெ. (n.) பாடன் மகளிர்; woman of the class of strolling singers. ***"பாணர் வருக பாட்டியர் வருக"*** (மதுரைக்.749)

*[பாட்டு → பாட்டி]*

**பாட்டி**[4] *pāṭṭi,* பெ. (n.) சிப்பியொன்றின் பெயர்; a kind of oyster.

**பாட்டிப்பாறை** *pāṭṭi-p-pāṟai,* பெ. (n.) ஒரு பாறை மீன் (நெல்லை.மீனவ.); a kind of rock fish.

*[பாட்டி + பாறை]*



**பாட்டிமருத்துவம்** *pāṭṭi-maruttuvam,* பெ. (n.) சிற்றூர்ப்பகுதிகளில் நோய்களுக்குப் பட்டறிவின் வாயிலாகத் தெரிந்து கைப்பக்குவமாகச் செய்யும் மருத்துவம்; house-hold remedy *"ஆங்கில மருந்து வருவதற்கு முன்பு பாட்டி மருத்துவம் மி கவும் பயனுடையதாக இருந்தது; இன்றும் இருக்கிறது"*

*[பாட்டி + மருத்துவம்]*

**பாட்டியர்** *pāṭṭiyar,* பெ. (n.) பாட்டி[3] பார்க்க; see pāṭṭi. *"பாணர் வருக பாட்டியர் வருக"* (மதுரைக்.) *"மடநடைப் பாட்டியர்த் தப்பித் தடையிறந்து"* (பரிபா.10.37)

*[பாட்டு → பாட்டியர்]*

**பாட்டியல்** *pāṭṭiyal,* பெ. (n.) இலக்கணம் கூறும் நூல்; on poetbric composition. *"உரைப்பல் பாட்டியன் மரபே"* (பன்னிருபா.பாயிரம்);

**பாட்டியன் மரபுடையார்** *pāṭṭiyan-marabudaiyār,* பெ. (n.) ஓர் இலக்கண நூலாசிரியர்; a grammarian.

இவர் இயற்பெயர் யாதெனத் தெரியவில்லை.

*"ஆரிடர் செய்யுள் பாடுதற்குரியோர்,*
*கற்றோரறியா வறிவுமிக்குடையோர்*
*மூவகைக் காலப் பண்பு முறை யுணரு,*
*மாற்றல் சான்ற வருந்தவத்தோரே"*

என்று சொன்னார் பாட்டியன் மரபுடை யாராகலின் என 'யாப்பருங்கல விருத்தி' யில் குறிப்பிடப் படுகின்றார். நூல்; பாட்டியன் மரபு.

*[பாட்டியல் + மரபுடையார்]*

**பாட்டிராசி** *pāṭṭirāśi,* பெ. (n.) ஞாயிறு மறையும் நேரம் (இலக்கினம்); the sign of The zodiac occupied by the sun at sunset.

*[படு → பாடு → பாட்டு + skt rāsi› த. இராசி.]*

**பாட்டில் விழு–தல்** *pāṭṭil-viḻu,* செ.கு.வி. (v.i.) 1. நெடுங்குத்தாகவன்றிப் பரப்பிவிழுதல்; to lie flat 2. காலஞ்செல்லவிடுதல்; to procrastinate 3. பொந்திகையாதல்; to be one's ease

*[பாடு → பாட்டில் + விழுதல்]*

**பாட்டிலே போடு–தல்** *pāṭṭilē pōḍu-,* 19. செ.குன்றாவி. (v.t.) நிலத்துடன் ஒட்டி நேராகச் சார்த்துதல் (இ.வ.); to place or laydown horizontally.

*[பாடு → பாட்டிலே + போடு–,]*

**பாட்டிற்போ–தல்** *pāṭṭiṟ-pō-,* பெ. (n.) 8. செ.கு.வி.(v.i.) 1. தன் அலுவலாய்ச் செல்லுதல்; to go about on one's business 2. மறைதல்; (astron) to set, as the moon or other heavenly body

*[பாட்டில் + போ–,]*

**பாட்டினர்** *pāṭṭiṉar,* பெ. (n.) பாடினி² பார்க்க; see paḍiṉi. songsters. ***"உரையினர் பாட்டினர் ஒசிந்த நோக்கினர்"*** (சிலப்.1–55)

*[பாட்டு → பாட்டினர்]*

**பாட்டு¹** *pāṭṭu,* பெ. (n.) **1.** பாடுகை; singing chanting **2.** இசைப்பாடல்; song,hymn, that which is sung or adapted to music **3.** இசை; music. *"கூத்தும் பாட்டும்"* (மணிமே.2,19) **4.** செய்யுள்; verse or stanza, poem word *"பாட்டுரை நூலே"* (தொல்.பொ.391) *"உரையும் பாட்டு மாட்டு விரைஇ" (மது.616) இன்புறு முரற்கைநும் பாட்டுவிருப்பாக"* (மலை.390) *" கடும்பாட்டு வருடையொரு தாவன உகளும்"* (நற்.119–1) *" அகவன் மகளே பாடுக பாட்டே இன்னும் பாடுக பாட்டே அவர்"* (குறுந்.23–3,4) (தொ.சி) *'பாணா தரித்துப் வப்பாட்டு" (பரி.7–66)' ' பாட்டு முரலுமாம் பண்"* (தி.மா.143–4) **5.** சொல்(நாநார்த்த.2361) word **6.** வசைமொழி; abuse 'நேரம் கழித்துச் சென்றால் அம்மாவிடம் பாட்டு வாங்க வேண்டியிருக்கும்'

*[பா → பாடு→பாட்டு]*

**பாட்டு²** *pāṭṭu,* பெ. (n.) கொய்சகம் முதலியவற்றின் அடுக்கு; layer,pleat

**பாட்டுக்கச்சேரி** *pāṭṭu-k-kaccēri,* பெ. (n.) இசையரங்கு; music concert

*[பாட்டு + கச்சேரி] கச்சேரி = உருது*

**பாட்டுக்காணி** *pāṭṭu-k-kāṇi,* பெ. (n.) வெற்றுநிலம்; waste land, sterile or stony ground.

மறுவ: வெறும்பாடானகாணி

*[படு → பாடு + காணி]*

**பாட்டுக்காரன்** *pāṭṭu-k-kāraṉ,* பெ. (n.) **1.** பாடகன் ; sungstar **2.** இசைவல்லான்; one skilled in music

*[பாட்டு + காரன்]*

**பாட்டுக்கு** *pāṭṭukku,* வி.எ. (adv) பிறரால் அல்லது பிறவற்றால் ஊறுபடாது தன்போக்கில்; unmindful (of external circumstances.etc.) *"யார் பேசுவதையும் கவனிக்காமல் அவன் பாட்டுக்குப் போய் விட்டான்"* பேசவேண்டாம் என்று சொல்லியும் நீ பாட்டுக்குப் பேசிக் கொண்டே போகிறாயே! *"யார் வந்தால் என்ன வராவிட்டால் என்ன ? வேலை பாட்டுக்கு நடக்கும்"*

**பாட்டுக்குடையான்** *pāṭṭukkuḍaiyāṉ,* பெ. (n.) வாலுளுவையரிசி ; seeds of intellect tree

**பாட்டுக்கேள்–தல்** *pāṭṭu-k-kēḷ,* செ.கு.வி. (v.i.) **1.** இசைகேட்டல் ; to hear or attend a musical performance **2.** வசைகேட்டல்; to be abused

*[பாட்டு + கேள்–,]*

**பாட்டுச்சொல்(லு)–தல்** *pāṭṭu-c-col-,* செ.கு.வி. (v.i.) *பாட்டுப்படி* பார்க்க; see *paṭṭu-p-paḍi.*

*[பாட்டு + சொல்–,]*

**பாட்டுடைச்செய்யுள்** *pāṭṭuḍai-c-ceiyuḷ,* பெ. (n.) பலபாக்களோடு உரைப்பாட்டையும், இசைப்பாட்டையுமுடைய இயலிசை நாடகப் பொருட்டொடர் நிலைச் செய்யுள் an epic by verses *" நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுளென"* (சிலப்.பதி.60) *"உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்"* (சிலப்.பதி.87)

*[பாட்டு + உடைய + செய்யுள்]*

**பாட்டுடைத்தலைமகன்** *pāṭṭuḍai-t-talaimagaṉ,* பெ. (n.) இலக்கியத்தலைவன்; hero of a poem. "எம்பெருமான் பாட்டுடைத் **தலைமகனாகவும்** (திருவிருத்.6. அப்பிள்ளையுரை)

*[பாட்டுடை + தலைமகன்]*

**பாட்டுடைத்தலைவன்** *pāṭṭuḍai-t-talaivaṉ,* பெ. (n.) ***பாட்டுடைத்தலைமகன்*** பார்க்க; see *pāṭṭuḍai-t-talaimagaṉ* "***உயர்ந்தோன் பாட்டுடைத் தலைவனாகும்***" (நம்பியகப்.246)

*[பாட்டுடை + தலைவன்]*

**பாட்டுத்தரை** *pāṭṭu-t-tarai,* பெ. (n.) வெற்றுநிலம்; waste land, sterile or stony ground.

மறுவ: பாட்டுக்காணி
பாட்டுக்காணி

*[படு → பாடு → பாட்டு + தரை]*

**பாட்டுநாயகன்** *pāṭṭu-nāyagaṉ,* பெ. (n.) பாட்டுடைத்தலைமகன் (யாழ்.அக); hero of a poem.

*[பாட்டு + நாயகன்]*

**பாட்டுநிலம்** *pāṭṭu-nilam,* பெ. (n.) ***பாட்டுக்காணி*** பார்க்க; see *pāṭṭu-k-kāṇi*

மறுவ: பாட்டுத்தரை

*[பாடு → பாட்டு + நிலம்]*

**பாட்டுப்படி–த்தல்** *pāṭṭu-p-paḍi-,* செ.கு.வி. (v.i.) 1. இசைப்பாட்டுப்பாடுதல் ; to sing 2. செய்யுளியற்றுதல்; to compose verses

*[பாட்டு + படி –,]*

**பாட்டுப்பாடு–தல்** *pāṭṭu-p-pāḍu,* செ.கு.வி. (v.i.) *பாட்டுப்படி–,* பார்க்க ; see *pāṭṭu-p-paḍi,*

*[பாட்டு + பாடு–,]*

**பாட்டுமடை** *pāṭṭu-maḍai,* பெ. (n.) குரவைக்கூத்து முதலியவற்றின் இடையே பாடும் பாட்டு (சிலப்.24, தலைப்பு); a series of songs sung at intervals in dances.

*[பாட்டு + மடை]*

**பாட்டுவாங்கு–தல்** *pāṭṭu-vāṅgu-,* செ.கு.வி. (v.i.) வசவுபெறுதல்; to be severely abused.

*[பாட்டு + வாங்கு –,]*

**பாட்டுவாளி** *pāṭṭu-vāḷi,* உடுக்கையடித்துப் பாடுவோன்; one who sings to the accompaniment of a hand-drum; strolling singer

*[பாட்டாளி → பாட்டுவாளி]*

**பாட்டுவிருத்தி** *pāṭṭu-virutti,* பெ. (n.) பகவதி கோயில்களில் அம்மன் வடிவெழுதித் பூசிக்குந் தொழிலுக்கு விடப்படும் நிலம் (நாஞ்); lands given for drawing the image of the goddess and uttering praises, in pagavadi temples.

*[பாட்டு +* skt.vṛtti› *த. விருத்தி]*

**பாட்டை¹** *pāṭṭai,* பெ. (n.) 1. பாதை; road, way "***அரசபாட்டை***" 2. இசை முதலியவற்றின் நடை; style, as of music " ***கானவித்தைப்***

*பாட்டையெல்லாங் கற்ற பனிமொழியே"* (விறலிவிடு.18.) **3.** ஒழுக்கம்; conduct, behaviour,

தெ.பாட க. பாடெ

*[பதி → பாதம் → பாதை → பாட்டை]*

**பாட்டை²** *pāṭṭai,* பெ. (n.) சிவப்பு நிறமுள்ள கடல்மீன் வகை; sea fish, reddish, eleotris muralis.



**பாட்டைசாரி** *pāṭṭai-šāri,* **பெ.** (n.) வழிப்போக்கன்; traveller, way farer

*[பாதை → பாட்டை + சாரி]*

**பாடக்கள்** *pāḍa-k-kaḷ,* பெ. (n.) பல மரத்துக்கள்; taddy which is obtained from, various palmyra trees.

(மீனவர்கள் மீன்பிடிக்கச் சென்று வந்தபின் தம் உடல்வலியை மறக்கச் செய்வதற்கு இப்படிப் பலமரத்துக் கள்ளையும் பருகுதல் முகவை மீனவர்களிடையே பழக்கம் எனக் களப்பணியாளர் வழி அறியலாகின்றது.)

**பாடக்கிடம்** *pāḍakkiḍam,* பெ. (n.) ஆடுதின்னாப்பாளை; worm killer (சா.அக.)

**பாடக்குறிப்பு** *pāḍa-k-kuṟippu,* பெ (n.) ஆசிரியர், வகுப்பில் மாணாக்கர்க்குப் பாடங்கற்பிக்க முறைப்படுத்தி எழுதி அமைத்துக் கொள்ளும் குறிப்புகள்; notes of lesson.

*[பாடம் + குறிப்பு]*

**பாடகஞ்சொல்(லு)–தல்** *pāḍagañ-col-,* **8.** செ.கு.வி. (v.i.) தொன்மக்கதைகளை மனத்திற் படும்படி நடித்து, இன்புறச் சொல்லுதல் (நாஞ்); to expound purāṇic stories in an impressive manner with gestures and poses.

*[பாடகம் + சொல்லு–,]*

**பாடகம்¹** *pāḍagam,* பெ. (n.) **1.** தெரு (பிங்); street, section of a village **2.** காஞ்சியிலுள்ள ஒரு பெருமாள் கோயில்; vishu shrine in conjeevaram " பூம் பாடகத்துளிருந்தானை" (திவ்.இயற்.2.94) **3.** செய்த்தளை; portion of field. *"மஞ்சிக்கமாகக் கிடந்த நிலத்தில் மூன்று பாடகந்திருத்தி"* (S.I.I.i.iii,.203) **4.** நிழல் (அக.நி.); shade. **5.** பறைவகை (நாநார்த்த.261); a drum. **6.** கரை (நாநார்த்த. 261.); bank, shore, **7.** சூதுகருவியை யுருட்டுகை (நாநார்த்த. 261.); dice throw. **8.** இழப்பு (நாநார்த்த 261.); loss

**பாடகம்²** *pāḍagam,* பெ. (n.) மகளிர் காலணி; anklet, worn by women *"பாடகத் தாமரைச் சீறடி பணிந்து"* (மணிமே.25,85). (மகளிர் காலிற்பாடகம் கம்பியாய்ப் பல முடக்காலே போக்கும் வரவும் உண்டானாற் போலத் தோன்றிக் காலை விடாதே கிடப்பது. நச்.சீவ.570) *"பரியக நூபுரம் பாடகம் சதங்கை" (சிலப்.6–84) "பாடகச்சீறடி பரற்பகை யுழவா" (சிலப்.10–52)* " பாடகக்காரியிடம்

*பாரதம் சொன்னால் பாடகத்தைப் பார்ப்பாளா, பாரதத்தைக் கேட்பாளா?".* (பழ)

மறுவ: பாதகடகம்

க. பாடக

*[பாதகடகம் → பாடகம்]*

**பாடகம்³** *pāḍagam,* பெ. (n.) ஒருவகைத்துகில் (சிலப்.14,108 உரை); a kind of garment

*[படம் → பாடம் → பாடகம்]*

**பாடகம்⁴** *pāḍagam,* பெ. (n.) சிவப்பு (அக.நி); red

*[பாடலம் → பாடகம்]*

**பாடகம்⁵** *pāḍagam,* பெ. (n.) கூலி (நாநார்த்த.261.); wages

*[பாடு → அகம்]*

**பாடகம்⁶** *pāḍagam,* பெ. (n.) பாடும் இடம்; a place where music is performed. *"பாடகஞ் சாராமை பாத்திலார்"* (ஏலாதி.25)

*[பாடு + அகம்]*

**பாடகவித்துவான்** *pāḍaga-vittuvāṉ-,* தொன்மக்கதைகளை மனத்திற்படும்படி இன்புற்றுச் சொல்லுவோன் (நாஞ்); one who expounds purānic stories in an impressive manner with gestures and poses.

*[பாடகம் +* skt. vidvāṉ> *த. வித்துவான்]*

**பாடகன்¹** *pāḍagaṉ,* பெ. (n.) பாடுவோன் songster, musician.; *" விறலியர் பாடகர் பாணர் புகழக்கண்டு'* (திருவாலவா.55,3)

*[பாடு → பாடகன்]*

**பாடகன்²** *pāḍagaṉ,* பெ. (n.) சொல் வன்மையுள்ளவன்; able speaker *"நல்ல வார்த்தைகள் சொல்லவல்ல... பாடகன்"* (திருவாலவா.32,5.)

*[பாடு → பாடகன்]*

**பாடகி** *pāḍagi,* பெ. (n.) பாடுபவள்; songstress.

*[பாடகன் → பாடகி]*

**பாடங்கேள்-தல் (பாடங்கேட்டல்)** *pāḍaṅ-kēḷ-,* 11. செ.குன்றாவி. (v.t.) 1. ஆசிரியனிடம் கற்றல்; to learn under master. 2. படித்த பாடத்தை உசாவுதல்; to hear the lessons studied.

*[பாடம் + கேள்]*

**பாடங்கொடு-த்தல்** *pāḍaṅ-koḍu-,* 4. செ.கு.வி. (v.i.) 1. படித்த பாடத்தை ஒப்பித்தல்; to recite a lesson 2. படிப்பதற்குப் பாடம் அமைத்தல்; to prescribe a lesson for study 3. படிப்பதற்குரிய பாடச்சுவடியைக் கையிற் கொடுத்தல்; to give the study metyerial. 'பவளக்கொடி நாடகத்திற்குப் பாடம் கொடுக்கப்பட்டுவிட்டது'

*[பாடம் + கொடு-,]*

**பாடசாலை** *pāḍa-šālai,* பெ. (n.) கல்விக்கூடம்; school or college for learning *" இரவுப் பாடசாலை"*

மறுவ: பள்ளிக்கூடம்.

*[பாடம் + சாலை]*

**பாடஞ்செய்[1]–தல்** *pāḍañ-cey-,* 3. செ.கு.வி. (v.i.) ஒளி விடுதல்; to shine, emit tustre '*நினது பாடஞ்செய்கின்ற... வேல்*' (புறநா.57,உரை)

*[பாடம் + செய்–,]*

**பாடஞ்செய்[2]–தல்** *pāḍañ-cey-,* 1.செ.குன்றாவி. (v.t.) பாடமாக்குதல், பதப்படுத்துதல்; making anything fit for use; curing, embalming.

*[பாடம் + செய்–,]*

**பாடஞ்சேர்–தல்** *pāḍañ-cēr-,* 9. செ.கு.வி. (v.i.) பாரத்தால் அழுத்தப்படுதல்; to be pressed down, compressed by a weight.

*[பாடம் + சேர்–,]*

**பாடஞ்சொல்(லு)[1]–தல்** *pāḍañ-col-,* 8. செ.குன்றா.வி. (v.t.) கற்பித்தல் to explain lessons; to teach.

*[பாடம் + சொல்–,]*

**பாடஞ்சொல்(லு)[2]–தல்** *pāḍañ-col-,* 8. செ.கு.வி. (v.i.) பாடம் ஒப்பித்தல்; to recite lessons.

*[பாடம் + சொல்–,]*

**பாடத்திட்டக்குழு** *pāḍa-t-tiṭṭa-k-kuḻu,* பெ (n.) பள்ளி கல்லூரி ஆகியவற்றில் பாடத்திட்டத்தை உருவாக்கும் அறிஞர் குழு; expert committee for syllabus.

*[பாடத்திட்டம் + குழு]*

**பாடத்திட்டம்** *pāḍa-t-tiṭṭam,* பெ (n.) கல்வி நிறுவனங்களில் குறிப்பிட்ட படிப்பைப் பயிற்றுவிக்கும் நோக்கத்தில் கற்பிக்கப்பட வேண்டியவை,அதற்கு உரிய நூல்கள் முதலியவற்றை உரியவர்கள் முடிவுசெய்து வகுக்கும் திட்டம்; syllabus or curriculam for a course "*அரசு இந்த ஆண்டுமுதல் பாடத்திட்டத்தில் மாற்றம் செய்யப்போவதாக அறிவித்துள்ளது*"

*[பாடம் + திட்டம்]*

**பாடநூல்** *pāḍa-nūl,* பெ. (n.) மாணவர் களுக்கு ஒரு குறிப்பிட்ட பாடத்தைக் கற்றுக் கொடுப்பதற்கு உதவும் என்று தேர்ந் தெடுக்கப்பட்ட புத்தகம்; text book "*தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்*". நன்கு செயல்படுகிறது.

*[பாடம் + நூல்]*

**பாடபேதம்** *pāḍa-pēdam,* பெ (n.) ஒரு நூலின் எழுத்து, சொல், தொடர் முதலியவை அதன் பல படிகளில் வெவ்வேறாகக் காணப்படும் நிலை; variant reading of a text;

மறுவ: பாடவேறுபாடு

*[பாடம் + skt. bhāda > த. பேதம்]*

**பாடம்[1]** *pāḍam,* பெ (n.) 1. சுமைவைத்து அழுத்துகை; compression, as of a heap of tobacco, olas or skins by a weight placed on it. 2. பதப்படுத்துகை; tanning, 3. ஒன்பான்மணி முதலியவற்றின் ஒளி; as leather; curing; as tobacco lustre of precious stones and metals. "*பல்லாயிரமாமணி பாடமுறும்*" (கம்பரா. சராப.11) 4. முடிமாலை; (பிங்) a garland for the head, chaplet. 5. வெற்றிலை (மலை); betel 6. (மனித உடல் விலங்கின் தோல், புகையிலை முதலியவை) கெட்டுப் போகாமல் நீண்ட நாள் நிலைக்கும்படி மேற்கொள்ளப்படும் முறை; (of body)

embalming;(of leather; to bacco ,etc.) tanning, curing etc., *"பல வகை விலங்குகள் பாடம் செய்யப்பட்டு அருங் காட்சியகத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன".* மறுவ: பாடஞ்செய்தல்; 7. மனப்பாடம்; text committed to memory.

*[படி → பாடம்]*

**பாடம்[2]** *pāḍam,* பெ (n.) 1. படிக்கும் நூற்பகுதி; lesson "பாடம் போற்றல்" (நன்.41) 2. படிப்பு; reading,perusal, study in general *"நாப்பாடஞ் சொல்லி நயமுணர்வார் போற்செரிக்கும்"* (நாலடி.312,1) *"கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தால்"* (நாலடி.314–1) 3.மூலபாடம்; text of a poem or a treatise. *"பாடமே யோதிப் பயன்றெரிதல் தேற்றாத மூடர்"* (நாலடி.316) 4. வேதபாடம்; study of the vēda. 5. பாராமலொப்பிக்கும்படி கைவந்தது; that which is learnt by rote or well read. *"அவனுக்கு நன்னூல் முழுவதும் பாடம்" "பாடை ஏறினும் ஏடது கைவிடேல்"* (பழ)

*[படி → பாடம்]*

**பாடம்[3]** *pāḍam,* பெ (n.) 1. தெரு (பிங்); street. 2. இடையர் வீதி; street of herdsmen

*[பாடி → பாடம்]*

மறுவ: ஆயர்பாடி.

**பாடம்[4]** *pāḍam,* பெ (n.) 1. இணங்கு; consent. 2.கடுமை; firmness 3. மிகுதி; excess

*[படு → பாடம்]*

**பாடம்[5]** *pāḍam,* பெ (n.) கிளவியம்; uitterance, word. "படுக்கலுற்ற பதகநின் பாடமே" (நீலகேசி.537)

*[படி → பாடம்]*

**பாடம் பண்ணல்** *pāḍam paṇṇal,* பெ (n.) பதப்படுத்தல்; to preserve; to cure (சா.அக)

*[பாடம் + பண்ணல்]*

**பாடம் பண்ணு[1]—தல்** *pāḍam- paṇṇu-,* 12. செ.குன்றாவி (v.t.) 1. ஒலை முதலியவற்றை அடுக்கி வைத்தல்; to pile up, as ola tobacco 2. புகையிலை முதலியவற்றைப் பக்குவப்படுத்துதல்; to cure tobacco leaves, etc.

*[பாடம் + பண்ணு–,]*

**பாடம் பண்ணு[2]—தல்** *pāḍam- paṇṇu-,* 12. செ.குன்றாவி (v.t.) மனப்பாடம் பண்ணுதல்; to learn by heart, commit to memory

*[பாடம் + பண்ணு–,]*

**பாடம் பண்ணு[3]—தல்** *pāḍam- paṇṇu-,* 12. செ.குன்றாவி (v.i.) கடல்வளப் பொருட்களைப் பதப்படுத்துதல் (தஞ்சை.மீ னவ); to cure

*[பாடம் + பண்ணு–,]*

**பாடம் புகட்டு—தல்** *pāḍam- pugaṭṭu-,* 10. செ.கு.வி. (v.i.) பாடம் கற்பித்தல்; to give a lesson 'என்னைப் பழித்தவனுக்கு ஒருபாடம் புகட்டவேண்டும்' (உ.வ.)

**பாடம் போற்று—தல்** *pāḍam- paṇṇu-,* 10. செ.கு.வி (v.i.) படித்தபாடத்தைச் சிந்தித்தல் (நன்.41); to reflect upon what is learnt.study

*[பாடம் + பண்ணு–,]*

**பாடரி**[1] *pāḍri,* பெ. (n.) *பாடலி,*5 (அக.நி) பார்க்க; see *pāḍali.*

**பாடரி**[2] *pāḍari,* பெ. (n.) 1. மதுக்குடி; any sweet and intrcicating drink 2. சாராயம் (சா.அக.) arrack

**பாடல்**[1] *pāḍal,* பெ. (n.) 1. பாடுகை; singing; versifying. "*பாடல் சான்ற புலனெறி வழக்கமும்*" (தொல்,பொ.53); "மறைகலந்த வொலிபாடலொடாடராகி" (தேவா. பிரமபுற்6. சம்பந்த) 2. இசைப்பா; song, lyric 3. செய்யுள் poem, poetry "*மங்கலவாழ்த்துப் பாடலும்*" (சிலப்.பதிகம்.63); "நம்புபாடலாடலை நயந்து நண்ணினாள் கொலோ" (சிவரக.கணபதிமறு .6.) 4. புகழ்; fame. renown. "பாடல் சான்ற..... பாட்டினம்" (சிறுபாண்.151)"*பாடல் பற்றிய பயனுடைய யெழாஅற்*" (பொருந.56)

"*பாடல் சான்ற நன்னாட்டு நடுவண்*" (மது.331.)

"*நீயே பாடல் சான்ற பழிதபு சீறடி*" (நற்.2561)

"*கிளிகடி பாடலும் ஒழிந்தனள்*" (அகநா.118–13)

"*படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்*" (அகநா.222–11)

"*பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல்; கண்என்னாம் கண்ணோட்டம் இல்லாத கண்?*" (குறள்.573–1) 5. படிக்கை. (திவா); reading

*[பாடு → பாடல்]*

**பாடல்**[2] *pāḍal,* பெ. (n.) 1. பாகல்; bitter.gourd

**பாடல்**[3] *pāḍal,* பெ. (n.) பாடலிபுரம்; the capital of Magadha near the confluence of sōṇ and Ganges identified with the ,modern patna. "*பாடலிற் பிறந்த பசும்பொன் வினைஞரும்*" (பெருங்.உஞ்சைக்.58,42)

**பாடல்பயிலிடம்** *pāḍal-payiliḍam,* பெ. (n.) பட்டிமண்டபம் (பிங்.); a forum of opposing teams debating a given subject.

*[பாடல் → பயிலிடம்]*

**பாடல்பெற்றதலம்** *pāḍal-peṟṟa-talam,* பெ. (n.) நாயன்மார்களாலேனும் ஆழ்வார் களாலேனும் பாடப்பெற்ற திருத்தலம்; shrine sanctified by the hymns of Nāyaṉmārs or Āḻvārs.

*[பாடல்பெற்ற + தலம்]*

**பாடல் பெறு—தல்** *pāḍal- pēṟu-,* 2. செ.கு.வி. (v.i.) 1. புலவர்களால் அரசன் முதலியோர் பாடல் பெறுதல்; having the distinction of being sung by poets. "ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி மாங்குடி மருதன் தலைவனாக புலவர் பாடாது வரைக என்நிலவரை" (புறநா.) 2. நாயன்மார்கள் ஆழ்வார்கள் முதலியோரால் குறிப்பிட்ட திருக்கோயில்களில் உள்ள இறைவனைப் பற்றிப் பாடியிருத்தல்; shrine sanctified by the hymns of Nāyaṉmārs or Āḻvārs.

*[பாடல் + பெறு–,]*

(ஆழ்வார்கள் பாடுவதை மங்களாசாசனம் என்பது மாலிய மரபு.)

**பாடலத்துருமம்** *pāḍalatturumam,* பெ. (n.) புன்னாக மரம்; alexandrian laurel.

**பாடலம்**[1] *pāḍalam,* பெ. (n.) 1. சிவப்பு (திவா.); red 2. வெண்சிவப்பு (நாநார்த்த.26); pale red. 3. குங்குமம் (நாநார்த்த.261.); saffron. 4. குதிரை (திவா.); horse. "*பாடலங்கரி வைகிய பந்தியும்*" (அரிச்.புநகரப்.2) 5. சேரன் குதிரை (திவா.); horse of the cēra king. 6. பாதிரி பார்க்க 'பாடலம் வறுமை கூர (கம்பரா.கார்கால.26.) 7. மழைக்காலத்து விளையும் நெல் (நாநார்த்த.261.); a kind of paddy sown and harvested during the rainy season. "*பாடலம் தன்னொடு பன்மலர் விரிந்து*" (சிலப்.13–,154)

*[படு→ பாடு → பாடலம்] படுதல்= வீழ்தல், சாய்தல். படு ஞாயிறு= ஏற்பாடு, மாலை நேரம். செவ்வானம்= சிவப்பு.*

**பாடலம்**[2] *pāḍalam,* பெ. (n.) சூளுரை; vow

மறுவ: வஞ்சினம்.

**பாடலனார்** *pāḍalaṉār,* பெ. (n.) பாடலம் என்ற இலக்கண நூலாசிரியர்; a grammarian.

*[பாடலம் → பாடலனார்]*

(இவர் பழைய இலக்கண நூலாசிரியர் களுள் ஒருவர் என்பது யாப்பருங்கல விருத்தியினால் தெரிய வருகின்றது. யாப்பருங்கலம் ஒழிபியலில் விருத்தியுரைகாரர் 32 தந்திர உத்திகள் பற்றி இந்நூல் நூற்பா ஒன்றினை மேற்கோள் காட்டியுள்ளார் நூல்:பாடலம் இது மறைந்து போன தமிழ் இலக்கண நூல்களுள் ஒன்று.)

**பாடலார்** *pāḍalār,* பெ. (n.) கழற்கொடி; bonduc creeper (சா.அக.)

மறுவ: கழற்சி

**பாடலி** *pāḍali,* பெ. (n.) 1. *பாதிரி* (மலை) பார்க்க; see *pādiri.* 2. *வெண்பாதிரை* பார்க்க; see *veṇpātirai* 3. பேய்ப்பாதிரை; see pēy-p-pātirai 4.பாடலிபுரம்; the capital of Magadha. "பொன்மலி பாடலி பெறீஇயர் (குறுந்.75) see 5. கள் (திவா); toddy 6. நெல்வகை (யாழ்.அக); a kind of paddy 7. கொடிவகை (யாழ்.அக); a creeper.

*[பாதிரி → பாடலி]*

**பாடலிபுத்திரம்** *pāḍaliputtiram,* பெ. (n.) 1.*பாடலிபுரம்*பார்க்க; see *pāḍalipuram* 2. தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள திருப்பாதிரிப்புலியூர் என்னும் சிவத்தலம்; Tiruppādirippuliyūr, a siva shrine in south arcot district. "பாடலிபுத்திரமென்னும் பதியணைந்து" (பெரியபு .திருநாவுக்.38);

*[பாடலி + புத்திரம்]*

**பாடலிபுரம்** *pāḍali-puram,* பெ. (n.) கங்கை சோணை ஆறுகளின் கூடுதுறையிலுள்ளதும் மகத நாட்டுத் தலைநகருமான ஒரு பழைமையான நகரம்; the capital of Magatha near the confluence of the sōṇ and the Ganges, identified with the modern patna,

(பாதிரிப்புலியூர் என்னும் பழைய கடலூர்ப்பெயர் பாடலிபுத்திரம் எனத்திரிந்தது என்பார். வடநாட்டில் இப்பெயர் பாட்னா என மருவி வழங்குகின்றது.)

**பாடலை** *pāḍalai,* பெ. (n.) 1. மரவகை; a tree 2. *பாடலிபுரம்* பார்க்க; see *pāḍalipuram* 3. கொற்றவை; Durgā.

**பாடவம்**[1] *pāḍavam,* பெ. (n.) வடவைத்தீ; the submarine fire

*[வடவம் → படவம் → பாடவம்]*

**பாடவம்**[2] *pāḍavam,* பெ. (n.) 1. வல்லமை; cleverness,ability,prowess. "*பாடவத்தொழின்*

*மன்மதன் பாய்கணை"* (கம்பரா.சூர்ப்.73); 2. களிப்பு (திவா); exultation,joy 3. நலம் (யாழ்.அக); health 4. பெருமை (யாழ்.அக); greatness.

**பாடவம்³** *pāḍavam,* பெ. (n.) *பாடகம்³* பார்க்க; see *pāḍagam. "காற்பாடவம் கழன்றுபோமோ?* (கொ.வ.)

**பாடவரி** *pāḍa-vari,* பெ. (n.) ஊர்வரிவகை; a village cess.

**பாடவரை** *pāḍavarai,* பெ. (n.) வாளவரை (நாமதீப.337.); sword-bean.

*[வாளவரை → பாடவரை]*

**பாடவள்** *pāḍavaḷ,* பெ. (n.) 1. *பாடவை* பார்க்க; see *pāḍavai* 2. பாடும் பெண்; songstress

*[பாட்டு → பாடு + அவள்]*

**பாடவன்** *pāḍavaṉ,* பெ. (n.) 1. பாடுபவன் (யாழ்.அக); songster 2. *பாடவை* பார்க்க; see *pāḍavai.*

*[பாடு + அவன் → பாடவன்]*

**பாடவிதானம்** *pāḍa-vidāṉam,* பெ. (n.) (இலங்.) பாடத்திட்டம்; curriculum

*[பாடம் +* skt.vi-tāṉa› *த. விதானம்]*

**பாடவியம்** *pāḍaviyam,* பெ. (n.) வாச்சியவகை (S.I.I.ii275); a musical instruments.

*[பாடு → பாடவியம்]*

**பாடவுரை** *pāḍa-v-urai,* பெ. (n.) பாடவேறுபாடு காட்டியெழுதும் உரை; commentary which denotes the variation of text.

*[பாடம் + உரை]*

(உரையெழுதுமிடத்து எடுத்தெழுதிய மூலமும் தானெடுத்துக் கொண்ட பாடத்திற்குப்பிறர் வேறுவகை யாகச் சொல்லுவரென்று காட்டலும் (நன்,பொது.21.)

**பாடவேளை¹** *pāḍa-vēḷai,* பெ. (n.) ஒன்பான் மணிகளை மதிப்பிடுதற்கேற்ற ஒளியமைந்த வேளை; time when the lustre of a gem is clearly perceived.

*[பாடம் + வேளை]*

**பாடவேளை²** *pāḍa-vēḷai,* பெ. (n.) பள்ளிகளில் பாடப்பிரிவினை செய்து நடத்தும் காலக்கூறு; period. "இன்று, முதல்பாடவேளை தமிழ்" (உ.வ.)

*[பாடம் + வேளை]*

**பாடவை** *pāḍavai,* பெ. (n.) ஆடவை (திவா.); gemini of the zodiac.

*[ஆடவை → பாடவை]*

**பாடற்பயம்** *pāḍaṟ-payam,* பெ. (n.) பாடலின்பம் (பரிபா.); the pleasure of reciting poems.

*[பாடல் + பயம்]*

**பாடற்பயன்** *pāḍaṟ-payaṉ,* பெ. (n.) இன்பம், தெளிவு, நிறை, ஒளி, வன்சொல், இறுதி, மந்தம், உச்சம் என்னும் எண்வகையான இசைப்பயன் (சிலப்.3,16,உரை.); effect of a song, of eight kinds, viz., iṉbam, teḷivu, niṟai, oḷi, vaṉšol, iṟudi, mandam, uccam.

*[பாடல் + பயன்]*

**பாடற்றொழில்கள்** *pāṭaṟ-ṟoḻilgaḷ,* பெ. (n.) இசைப்பாடல் பாடுமுன் யாழ் முதலியவற்றில் செய்யும் முன் ஏற்பாடுகள்; preliminary work in musical instruments.

*[பாடல் + தொழில்கள்]*

(யாழின்கண் வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், எள்ளல், பட்டடையென்னு மிசைக் கரணங்களெட்டும்; பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு என்னுங்கலைத் தொழில்களெட்டும், மிடற்றின்கண் எடுத்தல், படுத்தல், நலிதல், நடுக்கம் கம்பிதம்) குடிலம் என்னுமைந்தும் பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு வண்ண முதலிய வண்ணங்கள் எழுபத்தாறுமாம். (த.சொ.அக.)

**பாடறிந்தொழுகு–தல்** *pāḍaṟindoḻugu-,* 9. செ.கு.வி. (v.i.) இயல்பறிந்து நடத்தல்; behave in habitude. "*பண்பெனப் படுவது பாடறிந்தொழுகுதல்*" (கலித்.133,8)

*[பாடு + அறிந்து + ஒழுகு–,]*

**பாடறிவர்** *pāṭaṟivar,* பெ. (n.) கடற்றொழில் அறிவுடையவர்; one who expert in oceanfishing.

பாடறியுந் திறனுடையார். இவ்விடத்தே வலை வைத்தால் இத்தன்மையான மீன் கிடைக்குமெனுங் கடலறிவுடைய மீனவர் (முகவை.மீனவ.)

*[பாடு + அறிவர்]*

**பாடன்** *pāḍaṉ,* பெ. (n.) *பாடம்*[1] பார்க்க; 3 (S.I.I.ii,78) see *pāḍam.*

*[பாடு → பாடன்]*

**பாடன் மகடூஉ** *pāḍaṉ-magaḍūu,* பெ. (n.) விறலி (திவா.); songstress.

*[பாடன் + மகடூஉ]*

**பாடன்மகள்** *pāḍaṉ-magaḷ,* *பாடன் மகடூஉ* (யாழ்.அக.) பார்க்க; see *pāḍaṉ-magaḍūu.*

*[பாடன் + மகள்]*

**பாடனம்**[1] *pāḍaṉam,* பெ. (n.) செய்ந்நஞ்சு; sey-n-nañju.

**பாடனம்**[2] *pāḍaṉam,* பெ. (n.) 1. சொல்லிக் கொடுத்தல்; teaching. 2. பாடுகை; singing.

*[பாடம் → பாடனம்]*

**பாடனம்**[3] *pāḍaṉam,* பெ. (n.) பிளக்கை (யாழ்.அக.); breaking, splitting.

*[பாளம் → பாடம் → பாடனம்]*

**பாடனுபவி–த்தல்** *pāḍaṉubavi-,* பெ. (n.) 4.செ.கு.வி. (v.i.) வருந்துதல்; to suffer, experience suffering, undergo trials.

*[பாடு+* skt.anu-bhavin› *த. அனுபவி–,]*

**பாடா** *pāḍā,* பெ. (n.) 1. ஆடுதின்னாப்பாலை (மலை.) பார்க்க; see *āḍutiṉṉā-p-pālai.* worm-killer. 2. கொடிவகை; shining moonseed.

மறுவ: பங்கம்பாளை, பாடக்கிடம்.

**பாடாகு–தல்** *pāḍāgu-,* 7. செ.கு.வி. (v.i.) 1. கெடுதியடைதல்; to suffer injury. 2. அழிதல்; to perish; to be ruined.

*[படு → பாடு+ ஆகு–,]*

**பாடாசிதம்** *pāḍāšidam,* பெ. (n.) கல்வாழை; stone plantain. (சா.அக.)



**பாடாண்** *pāḍāṇ,* பெ. (n.) *பாடாண்டிணை* (தொ.பொ.80) பார்க்க; see *pāḍāṇṭiṇai.*

*[பாடு + ஆண்]*

**பாடாண்டிணை** *pāḍāṇṭiṇai,* பெ. (n.) பாட்டுடைத் தலைவனது, புகழ், வலி, கொடை, அளி முதலியவற்றைப் புகழ்ந்து கூறும் புறத்துறை (தொல்.பொ.80,உரை); (puṟap.) theme praising a hero's fame, power, munificence, etc.

*[பாடாண் + திணை]*

(புறப்பொருட்டிணையினொன்று; அஃது எட்டுவகைப்படும் (தொல்.பொரு.அ.உரை.) "*பாடப்படுகின்ற ஆண்மகனுடைய ஒழுகலாறு என்பது பொருள் என்றும், இது வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை*" என்றும் கூறுவர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.)

**பாடாண்பாட்டு** *pāḍāṇ-pāṭṭu,* பெ. (n.) *பாடாண்டிணை* பார்க்க; see *pāḍāṇṭiṇai.* (ஒருவனைப் புகழ்தலாற் பாடாண் பாட்டு ஆயிற்று.) (இளம்.தொல்.பொ.79)

**பாடாணம்**[1] *pāḍāṇam,* பெ. (n.) 1. கல்; stone. "*ஊன்றுமெழிற்பாடாணமை*" (ஆசௌ.கருச.) 2. நச்சுச்சரக்கு; அது பிறவிப்பாடாணம், வைப்புப்பாடாணம் என விருவகை. (வைத்தியபரி.)

**பாடாணம்**[2] *pāḍāṇam,* பெ. (n.) *செய்ந்நஞ்சு* பார்க்க; see *šey-n-nañju.*

**பாடாந்தரம்** *pāḍāndaram,* பெ. (n.) பாடவேறுபாடு; variant reading.

*[பாடம் + skt.antara> த. அந்தரம்]*

**பாடாய்முடி—தல்** *pāḍāy-muḍi-,* செ.கு.வி. (v.i.) திடுமென நேரும் பேரிடர்; to end in disaster. "பாடாய் முடியும்" (கொன்றைவே.)

*[பாடு → பாடாய் + முடி—,]*

**பாடாய்விழு—தல்** *pāḍāy-viḻu-,* 2. செ.கு.வி. (v.i.) 1. நேர்ச்சியுண்டாகும்படி விழுதல்; to have a dangerous fall. 2. பேரிழப்பாகும்படி மரம் முதலியன சாய்தல்; to fall causing heavy loss, as valuable tree; to lie prostrate as the crops of a field.

*[பாடாய் + விழு—,]*

**பாடாயடி—த்தல்** *pāḍāy-aḍi-,* 4. செ.குன்றாவி. (v.t.) கடுமையாகப் புடைத்தல்; to beat severely.

*[பாடாய் + அடி—,]*

**பாடாயழி–தல்** *pāḍāy-aḻi-,* **செ.கு.வி.** (v.i.) மிகக் கேடுறுதல்; to be seriously damaged; to be ruined.

*[பாடாய் + அழி–,]*

**பாடாலம்** *pāḍālam,* **பெ.** (n.) பாதிரி; trumpet, flower. "பாடாஅலப் புட்பத்தனவாகிய பண்புநாற்றம்" **(நீலகேசி.422)**

*[பாடலம் → பாடாலம்]*

**பாடாவதி** *pāḍāvadi,* **பெ.** (n.) **1.** துன்பம்; trouble, distress. **2.** பயனற்றது; useless thing.

*[பாடு + skt.ava-dhi> த.அவதி]*

**பாடாவதிநட்சத்திரம்** *pāḍāvadinaṭcattiram,* மங்கலமற்ற சில விண்மீன்கள் **(சோதிட. சிந். 56)**; a group of inuspicious viṇmīṉ.

*[பாடு + வதி +* skt.nakṣatra> *த. நட்சத்திரம்]*

**பாடாவவரை** *pāḍā-v-avarai,* **பெ.** (n.) தம்பட்டை அவரை; jamaica horse bean. **(சா.அக.)**

**பாடாவறுதி** *pāḍāvaṟudi,* **பெ.** (n.) **1.** பேரிழப்பு; very heavy or severe damage; great loss. **2. அடிபட்டுப்** படுக்கையாகக் கிடக்கை; bed-ridden condition after a severe injury.

**மறுவ.** பாடாவாரி.

*[பாடு + ஆ + அறுதி]*

**பாடாவனசம்** *pāḍāvaṉašam,* **பெ.** (n.) பெருங்குமட்டி; bitter apple, cuccmus genus. (சா.அக.)

**பாடாவாரி** *pāḍāvāri,* **பெ.** (n.) *பாடாவறுதி* பார்க்க ; see *pāḍāvaṟudi.*

**பாடாவிதி** *pāḍāvidi,* **பெ.** (n.) *பாடாவதி* பார்க்க; see *pāḍāvadi.*

**பாடாவிரி** *pāḍāviri, பாடாவதி* பார்க்க; see *pāḍāvati.* "அதுவொருபாடாவிரி" **(இராமநா. பால.11)**

*[பாடாவதி → பாடாவிரி]*

**பாடாழி** *pāḍāḻi,* **பெ.** (n.) இரட்டையோட்டுக் கிளிஞ்சில், கிடைக்குமிடம்–கழிமுகப்பரப்பு; backwater area.

*[ பாடு+ஆழி]*

**பாடாற்று–தல்** *pāḍāṟṟu-,* **5. செ.கு.வி.** (v.i.) துன்பம் பொறுத்துக்கொள்ளுதல்; to endure affliction or sorrow. *"சிலநாளாற்றாமை யோடே பாடாற்றிக்கிடந்தார்"* (ஈடு **5,3,1)**

*[பாடு + ஆற்று–,]*

**பாடி[1]** *pāḍi,* **பெ.** (n.) **1.** நகரம்; town, city *"பாடி விழாக்கோள் பன்முறையெடுப்ப"* **(சிலப். உரைபெறு.3) 2.** சேரி **(திவா.)**; hamlet; quarters. **3.** நாடு **(யாழ்.அக.)**; district. **4.** முல்லை நிலத்தூர் (திவா.); pastoral villiage. **5.** *பாடிவீடு* பார்க்க; see *pāḍi-vīḍu.* *"பாடி பெயர்ந்திட்டான் பல்வேலான்"* **(பு.வெ.3,10) 6.** படை (திவா.); army, troop.**7.** -கவசம் **(அகநி.)**; armour. coat of mail. **8.** உளவாளி **(வின்)**; spy.

**தெ.**பாடு. **க.ம.** பாடி.

*[படு → பாடி]*

**பாடி²** *pāḍi,* பெ. (n.) 1. பாடு—பவன்—பவள், வது; singer, warbler. "*கூழுக்குப்பாடி; வானம்பாடி*" 2. பாட்டுப்பாடிப் பிச்சையெடுப்பவன்; a professional, singing beggar. "*பாடிபரதேசி*" 3. ஒருவகைப்பண் (யாழ்.அக.); a tune. "*பாடிப்பாடிக் குத்தினாலும் பதரில் அரிசி இல்லை*" (பழ.)

*[பாடு → பாடி]*

**பாடிக்காவல்** *pāḍi-k-kāval,* பெ. (n.) *பாடிகாவல்* பார்க்க; see *pāḍikāval.*

*[பாடி + காவல்]*

**பாடிக்கொடு—த்தல்** *pāḍi-k-koḍu-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. பிறனுக்காகச் செய்யுள் இயற்றித் தருதல்; to compose a poem and give it to another. 2. பாடலியற்றுதல்; to compose a poem. "*பாடிக்கொடுத்தாணற் பாமாலை*" (திவ். திருப்பா.தனியன்)

*[பாடி + கொடு—,]*

**பாடிகா** *pāḍigā,* பெ. (n.) சந்தனக் குழம்பு; sandal solution or paste mixed with other perfumes. (சா.அக.)

**பாடிகாப்பார்** *pāḍi-kāppār,* பெ. (n.) ஊர்க்காவலாளர்; village watchmen; those responsible for the safety of property in a village. "*ஒன்றுகெட்டவாறே பாடிகாப்பாரைப் பிடிக்குமா போலே*" (ஈடு10,1,4)

*[பாடி + காப்பார்]*

**பாடிகாவல்** *pāḍi-kāval,* பெ. (n.) 1. ஊர்க்காவல்; system of watch in a village 2. தலையாரி; village watchmen 3. ஊர்க் காவற்கு வாங்கும் வரி (S.I.I.89); contribution for village watching. 4. வழக்கு உசாவி ஒப்பநாடிச் செய்யுந் தண்டம்(சி.போ.2,2,வார்த்.); punishment enforced by a tribunal. "*பாடி காவலிற்பட்டுக்கழிதிரே*" (தேவா.232,2) 5. பாதுகாவல்; safe custody or detention. "*பாடிகாவலிடுமின்*" (திவ்.பெரியாழ். 3,7,5)

*[பாடி + காவல்]*

**பாடிசம்** *pāḍišam,* பெ. (n.) பெருங்கோரை; large sedge grass. (சா.அக.)

**பாடிசொல்(லு)—தல்** *pāḍi-šol-,* 8.செ.குன்றாவி.(v.t.)A உளவைவெளிப் படுத்துதல்; to expose secrets.

*[பாடி + சொல்—,]*

**பாடிப்பேச்சு** *pāḍi-p-pēccu,* பெ. (n.) *பாடிக்கதை* பார்க்க; see *pāḍi-k-kadai.*

*[பாடி + பேச்சு]*

**பாடிபரதேசி** *pāḍi-paradēši,* பெ. (n.) 1. பாடிக்கொண்டு அலைந்து திரிபவன்; wandering ballad-singer. 2. ஊருராய்த் திரியும் இரவலன்; wandering beggar.

*[பாடி + பரதேசி]*

**பாடிமாற்றம்** *pāḍi-māṟṟam,* பெ. (n.) வழக்குச் சொற்கள் (தொல்.பொ.553,உரை.); colloquialisms, local idioms.

*[பாடி + மாற்றம்]*

**பாடிமிழ்கடல்** *pāḍimiḻkaḍal,* பெ. (n.) அலைபாடுங்கடல்; sea waves which are personificated as singing. *'பாடிமிழ் கடலின் எழுந்த சும்மையொடு'* (அகநா.334–4)

*[பாடு + இமிழ் + கடல்]*

**பாடிமிழ்–தல்** *pāḍimiḻ-,* 13. செ.கு.வி. (v.i.) ஒலித்தல்; to roar, make a loud noise. *"பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்பன்"* (புறநா.49)

*[பாடு + இமிழ்–,]*

**பாடிமிழ்பனிக்கடல்** *pādimiḻpaṉi-k-kaḍal,* பெ. (n.) *பாடிமிழ்கடல்* பார்க்க; see *padimiḻkaḍal*

*"பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு"* (முல்லை–4)

*"பாடிமிழ் பனிக்கடல் துழைஇப் பெடையோடு"* (நற்.91–3)

*"பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்ப னென்கோ"* (புறம்.49–2)

*[பாடு + இமிழ் + பனி + கடல்]*

**பாடிமிழ் பனிநீர்** *padimiḻpaṉinir,,* பெ. (n.) ஒலிக்கும் கடலலைகளால் உண்டாகும் குளிர்ந்த நீர்த் திவலை; globale of water *"பாடிமிழ் பனிநீர்ச் சேர்ப்பனொடு"* (நற்.378–11)

*[பாடு + இமிழ் + பனிநீர்]*

**பாடிமிழ்விடர்முகை** *pāḍimiḻviḍarmugai,* பெ. (n.) ஒலிக்கின்ற அலைகடல் மோதும் பாறையிடுக்கு; rock cave that which located in seashore. *"பாடிமிழ் விடர்முகை முழங்க"* (நற்.156–9)

*[பாடு + இமிழ் + விடர்முகை]*

**பாடியோட்டம்** *pāḍi-y-ōṭṭam,* பெ. (n.) சிற்றூர் விளையாட்டு வகை (யாழ்ப்.); game of prisoners'bars.

*[பாடி + ஓட்டம்]*

**பாடியோடு–தல்** *pāḍi-y-ōḍu-,* 5. செ.கு.வி. (v.i.) பாடியோட்டத்திற் பாடிக்கொண்டு ஓடுதல் (வின்.); to sing running, in the game of pāḍi-y-ōṭṭam.

*[பாடி + ஓடு–,]*

**பாடிரம்**[1] *pāḍiram,* பெ. (n.) *பாடீரம்* பார்க்க; see *pāḍīram.*

**பாடைகுலைத்தான்** *pāḍaikulaittāṉ,* பெ. (n.) பாகல்; bitter guard. (சா.அக.)

*[பாடை + குலைத்தான்]*

(அறுசுவையுள் கசப்புச்சுவை வாணாளைக் கூட்டும் என்பது தமிழ் மருத்துவமாகலின் பாகலுக்கு இப்பெயர் வந்தது)

**பாடில்** *pāḍil,* பெ. (n.) வாகைமரம்; common srissa. (சா.அக.)

**பாடிலம்** *pāḍilam,* பெ. (n.) நாடு(R.); country

*[பாடு → பாடிலம்]*

**பாடிலா** *pāḍilā,* பெ. (n.) 1. வட்டத் திருப்பி (பொன் முசுட்டையின் வேர்); root of sida acvta 2. பங்கம்பாளை; worm killer. (சா.அக.)

**பாடிவீடு[1]** *pāḍi-viḍu,* பெ. (n.) பாசறை; military camp, war-camp. "*பாடிவீட்டினைவலஞ் செய்கென்றான்*" (கம்பரா.விபீடண.151)

*[பாடி + வீடு]*

[போர் அமைதிக் காலத்தில் ஒரு நாட்டின் போர் வீரர்களுள் மணமாகாதவர்கள் குடியிருக்கப் பயன்படுவதும் பாடிவீடெனவே அழைக்கப்பெறும். பாடிவீடு நிலையான கட்டடம். பாடிவீட்டில் போர்வீரர்களுக்கு வேண்டிய உணவு விடுதிகளும், பொழுது போக்குக்கான ஏந்துகளும் இருக்கும். பயிற்சியின் போது தங்கியிருக்கும் பாடிவீடுகள் இடம் விட்டு இடம் எடுத்துச் செல்லத்தக்கன.] கலைக்களஞ்சியம்

**பாடிவீரர்** *pāḍi-virar,* பெ. (n.) படைவீரர் (நிகண்டு.); troops.

*[பாடி + வீரர்]*

**பாடிவேட்டை** *pāḍi-vēṭṭai,* பெ. (n.) பாரிவேட்டை (S.I.I.iv,115); hunting.

*[பாரிவேட்டை → பாடிவேட்டை]*

**பாடினம்** *pāḍiṉam,* பெ. (n.) சித்திமூலம்; ceylon leadwort. (சா.அக.)

மறுவ: கொடுவேலி.

**பாடினி[1]** *pāḍiṉi,* பெ. (n.) பாடுவாள்; singer. caste "*பாடினியணியாள்*" (புறநா.242.) 2. பாண்குலமகள்; songstress woman of the pāṇar caste. "*வயவேந்தன் மறம்பாடிய பாடினி யும்மே*" (புறநா.11) 'இ' பெண்பாலீறு

*[பாடு → பாடினி]*

"*பெடைமயி லுருவிற் பெருந்தகு பாடினி*" (பொருந.47)

"*வாலொளி முத்தமொடு பாடினி யணிய*" (பொருந.162)

"*படையே ருழவ பாடினி வேந்தே*" (பதிற்று.14–17)

"*பசும்பூன் மாா்ப பாடினி வேந்தே*" (பதிற்று–17–14)

"*ஒருதிறம் பாடினி பாலையங் குரலின்*" (பர்.17–17)

"*பாடினி பாடும் வஞ்சிக்கு*" (புறம்.15–24)

"*பாணன் சூடான் பாடினி யணியாள்*" (புறம்.242–3)

*[பாணன் → பாடினி (பெண்பால்)]*

**பாடினி[2]** *pāḍiṉi,* பெ. (n.) மட்பாண்டம்; earthern vessel, or pot. (சா.அக.)

**பாடீநம்[1]** *pāḍinam,* பெ. (n.) 1. குங்குலியம் பார்க்க; see *kuṅguliyam.* 2. வாளைமீன் பார்க்க; see *vāḷaimiṉ. scabbard fish.*

மறுவ: கொடுவேலி

**பாடீரம்[2]** *pāḍiram,* பெ. (n.) 1. சந்தனம் (தைலவ.தைல.); sandalwood. 2. முகில்; cloud. 3. மூட்டுப்பிடிப்பு; rheumatism 4. மூங்கிலரிசி; granular seeds of the bamboo. 5. கிழங்கு வகை; a root. 6. துத்தநாகம் (நாநார்த்த.220.); zinc. 7. வயல் (நாநார்த்த); field.

**பாடு[1]–தல்** *pāḍu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. பண்ணிசைத்தல்; to sing, to chant, "*மறம்பாடிய பாடினியும்மே*" (புறநா.11) 2. வண்டு முதலியன இசைத்தல்; to warble, as birds; to hum, as bees or beetles. "*வண்டுபல விசைபாட*" (திவ்.பெரியதி.3,9,3) 3. பாப்புனைதல்; to make verses, compose poems. "*பாடினார் பல்புகழைப் பல்புலவர்*" (பு.வெ.8,1) 4. பாட்டு ஒப்பித்தல்; to recite

verses from a book. **5.** பாராட்டுதல்; to speak endearingly. "*தங்கள் காதலினாற் றகைபாடினார்*" (சீவக.1337.) **6.** போற்றுதல்; to praise. "*பாடுகம் வம்மினோ பரிசின் மாக்கள்*" (புறநா.32) **7.** கூறுதல்; to declare, proclaim. "*அறம் பாடிற்றே*" (புறநா.34) **8.** வைதல்; to abuse. **9.** பாடியோட்டத்திற் பாடுதல் (யாழ்ப்); to sing in the game of pāḍi-y-ōṭṭam.

க. ஹாடு.

*[பா → பாடு]*

**பாடு²** *pāṭu,* பெ. (n.) **1.** கதிரவன் தோற்றத்திற்கு ஏழாமிடம்; seventh place of the birth. "*கொடியோடு தயத்தும் பாட்டினுநிற்கிற்சேய் கூற்றுவன் பாற்கடிதேயணை வுறும்*" (விதா.ந.சாதகநா.) **2.** தகுதி; qualification "*பகையாகும்பாடறியாதனையிரவு*" (நான்மணி.56.)

**பாடு³** *pāḍu,* பெ. (n.) **1.** உண்டாகை; coming into being. "*சூழ்வினையா லடைபட் டுறுபாடனைத்தையும்*" (அரிச்.பு.மீட்சி.2) **2.** நிகழ்ச்சி (வின்); occurrence; happening. **3.** நுகர்ச்சி; experience; endurance; feeling; bearing. **4.** முறைமை; proper method, propriety. "*எம்வயிற் பாடறிந் தொழுகும் பண்பினாரே*" (புறநா.197) **5.** நிலைமை; condition, situtation. "*அவன் செத்த பாடில்லை*" **6.** செவ்வி; fit condition. "*பெரும்பாட் டீரத்து*" (புறநா.120) **7.** கடமை; duty, obligation, accountablity. **8.** கூறு; division. "*பாடுபல வமைத்துக் கொள்ளை சாற்றி*" (அகநா.30) **9.** பயன்; benefit "*நெறிநூல்கள் பாடிறப்பப் பன்னுமிடத்து*" (ஏலாதி,41) **10.** உலகவொழுக்கம்; etiquette; conventional rules of social behaviour. "*பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்*" (கலித்.133) etiquette; conventional rules of social behaviour **11.** குணம்; (அக.நி.); nature, quality, attribute, disposition. **12.** பெருமை; honour, greatness, dignity eminence "*கற்றாரனைத்திலர் பாடு*" (குறள்,409) **13.** அகலம் (திவா.); width breadth. **14.** ஓசை; sound, noise. "*பாடினருவிப் பயங்கெழு மீமிசை*" (மலைபடு.278) **15.** உடல்; body "*அரக்கர் பாடுகிடந் தொத்த*" (கல்லா.27,11) **16.** உழைப்பு; industry, labour. "பாடுபட்டுத் தேடிப் பணத்தை" (நல்வழி:22) **17.** அலுவல்; business, concern or affair. "*தன்பாடு பார்த்துக்கொண்டிருக்கிறேன்.*" **18.** வருத்தம்; affliction, suffering, hardship. "*தம்பாடு ரைப்பரோ தம்முடையார்*" (நாலடி,292) **19.** படுக்கைநிலை; recumbency, lying prostrate. "*பன்னாளாயினும் பாடுகிடப்பேன்*" (மணிமே.18,158) **20.** விழுகை; fall. "*நொச்சிப் பாடோர்க்குஞ் செவியோடு*" (கலித்.46) **21.** தூக்கம்; sleep. "பாடின்றிப் பசந்தகண்" (கலித்.16) **22.** சாவு; death. "*அபிமன்னு வின்பாடு*" (பாரதவெண்.813,குறிப்பு) **23.** கேடு; ruin, waste, loss, injury damage, disaster, detriment. "*ஆடுறு குழிசி பாடின்று தூக்கி*" (புறநா.371) **24.** குறைவு; shortage. "*அளவுபாடு*" **25.** பூசுகை; smearing. "*பாடு புலர்ந்த நறுஞ்சாந்தின்*" (மதுரை.226) **26.** சாயுங்காலம்; setting, as of a planet, sun or star. "*செங்கதிர்ச் செல்வனெழுச்சியும் பாடும்*" (பெருங்.வத்தவ.2,87) **27.** ஆற்றல் குன்றிய நிலையில் உள்ள ஓரை (நிசராசி); (astrol.) the sign of debilitation of a planet. "*பார்க்கவனார்பாடுச்சி சேருங்கால்*" (சினேந்.207) **28.** இடம் (பிங்.); place, location, situation, **29.** பக்கம்; side "*உம்பி யோர்ந்தொரு பாடுற நடந்தனன்*" (கம்பரா. கும்பகருண.282) **30.** அருகு (பிங்.);

nearness. "*பாடுசாரா வினை*" (திவ். திருவாய்.9,10,11) **31.** ஏழாம் வேற்றுமையுருபு (நன்.302); case-sign of the locative. **32.** மீன்பிடிக்கை; capture; take of fish at one drawing; draught. **33.** *பாடுபழக்கம்* பார்க்க; see *pāḍu-paḻakkam*.

'*பாடுபடாமற் போனால் பலன் இல்லாமற் போகும்*' (பழ.)

**பாடுஎடு–த்தல்** *pāḍu-eḍu-*, **3.** செ.கு.வி (v.i.) *பாடுபடு–தல்* பார்க்க see *pāḍu-paḍu-*,

*[பாடு + எடு–,]*

**பாடுகட்டு–தல்** *pāḍu-kaṭṭu*, **5.** செ.கு.வி. (v.i.) முன்னம் பாய்ச்சிய கடற்பரப்பிலேயே மறுமுறையும் வலை பாய்ச்சுதல் (முகவை. மீனவ.); repeated sea fishing wiht net in the same place.

**பாடுகாட்டிவிழு–தல்** *pāḍu-kāṭṭi-viḻu-*, **2.** செ.கு.வி. (v.i) சாய்ந்து விழுதல்; to fall on one eide through weakness.

*[பாடு காட்டு + விழு–,]*

**பாடுகாட்டு–தல்** *pāḍu-kāṭṭu-*, **10.** செ.கு.வி. (v.i.) **1.** பக்கஞ்சரிந்து கிடத்தல்; to lie leaning on oneside. **2.** நீட்டமாகக் குப்புற விழுதல்; to lie prostrate or flat.

*[பாடு + காட்டு–,]*

**பாடுகாயம்** *pāḍu-kāyam*, பெ. (n.) படுகாயம்; mortal wound.

*[படுகாயம் → பாடுகாயம்]*

**பாடுகாவல்** *pāḍu-kāval*, பெ. (n.) தன்னருகிலே வைக்குங்காவல் (திவ்.) பெரியாழ். **3,7,5,** வ்யா.பக்.**713.**); keeping another in restraint, near oneself.

*[பாடு + காவல்]*

*[பாடிகாவல் → பாடுகாவல்]*

**பாடுகிட–த்தல்** *pāḍu-kiḍa-*, **3.** செ.கு.வி. (v.i.) நோன்பு கடைப்பிடித்தல்; to prostrate before deity awaiting its grace. "பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாளுக்கு" (சிலப். 9,15) "*பன்னாளாயினும் பாடு கிடப்பேன்*" (மணிமே.18158)

*[பாடு + கிட–,]*

**பாடுசாய்தல்** *pāḍu-šāy-*, பெ. (n.) சூரிய சந்திரன் மறைதல்; setting of the sun or moon.

**பாடுசேதம்** *pāḍu šēdam*, பெ. (n.) *பாடுவாசி* (இ.வ.) பார்க்க; see *pāḍu-vāši*.

*[பாடு + சேதம்]*

**பாடுதாங்கு–தல்** *pāḍu-tāṅgu*, **9.** செ.கு.வி. (v.i.) துணைநிற்றல்; to support another's action or deed. "அவற்குப் பாடுதாங்குமவனும் இப்பரிசே தண்டப்படுவது" (T.A.S. iv10)

*[பாடு + தாங்கு]*

**பாடுதுறை** *pāḍu-tuṟai*, பெ. (n.) **1.** புலவர்கள் பாடுதற்குரிய போர்த்துறை; war-like exploits, worthy of being song by poets. "பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே" (புறம்.21.) **2.** தத்துவராயர் இயற்றியதொரு சமயநூல்; a religious poem by Tattuvarāyar.

*[பாடு + துறை]*

**பாடுநர்** *pāḍunar,* பெ.(n.) **1.** இசைபாடுவோர்; singers. **2.** புலவர்; poets. "பாணர் பாடுநர் பரிசிலர்" (புறம்.135)

"*பாடுநர் கொளக்கொளக் குறையாத் தானைச் சான்றோர்*" (பதிற்று.82–12)

"*பாடுநர் புரவல னாடுநடை யண்ணல்*" (பதிற்று.86–8)

"*பாடுநர்த் தொடுத்த கைவண் கோமான்*" (அகம்.100–11)

"*உலைந்த ஒக்கல் பாடுநர் செலினே*" (அகம்.349–5)

"*செருமிகு சேஎய்திற் பாடுநர் கையே*" (புறம்.14–19)

"*பாடுநர் வஞ்சி பாடப் படையோர்*" (புறம்.33–10)

**பாடுபடல்** *pāḍupaḍal,* பெ. (n.) வேலை செய்தல்; to work hard.

**பாடுபடு–தல்** *pāḍupaḍu-,* 20. செ.கு.வி. (v.i.) **1.** மிக உழைத்தல்; to take pains, labour hard **2.** வருத்தப்படுதல்; to suffer or endure hardship.

*[பாடு + படு–,]*

**பாடுபடுத்து–தல்** *pāḍupaḍuttu,* 5. செ.குன்றாவி. (v.t.) **1.** துன்பப்படுத்துதல் (உ.வ.); to torture, cause pain **2.** கடினவேலை வாங்குதல்; to set to hard labour,keep at hard work.

*[பாடுபடு → பாடுபடுத்து–,]*

**பாடுபழக்கம்** *pāḍu-paḻakkam,* பெ. (n.) வீண்பேச்சு (இ.வ.); idle talk, gossip.

*[பாடு + பழக்கம்]*

**பாடுபறப்பு** *pāḍupaṟappu,* பெ. (n.) கவலை (வின்.); one's cares or anxieties.

*[பாடு + பறப்பு]*

**பாடுபார்–த்தல்** *pāḍupār,* செ.கு.வி. (v.i.) **1.** மீன் மேயுங் (கடல்) இடவரம்பறிதல்; to found the fishing limit in the sea **2.** வலை வைத்து மீன்பிடித்தல். fishing with nets. **3.** தன் அலுவல் கவனித்தல்; to attend to one's business.

*[பாடு + பார்–,]*

**பாடுபிடி–த்தல்** *pāḍupiḍi-,* 4. செ.கு.வி.(v.i.) நீரில்லாமையாற் பயிர் முதலியன பட்டுப்போதல் (நாஞ்); to become damaged, as standing crops, an account of drought.

*[பாடு +பிடி –,]*

**பாடுபெயல்** *pāḍu-peyal,* பெ.(n.) விடாமழை; incessant rain. "பாடுபெய னின்ற பானா ளிரவில்" (கலித்.90)

*[பாடு + பெயல்]*

**பாடுபொருள்** *pāḍuporuḷ,* பெ. (n.) பாடலின் கருவாக அமையும் பொருள்; subject matter (of a poem, etc.) "*குமுகாய அவலங்களே இவர் பாக்களின் பாடுபொருள்*"

**பாடுவன்** *pāḍuvaṉ,* பெ. (n.) *பாடுவான்* (வின்.); பார்க்க; see *pāḍuvāṉ*

**பாடுவாசி** *pāḍu-vāśi,* பெ. (n.) நெல்லை அளத்தல் பொன்னை உருக்குதல் முதலியவற்றால் உண்டாகும் இழப்பு (உ.வ.); wastage, as in strong or measuring grain, in filing or melting gold.

*[பாடு + வாசி]*

**பாடுவான்** *pāḍuvāṉ*, பெ.(n.) 1. பாடகன்; singer பாடுவார் "பாக்கங் கொண்டென" (பரிபா.7,31.) 2. பாணன்; pāṇar caste. நம்பாடுவான்

*[பாடு → பாடுவான்]*

**பாடுவி** *pāḍuvi*, பெ. (n.) புகழ்பவள்; she who praises. "தந்நலம் பாடுவி தந்தாளாம்" (கலித்.84)

*[பாடு → பாடுவி]*

பாடுவான் ஆண்பால் பாடுவி பெண்பால்

**பாடுவிச்சி** *pāḍuvicci*, பெ. (n.) பாண்மகள் (சூடா.); woman of the pāṇar caste

*[பாடு → பாடுவிச்சி]*

பாடுவான் ஆண்பால் பாடுவிச்சி பெண்பால்

**பாடுவை-த்தல்** *pāḍuvai-*, 4.செ.கு.வி கடல்மேற் சென்று பெரிய வலையைக் கடலில் இறக்குதல் (தஞ்சை.மீனவ.); to erect fishnet for fishing

*[பாடு + வை-,]*

**பாடேடு** *pāḍēḍu*, பெ. (n.) தாயேடு (யாழ்.அக.); original manuscript.

*[பாடு + ஏடு]*

**பாடேதகி** *pāḍēdagi*, பெ. (n.) கலப்புகுவள்ளி என்னும் செய்ந்நஞ்சைப் பேதிக்கும் ஓர் மூலிகை; an unknown drug said to act mineral poisons. (சா.அக.)

**பாடை** *pāḍai*, பெ. (n.) 1. பருத்தி; cotton; 2. *வட்டத்திருப்பி* பார்க்க; see *vatta-t-tiruppi*. 3. பிணத்தைத் தூக்கும் பாடை மரம், அதாவது பிணக்கட்டில், bier "உயர் பாடைமேற் காவுநாள்" (தேவா.927,3) 4. ஆணை; an assertion confiromed by oaths.

மறுவ. வஞ்சினம்.



**பாண்** *pāṉ*, பெ. (n.) பாழாக்குவது; that which ruins "பாதியிலே நீங்குமோ பாண்சனியன்" (தெய்வச். விறலிவிடு.377)

*[பாழ் → பாண்]*

**பாண்சேரி** *pāṇšēri*, பெ. (n.) பாணர் இனத்தார் வாழும் சேரி; a village occupied by the pāṇ caste. "*மீன்சீவும் பாண்சேரியொடு*" (மதுரைக்.269) "*மீன்சீவும் பாண்சேரி*" (புறநா.348-4)

*[பாண் + சேரி]*

**பாண்டகச்சம்** *pāṇḍa kaccam*, பெ. (n.) வாகை; common sirisa. (சா.அக.)

**பாண்டகையமரம்** *pāṇda-kayaiya-maram*, பெ. (n.) காட்டுக்குமிழ்; *a* kind of mediacal herb

**பாண்டச்சம்** *pāṇḍaccam,* பெ. (n.) காயசித்திக்குதவும் கொடிநெல்லி என்னும் கிடைத்தற்கரிய மூலிகை; goose berry, creeper, a very rare plant useful for rejuvenation. (சா.அக.)

**பாண்டம்** *pāṇḍam,* பெ. (n.) பெரும்பாலும் மண்ணால் செய்யப்பட்ட கலம்; mostly earthen pot. *"புளி வைத்திருக்கும் பாண்டம்"*

*[பண் → பாண்டம்]*

**பாண்டத்தமைந்தவுப்பு** *panḍattamainḍa-uppu* பெ. (n.) இந்துப்பு; rock salt, epsom salt, sindh salt, (சா.அக.)

**பாண்டத்திற்சமைந்தகன்னி** *pāṇḍattir-c-camainda kanni,* பெ. (n.) கருப்பூரம்; camphor, (சா.அக.)

**பாண்டப்புடம்** *pāṇḍa-p-puḍam,* பெ. (n.) மருந்தை மூசையிலிட்டு, அதை நிறைய நெல் உமியைப் பரப்பிய மண் சட்டியில் வைத்து எரிக்கும் புடம்; a process of calcination in which the medicine is enclosed in a crucible and then placed in the middle of an earthern vessel or pot which is filled to the brim with paddy husk and then heated or roasted by blowing. (சா.அக.)

**பாண்டரங்கக்கூத்து** *pāṇḍaranga-k-kūttu,* பெ. (n.) கூத்துப் பதினொன்றனுள் முப்புரத்தை அழித்தபோது சிவபிரான் வெண்ணீறணிந்து ஆடியது (சிலப்.6,45); dance of sivan when he destroyed the tiripuram, one of eleven kūttu *பாண்டரங்கம்* பார்க்க see *pāṇḍarangam*

*[பாண்டரங்கம் + கூத்து]*

**பாண்டரங்கண்ணனார்** *pāṇḍaran-kannanār,* பெ. (n.) புறநானூற்றுப் பதினாறாம் பாடலையியற்றிய கடைக்கழகப் புலவர்; a sangam poet author of puram 16thpoem.

(இவர் பாண்டரங்கன் என்பவரின் மகனார் ஆதலால் பாண்டரங்கண்ணனார் என்று அழைக்கப் பெற்றார் என்பார்.)

**பாண்டரங்கம்** *pāṇḍarangam,* பெ. (n.) கூத்துப் பதினொன்றனுள் முப்புரத்தை அழித்தபோது சிவபிரான் வெண்ணீறணிந்து ஆடியது (சிலப்.6,45.); dance of sivan when he destroyed the tiripuram, one of eleven kūttu.

(வானவராடிய பதினொரு வகை ஆடலுள் இஃது ஒன்று. இது சிவபெருமான் ஆடியது. "வானோராகிய தேரில் நான் மறைக் கடும்பரி பூட்டி நெடும்புறம் மறைத்து, வார்துகில் முடித்து, கூர்முள் பிடித்துத் தேர்முன் நின்ற திசைமுகன் காணும்படி, சுடுகாட்டிலாடும் பாரதி வடிவாகிய இறைவன் வெண்ணீறணிந் தாடியபாண்டரங்கக் கூத்து" என்பர் அடியார்க்கு நல்லார்; (சிலப்.6:44–5 உரை) அரும்பத உரையாசிரியர் பைரவி ஆடியது என்பர். *"ஏறமர்கடவுண் மூவெயிலெய்வுழிக்....படி நிலை திரியாப் பாண்டரங்கம்மே"* (கலி.1.உரை.)

"பாண்டரங்கம்–வெள்ளைநிறமான திடர். அத்திடரில் நின்று ஆடினமையாலே இக்கூத்துப் பாண்டரங்கக் கூத்தாயிற்று" என்பர் பெருமழைப் புலவர்.)

*[பாண்டு + அரங்கம்]*

**பாண்டரம்**[1] *pāṇḍaram,* பெ. (n.) **1.** சிவப்புச் சுண்ணாம்பு; red quick lime. **2.** மல்லிகை; jasmine flower. **3.** வெண்மை; whiteness. (சா.அக.)

**பாண்டரம்**[2] *pāṇḍaram,* பெ. (n.) *பாண்டல்* பார்க்க; see *pāṇḍal.*

**பாண்டரம்பிடித்‍-தல்** *pāṇḍaram piḍi-,* **4.** செ.கு.வி. (v.i.) அழுக்குப் பிடித்தல்; to be soiled or stained with dirt.

*[பாண்டரம் + பிடி –,]*

**பாண்டல்** *pāṇḍal,* பெ. (n.) **1.** ஊசிப்போதல்; the quality of being rancid. **2.** பாசிபிடித்து நாறுதல்; stinking smell. **3.** பழமையானது; that which is stale. **4.** கருவாடு; dried fish. (சா.அக.)

**பாண்டல் கருவாடு** *pāṇḍalkaruvāḍu,* பெ. (n.) பதனழிந்த கருவாடு (முகவை.மீனவ.); stale and dried fish.

*[பாண்டல் + கருவாடு]*

**பாண்டல் நாற்றம்** *pāṇḍal nāṟṟam,* பெ. (n.) தீ நாற்றம்; rancid smell, an offensive smell.

*[பாண்டல் + நாற்றம்]*

**பாண்டல்நெய்** *pāṇḍal ney,* பெ. (n.) நாற்றநெய்; rancid ghee.

*[பாண்டல் + நெய்]*

**பாண்டலடி–த்தல்** *pāṇḍal-aḍi,* **4.** செ.கு.வி. (v.i.) தீநாற்றம் வீசுதல்; to stink, have a musty or rancid smell.

*[பாண்டல் + அடி –,]*

**பாண்டலரிசி** *pāṇḍalarii,* பெ. (n.) மடிசலரிசி; stale, musty rice.

*[பாண்டல் + அரிசி]*

**பாண்டவக்குடி** *pāṇḍavakkuḍi,* பெ. (n.) *பாண்டவக்குழி*(G.Sm.D.I,ii **144.**) பார்க்க; see *pāṇḍavakkuḻi*

*[பாண்டவர் + குடி]*

**பாண்டவக்குழி** *pāṇḍava-k-kuḻi,* பெ. (n.) பாண்டவர் கட்டியதாகக் கருதப்படுவதும், மலைப்பகுதிகளில் காணப்படுவதுமான பழங்காலப்புதைகுழி; dolmens or cromlechs, supposed to be built by the pāṇḍavās during their exile.

*[பாண்டவர் + குழி]*

**பாண்டவக்கோயில்** *pāṇḍava-k-koil,* பெ. (n.) *பாண்டவக்குழி*(G.Sm.D.I,i,**44.**) பார்க்க, see *pāṇḍavakkuḻi*

*[பாண்டவர் + கோயில்]*

**பாண்டவர்கள்** *pāṇḍavargaḷ,* பெ. (n.) பாண்டு மன்னனுடைய மக்கள்; sons of king pāṇḍu.

**பாண்டவிகை** *pāṇḍavigai,* பெ. (n.) **1.** ஊர்க்குருவி; a kind of sparrow **2.** பெண்; woman. (சா.அக.)

**பாண்டி**[1] *pāṇḍi,* பெ. (n.) **1.** ஒருதேயம்; a kingdom.“*பாண்டி நாடென்றபின்னர்*” (திருவாத. திருவம்பல.சா.) **2.** பன்னான்கு குழிப்பலகை; a thick plank with **14** hollows, used in a particular kind of game. **4.** மூங்கில்; பலகை; bamboo.

**பாண்டி²** *pāṇḍi,* பெ. (n.) சிறுமியர், தரையில் கட்டம் போட்டுக் கல் எறிந்து காலால் எற்றி ஆடும் விளையாட்டு, a kind of hopscotch game played mostly by girls. "*சிற்றூர்களில் சிறுமியர் விளையாடுவது பாண்டி ஆட்டம்தான்*"

**பாண்டிக்குழி** *pāṇḍi-k-kuḻi,* பெ. (n.) 1. இறந்தவர்களைப் புதைக்கும் குழி; ( in archaelogy) a pit for the dead. 2. அடக்கமேடை; sepulchral monument. (சா.அக.)

**பாண்டிக் கொடுமுடி** *pāṇḍi-k-koḍumuḍi,* பெ. (n.) கொங்கு நாட்டின் ஏழு சிவத்தலங்களிலொன்றும் ஈரோடு மாவட்டத்திலுள்ளதுமான கொடுமுடி என்னும் சித்தலம். (தேவா.); a sivan shrine in koḍumuḍi in Erode District.

(இன்று ஈரோடு மாவட்டத்தில் கொடுமுடி என்று அழைக்கப்படும் ஊர் தேவார மூவர்களும் இத்தலத்து இறைச் சிறப்பைப் புகழ்கின்றனர்.

காவிரியாற்றின் கரையில் உள்ள தலம் இதன் பழம் பெயர் கறைசை, கறையூர் கொடுமுடி என்று கழகக்காலத்தில் வாழ்ந்த மன்னன் பெயர் எனவும், அவன் ஆண்ட இடமே கொடுமுடி என்பதும், திருப்பாண்டிக் கொடுமுடி நூல் கூறும் செய்திகள் ஆகும். (பக்.4,6) )

அப்பர், சுந்தரர்,சம்பந்தர் மூவரும் இத்தலத்து இறையைப் புகழ்கின்றனர். இதனைச் சம்பந்தர், "*ஊனமர் வெண்டலை யேந்தி உண்பலிக்கென்று உழல் வாரும் தேனமரும் மொழிமாது சேர் திரு மேனியினாரும் கானமர் மஞ்ஞைகளாலும் காவிரிக் கோலக் கரைமேல் பாலை நீறணி வாரும் பாண்டிக் கொடுமுடியாரே*" (205–7) என்று பாடுகின்றார்.

**பாண்டிக்கோவை** *pāṇḍi-k-kōvai,* பெ. (n.) நெடுமாறன் என்ற பாண்டியனைப் பற்றியதும் இறையனார் களவியல் முதலியவற்றில் மேற்கோள் காட்டப்பட்டதுமான கோவை நூல் (வச்சணந்.செய்.45,உரை.) (இலக்.வி.876.உரை.) a kōvaipoem on Neḍumaraṉ a pāṇḍya king, cited in Iraiyanār-kaḷaviyal etc. (தனிநூலாகக் கிடைக்கவில்லை. ஆசிரியரும் இன்னாரென்று அறியக்கூடவில்லை.

களவியற் காரிகை என்னும் நூலில் 75 பாடல்களும் இறையனார் அகப் பொருளில் சுமார் 250 பாடல்களும், கோவைக் கொத்து முதலிய நூல்களிலிருந்து சில செய்யுள்களும் கிடைத்தன வென்று வே. துரைசாமி அவர்களால் ஒரு நூல் தொகுத்து வெளியிடப் பட்டுள்ளது.)

பாண்டிய அரசன் நெடுமாறனைப் புகழ்ந்து எழுதப்பட்ட நூல். கி.பி. ஆறு அல்லது ஏழாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதாகக் கருதப்படுகிறது. நூல் முழுவதும் இப்போது கிடைக்கவில்லை. முந்நூறு பாட்டுகள் அந்நூலுக்கு உரியவை என்று தொகுக்கப்பட்டுள்ளன. நூலாசிரியர் இன்னார் என்பதும் தெரியவில்லை.

(கோவை என்பது இலக்கிய நூல்களுள் ஒருவகை. கோவை நூல்களுக்குள் பழையதாகக் கருதப்படுவது இது. கோவை என்றால் பல செய்யுள்களைத் தொடர்பு உடையனவாகக் கோத்தல் என்பது பொருள். சங்க காலத்தில் காதல் பற்றிய பாட்டுகள் ஒன்றேடொன்று தொடர்பு இல்லாமல் தனித்தனியே பாடப்பட்டுள்ளன. அவ்வப்போது தோன்றிய தனித்தனிக் கற்பனைகளுக்கும் உணர்ச்சிகளுக்கும் வடிவம் தந்து வெவ்வேறு புலவர்களால் இயற்றப்பட்டவை. கோவை என்பது காதலர் இருவரின் காதல் உணர்ச்சிகளையும் நிகழ்ச்சிகளையும் ஒரு வரலாறுபோல் படிப்படியாகக் காட்டி ஒரே வகையான செய்யுள்களால் தொடர்ந்து பாடி அமைக்கும் நூல் ஆகும். பொதுவாக நானூறு காதல் துறைகள் பற்றி நானூறு செய்யுள்களால் பாடப்படுவது அது. காதலர் ஒருவரை ஒருவர்

காண்பதுமுதல் திருமணத்திற்குப்பின் நடத்தும் வாழ்க்கை நிலைகள்வரையில் ஊடல், குழந்தை பெற்று வளர்த்தல், முதலியன உட்பட நானூறு துறைகளையும் ஒரு வாழ்க்கை வரலாறுபோல் தொடர்ந்து காட்டுவது கோவை. அந்தக் காதலர் சங்க இலக்கியத்தில் உள்ளவாறு கற்பனைக் காதலர்களே. காதலர் கண்ட இடம், பழகிய சோலை முதலியவற்றைச் சொல்லும்போதும், உவமைகளை அமைக்கும்போது, ஓர் அரசனையோ வள்ளலையோ தெய்வத்தையோ புகழ்ந்து கூறுவது உண்டு. அந்த நானூறு பாட்டுகளுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு காரணம்பற்றி அந்தத் தலைவனுடைய மலை. நாடு, ஆறு. பண்பு, செயல்கள் முதலியவற்றுள் ஏதேனும் ஒன்று புகழப்படும். அவ்வாறு அமையும் நூல்வகையே கோவை.

பாண்டிக்கோவையில் பாண்டியன் நெடுமாறனின் வீரம், கொடை. போர்க்களங்கள், வெற்றிகள் முதலியவை புகழப்படுகின்றன. மாணிக்கவாசகரின் திருக்கோவையாரில் சிவபெருமான் போற்றிப் பாடப்படுகிறார். பிற்காலத்தில் இவ்வாறு வெவ்வேறு அரசர்களையும் வள்ளல்களையும் தெய்வங்களையும் புகழ்ந்து கோவைகள் பாடப்பட்டன. ஒரே வகை இலக்கணத்திற்குக் கட்டுப்பட்ட காரணத்தால், பெரும்பாலான கோவைகளில் புதுமையான படைப்புகள் குறைந்துவிட்டன. ஆகவே ஒரு சில கோவை நூல்களே காலத்தால் அழியாமல் காப்பாற்றப்பட்டன. அவைகள் காக்கப்பட்ட காரணம் அவற்றின் இலக்கியச் சிறப்பே ஆகும். புகழப்பட்ட தலைவர்களின் புகழ் மறைந்தவுடன் மற்றக்கோவை நூல்கள் மக்களால் புறக்கணிக்கப்பட்டு மறைந்தன.

கோவை நூல்களுள் திருக் கோவையார்க்கு அடுத்த நிலையில் இலக்கிய உலகில் வாழ்வுபெற்றது தஞ்சைவாணன் கோவை. பொய்யாமொழிப் புலவர் (கி.பி.பதின்மூன்றாம் நூற்றாண்டு) இயற்றிய அந்நூல், அதற்கு முற்பட்ட கோவை நூல்களைவிட எளிமையும் தெளிவும் பெற்றுள்ளமை அதன் வாழ்வுக்கு ஒரு காரணம் எனலாம். மற்றொரு காரணமும் உள்ளது. அகப்பொருள் (காதல் துறைகளின்) இலக்கண நூலாகிய நம்பியகப்பொருளுக்கு ஒவ்வொரு துறைக்கும் பொருத்தமான எடுத்துக்காட்டாகத் தஞ்சை வாணன் கோவையின் பாட்டுகள் அமைந்துள்ளது அந்தக் காரணம். அந்த இலக்கண நூலுக்கு உரிய எடுத்துக்காட்டுக்காகவே இயற்றப்பட்டது போல் அவ்வளவு பொருத்தமாகவும் முறையாகவும் தஞ்சைவாணன் கோவையின் பாட்டுகள் உள்ளன. மற்றக்கோவை நூல்கள் போலவே, கற்பனையான காதலன் காதலி ஆகியோரின் காதல் வாழ்வை ஒரு வரலாறுபோல் கோவைப்படுத்திக் கூறுவது இது. நூலின் பாராட்டுக்கு உரிய வரலாற்றுத் தலைவனும் ஒவ்வொரு பாட்டிலும் புகழப் படுகிறான். அவனுடைய பெயரே நூலுக்குச் சூட்டப்பட்டுள்ளது. தஞ்சைவாணன் என்னும் அந்தத் தலைவன் ஒரு பாண்டிய அரசனுடைய அமைச்சனாகவும் படைத் தலைவனாகவும் விளங்கியவன்; அவனுடைய வீரச் செயல்களையும் கொடைப்பண்பையும் இந்நூல் பல இடங்களில் பாராட்டுகிறது.)

**பாண்டித்துரைத்தேவர்** (20–நூ.) *pāṇḍitturai-t-tēvar,* பெ. (n.) பொன்னுசாமித் தேவரென்னும் இயற்பெயருடைய தமிழ்ப்புரவலர்; a popular philanthropist.

(இவர் பாலவநத்தம் பெருநிலக் கிழாராக இருந்தவர். இவர் தமது மூன்றாவது அகவையிலேயே தந்தையை இழந்தார். சேசாத்திரி ஐயங்கார் என்பவரின் மேற்பார்வையில் அழகர்ராசு என்ற அறிஞர்பால் தொடக்கக் கல்வியினைப் பயின்றார். வழக்கறிஞர் வெங்கடேச சாத்திரி என்பவர் ஆங்கிலக் கல்வியினைப் புகட்டினார். இதனால் இவர் இரு மொழிப் புலமை பெற்றார். இவருடைய சிறிய தந்தையார் முத்துராமலிங்க சேதுபதி. அவருடைய மகனார் பாசுகர சேதுபதியும் இவரும் உயிரொன்றிப் பழகினர். பாசுகர சேதுபதியின் கல்வி வளர்ச்சியிலும் பாண்டித்துரை நாட்டஞ்செலுத்தினார். இவருடைய அவையில் சதாவதானம்

முத்துச்சாமி ஐயங்காரென்பவர் அவைக்களப் புலவராக இருந்தார். திருவாவடுதுறை மடவளாகத்தை சார்ந்த பழநிக்குமாரத் தம்பிரானென்பவர் இவருக்குச் சிவநெறி நூல்களைக் கற்பித்தார்.

இவர் கைம்மாறு கருதாது உதவும் வள்ளலாவர். பலரும் தமிழ்க் கல்வி கற்றுச் சிறந்து விளங்கத் தம்மால் இயன்ற உதவிகளை எல்லாம் செய்தார். இவ்வுதவி களெல்லாம் சோமசுந்தர விலாசம் என்ற இவருடைய அரண்மனையின் கண்ணே நிகழ்ந்தன. இவரும் தம் தந்தையாரைப் போலவே அறிஞர்கள் நிறைந்த அவையினை அமைத்து அதன்கண் நூலாராய்ச்சி, சொற்பொழிவு முதலியவை நிகழ ஏற்பாடு செய்தார். தம் தந்தையாரைப் பின்பற்றித் தமிழ் நூல்களைப் பதிப்பிக்கப்பேருதவி செய்தார். அபிதான சிந்தாமணி இவருடைய பொருளுதவி கொண்டு பதிப்பிக்கப் பெற்றது. புறப்பொருள் வெண்பாமாலை, மணிமேகலை முதலிய நூல்களை உ.வே.சாமிநாதையரவர்கள் பதிப்பிப்பதற்குப் பெரும்பொருள் வழங்கினார். ஞானசம்பந்தப் பிள்ளை என்பவரைக் கொண்டு தேவாரத் தலமுறைப் பதிப்பை வெளியிட்டார். அவ்வாசிரியர், சிவஞான சுவாமிகள் பிரபந்தத் திரட்டை வெளியிடுவதற்கும் உதவி செய்தார்.

அறத்துறைப் பாடல்கள் பலவற்றைத் தொகுத்துப் '*பன்னூற்றிரட்டு*' என்று வெளியிட்டார். அறம், பொருள், இன்பம் முதலிய செய்திகளைக் கூறும் பாடல்களை ஒன்று படுத்தி, அவற்றை வகைப்படுத்தி, அதிகார அடைவு முதலியவற்றை அமைத்து இந்நூலினை வெளியிட்டது பாராட்டத்தக்கது.

இவருடைய தமிழ்த் தொண்டுகள் பலவற்றிலும் தலைசிறந்தது, 1901 செபுதம்பர் 14 ஆம் நாள் மதுரையில் தமிழ்க்கழகம் (சங்கம்) தொடங்கிய தேயாகும். இச்சங்கம் நான்காம் தமிழ்க்கழகம் எனக் கருதப்பட்டது. மாணவர்கள் பலர் தமிழ் பயில இங்கு வாய்ப்பு ஏற்பட்டது.

இவர் சொல்வன்மையுடையவர், மதுரையில் தமிழ்க்கழகம் ஏற்பட்ட பிறகு பல இடங்க ளுக்கும் சென்று அரிய சொற் பொழிவுகள் நிகழ்த்தினார். எவரும் பிழைபட எழுதுதலோ பேசுதலோ கூடாது என்று கருதுபவர்; இவர் மதுரையில் வழக்கறிஞராகத் தொழில் புரிந்த ஆங்கிலேயோராருவர் திருக்குறளைத் தம் மனம் போனபடி திருத்திவெளியிட்டமை கண்டு வருந்தி, அவர் வெளியிட்ட படிகள் அத்தனையும் வாங்கித் தீயிட்டுக் கொளுத்தினார். இத்தகைய தமிழ்த் தொண்டாற்றிய இவர் தமது 44ஆம் அகவையில் 2–12–1911 இல் காலமானார்.

இவரியற்றிய நூல்கள்: முருகன் மீது காவடிச் சிந்து, சிவஞான சுவாமிகள் தோத்திரம்.

**பாண்டிநாயகம்** *pāṇḍināyagam,* பெ. (n.) தில்லைத்திருக்கோயிலில் உள்ள முருகன் பெயர்; name of lord murugan in thillai-k-koil.

(திருத்தில்லையில் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள திருக்கோயில் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கட்டிய கோயிலாகையால் இப்பெயர்பெற்றது.)

*[பாண்டி + நாயகம்]*

**பாண்டிமண்டலம்** *pāṇḍi-maṇḍalam,* பெ. (n.) பாண்டியனாடு; the paṇḍya country of south india. "*வளம்படியும் வயற்பாண்டிமண்டலத் துண்டு*" (சேதுபு.நாட்டுச்.4.)

*[பாண்டி + மண்டலம்]*

**பாண்டியம்¹** *pāṇḍiyam,* பெ. (n.) அறிவுடைமை; (வழக்.) the possession of knowledge

*[பண்டு → பண்டம் → பாண்டியம்]*

**பாண்டியம்²** *pāṇḍiyam,* பெ. (n.) பாண்டியன்றேயம்; (மரூஉ.) the pandya country of south india.

*[பாண்டில் → பாண்டியன் → பாண்டியம்]*

**பாண்டியம்**[2] *pāṇḍiyam,* பெ. (n.) cf. **1.** எருது; bull. "*செஞ்சுவற் பாண்டியம்*" (பெருங். உஞ்சைக்.38,32.) **2.** எருது கொண்டு உழும் உழவு; agriculture; ploughting "*பாண்டியஞ் செய்வான் பொருளினும்*" (கலித்.136.)

*[பாண்டில் → பாண்டியம்]*

**பாண்டியவீடு** *pāṇḍiya-viḍu,* பெ. (n.) *பாண்டவர் வீடு* பார்க்க; see *pāṇḍavar viḍu.*

*[பாண்டவர் → பாண்டிய + வீடு]*

**பாண்டியன்** *pāṇḍiyaṇ,* பெ. (n.) பாண்டியநாட்டு வேந்தன் (சிலப்.17.5.); king of the ancient pāṇḍiya country. "*பசும்பூண் பாண்டியன் வினைவ லதிகன்*" (குறுந்.393–4)

"*வில்கெழு தானைப் பசும்பூம் பாண்டியன்*" (அகம்.162–21)

"*வினைநவில் யானை விறல்போர்ப் பாண்டியன்*" (அகம்.201–3)

"*திருவீழ் நுண்பூம் பாண்டியன் மறவன்*" (புறம்.179–5)

மறுவ: செழியன், வேம்பின் கண்ணிக்கோ,

தமிழ்நாடன், கைதவன்,

கூடற்கோ, பொதியப் பொருப்பன்,

தென்னவன், புனல் வையைத்துறைவன்,

வழுதி, குமரிச் சேர்ப்பன்,

மீனவன், கோ,

பஞ்சவன், பாண்டியன்,

மாறன், கூடற் கோமான்,

வேம்பின் கண்டியன்,

வைகைக்குமரன்,

பழுதில் புகழ் மாறன்,

பூழியன்,

நிம்பத்தார்ப் பாண்டியன்,

மலையப் பொருப்பன்,

வைகைத் துறைவன்,

வேம்பின்றாரோன்,

வைகையந்துறைவன்

பொதிய வெற்பன்

கூடற்பொருகோன்

கொற்கை தவன்

மலையன்

குமரித்துறையவன்

*[பாண்டி → பாண்டியன்]*

"*பஃறுளி யாற்றுடன் பன்மலைஅடுக்கத்துக்*
*குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள*
*வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு*
*தென்றிசை யாண்ட தென்னவன் வாழி*"

என்று இளங்கோவடிகள் பாடுவதாலும் தமிழன் பிறந்தகம் குமரிநாடாதலாலும் குமரிக்கண்டத் தமிழ்நிலம் முழுவதும் பழம் பாண்டி நாடாதலாலும் மூவேந்தருள்ளும் முதலில் தோன்றியவன் பாண்டியனே என்று அறியப்படும். பிற்காலத்தில் நாவலந்தேயத்தின் கீழ்ப்பாகத்தையும் மேற்பாகத்தையும் துணையரசராக அல்லது மண்டிலத் தலைவராக ஆளுமாறு அமர்த்தப் பெற்ற பாண்டியன் குடியினர் இருவரே, சேர சோழராக மாறியிருத்தல் வேண்டும்...........

காளை மறம் விஞ்சியதாதலின், போர்மறவன் காளையெனப்பட்டான். காளை மறம் விஞ்சியது மட்டுமன்று; கற்பாறையிலும் ஆற்றுமணலிலும் சேற்று நிலத்திலும் மேட்டிலும் பள்ளத்திலும் பொறை வண்டியை "மருங்கொற்றி மூக்கூன்றித் தாள் தவிழ்ந்து" இழுத்துச் செல்லும் கடைப்பிடியுமுள்ளது அதனால்

"மடுத்தவா யெல்லாம் பகடன்னான் வுற்ற இடுக்கண் இடர்ப்பா டுடைத்து" (திருக்குறள்.624.)

"அச்சொடி தாக்கிய பாருற் றியங்கிய பண்டச் சாகாட் டாழ்ச்சி சொல்லிய வரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும் பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ" என்றார் ஔவையார் (புறம்90.)

அரசன் போர்மறமும் ஆட்சித்திறனும் ஒருங்கே யுடையவன் என்பதையுணர்த்தற்குக் குமரி நில முதல் தமிழ வேந்தன் பாண்டியன் எனக்குடிப் பெயர் பெற்றான், செழியன்,வழுதி, மாறன் முதலிய குடிப்பட்டங்களும் பின்னர்த் தோன்றின.

"சோழ பாண்டியர் பாண்டவர்க்குத் துணையாகவும் சேரன் நடுநிலையாகவும் பாரதப் போரிற் கலந்து கொண்டதனாலும், மூவேந்தர் குடிகளும் பாண்டவ கௌரவர்க்கு முன்பே வரலாற்றிற் கெட்டாத் தொன்முது பழங்காலத்தில் தோன்றியமையாலும், பாண்டியன் என்னும் சொல்லைப் பாண்டவன் என்னும் சொல்லினின்று திரிப்பது வரலாற்றறிவும் ஆராய்ச்சித் திறனும் இல்லாதவர் செயலெனக் கூறி விடுக்க. –பாவாணர், தமிழர்வரலாறு, பக்73–75.

**பாண்டியன் அறிவுடைநம்பி** *pāṇḍiy aṉ-aṟivuḍai nambi,* பெ. (n.) பாண்டிய அரசப்புலவர்களுள் ஒருவன்; a pandiya king and wiseman.

(இவன் பாண்டியர் குடியில் தோன்றிய ஓர் அரசன். கல்வி நலத்தையும், செல்வ நலத்தையும் ஒருங்கே பெற்ற இவன் சிறந்த கொடைவள்ளலாகவும் விளங்கினான். கோப்பெருஞ்சோழனுக்கு உயிர்த்தோழரும், பேரறிஞருமாகிய பிசிராந்தையார் இவ்வரசன் மீது பொருண்மொழிக் காஞ்சி பாடியிருக் கிறார்.)

**பாண்டியன் ஆரியப்படைக் கடந்த நெடுஞ்செழியன்**[1] *pāndiyaṉariyappaai kkaaṇa-neuñceḻiyaṉ,* பெ. (n.) சிலப்பதிகாரக் காலத்து அரசாட்சி செய்த பாண்டியன்; a pandiya king who was ruled in the silappathikāram period.

(இவன் கழகக்காலத்தில் வாழ்ந்த அரசப்புலவர்களில் ஒருவன். கண்ணகி தன் காற்சிலம்பினை உடைத்துத் தன் கணவன் கள்வனல்லன் என்று நிறுவ, தன்தவறு உணர்ந்து உயிர்நீத்த பாண்டிய மன்னன் இவனே யாவன். இந்நெடுஞ்செழியன், தன்காலத்திற்கு வந்த ஆரியப் பெரும் படையினரை வென்றமையால் 'ஆரியப்படை கடந்த' என்ற சிறப்பினைப் பெற்று ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்று அழைக்கப்பெற்றான்.

இவனது ஆட்சிச் சிறப்பை இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் பாராட்டியுள்ளார்.)

**பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார்** *pāṇḍiyaṉ ēnatineduagaṉṇaṉ* கடைக்கழகப் புலவர்; a sangam poet.

(போராலழிவுற்ற ஊர்களில் பாழ்பட்ட மன்றங்களில் பீர்க்குப் படர்ந்துபொலிவழிந்து கிடக்குங் காட்சியும், பல அரசர்களால் முற்றுகையிடப் பெற்ற ஓரரசன் மதிலுக்குள் வருந்தித் துயிலிழந்திருப்பதைப் போல் தலைவன் பிரிவால் தலைவி வருந்தித் துயிலிழந்திருப்பதும் இவர் செய்யுளில் அழகுறக் கூறப்பட்டுள்ளன. (அகம்.373.) பார்ப்பனப் பாங்கன் தண்டு கமண்டலம் உடையவனாக இருப்பானென்பதும் இவர் பாடிய குறுந்.156. பாட்டிலுள்ளது.)

**பாண்டியன் கடுங்கோன்** *paṇḍiyaṉ-kaḍuṅkōṉ* பெ. (n.) தலைக்கழகத்தின் இறுதியிலிருந்த பாண்டிய வேந்தன்; a

pandya king who patronized the talai-k-kalagam at its close. "காய்சின வழுதி முதல் கடுங்கோன் ஈறாக" (இறை.1. உரை.)

*[பாண்டியன் + கடுங்கோன்]*

**பாண்டியன் கருங்கையொள்வாட் பெரும் பெயர் வழுதி** *Pandiyan karunkaiyoḷvāt perum peyar vaḻudi,* பெ. (n.)

கழகக் காலப் பாண்டிய மன்னன் மிக்க வீரமும் கொடையுமுடையோன். இவனைப் பாடிய புலவர் இரும்பிடர்த்தலையார் (புறநா.3) a oandiya kind in sangam age.

**பாண்டியன் கீரஞ்சாத்தன்** *pāṇdiyaṉ kirañcāttaṉ,* பெ. (n.) பாண்டிய மன்னர்களின் கீழிருந்த குறுநிலத் தலைவன்.

கீரன் என்பவனுடைய மகன் ஆதலின் கீரஞ்சாத்தன் எனப்பட்டான். இவன் கொடை நலத்தில் சிறந்து விளங்கினான். ஆவூர்மூலங்கிழார் இவனைப் புகழ்ந்து பாடியுள்ளார். இவனது மறுபெயர் பாண்டியக்குதிரைச் சாக்கையன்.

**பாண்டியன் கூடகாரத்துத்துஞ்சிய மாறன் வழுதி**[1] *pāṇdiyaṉkūdakārattu-t-tuñjiya māṟaṉvaḻudi,* பெ. (n.) கழகக் கலத்தில் வாழ்ந்த ஒரு பாண்டியவரசன்; a paṇdiya king in sangam age. (கூடகாரமென்பது பாண்டிய நாட்டிலிருந்த ஓர் ஊர்; இப்பாண்டியன் தன் நாட்டிற்கு வடக்கிலிருந்த அரசர்களோடு பெரும்போர் செய்து வெற்றி அடைந்தான்; இவனுடைய பேராற்றலை வியந்து ஐயூர் முடவனார், மதுரை மருதனிள நாகனார் என்னும் இரு புலவர்களும் பாடியிருக் கின்றனர். இவன் காலத்தில் சோழ நாட்டைக் குளமுற்றத்துத் துஞ்சிய வளவன் ஆட்சி புரிந்து கொண்டிருந்தான். (புறநா. 51)

**பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய** SÁ UÖ\Á [1] *pāndiyaṉ cittiramādattu-t-tuñjiya naṉmāṟaṉ,* பெ. (n.) புறநானூற்றால் அறியலாகும் ஒரு பாண்டிய மன்னன்; a paṇḍiya king in sangam age known from paran.

(இவன் சித்திரமாடம் என்னுமிடத்தில் இறந்தான். கள்ளங்கபடமற்றஉள்ளமுடையவன்; சான்றோரைப் போற்றும் சால்புடையவன்; பெருவண்மையும் கொண்டிருந்தான். இவனை மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் பாடியுள்ளார். (புறநா.89.))

**பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்** *pāṇdiyaṉ-talai-yalaṉ-kanattu-c-ceruv-era-netuñceyiyaṉ,* பெ. (n.) சங்ககாலத்தில் ஆட்சிபுரிந்த ஒரு பாண்டிய மன்னன்; an ancient king known from puṟanāṉūṟu.

(இவன் கழகக்கால அரசப் புலவர்களுள் ஒருவன். பத்துப் பாட்டுள் நெடுநல்வாடையும், மதுரைக்காஞ்சியும் இவன் புகழ் பாடக் கா,ணம் இவன் தலையாலங்கானப் போரில் பெற்ற வெற்றியேயாகும். இவன் ஆட்சிப் பொறுப்பை ஏற்குங்காலை மிக இளையனாக இருந்தான். இதனைக் கண்ணுற்ற இவன் பகைவர்களாகிய யானைக் கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, சோழன் ஒருவன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்ற எழுவரும் கூடி எதிர்த்தனர். இவர்களை இவன் தலையாலங்கானம் என்ற இடத்தில் எதிர்த்து வென்றான். இவ்வெற்றிச் சிறப்பினாலேயே இவன் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்று அழைக்கப் பெற்றான். இப்போரில் இவன் கூறிய வஞ்சினமே பாட்டாக அமைந்துள்ளது. புறநானூற்றில் இடைக்குன்றூர் கிழார் என்ற புலவர் இவன் சிறப்பை மூன்று பாடல்களில் பாராட்டியுள்ளார்.)

**பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி** *pāṇḍiyaṉ palyākasālai mutukuḍumi-p-peruvaḻuti* , பெ. (n.) புறநானூற்றால் அறியலாகும் சங்ககால அரசன்; a ancient king known from puṟam.

கழகக்காலத்து மன்னன், பெருந்தோள் என்னும் அடைமொழி சேர்த்துஞ் சொல்லப் பெறுவான். *'நின்னால் வசைபட வாழ்ந்தவர் பலர்கொல், நீ வேள்வி முற்றியூபம் நட்ட வியன்களம் பலகொல்'* (புறநா.15.) என்று நெட்டிமையார் கூறுவதால் இவன் பல மன்னரையும் வென்றவன் என்றும், பல வேள்விகளைச் செய்தவள் என்றும் கொள்ளலாம். *"நின்குடை முக்கண் செல்வர் நகர்வலஞ் செயற்கே பணிக என்று காரி கிழார் கூறுவதால்"* (புறநா.6.) *இவன் சிவபெருமானை வழிபடுபவன் என்பது தெரிகிறது. இவன் பெரிய வள்ளல். இவனைப் பாடிய மற்றொரு புலவர்நெடும்பல்லியத்தனார்.* (புறநா. 6,9,12,15,64)

**பாண்டியன் பன்னாடு தந்தான்** *pāṇḍiyaṉ paṉṉāḍu tantāṉ,* பெ. (n.) சங்ககாலப் பாண்டிய மன்னருள் ஒருவன்; a pāṇḍiya king author of kuṟuntokai 270.

(கழகக்காலத்தவன். பெயரிலிருந்து பல நாடுகளை வென்று கைப்பற்றியவன் என்று தெரிகிறதே யொழிய, இவன் இயற்பெயர் யாதென்று தெரியவில்லை. குறுந்தொகையில் (270) இவன் பாடிய செய்யுளொன்று காணப்பெறுவதால் இவன் தமிழ்ப் புலமையாளனென்றும் அறியலாம்.)

**பாண்டியன் மதிவாணன்** *pāṇḍiyaṉ madiāṇaṉ,* பெ. (n.) நாடகத்தமிழ்நூல் செய்த ஒரு பாண்டிய அரசன் (சிலப்.உரைச்சிறப்.பக்.10.) a pāṇdya king, author of a dramatic treatise in tamil.

(இவன் கடைக்கழகத்தைப் புரந்த பாண்டிய மன்னர்களுள் ஒருவன். சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார், இவன் கடைக்கழகத்தைப் புரந்த பாண்டியருள் 'கவி அரங்கேறியவன்' என்று தம்முடைய உரைப்பாயிரத்தில் கூறியுள்ளார். எனவே இவன் செந்தமிழ்ப் புலமையிற் சிறந்து விளங்கிய வேந்தனாவான். இவன் நாடகத் தமிழ் நூல் ஒன்றை இயற்றினான். அது மதிவாணன் நாடகத் தமிழ் நூல் என்னும் பெயர் உடையது. நூற்பாவாலும், வெண்பாவாலும் இயற்றப் பெற்றது. அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதுவதற்கு மேற்கோளாகக் கொண்ட இசை, நாடக நூல்களுள் இதுவும் ஒன்றாகும். இந்நூல் இக்காலத்தில் இல்லை; மறைந் தொழிந்த நூல்களுள் ஒன்றாகி விட்டது.)

**பாண்டியன் மாறன்வழுதி** *pāṇḍianmāṟaṉ vaḷuthi,* பெ. (n.) கழகக்காலத்தவன்; இவன் புலமையாளனு மாவான் என்பது நற்றிணையிலுள்ள இவன் பாடல்கள் (97:301) அறிவிக்கும். a sangam poet who is author of Naṟṟiṇai

**பாண்டியன் முடத்திருமாறன்** *pāṇḍiyaṉ mudattirumāṟaṉi,* பெ. (n.) முற்காலப் பாண்டிய அரசர்களுள் ஒரவன்; an ancient paṇḍiya king known from sangam lit.

(குமரிநாடு கடற்பெருக்கால் அழிந்த பிறகு குமரி ஆற்றுக்கும் பொருநை ஆற்றுக்கும் இடையிலுள்ள நிலப்பரப்பில் தங்கியிருந்த தமிழ்மக்களுக்குத் தலைநகராய் இருந்த கபாடபுரத்தில் தங்கி அரசாட்சி செய்த பாண்டிய மன்னர்கள் ஐம்பத்தொன்பது பேர்களுள் இவ்வேந்தனே இறுதியில் அரசாட்சி செய்தவன். இவன் காலத்தில் நிகழ்ந்த ஒரு கடல்கோளால் பாண்டிய நாட்டின் பெரும்பகுதியும், அதன் தலைநகராகிய கபாடபுரமும் அழிந்தொழிந்தன. இச்சமயத்தில் தான் தமிழ் நூல்கள் பல அழிந்தொழிந்தன. கடல்கோளுக்குத் தப்பிப் பிழைத்த இம்மன்னனும், மக்கள் பலரும் இக்கால மதுரையை அடைந்து அந்நகரை வள நகராக்கி

அமைத்தனர். தமிழ்க் கழகத்தின் மூலம் இவன் தமிழுக்கு நல்ல தொண்டு செய்தான், தமிழ்மொழிப் பயிற்சியிலும் இம்மன்னன் சிறந்தவன். இவன் பாலைத் திணையையும், குறிஞ்சித் திணையையும் சுவையாகப் பாடுவதில் வல்லவன். நற்றிணையில் இவன் பாடிய பாடல்கள் இரண்டு உள்ளன.)

**பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி** *pāṇḍiyaṉ velliyambalattu-t-tunjiya peruvaḷuti,* பெ. (n.) சங்ககாலத்தில் இருந்த ஒரு பாண்டிய மன்னன்; a pāṇḍiya king, known from sangam literature.

சங்ககால மன்னருள் ஒருவன். இவன் தன் கால மன்னர்களுடன் நட்புப் பூண்டிருக்க விழைந்தவனென்று தெரிகிறது. இவனும் குராப்பள்ளி துஞ்சிய பெருந்திருமாவளவன் என்னும் சோழனும் அளவளாவி ஒருங்கிருந்த போது காரிக் கண்ணனார் என்னும் புலவர் கண்டு மகிழ்ந்து *'அயலார் கூறும் பொதுமொழி கொள்ளாமல் இன்றே போல்க நும் நட்பு'* என்றும் இவ்வாறு நட்புப் பூண்டால் உலகம் நுமக்குரிமையாகும் என்றும் கூறிப் பாராட்டுகின்றார்.

**பாண்டிரம்** *pāṇḍiram,* பெ. (n.) பெருங்கிளை மரம்; saraswati leaf tree. (சா.அக.)

**பாண்டில்**[1] *pāṇḍil,* பெ. (n.) 1. வட்டம் (திவா.); circle. *"பொலம்பசும் பாண்டிற்காசு"* (ஐங்குறு.310.) 2. விளக்குத் தகழி (பிங்.); bowl of a lamp. 3. கிண்ணி; small bowl or cup. "கழற் பாண்டிற் கணை பொருத துளைத்தோ லன்னே" (புறநா.97.) 4. கஞ்சதாளம்; a pair of cymbals "இடிக்குரன் முரசமிழுமென் பாண்டில்" (சிலப்.26,194.) 5. குதிரை பூட்டிய தேர் (திவா.); horse-drawn chariot *"பருந்துபடப் பாண்டிலொடு பொருத பல்பிணர்த் தடக்கை"* (நற்.141.) 6. இரண்டு ருளுடைய வண்டி; two wheeled cart. *"வையமும் பாண்டிலும்"* (சிலப்.14,168.) 7. தேர்வட்டை (சிலப்.14,168); felly of the wheel of a chariot 8. வட்டக்கட்டில்; circular bedstead or cot *"பேரள வெய்திய பெரும்பெயர்ப் பாண்டில்"* (நெடுநல். 123.) 9. கண்ணாடி; glass, mirror. *"ஒளிரும்..... பாண்டினிரை தோல்"* (பு.வெ.6,12.) 10. வட்டத்தோல்; circular piece of hide used in makeing a shield. *"புள்ளியிரலைத் தோலூனுதிர்த்துத் தீதுகளைந் தெஞ்சிய திகழ்விடு பாண்டில்"* (பதிற்றுப்.74.) 11. நாடு; (வின்.) country, territory 12. குதிரைச் சேணம்; saddle *"பாண்டி லாய்மயிர்க் கவரிப் பாய்மா"* (பதிற்றுப்,90,35.) 13. எருது; bull *"மன்னிய பாண்டில் பண்ணி"* (சீவக.2054.) 14. விடையோரை. (திவா.); taurus of the zodiac. 15. விளக்கின் கால்; stand of a lamp; standard *"நற்பல பாண்டில் விளக்கு"* (நெடுநல்.175)

*"வாண்முகப் பாண்டில் வலவனொடு தரீஇ"* (சிறு.260)

*"பாண்டில் ஒப்பின் பகன்றை மலரும்"* (நற்.86–3)

*"பொன்செய் பாண்டில் பொலங்கலம் நந்த"* (ஐங்.316–1)

*"தோலெறி பாண்டிலின் வாலிய மலர"* (அகம்.217–8)

*"இரும்பொலம் பாண்டில் மணியொடு தெளிர்ப்ப"* (அகம்.376–9)

**பாண்டில்**[2] *pāṇḍil,* பெ. (n.) 1. வாகை (மலை.) பார்க்க; *see vāgai, siris* 2. சாத்துக்குடி (பிங்.); batavian orange. 3. மூங்கில் (சூடா.); bamboo.

**பாண்டில் விளக்கு** *pāṇḍil-viḷakku,* பெ. (n.) கால்விளக்கு; standard-lamp. *"பாண்டில் விளக்குப் பரூஉச்சுடர்"* (பதிற்றுப்.47,6.) *"பாண்டில் விளக்குப் பரூஉச்சுடருழல"* (நெடு.175.)

*[பாண்டில் + விளக்கு]*

**பாண்டிவடம்** *pāṇḍi-vaḍam,* பெ. (n.) கண்ணபிரான் கன்றுகள் மேய்த்த நிலப்பகுதி; a place where kṛṣṇa grazed his cattle. *"பலதேவன் வென்ற பாண்டிவடத் தென்னையுய்த்திடுமின்"* (திவ்.நாய்ச்.12,7.)

*[பாண்டியம் + வட்டம்]*

**பாண்டிவரி** *pāṇḍi-vari,* பெ. (n.) முற்காலத்துள்ள வரிவகை (S.I.I.IV,79); an ancient tax.

**பாண்டிவேளாளன்** *pāṇḍi-vēḷāḷaṉ,* பெ. (n.) 1. மதுரை மாவட்டத்திலுள்ள வேளாளரில் ஒருவகை உட்பிரிவினர்; a sub-sect of the vēḷāḷa caste in Madura district. (மது.வழக்கு 2. திருவாங்கூரில் வாழும் தென்பாண்டி நாட்டு வேளாளர்; vēḷāḷas of the pāṇḍya country, settled in Travancore

*[பாண்டி + வேளாளன்]*

**பாண்டிற்காசு** *pāṇḍiṟ-kāśu,* பெ. (n.) வட்டக்காசு என்ற பொன்னணி (ஐங்குறு310.); a piece of jewelry know as vaṭṭa-k-kāśu.

*[பாண்டில் +காசு ]*

**பாண்டிற் பொலங்கலம்** *pāṇḍiṟ-polaṅgalam,* பெ. (n.) வட்டமாகச் செய்த பொன்னணி; (ஐங்குறு) round shaped gold ornament.

*[பாண்டில் + பொலங்கலம்]*

**பாண்டீரம்** *pāṇḍīram,* பெ. (n.) 1. ஆலமரம்; banyan tree. 2. வெண்மை; whiteness.

**பாண்டு**[1] *pāṇḍu,* பெ. (n.) 1. வெண்மை (வின்.); whiteness, paleness. 2. காமாலை (வின்.); jaundice. 3. நோய்வகை (வின்.); anaemia 4. நீர்க்கோவை; dropsy, ascites. 5. பாரதக் கதையில் இடம் பெற்றுள்ளவனும் 'பாண்டு' என்னும் நோய் பற்றியமையால் அப்பெயர் பெற்றவனும் பாண்டவர் ஐவரின் தந்தையுமான ஓர் அரசன்; a king and father of pāṇḍava princes. 6. சிறுபூளை (மலை.); a common way-side weed.

**பாண்டு**[2] *pāṇḍu,* பெ. (n.) அரத்தக் குறைவு காரணமாக வயிற்றில் வீக்கத்தை உண்டாக்கும் நோய்; chronic dropsy causing bloating of the stomach.

**பாண்டுக்கல்** *pāṇḍu-k-kal,* பெ. (n.) *பட்டவன் குறி* (M.M.667.) *பார்க்க;* see *paṭṭavaṉ-kuṟi.* menhir

*[பாண்டு + கல்]*

**பாண்டுகம்** *pāṇḍugam,* பெ. (n.) *பாண்டுரம்* (யாழ்.அக.) பார்க்க; see *pāṇḍuram.*

*[பாண்டு → பாண்டுகம்]*

**பாண்டுகம்பளம்** *pāṇḍu-kambaḷam,* பெ. (n.) இந்திரன் இருக்கை; (buddh.) indra's throne of marble *"இந்திரன் பாண்டு கம்பளந் துளக்கிய தாதலின்"* (மணிமே.14, 29.) *"பான்மையிற் றனாது பாண்டு கம்பளம்"* (மணிமே.29–21)

*[பாண்டு + கம்பளம்]*

**பாண்டுச்சிலந்தி** *pāṇḍu-c-cilandi,* பெ. (n.) சிலந்திவகை(சீவரட்.353.); a spider.

*[பாண்டு + சிலந்தி]*

**பாண்டுநாசனி** *pāṇḍu-nāšaṉi,* பெ. (n.) சிறுவாலுளுவை (சா.அக.); spindle tree

**பாண்டுமைந்தர்** *pāṇḍu-maindar,* பெ. (n.) பாண்டவர் (திவா.); the pāṇḍavas.

*[பாண்டு + மைந்தர்]*

**பாண்டுயாவனம்** *pāṇḍu-y-āvaṉam,* பெ. (n.) ஈஞ்சு; date palm

**பாண்டுரம்** *pāṇḍuram,* பெ. (n.) **1.** வெண்மை; whiteness. **2.** நோய்வகை; Jaundice.

**பாண்டுராகம்** *pāṇḍurāgam,* பெ. (n.) வெண்மை (யாழ்.அக.); whiteness.

**பாண்டுருவன்** *pāṇḍuruvaṉ,* பெ. (n.) பெரியவுருவுள்ள–வன்–வள்–து. (யாழ்ப்.); huge person or thing.

*[பாண்டு + உருவன்]*

**பாண்டுரேட்சு** *pāṇḍurēṭcu,* பெ. (n.) வெண்கரும்பு (மூ.அ.); a kind of white sugar-cane.

**பாண்டுரை** *pāṇḍurai,* பெ. (n.) ***பாதிரி*** (மூ.அ.) பார்க்க; see *pātiri.* trumpet-flower tree.

*[பாண்டு → பாண்டுரை]*

**பாண்டுரோகம்** *pāṇḍu-rōgam,* பெ. (n.) நோய்வகை; a group of diseases, including jaundice, anaemia, dropsy.

*[பாண்டு + skt. Rōgha› த. ரோகம்]*

**பாண்டுலா** *pāṇḍulā,* பெ. (n.) புடல் (மலை.); snake gourd.

**பாண்டுவியாதி** *pāṇḍu-viyādi,* பெ. (n.) *பாண்டுரோகம்* (கொ.வ.) பார்க்க; see *pāṇḍu rōgam.*

*[பாண்டு + skt. vyādhi› த. வியாதி]*

**பாண்டூர்** *pāṇṭūr,* பெ. (n.) ஓர் இடப்பெயர்; a place name. ***"பாண்டூர்தன்னிலீண்டவிருந்தும்"*** (திருவாச.கீர்த்தித்.070.)

**பாண்டை** *pāṇḍai.* பெ. (n.) தீநாற்றம் (வின்.); bad smell, as of rotten fish.

*[பாண்டல் → பாண்டை]*

**பாண்டைநாறி** *pāṇḍai-nāṟi,* பெ. (n.) **1.** கெட்ட நாற்றம் வீசுகின்ற பெண் (வின்.); a woman with offfensive smell. **2.** சிடுசிடுப்பு மிக்கவள் (யாழ்.அக.); an angry or peevish person.

*[பாண்டை + நாறி]* 'இ' பெண்பாலீறு.

**பாண்பாட்டு** *pāṉ-pāṭṭu,* பெ. (n.) யானையை யெறிந்து போரிற்பட்ட வீரர்க்கு யாழ்வல்ல பாணர் சாப்பண் பாடித் தம்முரிமை செய்தலைக்கூறும் புறத்துறை (பு.வெ.7,11.); (puṟap.) a theme in which bards skilled in lute sing funeral songs in honour of the warriors that fell fighting in a battle-field after slaying the elephants of the enemy.

*[பாண் + பாட்டு]*

**பாண்மகள்** *pāṇ-magaḷ,* பெ. (n.) *பாணற்குடியில் பிறந்த பெண்* a singing woman of the pāṇar tribe. ***"நான் கொள்நுன் கோலின் மீன்கொள்பாண்மகள்"*** (அகநா.216.)

"*முள்ளெயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த*" (ஐங்.47–1)

"*அஞ்சில் ஓதி அசைநடைப் பாண்மகள்*" (ஐங்.49–1)

"*செல்லா மோதில் பாண்மகள் காணியர்*" (பதிற்று–60–30)

"*கவ்வாங் குந்தி யஞ்சொற் பாண்மகள்*" (அகம்–126–9)

*[பாண் + மகள்]*

**பாண்மகன்** *pāṇ-magaṉ,* பெ. (n.) பாணன்; man of the pāṇar caste. '*பாண்மகன் பட்டுழிப் படூஉம் பான்மையின் யாழினம்*' (மணிமே.18,17.)

"*நைவளம் பழுநிய நயந்தெரிபாலை–கைவல் பாண்மகன் கடனறிந்தியக்க*" (சிறுபாணா.37.)

"*வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்*" (ஐங்.48–1)

"*யாணர் ஊரநின் பாண்மகன்*" (ஐங்.49–3)

"*தூதாய்த் திரிதரும் பாண்மகனே–நீ தான்*" (ஐந்.ஐம்.22–2)

'*செவ்வழியாழ்ப் பாண்மகனே! சீரார்தேர் கையினால்*' (தி.மா.124–1)

*[பாண் + மகன்]*

**பாண்மை** *pāṇmai,* பெ. (n.) **1.** பாணன் தன்மை (சீவக.2515.உரை.); characteristics of a pāṇaṉ. **2.** தாழ்ச்சி; submissiveness.

*[பாண் → பாண்மை]*

**பாண்யாழ்** *pāṇyāl* பெ (n.) பாணர் கையில் உள்ள யாழ்; an ancient stringed musical arstrumant with pānas. "*பாண்யாழ் கடைய வாங்கிப் பாங்கர்*" (நற்.186)

*[பாண் + யாழ்]*

**பாணகப்பாடி** *pāṇaga-p-pāḍi,* பெ. (n.) வாணகப்பாடி (கல்), பார்க்க; the country of the bāṇās

*[வாணகம் + பாடி → பாணகப்பாடி]*

**பாணச்சி** *pāṇacci,* பெ. (n.) பாணத்தி (வழக்.); Pāṇar caste woman.

**பாணந்தொடு–த்தல்** *pāṇan-toḍu-* செ.குன்றாவி. (v.i.) **1.** அம்பெய்தல் (வின்.) to discharge arrows. **2.** கெடுக்கவழிதேடுதல்(கொ.வ.); to seek to ruin one. **3.** வசவு பொழிதல்; to pour out abusire language to revile.

**பாணபத்திரன்** *pāṇapattiraṉ,* பெ. (n.) பாண்டியனாலும் சேரனாலும் பாராட்டி ஆதரிக்கப் பெற்றவரும் இசைவல்ல பாண்மரபினருமாகிய ஒரு பெரியார்; a minstrel who was patronised by the pāṇḍya and cēra kings. "*பண்டரு விபஞ்சி பாணபத்திர னடிமை யென்றான்*" (திருவிளை. விறகு.24.) (சிவனடியார்களுள் ஒருவர் பாண்டிய மன்னர்களில் ஒருவராகிய வரகுணன் என்பவருடைய அவைக்களப் பாணராக இருந்தவர். இவர் பொருட்டுச் சிவபெருமான் விறகு விற்பவராக வந்து, ஏமநாதன் என்னும் வடதிசைப்பாணன் ஒருவனைச் சாதாரிப் பண்ணால்வென்றார். இது திருவிளையாடற் புராணத்தில் '*விறகுவிற்ற திருவிளையாடல்*' என்று அமைந்துள்ளது.)

**பாணம்**[1] *pāṇam,* பெ. (n.) **1.** மழைவண்ணக் குறிஞ்சி; a species of mindie that yields sky coloured flowers. மறுவ. மேகவண்ணக் குறிஞ்சி, **2.** திப்பிலிக்கொடி; long pepper creeper. **3.** திப்பிலி; long pepper. **4.** கை; hand **5.** வெடியுப்பு; nitre, **6.** நருமதை ஆற்றில் ஒங்காரக் குண்டத்தில் கிடைக்கும் இலிங்கக்கல்; a kind of phallic stone said to be found in the river narmada. (சா.அக.)

**பாணம்³** *pāṇam,* பெ. (n.) **1.** அம்பு (பிங்.); arrow. **2.** ஆகாசவாணம்; rocket, fireworks. **3.** திப்பலி (தைலவ.தைல.); long pepper. **4.** செடிவகை (பிங்.); a species of conehead, 1 sh., strobilanthes sessilis. **5.** இராமபாணம் என்னும் ஒருவகைப்பூச்சி; an insect called as irama panam.

**பாணம்⁴** *pāṇam,* பெ. (n.) உருவகம் (ரூபகம்) பத்தனுள் ஒருறுப்யையுடையதும் கதையைக் கூறுவதுமான நாடகவகை (சிலப் 3, பக்.84. அடிக்குறிப்பு); a drama in one act, one of ten rūbagam, q.v.,

*[பண் → பாண் → பாணம்]*

**பாணம்⁵** *pāṇam,* பெ. (n.) பூம்பட்டு (சூடா.); silk cloth.

*[பண் → பாணம்]*

**பாணம்பழை** *pāṇambaḻai,* பெ. (n.) மேகவண்ணக்குறிஞ்சி; a species of mindie that yields sky coloured flowers. (a shrub) (சா.அக.)

**பாணர்** *pāṇar,* பெ. (n.) பாடல் வல்ல ஒரு சாதியர்; an ancient class of tamil bands and ministrals.

*[பண் → பாண் → பாணர்]*

(தமிழ்நாட்டின் பழங்குடிகளுள் ஒருபிரிவினர். "*பாணன், பறையன் துடியன், கடம்பனென்றிந்நான்கல்லது குடியுமில்லை*" என்று(புறநா.335.)(புறநா.335.) பழஞ் செய்யுள் கூறுகின்றது. பாணர்களில் ஆண்பாலாரைச் '*சென்னியர், வயிரியர், செயிரியர், மதங்கர், இன்னிசைகாரர் பாணரென்ப*' என்று பிங்கல நிகண்டும், பெண்பாலரைப்' பாடினி,விறலி, பாட்டி, மதங்கி, பாடல் மகடூஉ பாண்மகளாகும்' எனத் திவாகரமும் கூறும்.

பண்ணிசைப்போர் பாணர். இவர்கள் இசைப்பாணரும், யாழ்ப் பாணரும், மண்டைப் பாணரும் என மூவகையினர் எனத் தொல்காப்பியப் பொருளதிகார உரையில் நச்சினார்க்கினியர் கூறுகின்றனர். (தொல்.பொருள்.91.))

தமிழ் நாட்டில் உள்ள தமிழ் அல்லது திராவிடக் குலங்களுள் பாணர் குலமும் ஒன்று. இது மிகப் பழைமையான தென்பது தொல்காப்பியத்தாலறியப்படும்.

பாணர் பாணைத் தொழிலாகக் கொண்டவர். பாண் என்பது பாட்டு,பண், பாண், பாடு. பா என்பவை ஒரினச் சொற்கள். சீவகசிந்தாமணியில் பாணியாழ் (1500), பாண்வலை(2040) பாணுவண்டு(2447) என்னும் தொடர் மொழிகளில் பாண் என்னும் சொல் பாட்டு என்னும் பொருளில் வந்துள்ளது. சிலப்பதிகாரத்தும் (ப.349) பாண்–பாட்டு என்று அடியார்க்குநல்லார் கூறியுள்ளார்.

''பாணருளும் இசைப்பாணரும் யாழ்ப்பாணரும் மண்டைப் பாணருமெனப் பலராம்'' என்று (தொல்.புறம்.36,உரை) நச்சினார்க்கினியர் கூறுவர். இசைக்கருவிகள்: தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக் கருவி என ஐவகையாகக் கூறப்படும். இவற்றுள், மிடறு(தொண்டை) என்பது இயல்பான வாய்ப்பாட்டாதலின் இதனை நீக்கி ஏனைய நான்கையுமே கருவியெனக் கூறுவர் சிலர். இந்நான்கனுள் கஞ்சம் (வெண்கலம்) தாளக்கருவி. இது முதலிற் கருவிபற்றி வெண்கலத்தாற் செய்யப்பட்டதையும், பின்பு இனவிலக்கணத்தாற் பிறவற்றினால் செய்யப்பட்டவற்றையும் குறிக்கும். தாளக் கருவியும் தனித்து இன்பம் தாராமையானம் அது முக்கியமானதன்று. மேற்கூறிய பிரிவாருள் இசைப்பாணர் வாய்ப்பாடகரும், யாழ்ப்பாணர் நரப்புக்கருவியினரும், மண்டைப்பாணர் தோற்கருவியினருமாவர். துளைக்கருவி இயக்கும் குழற்பாணர் மண்டைப் பாணருள் அடங்குவர். மண்டை–பறை. குழலொடுகூடிப் பறையடிப்பதே பெருவழக்கு. இனி, நச்சினார்க்கினியர் பாணரை மூவகையர்

என்னாது பலர் என்றதால், அதனுட் குழற்பாணரை அடக்கினும் அமையும் சிலப்பதிகாரத்தில்,

"குழலினும் யாழினுங் குரல்முத லேழும்
வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டும்
அரும்பெறன் மரபிற் பெரும்பா ணிருக்கையும்"

என்று இளங்கோவடிகளும்,

'பெரும் பாண்–குழலர் முதலோர்' (ப.139) என அரும்பதவுரைகாரரும் கூறியிருப்பதால் குழற்பாணர் பிரித்துக் கூறப்பட்டிலர்.

ஆகவே, இசைத்தொழில் முழுமையுங் கொண்டு இக்காலத்து மேளக் காரர்போல இருந்தவர் பாணர் என்பது பெறப்படும். "பாண்சேரிப் பற்கிளக்குமாறு" என்னும் பண்டைப் பழமொழியும் இதனை வற்புறுத்தும். திருவிளையாடற் புராணத்திற் பாண்டியன் இசைப்புலவராகக் கூறப்படும் பாணபத்திரரும், திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகங்கட்கு யாழ் வாசித்த திருநீலகண்ட யாழ்ப்பாணரும், பன்னீராழ்வாருள் ஒருவரும் யாழறிஞருமான திருப்பாணாழ்வாரும் பாணர் குலத்தவரே. பாணருள், ஆடவன் பாணன் என்றும், பெண்டு பாடினி, பாணிச்சி, பாட்டி, விறலி என்றுங் கூறப்படுவர்.

வேளாளர் குலம் வேளாண் என்றும், சமணர் நெறி சமண் என்றும் கூறப்படுதல் போல, பாணர் குலமும் பாண் என்று கூறப்படுவதுண்டு. புறப்பொருள் வெண்பா மாலையில்,

"கிளை பாய்ந்து பண்ணிய கேள்வியாழ்ப் பாணும்" (சூ.144)

"அங்கட் கிணையன் துடியன் விறலிபாண்" (சூ.16)

"பாண்பாட்டு" (சூ.137)

"பாண்கட னிறுக்கும்" (புறம்.203)

என வந்திருத்தல் காண்க.

பாணருக்குக் சென்னியர், வயிரியர், செயிரியர், மதங்கர், இசைகாரர், பண்ணவர், பண்டவர்(பண்டர்), ஒவர், அம்பணவர் முதலிய பிற பெயர்களுமுண்டு. இவற்றுள் பண்டர், ஒவர் என்பன பாணருட் கீழ்மக்களைக் குறிக்குமென்று பிங்கல நிகண்டு கூறும். மதங்கன், அம்பணவன் என்னும் ஆண்பாற் பெயர்கட்கு மதங்கி, அம்பணத்தி என்பன முறையே பெண்பாற் பெயர்களாகும். அம்பணம்=யாழ், அம்பணவன் = யாழ் வாசிப்போன்.

"அரும் பெறன் மரபிற் பெரும் பாணிருக்கையும்" என்று சிலப்பதிகாரத்தும் "பெரும்பாணிருக்கையும்" என்று மதுரைக் காஞ்சியிலும் (942) "அருட் பெரும் பாணணாரை" என்று திருநீலகண்ட யாழ்ப்பாணர் புராணத்தும்(3) சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை எனப் பத்துப் பாட்டினும் வந்திருப்பது கொண்டு, சிறுபாணர், பெரும்பாணர் எனப்பாணர் இருபெரும் பிரிவினரோ என்று ஐயுறவும் இடமுண்டு.

பத்துப்பாட்டு முகவுரையில், "மேலைப் பாட்டும் (சிறுபாணாற்றுப் படையும்) இதுவும் (பெரும்பாணாற்றுப்படையும்) பாணராற்றுப் படையாயிருப்பினும், அடிவரையறையிற் சிறிதும் பெரிதுமாயிருத்தல் பற்றி அது சிறுபாணாற்றுப் படையெனவும் இது பெரும்பாணாற்றுப் படையெனவும் பெயர் பெற்றன" என டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள், எழுதியிருப்பது தெளிவானதேயாயினும், பெரும்பாண், பெரும்பாணர் என்று நூல்களில் வழங்குவதானும், சிறுபாணாற்றுப்படையில்.

"பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
இன்குரற் சீறியாழ் இடவயின் தழீஇ"

எனச் சுருக்கமாகவும் சீறியாழ் (சிறு + யாழ்) என்னும் பெயருடனும், பெரும் பாணாற்றுப் படையில் பச்சை, துளை, போர்வை, வாய், கவைக்கடை, திவவு, மருப்பு, நரம்பு முதலிய உறுப்புகளையுடையதாக விரிவாகப் பதினாறடிகளினும் யாழ் கூறப்படுதலானும், சிறுபாண் பெரும்பாண் என்பவை கருவிபற்றிய குலப்பிரிவோ என்னும் ஐயம் முற்றும் அகன்றபாடில்லை. சென்னைப் பல்கலைக்கழக அகராதியினும் பெரும்பாணர் பாணருள் ஒரு பிரிவினர் எனக் குறிக்கப்பட்டுள்ளது.

பாணர் வாய்ப்பாட்டும் கருவியுமாகிய இருவகை இசையினும் வல்லவராயிருந்தனர். சிலப்பதிகாரத்திலுள்ள 'பாடற் பாணர்' (அந்தி.186), 'குரல்வாய்ப் பாணர்' (200) என்னுந் தொடர்கள் வாய்ப் பாடகரைக் குறிக்கும்.

கருவிகளில் தோற்கருவிகளெல்லாம் பறை என்னும் பொதுப் பெயராற் குறிக்கப்படும் தொல்காப்பியத்தில்.

"தெய்வம் உணாவே மாமரம் புட் பறை" (தொல்.)

என்னும் கருப்பொருட் சூத்திரத்துள்ளும்,

"அனிச்சப்பூக் கால்களையாள் செய்தாள்
நுசுப்பிற்கு நல்ல படாஅ பறை" (குறள்.115)

என்னும் திருக்குறளினும் பறை என்பது தோற்கருவிப் பொதுப் பெயராயுள்ளமை காண்க. 'மணப்பறை', 'பிணப்பறை','பறைசாற்றினான்' முதலிய வழக்குகளில் பறை என்பது பல்வேறு தோற்கருவிகளைக் குறித்தது. பறைகளை அடிப்பவர் பறையர் எனப்பட்டனர். இப்பெயர் இக்காலத்துப் பிணப்பறை யறைபவரை மட்டுங் குறிக்கின்றது. பண்டைக் காலத்தில் மண்டை என்னும் பெயர் பறைக்கு வழங்கிவந்த மறுபெயராகும். பறைகளடிக்கும் பாணர் மண்டைப்பாணர் எனப்பட்டனர். மண்டையோடு போன்று மண். மரம், பித்தளை முதலியவற்றறாற் செய்து தோற்கட்டிய பறைகளை மண்டையென்றது ஒருவகை உவமையாகு பெயர். மண்டையென்பது இக்காலத்தில் மொந்தையென்று திரிந்து அவ்வடிவாயுள்ள மட்கலயத்தைக் குறிக்கின்றது. தவலை என்பதன் மறுவடிவாகிய தபேலா என்னும் இந்துத்தானிச் சொல் ஒரு நீர்ப்பாத்திரத்தையும் ஒரு பறையையும் குறித்தல் காண்க. கோவில் மேளத்தைக் குறிக்கும் தகல்(தவுல்) என்னும் பெயரும் இதன் திரிபுபோலும்.

பல்வகைப் பறைகளையும் அடித்துக்கொண்டு ஒரே குலமாயிருந்த மண்டைப்பாணர் பிற்காலத்துத் தொழில், கருவி, ஒழுக்கம் முதலியவற்றின் வேறுபாட்டால் பல்வேறு பிரிவாய் பிரிந்து போயினர்.

"துடியன் பாணன் பறையன் கடம்பன்என்
றிந்நான் கல்லது குடியுமில்லை"
(புறம்.335)

என, மாங்குடிகிழார் தொழிற் குடிமக்களை நால்வகைப்படுத்துக் கூறியுள்ளனர். துடி உடுக்கு.

பாட்டிற்குக் கூத்து துணைத்தொழிலாதலின், பாணர் கூத்தும் ஆடிவந்தனர். வயிரியர், செயிரியர், மதங்கர் என்னும் பெயர்களும், விறலி என்னும் பெண்பாற்பெயரும் கூத்துப் பற்றியனவே. கூத்தரைக் குறிக்கும் கண்ணுளர், கண்ணுளாளர் என்னும் பெயர்களும் பாணர்க்குரியன. கண்ணுள் என்பது கண்ணை உள்ளே வைத்தாற்போல் நுணுகி நோக்கும் நுண்வினைக்கூத்து. சிலப்பதிகாரத்தில்(ப.169) "கண்ணுளாளர்–மதங்கர், ஆவார் பெரும்பாணர்" என்று அடியார்க்குநல்லார் கூறியிருப்பதை நோக்குக. விறலி என்பவள் விறல்பட ஆடுபவள். விறலாவது மனத்தின் இயல்பு புறத்தே தோன்றச் செய்யும் திறம். இது வடமொழியிற் சத்துவம் எனப்படும். கணவன் பாணனும் மனைவி விறலியுமாயிருந்து இருவரும் இசைந்து அரசரிடம் சென்று பாடியாடுவது பெருவழக்கு.

பாணர்க்குச் சிறுபான்மை தையல் தொழிலுமுண்டு. சிலப்பதிகாரத்தில் (இந்திர விழா.32) 'துன்னகாரர்' என்னும் பெயர்க்குப் பாணர் என்று பொருள் கூறியுள்ளார் அரும்பதவுரைகாரார். துன்னம்–தையல்.

"பாணர்க்குச் சொல்லுவதும்..........தை......"

என்று காளமேகரும் பாடியுள்ளார்.

பாணர்க்குரியது பெரும்பாலும் இசைத் தொழிலாதலின், பல்வகைப் பறைகட்கும் (அல்லது மேளங்கட்கும்) தோற்கட்டுதல் அவர் வினையே என்பது சொல்லாமே விளங்கும்.

இசைத்தொழில் பாணரெல்லார்க்கும் எக்காலத்தும் இசையாமையின், அவருள் ஒரு சாரார் மீன்பிடிப்பதைத் தொழிலாகக் கொண்டனர்.

"பசுஞ்சுன் பெய்த சுவல்பிணி பைந்தோல்
கோள்வல் பாண்மகன் தலைவலித்
தியாத்தநெடுங்கழைத் தூண்டில் நடுங்க
நாண்கொளீ இக்
கொடுவாய் இரும்பின் மடிதலை புலம்பப்
பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை"
(283–7)

என்று பெரும்பாணாற்றுப்படையிலும்.

"மீன்சீவும் பாண்சேரி"

என்று மதுரைக்காஞ்சியிலும் கூறியிருத்தல் காண்க.

பாணரென்பார் குலமுறைப்படி (இன்று ஆதிதிராவிடர் என்று அழைக்கப்படுவாருள் ஒரு சாராராகிய) பறையரேயாவர். இஃது மேற் சினந்திருக்கும்போது அது தணிக்கவந்த யாழ்ப்பாணனை நோக்கிப் "புலை ஆத்தின்னி போந்ததுவே'' (திருக்கோ.386) என்று வெகுண்டுரைப்பதில் பாணர் ஆவின் (பசுவின்) இறைச்சியை உண்பதாகக் குறித்திருத்தலாலும், அதற்கப் பாணன் புலந்துரைப்பதில் (387.)

"வில்லாண் டிலங்கு புருவம் நெறியச்செவ்
வாய்துடிப்பக் கல்லாண் டெடேல்கருங் கண்சிவப்
பாறறு கருப்பதன்று பல்லாண் டடியேன் அடிவலங்
கொள்வன் பணிமொழியே"

என்று தன்னை மிகவும் தாழ்த்திருப்பதாலும் அறியப்படும்.

காலஞ்சென்ற எம். சீனிவாச ஐயங்கார் அவர்களும் தமது ஆராய்ச்சி நூலில் பாணர் பறையருள் ஒரு பிரிவினர் என்று குறிப்பிட்டுள்ளனர்.

பாணர் இங்ஙனம் தாழ்ந்த வகுப்பினராயிருந்தும், முத்தமிழுள் இசை, நாடகம் என்னும் இரண்டையும் வளர்ப்பவர் அவராதலாலும், இசையில் (சங்கீதத்தில்) தமிழர்க்கும் தமிழரசர்க்கும் இருந்த பேரார்வத்தினாலும், ஆரிய வொழுக்கம் ஆழ வேரூன்றாத பண்டைக்காலத்தில் குலப் பிரிவினைப் பிற்காலத்திற்போல் அவ்வளவு முறுகாமையானும் அவர்க்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பும் அரசர் அவைக்களங்களிலும் அரசியர் அந்தப் புரங்களிலும் தடையில்லா நுழைவும் இருந்தன. அறிவாற் சிறப்பேயன்றிப் பிறப்பாற் சிறப்பு அக்காலத்தில் இருந்திலது.

அரசரைப் ''பாணர் ஒக்கல்'' என்று திருக்கோவை (400)கூறும்; ஒக்கல் = இனம்.

"குரல்வாய்ப் பாணரொடு திரிதருமரபின் கோவலன் போல",

"பாடும் பாணரிற் பாங்குறச் சேர்ந்து"

என்று, பெருஞ்செல்வனும் பெருங்குடி வணிகனுமான கோவலன் பாணரொடு கூடித்திரிந்தமை சிலப்பதிகாரங் கூறும்.

உறையூர் முதுகண்ணன் சாத்தனார் சோழன் நலங்கிள்ளியைப் பாடிய புறப்பாட்டில். "பாண்சுற்றம் சூழ்வதாக நினது நாட்காலத்து மகிழ்ந்திருக்கும் ஒலக்கம்" (Durbar) (29. உரை) என்று கூறியுள்ளார்.

பாணர் அரசரிடம் சென்று பாடி யாழ் வாசித்து அவர்க்கு இன்ப மூட்டுவதும், அவர்மீது அரசியர்க்குள்ள ஊடலை(கோபத்தை)த் தணிப்பதும், அரசருடன் போர்க்களத்திற்குச் சென்று வெற்றி நேர்ந்தவிடத்து வெற்றிக் கூத்தாடுவதும் இறந்துபட்ட அரசர்க்கும் வீரர்க்கும் இரங்கிப் பாடுவதும், அவரை நினைவுகூர்தற்கும் வழிபடுதற்கும் நாட்டிய நடுகற்களை வணங்கிச் செல்வதும் வழக்கம்.

அரசரும் விடிந்தெழுந்தபின் பாணரை வருவித்து, அவர்க்குச் சிறந்த பரிசிலளிப்பதும், அவரை இனத்தாருடன் உண்பிப்பதும், போர்க்களத்து வருவாய்களைப் போர் செய்து வெற்றிபெற்ற பின்பும், பகைவர் செல்வங்களை (வெற்றியுறுதிபற்றி)ப் போர் செய்யப் போகு முன்பும் அவற்றிற்கு உரிமையாக்குவதும் வழக்கம்.

''வரையா வாயிற் செறாஅ திருந்து
பாணர் வருக பாட்டியர் வருக
................வயிரியர் வருகென
இருங்கிளை புரக்கும் இரவலர்க் கெல்லாம்
கொடிஞ்சி நெடுந்தேர் களிற்றொடும் வீசி"
(அ.748–52)

என்றுமதுரைக்காஞ்சியில், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் விடியற்காலத்துப் பாணரை வருவித்துப் பரிசளித்தமை கூறப்பட்டது.

"பொறிமயிர் வாரணம் பொழுதறிந் தியம்பப்
பொய்கைப் பூமுகை மலரப் பாணர்
கைவல் சீறியாழ் கடனறிந் தியக்க
இரவுப் புறம்பெற்ற ஏம வைகறை
..................................................
வரிசையின் இறுத்த வாய்மொழி வஞ்சன்"
(புறம்.398)

என்று புறப்பாட்டில் சேரமான் வஞ்சன் அரண்மனையில் வைகறை (விடியல்) தோறும் பாணர் யாழ்வாசித்தல் கூறப்பட்டது. வாரணம் = கோழி.

"பாணன் கூத்தன் விறலி.................
..................
தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர்"

என்று தொல்காப்பியத்தில் பாணர் அரசியரிடம் அவர்க்கு அவர்தம் கணவர் மீதுள்ள ஊடலை புலவியைப் போக்குதல் கூறப்பட்டது. ஊடல் முதிர்ந்தது புலவி.

புறப்பொருள் வெண்பாமாலையில்,144ஆம் சூத்திரத்தில். பாணர் போர்க்களத்தில் வீரருடன் தேரின் பின் நின்று ஆடுவதும், 207ஆம் சூத்திரத்தில் அவர் போர்க்களத்திற் பெற்ற பரிசிலைப் புகழ்ந்து கூறுவதும், 137ஆம் சூத்திரத்தில் அவர் போரில் இறந்த வீரர்க்கு இரங்கி விளரிப்பண் பாடுவதும், 252ஆம் சூத்திரத்தில், அவர் இறந்த வீரர்க்கு எடுத்த நடுகல்லைத் தொழுவதும் கூறப்பட்டன.

அரசர் பாணர்க்குப் புலவுச்சோறு, இனிய மது, பொன்னரி மாலை, வெள்ளிநாராற் றொடுத்த பொற்றாமரைப்பூ. களிறு, குதிரை பூட்டிய தேர் முதலியவற்றை நிரம்பக் கொடுத்தாகப் புறநானூற்றில் பல பாடல்களுள. இவற்றுள், பொன்னரி மாலையை விறலி என்னும் பாணிச்சிக்கும் பொற்றாமரைப் பூவைப் பாணனுக்கும் சூட்டுவது வழக்கம்.

"முட்டில் பாணரும் ஆடியன் மகளிரும்
எட்டொடு புணர்ந்த் ஆயிரம் பொன்பெறுப"
(சிலப்.ப.121)

என்பதால், மாதவி பெற்றதுபோலப் பாணரும் தம் திறமைக்கு 1008 கழஞ்சு பொன் பெறும் வழக்கமிருந்ததாகத் தெரிகின்றது.

11ஆம் புறப்பாட்டில், பாடினிக்குச் சிறந்த பொன்னணி கலத்தையும் பாணனுக்கு வெள்ளிநாராற் றொடுத்த பொற்றாமரைப் பூவையும் சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ அளித்தாகக் கூறப்பட்டுள்ளது.

126 ஆம் புறப்பாட்டில், மலையமான் திருமுடிக்காரி பகைவருடைய யானையினது (நெற்றிப்) பட்டத்திற் பொன்னைக் கொண்டு செய்த வாடாத பொற்றாமரைப் பூவைப் பாணரது தலைபொலியச் சூட்டியதும், 203ஆம் புறப்பாட்டில், சேரமான் பாமுளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி பாணர்க்குப் பகைவர் அரண்களைப் போர்செய்து அழிக்கு முன்பே கொடுத்ததும் கூறப்பட்டன.

பாணர் இங்ஙனம் பல அரசரிடம் சிறப்புப் பெற்றனரேனும், பொதுவாக வறுமையால் வருந்தினரென்றும், வள்ளல்களைத் தேடி மலையுங் காடும் அலைந்து திரிந்தனரென்றும் கி.மு. 1000 ஆண்டிற்குக் குறையாத தொல்காப்பியமே கூறுகின்றது.

"கூத்தரும் பாணரும் பொருநரும்
விறலியும்ஆற்றிடைக் காட்சி உறழத்
தோன்றிப்பெற்ற பெருவளம் பெறா அர்க்
கறிவுறீஇச்சென்று பயன்எதிரச்
சொன்ன பக்கமும்"
(புறத்.36)

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தில் பாணர் வறுமையும், அவருள் ஒருவர் தாம் பரிசுபெற்ற வள்ளலிடம் அது பெறாத பிறரை ஏவி ஆற்றுப் படுப்பதும் கூறப்பட்டன. சங்க நூல்களிலும் தனிப்பாடல்களிலும் பாணராற்றுப்படைக்கு உதாரணங்கள் நிரம்பவுள.

இங்ஙனம் பண்டைக்காலத்தே பாணர்க்கு வறுமை தோன்றியதற்கும், அது பின்பு முற்றிப் பிணப்பறை தவிரப் பிறவழிகளிற் பாண்டொழில் நடத்தவிடாது கெடுத்தமைக்கும் காரணம் ஆரியவர்ணாசிரமத்தால் பாணர்

தாழ்த்தப்பட்டதும் ஆரியர் தமிழ் இசையைப் பயின்றதுமே.

பாணர் தீண்டாதார் அல்லது தாழ்ந்தோராகவே அரசரிடத்தும் பெருமக்களிடத்தும் அண்டமுடியாது போயிற்று. இவ்விழிவு திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருப்பாணாழ்வார் போன்ற அடியார்களைக்கூட அடுத்தமை அவர்கள் சரித்திரங்களிற் காணலாம். பாணர் வாய்ப்பாட்டையும் யாழையும் ஊக்குவாரின்றிக் கைவிட்டனர். அதனால் இசைத்தமிழ் அழிந்தபின் எஞ்சியுள்ள ஒருசில இசைத்தமிழ்ச் சூத்திரங்கட்கும் குறியீடுகட்கும் உண்மைப் பொருள் காண்டல் அரிதாய்விட்டது. இப்போது பாணரெனப் படுவார். மாடு தின்னாமையும் பிணப்பறை யடியாமையும்பற்றிப் பறையரினும் சற்று உயர்வாயிருப்பினும், தம் பண்டைத் தொழிலையும் பெருமையும் இழந்தவராயே உள்ளனர்.

பண்டைக் காலத்தில் பட்டத்தியானைமேல் ஏறி அரசருடைய விளம்பரங்களைப் பறையறைந்து நகரத்தார்க்கு அறிவித்த வள்ளுவரும் பாணர் அல்லது பறையரே. சாதாணப் பறையர் பொதுமக்கட்கும். வள்ளுவர் அரசர்க்கும் பறையறைகிறவராயிருந்தனர். இதுவே வள்ளுவரின் ஏற்றத்திற்குக் காரணம்.

இன்றும் தென்னாட்டிற் சில சிற்றூர்களில் பறையர் கோயில் மேளம் என்னும் மணப்பறை பயில்வதையும் அதை மேல்வகுப்பாரில்லங்களில் இருவகை வினைகட்கும் வாசிப்பதையும் காணலாம். இசைத்தொழில் நடத்த முடியாத பாணரெல்லாம் கூடைமுடைதல், மீன்பிடித்தல் முதலிய பிற தொழில்களை மேற்கொண்டுள்ளனர்.

ஆரியர்(பிராமணர்) முதன் முதலாய் வாய்ப்பாட்டும் நரப்புக் கருவியும் பயின்று இதுபோது தோற்கருவியும் பயில்கின்றனர். ஆயினும் 'நாககுரம்' என்னும் துளைக்கருவியையும், 'தவல்' போன்ற தோற்கருவிகளையும் பயில்வதில்லை. அவை தாழ்ந்தவை என்று எண்ணப்படுதலான். 11ஆம் நூற்றாண்டு வரை பாணரே தமிழ்நாட்டில் இசைத்தலைமை வகித்தமை, நம்பியாண்டார் நம்பியாலும் முதலாம் இராசராச சோழனாலும் தில்லையம்பலத்திற் கண்டெடுக்கப்பட்ட தேவாரத் திருப்பதிகங்கட்கு இசை வகுக்குமாறு, திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபினளான ஒரு பெண் நியமிக்கப்பட்டமையாலும் விளங்கும்.

ஆரியப் பிராமணர் இசை பயிலக் கூடாதென்று ஆதியில் ஓர் விலக்கு இருந்தது. மனுதர்ம சாத்திரம் 4ஆம் அத்தியாயம் 15ஆம் விதியில் பிராமணர் "பாட்டுப் பாடுவது. கூத்தாடுவது..........இப்படிக்கொத்த சாத்திர விருத்தமான கர்மத்தினால் பொருளைத் தேடிக்கொள்ளக் கூடாது" என்று கூறப்பட்டுள்ளது.

வேதத்தை ஓதாது வரிப்பாட்டைப் பாடி வேத ஒழுக்கத்தினின்றும் தவறியதால் சில பார்ப்பனர் விலக்கப்பட்டு ஓர் ஊருக்கு வெளியே போய்க் குடியிருந்தனர் என்னும் செய்தி, சிலப்பதிகாரத்தில்,

> "வரிநவில் கொள்கை மறைநூல் வழுக்கத்துப்
> புரிநூன் மார்பர் உறைபதி" (புறஞ்சேரி.38-9)

என்னும் அடிகளிற் குறிக்கப்படுகின்றது.

ஆரியர் இந்தியாவிற்கு வருமுன்னமே தமிழர்க்கு இசைத்தமிழ் இருந்தது. மொழிப் பகுதியாக்கினது தமிழிலன்றி வேறு எம்மொழியினுமில்லை. ஆரிய வேதங்களில் ஒன்றான சாமவேதம் இசையோடு கூடியதேனும், அவ்விசை பிறநாடுகளிற் போல் மந்திரத்திற்கரிய அளவு சாமானியமான தேயன்றித் தமிழிசைபோல விரிவாய் ஆலாபித்துப் பாடப்படுவதன்று. தென்னாட்டுத் தமிழிசையைப் பின்பற்றியே சமற்கிருதத்தில் இசைநூல்கள் பிற்காலத் தெழுதப்பட்டன. கி.பி. 5ஆம் நூற்றாண்டிலேயே முதன்முதலாய் வடமொழியில் இசைநூலெழுந்த தென்று தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் தமது கருணாமிர்த சாகரத்திற் கூறியுள்ளார். ஆகவே ஆரிய வேதத்தினின்றும் இந்திய இசை எழுந்ததென்பது அறியாதார் கூற்றே. வேதவொழுக்கத்திற்கு மாறான மேனாட்டு அறுவைமுறை மருத்துவத்தை எங்ஙனம்

ஆரியர் பிற்காலத்துப் புதிதாய்க் கற்றுத் தேர்ந்தனரோ, அங்ஙனமே தமிழர் இசையையும் முற்காலத்துப் புதிதாய்க் கற்றுத் தேர்ந்தனர். வடநூல்களிற் கூறப்படாத பல தோற்கருவிகள் தமிழ்நாட்டிலிருந்தன. பல உயிர்களின் தோலையும் சவ்வையும் ஊறவைத்துக் கிழித்துப் பல்வகைப் பறைகட்குக் கட்டுவது பாணர்க்கே ஏற்கும்; இசைவல்ல ஓர் வகுப்பார் இசைக்கருவிகள் செய்பவராயு மிருத்தல் வேண்டும். இசைநூற்கு இன்றியமையாத குறியீடுகளெல்லாம் இன்றும் தமிழிலுள்ளன.

இனி இக்காலப் பாணரைப்பற்றி தர்ஸ்டன் (Thurston) என்பார் தமது 'தென்னாட்டுக் குலமரபுகள்' (Castes and Tribes of Southern India) என்னும் நூலில் தொகுத்திருப்பதைச் சுருக்கிக் கூறுவாம்:

தமிழ்ப் பாணர் மேஸ்திரியெனவும் படுவர். இவர் திருநெல்வேலி, மதுரைக் கோட்டங்களில் தையற்காரராயுள்ளனர். இவர் வேளாளரையும் பார்ப்பாரையும் புரோகிதராகக் கொள்வர். இவர் வீட்டில் அம்பட்டரும் வண்ணாரும் உண்ணார். ஆயினும், கோயில் நுழையும் உரிமை இவர்க்குண்டு.

மலையாளப் பாணர் மந்திரவாதிகளும் பேயாடிகளுமா யிருக்கின்றனர். இவர் மந்திர வினைகள் பல்வேறு வகைப்பட்டவை. இவருள் ஆடவர் தாழங்குடை முடைவர்; பெண்டிர் மருத்துவம் பார்ப்பர். சிலவிடத்து மலையன் என்னும் பட்டம் இவர்க்குண்டு. அறுப்புக்காலத்தில் பாணச் சிறுவர் சிறுமியர் வீடுதோறும் சென்று குடையுடன் ஆடி இரப்பர். பயிர்ப்சை மீது அதிகாரமுள்ள பேய்கள் இவர் வயப்பட்டன என்று கருதப்படுகிறது. சில சடங்குகளில் பாணர் துடியியக்குவர். பறைக்குத் தோல் கட்டுவதும் இவர் தொழிலாம்.

பாணனான குருப்பு என்னும் மேல்வகுப் பம்பட்டன், தீயருக்கும், இறந்தோர் ஆவியை அவர் இறந்த அறையினின்றும் ஒரு சடங்கால் வெளிப்படுத்துவான். இவன் செறுமாற்கு மேற்பட்ட தீண்டாதான்; தாழங்குடைக்கு மூங்கில் வேலை மட்டும் செய்வான். தாழை வேய்வது இவன் மனைவி; தன் மனைவியில்லாவிட்டால் அயல்வீட்டுப் பெண்டிரிடம் தாழை வேயக் கொடுப்பான்.

தீயர் பிணஞ் சுடும்போது பாணர் 5நாள் இரவு பறையறைந்து தீயாவிகளை விரட்டுவர்.

பாணர்க்கு மக்கள் தாயமே. பெண்டிர் பல சகோதரரை மணப்பதுண்டு. தென் மலபாரில், பாணர்க்குள் திருரெங்கன், கொடகெட்டி (குடைகட்டி), மீன்பிடி, புள்ளுவன் என நாற் பிரிவுண்டு. இவருள் புள்ளுவன் ஏனையரிலும் தாழ்ந்தவன், பாணர் கலப்பு மணமுள்ள பல இல்லங்கள் அல்லது கிரியங்களாகக் பிரிக்கப்பட்டிருக்கின்றனர். காளி, பரகுட்டி, கரிங்கட்டி, குளிகன், குட்டிச்சாத்தான் என்பன இவர் தெய்வங்கள். இவர் உச்சவேலி என்னும் வகுப்புப் பேய்களை ஒட்டுவர்.

ஒரு பாணன் தன் ஆடையில் ஓர் இழையெடுத்துத் தன் மைத்துனனிடம் கொடுத்து உன் பரிசம் முடிந்தது என்று கூறினால் தன் மனைவியை முற்றும் தள்ளியதாகும்.

மலையாளப் பாணருள், அஞ்ஞுற்றான், முந்நூற்றான் என இரு உட்பிரிவுகளுண்டு. திருவாங்கூர்ப் பாணர்க்குப் பணிக்கப்பட்டமுண்டு. இவர் தமிழப் பாணரினுந் தாழ்ந்தவர். இவர் மேற்குலத்தார்க்கு 36 அடித் தூரம் விலகுவர்; மன்னாரையும் வேடரையும் 8அடித் தூரத்தும் புலையரையும் பறையரையும் 32 அடித் தூரத்தும் தம்மின்றும் விலக்குவர். இவர் மயிர்வினையும் சலவையும் தாமே செய்து கொள்வார்; கம்மாளரிடத் துண்பர்; இளமை மணஞ் செய்வர்; இறந்தோரைப் புதைப்பர். இவர்க்குச் சாவுத்தீட்டு 16 நாள்; இயல்பாய் இறந்தவர்க்கு ஆவணி மாதத்திலும் ஊனுங்கள்ளும் படைப்பர்; இது வெள்ளங்குளி யெனப்படும். இறந்தவரை நினைவு கூரப் பந்தல், மடம் முதலியன அமைப்பதுண்டு.

ஈழவர் தமது கொண்டாட்டங்களில், பாணர்க்கு ஈராள் உண்டியளித்துத் தம் முன்னோர்க்கு அவர் முன்னோர் செய்த ஓர் நன்றியை நினைவு கூர்வர்.

பாலக்காட்டில் பாணர் தலைவனுக்குச் சுப்ரதன் என்று பெயர். அவன் இறந்தால் அரசனுக்கு அறிவிக்கப்படும். அரசன் வாள், கேடகம், ஈட்டி, துப்பாக்கி, வெடிமருந்து, வெள்ளிக் காப்பு, அட்டிகை என்னுமிவற்றை அவன் மகனுக்காவது இழவு கொண்டாடுபவருக்காவது அனுப்ப, அணிந்துகொள்வர். பிணத்தை எடுக்கும்போது ஒன்றும், கிடத்தும்போது ஒன்றும், எரித்தபின் ஒன்றுமாக 3வெடி சுடுவர். மறுநாள் மகன் தன் கையாற் செய்த ஓர் தாழங்குடையை அரசனுக்களிப்பன்; அரசன் அவனுக்குச் சுப்ரதன் என்னும் பட்டமளிப்பன்.

சங்கிலிக்கருப்பன், பேச்சி, ஊதர கருப்பன், காளி, சோதல கருப்பன், சோதல பத்ரகாளி, யட்சி, கந்தர்வன், அனுமான் என்று ஆவிகளைப் பாணர் வயப்படுத்துவர்.

பாணர் மதம் பேய் வணக்கம். மூக்கன், சாத்தன், கப்பிரி, மலங்கொறத்தி (குறத்தி) என்னுந் தெய்வங்களையும் இவர் வணங்குவர். இத்தெய்வங்களுக்கு மரத்தடியில் கல் நட்டு, முழுக்காட்டி, ஆடு கோழியறுத்துக் காய்கறி சோறு படைப்பர். இறந்தோரையும் வணங்குவர். அமாவாசையன்றாவது முழுநிலாவின் பின் 11ஆம் நாளாவது நோன்பிருப்பர்.

பாணர் எல்லாரும் பார்ப்பார், நாயர், கம்மாளர், ஈழவரிடம் உண்பர். பாணரும் கணியரும் தொட்டுக்கொண்டால் ஒருவரை யொருவர் தீட்டுப்படுத்தியவராவர்: பின்பு குளித்துத் தீட்டைப் போக்குவர். பாணர் ஈழவர் அருகில் குடியிருக்கலாம். ஆனால் நாயர் தரையில் கூடியிருக்க முடியாது. கம்மாளர் கிணற்றில் தண்ணீரெடுக்கவும், பார்ப்பனர் கோயிலின் புறமதிலையண்டவும், பாலக்காட்டில் பார்ப்பனர் தெருவழிச் செல்லவும் இவர்க்கு உரிமையில்லை. 1891ஆம் ஆண்டுக் குடிமதிப்பில் பாணர் பறையருள் ஒரு பிரிவார் என்று குறிக்கப்பட்டுள்ளது.

பாவாணர்–"செந்தமிழ்ச் செல்வி" மேழம் 1939

**பாணர் மாலையர்** *pāṇar-mālaiyar,* பெ. (n.) பாண்குல மகளிர்; women of the pāṇar caste "*மாலையங் குழல்சேர் பாணர்மாலையர்*" (திருவாலவா.54,26.)

*[பாணர் + மாலையர்]*

**பாணல்** *pāṇal,* பெ. (n.) வெற்றிலை; betal leaf. (சா.அக.)

**பாணலி** *pāṇali,* பெ. (n.) பொரிக்குஞ் சட்டி; frying pan.

தெ. பாணலி

க. பாணலெ

**பாணலிங்கம்** *pāṇa-liṅgam,* பெ. (n.) *வாணலிங்கம்* (சங்.அக.) பார்க்க; see *vāṇaliṅgam* a kind of *siva lingam.*

*[பாணம் + இலங்கம் → இலிங்கம் → லிங்கம்]*

**பாணவி** *pāṇavi,* பெ. (n.) தட்டைப் பயறு; flat pulse. (சா.அக.)

மறுவ: காராமணி.

**பாணவுப்பு**[1] *pāṇa-v-uppu,* பெ. (n.) வெடியுப்பு; nitre. (சா.அக.)

**பாணன்** *pāṇaṉ,* பெ. (n.) காட்டாமணக்கு; physic nut. (சா.அக.)



**பாணன்**[1] *pāṇaṉ,* பெ. (n.) **1.** பாடல்வல்ல ஒருசாதி; an ancient class of Tamil bards and minstrels. "*கூத்தரும் பாணரும்*" (தொல்.பொ.91.) **2.** *பாணான்* (வின்.) பார்க்க

ம. பாண.

*[பண் → பாண் → பாணன்]*

**பாணன்**[2] *pāṇaṉ,* பெ. (n.) **1.** வீணன்; worthless man. "*இங்கோர் பார்ப்பெனப் பாணனேன் படிற்றாக்கைகைய விட்டு*" (திருவாச.5,44.) **2.** *காட்டாமணக்கு*(மலை.) பார்க்க; see *kāṭṭāmaṇakku.* common physic nut.

*[ஒருகா. பாழ் → பாண் → பாணன்]*

**பாணன்**[3] *pāṇaṉ,* பெ. (n.) சிவபத்தனான ஓரசுரன்; an asura devotee of siva.

**பாணன்** *pāṇaṉ,* பெ. (n.) இவன் கழகக் காலத்தைச் சேர்ந்த ஒரு குறுநில மன்னன்; an ancient petty king in sangam period.

(அகநானூறு முந்நூற்று இருபத்தைந்தாவது பாட்டு இவனை வடநாட்டவன் என்று கூறுகின்றது. நூற்றுப் பதிமூன்றாவது பாட்டு இவன் நாடு வளம் பொருந்தியது என்று குறிக்கின்றது. ஒரு சமயம் இவன் கட்டி என்பவனுடன் கூடி, உறையூர் மன்னன் தித்தன் என்னும் சோழன்பாற் போர் புரியச் சென்று, நகர்க்கு வெளியே தங்கியிருந்த போது, தித்தன் அவையிலெழுந்த, தித்தனைப் பாராட்டும் பேரொலி கேட்டு, மக்களால் இவ்வாறு பாராட்டுப் பெறும் அரசனுடன் பொருதுவென்றி பெற ஏலாதென்று எண்ணி ஒடிவிட்டதாக அகநாநூறு இரு நூற்றிருபத்தாறாவது பாடல் இயம்புகின்றது. முந்நூற்றெண்பத்தாறாவது பாட்டால் ஆரியப் பொருநன் என்பவனோடு மற்போர் புரிந்து வெற்றி பெற்றவன் என்று அறிகின்றோம்.

**பாணா**[1] *pāṉ,* பெ. (n.) **1.** வயிறு பருத்த பானை (சால்) (வின்.); large, rounded pot. **2.** மண்சட்டி; earthen pan. **3.** பருத்த விதை large testicles.

க. பாநெ

ம.பாந

**பாணா**[2] *pāṇā,* பெ. (n.) *பாணாத்தடி*(C.G.) பார்க்க; see *pāṇā-t-taḍi.*

தெ. பாணா

**பாணாச்செடி** *pāṇā-c-ceḍi,* பெ. (n.) *காட்டுக் கொஞ்சி*(L.) பார்க்க; *see kāṭṭu-k-koñji. opal orange.*

**பாணாத்தடி** *pāṇā-t-taḍi,* பெ. (n.) சிலம்பக்கழி(C.G.); cudgel used by indian gymnasts in fencing.

*[பாணா + தடி]*

**பாணாத்தி** *pāṇātti,* பெ. (n.) பாணாரச்சாதிப் பெண் (இ.வ.); a woman of the tailor caste.

*[பாணன் → பாணாத்தி]*

**பாணாலு** *pāṇālu,* பெ. (n.) தொடர்ந்து ஆட்டம் ஆடமுடியாதபடி சோணாலுக் காயுள்பட நாலுகாய்கள் மல்லாந்து நிற்பதான தாயம்; a throw of four cowries upside down, including cōṇālu-k-kāy, the player being then disqualified from further play in that turn, opp. to cōṇālu.

*[பாழ் + நாலு → பாணாலு]*

**பாணாற்றுப்படை** *pāṉ-āṟṟuppaḍai,* பெ. (n.) தலைவனொருவனிடம் பரிசுபெற்றுவரும் பாணனொருவன் மற்றொரு பாணனை அத்தலைவனிடம் பரிசுபெறுதற்கு ஆற்றுப் படுத்துவதைக் கூறும் புறத்துறை (பு.வெ. 9, 28.); (purap.) theme describing a bard who has received reward at the court of a chief, directing another to the same chief on a similar purpose.

*[பாண் + ஆற்றுப்படை]*

**பாணாறு** *pāṇāṟu,* பெ. (n.) ***பாணாற்றுப்படை*** (தக்கயாகப்.662, உரை.) பார்க்க; see *pāṇ-āṟṟuppaḍi.*

*[பாண் + ஆறு]*

**பாணான்** *pāṇāṉ,* பெ. (n.) தையற்காரச் சாதியான்; man of the tailor caste.

*[பாணன் → பாணான்]*

**பாணி¹-த்தல்** *pāṇi-,* 11. செ.கு.வி. (v.i.) 1. சுணக்கப்படுதல்; to wait. "***பாணியே*** *மென்றார்*" (கலித்.102.) 2. பின்வாங்குதல்; to withdraw, back slide "***சமரிற் பாணியான்***" (கந்தபு. மூவாயிரர்.59.)

**பாணி²-த்தல்** *pāṇi-,* 3. செ.குன்றாவி. (v.t.) 1. பாவித்தல்; to consider, think, imagine conceive. '*மனத்திலே பாணிக்கிறான்*' (வின்.) 2. தாமதித்தல்; to delay. "*பாணிநீ நின்சூள்*" (பரிபா.8,56.) 3. மதிப்பிடுதல்; to conjecture, estimate, form an opinion, value. '***கையாலே*** *பாணித்துச் சொன்னான்*' (வின்.) 4. நிறைவேற்றுதல்; to achieve, manage to complete. '*காரியத்தை யெப்படியோ பாணித்து விட்டான்*'

**பாணி³** *pāṇi,* பெ. (n.) (இலங்.) 1. காய்ச்சிய பதநீர்; boiled state toddy. "*பனம்பாணி*" 2. பாகு; treacle; molasses. "***சீனிப்பாணி***".

ஒருகா: பாளைநீர் → பாணி

**பாணி⁴** *pāṇi,* பெ. (n.) 1. ஓசை; sound "*ஈர்ந்தண்முழவின் பாணிததும்ப*" (புறநா.114.) 2. கை; hansd; arm. "*பாலலோசனவால போசன பாலிமானுறுபாணியாய்*" (ஏகாதசி.உருக்கு.சகா.) 3. தாளம்; time or measure in music. "*மண்ணமை முழவின் பண்ணமை சீறியா-ழொண்ணுதல்விறலியர் பாணிதூங்க*" (பொருந.11) 4. நீர்; water. "*வழுது ணங்காய்நனை பாணியிலிங்கமீதுவார்ந்து*" (சிவரக. அபுத்திபூ.25.) 5. பாட்டு; prosody. "*மாயோன் பாணியும்*" (சிலப்.கடலாடு.45.)

**பாணி⁵** *pāṇi,* பெ. (n.) பாடினி; woman of the pāṇar caste. "*என்கொணர்ந்தாய் பாணா நீயென்றாள் பாணி*" (பெருந்தொ.1684.)

*[பாணன் → பாணி]*

**பாணி⁶** *pāṇi,* பெ. (n.) 1. காலம்; time, occasion '*எஞ்சொல்லற் பாணி நின்றன னாக*' (குறிஞ்சிப்.152.) 2. தாமதம்; delay. "*பணிப்பதே பாணியென்றான்*" (சீவக.1929.) 3. நீண்டகாலம் (திவா.); long period of time.

**பாணி⁷** *pāṇi,* பெ. (n.) 1. இசைப்பாட்டு; (திவா.) song, melody. "*புறத்தொரு பாணியிற் பூங்கொடி மயங்கி*" (சிலப்.8,44.) 2. (சங்கீதம்.) இசை; music. "*பாணியாழ்*" (சீவக.1500.) 3. ஒலி; sound. "*கிணைநிலைப் பொருநர் வைகறைப் பாணியும்*" (சிலப்.13,148.) 4. இசையுறுப்பாகிய தாளம்; (mus.) measure of time. "*தண்ணுமைப் பாணி தளரா*

*தெழுஉக*" (கலித்.102.) 5. அழகு; beauty. "*காமம்.....பாணியுமுடைத்து*" (குறுந்.136.) (பிங்.) 6. அன்பு(பிங்.); love 7. முல்லை யாழ்த்திறத்தொன்று; (mus.) a secondary melody type of the mullai class. 8. பறைப்பொது (பிங்.); drum. 9. கூத்து(பிங்.); dramatic entertainment with dancing.

*[பண் → பாணி]*

**பாணி⁸** *paṇi,* பெ. (n.) 1. சருக்கரைக் குழம்பு(வின்.); molasses, treacle. 2. கள் (மூ.அ.); toddy. 3. பழரசம்(வின்.); sweet juice of fruits 4. இலைச்சாறு(யாழ்.அக.); juice of leaves. 5. மிளகும் பனை வெல்லமும் சேர்ந்த ஒருவகை மருந்து(யாழ்.அக.); medicinal preparation of pepper and jaggery. 6. *சரகாண்டகச் செய்ந்நஞ்சு* பார்க்க, see *sarakāndaga pasāṇam.* a kind of mineral poison.

**பாணி⁹** *pāṇi,* பெ. (n.) 1. ஊர் (பிங்.); town, village. 2. நாடு (பிங்.); district, country. 3. ஊர்சூழ்சோலை (பிங்.); grove encircling a village 4. காடு (சூடா.); jungle 5. பூம்பந்தர் arbour 6. பலபண்டம் (பிங்.); stores, provisions. 7. கடைத்தெரு (யாழ்.அக.); bazaar.

**பாணி¹⁰** *pāṇi,* பெ. (n.) பாங்கு; Style, manner, peculiarity.

**பாணிகம்** *pāṇigam,* பெ. (n.) 1. தாமரை; lotus flower. 2. கைநகம்; finger nail. (சா.அக.)



**பாணிகை** *pāṇigai,* பெ. (n.) அகப்பை (யாழ்.அக.); a large spoon. (woodend spoon)



**பாணிச்சாய்** *pāṇi-c-cāy,* பெ. (n.) கள்போன்ற முத்துநிறம் (S.I.I.ii,141.171.); colour of a class of pearls, resembling that of toddy.

*[பாணி + சாய்]*

**பாணிச்சி** *pāṇicci,* பெ. (n.) பாணர்சாதிப்பெண் (மதுரைக்.749,உரை.); woman of pāṇar caste.

*[பாணன் → பாணிச்சி]*

**பாணிச்சீர்** *pāṇi-c-cīr,* பெ. (n.) கைத்தாளம்; (mus.) marking time with the hands. "*பாடுவார் பாணிச்சீரும்*" (பரிபா.8,109.)

*[பாணி + சீர்]*

**பாணித்தல்** *pāṇittal,* பெ. (n.) தடுத்தல்; obstruct. (சா.அக.)

**பாணிதம்** *pāṇidam,* பெ. (n.) **1.** கருப்பஞ்சாறு; sugar can juice **2.** வெல்லப்பாகு; molasses obtained from jaggery **3.** கற்கண்டு; sugar candy **4.** தண்ணீர்; water **5.** ஊக்குநீர்; tonic. **6.** கியாழம்; a weak form of decoction derived by boiling the medicinal substance in water. (சா.அக.)

**பாணிப்பல்லி** *pāṇi-p-palli,* பெ. (n.) வலம்புரிக்கொடி; isora creeper. (சா.அக.)

**பாணிப்பூ** *pāṇi-p-pū,* பெ. (n.) இலுப்பைப்பூ; bassia flower. (சா.அக.)

**பாணியம்** *pāṇiyam,* பெ. (n.) மருந்து ஒரு பங்கும், தண்ணீர் 32 பங்கும் எடுத்துக் கொண்டு காய்ச்சி அரை அல்லது கால் பங்கு ஆகும் வரை கொதிக்கவைத்து இறக்கித் தேனில் கொள்ளும் கியாழம்; a weak form of decoction prepared by boiling one part of medicinal substances or drugs in 32 parts of water till the whole is reduced to 1/2 or 1/4. it should be taken in honey. (சா.அக.)

**பாணியிழு-த்தல்** *pāṇi-y-iḻu-,* 4. செ.கு.வி.(v.i.) மண்வெட்டியால் கரை மடித்தல்; to support the ridge by a hoe.

*[பாணி + இழு-,]*

**பாணிரம்** *pāṇiram,* பெ.. (n.) தாமரை; lotus flower. (சா.அக.)

**பாணினி**[1] *pāṇiṉi,* பெ. (n.) பாடினி; songstress. woman of the pāṇar caste. *"பாணினியு மின்னிசையாற் பாடுவாள்"* (கடம்ப.உலா.295.)

*[பாணன் → பாணினி]*

**பாத்தகம்** *pāttagam.* பெ. (n.) பேராமுட்டி; ceylon sticky. (சா.அக.)

**பாத்தம்** *pāttam,* பெ. (n.) மருதுமரம்; murdah tree. (சா.அக.)

மறுவ: கருமருது.

**பாத்தல்** *pāttal,* பெ. (n.) **1.** கொடுத்தல்; to give **2.** பங்கிடுதல்; to share *"பாத்தூண்"* (வள்.உரை.)

**பாத்தா-தல்(பாத்தருதல்)** *pā-t-ta* செ.கு.வி. (v.i.) **1.** பரவுதல்; to spread. **2.** உருகியோடுதல்; to melt and flow, as gold in the process of refinement. "பாத்தரும் பசும்பொற்றலம்" (சீவக. 398)

*[பா + பாத்தரல் → பாத்தா]*

**பாத்தி** *pātti,* பெ. (n.) **1.** பகுதி; division, section, classification. "மருவின் பாத்தியிற் றிரியுமன் பயின்றே" (தொல். எழுத். 172) **2.** சிறுசெய்; parterre. pan. small field. "வளர்வதன் பாத்தியு ணீர்சொரிந் தற்று" (குறள்.718) *"கரும்புநடு பாத்தி யன்ன"* (குறுந்.262-7) *"கரும்புநடு பாத்தியில் கலித்த ஆம்பல்"* (ஐங்.65-1) *"பாத்திப்பன்மலர்ப் பூத்த தும்பின்று"* (புறம்.386-11) *"வகையறச் சூழாது எழுதல் பகைவரைப் பாத்திப் படுப்பதோர் ஆறு"* (குறள்.465-2) **3.** பங்கு (வின்.); part, portion, share. **4.** வீடு (பிங்.); house, dwelling abode.

*[பாத்து → பாத்தி]*

**பாத்திகட்டு–தல்** *pātti-kaṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) கீரைவிதைமுதலியன தெளிக்க வரம்புகட்டுதல் (வின்.); to back up or make garden beds, salt-pans etc.

*[பாத்தி + கட்டு–,]*

**பாத்திகோலு–தல்** *pātti-kōlu,* 9. செ.கு.வி. (v.i.) *பாத்திகட்டு* (உ.வ.) பார்க்க; see *pātti-kaṭṭu*

*[பாத்தி + கோலு–,]*

**பாத்திப்படு–தல்** *pātti-p-paḍu-,* 10. செ.கு.வி. (v.i.) 1. பொறுப்புடைமையாதல் (வின்); to beresponsible; to be under obligation. 2. உரிமைப்படுதல் (உ.வ.); to belong to.

*[பாத்தியம் + படு]*

**பாத்திப்படு–த்தல்** *pātti-p-paḍu-,* 5. செ.கு.வி வளர்நிலத்திலே நிலை பெறச்செய்தல்; to establish, setup. ***"பகைவரைப் பாத்திப் படுப்பதோர் ஆறு"*** (குறள்.465.)

**பாத்தியக்காரன்** *pāttiya-k-kāraṉ,* பெ. (n.) ***பாத்தியன்* (இ.வ) பார்க்க; see *pāttiyaṉ.***

***[பாத்தியம் +காரன்]***

**பாத்தியத்திரவியம்** *pāttiya-t-tiraviyam,* பெ. (n.) **வெண்கடுகு, இலாமிச்சைவேர்,** சந்தனம், அறுகு **முதலியன; group of** substances consisting of while mustard, **(fragrant** grass) khus khus root sandal wood and **conch** grass or bare grass.

*[பாத்தியம் +திரவியம்]* *திரவியம்+ Skt.*

**பாத்தியம்**[1] *pāttiyam,* **பெ.** (n.) பாதம் அலம்பக் கொடுக்கு நீர்; water for ceremonial washing of the feet, "பாத்திய முதல் மூன்றும் பாங்குற வமைத்துக் கொண்டு" (**தணிகைப்பு.** வள்ளி.161)

*[பாதம் → பாத்தியம்]*

**பாத்தியம்**[2] *pāttiyam,* பெ. (n.) உரிமை; right of possession,; claim. ***"கணவன் இறந்து விட்டால் அவனுக்குரிய குடும்பச் சொத்துகளில் மனைவிக்குப் பாத்தியம் உண்டு"***

*[பாத்தி → **பாத்தியம்**]*

**பாத்தியம்**[1] *pāttiyam,* **பெ.** (n.) புறாமுட்டி; a plant. (**சா.அக.**)

மறுவ: பிராய்முட்டி,**சிற்றாமுட்டி.**

**பாத்தியம்**[2] *pāttiyam,* பெ. (n.) **பெருங்கோரைக்** கிழங்கு; root of large sedge grass

மறுவ. **பெருமுத்தக்காசு**

**பாத்தியல்** *pāttiyal,* பெ. (n.) **தண்ணீர்மிட்டான்;** water root (**சா.அக.**)

**பாத்தியன்** *pāttiyaṉ,* பெ. (n.) 1. சுற்றத்தான்; relative. 2. **உரிமையாளன்;** one who has a right; claimant; sharer 3. பிணைகொடுப் போன்; surety, one who gives security.

*[பாத்தியம் → பாத்தியன்]*

**பாத்திரம்** *pāttiram,* பெ. (n.) வரகுப்பாத்தி (இ.வ.); field where raji is grown.

*[பாத்தி → பாத்திரம்]*

**பாத்து–தல்** *pāttu-,* 10. செ.கு.வி. (n.) பங்கிடுதல்; divide, to share appoction . "பாத்துண்ணுந்தன்மையிலாளரயலிப்பும்" (திரிகடு–க0) "நடுவ ணைந்திணை ... படுதிரை வையம் பாத்திய பண்பே" (தொல். பொ.2)

*[பகு → பா → பாத்து]*

**பாத்து** *pāttu,* பெ. (n.) 1. சோறு (திவா.); boiled rice. 2. கஞ்சி (சூடா.); rice gruel 3. ஐம்புலவின்பம்; pleasures of the five senses. "பாத்துண்பா னேத்துண்பான் பாடு" (ஏலாதி.44)

*[பற்று → பத்து → பாத்து ]*

**பாத்து³** *pāttu,* பெ. (n.) 1. விளைவுக் குறைச்சலுக்காகச் செய்யப்படும் வரிவிலக்கு; remission of revenue an account of failure of crops. 2. ஊரின் மொத்த விளைச் சலிலிருந்து செலுத்தப்படும் குறிப்பிட்ட தவச வளவு; fixed payments of grain out of the grass produce of a village

*[பாகு + பா → பாத்து]*

**பாத்து⁴** *pāttu,* பெ. (n.) 1. நான்கு என்ற பொருள் கொண்ட குழூஉக்குறி (வின்); a cant term meaning four.

**பாத்தூண்** *pāttūṉ,* பெ. (n.) 1. பகுத்துண்கை; sharing one's food with others. பாத்தூண் உடைத்தாயின்" (குறள்.44) 2.இரப்போர்க்கு இடும் ஐயம் (பிச்சை); alms. "பத்தினிப்பெண்டிர் பாத்தூ ணீத்ததும்" (மணிமே. பதி.64)

**பாத்தோய்–த்தல்** *pā-t-toy-,* 4. செ.கு.வி. (v.i.) நெசவுப் பாவுக்குக் கஞ்சியிடுதல் (வின்); to size the warp.

*[பா + தோய்–,]*

**பாதக்காப்பு** *pāda-k-kāppu,* பெ. (n.) காலணி; chappals

"*பண்டச் சிறுபொதி பாதக் காப்பொடு*" (சிலப்.23–78)

*[பாதம் + காப்பு]*

**பாதக்குறடு** *pāda-k-kuṟaḍu,* பெ. (n.) துறவியரால் (அணியப்படுவதும்) முதல் இரு கால் விரல்களின் இடைவெளியில் நுழைத்துக் கொள்வதற்கு ஏற்றவாறு கட்டையால் செய்த குமிழுடையதுமான காலணி; wooden sandals with a toe-grip.

*[பாதம் + குறடு]*

**பாதகத்துரவம்** *pādagatturavam,* பெ. (n.) அரசமரம்; peepul tree. 2. ஆடு; sheep 3. ஆலங்கட்டி; hail stone. (சா.அக.)

**பாதகாணிக்கை** *pāda-kāṇikkai,* பெ. (n.) ஆசிரியர் போன்றோரின் பாதத்தில் வைத்து அளிக்கும் காணிக்கை; (குருதட்சிணை); offering (to one's teacher.etc.) places at his feet.

*[பாதம் + காணிக்கை]*

**பாதச்சிப்பி** *pāda-c-cippi,* பெ. (n.) இப்பியுளொரு வகை (நெல்லை, மீனவ); a kind of conch-shell.

*[பாதம் + சிப்பி]*

**பாதச்சிலை** *pāda-c-cilai,* பெ. (n.) தூணைத் தாங்கும் அடிக்கல்; (இராமா.மயேந்திர24) base stone of a pillar.

*[பாதம் + சிலை]*

**பாதசத்துரவம்** *pāda-catturavam,* பெ. (n.) 1. அரசமரம்; peepul tree 2. ஆலங்கட்டி; hail stone (1,2 வைத்தியபரி) 3. ஆடு; sheep.

**பாதசரம்** *pāda-šaram,* பெ. (n.) (இலங்.) மகளிர் காலணி; ankle chain with tiny bells. "*வெள்ளிப் பாதசரம்*".

*[பாதம் + சரம்]*



பாதசாரி *pādašāri,* பெ. (n.) (ஊர்தியைப் பயன்படுத்தாமல் சாலையில்) நடந்து செல்பவர்; pedestrian,

*[பாதம் + சாரி]*

பாதபங்கயமலை *pādapangayamalai,* பெ. (n.) (பாதபங்கயமென்று வழங்கப்படுவதும் மகதநாட்டிலுள்ளதும் புத்தன் அடிச்சுவடு உள்ளதுமான ஒருமலை; (அபிசிந்.) a mountain named pādapangayamalai which is located at magadha and having foot fossils of Buddha.

*[பாதம் + பங்கயம் + மலை]*

பாதபீடிகை *pādapīdigai,* பெ. (n.) பாதம் பதிந்த மேட்டிடம்; a footstool.

(புத்தனுடைய அடிச்சுவடுள்ள பீடம். இஃது இலங்கைத் தீவு, காவிரிப்பூம்பட்டிணம், மணிபல்லவத் தீவம் முதலிய இடங்களில் இருந்தது என்றும், பண்டைக் காலத்துப் புத்த மதத்தோரால் வழிபாடு செய்யப்பட்டு வந்தது என்றும் தெரிகிறது.)

*[பாதம் + பீடிகை]*



பாதபூசை *pāda-pūšai,* பெ. (n.) பெரியோர், பெற்றோர் முதலியோரின் பாதங்களைத் தூய்மை செய்து மலர் வைத்து வணங்கும் சடங்கு; the ritual of washing the feet (of the teacher, saint or of one's parents out of respect.

*[பாதம் +பூசை]*

பாதம்¹ *pātam,* பெ. (n.) (சோதி.) குறிப்பிட்ட விண்மீனின் காலத்தில் நான்கில் ஒரு பகுதி; one fourth of the duration of the influence of a star. *"மூலம் கடைசிப் பாதம் என்றால் அவ்வளவு தீய விளைவுகள் இரா."*

பாதம்² *pādam,* பெ. (n.) 1. நிழற்கோள் இராகு, an ascending node 2. ஐந்தாம் ஆறாம்மாதத்திற் கருவழிதல்; foetus aborted in the fifth or sixth month of pregnancy 3. கால்; leg *"முழுதுணர்ந்து மூன்றொழித்து மூவாதான் பாதம்"* (சிறுபஞ்ச.க.வா–1) *"பாற்பாடு மாதவன் பாதம் பொருந்தி"* (சிலப்.15–168) *"மற்றவர் பாதம் வணங்கிய வண்ணமும்"* (மணிமே.பதி.92) 4. காற்பங்கு; quarter part *"பழுதறு மாதவன் பாதம் படர்கேம்... இளங்கொடிகானெனை"* (மணிமே.145) *"செய்க செபமாலை நூற்றெட்டினதற் பாதியுறச் செய்யலுமாம்

*பாதத்துஞ்செய்"* (சைவச.பொது.கசச.) 5. சரியை முதலிய நாலு நிலைக்கும் பொதுப்பெயர்; (சிவஞானபோ.சிறப்பு.) a course of actions. 6. செய்யுட்களினடி line of the poetry 9யாப். காரிகை.செய்-8.) 7. தடை; abstruct 8. நீர்; water *"உறுபோரஞ்சிப் பாதத்தில் வீழ் வரோ"* (பாரத.பதினெட்.கநச.) 9. பாகம்; பங்கு, part, portion 10. முதற்கொழுங்கால்; a nakshatra. *"பாதம் புனல் பதத்தின்"* (விதாந.குணா.உசா.) 11. வட்டத்தின் நான்கனொன்று; quarter part of the circle. 12. அன்றன்று ஆகும் நல்லூழ்; auspicious day by day. *"சூலமதிபரி விட்கம்பம் பாத மரவுகண்டம்"* (விதா ந.பஞ்சா.28.) 13. விழுதல்; to fell (சிவஞாநசி.8.29.21.)

*[பதி → பாதம்]*

**பாதம்**

பள்→படு. படுதல் = தாழ்தல், விழுதல், பொருகளத்தில் விழுந்திறத்தல், இறத்தல்.

பட்டவன் குறி = நடுகல்

பட்டவன் காணி = களத்திறந்தவனுக்கு விடப்பட்ட மானியம்.

படு = குளம், மடு.

படு→படி. படிதல் = தாழ்தல், பணிதல், பணிவிடை செய்தல்.

படி→பதி. பதிதல் = தாழ்தல், இறங்கதுல், ஏன்றுதல், அகழ்தல், அழுந்துதல், உரமாகப் பதிதல், மணி பதித்தல், கற்பாவுதல், எழுதுதல்.

பதி = பதிகை, பதிக்கும் நாற்று, பதிந்திருக்கும் உறைவிடம், வீடு, கோயில், நகர்.

பதி→பதிவு. பதி→பதியம்.

பதி→பதம் = நிலத்திற் பதியும் பாதம், கால் (*"எறிபதத்தானிடங்காட்ட"* (புறம்.4). உடம்பில் முழங்காலளவு போன்ற காற்பகுதி, பதிந்திருக்கும் இடம், பதவி, பாதச் சுவட்டால் ஏற்படும் பாதைவழி.

பதம்→பாதம் = நிலத்திற் பதியுங்காலடி. பாதத்தைக் கொண்ட கால் (*"பாதக் காப்பினள் பைந்தொடி"* (சிலப்.14:23), விளக்குத் தண்டின் பரந்த அடிப்பகுதி, இருக்கை தாங்குங்கால், காற்பங்கு, செய்யுளடி. (*"வாங்கரும் பாத நான்கும் வகுத்த வான்மீகி"* (கம்பரா.நாட்டுப்.1).

பாதக்காப்பு, பாதக்குறடு, பாதகடகம், காதகாணிக்கை, பாதச்சாயை, பாதசக்கரம், காதசரம், பாதசாயலம், பாத தாமரை, பாததூளி, பாதப்படி, பாதபூசை முதலியன பாதத் தொடர்பான கூட்டுச் சொற்கள். இவை புணர்ச்சியில் வலி மிக்கும் மிகாதும் வழங்கும்.

பாதம்.→பாதை = பாதம் படுவதனால் ஏற்படும் வழி.

வடசொற்கள்(வேதமொழியும் சமற்கிருதமும்)

pat, to fall down, fall or sink.

patha, way, path, road, course.

Daksina patha, sothern way, deccan.

pathaka, knowing the way, a guide.

pathat, going, travelling, a road.

pathika, knowing the way, going ona road, a traveller, way farer, a guide.

pathikāya, to act as a traveller.

pathila, a traveller.

pathya belonging to the way, suitable, fit, proper, wholesome, salutary, esp. said of diet in a medical sense.

pad², to fall rv.

pad³, foot.

pada, foot, step, pace, stride, trace, vestingc, mark, rv.

padāji, foot-soldier.

padatika, a foot man.

padika, going on foot, pedestrian.

pād, a strong base of pad².

pāda, foot, rv.

pādaka, a small foot. r.v.

pādapa, drinking at foot, tree.

pādaka, a foot stoool or cushion for the feet.

pādaya, to stretch out at the feet.

pādavika, a traveller.

padāt, a foot soldier. padata, infantry.

pādika, lasting for a quarter of the time.

pādin, lasting for a quarter of the time.

pādin, footed, having feet, having padas, as a stanza.

pāduka, a shoe, slipper. padutin, having shoes, shoed.

pādu, a shoe or slipper.

pādya relating to or belonging to the feet.

**ஆங்கில இலத்தின் கிரேக்கச் சொற்கள்**

e. antipodes, n.pl. places diametrically opposite to each other esp. region opposite to our owm. f.ll. f.gk.antipodes, having the feet opposite, anti, againts. podos, foot.

ஞாலவுருட்சியினால், நாமும் அமெரிக்கரும், ஒருவகுப்பாரை நோக்கி ஒரு வகுப்பார் கால் நீட்டிக்கொண்டிருத்தல்போல் தோன்றுவதை நோக்குக.

e. biped, two-footed animal. f.l. bipedis, bi, two. pedis, foot.

e. cephalopod. mollusc with distinct tentacled head f.l. cephalo f. gk.kephalikos f. kephale, head. podos, foot.

e. decapad, ten-footed crustacean, f.f. decapode, f. gk. deca, ten. podos, foot.

e. foot, termination of leg beginning at ankle, f. oe., os. fōt, ohg. fuoz, on.fotr, goth. fōtus.

பாதை என்னும் சொல் ஆங்கிலத்தில் path என்பது பகரமுதற் சொல்லாகவே யிருத்தலால், பாதையை யுண்டு பண்ணும் பாதத்தின் பெயரும், கிரேக்கத்திலும் இலத்தீனிலும் போல் முதற்கண் பகரமுதற்சொல்லாகவே யிருந்து, பின்னர் வல்வகர (f.) முதற் சொல்லாக வலித்துத் திரிந்திருத்தல் வேண்டும்.

e. milleped, millipede, kinds of myriapods, with numerous legs usu. on each segment in double pairs., f.l.millepeda, mille, thousand. pedis, foot. ஆயிரங்காற் பூச்சி.

e. myriapod, animal with many legs, of the class comprising centipedis and millepedes, f. gk. murias, f.murioi, 10,000. podos, foot.

e. pad¹ v.t.&i.to tramp along road on foot. f.lg. padden, pidden, to tread.

e. pad² road, f.di., lg. pad, path.

e. pedal, each of the wooden keys played upon by the feet, lever for drawing out stips in organ, foot lever in various machines, esp. bicycle, f.f.pedale, f. it.pedale, f.l. pedalis, f. pedis, foot.

e. pedate, a. footed, f.l.pedalus.

e. pedestal, base supporting column or pillar, base of statue etc., f.f. piedestal f.it. piedestallo (pie, foot.f.l.pes, pedis +di, if+stakki, stall).

e. pedestrian, going on foot, one who walks., f.f.pedestre, of.l.pedester

e. pedicure, n chiropody; v.t. to cure of treat feet by renivubg corns etc., f.f.pedicure f.l.pedis, foot + cura, care.

e. pedigree, genealogial table., f.af=of. pie degrue, crane's foot, mark denoting succession in pedigrees.

e. pedometer, instrument for estimating distance travelled on foot by recording number of steips taken. f.f. pedometre f.l. pedis, foot+ o+meter.

e. pedrail, device for facilitating progress of heavy vehicles over rough ground by attachment of broad foot-like supporting surfaces to whell-rims, f.l.pedis, foot+rail.

e. peduncle, stalk of flower, fruit or cluster, stalklike process in animal body, f.mod. l.pedunculus, f.l.pedis. foot+uncle.

e. podium, continuous projecting base or pedestal, raised platform around arena of amphitheatre, continous bench round room., f.l.f. gk, podion (podos, goot).

e. podophyllin, yellow bitter resin of cathartic properties got from root of wild mandrake, f.l.podophyllum f.gk.podos.foot.phullon,leaf.

gk. podos-pous, foot; l.pedis-pes, foot., af.,of.pie.foot.

e. path, foot way esp. one merely beaten by feet, not specially constructed; track laid for foot or cycle racing; line along which person or thing moves. oe.paeth, olg.pad, ohg.pfad,wg.patha.

இச்சொல் பாதை என்னும் தமிழ்ச் சொல்லை வடிவிலும் பொருளிலும் பொருட் காரணத்திலும் ஒத்திருப்பதும் இச்சொல் வடமொழியி லின்மையும் கவனிக்கத்தக்கன.

e. quadruped, four-footed animal., f.f.quadrapede f.l. quadrupedis, quadri, four.pedis, foot.

e. tripod, stool, table, utensil, resting on three feet or legs, l. and gk.tri,three.podos, foot.

e. tripos, n. (camb.univ.) (list of successful candidates in) honours examination. (as tripod. with ref., to steel on which b.a. sat to deliver satirical speech at commencement f. gk.tri, three.podos, foot.

கடைக்கழகச் செய்யுள்களில் பாதம் என்னும் சொல் வரவேண்டிய இடத்தில் அடி (அல்லதுதாள்) என்னுஞ் சொல்லே வந்திருத்தலால், சிலர் பாதம் என்னுஞ் சொல் வடசொல்லோ என ஐயுறக் கூடும். தொல்காப்பியமும் பதினெண் மேற்கணக்கும் திருக்குறளும் நூலும் பனுவலும் தனிப்பாடற்றிரட்டுமேயன்றி அகர முதலிகளல்ல. ஆரியர் வருகைக்கு முற்பட்ட எழுநிலச் செய்யுள் இலக்கியமனைத்தும் அழிக்கப்பட்டுவிட்டன. சில பொருள்கட்கு, உலக வழக்குச் சொல்லும் இலக்கிய வழக்குச் சொல்லும் தொன்றுதொட்டு வேறுபட்டே வந்திருக்கின்றன. எடுத்துக்காட்டாக, காடை என்னும் உலகவழக்குச் சொல்லிற்குத் தலைமாறாக குறும்பூழ் என்னுஞ் சொல்லே கழகச் செய்யுள்களில் வழங்கியிருத்தல் காண்க.

பாதம் என்பது, நிலத்திற் பதிதற் கேற்றவாறு அகன்று தட்டையாயிருத்தல் வேண்டும். பாதம் வைத்த விளக்கு என்னும் வழக்கை நோக்குக. அடி என்பது, அடிப்பகுதி, அடியுறுப்பு, அடிப்பக்கம் என்னும் மூவகைப் பொருளை, எல்லாப் பொருளொடும் பொருந்தப் பொதுப்படக் குறிப்பதால், பாதம் என்னுஞ் சொல்லை ஒத்ததன்று. பெட்டிக்கு அடியில் என்பதைப் பெட்டியின் அல்லது பெட்டிக்குப் பாதத்தில் என்று சொல்லும் வழக்கின்மை காண்க.

பாதம் என்னும் சொல்லிற்கு மூலமான பதி என்னும் வேர்ச் சொல்லையும் அதன் தோற்ற வரலாற்றையும் வேறெம்மொழியிலும் காணமுடியாது. மக்கள் குமரிநாட்டினின்று வடக்கும் கிழக்கும் மேற்கும் சென்றவராதலால்,

தமிழின் தொன்மை, முன்மை, தாய்மை, தலைமையை உணர்தல் வேண்டும்.

வரலாறும் மொழிநூலும், இவ் வுண்மையைப் கோபுரவுச்சியினின்று குமுறிச் சாற்றுகின்றன.

– பாவாணர்

**பாதமயக்கு** *pāda-maakku,* பெ. (n.) 1. அடிமயக்கு (வின்); stanza whose lines are capable of transposition. 2. வேறுபுலவர்கள் பாடிய அடிகள் மூன்றனோடு தாம் ஒரடி பாடிமுடிக்கும் மிறைக்கவி வகை (யாப். வி. 96, பக்.504); a kind of artificial stanza of four lines, the first three of which are taken from works of other poeto while the last is composed by the author.

*[பாதம் + மயக்கு ]*

**பாதமூலம்** *pāda-mūlam,* பெ. (n.) 1. குதிகால் (யாழ். அக.); heel. 2. முத்திக்குக் காரணமானதும் அடைக்கலமாகக் கருத படுவதுமான திருவடி; feet of a deity or saint considered as the source of bliss and as a refuge. "நினையுமின் பிண்டிநாத னலங்கிளர் பாதமூலம்" (சீவக.511)

*[பாதம் + மூலம்]*

**பாதயாத்திரை** *pāda-yāttirai,* பெ. (n.) வேண்டுதலை முன்னிட்டுக் கோயில்களுக்கு அல்லது ஒரு குறிப்பிட்ட நோக்கத்துடன் ஓர் இடத்திற்கு நடந்தே மேற்கொள்ளும் செல்கை; pilgrimage on foot (undertaken in fulfilment of a vow; march.) "*பழநிக்குப் பாதயாத்திரைப் புறப்பட்டனர்*" "*உப்புப் போராட்டத்திற்காகத் தண்டிநோக்கி மேற்கொண்ட காந்தியின் பாதயாத்திரை வெற்றி பெற்றது*".

*[ பாதம் + யாத்திரை ]*

*[ இய → யா → யாத்திரை → ஒ.நோ. மா. → மாத்திரை ]*

**பாதரவதம்** pādaravadam, பெ. (n.) கருங்காலி; black wood.

**பாதாளகருடன்** *pādāḷakaruḍaṉ,* கீரிப்பூண்டு; the mongoose plant. (சா.அக.)

**பாதாளமூலம்** *pādāḷa-mūlam,* பெ. (n.) 1. சீந்தில்கொடி; moon creeper. 2. ஆடுதின்னாப்பாளை; worm killer 3. கரையான்; white ant 4. கோரைக்கிழங்கு; nut grass, korai grass root. 5. சிறுநெருஞ்சில்; small caltrops, ground burnut. (சா.அக.)

**பாதாளவட்டி** *pādāḷavaṭṭi,* பெ. (n.) பூனைப்புல்; a kind of tender grass. (சா.அக.)

*[பாதாளம் + வட்டி]*

**பாதாள வாகை** *pādāḷavāgai,* பெ. (n.) நிலவாகை; east indian senna. (சா.அக.)

*[ பாதாளம் + வாகை ]*

**பாதானி** *pādāṉi,* பெ. (n.) பழமையுடையது (நெல்லை.); that which is old.

*தெ – பாத*

**பாதி[1]** *pādi,* பெ. (n.) 1. இரண்டு சமபாகமாகப் பகுக்கப்பட்ட பொருட்பகுதி; half, moiety. "*பாதிப்பெண்ணொரு பாகத்தன்*" (தேவா.479,3.) 2. நடு; middle. "*பாதிவழியின் மிண்டி*" (காஞ்சிப்பு.சிவாத்.28.) 3. பகுக்கை (சூடா.); dividing, sharing. 4. துண்டு; a piece "முறிப்பாதி" (அரிச்.பு.11.)

மறுவ: பால் பாயல்

பயல் பங்கு

அருத்தம்

கூறு

பாகம்

பாதி

*"பாதிப் பாக்கைக் கப்பலிலே போட்டுப் பங்குக்கு நின்றானாம்"* (பழ.)

*[ பகுதி → பாதி ]*

**பாதி²–த்தல்** *pādi-,* **செ.குன்றாவி.** (v.t.) இரண்டு சமபங்குகளாகப் **பிரித்தல். (யாழ்.அக.)** to halve, divide in halves.

*[ பாதி → பாதித்தல் ]*

**பாதிக்கரை** *pādi-k-karai,* **பெ.** (n.) தன்னூரில் அல்லது பிறவூரில் பாதி வரி செலுத்தியேனும் குறிப்பிட்ட தொகை கொடுப்பதாக ஒப்புக்கொண்டேனும் பிறர் நிலத்தைப் பயிரிடுபவன் (R.T.); one who, having no land of his own, undertakes the temporary cultivation of waste land either in his own or any other village, usually paying half the kist or some fixed portion of the crop.

*[ பாதி + கரை ]*

**பாதிசம்வாதம்** *pādi-šamvādam,* **பெ.** (n.) ஒரு பக்கத்தார் மட்டுஞ் சம்மதிக்கை (ஈடு,4,1,1.); unilateral consent.

*[பாதி +* skt.samvādha› *த. சம்வாதம்]*

**பாதிச்சமச் செய்யுள்** *pādi-c-cama-c-ceyuḷ,* பெ. (n.) அளவடிச் சந்தங்களில் முதலிரண்டடியும் ஒத்துக் கடையிரண்டடியும் எழுத்து மிக்கு வருவதும், முதலிரண்டடியும் தம்முள் ஒத்து எழுத்து மிக்குக் கடையிரண்டடியும் ஒப்ப எழுத்துக் குறைந்து வருவதும், முதலிர ண்டடியும் தம்முள் ஒப்ப எழுத்துக் குறைந்து கடையிரண்டடியும் தம்முள் ஒப்ப எழுத்துக் குறைந்து வருவதும், ஒன்றிடை யிட்டுக் குன்றி வருவதும், ஒன்றிடையிட்டு மிக்கும் குறைந்தும் வருவதும் பாதிச் சமச் செய்யுள் என்றும் வழங்கப்படும் (யாப்.95); a kind of verse in peculier metre.

*[ பாதி + சமம் + செய்யுள் ]*

**பாதிச்சாமம்** *pādi-c-cāmam,* **பெ.** (n.) நள்ளிரவு (வின்.) midnight.

மறுவ. நடுச்சாமம்

*[பாதி + யாமம் → சாமம்]*

**பாதிடு¹–தல்** *pādiḍu,* **18. செ.குன்றாவி** (v.t.) பங்கிடுதல்; to apportion, divide. **"*கைப்பொருள் கண்டோர் யார்க்கும் பாதிடு முரவோர்போல்*" (கோயிற்பு.பதஞ்.82.)**

*[பாதீடு → பாதிடு–,]*

**பாதிடு²–தல்** *pādiḍu-,* **18. செ.குன்றாவி.** (v.t.) பாதுகாத்தல் (வின்.); to protect, presserve.

*[பாதிடு → பாதிடு–,]*

**பாதிடு³–தல்** *pādiḍu-,* **18. செ.குன்றாவி.** (v.t.) நெருக்குதல் (வின்.); to narrow, press.

**பாதிப்பேச்சு** *pādi-p-pēccu,* **பெ.** (n.)
1. அரைகுறைப்பேச்சு; broken language.
2. பேச்சினிடை; middle of a conversation.

*[பாதி + பேச்சு]*

**பாதிபகடம்** *pādi-pagaḍam,* **பெ.** (n.) செம்பாகம் (இ.வ.); exact half.

**பாதிமதி** *pādi-madi,* பெ. (n.) வளர்மதி (திருப்பு.212.); crescent moon. "பாதிமதி நதிபோது மணிசடை நாதரருளிய குமரேசா" (திருப்பு.சாமிமலை)

**பாதிமதியணிந்தோன்** *pādimadi-y-aṇindōṇ,* பெ. (n.) துரிசு; blue vitriol. (சா.அக.).

**பாதிமம்** *pādimam,* பெ. (n.) நாலிலொன்று (யாழ்.அக.); quarter.

**பாதியம்** *pādiyam,* பெ. (n.) கடுக்காய்; gall nut. (சா.அக.)

**பாதியிரா** *pādi-y-irā,* பெ. (n.) *பாதியிராத்திரி* பார்க்க; see *pātiyirāttiri.*

*[பாதி + இரா]*

**பாதியிராத்திரி** *pādi-y-irāttiri,* பெ. (n.) *நடுயாமம்* (வின்.) பார்க்க; *midnight*

*[பாதி + இராத்திரி]*

**பாதியிரா** *pādi-y-irā,* பெ. (n.) *பாதியிராத்திரி* பார்க்க; see *pātiyirāttiri.*

*[பாதி + இரா]*

**பாதிரம்[1]** *pādiram,* பெ. (n.) 1. மலையாத்தி; malabar mountain ebony. 2. மூங்கில்; bamboo tree. (சா.அக.)

**பாதிரம்[2]** *pādiram,* பெ. (n.) *சந்தனம்* பார்க்க; *see sandaṇam sandalwood.*

**பாதிரா** *pādi-rā,* பெ. (n.) *பாதியிராத்திரி* பார்க்க; see *pātiyirattiri.*

*[பதி + இரா → ரா]*

**பாதிராத்திரி** *pādi-rāttiri,* பெ. (n.) *பாதியிராத்திரி* பார்க்க; see *patuturatturu*

*[பாதி + இராத்திரி → ராத்திரி]*

**பாதிரி[1]** *pādiri,* பெ. (n.) 1. பொன்னிறமுள்ள பூவுடைய மரவகை; yellow-flowered fragrant trumpet-flower tree, 1. tr., stereospermum chelonoedis *'பாதிரிப்பூச் சேர்தலால் புத்தோடு'* (நாலடி,139.) 2. சிவப்புப்பூ மரவகை; (L.) purple-flowered fragrant trumpet-flower tree, m.tr. stereaspermum suaveoleons. 3. வெள்ளைப் பூவுடைய மரவகை(L.); white-flowered trumpet-flower tree, m.tr. stereospermum xylocorpum, 4. *மூங்கில்* (பிங்.) பார்க்க; cf. see *muṅgil.* patira. bamboo.

**மறுவ:** பாடலம் பாதிரி புன்காலி

**தெ.** பாதிரி

**க.** பாதிரி

*[பாதிலி → பாதிரி]*

"*பாசிலை யொழிந்த பராஅரைப் பாதிரி*" (பெரும்–4)

"*போங்கந் திலகந் தேங்கமழ் பாதிரி*" (குறி–74)

"*மாக்கொடி அதிரல் பூவொடு பாதிரி*" (நற்–52–1)

"*துகிலிகை அன்ன துய்த்தலைப் பாதிரி*" (நற்.118–8)

"*அஞ்சினைப் பாதிரி அலர்ந்தெனை*" (ஐங்–3462)

"*வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்*" (ஐங்.361–2)

**பாதிரி²** *padiri,* பெ. (n.) கிறித்துவக் குருமார்; christian missionary clergyman. (வின்.)

**பாதிரிக்கூட்டம்** *pādiri-k-kūṭṭam,* பெ. (n.) பாதிரி, வில்வம், குமிழ், தழுதாழை ஆகிய நான்கின் வேர்கள் (சங்.அக.); roots of four trees, viz., pādiri, vilvam, kumil and talutālai.

*[பாதிரி + கூட்டம்]*

**பாதிரிப்புலியூர்** *pādssiri-p-puliyūr,* பெ. (n.) கடலூர் என்றழைக்கப்படும் தென்னாற்காடு மாவட்ட ஊரின் தொன்மைப்பெயர்; an ancient name of cuddalore.

(திருப்பாதிரிப் புலியூர் என்ற தலம் இன்று திருப்பாப் புலியூர் எனச் சுட்டப்படுகிறது. தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ளது இத்தலம். இது கடலூர் என்றும் வழங்கப்படுகிறது. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்ற தலம். கெடில நதிக்கரையிலே அமைந்துள்ள தலம் இது.

பாதிரிவனம்இது என்பதும், இறைவன் பாதிரி மரத்தின் அடியில் தோன்றி, தவம் புரிந்த உமாதேவிக்கு வரம் கொடுத்தார் என்பதும், புலிக்கால் முனிவர் இங்கு இறைவனைப் பூசித்தலால் புலியூர் என்பதும் தோன்றி இரண்டன் சேர்க்கையால் பாதிரிப் புலியூர் என்னும் திருப்பெயர் இத்தலத்துக்கு அமைந்து விளங்குகிறது என்பர். இன்னும் இத் தலத்திற்குரிய தலமரமாக பாதிரியே விளங்குகிறது.)

**பாதிரிமேலீந்தி** *pādirimēlīndi,* பெ. (n.) வெண்பாதிரி; white flower trumpet tree. (சா.அக.)

*[பாதிரிமேல் + ஈந்தி]*

**பாதிரியம்** *pādiriyam,* பெ. (n.) செவிடு (சங்.அக.); deafness.

**பாதிரை** *pādirai,* பெ. (n.) *பாதிரி¹* (நாநார்த்த 261.) பார்க்க; see *pādiri.*

*[பாதிரி → பாதிரை]*

**பாதிலி** *pādili,* பெ. (n.) வலை (யாழ்.அக.); trap or snare.

**பாதிவாரம்** *pādi-vāram,* பெ. (n.) நிலக்கிழாரும் குத்தகைக்கு எடுத்தவரும் விளையும் விளைச்சலைப்பாதியாகப் பிரித்துக்கொள்ளும் முறை; a system of tenanay in which the landlord and the lessee divide the produce of the leased land in equal shares.

*[பாதி + வாரம்]*

**பாதீடு¹** *pādīḍu,* பெ. (n.) 1. பங்கீடுகை (யாழ். அக.); dividing, sharing, apportioning. 2. தலைவன் விருப்பப்படி போர்வீரர் பகைவரிடமிருந்து கவர்ந்த நிரையைத் தமக்குள் பங்கிடுவதைக் கூறும் புறத்துறை "தந்துநிறை பாதீடு உண்டாட்டுக் கொடையென" (தொல். பொ. 58); theme describing the apportioning of cows captured from an enemy among the soldiers as directed by their chief.

*[பாது + இடு → பாதிடு → பாதீடு]*

"கவர்கணைச் சுற்றங் கவர்ந்த கணநிரை
அவரவர் வினைவயின் அறிந்தீந்தன்று"
(புறப்.வெ.13,கொளு)

"ஒள்வாள் மலைந்தார்க்கும் ஒற்றாய்ந்துரைத் தார்க்கும்
புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும்–விள்வாரை
மாறட்ட வென்றி மறவர்தம் சீறூரில்
கூறிட்டார் கொண்டநிரை" (வெண்பா.)

**பாதீடு²** *pādīḍu,* பெ. (n.) 1. பாதுகாக்கை; protecting 2. செறிக்கை securing, confining.

*[பாது + இடு → பாதிடு → பாதீடு]*

**பாது¹** *pādu,* பெ. (n.) பங்கு; portion, share '*யார்க்கும் பாதிடு முரவோர்போல*' (கோயிற்பு. பதஞ்.82.)

**பாது²** *pādu,* பெ. (n.) ஞாயிறு (யாழ்.அக.); sun.

**பாது³** *pādu,* பெ. (n.) காவல் (யாழ்.அக.); protection, watch. save, lelp,

**பாதுகம்** *pādugam,* பெ. (n.) ***பாதுகை,*** பார்க்க; see *pātukai.* "*பரதனுக்குப் பாதுகமு மரசு மீ ந்து*" (திவ்.பெருமாள்.10,4.)

**பாதுகா¹–த்தல்** *pādu-kā-,* செ.கு.வி. (v.i.) 1. தீங்கு, அழிவு, சேதம் முதலியவை நேராமல் காப்பாற்றுதல்; காத்தல்; protect. "*எந்தச் சூழ்நிலையிலும் நாட்டைப் பாதுகாக்க இராணுவம் அணியமாக இருக்க வேண்டும்*" "*தலைமை அமைச்சரைப் பாதுகாக்க ஒரு தனிப்படையே உள்ளது*" "*இவை தாத்தா பாதுகாத்த பொருள்கள்*" 2. குடும்பம் முதலியவற்றை அல்லது கலைகளைப் பேணுதல்; பராமரித்தல்; provide for (a family.); support; preserve (arts) "*அப்பாவுக்குப் பிறகு மாமாதான் எங்கள் குடும்பத்தைப் பாதுகாத்து வருகிறார்*" "*நாட்டுப்புறக் கலைகள் தலைமுறை தலைமுறையாகப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன*"

**பாதுகாத்²–தல்** *pādu-kā-,* 15. செ.குன்றாவி. (v.t.) 1. காப்பாற்றுதல்; to protect, defend, guard '*பைதலாவ தென்று பாதுகாத் திரங்கு*' (திருவாச.5,77.) 2. வாராமற்றடுத்தல்; to ward off, avert. "*அதனைப் பாதுகாத்துக் கடிதற்பொருட்டு*" (குறள்,11,அதி.முக.) 3. பராமரித்தல்(வின்.); to take care of cherish, foster.

*[பாதுகாவல் = பாதுகாப்பு*

பாது = காவல் (யாழ்.அக.) பாதுகாத்தல் என்பது நிலைச்சொல்லின் பொருள் மறைந்து நன்கு காவல் காத்தல் என்று பொருள் பட்டதனால் பாது என்னும் சொற்குக் காவல் என்னும் பொருள் கூறப்பட்டது. வே.க.141*]*

**பாதுகாப்பாளர்** pādukāppāḷar, பெ. (n.) 1. பதினெட்டு வயது நிரம்பாத ஒருவரின் உரிமைகளை அவர் பொருட்டுக் கவனித்துக் கொள்ளும் பொறுப்புக்கு நியமிக்கப்பட்டவர்; பெற்றோருக்கப் பகரமாக மாணவர் போன்றோரைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு ஏற்பவர்; (legal) guardian; guardian (for a student) 2. பாதுகாக்கும் பணி செய்பவர்; பாதுகாவலர்; guard (employed to protect a place. person)

*[பாதுகாப்பு → பாதுகாப்பாளர்]*

**பாதுகாப்பு** *pādukāppu,* பெ. (n.) 1. காப்பாற்றுகை; protection, guard, watch. 2. ஆதரிக்கை; support, maintenance.

**பாதுகாப்பு** *pātukāppu,* பெ. (n.) 1. தீங்கு, அழிவு, சேதம் போன்றவை நேராமல் தடுக்கும் காவல் அல்லது கண்காணிப்பு; protection; defence; security. "*திருட்டு நடந்த குடியிருப்புப் பகுதியில் இப்போது பலத்த பாதுகாப்புப் போடப்பட்டுள்ளது*" "*நாட்டின் வருவாயில் முக்கால் பங்கு பாதுகாப்புக்காகச் செலவழிக்கப்படுகிறது*" "*நுகர்வோர் நலப் பாதுகாப்புச் சங்கம்*" 2. (ஒருவர் உணரும்) பத்திரமான நிலை; seeurity; safety. "*பெற்றோர்களுடன் இருந்த போது உணர்ந்த பாதுகாப்பு இப்போது இல்லை*" "*நண்பர்கள் நிறைந்த சூழல் பாதுகாப்பாக இருந்தது*" 3. பொறுப்போடு மேற்கொள்ளப்படும் கவனிப்பு; custody (of s.o.) "*குழந்தையை ஆயாவின் பாதுகாப்பில் விட்டு விட்டு வேலைக்குப் போகிறோம்*"

**பாதுகாப்புப் பெட்டகம்** *pādukāppu-p-pettagam,* பெ. (n.) வங்கிபோன்றவற்றில் விலை உயர்ந்த பொருள்களை வைத்துக்கொள்ள ஏற்படுத்தப்பட்டிருக்கும் பாதுகாப்பான முறையில் உள்ள பெட்டி போன்ற அமைப்பு; safety locker (in a bank. etc.) *"இந்த வங்கியில் பாதுகாப்புப் பெட்டக வசதி உண்டு"*

**பாதுகாவல்** *pādu-kāval,* பெ. (n.) *பாதுகாப்பு* (வின்.) பார்க்க; see *pādukāppu.*

**பாதுகாவலர்** *pādukāvalar,* பெ. (n.) *பாதுகாப்பாளர்* பார்க்க; see *pādukāppāḷar.*

**பாதுகை** *pādugai,* பெ. (n.) சிறுசெருப்படை என்னும் மூலிகை; small leaved spreading creeper. (சா.அக.)

**பாதை**[1] *pādai,* பெ. (n.) 1. வழி (பிங்.); way, read. 2. ஒற்றையடிவழி (வின்.); beaten track, foot-path. 3. முறை; method, manner, way, mode. *'அவன் ஒழுங்கான பாதையில் போகவில்லை'* (வின்.) 4. மிதவை (சூடா.); flat. bottomed boat. *"பாதைகள் சொரிவன பருமணி கனகம்"* (கம்பரா. நாட்டு.31.)

**பாதை**[2] *pādai,* பெ. (n.) துன்பம்; affliction, trouble.

**பாதைக்குலை** *pādai-k-kulai,* பெ. (n.) பாகல்; bitter guard. (சா.அக.)



**பாந்தட்படார்** *pāndaṭ-paḍār,* பெ. (n.) *பாம்புச்செடி* பார்க்க; see *pāmbu-c-ceḍi* *"அகல்வாய்ப் பாந்தட்படாஅப் பகலு மஞ்சும்"*

*[பாந்தள் + படார்]*

**பாந்தம்** *pāndam,* பெ. (n.) 1. *பாந்தவம்*(கொ.வ.) பார்க்க; see *pāndavam* 2. சாதிக்கட்டு; caste rules. *'பாந்தத்துக்கு உட்பட்டான்'* (இ.வ.) 3. இணக்கம்; agreeableness. *'அவனோடு பாந்தமாய்ப் பேசினாள்'* (கொ.வ.) 4. ஒழுங்கு; order, regularity: system, propriety *'நீ செய்தது பாந்தமாயிருக்கிறதா?'* 5. பொருத்தம்; something fitting or proper.

*[பற்று → பத்து → பந்து → பந்தம் → பாந்தம்]*

**பாந்தல்**[1] pāndal பெ. (n.) சிற்றூர்; hamlet of a village. *'ஏந்தல் பாந்தலுட்பட'* (S.I.I.vii.67.)

*[பாந்து → பாந்தல்]*

**பாந்தல்**[2] *pāndal,* பெ. (n.) 1. பதுங்குகை (சூடா.); skulking, hiding, burking. 2. துன்பம்: pain, trouble *"பாந்தலுறு கரப்பான்"* (பதார்த்த.729.)

*[பாந்து → பாந்தல்]*

**பாந்தல்**[3] *pāndal,* பெ. (n.) கடலடியிற் காணும் பள்ளமான இடம் (செங்கை.மீனவ.); hollow place in deep sea.

**பாந்தவம்** *pāndavam,* பெ. (n.) உறவுமுறை; affinity, relationship. *'எனக்குச் சினேக பாந்தவத்தால் யுத்தஞ்செய்ய வந்த'* (பாரதவெண். 797,உரைநடை.)

**பாந்தவியம்** *pāndaviyam,* பெ. (n.) *பாந்தவம்* (வின்.) பார்க்க; see *pāndavam.*

**பாந்தள்** *pāndal,* பெ. (n.) 1. பாம்பு; snake. "*பாந்தளஞ் சடில முக்கட் பாவலன்*" (திருவாலவா.16,32.) 2. மலைப்பாம்பு; mountain snake. "*கானிடைப் பாந்தள் கண்படுப்பன*" (சீவக.1900.)

**பாந்தன்** *pāndaṉ,* பெ. (n.) வழிச்செல்வோன். passanger, traveller. "*அபராந்தர் பாந்தராகி*" (இரகு.திக்குவி.221.)

**பாந்து¹-தல்** *pāndu-,* 9. செ.கு.வி. (v.i.) பதுங்குதல் (சூடா.); to skulk, hide "*ஆந்தை பாந்தியிருப்ப*" (கலிங்.127,புதுப்.)

**பாந்து²-தல்** *pāndu-,* 5. செ.குன்றாவி. (v.t.) பிறாண்டுதல்; to scratch, as with nails. '*பூனை என்னைப் பாந்தி விட்டது.* (நாஞ்.)

**பாந்து³** *pādu,* பெ. (n.) 1. பொந்து (வின்.); cavity, hollow, deep hole. 2. வளைவுக்கும் சுவருக்கும் இடையிலுள்ள பாகம்(c.g.); (arch.) spandrel 3. சுவரிற் கற்களின் இடையிலுள்ள சந்து; interstices between bricks in a wall. 4. மேற்கட்டடத்தில் அட்டைகளுக்கு மத்தியிலுள்ள இடம் (கட்டடநாமா.20.); ceiling.

**பாந்து⁴** *pāndu,* பெ. (n.) மணல் வெளியில் பாரவண்டியிழுக்கப் பயன்படுத்தும் அதிகப்படி மாடுகள் (இ.வ.) ; extra pair of bulls used in dragging carts over sandy tracts.

**பாந்துக்கிணறு** *pāndu-k-kiṇaṟu,* பெ. (n.) பக்கங்களிற் பொந்து விழுந்த கிணறு(வின்.); well with cavities in the sides.

*[பாந்து + கிணறு]*

**பாந்துச்சுண்ணாம்பு** *pāndu-c-cuṇṇāmbu,* பெ. (n.) மேற்றளம் பூசுவதற்காக நன்றாயரைத்த சுண்ணாம்பு(C.E.M.)(C.E.M.); ceiling plaster.

*[பாந்து + சுண்ணாம்பு]*

**பாந்தை** *pāndai,* பெ. (n.) *பாந்து³,* 1.(யாழ்ப்.) பார்க்க, see *pāndu³*

**பாப்பட்டான்** *pāppaṭṭāṉ,* பெ. (n.) திரணி; bottle flower. (சா.அக.)

மறுவ: பாப்பட்டை

**பாப்பட்டை** *pāppaṭṭai,* பெ. (n.) குரா எனும் புதர்ச்செடி; a shrub, usually found in barren lauds.

**பாப்படு-த்தல்** *pā-p-paḍu-,* செ.குன்றாவி. (v.t.) பரப்பி விரித்தல்; to spread. "*மழைக் கண்ணார் ....... பாப்படுத்த பள்ளி*" (திவ். இயற். பெரிய. 6. 30.)

*[பா + பாப்படு-,]*

**பாப்பம்** *pāppam,* பெ. (n.) பருப்புச் சோறு; cooked rice (nurs.)

*[பருப்பு → பப்பு → பாப்பு → பாப்பம்]*

**பாப்பர மூஞ்சான்** *pāppara mūñjāṉ,* பெ. (n.) ஒரு மீன்; a kind of fish.



**பாப்பா** *pāppā,* பெ. (n.) **1.** பாவை; doll. **2.** சிறுகுழந்தை; little child (nurs.) **3.** கண்ணின் கருவிழி (இ.வ.); iris of the eye.

*[பாவை → பாப்பா]*

**பாப்பாச்சி**[1] *pāppācci,* பெ. (n.) *பாப்பா*(இ.வ.)**1.** பார்க்க; see *pāppa.*

*[பாவை → பாப்பா → பாப்பாச்சி]*

**பாப்பாசு** *pāppāšu,* பெ. (n.) *பாப்பாச்சி* பார்க்க; see *pāppācci.* ***"தன்காலிலே பாப்பாசும் போட்டு"*** (விறலிவிடு **805.**)

*[பாப்பாச்சி → பாப்பாசு]*

**பாப்பாத்தி**[1] *pāppātti,* பெ. (n.) **1.** வண்ணத்துப் பூச்சி; a kind of butterfly. **2.** ஒரு வகைக் கழுகு; a kind of superior kite.

ஒருகா: *[பாப்பு → பாப்பாத்தி]*

**பாப்பாத்தி**[2] ***pāppātti,*** பெ. (n.) *பார்ப்பனி* பார்க்க; see ***pārppaṉi.***

*[பாப்பான் → பாப்பாத்தி]*

**பாப்பாத்திக் கழுகு** *pāppāttikaḻugu,* பெ. (n.) ஒரு வகைப் பெண் கழுகு; a brahmini female vulture, egyptian vulture.

*[பாப்பாத்தி + கழுகு]*



**பாப்பாத்திப்பூச்சி** *pāppātti-p-pūcci.* பெ. (n.) வண்ணத்துப் பூச்சி(வின்.); butterfly.

*[பாப்பாத்தி + பூச்சி]*

**பாப்பரி** *pāppari,* பெ. (n.) **1.** செந்நாகம்; red cobra. **2.** நாகம்; cobra. (சா.அக.)

*[பாம்பு + அரி = பாப்பரி. அரி = சிவப்பு]*

**பாப்பாத்தி மைனா** *pāppātti-maiṉā,* பெ. (n.) ஒரு வகை நாகணவாய்ப்புள் (இ.வ.); pagoda-thrush, temenuchus pagodarum.

*[பாப்பாத்தி + மைனா]*



**பாப்பா பழுத்தை** *pāppā paḻuttai,* பெ. (n.) கண்டங்கத்தரி விதை; brahmin mully, indian night shade.

மறுவ: பாபர பழுத்தை.

(இக்கண்டங் கத்தரி விதையை நெருப்பிலிட்டுப் புகைகாட்டச் சொத்தைப் பற்களினின்று பற்புழுக்கள் விழும் எனச் சா.அக. கூறுகிறது)

**பாப்பாயம்** *pāppāyam,* பெ. (n.) ஒருவகை நறுமணச்செடி; costus shrub.

மறுவ: கோட்டம்.

**பாப்பாரக்கனி** *pāppārakkaṉi,* பெ. **(n.)** கறிப் புடலை; snake guard used for curry. **(சா.அக.)**

**பாப்பாரக் கோலம்** *pāppāra-k-kōlam,* பெ. (n.) மரக்காயரின் **திருமணத்தில்** மணமகள் பார்ப்பனிக் **கோலம் பூண்டு ஒரு** கையில் செம்பும், **ஒருகையில் தடியும்** கொண்டு மணமகனிடம் **சென்று சொல்லாடி,** அவன் தன் **செம்பில்** பலவகை **நாணயங்களையிட அவற்றைப் பெற்றுத் தன் அறைக்குச் செல்லுஞ் சடங்கு**(E.T.V, **5.**); a marriage ceremony amongst maskkayar, when the bride, dressed like a brahman woman and holding a brass vessel in one hand and a stick in the other parleys with the bride-groom until he puts a number of coins in the vessal, and retires in triunph to her chamber.

*[பார்ப்பார் → பாப்பார + கோலம்]*

**பாப்பாரத்தென்னை** *pāppāra-t-teṉṉai,* பெ. (n.) கேளி என்னும் தென்னைவகை; brahman cocoanut (l.)

*[பார்ப்பார் → பாப்பார + தென்னை]*

**பாப்பாரநாகம்** *pāppāra-nāgam,* பெ. (n.) செந்நாகம் (வின்.); red cobra.

*[பார்ப்பார் → பாப்பார + நாகம்]*



**பாப்பாரப்புளி** *pāppāra-p-puḷi,* பெ. (n.) பெருக்கமரம்; brahmin tamarind.

மறுவ: பப்பரப்புளி, பொந்தம் புளி. (சா.அக.)

*[பார்ப்பார் → பாப்பார + புளி]*

**பாப்பாரமுள்ளி** *pāppāra-muḷḷi,* பெ. (n.) முள்ளி பார்க்க, see indian nightshade.

*[பார்ப்பார் → பாப்பார + முள்ளி]*

**பாப்பார மைனா** *pāppāra-maiṉā,* **பெ.** (n.) *பாப்பாத்தி மைனா*(இ.வ.) பார்க்க; see *pāppāthi mainā.*

*[பார்ப்பார் → பாப்பார + மைனா]*

**பாப்பார வெள்ளை** *pāppāra-veḷḷai,* **பெ.** (n.) தூய வெண்ணிறமுடைய மாடு; pure white coloured cow, which is believable as in auspicious.

மறுவ: பாப்பார வெள்ள

*[பார்ப்பார் → பாப்பார + வெள்ளை]*

**பாப்பான்** *pāppāṉ*, பெ. (n.) ***பார்ப்பான்*** பார்க்க; see *pārppāṉ*.

*[பார்ப்பான் → பாப்பான்]*

**பாப்பான்பூண்டு** *pāppāṉ-pūṇḍu*, **பெ.** (n.) காட்டுச்சாயவேர்; wild chayroot.

*[பார்ப்பான் → பாப்பான் + பூண்டு]*

**பாப்பு**[1] *pāppu*, பெ. (n.) ***பார்ப்பான்*** பார்க்க; see *pārppāṉ*. *"பாப்புக் குரங்கைப் படையாகக் கூட்டிவந்தீர்"* (தமிழ்நா. 200.)

*[பார்ப்பு → பாப்பு]*

**பாப்புப்பகை** *pāppu-p-pagai*, **பெ.** (n.) கருடன்; garuda, the enemy of serpants. (பாம்பின் பகை.) *"பாப்புப்பகையைக் கொடி யெனக் கொண்ட கோடாச் செல்வனை"* (பரிபா. 13, 39.)

*[பாம்பு → பாப்பு + பகை]*



**பாப்புரி**[1] *pāppuri*, பெ. (n.) *பாம்புரி* (வின்.) பார்க்க; see *pāmburi*.

*[பாம்பு + உரி → பாப்பு + உரி]*

**பாப்புரி**[2] *pāppuri*, பெ. (n.) **1.** கொம்மட்டி மாதளை; melonlime. **2.** பாம்புச் சட்டை; snake skin. (சா.அக.)

*[பாம்பு + உரி → பாப்புரி]*

**பாப்புவார்** *pāppuvār*, (adj.) (n.) *பாபுவார்*(R.F.) பார்க்க; see *pābuār*.

**பாப்பூசு** *pāppūšu*, பெ. (n.) ***பாப்பாசு*** பார்க்க; see *pāppāšu* (யாழ்.அக.)

*[பாப்பாசு → பாப்பூசு]*

**பாப்பை** *pāppai*, பெ. (n.) களியிட்டுக் கட்டல்; bandaging after applying poultice. (சா.அக.)

**பாபட்டான்** *pāpaṭṭāṉ*, பெ. (n.) ***குரா(இல.)*** பார்க்க; see *kurā* bottle-flower.

**பாபட்டை** *pāpaṭṭai*, பெ. (n.) தண்ணீர் விட்டான்; water root. (சா.அக.)

**பாபரபழுத்தை** *pāpara-paḻuttai*, **பெ.** (n.) ***கண்டங்கத்திரி*** பார்க்க; see *kaṇḍaṅ kattari*

**பாபு**[2] *pāpu*, பெ. (n.) **1.** கதவு; door. **2.** பகுதி. section. **3.** கணக்கின் தலைப்பு; title, head of accounts.

*[பகுப்பு → பாப்பு → பாபு]*

**பாபுவார்** *pābuvār*, பெ. (n.) விளக்கங்காட்டிப் பிரித்தெழுதிய கணக்கு(C.G.); head or items of account, arranged or classified

*[பகுப்பு + வாரி]*

**பாம்படம்** *pāmbaḍam,* பெ. (n.) பெண்கள் அணியும் ஒரு வகைக் காதணி; a heavy ornament for the ears (worn by rural women).

**பாம்பணி மாநகர்** *pāmbaṇi mānagar,* பெ. (n.) பாமணி என்னும் தஞ்சை மாவட்டத்து ஊர்; a place name in Tanjore Dt. *"பருப்பத வார் சிலையார் தம் பாம்பணி மாநகர் தன்னில் பாதளீச்சரம் வணங்கி"* (பெரிய–கழறிற்119, 120)

*[பாம்பணி + மாநகர்]*

**பாம்பணை** *pāmbaṇai,* பெ. (n.) திருமாலின் பாம்புப் படுக்கை; Thirumāl serpent-couch. *"பாம்பணைப் பள்ளிகொண்ட மாயன்"* (திவ். திருமாலை, 20.)

*[பாம்பு + அணை]*

**பாம்பணைப்பள்ளி** *pāmbaṇai-p-paḷḷi,* பெ. (n.) பாற்கடலில் திருமால் பள்ளி கொண்டிருக்கும் 'ஆதிசேடன்' என்னும் பாம்புப் படுக்கை; Thirumāl'sk sopant-couch *"பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ னாங்கண்"* (பெரும். 373.)

*[பாம்பணை + பள்ளி]*



**பாம்பரணை** *pāmbaraṇai,* பெ. (n.) பாம்பைப் போல் நச்சுள்ள அரணை வகை; a poisonous horse lizard with red tail. (சா.அக.)

க. ஹாவுராணி

*[பாம்பு + அரணை]*

**பாம்பன்** *pāmban,* பெ. (n.) இராம நாதபுரத்துச்சிற்றூர்; a place name of Ramanathpuram.

இராமநாதபுரம் மாவட்டத்தில் மதுரைக்குத் தென்கிழக்கே சுமார் 90 கல் தொலைவிலுள்ள ஒரு சிற்றூர். இது பாம்பன் கால்வாயின் கரையிலுள்ளது. இங்கு சுமார் 100 அடி உயரமுள்ள கலங்கரை விளக்கம் உள்ளது. அதன் ஒளி 12–14 கல் தூரம் தெரியும்.

*[பாம்பு (வளைவு) → பாம்பன்]*

**பாம்பன் கால்வாய்** இராமநாதபுரத்தையடுத்த மண்டபத்திற்கும் இராமேசுவரம் தீவிற்கும் இடையேயுள்ள கால்வாய்; a channel betwen south india and Rameswaram.

(இது பாக்கு நீரிணைப்பையும் மன்னார் வளைகுடாவையும் இணைக்கிறது. இது பாம்பைப் போல் வளைந்திருப்பதால் பாம்பன் என்ற பெயர் பெற்றது. அதிக ஆழமில்லாத படியால் சிறு கப்பல்களே செல்ல முடியும்.)

**பாம்பனடிகள்** *pāmbaṉaḍigaḷ,* பெ. (n.) பாம்பன் என்னும் ஊர்க்கருகில் உள்ள பிரப்பன் வலசு என்ற சிற்றூரில் பிறந்தவர். இவர் முருகனருள் பெற்றுத் தோத்திர சாத்திர வடிவமான பல செய்யுள் நூல்களும் உரைநடை வடிவான நூல்களும் இயற்றியவர். இவரியற்றிய பாடல்கள் ஆறு மண்டலமாகத் தொகுக்கப் பட்டுள்ளன; a well known poet born in pirappaṉvalasu, near pāmbaṉ who was a devottee of lord marugan. his poems are compiled by six manḏalams total of 6666

*[பாம்பன் + அடிகள்]*

**பாம்பாட்டம்** *pāmbāṭṭam,* பெ. (n.) ஆறுமுதலியவற்றின் வளைந்து செல்லும் போக்கு (வின்.); a zigzag, meandering course.J

**பாம்பாட்டி** *pāmbāṭṭi,* பெ. (n.) **1.** பாம்பைப் பிடித்துப் பழக்கி ஆட்டுபவன்; snake - charmer. **2.** வரிக் கூத்து வகை (சிலப். 3, 13, உரை); a kind of dance. **3. பாம்பாட்டிச் சித்தர்** பார்க்க; see *pāmbaṭṭi-c-cittar.*

*'பாம்பாட்டி பாம்பிலே, கள்ளன் களவிலே'* (பழ.)

*'பாம்பாட்டிக்குப் பாம்பிலே சாவு; கள்ளனுக்குக் களவிலே சாவு'* (பழ.)

தெ. ஆவாடிக



**பாம்பாட்டிச் சித்தர்** *pāmbāṭṭi-c-cittar,* பெ. (n.) பதினெண் சித்தருள் ஒருவர்; sittar, one among the eighteen.

*[பாம்பாட்டி + சித்தர்]*

[இச்சித்தர் பாண்டிநாட்டில் பிறந்து சட்டை முனியிடம் தீக்கை பெற்றார் என்றும் திருக் கோகரணத்தில் பிறந்து மருதமலையில் வாழ்ந்து பல சித்துகள் நடத்தினார் என்றும், மருதமலையில் இவர் வாழ்க்கை பற்றிய சின்னங்கள் இன்றும் உள்ளன என்றும் கூறுவர். இவர் பாடிய *'ஆடுபாம்பே'* என்ற தொடக்கமுடைய பாடல்கள் 129 இன்று வழக்கில் உள்ளன. இவை கடவுள் வணக்கம், குருவணக்கம், பாம்பின் சிறப்பு, சித்தர் வல்லபம், சம்வாதம், பொன்னாசை பெண்ணாசை விலக்கல், யாக்கை நிலையாமை, யாக்கை இயல்பு, பாச நீக்கம், சொரூபதரிசனம், குரு உபதேசம், ஞானதரிசனம் என்ற தலைப்புகளில் இறுதிப் பகுதி பத்துப் பாடல் மேனி அமைந்துள்ளன. இறுதிப் பகுதி மட்டும் எண்சீரடி ஆசிரிய மண்டிலங்கள் (விருத்தங்கள்). மற்றவை இரண்டடி கொண்டவை. சித்தர் பாடல் என்ற மாத்திரத்திலே *"நாதர் முடி மேலிருக்கும் நாகப் பாம்பே—நச்சுப் பையை வைத்திருக்கும் நல்ல பாம்பே"* என்ற இவருடைய பாடல் எல்லாருக்கும் நினைவு வரும். புன்னாகவராளி அராகத்தில் அமைந்த இவர் பாடல்களைத் தழுவி இன்று வரையில் பலர் பாடல் செய்திருக்கிறார்கள்.

இவர் பாடல்கள் சிவனியச் சார்பான மெய்ப்பொருள் கொண்டவை. பாம்பு வடிவாக மண்டலித்துள்ள குண்டலினி ஆற்றலை எழுப்பி அதன் மூலம் ஆதனியல் காட்சியும் தெய்வக்காட்சியும் காண்பதை இவை கூறும். பல பகுதிகள் வாலாயமான கருத்துகளாயினும், எளிய நடையாலும், சொல் நயத்தாலும். தெளிந்த உவமையாலும் இவை சிறந்த இலக்கியப் பண்புடையவை. நூலில் காணும் உவமைகள் மிக்க நயமானவை. இடைச் செருகல்களும் சேர்ந்துள்ளன. காலம் விளக்கமாகத் தெரியாதபோதிலும், சொற்களை ஆராயும் போது, 14ஆம் நூற்றாண்டு என்று கருதலாம்.

பாம்பாட்டி என்பது பல்வரிக் கூத்துள் ஒன்று என்று அடியார்க்கு நல்லார் குறிப்பிடுகிறர். இது பாம்பை எடுத்து ஆட்டுகின்ற பிடாரரைக் குறிப்பிடுவது ஆகும். இச்சித்தர் பெயரில் வரும்போது, இது குண்டலினி ஆற்றலாகிய பாம்பை ஆட்டுதல் என்று பொருள்படும். சித்தராரூடம் என்ற நூல் இவர் செய்ததென்று சிலர் கூறுவர். இதற்குச் சான்றில்லை இந்நூலை நச்சினார்க்கினியர் குறிப் பிடுகிறார். இது காலத்தால் இச்சித்தருக்கு முற்பட்டதெனக் கூறலாம்.]

**பாம்பாட்டிப் பச்சிலை** *pambāṭṭi-p-paccilai,* பெ. (n.) வெட்டுண்ட தசையைக் கூடச் செய்யும் தொழுகண்ணிப் பச்சிலை; talegraph plant which is capable of uniting or joining shivered muscles. (சா.அக.)

மறுவ: அரவாட்டிப் பச்சிலை

*[பாம்பாட்டி + பச்சிலை]*

**பாம்பாட்டு[1]–தல்** *pambāṭṭu-,* செ.கு.வி. (v.i.) பாம்பைப் படமெடுத்தாடச் செய்தல்; to make a cobra dance with its hood outspread.

**பாம்பாட்டு[2]–தல்** *pambāṭṭu-,* செ.குன்றா.வி. (v.t.) தொந்தரவு பண்ணுதல்(வின்) to trouble, give annoyance.

க. ஹாவாடிசு

*[பாம்பு + ஆட்டு]*

**பாம்பாடி** *pāmpādi,* பெ. (n.) திருமால் (நாமதீப. 51.); visṇu.

*[பாம்பு + ஆடி]*

**பாம்பு** *pāmbu,* பெ. (n.) **1.** ஊர்ந்து செல்லும் உயிரிவகை; snake, serpent. *"பாம்போ டுடனுறைந் தற்று"* (குறள், **890.**) **2.** நிழற்கோள் (இராகு அல்லது கேது); ascending or descending node of the moon. **3.** ஆயிலியம் (பிங்.) (கவ்வை) பார்க்க; see the ninth naksatra. **4.** பகல் முழுத்தங்களிலொன்று (விதான குணாகுண. **73.**); (astrol) a mugūrttam of the day-time. **5.** நாணலையும் வைக்கோலையும் பரப்பி மண்ணைக் கொட்டிச் சுருட்டப்பட்ட திரணை; ropes of twisted reeds and straw with earth inside. "பாம்புகளுருட்டுமென்பார்" (திருவாத.பு.மண்சு.**21**) **6.** நீர்க்கரை (பிங்.); bank of a river or tank. **7.** தாளக் கருவி வகை (பரத. **தாள. 35.**); a kind of cymbals.

*'பாம்பு தின்கிற ஊரிலே போனால் நடு முறி நமக்கு என்று இருக்க வேண்டும்'* (பழ.)

*'பாம்பை முட்டையிலே, புலியைக் குட்டியிலே கொல்ல வேண்டும்'* (பழ.)

*'பாம்பு பகையும் தோல் உறவுமா'* (பழ.)

*'பாம்போடு பழகேல்'* (பழ.)

*'பாம்புக்குப் பகை கருடன்'* (பழ.)

*'பாம்பும் நோவாமற் பாம்பு அடித்த கோலும் நோவாமல் இருக்க வேண்டும்'* (பழ.)

*'பாம்பறியும் பாம்பின் கால்'* (பழ.)

'பாம்பின் வாய்த் தேரை போல' (பழ.)

'பாம்புக்கு அரசன் மூங்கில் தடி' (பழ.)

'பாம்பிற்குப் பால்வார்த்தது போல' (பழ.)

'**பாம்பு தன் பசியை** நினைக்கும்; தேரை தன் விதியை நினைக்கும்' (பழ.)

"பாம்பிலும் பாம்புக் குட்டி நஞ்சு அதிகம், வீரியமும் அதிகம்" (பழ.) 'பாம்பின் குட்டி பாம்பு, அதன் குட்டி நட்டுவாக்காலி' (பழ.) 'பாம்புக்கு மூப்பு இல்லை' (பழ.)

"பாம்பு என்றால் படையும் நடுங்கும்" (பழ.)

'பாம்பு கடிக்கத் தேளுக்குப் பார்க்கிறதோ?' (பழ.)

'பாம்புக்குப் பகை பஞ்சமா?' (பழ.)

'பாம்புக்குப் பால் வார்த்து வளர்த்தாலும் நஞ்சைக் கொடுக்கும்' (பழ.)

'பாம்பும் கீரியும் போல' (பழ.)

'பாம்பு பசிக்கில் தேரையைப் பிடிக்கும்


பாம்பு வகைகள்
கட்டுவிரியன்
சங்கிலிக் கருப்பன்
வங்காள நச்சுப்பாம்பு
பக்கமுறுக்கு பாம்பு
சுருட்டை விரியன்
கண்ணாடி விரியன்
கருநாகம்
கடற்பாம்பு
பவளப்பாம்பு

அது போல, சிறியோர் சிறிய காரியங்களையே செய்வார்' (பழ.)

'பாம்பும் கீரியும் போலப் பல காலம் வாழ்ந்தேன்' (பழ.)

தெ. பாமு

க.து. பாவு

ம. பாம்பு.

*[பம்பு → பாம்பு]*

பாம்பு என்பது நாகத்துக்கேயுரிய சிறப்புப் பெயர் பரவுதல்—விரிதல் எனப்பொருள்படும் பம்பு (பம்புதல்) என்னுஞ் சொல் பாம்பு எனத் தலைநீண்டு, படம் விரிக்கும் அரவின் பெயராயிற்று, ஆயினும் அப்பெயர் இனம் பற்றி விரியன், சாரை, வழலை, மண்ணுளி, இருதலைமணியன் முதலான எல்லாவற்றுக்கும் பொதுப்பெயராயிற்று ஆனைமையால், படம் விரிப்பதாகிய உண்மையான பாம்பு, நல்ல பாம்பு எனப்பட்டது.

ஒ.நோ. நற்றாய், நல்லெண்ணெய்
—தமிழாரம்

**பாம்புக்கடி** *pāmbu-k-kaḍi,* பெ. (n.) பாம்பு தீண்டுகை; snake bite.

*[பாம்பு + கடி]*

**பாம்புக்கண்ணி** *pāmbu-k-kaṇṇi,* பெ. (n.) சங்கங்குப்பி; smooth volkameria. (சா.அக.)

மறுவ: பீநாறிச்சங்கு

*[பாம்பு + கண்ணி]*



**பாம்புக்கல்** *pāmbu-k-kal,* பெ. (n.) பாம்பின் நஞ்சை நீக்கும் ஒருவகைக் கல்; snake stone, porous or absorbent substance regarded as efficacious in curing snake-bite.

*[பாம்பு + கல்]*

**பாம்புக்கள்ளி** *pāmbu-k-kaḷḷi,* பெ. (n.) கள்ளிவகை (நாஞ்.) a kind of spurge

*[பாம்பு + கள்ளி]*

**பாம்புக்குத் தச்சன்** *pāmbukku-t-taccaṉ,* பெ. (n.) பாம்பின் வீடாகிய புற்றைக் கட்டும் கறையான்(வின்.); lit., house-bulider for a serpant.

*[பாம்புக்கு + தச்சன்]*

**பாம்புக்கோலா** *pāmbu-k-kōlā,* பெ. (n.) பாம்புருவுடைய கோலாமீன் (சா.அக.); a kind of kōlā fish which have a resemblance of snake.

*[பாம்பு + கோலா]*



**பாம்புக்கோவை** *pāmbu-k-kōvai,* பெ. (n.) ஐவிரலிச்செடி; bryonia. (சா.அக.)

*[பாம்பு + கோவை]*



**பாம்புகண்டசித்தன்** *pāmbu-kaṇḍa-cittaṉ,* பெ. (n.) கரடி (வின்.); bear. lit., cittaṉ who finds snakes, while burrowing for white ants (கறையானை யுண்ணப் புற்றில் வாய்வைத்து உறிஞ்சும் போது பாம்பைக் காணும் கரடி)

*[பாம்பு + கண் + சித்தன்]*

**பாம்புகொல்லி** *pāmbukolli,* பெ. (n.) 1. கீரிப்பூடு; indian snake root. 2. அரவதள்; herb of repentance. (சா.அக.)

*[பாம்பு + கொல்லி]*

**பாம்புச்சட்டம்** *pāmbu-c-caṭṭam,* பெ. (n.) கட்டைச்சுவர் அல்லது தாழ்வாரத்தில் ஓடும் நெடுக்குமரம்; bressummer.

*[பாம்பு + சட்டம்]*

**பாம்புச்சட்டை** *pāmbu-c-caṭṭai,* பெ. (n.) பாம்பு கழற்றும் தோல், snake's slough.

*[பாம்பு + சட்டை]*

**பாம்புச்சுழி** *pāmpu-c-cuḻi,* பெ. (n.) மாட்டுச் சுழிவகையுள் முகப்பில் ஒரு வலப்புறமாகவும் காதில் ஒரு வலப்புறமாகவும் ஆக இரண்டில் சேர்ந்திருக்கும் தீய சுழி; an inauspicious suḻi.

*[பாம்பு + சுழி]*

**பாம்புச்செடி** *pāmbu-c-ceḍi,* பெ. (n.) ஒருவகைச் செடி; jack-in-the pulpit, indian turnip, kōḍai.

*[பாம்பு + செடி]*

**பாம்புச்செவி** *pāmbu-c-cevi,* பெ. (n.) கூர்மையான செவியுணர்வு; sharp ear, acute hearing.

*[பாம்பு + செவி]*

**பாம்புண் பறவை** *pāmbuṇ-paravai,* பெ. (n.) கருடன்; lit., snake-eating bird. garuda. *"பூவைப் பூமேனியான் பாம்புண் பறவைக் கொடிபோல"* (பு.வெ. 9, 39.)

*[பாம்பு + உண் + பறவை]*

**பாம்புணிக்கருங்கல்** *pāmbuṇi-k-karuṅgal,* பெ. (n.) பாம்பின் நஞ்சை உண்ணும் ஒருவகைக் கல்; a kind of stone. *"பாம்புணிக் கருங்கல்லும் பயறும் விற்பா னொருவன்"* (தொல். சொல். 35, சேனா.)

*[பாம்பு + உண் + இ + கருங்கல்]*

**பாம்புத்தச்சன்** *pāmbu-t-taccaṉ,* பெ. (n.) பாம்புக்குத் தச்சன், பார்க்க; see pāmbukk-t-taccaṉ.

*[பாம்பு + தச்சன்]*

**பாம்புத்திசை** *pāmbu-t-tišai,* பெ. (n.) (astrol) மேற்கு; west

*[பாம்பு + திசை]*

(கணியத்தில் மேற்குத்திசை பாம்புத் திசை எனப்படும்.)

**பாம்புதின்னி** *pāmpu-tiṉṉi,* பெ. (n.) தைத்த முள்ளை வெளியே கொண்டு வரும் நச்சுமூலிகை வகை; a kind of poisonous herb, the leaves of which are used with other ingredients to extact thorn from the body.

*[பாம்பு + தின்னி]*

**பாம்புநடனம்** *pāmpunaḍaṉam,* பெ. (n.) இசைக்கேற்றபடி, நடனமங்கை பாம்புபோல் வளைந்து நெளிந்து ஆடும் ஆட்டம்; snake dance.

*[பாம்பு + நடனம்]*

**பாம்புப்பருந்து** *pāmbu-p-parundu,* பெ. (n.) பாம்புண்ணும் பருந்து வகை (M.M.219); common serpent-eagle living on snakes, circatus gallicus,

*[பாம்பு + பருந்து]*

**பாம்புப்பருந்து** *pāmbu-p-parundu,* பெ. (n.) பருந்து வகைகளுள் ஒன்று; snake vulture

(இது பருந்திலும் பெரிதாகக் கருமுனையும் வெள்ளை அடியுமான அடர்ந்த குட்டைக் கொண்டையுள்ளது. இதன் மேற்பாகம் அடர்ந்த நீலமாகவும், அடி வெண் புள்ளிகள் பொறித்த பழுப்பு நிமாகவும் இருக்கும். பறக்கும் போது வாலிபிறை அகன்ற வெள்ளைப் பட்டையும் பரந்த குட்டை இறக்கைகளில் இரு வெண்பட்டைகளும் தென்படும். இது மரமடர்ந்த நாட்டுப் புறங்களில் பாம்புகளையும் (நச்சுள்ளவையுட்பட) பறவைகளையும் சிறு விலங்குகளையும் வேட்டையாடி வாழும்.)

**பாம்புப் பிடாரன்** *pāmpu-p-piḍāraṉ,* பெ. (n.) பாம்பு–பிடிப்போன்; snake-catcher.

*[பாம்பு + பிடாரன்]*

**பாம்புப்புற்று** *pāmbu-p-puṟṟu,* பெ. (n.) பாம்பின் வளை; snake's hole.

*[பாம்பு + புற்று]*



**பாம்புமொச்சை** *pāmbu-moccai,* பெ. (n.) பூடுவகை (வின்.); a plant, dolichos falctus.

*[பாம்பு + மொச்சை]*

**பாம்புமோதிரம்** *pāmbu-mōdiram,* பெ. (n.) 1. நடுவிரலில் அணியும் மோதிரம்; ring for the middle finger. 2. பாம்புருவமான மோதிர வகை; ring, shaped like a serphent.

*[பாம்பு + மோதிரம்]*



**பாம்புரம்** *pāmburam,* பெ. (n.) திருப்பாம்புரம் என்னும் தஞ்சை மாவட்ட ஊர்; a place name in Tanjore Dt.

*[பாம்பு புரம் → பாம்புரம்]*

அரவரசன் வழிபட்ட தலம். ஆகையால் இப்பெயர் பெற்றிருக்கலாம்.

*"மஞ்சு தோய் சோலை மாமயிலாட மாட*
*மாளிகைத் தன்மே லேறிப்*
*பஞ்சுசேர் மெல்லடிப் பாவையர் பயிலும்*
*பாம்புர நன்னக ராரே"* – (தேவா.41–4)

*"மடக்கொடி யவர்கள் வருபுன லாட*
*வந்திழியரிசிலின் கரைமேல்*
*படைப்பையிற் கொணர்ந்து பருமணி*
*சிதறும்– பாம்பு நன்னகராரே"*
(தேவா.41–8)

என்ற பாடல்கள் அரிசிலாற்றின் கரையில் பாம்புர நகர் செழிப்புற்றிருந்த நிலையைக் காட்டுகின்றன.

**பாம்புராணி** *pāmburāṉi,* பெ. (n.) **பாம்பரணை**(நெல்லை வழக்.) பார்க்க, see ***pānbaraṉai.***

**க. ஊாவுராணி**

**பாம்புரி** *pāmburi,* பெ. (n.) **1.** *பாம்புச் சட்டை* (வின்.) பார்க்க,; see *pāmbu-c-attai.* **2.** அகழ் (சூடா.); moat. **3.** ஒரு மதிலுறுப்பு; a girdle-like structure edged round a fort-wall. *"கிடங்குசூழ் பசும்பொற் பாம்புரி"* (சீவக. 250) **4.** அகழியில் இறங்க உதவும் படிக்கட்டு (குஞ்.); flight of steps leading from a fort-wall into the moat surrounding it.

*[பாம்பு + உரி]*

**பாம்புரோசனை** *pāmburōšaṉai,* பெ. (n.) பாம்பின் கோரோசனை; snake bazoar. (சா.அக.)

*[பாம்பு +* skt.rosnā *த. ரோசனை]*

**பாம்புவடம்** *pāmbu-vaḍam,* பெ. (n.) *பாம்படம்* (இ.வ.) பார்க்க; see *pāmbaḍam.*

*[பாம்பு + வடம்]*

**பாம்புவயிறு** *pāmbu-vayiṟu,* பெ. (n.) நீண்டு ஒட்டிய வயிறு (இ.வ.); a long lean abdomen.

*[பாம்பு + வயிறு]*

**பாம்புவிரல்** *pāmbu-viral,* பெ. (n.) நடுவிரல் (இ.வ.); middle finger.

*[பாம்பு + விரல்]*

**பாம்போடு வடலி** *pāmbōḍu-vaḍali,* பெ. (n.) நீண்ட மட்டையுள்ள இளம்பனை (யாழ்ப்.); young palmyra with long stalks.

*[பாம்பு + ஓடு + வடலி]*

**பாமக்கினம்** *pāmakkiṉam,* பெ. (n.) கந்தகம் (வைத்தியபரி.); sulphur.

**பாமகள்** *pā-magaḷ,* பெ. (n.) கலைமகள்; sarasvati, goddess of poetry. *"பாமகள் போலு நீயே"* (ஞானவா. லீலை. 74.)

*[பா + மகள்]*

**பாமடந்தை** *pā-maḍandai,* பெ. (n.) *பாமகள்* (பிங்.)பார்க்க; see *pā-magaḷ.* goddess of poetry.

*[பா + மடந்தை]*

**பாமதம்** *pāmadam,* பெ. (n.) 1. வாலுளுவை; spindle or intellect tree. (சா.அக.) 2. உளுவை மீன் வகை; a fresh waterfish.

**பாமதுவா** *pāmaduvā,* பெ. (n.) ஆடாதோடை; malabar winter cherry. (சா.அக.)

**பாமம்**[1] *pāmam,* பெ. (n.) பரப்பு(இலக்.அக.); extension; expanse.

*[பா → பாமம்]*

**பாமம்**[2] *pāmam,* பெ. (n.) 1. சிரங்கு; itch, eczema. 2. புண்; sore. *"பாமக்குருதிப் படிகின்ற ...... சேடகம்"* (கம்பரா. மூலபல. 203.)

*[பா → பாமம்]*

**பாமம்**[3] *pāmam,* பெ. (n.) 1. சினம்(யாழ்.அக.); anger. 2. ஒளி; brilliance. *"பாமமா கடல் கிடங்காக"* (கம்பரா. அரசி. 7)

*[பா → பாமம்]*

**பாமன்** *pāman,* பெ. (n.) 1. கதிரவன்; sun. 2. உடன்பிறந்தாள் கணவன்; sister's husband.

**பாமாடு** *pāmāṭu,* பெ. (n.) பாய்மரத்தின் முகடு; peak of the mast.

*[பாய்முகடு → பாமூடு → பாமாடு]*

பாய்முகடு = கடலில் தொலை தூரமாய்ச் சென்ற வேளை மரக்கலத்தின் பாய் மட்டுமே தெரியுந் தோற்றம். (நெல்லை.மீனவ.)

**பாமார்சா** *pā-māršā,* பெ. (n.) பரவியெழுங் கடலலை (நெல்லை.மீனவ.); spreading sea waves

**பாமாரி** *pāmāri,* பெ. (n.) கந்தகம் (சங்.அக.); sulphur.

**பாமாரோகம்** *pāmā-rōgam,* பெ. (n.) பேய்ச் சொறி (பைஷஜ.); scabies, itch.

**பாமாலை** *pā-mālai,* பெ. (n.) கவிமாலை (திவ்.நாய்ச். தனியன்); garland of verses in praise of a person; garland of hymns.

*[பா + மாலை]*

**பாமினி**[2] *pāmiṉi,* பெ. (n.) சிறுசண்பகம்; cananga flower plant. (சா.அக.)

**பாமை** *pāmai,* பெ. (n.) சிரங்கு (தைலவ. தைல. 140.); itch.

**பாய்—தல்** *pāy,* 4. செ.கு.வி (v.i.) 1. தாவுதல்; to spring, leap, bound, gallop, prance. *'தண்கடற் யுறிரைமிசைப் பாயுந்து'* (புறநா.24) 2. நீர் முதலியன வேகமாய்ச் செல்லுதல்; to flow, issue or gush out, as waterfall.

3. மேனின்று குதித்தல்; to jump dowm, as from a hill. *'வரைபாய்த னன்று'* (நாலடி, 369.). 4. நீருண் மூழ்குதல்; to plunge, dive, as into water. *"பங்கயப் பூம்புனல் பாய்ந்தாடு"* (திருவாச.7.13.) 5. எதிர் செல்லுதல்; to move towards, as the needle attracted by a loadstone 6. பரவுதல் (தொல்.சொல்.361); to spread, as water, darkness; to radiate, as light; to extend. 7. விரைந்து படிதல்; to settle or faster on, as the light, the mind, the imagination. *'மனம் அங்கே பாய்ந்தது'* 8. தாக்குதல்; to attack, spring at, pounce on. பாய்கிற சேனை 9. விரைந்தோடுதல் (வின்); to run, dart, fly, flit across; 10 துரிதப்படுதல் to hurry. 11. அகங்கரித்தல் to be proud, arrogant 12. மடிப்பு விரித்தல்; to unflod, as a cloth. *'பாய்ந்தாய்ந்த தானை'* (கலித்.96) 13. கூத்தாடுதல்; to dance. *'பேய்த்தொகை பாய்தர'* (திருக்கோ.389.) 14. ஓடிப்போதல் (வின்); to flee, abscond.

*[பா→ பாய்]*

**பாய்²–தல்** *pāy*, 3. செ.குன்றாவி (v.t.) 1. சினத்தோடு தாக்கிப்பேசுதல்; to abuse to accost roughly *' ஏன் அவனைப் பாய்கிறாய்?'* (வின்) 2. குத்துதல்; to pierce, penetrate to plunge into . *'வெல்களிறு பாயக் கலங்கி யுதிரா மதிலு முளகொல்'* (பு.வெ.6,4.)3.வெட்டுதல்; ;to cut; *'வடிநவில் நவியம் பாய்தலின்'* (புறநா.23) 4. முட்டுதல்; to rush against, butt. *'பாய்கிற மாடு' "நெடுந்தெறி யெஃகம் பாய்தலிற் புண்கூர்ந்து"* (முல்லை.68) *"கடிமதிற் கதவம் பாய்தலிற் றொடிபிளந்து"* (அகம்.24–11) *" விடர் முகையடுக்கம்பாய் தலினுடனி யைந்து"* (அகம் 47–6) *'நெடுங்கை நவியம் பாய் தலினிலை யழிந்து"* (புறம் 36–7) நான்கே *அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து"* (புறம்.109–7)

**பாய்³–தல்** pāy 4. செ.கு.வி. 1. குறிப்பிட்ட திசையில் வேகத்துடன் தாவுதல்; தரையிலிருந்து கிளம்பி ஓர் இலக்கு நோக்கி விரைந்து விழுதல்; spring, leap. bounce (at. sth.) *" புலி பதுங்கிப் பாய்ந்தது"* என்பது பழமொழி, *" கண்டம் விட்டுக் கண்டம் பாய்ந்து செல்லக் கூடிய ஏவுகணை"* 2. (நீர் முதலிய திரவம் அல்லது மின்சாரம், ஒளி போன்றவை) ஒன்றின் ஊடாக வேகத்துடன் செல்லுதல்; (of water; etc.or electricity, light. etc.,) flow; rush. *" ஆற்றில் நீர் சலசலத்துப் பாய்ந்தது' " அணையில் வினாடிக்கு நாற்பது கன அடி தண்ணீர் பாய்கிறது; " சன்னலைத் திறந்தவுடன் அறையினுள் கதிரொளி பாய்ந்தது"* 3. (கத்தி,ஈட்டி போன்றவை) வேகத்துடன் ஒரு பரப்பில் படுதல் அல்லது பட்டு உட்செல்லுதல்; (of knife,etc.,) pierce; (of builet etc., *"கூட்டத்தைக் கலைக்கக் காவலர் சுட்டத்தில் குண்டு பாய்ந்து இருவர் இறந்தனர்?* 4. ஊடுருவி இறங்குதல்; seep into; percolate; go in *'ஈரம் பாயாதகளிமண்'* (உரு.வ.) *"கருணை பாய்ந்த உள்ளம்"* 5. குற்றத்துக்குப் பொறுப்பாக்குதல்; bounce on (s.o); jump down someone's throat *"பொறுமை இழந்த பயணிகள் பேருந்து நடத்துநர் மீது பாய்ந்தனர்.*

*[பா→ பாய்]*

**பாய்⁴** *pāy* பெ. (n.) 1. தெரிநிலை வினைப்பகுதி; verbal root which is the state of clear indication. *"பாயொளிப்பரிதியும்"* (கூர்மபு. கன்வேள்.சஉ...); 2. *"முதனிலைத் தொழிற் பெயர்"* (பிங்கல.22.); verbal noun that which stands first.

**பாய்⁵** *pāy*, பெ. (n.) 1. பரவுகை; spreading, extending 2. பரப்பு (பிங்); extension, expanse 3. கோரை முதலியவற்றால்முடைந்த விரிப்பு வகை; mat *" பாயுடை யவர்விட"* ( திருவிளை. நாக.8) 4. கப்பற்பாய் ; sail; *'கூம்பொடு மீப்பாய் களையாது'* (புறநா.30)

*'பாயைச் சுருட்டடி, பிள்ளையை அமுக்கடி, பரதேசம் போக'* (பழ.)

**பாய்க்கிடை** *pāy-k-kiḍai* பெ. (n.) நோயுடன் படுக்கையிற் கிடக்குநிலை; bed-ridden condition. *"பாய்க்கிடை கண்டது"* ' (திருப்பு.1111.)

*[பாய் + கிடை]*

**பாய்க்குப்பல்லி** *pāykku-p-palli* பெ. (n.) பாயும் படுக்கையுமாய் இளைத்துக் கிடத்தல்; confining one self to bed from extreme exhausion owing to prolonged illness. (சா.அக.)

**பாய்க்கோரை** *pāy-k-kōrai* பெ. (n.) கோரை வகை (வின்); a kind of sedge

*[பாய் + கோரை]*

**பாய்க்கோல்** *pāy-k-kōl* பெ. (n.) *பாய்மரம்* (செங்கை.மீனவ.) பார்க்க; see *pāy-maram*

*[பாய் + கோல்]*

**பாய்கலத்தாமடை** *pāykalalttāmaai.* பெ. (n.) கடற்பரப்பின் மீன்பிடிபாட்டிடங்களுள் ஒன்று (முகவை.மீனவ); fishing place

*[பாய்கலம் + தாமடை]*

**பாய்கலைப்பாவை** *pāy-kalai-p-pāvai.* பெ. (n.) 1. கொற்றவை; durga, riding on a leaping stag (பாயுங் கலைமானை ஊர்தியாக வுடையவள்) (சிலப்.12,70)

*[பாய்கலை + பாவை]*

**பாய்கொடு–த்தல்** *pāy-koḍu-,* 4. செ.கு.வி (v.i.) மணமக்கள் கூடும் தலைக் கூட்டக் கொண்டாட்டம்(இ.வ.); to celebrate the nuptial ceremony

**பாய்ங்கம்** *pāyṅgam,* பெ. (n.) இசைக்கருவி ஒன்றின் பெயர் (முகவை); a kind of musical instrument.

**பாய்ச்சல்** *pāyccal* பெ. (n.) 1. தாவுகை bounding, galloping, rushing. *"குதிரைப் பாய்ச்சல்"* 2. குதிப்பு (வின்); jump, prance. 3. எழுச்சி (சூடா); springing forth 4. நீரோட்டம்; current, stream, torrent (வின்) 5. சொரிகை(வின்); issue, discharge, gush, as of tears 6. பெருகுகை; overflowing 7. பாசனம்;(கொ.வ) irrigation 8. முட்டுகை (வின்); butting 9. கீழ்ப்படியாமை(வின்) disobedience 10. குத்துகை; piercing 11. செருகுகை; (வின்) sheathing, as a sword (வின்) 12. வெடுவெடுப்பு; rudeness(j) 13. *தெருக்குத்து* (இ.வ) பார்க்க; see *terukkuttu.* an inauspicious postion of a house see *therukkuttu*

*[பாய் → பாய்ச்சல்]*

**பாய்ச்சல் காட்டு–தல்** *pāyccal-kāṭṭu-,* 9. செ.கு.வி (v.t.) 1. எதிர்த்துப் பாயச்செய்தல்; to cause to spring, leap up; to set one against another, as a ram or a butting goat. 2. ஏய்த்தல்(வின்.); to tantalise

*[பாய்ச்சல் + காட்டு–,]*

**பாய்ச்சல்மாடு** *pāyccal-māḍu,* பெ. (n.) 1. பாயுங்காளை (கொ.வ.); butting bull. 2. காளைகளை நீண்ட கயிற்றாற்கட்டி வெருட்டி வீழ்த்தும் மறவர் கொண்டாட்ட வகை (E.T.iii, 90.); a sport of bull-baiting amongst kaḷḷars where in bulls are tethered to long ropes and sought to be thrown down

*[பாய்ச்சல் + மாடு]*

'பாய்கிற மாட்டுக்கு முன்னே
திருக்குறள் சொன்னாற் போல' (பழ.)



**பாய்ச்சல் விடு¹-தல்** *pāyccal-viḍu-,* 20. செ.கு.வி (v.i.) தாவிச்செல்லுதல் (வின்.); to gallop, ride at a gallop.

*[பாய்ச்சல் + விடு-,]*

**பாய்ச்சல் விடு²-தல்** *pāyccal-viḍu-,* 18. செ.குன்றாவி. (v.t.) வேகமாய் வெருட்டுதல்; to ride or drive at a high speed

*[பாய்ச்சல் + விடு-,]*

**பாய்ச்சி** *pāycci,* பெ. (n.) 1. *பாய்ச்சிகை* (வின்) பார்க்க, see *pāyccikai* 2. *பாய்ச்சிவலை* பார்க்க, (இ.வ.) see *pāyccivalai*

*[பாய்ச்சிகை → பாய்ச்சி]*

**பாய்ச்சிகை** *pāyccigai,* பெ. (n.) கவறு (வின்); dice

*[பாய் → பாய்ச்சிகை]*

**பாய்ச்சிவலை** *pāycci-valai.* பெ. (n.) *பாய்ச் சுவலை* (இ.வ) பார்க்க; see *pāyccu valai*

*[பாய்ச்சு + வலை]*

**பாய்ச்சு-தல்** *pāyccu,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. நீரை வெளிச்செலுத்துதல்; to lead or conduct water; to irrigate. *"அன்புநீர் பாய்ச்சி யறக்கதிர் ஈன்றதோர் பைங்கூழ்"* (அறநெறி.5.) 2. தள்ளுதல்; to push over, upset, throw down *"இலங்கையைக் கீழுறப் பாய்ச்சி"* (கம்பரா.நிந்த.63.) 3. குத்துதல்(வின்); to thurst, plunge into; 4. உட்செலுத்துதல்; to infuse, inject, introduce, as poison; to put in; to cause to enter *'தூணிலேபாய்ச்சினார்கள்'* (ஈடு.2,8,9.)

ம. பாய்க்குக.

*[பாய் → பாய்ச்சு]*

**பாய்ச்சு** *pāyccu,* பெ. (n.) தெரிநிலை வினைப்பகுதி; (பிறவினைப்பகுதி); verbal root which is the state of clear indication.

*[பாய் → பாய்ச்சு]*

**பாய்ச்சு²** *pāyccu,* பெ. (n.) 1. உருட்டுகை; throw, as of dice 2. கவறு (சீவக.983.உரை); dice 3. குத்துகை; plunging, thrusting. 4. வரிச்சல்(வின்); thin, rough kind of lath, used in roofing huts or for hedging.

*[பாய் → பாய்ச்சு]*

**பாய்ச்சு³** *pāyccu,* பெ. (n.) பாய்கை; spring,leap *'புலிப்பாய்ச்சுப் பாய்ந்தான்'*

*[பாய் → பாய்ச்சு]*

**பாய்ச்சு உளுவை** *pāyccu vuuvai,* பெ. (n.) துள்ளும் அல்லது பாயும் தன்மையுள்ள உளுவை மீன் (குஞ்சை.மீனவ); a kind of fresh waterfish.

*[பாய்ச்சு + உளுவை]*



**பாய்ச்சுக்காட்டு-தல்** *pāyccu-k-kāṭṭu,* 5. செ.கு.வி (v.i.) 1. குழந்தைகளிடமிருந்து ஒளித்து வைப்பதில் கைத்திறங்காட்டுதல்; to show sleight of hand, as in concealing objects from the eyes of children 2. **பாய்ச்சல் காட்டு-.** 2. பார்க்க; see *pāyccal-kāṭṭu-.*

*[பாய்ச்சு + காட்டு-.]*

**பாய்ச்சுகண்டி** *pāyccu-kaṇḍi,* பெ. (n.) சாதிப் பத்திரி; mace (சா.அக)

மறுவ: வசுவாசி

**பாய்ச்சுத்தேள்** *pāyccu-t-tēḷ-,* பெ. (n.) பொய்த்தேளிட்டுப்பிறரைக் கலங்கப்பண்ணுதல்போல உண்டாக்கும் அச்சவுணர்வு(சிலப்.9,48, உரை.); false alarm caused by throwing an imitation scorpion at a person

*[பாய் → பாய்ச்சு + தேள்]*

**பாய்ச்சுலக்கை** *pāycculakkai,* பெ. (n.) 1. இருவர் மாறி மாறி இடைவிடாது இரண்டு உலக்கையாற் குத்துகை; alternate stroke of two pestles when two persons work jointly in husking grain 2. இருவர் எதிர் நின்று ஒற்றையுலக்கை கொண்டே தவசங் குத்துகையில் அவரவர் முறையில் உலக்கையை மாறிவாங்குகை; exchange of pestle at every stroke when two persons jointly husk grain.

*[பாய்ச்சு + உலக்கை]*



**பாய்ச்சுவலை** *pāyccu-valai,* பெ. (n.) பலர் பிடித்துப் பாய்ச்சியிழுக்கும் மீன்வலை; fishing net, let down perpendiculary and then drawn ashore

*[பாய்ச்சு + வலை]*

**பாய்ச்சை** *pāyccai,* பெ. (n.) சிள்வண்டு; cricket.



(இப்பூச்சியின் உணர்கொம்புகள் மெல்லியனவாயும் மிகவும் நீண்டும் இருக்கும் வாயுறுப்புகள் கடித்துண்பதற்காக அமைந்திருக்கின்றன. பின்னங்கால்கள் தத்திக் குதிப்பதற்கானவை. பாதம் மூன்று பகுதிகளாலானது. பாய்ச்சையின் முன் இறக்கைகள் சிறப்பான அமைப்பைக் கொண்டவை. இவை நேர் நீளத்தில் மடிந்திருப்பதால் வேறு பூச்சிகளிலிருந்து இவற்றை எளிதில் கண்டறியலாம். இறக்கைகள் இல்லாத பாய்ச்சைகளும், மிகவும் வளர்ச்சி குன்றிய இறக்கைகளையுடைய பாய்ச்சைகளும் உள.

ஆண் பாய்ச்சைகளே ஒலி உண்டாக்கும்; அவற்றின் முன்னிணைச் சிறகுகளில் ஒலி உண்டாக்கும் உறுப்புகள் அமைந்துள்ளன. இவை ஒன்றோடொன்று உரசுவதால் ஒலி உண்டாகிறது. ஒலியை உணரும் செவி இப்பூச்சியின் முன்னிணைக்கால்களின் முழங்காலில் (Tibia) வைக்கப் பட்டிருக்கின்றன.

பொதுவாகப் பாய்ச்சைகள் நிலைத்திணை உணவையே உட்கொள்ளும். சில பாய்ச்சைகள் விதையின் முனைகளைக் கடித்துத் தீங்குவிளைவிக்கும். வேறு சில, இறந்த புழுபூச்சிகளை உண்ணும். வீட்டுப் பாய்ச்சைகள் துணி, புத்தகம், தோல் முதலியவற்றைத் தின்னும். பாய்ச்சைகள் மண்ணிலும் செடிகளிலும்முட்டையிடுகின்றன. முட்டையிடும் உறுப்பு பெரும்பாலும் ஈட்டி போல் நீண்டிருக்கும். பாய்ச்சைகள் பலவகை: வீட்டுப்பாய்ச்சை (House C.) நமது வீட்டினுள் சுவர். துளைகளிலும் படங்களினடியிலும் வாழ்கின்றது மரப்பாய்ச்சை (Tree C.) செடிகளின் இலைகளைத்தின்று வாழ்கின்றது வயல் பாய்ச்சையை (Field C.) வயல் வெளிகளிலும், கற்களினடியிலும், அழுகிய தாவரத்தண்டின் அடியிலும் காணலாம் பிள்ளைப்பூச்சி, மண்ணைத் துளைத்து அதனுள் வாழ்கிறது

இனிய ஒலியை எழுப்பும் மரப்பாய்ச்சைகளும் உண்டு சீனாவிலும் சப்பானிலும் இவ்வொலியை விரும்பி இவற்றை வீட்டில் கூடுகளிலிட்டு வளர்க்கிறார்கள்)

'அடி, உன் பல்லைப் பாச்சை அரிக்க' (பழ.)

**பாய்சுற்றிவெல்லம்** *pāycuṟṟi vellam,* பெ. (n.) இளகிய வெல்லம்; semisolid jaggery rolled up in mat (சா.அக.)

**பாய்த்துஅளத்-தல்** pāyttuaḷa-, 3. செ.கு.வி. (v.i.) தவசக் குவியல்களில் அளக்கும் கருவியைச்செருகி அளத்தல்; to make full measure.

*[பாய்த்து + அள-,]*

**பாய்த்து-தல்** pāyttu 5. செ.குன்றாவி (v.t.) *பாய்ச்சு-,* பார்க்க; see *pāyccu-,* ***"இன்றேன் பாய்த்தி நிரம்பிய வற்புதம்"*** (திருவாச.3,173)

*[பாய் → பாய்த்து-,]*

**பாய்த்து²** pāyttu பெ.(n.) *பாய்ச்சல்³* பார்க்க; see *pāyccal³* ***'தவளைப்பாய்த்து'*** (நன்.19.)

*[பாய் → பாய்த்து-,]*

'ஒ' தொழிற்பெயரீறு.

**பாய்த்துள்** pāyttuḷ பெ. (n) பாய்கை; spring, leap.

*[பாய் → பாய்த்துள்]*

'உள்' தொழிற்பெயர்விகுதி.

ஒ.நோ.விக்குள்.

**பாய்திரும்பு—தல்** pāy-tirumbu-, 5. செ.கு.வி. (v.i.) கடல் மேற்சென்ற மரக்கலம் கரைசேர்தல் fishing ship; to return the shore.

**பாய்தூக்கியோடு—தல்**[1] pāytūkkiy-ōḍu 5. செ.கு.வி. (v.i.) பாய்ப்பருமலில் பாயை ஏற்றி அதன் துணையால் கலஞ்செலுத்துதல் (செங்கை. மீனவ.); to sail the ship after veiling the mat.

*[பாய் + தூக்கி + ஓடு—]*

**பாய்தூக்கியோடு—தல்**[2] pāytūkki-y-ōḍu-, 5. செ.கு.வி.(v.i.) *பாய்வலி—த்தல்* பார்க்க; see *pāy-vali-*,

*[பாய் + தூக்கி + ஓடு]*

**பாய்தூக்கு—தல்** pāy-tūkku 9. செ.கு.வி. *பாய்வலி* (வின்) பார்க்க; see *pāy-vali-*

*[பாய் + தூக்கு]*

**பாய் நாட்டு—தல்** pāy-nāṭṭu 9. செ.கு.வி.(v.i.) ***பாய்வலித்தல்*** பார்க்க; see *pāy-vali-*,

*[பாய் + நாட்டு—,]*

**பாய்ப்பருமல்** pāy-p-parumal பெ. (n.) *பாய்க்கோல்* பார்க்க; see *pāy-k-kōl.*

**பாய்பூட்டு—தல்** pāy-pūṭṭu 5. செ.கு.வி. (v.i) *பாய்வலி—த்தல்;* பார்க்க. see *pāy-vali-*,

*[பாய் + பூட்டு—,]*

*ஒ.நோ. ஏர்பூட்டு—தல்*

**பாய்மடை** pāy-maḍai, பெ. (n.) வாய்க் காலிலிருந்து தண்ணீர் பாயும் வழி; opening in the ridge of a field for the inflow of water

**பாய்மரக்கப்பல்** pāymara-k-kappal. பெ. (n.) காற்றின் விசையால் செல்லுதற்கேற்ற வகையில் பாய்கள் கட்டப்பட்ட பழங்கால கப்பல்; sailing ship

*[பாய்மரம் + கப்பல்]*

**பாய்மரக்கயிறு** pāymara-k-kayiṟu. பெ. (n.) ஆலாத்து(பாண்டிச்.); cable

*[பாய்மரம் + கயிறு]*

**பாய்மரக்கூம்பு** pāy-mara-k-kūmbu. பெ. (n.) பாய்மரத்தின் உச்சி(naut); knob or conical top of a mast

*[பாய்மரம் + கூம்பு]*

**பாய்மரம்** pāy-maram- பெ. (n.) கப்பற் பாய் தூக்கும் நடுமரம்; mast. *"பாய்மரக் கொடிபோல"* (மதுரைப் பதிற்றுப்.16)

*[பாய் + மரம் ]*

*'பாய்மரமில்லாத கப்பலைப்போல'* (பழ)

*'பாய்மரம் சேர்ந்த காகம் போலானேன்'* (பழ)

**பாய்மரவங்கு** pāy-mara-vangu பெ. (n.) < பாய்மரஞ்செருகும் குறுக்குக் கட்டைத் துளை; (naut) orifice in the rib of a doney through which the mast passes.

*[பாய்மரம் + வங்கு]*

**பாய்மரவிருட்சம்** pāy-mara-varitcam பெ. (n.) *நெட்டிலிங்கம்* பார்க்க, indian mast tree (வின்) see *neṭṭilingam.*

*[பாய்மரம் + skt.vṟksa> த. விருட்சம்]*

**பாய்மா** pāy-mā பெ. (n.) 1. குதிரை; horse *"படைக்குட்டம் பாய்மா வுடையானுடைக்கிற்கும்"* (நான்மணி.18) 2. புலி; tiger (பிங்)

*[பாய் + மா]*

**பாய்மாலி** pāy-mali, பெ.(n.) வெள்ளச் சேதம்(வின்); destruction of land by flood.

**பாயமாலி** pāyamāli, பெ.(n.) அழிவு(P.T.L.); destruction ravage, ruin.

*[பாய்மாலி → பாயமாலி]*

**பாய்மாறு–தல்** pāy-māṟu, 5. செ.கு.வி.(v.i.) செலுத்து நெறிக்கேற்பக் கப்பற்பாயை மாற வைத்தல்; (naut). to shift sail, tack a ship.

*[பாய் + மாறு–,]*

**பாய்மிதி–த்தல்** pāy-midi, 4. செ.கு.வி. (v.i.) உடலுறவு; sexual intercourse.

*[பாய் + மிதி–,]*

**பாய்வரு–தல்** pāy-vāru-, செ.கு.வி.(v.i.) கடல்மேற் சென்ற மரக்கலம் அலைவாய் நோக்கித் திரும்புதல் (மீனவ.பொ.); to return after finishing the fishing in the sea.

**பாய்வலி–த்தல்** pāy-vali. 4. செ.கு.வி. (v.i.) 1. கப்பற்பாய் ஏற்றுதல்; (வின்.) to hoist sail. 2. கப்பற்பாய் காற்றுட்கொண்டு விரியச் செய்தல்; to spread sail.

*[பாய் + வலி–,]*

**பாய்விரி[1]–த்தல்** pāy-viri, செ.கு.வி.(v.i.) 1. கப்பற்பாய் காற்றுட்கொண்டு விரியச் செய்தல்; to spread sail. 2. வழிச்செலவு தொடங்குதல் (இ.வ.); to start or embark on a journey. 3. பரத்தமை; adultration "அவள் பத்துப் பேருக்குப் பாய் விரித்தவள்"

*[பாய் + விரி]*

**பாய்விரி[2]** pāyviri, பெ. (n.). பசலை வகை (மலை.); purslane.

**பாயக்கட்டு** pāya-k-kaṭṭu, பெ. (n.) சிற்றூர்த் தலைமை அலுவலர்; village headman. "பாயக்கட்டு பலபட்டடையிற் சோலையப்பப் பிள்ளையோ" (விறலிவிடு)

*[பாயம் + கட்டு]*

**பாயசம்** payašam, பெ. (n.) பாற்சொற்றி என்னும் மூலிகை (சூடா.); a kind of herb.

**பாயசா** pāyaša, பெ.(n.) இலைக்கள்ளி; a kind of spurg, which have large leaves. (சா.அக.)

**பாயடி–த்தல்** pāyaḍi, 4. செ.கு.வி. (v.i.) பாய்மரத்தில் பாயை மேலேற்றுதல் (முகவை.மீனவ.); to hoist sail in the mast.

*[பாய் + அடி –,]*

**பாயதானம்** pāyatāṉam, பெ. (n.) பாற்சோறு rice boiled in milk. *"பொற்புறு பாய தானம் புளிப்புறு ததியின் போனம்"* (சிவதரு.பரம.37).

**பாயம்** pāyam. பெ. (n.) 1. புணர்ச்சி விருப்பம்; sexual desire. *"ஈர்ஞ்சேறு ஆடிய இரும்பல் கட்டிப் பன்மயிர்ப் பிணவொடு பாயம் போகாது"* (பெரும்பாண்.342) 2. மனத்துக்கு

விருப்பமானது; that which is pleasing to the mind. *"பளிங்கு சொரிவு அன்ன பாய்சுனை குடைவுழி நளிபடு சிலம்பிற் பாயம் பாடி"* (குறிஞ்சிப்.58)

*[பய் → பாய் → பாய் + அம்]*

ஒ. நோ. பாயம் = பாசம்
தேயம் = தேசம்
நேயம் = நேசம்

**பாயல்[1]** pāyal. பெ. (n.) **1.** மக்கட் படுக்கை (பிங்.); bedding. **2.** உறக்கம்; sleep. *"அரிதுபெறு பாயற் சிறுமகி ழானும்"* (பதிற்றுப். 19,12).

*"பயினறுங் கதுப்பிற் பாயலு முள்ளார்"* (குறுந். 254–5)

*"பழன ஊரன் பாயல்இன் துணையே"* (ஐங்.96–4)

*"பண்பும் பாயலும் கொண்டனள் நொண்டி"* (ஐங்.176–1)

*"பரந்துபடு பாய னவ்வி பட்டென"* (அகம்.39–16)

*"கண்படு பாயல் கையொடுங்கு அசைநிலை"* (அகம்.187–20)

*"பாயற் பள்ளியும் பருவத் தொழுக்கமும்"* (மணிமே.2–24)

*[பாய் → பாயல்]*

**பாயல்[2]** pāyal. பெ. (n.) பாதி (பிங்.); half.

தெ. பாய.

*[பா[2] → பாயல்]*

**பாயிரம்[1]** pāyiram, பெ. (n.) **1.** முகவுரை (நன்.1); preface, introduction, preamble, prologue. *"செறுமனத்தார் பாயிரங் கூறி"* (பழமொ.165) **2.** பொருளடக்கம்; synopsis, epitome *"அருந்தமிழ்க்குப் பாயிரம்"* (சடகோபரந்.9) (வின்) **3.** வரலாறு; origin, history.

**பாயிரப் பெயர்கள் :** பாயிரம் என்பது முகவுரை. அது ஒரு நூற்கு இன்றியமையாத தென்பது. *"எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரம் உரைத்து உரைக்க"* என்பது இலக்கணம். என்னை?

*"ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே"* (நன்.54)

என்றாராதலின். *"பாயிரமென்றது புறவுரையை, நூல் கேட்கின்றான் புறவுரை கேட்கின் கொழுச் சென்ற வழித் துன்னூசி இனிது செல்லுமாறு போல அந்நூல் இனிது விளங்குதலிற் புறவுரை கேட்டல் வேண்டும். என்னை?"*

*"பருவப் பொருட்டாகிய பாயிரங் கேட்டார்க்கு நுண்பொருட்டாகிய நூல் இனிது விளங்கும்"*

என்றாராகலின். *"அப்பாயிரந்தான் தலையமைந்த யானைக்கு வினையமைந்த பாகன் போலவும், அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்க மாகிய திங்களும் ஞாயிறும் போலவும், நூற்கு இன்றியமையாச் சிறப்பிற்றா யிருத்தலின்; அது கேளாக்காற் குன்று முட்டிய குரீஇப் போலவும் குறிச்சி புக்க மான் போலவும். மாணாக்கன் இடர்ப்படும் என்க"* என்னும் நச்சினார்க் கினியர் உரையான் உணரப்படும். பவணந்தியார்,

*"மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்
ஆடமைத்தோள் நல்லார்க் கணியும்போல்–நாடிமுன்
ஐதுரையா நின்ற வணிந்துரையை எந்நூற்கும்
பெய்துரையா வைத்தார் பெரிது."* (நன்.55)

எனச் சில உவமை வாயிலாகவும் பாயிரத்தின் தேவையை வற்புறுத்தினார்.

அப்பாயிரம், பொதுவும் சிறப்பும் என இருவகைத்து என்றார் நச்சினார்க்கினியர். அதையே,

*"பாயிரம் பொது சிறப்பெனவிரு பாற்றே"* (நன்.2)

என நூற்பா யாத்தார் பவணந்தியார். அவற்றுட் பொதுப்பாயிரம் எல்லா நூன்முகத்தும் உரைக்கப்படும். அதுதான் நான்கு வகைத்து.

*"ஈவோன் தன்மை ஈத லியற்கை*
*கொள்வோன் தன்மை கோடன் மரபென*
*ஈரிரண் டென்ப பொதுவின் தொகையே."*

என்னும் இதனான் அறிக என்பது நச்சினார்க்கினியம்.

நன்னூலார் இவற்றோடு நூலையுங் காட்டி

*"நூலே, நுவல்வோன், நுவலுந் திறனே,*
*கொள்வோன் கோடற் கூற்றாம் ஐந்தும்*
*எல்லா நூற்கும் இவைபொதுப் பாயிரம்"*
(நன்.3)

என நூற்பா இயற்றினார். இதனால், கற்பிக்கப்படும் நூல், கற்பிக்கும் ஆசிரியன், கற்பிக்கும் முறை, கற்கும் மாணவன், கற்கும் முறை ஆகிய ஐந்தின் இயல்பையும் விளக்குவது பொதுப்பாயிரம் என்றாயிற்று. இதன் ஐங்கூறும் எல்லா நூற்கும் பொதுவா யிருத்தலின் இனிச் சிறப்புப் பாயிரமாவது தன்னால் உரைக்கப்படும் நூற்கு இன்றிய மையாதது. அது பதினொரு வகையாம்.

*"ஆக்கியோன் பெயரே, வழியே எல்லை*
*நூற்பெயர், யாப்பே, நுதலிய பொருளே*
*கேட்போர், பயனோ டாயெண் பொருளும்*
*வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே"* (நன்.47)

*"காலம், களனே, காரணம் என்றிம்*
*மூவகை யேற்றி மொழிநரும் உளரே."* (நன்.48)

இப் பதினொன்றும் இப்பாயிரத்துள்ளே (பனம் பாரனார் தொல்காப்பியத்திற்குக் கூறிய சிறப்புப் பாயிரத்துள்ளே) பெறப்பட்டன. நூல் செய்தான் (சிறப்புப்) பாயிரஞ் செய்தானாயின் தன்னைப் புகழ்ந்தானாம்.

*"தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்*
*தான்தற் புகழ்தல் தகுதி யன்றே'* (நன்.52)

என்பவாகலின் (சிறப்புப்) பாயிரஞ் செய்வார் தன் ஆசிரியரும் தன்னொடு ஒருங்கு கற்ற ஒரு சாலை மாணாக்கரும் தன் மாணாக்கரும் என இவர் என்பது, தொல்காப்பியச் சிறப்புப் பாயிர நச்சினார்க்கினியர் உரைப்பகுதி சிறப்புப் பாயிரம் என்பது, ஒரே நூற்குச் சிறப்பாயிருந்தது. அதன் ஆசிரியன் பெயர், அந்நூல் வந்தவழி, அது வழங்கும் எல்லை, அந் நூற்பெயர் முதலிய பதினொரு குறிப்பையும் ஒருங்கேயேனும் ஒன்றிரண்டு குன்ற வேனுங் கூறி, அந்நூலைச் சிறப்பிப்பது. (foreword, opinion, editor's preface etc). மதிப்புரை யெல்லாம் சிறப்புப் பாயிரமே.

ஒரு நூலாசிரியன் தானே தன் நூலைப் புகழ்தல் தக்கதன் றாதலின், சிறப்புப் பாயிரஞ் செய்வார் பிறராயிருத்தல் வேண்டுமென்பது தொன்று தொட்ட மரபு. அதனைச் செய்யத் தக்கார் மூவரென்று குறிப்பிட்டார் நச்சினார்க்கினியர். அவரொடு உரையாசிரியனையுஞ் சேர்த்து.

*"தன்னா சிரியன் தன்னொடு கற்றோன்*
*தன்மா ணாக்கன், தகுமுரை காரனென்*
*றின்னோர் பாயிரம் இயம்புதல் கடனே"*
(நன்.51)

என்றார் பவணந்தியார். ஆயினும் கடவுள் வணக்கம், அவையடக்கம், நூற்பொருள், நூல் வந்தவழி, நூற்பெயர் முதலியன நூலாசிரியன் கூறுவதே பொருத்த மாதலானும், அவை எவ்வகையினும் தற்புகழ்ச்சிக்கு இடந்தராமை யானும், அவற்றை நூலாசிரியன் கூறுவது தக்கதென்று கொள்ளப்பட்டுத் தற்சிறப்புப் பாயிரம் எனப் பெயர்பெறும்.

*"வணக்கம் அதிகாரம் என்றிரண்டுஞ் சொல்லச்*
*சிறப்பென்னும் பாயிர மாம்"*
*"தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும்*
*எய்த வுரைப்பது தற்சிறப் பாகும்."*

என்பது காரிகையுரை மேற்கோள். சேக்கிழார் தம் திருத்தொண்டர் புராணத்திற்குச் செய்த பாயிரமும், கம்பர் தம் இராமாவதாரத்திற்குச் செய்த பாயிரமும், தற்சிறப்புப் பாயிரத்திற் கெடுத்துக்காட்டாம். இளங்கோவடிகள் மங்கல வாழ்த்துப் பாடலும் அது. மேற்கூறிய

இருவகைப் பாயிரத்திற்கும் பொதுவாகவும் சிறப்பாகவும் பல பெயர்கள் உள. அவை.

*"முகவுரை பதிகம் அணிந்துரை நூன்முகம்*
*புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்"*
(நன்னூல்.1)

என்னும் எட்டாம். இவற்றின் பொருள் விளக்கம் வருமாறு;

**1. முகவுரை :** இது நூல் முகத்து உரைக்கப் படுவது. இவற்றை வழக்கில் உரைநடையா யிருப்பது, பெரும்பாலும் நூல், ஆசிரியன், பதிப்பு முதலியவற்றின் வரலாற்றைக் கூறுவது.

**2. பதிகம் :** இது நூலாசிரியன் பெயர். நூல் வந்த வழி முதலிய பத்து அல்லது பதினொரு குறிப்புகளைத் தருவது. ஒரு பொருள் பற்றிய பத்து அல்லது பதினோரு பா அல்லது பாவினத் தொகுதி பதிகம் என்று பெயர் பெற்றிருத்தல் காண்க. எடுத்துக்காட்டு : தேவாரப் பதிகம். பதிகம் என்னும் பெயருக்கு ஐந்து பொதுவும் பதினொரு சிறப்புமாகிய பலவகைப் பொருள்களையும் தொகுத்துச் சொல்வது என்று பொருள் கூறி,

அடிக்குறிப்பாக,

*"பதிகக் கிளவி பலவகைப் பொருளைத்*
*தொகுதியாகச் சொல்லுதல் தானே"*

என மேற்கோளுங் காட்டினர் நன்னூலுரை யாசிரியர் சடகோப இராமானுசாச்சாரியர். ஐம்பொருள் பொதுப்பாயிரத்திற்கும், பதினொரு பொருள் சிறப்புப் பாயிரத்திற்கும் உரியன. பதிகம் என்னும் பெயர் பத்து (பது) என்னும் சொல்லினின்று தோன்றியிருத்தலின், '*ஆக்கியோன் பெயரே*' என்னும் நூற்பாவிற் குறிக்கப்பட்ட எண் பொருளும். '*காலங் களனே*' என்னும் நூற்பாவிற் குறிக்கப்பட்ட முப் பொருளும் ஆகிய பதினொரு பொருளைத் தருவதென்று உரையுரைப்பதே பொருத்த மானதாம். ஒன்று பத்தை நோக்கச் சிறிதாதலின் பதினொன்றும் பத்தாகவே கொள்ளப்பெறும் (ஆங்கிலத்தில் பதின்மூன்று – baker's dozen எனப்படுதல் போல) இங்ஙனம் பதிகம் என்னும் சொல் சொல்லாலும் பொருளாலும் தூய தமிழாயிருக்கவும், அது ப்ரதீக என்னும் வடசொல்லின் திரிபாக வட மொழியாளர் கூறுவதும். அதைச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகராதி பின் பற்றியிருப்பதும். குறும்புத்தனமும் பொறுப்பற்ற செயலுமாகும். உண்மையில். பதிகம் என்னும் தென் சொல்லே ப்ரதீக என்னும் வடசொல்லாகத் திரிந்துள்ளது. பதின் செய்யுட் பகுதியை குறிக்கும் பதிகம் என்னும் தென் சொல்லைப் பத்யம் (செய்யுள்) என்னும் வடசொல்லோடிணைக்க விரும்புவா. வேறு; என்தான் சொல்லார். சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் உள்ள சிறப்புப் பாயிரங்கள் பதிகம் எனப் பெயர் பெற்றுள்ளன.

**3. அணிந்துரை :** இது மறைமலையடிகள் மதிப்புரையும் முன்னுரையும் போல் ஒரு நூலுக்கு அணி (அழகு) செய்து நிற்பது.

**4. நூன்முகம் :** இது நூலுக்கு முகம் போல்வது. செய்யுள் ஆகிய இரு வடிவிற்கும் பொதுவானது.

**5. புறவுரை :** இது நூலுக்குப் புறமாக உரைக்கப்படுவது. புறம் = பின்பு. இறுதி. தொல்காப்பிய இறுதியில் உரைக்கப்பட்டுள்ள நூலுரை மரபு புறவுரையாகும். சிலர் நூலுரை மரபு செய்யுளியலிலேயே கூறப்பட்டு விட்டதனால் (1421 – 1430) மரபியலில் உள்ளது பிற்செருகல் என்பர் (1590–1610) அகத் திணையியலிற் கூறிய உவமை யிலக்கணச் சுருக்கத்தையே (992–995). பின்னர் உவமவியலில் தொல்காப்பியர் விரித்துரைப்ப தால் (1222–1258) மரபியலின் இறுதியில் விரித்துரைக்கப் பெறும் நூலுரை மரபு பிற்செருகலெனக் கொள்ளப்படா தென்க. (புறவுரை என்பது, மேலை நாடக நூற்களிற் கூறப்படும் epilogue என்பதை ஒருபுடை யொத்ததாகும்).

பதிற்றுப்பத்தின் உரைபெறு கட்டுரைகள் இட வகையால் புறவுரையாக அமைந்துள்ளன.

**6. தந்துரை :** இது நூலிற் சொல்லப்படாத பொருளைத் தந்துரைப்பது. பேறறிஞர் முன்னுரை (introduction). பெரும்பாலும் தந்துரையாக விருக்கும்.

7. புனைந்துரை : இது நூலின் சிறந்த கூறுகளை எடுத்துரைத்துப் போற்றுவது, திருக்குறட் சிறப்பைப் போப்பையர் முன்னுரை (introduction) எடுத்துக் காட்டுவது போல. புனைதல் = சிறப்பித்தல், புகழ்தல்.

8. பாயிரம் : இது முதன் முதல், பொரு களத்துப் போர் முகவுரையாகப் பகைவரை விளித்துத் தம் வலிமைச் சிறப்பைக் கூறும் நெடுமொழியைக் குறித்தது; பின்பு நூன் முகவுரைக்கும் வழங்கத் தலைப்பட்டது. நெடுமொழி, போர் மறவனின் தன் மேம்பாட்டுரை. பாயிரம் என்பது முதற்கண் நெடுமொழியைக் குறித்தமையை.

*"மறு மனத்தா னல்லாத மாநலத்த வேந்தன்*
*உறு மனத்தானாகி யொழுகின் – செறுமனத்தார்*
*பாயிரங் கூறிப் படைதொக்கால் என் செய்ப*
*ஆயிரங் காக்கைக் கோர்கல்."*

என்னும் பழமொழிச் செய்யுளான் உணர்க. பாயிரம் என்பதற்கு வீரத்துக்கு வேண்டும் முகவுரைகள், என்று பழையவுரை உரைத்தலையும் நோக்குக.

பயிர்தல்–அழைத்தல், போருக்கழைத்தல், பயிர்–(பயிரம்)–பாயிரம். சென்னைப் பல்கலைக் கழக அகராதி, பாசுரம் என்பது பாயிரம் என்ற திரிந்திருக்கலாம் என்று தன் அறியாமையைக் காட்டுகின்றது. இற்றை நூல் வழக்கை நோக்கின் பாயிரப் பெயர்களுள் புறவுரை, பாயிரம் என்னும் இரண்டும் பொதுவும் சிறப்புமாகிய இருவகைப் பாயிரத்திற்கும் பொதுவாம்: ஏனைய, சிறப்புப் பாயிரத்திற்கே சிறப்பாம். சிறப்புப் பாயிரத்திற் குரியவற்றுள் முகவுரை. நூன்முகம், பாயிரம் என்னும் மூன்றும் தற்சிறப்புப் பாயிரத்திற்குச் சிறப்பென்று கொள்ள இடமுண்டு. தருட் பெரும்பாலார் பகுத்தறி விழந்திருப்பது நோக்கி வடவரும் (அவர்அடிவருடியரும் அடியார்க் கடியாருமான) வையாபுரிகளும் தூய தென் சொற்களை வடசொல்லெனத் துணிந்து மருட்டுவது பற்றி, அவை அன்னவென்று மயங்கற்க.

மேற்காட்டியவாறு, முகவுரையைக் குறிக்கப் பல தூய தென் சொற்களிருப்பதும் இடைக்காலப் புலவர், சிறப்பாக, யாழ்ப்பாணத்தார், உபக்கிரக மணிகை, உபோத்காதம் என்னும் வடசொற்களை வேண்டாது வழங்கிச் சிறுமையிற் பெருமை கொண்டனர். இத்தகைய வடசொல்லாட்சி தமிழரின் மடமையாலும் அடிமைத்தனத்தாலும் நேர்ந்ததேயன்றி, தலைமைசால் தமிழ்ப்புலவர் தாமாக விரும்பித் தழுவி யன்று. ஆதலால், தமிழின் தூய்மையைக் குலைத்ததுமன்றி அதன் தொண்டையையும் நெரித்துக் கொல்லப் பார்க்கும் ஐந்தாம்படைச் சொற்களையெல்லாம், அறவே அகற்றிவிடுவது தமிழன் முதற் கடமையாம்.

தமிழன் விடுதலை, தமிழின் விடுதலையை அடிப்படையாகக் கொண்டது. தமிழுயரத் தமிழன் உயர்வான். – பாவாணர். தமி ழியற்கட்டுரைகள்

**பாயிரம்[2]** pāyiram, பெ.(n.) புறம்பானது; that which is outside. '*உள்ளமும் பாயிரமும் மொக்குமேல்*' (நீலகேசி, 261.)

**பாயிரம் செய்வார்** pāyiram-šeyvār, பெ. (n.) முகவுரை எழுதுபவர் one who make preface, preamble.

*[பாயிரம் + செய்வார்]*

(தன்னாசிரியனும், தன்னொடு ஒருங்கு கற்ற மாணாக்கனும், தன் மாணாக்கனுமென மூவகையர். (இளம்.தொல்.எழுத்து. பாயி.) தன்னாசிரியருந் தன்னோடொருங்குகற்ற ஒரு சாலை மாணாக்கருமாவர். (நச்.தொல். எழுத்து.பாயி.)

**பாயிருக்கை** pāyirukkai, பெ. (n.) பரந்தவிருப்பு; extream desire "*இருந்துபுறஞ் சுற்றிய பெரும்பாயிருக்கையும்*" (சிலப்.இந்திரவி.54.)

**பாயிரும் பனிக்கடல்** pāyiram panikkadal, பெ. (n.) பரந்து விரிந்த குளிர்கடல்; ocean.

*"பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லா"* (பட்.92) *"பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு"* (பரி.5–1)

**பாயிழு–த்தல்** pāy-iḻu-, செ.கு.வி. (v.i.) *பாய்வலி–.* (வின்.) பார்க்க; see *pāy-vali-*,

*[பாய் + இழு–,]*

**பாயிறக்கு–தல்** pāy-irakku-, செ.கு.வி. (v.i.) கப்பற்பாயை மடக்குதல்; to let down sail.

*[பாய் + இறக்கு–,]*

**பாயுங்கெண்டை** pāyu-ṅ-keṇḍai, பெ. (n.) மீன் வலைவீசுங்கால் வலையினின்றுந் தாவிப் பாயுந் தன்மையுடைய ஒருவகைக் கெண்டை மீன் (மீனவ.பொ.வ.); a kind of keṇḍai fish.

*[பாயும் + கெண்டை]*

**பாயுடுக்கையர்** pāy-uḍukkaiyar, பெ. (n.) பாயை உடுத்துக் கொள்ளும் சமணத் துறவி வகையினர் (தேவா.); a class jaina ascetics of clad in mats.

*[பாய் + உடுக்கையர்]*

**பாயுடை–த்தல்** pāyuḍai, 4. செ.கு.வி (v.i.) *பாய்விரி–*, 2 பார்க்க; see *pāy-viri-*,

*[பாய் + உடை –,]*

**பாயுடையவர்** pāy-uḍaiyavar, பெ. (n.) சமணர்; Jainas *"பாயுடையவர்விட விடநாகப்படிவு கொணி சிசரன்"* (திருவிளை.நாக.8.)

*[பாய் + உடையவர்]*

**பாயெடு–த்தல்** pāy-eḍu-. 4. செ.கு.வி. (v.i.) *பாய்வலி–*,(வின்.) பார்க்க, see *pāyvali-*.

**பார்¹–த்தல்** pār-, 11. செ.குன்றாவி. (v.t.) 1. கண்ணால் நோக்குதல்; to see, look at, view, notice, observe. *"பாராக்குறழா"* (கலித்.65.) 2. ஆராய்தல்; to examine, inspect, search into, scrutinise, *"படுபயனும் பார்த்துச் செயல்"* (குறள்,676.) 3. அறிதல்; to know *'காலம்பார்த்து உள்வேர்ப்பர் ஒள்ளியவர்"* (குறள்.487.) 4. எதிர்பார்த்தல்; to look for, expect *"வருவிருந்து பார்த்திருப்பான்"* (குறள்,86.) 5. விரும்புதல்; to desire, long for. *"புதுமைப் பார்ப்பார்"*. (கம்பரா. பூக்கொய்.9.) 6. தேடுதல்; to search for, seek *"ஆட்பார்த் துழலும் அருளில் கூற்று"* (நாலடி,20.) 7. வணங்குதல்(சூடா.); to worship 8. மதித்தல்; to estimate, value. *'அவன் வயிரம் பார்ப்பதில் கெட்டிக்காரன்'* (கொ.வ.) 9. கவனித்தல்; to heed, pay attention to. 10. மேற்பார்த்தல்; to look after, take care of, manage, superintend 'பண்ணை பார்க்கிறான், 11. பார்வையிடுதல்; to perusde, look through, revise 'இந்த ஆவணத்தை பாருங்கள்' 12. மருந்து முதலியன கொடுத்தல்; to treat, administer medicine. *'யார் மருத்துவம் பார்த்துக் கொண்டிருக்கிறார்'?* 13. மந்திரித்தல்; to charm a way by incantations exorcise. 'இந்த நஞ்சுக்கடிக்கு மாந்திரிகன் பார்க்கவேணும்' 14. கருதுதல்; to intend, design, attempt, purpose, aim at. 15. கடைக்கணித்தல்; to look at with compassion "பார்த்தொருகாலென்கவலை தீராயோ" (தாயு.பராபர.663.)

*'பார்த்த கண்ணும் பூத்துப் பகலும் இரவாச்சு'* (பழ.)

*'பார்த்த முகம் எல்லாம் வேற்று முகம்'* (பழ.)

*'பாராத உடைமை பாழ்'* (பழ.)

*'பார்க்கிற கண்ணுக்குக் கேட்கிற செவி பொல்லாது'* (பழ.)

க. பாரு

ம. பார்க்க

*[பா→ பார்]*

**பார்²** pār, பெ. (n.) **1.** பரப்பு; expanse தேர்ப்பார். (சூடா.) **2.** தேர்ப்பரப்பு. (பிங்.) central platform of a chariot. **3.** வண்டியினடிப்பாகத்துள்ள நெடுஞ்சட்டம்; long bar of the body of a cart. *"கால்பார் கோத்து"* (புறநா.185.) **4.** உலகம் earth *"பார்தோன்ற நின்ற பகையை'* (சீவக.1931.) **5.** நிலம் என்னும் பூதம். earth, as an element. *"பாரிடை யைந்தாய்ப் பரந்தாய்"* (திருவாச.4,137.) **6.** நாடு; land, country *"தஞ்சென வொதுங்கினோர் தனது பாருளோர்"* (கம்பரா. பள்ளி.108.) **7.** வன்னிலம்; hard ground. "பாருடைத்த குண்டகழி" (புறநா.14.) **8.** பாறை; rock. rocky stratum, shelf of rock. "பார்முதிர் பனிக்கடல்" (திருமுரு.45.) **9.** வரம்பு; (வின்.) bank, border, ridge. **10.** முத்து விளையுந்திட்டு. (இ.வ.) pearl bank. **11.** பாத்தி பல கொண்ட பகுதி; group of parterrers *'இந்தப் பாரைச்சேர்ந்த கீரைப்பாத்தி* (இ.வ.) **12.** அடுக்கு; (வின்.) stratum, layer, bed. **13.** தடை; obstruction, obstacle *"கலை பாறச் சென்ற கேள்விக்கோ"* (சீவ.30.) **14.** உருள் (உரோகிணி) பார்க்க, (திவா.); see urōkiṉi the fourth naksatra.

**'பார் ஆளலாம் என்று பால் குடிக்காதே'** (பழ.)

*[பா → பார்]*

**பார்³** pār, பெ. (n.) பருமை (சீவக.224.) bulk,size

*[பல் → பர் → பார்]*

**பார்⁴** pār, பெ. (n.) **1.** மறையோன்; brahman **2.** புத்தன்; buddha

தெ. பாருடு

*[பா → பார்]*

**பார்அணை-த்தல்** pār-anai-, **4.** செ.கு.வி(v.i.) மேட்டை அணைத்தல்; to support the ridge

*[பார் + அணை-,]*

**பார்க்க** pārkka. (இடை.) part. உறழ்ச்சிப் பொருளில் வரும் சொல்; a partciple of comparison meaning 'than' *" அவைகளிலும் பார்க்கப் பிரீதி மிகும்படி'* (கோயிற்பு. திருவிழா.22,உரை)

*" பார்க்கப் பதினாயிரம் கண் வேண்டும்"* (பழ)

*[பார்→ பார்க்க]*

**பார்க்கட்டு-தல்** pār-k-kaṭṭu, **5.** செ.கு.வி (v.i) புன்செய்க்கு வரம்புவிடுதல்; **(வின்.)** to put up ridges enclosing fields for dry cultivation

*[பார் + கட்டு-,]*

**பார்க்கடம்** pārkkaḍam, பெ. (n.) சாம்பல்; ashes.

**பார்க்கவி** pārkkavi, பெ. (n.) *சிறுதேக்கு* பார்க்க, **2.** (மலை) *beetle-killer.*

**பார்க்கி** pārkki, பெ. (n.) குவளை மலர்; pipe flower (சா.அக.)

**பார்க்கிலும்** *pārkkilum*, இடை (part.) பார்க்க, *பார்க்க.* (கொ.வ.) see *pārkka*

*[பார் → பார்க்கிலும்]*

**பார்க்குச்சு** pār-k-kuccu, பெ. (n.) படை வீரர்கள் குடியிருக்கக் கட்டிய சிறுவீடு; barracks, a line of houses built for soldiers.

*[பார் + குச்சு]*

**பார்க்குருமாடு** pārkkuru-mādu, (G.Tp.P. 20) பெ. (n.) உழவுக்குப் பயன்படும் மாட்டுவகை; Bargur cattle, used for ploughing.

*[பருகூர் + மாடு → பார்க்குருமாடு]*

**பார்க்கொடி** pār-k-koḍi, பெ. (n.) நன்னாரி; indian sarsaparilla. (சா.அக.)

**பார்க்கோல்** pār-k-kōl, பெ. (n.) கட்டியத்தடி (T.A.S.ii,67.) staff of honour.

*[பார் + கோல்]*

**பார்ச்சிகை** pārccigai, பெ. (n.) 1. மருந்து; medicine 2. மயிர்ச்சிகைப்பூடு; peacock's crest. (சா.அக.)

**பார்சவம்**[1] pārcavam, பெ. (n.) பார்க்க, பார்சுவம், 2,4. (யாழ்.அக.)

**பார்சவம்**[2] pārcavam, பெ. (n.) பரிசு. (யாழ்.அக.); reward.

**பார்சானு** pāršāṉu, பெ. (n.) கள்ளி; spurge

**பார்சிக்கஞ்சாங்கோரை** pārši-k-kañ-jāṅ-kōrai, பெ. (n.) செடிவகை. persian tulsi,

*[பார்சி + கஞ்சாங்கோரை]*

**பார்சுவம்** parcuvam, பெ. (n.) 1. விலாப்பக்கம், (யாழ்.அக.) side of the body. 2. பக்கம்; side. 3. உதவி; support. 4. வட்டம்; circle.

**பார்த்த** pārttu, பெ. எ. (adj.) ஒரு திசையை நோக்கிய; facing (a direction) '*கிழக்கு பார்த்த வீடு*'.

*[பார் → பார்த்த]*

**பார்த்தவிருட்சம்** pārttaviruṭcam, பெ. (n.) கருமருது; black marutu.

*[பார்த்த* + skt. vriksha> *த. விருட்சம்]*

**பார்த்தன்** pārttaṉ, பெ. (n.) கந்தகச் செய்ந்நஞ்சு; a kind of native arsenic. (சா.அக.)

**பார்த்திவம்** parttivam, பெ. (n.) 1. உலகத் தொடர்பானது; that which pertains to the earth. 2. நிலங்களிலிருந்து பெறும் ஊதியம், (சுக்கிர நீதி,97.); income derived from lands. 3. உலகம் (சூடா.); clay.

*[பார் → பார்த்திவம்]*

**பார்த்திவலிங்கம்** parttiva-linkam, பெ. (n.) ஈரமண்ணாலான சிவலிங்கம் (சங்.அக); siva-linkam made of wet clay.

*[பார் → பார்த்தவம் + இலங்கம் → இலிங்கம்]*

**பார்த்திவன்** parttivan, பெ. (n.) அரசன்; king. *"பாண்டவ னென்றொரு பார்த்திவன்"* (உபதேசகா,சிவத்துரோ 123.)

*[பார் → பார்த்திவன்]*

**பார்த்துக்கொள்-ளுதல்** *pārttu-k-kol-*, 16. செ.கு.வி.(v.i.) பொறுப்போடு கவனித்துக் கொள்ளுதல்; look after (s.o.or.sth.); take care of. *"நீ வீட்டில் இல்லாதபோது குழந்தையை, யார் பார்த்துக்கொள்கிறார்கள்?" "வீட்டைப் பார்த்துக் கொள்ளும் படி கூறிவிட்டு ஊருக்குப் போய்விட்டார்"*

*[பார்த்து + கொள்ளு –,]*

**பார்த்துவிடு–தல்** *pārttu-vitu-*, 20. செ.கு.வி. (v.i.) தனக்கு விடப்பட்ட அறைகூவலாக நினைத்து மோசமான நிலையை மாற்றும் முறையில் முடிவுகட்டுதல்; (an expression of challenge or defiance) do sth. (to vindicate one's stand) "அவன் என்னை மதிப்பதே இல்லை அவனை உண்டு இல்லை என்று பார்த்து விடுகிறேன்" *"என் பரிந்துரை இல்லாமல் உனக்கு வேலை கிடைத்துவிடுமா, அதையும் பார்த்துவிடுகிறேன்"*

*[பார்த்து + விடு–,]*

**பார்தாங்கி** *pārtāngi*, பெ. (n.) மரச்சக்கை; sappan wood.

*[பார் → தாங்கி]*

**பார்தீர்–தல்** *pār-tir-*, 5. செ.குன்றாவி. (n.) படையை ஒரே வரிசையாக அணிவகுத்தல்; (வின்.) to draw out in a line, as troops.

**பார்ப்படை** *pārppaḍai*, பெ. (n.) விச்சுளி என்னும் சிறு பறவை; a small bird moving swiftly. (சா.அக.)

**பார்ப்பதி**[1] *pārppati*. பெ. (n.) பெருநெருஞ்சில்; crow thorn. (சா.அக.)

**பார்ப்பனக்கோலம்** *pārppaṉakkōlam*, பெ. (n.) பார்ப்பனன் போன்ற கோலம் புனைதல்; external appearance as if brahmin. *"பால்புரை வெள்ளெயிற்றுப் பார்ப்பனக் கோலத்து"* (சிலப்.21–48)

*[பார்ப்பன + கோலம்]*

**பார்ப்பனச்சேரி** *pārppaṉa-c-cēri*, பெ. (n.) பார்ப்பனர் குடியிருக்குமிடம். (நன்.377, மயிலை.); quarters where brahmins live.

*[பார்ப்பனர் + சேரி]*

**பார்ப்பனத்தி** *pārppaṉatti*, பெ. (n.) பார்ப்பனி brahmin lady.

*[பார்ப்பனன் → பார்ப்பனத்தி]*

க. ஹாருவகிதி.

**பார்ப்பனமகளிர்** *pārppaṉa makalir*, பெ. (n.) brahmin ladies *"பார்ப்பன மகளிர் சாரற்புறத்து அணிய"* (நற்.321–4)

*[பார்ப்பன(ர்) + மகளிர்]*

**பார்ப்பனமகன்** *pārppaṉa magaṉ*, பெ. (n.) பார்ப்பனன்; brahmin

*"பார்ப்பன மகனே பார்ப்பன மகனே"* (குறுந்.156–1(2)

*[பார்ப்பனன் + மகன்]*

**பார்ப்பனமாக்கள்** *pārppaṉa makkaḷ*, பெ. (n.) பார்ப்பனமக்கள் brahmin persons

*"ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்"* (புறம்.91)

*[பார்ப்பன + மாக்கள்]*

**பார்ப்பனமுதுமகன்** *pārppaṉa mutumagaṉ*, பெ. (n.) மூத்தபார்ப்பனன்; age old brahmin "*பார்ப்பன முதுமகன் படிம வுண்டியன்*" (மணிமே.5–33.)

*[பார்ப்பன(ன்) + முதுமகன்]*

**பார்ப்பனமுல்லை** *pārppaṉa-mullai*, பெ. (n.) பகைத்த மன்னரிருவருடைய மாறுபாட்டை நீக்க முயலும் பார்ப்பானது நடுவுநிலை கூறும் புறத்துறை (பு.வெ.8,18.); (purap.) theme describing the mediation of a brahmin who tries to bring about peace between two contending kings.

*[பார்ப்பன(ர்) + முல்லை]*

**பார்ப்பனவாகை** *pārppaṉa-vāgai*, பெ. (n.) வேதம் வல்ல அந்தணன் வேள்வி வேட்டலாற் பெறும் பெருமையைக் கூறும் புறத்துறை (பு.வெ.8,9.); theme describing the greatness of a learned brahmin. attained through the performance of sacrifices. "*பார்ப்பன வாகை சூடி ஏற்புற*" (சிலப்–23–72)

*[பார்ப்பன(ர்) + வாகை]*

**பார்ப்பனன்** *pārppaṉaṉ*, பெ. (n.) *பாார்ப்பான்,1.* see *pārppāṉ 1* பார்க்க, "*ஆனியற் பார்ப்பன மாக்களும்*" (புறநா.9.)

*[பார் → பார்ப்பனன்]*

**பார்ப்பனி** *pārppaṉi*, பெ. (n.) பார்ப்பனப் பெண்; brahmin woman '*பார்ப்பனி மருதியை*' (மணிமே.22,41.) "*பாசண்டன்யான் பார்ப்பனி தன்மேல்*" (சிலப்.30–69)"*பார்ப்பனி தன்னொடு பண்டைத் தாய்பாற் காப்பியத் தொல்குடிக் கவின்பெற வளர்ந்து*" (சிலப்.30–82)

பார்ப்பனன் (ஆ.பா.) பார்ப்பனி (பெ,பா.)

*[பார்ப்பனன் → பார்ப்பனி]*

இ–பெண்பாற்பெயரீறு

**பார்ப்பாத்தி** *pārppātti*, பெ. (n.) *பார்ப்பனி* பார்க்க, (வின்.) see *pārppaṉi*

*[பார்ப்பான் → பார்ப்பாத்தி]*

**பார்ப்பார்** *pārppar*, பெ. (n.) அந்தணர்; brahmins.

"*பகைவர்புல் ஆர்க பார்ப்பார் ஓதுக*" (ஐங்.4–2)

"*பார்ப்பார் நோவன செய்யலர் மற்றிது*" (புறம்–43–14)

"*எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார் தீத்தேவர்*" (ஆ.கோவை.5–1)

"*ஐம்பூதம் பார்ப்பார் பசுத்திங்கள் ஞாயிறு*" (ஆ.கோவை.15–1)

"*பார்ப்பா ரறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்*" (சிலப்.21–53)

*[பார் → பார்ப்பார்]*

*பார்ப்பார், ஐயர், அந்தணர் என்னும் பெயர்கள்*

தமிழ்நாட்டிற் பார்ப்பனருக்குப் பார்ப்பார், ஐயர், அந்தணர் என மூன்று பெயர்கள் வழங்கி வருகின்றன. இவற்றை ஆராய வேண்டும்.

**பார்ப்பார்**

பார்ப்பார், அல்லது பார்ப்பனர் என்னும் பெயருக்கு மறை நூல்களைப் பார்ப்பவர் என்பது பொருள். ஆரியர் வருமுன்பே, தமிழருக்கு மறைநூல்கள் இருந்தன. அது பின்னர்க் கூறப்படும். தமிழ் மறைநூல்களைப் பார்ப்பதும், வழிபாடு, திருமணம் முதலியவற்றை நடத்துவதுமே தொழிலாகக் கொண்டு, பார்ப்பனர் என்னும் பெயருடன் ஒரு குலத்தார் முன்னமேயிருந்து, பின்பு ஆரியப் பிராமணர் வந்தபின் தம் தொழிலை யிழந்து விட்டனர். ஆரியப் பிராமணர் தமிழப் பார்ப்பாரின்

தொழிலைமேற்கொண்டபின், தாமும்அவர் பெயராலேயே அழைக்கப்பட்டு வருதல் இயல்பானதே. அல்லாவிடின், வடமொழிப் பற்றுள்ள பிராமணருக்குப் பார்ப்பார் என்னும் தனித்தமிழ்ப் பெயர் வழங்கிவரக் காரணமில்லை.

தமிழ்நாட்டில் இப்போதுள்ள சக்கிலியர் தெலுங்கராதலின், விசயநகர ஆட்சியில், அல்லது அதற்குச் சற்றுமுன்பு தெலுங்க நாட்டினின்று தமிழ்நாட்டிற்கு வந்தவராவர். அவர் வருமுன்பு, அவர் தொழிலைச் செய்து கொண்டிருந்தவர் பறம்பர் (செம்மார்) என்னும் தமிழ வகுப்பார். இவர் பாணருள் ஒரு பிரிவார். பாணர் பறையர். பாணரும் சக்கிலியரைப் போல் மாடு தின்பவர். மாட்டுத் தோலைப் பதனிட்டு, அதனாற் செருப்பு, கூனை முதலிய பொருள்களைச் செய்வது, மாடுதின்பார்க்கே மிக இசையும். தோல் வேலை செய்பவர் கடைக்கழகக்காலத்திலே தமிழ் நாட்டிலிருந்தமை, தோலின் துன்னர் என்று சிலப்பதிகாரத்தில் கூறியிருப்பதால் அறியப்படும். பாணருக்குத் தையல் தொழிலுமுண்டு. “பாணர்க்குச் சொல்லுவதும்....தை...” என்று காளமேகப் புலவர் கூறியிருத்தல் காண்க. தையல் என்னும் பெயர் துணி, தோல் என்னும் இரு பொருள்களை மூட்டுவதற்கும் பொதுவாகும். துன்னம் என்னும் பெயரும் இங்ஙனமே. சக்கிலியர் பறம்பர் தொழிலை மேற்கொண்டபின், செம்மார் பிறதொழிலை மேற்கொண்டு பெயர் மறைந்தனர். சக்கிலியருக்குச் செம்மான் என்னும் தமிழ்ப் பெயரும் சக்கிலி என்னும் தெலுங்கப் பெயரும் இன்று வழங்கி வருகின்றன. இங்ஙனமே பார்ப்பனருக்குப் பார்ப்பார் என்னும் தமிழ்ப் பெயரும் பிராமணர் என்னும் ஆரியப் பெயரும் என்க.

ஐரோப்பாவிலிருந்து கிரேக்கரும் ரோமரும் தமிழ்நாட்டிற்குவந்து, குலமுறையாக ஒரு குறிப்பிட்ட தொழிலைச் செய்யாமையால், யவனர் என்னும் கிரேக்கப் பெயராலேயே அழைக்கப்பட்டனர்.

தமிழ்நாட்டில் இதுபோது, பார்ப்பனருக்குத் தொழிலால் நெருங்கியுள்ளவர் புலவர், பண்டாரம், குருக்கள், பூசாரி, போற்றி, உவச்சன், நம்பி என்று கூறப்படும் தமிழக் குலத்தாராவர். இவருடைய முன்னோரே, ஒருகால் தமிழப் பார்ப்பனராயிருந்திருக்கலாமோ என்று, இவர் பெயராலும் தொழிலாலும் ஐயுறக் கிடக்கின்றது.

## ஐயர், அந்தணர்

ஐயர் என்பது ஐயன் என்னும் பெயரின் பன்மை, ஐயன் என்னும் பெயருக்கு 'ஐ' என்பது பகுதி.

ஐ என்பது வியப்புப் பொருள்பற்றிய ஓர் ஒலிக்குறிப்பு இடைச்சொல். இன்னும், வியக்கத்தக்க பொருள்களைக் கண்ட விடத்து, 'ஐ' என்பது தமிழர்க்கு, சிறப்பாய்ச் சிறார்க்கு இயல்பு."ஐ வியப்பாகும்" (தொல்.உரி.89)

என்பது தொல்காப்பியம்.

ஐ + அன் = ஐயன் என்பான் வியக்கப்படத் தக்க பெரியோன். வியக்கப்படத் தக்க பொருளெல்லாம் ஏதேனும் ஒருவகையில் பெரிதாகவேயிருக்கும். ஒருவனுக்குப் பெரியோராயிருப்பவர் கடவுள், அரசன், முனிவன், ஆசிரியன், தந்தை, தாய், அண்ணன், மூத்தோன் என்னும் எண்மராவர். இத்தனை பேரையும் ஐயன் என்னும் பெயர் குறிப்பதாகும்.

தந்தை, ஆசிரியர், மூத்தோன், என்னுமி வரைக் குறிக்குந் தன்மையில், sir என்னும் ஆங்கிலச் சொல்லுடன் ஐயன் என்பதை ஒப்பிடலாம்.

ஐயன் என்னும் பெயர், இயல்பாய் நின்று பொதுவாகக் கடவுளையும், ஆர் விகுதிபெற்றுச் சாத்தனாரையும், பெண்பாலீறு பெற்றுக் காளியை அல்லது உமையையும்; நூல் வழக்கில் பெரியோன் என்னுங் கருத்துப்பற்றி அரசனையும், தெய்வத் தன்மையுள்ளவன் என்ற கருத்துப்பற்றி முனிவனையும், பின்பு அவனைப் போல அறிவு புகட்டும் ஆசிரியனையும்; உலக வழக்கில், பறையர் என்னும் குலத்தார்க்குத் தந்தையையும், தம், தன் முதலிய முன்னொட்டுச் சொற்களில் ஒன்றைப்பெற்று அண்ணனையும் விளிவடிவில் மூத்தோன், பெரியோன் என்னுமிவரையுங் குறிப்பதாகும்.

அரசன், ஆசிரியன், தாய், தந்தை, தமையன் என்னும் ஐவரும் ஐங்குரவரென நீதிநூல்களிற் குறிக்கப்படுவர். குரவர் பெரியோர். ஐயன் என்னும் பெயர் ஐங்குரவர்க்கும் பொதுவாகும்; தாயைக் குறிக்கும்போது பெண்பாற்கேற்ப ஐயை என ஈறு மாறி நிற்கும். ஆகவே, ஐயன் என்னும் பெயர் பெரியோன் என்னும் பொருளையே அடிப்படையாகக் கொண்டதாகும்.

ஆசிரியன், அல்லது குரு என்னும் பொருளில், கிறிஸ்தவப் பாதிரிமாரும் ஐயர் என்றழைக்கப்படுகின்றனர்.

பார்ப்பனருக்கு ஐயர் என்னும் பெயர் முனிவர் என்னும் கருத்துப்பற்றி வந்ததாகும். முதன் முதலாய்த் தமிழ்நாட்டிற்கு வந்த காசியபன் போன்ற ஆரியப் பிராமணர், ஒழுக்கத்தால் தமிழ் முனிவரை ஒருபுடையொத்தமை பற்றி ஐயர் எனப்பட்டனர். பின்பு அது விரிவழக்காய், கபிலர், பரணர் போன்றவர்க்கும் தில்லைவாழந்தணர் போன்ற பூசாரியர்க்கும், இறுதியில் எல்லாப் பார்ப்பனருக்குமாக வழங்கி வருகின்றது.

ஆங்கிலேயர் வருமுன் தமிழ்நாட்டிலாண்ட பல தெலுங்கச் சிற்றரசர்க்குத் துரைகள் என்று பெயர். பாஞ்சாலங்குறிச்சித் துரை என்ற வழக்கு இன்னுமுள்ளது. ஆங்கிலேயர் முதலாவது 'கீழிந்தியக் கும்பனி' (East India Company) அதிகாரிகளாய்த் தமிழ் நாட்டில் ஆட்சியை மேற்கொண்டபோது துரைகள் எனப்பட்டனர். பின்பு அப்பெயர் மேனாட்டார் எல்லார்க்கும் பொதுப் பெயராகிவிட்டது.

ஒரு கலத்தலைவனுக்குரிய சிறப்புப் பெயர், நாளடைவில் அக்குலத்தார்க்கே பொதுப் பெயராதல் இயல்பு. நாட்டாண்மையும் ஊராண்மையும் பற்றி யேற்பட்ட நாடன் (நாடான், நாடார்). அம்பலக்காரன், குடும்பன் என்னும் தலைவர் பெயர்கள் நாளடைவில் முறையே சான்றார், வலையர், பள்ளர் என்னும் குலத்தார்க்கே பொதுப்பெயர்களாகிவிட்டன. வடார்க்காட்டுப் பகுதியிலுள்ள இடையர்க்கு, அவர் முன்னோருள் ஒருவன் ஓர் அரசனிடம் அமைச்சனாயிருந்தமைபற்றி, மந்திரி என்னும் பட்டப்பெயர் வழங்கி வருகின்றது. இங்ஙனமே ஐயர் என்னும் பெயரும் பார்ப்பனருக்கு வழங்குவதாகும்.

ஐயன் என்னும் தனித் தமிழ்ப்பெயரை ஆரியன் என்னும் ஆரியப் பெயரின் சிதைவாகச் சிலர் கூறுகின்றனர். ஆரியன் என்னும் பெயருக்கு வணங்கப்படத்தக்கவன் என்று ஆரியர் பொருள் எழுதிவைத் திருப்பதினாலும், தமிழ்நாட்டிற் பிற்காலத்தில் ஆரியர்க்குத் தலைமையேற்பட்டதினாலும், ஆரியன் என்னும் பெயர் ஐயன் என்னும் பெயர்போல, பெரியோன் என்னுங் கருத்தில் ஆசிரியன், ஆசாரியன் முதலியோரைக் குறித்ததேயன்றி வேறன்று.

'ஆரியற் காக வேகி' என்று கம்பருட். இடைச்சுரத்துக் கண்டோர் கூற்றாக"யார்கொல் அளியர் தாமே யாரியர்"(குறுந்.7) என்று பெரும்பதுமனாரும், முறையே, வணங்கப்படத் தக்கவன், பெற்றோர் என்னும் பொருளில் ஆரியன் என்னும் பெயரை வழங்கியிருப்பது, வடநூற் கருத்துப்பற்றிய அருகிய நூல்வாக்கேயன்றி, ஐயன் என்னும் பெயர்போலப் பெருவாரியான தமிழ்நாட்டுக் கவழக்கன்று.

ஐயன் என்னும் பெயர் ஆரியன் என்னும் பெயரின் சிதைவாயின் இவ்வொரே பெயரைத் தந்தை பெயராகக் கொண்ட பறையர் ஆரியராதல் வேண்டும். தனித் தமிழரும் பார்ப்பார்க்கு மிகச் சேயவருமான பறையர் அங்ஙனமாகாமையின், 'ஐயன்' என்னும் சொல் 'ஆரியன்' என்னும் சொல்லின் சிதைவன்று.

'அகுங, (to plough) என்பதை ஆரியன் என்னும் பெயருக்கு வேராகக் கொள்வர் மாக்சுமுல்லர்.

அந்தணன் என்னும் பெயரும் ஐயன் என்னும்பெயர் போன்றே பார்ப்பனருக்கு அமைந்ததாகும். ஆனால், இன்னும் நூல்வழக்காகவேயுள்ளது.

அந்தணன் என்பதை அந்தம் + அணன் என்று பிரித்து, மறை முடிபு(வேதாந்தம்)களைப் பொருந்துகின்றவர் என்று பொருளுரைப்பர் வடமொழிவழியர்; அம் + தண்மை + அன் என்று பிரித்து அழகிய குளிர்ந்த அருளையுடையவர்

என்று பொருளுரைப்பர் தென்மொழியாளர். வடமொழி வழியிற் பொருள் கொள்ளினுங்கூட, அணவு என்னும் சொல் அண் என்னும் வேரிற்பிறந்த தனித்தமிழ்ச் சொல்லாதலின், அந்தணன் என்பது இருபிறப்பி (Hybrid) யாகும்.

அந்தணன் என்னும் பெயர் அந்தணாளன் (அம் + தண் + ஆளன்) என்ற வடிவிலும் வழங்கும்.

"*அந்த ணாளர்க் குரியவும் அரசர்க் கொன்றிய வரூஉம் பொருளுமா ருளவே*"
(தொல். பர.68)

"*அந்த ணாளர்க் கரசுவரை வின்றே*"
(தொல். மர.80)

என்று கூறிருப்பதால், பார்ப்பனருக்குத் தொல்காப்பியர் காலத்திலேயே தமிழ்நாட்டில் அரசவினை யிருந்ததாகச் சிலர் கூறுகின்றனர்.

அந்தணர் என்னும் பெயர், முதலாவது, தனித்தமிழ் முனிவரைக்குறித்ததென்று முன்னமே கூறப்பட்டது.

அந்தணர் என்னுஞ் சொல்லின் (அழகிய குளிர்ந்த அருளையுடையவர் என்னும் பொருளுக்கேற்ப,)

"*அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுக லான்*" (குறள்.30)

என்று அந்தணர்க் கிலக்கணங் கூறினதுமன்றி, அதைத் துறவிகளைப்பற்றிக் கூறும் 'நீத்தார் பெருமை' என்னும் அதிகாரத்திலும் வைத்தார் திருவள்ளுவர்.

"*நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி தானே மந்திர மென்ப*" (செய்.1711)

என்று தொல்காப்பியத்தில் கூறிய முனிவர் செய்தியையே,

"*நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து மறைமொழி காட்டி விடும்*" (குறள்.28)

என்று 'நீத்தார் பெருமை' யிற் குறித்தனர் திருவள்ளுவர்.

அருள் என்னும் குணம் துறவிகட்கே உரியதாகும். அதனால்தான், அருளுடைமை, புலான்மறுத்தல், கொல்லாமை என்னும் மூன்றையும் திருவள்ளுவர் இல்லறத்திற் கூறாது துறவறத்திற் கூறினர். பிராமணருக்கு அருளில்லையென்பது, மனுதரு நூலாலும் இப்போது அவர் பிறரை முக்கியமாய்க் கீழோரை நடத்தும் வகையினாலும் அறியப்படும். உணவுக்கு வழியற்றவரையும், ஒழுக்கங் குன்றியவரையுங்கூடக் கூசாமல் முனிவரென்று கூறுவது ஆரிய வழக்கம்.

"அஜீகர்த்தரென்னும் முனி பசியினால் வருந்தி, சுநச்சேபன் என்னும் தம் மகனை, வேள்வியிற் பலியிடும்படி நூறு ஆவிற்குத் தாமே விற்றார். பசிக்கு மாற்றஞ்செய்தபடியால், அதனால் அவருக்குப் பாவம் நேரிடவில்லை" என்று மனுதரும நூல் (10:105) கூறுகின்றது.

பிராமணருக்குக் கலியாணத்திற்கு முந்திய நிலை பிரமசரியமென்று பிரிக்கப்படுவதனாலும், துறவறத்தின் முற்பகுதியான வானப் பிரத்தத்தில் குடும்ப வாழ்க்கை கூறப்படுவதனாலும், பிராமணர் ஊருக்குப் புறம்பாகவிருப்பின், எந்த நிலையிலும் தம்மைத் துறவிகளாகக் கூறிக்கொள்ள இடமுண்டு.

தமிழ் முனிவரான அந்தணர், சிறந்த அறிஞராயும் ஆசிரியராயும் ஆக்கவழிப் பாற்றலுள்ளவராயும் இருந்தமையின், அரசர்கள் அவர்களை மதியுரைக்கும் தற்காப்பிற்கும் துணைக்கொண்டனர். இதையே, திருவள்ளுவர் திருக்குறட் பொருட்பாலில், 'பெரியாரைத் துணைக்கோடல்', 'பெரியாரைப் பிழையாமை' என்ற அதிகாரங்களிற் கூறுவர். அரசர்கள் போர், வேட்டை முதலியனபற்றிச் சென்றபோது. அவர்கட்குத் துணையாயிருந்த அந்தணரே அரசு செய்யக்கூடும். இதையே "அந்தணாளர்க் கரசுவரை வின்றே" என்பது விலக்கப் படவில்லை என்று பொருள்படுமேயன்றி, அவன் மணஞ்செய்த புதிதில் சிறிது காலம் அவனுக்குப் பதிலாய் ஆண்டார். இதனால், அரசுரிமை புலவர்க்கெல்லா முண்டென்று கொள்ளுதல் கூடாது. ஆனால், அதே சமையத்தில், அது அவர்க்கு விலக்கப்படவில்லை என்றும் அறியலாம்.

தமிழ்நாட்டிற்கு முதன்முதல் வந்த ஒரு சில ஆரியப் பிராமணர், தமிழ அந்தணர் போலத் துறவிகளாகத் தோன்றியமையால் அந்தணரோடு சேர்த்தெண்ணப்பட்டார். இதை,

*"நூலே கரகம் முக்கோல் மனையே ஆயுங் காலை அந்தணர்க் குரிய"* (தொல்.160)

ஆரியருள், முனிவர் போன்றவர் அந்தணர் என்றும், பிறரெல்லாம் பார்ப்பாரென்றுங் கூறப்பட்டனர். ஆரிய முனிவரை, வீரமாமுனிவர் (Baschi), தத்துவபோதக சுவாமி (Robert de Nobili) என்னும் மேனாட்டாருடன் ஒப்பிடுக.

தொல்காப்பியத்தில், பார்ப்பார் அந்தணரினின்றும் வேறாகவே கூறப் படுகின்றனர். அவர்க்கு அந்தணர் என்னும் பெயர் எங்கும் கூறப்படவில்லை. இதனால், ஆரியருட் பெரும்பாலார் அந்தணராகக் கொள்ளப்படவில்லையென்பதையறியலாம். பிறப்பால் மட்டும் பிராமணனாயுள்ளவன் பார்ப்பான் என்றும், குறிக்கப்பட்டதாகச் சிலர் கொள்கின்றனர். 'அறுவகைப்பட்ட பார்ப்பனக் பக்கமும்' என்று தொல்காப்பியத்திலும், வேளாப்பார்ப்பான் என்று அகநானூற்றிலும் குறிக்கப்படுவதால், அது தவறாதல் காண்க. மேலும், 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்' என்னும் நூற்பாவில்,

*"மறுவில் செய்தி மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்"*

என்று சித்தரும்,

"நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்"

என்று தவத்தோரும் பார்ப்பாரினின்றும் வேறாகக் குறிக்கப்படுதல் காண்க. இதனாலும், பார்ப்பனர் இல்லறத்தார்க்கொப்பவே எண்ணப்பட்டதை அறியலாம்.

பார்ப்பார் தமிழ்நாட்டிலிருந்தமைபற்றித் தொல்காப்பியத்திற் கூறப்பட்டனரேயன்றி, அவர் தமிழரே என்னுங் கருத்துப்பற்றியன்று. இதுபோது தமிழ்நாட்டுக் குலங்களைக் குறிப்பின், ஐரோப்பியரும், சட்டைக்காரரும் குறிக்கப்படுவரன்றோ? அங்ஙனமே தொல்காப்பியர் காலப் பார்ப்பனருமென்க.

மேலும் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்று தொல்காப்பிய மரபியலிற் கூறியவை. மருத நகரில் உழவர் குலத்தினின்றுப் பிற்காலத்துத் தோன்றிய நாற்பெரும் பிரிவுகளேயன்றிப் பிற்காலத்துத் தோன்றிய பல சிறுசிறு குலங்களல்ல. தொல்காப்பியர் காலத்தில் மருத நிலத்தில் பல குலங்களிருந்தன. ஆனால் பழைய முறைப்படி, நாற்பெரும் பிரிவுகளே கூறப்பட்டன. இப்பிரிவுகளுள் ஆரியப் பார்ப்பார் அடங்கார். அயலாராகவும் தமிழர் குலமுறைக்குப் பொருந்தாமலுமிருத்தலின் பார்ப்பார் (முனிவரான) அந்தணருமல்லர். அரசருமல்லர். வணிகருமல்லர், வேளாளருமல்லர்.

அந்தணர் முதலிய நாற்பாலும் மரபியலிற் கூறப்பட்டது தமிழ் முறைபற்றியே என்பதை.

*"வேளாண் மாந்தர்க் குழுதுண் அல்ல தில்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி"* (தொல்.மரபு.76)

*"வேந்துவிடு தொழிலிற் படையுங் கண்ணியும் வாய்ந்தனர் என்ப அவர்பெறும் பொருளே"* (தொல்.மரபு.77)

என்னும் நூற்பாக்களான் உணர்க.

*"வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை"* (கூஷ,73)

என்னும் நூற்பாவில், வைசியன் என்னும் வடசொல் வந்திருப்பது. அது ஆரியமுறை என்பதற்குச் சான்றாகாது. நூலைச் சூத்திரமென்றும், நினைவை ஞாபகம் என்றும் சிலவிடத்து மொழி பெயர்த்து ஆரியச் சொல்லாற் கூறுவது தொல்காப்பியர் வழக்கம். பழமலை(அல்லது முதுகுன்றத்) என்னும் பெயரை விருத்தாசலம் என்றும், வட்டு (வட்டமான கருப்புக்கட்டி) என்னும் பெயரைச் சக்கரை (சக்கரம்)யென்றும் மொழி பெயர்த்ததினால். விருத்தாசலம் அரிய நகரமென்றும், வட்டுக் காய்ச்சுந்தொழில் ஆரியருடையதென்றும் ஆகாதது போல, வைசியன் என்னும் வடமொழிப் பெயரினாலும், தமிழ வாணிகக்குலம் ஆரிய வைசியக்குல மாகிவிடாது.

முனிவரைக் கடவுளரென்றும், பகவ ரென்றும், கடவுளோ டொப்பக் கூறுவது பண்டைத் தமிழர் வழக்கம். பார்ப்பனர் தங்களை அந்தணராகக் காட்டிக்கொண்டபின், தமிழர் தங்களைச் சாமி என்று கடவுட்பெயரால் அழைக்குமாறு செய்துவிட்டனர். அதுவே இன்றும் தொடர்ந்து வருகின்றது.

### தமிழகத்தில் இருசார் பார்ப்பனர்

தமிழகத்தில் உள்ள பார்ப்பனர் தொன்றுதொட்டு இருசாரார் ஆவர். அவருள் ஒரு சாரார் தமிழை வளர்த்தோர்; அவர் அகத்தியர், தொல்காப்பியர் முதலானோர். மற்றொரு சாரார் தமிழைக் கெடுத்தோர். இவருட் பிந்தின சாராரே வரவர மலிந்து விட்டனர். முந்தின சாரார், பரிதிமாற் கலைஞன் என்னும் சூரியநாராயண சாத்திரியாருக்குப் பின், விரல்வைத்தெண்ணு மளவு மிகச் சிலரேயாவர். வடநாட்டினின்றும் பிந்தி வந்த பிராமணர் முந்திவந்தவரை மிகக் கெடுத்துவிட்டனர்.

தமிழையும் தமிழரையும் கெடுத்தோருள் பலர், பாட்டும் நூலும் உரையும் இயற்றியிருத்தலால், தமிழை வளர்த்தார்போலத் தோன்றுவர். ஆனால் ஆராயின், அவர் வருவாய்ப் பொருட்டும். வடசொற்களையும் ஆரியக் கருத்துகளையும் தமிழ் நூல்களிலும் வடநாட்டுப் பார்ப்பனரைத் தமிழ் நாட்டிலும் புகுத்துவதற்கும் பார்ப்பனக் குலத்தை உயர்த்துவதற்குமே அங்ஙனம் செய்தனர் என்பது புலனாகும்.

எ-டு: "அந்தணரின் நல்ல பிறப்பில்லை" என்றார் விளம்பி நாகனார். "அந்தண ரில்லிருந்தூணின்னாது" என்றார் கபிலர் "ஆவோடு பொன்னீதல் அந்தணர்க்கு முன்னினிதே" என்றார் பூதஞ்சேர்ந்தனார். "....நன்குணர்வின் நான்மறையாளர் வழிச்செலவும் இம்மூன்றும் மேன்முறையாளர் தொழில்" என்றார் நல்லாதனார்.

"எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார்", "பார்ப்பார்...தம்பூதமெண்ணா நிகழ்வானேல் தன்மெய்க்கண் ஐம்பூதம் அன்றே கெடும்". "பார்ப்பார் இடைபோகார்."

*"வான்முறை யான்வந்த நான்மறை யாளரை*
*மேன்முறைப் பால்தம் குரவரைப் போலொழுகல்*
Á ~ Û \ VÖ[ Ÿ ‰, °."

"பார்ப்பார்....இவர்கட்காற்ற வழி விலங்கினாரே பிறப்பினுள் போற்றி எனப்படுவார்", "பசுக்கொடுப்பின் பார்ப்பார்கைக் கொள்ளாரே".

*"தலைஇய நற்கருமம் செய்யுங்கால் என்றும்*
*புலையர்வாய் நாட்கேட்டுச் செய்யார்–தொலைவில்லா*
*அந்தணர்வாய் நாட்கேட்டுச் செய்க அவர்வாய்ச்சொல்*
*என்றும் பிழைப்பதில் லை"* (ஆசாரக்.92)

என்றார் பெருவாயின் முள்ளியார்.

இங்ஙனம், தமிழில் சில நூல்களை வரைந்து தாங்களும் தமிழ்ப் பற்றுடையவர் என்று காட்டிக்கொண்டு, வடமொழியையும் ஆரிய வரண வொழுக்கத்தையும் தமிழ்நாட்டிற் புகுத்துவது ஆரியர் தொன்றுதொட்டுக் கையாண்டு வரும் வலக்காரங் (தந்திரம்)களில் ஒன்றாகும்.

ஆரியரை உயர்த்திக் கூறியுள்ள சில தமிழரும் உளர். அவர் அறியாமையும் தந்நல முங்கொண்ட குலக்கேடராதலின் அவர் செய்தி ஈண்டாராய்ச்சிக்குரித்தன்று.

சிவனியரும் திருமாலியருமான இருசார் பார்ப்பனருள், திருமாலியரே தமிழுக்கும் தமிழர்க்கும் சிறந்தவராவர். திருமாலியர் தனித் தமிழரான நம்மாழ்வாரை ஆழ்வார் தலைவராக்கினர்; பறையரான திருப்பாணாழ்வாரைத் தொழாசிரியர் (அர்ச்சகர்) தோள்மேல் தூக்கித் திருவரங்கம் கோயிற்குள் கொண்டு போயினர்; நாலாயிர திவ்வியப் பனுவலைத் திராவிட மறையாகக் கொண்டனர்.

### பார்ப்பனர் தமிழரை வென்ற வகை

பார்ப்பனர் தமிழ்நாட்டிற்கு வந்து நாற்பது நூற்றாண்டுகளாகியும், தங்கள் தொகையைப் பெருக்கப் பல வழிகள் வகுத்தும், இன்றும் தமிழ்நாட்டு மக்கட்டொகையில் நூற்றுக்கு மூவராகவே குழுவாரே யாவர். போர்

செய்தற்குரிய தன்மைகளும், தமிழரை நாகரித்தால் வெல்லக் கூடிய உயர்வும் அவர்களுக்கிருந்ததில்லை. அவர்கள் தமிழரை வென்றதெல்லாம் வலக்காரத்தினாலேயே. அவ்வெற்றியும் ஒரு குறுங்காலத்தில் கூடியதன்று. அவர்கள் தமிழ் கைப்பற்ற மற்றோர் 2000 ஆண்டுகளும், அரசியலைக் கைப்பற்ற மற்றோர் 2000 ஆண்டுகளும் ஆயின. இவற்றுள், முன்னதற்குத் தமிழரின் கள்ளமின்மையும், பின்னதற்கு அவர்களின் அறியாமையும் காரணமாகும். விரலாற்சுட்டி யெண்ணக்கூடிய ஒரு சிறுகூட்டம், ஒரு மாபெரும் நாட்டையும் வலக்காரத்தால் கைப்பற்ற எடுத்துக்காட்டு இவ்வுலகத்திலேயே இல்லை.

தமிழர் வேறெவ்வெவ்வகையில் மடம் படினும் போரில் மடம்படுபவரல்லர். கி.பி. 16ஆம் நூற்றாண்டு வரை தமிழ்நாட்டில் அயலரசுகள் வந்து நிலைத்ததேயில்லை. அதன்பின்பும் தமிழர்க்குள் ஒற்றுமையின்மையாலேயே, அயலார் தமிழ்நாட்டைக் கைப்பற்ற நேர்ந்தது.

பாவாணர் 'ஒப்பியன் மொழிநூல்' (பக்.33–44)

**பார்ப்பார் மூவகைக்கடன்** *pārppār-mōvagaikkaḍan*, பெ. (n.) தேவர், முனிவர், தென்புலத்தார் ஆகிய மூவர்க்கும் முறையே செய்யப்படும் வேள்வியும், வேதமோதுதலும், மகப்பெறுதலும்; the three duties of brahmins "*மூன்று கடன் கழித்தபார்ப்பானும்*" (திரிகடு.35)

*[பார்ப்பார்+ மூவகை + கடன்]*

**பார்ப்பாரத்தென்னை** *pārppāra-t-teṉṉai*, பெ. (n.) *பாப்பாரத்தென்னை* பார்க்க, (L.) see *pāppāra-t-teṉṉai*

*[பார்ப்பார + தென்னை]*

**பார்ப்பாரப்புளி** *pārppara-p-puḷi*, பெ. (n.) *பப்பரப்புளி* பார்க்க, (L.) see *papparappuḷi*

*[பார்ப்பார + புளி]*

**பார்ப்பாரறுதொழில்** *pārppāraṟu-toḻil*, பெ. (n.) ஈதல், ஏற்றல், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல் என்பன (காஞ்சிப். ஒழுக்கப்பட. 95.); the six occupations of brahmins.

*[பார்ப்பார் + அறுதொழில்]*

**பார்ப்பான்** *pārppāṉ*, பெ. (n.) 1. பார்ப்பான்; brahmin "*அன்னவை பிறவும் பார்ப்பார்க் குரிய*" (தொல்.பொ.177.) "*கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்*" (முல்லை–37)

"*சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானை*" (கலி–65–8)

"*முதுபார்ப்பான் அஞ்சினனாதல் அறிந்தியான்*" (கலி–65–20)

"*வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த*" (அகம்.24–1)

"*தூதொய் பார்ப்பான் மடிவெள் ளோலை*" (அகம்.337–7)

"*மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட*" (சிலப்.1–52)

"*பார்ப்பா னொடுமனையா ளென்மேற் படாதன*" (சிலப்.9–7) 2. பிரமன்; brahma. "*பார்ப்பான் குண்டிகை யிருந்த நீரும்*" (கம்பரா.வருண.61.) 3. யமன் (யாழ்.அக.) yama.

'*பார்ப்பானுக்கு வாய் போக்காதே ஆண்டிக்கு அதுதானும் சொல்லாதே*' (பழ.)

'*பார்ப்பான் கறுப்பும் பறையன் சிவப்பும் ஆகாது*' (பழ.)

'*பார்ப்பாரைப் பார்த்துப் பரதேசம் போனாற் போல*' (பழ.)

'*பார்ப்பான் ஏழையோ பசு ஏழையோ?*' (பழ.) '*பார்ப்பானுக்குப் பிறப்பு, கோவிலிலேயும் சிறப்பு*' (பழ.)

'*பார்ப்பானுக்கு மூத்த பறையன் கேட்பாரின்றிக் கீழ்சாதியானான்*' (பழ.)

*[பார் + பார்ப்பான்]*

க. ஹாருவ

**பார்ப்பான் பூண்டு** *pārppāṉpūṇḍu,* பெ. (n.) பற்பாடகம் என்னும் மூலிகை; fever plant. (சா.அக.)

*[பார்ப்பான் + பூண்டு]*

**பார்ப்பி** *pārppi,* பெ. (n.) *பார்ப்பனி* பார்க்க; see *pārppaṉi.* "*பாக்கியமமைந்த பார்ப்பியாப் பியையும்*" (பெருங்.நரவாண.7,130.)

*[பார்ப்பான் → பார்ப்பி]*

**பார்ப்பினி** *pārppiṉi,* பெ. (n.) *பார்ப்பனி* பார்க்க; see *pārppaṉi.*

*[பார்ப்பான் → பார்ப்பினி]*

**பார்ப்பு**[1] *pārppu,* பெ. (n.) 1. பறப்பவற்றின் இளமை (தொல்.பொ.559.); fledgling. 2. தவழ்பவற்றின் இளமை; (தொல்.பொ.560); young of the tortoise, frog,toad, lizard, etc. 3. விலங்கின் குட்டி (பிங்.); young of quadrupeds

*[பார் → பார்ப்பு]*

**பார்ப்பு**[2] *pārppu,* பெ. (n.) பார்ப்பனச்சாதி; the brahmin caste. '*ஆறும்......பார்ப்பியற் கூறும்*' (தொல்.பொ.75,உரை.)

*[பார் → பார்ப்பு]*

**பார்ப்புத்தேள்** *pārputtēḷ,* பெ. (n.) உலகத்தாய்; the goddess of earth. "*பார்ப்புத்தேள் பயத்தொடு பரந்ததே*" (தக்.யாகப்.671)

*[பார் +புத்தேள்]*

**பார்படை** *pār-padai,* பெ. (n.) தவச அரிசியைக் களத்திற் பங்கிட்டுக் கொள்ளுகை(R.F.); division of corn-sheaves before the grain is threshed

*[பார் + படை]*

**பார்பதி** *pārpadi,* பெ. (n.) *பெருநெருஞ்சி.* (மலை.) பார்க்க; cow-thorn.

**பார்மகள்** *pār-magaḷ,* பெ. (n.) உலகத்தாய்; the goddess of earth. "*பார்மகளு நாமகளோடு பல்லாண்டிசைமின்*" (திருவாச.9,1.) "நேரிந்து பார்மகள் முதுகிற" (இராமா. கரன்.284.)

*[பார் + மகள்]*

**பார்மகன்சாரி** pārmagaṉšāri, பெ. (n.) பச்சைக்கற்பூரம் (யாழ்.அக.); medicated camphor.

**பார்மதம்** *pārmadam,* பெ. (n.) பூவழலை; fuller's earth. (சா.அக.)

**பார்மண்டாடி** *pārmaṇḍāḍi,* பெ. (n.) சங்கு மற்றும் முத்துக் குளிப்பார்க்கு வழி காட்டுவோன் (நெல்லை.மீனவ.); a guide to pearl fishing.

*[பார் + மண்டாடி]*

**பார்மரம்** *pārmaram,* பெ. (n.) கிட்டி மரம்; floor of a carriage.

*[பார் + மரம்]*

**பார்மாற்று-தல்** *pār-maṟṟu-,* 15. செ.கு.வி. (v.i.) மண்ணணைத்தல்; to support the ridges

மறுவ: பாருமாத்துதல்

*[பார் + மாற்று-,]*

**பார்மிசைநடந்தோன்** *pār-mišai-naḍandōṉ,* பெ. (n.) புத்தன் (பிங்.); buddha.

*[பார் + மிசை + நடந்தோன்]*

**பார்மிசையோன்** *pārmišaiyōṉ,* பெ. (n.) *பார்மிசை நடந்தோன்*(யாழ்.அக.) பார்க்க; see *pārmišai naḍandōṉ.*

*[பார் + மிசையோன்]*

**பார்முதிர்பறந்தலை** *pārmutir paṟantalai,* பெ. (n.) பிணங்களைப் புதைக்கப்பயன்படும் இடம்; burial ground. "*ஊர்நனி யிறந்த பார்முதிர் பறந்தலை*" (புறம்.265–1)

*[பார் + முதிர் + பறந்தலை]*

**பார்முதிர்பனிக்கடல்** *pārmutir paṉi-kkaḍal,* பெ. (n.) மிகக்குளிர்ந்தகடல்; deep cold sea. "*பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்கு*" (முருகு.45)

*[பார் + முதிர் + பனிக்கடல்]*

**பார்மையத்தாணி** *pār-maiya-t-tāṇi,* பெ. (n.) மையக் கட்டை, இருசு, வண்டி ஏர்க்கால் ஆகிய மூன்றையும் இணைத்துள்ள கம்பியாணி; linch pin.

மறுவ: அச்சாணி

*[பார் +* skt.madya> *த. மையம் + அத்து + ஆணி]*

**பார்வணம்** *pārvaṇam,* பெ. (n.) 1. மான்; deer, 2. மான்செவிக்கள்ளி; leaf spurge. (சா.அக.)

மறுவ: இலைக்கள்ளி

**பார்வதம்**[1] *pārvadam,* பெ. (n.) *வேம்பு.* பார்க்க, (மலை.) neem. see *vēmbu.*

**பார்வதம்**[2] *pārvadam,* பெ. (n.) 1. வாலுளுவை; staff tree.2. வேம்பு; neem tree. 3. மலை; mountain.

**பார்வல்**[1] *pārval,* பெ. (n.) பார்த்தல்; look. "*பார்வலிருக்கை*" (புறநா.4.)

**பார்வல்**[2] pārval, பெ. (n.) 1. பார்க்கை; looking, look. "*இன்கண் உடைத்தவர் பார்வல்*" (குறள்.1152) 2. காவல்; watch. "*பார்வற் பாசறை தரூஉம்*" (பதிற்றுப்.84,5.) 3. பறவைக்குஞ்சு (யாழ்.அக.); fledgling 4. மான் முதலியவற்றின் கன்று. (யாழ்.அக.); young deer and other animals 5. பார்வை விலங்கு (யாழ்.அக.) பார்க்க; see *pārvaivilaṅgu*

*[பார்வை → பார்வல்]*

**பார்வல்** *pārval,* பெ. (n.) தம் பகைவர் செய்மைக்கண் வருதலைப் பார்த்திருத்தற்கரிய உயர்ச்சியையுடைய அரண் (நச்.மதுரை.231.); port which have a watch tower.

*[பார்வை → பார்வல்]*

**பார்வற் பாசறை** pārvaṟ-pāšaṟai, பெ. (n.) காவற்பாசறை; encarmpment with guard-room. "*பருந்துபறக் கல்லாப் பார்வற் பாசறை*" (மது.231) "*பார்வற் பாசறைத் தரூஉம் பல்வேற் பூழியர்.....*" (பதிற்று.84–5)

*[பார்வல் + பாசறை]*

**பார்வை** pārvai, பெ. (n.) 1. காட்சி; looking, seeing; sight, vision; glance. look. 2. கண்; eye *"பார்வையில்லி மைந்தரும்"* (சேதுபு.அசுவ.4.) 3. தோற்றம் (வின்.); appearance, view, aspect. 4. நேர்த்தி; that which is attractive, interesting or neat in appearance. 5. மதிப்பு (அக.நி.); estimate, value, 6. நோக்கி மந்திரிக்கை; incantation uttered by a magician with his gaze fixed onhis subject. *"மருந்தருத்தவும் பார்வையினாலும்"* (திருவிளை.பாண்டியன். 47.) 7. கருவித்தை; magic, black art, witch craft. (கொ.வ.) 8. கண்ணோட்டம் (பிங்.); benignity, kindliness. 9. சோதனை(வின்.); review, rivision, examination. 10. மேல்விசாரணை(வின்.); supervision, superintendence. 11. கவனம்(வின்.); attention, observation 12. பார்வை விலங்கு பார்க்க; see *pārvai vilangu* *"பார்வை யாத்த பறைத்தாள் விளவின்"* (பெரும்பாண்.95.)

தெ. பாருவ

*[பார் → பார்வை]*

**பார்வைக்காரன்** *pārvai-k-kāraṉ,* பெ. (n.) 1. மந்திரித்து நோய் தீர்ப்போன்; one who effects cures by uttering charms. 2. அஞ்சனமிட்டுப் புதையல் காண்போன்; a sorcercer who finds out hidden treasure. 3. மதிப்பிடுவோன்; estimator, surveyor. 4. மேலதிகாரி; superior officer; superintendent.

*[பார்வை + காரன்]*

**பார்வைக்குணம்** *pārvai-k-kuṇam,* பெ. (n.) ஏவலாலுண்டாம் கோளாறு (வின்.); a disease, believed to be caused by wittchcraft.

*[பார்வை → குணம்]*

**பார்வைக்குறைவு** *pārvai-k-kuṟaivu,* பெ. (n.) 1. கட்புலன் மங்குகை (கொ.வ.); defect in eyesight, myopia. 2. பேணுதலில் உண்டாம் குறை (வின்.); lack of supervision or attendence.

*[பார்வை → குறைவு]*

**பார்வைக்கூர்மை** *pārvai-k-kūrmai,* பெ. (n.) பார்த்தலின் நுட்பம்; keenness of vision. (சா.அக.)

*[பார்வை + கூர்மை]*

**பார்வைச் சட்டம்** *pārvai-c-caṭṭam,* பெ. (n.) இரட்டைக் கதவுகளின் சந்தினை மூட விளிம்பில் தைக்கும் மரக்கம்பிச்சட்டம் (கட்டட. நாமா.); frame nailed to the right leaf of a double door to cover the space between the leaves.

*[பார்வை + சட்டம்]*

**பார்வைச்சில்லு** pārvai-c-cillu, பெ. (n.) பார்வைத் தகடு (உ.வ.) பார்க்க; see *pārvai-t- tagaḍu.*

*[பார்வை + சில்லு]*

**பார்வைத்தகடு** *pārvai-t-tagaḍu,* பெ. (n.) பூட்டுவாய்த்தகடு (சங்.அக.); key plate.

*[பார்வை + தகடு]*

**பார்வைத்தாழ்ச்சி** *pārvai-t-tālcci,* பெ. (n.) 1. அசட்டை; neglect, want of care. 2. *பார்வைக்குறைவு* பார்க்க; see *pārvai-k-kuṟaivu*

*[பார்வை + தாழ்ச்சி]*

**பார்வைத்தூண்** pārvai-t-tūṇ, பெ. (n.) வீட்டினுடைய முகப்பிலேனுங் கூடத்திலேனும் அழகுபடச் செய்து நிறுத்துந் தூண் (இ.வ.); decorated post at the entrance or at the central hall of a building.

*[பார்வை + தூண்]*

**பார்வைநரம்பு** *pārvai-narambu,* பெ. (n.) கண்நரம்பு (M.L.): optic nerve.

*[பார்வை + நரம்பு]*

**பார்வைநெசவு** *pārvai-nešavu,* பெ. (n.) முன்தானைக்கு முன்பு மூவிழையால் நெசவு செய்யப்படும் இரண்டு முழப்பகுதி; three threaded weaving of two cubit-measure in front of the border.

*[பார்வை + நெசவு]*

**பார்வைப் பக்கம்** *pārvai-p-pakkam,* பெ. (n.) தறியின் இடப்பக்க நெசவு; left-side weaving in a handloom.

*[பார்வை + பக்கம்]*

**பார்வைப்படல்** *pārvai-p-patal,* பெ. (n.) கண்ணுக்குப் புலப்படல்; to be perceived in the eye. "*பார்பார்வைப் பட்டாற் பலியா செபங்கள்*" (சைவச. பொது.கசக.)

*[பார்வை + படல்]*

**பார்வைப் பலகை** *pārvai-p-palagai,* பெ. (n.) நிலைப்படியில் கதவுப் பொருத்துக்கு மேல் அழகுற அமைக்கப்படும் பலகை (இ.வ.); plank placed on the transion of a door.

*[பார்வை + பலகை]*

**பார்வைபார்-த்தல்** *pārvai-pār-,* 11. செ.குன்றாவி. (v.t.) 1. மதித்தல்; to estimate 2. சோதித்தல்; to examine; to supervise. 3. நோக்கி மந்திரித்தல்; to look, intently, as an enchanter; to practise magic. 4. ஏவல் வைத்தல் (இ.வ.); to sorcerize.

*[பார்வை + பார்-,]*

**பார்வைமடப்பிணை** *pārvaimaḍappiṇai,* பெ. (n.) பார்வை விலங்கு; "*பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்*" (புறநா.320-4)

**பார்வைமான்** *pārvai-māṉ,* பெ. (n.) *பார்வை மிருகம்* (பெரும்பாண்.95, உரை.) பார்க்க; see *pārvai mirugam.*

**பார்வை மிருகம்** *pārvai-mirugam,* பெ. (n.) விலங்குகளைப் பிடித்தற்குப் பழக்கிய விலங்கு animal used as a decoy. பார்வை விலங்கு என்பது முற்றுந் தமிழாம்.

*[பார்வை +* skt.mrga> *த. மிருகம்]*

**பார்வைமுந்தி** *pārvai-mundi,* பெ. (n.) மேல்முந்தி; the edge of the skirt worn upon her shoulders.

*[பார்வை + முந்தி]*

**பார்வையாளர்** *pārvai-y-ālar,* பெ. (n.) 1. திரைப்படம், கலை நிகழ்ச்சி, விளையாட்டு போன்றவற்றை காணவருபவர், கண்டு களிப்பவர்; viewer; audience; spectator; "*பார்வையாளர்களால் விளையாட்டரங்கு நிரம்பி வழிந்தது*" 2. (ஒரு நிகழ்ச்சி, பணி போன்றவற்றை நேரில் கண்டு) தகவல், பரிந்துரை போன்றவை தருவதற்காக அனுப்பப்படுவர்; observer; "*கட்சியின் மாநிலத் தேர்தலுக்கு மேலிடத்திலிருந்து பார்வையாளர்கள் வந்திருந்தனர்*".

*[பார்வை + ஆளர்]*

**பார்வையிடு–தல்** *pārvai-y-iḍu-,* 20. செ.கு.வி. (v.i.) 1. அணிவகுப்பு, கலை நிகழ்ச்சி போன்றவற்றை ஓர் இடத்திலிருந்து காணுதல்; inspect; watch (a parade, gageantry, etc.) "*முப்படை அணிவகுப்பைக் குடியரசுத் தலைவர் பார்வையிட்டார்*" 2. மேற்பார்வையிடுதல்; supervise; visit (for checking.) "*திடீரென முதல்வர் மருத்துவ மனையைப் பார்வையிடச் சென்றார்*".

*[பார்வை + இடு–,]*

**பார்வையிலி** *pārvai-y-ili,* பெ. (n.) குருடன். (சேதுபு. அகுவ.4.); blind person.

*[பார்வை + இலி]*

**பார்வையுகம்** *pārvaiyugam,* பெ. (n.) இரண்டு பார்வை நரம்புகளும் கூடுமிடம்; the crossing of the two optic nerves. (சா.அக.)

*[பார்வை + யுகம்]*

**பார்வை வளம்** *pārvai-vaḷam,* பெ. (n.) சீலையில் வெளிவைத்துக் கட்டக்கூடிய தோற்றமுள்ள பக்கம் (வின்.); outside or right side of a cloth opp. to kuruṭṭu-vaḷam

*[பார்வை + வளம்]*

**பாரக்கண்டை** *para-k-kaṇḍai,* பெ. (n.) மட்டி மீன்வகை; a kind of fish.

*[பாரை+கெண்டை→ பாரக்கெண்டை]*

**பாரக்கற்றலை** *pāra-k-kaṟṟalai,* பெ. (n.) கற்றலை மீன்வகை (பறாளை பள்ளு.15.); a kind of fish.

*[பாரை + கற்றலை → பாரக்கற்றலை]*

**பாரகம்[1]** *pār-agam,* பெ. (n.) நிலம்; earth. "*கிளர் நீருடுத்த பாரகம்*" (கம்பரா. மந்தரை.76.) "*பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுகென*" (மணிமே.16–134) "*பாரக வீதியிற் பண்டைபோ ரிழைத்த*" (மணிமே.28–201)

*[பார் → பாரகம்]*

**பாரகம்[2]** *pāragam,* பெ. (n.) திரைச்சீலை (பிங்.); curtain.

**பாரகம்[3]** *pāragam,* பெ. (n.) தோணி. (சங்.அக.); boat

**பாரகர்** *pārakar,* பெ. (n.) 1. கரைகண்டவர்; (கோயிற்பு.நடராச.33.) one who learn verywell. 2. சுமப்பவர்; career, bearer, "*பாரகர் பரிக்கக்கொட்ட*" (சி.சி.2:95.) 3. நாயகர்; the supreme being. "*ஒப்புடைய மனத்தினராய்ப் பாரகர் பாரியர் வாழு முறையுளெங்கும்*" (அரணகிரிபு.நகர.14.)

*[பார் → பாரகர்]*

**பாரகன்[1]** *pāragaṉ,* பெ. (n.) பாரங்கதன் பார்க்க; see *pāraṅgataṉ.* "*வேதபாரகன்*" (கம்பரா.இரணி.27)

**பாரகன்[2]** *paragaṉ,* பெ. (n.) 1. சுமப்போன்; carrier, bearer. "*பாரகர்பரிக்க*" (சி.சி.2,95.) 2. தாங்குபவன்; supporter, sustainer "*பாரகன் றனையும்*" (சிவதரு.பாவ.8.)

*[பாரகம் → பாரகன்]*

**பாரகாவியம்** *pāra-kāviyam,* பெ. (n.) பெருங்காப்பியம்; great epic. "*பாரகாவியமெலா*

*மீரிரு தினத்தினிற் பகர"* (தமிழ்நா.221.)

*[பார + காவியம்]*

**பாரகூலி** *pāra-kūli,* பெ. (n.) சாமானை எடுத்துக் கொண்டு போவதற்குரிய கூலி (s.i.i.i140.); cartage; freight; carrier's charges.

*[பாரம் + கூலி]*

**பாரங்கம்** *pāraṅgam,* பெ. (n.) இலவங்கப் பட்டை (சங்.அக.); cinnamon bark.

**பாரங்கி** *pāraṅgi,* பெ. (n.) *பாரங்கு,* **1.** (சங்.அக.)பார்க்க; see *pāraṅgu,***1.**

**பாரங்கு** *pāraṅgu,* பெ. (n.) **1.** *சிறுதேக்கு*(சங்.அக.) பார்க்க; see *siṟutēuku*; beetle killer, **2.** காட்டிலவு (சங்.அக.); false tragacanth. **3.** நரிவாழை. (மலை.); tube flower.

மறுவ: கோங்கிலவு.

**பாரச்சாவு** *pāra-c-cāvu,* பெ. (n.) **1.** அகவை முதிர்ந்தோரின் இறப்பு(இ.வ.); death of a very old person. **2.** காலமல்லாத காலத்தில் ஏற்படும் இறப்பு. untimely death of a person.

*[பாரம் + சாவு]*

**பாரச்சுமை** pāra-c-cumai பெ. (n.) கனத்த சுமை (யாழ்.அக.); heavy burden.

*[பாரம் + சுமை]*

**பாரசவம்** *pārašavam,* பெ. (n.) படைக்கலப் பொது (யாழ்.அக.); weapon.

**பாரசிகை** *pārašigai,* பெ. (n.) பருந்து (பிங்.); hawk, falcon kite.

மறுவ: காரத்தி

**பாரசீகவோமம்** *pāracola-vōmam,* பெ. (n.) குராசானியோமம்; black henbane.

*[பாரசீகம் + ஓமம்]*

**பாரஞ்சாம்பி** *pārañ-cāmbi,* பெ. (n.) சுமையை யேற்றியிறக்குவதற்குரிய கருவி(புதுவை.); crane.

*[பாரம் + சாம்பி]*

**பாரடித்திருக்கை** *pāraḍi-t-tirukkai,* பெ. (n.) கடலடிப் பாறைகளின் இடுக்கில் தங்குமொரு திருக்கை மீன் வகை; a kind of tirukkaimīn.

*[பாரடி + திருக்கை]*

**பாரணம்** *pāraṇam,* பெ. (n.) மனத்திற்கு இசைந்து ஓதுதல்; ceremonial recitation *"பாரணங்க ளெங்கும் பரந்தொலிப்ப"* (பாடு.திருவருட்.)

*[பார் + அணம்]*

**பாரணம்**[2] *pāraṇam,* பெ. (n.) மேகம் (யாழ்.அக.); cloud

*[பார் + அணம்]*

**பாரத்தனம்** *pāra-t-taṉam,* பெ. (n.) பெரு மிதம்; pride of achivement. *"பாரத்தனம்பேசல் பண்போ"* (தாயு.பராபர.271.)

*[பாரம் + தனம்]*

**பாரத்துவாசம்** *pārattuvāšam,* பெ. (n.) 1. வலியன் (திவா.) பார்க்க, kingcrow. 2. காடை (வின்.) பார்க்க Quail 3. கற்பநூலு ளொன்று (தொல்.பொ.75,உரை.) a treatise on kalpa. 4. எலும்பு. (யாழ்.அக.); bone.

**பாரத்தொந்தரை** *pāra-t-tondarai,* பெ. (n.) தொந்தரவு மிக்க பெருஞ்செயல்(வின்.); a weighty and troublesome business.

*[பாரம் + தொந்தரை]*

**பாரதம்²** *pāradam,* பெ. (n.) இதளியம். (நாமதீப.395.); quick silver.

**பார்ப்பனமுதுமகன்** *pārppaṉa mutumagaṉ,* பெ. (n.) மூத்தபார்ப்பனன்; age old brahmin "*பார்ப்பன முதுமகன் படிம வுண்டியன்*" (மணிமே.5–33.)

*[பார்ப்பன(ன்) + முதுமகன்]*

**பார்ப்பனமுல்லை** *pārppaṉa-mullai,* பெ. (n.) பகைத்த மன்னரிருவருடைய மாறுபாட்டை நீக்க முயலும் பார்ப்பானது நடுவுநிலை கூறும் புறத்துறை (பு.வெ.8,18.); (purap.) theme describing the mediation of a brahmin who tries to bring about peace between two contending kings.

*[பார்ப்பன(ர்) + முல்லை]*

**பார்ப்பனவாகை** *pārppaṉa-vāgai,* பெ. (n.) வேதம் வல்ல அந்தணன் வேள்வி வேட்டலாற் பெறும் பெருமையைக் கூறும் புறத்துறை (பு.வெ.8,9.); theme describing the greatness of a learned brahmin. attained through the performance of sacrifices. "*பார்ப்பன வாகை சூடி ஏற்புற*" (சிலப்–23–72)

*[பார்ப்பன(ர்) + வாகை]*

**பார்ப்பனன்** *pārppaṉaṉ,* பெ. (n.) *பார்ப்பான்,1.* see *pārppāṉ 1* பார்க்க, "*ஆனியற் பார்ப்பன மாக்களும்*" (புறநா.9.)

*[பார் → பார்ப்பனன்]*

**பாரதம்பாடிய பெருந்தேவனார்** *pāradam pāḍiya-perundēvaṉār,* பெ. (n.) பாரத வெண்பாப் பாடிய புலவர்; a poet, the author of pārada-veṇbā.

பாரதத்தை வெண்பாவும் அகவலும் உரைநடையும் விரவிவரப் பாடி வெளியிட்டமையால் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்று அழைக்கப்பெற்றார். இவர் பாடிய பாரதம் முழுவதும் கிடைக்கவில்லை; உத்தியோக பருவம், வீடும பருவம், துரோண பருவம் ஆகிய மூன்று பருவங்களிலும் 818 வெண்பாக்களும் 6 ஆசிரியப் பாக்களும் 6 ஆசிரிய மண்டிலப் பாக்களும் மட்டுமே கிடைத்திருக்கின்றன. இவர் பிறந்தது தொண்டை நாடு எனத் தொண்டைமண்டல சதகத்தால் அறிகிறோம். இப்பொழுது அச்சிட்டு வழங்கும் பாரத வெண்பாவில் முதலில் விநாயக வணக்கமும், அடுத்துத் தெள்ளாற்றில் போர்வென்ற அரசன் சிறப்புங் கூறுவது காரணமாகப் படிக்காசுப் புலவர் இவரைத் தொண்டை மண்டலத்தார் என்று எழுதி வைத்தார். தெள்ளாற்றில் போர் வென்ற நிகழ்ச்சி கடைக்கழங்கம் அழிந்த பல்லாண்டுகளுக்குப் பின்னரேயாகும். ஆதலின் இப்பிற்காலப் பாரத நூலுக்கு வேறாகச் கழகக்காலத்தில் தோன்றிய பாரதநூல் ஒன்று இருத்தல் வேண்டும். நச்சினார்க் கினியராலும், தொல்காப்பியத்தின் பிற உரையாசிரியர்களாலும் மேற்கோள்களாக எடுத்தாளப்பட்ட பாரத நூற் செய்யுட்கள் முற்காலத்தனவாகலாம். பாண்டியர்களின் வேள்விக்குடிச் செப்பேடு, தமிழ்க் கழகம் நிறுவிய சில ஆண்டுகளுக்குப் பின் வந்த பாண்டிய மன்னன் ஒருவன் பெரு முயற்சியால் பாரதம் தமிழில் ஆக்கப்பட்டது என்று கூறுகின்றது. எனவே இந்நூல் கழகக்காலத்தின் முடிவில் தோன்றியிருக் கலாம் என்று கருதுகின்றனர்.

ஐங்குறு நூறு, அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய ஐந்து தொகை நூல்களிலுமுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்கள். பாரதம் பாடிய பெருந்தேவனார் பெயரில் இடம்பெற்றுள்ளன.

இக்கடவுள் வாழ்த்துப் பாடல்கள் சிவபிரான், திருமால், முருகன் ஆகிய கடவுள்களுக்குக் கூறப்பட்டவையாகும்.)

**பாரதவெண்பா** *pārada-veṇbā,* பெ. (n.) பெருந்தேவனாரால் பெரும் பான்மையும் வெண்பாவிற் பாடப்பட்ட பாரதம்; the pāradam, composed chiefly in veṇbā metre by peruntēvaṉār.

*[பாரத + வெண்பா]*

**பாரதாகம்** *pāradāgam,* பெ. (n.) பேராமுட்டி; fragrant stickly mallow. (சா.அக.)

**பாரதிக்கை** *pāradi-k-kai,* பெ. (n.) (nātya.) இணைக்கை வகை. (பரத. பாவ. 58.) ; a pose with both hands.

*[ பாரதி¹ + கை ]*

**பாரதிகி** *pāradigi,* பெ. (n.) கடம்பு; cadamba tree. (சா.அக.)

**பாரதிரசம்** *pāradi-rašam,* பெ.(n.) இதளியம் கந்தகம் முதலியன சேர்ந்த கூட்டுமருந்து வகை (பைஷஜ. 153.); a medicine compounded of quicksilver, sulphur and other ingredients.

*[பாரதி + ரசம் ]*

**பாரதூரம்** *pāra-tūram,* பெ. (n.) 1. பெருந்தூரம் (வின்.); great distance 2. இன்றியமையாதது that which is important or Momentous 3. ஆழ்ந்த எதிர்காலம் பற்றிய ஆராய்ச்சி (கொ.வ.) foresight.

*[ பாரம் + தூரம் ]*

**பாரப்பட்ட காரியம்** *pāra-p-paṭṭa-kāriyam,* பெ. (n.) 1. பெரிய செய்தி; serious affair. 2. பெரும்படியான தொழில்; business on a large scale.

*[பாரப்பட்ட +* skt. kārya› *த. காரியம்]*

**பாரப்படு—தல்** *para-p-paḍu-,* செ.கு.வி. (v.i.) (யாழ்ப்.) 1. பொறுப்புமிகுதல்; to become burdensome or onerous. 2. சுமைமிகுதல்; to be heavily laden. 3. வழக்கு மன்றத்தில் உசுவலுக்கு வைக்கப்படுதல்; to be committed for trial.

**பாரப்பழி** *pāra-p-paḻi,* பெ. (n.) பெருங்குற்றம் (யாழ்.அக.); serious offence.

*[பாரம் + பழி ]*

**பாரப்புரளி** *pāra-p-puraḷi,* பெ. (n.) 1. பெரும்பொய்; downright lie. 2. பெருங்குறும்பு; great mischief.

*[பாரம் + புரளி]*

**பாரம்¹** *pāram,* பெ. (n.) 1. உலகம் (பிங்.); earth. 2. பருத்தி; indian cotton plant. "*பாரம் பீரம் பைங் குருக்கத்தி*" (குறிஞ்சிப்.92.)

*[ பார் + பாரம் ]*

**பாரம்²** *pāram,* பெ. (n.) 1. பொறுக்கை (சூடா.); bearing, sustaining. 2. கனம் (சூடா.); weight,

heaviness "பாரக்குடர் மிடைபாசடை" (இராம. கரன்.64.) 3. சுமை; burden, load. "பாரேறு பெரும்பாரந்தீர" (திவ்.பெரியதி. 2,10,8.) 4. இடவேறுபாடு பற்றி 20அல்லது 21 அல்லது 28 துலாங்கொண்ட நிறைவகை (பிங்.); a standard weight= 20, 21or28 tulām in different localities. 5. பொறுப்பு; accountability, responsibility, charge, trust. '*அவன்மேல் பாரமேற்றினார்*' (வின்.) 6. பெருங்குடும்பம்; big family, considered a burden. "*பசித்தும் வாரேம் பாரமுமிலமே*" (புறநா.145.) 7. கொடுமை (வின்.); oppressiveness, heinousness. 8. காய்ச்சல் முதலியவற்றால் உண்டாகும் தலைக்கனம் (வின்.); heaviness of head, dullness or lethargy from cold or fever. 9. பெருமை; respectability, nobility, greatness "பாரமா மரபு" (பாரத.சம்பவ.39.) 10. கடமை (யாழ்.அக.); duty, obligation. 11. ஒப்புவிக்கை (வின்.); commitment, surrender to authority 12. குதிரைக்கலனை (சூடா.); saddle. 13. கவசம் (பிங்.); coat of mail. 14. தோணி. (சூடா.); boat 15. காவுதடி. (யாழ்.அக.); yoke for carrying a load.

**பாரம்³** *pāram,* பெ. (n.) 1. கரை (பிங்.); bank, shore. "*காளிந்தி நதியின் பாரம்*" (பாரத.குரு.90.) 2. முடிவு (வின்.); end, extremity

**பாரம்⁴** *pāram,* பெ. (n.) விளையாட்டு வகை; (யாழ்.அக.) a game.

**பாரம் தூக்கி** *pāramtūkki,* பெ. (n.) *பளுதூக்கி* பார்க்க; see *palutūkki.*

*[பாரம் + தூக்கி]*

**பாரமர்** *pāramar,* பெ. (n.) மாமரம்; mango tree. (சா.அக.)

**பாரமா** *pāra-mā,* பெ. (n.) மாமரம் (சங்.அக.); mango tree.

**பாரமேச்சுவரம்** *pāramēccuvaram,* பெ. (n.) சிவனியத்தோன்றியம் இருபத்தெட்டனுள் ஒன்று (சைவச.பொது.334,உரை.); an ancient šaiva scripture in sanskrit, one of 28 civākamam, q.v.š.

*[பரம → பாரம + skt. ஈச்சுரம்]*

**பாரற** *pāraṟa,* பெ. (n.) தடையற; without hinderance. "*பாவீற்றிருந்த கலைபாரறச் சென்ற கேள்விக் கோவீற்றிருந்த குடி நாட்டணி கூறலுற்றேன்*" (சிந்.நாமக.1.)

**பாரா** *pārā,* பெ. (n.) செவுளில்லாத கடல்மீன்; பாரை மீனின் வேறானது (செங்கை.மீனவ.); a kind of sea fish that which is different from pārai miṉ.

**பாராகலம்** *pārā-kalam,* பெ. (n.) பன்னிரண்டு பெரிய மரக்கால் கொண்ட கலவளவு (இ.வ.); a kalam measure of 12 big marakkal

*[பருமை → பாரா + கலம்]*

**பாராங்கல்** *pārāṅal,* பெ. (n.) சுக்கான்கல்; limestone. (சா.அக.)

**பாராசாரியம்** *pārāšāriyam,* பெ. (n.) சிற்பநூல் வகை (இருசமய.); a treatise on architecture, one of 32 širpanūl.

**பாராட்டு—தல்** *pārāṭṭu-,* 5. செ.குன்றா.வி. (v.t.) 1. புகழ்தல்; to applaud, commend, eulogise. "*பண்பு பாராட்டு முலகு*" (குறள்.994.) "பரமனுக்கன்பரான வடியார் பாராட்டு

வாரென்று" (சிவரக.பாயிர.20) 2. அன்பு செய்தல்; to caress, fondle, to entertain "*புதுவது பன்னாளும் பாராட்ட*" (கலித்.24.) 3. பெருமித முரைத்தல்; to boast, make a parade of; to magnify, exaggerate "*பாசம்போய் நின்றவர்போற் பாராட்டி*" (தாயு.பராபர.41.) "*மைந்தரைத் தாங்கித்தாயார் மகிழ்ந்து பாராட்டு மோசை*" (அருணகிரிபு.திருநாட்10.) 4. கொண்டாடுதல்; to celebrate "பற்றற்ற கண்ணும் பழமை பாராட்டுதல்" (குறள். 524.); 5. பலகாலுஞ் சொல்லுதல்; to repeat, say over and over. "*பயனில்சொல் பாராட்டு வானை*" (குறள்,196.) 6. விரித்துரைத்தல் (வின்.); to expatiate; to dwell on 7. மனத்தில் வைத்தல்; to mind; to be affected by; to take to heart '*துன்பத்தைப் பாராட்டாதே*'

**பாராட்டுக்காரன்** *pārāṭṭu-k-kāraṉ*, பெ. (n.) 1. பகட்டானபோக்குள்ளவன்; fop, finical or showy person. 2. புனைந்து கூறுவோன்; exaggerator.

**பாராட்டுச்சரிப்பு** *pārāṭṭuccarippu*, பெ. (n.) சொற்களை எடுத்துக் கூறுகை(புதுவை.); emphasis on a word.

*[பாராட்டு + உச்சரிப்பு]*

**பாராட்டுந்தாய்** *pārāṭṭuntāy*, பெ. (n.) ஈன்ற தாய் (திவா.); mother.

*[பாராட்டும் + தாய்]*

**பாராட்டுப்பேசு-தல்** *pārāṭṭu-p-pēšu-*, 12. செ.குன்றாவி.(v.t.) புகழ்தல்; to applaud.

*[பாராட்டு + பேசு-,]*

**பாராட்டுவாக்கியம்** *pārāṭṭu-vākkiyam*, பெ. (n.) பகட்டுப் பேச்சு; (புதுவை.) magniloquance

*[ பாராட்டு + வாக்கியம் ]*

*skt. vākya > த. வாக்கியம்*

**பாராணி** *pārāṇi*, பெ. (n.) வண்டியின் அச்சு; axis of the cart.

*[ பார் + ஆணி ]*

**பாராத்தியம்** *pārāttiyam*, பெ. (n.) துன்பம் (இ.வ.) misery, distress.

**பாராதூரம்** *pārā-tūram*, பெ. (n.) ஆழ்ந்த முன் ஆராய்வு (இ.வ.); foresight. '*பாரதூரமறியாதவன்*'.

*[ பாரதூரம் → பாராதூரம் ]*

**பாராபாரி** *pārāpāri*, பெ. (n.) பேரளவு; great dimension. '*முழம் கட்டையென்றால் அகலம் பாராபாரி என்பார்கள்*' (மதி.கள.i,5.)

**பாராமுகம்** *pārāmugam*, பெ. (n.) 1. ஒருவரை பார்த்ததாகக் காட்டிக்கொள்ளாத போக்கு; deliberate mattention; ignoring; '*உதவி கேட்டுவிடுவானோ என்று நினைத்துப் பாராமுகமாக உட்கார்ந்திருந்தார்*' 2. வேண்டுமென்றே ஒதுக்கிப் புறக்கணிக்கும் போக்கு; indifference; neglect "*தொழிலாளர் சிக்கலில் அரசு பாராமுகமாக இருக்கவில்லை*" "*இந்தச் சிக்கலில் நீங்களும் ஏன் பாராமுகமாக இருக்கிறீர்கள்?*"

**பாராயணபத்திரம்²** *pārāyaṇapattiram,* பெ. (n.) ஆசிரியர் மாணாக்கருக்குக் கொடுக்கும் உறுதிச் சீட்டு (யாழ்.அக.); an undertaking given by a teacher to his students.

*[ பாராயணம் + பத்திரம் ]*

*skt. Bathira > த. பத்திரம்*

**பாராயணம்** *pārāyaṇam,* பெ. (n.) சமய நூல்களை முறைப்படி ஓதுதல் அல்லது படித்தல்; ceremonial recitation or reading "*பாராயண மறை நான்கையும்*" *(கம்பரா.நிகும்ப. 139.)* (of served texts such as the religious books) "*கோயிலில் வேத பாராயணம் நடந்து கொண்டிருந்தது*" "*வேதபாராயணப் பனுவன் மூவர் செய்பனுவலதுபகரவோ*" (தாயு.சச்சி.)

**பாராயணன்** *pārāyaṇāṉ,* பெ. (n.) 1. முறையாக ஓதுபவன்; person who adheres to a course of reading. 2. ஒன்றனைக் குறிக்கொள்வோன் (பிங்); person who concentrates his mind on one object.

**பாராயணி¹** *pārāyaṇi,* பெ. (n.) 1. கலைமகள் (யாழ்.அக.); the goddess of clearning. 2. முறையாக ஓதுபவன்–ள்(சங்.அக.); one who adheres to a course of reading.

**பாராயணி²–த்தல்** *pārāyaṇi-,* 4. செ.குன்றா.வி. (v.t.) பாராயணமாகப் படித்தல்;to read ceremoniously, as in pārāyaṇam. "*அதிகமாகப் பயின்றும் பாராயணித்தும்*" (இராமநா. முகவுரை,பக்.17.)

**பாராயணிகன்** *pārāyaṇikaṉ,* பெ. (n.) மாணாக்கன் (யாழ்.அக.); one who studies; student.

*[ பாராயணி → பாராயணிகன் ]*

**பாரார்¹** *pārār,* பெ. (n.) பகைவர் (நிகண்டு.); enemies.

*[ பார் + ஆ (எதிர்மறை) + அர் ]*

**பாரார்²** *pārār,* பெ. (n.) 1. நிலவுலகத்தார்; people of the earth. "பாரார் விசும்புள்ளார்" (திருவாச.8,2.)

*[ பார் + ஆர் ]*

**பாராவாரம்** *pārāvāram,* பெ. (n.) 1. கடல்; sea; ocean. "பாராவாரம் பல்வளம் பழுநிய காராளர் சண்பை" (மணிமே. 3, 58.) "*பாராவாரந் தனைப்பணிவன்*" (சேதுபு.சேதுவந்–24.) 2. கடற்கரை (பிங்.); sea-shore.

*[ பாரா + வாரம் ]*

**பாராளுமன்றம்** *pāraḷu-maṉṟam,* பெ. (n.) காண்க; நாடாளுமன்றம்; see nāḍāḷu-maṉṟam. "*பாராளுமன்ற அவையில் மேலவை, மக்களவை என் இருஅவைகள் இருக்கின்றன*"

**பாரி¹–த்தல்** *pāri-,* 11. செ.கு.வி. (v.i.) 1. பரவுதல்; to spread, expand, to around "இவணலம் பாரித்திட்ட விந்நகர்" (சீவக.706) 2. பருத்தல் (கொ.வ.); to be bulky, huge. "பாரிக்குமார முலை யுமையாட்கும்" (மறைசையந்.) 3. மிகுதியாதல்; to increase. "தாரிப்பின்றிப் பசிதலைக் கொள்வது பாரித்து" (பெரியபு. இளையான்.9.) 4. தோன்றுதல்; to arise, appear, come into being. "பகல் செய் மண்டிலம் பாரித்தாங்கு" (பெரும்பாண்.442.) 5. ஆயத்தப்படுதல்; to prepare. "பாயிய வெழுந்த வேங்கை பாரிக்குமளவில்" (சூளா.துற.19.).

**பாரி²–த்தல்** *pāri-,* **11.** செ.குன்றாவி. (v.t.) **1.** வளர்த்தல்; to foster. "பண்பின்மை பாரிக்கும்நோய்" (குறள்.851). **2.** தோன்றச் செய்தல்; to cause to appear. **3.** அமைத்துக் கொடுத்தல்; to cause to be obtained. "பரமபதம் பாகவத ரனைவருக்கும் பாரித்தானால்" (அரிசமய.பத்திசா.98.) **4.** உண்டாக்குதல்(வின்); to make, form, Construct, Create, Constitute **5.** நிறைத்தல்; to fillup, complete. **6.** அணிதல்; to wear as ornaments, "கைவளை பாரித்தா" (இராமநா.பால.21) **7.** போற்றி வணங்குதல்; to worhsip with flowers,"தடமல ரெட்டினாற் பாரித்தேத்த" (தேவா.961.9.) **8.** வளைத்தல்; to bend, as a bow. "சிலை பாரித்தானே" (சீவக.2285) **9.** உறுதிமொழியெடுத்தல்; taking pledge "பாரித்துத் தானென்னை முற்றப் பருகினான்" (திவ்.திருவாய்.) 4. **10.** விரும்புதல்; to deefire. **11.** காட்டுதல்; to show, manifest, "முழுநஞ்சு நுதல்விழியும் பாரித்தான்" (கோயிற்பு. பதஞ்ச.34.) **12.** பரப்புதல்; to diffuse, "பலகதிர்கள் பாரித்த பைம்பொன் முடியான்" (திவ்.இயற்.3, 44.) **13.** பரக்கக் கூறுதல்; to dwell at length, "பயனில பாரித்துரைக்கு முரை" (குறள், 193.) **14.** வெளிப்படுத்தல்; to reveal, to express. *"தம்பதியென்றுரை பாரித்தான்"* (கோயிற்பு.திருவிழா.2.)

**பாரி³–த்தல்** *pāri-,* **11.** செ.குன்றாவி. (v.i.) **1.** சுமையாதல்; to be heavy. **2.** நோயினாற் கனமாதல்; to fed heavy. *"தலை பாரித்துக் கொண்டிருக்கிறது"* **3.**இன்றியமையாதது ஆதல்; to become momentous.

**பாரி⁴–த்தல்** *pāri-,* செ.குன்றாவி. (v.t.) **1.** சுமத்துதல்; to lay the burden on, ascribe, impute, குற்றம் பாரிக்கின்றான்'. **2.** காத்தல்; to guard, protect. *"இரவிகுலம் பாரிக்கத்தகுவன்"* (கலிங்.224.) *"பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே"* (திருவாச.சிவபு.64.)

**பாரி⁵–த்தல்** *pāri-,* **11.** செ.குன்றாவி. (v.t.) ஒத்தல்; to resemble *'காந்தனாம் பாந்தளைப் பாரித்தலர்ந்தனவே'* (திருக்கோ.324,உரை.)

**பாரி** *pāri,* பெ. (n.) கடையெழுவள்ளல்களுள் ஒருவன்; one among the seven philanthrophist's in later period.

(வேள்பாரி என்னும் இம்பெருமகன் முந்நூறு ஊர்களால் சூழப்பெற்ற பறம்புமலைத் தலைவனாவான். முந்நூறு ஊர்களையும் பரிசிலர்க்கு வழங்கியது மட்டுமன்றி முல்லைக்கொடி படர்தற்கு தான் ஏறிவந்த தேரையே கொழுகொம்பாகத் தந்து பெரும் புகழ் பெற்றான். பாரிமகளிர் எனப்படும் இவன்றன் புதல்வியர் இருவரை. இவன் பெரும்புகழ்கண்டு பொறாத மூவேந்தரும் மகட் கொடை வேண்ட, இவன் மகட்கொடை மறுத்தமையால் மூவேந்தவரும் இவன்றன் மலைக் கோட்டையை முற்றுகையிட்டனர். போர் தொடரவே, பாரிவேள் மாய்ந்தான். அவன் வஞ்சனையால் மாய்க்கப்பட்டான் என்ற கருத்து நிலவுகிறது. இவன்றன் ஆருயிர் நண்பரான புலவர் கபிலர் ஆற்றாமையல் பாடிய பாடல்கள் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளன. பாரிமகளிரைப் பாதுகாப்பாக அழைத்துச் சென்ற கபிலர் அவர்களைத் தக்காரிடத்தே அடைக்கலப் படுத்தித் தாம் வடக்கிருந்து மாய்ந்தார் என்று அறிகிறோம். பறம்புமலையே இப்போதைய பிரான்மலை என்று கூறப்படுகிறது.)

**பாரிக்கைவாரி** *pārikkaivāri,* பெ. (n.) பெருநாகதாளி; prickly pear. (சா.அக.)

**பாரிக்கோடு** *pāri-k-kōḍu,* பெ. (n.) சிறுவர் விளையாட்டு வகை; a kind of children's game. இதில் இருவகை **1.** நாலாளம் பாரி

ஆடுகருவி: ஏறத்தாழ நாற்கசச்சதுரமான ஓர் அரங்கு கீறப்படும்.

ஆடுவார் தொகை: இதை ஆட எண்மர் வேண்டும்.

ஆடிடம்: இது பொட்டலிலும் ஆன்ற முற்றத்திலும் ஆடப்பெறும்.

ஆடுமுறை: நந்நான்கு பேருள்ள இருகட்சி அமைக்கப்படும். உடன்பாட்டின் படியோ, திருவுளச் சீட்டின்படியோ, பிறவகைத் தோற்றபடியோ, ஒரு கட்சியார் அரங்கிற்குள் நிற்க, இன்னொரு கட்சியார் பக்கத்திற் கொருவராகக் கோட்டின் மேல் நின்று கொள்வர், உன்நிற்பார் கோட்டின்மேல் நிற்பாராகில் தொடப்படாமல் வெளியேற வேண்டும் அங்ஙனம் ஒருவன் வெளியேறி விடினும்

உள்நிற்பார்க்கு வெற்றியாய் ஆட்டை முடிந்துவிடும். முதலில் வெளியேறுபவன் கோட்டின் மேல் நிற்பாருள் ஒருவனால் தொடப்பட்டுவிடின், மறிப்பார்க்கு (அதாவது கோட்டின் மேல் நிற்பார்க்கு) வெற்றியாய் ஆட்டை முடியும். அதன்பின் மறிப்பார் உள்நிற்பாராகவும், உள்நிற்பார் மறிப்பாராகவும் மாறவேண்டும்.

2. எட்டாளம் பாரி

இது எண் கசச் சதுரங் கீறிப் பதினறுவரால் ஆடப்படும், எண்மர் உள்நிற்க, எண்மர் பக்கத்திற்கிருவராகக் கோட்டின் மேல் நின்று மறிப்பர். நாலாளம் பாரியும் எட்டாளம் பாரியும் ஆடுமுறையொன்றே. (தமிழ்நாட்டு விளையாட்டுக்கள்.பக்.52.)

*[பாரி + கோடு]*

**பாரிகாரர்** *pārikārar,* பெ. (n.) இராக்காவற் காரர்;(சி.சி.4; 32.சிவாக்.) night watchman.

*[ பாரி + காரர் ]*

**பாரிசத்தான்** *pārišattān,* பெ. (n.) 1. நண்பன்;(புதுவை.) friend. 2. ஒரு கட்சியைச் சேர்ந்தவன்(இ.வ.); partisan.

**பாரிசாத்தி** *pārišātti,* பெ. (n.) பலாமரம்; jack tree. (சா.அக.)

**பாரிசாதா** *pārišādā,* பெ. (n.) அமுக்கிராங் கிழங்கு; horse root. (சா.அக.)

**பாரிடம்**[1] *pāriḍam,* பெ. (n.) நிலம் (சங்.அக.); earth.

*[ பார் + இடம் ]*

**பாரிடம்**[2] *pāriḍam,* பெ. (n.) பூதம்; demon; goblin. *"குறுந்தாட் பாரிடங்குளிப்ப"* (கல்லா.34.7.)

**பாரிண்டி** *pāriṇḍi,* பெ. (n.) சிவனார்வேம்பு; shiva's neem. (சா.அக.)

**பாரித்திரம்** *pārittiram,* பெ. (n.) முருங்கை(வைத்தியபரி.); drumstick

**பாரித்துரை-த்தல்** *pārittural-,* 4. செ.கு.வி.(v.i.) விரித்துரைத்தல்; to lecture *"பயனில-பாரித் துரைக்கு முரை"* (குறள்,193.)

*[பாரித்து + உரை-,]*

**பாரிப்பு**[1] *pārippu,* பெ. (n.) 1. பருமன்; bulkiness, largeness, hugeness. 2. பரப்பு; expanse, extent. *"ஆவியின் தன்மை யளவல்ல பாரிப்பு"* (திவ்.இயற்.திருவிருத்.67) 3. விருப்பம்; desire, pleasure. *"கோரின காரியத்தளவல்ல இப்பாரிப்பு"* (ஈடு,3,7,2.) 4. வீரச்செயல்; heroic deed, feat of strength. *"மதுகைடவர் பாரிப்பு"* (குமரேச.47.).

**பாரிப்பு²** *pārippu,* பெ. (n.) 1. கனம்; heaviness, weight, gravity. "கதிர்முலைப் பாரிப்புக் கண்டு" (இலக்.வி.523, உரை). 2. அதிகப்படுகை (வின்.); seriousness. (திருக்கோ.132, உரை).

**பாரிப்பு** *pārippu,* பெ. (n.) ஒருப்பாடு; aggregarim; undivided attention to an object "*கனித்தொண்டைவாய்ச்சி கதிர் முலைப்பாரிப்புக் கண்டு*" (திருக்கோ.132.)

**பாரிபறம்பு** *pāriparambu,* பெ. (n.) பாரியின் மலைநாடு; a hill region belonging to the chief pāri.

"*பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்*" (*குறுந்.196–3*) "*உரைசால் வண்புகழ்ப் பாரி பறம்பின்*" (அகம்.303–10)

"*பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்*" (புறநா.176–9)

*[பாரி + பறம்பு]*

**பாரிபாசம்** *pāripāsam,* பெ. (n.) குடைவேல்; umbrella thron babool.

**பாரிபாவியம்** *pāri-pāviyam,* பெ. (n.) 1. கோட்டம்; arabian costus. 2. ஒருவகை மாத்திரை; a pill (சா.அக.)

**பாரிமகளிர்** (சங்ககாலம்) *pāri-magaḷir,* பெ. (n.) வள்ளல் பாரியின் பெண்மக்கள்; daughters of āri, a philontharaphist. (இவர்களைப் பற்றிய பல கதைகள் தமிழகத்தில் வழங்குகின்றன. புறநானூற்றில் '*அற்றைத் திங்கள்*' (112) என்று தொடங்கும் பாடல் இவர்கள் பாடியதாகும். இப்பாட்டில் இவர்கள் பெயர் கூறப்பெறவில்லை. பிற்காலக் கதையிலே இவர்கள் பெயர் அங்கவை, சங்கவை என வழங்குகின்றன. பாரி இறந்த பின்னர் அவர் நண்பரான கபிலர் இவர்களை விச்சிக்கோ, இருங்கோவேள் என்ற குறுநில மன்னர்களிடம் அழைத்துச் சென்று மணக்க வேண்டியதாகவும், அவர்கள் மூவேந்தருக்கும் பகைவனான பாரியின் மகளிரை மணக்க அஞ்சினாரெனவும், பின்னர் வேறு வழியின்றிப் பார்ப்பாரிடம் இவர்களைத் அடைக்கலப் படுத்தி வடக்கிருந்து உயிர் துறந்தார் என்றும் புறநானூற்றுச் செய்யுட்கள் (200,201) கூறுகின்றன. பாரி மகளிர் மழையில் நனைந்து வருந்திய ஔவையாருக்கு தம் *சீலைச்* சிற்றாடையினையும், கீரை உணவினையும் கொடுக்க, ஔவையார் அவர்கள் அன்பினைப் பாராட்டிப், பாடிய செய்தி 'பாரி பறித்த பரியும்' என்னும் தனிப்பாடலால் அறியப்படுகின்றது. ஔவையார் மூவேந்தரையும் இணக்கப்படுத்திப் பாரிமகளிர் இருவரையும் திருக்கோயிலூர் மலையமான் புதல்வர் இருவர்க்கும் மணமுடித்துவைத்தார் என்று பிற்காலக் கதைகள் கூறுகின்றன.

"*கைவண் பாரி மகளி ரென்றவென் தேற்றாப் புன்சொ னோற்றிசிற் பெரும*" (புறம்.202–15)

**பாரிய** *pāriya,* பெ.அ (adj.) 1. பெரும்; மிகுந்த(இலங்.); great "*பாரிய முயற்சி*" "*பாரிய சாதனை*" 2. அரிய; அருமையான; rare. "*பாரிய கண்டுபிடிப்பு*" "*பாரிய கலைஞர்*"

*[ பரிய → பாரிய ]*

**பாரியம்** *pāriyam,* பெ. (n.) 1. கடுக்காய்; gall nut. 2. முருக்கு; bastard teak. (சா.அக.)

மறுவ: கலியாணமுருங்கை.

**பாரியன்** *pāriyaṉ,* பெ. (n.) பசளை; spinach. (சா.அக.)

**பாரிவேள்** *pāri,* பெ. (n.) *பாரி* பார்க்க; see *pāri.* *"பாரிவேள்பாற் பாடினை செலினே"* (புறநா.105–8)

*[பாரி + வேள்]*

**பாருவியம்** *pāruviyam,* பெ. (n.) 1. அகில்; eagle wood. 2. ஈச்சம்; date tree. 3. கைகால் திண்மை; hardness of limbs. (சா.அக.).

**பாருள்ளம்** *pārul|am,* பெ. (n.) *பூனைக்கண்ணி*(தஞ்சை.மீனவ.) பார்க்க; see *pūnai-k-kanni.*

**பாரை** *pārai,* பெ. (n.) 1. கடப்பாரை; crowbar. "பாரைக்கு நெக்குவிடாப்பாறை" (நல்வழி,33.) 2. புற்செதுக்குங்கருவி; small hoe for cutting grass. 3. எறிபடைவகை; a kind of missile "பாரையின் றலைய" (கம்பரா.நாக.பாச.110.) 4. செடிவகை; a plant. "உரிந்த பாறை" (கலிங்.63.) 5. மீன்வகை; horse mackerel. "பாரைச் சேல் மைப்பூகத் தேறி" (குனிப்பா. 1. 175, 33.)

க.ஹாஷ. ம.பார. து.பேதரங்கி

**பாரை** *pārai,* பெ. (n.) 1. பாரைமீன்; horse mackeral of the caranx genus. 2. இருப்புலக்கை iron pestle. 3. கற்செய்ந் நஞ்சு; a mineral poison found at the bed of rocks. (சா.அக.)

**பாரைக்கரு** *pārai-k-karu,* பெ. (n.) பாறையுப்பிலிருந்து செய்யப்படும் கல்லுப்பு; a chemical salt prepared from rock salt as per process laid down in the said work. (சா.அக.)

*[பாரை + கரு]*

**பாரைக்கிளுவை** *pārai-k-kiluvai,* பெ. (n.) ஒருவகைக் கிளுவை மரம்; indian balsam tree. (சா.அக.)

*[பாரை + கிளுவை]*

**பாரைக்குச்சி** *pārai-k-kucci,* பெ. (n.) கடப்பாரை; crowbar.

மறுவ : *பாறைக்கோல்*

*[ பாரை + குச்சி ]*

**பாரைமீன்** *pāraimīn,* பெ. (n.) பாறையின் இடுக்கில் காணக்கூடும் கடல்மீன்; horse mackerel. "பாரைச்சேல் மைப்பூகத்தேறி" (குனிப்பா.i,175,53.) வகைகள்:

1. அம்பட்டன் பாரை
2. இராமப்பாரை(நாமப்பாரை
3. ஆக்காம்பாரை
4. இரும்பாரை
5. இராப்பாரை
6. ஒட்டாம்பாரை
7. கருக்காம்பாரை
8. கட்டாம் பாரை
9. கட்டாஞ்சிப் பாரை
10. கள்ளப் பாரை
11. கருந்தலைப் பாரை
12. கண்ணிப் பாரை
13. கரிமூஞ்சிப் பாரை
14. காசாம் பாரை
15. களம் பாரை
16. கொடுந்தலைப் பாரை

17. குளும் பாரை

18. குமரப் பாரை

19. கும்பாரை

20. செம்பாரை

21. செங்கண்ணிப் பாரை

22. சேங்கட் பாரை

23. சேங்கடாப் பாரை

24. சித்திட்டிப்பாரை அல்லது சித்தி ரெட்டிப் பாரை

25. கராம் பாரை

26. தங்கப் பாரை

27. தக்கான் பாரை

28. தளம் பாரை

29. தோல் பாரை

30. தும்பைப் பாரை

31. புள்ளிப் பாரை

32. மெத்துப் பாரை

33. மொசும் பாரை

34. மட்டப் பாரை

35. வரிப்பாரை

36. வால் பாரை

37. வாரம் பாரை

38. வாளம் பாரை

39. பெரும் பாரை

40. தேனம் பாரை

41. பாட்டிப் பாரை

42. நீலகிரி அக்கம்பாரை

43. தேளப் பாரை

44. கரண்டிப் பாரை

45. தேங்காய்ப் பாரை

46. சூரப்பாரை



**பாரைமுட்டான்** *păraimuṭṭān*, பெ. (n.) ஒரு மீன் (முகவைமீனவ); a kind of fish.

*[பாரை + முட்டான்]*



**பாரையாளி** *pārai-y-āḷi*, பெ. (n.) கீழ்க்கடற் கரையில் கிடைக்கும் ஒரு வகைச் சிப்பி; rock oyster in coramandal coast. (சா.அக.)

*[பாரை + ஆளி]* ஆளி = சிப்பியுள் ஒரு வகை

**பாரையிரால்** *pārai-y-irāl*, பெ. (n.) கடலடிப்பாரையோரங்களில் வாழும் கடலிறால்; rock craw fish, sea prawn. (சா.அக.)

*[பாரை + இறால்]*



**பாரையிலவு** *pārai-y-ilavu,* பெ. (n.) காட்டிலவு; copsuled silk cotton. (சா.அக.)

*[பாரை + இலவு]*

**பாரையுப்புச் சுண்ணம்** *pārai-y-uppu-c-cuṇṇam,* பெ. (n.) பாரையுப்புடன் கடைச் சரக்குகளையும் சேர்த்துக் காய்ச்சி வேகமும் வலுவும் உண்டாகும்படி அணியம் செய்த ஒரு வகைச் சுண்ணம்; a universal medicine of high potency and repute prepared according to the siddha process, (சா.அக.)

*[பாரை + உப்பு + சுண்ணம்]*

**பாரையெலும்பு** *pārai-y-elumbu,* பெ. (n.) காதின் பின்புற எலும்பு; the petrous portion of the temporal bone. (சா.அக.).

*[பாரை + எலும்பு]*

**பாரோலை** *pār-ōlai,* பெ. (n.) பழம் வைக்கப்படும் பனையோலை; palmyra leaf on which fruits are kept.

*[ஒருகா: வார் → பார் + ஓலை]*

**பால்[1]** *pāl,* பெ. (n.) 1. குழவி, குட்டி முதலியவற்றை ஊட்டி வளர்ப்பதற்குத் தாய் முலையினின்று சுரக்கும் வெண்மையான நீர்மப்பொருள்; milk. "நல்லான் றீம்பால்" (குறுந்.27) 2. பால் தெளித்தல் பார்க்க; see *parrelittal.* 3. மரம் முதலியவற்றிலிருந்து வடியும் நீர்மப் பொருள்; milky juice in plants, fruits, etc. 4. அம்மை முத்திலிருந்து கசியும் நீர்மப்பொருள்; lymph matter, fluid in pustules as in small-pox. 5. வெண்மை; whiteness. "பாற்றிரு நீற்றெம்பரமனை" (திருவாச.44,6) 6. சாறு; liquid extract. "அரக்கின்வட்டு நாவடிக்கும் பான் மடுத்து" (நற்.341.)

*'பால் ஆரியனுக்கு, பசு ராமநாதசுவாமிக்கு'* (பழ.)

*'பால் இருக்கிறது பாக்கியம் இருக்கிறது, பாலிலே போட்டுக்குடிக்கப் பத்துப் பருக்கைக்கு வழி இல்லை'* (பழ.)

*'பால் நக்காத பூனையும் பரிதானம் வாங்காத பிராமணனும் உண்டா?'* (பழ.)

*'பால் குடிக்கப் பாக்கியமில்லாதவன் விலைக்குப் பால் வாங்கினானாம் அதையும் பூனை குடித்ததாம்'* (பழ.)

*"பாலுந் தேனுஞ் சேர்ந்தாற் போல"* (பழ.)

*"பாலுக்குச் சீனி இல்லை என்றோர்க்கும், கூழுக்குக் கறி இல்லை என்றோர்க்கும் விசாரம் ஒன்றே"* (பழ.)

*"பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன்"* (பழ.)

*"பாலுக்கு மிஞ்சிய சுவையுமில்லை, பல்லக்குக்கு மிஞ்சிய சொகுசும் இல்லை"* (பழ.)

*"பாலுக்கு வந்த பூனை மோரைக் குடிக்குமா?"* (பழ.)

*"பாலுமாம் மருந்தாம்"* (பழ.)

*"பாலுஞ் சோறுமாய்த் தின்கிற பாளைக்காரன் மோட்டு வளையை எண்ணுவது போல."* (பழ.)

*"பாலும் பதக்கும், மோரும் பதக்கோ?"*

'பாலைப் பார்த்துப் பசுவைக் கொள்; தாயைப் பார்த்து மகளைக் கொள்ளு!' (பழ.)

'பாலை ஊட்டுவார்கள் பாக்கியத்தை ஊட்டுவார்களா?' (பழ.)

'பாலைக் குடித்தவனுக்குப் பால் ஏப்பம் வரும்; கள்ளைக் குடித்தவனுக்குக் கள் ஏப்பம் வரும்' (பழ.)

'பாலைப் பார்க்கிறதா; பானையைப் பார்க்கிறதா?' (பழ.)

'பாலோடாயினும் காலத்தே உண்' (பழ.)

தெ. பாலு. க. ம. பால்.

**பால்²** *pāl*, பெ. (n.) **1.** பகுதி; part, portion, share, section, fraction "*பால்வரை கிளவி*" (தொல்.எழுத்.165.) **2.** பிரித்துக்கொடுக்கை; dividing, apportioning. "*பாலுங் கொளாலும் வல்லோய்*" (பதிற்றுப்.16,19.) **3.** பாதி; moiety; middle "*பானாளிரவில்*" (கலித்.90.) **4.** பக்கம்; side. "*பால்கோடாது*" (ஞானா.17,6.) **5.** வரிசை; line, row. "*பெரியார்தம் பாலிருந்தக்கால்*" (ஆசாரக்.25.) **6.** குலம்; caste. "*கீழ்ப்பா லொருவன் கற்பின்*" (புறநா.183.) **7.** திக்கு (பிங்.); point of the compass, quarter, **8.** இடம் (யாழ்.அக.); place, region, location, situation. **9.** குணம்.(பிங்.); quality, property, condition. **10.** இயல்பு. (பிங்.); nature, state. **11.** உரிமை (வின்.); right, title **12.** ஊழ்; fate destiny. "*பால்வரைதெய்வம்*" (தொல். சொல்.58.) **13.** தகுதி; fitness **14.** ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் என்ற பிரிவு; classification of nouns and verbs, five in number, viz., āṇ-pāl, peṇ-pāl,palar-pāl, oṉṟaṉ-pāl, palaviṉ-pāl "*ஐம்பால்*" (தொல்.சொல்.10.) **15.** ஒருமை, பன்மை என்ற இருவகைப்பாகுபாடு; classification of number in nowns and verbs, two in number, viz., orumai, paṉmai. "*பன்மைப் பாலாற் கூறுதல்*" (தொல்.சொல்.62, இளம்பூ.) **16.** அகத்திணை, புறத்திணை என்ற பாகுபாடு (சிலப்.பதிகம். உரை, பக்.14.); classification into agattiṉai, and puṟattiṉai, **17.** இடையர், குறும்பர்களின் வகை(E.T.V, 450.); a subdivision of iḍaiyar and kuṟumbar caste.

தெ. பாலு

க. பால்

**பால்ஊத்தாங்குச்சி** *pāl ūttā-ṅ-kucci*, பெ. (n.) வெண்ணிறத்தில் பளபளப்பாய்க் காணக்கூடுவதொரு சங்கு (குஞ்சை. மீனவ.); white and glittered conch.

*[பால் + ஊத்தாங்குச்சி]*

**பால்ஒடுவை** *pāloḍuvai*, பெ. (n.) கொடிப்பாலை; twining swallow root. (சா.அக.)

**பால்கட்டு–தல்** *pāl-kaṭṭu-*, செ.கு.வி. பால்வை (வின்.) பார்க்க; see pālvai.

*[பால் + கட்டு–.]*

**பால்கடுக்காய்** *pālkaḍukkāy*, பெ. (n.) வெள்ளைக் கடுக்காய்; white gall nut. (சா.அக.)

மறுவ: பாலகண்டிதம்.

*[பால் + கடுக்காய்]*

**பால்கவா** *pālkavā,* திரட்டுப்பாலென்னும் சிற்றுண்டிவகை; (இந்துபாக.) a confection made of cream and sugar with certain other ingredients.

க. ஹால்கோவா.

மறுவ. பால்கோவா.

*[பால் + Mhr. கோவா → -கவா]*

**பால்கவுடா** *pālkavuḍā,* பெ. (n.) வெண்மையான மூக்குப்பகுதியுடைய வளைந்த சங்கு (செங்கை, மீனவ.); bend and white nosed conch.

**பால்களர்** *pāl-kaḷar,* பெ. (n.) விரைவில் நீர் காய்வதும் எப்பயிரும் ஓரளவு விளைவதுமான களர்மண் நிலம்; semy marshy land.

*[பால் + களர்]*

**பால்களும்பு** *pāl-kaḷumbu,* பெ. (n.) படைபோல் கழுத்தில் உருவாகும் புண்; ringworm like-ulcer which is in the neck.

*[பால் + களும்பு]*

**பால்கற–த்தல்** *pāl-kaṟa,* 3. செ.குன்றாவி. (v.t.) ஆன் முதலியவற்றின் மடியிலிருந்து பாலைக் கறந்தெடுத்தல்; to milk. as a cow or other animal.

*[பால் + கற–,]*

**பால்காட்டாஞ்சி** *pāl-kāṭṭāñji,* பெ. (n.) எழுமுள்ளுக் கொடி; a kind of herb.

**பால்காய்ச்சுதல்** *pāl-kāyccutal,* பெ. (n.) புதுவீட்டில் குடிப்புகுந்து அதன் அறிகுறியாகக் பாலைக் காய்ச்சும் சிறப்பு நேர்வு; ceremony of boiling the milk as a sign of house warming.

*[பால் + காய்ச்சு–,]*

**பால்குடம்** *pālkuḍam,* பெ. (n.) முருகன், மாரியம்மன் முதலிய தெய்வங்களுக்கு பத்தர்கள் நேர்த்திக் கடனாகப் பால் நிரம்பிய குடங்களைத் தலையில் தாங்கிச் சென்று பாலாட்டுச் செய்யும் விழா; festival in which devotes carry puts filled with milk to idols of murugan mariyamman etc., in fulfilment of one's vow.

*[பால் + குடம்]*

**பால்குடிமற–த்தல்** *pāl-kuḍi-maṟa-,* 3. செ.கு.வி. (v.i.) *பால்மறத்தல்* பார்க்க; see *pālmaṟa-,*

*[பால்குடி + மற–,]*

**பால்குறிஞ்சா** *pālkuṟiñjā,* பெ. (n.) பால் மிகவுடைய குறிஞ்சா என்னும் மூலிகை; milk swallow wort. (சா.அக.)

**பால்கெண்டை** *pālkeṇḍai,* பெ. (n.) ***பாற்கெண்டை*** பார்க்க; see *pāṟ-keṇḍai.*

*[பால் + கெண்டை]*



**பால்கொடு–த்தல்** *pāl-koḍu-,* 4. செ.கு.வி. (v.i.) முலையுண்ணுமாறு கொடுத்தல்; to suckle.

*[பால் + கொடு–,]*

**பால்கொள்(ளு)தல்** pāl-koḷ-, 12. செ.கு.வி.(v.i.) *பால்பிடி–* பார்க்க; see *pālpiḍi-,*

*[பால் + கொள்–,]*

**பால்கோவா** *pāl-kōvā,* பெ. (n.) திரட்டுப் பாலென்னும் சிற்றுண்டி வகை (இந்துபாக.); a confection made of cream and sugar with certain other ingredients.

*[பால் + கோவா]*

கோவா–mhr

மறுவ: பால்கவா.

**பால்சங்கு** *pālšaṅgu,* பெ. (n.) 1. சிறு குழந்தைகளுக்குப் பால் அல்லது மருந்து புகட்டப் பயன்படும் சிறுவெண்சங்கு; small white conch used for administering medicine to the children 2. வெள்ளைச் சங்கு; white conch. (சா.அக.)

*[பால் + சங்கு]*

**பால்சிதறு–தல்** *pāl-šidaṟu-.* 5. செ.கு.வி. (v.i.) காற்றினால் தவசமணி பால்வற்றி வெடித்துப் பதராதல்; to be dry of the milk, as the tender, grain by wind.

*[பால் + சிதறு–,]*

**பால்சுதந்திரம்** *pāl-šudandiram,* பெ. (n.) சிற்றூர் வேலைக்காரர்களுக்குப் படியாகக் கொடுக்கும் தவசம்; allowance in kind to village officers.

*[பால் + skt sua tantrā> த. சுதந்திரம்]*

**பால்சுரப்படக்கி** *pālšurappaḍakki,* பெ. (n.) 1. மல்லிகைப்பூ; jasmine flower 2. பால்சுரப்பைக் குறைக்கும் மருந்துப் பொருள்; any drug that decreases or arrests secretion of milk. (சா.அக.)

*[பால் + சுரப்பு + அடக்கி]*

**பால்சுரம்** *pāl-šuram,* பெ. (n.) மகளிர்க்குப் பால் மார்பிற்கட்டிக்கொள்ளு வதனாலுண்டாகும் காய்ச்சல்; milk fever.

*[பால் + skt jvara> த. சுரம்]*

**பால்சுறா** pālsuṟā, பெ. (n.) வெள்ளைச் சுறாமீன்; white shark. (சா.அக.)

*[பால் + சுறா]*

**பால்சொரி–தல்** *pāl-šori-.* 3. 2செ.கு.வி. (v.i.) மாடு முதலியவற்றின் மடியிலிருந்து பால் தானே வழிதல்; to have a free flow of milk from udder, from tender feelings towards the calf. *"மாற்றாதே பால்சொரியும்......பசுக்கள்"* (திவ்.திருப்பா.21.)

*[பால் + சொரி –,]*

**பால்சொரிக்கீரை** *pālšorikkīrai,* பெ. (n.) ஒரு வகையுண்ணும் கீரை; a kind of edible greens. (சா.அக.)

*[பால் + சொரி + கீரை]*

ஒருகா: *[பாற்சொற்றி → பால்சொரி.]*

**பால்சோர்–தல்** *pāl-šōr-,* செ.கு.வி. (v.i.) *பால்சொரி–,* பார்க்க; see *pāl-šori* "*முலைவழியே நின்று பால்சோர*" (திவ்.திருப்பா.12.) see *pāl-šori-,*

**பால்தரகு** *pāl-taragu,* பெ. (n.) கால்நடை வரிவகை(R.T); a tax on cattle

க. பால்தரகு

*[பால் + தரகு]*

**பால்திருக்கை** *pāltirukkai,* பெ. (n.) திருக்கை மீன்வகை; a kind of tirukkai fish

*[பால் + திருக்கை]*



**பால்துத்தம்** *pāl-tuttam,* பெ. (n.) துத்தம் (பைஷஜ.); sulphate of zinc;

*[பால் + துத்தம்]*

**பால்தெளித்தல்** pāl-teḷittal, பெ. (n.) எரியூட்டிய அல்லது அடக்கம் பண்ணிய மறுநாள் அவ்விடத்திற் பாலும் ஒன்பான் தவசமும் சேர்த்துத் தெளிக்கும் சடங்கு; ceremony of sprinkling milk and scattering cereals in the place where a corpse has been burnt or buried, on the day after cremation or burial.

*[பால் + தெளித்தல்]*

**பால்தேமல்** *pāl-tēmal,* பெ. (n.) ஒருவகைச் சுணங்கு; a kind of freckle.

*[பால் + தேமல்]*

**பால்தோய்–த்தல்** pāl-tōy-, 17. செ.கு.வி. (v.i.) உறைகுத்துதல்; to curdle milk by adding a tiny quantity of fermenting agent.

*[பால் + தோய்–,]*

**பால்தோய்தல்** *pāl-tōytal,* பெ. (n.) பால் தயிராக மாறுகை (வின்.); curdling of milk.

*[பால் + தோய்தல்]*

**பால்நசனை** pāl-našaṉai, பெ. (n.) செந்நிறமுள்ள மணிகளில் வெண்ணிறம் பாய்ந்திருக்கை (கொ.வ.); whiteness in a ruby.

**பால்நண்டு** *pāl-naṇḍu,* பெ. (n.) வெள்ளை நண்டு (கொ.வ.); white crab.

*[பால் + நண்டு]*

மறுவ. வெள்ளைக்கழிநண்டு

**பால்நரம்பு** pāl-narambu, பெ. (n.) தாய்முலையிற் பால் தோன்றும் போது காணும் பச்சை நரம்பு (வின்.); blue lacteal vein, appearing prominently in a young mother with a suckling child.

*[பால் + நரம்பு]*

**பால்நீர்முள்ளி** *pālnīrmuḷḷi,* பெ. (n.) வெள்ளை நீர் முள்ளி; cow thorn bearing white flowers. (சா.அக.)

*[பால்+நீர்முள்ளி]*

**பால்பகாவஃறிணைப்பெயர்** pāl-pagā-v-akṟiṇai-p-peyar, பெ. (n.) ஒன்றன்பால், பலவின்பால், இரண்டிற்கும் பொதுவான பெயர் (நன்.281.); (gram.) neuter nouns which are common to both singular and plural. "பால்பகாவஃறிணைப் பெயர்கள் பாற்பொதுமைய" (நன்.21.)

பால்+பகு+ஆ. (எ.ம.) +அஃறிணைப்பெயர்

**பால்பல்** *pālpal,* பெ. (n.) குழந்தைப் பருவத்தில் தோன்றிப் பின்பு விழுந்துவிடக்கூடிய பல்; milk-tooth.

*[பால்+பல்]*

**பால்பற்றிச்சொல்—லுதல்** *pāl-paṟṟi-c-col-,* 13. செ.கு.வி. (v.i.) ஒருசார்பாய்ப் பேசுதல்; to express a partisan view. *"என்பெறினும் பால் பற்றிச் சொல்லா விடுதலும்"* (திரிகடு.27.)

**பால்பாச்சான்** *pāl-pāccāṉ,* பெ. (n.) மரக்கள்ளி; spurge tree (சா.அக.)

*[பால்+பாச்சான்]*

**பால்பாய்—தல்** *pāl-pāydal,* 3. செ.கு.வி 1. RÖŠ TÖ¥ RÖÚ] ÙT£hÛL; abundant secretion of milk in a woman's breasts, from tender feeling towards her child. *"பால்பாய்ந்த கொங்கை"* (திவ்.பெரியாழ். 1,2,3.) 2. வெட்டு முதலியவற்றால் மரத்தினின்று பால் வெளிப்படுகை (வின்.); exuding of milky juice from a tapped tree.

பால்+பாய்தல்

**பால்பிடி—த்தல்** pāl-piḍi-, 4. செ.கு.வி. (v.i.) நென்மணி முதலியவற்றில் பால்பற்றுதல் (கொ.வ.); to be in the milk, said of grain, etc;

*[பால் + பிடி—,]*

**பால்பிடிபதம்** *pāl-piḍi-padam,* பெ. (n.) பயிர்க்கதிரிற் பால் உண்டாந்தருணம் (வின்.); stage of grain being in the milk

*[பால்பிடி + பதம்]*

**பால்பீர்க்கு** *pālpīrkku,* பெ. (n.) வெண்பீர்க்கு; a white species of gourd.

மறுவ. பேய்ப்பீர்க்கு

*[பால் + பீர்க்கு]*

**பால்புங்கு** *pālpuṅgu,* பெ. (n.) தட்டைப்புங்கு; wild pongamia (சா.அக.)

மறுவ: காட்டுப் புங்கு.

**பால்பொழி—தல்** *pālpoḻi-,* 4. செ.கு.வி. (v.i.) செழிப்பாயிருத்தல்; to be prosperous; to overflow with milk and honey. *'அந்த நாட்டில் பால்பொழிகிறது.'*

*[பால் + பொழி—,]*

**பால்மடி** *pāl-maḍi,* பெ. (n.) நிரம்பக் கறக்கக்கூடிய கால்நடைகளின் மடி (வின்.); udder teeming with milk.

*[பால் + மடி]*

**பால்மடியழற்சி** *pāl-maḍi-y-alarci,* பெ. (n.) பசுமுதலியவற்றின் முலைக்காம்பு வெடித் திருக்கை (M.L.); deseased condition of the udders.

*[பால்மடி + அழற்சி]*

**பால்மண்** *pālmaṉ,* பெ. (n.) தூய்மையான பால்மண்; pure mud. (சா.அக.)

*[பால் + மண்]*

**பால்மணம்** *pāl-maṉam,* பெ. (n.) 1. பாலின் நறுமணம் (வின்.); smell of milk 2. கஞ்சி காய்ச்சுகையில் பக்குவமானவுடன் உண்டாகும் மணம் (வின்.); smell of rice-gruel at a proper stage of boiling 3. பால்குடி குழந்தையின் வாயிலிருந்து வீசும் பால்மணம்; smell of milk of a suckling child. '*பால்மணம் மாறாத குழந்தை*' 4. முற்றின அம்மைப் பாலின் நாற்றம்; odour emitted from fully developed pustules of small-pox.

*[பால் + மணம்]*

**பால்மணிக்கை** *pālmaṉikkai,* பெ. (n.) சோம்பு; anise seed. **(சா.அக.)**

*[பால் + மணிக்கை]*

**பால்மர-த்தல்** *pāl-mara-,* செ.கு.வி. (v.i) *பால்மறு-,* பார்க்க, see pālmaṟu-,

*[பால் + மர-,]*

**பால்மரம்** pāl-maram, பெ. (n.) பாலுள்ள மரம் (வின்.); sappy tree.

மறுவ: ஆலமரம்

*[பால் + மணம்]*

**பால்மற-த்தல்** *pāl-maṟa-,* செ.கு.வி. (v.i.) குழந்தை பால்குடிப்பதைத் தவிர்தல்; to be weaned.

*[பால் + மற-,]*

**பால்மறு-த்தல்** *pāl-maṟu,* செ.கு.வி. (v.i.) 1. *பால்மற-.* பார்க்க see *pāl-maṟa.* 2. பால்வற்றிப்போதல் (யாழ்.அக.); to get dry of milk.

*[பால் + மறு-,]*

**பால்மறை** *pāl-maṟai,* பெ. (n.) *தொழுமறை* (மாட்டுவா.19.) பார்க்க; see *tōḻumaṟai.* a defect in cattle.

**பால்மாங்காய்** *pāl-māṅgāy,* **பெ.** (n.) மா, பலா முதலான **பழங்கலந்த பாலுணவு** (இ.வ.); a kind of fruit salad.

***[பால் + மாங்காய்]***

**பால்மாறிக்கை** *pāl-māṟikkai,* பெ. (n.) **சோம்பியிருக்கை** (யாழ்.அக.) idleness, sluggishness.

*[பால்மாறுகை → பால்மாறிக்கை]*

**பால்மாறு¹-தல்** *pāl-māṟu-,* **9.** செ.கு.வி. (v.i.) 1. பால்வற்றிப் போதல்; to become dry of milk. 2. தாய்ப்பாலுண்ணாது பிறவுணவு கொள்ளுதல்; to be weaned.

*[பால் + மாறு-,]*

**பால்மாறு²–தல்** *pāl-māṟu-*, **9.** செ.கு.வி. (v.i.) **1.** சோம்பியிருத்தல்; to be lazy. '*எழுத்துக்குப் பால்மாறின கணக்கனும், உடுக்கைக்குப் பால்மாறிய தாசியும் கெடுவர்*' **2.** பின் வாங்குதல்; to fail, backslide. '*பணத்துக்குப் பால்மாறாமல் அவர்கள் விருப்பம்போற்கொடு*' (இ.வ.)

தெ. பாலுமாலு

*[பால் + மாறு–,]*

**பால்மீன்¹** *pāl-mīṉ*, பெ. (n.) நீலநிறமுள்ளதும் மூன்றடி வளர்வதுமான கெண்டைமீன் வகை. (வின்.) milkfish, brillant glossy blue, attaining 3ft. in length.

(கடலில் பத்தடி உயரம் வரை துள்ளக்கூடியதும் நீண்டுருண்டு காணப்படுங் கெண்டைமீன் (சங்.நூல். மீன்கள்.); a kind of see fish.)

*[பால் + மீன்]*



**பால்முட்டான்** *pālmuṭṭāṉ*, பெ. (n.) பால் போலும் வெண்மையான சிறு கிளிஞ்சில் மீன் வகை. (தஞ்சைமீனா.) a kind of white shell fish

**பால்முடங்கி¹** *pālmuḍaṅgi*, பெ. (n.) வேலிப்பருத்தி என்னும் மூலிகை; a tainer title being a hedge plant bearing fruit with cotton fibres in side. (dogsbame). (சா.அக.)

மறுவ: உத்தாமணி, உத்தமதாளி, அச்சாணி மூலி,

*[பால்+முடங்கி]*



**பால்முடங்கி²** *pāl-muḍaṅgi*, பெ. (n.) நிலப்பூசனி (யாழ்.அக.) பார்க்க; *panicled bindweed.*

மறுவ: பால்மோடிக்கம்.

**பால்முலைச்சி** *pālmulaicci*, பெ. (n.) சுணங்கமரம் (சா.அக.) பார்க்க; see *cuṇaṅgamaram.*

*[பால்+முலைச்சி]*

**பால்மூத்திரம்** *pāl-mūttiram*, பெ. (n.) வெள்ளையாக இறங்கும் சிறுநீர் (M.L.); urine of a morbid condition. chyluria.

*[பால் + மூத்திரம்]*

**பால்மேனியாள்** *pāl-mēṉiyāḷ*, பெ. (n.) கலைமகள்; sarasvati, milk-white in colour.

*[பால் + மேனியாள்]*

**பால்மோடிக்காய்** *pāl-mōḍi-k-kāy,* பெ. (n.) *பால்முடங்கி* (வின்.) பார்க்க, see *pālmuḍaṅgi*

*[பால் + மோடிக்காய்]*

**பால்மோதகம்** *pāl-mōdagam,* பெ. (n.) பாலில் வெந்தமோதகம் (இராசவைத்.161.); a kind of confectionery boiled in milk.

*[பால் + மோதகம்]*

மறுவ: பால்கொழுக்கட்டை

**பால்வடிதல்** *pāl-vaḍidal.* பெ. (n.) இளமைச் செவ்வித் தோற்றம் (உ.வ); blooming appearance of youth.

*[பால் + வடிதல்]*

**பால்வடி** *pāl-vaḍi,* பெ. (n.) பாலை வடிகட்டுதற்குரிய ஏனம் (யாழ்ப்.); a kind of perforated basket used for straining milk.

*[பால் + வடி]*

**பால்வடிந்தான்** *pāl-vaḍindāṉ,* பெ. (n.) *காட்டிருப்பை* பார்க்க, see *kāṭṭirappai.*

**பால்வடை** *pāl-vaḍai,* பெ. (n.) பாலில் வேகவைத்த வடைப்பணிகாரம் (இராசவைத். 139.); a kind of cake boiled in milk.

*[பால் + வடை]*

**பால்வண்ணன்** pāl-vaṇṇaṉ, பெ. (n.) 1. சிவன்; šivan, 2. பலராமன்; balarāma. lit., one who is white in colour.

*[பால் + வண்ணன்]*

**பால்வத்திப் பழுத்தான்** *pālvatti-p-paḻuttāṉ,* பெ. (n.) ஈசுரமூலி; a medicinal climber. (சா.அக.)

*[பால் + வற்றி → வத்தி + பழுத்தான்]*

**பால்வரை கிளவி** *pāl-varai-kiḷavi,* பெ. (n.) எண், அளவு முதலியவற்றின் பகுதியைக் குறிக்குஞ்சொல் (தொல். எழுத்.165.); word denoting a fraction or portion.

*[பால் + வரை + கிளவி]*

**பால்வரை தெய்வம்** *pāl-varai-teyvam,* பெ. (n.) நல்வினை தீவினைகளை வகுக்குந் தெய்வம்; deity that assorts evil and good karma. "பால்வரை தெய்வம் வினையே பூதம்" (தொல்.எழுத்.58.)

*[பால் + வரை + தெய்வம்]*

**பால்வல்லி** *pālvalli,* பெ. (n.) நன்னாரியைப் போல் தன்மையுள்ள ஒரு மூலிகை; a plant having the qualities of indian sarsaparvilla. (சா.அக.)

மறுவ: பால்வள்ளி,

*[பால்+வல்லி]*

**பால்வழு** pāl-vaḻu, பெ. (n.) ஒருபாற் சொல் ஏனைப்பாற் சொல்லொடு முடிதலாகிய குற்றம் (தொல்.சொல்.11,சேனா.); in correct use of one pāl for another.

*[பால் + வழு]*

**பால்வழுவமைதி** *pāl-vaḻu-v.amaidi,* பெ. (n.) பால்வழுவை ஆமென்று அமைத்துக் கொள்வது(நன்.379,உரை.); sanction by usage of the incorrect use of pāl.

*[பால்வழு + அமைதி]*

**பால்வழுவமைப்பு** *pāl-vaḻu-v-amaippu,* பெ.(n.) *பால்வழுவமைதி* (நன்.380,உரை.) பார்க்க, see *pālvaḻu-v-amaiti.*

*[பால்வழு + அமைப்பு]*

**பால்வள்ளி** *pāl-vaḷḷi,* பெ. (n.) கொடிவகை; slender fruited viper-dogbane.

ம. பால்வள்ளி

**பால்வன்னத்தி** *pāl-vaṉṉatti,* பெ. (n.) சிவசத்தி; consort of siva. "*நாரணியாம் பால்வன்னத்தி*" (திருமந்.1046.)

பால் + வ

**பால்வாடி** *pāl-vāḍi,* பெ. (n.) சிற்றூர்களில் ஐந்து அகவைக்குட்பட்ட குழந்தைகளுக்கு உணவும் தக்க கவனிப்பும் தருவதற்கு அரசாலும் தொண்டு நிறுவனங்களாலும் நடத்தப்படும் அமைப்பு; a welfare facility which combines creche and pre-school education for children in the rural areas; balwadi. "*பால்வாடியில் குழந்தைகளுக்கு நண்பகலுணவு தருவார்கள்*".

*[பால் + வாடி]*

**பால்வாய்க்குழவி** *pāl-vāy-k-kuḻavi,* பெ. (n.) ஆகூழ்ப்பேறடைந்த குழந்தை (இ.வ.); child born with silver spoon in its mouth.

**பால்வார்த்தல்** *pāl-vārttal,* பெ. (n.) நாகதெய்வத்தின் அருளைப் பெறப் பாம்புப்புற்றில் பாலூற்றிச் செய்யும் சடங்கு (கொ.வ.); the ceremony of pouring milk in serpent holes and ant-hills, with a view to get the blessings of the serpent-deity.

*[பால் + வார்த்தல்]*

**பால்வார்த்துக் கழுவு—தல்** *pāl-vārttu-k-kaḻuvu-,* செ.குன்றா.வி. (v.t.) அடியோடு இழந்துவிடுதல் (இ.வ.); to lose for ever, part with.

**பால்வினைநோய்** *pāl-viṉai-nōy,* பெ. (n.) உடலுறவு கொள்வதன் மூலம் பிறப்புறுப்புகளில் தொற்றிப் பரவும் நோய்; venereal disease. "*பால்வினைநோய் அடுத்த தலைமுறையைக் கூடத்தாக்கும்*"

*[பால்வினை + நோய்]*

**பால்வீதிமண்டலம்** *pāl-vidimaṇḍalam,* பெ.(n.) இரவில் விண்ணில் ஒருபுறமாக நீளத்தோன்றும் விண்மீன்திரளின் ஒளி (வின்); milky way.

*[பால் + வீதி + மண்டலம்]*

**பால்வெடி—த்தல்** *pāl-veḍi-,* 4. செ.கு.வி. (v.i.) *பால்சிதறு—,* பார்க்க; see *pāl šidaṟu-,*

*[பால் + வெடி —,]*

**பால்வெடிபதம்** *pāl-veḍi-padam,* பெ. (n.) தவச மணியிற் பால் நிறைந்து முதிரும் நிலை (வின்.); a stage in the growth of grain when it is in the milk.

*[பால்வெடி + பதம்]*

**பால்வெண்டை** *pāl-veṇḍai,* பெ. (n.) வெண்டைவகை; musk mallow.

*[பால் + வெண்டை]*

**பால்வெள்ளி** *pāl-veḷḷi,* பெ. (n.) சொக்கக்கட்டி வெள்ளி (இ.வ.); pure silver.

மறுவ: தூயவெள்ளி

சொக்க வெள்ளி

*[பால் + வெள்ளி]*

**பால்வெள்ளை** *pālveḷḷai,* பெ. (n.) பால்போலும் தூயவெள்ளை; milkwhite.

*[பால் + வெள்ளை]*

**பால்வெள்ளைச் சோளம்** *pāl-veḷḷai-c-cōḷam,* பெ. (n.) வெள்ளைநிறச்சோளவகை **(விவசா.3.);** a kind of maize.

*[பால்வெள்ளை + சோளம்]*

**பால்வெள்ளைத்துவரை** *pāl-veḷḷai-t-tuvarai,* பெ. (n.) துவரையில் ஒருவகை; southern - ghaut ebony. (சா.அக.)

மறுவ: பால்வெள்ளோடை

*[பால்வெள்ளை+துவரை]*

**பால்வை-த்தல்** *pāl-vai-,* 19. செ.கு.வி. (v.i.) 1. அம்மை குத்துதல்(வின்); to vaccinate, inoculate. 2. *பால்பிடி-,* (இ.வ.) **பார்க்க; see** *pālpiḍi-,*

*[பால் + வை-,]*

பாலகங்கயம் *pālakaṅgayam,* **பெ. (n.)** தென்னங்கள்; coconut toddy. **(சா.அக.)**

**பாலகம்** *pālagam,* பெ. (n.) **1. எள்ளு; gingelly** seed. 2. குருவேரி; fragrant root. 3. கோஷ்டம்; arabian costus. **(சா.அக.)**

**பாலகனம்** *pālakaṉam,* பெ. (n.) **காரைச்செடி;** thorny webra. (சா.அக.)

**பாலகாப்பியம்** *pālakāppiyam,* **பெ. (n.)** பாலகாப்பியர் செய்த யானைமருத்துவநூல்; a veterinary trealise on elephants disease by pālakāppiyar. "பாலகாப்பிய நூறன்னால் வணக்கினான்" (இரகு. மாலை.94.)

**பாலகாப்பியர்** *pālakāppiyar,* பெ. (n.) ஒரு முனிவர்; a sage.

**பாலகெண்டை** *pālakeṇḍai,* பெ. (n.) ஒரு வகை நன்னீர் மீன்; a kind of fresh water fish.

வகைகள்:

1. பாலகெண்டை
2. நரிபால கெண்டை
3. மெத்தை பாலகெண்டை
4. சாணிபால கெண்டை
5. உல்லபால கெண்டை
6. துள்ளுபால கெண்டை
7. புள்ளிபால கெண்டை
8. தொப்பை பால கெண்டை
9. செல்ல பால கெண்டை
10. முள்ளன் பால கெண்டை
11. மூஞ்சிபால கெண்டை
12. சேற்றுபால கெண்டை
13. பாசிபால கெண்டை
14. தொழும்பான் பால கெண்டை
15. செத்தபால கெண்டை
16. உருண்டை பால கெண்டை
17. தட்ட பால கெண்டை

18. ஓல பால கெண்டை

19. ஆம பால கெண்டை



**பாலடி** *pāladi,* பெ. (n.) 1. திருகுகள்ளி; twisted spurge. 2. பாற்சோறு; (cooked) rice and milk. (சா.அக.)

**பாலடி** *pāl-adi,* பெ. (n.) *பாலடிசில்* (இலக்.அக.) பார்க்க; see *pāl-adišil.*

*[பால் + அடி → அடி.]*

**பாலடிசில்** *pāl-adišil,* பெ. (n.) பாலில் அட்டசோறு; rice cooked in milk. 'இன்பாலடிசிற் கிவர்கின்றகைப்பேடி' (சீவக.443.)

*[பால் + அடிசில்]*

**பாலடை[1]** *pāl-adai,* பெ. (n.) குழந்தைகட்குப் பாலூட்டுஞ் சங்கு; conch shell or any metallic imitation of it for feeding infants. "*பிறந்த குழந்தைகளுக்கு மருந்து கொடுக்கவேண்டுமென்றால் பாலடையில் ஊற்றிக் கொடுப்பார்கள்*"

*[பால் + அடு → அடை]*



**பாலடை[2]** *pāl-adai,* பெ. (n.) சித்திரப் பாலடை (மலை.); pointed leaved tick-trefoil.

*[பால் + அடை]*

**பாலத்தூண்** *pāla-t-tūṉ,* பெ. (n.) ஆற்றின்மேற்பாலத்தைத் தாங்குதற்குக் கட்டும் முள்ளுக்கட்டை (C.E.M.): pier of a bridge.

*[பால் + தூண்]*

**பாலதனயம்** *pālataṉayam,* பெ. (n.) கருங்காலி; ebony tree. (சா.அக.)

**பாலதிருணம்** *pālātiruṇam,* பெ. (n.) 1. இளம் புல்; tender grass. 2. பசும்புல்; green grass. (சா.அக.)

**பாலது** *pāladu,* கு.வி.மு. பெரும்பாலும் செய என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சத்தின் பின் அல்லது சில வகைத் தொழிற்பெயரின் பின் '*தகுந்தது*', '*உரியது*' என்னும் பொருளில் பயன்படும் வினைமுற்று; mostly after an infinitive or after certain verbal nouns a finite form used in the sense of (is) worthy; (is) proper "*இந்தத் திட்டம் வரவேற்கப்பாலது*" "*அவர் கூறியிருக்கும் கருத்து நினைத்தற் பாலது*".

*[பால் → பாலது]*

**பாலம்** *pālam*, பெ. (n.) 1. ஆற்றின் மேலாக இருகரைகளையும் இணைக்கும் கட்டுமானம்; bridge. "*நெருப்பாறும் மயிர்ப்பாலமுமா நடக்க வேணும்*" (இராமநா.கிட்.12.) 2. நீரின் அணைச் சுவர்; dam, embankment, projecting wharf, jetty.

**பாலம்மை** *pāl-ammai*, பெ. (n.) பெரிய அம்மைநோய் (M.L.); small-pox

**பாலமணி** *pāla-maṇi*, பெ. (n.) 1. அக்குமணி (வின்.); shell beads 2. வெள்ளைப் பாசிமணி (கொ.வ.); white glass beads opp. kirai-maṇi.

**பாலமிர்தம்** *pāl-amirdam*, பெ. (n.) *பாலடிசில்* பார்க்க; see *pālaḍišil*. "*ஆசிலடு பாலமிர்தஞ் சிறிய வயின்று*" (சீவக.2033.)

**பாலமுடாங்கி** *pālamuḍāngi*, பெ. (n.) வேலிப்பருத்தி; hedge cotton. (சா.அக.)

மறுவ : உத்தாமணி

அச்சாணி மூலி

சீந்தில்

**பாலர்** *pālar*, பெ. (n.) முல்லைநில மக்கள் (பிங்.); inhabitants of pastoral tracts, herdsmen, shepherds.

*[ கோவலர் → கோபாலர் → பாலர் ]*

**பாலர்க்குதவி** *pālarkkudavi*, பெ. (n.) கழுதைத்தும்பை; donkey toombay, indian borage.

*[ சிறார்களுக்கு ஏற்படும் நோய்களைக் குணப்படுத்துவதில் முதன்மையாக இம்மூலிகை இருப்பதால் இப்பெயர் பெற்றதென்க ]*

**பாலரசு** *pālarašu*, பெ. (n.) காட்டுமுருங்கை; wild moring a tree. (சா.அக.)

**பாலவரை** *pāl-avarai*, பெ. (n.) 1. அவரைவகை (வின்.); a species of egyptian bean. 2. வெள்ளவரை (இ.வ.); country bean.

*[ பால் + அவரை ]*

**பாலவன்** *pālavaṉ*, பெ. (n.) பால்வண்ணமான சிவன்; šiva in His milk white manifestation "*பாலினி பாலவன் பாகம தாகுமே*" (திருமந்.1216.)

*[ பால் + பாலவன் ]*

**பாலவி** *pāl-avi*, பெ. (n.) பாலடிசில் பார்க்க, paladisil "*பாலவியும் பூவும் புகையும்*" (சீவக.1045.)

**பாலவோரக்கட்டை** *pāla-v-ōra-k-kaṭṭai*, பெ. (n.) பாலத்தின் இரு கரைகளிலுமுள்ள பக்கச்சுவர் (C.E.M.); abutment of a bridge.

*[பாலம் + ஓரம் + கட்டை ]*

**பாலறாவாயர்[1]** *pā-laṟā-vāyar*[1], பெ. (n.) திருஞானசம்பந்தர் என்னும் நாயன்மாரின் மறுபெயர்; the other name of Tirugnas ampandar a canonized šaiva Saint.

*[ பால் + அறா + வாயர் ]*

**பாலறாவாயர்²** *pālaṟāvāyar*, பெ. (n.) சேக்கிழாரின் இளவல்; younger brother of sēkkiḻār.

(இவர் தொண்டைவள நாட்டில் குன்றத்தூரில் சேக்கிழாருக்குத் தம்பியாராகிப் பிறந்தவர். இவர் தாம் பிறந்த ஊரில் திருப்பணிகள் பல செய்து கொண்டிருந்தார் தமையனாராகிய சேக்கிழார் பெரியபுராணம் பாடி அமைச்சர் தொழிலில் இருந்து விலகிய பிறகு சோழ மன்னன் இவரை அழைத்து அமைச்சராக்கித் 'தொண்டைமான்' என்னும் சிறப்புப் பெயரும் கொடுத்தான். ஆனால் இவர் சோழநாடு சென்று அமைச்சுத் தொழிலைப் புரியாமல் குன்றத்தூரில் இருந்தபடியே அமைச்சுத் தொழிலைச் செய்தார். அக்காலத்திலே தொண்டைவள நாட்டில் பெரும் பஞ்சம் உண்டாகியது. அப்பஞ்சத்தில் மக்கள் வருந்தி மடியாமல் பாதுகாத்தார். அதனால் இவருக்குத் 'தொண்டை மண்டலம் நின்று காத்த பெருமான்' எனவும் ஒரு பெயர் உண்டாகியது.)

**பாலறுகுகுத்துதல்** *pāl-aṟugu-kuttudal*, பெ. (n.) திருமணச் சடங்குவகை (நாஞ்.); a form of benediction in a marriage ceremony.

*[பால் + அறுகு + குத்துதல்]*

**பாலன்சம்பா** *pālaṉ-šambā*, பெ. (n.) வெள்ளைச்சம்பா (இ.வ.); milk white sampā paddy.

*[பால் + சம்பா – பால்சம்பா → பாலன் சம்பா]*

**பாலா** *pālā*, பெ. (n.) கையீட்டி (இ.வ.); spear.

**பாலாடகத்தி** *pālāḍagatti*, பெ. (n.) கொக்கிறகு; csanis feather plant. (சா.அக.)

**பாலாடை¹** *pālāḍai*, பெ. (n.) *பாலேடு*(வின்.) பார்க்க; see *pālēḍu*.

**பாலாடை²** *pālāḍai*, பெ. (n.) (உ.வ.) குழந்தைகளுக்குப் பாலூட்டுஞ் சங்கு; conch-shell or any metallic invitation of it for feeding infants.

*[பாலாடை¹ → பாலாடை]*

**பாலாடை³** *pālāḍai* பெ. (n.) ***அம்மான் பச்சரிசி*** பார்க்க; see *ammāṉ-paccariši*.

பால் + அடை. அடை= இலை

அடை முதல் நீண்டது.

**பாலாடை⁴** *pālāḍai*, பெ. (n.) ***பாற்சங்கு*** (நெல்லை. மீனவ.) பார்க்க; see *pāṟcaṅgu*.

**பாலாடைக்கட்டி** *pālāḍai-k-kaṭṭi*, பெ. (n.) கொழுப்புச் சத்து நிறைந்த பாலைக் காய்ச்சிக் குளிர வைத்துப் புளிக்கச் செய்து செய்யப்படும் மெதுவான வெளிர் மஞ்சள் நிறக்கட்டி; cheese.

*[பாலாடை + கட்டி]*

**பாலாடைச்சங்கு** *pālāḍai-c-caṅgu*, பெ. (n.) *பாற்சங்கு* (உ.வ.) பார்க்க; see *pāṟšaṅku*.

**பாலாதி** *pālādi*, பெ. (n.) சோற்றுக் கற்றாழை; pulp aloe. (சா.அக.)

**பாலாந்தெல்லு** *pālāntellu*, பெ. (n.) ஒரு வகைத் தெல்லுக் கொடி; west indian cocoon. (சா.அக.)

**பாலாமா** *pālāmā,* பெ. (n.) பேய்த்தும்மட்டி; bitter apple. (சா.அக.)

**பாலாமை** *pāl-āmai,* பெ. (n.) வெண்மை நிறமுள்ள ஆமைவகை; a kind of tortoise.

*[பால் + ஆமை]*

**பாலாவி¹** *pālāvi,* பெ. (n.) நெல்வகை (யாப்.வி. 509.); a kind of paddy.

**பாலாவி²** *pālāvi,* பெ. (n.) **பாலின் ஆவி;** steam from boiled milk. **"வீழ்சலதோடந் தணிக்கப் பாலாவி"** (தேவையுலா, 31.).

*[பால் + ஆவி]*

**பாலாறு** *pāl-āṟu,* பெ. (n.) கருநாடகத்திலுள்ள நந்திதுருக்கத்தில் தோன்றிச் சேலம் வடவார்க்காடு, செங்கற்பட்டு மாவட்டங்களின் வழியாய் ஓடும் ஓர் ஆறு; the river pālāṟ which rises in the Nandidurg hills in karnāḍaga and flows though the districts of salem, North Arcot and chingleput *"பாலாறு குசைத்தலை பொன்முகரி"* (கலிங். 354.)

*[பால் + ஆறு ]*

**பாலி³** *pāli,* பெ. (n.) 1. ஆலமரம். (மலை.); banyan tree. 2. செம்பருத்தி (மலை.) பார்க்க; see šemparuthi a variety of hibiscus. 3. கள் (மூ.அ.); toddy. 4. பாலாறு பார்க்க, see pālāṟu. *'பங்கயத்தட நிறைப்பவந் திழிவது பாலி'* (பெரியபு. திருக்குறிப்புத். 21.) 5. பாற்பசு; milking cow 6. பானை; pot. (சா.அக.).

**பாலி⁴** *pāli,* பெ. (n.) புத்த சமய நூல்கள் எழுதப்பட்ட பழைய மொழி; an ancient indian language, sacred to buddhists.

**பாலிகம்** *pāligam,* பெ. (n.) பேய்ப்பீர்க்கு; wild devil gourd. (சா.அக.)

**பாலிகை** *pālikai,* பெ. (n.) முளைப் பாலிகை பார்க்க; see, mulai-pālikai,

**பாலிகை¹** *pāligai,* பெ. (n.) 1. திருமணம் முதலிய நற்காலங்களில் முளைகள் உண்டாக ஒன்பான்வகைத் தவசங்கள் விதைக்குந் தாழி; earthen pot in which nava-tāṉiyam is sown in marriage and other ceremonies. *"பூரண கும்பமும் பொலம்பாலிகைகளும்"* (மணிமே. 1, 44.) *"பாலிகை பூக்கும் பயின்று"* (தி.மா. 51–4) *"விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை"* (சிலப். 1–58.) *"பூரண கும்பத்துப் பொலிந்த பாலிகை"* (சிலப். 5–153) 2. ஆயுதக்கூர்; (வின்.) sharp edge of a cutting instrument.



**பாலிகை²** *pāligai,* பெ. (n.) ஒருவகைக் காதணி; a ear-ornament. *'பாலிகையில் படுகண் ஒன்றும் கொக்குவாய் ஒன்றும்'* (s.i.i.ii, 204.)

**பாலிகை³** *pāligai,* பெ. (n.) 1. உதடு (திவா.); lip. *"தாமவர் பாலிகை யாரமுதுண்டதற்கு"* (சேதுபு. திருநாட். 45.) 2. அடம்பு பார்க்க see aḍambu (மலை.); hare-leaf. 3. கத்திப்பிடி; handle of a sword. *"பாலிகை யிடையறப் பிடித்த பாணியர்"* (சீவக. 2217.) 4. வட்டம் (பிங்.); anything round; circle.

**பாலிகை⁴** *pāligai,* பெ. (n.) நீரோட்டம் (குஞ்.வழக்.); watercourse. *'வயலிற் பாலிகை பாய்கின்றதா?'*

**பாலிகை⁵** *pāligai,* பெ. (n.) மேற்கட்டி (புதுவை.) canopy.

**பாலிகைகொட்டுதல்** *pāligai-koṭṭudal,* பெ. (n.) திருமணம் முதலிய சில சடங்குகளினிறுதியில் பாலிகையில் முளைத்த ஒன்பான் தவசமுளைகளை நீரிற் சேர்க்குஞ் சடங்கு(இ.வ.); the ceremony of emptying sprouts in the pāligai into a river of tank on the conclusion of marriage and other ceremonies.

*[பாலிகை + கொட்டுதல்]*

**பாலிகைதெளித்தல்** *pāligai-teḷittal,* பெ. (n.) திருமணம் முதலிய புனிதச் சடங்குகள் நிகழ்கையில் பாலிகைத் தாழிகளில் ஒன்பான் தவசங்களை விதைக்குஞ் சடங்கு; (இ.வ.) the ceremony of sowing nava-tāṉiyam in pots on auspicious occasions.

*[பாலிகை + தெளித்தல்]*

**பாலிகைபாய்-தல்** *pāligai-pāy-,* 17. செ.கு.வி. (v.i.) அணையின்றித் தானே நீர் பாய்தல், (குஞ்.வழக்.); to flow easily without the help of a dam.

பள்ளக்கை → பாலிகை. பள் → பாள்

ஒ.நோ. கொள் → கோள்

**பாலிகைவிடு-தல்** *pāligai-viḍu-,* 3. செ.கு.வி. *பாலிகை கொட்டு-,* (இ.வ.) பார்க்க; see *pāligai koṭṭu-,*

**பாலிதம்** *pālidam,* பெ. (n.) 1. பெருந்தேக்கு; a kind of big teak tree. 2. கலந்தூட்டிய நறுமணப்பொருள்; a compound mixture of different kinds of perfumes. 3. கலப்புச்சரக்கு; adultrated substance. 4. கற்பூர மரம்; comphor tree. (சா.அக.)

**பாலிபாய்¹-தல்** *pāli-pāy-,* 17. செ.கு.வி. (v.i.) பாலாறு போன்று கவர்பட்டுப் பல முகமாகப் பிரிதல்; to branch out in various directions, resembling the delta of the pālār. *'வ்யசனமும்பாலி பாயப் பெற்றது'* (ஈடு, 5, 5. ப்ர.)

*[பாலி + பாய்-,]*

**பாலிபாய்²-தல்** *pāli-pāy-,* செ.கு.வி. (v.i.) *பல்லிபற்று* (ஈடு, 5, 4, 1, ஜீ.) பார்க்க; see *palliparṟu.* to hold fast.

*[பல்லிபாய்-, → பாலிபாய்-,]*

**பாலிபாய்-தல்** *pāli-pāy-,* 17. செ.கு.வி. (v.i.) *பாலிகை பாய்தல்* (குஞ். வழக்.) பார்க்க; see *pāligai pāy-,* to flow easily, without damming.

*[பாலிகைபாய்-, → பாலிபாய்-,]*

**பாலிமரம்** *pālimaram,* பெ. (n.) ஆலமரம்; banyan tree.

**பாலிரல்** *pālira͟l,* பெ. (n.) 1. குடசப்பாலை; cotton milk plant 2. வெட்பாலை; concssibark.

**பாலிறக்கம்** *pāl-iṟakkam,* பெ. (n.) *பாலிறங்கு-தல்*(யாழ்.அக.) பார்க்க; see *pāliṟangu-,*

**பாலிறக்கு–தல்** *pāl-irakku-,* 10. செ.கு.வி (v.i.) ஆ முதலியன பால் சுரத்தல்(இ.வ.); to fill the udder with milk, as a cow.

*[பால் + இறக்கு–, ]*

**பாலிறங்குதல்** *pāl-iṟaṅgudal,* பெ. (n.) 1. பால் தொண்டை வழிச் செல்லுகை; passing of the milk down a person's throat. 2. அம்மைப்பால் வற்றுகை; the state of pustules becoming dry.

*[பால் + இறங்குதல் ]*

**பாலிறுவி** *pāl-iṟuvi,* பெ. (n.) முருக்கு (மலை.); indian coral tree.

**பாலின் பஞ்சணை** *pāliṉ pañjaṇai,* பெ. (n.) ஆலமரம்; banyan tree. (சா.அக.)

**பாலின் மூன்றாந்தம்பி** *pāliṉ mūṉṟān tambi,* பெ. (n.) வெண்ணெய் அல்லது நெய்; butter or ghee derived from milk after three operations. (சா.அக.)

*[இது ஒரு மருத்துவக் குழூஉக்குறி ]*

**பாலினி** *pāliṉi,* பெ. (n.) 1. நன்னாரி; indian sarasparilla. 2. கொடிக்கள்ளி; creeping milk hedge. 3. ஒருவகை மல்லிகை; a species of jasmine. 4. இலவங்கப் பட்டை வகை; cinnamomum genus. 5. தணக்கு மரம்; katearah gum tree. (சா.அக.)

**பாலுக்குள்சூதங்கட்டி** *pālukkul-śūdaṅkaṭṭi,* பெ. (n.) கொடிக்கள்ளி; creeping milk hedge.

**பாலுகம்** *pālugam,* பெ. (n.) கருப்பூரம் (வின்.); camphor.

மறுவ: கருப்பூரவள்ளி

**பாலுகவள்ளி** *pālugavaḷḷi,* பெ. (n.) கருப்பூர வள்ளி; camphor creeper.

மறுவ: பாலுகம் (சா.அக.)

**பாலுண்ணி** *pāl-uṇṇi,* பெ. (n.) உடம்பில் உண்டாம் ஒருவகைச் சதை வளர்ச்சி. (கொ.வ.) wart.

**பாலுணர்ச்சி** *pāl-uṇarcci* பெ. (n.) உடலுறவு கொள்ள வேண்டும் என்ற உந்துதலைத் தோற்றுவிக்கும் உணர்வு; sexual urge or feeling. *"பாலுணர்வைத் தூண்டக் கூடிய அருவருப்புப் படங்களை முற்றிலும் அழிக்க மனத்தளவில் ஒத்துழைக்க வேண்டும்"*

**பாலும் பழமும் கொடுத்தல்** *pālum-paḻamum-koḍuttal,* பெ. (n.) திருமணக் காலத்தில் மணமகனுக்கும் மணமகளுக்கும் ஆவின் பாலும் வாழைப் பழமுங் கொடுத்து நல்லுரை கூறுஞ்சடங்கு; the ceremony of giving plantain fruit and milk, as to the bride and bridegroom in a marriage.

*[பாலும் + பழமும் + கொடுத்தல் ]*

**பாலுமறுகுந்தப்பித்தோய்தல்** *pālum-arugun-tappi-t-tōytal,* பெ. (n.) வழிவழிமரபு (சந்ததி) உண்டாக வேண்டி மணமகனும் மணமகளும் பாலும் அறுகுந் தலையிலிட்டு முழுகுகை (வின்.); bath taken, with a view to obtain progeny, by the bride and the bridegroom in a marriage, putting milk and harialli grass on the head

*[பாலும் + அறுகும் + அப்பில் + தோய்தல் ]*

**பாலுறவு** *pāl-uṟavu,* பெ. (n.) உடலுறவு; sexual intercourse.

*[பால் + உறவு]*

**பாலுறிஞ்சி** *pāl-uṟiñji,* பெ. (n.) கொசுவின் வடிவத்திலிருந்து கதிரில் பால் பிடிக்கும் பொழுது பாலை மட்டும் அருந்தும் பூச்சி; an insect which destracking paddycrop.

**பாலுறிஞ்சு-தல்** *pāluruñju-,* 9. செ.கு.வி. (v.i.) குழந்தை முலையுண்ணல்; child sackling at the breast.

*[பால் + உறிஞ்சு–,]*

**பாலூகம்** *pālūgam,* பெ. (n.) குடைவேல்; umbrella thorn babool. (சா.அக.)

**பாலூட்டி** *pālūṭṭi,* பெ. (n.) தன் குட்டிக்குப் பால் கொடுத்து வளர்க்கக் கூடிய உயிரினம்; mammal. *"திமிங்கலம் ஒரு பாலூட்டி"*

**பாலேடு** *pāl-ēḍu,* பெ. (n.) காய்ச்சிய பாலின் மேற்படியும் ஆடை; cream of milk.

*[பால் + ஏடு]*

**பாலேயம்** *pālēyam,* பெ. (n.) 1. சிறுமுள்ளங்கி; small garden raddish. 2. கழுதை; ass. (சா.அக.)

**பாலை[1]** *pālai,* பெ. (n.) 1. முல்லையும் குறிஞ்சியுந் திரிந்த நிலம்; arid, desert tract. *"முல்லையும் குறிஞ்சியும் முறைமையின்திரிந்து நல்லியல் பிழந்து.. நடுங்குதுய ருறுத்துப் பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்"* (சிலப். 11, 64–6.) 2. பாலைத் தன்மை; aridity, barrenness. *"பாலை நின்ற பாலைநெடுவழி"* (சிறுபாண். 11.) 3. புறங்காடு; burning-ground. *"பாலைநிலையும்"* (தொல். பொ. 79) 4. பாலை நிலத்து உரிப் பொருளாகிய பிரிவு; (erot.) temporary separation of a lover from his sweetheart. *"பாலை சான்ற சுரம்"* (மதுரைக். 314) 5. இருள்மரம் (L.); ironwood of ceylon. 6. முள் மகிழ்; woolly ironwood. 7. காட்டிருப்பை(L.); indian guttapercha 8. உலக்கைப் பாலை(L.); wedge. leaved ape-flower. 9 மரவகை (L.); silvery-leaved ape flower. 10. ஏழிலைப் பாலை (L.); seven leaved milk-plant 11. குடசப்பாலை; conessi-bark. 12. காட்டலரி; mango like cerbera. 13. பார்க்க, வெட்பாலை (L.); blue dyeing rorebay 14. வெட்பாலை,[2] (L.); wolly dyeing rosebay 15. கருடப்பாலை (L.); india rubber wine. 16. பெருமரவகை (L.) brazilian nutmeg, ''தில்லை பாலை கல்லிவர் முல்லை'' (குறிஞ்.77.) 17. கொடிப் பாலை; (வின்.) பார்க்க; green wax flower. 18. பெரும் பண்வகை (சிலப். 14, 167, உரை.); (mus.) a specific melody-type. 19. ஒரு வகையாழ்; a kind of lute. *"நைவளம் பழுநிய பாலை வல்லோன்"* (குறிஞ்சிப். 146.) 20. பாலை யாழிற் பிறக்கும் செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கொடிப்பாலை, மேற்செம்பாலை, விளரிப்பாலை ஆகிய எழுவகைப் பண் (சீவக. 619, உரை.); (mus.) a group of melodies, of which there are seven classes, viz., cempālai, paḍumalai-p-pālai, cevvaḻi-p-pālai, arumpālai koḍippālai mērcempālai, viḷarippālai. *"வல்லோன் தைவரும் வள்ளுயிர்ப் பாலை"* (அகம். 355–4) *"ஒரேழ் பாலை நிறுத்தல் வேண்டி"* (சிலப். 3–71) *"படுமலை செவ்வழி பகரரும் பாலையென"* (சிலப். 3–84) *"பாற்பட நின்ற பாலை பண்மேல்"* (சிலப். 3–149) 21. கழை என்னும் விண்மீன்(திவா.); the 7[th] nakṣtra. 22.

மாழ்கு என்னும் விண்மீன் (பிங்.) the 5th naksatra. **23.** கவறாட்டத்து வழங்கும் ஒரு குழூஉக் குறி; a symbolic word used in dice-play. *"பஞ்செனவுரை செய்வர் பாலை யென்பர்"* (கந்தபு. கயமுகனு. 167.)

மறுவ: பாலை (மரம்)
சீவந்தி
சீவனி
பாலை
கருவிளத்தின் பெயர்
கன்ணி
கிகிணி

**பாலை³** *pālai,* பெ. (n.) **1. மீன் வகை (பறாளை** பள்ளு. 75.); a kind of fish. **2. வெப்பம்;** sultriness; heat. *"பாலைநின்ற பாலை நடுவழி"* (சிறுபாண். 10, 11.)

**பாலை⁴** *pālai,* பெ. (n.) திருக்கை, சுறா, பிலால் போன்ற பெரிய மீன்களிலிருந்து எடுக்கப்படும் கொழுப்பு (நெல்லை. மீனவ.); fat obtained from big vaieties of Tirukkai, suṟa, pitāl.

**பாலைக்கருப்பொருள்** *pālai-k-karupporuḷ,* பெ. (n.) பாலை நிலத்திற்குரிய பொருள்; theme of the pālaitiṇai.

அது; கன்னியாகிய தெய்வமும், விடலையும், காளையும், மீளியும், எயிற்றியுமாகிய உயர்ந்தோரும்; எயினரும், எயிற்றியரும், மறவரும், மறத்தியருமாகிய தாழ்ந்தோரும், புறாவும், பருந்தும், எருவையும், கழுகுமாகிய புள்ளும்; செந்நாயாகிய விலங்கும், குறும்பாகிய ஊரும், குழியுங்காவலுமாகிய நீரும், குராவும், மராவும், உழிஞையுமாகிய பூவும், பாலையும், ஓமையும், இருப்பையுமாகிய மரமும், வழி பறித்தனவும், பதியிற் கவர்ந்தனவுமாகிய யாழும், பஞ்சுரமாகிய பண்ணும், போர் புரிதலுஞ் பகற் சூறையாடலுமாகிய தொழிலுமெனப் பதினான்கு வகைப்படும்; *"கன்னிவிடலை..... பகற் சூறையாடல் பாலைக்கருப் பொருளே"* (அகப்,அகத்திணை21)

[பாலை + கரு + பொருள். கருப்பொருள் = எல்லாவற்றுக்கும் அடிப் படையான காலமும் இடமும் என்னும் முதற் பொருளிலிருந்து கருக்கொண்டு தோன்றியது]

**பாலைக்காட்டுச்சோனை** *pālai-k-kāṭṭu-c-cōṉai,* பெ. (n.) பாலைக்காடு என்ற பகுதியில் ஆடவை (ஆனி)மாதம் முதற் பெய்யும் நான்குமாத மழை (வின்.); the incessant rain of four months beginning with july in the palghat region north-west monsoon.

[பாலை + பாடு + சோனை]

**பாலைக்காரவீகி** *pālaikkāravigi,* பெ. (n.) எருக்கு; madar plant. (சா.அக.)

**பாலைக்கிழத்தி** *pālai-k-kiḻatti,* பெ. (n.) கொற்றவை (துர்க்கை); Durga, goddess of desert tracts. *"பாலைக் கிழத்தி திருமு ணாட்டிய சூலத்து"* (கல்லா. 17, 45.) "நவமி தனிலிளைந் திடு மேனெடும் பாலைகிழத்தி யருணயந்து" (சேதுபு.துராசார.29.)

*[பால் + கிழத்தி]*

**பாலைக்கீரை** *pālai-k-kīrai,* பெ. (n.) ஒருவகை உண்ணும் கீரை; a kind of edible greens. (சா.அக.)

மறுவ: கழுதைப்பாலை

**பாலைக்குருவி** *pālai-k-kuruvi,* பெ. (n.) குருவிவகை (வின்.); a species of bird.

*[பாலை + குருவி]*

**பாலைக்கொடி** *pālai-k-koḍi,* பெ. (n.) **1.** கொடிப்பாலை; green wax-flower. **2.** ஒருவகைக் கொடி; Rajmahal hemp of Madras **3.** கொடிவகை; a coarse climber with slender twining stem. **1,**

**பாலைக்கௌதமனார்**[2] *pālai-k-kaudamaṉār,* பெ. (n.) பதிற்றுப்பத்தின் மூன்றாம் பத்தினைப் பாடிய புலவர்; the author of the thrid decad of patiṟṟu-p-pattu.

*[பாலை + கௌதமனார்]*

வேறு பெயர்: பாலைக் கோதமனார், கௌதமனார், கோதமனார்.

இவர் பாலைத் திணையைச் சிறப்பித்துப் பாடுஞ் சிறப்புக் குறித்துப் பாலைக் கௌதமனார் என்று அழைக்கப் பெற்றார். இவர் இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பதிற்றுப்பத்தில் மூன்றாம் பத்தில் பாடிச் சிறப்பித்துள்ளார். புலவரைச் சிறப்பிக்கக் கருதிய வேந்தனிடம் இவர் *'யானும் என் சுற்றமும் துறக்கம் புகும்படி பொருந்திய அறங்களை முடித்துத் துறக்கத்தைத் தருக'* என்றார். சேரன் அவர் விரும்பிய வண்ணமே வேள்வி பல செய்து நீ விழையும் துறக்கத்தின்கண் நீடு வாழ்க என உதவினான். இச் செய்தியைப் பழமொழி பாடிய முன்றுறையரையனார் *'தொடுத்த பெரும்புலவன் சொற்குறை தீர, அடுத்துத் தா என்றாற்கு வாழியரோ'* (316) என்று குறிப்பாகச் சுட்டியுள்ளார்.

இந்நூலின் பழைய உரைகாரர் இதனை விளக்கியுள்ளார். இளங்கோவடிகள் இதனை *"நான் மறையாளன் செய்யுட் கொண்டு மேனிலையுலகம் விடுத்தோனாயினும்"* (28: 137-138) எனச் சுட்டுகின்றார். தொல்காப்பியம் புறத்திணையியல் 25ஆம் நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் உரைத்த உரையிலும் இச் செய்தி சுட்டப் பட்டுள்ளது.

நூல்: பதிற்றுப்பத்து மூன்றாம் பத்து, புறம்: 366.

குறுந்தொகை: 16, 37, 124, 135, 137, 209, 231, 262, 283, 398.

**பாலைச்சடைச்சி** *pālai-c-caḍaicci,* பெ. (n.) ஒரு வகைச் சிறுமரம்; a small tree. (சா.அக.)

**பாலைச்சிலை** *pālai-c-cilai,* பெ. (n.) படிகக்கல்; crystal glass.

**பாலைத்திணை** *pālai-t-tiṉai,* பெ. (n.) ஐந்திணைகளுள் ஒன்று; அது; பாலை முதற் பொருள், பாலைக்கருப்பொருள், பாலை உரிப் பொருளென மூன்று வகைப்படும்; *"குறிஞ்சிப் பாலை முல்லை மருதநெய்தலைந் திணைக் கெய்திய பெயரே"* (அகப். அகத்திணை. 6.) என்பதனாற் பெறப்படும். desert tract

*[பாலை + திணை]*

**பாலைத்திறம்** *pālai-t-tiṟam,* பெ. (n.) (mus.) *பாலையாழ்த் திறம்* (சிலப். 4, 75. உரை.) பார்க்க; see *pālai yāḻttiṟam.*

*[பாலை + திறம்]*

**பாலைத்துறை** *pālai-t-tuṟai,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் அமைந்துள்ள; திருப்பாலைத் துறை என்று சுட்டப்படும் பாடல் பெற்ற ஊர்; a place name in Tanjore Dt. *"மருவு நாண்மலர் மல்லிகை செண்பகம் பரவுநீர்ப் பொன்னிப் பாலைத் துறை"* (தேவா.திருநா.)

**பாலைநல்மரம்** *pālainalmaram,* பெ. (n.) **1.** குராமரம்; common bottle flower. **2.** மாா் மரம்; saul tree. (சா.அக.)

**பாலைநாதம்** *pālainādam,* பெ. (n.) **1.** வழலை நாதம்; the essence of fuller's earth. **2.** பெண்ணின் நாதம்; the ovarian fluid in a female. (சா.அக.)

**பாலைநிலப்புள்** *pālainila-p-puḷ,* பெ. (n.) 1. கழுகு; vulture. 2. புறா; pigeon. 3. பருந்து; kite. (சா.அக.)

**பாலைநிலப்பூ** *pālainila-p-pū,* பெ. (n.) 1. கள்ளி; milk sparge flower. 2. பாலை; iron wood tree. 3. பூளைப்பூ; flower of a species of soft cotton. (சா.அக.)

**பாலைநிலம்** *pālai-nilam,* பெ. (n.) *பாலை¹.* (வின்.) பார்க்க; see *pālai.*

**பாலைநிலை** *pālai-nilai,* பெ. (n.) இறந்த கணவனுடன் தீப்பாய்வாள் தான் உடன் கட்டையேறுதலை விலக்கினோருடன் உறழ்ந்து கூறும் புறத்துறை; (puṟap.) theme describing the mood of a widow who, intending to immolate herself on her hunband's funeral pyre, rebukes those who try to dissuade her. *"நல்லோள் கணவனொடு நனியழற் புகீஇச் சொல்லிடையிட்ட பாலை நிலையும்"* (தொல். பொ. 79.)

*[பாலை + நிலை]*

**பாலைநீலம்** *pālai-nīlam,* பெ. (n.) வெட்பாலை (L.); blue dyeing rosebay.

மறுவ. நீலம்பாலை

**பாலைப்பண்** *pālai-p-paṇ,* பெ. (n.) பெரும்பண்வகை (திவா.); a primary melody.

*[பாலை + பண்]*

**பாலைப்பழம்** *pālaippaḻam,* பெ. (n.) பழ முண்ணிப் பாலை; indian mimusops. (சா.அக.)

*[பாலை + பழம்]*

**பாலைப்புறம்** *pālai-p-puṟam,* பெ. (n.) பாலைத்திணைக்குப் புறத்திணையாகிய வாகை; (purap.) theme of a condueror wearing a chaplet of srissa flowers.

(சுரநடை, முதுபாலை என விருதுறையாம். இவ்விரண்ட னையும், நம்பியகப் பொருள் ஒழிபியல் 35ஆவது நூற்பாவில் அகப் புறப்பெருந் திணையென்றார்.

"வாகை தானே பாலையது புறனே" (தொல். 1019)

*[பாலை + புறம்]*

**பாலை பாடிய பெருங்கடுங்கோ** *pālai-pāḍiya-peruṅ kaḍuṅgō,* பெ. (n.) கடைக் கழகக் காலத்துப்புலவர். a sangam poet.

இவர் கடைக்கழகக் காலத்தில் வாழ்ந்த அரசப் புலவர்களுள் ஒருவர். பேய் மகள் இளவெயினியார் புறநானூற்றில் (11) பாடிய பாட்டில் இவரைச் சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்று குறிப்பிடுவதால் இவர் சேரமன்னர் என்று அறியலாம். கடுங்கோன் என்ற பெயர் காய்சின வழுதி முதல் கடுங்கோனீறாக எனப் பாண்டியர்க்கு வந்திருப்பினும் சேரமன்னர் களுக்கே பெரும்பாலும் வருகின்றது.

இவர் பாடியனவாக இப்பொழுது கிடைப்பன அறுபத்தேழு பாடல்கள். அவற்றுள் ஒன்று மட்டுமே புறத்திணை தழுவியது. ஏனைய அறுபத்தாறும் அகப்பொருள் தழுவியனவே. அகப்பொருள் பாடல்கள் அறுபத்தாறில் குறிஞ்சி பற்றியது ஒன்று; மருதம் பற்றியது ஒன்று; எஞ்சிய அறுபத்து நான்கும் பாலைப் பொருள் பற்றியே வந்துள்ளன. இவ்வாறு இவர் இப்பொருளை பிரித்துத் திறம்படப்பாடியமையால் *'பாலைபாடிய'* என்ற அடையினைப் பெற்றார். இவரது பாலைத் திணைப் பாடல்களில் பழந்தமிழ் வரலாறு சிலவற்றையும் சுட்டியுள்ளார். அரசியல் நுட்பங்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

**பாலைமண்** *pālaiman*, பெ. (n.) தூயமண்; pure mud. (சா.அக.)

**பாலைமணி** *pālaimaṇi*, பெ. (n.) *பாலமணி* பார்க்க; see *pālamaṇi* "இலகு மாணிக்கங்கள் விற்கின்ற கடைவீதியிற் பாலை மணியும் விற்பார்" (திருவேங். சத. 90.)

**பாலைமாருதமூலி** *pālaimārudamūli*, பெ. (n.) பிரண்டை; adamant creeper. (சா.அக.)

**பாலையாக்கி** *pālaiyākki*, பெ. (n.) கற்பமூலி யெனப்படுவதும், இளமையாக இருக்கச் செய்வதும் ஆன, கருநெல்லி; a rejuvenating drug. (சா.அக.)

**பாலையாழ்** *pālai-yāḻ*, பெ. (n.) *பாலைப்பண்* பார்க்க; see *pālai-p-paṇ*. "*பாலையாழ் பழித்த*" (கம்பரா. மாரீசன்வதை. 95.) "*பாலையாழ்ப் பாண்மகளே! பண்டு நின் நாயகற்கு*" (தி.மா.133–1.)

*[பாலை + யாழ்]*

**பாலையாழ்த்திறம்** *pālai-yāḻ-t-tiṟam*, பெ. (n.) பாலைப் பண்ணைச் சார்ந்த சிறுபண்கள் (பிங்.); (mus.) group of secondary melody types of pālai class.

*[பாலை + யாழ்த்திறம்]*

**பாலையுடைச்சி** *pālai-y-uḍaicci*, பெ. (n.) 1. சிறுமரவகை; indian calosanthes, m.tr., oroxylum indicum. 2. ஒருவகைச் சிறுமரம்; tender wild jack, m.tr.,

*[பாலை + உடைச்சி]*

**பாலையுரிப்பொருள்** *pālai-y-urripporuḷ*, பெ. (n.) பாலைத் திணைக்குரிய உரிப்பொருள்; அது பிரிதலும் பிரிதல் நிமித்தமுமென இரண்டு வகைப்படும் (அகப். அகத்திணை. உரு. உரை.); that distirctive erotic mood in love of paratiṇai.

*[பாலை + உரிப்பொருள்]*

**பாலைவனச் சோலை** *pālai-vaṉa-c-cōlai*, பெ. (n.) பாலைநிலத்தில் அரிதாகக் காணப்படும் நீரும் நிழல்தரு மரங்களும் நிறைந்த பசுமையான இடம்; oasis.

*[பாலைவனம் + சோலை]*

**பாலைவனம்** *pālai vaṉam*, பெ. (n.) நீண்டு அகன்ற மணல்வெளி (இக்.வ.); desert. ஒட்டகம் பாலைவனக் கப்பல் என அழைக்கப்படும்.

*[பாலை + வனம்]*

**பாலொடுவை** *pāl-oḍuvai*, பெ. (n.) கொடிப்பாலை (மலை.); green wax-flower.

**பாலொழுக்குதல்** *pāl-oḻukkudal*, பெ. (n.) இறக்குந் தறுவாயில் இறப்பவரின் வாயில் பால் ஊற்றுஞ்சடங்கு; the ceremony of giving a little quantity of milk to a dying person by his relatives. '*தாயருக்குப் பாலொழுக்குகிற காலத்தில் மகன் தாயம் போட்டுக் கொண்டிருந்தான்*' (உ.வ.)

*[பால் + ஒழுக்குதல்]*

ஒழுக்குதல் = ஊற்றுதல்

**பாலொளி–த்தல்** *pāl-oḷi-*, செ.கு.வி. (v.i.) ஆ, பாலைக் கறப்பவனுக்குச் சுரக்காது கன்றுக்காக உள்ளடக்கிக் கொள்ளுதல் (யாழ்ப்.); to stint milk, as a milch cow.

*[பால் + ஒளித்–தல்]*

**பாலோய்தல்** *pālōydal,* பெ. (n.) முலையில் பால் வற்றுதல்; cessation of milk secretion in the breasts. (சா.அக.)

*[பால் + ஒய்தல்]*

**பாலோமடிக்கா** *pālōmaḍikkā,* பெ. (n.) நிலப்பூசணி; giant potato. (சா.அக.)

மறுவ: பால்மடிக்கா
பால்முடங்கி

**பாவகம்**[1] *pāvagam,* பெ. (n.) 1. தீ; fire. *"பாவகப் பகுவாய் நாகம்"* (திருவாலவா. 36, 5.) 2. சேங்கொட்டை (யாழ்.அக.); marking-nut.

**பாவகன்** *pāvagaṉ,* பெ. (n.) 1. தூய்மையன்; holy person. "பறவையின் குலங்கள் காக்கும் பாவகன்" (கம்பரா. நாகபா. 270) 2. தூய்மை செய்பவன்; purifier. 3. நெருப்புத் தெய்வம்; fire. the God of fire. "நெடுங்கடற் பருகும் பாவகன்" (கம்பரா. கவந். 14.) 4. நஞ்சு தீர்க்கும் மருத்துவன்; one who cures poisonous bite. "விட நகுல மேவினு மெய்ப்பாவகனின் மீளும்" (திருவருட் பயன், 57.)

**பாவகி** *pāvagi,* பெ. (n.) நெருப்பில் தோன்றியவனான முருகக் கடவுள் (பிங்); skanda, born of fire.

**பாவசாதினி** *pāvašādiṉi,* பெ. (n.) இருள் விடுசெடி பார்க்க; see iruḷ-viḍu-šeḍi.

**பாவட்டங்காய்** *pāvaṭṭaṅkāy,* பெ. (n.) ஆரோகம், சீதக்கடுப்பு; பித்தாதிசாரம், சளி, ஆகியவற்றைப் போக்கும் மருந்துக்காய்; unriped fruits of pāvaṭṭa it cures nausea, anal irritation, diarrhoea and aggravated phlegm humour (சா.அக.)

**பாவட்டம்** *pāvaṭṭam,* பெ. (n.) 1. மானவாரி நெற்பயிரில்களையெடுக்கப் பயன்படுத்தும் கருவி; a tool used in dry land. 2. *பாதிரி* பார்க்க; see *pādiri.*

**பாவட்டா** *pāvaṭṭā,* பெ. (n.) ஒரு கொடி; creeper. (சா.அக.)

**பாவட்டை** *pāvaṭṭai,* பெ. (n.) 1. செடிவகை (பதார்த்த.534); pavetta,l,sh., pavetta indica 2. ஒருவகைச் சிறுமரம் (L.); common bottle flower,s tr., webera corymbosa 3. *ஆடாதோடை*(யாழ். அக,) பார்க்க; see *ādātōḍai.* malabar-nut-

வகைகள் : 1. சிவப்புப் பாவட்டை
2. மஞ்சட் பாவட்டை
3. முள் பாவட்டை

தெ. பாபட.
க. பாவெட.
ம. பாவட்ட.

மறுவ : திரணைச்செடி.

**பாவட்டைச் சக்களத்தி** *pāvaṭṭai -c-cakkaḷatti,* பெ. (n.) பாவட்டை போன்ற ஒருவகைச்செடி (யாழ்.அக.); a shrub resembling the pāvaṭṭai

*[பாவட்டை + சக்களத்தி]*

**பாவடி** *pāvaḍi,* பெ. (n.) ஏறுமிதி; stirr up *"பாவடியிட் டேறுங் கடும்பரியும்"* (பணவிடு.163.)

மறுவ. அடிதாங்கி, அடிகொளுவி

*[பாவு + அடி]*

**பாவடி** *pāvaḍi,* பெ. (n.) அகன்ற பாதம்; broad foot. *“பெருந்தண் குளவி குழைத்த பாவடி”*(நற்.51–8) *“பாவடி உரல பகுவாய் வள்ளை”* (குறுந்.89–1) *“பழூஉப்பல் அன்ன பருவுகிர்ப் பாவடி”* (குறுந்.180–1) *“பான்மருண் மருப்பி னுரல்புரை பாவடி”*(கலி.21–1) *“பாவடியாற் செறனோக்கின்”* (புறநா.15–8) *“படுமணியிரட்டும் பாவடிப் பணைத்தாள்”* (புறநா72–3)

*[பா + அடி]*

**பாவண்ணம்** *pā-vaṇṇam,* பெ. (n.) நூற்பாவுக்குரிய சந்தம்; a rhythm specially adapted for nūṟ-pā. *“அவற்றுட், பாஅவண்ணஞ் சொற்சீர்த் தாகி நூற்பாற் பயிலும்”* (தொல்.பொ.526.)

*[பா + வண்ணம்]*

**பாவல்** *pāval,* பெ. (n.) 1. மிதியடி (பிங்); wooden sandals, 2. மரக்கல வுறுப்புக்களுள் ஒன்று; spar of a dhoney, the top of which is attached to the border of the sail to keep it to the wind. கீழ்ப்பாவல், மேற்பாவல், (வின்) 3.*பாகல்*² பார்க்க; see *pāgal.* balsam - pear

ம. பாவல். தெ. பாவ.

**பாவலர்** *pāvalar,* பெ. (n.) செய்யுளியற்றுபவர் (திவா.); poets, bards. *“பாவலர்க் கொடன்றியும்”* (சிவரக.கணபதிமறு 1.)

‘*பாவலர் அருமை நாவலர் அறிவார்*’ (பழ.)

*[பா + வல்லவர் → பாவலர்]*

**பாவலாக்கட்டை** *pāvalā-k-kaṭṭai,* பெ. (n.) சிலம்பக் கட்டை வகை ; a kind of thick fencing - staff.

*[பாவலா + கட்டை]*

**பாவறுத்தல்** *pāvaruttal,* பெ. (n.) நெய்யப்பட்ட துணியைப் பாவினின்று துணித்தெடுத்தல்; to cut the cloth from the warp.

*[பா + அறுத்தல் பா=நெசவுப்பா(வு)]*

**பாவறை** *pā-v-aṟai,* பெ. (n.) கூடாரம்; tent “தரணிபன் சமைத்த பாவறைகள்” (ஞானவா. தாகு. 84).

*[பாவு + அறை]*

**பாவனம்**¹ *pāvaṉam,* பெ. (n.) 1. தூய்மை செய்கை; purification, expiation 2. தூய்மை (வின்) purity.

**பாவனம்**² *pāvaṉam,* பெ. (n.) மருந்து குழைக்கை (இ.வ.); mixing of medicinal drugs, infusion

**பாவனன்** *pāvaṉaṉ,* பெ. (n.) 1. தூய்மை செய்பவன்; one who purifies 2. அனுமான்; hanumān- the son of wind- god 3. வீமன் (பாரத. பாத்தாம்.142.); bhima. the son of wind - god

**பாவனாசம்** *pāva-ṉāšam,* பெ. (n.) திருக்குற்றாலத்திற்கு அருகில் உள்ள சிவத்தலம்; a sivan shrine near Thirukkuṟṟālam.

**பாவனி** *pāvani,* பெ. (n.) 1.துளசி; holy basil 2. பசு; cow 3. நீர்; water. (சா.அக.)

**பாவாடம்** *pāvāḍam,* பெ. (n.) தெய்வத் திருமேனிகளின் முன்னர் நாக்கை அறுத்துக் கொள்ளும் நேர்த்திக்கடன் (வின்); vow to cut off one's tongue before a deity

தெ. பாவாடமு.

**பாவாடை¹** *pāvāḍai*, பெ. (n.) 1. பெரியோர் நடந்து செல்லத் தரைமீது விரிக்குஞ்சீலை; cloth or carpet spread on the ground for persons of distinction to walk on. 'நாடு மகிழவவ்வளவும் நடைக்காவனம் பாவாடையுடன்.... நிரைத்து' (பெரியபு. ஏயர்கோன்.57.) 2. கடவுள் முதலியோர்க்கு முன் ஆடையிற்படைக்கும் சோறு; boiled rice heaped on a cloth before a deity or eminent person. *"பதம் பெற்றார்க்குப் பகல் விளக்கும் பாவாடையுமாக் கொள்ளீரே"* (கலிங்.548) 3. மேலெழ வீசும் ஒருவகை விருதுச்சீலை (இ.வ); cloth used for waving before a deity or a person of distinction 4. பெண்களின் உடைவகை; skirt 5. மேசைவிரிப்பு (வின்); table cloth

ம. தெ. பாவட

*[பாவு + ஆடை]*

**பாவாடை²** *pāvāḍai*, பெ. (n.) உள்ளாடையாகப் பெண்களும் வெளிப்புற ஆடையாகச் சிறுமியரும் அணியும், இடுப்பிலிருந்து கணுக்கால் வரை தொங்கும்படியான உடை; a kind of skirt down to the ankle cwornas outer garment by young girls, as inner garment by women.

**பாவாடை³** *pāvāḍai*, பெ. (n.) வேலையாள் (I.M.P.Cg.146); servant.

**பாவாடைக்காரன்** *pāvāḍai-k-kāraṉ*, பெ. (n.) குஞ்சம் பாவாடை கட்டும் வேலைக்காரன் (இ.வ.); liveried servant.

*[பாவாடை + காரன்]*

**பாவாடைப்பூ** *pāvāḍai-p-pū*, பெ. (n.) பரந்துகிடக்கும் இருப்பைப் பூ(வின்)(வின்); mahua flowers which lie scattered on the ground.

*[பாவாடை + பூ]*

**பாவாடைராயன்** *pāvādai-rāyaṉ*, பெ. (n.) *பாவடைவீரன்* (தஞ்.) பார்க்க; see *pāvāḍaiviraṉ*.

*[பாவாடை + அரையன்]*

ஒருகா. அரையன் என்பது பழைய பட்டமாகலாம்

[சிறு தெய்வங்களில் ஒன்று. அங்காளி அம்மன் முன்பு தனது நெஞ்சாங்குலை, குடல், ஈரல் முதலியவற்றைப் பாவாடைப் படைய்ல் ஆக்கிய படியினால் இவ்வாறு பெயர் பெற்றான் என்பர்; மற்றும் காவற்சேவகன் எனவும் கூறுவர். இப்பாவாடைராயனை அடித்தட்டுமக்களே பெரும்பாலும் வழிபாடு செய்கிறார்கள்]

**பாவாடை வீசு¹-தல்** *pāvāḍai-višu-*, செ.கு.வி. (v.i.) அரசர் தலைவர் முன்பு ஒருவகைப்பாவாடை விருதை வீசி மதிப்புரவு செய்தல்; to wave pāvāḍai before kings and chieftains, as a mark of honour. "இருபுறத்தும் ... பாவாடை வீச" (தெய்வச். விறலிவிடு. 565.)

**பாவாடை வீசு²-தல்** *pāvāṭai-vicu-*, செ.கு.வி. (v.i.) வெண்துகிலை அமைதிக்குறியாக வீசுதல் (வின்.); to wave a white cloth, as a signal of truce

*[பாவாடை + வீசு-,]*

**பாவாடை வீரன்** *pāvāḍai-viraṉ*, பெ. (n.) ஒரு சிற்றூர்த் தெய்வம்; a village deity

**பாவாணர்¹** *pā-vāṇar*, பெ. (n.) *பாவலர்* பார்க்க; see *pāvalar*. *"பாவாணர் மங்கலக் கவிவாழி பாடி"* (திருச்செந்தூர் பிள்ளைத்,சிறுபறை.4)

*[பா + வாழ்நர் → வாணர்]*

**பாவாணர்²** *pāvāṇar,* பெ. (n.) *தேவநேயப் பாவாணர் Dēvanēya-p-pāvaṇar.* தேவநேசன் (1902–1981) என்னும் இயற்பெயர் கொண்டு இவர்தம் தமிழ்ப் பாப்புனையும் ஆற்றலால் முன்னர் கவிவாணர் என்றும் பின்னர் அதன் தமிழாக்கமாகப் பாவாணர் என்றும் சிறப்பித்து அழைக்கப்பட்டார். இவர்தம் பாப்புனையும் ஆற்றல் தமிழ்மரபினை அனைத்து வகையிலும் தழுவும், திறத்தது. ஆயினும் அவரது சொல்லாய்வுத்திறம் அதனினும் மிஞ்சி அவருக்கு நிலையான புகழை ஈட்டித்தந்தது. சொல்லாய்வுப் புலம் தமிழ்வரலாற்றில் பாவாணர்தம் வருகைக்குப் பின்னரே ஊக்கம் பெற்றுத் திகழ்ந்தது. அவரது சொல்லாய்வு தனித்தன்மை வாய்ந்தது; மூலத்தன்மை பொருந்தியது. புதையுண்டு கிடந்த பல உண்மைகளை விண்டு விளக்கிக் காட்டித் தமிழுக்கு ஏற்றமளித்தது. தமிழ்ச் சொற்களின் இயல்புகளையும் உண்மைகளையும் விளக்குவது, வடமொழி போலும் பிற மொழிகளில் சென்று வழங்கும் தமிழ்ச் சொற்களை அடையாளங் காட்டுவது, பிறமொழிச் சொற்களுக்கு நேரிய கலைச் சொற்களைப் படைப்பது என்னும் முத்திறங்களில் பாவணரின் சொல்லாய்வுப் பரப்பு திகழ்ந்தது. இலக்கண இலக்கியப் பயிற்சி பிறமொழி அறிவு, மொழியியல் அறிவு, மொழியாய்வு முதலிய அவர்தம் பல்துறைப்பட்ட அறிவு, அவர்தம் சொல்லாய்வு இயல்பாக ஆழ்ந்தகன்று செல்வதற்குத் துணைநின்றன. தமிழினின்று கடன் கொண்டு பிறமொழிகளில் வழங்கும் சொற்களைக் கண்டறிய வழிவகை காட்டியிருப்பதும், அதேபோல் தமிழில் கலைச்சொல் படைக்க நெறிமுறை வகுத்திருப்பதும் பாவாணரின் ஆழங்காற்பட்ட அறிவாற்றலைப் புலப்படுத்துகின்றன. அவர் தம் வாழ்நாள் முழுவதும் சொல்லாய்விலேயே திளைத்தார். தமிழ் தன்னை நிலைநிறுத்திக் கொள்ளும் முயற்சிக்குத் துணைநிற்பதில் தொல்காப்பியரையடுத்துக்கருதத் தக்கவர் இவரே என்னும் சிறப்புக் குரியவராகத் திகழ்கிறார் பாவாணர். தமிழின் ஏற்றத்திற்காகவே தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு உழைத்த இவரைப் போன்றோரைக் காணத் தமிழ்வரலாற்றில் பல நூற்றாண்டுகள் காத்திருக்க வேண்டும் என்று கூறுவது பிழையாகாது; உயர்வு நவிற்சியுமன்று.



**பாவாற்றி** *pā-v-āṟṟi,* பெ. (n.) நெய்வோர் குச்சு (சீவக.615,1153 உரை.); weaver's brush

*[பா + ஆற்று → பாவாற்று → பாவாற்றி]*

**பாவாற்று–தல்** *pā-v-āṟṟu,* 5. செ.குன்றாவி. (v.i.) நெசவுப்பாவைத் தறிக்குச் சித்தஞ் செய்தல்; to make the warp ready for the loom

*[பா + ஆற்று–,]*

**பாவிதம்** *pāvidam-,* பெ. (n.) மருந்திற் சேரும் பொருள்; ingredient. (சா.அக.)

**பாவியம்¹** *pāviyam,* பெ. (n.) அருகம்; jainism *"பாவியமல்லா ததுரைப்பான்"* (சைவச ஆசாரிய.கா.)

**பாவியம்²** *pāviyam,* பெ. (n.) 1. இலக்கியம்; literature 2. கருதத்தக்கது எண்ணிப் பார்க்கத்தக்கது; that which is con ceivable 3. தகுதி (சைவச.ஆசாரிய.11); fitness; worthiness.

*[பாவு + இயம் → பாவியம்]*

**பாவியர்** *pāviyar* , பெ. (n.) குறிப்புடையவர்; those who have opinions or ideas. **"வில்லிகைப்போதின் விரும்பாவரும் பாவியர்கள்"** (திருக்கோ.364)

*[பாவியம் → பாவியர்]*

**பாவியா—தல்** *pāviyā-* , 6. செ.கு.வி. (v.i.) உண்டாதல்; வருதல்; come into cxistence, to come.

*[பாவி + ஆ –,]*

**பாவிரி** *pāviri*, பெ. (n.) *பசிரி* (பிங்) பார்க்க; see *paširi.* creeping purslance

தெ. பாவிலி

*[பா + விரி]*

**பாவிரிமண்டபம்** *pā-viri-mandabam*, பெ. (n.) அவையமண்டபம்; academy " **தெய்வப் பாவிரி மண்டபம்"** (திருவாலவா.198).

*[பா + விரி + மண்டபம்]*

**பாவிலி** *pāvili*, பெ. (n.) **கத்திரிபாவிலி** பார்க்க; see *kāttiri-pāvili.* a kind of ear-ornament

தெ. பாவிலி க. பாவலி

*[பா + இலி]*

**பாவிலேவார்—த்தல்** *pāvilē-vār-*, 3. செ.கு.வி. (v.i.) வெண்ணூலில் சாயநூல் சேர்த்து நெய்தல்; (wear.) to interweave dyed with white yarn

*[பாவிலே + வார்—த்தல்]*

**பாவின்புணர்ப்பு** *pā-vinpunarppu* , பெ. (n.) சித்திரக் கவிகளுளொன்று; அது நால்வர் நான்கடிக்கு ஈற்றுரை சொன்னால் தான் அடிக்கு முதல் பாடிப் பொருண் முடிப்பது; a metrical composition fitted into fenciful figures, one of nār-kavi. **" பாதமயக்கே பாவின் புணர்ப்பே"** (யாப்பருங்கலம்.செய்யு.96)

*[பாவின் + புணர்ப்பு]*

**பாவினம்** *pā-v-inam* , பெ. (n.) **தாழிசை**, துறை,விருத்தம் என்ற முப்பகுதியான **பாவின்** வகை; sub- division of verse, of which there are three kinds,viz., tāḻišai, tuṟai, viru tam

*[பா + இனம்]*

[துறை தாழிசை விருத்தமென்னும் மூவகைப் பாவினங்களுள் விருத்தமொன்றே வடமொழிப் பெயரால் வழங்குவதாகும் அஃதூஉம் பெயரான் மட்டும் வடமொழியே யன்றி யாப்பானன்று. மூவகைப் பாவினங்களுள் துறை தாழிசை யென்னு மிரண்டுந் தமிழாயிருக்க, ஏனையொன்று மட்டும் வடமொழியாயிருத்தல் எங்ஙனம்? ஏனை மொழிகட்கெல்லாமில்லாத பரந்த யாப்பிலக்கணம் தமிழிலிருக்கவும், வடமொழியாப்பை வேண்டிற்றென்றல் விந்தையிலும் விந்தையே, 'வெண்பா முதலிய செய்யுளிலக்கணமும் இன்னோரன்ன பிறவும் வடமொழியிற் பெறப்படாமையானும்'' என்றார் சிவஞான முனிவரரும். ஆங்கில யாப்புப் பலவகைப் பாக்கூறுமேனும் தமிழ்போல அத்துணைப் பரந்துபட்டதன்று.

ஒரு மொழியானது காலஞ் செல்லச் செல்ல, அவ்வக் காலத்து மக்கள் இயல்பிற்கும் அறிவிற்கு மேற்றவாறு இலக்கியத்தினும் திரிதல் இயல்பே. அங்ஙனம் தமிழ் யாப்பும் கழகக் காலத்திற் பாவாயிருந்து பிற்காலத்தில் பாவினமாகத் திரிந்தது.

எல்லாப் பாவினங்களும் கலிப்பாவினின்றே தோன்றியவாகும். வெண்பா, ஆசிரியப்பா

என்னு மிரண்டும் பெரும்பாலும் வரம்பிறவாதன. வஞ்சிப்பாவும் மருட்பாவும் கலப்புப் பாக்களேனும், அவையும் அவற்றுக்கோதியவாறு ஒருவகை வரம்புபட்டனவே. ஆனால், கலிப்பாவோ ஒரு கட்டின்றி எல்லாவடியானும் எல்லா வோசையானும் பற்பல வுறுப்புப் பெற்று வரம்பிகந்து வருவதாகும். அதனுள்ளும் கொச்சகக்கலியோ ஏனைக் கலிகட்குரிய சீரும் எல்லையும் இகந்து,

"தரவின் றாகித் தாழிசை பெற்றும்
தாழிசை யின்றித் தரவுடைத் தாகியும்
எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியும்
அடக்கியல் இன்றி அடிநிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை
உடையது" ஆயும்,

"தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்தும்
ஐஞ்சீர் அடுக்கியும் ஆறுமெய் பெற்றும்
வெண்பா வியலான் வெளிப்படத்
தோன்று" (தொல். சொல்.148)

வதாயும் பற்பலவாற்றான் மிக்குங் குறைந்துந் திரிந்தும் வருவதாகும். கொச்சகக்கலியுள் ஒருவகையே பரிபாடலென்க.

இற்றைத் தமிழ்நூற்கெல்லாம் முன்னூலாகிய தொல்காப்பியத்தில் பாவினம் கூறப்படாவிடினும், அவற்றின் தோற்றத்திற்குக் காரணமான இயல்களை ஆங்காங்குக் காணலாம்.

**துறை:** துறையென்பது தொல்காப்பியத்துள்,

"வழக்கியல் மருங்கின் வகைபட நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்
முன்னோர் கூறிய குறிப்பினும் செந்துறை
வண்ணப் பகுதி வரைவின் றாங்கே"

என ஒருவகைப் பாடாண் செய்யுட்குப் பெயராக வந்துள்ளது. அது செந்துறைப் பாடாண் பாட்டெனப்படும். அது கடவுள் வாழ்த்துப்பற்றி வரும் ஒருவகைக் கலிப்பா. வண்ண மென்பதே கலிப்பாவையுங் கடவுள் வாழ்த்தையு முணர்த்தும்.

''மூவா முதலா'' என்னும் சீவகசிந்தாமணிக் கடவுள் வாழ்த்துச் செய்யுளை, முன்னோர் கூறிய குறிப்பின்கண் வந்த செந்துறைப் பாடாண் பகுதி யென்றனர் நச்சினார்க்கினியர்.

பாடாண்டிணை தெய்வம் பராவல், மக்களேத்தல் என்னும் இருபாற்பட்டு வரும். தெய்வம் பராவல் பெரும்பாலும் கலிப்பாவாலேயே வரும். தெய்வத்தின் பல குணங்களையும் திருவிளையாடல்களையும் வடிவுகளையும் வண்ணித்துப் புகழ்தற்குக் கலியுறுப்புகள் போலப் பிற பாக்கள் சிறவாமை காண்க.

ஒத்தாழிசைக்கலி இருவகையென்று கூறி அவற்றுள் ஒன்று
"தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே"
(தொல்.சொல்.133)

என்றார் தொல்காப்பியர்.

சிந்தாமணியினுஞ் சிலப்பதிகாரத்தும் தெய்வம் பராவுஞ் செய்யுள்களெல்லாம் ஒருபோகும் கொச்சகமுமாகக் கலிப்பாக்களாகவே வந்தன. இவ்வழக்குப் பற்றியே தெய்வம் பராவும் கொச்சகங்கள் தேவபாணி, பெருந்தேவபாணி யெனப்படுவன.

கலம்பகத்திற் கடவுள் வாழ்த்து கொச்சக ஒருபோகாற் கூறப்படுவதுங் காண்க. அராகம், அம்போதரங்கம் முதலிய கலியுறுப்புகள் கடவுள் வாழ்த்திற்கே சிறப்பாயுரியன.

இனி, துறையென்பது புறத்திணை யியலில் திணைப் பிரிவாகவுங் கூறப்பட்டுள்ளது. அதனுரையில்,

''மக்களும் மாவும் முதலியன சென்று நீருண்ணுந் துறைபோலப் பலவகைப்பட்ட பொருளும் ஒருவகைப்பட்டு இயங்குதலாகு மார்க்கமாதலிற் றுறையென்றார், எல்லாவழியு மென்பதனை எல்லாத் துறையுங் காவல் போற்றினார் என் பவாகலின். எனவே திணையும் துறையும் கொண்டாராயிற்று. அகத்திணைக்குத் துறையுட்பகுதிகளெல்லாம் விரித்துக் கூறிப் பின்னும் பன்முறையாற் பரந்துபட்டு வரம்பிகந்தனவற்றையுந் தொகுத்துத் துறைப்படுத்துக் கூறுக என்றற்குச் செய்யுளியலுள் துறையென்பது உறுப்பாகக் கூறினார். புறத்திணைக்கு அங்ஙனம் பரந்து விரித்தோதாது தொகுத்து இலக்கணஞ் செய்தாராயினும் அவையும்

அவ்வாறே பல பொருட்பகுதியும் உடையவென்று உணர்த்து வதற்குத் துறையெனப் பெயராகக் கொடுத்தார். இதனானே அகப்பொருட் பகுதி பலவாயினும், ஒரு செய்யுட் பல பொருள் விராஅய் வரினும் ஒரு துறையாயினாற்போலப் புறத்திணைக்கும் அவ்வப் பொருட்பகுதியும் ஒருதுறையாதலும் ஒரு செய்யுளுட் பல துறை ஒருங்கு வந்தும் ஒரு துறைப் படுதலுங் கொள்க"

"அவ்வம்மாக்களும் விலங்கு மன்றிப்
பிறவவண் வரினும் திறவதின் நாடித்
தத்தம் இயலான் மரபொடு முடியின்
அத்திறம் தானே துறையெனப் படுமே"
(தொல். செய். 200)

என்பது செய்யுளியல். இதனால் துறையென்பது பொதுவாய்த் திணைப் பிரிவும் சிறப்பாய் அகத்திணைப்பிரிவு மென்பது பெற்றோம். அகத்திணைக்குச் சிறந்த கோவை நூல்களுள் அகப் பொருட்டுறைகளெல்லாம் கலிப்பாவாலேயே கூறப்படுவன. இதனாற் கலித்துறையெனப் பெயர் பெற்றது. கலியென்பது செய்யுளையும் துறை யென்பது அகப்பொருட்டுறை யென்பது விரிந்த பொருள். கலிப்பாவால் அகப்பொருள் கூறப்படுதலை,
"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" என்பதற்குத் தேவபாணியும் காமமுமேயன்றி வீடும் பொருளாமென்பது ஆசிரியர் கருத்தாயிற்று" என்று நச்சினார்க்கினியர் கூறுவதானும், கலித்தொகையானும், கலியின் திரிபாகிய பரிபாடல்,

"கொச்சகம் அராகம் சுரிதகம் எருத்தொடு
செப்பிய நான்கும் தனக்குறுப் பாகக்
காமங் கண்ணிய நிலைமைத் தாகும்"

எனப்படுதலானும்,

தலைவனுந் தலைவியும் உறழ்ந்து கூறும் உறழ்கலியானும் அறிந்து கொள்க.

ஆகவே, துறையென்பதற்குரிய செந்துறைப் பாடாண் பகுதி, அகப்பொருட்டுறை என்னும் இருபொருளில் வரும் கோவைச் செய்யுள் அளவொத்த நெடிலடி நான்கென்றும் அறிந்துகொள்க.

நாச்சினார்க்கினியர் செந்துறைப் பாடாண் பகுதியாகக் கூறிய சிந்தாமணிக் கடவுள் வாழ்த்துச் செய்யுளும் நெடிலடி நான்காகவே நிகழ்வது காண்க.

**தாழிசை**

"இனி தாழிசை யென்பது கலிப்பாவுறுப்பென்பது வெள்ளிடை. அது தாழம்பட்ட ஓசையாய் வருதலாற் றாழிசையெனப்பட்டது. அது தரவகப்பட்ட மரபினதாய் ஒரு பொருண்மேல் மூன்றடுக்கிவரும். கொச்சகக் கலியாயின் தனித்தும், பலவாயும், பிறவுறுப்பின்றியும் வரும். மூன்று தாழிசை ஒத்துவரின் ஒத்தாழிசைக் கலியாம். ஒத்தாழிசையை ஒ+தாழிசையென்று பிரித்து ஒத்தாழிசை யெனக் கூறாது, ஒத்து+ஆழிசை என்று பிரித்து ஒத்து ஆழ்ந்த ஓசையென்றார் நச்சினார்க்கினியர்.

ஒரு தொடர்புபட்ட பொருளைக் கூறு மிடத்து, ஒத்த நியாயங்களையும் நிகழ்ச்சிகளையுங் கூறுதற்குத் தாழிசை போலச் சிறந்த உறுப்புப் பிறிதிலது.

**விருத்தம்**

இனி விருத்த மென்பது யாதோவெனின் அது ஒருவகை யாப்பாம். அது தமிழில் மண்டில மெனப்படும்.

"ஒத்தா ழிசையும் மண்டில யாப்பும்
குட்டமும் நேரடிக் கொட்டின வென்ப"
என்னுஞ் சூத்திரவுரையில்,
"நாற்சீரடி மூன்றுகைபடத் துள்ளி வருதலே யன்றித் தாழம்பட்ட வோசை பெற்றும் வருமென்றார். இனி நாற்சீரடியாய் வருமாசிரியமும் வெண்பாவும் ஈற்றயலடியும் ஈற்றடியும் முச்சீராய் வருமென முன் விதித்தவை ஒருகால் நாற்சீராயும் வருமென்றற்கு மண்டில யாப்பென்றார். அது மண்டில வாசிரியப்பாவும் மண்டில வெண்பாவுமாம்"
"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சார னாட செவ்வியை யாகுமதி

யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவ
ளுயிர்தவச் சிறிது காமமோ பெரிதே''
(குறுந். 18) எனவும்,

"அறையருவி யாடாள் தினைப்புனமுங் காவாள்
பொறையுயர் தண்சிலம்பிற் பூந்தழையுங் கொய்யா
ளுறைகவுள் வேழமொன் றுண்டென்றாளன்னை

மறையறநீர் வாழிய மையிருங் குன்று''
எனவும் மண்டலித்து வந்தன'' என்றார் நச்சினார்க்கினியர். மண்டலித்தல் வட்டமாதல். அது மண்டலம் என்னும் தொகைச் சொல்லிற் பிறந்த வினை. மண்டலம் மண்டிலமென மருவியும்வரும். மண்டலிப்பாம்பு, சுரமண்டலம், திங்கண்மண்டிலம், மண்டிலச்செலவு (குதிரைச்சாரி) முதலியன வட்டமென்னும் வடிவுப் பொருளில் வந்தன.

மண்டலம், வட்டமென்னும் சொற்கள் circle என்னும் ஆங்கிலச் சொற்போல இடப் பகுதிகளையுங் குறிக்கும்.

"ஜயங்கொண்ட சோழமண்டலம்"
"இந்த வட்டத்திற்குள் அவற்கெதிரில்லை"

வட்டமென்பது வட்டகை, வட்டார மென்றும் திரியும். மருத்துவமுறையில் நாற்பத்தெண்ணாட் பகுதி ஒரு மண்டல மெனப்படும். காலமுடத்தோ டொக்கும். இனி மண்டலம், வட்டமென்னும் சொற்கள் முழுமைப் பொருளினும் வழங்கும். திங்கள் வட்டமாயிருக்குங்கால் பதினாறு கலைகளும் நிரம்பியிருத்தல் காண்க. ஆங்கிலத்தும் round என்னும் சொல் whole, complete எனப் பொருள்படும். உலக வழக்கில் முழுமைப் பொருளில் 'வள்ளிது' என்றோர் சொல் வழங்கிவருகின்றது. அது வட்டம் என்னும் சொல்போல வள் என்னும் பகுதியினின்று பிறந்ததாகும். வள்ளிசாய் என்பது கொச்சைப் போலி.

மண்டலம் என்னுந் தொகைச்சொல், மண் + தலம் என விரியும். பண்டைத் தமிழர் கடற்செலவில் தேர்ந்திருந்தாராதலின், உலகெங்கும் கலத்திற் சென்று நிலம் வட்டமாயிருத்தலை நன்கறிந்திருந்தனர். பண்டையுலகத்தை ஏழ் தீவாகப் பகுத்துக் கூறினதும் இதை வற்புறுத்தும். தீவு–கண்டம். வடவைக் கனலை (Aurora Borealis) அறிந்திருந்ததும் மற்றோராதாரம். இலத்தீன் (Latin), ஆங்கிலம் முதலிய மொழிகளிற் கடற்றுறை பற்றிய சொற்கள் பல செந்தமிழாயிருப்பதும் இதற்குச் சிறந்ததோர் சான்றாம்.

நாவாய் – L. navis, E. navy=கப்பற்படை
கலம் – E. galleon
வாரணம் – L. marina. Skt. வருணா
கரை – E. shore. sh=க
படகு – E. bark. r=d.c.f. Coorg=குடகு
கட்டுமரம் – catamaran
சோழி – shell
நங்கூரம் – anchor
கப்பல் – ship

இது நிற்க. இனி நாற்சீரால நிரம்பிவரும் அளவடியை **மண்டில யாப்பென்றார்.**

"நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே"
(தொல். பொருள்.344) என்பது சூத்திரம். இதனால் இயற்சீரால் துள்ளலிசைபற்றி அளவடி நான்காய்த் தனித்து வருங் கொச்சகக் கலியுறுப்புக் கலிமண்டிலமாயிற்று. மண்டிலம் பிற்காலத்தில் விருத்தமென்னும் வடமொழிப் பரியாயப் பெயரால் வழங்கலாயிற்று. ஆகவே துறை, தாழிசை, விருத்த மென்னும் மூவகைப் பாவினமும் கலிப்பாவானமை பெறப்பட்டது. இவற்றைப் பிற்காலத்தார் பொதுவாகக் கொண்டு, வரம்பு கடந்து வருஉம் கொச்சகக் கலிகளையெல்லாம் ஒருபுடை யொப்புமைபற்றி ஒவ்வோர் பாவிற்கும் மும்மூன் றினமாகப் பகுத்துரைத்தார்.

கலிப்பாப் பலவகை யடிகளானும் உறுப்புக் குறைந்தும் மிக்கும் வருமென்பது முன்னரே

கூறப்பட்டது. அதினுங் கொச்சகக் கலியோ கலிப்பாவிற் கின்றியமையாத துள்ளலிசையுங் கெட்டு வருவதாகும். கலித்தல் துள்ளல்.

இரண்டடி அளவொத்துச் செந்துறைப் பாடாண் பாட்டாய் வருவதை அடித்தொகைபற்றிக் குறட்கினமாக்கி வெண்செந்துறை யென்றனர். எ—டு:

"ஆத்தி சூடி யமர்ந்த தேவனை
ஏத்தி யேத்தித் தொழுவோம் யாமே."

3 அடிமுதல் 7 அடிவரை முன்நீண்டு பின்குறுகிவரும் செந்துறைப் பாடாண் பாட்டை ஈறு குறைதல்பற்றி வெண்பாவிற் கினமாக்கி வெண்டுறை என்றனர்.

4 அடியாய் எருத்தடி நைந்தும், குட்டம் பட்டும், இடை மடக்கியும் ஆசிரிய வியலான் வரும் செந்துறைப் பாடாண் பாட்டை ஆசிரியத் துறையென்றனர். இடைமடக்கல் அம்மானைக் கியல்பென்க.

கோவையில் வரும் கலித்துறைச் செய்யுளை எழுத்தெண்ணிக் கட்டளைக் கலித்துறை யென்றனர்.

குறளடி நான்காய் வரும் செந்துறைப் பாடாண்பாட்டை அடிவகை பற்றி வஞ்சித்துறை யென்றனர்.

**கலிப்பாவில்** அம்போதரங்க வுறுப்புச் சிந்தடி **குறளடிகளும்** பெற்றுவரும்.

**இனி தாழிசைக்குச் சிறப்**பிலக்கணம், தாழம்பட்ட ஓசையாய் **அளவொத்து** மூன்று அடுக்கி வருதல், **இரண்டடியாய் இறுதியடி** குறைந்து வருவதைக் **குறட்டாழிசை** யென்றும். மூன்றடியாய் ஈற்றடி **சிந்தடியாய்** வருவதை வெண்டாழிசை யென்றும், **மூன்று நேரடியாய்** அளவொத்து மண்டில **வாசிரியம்போல்** வருவதை **ஆசிரியத்தாழிசை யென்றும், குறளடி** நான்காய் வருவதை **வஞ்சித்தாழிசை யென்றுங்** கூறினர். இவையெல்லாம் ஒருபொருண்மேல் மூன்றடுக்கியும் தனித்தும் வருவனவாம்.

இனி, விருத்தத்திற்குச் சிறப்பிலக்கணம் அளவொத்த நாலடியாய் மண்டலித்துவருதல்: அதாவது நிரம்பி வருதல்.

3 அடியாயும் 4 அடியாயும் மண்டலித்து வெண்பாவியலிற் றனிச் சொற்பெற்று வருவதை **வெளிவிருத்த மென்றும்**, கலிவிருத்தமும், **கலித்துறையும்** அளவடியாயும் நெடிலடியாயும் வருதலின் அவற்றுக்கு மேல் கழிநெடிலடியாய் ஆசிரியத் தளைதட்டு வருவதை **ஆசிரிய விருத்த மென்றும்,** வஞ்சிப்பாவிற்கு நிரம்பின அடி சிந்தடி யாதலின் சிந்தடியாய் வருவதை **வஞ்சிவிருத்த மென்றுங்** கூறினர்.

கலிப்பாவில் அராக வுறுப்புக் கழிநெடிலடியானும் வரப்பெறும்.

"அறுசீ ரடியே ஆசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉம் நேரடி முன்னே"

"எழுசீ ரடியே முடுகியல் நடக்கும்" என்பவை சூத்திரம். ஆசிரிய விருத்தம் பிற்காலத்தில் பிறதளைகளையும் தட்டு வந்தது.

விருத்தங்கட் கெல்லாம் நாலடி யளவொத்திருத்தல் பொது விலக்கணமாம். அடிகள் பலவகைப்படுமேனும் நாற்சீரடி அளவாயினாற்போல, பாக்கள் பற்பல அடித்தொகை பெறுமேனும் நாலடி செய்யுள் அளவாயிற்று. மோனை எதுகை முதலிய தொடைகட்கும் இசைநிறைவிற்கும் அடியுள் நாற்சீரடி சிறத்தல் போலச் செய்யுளில் நாலடிச் செய்யுள் சிறப்பதாகும். இதனானே வெண்பா பலவடியாய் வருமேனும் நாலடி வெண்பா பெருவழக்காயிற்று. பிற்காலத்துச் செய்யுள்களெல்லாம் பெரும்பாலும் நாலடியாலேயே நடப்பவையாயின. நாற்சீரால் அடிநிரம்பி மண்டில மாயினாற்போல, நாலடியாலும் செய்யுள் நிரம்பி ஒருவகை மண்டிலமாயிற்றென்க.

**விருத்தங்**களில், 26 வரை எழுத்துப் பெற்று வருபவற்றை விருத்தமென்றும், அதற்குமேல் **தாண்டி** வருபவற்றைத் தாண்டக மென்றும், **இவை சந்தமாக** வரின் சந்தவிருத்தம், சந்தத் தாண்டக மென்றுங் கூறினர். இங்ஙனமெல்லாம் ஒருபாவிற்குரிய பலவுறுப்புகளைப் பிற பாக்கட் கினமாக்கியதால், ஓரினம் பிறவினமாயும் ஒரு செய்யுள் பல பாவிற்கினமாயும் வருதற்கேற்று, இன்ன செய்யுளென்றொன்றைத் துணியாது

மயங்குதற் கிடனாயிற்று.

"மூவா முதலா வுலகமொரு மூன்று
மேத்தத்
தாவாத வின்பந் தலையாயது தன்னி
னெய்தி
யோவாது நின்றகுணத் தொண்ணிதிச்
செல்வ னென்ப
தேவாதி தேவனவன் சேவடி சேர்து
மன்றே"

என்னும் சிந்தாமணிக் கடவுள் வாழ்த்துச் செய்யுளுரையில், நச்சினார்க்கினியர்,

"இத் தொடர்நிலைச் செய்யுள் தேவர் செய்கின்ற காலத்திற்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமு மாதலானும்... அகத்தியத்தின் வழிநூல் தொல்காப்பிய மாதலானும், பிறர் கூறிய நூல்கள் நிரம்பிய இலக்கணத்தன அன்மையானும், அந்நூலிற் கூறிய விலக்கணமே இதற்கிலக்கண மென்றுணர்க.
இச் செய்யுள் முன்னோர் கூறிய குறிப்பின்கண் வந்த செந்துறைப் பாடாண் பகுதியாம்.

இனி, இத் தொடர்நிலைச் செய்யுளை இனமென்று காட்டிய வுதாரணங்கடாம் அவர் சேர்த்த அவ்வப் பாக்கட்கே இனமாகாது, ஒழிந்த பாக்கட்கும் இனமாதற்கு ஏற்றலானும், துறையை விருத்தமாகவும், தாழிசையை விருத்தமாகவும், ஓதுதற்கு அவை யேற்றமையானும் "மூவா முதலா" என்னுங் கவி முதலியன தாழம்பட்ட ஓசையான் விருத்தமாகவும், சீர் வரையறையானும் மிகத் துள்ளிய வோசையானும் துறையாயுங் கிடத்தலின், இதனை விருத்தக் கலித்துறை யென்னல் வேண்டும். அது கூறவே துறையும் விருத்தமுமெனப் பகுத்தோதிய இலக்கணம் நிரம்பாதா மாகலானும் இனமென்றல் பொருத்தமின்று. இச் செய்யுள்களின் ஓசை வேற்றுமையும் மிக்குங் குறைந்தும் வருவனவும் கலிக்கே யேற்றலிற் கொச்சகமென் றடங்கின" எனக் கூறியுள்ளார்.

இங்ஙனமே கலிவிருத்தம் துள்ளலிசை யாற்கலியினமாயும், சீர்வகையானும் அடிவகை யானும், நிலைமண்டில வாசிரியமாயும். நாலசைச் சீர்கொள்ளின், குறளடி வஞ்சிப்பாவாயும் கூறுதற் கேற்றுவருதலும் கட்டளைக்கலிப்பாத் துள்ளலிசையாற் கலிப்பாவாயும் சீர்வகையானும் அடிவகையானும் ஆசிரிய விருத்தமாயுங் கூறுதற் கேற்றுவருதலும் கண்டுகொள்க.

இதுகாறுங் கூறியவற்றால், பாவின மூன்றுந் தமிழ் யாப்பேயென்றும், அவை கொச்சகக்கலியின் திரிபென்றும், பின்னூலார் அவற்றைப் பன்னிரு பாவினமாகப் பகுத்துக் காட்டினரென்றும், சாலை, பண்ணை முதலிய தமிழ்ச் சொற்கள் மறைந்து ரோடு (இங்கிலிஷ்), ஜமீன்தார் (இந்துஸ்தானி) முதலிய அயற்சொற்கள் வழங்கினாற்போல, மண்டில மென்னும் தென்சொல் மறைந்து விருத்த மென்னும் வடசொல் வழங்கிற்றென்றும், இலக்கணம் நிரம்பிய பாவியற்றும் அருமை நோக்கிச் கழகக்காலத்திற்குப் பின்னோர் எளிய யாப்பான இனங்களை யியற்றினரென்றும், அவற்றுட் சிறப்புப்பற்றி மண்டிலயாப்புப் பெருவழக்காயிற்றென்றும் தெள்ளிதின் அறிந்துகொள்க.

வடமொழி விருத்தம் குறளடியானும் வருமேனும், விருத்தமல்லது வேறியாப்பு ஆண்டின்மையானும், அவை பெரும்பாலும் தமிழோடொப்புமை யுடைமையானும், பிற்றைத் தமிழ் யாப்பில் விருத்தமே பெருவழக் கானமையானும், தமிழியற்கெல்லாம் தகாது வடநூல்வழி கற்பிக்குமாறு அத்துணை இயைபு அவ் விருமொழிக்கும் ஆனபின்னர் மண்டில மென்னும் பெயர் மறைந்து விருத்தமென்னும் பெயர் வேரூன்றியதென்க. பாவாணர் – "செந்தமிழ்ச் செல்வி" மடங்கல் 1933. ]

**பாவீடு** *pāvīḍu* , பெ. (n.) மேலே தளம் போட்ட வீடு; terraced house "பாவீடு பள்ளியறை" (நெல்விடு.164)

*[பா(வு) + வீடு]*

**பாவு[1]–தல்** *pāvu,* 5. செ.கு.வி.(v.i.) 1. பரவுதல்; to extend ***"மைப்பாவிய கண்ணியர்"*** (திருவாச.24.6) 2. நிறைதல்; to be diffused

3. படர்தல்; to spread, as creepers on the ground; to ramify as family connections . 4. ஊன்றுதல்; to touch, skim along the ground *"கால் நிலத்துப் பாவாமையால்"* (சிலப்.23,190,அரும்.)

*[ பரவு → பாவு—, ]*

**பாவு²—தல்** *pāvu-*, 5. செ.குன்றாவி. (v.t.) 1. தளவரிசையிடுதல்; to lay in order; to pave; ceil with boards 2. பரப்புதல் (யாழ்.அக.); to spread 3. நாற்றுக்கு நெருக்கி விதைத்தல்; to seed closely for transplantins 4. நாற்று நடுதல்; to transplant 5. தாண்டுதல்; to leap or jump over

*[பரவு → பாவு—,]*

**பாவு²** *pāvu* , பெ. (n.) 1. தறியில் நீளவாட்டில் செல்லும் இழை; warp 2. இரண்டு பாகவளவு; measure equal to double the arm's length 3. இரண்டு பலங்கொண்ட நிறுத்தலளவை (G.Sm.D.I.i.283); a measure of weight eqval to two palam

*ம. பாவு*

*[பரவு → பாவு]*

*"பாவும் ஊடும் போல வாழுங்கள்"*

**பாவு அணுவாக்கல்** *pāvuaṇuv-ākkal*, பாவில் எக்குறையும் இல்லாமல் செம்மை செய்தல்; to finish the warp in the excellence.

*[பாவு + அணு + ஆக்கல்]*

**பாவுஉருளை** *pāvu-uruḷai*, பெ. (n.) தறியில் பாவு சுற்றப்பட்டிருக்கும் உருளை வடிவ மரத்தண்டு; seam(in which the warp is kept)

*[பாவு + உருளை]*

**பாவுஒடு—தல்** *pāvu ōḍu-*, 5. செ.கு.வி. (v.i.) பசையால் பாவு இழைகளை ஒட்டுதல்; to paste the yarns in the warp.

*[பாவு + ஒடு—,]*

**பாவுகல்** *pāvu-kal*, பெ. (n.) தளம் பரப்புங்கல்; (கோயிலொ.13.); stones or slabs used for paving or terracing

*[பாவு + கல்]*

**பாவுகழி** *pāvu-kaḻi*, பெ. (n.) பாவின்பிளவை நிறுத்துங்கழி; (wear.) split bamboos used to keep the upper warp separated from the lower one.

*[பாவு + கழி]*

**பாவுபலகை** *pāvu-palagai* , பெ. (n.) மேற்றளமாகப்பரப்பும் பலகை (யாழ்: அக); wainscot or ceiling with boards.

*[பாவு + பலகை]*

**பாவுகீறல்** *pāvu-kiṟal*, கஞ்சி போட்ட பாவின் ஈரம் நீங்க மூங்கிற்குச்சிகளால் கீறுதல்; to cleaving on the warp for drying.

*[ பாவு + கீறல் ]*

**பாவுகுத்திப் போடு—தல்** *pāvukutti-p-pōḍu-*, ā 19.செ.குன்றாவி (v.t.) பாவை வண்ணத்தில் தோய்த்தெடுத்தல்; dying.

*[ பாவு + குத்தி + போடு—, ]*

**பாவுச்சுருட்டி** *pāvu-c-šuruṭṭi*, பெ. (n.) பாவைச் சுற்ற உதவும் மூங்கிற் கழி; a bam boo pole which is used to fold the warp.

மறுவ: பாசுருட்டி, பா(வு)சுருட்டும் தடி.

*[பாவு + சுருட்டி]*

**பாவுத்தடை** *pāvut-t-aḍai,* பெ. (n.) பாவுக்குரிய இழைகளின் தொகுப்பு; bundle of yarn which is used in warp.

*[பாவு + தடை]*

**பாவுதட்டு—தல்** *pāvutaṭṭu-,* செ.கு.வி.(v.i) கோலடித்தல்; beating the warp with stick.

*[பாவு + தட்டு—,]*

**பாவு²—தல்** *pāvu,* செ.கு.வி.(v.i) 1. (கல்,பலகை போன்றவற்றைத் தளத்தில் வரிசையாக) பரப்புதல் pave ( the floor with slabs, etc.) 2. (தரையில் காலை) பதித்தல்; plant (foot on the ground ); touch ( the ground). *"காலைத் தரையில் பாவாமல் நடக்க முடியாது"* 3. விதைகளை பரந்து விழச் செய்தல்; sow seeds by scattering *"நாற்றங்காலில் அடியுரம் இட்டபிறகு விதை பாவினார்கள்"*

*[பா → பாவு]*

**பாவுதூவிதட்டு—தல்** *pāvu-tūvi-tattu,* 5. செ.கு.வி.(v.i) பாவு தெளிவாக்கத் தட்டுதல்; beating the warp the warp with stick.

*[பாவு + தூவி + தட்டு—,]*

**பாவுதோய்—தல்** *pāvu-tōy,* செ.கு.வி.(v.i) நீட்டுப்பாவில் கஞ்சி போட்டு இழைகளைச் செம்மைசெய்தல்; to starch the yarns in the warp.

*[பாவு + தோய்—,]*

**பாவு நயநயப்பாய் இரு—த்தல்** *pāvu-nayanaya-p-payi-ru,* 2. செ.கு.வி.(v.i) குறித்தளவு எண்ணெய் சேர்க்கப் பட்டபசையுடன் தோய்ந்த (பாவின் தன்மை) பாவுமென்மையாய் இருத்தலைக் குறித்தல்; tenderness of the yarns.

*[பாவு + நயநயப்பாய் + இரு—,த்தல்]*

**பாவுநீட்டு—தல்** *pāvu-nittu-,* 10. செ.கு.வி.(v.i) திறந்தவெளியில் பாவினைச் செம்மை செய்ய நீட்டுதல்; to spread in outdoor for to clean.

*[பாவு + நீட்டு—,]*

**பாவுபிணை—த்தல்** *pāvu-pinai-,* 4. செ.கு.வி.(v.i) அச்சிலுள்ள இழைகளுடன் பாவினைத் தறியிலேயே பிணைத்தல்; to join the yarns in the warp.

மறுவ. பாவு நிமிட்டுதல்;

*[பாவு + பிணை—,]*

**பாவுமுறிந்து போ—தல்** *pāvu-murindu-pō-,* 8. செ.கு.வி.(v.i) பாவுப் பட்டுக்குக் கஞ்சி போடும் போடும்போது பட்டில் ஏற்பட்ட மாற்றத் தைக்குறித்தல்; to indicate, while starch in the warp.

*[பாவு + முறிந்து + போ—,]*

**பாவுள்** *pāvuḷ,* பெ. (n.) வீட்டின் உட்பக்கத்திலுள்ள அறை (நெல்லை); a room in the inner part of the house.

*[பாவு + உள்]*

**பாவை** *pāvai,* பெ. (n.) 1.பதுமை; puppet,doll *"மரப்பாவை நாணா லுயிர்மருட்டி யற்று"* (குறள்.1020.) 2. அழகிய உருவம்; image, picture, portrait. *'சித்திரப் பாவையி னத்தக வடங்கி'* (நன்.40) 3. கருவிழி; pupil of the eye. *"கருமணியிற் பாவாய்நீ போதாய்"* (குறள், 1123) 4. பெண் woman, lady, damsal *"பாடக மெல்லடிப் பாவை"* (தேவா,538,1). 5. குரவமலர்; flower of the common bottle flower tree *" குரவம் பயந்த செய்யாப் பாவை"* (ஐங்குறு.344.) 6. பாவைக்கூத்து; பார்க்க *"திருவின் செய்யோ ளாடிய பாவையும்"*

(சிலப்.6,61.) 7. நோன்பு வகை; a religious observance *"நாமு நம்பாவைக்குச் செய்யுங் கிரிசைகள்"* (திவ்.திருப்பா.2.) 8. திருவெம்பாவை பார்க்க; a hymn in Tiruvāšagam 9. *திருப்பாவைப்* பார்க்க; see *Tiru-p-pāvai.* a human in Nālāyira-p-pirapandan *"தொல்பாவை பாடி யருளவல்லபல்வளையாய்"* (திவ்.திருப்பா. தனியன்.) 10.இஞ்சிக்கிழங்கு; root of the ginger plant *"செய்யாப்பாவை வளர்ந்து கவின்முற்றி"* (மலைபடு.125.) 11. மதில் (யாழ்.அக); wall.

தெ. பாப க. பாபெ. ம. பாவ.

*"ஆடிப் பாவை போல"* (குறுந்.8–5)

*"தாதிற் செய்த தண்பனிப் பாவை"* (குறுந்.48–1)

*"பாவை மாய்த்த பனிநீர் நோக்கமோ'* (அகம்.5–21)

*"பதவின் பாவை முனைஇ மதவு நடை'* (அகம்.23–1)

*"வரிமணற் புனைபாவைக்கு"* (புறம்.11–3)

*"புரப்போர் புன்கண் பாவை சோர"* (புறம்.235–12)

*"வண்டற் பாவை வௌவலின்"* (ஐங்.124–2)

*"தெண்டிரை பாவை வௌவ"* (ஐங்.125–2)

## பாவை என்னுஞ் சொல் வரலாறு

தமிழிலுள்ள இளமைப் பெயர்களுள் பார்ப்பு என்பது ஒன்றாகும்.

*"மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின் பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும் கன்றும் பிள்ளையும் மகவும் மறியும் என்று ஒன்பதும் குழவியோ டிளமைப் பெயரே."*(மரபியல்.1) *"அவற்றுள், பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை."* (மரபியல்.4)

*"தவழ்பவை தாமும் அவற்றோ ரன்ன,"* (மரபியல்.5) என்பன தொல்காப்பிய நூற்பாக்கள்.

பறவைக் குஞ்சும் சில ஊருயிரிகளின் (reptiles) இளமையும் பார்ப்பெனப்படும் என்பது இவற்றால் தெரியவரும். சில விலங்குகளின் குட்டியும் பார்ப்பெனப்படும் என்று பிங்கல உரிச்சொற்றொகுதி கூறும். இது அத்துணைச் சிறப்புடைத்தன்று. தாயினால் மிகக் கவனித்துப் பார்க்கப்படுவதினால் பறவைக் குஞ்சு பார்ப்பு எனப்பட்டது. பார்த்தல்= பேணுதல், பேணிவளர்த்தல். பார்ப்பு என்னுஞ் சொல் பொருட்காரணியம் பற்றி, nurs(e)ling என்ற ஆங்கிலச் சொல்லை ஒத்ததாகும். சில ஊருயிரிகளின் இளமைக்கும் பார்ப்பு என்னும் சொல்லைத் தொல்காப்பியர் மாட்டெறிந்தாரேனும், அது சிறப்பாகப் பறவையின் இளமைக்கே உரியதென்பதை *'சிறப்புடைப் பொருளை முற்படக் கிளத்தல்'* என்னும் உத்திபற்றி அதை முதற்கண் தனிப்படக் கூறியதாற்பெறவைத்தார்.

பார்ப்பு என்னும் சொல் பொருள் விரிவு முறையில் மக்கட் குழவியையும் குழவி போன்ற பொம்மையையும் குறித்தபோது ரகரங் கெட்டுப் பாப்பு, பாப்பா எனத் திரிந்தது.

ஒ.நோ: கோர்–கோ.கோர்வை–கோவை. பார்ப்பு = 1. பறவைக்குஞ்சு 2. ஊருயிரி யிளமை

*"சிலம்பிக்குத் தன்சினை கூற்றம்நீள் கோடு*
*விலங்கிற்குக் கூற்றம் மயிர்தான்—வலம்படா*
*மாவிற்குக் கூற்றமாம் ஞெண்டிற்குத் தன்பார்ப்பு*
*நாவிற்கு நன்றல் வசை"* (சிறுபஞ்சமூலம்.9)

e. pupa=chrysalis.

3. மக்கட் குழவி.

e. baeb, baby.

4. சிறுமி

l.pup=girl,pupa=girl.

5. விலங்கின் குட்டி,

e. pup, puppy=young, dog.

6. பொம்மை.

l.pupa=doll. of. poupee=doll, playtning, toy;

e. puppet=small figure representing human being

e. poppet=small person.

இட்டு என்பது, தமிழில் ஒரு சிறுமைப் பொருள் முன்னொட்டு, இட்டிடை=சிற்றிடை

இட்டேறி = சிறு வண்டிப்பாதை. இட்டு of.ette,e.et.

பாப்பா என்னுஞ் சொல் நாளடைவிற் பாவை என்று திரிந்தது.

தெ.பாப்பா,க.பாப்பெ.ம.பாவ

பாவை= 1. படிமை, பொம்மை

"*மரப்பாவை நாணாலுயிர் மருட்டி யற்று*" (குறள்.1020)

"*பொலம்பா லிகைகளும் பாவை விளக்கும்*" (மணிமே.1:45)

2. அழகிய உருவம்.

"*சித்திரப் பாவையின் அத்தக வடங்கி*" (நன்.40)

3. கருவிழியிற் பாவைபோல் தெரியும் உருவம்.

"*கருமணியிற் பாவாய் நீ போதாய்*" (குறள்.1125)

4. கருவிழி,

l. pupillus, off.pupille, e.pupil. dim. of l.pupa.

5. பாவை போற் பூக்குங் குரவம்பூ.

"*குரவம் பயந்த செய்யாப் பாவை*" (ஐங்குறு,344)

6. பாவை போன்ற இஞ்சிக் கிழங்கு.

"*செய்யாப் பாவை வளர்ந்து கவின் முற்றி*" (மலைபடு.125)

"*பாவை யிஞ்சியுங் கடவைச் சுண்ணமும்*" (பெருங்.உஞ்சைக்.53:21

7. பாவை போல் அழகிய பெண்.

"*பாடக மெல்லடிப் பாவை*" (தேவா.538:1)

8. சிறுமி,

9. பாவை நடம்.

"*திருவின் செய்யோ ளாடிய பாவையும்*" (சிலப்.6:61)

10. பாவை நோன்பு.

"*நம் பாவைக்குச் செய்யுங் கிரிசைகள்*" (திவ்.திருப்பா.2)

11. திருவெம்பாவை.

12. திருப்பாவை.

"*தொல்பாவை பாடியருள வல்ல பல்வளையாய்*" (திவ்.திருப்பா.தனி)

13. தோற்பாவை.

பாவை என்னும் நூல் உலக வழக்கிற் பாவாய் என்றுந் திரிந்து பெண்ணியற் பெயராகும்.

இதுகாறும் கூறியவற்றால் பாவை என்னுஞ் சொல்லின் சிறப்பையும், அது மேலையாரிய மொழிகளிலுஞ் சென்று வழங்கும் பரப்பையும் கண்டுகொள்க என்கிறார் பாவாணர்.

*[தமிழ்ப்பாவை எழுத்தாளர் மன்றம், 8ஆம் ஆண்டு சிறப்பு மலர் (1966–67)]*

**பாவைக்கூத்து** *pāvai-k-kūttu* , பெ. (n.) 1. கூத்துப் பதினொன்றனுள் அவுணர் காமுற்று விழும்படி கொல்லிப்பாவை வடிவு கொண்டு திருமகள் ஆடிய ஆடல்; dance of lakshmi when she assumed the form of kolli-p-pāvai, fascinated the asurās and made them fall down insensible, one of 11 kūttu, q.v.; "*திருவின் செய்யோள் ஆடிய பாவையும்*" (சிலப்.கடலாடு.61.) 2. பொம்மையாட்டம்;

puppet dance; திரை மறைவில் இருந்து கொண்டு பொம்மைகளின் உறுப்புகளில் இணைக்கப்பட்டிருக்கும் நூலை இழுப்பதன் மூலம் பொம்மையை இயக்கி நிகழ்த்தும் கலை நிலை: (பொம்மலாட்டம்.) "*தோற் பாவைக்கூத்தும்*" (சி.சி.4.24.)

*[பாவை + கூத்து]*

**பாவைஞாழல்** *pāvai-ñāḻal* பெ. (n.) ஞாழல்வகை (இறை.2,பக்.28); a kind of ñāḻal

*[பாவை + ஞாழல்]*

**பாவைத்தீபம்** *pāvai-t-tībam* பெ.(n.) கோயிலில் வழங்கும் ஒளிவழிபாட்டுக் கருவிவகை (பரத.ஒழிபு.42,உரை); a kind of lamp with a damsel shaped stand, waved before idols in a temple

*[பாவை + தீவம் → தீபம்]*

**பாவைப்பாட்டு** *pāvai-p-pāṭṭu* பெ.(n.) திருப்பாவை, திருவெம்பாவைகளில் உள்ளவைபோல நான்கடியின் மிக்குவருஞ் செய்யுள் வகை (தொல்,பொ.461,உரை.); a kind of stanza having, more than four lines as in Tiruppāvai and Tiru-v- empāvai

*[பாவை + பாட்டு]*

சிலை (மார்கழி) மாதத்தில் விடியற்காலையில்திருமணம் ஆகாத பெண்கள் ஒருவரையொருவர் துயில் எழுப்பி, வட்டமாய்க் கூடி, பொய்கைக் கரைக்குச் சென்று நீராடி, பாவை வைத்து வழிபாடு நடத்திப் பாடுவது பாவைப்பாட்டு எனப்படும். மழை பெய்து நாடு நலம் பெறுவதற்காகவும், தமக்கு நல்ல கணவன் வாய்த்துத் திருமணம் நடைபெறுவதற்காகவும் கன்னிப்பெண்கள் அவ்வாறு வைகறையில் நீராடி நோன்பு நோற்பது பழங்கால வழக்கம். பத்தியிக்கக் காலத்தில் அது கடவுள் வழிபாட்டோடு ஒன்றி அமைந்தது. மாணிக்கவாசகரின் திருவெம்பாவையும் ஆண்டாளின் திருப்பாவையும் அவ்வகையில் அமைந்த பாடல்கள்.

திருமணம் ஆகாத பெண்கள் சிலர் வைகறையில் எழுகிறார்கள். இன்னும் கண்விழித்து எழாத மற்றப் பெண்களை எழுப்புகிறார்கள். அவர்கள் ஒருவரோடு ஒருவர் பேசுவதுபோல் பாவைப் பாடல் தொடங்குகிறது.

"முதலும் முடிவும் இல்லாத சோதியான இறைவனை நாங்கள் பாடுகிறோமே; அதைக் கேட்டும் கேளாதவள்போல் இன்னும் விழித்து எழாமல் உறங்குகிறயே? உன் செவி உணர்ச்சியற்ற செவியோ?" என்று ஒருத்தி கூறுகிறாள். அதற்குமேல் மற்றொருத்தி சொல்கிறாள்: "இறைவனுடைய திருவடிகளை நாம் வாழ்த்திய ஒலியைத் தெருவில் கேட்டவுடன் அவள் விம்மி விம்மி அழுது மெய்ம்மறந்து படுக்கையிலிருந்து புரண்டு உணர்ச்சி யற்றவளாய் இப்படிக் கிடந்தாள்! இது எங்கள் தோழியின் தன்மை. இதை என்ன வியப்பு என்பது!" உறங்குவோரை எழுப்பச் சென்ற பெண்கள் இவ்வாறு பேசிக்கொள்வதாக மாணிக்கவாசகரின் திருவெம்பாவை தொடங்குகிறது:

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும்
வாள்தடங்கண் மாதே வளருதியோ
வன்செவியோநின்செவிதான் மாதேவன்
வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி
மெய்ம்மறந்து போதார் அமளியின்மேன்
நின்றும் புரண்டு இங்ஙன் ஏதேனும் ஆகாள்
கிடந்தாள் என்னே என்னே ஈதேஎம் தோழி
பரிசேலோர் எம்பாவாய்.

"*மார்கழி மாதத்தில் முழுமதியாகிய நல்ல நாளில் நீராட வாருங்கள். ஆயர்பாடியில் உள்ள செல்வச் சிறுமிகளே! நந்தகோபனுடைய மகன் யசோதையின் இளம் அரிமாவாகிய கண்ணன் நாராயணன் பாவைநோன்புக்கு உரிய பறையை நமக்கே தருவான். ஆகையால் உலகத்தார் புகழும்படியாக நீராடுவோம், வாருங்கள்*" என்று ஆண்டாளின் திருப்பாவை தொடங்குகிறது:

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால் நீராடப் போதுவீர்! போதுமினோ நேரிழையீர் சீர்மல்கும் ஆய்பாடிச் செல்வச் சிறுமீர்காள் கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தபோபன் குமரன் ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம் கார்மேனிச் செங்கண் கதிர்மதியம்போல் முகத்தான் நாராயணனே நமக்கே பறைதருவான் பாரோர் புகழப் படிந்தேலோர் எம்பாவாய்!

இவ்வாறு கன்னிப்பெண்கள் உறங்குவோரை எழுப்புவதாகவும் நீராட அழைப்பதாகவும் மேலும் சில பாடல்கள் ஆண்டாளின் திருப்பாவையில் உள்ளன.

இருவரின் பாவைப் பாடல்களிலும் நாடு செழிக்க மழை பெய்யும் காட்சி வண்ணிக்கப்படுகிறது. "*மேகமே! இந்தக் கடல் நீரை முன்னே எடுத்துக்கொண்டு வானத்தில் எழுந்து, உமாதேவி போல் கருநிறம் பெற்று அந்தத் தேவியின் இடைபோல் மின்னி, அவளுடைய திருவடிகளின் பொற்சிலம்புகள் போல் ஒலி செய்து, அவளுடைய அழகிய புருவம்போல் வானவில் தோன்றச் செய்து, பத்தர்களுக்கு அவள் சுரக்கும் இனிய அருள்போல் மழை பொழிவாயாக*" என்பது மாணிக்கவாசகரின் திருவெம்பாவையின் மழைக்காட்சி. "*மழையே! நீ உன் நீரைச் சிறிதும் மறைத்து வைக்காதே. கடலில் புகுந்து நீரை முகந்துகொண்டு ஆரவாரத்தோடு வானத்தில், ஏறி, திருமாலின் நிறம்போல் கறுத்து, அவனுடைய கையில் உள்ள சக்கரம்போல் மின்னி, அவன் ஏந்திய வலம்புரிச் சங்குபோல் அதிர்ந்து ஓசை செய்து, அவனுடைய வில் எய்யும் அம்புகள்போல் தடையின்றிப் பொழிவாயாக. உலகம் நாங்களும் பாவை நோன்புக்காக சிலைத்திங்களில் (மார்கழியில்) நீராடி மகிழ்வோமாக*" என்பது ஆண்டாளின் திருப்பாவையில் காணும் மழைக்காட்சி. அவ்வாறு மழை பொழிவதால் எவ்வெவ்வாறு நாடு வளம்பெறும் என்பதை ஆண்டாளின் மற்றொரு பாட்டு கூறுகிறது.

தமிழ் இலக்கியத்தில் திருப்பாவையும் திருவெம்பாவையும் ஆகிய இந்தப் பாவைப்பாடல்கள் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே பதினொன்றாம் பன்னிரண்டாம் நூற்றாண்டில் சோழர்களின் ஆட்சியின் போதே–கடல் கடந்து இரண்டாயிரம் கல்களுக்கு அப்பால் உள்ள சயாம் நாட்டில் பரவின. சோழர்கள் கடாரம் சென்று தங்கள் வெற்றியை நிலைநாட்டியபோது தமிழர்கள் பலர் அங்கே குடியேறினார்கள். அவர்கள் வழியாகவே ஒன்பது நூற்றாண்டுகளுக்கு முன்பு பாவைப்பாடல்கள் அங்கே பரவின. சயாம் அரசால் பல நூற்றாண்டுகளாக ஒரு விழா கொண்டாடப்பட்டு வருகிறது. அந்த விழாவின் பெயர் "***த்ரியெம்பாவ–த்ரிபாவ***" *என்பது. பொருள் **தெரியாமலே அந்த விழாவின் பெயரை அவ்வாறு வழங்கிக்கொண்டாடி வந்திருக்கிறார்கள்.** 'திருவெம்பாவை திருப்பாவை'* என்பதே அந்தப் பெயர். (மு.வ. தமி. இலக். வர)

**பாவைப்பிள்ளை** *pāvai-p-pillai,* பெ. (n.) பொம்மை(இலங்.); doll

*[பாவை + பிள்ளை]*

**பாவைமன்றம்** *pāvaimanṟam* பெ. (n.) சிலப்பதிகாரத்தால் அறியலாகும் பாவைகள் அமைக்கப்பட்டுள்ள மண்டபம்; a hall with statues come to known by šilappadigāram.

*[பாவை + மன்றம்]*

(இப்பெயருடைய மன்றம் ஒன்று முன்னாளில் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்தது என்றும், இங்கு பாவை ஒன்று நடப்பட்டு இருந்தது என்றும், அரசனுடைய அறநெறி பிறழின் அப்பாவை கண்ணீர் வடித்தது என்றும் சிலப்பதிகாரம் கூறும் "*பாவை நின் றழூஉம் பாவை மன்றமும்*" (சிலப்–5–138))

**பாவையாடல்** *pāvai-y-āḍal,* பெ. (n.)

1. *பாவைக்கூத்து* (சிலப்.6,61,உரை) பார்க்க;

see *pāvai-k-kūttu* 2. பெண்பாற்பிள்ளைத்தமிழின் உறுப்புக்களுள் பாட்டுடைத்தலைவி பாவை வைத்து விளையாடுகை (திவா); play with doll.a characteristic feature of peṇpāṟ-pillai-t-tamiḻ.

*[பாவை + ஆடல்]*

**பாவையிஞ்சி** *pāvai-y-iñji,* பெ.(n.) இஞ்சிக்கிழங்கு; ginger root "*பாவையிஞ்சியுங் கூவைச் சுண்ணமும்*" (பெருங்.உஞ்சைக் ,51,23),

*[பாவை + இஞ்சி]*

**பாவை விளக்கு** *pāvai-viḷakku,* பெ.(n.) பாவை உருவத்தின் கையில் உள்ள விளக்கு; lamp with a damsel shaped stand. "*பொலம் பாலிகைகளும் பாவைவிளக்கும் பலவுடன் பரப்புமின்*" (மணிமே.1,45). "*பாவை விளக்கிற் பரூஉச்சுட ரழல*" (முல்லைப்.85) "*பாவை விளக்குப் பசும் பொற் படாகை*" (சிலப்.5.154)

*[பாவை + விளக்கு]*



**பாவோதயம்** *pā-v-ōdayam,* பெ. (n.) பாவகத் தோற்றமென்னும் அணி(குவல.45.); a kind of figure of speech.

**பாவோட்டம்** *pā-v-ōṭṭam,* பெ. (n.) நாட்டியம்; dance. "பாவோட்டம் ஒடுவது நட்டுவன்மார்" (பணவிடு.190)

*[பாவை + ஒட்டம்]*

**பாவோடல்** *pā-v-ōḍal,* பெ. (n.) நெசவில் இழையோடுந் தடி (யாழ்.அக.); weaver's beam.

*[பா + ஒடல்]*

**பாவோடு—தல்** *pā-v-ōḍu-.* செ.கு.வி (v.i.) 1. நூலை நெசவுப்பாவாக்குதல் (வின்); to run the weaver's warp. 2. சலித்துக் கொண் டேயிருத்தல்; to be always in motion.

*[பா + ஒடு–,]*

**பாழ்[1]—த்தல்** *pāḻ-.* 11செ.கு.வி. (v.i.) 1. அழிவடைதல்; to go to ruin, to be laid waste. 2. பயனறுதல். to become useless. "*பாழ்த்த பிறப்பு*" (திருவாச.5,16) 3. சீர்குன்றுதல்; to be accursed, as a place or a house. "*பாழ்த்த பாவிக்குடரிலே நெடுங்காலங்கிடந்தேற்கும்*" (கம்பரா.குகப்.70)

*[பழு → பாழ்–,]*

வேக.153

**பாழ்[3]** *pāḻ,* பெ. (n.) பெருமை; largeness. "*பாழிவெஞ்சிறையுவணமும்*" (உபதேச. சூராதி.கா.) 2. முனிவர்வாழிடம்; dwelling of saint. "*எங்கும்மணற் பாழிகளாய்*" (பெரியபுதண்டி.4.)

*[பழ → பாழ்]*



பாவை விளக்கு

**பாழ்⁴** *pāḻ,* பெ. (n.) 1. அழிவு, கேடு; ruin desolation, devastation. "*நரகக் குழி பலவாயின பாழ்பட்டது*" (சடகோபரந்.5) 2. நட்டம்; damage, waste, loss. "*வெள்ளப்பாழ், வறட்பாழ், குடிப்பாழ்*" 3. கெடுதி (வின்); corruption, decay putrifaction. 4. இழிவு; baseness, wretchedness, evil. 5. அந்தக்கேடு; that which is ugly or graceless. "*நீறில்லா நெற்றி பாழ்*" (நல்வழி,24) 6. வீண்; profitlessness, 7. வெறுமை; barremness, inanity. 8. இன்மை; non-existance, nothingness. 9. ஒன்றுமற்ற இடம்; vacuity. 10. விளையாநிலம்; barren land. "*முதுபாழ்ப் பெயல்பெய் தன்ன*" (புறநா.381.) 11. குற்றம்; fault. "*முப்பாழ் கழிந்து*" (காசிக,வயிர.25.) 12. வெற்று நிலம்; wasteland. 13. வானம்; vast expanse of space. 14. மூலஇயற்கை; primodial matter, as the cause of the manifest universe. "*முடிவில்பெரும் பாழேயோ*" (திவ்.திருவாய். 10,10,10.) 15. ஆதன்(பரிபா.3,77.); the soul "பாழெனக் காலெனப் பாகனெ வொன்றென" (பரிபா.3,7) 16. இல்பொருள்; that which does not exist; naught. "*வெறும்பாழ் விளைந்த சுகஞ் சொல்லில்*" (ஒழிவிலொ. சத்திநி.27.)

க. ஹாள்

**பாழ்க்கடி–த்தல்** *pāḻkkaḍi-,* செ.கு.வி (v.t.) பாழாக்குதல்; to desolate, devastate, reduce to ruins.

*[பாழ் → பாழ்க்கு + அடி –,]*

**பாழ்க்கிறை–த்தல்** *pāḻkkiṟai-,* செ.கு.வி. (v.i.) வீணாகச்செயல் செய்தல்; to labour in vain. "*பாழ்க்கிறைத்துக்கழித்தீர்*" (அருட்பா, vi. உறுதிகூறல்2.) பாழ் நிலத்துக்குத் தண்ணீ ரிறைத்தல்; lit.,to irrigate a barren land.

*[பாழ் → பாழ்க்கு + இறை –,]*

**பாழ்க்கோட்டம்** *pāḻ-k-kōṭṭam,* பெ. (n.) சுடுகாடு; a cremation-ground. "*பொடி யுடுத்த பாழ்க்கோட்டஞ் சேராமுன்*" (பதினொ, ஐயடி,ஷேத்.2)

*[பாழ் + கோட்டம்]*

**பாழ்கிடை** *pāḻ-kiḍai,* பெ. (n.) விடாமற்பற்றிக் கிடக்கை; lying obstinately. sitting dhurna. "*கடன்காரன் பாழ்கிடையாய்க் கிடக்கிறான்*"

*[பாழ் + கிடை]*

**பாழ்ங்கிணறு** *pāḻ-ṅ-kiṇaṟu,* பெ. (n.) தூர்ந்து அல்லது இடிந்து பாழான கிணறு (நன்.223,மயிலை); neglected. dilapidated or ruined well.

*[பாழ் → பாழும் + கிணறு → பாழ்ங்கிணறு]*

**பாழ்ங்குடி** *pāḻ-ṅ-kuḍi,* பெ. (n.) சீர்கெட்ட குடும்பம் (யாழ்.அக.); a family in distress.

*[பாழ் → பாழும் + குடி → பாழ்ங்குடி]*

**பாழ்ஞ்சேரி** *pāḻ-ñ-cēri,* பெ. (n.) குடியிருப்பற்ற ஊர்ப்பகுதி (யாழ்.அக.); deserted quarters in a village.

*[பாழும்சேரி → பாழ்ஞ்சேரி]*

**பாழ்ந்தாறு** *pāḻndāṟu,* பெ. (n.) படுகுழி; deep, unfathomable pit. "*தண்மையாகிற பாழ்ந்தாறு நிரம்பும்படியான*" (திவ்.கண்ணிநுண். 3. வ்யா,49)

*[பாழ் + தாறு]*

**பாழ்ந்திருமண்** *pāḻ-n-tirumaṇ,* பெ. (n.) செந்திருக்கோடு இடும்திருமண்; vaisṇava caste-mark without the red line in the middle, put on during pollution.

*[பாழும் + திருமண்]*

**பாழ்ந்துரவு** *pāḻ-n-turavu,* பெ. (n.) பாழ்ங்கிணறு பார்க்க; see pāḻ-ṅ-kiṇaṟu.

*[பாழும் + துரவு → பாழ்ந்துரவு]*

**பாழ்நத்தம்** *pāḻ-nattam,* பெ. (n.) *பாழூர்* (வின்) பார்க்க; see *pāḻūr.*

*[பாழ் + நத்தம்]*

**பாழ்நிலம்** *pāḻ-nilam,* பெ. (n.) விளைவுக்குதவாத நிலம்(யாழ்.அக.); barren land.

*[பாழ் + நிலம்]*

**பாழ்நெற்றி** *pāḻ-neṟṟi,* பெ. (n.) திருநீறு முதலிய குறியணியாத வெறு நெற்றி; bare forehead without sectarian marks.

*[பாழ் + நெற்றி]*

**பாழ்படு—தல்** *pāḻ-paḍu-,* 20. செ.குவி. (v.i.) 1. கேடுறுதல்; to be ruined or desolated; to become waste. "*வாழ்க்கை பருவந்து பாழ்படுத லின்று*" (குறள்,83.) 2. ஒளிமங்குதல்; to lose lustre. "*கண்பாழ்பட்டு*' (நாலடி,306)

*[பாழ் + படு—,]*

**பாழ்படுநனந்தலை** *pālpaḍunantalai,* பெ. (n.) பிணத்தை அடக்கம் செய்யும் திடல்; cremation ground. "*பருபிணங் கவரும் பாழ்படு நனந்தலை*" (அகம்.319—5)

*[பாழ்படு + நனந்தலை]*

**பாழ்ம்புறம்** *pāḻ-m-puṟam,* பெ. (n.) குடியோடிப் போன நிலப்பகுதி; desolated region.

*[பாழ் + புறம் → பாழ்ம்புறம்]*

**பாழ்மனை** *pāḻ-maṉai,* பெ. (n.) இடிந்துபாழான வீடு; ruined house. "*பாழ்மனையும் தேவகுலனும் சுடுகாடும்*" (ஆ.கோவை.57—1)

*[பாழ் + மனை]*

**பாழ்மூலை** *pāḻ-mūlai,* பெ. (n.) எளிதிற் செல்ல முடியாது தொலைவாயுள்ள இடம்; distant, inaccessible place. "*அவன் எங்கேயோ பாழ்மூலையில் இருக்கிறான்*"

*[பாழ் + மூலை]*

**பாழ்வாய்கூறு—தல்** *pāḻ-vāy-kūṟu-,* 5. செ.கு.வி (v.i.) நன்றி மறந்து முணுமுணுத்தல் (வின்); to murmur ungratefully.

*[பாழ் + வாய்கூறு—,]*

**பாழ்வாய்ச்சி** *pāḻ-vāycci,* பெ. (n.) காரணமின்றிக் குறை கூறுபவள்; woman who complains without cause.

*[பாழ் + வாய்ச்சி]*

**பாழ்வாயன்** *pāḻ-vāyaṉ,* பெ. (n.) காரண மின்றிக் குறைகூறுபவன்; man who complains wihtout cause.

*[பாழ் + வாயன்]*

**பாழ்வெளி** *pāḻ-veḷi,* பெ. (n.) 1. வெட்டவெளி; desert; uninhabited region. 2. பரவெளி; (sadiva.) great cosmic space.

*[பாழ் + வெளி]*

**பாழடி—த்தல்** *pāḻaḍi-,* 4. செ.கு.வி. *பாழாக்கு—,* பார்க்க; see ***pāḻākku-,***

*[பாழ் + அடி—,]*

**பாழறுவான்** *pāḻ-aṟuvāṉ,* பெ. (n.) 'ஒழிந்துபோவாய்' என்று பொருள்படும் வசைமொழி; a term of abuse, meanin a damned person. 'அடபாழறுவாய் உன் செய்தி சற்று முரைத்திலேன்' (சரவண.பணவிடு.94)

**பாழாக்கு¹-தல்** *pāḻ-ākku-,* 7. செ.கு.வி. (v.t.) 1. (பணத்தை) பயனற்ற வழியில் செலவழித்தல்; வீணாக்குதல்; waste; fritter (money, etc.away.) "சொத்தையெல்லாம் குடித்தே பாழாக்குகிறான்" 2. (நன்றின்) நல்ல தன்மையை இழக்கச்செய்தல்; கெடுத்தல்; cause damage to; destroy; spoil. "*தோல் தொழிற்சாலைக் கழிவுகளால் விளைநிலங்கள் பாழாக்கப் படுகின்றன*".

*[பாழ் + ஆக்கு-,]*

**பாழாக்கு²-தல்** *pāḻ-ākku-,* 5. செ.குன்றாவி. (v.t.) பயனற்றதாகச் செய்தல்; to spoil, mar, waste, destroy. "*என்னறிவை யெல்லாம் பாழாக்கி யெனைப் பாழாக்கும்*" (தாயு.கற்புறு.5)

*[பாழ் + ஆக்கு-,]*

**பாழாய்ப்போன** *pāḻāi-p-pōṉa,* பெ.அ. (adj.) பயன்படாத ஒன்றைப் பற்றி எரிச்சலோடு குறிப்பிடுவது; useless; damn. "*இந்தப் பாழாய்ப்போன பேருந்து ஏன் இன்றும் வரவில்லை.*"

*[பாழாய் + போன]*

**பாழி¹** *pāḻi,* பெ. (n.) 1. வெறுமை (பிங்); desolation, waste; void. 2. விண் (யாழ்.அக.); space. 3. கடல் (அக.நி.); sea. 4. அகலம் (திவா.); expanse "*பாழிப் புவி மேல்*" (ஞானவா.கற்க.8) wideness. 5. பெருமை (சூடா.); superiority, eminence. "*மால்வரைப் பாழிமா முகட்டுச்சி*" (கம்பரா.கையடை.23) 6. வலிமை (பிங்.); power "*வாளமருள்....பாழி கொண்டன்று*" (பு.வெ.7.14) 7. போர்; fight. battle "*பாழி கொள்ளு மேமத்தானும்*" (தொல்.பொ.72.)

*[பாழ் → பாழி]*

**பாழி²** *pāḻi,* பெ. (n.) 1. இடம் (பிங்.); place "*வானவர்கோன் பாழி*" (திவ்.இயற்.2.13) 2. கோயில்; temple "*ஐயன் பாழியில் ஆனை போர்க்குரித்தாம் அன்று*" (ஈடு.1.1.5) 3. நகரம் (பிங்.); town, city 4. மருதநிலத்தூர் (சூடா.); town of an agricultural tract 5. பகைவரூர் (சூடா.); enemies country 6. பாசறை(பிங்.) பார்க்க; see *pāsarai* 7. முனிவர் மாடம் (பிங்.); hermitage "*பூதந் தம்பாற் பாட்டிக் கொண்டுண்பவர் பாழிதொறும்*" (தேவா.186,5) abode of rsis 8. குகை (திவா.); cave, mountain cavern "*பாழி மால்வரை யெறிதிரை*" (கந்தபு.நகர.9.) 9. மக்கள் துயிலிடம் (சூடா.); sleeping place for human beings "*பெரும் பாழி சூழ்ந்த விடத்தரவை*" (திவ்.இயற்.1.80) 10. விலங்கு துயிலிடம் (பிங்.); lair, litter of a beast. 11. சிறுகுளம்; (தொல்.சொல்.400, உரை); small tank, pond. 12. இறங்குதுறை; flight of steps leadiing into a tank "*இவர் தம்மைத் தானுணர்ந்தால் இவர்க்குப் பாழி கிருஷ்ண வதாரமிறே*" (திவ்.இயற்.திருவிருத்.61,பக்.334) leading into a tank 13. இயல்பு; nature "*இந்தக் கிருத்திரிம பக்தியானது பண்டே உன்பாழி*" (திவ்.திருமாலை,24,வ்யா,84.) 14. எலிவளை; rat-hole எலிப்பாழி.

"*பாழி யன்ன கடியுடை வியனகர்*" (அகம்.1511)

"*கறையடி யானை நன்னன் பாழி*" (அகம்.142-9)

"*தன்னன் உதியன் அருங்கடிப் பாழி*" (அகம்.258-1)

"*பாழிபோல் மாயவன்தன் பற்றார் களிறெறிந்த*" (தி.மா.97-1)

*[பாழ் → பாழி]*

**பாழி³** *pāḻi,* பெ. (n.) 1. சொல்(சூடா.); word. 2. *சடை⁴*, 11. பார்க்க; see *saḍai.* a method of reciting the rēda. "*பதநிரை பாழிசாகை யாரணம் பணைத்த வேதம்*" (திரு.விளை.உக்கிர.28)

*[பாழ் → பாழி]*

**பாழிப்பறந்தலை** *pāḻi-p-parantalai,* பெ. (n.) பாழிடம்; desert "*அளியியல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை*" (அகநா.208–6)

*[பாழ் → பாழி + பறந்தலை]*

**பாழிமை** *pāḻimai,* பெ. (n.) 1. வெறுமை; emptiness "*பாழிமையான கணவில்*" (திவ்.பெரியதி.1126) 2. வலிமை; strength. "*மதுசூதன் பாழிமையிற்பட்டு*" (திவ். திருவாய்,2,1,5)

*[பாழி→பாழிமை]*

**பாழிவாய்** *pāḻi-vāy,* பெ. (n.) கழிமுகத்துள்ள திட்டு (இ.வ.); bar of sand where a river joins the sea.

*[பாழி + வாய்]*

வே.க.154.

**பாழுக்கிறை–த்தல்** *pāḻukkirai-,* 4. செ.கு.வி. (v.i.) பயனற்ற நிலத்துக்கு நீரிறைத்தல்; lit, to irrigate a barren land. "*இரவு பகல் பாழுக்கிறைப்ப*" (குமர.பிர.நீதிநெறி.90.) "*ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம் பாழுக் கிறைத்தேன்*" (திருவாசக.திருத்தோ.13.)

*[பாழுக்கு + இறை–,]*

**பாழும்** *pāḻum,* பெ.அ. (adj.) 1. பாழடைந்த; desolate: ruined. "*பாழும் கோயில்*" 2. பாழாய்ப்போன; useless; wretched. "*பாழும் உலகம் என்னை வாழவும் விடவில்லை, சாகவும்விடவில்லை*".

**பாழூர்** *pāḻ-ūr,* பெ. (n.) குடிநீங்கிய ஊர்; deserted village. "*பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே*" (புறநா.132.)

'பாழூருக்கு நரி அரசன்' (பழ.)

க. ஹாலூரு

*[பாழ்→பாழூர்]*

**பாழூர்க்கிணறு** *pāḻur-k-kiṉaṟu,* பெ. (n.) வெறுங்கிணறு; barren well "*பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே*" (புறநா.132–3)

*[பாழூர் + கிணறு]*

**பாழூர்க்குரம்பை** *pāḻūr-k-kurambai,* பெ. (n.) இடுகாடு; graveyard. "*பாழூர்க் குரம்பையிற் றோன்றும் ஆங்கண்*" (அகம்.129–6)

**பாழூர்நெருஞ்சி** *pāḻurneruñchi,* பெ. (n.) பாழூரில் முளைத்துக்கிடக்கும் நெருஞ்சில்முள்; a thorny thistle in barrenland. "*பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ*" (புறம்.155–4)

**பாழை** *pāḻai,* பெ. (n.) 'ஏழை' என்பதோடு இணைந்து வரும் சொல்; echo word which occurs in combination with ஏழை.

பாழ் → பாழை = பாழ்பட்ட நிலைமையர். இணைமொழி: ஏழைபாழை.

**பாளக்கட்டி** *pāḷa-k-kaṭṭi,* பெ. (n.) *பாளம்,* 2 பார்க்க; see *pāḷam.*

*[பாளம் + கட்டி]*

**பாளங்கட்டு-தல்** *pāḷaṅ-kaṭṭu-*, 5. செ.குன்றாவி. (v.t.) புண்ணுக்குத் துணிகட்டுதல் (M.L); to put a bandage.

*[பாளம் + கட்டு-,]*

**பாளச்சீலை** *pāḷa-c-cīlai*, பெ. (n.) 1. புண்ணுக்கு இடும் மருந்து பூசிய சீலை (யாழ்.அக.); plaster. 2. ஒரு குழூஉக்குறி; conventional term peculiar to a class or body of men.

*[பாளம் + சீலை]*

**பாளபந்து** *pāḷapandu*, பெ. (n.) தேவநாகரி யெழுத்து (உ.வ.); the dēvanāgari character.

க. பாளபந்து

*[பாளம் + பந்து]*

**பாளம்** *pāḷam*, பெ. (n.) 1. தகட்டு வடிவம் (இலக்.அக.); flattened shape. 2. மாழைக்கட்டி; metal molten and cast in moudds. *"உருக வெந்த பாளத்தை"* (சீவக. 2768) 3. வெடித்த தகட்டுத் துண்டு (வின்); flake, scale, lamina from a solid mass. 4. தோலுரிவு (வின்); peeling or cracking of the skin. 5. வெடியுப்பு (சங்.அக.); saltpetre. 6. சீலையின் கிழிவு; long strip of cloth. 7. பளபளப்பு (இ.வ.); polish.

தெ. பாலமு. க. பாள, ம. பாளம்

**பாளயம்** *pāḷayam*, பெ. (n.) பாளையம் பார்க்க; see pāḷaiyam. *"நிசானாட்டிய பாளயமும்"* (தாயு. பராபர. 232)

*[பாளையம் → பாளயம்]*

**பாளாசக்கயிறு** *pāḷāśa-k-kayiṟu*, பெ. (n.) குதிரையின் காற்கயிறு (வின்); heelrope by which a horse's feet are fastened to a peg.

*[பாளாசம் + கயிறு]*

**பாளி[1]** *pāḷi*, பெ. (n.) அடையாளம் (வின்); sign, signel, mark.

**பாளி[2]** *pāḷi*, பெ. (n.) 1. பணித்தூசு; embroidered garment. 2. மேற்கட்டிச்சீலை; canopy.

**பாளி[3]** *pāḷi*, பெ. (n.) புத்தசமய நூல்கள் எழுதப்பட்ட பாலி என்னும் பழைய மொழி; an ancient Indian language, sacred to Buddhists.

**பாளி[4]** *pāḷi*, பெ. (n.) பாசறை (பிங். 624.); camp, tent.

*[பாழி → பாளி]*

**பாளிகா** *pāḷigā*, பெ. (n.) சீரகம்; cumin seed (சா.அக.)

**பாளித்தியம்** *pāḷittiyam*, பெ. (n.) பிராகிருத இலக்கணநூலுள் ஒன்று; a prākṛit grammar. *"பாளித்திய மென்னும் பாகதவிலக்கணமும்"* (காரிகை, பாயி. 1, உரை.)

*[பாலி → பாளித்தியம்]*

**பாளிதம்[1]** *pāḷidam*, பெ. (n.) 1. சோறு (பிங்.); boiled rice. 2. பாற்சோறு; rice boiled in milk. 3. குழம்பு; liquid of a thick consistency.

*[பளிதம்[2] → பாளிதம்]*

**பாளிதம்²** *pāḷidam,* பெ. (n.) **1.** பட்டுவகை (பிங்.); silk garment. **2.** பாளி பார்க்க; see pāḷi. *"வீரபாளிதப் படாம்"* (திருக்காளத். பு. பஞ்சாக்கர. 69.)

**பாளிதம்³** *pāḷidam,* பெ. (n.) கண்டசருக்கரை (பிங்.); sugar-candy.

**பாளிதம்⁴** *pāḷidam,* பெ. (n.) **1.** பச்சைக் கருப்பூரம்; medicated camphor. *"அடகு புலால் பாகு பாளிதமு முண்ணான்"* (தொல். சொல். 279, இளம்.) **2.** சந்தனம் (தைலவ. தைல.); sandal paste.

*[பளிதம் → பாளிதம்]*

**பாளிந்தி** *pāḷindi,* பெ. (n.) செழுமலர்க் கொன்றை; a kind of konṟai. (சா.அக.)

**பாளேபந்து** *pāḷēpandu,* பெ. (n.) பாளபந்து பார்க்க; see pāḻapandu.

*[பாளே+ பந்து]*

**பாளை¹** *pāḷai,* பெ. (n.) **1.** தெங்கு முதலியவற்றின் பூவை மூடிய மடல்; spathe of palms. *"பாளையுடைக் கமுகோங்கி"* (தேவா.9,1) *"பாளையோதியொரு திங்கள் பார்த்தனள்"* (சிவரக.மேரு.26) **2.** செம்பாளை; நெல்; a reddish kind of paddy. **3.** பதர்; empty ears of grain, chaff. **4.** சுறா ஈரல்; shark's liver.

க. ஹாளெ.

*"பரியரைக் கமுகின் பாளையம் பசும்பூ"* (பெரும்.7)

*"பாளை தந்த பஞ்சியங் குறுங்காய்"* (குறுந்.293–34)

*"பழனவாளை பாளையுண்டென"* (பரிபா.7–34)

*"பாளை பற்றிழிந் தொழியப் புறஞ்சேர்பு"* (அகம், 335–15)

*[பின் → பள் → பாளை]*



**பாளை²** *pāḷai,* பெ. (n.) **1.** கருவில் இருக்கும் பருவம்; embryonic stage. *"பாளையாம் பருவஞ் செத்தும்"* (பன்னூற்.900) **2.** ஐந்து அகவைக்கு உட்பட்ட சிறுவன்; male infant under five years.

மறுவ. பாளைப் பருவம்.

*[பின் → பள் → பாளை]*

**பாளை³** *pāḷai,* பெ. (n.) மிகுதியான முட்களுடையதொரு கடல்மீன்; a thorny kind of sea fish. (முகவை, மீனவ.)

**பாளைக்கத்தி** *pāḷai-k-katti,* பெ. (n.) கள்ளிறக்குவோர் கைக்கொள்ளுங்கத்தி; toddy-drawer's knife.

மறுவ. பாளையரிவாள்

*[பாளை+ கத்தி]*



**பாளைச்சூழ்** *pāḷai-c-cūḻ*, பெ. (n.) பாளையிற் கட்டிய தீப்பந்தம்; torch made of spathe of palms.

*[பாளை + சுள் → சூள் → சூழ்]*

**பாளைசீவு-தல்** *pāḷai-šīvu*, 7. செ.கு.வி. (v.i.) கள்ளிறக்கப் பாளையைச் சீவுதல்; to pare the spathe of palms.

*[பாளை+ சீவு-]*

**பாளைத்தடி** *pāḷai-t-taḍi*, பெ. (n.) கள்ளிறக்க உதவுஞ் சிறுதடி; a short club used by toddy drawers.

*[பாளை + தடி]*

**பாளைதட்டு-தல்** *pāḷai-taṭṭu*, 5. செ.கு.வி. (v.i) கள்ளிறக்கப் பாளையை நசுக்குதல்; to beat the spathe of a palm for making it yield toddy.

*[பாளை+ தட்டு-]*

**பாளைப்பருவம்** *pāḷai-p-paruvam*, பெ. (n.) இளம் பருவத்திற்கு முந்திய கருவிலொரு பருவம் (பன்னூற்.900); embryonic stage.

*[பாளை+ பருவம்]*

**பாளையக்காரர்** *pāḷaiya-k-kārar*, பெ. (n.) விசயநகர வேந்தராட்சியில் சிறிய நாட்டை ஆண்டு வந்த தலைவர்கள்; poligars. *"பாளையக்காரர் பணங்களுக்கங் காளனுப்பும் வல்லமையும்"* (பணவிடு.22).

தெ. பாளெகாடு. க. பாளெயகாரரு ம. பாளயக்காா்.

*[பாளையம் + காரர்]*

**பாளையத்துப் பிள்ளை** *pāḷaiyattu-p-piḷḷai*, பெ. (n.) போர்மறவரின் மக்களாய் அரசன் செலவிற் படைமறவராவதற்கு வளர்க்கப் படுவோன் (புதுவை.); son of warrior brought up abdtrained as a soldier at the king's expense.

*[பாளையம் + அத்து + பிள்ளை]*

**பாளையப்பட்டு** *pāḷaiya-p-paṭṭu*, பெ. (n.) அரசனுக்குப் போரில் உதவவேண்டும் என்ற கட்டுப்பாட்டு வரையறையுடன் பாளையக் காரருக்கு விடப்பட்ட ஊர்த் தொகுதி (C.G.); estate, village or group of villages of a feudal chieftain or poligar held originally on condition of rendering military service whenever required by his suzerain.

க. பாளெயபட்டு.

*[பாளையம் + பட்டு]*

**பாளைமுத்தம்** *pāḷai-muttam*, பெ. (n.) பாளையில் உண்டான முத்துகள் (பெரியதி.6-9-8.); pearls originated in spathe of palms.

*[பாளை + முத்தம்]*

**பாளையம்** *pāḷaiyam,* பெ. (n.) **1.** படை; army. *"இரு பாளையத்தினிடந்தோறும்"* (பாரத. பதினோ.45) **2.** பாசறை (பிங்.); war-camp. **3.** *பாளையப்பட்டு*(C.G.) பார்க்க ; see *pāḷaiya-p-paṭṭu.* **4.** பொற்றை சூழ்ந்த ஊர்; village surrounded by hillocks.

**தெ.** பாளெமு, **க.** பாளெய, **ம.** பாளயம்.

**பாளையம் போடு-தல்** *pāḷaiyam-pōḍu,* **8.** செ.கு.வி. (v.i) **1.** படையுடன் தங்குதல் (வின்); to pitch a war-camp. **2.** நெடுங்காலம் ஓரிடத்துத் தங்குதல் (உ.வ.); to stay in a place too long.

*[ஒருகா : பள்ளயம் → பாளையம்]*

**பாளையமிறங்கு-தல்** *pāḷaiyam-iṟaṅgu,* **21.** செ.கு.வி. (v.i) படை தங்குதல்; to encamp in a war-expedition. *"பாளையமன் றிறங்கி"* (தனிப்பா.i, 373,12).

*[பாளையம் + இறங்கு-]*

**பாளைய மெழும்பு-தல்** *pāḷaiyam-eḻumbu-* **2.** செ.கு.வி. (v.i.) படை கிளம்புதல் (யாழ்.அக.); to start on a expedition.

*[பாளையம் + எழும்பு]*

**பாளையரம்** *pāḷai-y-aram,* பெ. (n.) குதிரைக் குளம்பை அராவும் அரம் (வின்); a coarse kind of rasp, used in filing horse's roofs.

*[பாளை + அரம்]*

**பாளையரிவாள்** *pāḷai-y-arivāḷ,* பெ. (n.) *பாளைக்கத்தி* பார்க்க; see *pāḷai-k-katti.*

*[பாளை + அரிவாள்]*

**பாளையறுகு** *pāḷai-y-aṟugu,* பெ. (n.) பூவடங்கிய அறுகு; a kind of grass with flower inside the sheath. (சா.அக.)

*[பாளை + அறுகு]*

**பாளையிடுக்கு-தல்** *pāḷai-y-iḍukku-,* **5.** செ.கு.வி. (v.i.) *பாளைதட்டு-,* பார்க்க; see *pāḷai-taṭṭu-.*

*[பாளை + இடுக்கு-,]*

**பாளையுடைச்சி** *pāḷai-y-uḍaicci,* பெ. (n.) மரவகை; indian calosanthes, m.tr, aroxylum indicum.

*[பாளை + உடைச்சி]*

**பாளைவருதல்** *pāḷai-varutal,* பெ. (n.) பாளை முதன் முதலாகத் தோன்றுகை; the first appearance of spathe, considered a sign of mature growth.

*[பாளை' + வருதல்]*

**பாளை வெடிச்சான் கிழங்கு** *pāḷai-veḍiccāṉ kiḻaṅgu,* பெ. (n.) நறளைக் கிழங்கு; a tuber. (சா.அக.)

*[பாளை + வெடிச்சான் + கிழங்கு]*

**பாளைவை-த்தல்** *pāḷai-vai,* **4.** செ.கு.வி. (v.i.) காய்க்கத் தொடங்கற்குறியாகத் தென்னை முதலியன பூ விடுதல்; to shoot forth or form spathe.

*[பாளை + வை-,]*

**பாற்கட்டி** *pāṟ-kaṭṭi,* பெ. (n) **1.** கட்டிப்பால்; cheese, condensed milk. **2.** குழந்தைகளின் வயிற்றில் உண்டாம் கட்டி (M.L.); *enlargement of the liver or spleen in children.*

*[பால் + கட்டி]*

**பாற்கட்டு** *pāṟ-kaṭṭu,* பெ. (n.) குழந்தை முலையுண்ணாமையான் பால் சுரந்து தேங்குகை; accumulation of milk in the breast when the child does not suck.

*[பால் + கட்டு]*

**பாற்கட்டுசுரம்** *pāṟ-kaṭṭu-šuram,* பெ. (n.) முலையிற் பால் கட்டிக் கொள்ளுவதால் உண்டாம் காய்ச்சல்; milk-fever.

*[பாற்கட்டு + சுரம்]*

**பாற்கட்டுப் பயிர்** *pāṟ-kaṭṭu-p-payir,* பெ. (n.) பால்பிடித்த பயிர்; grain in the milk.

*[பாற்கட்டு + பயிர்]*

**பாற்கடல்**[1] *pāṟ-kaḍal,* பெ. (n.) ஏழு கடல்களுள் பால்மயமான பெருங்கடல்; ring-shapped ocean of milk, one of eḻu-kaḍal. *"பாற்கடற் பனிபதி போல்"* (சீவக.3035). *"பாற்கடலார முதங் கெழுமித்தழைத்து"* (அரிச்.நாட்டுப்.34). "பாற்கடலைக் குடிக்கப் பார்த்திடும் பூனை" (பழ.)

க. ஹாலுகடலு.

*[பால் + கடல்]*

**பாற்கடல்**[2] *pāṟ-kaḍal,* பெ. (n.) (தொன்மங்களில் திருமால் குடிகொண்டிருக்கும் இடமாகக் கூறப்படும்) பால் நிரம்பிய கடல்; (in puranas) ocean of milk (said to be the abode of vishnu.) "பாற்கடற் பனிமதி போல" (சீவக.3035) "தன்னுரு வுறழும் பாற்கடல் நாப்பண்" (பரிமே.13–6)

*[பால் + கடல்]*

**பாற்கடற் பிறந்தாள்** *pāṟ-kaḍaṟ-piṟandāḷ,* பெ. (n.) திருமகள்; goddess.

*[பாற்கடல் + பிறந்தாள்]*

**பாற்கடற்றுளி** *pārkaḍaṟṟuḷi,* பெ. (n.) தாளகம்; yellow orpiment. (சா.அக.)

*[பாற்கடல் + துளி]*

**பாற்கடுக்கண்** *pāṟ-kaḍukkaṉ,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy. "பரக்குஞ் சிறுகுருவி பாற்கடுக்க னென்றும்" (நெல்விடு.185)

*[பால் + கடுக்கன்]*

**பாற்கதிர்** *pāṟ-kadir,* பெ. (n.) நிலா; moon-light. *"பாற்கதிர் பரப்பி"* (சிலப்.4,25)

*[பால் + கதிர்]*

**பாற்கரப்பான்** *pāṟ-karappāṉ,* பெ. (n.) கரப்பான் நோய் வகை; a kind of eruption.

*[பால் + கரப்பான்]*

**பாற்கரியோன்** *pāṟkariyōṉ,* பெ. (n.) இந்திரன்; (தைலவ. தைல.11.) indra.

**பாற்கலசம்** *pāṟ-kalašam,* பெ. (n.) பாற்கலயம் பார்க்க; see pāṟ-kalayam.

*[பால் + கலயம் → கலசம்]*

**பாற்கலயம்** *pāṟ-kalayam,* பெ. (n.) பால்கறக்கும் மட்கலம்; milking pot.

*[பால் + கலயம்]*

**பாற்கவடி** *pāṟ-kavaḍi,* பெ. (n.) வெள்ளைச்சோகி; white cowry, small shell used as money.

*[பால் + கவடி]*

மறுவ: சோழி.

**பாற்காசி** *pāṟkāši*, பெ. (n.) பொன்னூமத்தை; dhatura with yellow flower. (சா.அக.)

**பாற்காய்** *pāṟ-kāy*, பெ. (n.) **1.** பால்பற்றிய இளங்காய்; unripe fruit which abounds in milky juice. **2.** ***பாலுண்ணி***(யாழ்.அக.) பார்க்க; see *pāl-uṇṇi*.

*[பால் + காய்]*

**பாற்காயம்** *pāṟkāyam*, பெ. (n.) ***பாற்பெருங்காயம்*** பார்க்க; see *pāṟ-peruṅkāyam*.

*[பால் + காயம்]*

**பாற்காரன்** *pāṟ-kāraṉ*, பெ. (n.) பால்விற்போன்; milk man.

*[பால் + காரன்]*

காரன்–சொல்லாக்க ஈறு.

**பாற்காரி** *pāṟ-kāri*, பெ. (n.) **1.** பால் விற்பவள்; woman who sells milk. **2.** குழந்தைகளுக்குத் தன் முலைப்பால் கொடுத்து வளர்க்கும் செவிலித்தாய்; wet nurse.

*[பால் + காரி]*

காரி–சொல்லாக்க ஈறு

**பாற்காவடி** *pāṟ-kāvaḍi*, பெ. (n.) பாற்கலசங்கள் கொண்ட காவடி; a kavaḍi with vessels full of milk.

*[பால் + காவடி]*



**பாற்கிண்டல்** *pāṟ-kiṇḍal*, பெ. (n.) பால் கலந்த உணவுவகை (இராசவைத்.139.); a kind of preparation made of milk with other ingredients.

*[பால் + கிண்டல்]*

**பாற்குருவி** *pāṟ-kuruvi*, பெ. (n.) பறவைவகை; indian jay.

*[பால் + குருவி]*

**பாற்குலிகம்** *pāṟkuligam*, பெ. (n.) பாலிம்மி; milk globule. (சா.அக.)

*[பால் + குலிகம்]*

**பாற்குழந்தை** *pāṟ-kuḻandai*, பெ. (n.) கைக்குழந்தை (யாழ்.அக.); a sucking child.

*[பால் + குழந்தை]*

**பாற்குழப்பம்** *pāṟkuḻappam*, பெ. (n.) கொடிப்பாலை என்னும் மூலிகை; twining swallow root.

*[பால் + குழப்பம்]*

**பாற்குழம்பு** *pāṟ-kuḻambu*, பெ. (n.) நன்றாகக் காய்ந்து ஏடுபடிந்த பால்; milk boiled to a

stage of thick consistency. *"மாஸோபவாஸிகளுக்குப் பாற்குழம்பு கொடுப்பாரைப் போலே"* (திவ். திருநெடுந்.21,187.)

*[பால் + குழம்பு]*

**பாற்குறண்டி** *pāṟ-kuṟaṇḍi,* பெ. (n.) முட்செடிவகை; milk corandy.

*[பால் + குறண்டி]*

**பாற்கூழ்** *pāṟ-kūḻ,* பெ. (n.) பாற்சோறு பார்க்க; see pāṟ-cōṟu. *"பாற்கூழை மூழை சுவையுணரா தாங்கு"* (நாலடி,321.)

*[பால் + கூழ்]*

**பாற்கெண்டை** *pāṟ-keṇḍai,* பெ. (n.) மூன்றடி வளர்வதும், பளபளப்பான நீலநிறமுள்ளதுமான கெண்டை மீன் வகை (யாழ்.அக.); white mullet, brilliant glossy blue, attaining 3ft. and more in length, chanus salmoncus.

மறுவ. வெள்ளிக்கெண்டை

*[பால் + கெண்டை]*

**பாற்கொடி** *pāṟ-koḍi,* பெ. (n.) நன்னாரி பார்க்க; see naṉṉāṟi indian sarsaparilla.

*[பால் + கொடி]*

**பாற்கொவ்வை** *pāṟ-kovvai,* பெ. (n.) கொவ்வை வகை (யாழ்.அக); a kind of creeper with white flower, capparis.

*[பால் + கொவ்வை]*

**பாற்கொழிஞ்சி** *pāṟ-koḻiñji,* பெ. (n.) கொழிஞ்சி வகை; a kind of citrus frowth. (சா.அக)

*[பால் + கொழிஞ்சி]*

மறுவ. பாற்கொளஞ்சி

**பாற்சம்பா** *pāṟ-cambā,* பெ. (n.) சம்பா நெல்வகை; a kind of cambā paddy.

*[பால் + சம்பா]*

**பாற்சாதிசம்** *pārcādišam,* பெ. (n.) தேங்காய்ப்பால்; milk of cocoanut kernel. (சா.அக.)

*[பால் + சாதிசம்]*

**பாற்சாம்பிராணி** *pārcāmbirāṇi,* பெ. (n.) மலாக்கா சாம்பிராணி; malaca benzoin. (சா.அக.)

*[பால் + சாம்பிராணி]*

**பாற்சிட்டிக் கீரை** *pārciṭṭi-k-kīrai,* பெ. (n.) ஒருவகை உணவுக் கீரை; a kind of edible greens. (சா.அக.)

**பாற்சிரசந்தன்** *pārcirašandaṉ,* பெ. (n.) கருடப்பச்சை என்னும் பாம்புக்கடி நச்சுநீக்கும் மூலிகை; a kind of emerad. bery aqua marina. it is so called from being an antidote to snake-bite. (சா.அக.)

மறுவ.

கெருடப்பச்சை, கருடப்பச்சை, படிகக்கல், கடல் வண்ணக்கல்.

**பாற்சீனி** *pārciṉi,* பெ. (n.) பாலிலமைந்த தித்திப்பு; sugar of milk, lactin. (சா.அக.)

*[பால் + சீனி]*

**பாற்சுண்டு** *pāṟ-cuṇḍu,* பெ. (n.) 1. பால்காய்ச்சிய பானையின் அடியிற் பற்றிய பாற்பற்று(யாழ்.அக.); crease of milk adhering to the vessel in which milk is boiled

2. தலையில் தோன்றும் பொடுகு; scurf, dandruff on the head.

*[பால் + சுண்டு]*

**பாற்சுண்டை** *pārcuṇḍai,* பெ. (n.) கசப்பில்லாத சுண்டைக்காய் வகை; indian current tomato.

மறுவ. பாற்சுண்டக்காய்

*[பால் + சுண்டை]*

**பாற்சுரபி** *pāršurabi,* பெ. (n.) பாலாட்டங்கொடி; a kind of creeper. (சா.அக.)

மறுவ: ஆட்டாங்கொடி, சோமலதைக்கொடி

**பாற்சுருக்கி** *pāṟ-curukki,* பெ. (n.) பாலை வற்றச் செய்யும் பூடு; a medicinal plant that checks the secretion of milk, laclifuge.

*[பால் + சுருக்கி]*

**பாற்சுறா²** *pāṟ-cuṟā,* பெ. (n.) இரண்டடி வளர்வதும் சாம்பல் நிறமுள்ளதுமான மீன்வகை; white shark, grey, attaining 2ft. in length, carcharias laticandus;

*[பால் + சுறா]*



**பாற்சொக்கு** *pāṟ-cokku,* பெ. (n.) செல்வமகிழ்ச்சி(யாழ்.அக.); cheerfulness due to affluence.

*[பால் + சொக்கு]*

**பாற்சொரிக்கீரை** *pāṟ-cori-k-kīrai,* பெ. (n.) குடல்நோயைத் தீர்க்க உதவுங்கீரைவகை; (பதார்த்த.599.) a kind of greens said to cure disease of the bowels.

*[பால் + சொரி + கீரை]*

**பாற்சொற்றி** *pāṟ-coṟṟi,* பெ. (n.) *பாற்சோற்றி* பார்க்க; see *pāṟ-cōṟṟi.*

*[பால் + சொற்றி]*

மறுவ: அம்மான் பச்சரிசி.

**பாற்சொற்றிப்பாலை** *pāṟ-coṟṟi-p-pālai,* பெ. (n.) *காட்டிருப்பை* பார்க்க; see *kāṭṭuruppai* indian gulla percha. see kāt-t-fropai

மறுவ: பொற்றிக்கீரை

*[பாற்சொற்றி + பாலை]*

**பாற்சொறி** *pāṟ-coṟi,* பெ. (n.) தாய்ப் பாலில்லாமையால் உண்டாஞ் சொறிப்புண்; scabbiness, due to want of mother's milk.

*[பால் + சொறி]*

**பாற்சோட்டை** *pāṟ-cōṭṭai,* பெ. (n.) குழந்தைக்கு உண்டாகும் பால் குடிக்கும் ஆவல்; craving for milk, as of an infant.

*[பால் + சோட்டை]*

**பாற்சோற்றி** *pāṟ-cōṟṟi,* பெ. (n.) செடிவகை (வின்); a plant,

*[பால் + சோற்றி]*

மறுவ: பாற்சொற்றிப்பாலை.

(எருக்கு முதலான செடிகளிலிருந்து பாலெடுத்து இறுக வைத்த ஒரு பொருள் எனச் சா.அக. கூறுகிறது.)

**பாற்சோறு** *pāṟ-cōṟu,* பெ. (n.) **1.** பால்கலந்த சோறு; rice boiled in milk. **2.** வெண்மையான சோறு; white rice. "*நெய்யிலாப் பாற்சோற்றினோர்*" (நாலடி.333)

*[பால் + சோறு]*

**பாற்பசு** *pāṟ-paśu,* பெ. (n.) கறவைப்பசு (யாழ்.அக.); milch cow,

*[பால் + பசு]*

**பாற்பட்டார்** *pāṟ-paṭṭār,* பெ. (n.) துறவியர்; ascetics, noted for their extreme discipline. "*பாற்பட்டார் கொண்டொழுகும் பண்பு*" (ஏலாதி,13)

*[பாற்படு–, → பாற்பட்டார்]*

**பாற்படு–தல்** *pāṟ-paḍu-,* **20.** செ.கு.வி. (v.i.) **1.** ஒழுங்கடைதல்; to be well arranged; to be well disciplined. **2.** நன்முறையில் நடத்தல்; to tread the path of virtue. "*பாற்பட்டார் கூறும் பயமொழி*" (இனி.நாற்.7)

*[பால்² + படு–,]*

**பாற்பண்ணியம்** *pāṟ-paṇṇiyam,* பெ. (n.) பால் கலந்த பணியாரவகை(இராசவைத்.); a kind of preparation made of milk and other ingredients.

*[பால் + பண்ணியம்]*

**பாற்பல்** *pāṟ-pal,* பெ. (n.) முதன்முதல் முளைக்கும் பல்; milk tooth.

*[பால் + பல்]*

**பாற்பள்ளயம்** *pāṟ-paḷḷayam,* பெ. (n.) நோய்களின் அதி தெய்வங்களுக்குப் படைக்கும் பால்பழம் முதலியன; offering of milk and fruits to the deities who cause diseases.

*[பால் + பள்ளயம்]*

**பாற்பாக்கியம்** *pāṟ-pākkiyam,* பெ. (n.) கறவைப் பசுக்களைத் தான் அடைந்திருக்கும் பேறு; the fortune of possessing milch cows.

*[பால் + பாக்கியம்]*

**பாற்பாகல்** *pāṟ-pāgal,* பெ. (n.) பாகல்வகை; a kind of balsam - apple, climber.

*[பால் + பாகல்]*

**பாற்பாதி** *pāṟpādi,* பெ. (n.) கொடிக்கள்ளி; moon creeper, or creeping milk hedge. (சா.அக.)



**பாற்பீர்க்கு** *pāṟ-pīrkku,* பெ. (n.) வெண்பீர்க்கு; a white species of gourd. (சா.அக.)

*[பால் + பீர்க்கு]*

**பாற்புங்கு** *pāṟ-puṅgu,* பெ. (n.) தட்டைப்புன்கு பார்க்க (சங்.அக.); see *tāṭṭai-p-puṅgu.*

*[பால் + புங்கு]*

**பாற்புட்டி** *pāṟ-puṭṭi,* பெ. (n.) குழந்தைகளுக்குப் பாலூட்டும் புட்டி; feeding bottle.

*[பால் + புட்டி]*

**பாற்புடல்** *pāṟpuḍal,* பெ. (n.) வெண்புடலை; a white species of snake gourd. (சா.அக.)

*[பால் + புடல்]*

**பாற்புரண்டி** *pāṟpuraṇḍi,* பெ. (n.) சிற்றம்மான் பச்சரிசி; thyme-leaved spurge. (சா.அக.)



**பாற்பூரிதம்** *pāṟpūridam,* பெ. (n.) எருக்கிலை; leaf madar. (சா.அக.)

**பாற்பெட்டி** *pāṟ-peṭṭi,* பெ. (n.) சீமைப்பால் அடங்கிய புட்டி; case of condensed milk.

*[பால் + பெட்டி]*

**பாற்பெரி** *pāṟperi,* பெ. (n.) ஒரு சீமைச்செடி; a kind of white berry. (சா.அக.)

**பாற்பெருக்கி** *pāṟ-perukki,* பெ. (n.) தாய்ப்பாலைப் பெருகச் செய்யும் பூடு(M.M.966); a medicinal plant that increase the secretion of milk, lactagogue.

*[பால் + பெருக்கி]*

**பாற்பெருங்காயம்** *pāṟ-peruṅgāyam,* பெ. (n.) பெருங்காய வகை; variety of asafoetida.

*[பால் + பெருங்காயம்]*

**பாற்பேவிகம்** *pāṟpēvigam,* பெ. (n.) கள்ளி; spurge. (சா.அக.)

**பாற்பொங்கல்** *pāṟ-poṅgal,* பெ. (n.) பாலில் அட்ட கலவைச் சோறு; (பதார்த்த.1401) rice boiled in milk.

*[பால் + பொங்கல்]*

**பாற்பொருத்தம்** *pāṟ-poruttam,* பெ. (n.) செய்யுண்முதன் மொழிப்பொருத்தம் பத்தனுள் குற்றெழுத்துக்களை ஆண்பாலாகவும் நெட்டெழுத்துக்களைப் பெண்பாலாகவும் ஒற்றும் ஆய்தமுமாகிய எழுத்துக்களை அலிப்பாலாகவும் கொண்டு, ஆண்பாலைப் புகழுமிடத்து ஆணெழுத்துகளையும், பெண்பாலைப் புகழுமிடத்துப் பெண்ணெழுத்து களையும் செய்யுள் மொழிமுதலில் அமைக்கும் பொருத்த வகை (வெண்பாப். முதன்.5); the rule of propriety which enjoins that the commencing letter of a stanza should, while praising a man and a woman, be respectively masculine and feminine, the short vowels being considered masculine,

long vowels feminine, and consonants and āydam neuter, one of 10ceyyuṉ-mudaṉ-moḻi-p-poruttam.

*[பால் + பொருத்தம்]*

**பாற்போனகம்** *pāṟ-pōṉagam,* பெ. (n.) பாற்சோறு பார்க்க; see pāṟ-cōṟu. '*பாற்போனக முதலிய சோறுகளை*' (மதுரைக்.607,உரை.)

*[பால் + போனகம்]*

**பாற்றம்** *pāṟṟam,* பெ. (n.) பாத்தம் பார்க்க; see pāttam. "*பாற்றம் போராதபடியான நாம்*" (திவ்.திருநெடுந்.21,வ்யா.பக்.198)

*[பாத்தம் → பாற்றம்]*

**பாற்றல்** *pāṟṟal* பெ. (n.) நீக்குதல்; to remove. "*ஆசமனமாகு மறலினொடு கூட்டுதலும், பாசத்தைப்பாற்றும் பதிக்கு*" (சைவச.536.)

*[பாற்று → பாற்றல்]*

**பாற்றிணைவழு** *pāṟṟiṇai-vaḻu,* பெ. (n.) இடமயக்க மின்றிப் பாலுந்திணையும் மயங்குவது (மயிலை.நன்.374); gender and place error

*[பால் + திணை + வழு]*

**பாற்று** *pāṟṟu,* பெ. (n.) உரியது; a poetic form of the appellative noun as. 'பாலது'. "*செல்வமொன்றுண்டாக வைக்கற் பாற்றன்று*" (நாலடி.11.)

**பாற்றுத்தம்** *pāṟṟuttam,* பெ. (n.) வெண்துத்தம்; sulphate of zinc. (சா.அக.)

*[பால் + துத்தம்.]*

**பாற்று—தல்** *pāṟṟu-,* 5. செ.குன்றாவி (v.t.) 1. நீக்குதல்; to remove. "*பகலோன் கெடுமெனப் பாற்றுவனபோல*" (பெருங். உஞ்சைக்.38.15) 2. அழித்தல்; to ruin. "*பணிந்தாரன பாவங்கள் பாற்றவல்லீர்*" (தேவா.946.3)

*[பாறு → பாற்று-.]*

**பாற்றுளி** *pāṟṟuḷi,* பெ. (n.) வித்துப்பிழ; semon. "*பாற்றுளி பவளநீர் பருகி*" (சிந்தா.முத்தி.87.)

மறுவ. விழியம்

*[பால் + துளி]*

**பாற்றுறை** *pāṟṟuṟai,* பெ. (n.) திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த திருப்பாற்றுறை என்னும் ஊர்; a place name in Trichy Dt. "*பாவந்தீர் புனல் மல்கிய பாற்றுறை*" (தேவா.56–4)

"*பாலைம்மலர் விம்மிய பாற்றுறை*" (தேவா.56–9)

"*பைந்தன் மாதவி சூழ்தரு பாற்றுறை*" (தேவா.56–10)

*[பால் + துறை ]*

**பாற்றெளி** *pāṟṟeḷi,* பெ. (n.) *பால்தெளித்தல்* பார்க்க; see *pāltēḷital.*

*[பால் + தெளி → பாற்றெளி ]*

**பாற்றேங்காய்** *pāṟ-ṟēṅgāy,* பெ. (n.) இளநீர் மிக்க தேங்காய்; tender cocoanut containing delicious milk.

*[பால் + தேங்காய்]*

**பாறடிஆடாதிருக்கை** *pāṟaḍiāḍ-ātirukkai,* பெ. (n.) திருக்கை மீன் (மீனவ.பொ.வ.); a kind of shark.



**பாறடித்திருக்கை** *pāṟaḍi-t-tirukkai,* பெ. (n.) கடலடிப் பாறையில் மேயும் திருக்கைமீன் (செங்கை. மீனவ.); a kind of sea-fish.

*[பாறை → பாறடி + திருக்கை]*

**பாறடிப்பாம்பு** *pāṟaḍi-p-pāmbu,* பெ. (n.) கடலடிப் பாறையின் இடுக்கில் தங்கும் பாம்பு (குஞ்சை.மீனவ.); a kind of sea-snake.

*[பாறையடி → பாறடி + பாம்பு]*

**பாறடிமீன்** *pāṟaḍimīṉ,* பெ. (n.) 1. கடலடிப் பாறையில் தங்கும் அல்லது மேயும் கடல் மீன் (குஞ்சை.மீனவ.) a kind of deep sea fish. 2. *பாறைமீன்* (செங்கை.மீனவ.) பார்க்க; see *pāṟai-mīṉ.*

*[பாறையடி → பாறடி + மீன்]*

**பாறைநண்டு** *pāṟainaṇḍu,* பெ. (n.) பாறையில் தங்குமொரு கடல்நண்டு (குமரி,மீனவ.); a kind of sea-crab.

*[பாறை → பாற + நண்டு]*



**பாறல்** *pāṟal,* பெ. (n.) 1. ஆனேறு(பிங்); bull. 2. விடையோரை; taurus of the zodiac. (திவா.) 3. பொதியெருது(யாழ்.அக.); pack-bull. 4. மழைப்பாட்டம்; heavy shower. (ஈடு,4,5,21ஜீ.)

*[பாறு → பாறல்]*

**பாறாங்கல்** *pāṟāṅ-kal,* பெ. (n.) 1. பாறைக்கல் (தொல்.எழுத்.284,உரை); block of stone. 2. தனித்துண்டாகக் காணப்படும் பெரியகல்; large piece of rock.

*[பாறை + ஆம் + கல்]*

**பாறிகற்சிகம்** *pāṟigaṟcigam,* பெ. (n.) உடல்முழுவதும் பொறுக்க முடியாத வலியை உண்டாக்கும் ஒருவகை நோய்; a disease causing pain all over the body. (சா.அக.)

**பாறு[1]–தல்** *pāṟu-,* 5 செ.கு.வி (v.i.) 1. அழிதல்; to be destroyed, runied. "*பழம்வினைகள் பாறும் வண்ணம்*" (திருவாச.51–1) 2. சிதறுதல்; to be scattered. "*ஆலிவானிற் காலொடு பாறி*" (அகநா.9) 3. நிலைகெட்டோடுதல் (பிங்.); to run, flee. "*அனுமன் பாறினன்*" (கம்பரா.கும்பக.182.) 4. கிழிபடுதல்; to be torn into pieces. "*பாறிய*

*சிதாரேன்*" (புறநா.150) **5.** அடிபறிதல் (யாழ்.அக.); to give way; to be uprooted. **6.** ஒழுங்கற்றுப் பரந்துகிடத்தல்; to be in disorder; to be dishevelled. "*செம்முக மந்தி.....பாறுமயிர் திருத்தும்*" (நற்.151) **7.** பொருதல் (யாழ்.அக.); to fight.

**பாறு²–தல்** *pāṟu-,* 4 செ.கு.வி. (v.i.) நீங்குதல்; to leave. "*பயிலுறு பாவங்கள் பாறப் பெற்றுளாய்*" (சிவரக.சிவனடியார்.23.)

**பாறு³** *pāṟu,* பெ. (n.) **1.** நச்சுவாயு; poisonous gas. **2.** நச்சுக்காற்று; poisonous gas.

**பாறு⁴** *pāṟu,* செ.குன்றாவி (v.tr) கடத்தல் (திவா.); to cross, pass over.

*[பாறு–பாறு–,]*

**பாறு⁵** *pāṟu,* **1.** கேடு; ruin, damage. "*பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்*" (புறநா.359) **2.** பருந்து; hawk, kite, falcon. "*பாறுடைப் பருதிவேல்*" (சீவக.568) **3.** கழுகு; eagle. "*பாற்றுக்கும்.....பருந்துக்கும்*" (பாரத.புட்ப.82) **4.** மரக்கலம்; ship, sailing, vessel.

*[பாறு–, → பாறு]*

**பாறு³–தல்** *pāṟu-,* **5.** செ.கு.வி. (v.i.) ஓடுதல்; to run. "பதுமுகனைக் கொடுபோகம் பத்துமுகன் போற்பாறுதலும்" (சேதுபு.வேதாள.14.)

*[பாறு → பாறு–,]*

**பாறுபாறாக்கு–தல்** *pāṟu-pāṟākku-,* **5.** செ.குன்றாவி (v.t.) சிதைத்தல்; to destroy, ruin. "*அசுரர்களை நேமியாற் பாறு பாறாக்கினான்*" (திவ்.இயற்.பெரியதிரு.33.)

*[பாறு + பாறு + ஆக்கு–.]*

**பாறுவை–த்தல்** *pāṟu-vai,* **4.** செ.கு.வி. (v.i.) தோணியிற் பண்டமேற்றுதல்; to load dhoney with cargo.

*[பாறு + வை–.]*

**பாறை** *pāṟai,* பெ. (n.) **1.** நிலத்திலுள்ள கருங்கற்றிரள்(புறநா.118,உரை.); rock, crag, ledge, stratum of stone or mineral fossil.

"*படுமழை பொழிந்த பாறை மருங்கில்*" (நற்.61–7)

"*உலைக்கல் அன்ன பாறை ஏறி*" (குறுந்.12–2)

"*பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்*" (அகம். 2–4)

"*மோட்டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப*" (அகம்.5–10) "*பாரைக்கு நெக்குவிடாப் பாறை பழுமரத்தின் வேருக்கு நெக்கு விடும்*" (ஔவை.) **2.** சிறுதிட்டை; (பிங்.) hillock, bank. **3.** மீன்வகை; horse mackerel. **4.** ஒடுதல்; to run.

ம. பாற,

**பாறைக்காணம்** *pāṟai-k-kāṇam,* பெ. (n.) பாறை தொடர்பான பழைய வரி வகை; an ancient tax on quarries.

*[பாறை + காணம்]*

**பாறைக்குட்டி** *pāṟai-k-kuṭṭi,* பெ. (n.) 'பாறை' யினத்துச் சிறுமீன் (முகவை.மீனவ.); a kind of small rock fish.

*[பாறை + குட்டி]*



**பாறைபடு—தல்** *pāṟai-paḍu-,* **20.** செ.கு.வி (v.i.) இறுகுதல்; to become hard like a rock. "*பாறைபடுதயிர் பாலொடு*" (சீவக.426)

*[பாறை + படு—,]*

**பாறைமண்டல்** *pāṟaimaṇḍal,* பெ. (n.) கடலில் மேயும் பெரிய பாறை மீன்களின் கூட்டம். (நெல்லை.மீனவ.); school of fish in sea.

*[பாறை + மண்டலம் → மண்டல்]*

**பாறைமீன்** *pāṟaimīṉ,* பெ. (n.) ஒருவகை மீன்; a kind of fish. (சா.அக.)

**பாறையிலுதித்தோன்** *pāraiyiludittōṉ,* பெ. (n.) கார்முகிற்செய்ந்நஞ்சு; a kind of arsenic. (சா.அக.)

மறுவ: பாறையிலுற்பத்தி.

**பாறையிறால்** *pāṟaiiṟāl,* பெ. (n.) பாறையில் மேயும் ஓர் இறால் மீன் (நெல்லை.மீனவ.); a kind of sea-prawn.

*[பாறை + இறால்]*

**பாறையுப்பு** *pāṟai-y-uppu,* பெ. (n.) இதளியத்தைக் கட்டிபோலாக்கும் உப்பு; a kind of salt capable of consolidating mercury.

மறுவ: திருப்புல்லாணியுப்பு, கல்லுப்பு

"*பாறையுப்பு பளிங்கது மாகிடில் காரச் சுண்ணம் கனவேகம் காண்கிலீர்*" (சா.அக.)

**பாறையுழுவை** *pāṟai-y-uḻuvai,* பெ. (n.) பாறையில் தங்கி மேயும் ஆற்றுமீன் (குஞ்சை.மீனவ.); a kind of river fish.

*[பாறை + உழுவை]*



**பான்** *pāṉ,* (இடை) (part.) **1.** ஒரு தெரிநிலை வினையெச்ச விகுதி; a suffix in a verbal participle, indicating purpose. "*.............வான்பான் பாக்கின் வினையெச்சம் பிற ஐந்தொன்றாறும் முக்காலமும் முறைதரும்*" (நன்.343.) '*உண்பான் வந்தான்*' **2.** பத்தினோர் திரிபு; '*ஒருபான்*' a derivation of ten.

**பான்மடை** *pāṉ-maḍai,* பெ. (n.) *பாற்சோறு* பார்க்க; see *pār-cōṟu.* "இயக்கிக்குப் பான்மடை கொடுத்து" (சிலப்,15,117)

*[பால் + மடை]*

**பான்மயக்கம்** *pāṉ-mayakkam,* பெ. (n.) ஒருபால் ஏனைப்பாலின் கண் மயங்குதலாகிய வழுவின் அமைதி(சிலப்.17.பெரியவனை); approved use of one pāl for another.

*[பால் + மயக்கம்]*

(ஒரு பாலுக்குரிய சொல் வேறொரு பாலுக்குரிய சொல்லுடன் வழங்குதல்)

**பான்மாறு–தல்** *pāṉ-māṟu-*, 9. செ.கு.வி (v.i.) 1. பால்குடி மறத்தல்; to be weaned. "பிள்ளை பான்மாறுமோ வதிற்பல்லிடுமே" (அருட்பா,1, திருவருண்முறை.92) 2. வருந்துதல் (இ.வ.); to fret, worry oneself. 3. சோம்பலாயிருத்தல் (வின்); to be lazy.

*[பால் + மாறு–,]*

**பான்முட்டான்** *pāṉmuṭṭāṉ*, பெ. (n.) குழூஉக்குறியாக வழங்கும் ஒருவகைமீன்; a kind of fish which is used as correctional term.

*[பால் + முட்டான்]*



**பான்முடங்கி** *pāṉmuḍaṅgi*, பெ. (n.) வேலிப்பருத்தி; hedge-twiner.

*[பால் + முடங்கி]*

**பான்முல்லை** *pāṉ-mullai*, பெ. (n.) தலைவியினை மணந்த தலைவன் மனமகிழ்ந்து தம்மை ஒருங்கு கூட்டிய நல்வினையைப் புகழ்ந்து கூறும் புறத்துறை; theme of a lover who has married his lady-love praising the destiny that brought them together.

"*அரிபாய் உண்கண் ஆயிழைப்புணர்ந்தோன் பரிவகல் உள்ளமொடு பால் வாழ்த்தின்று*" (பு.வெ.10முல்லைப் பொது–7.)

பால் = ஊழ். இதன் இயல்பு மிகுதியைப் பாராட்டலின் இது பான்முல்லை எனப்பட்டது.

"திங்கள் விளங்கும் திகழ்ந்திலங்கு பேரொலி அங்கண் விசும்பின் அகத்துறைக;– செங்கண் குயிலனைய தேமொழிக் கூரெயிற்றுச் செவ்வாய்ப் பயில்வளையை நல்கிய பால்."

இது, தலைவியை வற்புறுத்திப் பிரிதற் பொருட்டு அவள் கேட்பக் கூறாது ஊழினது இயல்பினைத் தன்னுள்ளே மதித்துப் பாராட்டுதலின் அகமாகாது, புறமாயிற்றென்க.

*[பால் + முல்லை]*

**பான்மை** *pāṉmai*, பெ. (n.) 1. குணம், தன்மை; இயல்பு; nature, quality, property, state. "*சொல்லரிய பான்மையாகி*" (தாயு, பொருள்வ.12) 2. பகுதி; division, portion, class. "*தேவர் பான்மை யிற்றென்று*" (சீவக.553.) 3. தகுதி; fitness, propriety. "*நற்றவம்......பயின்ற பான்மையான்*" (கம்பரா.தாடகை.23.) 4. முறைமை; order, regularity. "*பான்மையிற் பிணித்து*" (மணிமே.18,110) "*பழம்பிறப் பெல்லாம் பான்மையி னுணர்ந்ததும்*" (மணிமே.பதி–50.)

"*பவமறு மார்க்கமும் பான்மையி னுரைத்து*" (முறைமை) (மணிமே.21–164)

"*பான்மைக் கட்டுரை பலர்க்கரை யென்றே*" (முறைமை) (மணிமே.23–47) 5. சிறப்பு; excellence, greatness. "*பரசிராமேச்சரத்தின் பான்மை சொல்வாம்*" (காஞ்சிப்பு.பரசிரா.1) 6. நல்வினைப்பயன்; fruit of good deeds. "*புருவத்தாட்கு வந்தடைபான்மை*" (சீவக.539.) "*உடையோர் பான்மையின் பெருங்கை தூவா*" (நற்.90–2) (ஆடையை ஆராய்கின்ற பகுதி)

"*பகர்வனர் போல்வதோர் பான்மையின் நிறுத்த*" (சிலப்.3–169)

"*பான்மையில் திரியாது பாற்கதிர் பரப்பி*" (சிலப்.4–25)

*[பால்² → பான்மை]*

**பான்று** *pāṉṟu*, பெ. (n.) சிறுபூளை; wolly creeper. (சா.அக.)

**பான்னா** *pāṉṉā*, பெ. (n.) பச்சை மணி; emerald. (சா.அக.)

**பானல்** *pāṉal*, பெ. (n.) **1.** மருதநிலம் (பிங்.); agricultural tract. **2.** வயல்(பிங்.); ricefield. **3.** கருங்குவளை(பிங்.); kāruṉkuvaḷai. blue nelombo. "*பானல் பூத்த வெள்ளத்துப் பெரிய கண்ணார்*" (இராமா.உலாவிய.4.) **4.** கடல்; ocean. "*யானைபட்ட வழிபுனல் யாறெலாம் பானல் பட்ட*" (கம்பரா.முதற்போர்.50) **5.** கள்(அக.நி.); toddy. **6.** குதிரை(அக.நி.); horse. **7.** வெற்றிலை(அக.நி.); betel pepper,

**பானவட்டம்** *pāṉa-vaṭṭam*, பெ. (n.) ஆவுடையார்; base or pedestal of a liṅga.

*[பானம் + வட்டம்]*

**பானவியம்** *pāṉaviyam*, பெ. (n.) *காசினிக்கீரை* பார்க்க; see *kāšiṉi-k-kīrai.*

**பானாட்கங்குல்** *pāṉāṭkkaṅgul*, பெ. (n.) நள்ளிரவு; midnight.

"*வயவுப் பெடை யகவும் பானாட் கங்குல்*" (குறுந்.301–4)

"*பல்லோர் துஞ்சும் பானாட் கங்குல்*" (குறுந்.355–4)

"*பானாட் கங்குலும் பகலும்*" (அகம்.57–18)

"*மன்னுயிர் மடிந்த பானாட் கங்குல்*" (அகம்.58–2)

"*படுமழை பொழிந்த பானாட் கங்குல்*" (அகம்.92–2)

*[பானாள் + கங்குல்]*

**பானாள்** *pāṉāḷ*, பெ. (n.) **1.** நள்ளிரவு; midnight. "*குன்று குளிர்ப்பன்ன கூதிர்ப் பானாள்*" (நெடுநல்.12.) "*யானே அன்றியும் உளர்கொல் பானாள்*" (நற்.104–8) (இரவு நடுயாமம்)

"*கழுதுகால் கொள்ளும் பொழுதுகொள் பானாள்*" (நற்.171–9)

"*தானறிந் தன்றோ இலளே பானாள்*" (நற்.175–6)

"*யானே மருள்வேன் தோழி பானாள்*" (குறுந்.94–3)

"*தானறிந் தனளோ இலளோ பானாள்*" (குறுந்.142–3)

"*ஆனாத் துயரமொடு வருந்திப் பானாள்*" (குறுந்.145–3)

"*முளரி கரியும் முன்பனிப் பானாள்*" (அகம்.163–8)

"*ஏனலும் இறங்கப்பொறை உயிர்த்தன பால்நாள்*" (அகநா.192–8)

"*யாமே அன்றியும் உளர்கொல் பானாள்*" (அகம்.202–9) **2.** பாதிநாள் (தைலவ.); half a day.

*[பால்² + நாள்]*

**பானிக்கன்னி** *pāṉi-k-kaṉṉi*, பெ. (n.) பாற்பட்டை; a tree. (சா.அக.)

**பானிக்குருச்சி** *pāṉikkurucci*, பெ. (n.) **1.** *சீரகம்*(சங்.அக.) பார்க்க; see *cīragam.* cumin. **2.** சீனக்காரம்(யாழ்.அக.); alum.

**பானிதம்** *pāṉidam* பெ. (n.) சருக்கரை; sugar. (சா.அக.)

**பானியவரை** *pāṉi-y-avarai,* பெ. (n.) வலம்புரிக்கொடி; a kind of creeper.

மறுவ: பானியவல்லி (சா.அக.)

**பானியவல்லி** *pāṉiya-valli,* பெ. (n.) வலம்புரிக்கொடி (மலை.); a climber.

*[பானியம் + வல்லி]*

**பானிறவண்ணன்** *pāṉiṟa-vaṇṇaṉ,* பெ. (n.) பலதேவன்; elder brother of krishna.

*"நீனிற வண்ணனென்று நெடுந்துகில் கவர்ந்து தன்முன்–பானிற வண்ணனோக்கிற்பழியுடைத் தென்று கண்டாய்"* (சீவக.நாமக.)

*"பானிற வண்ணன் போற் பழிதீர்ந்த வெள்ளையும்"* (கலி.104–8)

**பானை**[1] *pāṉai,* பெ. (n.) 1. மண்மிடா; large earthen pot or vessel. *"பங்கமி விரசிதப் பானைமேல்வழி பொங்கலின்"* (அரிச்,பு–விவா.85) *"செம்புசொரி பானையின் மின்னிஎவ் வாயும்"* (நற்.153–3) *"பகுவாய்ப் பானைக் குவிமுனை சுரந்த"* (கல்பானை) (அகம்.157–2)

*'மண்பானைத் தண்ணீர் குளிர்ச்சி தருவதாம்"* (உ.வ.) 2. ஓர் அளவு; a measure of capacity (தொல், எழுத்.170,உரை) 3. நான்கு செம்பு கொண்ட எண்ணெயளவு oil measure=4 cembu.

தெ. பாந ம. பாந

*"உடைந்த பானை ஒட்டினாலும் ஒட்டும்; மாமி யார் ஒட்டாள்"* (பழ.)

*"பானையில் இருந்தாலல்லவோ அகப்பையில் வரும்"* (பழ.)

*"பானையிலே பதக்குநெல் இருந்தால் மூலையிலே முக்குறுணி தெய்வம் கூத்தாடும்"* (பழ.)



**பானைக்குடுவை** *pāṉai-k-kuḍuvai.* பெ. (n.) சிறுபானை (யாழ்.அக.); small pot.

*[பானை + குடுவை]*

**பானையுடக்குமூலி** *pāṉai-y-uḍakkumūli,* பெ. (n.) பிளவைக்கொல்லி: a plant used in carbuncle. (சா.அக.)

மறுவ: பானைவெடிச்சாள்.

**பானைமூடி** *pāṉaimūḍi,* பெ. (n.) பானையை மூட உதவும் மட்கலன்; a lid used to cover an earthen pot.

**மறுவ.** மடக்கு.

*[பானை + மூடி]*

**பானைவெடிச்சான்** *pāṉai-veḍiccāṉ,* பெ. (n.) பிளவைகொல்லி(மலை.); a species of the murdah plant.

*[பானை + வெடிச்சான்]*